**காலத்தால் அழியாத கிரேக்க மகா காவியம்**

ஹோமரின்

# இலியட்



**தமிழில் : நாகூர் ரூமி**

ஹோமரின்

இலியட்



First Edition January 2007

816 Pages, Price Rs.350

Printed in Indi



*Kizhakku* - 199 ; ISBN 81-8368-280-4

*Kizhakku*, An imprint of

New Horizon Media Private Limited

# 33/15, Eldams Road, Alwarpet, Chennai 600 018, Tamilnadu, Indi·

Phone 044-42009601/03/04; Fax 044-43009701

In Madurai: 4/7, East Pattamar St., Madurai-1. Ph 0452-4230701.

In Coimbatore: 201, 2nd Floor, Sri Vasavi Complex, Periya Kadai Veedhi, Coimbatore - 1. Ph: 0422-4208601

Email: sales@nhm.in

Web www.kizhakku.in

Author's Email ruminagore@gmail.com



*An Imprint of*

New Horizon Media

Pvt. Ltd.

Publisher

Badri Seshadri

Chief Editor

Pa. Raghavan

Editors R. Parthasarathy, Vasudev, A.R. Kumar

Asst. Editors Marudhan, Muthuraman

Sub Editors Mugil, R. Muthukumar

Chief Designer T. Kumaran

Design Team S. Kathiravan, Muthu Ganesan

Proof Reader W. Martin Inbaraj

# நூலடக்கம்

# முன்னுரை

நிம்மதியாக ஒரு நீண்ட பெருமூச்சை நான் விட்டுக் கொள்ளும் நேரம் இது. ஆமாம். கிட்டத்தட்ட எட்டு மாதங்களாக என் கைவிரல்கள், முதுகெலும்பு, முழங்கை எலும்பு இவற்றுக்கெல்லாம் சொல்ல முடியாத வலியையும் வேதனையையும் கொடுத்த வேலை முடிந்துவிட்டது. அந்தப் பெருமை ஹோமரையே போய்ச்சேர வேண்டும்!

Classic என்று உலகம் போற்றும் ஹோமரின் 'இலியட்' காவியத்தைத் தமிழ்ப்படுத்தும் காரியத் துக்குத்தான் இந்த எட்டு மாதங்கள். எனது முழு இரவுகளும் பகுதி பகல்களும் இதற்காகச் செல விடப்பட்டன.

மொழிபெயர்ப்பு ஒரு களைப்பூட்டும், அதே சமயம் நிறைய கற்றுத்தரக் கூடிய வேலைதான். அதுவும் ஹோமரைத் தமிழில் கொண்டுவருகிறோம் என்ற ஒரு நினைப்பே லேசான பெருமை தரக்கூடியதாக இருந்தது. ஆங்கில இலக்கியம் படித்த காலத்தில் அடிக்கடி கேள்விப்பட்ட ஒரு பெயர், அடிக்கடி மேற் கோள் காட்டப்பட்ட ஒரு பெயர் ஹோமர் மற்றும் அவருடைய காவியங்களான இலியட், ஒடிஸி.

ஆனால், காவியங்களின் தந்தை என்று சொல்லப் படுகின்ற ஹோமரிடம், உண்மையில் முழுமையாக என்னதான் இருக்கிறது என்று தெரிந்துகொள்கின்ற

வாய்ப்பு இத்தனை ஆண்டுகள் கழித்து இப்பொழுதுதான் கிடைத்தது. முனைவர் பட்டத்துக்காக கம்பனைப் படித்தேன். இப்பொழுது தமிழாக்கத்துக்காக ஹோமர்.

உண்மையில் ஹோமர், எனக்குப் பல ஆச்சரியங்களைக் கொடுத் திருக்கிறார்.

ஹோமரைப் படிப்பவர்கள் முதலில் ஞாபகம் வைத்துக்கொள்ள வேண்டியது அவருடைய காலம். கிட்டத்தட்ட கிறிஸ்துவுக்கு 700 ஆண்டுகளுக்கு முன் அவர் வாழ்ந்ததாகச் சொல்லப் படுகிறது. ஏறத்தாழ மூவாயிரம் ஆண்டுகளுக்கு முந்திய ஒரு மனிதனின் கற்பனைக்குள் பயணிக்கிறோம் என்பதுதான் இலியட் காவியத்துக்குள் நுழையுமுன் நாம் முதலில் புரிந்து கொள்ள வேண்டியது.

அப்படிப் பார்த்தால்தான், ஏன் இது ஆச்சரியமாக இருக்கிறது என்பது புரியும்.

காதலும் வீரமும்தான் இந்த உலகத்தில் உள்ள எல்லாக் காவியங் களிலும் கொண்டாடப்படும் விஷயமாக இருக்கிறது. ஹோமரும் இதைத்தான் பாடுகிறார். பெண்ணும், அவளுக்காக நடக்கும் போரும்தான் கதை. அதில் அக்கிலிஸின் கோபம் காவிய மையம். ஆனால், இந்தக் கதையினூடாக நமக்குக் கிடைக்கின்ற சில தகவல்களும் கற்பனைகளும் ஆச்சரியப்படுத்தும் விதத்தில் உள்ளன.

சில உதாரணங்கள்.

எஜமானனுக்குப் பணிவிடைகள் செய்ய ஓடிவந்த பணிப்பெண் கள் தங்கத்தால் செய்யப்பட்டிருந்தனர். ஆனால், பார்ப்பதற்கு உண்மையான பெண்களைப் போலவே இருந்தனர். அவர்கள் பேசவும், உடல் உறுப்புகளை அசைக்கவும் செய்தது மட்டு மின்றி, அறிவோடும் இருந்தனர். நித்தியர்களான கடவுளர்களிட மிருந்து அவர்கள் தங்கள் தொழிலைத் திறம்படக் கற்றிருந்தனர்.

இப்படி ஒரு கற்பனை 18-வது காண்டத்தில் வருகிறது. இன்றைய ரொபோடிக்ஸின் முன்னோடி ஹோமர் என்று அறியவரும்போது எப்படி ஆச்சரியப்படாமல் இருக்க முடியும்? ‘கல்யாணப் பாடலை வெகு தூரத்துக்குத் தெளிவாகக் கேட்க முடிந்தது’ என்று அதே காண்டத்தில் இன்னொரு இடத்தில் வருகிறது. ரேடி யோவை கற்பனை செய்து பாடிய பாரதி நினைவுக்கு வருகிறான்.

மகாகவிகள் எல்லாருக்குமே எதிர்காலத்தை முன்னறியும் திறன் இருக்கும்போல!

அடுத்ததாக என் கவனத்தைக் கவர்ந்தது ஹோமரின் காவியம் காட்டும் சமுதாயமும், அந்தச் சமுதாய வாழ்க்கையும்.

ஒருவரை அறிமுகப்படுத்தும்போது அரேபியர்கள் தங்கள் பெயரை மட்டும் சொல்லமாட்டார்கள். மூன்று நான்கு தலை முறைப் பெயர்களையும் சேர்த்துத்தான் சொல்வார்கள். ஒருவருடைய பெயர் 'அலீ' என்றிருந்தால் வெறுமனே 'அலீ' என்று சொல்ல மாட்டார்கள். 'அலீ இப்னு அபீதாலிப்' (அபூ தாலிப் உடைய மகன் அலீ) என்று சொல்வார்கள். இதைப் போன்ற ஒரு மரபு ஹோமர் காவியத்திலும் கடைப்பிடிக்கப்பட் டுள்ளது. யாருடைய பெயரையும் ஹோமர் வெறுமனே சொல்வ தில்லை. பீலியூஸின் மகனாகிய அக்கிலிஸ், அவனுடைய தந்தை பெர்சியூஸின் மகனாகிய ஸ்தெனெஸ்தியூஸ், அத்ரியூஸின் மகனாகிய அகமெம்னன் இப்படித்தான் சொல்கிறார்.

இன்னாருடைய மகன் இன்னாரென்று சொல்லி அறிமுகப் படுத்திக் கொள்ளும் பழக்கம் கிரேக்கர்களிடமிருந்துதான் தொடங்கியது போலும். தந்தைக்கு முக்கியத்துவம் கொடுத்த சமுதாயமாகவே அது இருந்திருக்க வேண்டும். சொந்த நாட்டைக்கூட 'தாய் நாடு' என்று சொல்வதில்லை. எல்லா இடத்திலும் 'தந்தையர் நாடு' என்றே ஹோமர் அல்லது காவிய நாயகர்கள் குறிப்பிடுகின்றனர்.

ஒழுக்கம் சார்ந்த மதிப்பீடுகள் மிகவும் வித்தியாசமாக உள்ளன. பிறன் மனை விழைவது நல்லொழுக்கமாகக் காட்டப்படுகிறது. ஹெலனைக் கடத்திக்கொண்டு போனதைப் பற்றி பாரிஸோ ஹெலனோ ஒரு இடத்தில்கூட வருத்தப்பட்டோ, குற்ற உணர் வோடோ பேசுவதில்லை. ஆனால் வாக்கு மீறுவது மரண தண்டனை கொடுக்கக்கூடிய அளவுக்கு ஒழுக்கக்கேடான விஷய மாகப் பார்க்கப்படுகிறது!

உலோகங்களைப் பொருத்தவரை கிரேக்கர்களும் ட்ரோஜன் களும் மிகவும் 'மரியாதை' கொடுப்பது வெண்கலத்துக்குத்தான். கவச உடை வெண்கலம். ஈட்டி வெண்கலம். வாள் வெண்கலம். தேர் வெண்கலம். ஈட்டியின் முனை வெண்கலம். தலைக்கவசம் வெண்கலம். எங்கும் வெண்கலம். எதிலும் வெண்கலம். போனால் போகிறதென்று ஆங்காங்கே கொஞ்சம் தங்கமும் வெள்ளியும்.

இங்கே கம்பனிடம் இருந்த ஓர் ஒற்றுமை என் நினைவுக்கு வந்தது. மலர்களைப் பொருத்தவரை கம்பனுக்கு எல்லாமே தாமரைதான். சீதை, ராமன் முதலிய எல்லா முக்கியப் பாத்திரங் களின் கை தாமரை, பாதம் தாமரை, விழிகள் தாமரை, தோள் தாமரை  இந்த உலகத்தில் வேறு மலர்களே இல்லாத மாதிரி, எல்லா மலர்களும் தாமரையை நினைத்து பொறாமைப்படும் அளவுக்கு எங்கும் தாமரை எதிலும் தாமரை! அதைப்போல, ஹோமருக்கு எல்லாமே வெண்கலம். ஆனால் கம்பனைப் பொருத்தவரை, தாமரை வெறும் கற்பனை சார்ந்த விஷய மாகவே உள்ளது. ஆனால் ஹோமரின் வெண்கலம், அந்தச் சமுதாயத்தின் வீர வாழ்வு சம்பந்தப்பட்ட விஷயமாக இருக்கலாம்.

கடவுளுக்கான முதல் மரியாதையாக கொஞ்சம் முடியை வெட்டி எடுத்தல், இறந்து போனால் ஈமச்சடங்குகள் செய்தல், தொழில் முறையில் ஒப்பாரி வைப்பவர்களை அழைத்து அழுது பாடச் சொல்லுதல், நமது பிச்சாண்டி முனியாண்டிகளுக்கு கிடா வெட்டிப் படைப்பதுபோல கிரேக்கக் கடவுள்களுக்கும் ஆடு மாடு அறுத்து பலியிடுதல், பானங்களை திருப்படையல் செய்தல், சகுனம் பார்த்தல் போன்ற விஷயங்கள் நமது கலா சாரத்தை ஒத்திருக்கின்றன!

என் ஆச்சரியத்தின் உச்சகட்டமாக இறுதிக் காண்டத்தில் ஒரு சுவாரஸ்யமான விஷயம் வருகிறது. கூடிய விரைவில் இறந்து போகப்போகும் தன் மகன் அக்கிலிஸிடம் அவன் தாய் தீட்டிஸ், யாராவது ஒரு பெண்ணோடு படுத்து சுகம் அனுபவித்து உன் நேரத்தைச் செலவழித்துக்கொள். சும்மா உன் நண்பனுக்காக அழுது புலம்பி, இருக்கும் கொஞ்ச காலத்தையும் விரய மாக்காதே என்று ஆலோசனை கூறுகிறாள்!

ணர்ச்சிவசப்படாத அறிவுபூர்வமான ஓர் ஆலோசனைதான் ... என்றாலும், ஒரு தாய் தன் மகனிடம் இப்படிச் சொல்லும் ...டம் எனக்கு ஆச்சரியமளித்தது. காரணம், ஒரு மகனிடம் ...படி ஒரு தாய் சொல்வாளா என்பதனால் அல்ல. எனக்கு ...படியும் கம்பராமாயணம் நினைவு வந்ததுதான். காணாமல் ...ன தன் மனைவியின் அடையாளங்களை அனுமனிடம் சொல்லியனுப்பும் ராமன், சீதைக்கு 'தேர்த்தட்டு போன்ற ...ல்குல்' இருக்கும் என்று சொல்லியனுப்புகிறான்!

இப்படிப் பேசுவது காவிய மனிதர்களுக்கே உரிய குணம் போலும். இந்த ஒற்றுமைதான் என்னை ஆச்சரியப்பட வைத்தது.

தமிழாக்கம் உரைநடையில் கொடுக்கப்பட்டிருந்தாலும், காவியம் முழுவதையும் கவிதை வடிவில்தான் மூலமொழியாகிய கிரேக்க மொழியில் ஹோமர் எழுதினார் அல்லது பாடினார் என்பதை நினைவில் வைத்துக்கொள்வது முக்கியமானது.

தேவைப்படும் இடங்களில் குறிப்புகள் அந்தந்த காண்டத்தின் முடிவில் இறுதிக் குறிப்புகளாக கொடுக்கப்பட்டுள்ளன. ஓரிரு வரிகளுக்குள் அடைபடும் விஷயங்கள் என்னால் ஆங்காங்கே காவியத்துக்குள்ளேயே இந்த மாதிரியான [ ] அடைப்புக் குறிகளுக்குள் கொடுக்கப்பட்டுள்ளன. சாதாரண அடைப்புக் குறிக்குள் இருப்பவை ஹோமரே சொல்வது.

ஹோமரின் இலியட் காவியத்தை இதுவரை யாரும் தமிழாக்கம் செய்திருப்பதாகத் தெரியவில்லை. ஆனால், இன்னொரு காவிய மான ஒடிஸியை சிலர் செய்திருக்கிறார்கள். 1968-ல் அ.சீநிவாச ராகவன் என்பவர் 'ஒடிஸி'யை 'ஒதிஸ்ஸியம்' என்ற பெயரில் தமிழாக்கம் செய்திருக்கிறார். அவர் பெயரையும் வ.உ.சி.கல்லூரி, தூத்துக்குடி என்பதையும் தவிர வேறு தகவல்கள் கிடைக்க வில்லை. 'ஒதிஸியம்' என்ற பெயரிலேயே அ.சிங்காரவேலு என்பவரும் தமிழாக்கம் செய்திருக்கிறார். இந்திரா பதிப்பகத் தாரால் 1997-ல் அதன் முதல் பதிப்பு வெளியிடப்பட்டுள்ளது.

எனக்கு இந்த வாய்ப்பைக் கொடுத்த நண்பர்கள் பத்ரி, பா. ராகவன், அழகாக இதை வெளியிடுவதில் பாடுபட்ட கிழக்கு பதிப்பக நண்பர்கள், பேராசிரியர் ஏ. மீரான் மொஹிதீன், என் சகோதரி ஹமீதா, சகோதரி மகன் சர்புதீன், சமயங்களில் ஹோமரை எனக்குப் படித்துச் சொல்லி, என் தமிழாக்கத்துக்கு உதவிய என் மகள் ஷாயிஸ்தா - அனைவருக்கும் என் நன்றிக

அன்புட

**நாகூர்** இ

இ

# யானையா பூனையா?

# ஹோமர் ஓர் அறிமுகம்

'யானைக்கும் அடி சறுக்கும்' என்ற தமிழ் மரபுத்தொடர் வாக்கியத்துக்கு இணையான ஆங்கில மரபுத்தொடர் (idiom) [illegible] நக்கிக் குடித்தே

யானைகளெல்லாம் தங்களைப் பூனையென்று கருதிக்கொண்டது காவிய காலம். பூனைகளெல்லாம் தங்களை யானைகளாக எண்ணிக்கொள்வது கலிகாலம். போகட்டும். ஹோமர் என்ற

[illegible] இருக்கும என்று ஒரு நாள் அலசிக்கொண்டிருந்தேன். அப்போதுதான் நான் ஹோமரை முதன்முதலாகச் சந்தித்தேன். ஆங்கிலத்தில் ஹோமருக்கு அவ்வளவு பெரிய இடமா என்று கொஞ்சம் ஆச்சரியமாகக்கூட இருந்தது. சரி விஷயத்துக்கு வந்து விடுகிறேன்.

'யானைக்கும் அடி சறுக்கும்' என்பதற்கு இணையான ஆங்கில மரபுத்தொடர் Even Homer nods என்பதுதான். ஆமாம். இலக்கிய ஜாம்பவான்கள், மகாகவிகள் என்று சொல்லப்படும் காலத்தை மீறி வாழும் படைப்பாளிகள் அனைவருமே பூனைகள் அல்லது எலிகளுக்கு மத்தியில் கம்பீரமாக நிற்கும் யானைகளாகத்தான் பார்க்கப்பட்டிருக்கிறார்கள். ஹோமரும் அப்படிப்பட்ட ஒரு மகா ஆளுமை உள்ளவர்தான். அதில் சந்தேகமே இல்லை.

அவர் சாதாரண படைப்பாளி அல்ல. காவியம் அல்லது காப்பியம் (Epic) என்ற இலக்கிய வடிவம் முதன் முதலாக ஹோமரிடமிருந்துதான் வரலாற்றின் வெளிச்சத்துக்கு வருகிறது. 'காவியங்களின் தந்தை' அவர்தான் என்று ஆங்கில இலக்கிய வரலாறு கூறுகிறது. இலியட் மற்றும் ஒடிஸி என்ற இரண்டு பெரும் காப்பியங்களுக்கு சொந்தக்காரர் அவர். பாரடைஸ் லாஸ்ட், பாரடைஸ் ரீகெய்ண்டு ஆகிய ஆங்கிலக் காவியங்களை மில்ட்டன் எழுதவும், ஜேம்ஸ் ஜாய்ஸ் போன்ற நவீனப் படைப் பாளிகள் யுலிஸஸ் போன்ற காவிய நாவல் எழுதுவதற்கும்

ஹோமரே உந்து சக்தியாக இருந்தார் என்றால் அது மிகையல்ல. (யுலிஸஸ் என்பது ஹோமரின் ஒடிஸி என்ற காப்பிய நாயகனின் இன்னொரு பெயர்).

ஹோமரின் காவியங்களில் இருந்துதான் ஒரு காவியத்துக்கு என்னென்ன குணாம்சங்கள் இருக்க வேண்டும் என்ற அடிப் படைகளும் விதிமுறைகளும் உருவாயின. காவிய இலக்கணமே ஹோமரிடமிருந்துதான் வருகிறது. உதாரணமாக, ஒரு காவியம் என்பது 24 புத்தகங்களாக அல்லது காண்டங்களாக (பிரிவுகளாக) இருக்க வேண்டும். ஏனென்றால், ஹோமரின் இரண்டு காவியங் கள் ஒவ்வொன்றிலும் 24 காண்டங்கள் உள்ளன!

காலத்தை வென்று வாழும் வள்ளுவர், கம்பர், ஷேக்ஸ்பியர் போன்ற பல படைப்பாளிகளுக்கு நேர்ந்த அதே கதைதான் ஹோமருக்கும் நேர்ந்துள்ளது. அவர்கள் வாழ்க்கை தொடர்பான முக்கிய நிகழ்வுகள், இன்னும் அறியப்படாத இருள் குகை

செய்திருப்பதாகத் தெரியவில்லை. ஆனால், இன்னொரு காவிய

களுக்குள் சிக்கிக்கொண்ட மர்மங்களாக நடிப்பதைப் போலவே ஹோமர் எந்த நாட்டுக்காரர், உண்மையில் இந்தக் காப்பியங் களை அவர்தான் எழுதினாரா, யார் அவர், அவருடைய காலம் என்ன என்பது போன்ற எல்லாமே வெறும் ஹேஸ்யங் களாகவே உள்ளன. காலத்தை மீறிய எந்தப் படைப்பாளி யையுமே வரலாற்றின் எந்த ஒரு புள்ளிக்குள்ளும் அடைக்க முடியாது போலிருக்கிறது.

ஒரு குத்துமதிப்பாக, கிறிஸ்து பிறப்பதற்கு 700 ஆண்டுகளுக்கு முன், கி.மு. 7ம் நூற்றாண்டில் ஹோமர் வாழ்ந்ததாகவும், அயோனா என்ற கிரேக்கக் கடற்கரை ஊர்தான் அவரது ஊர் என்றும், இலியட், ஒடிஸி ஆகிய காப்பியங்களை அவர்தான் எழுதினார் என்றும், அவர் குருடராக இருந்தார் என்றும் நம்பப் படுகிறது. (மகாகவிகள் ஞானக்கண்களால் பார்ப்பவர்கள் என்ப தால், அவர்களது புறக்கண்களை ஊனமாக்கிவிடுவது வரலாற் றின் நம்பிக்கை சார்ந்த மரபு போலும். மில்ட்டன் மட்டும் இப்படிப்பட்ட ஹேஸ்யங்களுக்கு வேலையே வைக்காமல் அவர் இடைக்காலத்தில், குருடாகிப் போனார்.

ஹோமர் விஷயத்தில் சந்தேகத்துக்கு இடமின்றி வரலாற்றின் கையில் கிடைத்திருப்பது இரண்டு மகா காவியங்கள். இலியட் மற்றும் ஒடிஸி. அவற்றை எழுதிய ஒரு படைப்பாளி பற்றித்தான் சந்தேகங்கள். அது ஹோமராக இல்லாமல்கூட இருக்கட்டும்

அல்லது ஹோமராகவே இருக்கட்டும். எது எப்படியிருப்பினும், ஹோமர் என்ற பெயருக்குப் பின்னால் இருக்கும் இந்த காப்பியங்களைப் படைத்த அந்த ஆளுமை நிச்சயம் மிகப்பெரியது. அதன் பெயர் எதுவாக இருப்பினும் சரி. இப்போதைக்கு அல்லது இதுவரை அது ஹோமர். இது போதும்.

கம்பராமாயணத்தில் கம்பன் ஒரு கற்பனை செய்வார். ராமனுடைய கதையானது ஒரு கடல் மாதிரி பெரிய விஷயம் என்றும், அதுவும் சாதாரண கடல் அல்ல பாற்கடல் என்றும், அந்தப் பாற்கடலை நக்கிக் குடிக்க ஒரு பூனை ஆசைப்படுவது போல, ராமனுடைய கதையை எழுத தான் ஆசைப்பட்டுள்ளதாக அவர் குறிப்பிடுவார். ஆனால் அந்த அவையடக்கத்தில் விசேஷம் என்னவெனில், அந்தப் பூனை பாற்கடலை நக்கி நக்கிக் குடித்தே விடுகிறது என்பதுதான்!

யானைகளெல்லாம் தங்களைப் பூனையென்று கருதிக்கொண்டது காவிய காலம். பூனைகளெல்லாம் தங்களை யானைகளாக எண்ணிக்கொள்வது கலிகாலம். போகட்டும். ஹோமர் என்ற யானைக்கு அடி சறுக்கியதா? பார்க்கலாம்.

# இலியட் காவியம்
# ஓர் அறிமுகம்

கிரேக்கர்களுக்கும் ட்ராய் நகரத்தவருக்கும் நடந்த யுத்தத்தை விவரிக்கும் இலியட் காவியம் பற்றிய சில முக்கிய முன் தகவல்கள்

ஹோமரால் பண்டைய கிரேக்க மொழியில் கிட்டத்தட்ட கி.மு.750-ல் இயற்றப்பட்டதாக நம்பப்படுகிற காவியம் இது. இதன் கதையைச் சொல்லிச் செல்பவர் கவிஞரே. அதாவது ஹோமர் - தன் மூலமாகக் கதையைச் சொல்லிச் செல்லும் ம்யூசஸ் (Muses) எனப்படும் தெய்வத்துக்கு தான் ஓர் ஊடகமாக இருப்பதாக அவர் நம்புகிறார். தமிழ்ப் புலவனின் நாக்கில் சரஸ்வதி குடியிருப்பது போல, ஹோமரின் நாக்கில் நினைவாற்றலின் தேவதையாகக் கருதப்பட்ட ம்யூசஸ் குடியிருந்தாள். ஹோமர் மூலமாக அவளே காவியம் பாடுகிறாள்.

'அன்னவளுக்கே சரண்' என அவளுக்கு வணக்கம் சொல்லி, உதவி வேண்டி வேண்டுகோள் விடுத்துத்தான் காப்பியம் தொடங்கும் (இது காப்பிய இலக்கணங்களில் ஒன்று). கம்பராமாயணம் போன்ற காவியங்கள் கடவுள் வாழ்த்தில் தொடங்குவதைப் போன்றது இது.

கவிஞர் [illegible] ர்க்கையில் பேசுவார். அவர் எல்லா பாத்திரங் [illegible]ங்களுக்குள்ளும் - அது மனிதர்களாக இருந்தாலும் சரி, [illegible] இருந்தாலும் சரி புகுந்து உணர்ச்சிகளை அறி[illegible] தகுதி படைத்தவராக இருப்பார்.

[illegible] '[illegible]ஸ் ஏஜ்' (Bronze Age) என்று சொல்லப் [illegible] 12 [illegible] 13 ம் நூற்றாண்டில் தொடங்குகிறது.

அதாவது கதை இயற்றப்பட்டதாக அல்லது பாடப்பட்டதாகச் சொல்லப்படும் ஆண்டிலிருந்து கிட்டத்தட்ட 500 ஆண்டுகளுக்கு முன்பு.

அப்படியானால் இந்தக் காப்பியம் வரலாற்றை அடியொற்றி எழுதப்பட்டதா என்ற கேள்விக்கு பதில் காண வேண்டியுள்ளது. ஆனால் தெளிவான பதில் ஏதும் இல்லை. எல்லா காவியங் களுடைய வரலாற்றைப் போலவே இதன் கதையும் வாய்மொழி இலக்கியமாக வழங்கப்பட்டு வந்திருக்கிறது. சொல்லப்போனால் இது ஒரு கதையல்ல. பல கதைகளின் தொகுப்பு. ஆனால் ஓர் அடிச்சரடு மட்டும் எல்லா நிகழ்ச்சிகளையும் இணைத்துக் கொண்டிருக்கும்.

இந்தக் கதையையோ இதையொத்த கதையையோ ஹோமருக்கு முந்திய பல கவிஞர்கள் பாடிச் சென்றுள்ளார்கள். அவற்றிலிருந்து எடுத்து, சலித்து, தொகுத்து ஹோமர் இதைக் கொடுத்துள்ளார். கிட்டத்தட்ட ராமகாதை மாதிரியேதான்! தனக்குக் கிடைத்த செங்கற்களைக் கொண்டு, ஹோமர் தனக்கான ஒரு மாளிகையைக் கட்டியுள்ளார். நமக்கு நிச்சயமாகத் தெரிவது இவ்வளவுதான்!

கதை நிகழும் களம் - ட்ராய் என்ற பகுதியில் இருந்த இலியம் என்ற இடம் அல்லது நகரம் (காவியத்தில் பல நேரங்களில் ட்ராய் என்பதும், இலியம் என்பதும் ஒரே நகரைக் குறிப்பதாகவே வருகிறது). தற்கால வடமேற்கு துருக்கியில் அமைந்த ஒரு நகரம் தான் ஹோமர் கால ட்ராய் என்று அறிஞர்கள் கூறுகிறார்கள். இலியட் காவியம் 15,000 - க்கும் மேற்பட்ட பாடல்களைக் கொண்ட நீண்ட கவிதையாகும். ட்ராயின் ஒரு பகுதியாக இருந்த இலியம் என்ற நகரை கிரேக்கர்கள் முற்றுகையிட்டபோது நடந்த நிகழ்வு களைச் சொல்வதால், இந்தக் காவியம் இலியட் என்ற பெயர் பெற்றது.

ரத்தினச் சுருக்கமாக அல்லது வைரச்சுருக்கமாக கதையைச் சொல்ல வேண்டுமென்றால், இலியட் காவியத்தின் கரு இதுதான்.

அக்கிலிஸ் என்ற மாவீரனின் ஆக்ரோஷம்.

ஆமாம். காவியமாக்கப்பட்ட ஒரு கோபம்தான் இலியட். அக்கிலிஸ் யார்? அவன் ஏன் கோபப்பட்டான்? யார் மீது கோபப் பட்டான்? கோபத்தின் முன் பின் நிகழ்வுகள், விளைவுகள் என்னென்ன? அவன் கோபம் நியாயமானதா? முடிவு என்னானது? இதுபோன்ற விஷயங்களின் காவிய வடிவம்தான் இலியட்.

# கதைக்கு முந்தைய கதை

இலியட் காவியத்தின் கதையைத் தெரிந்து கொள்ளுமுன் அதோடு தொடர்புடைய வேறு சில உபகதைகளைத் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியமாகிறது. இல்லையெனில் காவியத்தின் முழு வீச்சும் புரியாமல் போய்விடக் கூடும். அந்தக் கதைகளில் மிக முக்கியமானவற்றின் சுருக்கம் இங்கே கொடுக்கப்பட்டுள்ளது. இலியட் காவியத்தின் பின்புலம் என்று இதைக் கொள்ளலாம்.

கிரேக்கர்களின் ஜீயூஸ் என்ற தலைமைக் கடவுளும், அவன் தம்பி பொசைடன் என்ற கடல் கடவுளும், தீட்டிஸ் என்ற ஒரு கடல் தேவதையின் மீது மோகம் கொள்கின்றனர். ஆனால் அவளுக்குப் பிறக்கும் மகன், அவனுடைய அப்பாவைவிட பெரிய ஆளாவான் என்று ப்ரொமீத்தியூஸ் என்னும் தேவன் முன்னறிவிப்பு செய்கிறான். எதற்கு வம்பு என்று அண்ணனும் தம்பியும் தீட்டிஸோடு உறவு கொள்ளும் எண்ணத்தைக் கைவிடுகின்றனர். ஆனால் விஷயத்தை அதோடு விட்டுவிடாமல் பீலியூஸ் என்ற ஒரு ராஜாவுக்கு, அவளைத் திருமணம் செய்விக்கின்றனர். அவள்மீது கொண்ட பாசம் காரணமாக இப்படி ஒரு திருமணத்தை அவர்கள் செய்துவைக்கவில்லை. அதில் ஒரு சுயநலம் இருந்தது.

பீலியூஸ் ஒரு மனிதன். இறந்துவிடக்கூடியவன். எனவே, அவனுக்கும் தீட்டிஸுக்கும் பிறக்கும் குழந்தையும் இறந்து விடக்கூடிய ஒரு மனிதனாகவே இருக்கும். தங்களுடைய கடவுள் அந்தஸ்துக்கு ஒரு மனிதக் குழந்தையின் மூலம் எந்தக் குந்தகமும் வந்துவிடாது என்று அவர்கள் கருதினர். எல்லாம் ஒரு பாதுகாப்பு ஏற்பாடுதான்.

பீலியூஸுக்கும் தீட்டிஸுக்கும் பிறந்தவன்தான் நமது அக்கிலிஸ். ஆனால், அக்கிலிஸை எப்படியாவது இறப்பிலிருந்து காப்பாற்றி விட வேண்டும் என்று கடல் தேவதையான தீட்டிஸ் நினைத்தாள். தாய்ப்பாசம். அதற்கு அவள் ஓர் உபாயம் செய்தாள்.

இறந்தவர்களின் ஆத்மாக்கள் திரும்பச் சென்றடையும் ஹயடிஸ் என்ற பாதாள உலகத்தில் ஸ்டிக்ஸ் என்று ஓர் ஆறு ஓடிக்கொண் டிருந்தது. அதன் தண்ணீர் புனிதமானதாகவும் விஷமுள்ளதாக வும் கருதப்பட்டது. ரொம்பத் தீவிரமான விஷயம் என்றால் கடவுள்கள் அதில் அடித்துத்தான் சத்தியம் செய்வார்கள். கற்பூரம் அணைத்து அல்லது துண்டைப் போட்டுத் தாண்டி அல்லது குழந்தையைப் போட்டுத் தாண்டி சத்தியம் செய்வதைப் போல! அப்படி யாராவது ஸ்டிக்ஸ் தண்ணீரில் அடித்து பொய்சத்தியம் செய்துவிடுவாரேயானால், அவர் ஓராண்டுக்கு உணர்ச்சியற்றவ ராக இருப்பார். அதுமட்டுமல்ல. ஒன்பது ஆண்டுகளுக்கு கடவுள் கள் கூட்டத்திலிருந்து அவர் ஒதுக்கியும் வைக்கப்படுவார்.

ஸ்டிக்ஸ் தண்ணீருக்கு இன்னொரு சிறப்பு உண்டு. உடலில் எந்த இடத்தில் அதன் தண்ணீர் படுகிறதோ அந்தப் பகுதி சாகாவரம் பெற்றுவிடும். எனவே, குழந்தை அக்கிலிஸின் குதிகால்களைப் பிடித்துக்கொண்டு அவன் தாய் தீட்டிஸ் அந்த ஆற்றில் குழந் தையைத் தலைகீழாக அமுக்கி முக்கி எடுக்கிறாள். குழந்தையின் உடல் முழுவதும் அந்த ஆற்று நீரால் நனைந்து விடுகிறது. எனவே, அக்கிலிஸும் இறவா வரம் பெற்றவனாகிறான். இந்த விஷயம் அவன் அம்மாவைத் தவிர வேறு யாருக்கும் தெரியாது.

ஆனால் இதில் ஒரு சோகம் என்னவெனில், குழந்தையின் குதிகால்களைத் தன் கைகளால் பிடித்துக்கொண்டிருந்தாள் அல்லவா? அந்த இடத்தில் மட்டும் தண்ணீர் படவில்லை! எனவே அந்த இடம் அக்கிலிஸின் பலவீனமான இடமாகும். மனிதனின் பலவீனத்தைக் குறிக்க ஆங்கிலத்தில் Achilles's heel என்று ஒரு மரபுத்தொடரே உள்ளது. ஆங்கிலத்துக்கு அக்கிலி ஸின் பலவீனமான பகுதி கொடுத்த பலமான கொடை அது!

பீலியூஸ் தீட்டிஸ் திருமணத்துக்கு எல்லா கடவுளர்களும் அழைக்கப்பட்டார்கள், எரிஸ் என்ற ஒரு தேவதையைத் தவிர! எங்கு சென்றாலும் கலகத்தை விளைவிப்பதுதான் அவளுடைய வேலையாக இருந்தது. கிரேக்கக் கடவுளர் உலகின் நாரதி அவள்! அழைப்பின்றி அவமானப்பட்டுப் போன அவள் யாருடைய

கண்ணுக்கும் தெரியாதபடி திருமணத்துக்கு வந்திருந்தாள். வந்தவள் சும்மா இருக்கவில்லை. அவளால் இருக்கத்தான் முடியுமா என்ன? உடனே தன் வேலையை ஆரம்பித்தாள். அங்கிருந்த ஒரு மேஜையின் மீது ஒரு தங்க ஆப்பிளை வைத்தாள். அதில் 'உலகின் தலைசிறந்த அழகிக்கு இது!' என்று பொறிக்கப் பட்டிருந்தது!

அது போதாதா? உடனே அங்கு வந்திருந்த ஹீரா, அதீனி, அஃப்ரோடைட்டி ஆகிய மூன்று பெண் கடவுள்களுக்கும் பொறாமை வந்துவிட்டது. அந்த ஆப்பிள் தனக்கே கிடைக்க வேண்டும் என்று ஒவ்வொருவரும் நினைத்தனர். யார் அழகி என்று போட்டி வந்துவிட்டது. உலகில் அல்லது பிரபஞ்சத்தில் நடந்த முதல் 'மிஸ் யுனிவர்ஸ்' போட்டி அநேகமாக அதுவாகத் தான் இருக்கும்! அதைப் பார்த்த ஆண் கடவுள்கள் மௌனம் சாதித்தனர். யாருக்காவது ஆதரவு கொடுக்கப் போய், மற்ற இரண்டு அழகிகளின் 'ஆதரவை'யும் இழக்க அவர்கள் விரும்ப வில்லை!

இந்த விஷயத்தை முடிவுக்குக் கொண்டுவரும் பொறுப்பை ட்ராய் நகர இளவரசனான பாரிஸ் என்பவனிடம் ஜீயூஸ் ஒப்படைத்தார். உடனே மூன்று போட்டியாளிகளும், பாரிஸை தன் வசம் கொண்டுவர ஆளுக்கொரு ஆசை காட்டினர். யுத்த களத்தில் அவனுக்கு ஆதிக்கம் தருவதாக ஹீராவும், பொதுவான அதிகாரம் வழங்குவதாக அதீனியும் ஆசை காட்டினர். ஆனால் உலகப் பேரழகி ஒருத்தியைப் பரிசாகத் தருவதாக அஃப்ரோ டைட்டி சொன்னாள். அந்த மஞ்ச லஞ்சத்துக்கு மயங்கிய பாரிஸ், பிரபஞ்ச அழகியாக அஃப்ரோடைட்டியையே தேர்ந்தெடுத் தான். ஆப்பிள் அவளுக்கே சென்றது. 'சண்டைக்கான காரணம் என்பதற்கு ஆங்கிலத்தில் apple of discard என்று சொல்வார்கள் அந்த ஆப்பிள் இந்தக் கதையிலிருந்து வருவதுதான்!

சரி. ஆனால் அஃப்ரோடைட்டி வாக்களித்த அந்த உலக பேரழகி யார்? அவள்தான் ஹெலன். இலியட் காவியத்தி கதாநாயகி. அவளைப் பாரிஸ் கடத்திச் சென்றதற்காகத்தா யுத்தமே நடந்தது! காவிய யுத்தம் என்றாலே அது பெண்களு ளாகத்தான் போலிருக்கிறது. பத்தாண்டுகள் அந்த யுத் நடந்தது. ஆவதும் பெண்ணாலே அழிவதும் பெண்ணா என்பது அதுதானோ!

# இலியட் கதைச் சுருக்கம்

கிரேக்க தலைமைக் கடவுளான ஜீயூஸுக்கும், லீடா என்ற பெண்ணுக்கும் பிறந்தவள்தான் மேலே குறிப்பிடப்பட்ட ஹெலன். இந்த லீடா, ட்டின்டாரியூஸ் என்பவனுடைய மனைவி என்றும் சொல்லப்படுகிறது. ஜீயூஸ் ஓர் அன்னப் பறவை வடிவத்தில் சென்று லீடாவிடம் கூடியதாகவும், அதன் விளை வாக முட்டையிலிருந்து ஹெலன் குஞ்சு வந்ததாகவும் கிரேக்க புராணம் கூறுகிறது ('இந்த' விஷயத்தில் நம்மவர்களுக்கு கிரேக்கக் கடவுளர்கள்தான் முன்னோடிகள் போலிருக்கிறது)!

முட்டையிலிருந்து வந்த இந்த பெட்டை ஹெலன் கொள்ளை அழகு. அதுவும் உங்கள் வீட்டு அழகு எங்கள் வீட்டு அழகல்ல. உலகப் பேரழகு. அதோடு ஸ்பார்ட்டாவின் ராஜா மெனிலயஸ் என்பவனின் மனைவியாக வேறு அவள் இருந்து தொலைத்தாள் (கிரேக்கத்தின் ஒரு பகுதி ஸ்பார்ட்டா).

ட்ராய் நாட்டு இளவரசன் பாரிஸ், அவள் ஊருக்கு ஏதோ அரசாங்க வேலை நிமித்தமாக வந்தபோது, ஹெலன் அவன் கண்ணில் பட்டுவிடுகிறாள். பிரச்னை தொடங்குகிறது. அவளைக் கடத்திக்கொண்டு போய் இலியம் என்ற தனது ஊரில் சிறைவைக்கிறான் பாரிஸ். அவளைக் கெடுத்துவிடுவதாகவும், அவளே விரும்பி பாரிஸோடு ஓடிவிடுவதாகவும்கூட சொல்லப் படுகிறது. உண்மை ஹெலனுக்குத்தான் வெளிச்சம் அல்லது இருட்டு!

அவள் கணவன் மெனிலயஸ் இந்த விஷயத்தை தனது அண்ணன் அகமெம்னனிடம் சொல்கிறான். அகமெம்னன் கிரேக்கப்

*படைகளின் ஒட்டுமொத்த தளபதியாக இருந்தான். உடனே ஹெலனை மீட்க அகமெம்னன் தலைமையில் ஒரு பெரும்படை திரட்டப்படுகிறது. எல்லாமே கப்பல் படைகள். கப்பல்களின் எண்ணிக்கை கொஞ்ச நஞ்சமல்ல. ஆயிரம் கப்பல்கள் என்றும் 1186 கப்பல்கள் என்றும் சொல்லப்படுகிறது ('ஆயிரம் கப்பல்களை நங்கூரமிட வைத்த முகமா இது?' என்று மார்லோ எழுதிய டாக்டர் ஃபாஸ்டஸ் என்ற நாடகத்தில், ஹெலனைப் பார்த்து கதாநாயகன் பேசும் பிரபலமான வசனம் ஆங்கில இலக்கியம் படித்தவர்களால் மறக்க முடியாதது)!*

*ஹெலனுக்காக கிரேக்கப் படைகளுக்கும் ட்ராய் நகரப் படைகளுக்கும் (வசதி கருதி இனி ட்ரோஜன்கள் என்று குறிப்பிடுவோம்) பத்து ஆண்டுகள் போர் நடக்கிறது.*

*இந்தப் போரில் அகமெம்னனுடன் ஏற்படும் கருத்து வேறுபாட்டினால், கடைசிக் கட்டத்தில் அக்கிலிஸ் கலந்து கொள்ளாமல் ஒதுங்குகிறான். ஆனால் அக்கிலிஸின் உயிர் நண்பனான பெட்ரோக்குலஸ், அக்கிலிஸுக்குப் பதிலாகப் போரிட்டு கொல்லப்பட்டவுடன் அக்கிலிஸ் வெகுண்டெழுகிறான். ட்ரோஜன் பக்கத்து மாவீரன் ஹெக்டரைக் கொல்லுகிறான். ஹெக்டரின் உடலைச் சின்னாபின்னப்படுத்துகிறான். கடைசியில், ஹெக்டரின் தந்தை ப்ரியம் வேண்டிக் கேட்டுக்கொண்டவுடன், ஹெக்டரின் உடலைக் கொடுக்கிறான். ஹெக்டரின் ஈமச்சடங்குகளுடன் முடிகிறது இலியட் காவியம். பிறகு அக்கிலிஸ் கொல்லப்படுவது பற்றியெல்லாம் இதில் இல்லை.*

*பத்தாவது ஆண்டின் இறுதி ஐம்பது நாட்களின் நிகழ்வுகளை மட்டும் இலியட் காவியம் விவரிக்கிறது என்றும், கடைசி சில வாரங்களின் நிகழ்வுகளைப் பாடுகிறது என்றும் சொல்லப்படுகிறது.*

# முக்கியப் பாத்திரங்கள்

## கிரேக்கர்கள்

***அக்கிலிஸ்* (Achilles)**

*கதாநாயகன். கடல் தேவதை தீட்டிஸ், மானுடன் பீலியூஸ் ஆகியோருக்குப் பிறந்த மகன். மெர்மிடன் படைகளின் தலைவன். கதையைச் செலுத்துவது இவனுடைய கோபம்தான். ஒரு 'சூப்பர்மேன்' மாதிரி அசாதாரண பலம் கொண்டவன். கடவுளர்களோடு நெருங்கிய தொடர்பு கொண்டவன். கிரேக்கப் படைவீரர்களில் அதிகத் துணிச்சல் கொண்டவனும், மிகுந்த வீரம் படைத்தவனும், அதிக அழகானவனும் இவன்தான். பகைவர்களை வெகு வேகமாகத் துரத்திச் சென்று கொல்வதில் நிபுணன். இதனால் இவனுக்கு 'விரைவுப்பாத அக்கிலிஸ்' என்ற ஒரு பெயரும் உண்டு. இறவாப் புகழ் வேண்டும் என்ற தாகமே அக்கிலிஸை உந்தித் தள்ளியது.*

***அகமெம்னன்* (Agamemnon)**

*அத்ரியூஸ் என்பவனின் மகன்..மெனிலயஸின் மூத்த சகோதரன். மைஸினீ என்ற நாட்டின் அரசன். ட்ராய் நோக்கிச் செல்லும் கிரேக்கப் படைகளின் ஒட்டுமொத்தத் தலைவன். பெரும் பான்மையான கப்பல்கள் இவனால் கொண்டுவரப்படுபவையே. அக்கிலிஸின் கோபத்துக்குக் காரணமும் இவன்தான். அகமெம்ன னுக்கும் அக்கிலிஸுக்கும் நடக்கும் போராட்டம்தான் காவி யத்தின் முக்கியப் பகுதி. காவியம் அடிக்கோடிடுவது அக்கிலி ஸின் ஆக்ரோஷத்தைத்தான். 'சினம்' என்ற சொல்லில்தான்*

காவியமே தொடங்குகிறது. போர் முடிந்து கிரேக்கம் திரும்பும் அகமெம்னன் அவனது மனைவியாலேயே கொல்லப்படுகிறான்.

**அஜாக்ஸ்** **(Ajax)**

இந்தப் பெயரில் இரண்டு பேர்கள் உண்டு. சின்ன அஜாக்ஸ், பெரிய அஜாக்ஸ் என. பெரிய அஜாக்ஸின் கோபுரம் போன்ற கேடயம் பிரசித்தமானது.

**ஆட்டோமிடன்** **(Automedon)**

அக்கிலிஸின் பணியாள். அக்கிலிஸின் உயிர் நண்பனான பெட்ரோக்குலஸ், அக்கிலிஸ் இல்லாமல் போர் செய்யும்போது, அவனுக்குத் தேரோட்டியாகவும் இருப்பவன்.

**கல்காஸ்** **(Calchas)**

ஒரு தீர்க்கதரிசி. திஸ்டர் என்பவனின் மகன். நல்லது கெட்டது களை கிரேக்கப் படைகளுக்கு முன்னறிவிப்பவன்.

**டயமீடிஸ்** **(Diomedes)**

மிகவும் மதிக்கப்பட்ட இளம் வீரன். டைடியூஸ் என்பவனின் மகன். தீப்ஸ் நகர முற்றுகையின்போது இறந்துபோன தன் தந்தையைப் பற்றி அடிக்கடி பேசிக்கொண்டிருப்பான். இந்தப் போரில் 80 கப்பல்களின் தலைவனாக இருந்தவன். அஃப்ரோடைட்டியைக் காயப்படுத்தியவன்.

**யூரிபைலஸ்** **(Eurypylus)**

இந்த வீரன் பாரிஸால் காயப்படுத்தப்படுகிறான். பெட்ரோக்குலஸால் உதவி பெறுகிறான்.

**ஹெலன்** **(Helen)**

ஜீயூஸின் மகள். காஸ்டர், பொலக்ஸ் ஆகியோரின் சகோதரி. ஸ்பார்ட்டா மன்னன் மெனிலயஸின் மனைவி. பாரிஸோடு போனதால் ட்ரோஜன் யுத்தம் நடக்கக் காரணமானவள்.

**ஹெராக்ளிஸ்** **(Heracles) / ஹெர்குலிஸ் (Hercules)**

ஹெர்குலிஸ், கிரேக்கப் புராணத்தின் தலைசிறந்த வீரர்களில் ஒருவன். கிரேக்கர்கள் இவனை ஹெராக்லிஸ் என்றே அழைத்

தனர். ஆனாலும், ஹெர்குலிஸ் என்ற ரோமப் பெயரிலேயே இவன் பிரபலமடைந்திருந்தான்.

தன்னை அவமானப்படுத்தியவர்களை இவன் பழி வாங்கினான். இதில் இவனால் கொல்லப்பட்ட லோம்டன் என்ற ட்ரோஜன் மன்னனும் ஒருவன். இது பிடிக்காத ஹீரா, இவனை கோஸ் என்ற தீவு வரை துரத்தினாள். அதனால் வெகுண்ட ஜீயூஸ், ஹீராவைத் தலைகீழாகத் தொங்கவிட்டுத் தண்டித்தான். ஹெராக்ளிஸ் அடிக்கடி கடவுளர்களோடும் சண்டையிடுவான்.

கிரேக்கர்களின் தலைமைக் கடவுளான ஜீயூஸுக்கும், மானிடப் பெண்ணான இளவரசி அல்க்மீனிக்கும் தீப்ஸ் நகரில் பிறந்தவன் ஹெர்குலிஸ். அதனால் இவனை ஜீயூஸின் மனைவி ஹீராவுக்குப் பிடிக்காது. சக்களத்தி பிள்ளையை யாருக்குத்தான் பிடிக்கும்? தனது சக்களத்தி அல்க்மீனிமீது பொறாமை கொண்ட ஜீயூஸின் மனைவி ஹீரா, ஹெர்குலிஸை வெறுத்தாள். வாழும் நாளெல்லாம் அவனுக்குப் பல தொல்லைகளை அவள் கொடுத்துக்கொண்டிருந்தாள்.

அவன் குழந்தையாகத் தொட்டிலில் கிடந்தபோது, அவள் அனுப்பிய இரண்டு அனகோண்டாக்களை தன் இடது கையால் நசுக்கிக்கொன்றான் குழந்தை ஹெர்குலிஸ்! அவன் இளைஞனானபோது அவனுக்கு இரண்டு காட்சிகள் காட்டப்பட்டன. ஒன்று எளிதான சுகபோக வாழ்க்கை. இன்னொன்று கடினமான, அபாயம் நிறைந்த புகழ் சேர்க்கும் வாழ்க்கை. அவன் இரண்டாவதைத் தேர்ந்தெடுத்துக் கொண்டான்.

ஹெர்குலிஸ் செய்த பன்னிரண்டு விதமான கடின வேலைகளுக்காக அவன் புகழ் பெற்றான். ஆனால் அவ்வேலைகள் அனைத்தும் அவன் அறியாமல் செய்த குற்றத்துக்குப் பிராயச்சித்தமாக இருந்தன. அவனுக்கு, பைத்தியம் பிடிக்கும்படி ஹீரா செய்தாள். அந்நிலையில் அவன் தன் மனைவி மெகாராவையும் குழந்தைகளையும் கொன்றுவிடுகிறான். அதற்குப் பரிகாரமாக அவன் யூரிஸ்தியூஸ் என்ற மன்னனுக்கு பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஊழியம் செய்ய வேண்டும் என்று டெல்ஃபி கோயிலின் ஆரக்கிள் சொல்லிவிடுகிறது. யூரிஸ்தியூஸ் செய்யச் சொன்ன 12 வேலைகள்தான் ஹெர்குலிஸின் புகழுக்குக் காரணம். அந்த வேலைகள்

முதல் ஆறு பணிகள் தீப்ஸ் நகரில் நிறைவேற்றப்பட்டன. முதலில் அவன் நிமியா பகுதியில் இருந்த சிங்கத்தைக் கொன்று அதன் தோலை வெற்றிச் சின்னமாக அணிந்துகொண்டான். இரண்டாவதாக, லெர்னா என்ற இடத்திலிருந்த வெட்ட வெட்டத் தலைகள் முளைக்கும் ஹைட்ரா என்ற ராட்சச மிருகத்தைக் கொன்றான். இறவா வரம் பெற்ற அதன் ஒரே ஒரு தலையை மட்டும் வெட்டாமல் ஒரு பாறைக்குள் செலுத்திப் புதைத்தான். பின் ஹைட்ராவின் ரத்தத்தைப் பயன்படுத்தி தன் அம்புகளின் முனைகளுக்கு விஷமேற்றிக் கொண்டான். மூன்றாவதாக எரிமாந்தஸ் வளர்த்த பெரிய காட்டுப் பன்றியைப் பிடித்தான். நான்காவதாக, ஆர்கேடியாவின் தங்கக் கொம்புள்ள மானைப் பிடித்தான். ஐந்தாவதாக, ஸ்டிம்ஃபாலஸ் ஏரிக்கு அருகில் இருந்த வனத்திலிருந்த பயங்கரமான பறவைகளை விரட்டினான். அம்புகள் போன்ற இறகுகளால் அவை மனிதர் களைத் தாக்கிக் கொண்டிருந்தன. ஆறாவதாக, மன்னன் ஆகியாஸின் குதிரை லாயங்களைச் சுத்தப்படுத்தினான். அந்த லாயங்கள் பல ஆண்டுகளாக சுத்தப்படுத்தப்படாமல் இருந்தன. இரண்டு ஆறுகளை அந்த லாயங்களின் உள்ளே ஓடவிட்டு அவைகளை அவன் ஒரே நாளில் சுத்தப்படுத்தினான். இந்தச் சாதனையின் பொருட்டு, மிகவும் கடினமான வேலைகளைக் குறிக்க to clean the Augean stables என்ற மரபுத்தொடரே உருவானது. பொதுவாக ஆங்கிலத்தில், எந்தக் கஷ்டமான காரியத்தையும் குறிக்க Herculean task என்றே சொல்வார்கள்.

அவனது ஊரான தீப்ஸிலிருந்து வெகு தொலைவில் நடந்தன அடுத்த ஆறு வேலைகளும். ஏழாவதாக, மன்னன் மினோஸின் எருதைப் பிடிப்பதற்காக கிரேக்கத் தீவான கிரீட்டிக்குச் சென்றான். எட்டாவது வேலையாக, மன்னன் டயமீடிஸின் குதிரைகளை யூரிஸ்தியூஸிடம் கொண்டுவந்து சேர்த்தான். இந்தக் குதிரைகள் மனிதர்களை உணவாக உட்கொள்பவை. அவைகளுக்கு டயமீடிஸையே உணவாகக் கொடுத்துக்கொண்டு வந்தான் ஹெர்குலிஸ். ஒன்பதாவது வேலையாக, அமேசான் ராணியோடு சண்டையிட்டு, ராணி ஹிப்போலிட்டாவின் ஒட்டியாணத்தைக் கைப்பற்றினான்.

பத்தாவது மற்றும் பதினொன்றாவது வேலைக்காக, பண்டைய உலகின் மேற்கு எல்லைவரை சென்றான். கெரியான் என்ற அச்சமேற்படுத்தும் ராட்சச மிருகத்தைப் பிடித்தான். பின் ஹெஸ்பிரிடிஸ் எனும் வனதேவதைகளின் பாதுகாப்பில் இருந்த

தங்க ஆப்பிள்களை வெற்றிகரமாகத் திருடினான். அந்த ஆப்பிள் கள், ஹீராவுக்கு அவள் ஜீயூஸைத் திருமணம் செய்துகொண்ட போது பரிசாக வழங்கப்பட்டவை. கடைசிப் பணியாக, இறந்த வர்களின் உலகமான ஹயடிஸுக்குக் கீழிறங்கிச் சென்றான். அந்த உலகத்தை செர்பீரஸ் எனும் மூன்று தலைகள் கொண்ட ஒரு நாய் காவல் காத்தது. அதைப்பிடித்து மேலுலகத்துக்குக் கொண்டு வந்தான்.

கடைசி மூன்று வேலைகளும் அவனுக்கு இறவாத் தன்மையை வழங்கின.

**லாபித்துகள் (Lapiths)**

இவர்கள் தெஸ்ஸாலியிலிருந்து வந்த மக்கள். பாதி மனிதனாக வும் பாதி குதிரையாகவும் இருந்த சென்ட்டார் என்பவனோடு போர் புரிந்தவர்கள் இவர்கள்.

**மெக்கேயான் (Machaon)**

அஸ்க்லிபியூஸ் என்பவனின் மகன். நோயைக் குணப்படுத்து வதில் பிரசித்தி பெற்றவன். காயம்பட்ட மெனிலயஸை இவன் கவனித்துக்கொள்கிறான். இவனே பிறகு காயம்படுகிறான். ஆனால் நெஸ்டரால் காப்பாற்றப்படுகிறான்.

**மெனிலயஸ் (Menelaus)**

அத்ரியூஸின் மகன். அகமெம்னனின் தம்பி. ஸ்பார்ட்டாவின் மன்னன். ஹெலனின் கணவன்.

**மெனஸ்தியூஸ் (Menestheus)** அத்தீனியப் பிரிவின் தலைவன்.

**மெனீட்டியஸ் (Menoetius)** பெட்ரோக்குலஸின் தந்தை.

**நெஸ்டர் (Nestor)** நீலியூஸின் மகன். பைலோஸின் மன்னன். ட்ரோஜன் யுத்தத்தில் பங்குபெறும் வயதான தலைவன். ஞானம் பெற்றவன் என்று மதிக்கப்பட்டவன்.

**ஒடிஸியூஸ் (Odesseus)**

ஒடிஸி என்ற ஹோமரின் இன்னொரு காவியத்தின் நாயகன். மாவீரன். லேர்ட்டீஸின் மகன். இத்தாகா என்ற நாட்டின் அரசன். பெண் கடவுள் அதீனிக்கு இவனை மிகவும் பிடிக்கும்.

**பெட்ரோக்குலஸ் (Patroclus)**

*மெனீட்டியஸின் மகன். அக்கிலிஸின் உயிர் நண்பன். அவனுக்காக அவனுடைய உடையில் போரிட்டு உயிரை விட்டவன். அக்கிலிஸ் இவனுக்காகத்தான் ஹெக்டரைக் கொல்லுவான்.*

***பீலியூஸ்*** **(Peleus)**

*அக்கிலிஸின் தந்தை. தனது நாட்களில் பெரிய வீரனாகத் திகழ்ந்தவன். தனது குதிரைகள், கவசம், ஆஷ் மர ஈட்டி ஆகியவற்றுக்காகப் பிரபலமானவன் (இவைகள் அவனது திருமணப் பரிசாக கடவுள்களால் கொடுக்கப்பட்டவை).*

***ஃபீனிக்ஸ்*** **(Phoenix)**

*ட்யூலோபிஸ் நாட்டு மன்னன். அக்கிலிஸின் நண்பன். அக்கிலிஸின் ஆசிரியராக பீலியூஸினால் நியமிக்கப்பட்டவன். (தனது சாம்பலிலிருந்து உயிர்த்தெழும் ஒரு பறவையும் இந்தப் பெயரில் உண்டு).*

***டல்திபியஸ்*** **(Talthybius)**

*அகமெம்னனின் பிரதம அறிவிப்பாளன்.*

# ட்ரோஜன்களும் அவர்களது ஆதரவாளர்களும்

***ஈனியாஸ்*** **(Aeneas)**

*பெண் கடவுள் அஃப்ரோடைட்டிக்கும் மானிடனான ஆங்க்கை சீஸ் என்பவனுக்கும் பிறந்தவன். ஹெக்டரின் வலது கை. அவனுக்கு அடுத்த நிலையில் உள்ள தளபதி. லத்தீன் மொழியில் வெர்ஜில் எழுதிய (கி.மு. 19) ஈனியட் என்ற காவியத்தின் நாயகன்.*

***ஆன்ட்ரோமக்கி*** **(Andromache)** *ஹெக்டரின் மனைவி.*

***ஆன்ட்டினார்*** **(Antinor)**

*ஒரு ட்ரோஜன் தலைவன். ஹெலனை விட்டுவிடும்படி மக்க ளுக்கு அறிவுரை சொன்னவன்.*

***அஸ்டியானாக்ஸ்*** **(Astyanax)** *ஹெக்டர், ஆன்ட்ரோமக்கி ஆகியோ ரின் மகன்.*

***ப்ரிசிஸ்*** **(Briseiss)**

*அக்கிலிஸின் கோபத்துக்குக் காரணமான பெண். அவளுடைய ஊரை அக்கிலிஸ் வெற்றி கொண்டபோது, கைதியாகப் பிடிக்கப் பட்டவள். க்ரிசிஸ் என்பவளுக்குப் பகரமாக அகமெம்னனால் ப்ரிசிஸ் எடுத்துக்கொள்ளப்பட்டாள்.*

***கஸ்ஸான்ட்ரா*** **(Cassandra)**

*ப்ரியம், ஹெக்காபி ஆகியோரின் மகள். இலியம் நகரை அழித்த பிறகு, அகமெம்னன் இவளைத் தன்னோடு அழைத்துச் சென்றான்.*

ஆனால் அகமெம்னனின் மனைவியால் கஸ்ஸான்ட்ரா கொலை செய்யப்படுகிறாள். கஸ்ஸான்ட்ராவின் சோகமான சிறப்பு என்னவெனில், அவள் ஒரு தீர்க்கதரிசியாக இருந்தாள். அவளை அப்போலோ மோகித்தான். ஆனால், அவள் அவனை அலட்சியப்படுத்திவிட்டாள். அதனால் அவனுடைய சாபம் அவள்மீது இறங்கியது. அதன்படி அவளுடைய தீர்க்கதரிசனங்கள் எவ்வளவுதான் உண்மையாக இருந்தாலும், அதை யாரும் நம்புவதில்லை.

**க்ரிசிஸ் (Chryseis)**

அப்போலோ கோவிலின் பூசாரி க்ரைசிஸ் என்பவனின் மகள். ட்ராயின் தீபி நகரை அக்கிலிஸ் பிடித்தபோது, பரிசாக அகமெம்னனுக்குக் கிடைத்தவள். இவளுக்காக அப்போலோ, கிரேக்கர்கள்மீது ஒரு கொடிய கொள்ளை நோயை ஏவுகிறான். அதனால் இவளை விட்டுவிடச் சொல்லி அக்கிலிஸ் அகமெம்னனைக் கேட்கிறான். இதன் காரணமாகத்தான் இருவருக்கும் சண்டை வருகிறது. இந்தச் சண்டையும், அதனால் அக்கிலிஸுக்கு ஏற்படும் அவமானமும் கோபமும்தான் இலியட்டின் முதல் காண்டக் கதையாகும்.

**டெய்ஃபோபஸ் (Deiphobus)**

ப்ரியம் ஹெக்காபியின் மகன். ஒரு ட்ரோஜன் தலைவன். அதீனிக்கு இவனை மிகவும் பிடித்துப் போகிறது. அக்கிலிஸோடு போரிடும்போது இவனுக்காக அவள் ஹெக்டரை ஏமாற்றுகிறாள்.

**டோலன் (Dolon)**

யூமிடிஸ் என்பவனின் மகன். குதிரைகளின்மீது பிரியம் கொண்ட பணக்கார ட்ரோஜன் இளைஞன்.

**ஈட்டியான் (Eetion)**

ஆன்ட்ரோமக்கியின் தந்தை. இவனும் இவனது மகன்களும் அக்கிலிஸால் கொல்லப்படுகின்றனர்.

**ஹெக்காபி (Hecabe)**

ப்ரியமின் மனைவி. ஹெக்டர், பாரிஸ் உட்பட பல குழந்தைகளின் தாய்.

**ஹெக்டர் (Hector)**

*ப்ரியம், ஹெக்காபி ஆகியோரின் மகன். ட்ரோஜன் மற்றும் ஆதரவுப் படைகளின் தலைவன். மாவீரன். பாரிஸின் சகோதரன். அக்கிலிஸின் உயிர் நண்பன் பெட்ரோக்குலஸைக் கொல்பவன். அக்கிலிஸால் கடைசியில் கொல்லப்படும் எதிரணிக் கதாநாயகன்.*

**ஹெலீனஸ் (Helenus)**

*ப்ரியம், ஹெக்காபி ஆகியோரின் மகன். தனது சகோதரி கஸ்ஸான்ட்ராவைப் போல இவனும் ஒரு முன்னறிவிப்பாளன். தீர்க்கதரிசனம் பெற்றவன்.*

**இடாயூஸ் அல்லது அய்டயஸ் (Idaeus)** *ப்ரியத்தின் முக்கிய அறிவிப்பாளன்.*

**அய்லஸ் (Ilus)** *ப்ரியத்தின் தாத்தா. இலியம் என்பது 'அய்லஸ்ஸின் நகரம்.'*

**லேமெடன் (Laomedon)**

*வாக்கைக் காப்பாற்றும் பழக்கமில்லாத, அவ நம்பிக்கைக்குரிய ஆரம்பகால ட்ரோஜன் மன்னன். உதாரணமாக, தனது மகளை ஒரு அசுர கடல் மிருகத்திடமிருந்து காப்பாற்றினால் பிரசித்தி பெற்ற குதிரைகளை ஹெர்குலிஸுக்குத் தருவதாகவும், இலியம் நகரின் சுவர்களைக் கட்டுவதற்காக பொஸைடனுக்கு வெகுமதி அளிப்பதாகவும் இவன் வாக்களித்தான். ஆனால், அதன்படி நடக்கவில்லை.*

**பான்டாரஸ் (Pandarus)**

*ட்ரோஜன்களுக்கு ஆதரவளித்த லிஸியா நாட்டுக்காரன். அம்பெய்வதில் நிபுணன். ஆனால், நம்பிக்கைத் துரோகி.*

**பாரிஸ் (Paris)**

*ப்ரியம், ஹெக்காபி ஆகியோரின் மகன். ஹெக்டரின் சகோதரன். ஹெலனைக் கடத்தியவன். இலியட் காவியத்தின் ராவணன். அய்டா மலையில் ஒரு மேய்ப்பனாக இருக்கும்போதுதான் முன் சொல்லப்பட்ட ஆப்பிள் அழகியைத் தேர்ந்தெடுத்தவன்.*

**பாலிடாமஸ் (Polydamus)**

திறமை வாய்ந்த ட்ரோஜன் தலைவன். மிகவும் கவனமாகவும் தெளிவாகவும் இருப்பவன். ஹெக்டருக்கு அடிக்கடி அறிவுரை சொல்பவன்.

**ப்ரியம் (Priam)**

லேமடனின் மகன். ட்ராயின் மிக வயதான அரசன். ஹெக்டர், பாரிஸ் ஆகியோரின் தந்தை. இறுதிக் காண்டத்தின் பெரும்பகுதி இவனுக்கும் அக்கிலிஸுக்கும் நடக்கும் உரையாடல்தான்.

**சர்ப்பிடான் (Sarpedon)**

ஜீயூஸின் மகன். லிஸியாவிலிருந்து வந்த ட்ரோஜன் ஆதரவாளர் படையின் தலைவன்.

# கடவுள்கள்

தெய்வங்களின் பங்கேற்பு, காவிய இலக்கணத்தின் முக்கியப் பகுதியாகும். இது இந்திய காப்பிய மரபிலும் உள்ளதுதான். கிருஷ்ண பரமாத்மா அர்ஜுனனுக்கு தேரோட்டியாக மகாபாரதத் தில் இருப்பதையோ, விஷ்ணுவின் அவதாரமான ராமனையே நாயகனாகக் கொண்டு ராமாயணம் இருப்பதையோ, அதில் அனுமன் போன்ற பாத்திரங்கள் முக்கிய பங்கு வகிப்பதையோ நாம் மறக்க முடியுமா? அரசர்களும், அசுரர்களும், தேவர்களும், தேவதைகளும், அவதாரங்களும், மனிதர்களோடு இணைந்து செயல்படும் தளம்தான் காப்பியம்.

கடவுள்கள் விஷயத்தில் ஹோமர் இன்னொரு வேலையும் செய்கிறார். அதுதான் நகைச்சுவை. ஹோமரின் நுட்பமான நகைச்சுவை, கடவுள்களோடு தொடர்புடையது. கடவுள்கள் நட்போடோ எதிர்ப்போடோ, எப்படிச் சந்தித்தாலும் அங்கு நிச்சயம் நகைச்சுவை இருக்கும். கடவுள் என்றாலே நகைச் சுவைக்குரிய விஷயம் என்று ஹோமர் நினைத்தாரோ என்னவோ! இதை நானாகச் சொல்லவில்லை. ஹோமரை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த ஈ.வி.ரியூ என்பவர்தான் இப்படிக் கூறுகிறார்!

**அஃப்ரொடைட்டி (Aphrodite) / வீனஸ் (Venus)**

ஜீயூஸின் மகள். ஈனியாஸ் அடோனிஸ் ஆகியோரின் தாய். போர்க்கடவுள் ஏரிஸின் காதலி. காமம், அழகு ஆகியவற்றுக்கான கிரேக்கப் பெண் கடவுள். நம்முடைய மன்மதனுக்குப் பெண் பால். ரோமானியர்கள் இவளை வீனஸ் என்று அழைத்தனர்.

ஸ்பார்ட்டா, தீப்ஸ், சைப்ரஸ் ஆகிய இடங்களில் போர்க்கடவுளாகவும், விளைச்சல் கடவுளாகவும் இவள் மதிக்கப்பட்டாள். காம உணர்வைத் தூண்டக்கூடிய எந்த மருந்துக்கும் அல்லது உணவுக்கும் ஆங்கிலத்தில் aphrodisiac என்று பெயர். இந்தச் சொல் அஃப்ரோடைட்டியின் பெயரிலிருந்தே வருகிறது.

**அப்போலோ (Apollo)**

நமக்கு மிகவும் பரிச்சயமான இந்தப் பெயர் கிரேக்கர்களிடமிருந்து வருகிறது. ஜீயூஸ் மற்றும் லீட்டோவின் மகன். ஃபீபஸ் என்றும் இவனுக்கு ஒரு பெயருண்டு. ஆரோக்கியம், நோய், தீர்க்கதரிசனம், கம்பி இசைக்கருவிகள் ஆகியவற்றுக்கான கடவுள் (முக்கியமாக யாழும்! வயலினும் வில்லும்!). மனிதர்கள் திடீரென்று இறந்தால் அதற்கு அப்போலோதான் காரணம் என்று கருதப்படுகிறது. ட்ரோஜன்களின் பக்கம் இவன் சண்டையிடுகிறான்.

**ஏரிஸ் (Ares)**

ஜீயூஸ் மற்றும் ஹீராவின் மகன். போர்க்கடவுள். ட்ரோஜன்கள் பக்கம் சண்டையிடுகிறான். கடவுள்களின் சண்டையில் மிகவும் கேவலமாக அதீனியால் இவன் ஒதுக்கப்படுகிறான்.

**ஆர்ட்டிமிஸ் (Artemis)**

ஜீயூஸ், லீட்டோ ஆகியோரின் மகள். அப்போலோவின் சகோதரி. காட்டு மிருகங்கள், வேட்டை ஆகியவற்றுக்கான பெண் கடவுள். ட்ரோஜன்களுக்கு இவள் ஆதரவு. பெண்கள் அமைதியாக இறந்துபோக இவள் தனது அம்புகளைப் பிரயோகிப்பாள்.

**அதீனி (Athene)**

இவளை ஜீயூஸின் தலைமகள் என்று சொல்லலாம். ஏனெனில் இவள் ஜீயூஸின் தலைவழியாகப் பிறந்தவள். 'சீமாட்டி', 'இளமையானவள்' என்றெல்லாம் பொருள்படும் 'பல்லாஸ்' என்றும் அழைக்கப்படுபவள். (மனித உருவும் மீன் வாலும் கொண்ட) ட்ரைட்டன் என்ற கடல் தேவனால் வளர்க்கப்பட்டாள். யுத்தம், அறிவு, கலைகள், கைத்தொழில்கள் ஆகியவற்றுக்கான பெண்கடவுள். கிரேக்கர்களுக்கு உறுதியான ஆதரவு

அளிப்பவள் (ஏனெனில், ட்ரோஜன் பாரிஸ் உலக அழகியாக இவளைத் தேர்ந்தெடுக்கவில்லை). ஹீராவுடன் சேர்ந்து ட்ரோஜன்களுக்கு எதிராக வேலை செய்கிறாள். 'சாம்பல் நிறக் கண்ணாள்' என்றும் 'ஆந்தைக்கண்ணாள்' என்றும் வர்ணிக்கப் படுபவள். ஆந்தை இவளது பிரிய பறவை.

**க்ரோனஸ் (Cronus)**

டைட்டன்களின் அரசன். தன் தந்தை யுரானஸின் மர்ம உறுப்பு களை அரிவாளால் அறுத்து ஆட்சியைப் பிடித்தவன் (உறுப்பு இழந்தவர்களால் உருப்படியாக ஆட்சி செய்ய முடியாது என்ற நம்பிக்கை கிரேக்கர்களுக்கு இருந்திருக்கலாம்)! தனது சகோதரி ரியா என்பவளை மனைவியாக ஆக்கிக்கொண்டவன். அவள் மூலமாக ஜீயூஸ், ஹீரா, ஹயடிஸ், பொசைடன் ஆகியோரைப் பெற்றவன். ஆனால், பெற்றவுடன் அந்தக் குழந்தைகளை எல்லாம் விழுங்கிவிட்டான்.

'அப்பனை, ஆத்தாளை முழுங்கிடுச்சு!' என்று அனாதைக் குழந்தைகள் வர்ணிக்கப்படுவதை நாம் அறிவோம். ஆனால், பிள்ளைகளை 'முழுங்கிய' முதல் அப்பன் க்ரோனஸாகத்தான் இருக்க வேண்டும். தனது பிள்ளைகளினால் தன் ஆட்சிக்கு ஆபத்து வரும் என்று க்ரோனஸின் பெற்றோர் எச்சரித்திருந்ததே இதற்குக் காரணம் என்று சொல்லப்படுகிறது.

ஆனாலும், ஜீயூஸ் பிறந்ததை மறைத்து விடுகிறாள் ரியா. அவனுக்குப் பதிலாக ஒரு பெரிய கல்லை, குழந்தை என்று சொல்லி ஏமாற்றி விழுங்க வைக்கிறாள். ஜீயூஸ் வளர்ந்து பின்னாளில் தந்தையை வென்று, சகோதர சகோதரிகளை அவன் வயிற்றிலிருந்து மறுபடி (வாந்தி எடுக்க வைத்து) மீட்டு ஆட்சிக்கு வருகிறான். தன் தந்தையின் உறுப்புகளை க்ரோனஸ் அரிவாளால் அறுத்ததால், ஜீயூஸுக்கு 'அரிவாள் எடுத்தவன் மகன்!' என்று ஒரு பெயர் வந்தது.

**டெலூஷன் (Delusion)**

ஜீயூஸின் மகள். வடிகட்டிய முட்டாள்தனத்தின் உருவகம் இவள். உணர்ச்சி வேகத்தில் எதையாவது செய்துவிட்டு மோசமான பின்விளைவுகளில் எசகுபிசகாக மாட்டிக்கொள்வதற்கு உதாரணமாகத் திகழ்ந்தவள்.

***அய்லய்தியா* (Eileithyia)**

*ஹீராவின் மகள். பிரசவகால வேதனைகளுக்குப் பொறுப்பு வகிக்கும் கடவுள்.*

***ஃப்யூரிகள்* (Furies)**

*பாதாள உலகின் கடவுள்கள். எதெது எப்படி இருக்க வேண்டுமோ, அதது அப்படி இருக்க நியமிக்கப்பட்டவர்கள். வாக்குறுதி களைக் காப்பவர்கள். இயற்கைக்கு மாறான காரியங்களைச் செய் பவர்களுக்கு தண்டனை வழங்குபவர்கள் (இதில் பெற்றோருக்கு அவமரியாதை செய்வதும் ஒன்று. இலியட் காவியத்தில் ஃபீனிக்ஸ் என்பவனுக்கு அவனது தந்தையின் சாபத்தால் குழந்தையில்லாமல் போகிறது). ரோமப்புராணிகத்தில் ஃப்யூரி கள் பழிதீர்க்கும் பெண் கடவுள்கள். எரின்யிஸ் என்றும் யூமினீ டிஸ் என்றும் கிரேக்கர்கள் இவர்களை அழைத்தனர். ஃப்யூரி களின் கையில் சாட்டையும், தலையில் பாம்புகளும்இருக்கும்.*

***ஹயடிஸ்* (Hades)**

*க்ரோனஸ், ரியா ஆகியோரின் மகன். இறந்தவர்களின் கடவுள். இவன் ஆளும் பாதாள உலகத்துக்கும் ஹயடிஸ் என்றே பெயர். இலியட் காவியத்தில், பெரும்பாலும் ஹயடிஸ் என்பது இறந்த வர்களின் ஆத்மாக்கள் சென்றடையும் உலகத்தையே குறிக்கிறது. இவனது சகோதரர்களான பொசைடனும் ஜீயூஸும் இந்த உலகைப் பங்கு போட்டுக்கொண்டபோது, தன் பங்குக்கு இறந்த வர்கள் சென்று சேரும் பாதாள உலகைப் பெற்றவன். குதிரை களோடு தொடர்புபடுத்தப்படுபவன் (நமக்கு எருமை என்றால் கிரேக்கர்களுக்குக் குதிரை போலுள்ளது). ரோமானியர்கள் இவனை ப்ளூட்டோ என்றழைத்தனர்.*

*ஹயடிஸின் உலகம் நரகம் அல்ல (ஹயடிஸின் கீழே உள்ள டார்டாரஸ் என்ற பகுதிதான் நரகத்துக்கு இணையானதாகும். சொர்க்கத்தை, கிரேக்கப் புராணத்தில் எலீசியம் என்றழைத் தார்கள்).*

*ஹயடிஸ் சொர்க்கத்துக்கும் நரகத்துக்கும் இடைப்பட்ட ஒரு இடம். பூமியின் கீழே ஹயடிஸ் இருந்ததாக கிரேக்கர்கள் நம்பினர். அக்கீரான், காக்கிட்டோஸ், லீதே, ஃப்லிகீதான், ஸ்டிக்ஸ் ஆகிய ஐந்து ஆறுகளோடு தொடர்புடையது ஹயடிஸ்.*

உயிருடன் இருப்பவர்களின் உலகத்துக்கும் இறந்தவர்களின் உலகத்துக்கும் இடையேயான எல்லையாக இந்த ஆறுகள் இருந்தன.

இந்த பஞ்ச நதிகளில் மிகப்பிரபலமானதும், இலியட் காவியத்தில் அடிக்கடி குறிப்பிடப்படுவதும் ஸ்டிக்ஸ் ஆறுதான். ச்சாரான் என்ற படகோட்டியின் உதவியால் இதைக் கடக்க வேண்டும். அவன் காசு கேட்பானாகையால், இறந்தவர்களைப் புதைக்கு முன் அவர்கள் வாயில் கிரேக்கர்கள் நாணயங்களை வைத்தனர் (பிணத்தின் நெற்றியில் காசு வைப்பது போல). ஸ்டிக்ஸ் ஆற்றின் கரையில்தான் ஹயடிஸின் வீடு இருந்தது. செர்பீரஸ் என்ற மூன்று தலைகொண்ட அசுர நாயொன்று அந்த வீட்டைப் பாதுகாத்து வந்தது.

**ஹெஃபைஸ்டஸ் (Hephaestus)**

ஜீயூஸ், ஹீரா ஆகியோரின் மகன். (கிரேக்கக் கைலாயமான) கடவுளர் வாழும் ஒலிம்பஸ் மலையை வடிவமைத்த நிபுணன். கிரேக்கர்களுக்கு ஆதரவு கொடுத்தவன். நெருப்புக்கும் உலைக் களத்துக்குமான கிரேக்கக் கடவுள். கடவுளரின் கொல்லனாகவும் உலோகத் தொழிலாளர்களின் புரவலனாகவும் இருந்தான். வல்கான் என்ற ரோமக் கடவுளை பல வகையில் ஒத்திருந்தான் இவன்.

ஹெஃபைஸ்டஸுக்கும் மற்ற கிரேக்கக் கடவுளருக்கும் ஒரு முக்கியமான வித்தியாசமிருந்தது. மற்ற கிரேக்கக் கடவுள்கள் எல்லாம் அழகுக்கும் வடிவத்துக்கும் புகழ் பெற்றவர்கள். ஆனால் இவன் ஊனமுற்ற, வடிவம் சிதைந்த விகாரமான கடவுள். குறுந்தளராடையும் கூம்பு வடிவத் தொப்பி ஒன்றும் அணிந்துகொண்டு, கையில் சுத்தியும் குறடுமாக வேலை செய்து கொண்டிருக்கும் ஓர் ஆற்றல் மிக்க கடவுளாக, இவனைச் சிற்பிகள் வடித்திருந்தனர். ஜீயூஸ் ஒரு முறை தன் மனைவி ஹீராவைக் கட்டிவைத்தான். அவளை விடுவிக்க முயன்றதற்காக ஒலிம்பஸ் மலையிலிருந்து ஜீயூஸால் இவன் தூக்கி எறியப் பட்டான்.

உலோகத்தால் பல தலைசிறந்த கட்டடங்களையும் கவசங்களையும் இவன் செய்தான். அக்கிலிஸுக்காக இவன் செய்த கவசம், ஜீயூஸுக்காக செய்த அரியணை ஆகியவை அதில் மிக முக்கியமானவை. எரிமலை தொடர்பான பகுதிகளோடு இவனை

இணைத்துப் பார்த்தனர் கிரேக்கர்கள். லிம்னாஸ் என்ற எரிமலைத் தீவில் அந்தக் காலத்தில் தெய்வமாக இவன் வணங்கப்பட்டான் என்றும் சொல்லப்படுகிறது.

**டெல்ஃபி (Delphi)**

பர்னாசஸ் எனும் மலையின் மீதமைந்த ஊர் டெல்ஃபி. கடவுள் அப்போலோவுக்குப் புனிதமான ஊர் இது என்று பண்டைய கிரேக்கர்கள் நம்பினர். கி.மு. 1100-களில் இந்நகர் புகழடைந்தது. பிறகு, இத்தலம் சர்வதேச புண்ணியஸ்தலமானது. டெல்ஃபியில் அப்போலோவுக்கான பிரதான கோயில், ஒரு விளையாட்டரங்கம், ஒரு கலையரங்கம், மேலும் பல நினைவரங்கங்கள் உள்ளன. இக்கோயில் ஆரக்கிள் என்ற ஒரு விஷயத்துக்குப் புகழ்பெற்றது. ஃபித்தியா என்னும் ஒரு பெண் ஆரக்கிள் பரவச நிலையில் வினோதமான ஒலிகளை எழுப்புவாள். அவ்வொலிகள் அப்போலோவின் பேச்சு என மக்கள் நம்பினர். இதன் விளைவாக கிரேக்க மதம், பொருளாதாரம், அரசியல் ஆகியவற்றில் ஆரக்கிளுக்கு ஒரு முக்கியமான இடம் உண்டு. இந்தத் தாக்கம் பிற்காலத்தில் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்தது. 'வருங்கால மொழி' என்று பொருள்படுமாறு பெயர் வைக்கப்பட்ட கணிணி மொழியான ஆரக்கிளும் இதோடு தொடர்பு கொண்ட பெயர்தான்.

**ஒலிம்பஸ்**

சிவனுக்கு கைலாய மலைபோல கிரேக்கக் கடவுள்களுக்கு ஒலிம்பஸ் மலை. இதன் பல சிகரங்களில் பன்னிரண்டு முக்கிய ஆண் பெண் கடவுள்களின் அரண்மனைகள் இருந்ததாக கிரேக்கர்கள் நம்பினர். இலியட் காவியத்தில், தலைமைக் கடவுளான ஜீயூஸின் அரண்மனையும் இங்குதான் இருந்தது. அய்டா என்பது இதன் சிகரங்களில் ஒன்று.

**ஹீபி (Hebe)**

ஜீயூஸ், ஹீரா ஆகியோரின் மகள். கடவுள்களின் பணிப்பெண். கோப்பை சுமப்பவள்.

**ஹீரா (Hera)**

க்ரோனஸ் மற்றும் ரியாவின் மகள். ஜீயூஸின் கூடப்பிறந்த மனைவி! அதாவது முன்னாள் சகோதரி, பின்னாள் மனைவி.

கிரேக்கர்களுக்கு உறுதியான ஆதரவளிப்பவள். அதீனியோடு சேர்ந்து எப்போதும் ஜீயூஸுக்கு எதிராக ஏதாவது செய்து கொண்டிருப்பவள். சமயங்களில் மாட்டிக்கொண்டு ஜீயூஸ் கொடுக்கும் தண்டனைகளுக்கும் ஆளாவாள். திருமணம் மற்றும் தாய்மையின் கடவுள். பசுவோடு தொடர்புடையவளாதலால் 'எருதுக் கண்ணாள்' என்றும் அழைக்கப்பட்டாள்.

**ஹெர்மிஸ் (Hermes)**

ஜீயூஸுக்கும் மாயாவுக்கும் பிறந்தவன். கடவுள்களின் தூதுவன் (ஆனால் ஹோமரின் காப்பியத்தில் ஹெர்மிஸைவிட அதிகமாக அய்ரிஸ் என்பவனே தூதுவனாகப் பயன்படுத்தப் படுகிறான்). இறந்தவர்களுக்கு ஹயடிஸுக்கு வழிகாட்டுவதால் 'வழி காட்டி' என்று இவனுக்கு ஒரு பெயருமுண்டு. பல கண்கள் கொண்ட அர்கஸ் எனும் அசுர மிருகத்தைக் கொன்றவன் ('அயோ' என்ற ஒரு பெண்ணை ஜீயூஸ் காதலித்தான். அவளைக் கண்காணிக்க ஹீராவால் அனுப்பப்பட்ட மிருகம்தான் அர்கஸ்).

**அய்ரிஸ் (Iris)**

கடவுள்களின் தூதுவன். 'அய்ரிஸ்' என்ற பெயருக்கு வானவில் என்று ஒரு பொருள் உண்டு.

**லீட்டோ (Leto)** அப்பேர்லோ, ஆர்ட்டிமிஸ் ஆகியோரின் தாய்.

**ம்யூஸ் (Muse)**

நினைவாற்றலின் தேவதை. கடந்த காலத்து நிகழ்ச்சிகளை யெல்லாம் பாடுவதற்கு ஹோமருக்கு உதவுபவள்.

**ஓஷன் (Ocean)**

ஒரு புராதனக் கடவுள். இந்தக் கடவுளுடைய ஆறு, உலகைச் சுற்றி வந்ததாக கிரேக்கர்கள் நம்பினர்.

**பொஸைடன் (Poseidon)**

க்ரோனஸ், ரியா ஆகியோரின் மகன். ஜீயூஸின் தம்பி. சகோதரர் கள் உலகைப் பிரித்துக்கொண்டபோது தன் பங்குக்கு கடலைப் பெற்றவன். அடிப்படையான சக்திகளின் கடவுள். உதாரணமாக, பூகம்பங்கள். ட்ரோஜன்களின் நகரான இலியத்தின் சுவர்களைக் கட்டியவன். ஆனால் அதற்கான பிரதிபலன் எதுவும் செய்யப் படாததால், கிரேக்கர்களுக்கு ஆதரவாக மாறியவன்.

**பெர்சஃபோனி (Persephone)**

கிரேக்க, ரோம புராணிகங்களில் வரும் அழகான பெண் கடவுள். ‘கோரே’ என்றும் கிரேக்கர்கள் இவளை அழைத்தனர். இவள் விவசாயம் மற்றும் விளைச்சலுக்கான பெண் கடவுளான டிமீட்டருக்கும் ஜீயூஸுக்கும் பிறந்தவள். ஒருநாள் இவள் ஒரு புல்வெளியில் மலர்களைப் பறித்துக்கொண்டிருந்தபோது, இறந்தவர்களின் கடவுளான ஹயடிஸ் (ப்ளூட்டோ) இவளைக் கடத்திக்கொண்டு போய்விடுகிறான். கடவுளர்மீது ஏற்பட்ட கோபத்தில் பயிர்கள் வளராமல் தடுக்கிறாள் டிமீட்டர்.

பூமிக்கு விளைச்சலைத் திரும்பக் கொண்டுவரும் பொருட்டு பெர்சஃபோனியைத் திரும்ப டிமீட்டரிடம் கொடுத்துவிடும்படி ஹயடிஸுக்கு ஜீயூஸ் உத்தரவிடுகிறான். ஆனால் கீழுலகத்தில் ஹயடிஸோடு இருந்தபோது, திருமணத்தின் குறியீடான மாதுளம் பழ விதைகளைச் சாப்பிட்டு விடுவதால், ஹயடி ஸோடு முடிவற்ற ஒரு திருமண ஒப்பந்தத்தில் இணைகிறாள் பெர்சஃபோனி.

டிமீட்டருக்கும் ஹயடிஸுக்கும் இடையில் ஒரு சமாதான திட்டத்தை ஜீயூஸ் ஏற்பாடு செய்கிறான். ஓராண்டின் மூன்றில் இரண்டு பங்கு காலத்தை தன் அன்னையோடும் மீதி நாட்களை ஹயடிஸோடும் செலவழிக்கலாம் என்பது ஏற்பாடு. ஹயடி ஸோடு பெர்சஃபோனி இருக்கும் கோடைக் காலத்தில், பூமி பயிர் பச்சைகள் முளைக்காமல் வறண்டு போகும், டிமீட்டரின் துயரத்தைப்போல! ஆனால் குளிர்காலத்தில் அம்மாவோடு இருக்கும்போது பயிர்கள் வளர்ந்து செழிக்கும்.

கிரீஸ் நாட்டில் விவசாயிகள் மென்மையான ஈரப்பதமுள்ள குளிர்காலத்திலேயே பயிர்களை வளர்த்தனர். பெர்சஃபோனி யின் கதை இயற்கையில் ஏற்படும் நிலவளத்தைக் குறிக்க பயன் படுத்தப்பட்டது. இலியட் காவியத்தில் பெர்சஃபோனி பற்றியும் அவ்வப்போது சொல்லப்படுகிறது.

**ஸ்ட்ரைஃபி (Strife)**

போர்க்கடவுளான ஏரிஸின் சகோதரி. பிரச்னை ஏற்படுத்திய தங்க ஆப்பிளை, தேவதைகளை நோக்கித் தூக்கி எறிந்தவள் இவள்தான் (ஆங்கிலத்தில் Strife என்றால் ‘சண்டை’ என்று அர்த்தம்).

**திட்டிஸ் (Thetis)**

அக்கிலிஸின் அம்மா. கடல் தேவதை. பீலியூஸின் மனைவி. எப்பொழுதுமே தன் மகன் பக்கமிருப்பவள். அவனுக்காக ஜீயூஸிடம் மன்றாடுபவள்.

**டைட்டன்கள் (Titans)**

கிரேக்கப் புராணத்தின் முதற்கடவுள்கள் டைட்டன்கள்தான். முதல் டைட்டன் 'கேயே' (பூமி). இவள் கேயாஸ் எனும் குழப்பத்திலிருந்து உருவாகி யுரானஸ் எனும் வானத்தைப் பெற்றாள். பின் அவனையே மணந்து கொண்டாள். அவர் களுக்குப் பிறந்த பல குழந்தைகளில் கடைக்குட்டி க்ரோனஸ் மிக முக்கியமானவன் ஆவான்.

க்ரோனஸையும் அவனை ஆதரித்த டைட்டன்களையும் டார் டாரஸ் என்ற பாதாள உலகுக்கு அனுப்பினான் ஜீயூஸ். இந்த டைட்டன்கள் பற்றியும் டார்டாரஸ் பற்றியும் அடிக்கடி இலியட் காவியத்தில் பேசப்படுகிறது.

**சாந்தஸ் (Xanthus)**

சாந்தஸ் என்ற ட்ரோஜன், ஆற்றின் கடவுள். மனிதர்கள் இவனை 'ஸ்கமாண்டர்' என்றும் அழைத்தனர். லிஸியாவில் இருந்த ஓர் ஆற்றின் பெயரும் இதுதான்.

**ஜீயூஸ் (Zeus)**

ஒலிம்பஸ் மலையில் வசிக்கும் தலைமை கிரேக்கக் கடவுள். க்ரோனஸ் ரியா ஆகியோருக்குப் பிறந்தவன். வானம் மற்றும் வானிலைக்கான கடவுளும்கூட. ரோமர்கள் இவனை ஜுபிடர் என்றழைத்தனர். இடி, மின்னல், மழை, காற்று போன்றவற்றை அனுப்புபவன் என்று அறியப்பட்டான். 'தூரத்து இடிமுழக்கக் கடவுள்' என்றும், 'புயல் மேகங்களைச் செலுத்தும் ஜீயூஸ்' என்றும், 'கடவுள்கள் மற்றும் மானிடரின் தந்தை' என்றும் இவன் இலியட் காவியத்தில் அடிக்கடி வர்ணிக்கப்படுகிறான்.

தன் உடன் பிறந்த சகோதரி ஹீராவையே மணந்து கொள்கிறான் இவன். அழகான பெண்கள் மனிதர்களாக இருந்தாலும் சரி, தேவதைகளாக இருந்தாலும் சரி, அவர்களை வளைத்துப் போடுவது இவனது குணங்களில் ஒன்று. இந்த மன்மதராசா

இதற்காகப் பல உருவங்களை எடுப்பான். ஹீராவைக் கூடுவதற்குக் குயில் வடிவம், லீடாவைக் கூட அன்ன வடிவம், யுரோப்பாவைக் கூட எருது வடிவம் என ஜீயூஸ் பல காதல் அவதாரங்கள் எடுத்தான். ஹீராவுக்கும் அவனுக்கும் இதனாலேயே பல பிரச்னைகள் ஏற்பட்டன.

அக்கிலிஸுக்கும் அகமெம்னனுக்கும் நடந்த சண்டையில் அக்கிலிஸ் பக்கம் இருந்தான். என்றாலும் ட்ரோஜன்கள் பக்கமும் கொஞ்சம் இரக்கம் காட்டினான். குறிப்பாக ஹெக்டருக்கும் ப்ரியமுக்கும்.

தங்கத்திலும் தந்தத்திலும் செய்யப்பட்ட பிரும்மாண்டமான ஜீயூஸின் சிலை ஒலிம்பியாவில் இருந்தது. இது உலகின் (பழைய) ஏழு அதிசயங்களில் ஒன்றாகும். பண்டைய உலகின் மிகப்புகழ் வாய்ந்த சிலையும் இதுவேயாகும். ஏறக்குறைய கி.மு. 435-ல் கிரேக்கச் சிற்பி ஃபிடியாஸ் என்பவனால் இது உருவாக்கப்பட்டது. 12 மீட்டர் உயரம் கொண்ட இது, ஜீயூஸ் அரியணையில் அமர்ந்திருப்பதுபோல் அமைக்கப்பட்டிருந்தது. ஜீயூஸின் உடல் தந்தத்தாலும், அவனுடைய ஆடை தங்கத்தாலும் வடிக்கப்பட்ட இந்தச் சிலை இப்பொழுது இல்லை.

# கொள்ளை நோயும் கோபமும்

***கதைச் சுருக்கம்***

*அத்ரியூஸின் மகன் அகமெம்னன் கிரேக்கப் படைகளின் தலைவன். ட்ராய் பகுதியில் உள்ள இலியம் என்ற நகரை கிரேக்கர்கள் முற்றுகையிடுகின்றனர். ட்ராயின் மன்னனாக அப்போது ப்ரியம் என்பவன் இருக்கிறான். போர் நடந்து கொண்டு இருந்த பத்தாவது ஆண்டு.*

*போரில் கொள்ளையடிக்கும் பொருள்களுக்காக மேலும் மேலும் ஆசைப்பட்டு கிரேக்கப் படை வீரர்கள் பக்கத்து ஊர்களில் திடீர்த்தாக்குதல் நிகழ்த்துகின்றனர். அடிமைகளாகப் பிடித்து வரப்படும் மனிதர்கள்தான் கொள்ளைப் பொருள்களிலேயே மிகவும் மதிப்பு வாய்ந்ததாகக் கருதப்பட்டனர். அவர்களை அடிமைகளாகவே வைத்துக்கொள்ளலாம் அல்லது அதிகமான மீட்புத் தொகைக்கு விடுதலை செய்யலாம்.*

*இப்படிப்பட்ட ஒரு திடீர்த்தாக்குதலில், க்ரிசிஸ் என்ற ஒரு அழகான இளம் பெண் பிடித்து வரப்படுகிறாள். தலைவன் அகமெம்னனுக்கே அவள் மிகவும் தகுதியானவள் என்று அவனுக்குக் கொடுக்கப்படுகிறாள். ஆனால் க்ரிசிஸ் என்ற அந்தப் பெண், அப்போலோ கோவில் அர்ச்சகர் க்ரைசிஸ் என்பவனின் மகளாவாள்.*

***வரிகள் 1–7***

*கதைக்கருவை அறிமுகப்படுத்திவிட்டு, பீலியூஸின் மகனும் மிகச்சிறந்த கிரேக்க வீரனுமான அக்கிலிஸின் கோபத்தை, அவர்*

மூலமாக அவள் பாடவேண்டுமென நினைவாற்றல் தேவதை யான ம்யூஸிடம் பிரார்த்தித்துக் கொள்கிறார் ஹோமர்.

**வரிகள் 8 - 52 (போரின் முதல் நாள்)**

தன் மகளுக்காக ஒரு மீட்புத்தொகையை க்ரைசிஸ் தருகிறான். ஆனால் அகமெம்னன் அதைப்பெற்றுக்கொண்டு, அவளை விடுவிக்க கடுமையான வார்த்தைகளால் மறுத்துவிடுகிறான். கடவுள் அப்போலோ கிரேக்கர்கள்மீது கோபம் கொண்டு ஒரு கொள்ளை நோயை அனுப்புகிறான் (ஒன்பது நாள்களுக்கு அது நீடிக்கிறது).

**வரிகள் 53 - 120 (பத்தாவது நாள்)**

அக்கிலிஸ் சபையைக் கூட்டுகிறான். க்ரிசிஸுக்கான நஷ்டஈடு தனக்கு உடனே தரப்படவேண்டும் என்ற நிபந்தனையுடன் அவளை விடுவிக்க, அகமெம்னன் அக்கூட்டத்தில் ஒப்புக் கொள்கிறான்.

**வரிகள் 121 - 307**

அக்கிலிஸுக்கும் அகமெம்னனுக்கும் நஷ்டஈடு தொடர்பாக வாக்குவாதம் ஏற்படுகிறது. அவமானப்படுத்தப்படும் அக்கிலிஸ் போரிலிருந்து வெளியேறிவிடுவதாக பயமுறுத்துகிறான். அகமெம்னனை, அக்கிலிஸ் கொன்றுவிடுவதிலிருந்து தேவதை அதீனி காப்பாற்றுகிறாள். அக்கிலிஸ் பட்ட அவமானத்துக்கு ஈடாக, பலமான வெகுமதிகள் தருவதாக அவள் வாக்களிக் கிறாள். இருவரையும் சமாதானப்படுத்த கிழவன் நெஸ்டர் எடுத்துக் கொள்ளும் முயற்சிகள் தோல்வியுறுவதன் விளைவாக, அக்கிலிஸ் வெளியேறுகிறான். அவனோடு அவனது உயிர்த் தோழன் பெட்ரோக்குலஸும் அவனது படையினரான மெர்மிடன்களும் போகின்றனர்.

**வரிகள் 308 - 348**

க்ரிசிஸை அவளது தந்தையிடம் ஒப்படைக்க குழு ஒன்று புறப்படுகிறது. அக்கிலிஸுக்குப் பரிசாகக் கிடைத்த ப்ரிசிஸ் என்ற பெண்ணை அகமெம்னனின் கட்டியக்காரர்கள் பிடித்து வருகின்றனர்.

**வரிகள் 348 - 430**

*தனது தெய்வீகத் தாயான தீட்டிஸின் உதவியை நாடுகிறான் அக்கிலிஸ்.*

**வரிகள் 430 - 492**

*க்ரிசிஸ் அவள் தந்தையிடம் ஒப்படைக்கப்படுகிறாள், கொள்ளை நோய் முடிவடைகிறது (11வது நாள்). காவியம் தொடங்கிய ஒன்பதாவது நாளில் இருந்து பதினோரு நாள்களுக்கு கடவுளர்கள் வருவதில்லை.*

**வரிகள் 493 - 530 (21வது நாள்)**

*அக்கிலிஸின் அன்னை தீட்டிஸ் ஜீயூஸை வேண்டிக்கொள் கிறாள். அக்கிலிஸ் இல்லாத கிரேக்கர்கள் தோல்வியடையத் தொடங்க வேண்டும் என்று கேட்கிறாள். அப்போதுதான் அவர்கள் அக்கிலிஸை திரும்ப அழைத்துக்கொள்வார்கள் எனவும், அவனுடைய பரிசுப் பெண்ணான ப்ரிசிஸையும் திரும்பக் கொடுப்பார்கள் என்றும் அவள் வாதிடுகிறாள். கொஞ்சம் தயக்கத்துக்குப் பிறகு, ஜீயூஸ் அவளுடைய வேண்டு கோளின்படி செய்வதாக ஒப்புக்கொள்கிறான்.*

**வரிகள் 531 - 611**

*ஜீயூஸுக்கும் அவனது மனைவி ஹீராவுக்கும் வாக்குவாதம் ஏற்படுகிறது. அவள் கிரேக்கர்களின் பக்கம் பேசுகிறாள். ஹெஃபைஸ்டஸ் அவர்களைச் சமாதானப்படுத்துகிறான். கடவுள்கள் மீண்டும் பாடல், விருந்து போன்ற கேளிக்கைகளில் ஈடுபடுகிறார்கள். இரவு வருகிறது.*

# கொள்ளை நோயும் கோபமும்

***ஆக்ரோஷத்தைப் பாடு தேவதையே!***

*பீலியூஸின் மகன் அக்கிலிஸின் ஆக்ரோஷத்தைப் பாடு! கிரேக்கர்களுக்கு முடிவற்ற வேதனைகளைக் கொண்டுவந்த அந்த சபிக்கப்பட்ட சினத்தைப் பாடு. வலிமைமிகு வீரர்களின் ஆத்மாக்களை (இறந்தவர்கள் செல்லும் பாதாள உலகமான) ஹயடிஸுக்கு அனுப்பிய அந்தக் கடுங்கோபத்தைப் பாடு. அவர்களின் அழகிய உடல்கள் நாய்களுக்கும் பறவைகளுக்கும் விருந்தானதைப் பாடு. ஜீயூஸின் நோக்கம் நிறைவேறியதைப் பாடு.*

*மக்கள் தலைவன் அகமெம்னனும் கடவுளையொத்த அக்கிலிஸும் சண்டையிட்டுப் பிரிந்தபோது இதெல்லாம் தொடங்கியது.*

*அவர்களைச் சண்டையிட வைத்த கடவுள் யார்? அது அப்போலோ. ஜீயூஸ் மற்றும் லீட்டோவின் மகன். அவன்தான் அதைத் தொடங்கி வைத்தான். ஏனெனில், தனது அர்ச்சகன் க்ரைசிஸை அவமதித்ததற்காக அகமெம்னன்மீது அவன் ஆத்திரம் கொண்டிருந்தான்.*

*ஆகவே, அகமெம்னனின் படையினர்மீது அவன் பயங்கர கொள்ளை நோயை ஏவினான். அவர்களை அழித்தான்.*

*சிறைப்பிடிக்கப்பட்ட தன் மகளை மீட்க, வேகமாய்ச் செல்லும் கிரேக்கக் கப்பல்களுக்கு க்ரைசிஸ் வந்து சேர்ந்தான். தன்னோடு அவன் ஒரு பெரும் மீட்புத் தொகையைக் கொண்டுவந்தான். வில்லேந்திய கடவுள் அப்போலோவின் சின்னங்களை ஒரு தங்கக் கழியின் மீது ஏந்தி வந்தான் அவன். கிரேக்கப் படையினர்*

அனைவரிடமும் அவன் மிகத் தாழ்மையாக வேண்டிக் கொண் டான். குறிப்பாக, அத்ரியூஸின் மகன்களான அகமெம்னனிடமும் மெனிலயஸிடமும்.

'அத்ரியூஸின் அருமைப் புதல்வர்களே! ஏனைய கிரேக்க வீரர்களே! ப்ரியமின் நகரை அழித்துவிட்டு, பாதுகாப்பாக வீடுதிரும்ப எண்ணியுள்ளீர்கள் நீங்கள். ஒலிம்பஸ் மலையில் வசிக்கும் கடவுள்கள் உங்கள் விருப்பத்தை நிறைவேற்று வார்களாக!

'வில்லேந்திய கடவுளும், ஜீயூஸின் மகனுமான அப்போலோ வுக்கு இப்பொழுது மரியாதை கொடுங்கள். இந்த மீட்புத் தொகையைப் பெற்றுக்கொண்டு, என் அருமை மகளை விட்டுவிடுங்கள்!'

கிரேக்கப் படையினர் அனைவரும் அதை உரக்க ஒலியெழுப்பி ஒப்புக்கொண்டனர். அப்போலோவின் அர்ச்சகருக்கு மரியாதை கொடுக்கவும், மீட்புத் தொகையாக ஏராளமான வெகுமதிப் பொருட்களைப் பெற்றுக்கொள்ளவுமே அவர்கள் விரும்பினர். ஆனால் அகமெம்னனுக்கு இதெல்லாம் பிடிக்கவில்லை. அர்ச்சகனின் வேண்டுகோளை, கடுமையாகவும் வெளிப்படை யாகவும் அவன் மறுத்தான்.

'ஏய் கிழவா! உட்குழிந்த இந்தக் கப்பல்களைச் சுற்றி நீ அலைந்து கொண்டிருப்பதை நான் மறுபடியும் பார்க்கக் கூடாது. போய் விடு, திரும்பி வராதே! அப்படி வந்தால், உன் கடவுளின் கழியும் சின்னங்களும் உன்னைக் காப்பாற்றப் போதுமானதாக இருக்காது என்பதைப் புரிந்துகொள். அந்தப் பெண்ணை நான் விடுவிக்க மாட்டேன்.

'அவளது நாட்டிலிருந்து வெகு தொலைவில் இருக்கும் அர்கோஸ் நகரில், எனது வீட்டிலேயே அவள் கிழவியாவாள். அங்கேயே பணி புரிவாள். என்னோடே படுத்திருப்பாள். உனது உயிரின் மீது உனக்கு ஆசையிருந்தால், என் கோபத்தைக் கிளறா மல் இப்போதே நீ போய்விடு!'

அப்படி அவன் சொன்னதும் கிழவனை கிலி பிடித்துக் கொண்டது. அவன் சொன்னபடியே கிழவனும் மேற்கொண்டு ஒரு வார்த்தைகூடப் பேசாமல், அலைகள் ஆர்ப்பரிக்கும் கடற்கரையை நோக்கி வெளியேறினான். ஆனால் கொஞ்சதூரம்

போனவுடன், தன் உணர்ச்சிகளைப் பிராத்தனைகளாக்கி, அழகிய கூந்தல் கொண்ட லீட்டோவின் மகனாகிய தன் கடவுள் அப்போலோவிடம் கொட்டினான்.

'வெள்ளி வில்லேந்திய தலைவனே! க்ரிஸி மற்றும் புனித சில்லாவைக் காப்பவனே! டெனிடோஸின் ஆற்றல்மிகு ஆட்சியாளனே! என் அப்போலோவே! என் பிரார்த்தனையைக் கேட்பாயாக!

'கொள்ளை நோயின் கடவுளே! நான் கட்டிய கோயில் உன் மனத்தைக் குளிர்வித்தது உண்மை என்றால், திருப்படையல் பலிகளாக நான் உனக்கு ஆடுமாடுகளின் கொழுத்த தொடைகளை சுட்டளித்தது உண்மையானால், என் இந்த விருப்பத்தை நிறைவேற்று. எனது கண்ணீர்த் துளிகளுக்கு நீ விடும் அம்புகளினால் கிரேக்கர்களை பதில் சொல்ல வைப்பாயாக!'

இப்படியாக அவன் பிரார்த்தித்தான். ஃபீபஸ் அப்போலோ அவன் பிரார்த்தனையைக் கேட்டான். ஒலிம்பஸ் மலையின் சிகரங்களிலிருந்து, தனது வில் மற்றும் முதுகில் போட்டிருந்த அம்பறாத்தூணியுடன் கோபமாகக் கீழிறங்கி வந்தான். கோபக் கடவுளின் ஒவ்வொரு அசைவுக்கும் அவனது தோளிலிருந்து அம்புகள் பறந்து அச்சுறுத்தின. அவன் இறங்கி வந்தது இரவு வந்ததைப் போலிருந்தது. கப்பல்களிலிருந்து கொஞ்ச தூரத்தில் இறங்கி நின்ற அப்போலோ, ஓர் அம்பை விட்டான். அவனுடைய வெள்ளி வில் நாணின் தெறிப்பொலி பயங்கரமானதாக இருந்தது. முதலில் கோவேறு கழுதைகளையும், அதன்பின் அதிவேக நாய்களையும் தாக்கினான். பின் தனது கூரம்புகளால் மனிதர்களைக் குறிவைத்தான். திரும்பத் திரும்பத் தாக்கினான். இரவிலும் பகலிலும் சிதைகள் எரிந்துகொண்டே இருந்தன.

ஒன்பது நாள்களுக்குக் கடவுளின் அம்புகள் படையினர் மீது பொழிந்துகொண்டே இருந்தன. பத்தாவது நாள், கிரேக்கர்களின் அழிவைப் பார்த்துக்கொண்டிருந்த வெள்ளைநிறக் கைகளைக் கொண்ட தேவதை ஹீரா கேட்டுக்கொண்டதைப்போல, சபையைக் கூட்டினான் அக்கிலிஸ். அனைவரும் வந்த பிறகு, அக்கிலிஸ் பேசினான்:

'அத்ரியூஸின் மகனே அகமெம்னா! இந்த யுத்தத்தின் பேரழிவுக்கும் இந்தக் கொள்ளை நோயின் மரணங்களுக்கும் பிறகு, மிஞ்சி உயிரோடிருப்பவர்கள் ஊருக்குத் திரும்பிப் போகவே

விரும்புவார்கள் என்று நினைக்கிறேன். வா, ஒரு தீர்க்கதரிசி அல்லது ஓர் அர்ச்சகர் அல்லது கனவுகளுக்கு விளக்கம் சொல்லும் யாரையாவது கலந்தாலோசிப்போம். கனவுகளை அனுப்புவது ஜீயூஸ் என்பது நீ அறியாததல்ல. ஃபீபஸ் அப்போலோ ஏன் நம் மீது இவ்வளவு கோபமாக இருக்கிறார் என்று தெரிந்து கொள்வோம். யாராகிலும் வாக்குறுதியை மீறி நடந்திருக்கலாம் அல்லது பூஜை புனஸ்காரங்களில் ஏதேனும் தவறு ஏற்பட்டிருக் கலாம். அப்படி ஏதாவது இருந்தால், அப்பழுக்கற்ற செம்மறி யாடு அல்லது வெள்ளாட்டை நாம் பலி கொடுக்கலாம். அதை அவர் ஏற்றுக்கொண்டு, நம்மை கொள்ளை நோயிலிருந்து காப்பாற்றலாம்.'

இப்படிச் சொல்லிவிட்டு அக்கிலிஸ் அமர்ந்தான். தெஸ்டரின் மகனான கல்காஸ் எழுந்தான். அந்த முகாமில் அவனுக்கு இணையான ஒரு தீர்க்கதரிசி எவருமில்லை. கடந்த காலம், நிகழ் காலம், எதிர்காலம் எதுவுமே தங்கள் ரகசியங்களை அவனிடம் மறைத்து வைத்திருக்கவில்லை. அவனுக்கு அப்போலோ கொடுத்த பரிசான தீர்க்க தரிசன அகப்பார்வையைக் கொண்டே கிரேக்கக் கப்பல்களுக்கு இலியத்தை வந்தடையும் வழியைக் காட்டினான் அவன். அவர்களின் நலனில் அக்கறை கொண்ட அவன் எழுந்து பேசினான்:

'ஜீயூஸுக்குப் பிரியமான அக்கிலிஸ்! வில்லேந்திய கடவுள் அப்போலோவின் கோபத்தின் காரணம் என்ன என்று சொல்லும் படி நீ என்னைக் கேட்டுக்கொண்டாய். நானும் நீ சொன்னபடியே செய்வேன். ஆனால் உனது நாவன்மையையும் தோள் வலிமை யையும் கொண்டு என்னைக் காப்பாற்றுவேன் என்று எனக்கு நீ முதலில் உறுதிமொழி தரவேண்டும். ஏனெனில், யாருடைய அதிகாரம் நம்மிடையே முதன்மையானதாக உள்ளதோ, யாருடைய சொல் நமக்கெல்லாம் சட்டமாக உள்ளதோ அவரை, நான் சொல்லப் போவது கோபப்படுத்திவிடலாம்.

'சினமூட்டப்பட்ட அதிகாரத்தில் இருப்பவனுக்கு, சினமூட்டிய சாதாரணன் இணையானவனல்ல. அதிகாரத்தில் இருப்பவன் தாற்காலிகமாக சினத்தை விழுங்கிக் கொண்டாலும், கணக்கை முடிக்கும் நாள்வரை அந்த ஆத்திரம் கட்டவிழ்த்து விடப்பட காத்துக்கொண்டே இருக்கும். எனவே, உன்னால் எனக்கு பாதுகாப்பு வழங்க முடியுமா என்பதை முதலில் முடிவு செய்!'

விரைவுப்பாத அக்கிலிஸ் பதில் சொன்னான்:

'அமைதியாக இரு! கடவுளிடம் இருந்து நீ தெரிந்து கொண்டவற்றையெல்லாம் கூறு. நீ வணங்கும் கடவுளான ஜீயூஸின் மகன் அப்போலோவின் மீது ஆணையாகக் கூறுகிறேன். கலங்காதே கல்காஸ்! இவ்வுலகில் என் உயிர் இருக்கும்வரை, இந்தக் கப்பல்களில் உள்ள கிரேக்கர்களில் எவரும் உனக்கு எதிராக முஷ்டியை உயர்த்த முடியாது. நீ அஞ்சுகின்ற அந்த ஒருவன், எல்லாரையும்விட தன்னை மேலாகக் கருதிக் கொண்டிருக்கும் அகமெம்னனாக இருந்தாலும் சரி!'

அதன் பிறகே அந்த இணையற்ற தீர்க்கதரிசி தைரியமாகச் சொல்ல ஆரம்பித்தான்:

'உங்கள் வாக்குறுதிகள் மீதோ சடங்குகளின் மீதோ அப்போலோவுக்கு எந்த அதிருப்தியும் இல்லை. அவருடைய அர்ச்சகரை அகமெம்னன் அவமதித்துவிட்டார். அர்ச்சகரின் மகளை விடுவிக்கவில்லை. மீட்புத் தொகையையும் பெற்றுக்கொள்ள மறுத்துவிட்டார். அப்போலோவின் ஆத்திரத்துக்கு இதுதான் காரணம். இது மேலும் தொடரும். அந்தக் கருவிழியாளைத் திரும்பக் கொடுக்கும் வரை இந்த வெறுக்கத்தக்க கொள்ளை நோயிலிருந்து நமக்கு விடுதலை கிடையாது. அதுவும் எந்த மீட்புத் தொகையோ நஷ்டஈடோ பெறாமல் அவளை விடுதலை செய்ய வேண்டும்.

'மேலும் அந்த அர்ச்சகரின் ஊருக்கு, தூய்மையானதொரு பலிப் பொருளையும் அனுப்பிவைக்க வேண்டும். அப்போலோவை இவ்வாறு அமைதிப்படுத்தினால் அவர் கருணை காட்டலாம்!'

இப்படிச் சொல்லிவிட்டு அமர்ந்தான் கல்காஸ். உடனே அத்ரியூஸின் மகனான மாவீரன் அகமெம்னன் ஆத்திரமுடன் எழுந்தான். கோபத்தில் கொதித்தது அவன் இதயம். அவனது விழிகள் தீப்பிழம்புகளைப் போல இருந்தன. அச்சுறுத்தும் பார்வையுடன் அவன் கல்காஸிடம் சொன்னான்:

'தீமையின் தீர்க்கதரிசியே! எனக்கு நன்மை பயக்கும் ஒரு சொல்லும் இதுவரை நீ சொன்னதில்லை. நீ வாயைத் திறந்தாலே தீமைதான். ஒரு முறைகூட நல்லதை நீ சொன்னதில்லை. இப்படையின் தீர்க்கதரிசியென நீ பீற்றிக்கொள்கிறாய்! பெரும் தொகையைப் பிணையாகப் பெற்றுக்கொண்டு க்ரிசிஸ் என்ற பெண்ணைத் தர

நான் மறுத்ததால், அப்போலோ ஆத்திரமுற்று கொள்ளை நோயை கிரேக்கர்கள் மீது அனுப்பியதாக நீ சொல்கிறாய். நான் ஏன் அவளை அனுப்பவில்லை? அவளை என் வீட்டில் எனக்காக வைத்துக் கொள்ள நான் விரும்பினேன். என் மனைவி க்ளிடிம்னிஸ்ட்ரா வைவிட அவளை நான் அதிகமாக நேசிக்கிறேன். க்ரிசிஸ் மிகவும் அழகானவள். அவள் கைகளின் திறமை அவள் அழகுக்குக் குறைந்ததல்ல.

'ஆனாலும் அவளை அனுப்புவதுதான் சிறந்த வழி என்றால், அவளை விட்டுவிட நான் தயாராகவே இருக்கிறேன். எனது சேனை சௌக்கியமாகவும் ஆரோக்கியமாகவும் இருக்கவே நான் விரும்புகிறேன். அது இறப்பதையல்ல. ஆனால், அவளுக்குப் பதிலாக உடனே எனக்கு வேறொரு வெகுமதி வேண்டும். இல்லையெனில் நான் மட்டும்தான் ஒன்றுமில்லாதவனாக இருக்க நேரிடும். அது நியாயமல்ல. எனக்கு வந்த அன்பளிப்பு வேறு எங்கோ சென்றுகொண்டிருக்கிறது, அதை நீங்களே அறிவீர்கள்!'

கடவுளையொத்த விரைவுப்பாத அக்கிலிஸ் பதில் சொன்னான்:

'கீர்த்திமிகு அகமெம்னனே! பேராசைப்படுவதில் உனக்கு ஈடிணையே கிடையாது. பெரிய மனம் கொண்ட கிரேக்கர்கள் எங்கே போய் உனக்கு புதிய வெகுமதியைத் தேடுவார்கள்? பொதுச் சொத்தாக எதையும் நாம் ஒதுக்கி வைத்திருப்பதாக இதுவரை எனக்குத் தெரியவில்லை. வெற்றிகொண்ட நகரங்களிலிருந்து கிடைத்த பொருள்களெல்லாம் பகிர்ந்தளிக்கப்பட்டுவிட்டன. எல்லாவற்றையும் திரும்பக் கொண்டுவந்து போடுமாறு அவர் களைக் கேட்பதும் முறையல்ல. அது முடியாது. கடவுளின் உத்தரவுப்படி, அந்தப் பெண்ணைத் திரும்பக் கொடுத்துவிடு. அருமையான மதில்களை உடைய இந்த ட்ராய் மாநகரை நாம் தரை மட்டமாக்குவதற்கு ஜீயூஸ் அனுமதிப்பாரேயானால், அப்போது உனக்கு மூன்று நான்கு மடங்கு அதிகமாக ஈடுசெய்ய முடியும்.'

தலைவன் அகமெம்னன் பதில் சொன்னான்:

'அக்கிலிஸ், நீ ஒரு மாவீரன்தான். கடவுள் போன்றவன்தான். ஆனால், நீ என்னை ஏமாற்ற முடியும் என்று நினைக்காதே. என்னைவிடச் சிறப்பாக உன்னால் செயல்பட முடியாது. நீ சொல்வதையும் நான் கேட்கப் போவதில்லை. உன் பரிசை பத்திர மாக வைத்துக்கொள்வதற்காக அந்தப் பெண்ணைக் கொடுத்து விடு என்று நீ சொல்கிறாய். நான் கொள்ளை போகும்போது ஓர்

அடிமைபோல அமர்ந்திருக்க வேண்டும் என்று எதிர்பார்க் கிறாயா நீ? முடியாது. எனக்கு ஒரு புதிய பரிசை அளிப்பதாக நமது படை முடிவு செய்யுமானால், அது என் நஷ்டத்தை ஈடுசெய்யுமாறும் ரசனைக்கு ஏற்றவாறும் இருக்க வேண்டும். இல்லையெனில், நானே வந்து உனது பரிசையோ அஜாக்ஸின் பரிசையோ எடுத்துக்கொள்வேன் அல்லது ஒடிஸியஸோடு போய்விடுவேன். அப்படி நான் போனால், என் முதுகுக்குப் பின்னால் எத்தனை கோபமான ஒரு மனிதன் இருப்பான்!

'சரி. அதையெல்லாம் பிறகு பார்த்துக்கொள்ளலாம். இப்போ தைக்கு ஒரு கறுப்புக் கப்பலை ஒளிபொருந்திய கடலுக்குள் அனுப்புவோம். அதில் செல்ல வேண்டியவர்களை ஜாக்கிரதை யாகத் தேர்ந்தெடுப்போம். பலி மிருகங்களை அதில் ஏற்று வோம். அழகிய கன்னம் கொண்ட க்ரிசிஸையும் அதில் ஏற்றுவோம். அஜாக்ஸ், இடோமீனியஸ், கடவுளையொத்த ஒடிஸியூஸ் அல்லது கிரேக்கர்களில் சிந்திக்காமல் செயலாற்று கிற அக்கிலிஸாகிய நீ இவர்களில் யாரையாவது பலிமிருகங் களின் பொறுப்பாளராக, அப்போலோவின் நல்லெண்ணத்தைத் திரும்பப் பெற அனுப்புவோம்.'

விரைவுப்பாத அக்கிலிஸ் அவன் மீது ஒரு கறுப்புப் பார்வையை வீசினான். பின் சொன்னான்:

'வெட்கம் கெட்டவனே! சுயநலக்காரனே! ஒரு தாக்குதலுக்கோ போருக்கோ அனுப்பப்படும்போது, நீ சொல்வதையெல்லாம் மனதார இவர்கள் கேட்டு நடப்பார்கள் என்று நீ எப்படி நினைக்கலாம்? ட்ரோஜன் வீரர்களுக்கும் எனக்கும் சண்டை ஏதும் ஏற்பட்டு அதன் காரணமாக நான் இங்கு போரிட வரவில்லை. அவர்கள் எனக்கு எந்தத் தீங்கும் செய்யவில்லை. என்னுடைய குதிரைகளையோ மாடுகளையோ அவர்கள் திருடிச் செல்லவில்லை. எனது வளமிக்க ஃபித்தியாவின் பயிர்களையும் அவர்கள் அழித்துவிடவில்லை. ஆர்ப்பரிக்கும் அலைகடலும் இருண்ட மலை முகடுகளும் நமக்கு மத்தியில் உள்ளன.

'மானங்கெட்ட பன்றியே! உன்னைத் திருப்திப்படுத்துவதற்காக வும், மெனிலயஸுக்கும் உனக்கும் சந்தோஷம் ஏற்படுத்து வதற்காகவும்தானே உனது திட்டமிட்ட இந்தப் பயணத்தில் நாங்கள் கலந்து கொண்டோம்? நாய் முகம் கொண்டவனே! இந்த உண்மையை நீ முழுமையாக மறந்துவிட்டாய். எல்லாரையும்

விட்டுவிட்டு, எனக்கான பரிசைத் தட்டிச்செல்லப் போவதாக இப்பொழுது நீ அச்சுறுத்துகிறாய்! நான் பட்ட கஷ்டங்களுக் காகக் கிடைத்த பரிசு அவள்! நம் படை வீரர்கள் எனக்குச் செய்த மரியாதை அவள்.

'கிரேக்கர்கள் ஏதாவதொரு ட்ரோஜன் நகரை வீழ்த்தும்போது, உனக்குக் கொடுப்பதைப் போலவே எனக்கும் ஒரு பரிசைக் கொடுக்கிறார்கள் என்று எண்ணாதே. சண்டையின் சூடும் சுமையும் என் மீதுதான் விழுகின்றன. ஆனால், கைவிடப்பட்ட போர்ப்பொருள்கள் என்று வரும்போது மட்டும் சிறப்புப் பகுதியும் பெரும்பங்கும் உனக்கு! உழைப்பு எனக்கு, பிழைப்பு உனக்கா? வேலை எனக்கு, விருது உனக்கா? எனதென்று சொல்லிக்கொள்ள ஒரு பரிதாபமான பகுதியோடு, களம் கண்டு களைத்தவனாக நான் வெறுங்கையுடன் கப்பலுக்குத் திரும்ப வேண்டுமா?

'அப்படியானால் நான் என் ஊரான ஃபித்தியாவுக்கே போகிறேன். பறவையின் அலகு போன்ற முக அமைப்பு கொண்ட எனது கப்பல்களில், வீடு போய்ச் சேர்வதுதான் நான் செய்யக்கூடிய மிகச்சிறந்த செயல். உனக்கு சொத்தும் சுகமும் சேர்த்துக் கொடுத்துக்கொண்டு இங்கிருந்து இவ்விதம் அவமானப்படு/ வதில் எந்த அர்த்தமுமில்லை!'

தலைவன் அகமெம்னன் பதில் சொன்னான்:

'ஏன், வேண்டுமானால் சொத்தையும் சுகத்தையும் தேடி ஓடிப் போயேன். எனக்காக நீ இங்கிருந்துதான் ஆகவேண்டும் என்று நான் மண்டியிட்டு உன்னைக் கெஞ்சுவேன் என்று நினைக்காதே. எனக்கு மரியாதை கொடுக்கும் பலர் இருக்கிறார்கள் என்னோடு. அதில் முதல் ஆளாக நல்லுபதேசம் சொல்லும் ஜீயூஸ் இருக்கி றார் தெரிந்துகொள். ஒலிம்பஸ் மலை வளர்த்த தலைவர்களில், எனக்கு மிகவும் வெறுப்பேற்றுபவன் நீதான். போட்டியிடுதல், போர் செய்தல், சண்டை போடுதல் இவைதான் உன் வாழ்வின் உயிர் மூச்சு. நீ ஒரு மாவீரன் என்றால், கடவுள் உன்னை அப்படிப் படைத்துவிட்டதுதான் அதற்குக் காரணம். போ போ! உன் கப்பல் களுடன், உன் படைகளுடன் உன் ஊருக்கே திரும்பிப் போய், உன் மெர்மிடன்களை ஆண்டுகொண்டிரு. உன்னைப் பற்றி எனக்கு யாதொரு அக்கறையுமில்லை. உனது கோபம் என்னை ஒன்றும் செய்யாது.

'ஆனால், இப்பொழுது நான் கொடுக்கப் போகும் அச்சுறுத் தலைக் கவனி. எப்படி க்ரிசிஸ் எனக்குக் கிடைக்காமல் தடுத்து, அவளை என் கப்பலில் என் குழுவினரோடு திருப்பி அனுப்பும் படி ஃபீபஸ் அப்போலோ செய்கிறாரோ, அதேபோல நானும் செய்வேன். நானே நேரில் உன் படைவீட்டுக்கு வந்து, அழகிய கன்னம் கொண்ட உனது பரிசான ப்ரிசிஸைத் தூக்கிக்கொண்டு வந்துவிடுவேன். அப்போதுதான் எல்லாரையும்விட நானே அதிக முக்கியத்துவம் வாய்ந்த அதிகாரி என்பது அனைவருக்கும் புரியும். அப்போதுதான், எனக்கு இணை என்று சொல்லிக் கொண்டு எந்தப் பயலும் வாலாட்டாமல் இருப்பான்!'

அகமெம்னனின் பேச்சு அக்கிலிஸுக்கு ஆத்திரத்தை ஏற்படுத்தி யது. அவனுடைய ஆண்மை நிறைந்த நெஞ்சு துடிதுடித்தது. வாளை உருவி, கூட்டத்தினரை ஊடுருவிச் சென்று அகமெம்ன னின் குடலை உருவி வெளியில் போடுவதா அல்லது தன் கோபத்தைக் கட்டுப்படுத்துவதா என்று புரியாமல் அவன் மனம் ஊசலாடியது. இவ்விதமான எண்ணங்கள் அவன் மனத்தில் ஓடிக்கொண்டிருந்தபோது, அவன் கை அவனையறியாமலே உறையிலிருந்து தனது மகா வாளை உருவத் தொடங்கியது. அப்போது வானத்திலிருந்து இறங்கி வந்தாள் அதீனி. வெண் ணிறக் கைகள் கொண்ட தேவதை ஹீராதான் அதீனியை அனுப்பியிருந்தாள். ஏனெனில் இரண்டு வீரர்களுக்குமே நெருங்கியவளாகவும், இருவர் மீதும் அக்கறை கொண்ட வளாகவும் அவள் இருந்தாள்.

அக்கிலிஸின் பின்னால் வந்து அதீனி நின்றாள். அவனது செம்பொன்நிறத் தலைமுடியைப் பிடித்து இழுத்தாள். அவள் இருப்பது அக்கிலிஸைத் தவிர வேறு யாருக்கும் தெரியவில்லை. மற்றவர்களால் எதையும் பார்க்க முடியவில்லை. அக்கிலி ஸுக்கு ஆச்சரியமாக இருந்தது. வேகமாகத் திரும்பியவன் பல்லாஸ் அதீனி நின்றுகொண்டிருப்பதைக் கண்டான். அவள் கண்களில் இருந்து வந்த ஒளி மிகவும் அற்புதமானதாக இருந்தது. அவளிடம் சிறகுகள் கொண்ட வார்த்தைகளை*ச் சொன்னான் அக்கிலிஸ்.

---

'சிறகுகள் கொண்ட வார்த்தைகள்' என்ற பிரயோகத்தை ஹோமர் அடிக்கடி பயன்படுத்துகிறார். அவசரமாக, உணர்ச்சி மேலிட, ஆத்திரமாக, சுருக்கமாக என்றெல்லாம் பலவாறாக இதற்கு இடத்துக்கு ஏற்றாற்போல் பொருள் கொள்ள வேண்டும்.

'புயல் மேகங்களை ஓட்டிச் செல்லும் ஜீயூஸின் மகளே! இந்த நேரத்தில் ஏன் இங்கு வந்தாய்? அகமெம்னன் படப்போகும் கேவலத்துக்கு சாட்சியாக இருக்க வந்தாயா? நான் சொல்வதை நம்பு. உன்னிடம் வெளிப்படையாகவே கூறுகிறேன். மரியாதை கெட்டத்தனமாக நடந்து கொண்டதற்காக அவன் உயிரை இழக்கப் போகிறான்.'

சாம்பல் நிறக் கண்ணாள் தேவதை அதீனி பதில் சொன்னாள்:

'உனது கோபத்தைக் குளிர்விக்கவே நான் விண்ணிலிருந்து வந்தேன். நான் சொல்வதைக் கேள். வெண்ணிறக் கைகள் கொண்ட பெண் தெய்வம் ஹீராதான் என்னை உன்னிடம் அனுப்பினாள். ஏனெனில் அவள் உங்கள் இருவருக்குமே நெருக்கமானவள். உன்னைப் பற்றி அவளுக்கு அக்கறை இருக்கிறது. வா, இந்தச் சண்டை வேண்டாம். வாளிலிருந்து உன் கையை எடு. வாளினால் வேண்டாம், வார்த்தைகளினால் அவனை அவமானப்படுத்து. நீ என்ன செய்ய இருக்கிறாய் என்பதை அவனிடம் சொல். நானும் உன்னிடம் வெளிப்படை யாகத்தான் சொல்கிறேன். இப்பொழுது நீ இழக்கும் வெகுமதி களைவிட மூன்று மடங்கு அதிகமான பரிசுப் பொருள்கள் உன் காலடியில் வந்து சேரும். நீ பட்ட அவமானத்துக்கான பரிசு அது. நான் சொல்வது உண்மை. உன் கைகளைக் கட்டுப்படுத்து. நான் சொல்கிறபடி செய்.'

விரைவுப் பாத அக்கிலிஸ் பதில் சொன்னான்:

'பெண் தெய்வமே! நீயும் ஹீராவும் சொல்வதை ஒரு மனிதன் மதிக்க வேண்டும். அவன் எவ்வளவு கோபமாக இருந்தாலும் சரி. அதுதான் அவனுக்கு நல்லது. உங்கள் பேச்சைக் கேட்கும் மனிதனோடு கடவுளர் இருப்பார்கள்.'

இப்படிச் சொல்லிவிட்டு, அதீனி சொன்னதற்கு உடன்பட்டு கனமான தன் கையை வாளின் வெள்ளிக் கைப்பிடி மீது வைத்து, வாளை திரும்பவும் உறைக்குள் போட்டான். உடனே அதீனியும் புயல் மேகங்களைச் செலுத்தும் ஜீயூஸ் வாழும் மலையான ஒலிம்பஸுக்கு, அவன் அரண்மனைக்குத் திரும்பி, மற்ற தேவதைகளோடு இணைந்துக் கொண்டாள். அக்கிலிஸ் தனது கோபத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டான் என்று சொல்லிவிட முடியாது. தனக்குள் கசப்புடன் அகமெம்னனைப் பற்றி அவன் முணுமுணுத்துக் கொண்டான்.

*'குடிகாரனே! நாயின் கண்ணும் பெண் முயலின் நெஞ்சமும் கொண்டவனே! ஆயுதம் தரித்து மற்றவர்களோடு போருக்குப் போகும் தைரியம் உனக்கு எப்போதுமே இருந்தது கிடையாது. பதுங்கித் தாக்குதலில் கிரேக்கர்களில் சிறந்தவனான என்னோடு சேர்ந்து செயலாற்றுவதைப் பற்றிச் சொல்லவே வேண்டாம். நீ சீக்கிரம் செத்துப் போவாய்.*

*'உனக்கு எதிராகப் பேசுபவரின் பரிசுகளை எடுத்துக்கொண்டு, முகாமிலேயே இருப்பதற்குத்தான் நீ பொருத்தமானவன். தனது மக்களையே தின்று கொழுக்கும் ஒரு தலைவன்! ஆனால், உன்னால் யாரையும் ஆள முடியாது. இந்த அட்டூழியமே உனது முடிவாக இருக்கும்.*

*'ஆனால் நான் இப்பொழுது வெளிப்படையாகச் சொல்கிறேன். என் கையில் இருக்கும் இந்தக் கோலின்மீது மனப்பூர்வமாக ஆணையிட்டுச் சொல்லப் போகிறேன். குன்றுகளின் மீதிருந்த இது, தன் தண்டிலிருந்து பிரிக்கப்பட்ட பிறகு, மறுபடியும் இலைகளோ குருத்தோ விட முடியாது. வெண்கலக் கோடரி அதன் பட்டையை உரித்துவிட்டது. இலைகளை எடுத்துவிட்டது. இனி அதனால் துளிர்விட முடியாது. ஜீயூஸின் பெயரால் நமது மரபுகளைப் பாதுகாக்கும் மனிதர்கள் நீதி வழங்கும்போது இந்த கோலைத்தான் பிடித்துக்கொள்கிறார்கள்.*

*'இதன் மீது சத்தியம் செய்து சொல்கிறேன் நான். ஒரு நாள் வரும். அப்போது இந்த கிரேக்கர்கள் அக்கிலிஸ் இல்லாமல் தவிப்பார்கள். அவர்களுக்கு உதவ முடியாமல் நீ மனமுடைந்து நின்றுகொண்டிருப்பாய். கூட்டம் கூட்டமாக அவர்கள் ஹெக்டரிடம் கொலையுண்டு போவார்கள். கிரேக்கர்களில் தலை சிறந்தவனுக்கு மரியாதை கொடுக்காததை எண்ணி அப்போது நீ மனம் வருந்தி உழல்வாய்!'*

*பீலியூஸின் மகனான அக்கிலிஸ் இவ்விதம் பேசிவிட்டு, தங்கக் குமிழ்களுள்ள கைத்தடியை வீசி எறிந்துவிட்டு அமர்ந்தான். எதிர்ப்பக்கத்திலிருந்து அகமெம்னன் குதித்துக் கொண்டிருந்தான். ஆனால், இப்பொழுது நெஸ்டர் எழுந்தான். நாவன்மை மிக்க நெஸ்டர். தேனைவிட இனிமையாகப் பேசும் தெளிவான குரல் கொண்ட பைலோஸ் நகரின் பேச்சாளன் நெஸ்டர்.*

*ஏற்கெனவே இரண்டு தலைமுறைகள் புனித பைலோஸில் உருவாகி, வளர்ந்து, மடிந்ததைப் பார்த்தவன் அவன். இன்றவன்*

மூன்றாம் தலைமுறையை ஆண்டுகொண்டிருந்தான். எழுந்து பேசத்தொடங்கியபோது, தன்னால் ஆளப்படும் மக்களைப் பற்றிய அக்கறை அவன் மனத்தில் இருந்தது.

'நான் என்ன சொல்வது? கிரேக்கம் அழுவதற்கு இதுவே போதும். நீங்கள் ஒருவர் கழுத்தில் ஒருவர் கத்தி வைத்துக் கொண்டிருக்கிறீர்கள் என்று தெரிந்தால் ப்ரியமும் அவனது மகன்களும் எவ்வளவு சந்தோஷமடைவார்கள்? எல்லா ட்ரோஜன்களும் எவ்வளவு மகிழ்ச்சியடைவார்கள்? சண்டை என்று வரும்போது ஆலோசனை சொல்லும் மிகச்சிறந்த கிரேக்க வீரர்கள் நீங்கள் இருவர்தானே?

'இப்பொழுது நான் சொல்வதைக் கேளுங்கள். நீங்கள் இருவருமே எனக்குக் கீழே உள்ளவர்கள். உங்களைவிடச் சிறந்தவர்களோடு நான் கடந்த காலத்தில் பழகியிருக்கிறேன். என் பேச்சை அவர்கள் கேட்காமல் இருந்ததில்லை. ப்ரித்யூஸ், மக்கள் மேய்ப்பனான ட்ரையாஸ், கேனியூஸ், எக்சேடியஸ், கடவுளையொத்த பாலிஃபீமஸ், கடவுளையொத்த ஈஜியஸின் மகனான தீசியஸ் போன்ற மிகச்சிறந்த வீரர்கள். இந்தப் பூவுலகில் பிறந்து வளர்ந்த மிக வலிமை வாய்ந்த மக்கள். வலிமைமிகு எதிரிகளை எதிர்த்த வலிமைமிகு வீரர்கள். மலைவாழ் சென்ட்டார்களை வன்முறையால் அழித்தவர்கள். என் வீடான பைலோஸைவிட்டு நான் பிரிந்தது இப்படிப் பட்டவர்களோடு இணைந்து போரிடத்தான்.

'தொலைதூரப் பயணம் செய்து நான் அவர்களைச் சந்தித்தேன். அவர்கள் என்னை தனிப்பட்ட முறையில் அழைத்திருந்தார்கள். நான் என் பாணியில் போர் செய்தேன். இன்று உயிரோடுள்ள எவரும் போரில் அவர்களை மிஞ்ச முடியாது. அப்படிப்பட்டவர்கள் நான் சொன்னதைக் கேட்டார்கள். எனது உபதேசத்தின்படி நடந்தார்கள். நீங்களிருவரும்கூட அப்படியே செய்யுங்கள். அது உங்களுக்குத்தான் நல்லது.

'அகமெம்னன்! உனக்கு அதிகாரம் இருந்தாலும், அவனுடைய பெண்ணை நீ எடுத்துக்கொள்ளாதே. கிரேக்கப் படை அவனுக்குத்தான் முதலில் அவளைக் கொடுத்தது. அவனுக்கான பரிசை அவன் வைத்துக்கொள்ளட்டும். அக்கிலிஸ்! உனது தலைவனோடு வாட்போர் செய்ய வேண்டும் என்ற எண்ணத்தைக் கைவிடு. ஜீயூஸிடமிருந்து அவனுக்கு அதிகாரம்

கொடுக்கப்பட்டிருக்கிறது. செங்கோலெடுத்து ஆட்சி செலுத்தும் தலைவன் என்பவன், நம்மைவிட அதிக மரியாதைக்கு உரியவனாகிறான்.

'ஒரு தேவதையைத் தாயாகக் கொண்ட நீ, அகமெம்னனைவிட சிறந்த போர்வீரன் என்று வைத்துக்கொண்டாலும், உன்னைவிட எண்ணிக்கையில் அதிகமான மக்களை அவன் ஆள்வதால், உனக்கு மேலதிகாரி அகமெம்னன்தான். அகமெம்னா! உனது கோபத்தை ஆற்றிக்கொள். நரகம் போன்ற போர்க்களத்தின் நடுவே, அக்கிலிஸ் ஓர் ஆற்றல் கோபுரம். அவனுக்கு எதிரான உன் ஆத்திரத்தை அடக்கிக்கொள் என்று நெஸ்டராகிய நான், உன்னைக் கேட்டுக்கொள்கிறேன்.'

தலைவன் அகமெம்னன் பதில் சொன்னான்:

'வணங்குதற்குரிய ஐயா! நீங்கள் சொன்னதெல்லாம் உண்மைதான். ஆனால், உங்கள் முன்னே நிற்கும் இந்த மனிதன் தனக்கு மேலே எந்த அதிகாரியும் இருப்பதை விரும்பவில்லை. எல்லார் மீதும் அவனே அதிகாரம் செலுத்த விரும்புகிறான். எல்லாருக்கும் கட்டளைகளை கொடுக்க அவன் ஆசைப்படுகிறான். அதற்கு இணங்காத ஓர் ஆளை நான் அறிவேன்.

'வேல் கொண்டும் வாள் கொண்டும் போரிடும் வீரனாக அவனை அந்த நித்தியக் கடவுளர் ஆக்கியிருந்தாலும் எனக்கென்ன? என்னை அவமதிக்கும் சொற்களை என் மீது வீசியெறியும் உரிமைகளை, அது அவனுக்குக் கொடுத்துவிட்டதா என்ன?'

திடீரென்று இடைமறித்து கடவுளையொத்த அக்கிலிஸ் சொன்னான்:

'நீ என்ன சொல்கிறாய் என்பதைப் பற்றி எனக்குக் கவலை இல்லை. ஆனால் நீ சொல்வதற்கெல்லாம் நான் ஒப்புக்கொண்டால், ஒரு பரிதாபத்துக்குரிய இல்பொருளாக நான் ஆகிப்போவேன். உனது உத்தரவுகளை மற்றவருக்குச் சொல்லிக்கொள். நான் என்ன செய்ய வேண்டும் என்று நீ சொல்லாதே! உனது உத்தரவுகளுக்குக் கீழ்ப்படிந்ததெல்லாம் போதும். நான் உனக்கு இன்னொன்று சொல்வேன், ஞாபகம் வைத்துக்கொள்! இந்தப் பெண்ணுக்காக, நான் உன்னோடோ வேறெவருடனோ வெறுங்கைகளுடன் சண்டை போடப்போவதில்லை.

'ஆனால் வேகமாகச் செல்லும் எனது கறுப்புக் கப்பலைக் கொண்டு நான் செய்யப்போவது ரொம்பப் பெரிய காரியம். என்னுடைய விருப்பத்துக்கு எதிராக அதில் நீ ஒன்றும் செய்ய முடியாது. வேண்டுமானால், முயன்று பாரேன். என்ன நடக்கும் என்பதை எல்லாரும்தான் பார்க்கட்டுமே. எனது ஈட்டியின் வழியாக உனது கறுப்புக் குருதி இறங்கி வழிந்தோடும்.'

சொற்களின் சமர் முடிந்தது. இருவரும் எழுந்து நின்று, கிரேக்கக் கப்பல்களைச் சுற்றிக் கூடிநின்ற கூட்டத்தைக் கலைத்தனர். மெனீட்டியஸின் மகன் பெட்ரோக்குலஸை அழைத்துக் கொண்டு, அக்கிலிஸ் தனது மெர்மிடன் வீரர்களுடன் தனது கப்பல்களையும் பாசறையையும் நோக்கிச் சென்றான். அகமெம்னன் ஒரு விரைவுக் கப்பலை நீரில் செலுத்தினான். துடுப்புப் போடுபவர்கள் இருபது பேரைத் தேர்ந்தெடுத்தான். கடவுளுக்குப் பலி கொடுக்கத் தேவையான கால் நடைகளையும் அதில் ஏற்றினான். அழகிய கன்னம் கொண்ட க்ரிசிஸையும் ஏற்றிவிட்டான். விரைவாக முடிவெடுக்கும் ஒடிஸியூஸ், கப்பலின் தலைவனாகச் சென்றான். எல்லாரும் ஏறிய பிறகு, நீண்ட கடல்வழிப் பாதையில் அவர்கள் தம் பயணத்தைத் தொடங்கினர்.

இதற்கிடையில், குளித்துத் தூய்மைப்படுத்திக் கொள்ளுமாறு தன் வீரர்களுக்கு உத்தரவிட்டான் அகமெம்னன். குளித்து, அழுக்கு நீரைக் கடலில் கொட்டிவிட்டு, அப்பழுக்கற்ற ஆடுமாடுகளை முணுமுணுக்கும் கடற்கரையில் அப்போலோவுக்குப் பலி கொடுத்தனர். பலியின் வாசனையும், சுழன்று செல்லும் புகையும் சேர்ந்து விண்ணை நோக்கிச் சென்றன.

இவ்விதமாக படை வீரர்கள் செய்துகொண்டிருந்தபோது, அக்கிலிஸோடு போட்ட சண்டையையும், கூட்டத்தில் அவன் விடுத்த அச்சுறுத்தலையும் அகமெம்னன் மறந்துவிடவில்லை. தனது சுறுசுறுப்பான உதவியாளர்களும் அறிவிப்பாளர்களுமான டல்திபியூஸ் மற்றும் யூரிபேட்டிஸ் ஆகியோரிடம் அவன் சொன்னான்:

'அக்கிலிஸின் முகாமுக்குச் செல்லுங்கள். அழகிய கன்னம் கொண்ட ப்ரிசிஸின் கையைப் பிடித்து இழுத்துக்கொண்டு இங்கே வாருங்கள். அவளை அவன் விடமாட்டேன் என்று சொல்வானேயானால், நானே என் படையுடன் வந்து அவளைக்

கொண்டு வருவேன். அது அவனுக்கு இன்னும் மோசமானதாக இருக்கும்.'

இப்படிச் சொல்லி அவர்களை அனுப்பினான் அகமெம்னன். மெர்மிடன்களின் கப்பல்களும் படைவீடுகளும் இருக்குமிடம் வரை முணுமுணுக்கும் கடலின் கரை வழியாக தயங்கித் தயங்கிச் சென்றனர் இருவரும். தனது கறுப்புக் கப்பலில் அங்கே அக்கிலிஸ் அமர்ந்திருந்தான்.

அவர்களைப் பார்த்தது அவனுக்கு சந்தோஷம் தரவில்லை. தங்கள் தலைவன் முன் நடுக்கத்துடனும் சங்கடத்துடனும் அவர்கள் எதுவும் பேசவோ கேட்கவோ முடியாமல் நின்றனர். ஆனால், அவர்கள் எதற்காக வந்திருக்கிறார்கள் என்று அக்கிலிஸ் புரிந்து கொண்டு அவனே பேசினான்:

'அறிவிப்பாளர்களே! ஜீயூஸ் மற்றும் மனிதர்களின் தூதுவர்களே! நல்வரவு! உள்ளே வாருங்கள். எனது போராட்டம் உங்களோடு அல்ல. அது ப்ரிசிஸைக் கொண்டுவரும்படி சொல்லி உங்களை அனுப்பிய அகமெம்னனோடு. ஒலிம்பஸ் மலையில் பிறந்தவனே பெட்ரோக்குலஸ், அந்தப் பெண்ணை வெளியில் கொண்டுவந்து அவளை இவர்களிடம் ஒப்படைத்து விடு.

'ஏதாவது பயங்கரமான பேரழிவிலிருந்து கிரேக்கர்களைக் காப்பாற்றும் பொருட்டு நான் மறுபடியும் இவர்களுக்குத் தேவைப்படும்போது, அருள்மிகு கடவுள்கள் முன்னிலையிலும், மனிதர்கள் முன்னிலையிலும், அடம்பிடிக்கும் அகமெம்னன் முன்னிலையிலும் எனது சாட்சிகளாக இவர்கள் இருப்பார்கள். அந்த மனிதனுக்குப் பைத்தியம் பிடித்துள்ளது. கடந்த காலத்தையோ எதிர்காலத்தையோ புரிந்துகொள்ளும் தகுதியற்றவன் அவன்!'

இவ்விதம் அக்கிலிஸ் பேசி முடித்ததும் தனது உயிர் நண்பன் சொன்னபடி செய்தான் பெட்ரோக்குலஸ். அழகிய கன்னங்கள் கொண்ட ப்ரிசிஸை வெளியில் அழைத்து வந்து அவர்களிடம் ஒப்படைத்தான். அவர்களும் கப்பல்கள் நின்றவழியில் அவளை அழைத்துச் சென்றனர். விருப்பமின்றிச் சென்றாள் அவள்.

தன் வீரர்களிடமிருந்து தன்னைத் தனிமைப்படுத்திக்கொண்ட அக்கிலிஸ், அழ ஆரம்பித்தான். சாம்பல் நிறக்கடலின் கரை

யருகே அமர்ந்து எல்லையற்ற கடலை வெறித்தான் அவன். பின் கைகளை நீட்டி, தன் பிரார்த்தனையை தன் தாயிடம் கூறினான்.

'தாயே! ஒரு தேவதையாக இருக்கும் நீ, மிகச் சொற்ப காலமே வாழ்வதற்காக எனக்கு உயிர் கொடுத்திருக்கிறாய்! நிச்சயமாக இடிமுழக்கம் செய்யும் ஒலிம்பிய மலைவாழ் ஜீயூஸ், எனக்கு கொஞ்சம் மதிப்பு கொடுக்கவேண்டும். ஆனால், அவர் என்னைக் கொஞ்சம்கூட மதிப்பதே இல்லை. இப்பொழுது பார்! அகண்ட ஆட்சிகொண்ட அத்ரியூஸின் மகன் அகமெம்னன் என்னை அவமானப்படுத்திவிட்டான். எனக்கான பரிசை அவன் எடுத்துக்கொண்டுவிட்டான். இப்பொழுது அவள் அவனிடம்!'

அழுதுகொண்டே சொன்னான் அக்கிலிஸ். கடலின் ஆழங்களில் தன் வயதான தந்தையுடன் அமர்ந்திருந்த அவன் தாய் இதையெல்லாம் கேட்டாள். நீலம் பாரித்த நீரிலிருந்து சட்டென பனியைப் போல எழுந்தாள் அவள். அழுது கொண்டிருக்கும் அருமை மகன் அக்கிலிஸின் அருகில் வந்தமர்ந்தாள். தன் கையால் அவனைத் தடவிக் கொடுத்துக் கொண்டே சொன்னாள்!

'என் குழந்தாய்! ஏன் இந்தக் கண்ணீர்? ஏன் இந்தத் துயரம்? உன்னிடமே வைத்துக்கொண்டிராமல் என்னிடம் சொல். நாம் அதைப் பகிர்ந்து கொள்வோம்!'

விரைவுப்பாத அக்கிலிஸ் பெருமூச்செறிந்துவிட்டு சொன்னான்:

'உனக்குத் தெரியும். பிறகு நான் ஏன் உன்னிடம் முழுக்கதையையும் சொல்ல வேண்டும்? ஈட்டியானின் புனித நகரமாகிய தீபிக்கு நாங்கள் சென்றோம். அதை அழித்து, அங்கிருந்து கிடைத்த பொருள் யாவற்றையும் கொண்டுவந்தோம். கிரேக்கர்கள் அவற்றையெல்லாம் முறைப்படி பகிர்ந்து கொண்டனர். அழகிய கன்னம் கொண்ட க்ரிசிஸை அகமெம்னனுக்குக் கொடுத்தனர். ஆனால், வில்லேந்திய கடவுள் அப்போலோவின் கோவில் அர்ச்சகராகிய க்ரைசிஸ் தன் மகளை மீட்க வெண்கல நிறப் போராயுதம் தரித்த கிரேக்கர்களின் கப்பல்களுக்கு வந்தான். தன்னோடு அவன் நிறைய மீட்புத் தொகையையும், பொருள்களையும் கொண்டுவந்தான். தன் கம்பத்தில் வில்லேந்திய கடவுளின் சின்னங்களையும் சுமந்து வந்தான். கிரேக்கப் படைவீரர்கள் அனைவரிடமும் அவன் கெஞ்சினான். முக்கிய

மாக இரண்டு தளபதிகளான அத்ரியூஸின் மகன்கள் அகமெம் னனிடமும் மெனிலயஸிடமும். பின் எல்லா வீரர்களும் சத்தமாக அவன் வேண்டுகோளை அங்கீகரித்தனர். அர்ச்சகர் சொன்னதை ஏற்று பிணையப் பொருள்களைப் பெற்றுக்கொள்ளவே அவர்கள் விரும்பினர். ஆனால், இது அகமெம்னனுக்குப் பிடிக்க வில்லை. கடுமையான வார்த்தைகளால் அவன் அர்ச்சகரை வெளியேற்றிவிட்டான்.

‘எனவே அந்தக் கிழவன் கோபத்தோடு திரும்பிச் சென்று விட்டான். ஆனால், அவனுடைய பிரார்த்தனைகளுக்கு அப்போலோ செவிமடுத்தார். அந்த அர்ச்சகர் அப்போலோவுக்கு மிகவும் உவப்பானவர். அதனால் கிரேக்க படையின்மீது மரணம் கொடுக்கும் அம்புகளை அனுப்பினார் அப்போலோ. கும்பல் கும்பலாக வீரர்கள் விழுந்தனர். ஏனெனில், கிரேக்க முகாமின் எல்லாப் பகுதிகளிலும் கடவுளின் அம்புகள் பொழிந்தன. கடைசியில் கடவுளின் எண்ணம் அறிந்த ஒரு தீர்க்கதரிசி எங்களிடம் விஷயத்தை விளக்கிச் சொன்னார். எழுந்து நின்று, கடவுளை அமைதிப்படுத்த வேண்டிய அவசியத்தை எடுத் துரைத்த முதல் நபர் நான்தான். ஆனால், இது அகமெம்னனுக்கு கோபத்தை உண்டாக்கியது. உடனே எழுந்து என்னை அவன் அச்சுறுத்தினான். இப்பொழுது அவன் தன் அச்சுறுத்தல்களைச் செயல்படுத்திவிட்டான். கருவிழி கிரேக்கர்கள் இப்பொழுது க்ரிசிஸை க்ரைசிஸிடம் சேர்க்க கப்பலில் கொண்டு போகிறார் கள். ஆனால், அகமெம்னனின் அறிவிப்பாளர்கள் இப்பொழுது தான் வந்து படையினர் எனக்குக் கொடுத்த பரிசுப்பெண்ணான ப்ரிசிஸை அவனிடம் கொண்டு போகிறார்கள்.

‘உனக்கு ஏதேனும் சக்தி இருக்குமானால், உன் மகனைக் காப் பாற்று. ஒலிம்பஸ் மலைக்குப் போ. ஜீயூஸிடம் கேள். இதுவரை நீ செய்த அல்லது சொன்ன எதாகிலும் அவரை சந்தோஷப்படுத்தி இருக்குமானால், அதை அவருக்கு நினைவுபடுத்து. உதாரண மாக, ஒலிம்பஸ் மலையில் மற்ற கடவுள்களான ஹீரா, பொசைடன், பல்லாஸ் அதீனி ஆகியோர் ஜீயூஸை சங்கிலியால் கட்டிப்போட முயன்றபோது, மேகங்களைக் கருக்க வைக்கும் ஜீயூஸை, பயங்கர அழிவிலிருந்து எப்படி நீ மட்டும் காப்பாற்றி னாய் என்று நான் என் தந்தையின் வீட்டிலிருந்தபோது ஒரு முறை சொல்லியிருக்கிறாய். தேவதையாகிய நீ சென்று அவரை விடுவித்திருக்கிறாய். அதோடு சும்மா இருக்கவில்லை நீ.

உடனே நீ, மனிதர்களால் ஈஜியான் என்றும், கடவுளர்களால் ப்ரைரியஸ் என்றும் அழைக்கப்பட்ட நூறு கைகள் கொண்ட அசுர மிருகத்தை உயர்ந்த ஒலிம்பஸ் மலைக்கு அழைத்திருக்கிறாய். அந்த அசுரனோ, தன் தந்தையைவிட சக்திவாய்ந்தவன். தன் புகழில் நெகிழ்ந்து க்ரோனஸின் மகன் ஜீயூஸின் பக்கத்தில் அவன் அமர்ந்தான். அருள்பாலிக்கப்பட்ட மற்ற கடவுளர் யாவரும் பயத்தில் சுருங்கி ஒதுங்கினர். ஜீயூஸ் விடுதலையானார்.

'அவர் பக்கத்தில் போய் உட்கார்ந்து கொள். அவர் முழங்கால் களைப் பிடித்துக்கொள். பழசையெல்லாம் நினைவுபடுத்து. ட்ரோஜன்களுக்கு உதவி செய்து, கிரேக்கர்கள் தங்கள் கப்பல் களுக்குள் ட்ரோஜன்களால் தூக்கி எறியப்படுவதற்கு, முடிந்தால் ஜீயூஸை இணங்க வை. கடலிலேயே அவர்களை அடைத்து வைத்துக் கொல்லமுடியுமா என்று பார். அவர்களுடைய தலை வனின் தரம் என்ன என்று அப்போதுதான் அவர்களுக்குப் புரியும். கிரேக்கர்களில் தலைசிறந்தவனான என்னை மதிக்காமல் மாயையில் உழலும் அகண்ட ஆட்சியாளனான அத்ரியூஸின் மகன் அகமெம்னனுக்கு உண்மையைப் புரியவை!'

தீட்டிஸ் கண்ணீருடன் பதில் சொன்னாள்.

'என் மகனே, மகனே! இதற்காகத்தானா நான் உன்னை வளர்த் தெடுத்தேன்? என் வளர்ப்பு சபிக்கப்பட்டதாக இருக்கட்டும். இந்தக் கப்பல்களின் அருகில், கண்ணீரோ கவலையோ இல்லாமல் நீ நாட்களைக் கழிக்க முடியுமென்றால் எவ்வளவு நன்றாக இருக்கும்! ஏனெனில், விதி உனக்கு குறுகியகால வாழ்வையே கொடுத்துள்ளது! உள்ளபடி பார்த்தால், விதி உனக்கு அற்பாயுளை மட்டும் கொடுக்கவில்லை, பரிதாபகரமான வாழ்வையும் கொடுத்துள்ளது. ஒரு கெட்ட விதியின் பொருட்டு நான் உன்னை இந்த உலகுக்குக் கொண்டுவந்துள்ளேன்.

'எனினும், பனி மூடிய முகடுகளுள்ள ஒலிம்பஸ் மலை சென்று இடியில் மகிழும் ஜீயூஸைப் பார்த்து இதையெல்லாம் நானே அவரிடம் சொல்வேன். அவரை இணங்கவைக்க முடியுமா என்று பார்ப்பேன். இதற்கிடையில், உன் விரைவுக் கப்பல்களின் அருகிலேயே நீ இரு. கிரேக்கர்களுக்கு எதிரான உன் கோபத்தை விட்டுவிடாமல் வைத்திரு. சண்டையில் கலந்து கொள்ளாதே. நேற்றுதான் ஜீயூஸ், ஓஷனில் நடக்கும் ஒரு விருந்தில் இணையற்ற எத்தியோப்பியர்களுடன் கலந்து கொள்வதற்காகச்

சென்றார். எல்லாக் கடவுளர்களும் அவரோடு சென்றுள்ளனர். ஆனால், இன்னும் பன்னிரண்டு நாள்களில் அனைவரும் ஒலிம்பஸ் திரும்பிவிடுவர். அப்போது நான் ஜீயூஸின் வெண்கலத் தரை போடப்பட்ட அரண்மனைக்குச் சென்று அவர் காலில் விழுவேன். நான் கேட்பதை அவர் நிச்சயம் செய்வார் என்ற நம்பிக்கையிருக்கிறது!'

இந்த வார்த்தைகளைச் சொல்லிவிட்டு தீட்டிஸ் அவ்விடம் விட்டகன்றாள். அழகாக ஒட்டியாணம் அணிந்திருந்த தன் அடிமைப்பெண் ப்ரிசிஸை அவர்கள் தன் விருப்பத்துக்கு மாறாக எடுத்துச்சென்று நடத்திய விதம் குறித்து சிந்தித்தவனாக, கோபம் கொப்பளிக்க அக்கிலிஸ் அங்கேயே நின்றுகொண்டிருந்தான்.

இதற்கிடையில் ஒடிஸியூஸும் அவனது குழுவினரும் தங்கள் புனித நிவேதனங்களுடன் க்ரிஸி நகரைச் சென்றடைந்தனர். அந்த ஆழ்கடல் துறைமுகத்துக்கு அவர்கள் தங்கள் கப்பலைக் கொண்டுவந்தபோது, கப்பலின் பாய்களைச் சுருட்டி கறுப்புக் கப்பலின் சரக்கு அறைக்குள் வைத்தனர். பாய்மரக் கயிறுகளை நெகிழ்த்தினர். கம்பங்களைப் படுக்கவைத்தனர். துடுப்பு போட்டு உரிய இடத்தில் நங்கூரமிட்டு நிறுத்தினர். நங்கூரக் கற்களை கப்பலின் முன் பகுதியிலிருந்து கடலுக்குள் வீசினர். உறுதியான கயிறுகளை கரையில் கட்டிவைத்தனர். பின் கரை யிறங்கினர். வில்லேந்திய கடவுள் அப்போலோவுக்கான திருப் படையலான கால்நடைகள் இறக்கப்பட்டன. கப்பலிலிருந்து இறங்கி க்ரிசிஸ் தரையில் கால் வைத்தாள். சிந்தனைச் செல்வனான ஒடிஸியூஸ், அவளை கோயிலின் புனித மேடைக்கு அழைத்துச் சென்றான். அவள் தந்தையின் கைகளில் அவளை ஒப்படைத்துவிட்டுச் சொன்னான்:

'க்ரைசிஸ்! மக்கள் தலைவன் அகமெம்னன் உனது மகளை உன்னிடம் ஒப்படைக்கும்படி எனக்கு உத்தரவிட்டான். அதோடு, எங்கள் மக்கள்மீது துன்பத்தையும் துக்கத்தையும் கொடுத்துக்கொண்டிருந்த கடவுளை அமைதிப்படுத்த முடியும் என்ற நம்பிக்கையில் கிரேக்கர்களின் சார்பாக எருதுகளை அப்போலோவுக்கு பலிகொடுக்கும்படியும் சொன்னான்!'

இந்த வார்த்தைகளுடன் அவன் அந்தப் பெண்ணை அவள் தந்தையின் கரங்களில் சேர்ப்பித்தான். அவர் தனது அருமை மகளை மகிழ்ச்சியுடன் வரவேற்றார்.

ஒழுங்காகக் கட்டப்பட்டிருந்த புனித பீடத்தைச் சுற்றி, கடவுளை கண்ணியப்படுத்துவதற்காக அனுப்பப்பட்ட பலி எருதுகள் அவைகளுக்குரிய இடங்களில் உடனே நிறுத்தப்பட்டன. முதல் காரியமாக ஆண்கள் தங்கள் கைகளைக் கழுவிக் கொண்டனர். படையலுக்குரிய தானிய மணிகளை எடுத்தனர். பின் க்ரைசிஸ் தன் கரங்களை உயர்த்தி பிரார்த்தனை புரிந்தான்.

'வெள்ளி வில்லின் நாயகனே! அப்போலோக் கடவுளே! என் பிரார்த்தனையைச் செவிமடுப்பாயாக! க்ரிஸ் மற்றும் புனித சில்லாவின் பாதுகாவலனே! டெண்டோஸின் வல்லமை பொருந்திய ஆட்சியாளனே! இதற்கு முன்பு நான் உன்னை அழைத்தபோது என் பிரார்த்தனையை நீ கேட்டாய். எனக்கு உன் மரியாதையைக் காட்டினாய். கிரேக்கப் படைகளுக்கு பலத்த அடி கொடுத்தாய். இப்பொழுது எனது இரண்டாவது விருப்பத் தையும் நிறைவேற்றுவாயாக. வெறுக்கத்தக்க கொள்ளை நோயை கிரேக்கர்களிடமிருந்து நீக்குவாயாக!'

இப்படியாக அவன் பிரார்த்தித்தான். அதை ஃபீபஸ் அப்போலோ வும் கேட்டான். பிரார்த்தனைகள் முடிந்து, தானிய மணிகளை பலிமிருகங்கள்மீது போட்டவுடன், அவர்கள் முதலில் அந்த மிருகங்களின் தலைகளைச் சாய்த்து, கழுத்தை அறுத்தார்கள். பின் தோலை உரித்தார்கள். பின் கடவுளின் பங்காக, தொடை எலும்புகளை வெட்டி எடுத்தார்கள். அதை கொழுப்பின் மடிப்பு களில் சுற்றி வைத்தார்கள். அதற்கு மேலே சுத்த இறைச்சியை வைத்தார்கள். மரக்குச்சிகளில் அந்த இறைச்சித்துண்டுகளை அர்ச்சகர் சுட்டெடுத்தார். அதன்மீது நைவேத்தியத்துக்கான சிவந்த மதுவை ஊற்றினார். ஐந்து பிரிவுகளுள்ள கவைமுட்களை கைகளில் வைத்துக்கொண்டு இளைஞர்கள் அவரைச் சுற்றிக் குழுமினர். தெய்வத்தின் பங்கை தீ சாப்பிட்டவுடன், மீதியை அவர்கள் உண்டனர். மீதியிருந்த மிருக பலி உணவை சிறு துண்டுகளாக்கி, அவற்றை முட்களில் குத்தி, தீயில் வாட்டி கவனமாக எடுத்துக்கொண்டனர்.

வேலையெல்லாம் முடிந்து உணவு தயாரானபோது, அனைவரும் விருந்துண்டனர். நியாயமான பங்கு கிடைக்காத எவருமே அங்கு இல்லை. பசியும் தாகமும் அடங்கிய பிறகு, இளைஞர்கள் தங்கள் கோப்பைகளை மதுவால் நிரப்பிக்கொண்டனர். ஒவ்வொரு வரும் அடுத்தவர் கோப்பையில் கொஞ்சம் ஊற்றி கடவுளுக்கான பலிச்சடங்கை நிறைவேற்றினர். மீதி நாள் முழுவதும் கிரேக்கர்

கள் வில்லேந்திய கடவுள் அப்போலோவைப் புகழ்ந்து அவனை அமைதிப்படுத்த நல்ல துதிப்பாடல்களைப் பாடிஆடினர். அதை அப்போலோவும் ஆனந்தமாகக் கேட்டான்.

சூரியன் அஸ்தமித்து இருள் வந்தபோது, அனைவரும் கப்பல் களைக் கட்டியிருந்த கயிறுகளின் அருகில் படுத்துறங்கினர். சீக்கிரமாகப் பிறந்த ரோஜாவைப் போன்ற விரலுடைய அதிகாலை தோன்றியபோது, வில்லேந்திய கடவுள் அனுப்பிய சாதகமான தென்றல் காற்றின் உதவியோடு பெரும் கிரேக்க முகாமை நோக்கி தங்கள் கடல் பயணத்தைத் தொடர்ந்தனர். பாய்மரங்களை நிறுத்தி, வெண்ணிறப் பாய்களை விரித்தனர். அதன் வயிற்றை நிறைத்தது காற்று. கப்பலின் அடிக்கட்டையைச் சுற்றி இருண்ட அலை சப்தித்தது. அலைகளினூடே கப்பல் வேகம் பிடித்தது. இவ்விதம் அவர்கள் தங்கள் பெரும் கிரேக்க முகாமுக்குத் திரும்பினர். அங்கே கறுப்புக் கப்பலை கரைக்கு இழுத்து, மர ஆதாரங்களை வைத்து அதை நிறுத்தினர். அது முடிந்ததும், தங்கள் தங்கள் கப்பல் களுக்கும் பாசறைகளுக்கும் திரும்பினர்.

ஆனால் ஒலிம்பஸ் மலையில் பிறந்த பீலியூஸின் மகனான அக்கிலிஸ், தன் கப்பல்களின் அருகே சினத்துடன் அமர்ந்திருந் தான். சண்டை எதிலும் அவன் கலந்துகொள்ளாதது மட்டுமல்ல, வீரர்களுக்குப் பெருமை சேர்க்கும் எந்தக் கூட்டத்துக்கும் போக வில்லை. எங்கே இருந்தானோ அங்கேயே இருந்தான். வேதனைப்பட்டுக்கொண்டு. யுத்தத்தின் சப்தத்துக்கும் சினத் துக்கும் ஏங்கிக்கொண்டு.

பதினோரு நாள்கள் சென்றன. பன்னிரண்டாம் நாள் விடிந்த போது நித்தியக்கடவுளர் அனைவரும் ஜீயூஸின் தலைமையில் கூட்டமாக ஒலிம்பஸ் மலைக்குத் திரும்பினர். மகன் சொன்னதை நினைவில் கொண்டிருந்த தீட்டிஸ், கடல் அலைகளிலிருந்து காலையில் எழுந்தாள். பரந்து விரிந்த வானத்தில் ஏறி ஒலிம்பஸ் மலையை அடைந்தாள். ஒலிம்பஸின் பல சிகரங்களில் மிக உயர்ந்த ஒன்றில் மற்ற கடவுள்களிடமிருந்து ஒதுங்கி தனியாக அமர்ந்திருந்தான் தூரத்து இடிமுழக்கம் செய்யும் ஜீயூஸ்.

அவன் முன்னால் வந்து அவள் விழுந்தாள். தன் இடது கையை அவன் முழங்காலில் வைத்தாள். தனது வலது கையால் அவனது மோவாயை உயர்த்தினாள். பின் க்ரோனஸின் மகனான கடவுள் ஜீயூஸிடம் கெஞ்சி வேண்டினாள்.

'தந்தையே ஜீயூஸ்! சொல்லாலோ செயலாலோ நான் உமக்கு எப்போதாகிலும் மகிழ்வுறும் முறையில் பணி செய்திருப்பேனே யாகில், என் இந்த விருப்பத்தை நிறைவேற்றுங்கள். என் மகனுக்கு கண்ணியம் கொடுங்கள். ஏற்கெனவே அற்பாயுள் கொடுக்கப்பட்ட அவன் அதில் தனிமைப்பட்டுக் கிடக்கிறான். இப்பொழுது அகமெம்னன் வேறு அவனை இழிவுபடுத்தியிருக் கிறான். அவனுடைய பரிசை அகமெம்னனே எடுத்துக்கொண் டான். இப்பொழுது அவள் அகமெம்னனோடு இருக்கிறாள். நல்லுபதேசம் செய்வதில் சிறந்த ஒலிம்பஸ் மலைவாழ் ஜீயூஸே! நீங்களாவது அக்கிலிஸுக்கு கண்ணியம் கொடுங்கள்.

'கிரேக்கர்கள் என் மகனுக்குச் செய்யவேண்டிய மரியாதையை எல்லாம் மறுபடி செய்யும்வரை ட்ரோஜன்களுக்கு வெற்றி கொடுங்கள். அக்கிலிஸுக்குத் தற்போதிருக்கும் மதிப்பை இன்னும் உயர்த்துங்கள்!'

இவ்விதம் அவள் வேண்டினாள். மேகங்களுக்கு வழிகாட்டும் ஜீயூஸ் எதுவும் பதில் பேசாமல் வெகு நேரம் மௌனமாக இருந்தான். தீட்டிஸ், அவன் முழங்கால்களைப் பிடித்தவண்ண மிருந்தாள். பின் மறுபடியும் அவள் கேட்டாள்.

'நம்பிக்கையேற்படுமாறு எனக்கு வாக்குறுதியளியுங்கள். ஏற்றுக் கொண்டு தலையசையுங்கள் அல்லது நீங்கள் அஞ்சுவதற்கு ஒன்றுமில்லையாதலால், என் வேண்டுகோளை நிராகரித்து விடுங்கள். இருக்கும் தேவதைகளிலெல்லாம் என்னைவிட மரியாதை குறைந்தவர் யாருமில்லை என்பதையாவது நான் தெரிந்துகொள்கிறேன்.'

மிகவும் சங்கடப்பட்டவனாக, மேகங்களை வழி நடத்தும் ஜீயூஸ் கூறினான்

'இது பிரச்சனையை ஏற்படுத்தப் போகிறது. உன்னால் எனக்கும் என் மனைவி ஹீராவுக்கும் சண்டை ஏற்படும். இதற்காக அவள் என் மீது வசவுகளை குவிக்கப் போகிறாள்.

'இப்போதே அவள் என்னைப் பற்றி மற்ற கடவுள்களிடம் இல்லாததும் பொல்லாததும் சொல்லிப் புலம்புகிறாள். ட்ரோஜன்களுக்கு நான் உதவுவதாக என்மீது குற்றம் சுமத்திக் கொண்டிருக்கிறாள்.

'இருக்கட்டும். இப்பொழுது நீ போ! இல்லையெனில் ஹீரா நம்மைப் பார்த்துவிடலாம். நான் பார்த்துக்கொள்கிறேன். முதலில் உனக்கு ஓர் உத்தரவாதம் தருகிறேன். நீ சொல்வதற்கு நான் ஒப்புக்கொள்கிறேன். நித்திய ஜீவன்கள் என்னிடமிருந்து இதைவிட சிறப்பான உத்தரவாதத்தைப் பெற முடியாது. ஒரு வாக்குறுதியை நான் என் தலையசைப்பின் மூலம் முத்திரையிட்டு விட்டேனென்றால், அதை நிறைவேற்றுவதில் எந்தப் பிரச்னையும் இருக்காது. வாக்குத் தவறாது. பின்வாங்குதல் கிடையாது. ஏமாற்றுதல் இருக்காது.'

க்ரோனஸின் மகன் இவ்வாறு பேசினான். அழகிய தன் கறும் புருவங்களை ஆமோதிப்பில் அசைத்தான். தலைமைக் கடவுளின் நித்தியத் தலையில் இருந்து தெய்வீக முடிக்கற்றை முன்னால் விழுந்து புரண்டது. மகா ஒலிம்பஸ் மலை அதிர்ந்தது.

உடன்பாடு ஏற்பட்டு இருவரும் பிரிந்தனர். ஒளியுமிழ் ஒலிம்பஸ் மலையில் இருந்து தீட்டிஸ் உப்புக்கடலின் ஆழங்களுக்கு இறங்கினாள். ஜீயூஸ் தன் அரண்மனைக்குத் திரும்பினான். அதைப்பார்த்த எல்லாக் கடவுள்களும் தந்தையின் முன்னிலையில் தத்தம் இருக்கையில் இருந்து எழுந்து நின்றனர். ஜீயூஸ் வரும்போது, இருக்கையில் அமர்ந்துகொண்டிருக்கும் துணிச்சல் எந்தக் கடவுளுக்கும் கிடையாது. அவன் வந்தபோது அனைவரும் எழுந்து நின்றனர்.

ஜீயூஸ் தன் அரியணையில் அமர்ந்தான். கடல் கிழவனின் மகளும் வெள்ளிக்காலுடையவளுமான தீட்டிஸும் தன் கணவனும் சேர்ந்து ஒரு திட்டம் தீட்டியிருப்பதை ஹீரா அறிந்தாள். உடனே அவள் வெட்டும் வார்த்தைகளில் ஜீயூஸிடம் சொன்னாள்

'முதன்மை ஏமாற்றுக்காரரான உங்களோடு இந்த நேரத்தில் திட்டம் தீட்டிக்கொண்டிருந்தது எந்தத் தேவதை? எப்படி நான் போகும்வரை காத்திருந்து, என் முதுகுக்குப் பின்னால் இப்படி ரகசிய உடன்படிக்கைகள் செய்ய முடிகிறது உங்களால்? என்னை நம்புவதற்கு நீங்கள் எப்போதுமே விரும்பியதில்லை.'

மனிதர்களுக்கும் கடவுள்களுக்கும் தந்தையான ஜீயூஸ் பதில் சொன்னான்:

'ஹீரா! நான் எடுக்கும் முடிவுகளையெல்லாம் நீ தெரிந்து கொள்ளவேண்டும் என்று எதிர்பார்க்காதே. நீ என் மனைவி

என்றாலும், அவற்றைப் பற்றிய அறிவை உன்னால் தாங்கிக் கொள்ள முடியாது. எதை நீ தெரிந்துகொள்ள உனக்கு உரிமை யிருக்கிறதோ, அதை உனக்குமுன் எந்தக் கடவுளோ மனிதனோ தெரிந்துகொள்ள முடியாது. ஆனால், கடவுளர்களுக்குத் தெரிவிக் காமல் நான் ஒரு விஷயத்தில் முடிவெடுக்கவும் முயற்சி செய்ய வும் விரும்பும்போது, அதை நீ குறுக்கு விசாரணை செய்யாதே!'

எருதுக்கண்ணாள் தேவி ஹீரா பதில் சொன்னாள்

'க்ரோனஸின் அச்சுறுத்தும் மகனே! இப்பொழுது நீங்கள் என்ன சொல்ல வருகிறீர்கள்? உங்களை கேள்விகளால் தொலைத் தெடுக்க வேண்டும் என்பது நிச்சயமாக என் வழியல்ல. நீங்கள் விரும்பும் முடிவுகளை எடுத்துக்கொள்ள உங்களுக்கு சுதந்தரம் இருக்கிறது. ஆனால் கடல் கிழவனின் மகள், வெள்ளிப்பாத தீட்டிஸ் உங்களை வற்புறுத்தி ஏதேனும் செய்யச் சொல்லி விட்டாளென்ற சந்தேகம் எனக்குள்ளது. இன்று காலை அவள் உங்கள் முழங்காலில் அமர்ந்து கெஞ்சிக்கொண்டிருந்தாள். அக்கிலிஸை கௌரவப்படுத்துவதாகவும், கிரேக்கர்களை கூட்டமாக கப்பல்களோடு அழிப்பதாகவும் வாக்குறுதி கொடுத்திருப்பீர்களோ என்று அச்சப்படுகிறேன்!'

மேகங்களுக்கு வழிகாட்டும் ஜீயூஸ் சொன்னான்:

'அருமை! 'அனுமானிப்பதை' நீ விடவே மாட்டாய். உன்னிட மிருந்து நான் எதையுமே ரகசியமாக வைத்திருக்க முடியாது. ஆனால், உனக்கெதிராக மேலும் மேலும் என்னைத் திருப்புவதைத் தவிர இதில் நீ செய்ய முடிவது ஒன்றுமில்லை. அது உனக்குத்தான் மிகவும் கேடாக முடியும். நீ சொல்வது போலவே எல்லாமிருந் தால், என் விருப்பம் நிறைவேறுகிறதென எடுத்துக்கொள். அமைதியாக உன்னிடத்தில் அமர்ந்து எனக்கு அடிபணிந்து போ. இல்லையெனில், எனது வெற்றி கொள்ள முடியாத கைகளை நான் உன்மீது செலுத்தும்போது, இம்மலையிலுள்ள எல்லாக் கடவுளரும் ஒன்றுசேர்ந்து என்னைத் தடுக்க முயன்றாலும் அது பயன்படாது!'

ஜீயூஸ் இப்படிச் சொன்னதும், எருதுக் கண்ணாள் தேவி ஹீரா பயந்து போனாள். தன் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக் கொண்டு, அமைதியாக அமர்ந்தாள். ஜீயூஸின் அரண்மனையில் இருந்த விண் கடவுளர் அனைவரையும் பீதி பிடித்துக் கொண்டது. கடைசியில் மகா கட்டடக்கலை வல்லுநன்னான

ஹெஃபைஸ்டஸ், தன் தாயான வெண்ணிறக் கைகள் கொண்ட ஹீராவுக்காகப் பரிந்து பேசினான்:

'இது தேவையில்லாத பிரச்னையை உருவாக்கப் போகிறது. மானிடர்களுக்காக நீங்கள் இருவரும் சண்டை போட்டு கடவுளர்கள் மத்தியில் வேற்றுமை ஏற்படுத்த வேண்டாம். இவ்வளவு பிரச்னைகளுக்கு மத்தியில் ஒரு நல்ல விருந்தை நம்மால் சுவைக்க முடியாது. எது தனக்கு நல்லதென்று அவளுக்குத் தெரியாததல்ல! எனினும், என் அருமைத் தாய் எனதருமைத் தந்தை ஜீயூஸோடு அமைதியாக இருக்க வேண்டும். இல்லையெனில் இன்னொரு கண்டிப்பு அவரிடமிருந்து வரும். விருந்து முற்றிலுமாகக் கெட்டுப்போகும். மின்னலின் ஒலிம் பியத் தலைவரான அவர் மட்டும் நினைத்துவிட்டால், நமது மேலதிகாரியான அவர் நம்மனைவரையும் நமது இருக்கைகளில் இருந்து பொடிப்பொடியாக்கிவிடுவார். தாயே! அவரோடு திறமையாக நடந்து கொள்ளுங்கள். அப்போதுதான் இந்த ஒலிம்பியக் கடவுள் நம்மீது கருணையோடு நடந்துகொள்வார்!'

இப்படிப் பேசிவிட்டு விரைந்து சென்ற அவன், இரண்டு பிடிகளுள்ள ஒரு கோப்பையை எடுத்து, தன் தாயின் கைகளில் கொடுத்துச் சொன்னான்:

'அம்மா! பொறுமையாக இருங்கள். உங்களது வெறுப்பை முழுங்குங்கள். இல்லையெனில், உங்களை நேசிக்கும் என் முன்னாலேயே நீங்கள் நையப்புடைக்கப்படுவீர்கள். அதை என்னால் பார்க்க முடியாது. ஆனால், அந்தச் சூழ்நிலையில் உங்களுக்கு உதவவும் என்னால் முடியாது.

'எதிர்ப்பதற்கு மிகவும் கடினமானவர் இந்த ஒலிம்பியக் கடவுள். ஏன் இதற்கு முன் ஒருமுறை, நான் உங்களைக் காப்பாற்ற முயன்றபோது, என்னைக் கால்களால் பிடித்து ஒலிம்பஸின் வாயிலில் இருந்து அவர் என்னைத் தூக்கி எறியவில்லையா? பகலெல்லாம் நான் பறந்துகொண்டே இருந்தேன். சூரியன் அஸ்தமித்த போது, சக்தியெல்லாம் உறிஞ்சப்பட்டவனாக லெம்னோஸில் போய் விழுந்தேன் நான். அங்கே சிந்தியர்கள் என்னை எடுத்து கவனித்துக்கொண்டார்கள்!'

இப்படி அவன் பேசியவுடன், வெண்ணிறக்கையாள் தேவி ஹீரா புன்னகைத்தாள். புன்னகைத்துக் கொண்டே அவன் கொடுத்த கோப்பையை எடுத்தாள். பின் ஹெஃபைஸ்டஸ், இடது பக்க

*மாகத் தொடங்கி இனிய அமுதத்தை கோப்பைகளில் எடுத்துக் கொண்டு மற்றவர்களை கவனிக்கச் சென்றான்.*

*மண்டபத்தில் அவன் அங்குமிங்கும் அக்கறையாக ஓடியாடி கவனிப்பதைக் கண்டு, அருள்பாலிக்கும் கடவுளர்கள் அனைவரும் வேறுவழியின்றி சிரித்தார்கள்.*

*பகல் முழுவதும் விருந்து தொடர்ந்தது. அஸ்தமன வேளை வரையில். உணவோ இசையோ யாரும் குறைவாகப் பெற வில்லை. அப்போலோ தனது பிரும்மாண்ட யாழை இசைத்தான். ம்யூஸ்கள் பாடினர். பாட்டுக்கு எதிர்ப்பாட்டு பாடின கந்தர்வக் குரல்கள். ஆனால் ஒளிபொருந்திய சூரிய விளக்கு அணைந்த போது, அனைவரும் கீர்த்திமிகு ஊனக்கடவுள் ஹெஃபைஸ்டஸ் தன் நிகரற்ற திறமையினால் கட்டிக் கொடுத்த தங்கள் தனித்தனி வீடுகளுக்கு உறங்கப் போனார்கள்.*

*மின்னலின் தலைவனான ஒலிம்பிய ஜீயூஸும் சயனிக்கச் சென் றான். இனிய உறக்கமும் அவனை ஆட்கொண்டது. அங்கே அவன் சென்று உறங்கினான், தங்க அரியணை ஹீராவுடன்!*

# ஒரு கனவு, ஒரு பரிசோதனை
# மற்றும் கப்பல்களின் அட்டவணை

### *கதைச் சுருக்கம்*

***வரிகள் 1 - 207***

*இருபத்தியோராவது நாள். இரவு அகமெம்னனுக்கு ஜீயூஸ் ஒரு கனவை அனுப்புகிறான். அக்கனவில் கிரேக்கர்கள் வெற்றிபெற இருப்பதாகக் காண்கிறான் அகமெம்னன். இருபத்தியிரண்டாவது நாள் (சண்டை தொடங்கிய முதல் நாள்) வீரர்களுக்கு நம்பிக்கை இருக்கிறதா என அவன் பரிசோதிக்கிறான். ஆனால், அவர்கள் வீடு திரும்ப எண்ணி கப்பல்களை நோக்கி விரைகின்றனர். ஒடிஸியூஸுக்கு அதீனி எச்சரிக்கை கொடுக்கிறாள். அவன் அனுபவமிக்கவர்களைத் தடுத்து நிறுத்தி, மற்றவர்களை எல்லாம் கண்டிக்கிறான்.*

***வரிகள் 207 - 393***

*மறுபடியும் சபை கூடுகிறது. தெர்சிடிஸ் என்ற வீரன் அகமெம்னனைத் திட்டுகிறான். ஆனால், அவனை அடித்து அனைவரின் பாராட்டையும் பெறுகிறான் ஒடிஸியூஸ். ஒடிஸியூஸும் நெஸ்டரும் வீரர்களின் நம்பிக்கையும் ஒழுக்கமும் உயரும் வண்ணம் பேசுகின்றனர். போருக்குத் தயாராகிறார்கள் கிரேக்கர்கள்.*

***வரிகள் 394 - 483***

*வீரர்கள் சாப்பிடுகின்றனர். அகமெம்னன் பலி ஒன்றைக் கொடுத்து பிரார்த்தனை செய்கிறான். படைகள் மறுபடியும்*

*இப்பொழுது ஒருங்கிணைய வேண்டுமென நெஸ்டர் கூறுகிறான். அதீனியின் துணையுடன் படைகள் சேர்க்கப்பட்டு வியூகம் அமைக்கப்படுகிறது.*

**வரிகள் 484 – 779**

*கிரேக்கக் கப்பல்கள் எத்தனை, எப்படிப்பட்டவை என்பது பற்றிய அட்டவணை.*

**வரிகள் 780 – 815**

*பெண் தெய்வமான அய்ரிஸ், ட்ரோஜன்களையும் அவர்களின் தலைவன் ஹெக்டரையும் உஷார்ப்படுத்தி, கிரேக்கர்களின் மூலமாக வரவிருக்கும் அபாயம் பற்றி எச்சரிக்கை செய்கிறாள்.*

**வரிகள் 816 – 877**

*ட்ரோஜன் படைகளைப் பற்றிய அட்டவணை.*

# ஒரு கனவு, ஒரு பரிசோதனை மற்றும் கப்பல்களின் அட்டவணை

*மற்ற கடவுள்களும் போர் செய்ய இருந்த வீரர்களும் அன்று இரவு நன்றாக உறங்குகிறார்கள். ஆனால் ஜீயூஸுக்கு நிம்மதியான உறக்கம் வரவேயில்லை. அக்கிலிஸை எப்படி கௌரவப் படுத்துவது, கூட்டம் கூட்டமாக கிரேக்கர்களை எப்படி கப்பல் களோடு கொல்வது என்று யோசித்துக்கொண்டிருந்தான் அவன். அத்ரியூஸின் மகனான அகமெம்னனுக்கு ஒரு கெட்ட கனவை அனுப்புவதுதான் சிறந்த வழி என்று கடைசியில் முடிவு செய்கிறான். உடனே கனவை அழைத்து அவசரமாகச் சொன்னான்:*

*'கெட்ட கனவே! நீ உடனே கிரேக்கர்களின் கப்பல்களுக்குப் போ. அகமெம்னனின் பாசறைக்குச் சென்று நான் சொல்வதை அப்படியே சொல். நீண்ட முடி கொண்ட கிரேக்கர்களை உடனே போருக்குத் தயார் செய்யும்படி அவனிடம் சொல். அகண்ட தெருக்களைக் கொண்ட ட்ரோஜன்களின் நகரைக் கைப்பற்றும் நேரம் வந்துவிட்டது. ஒலிம்பஸ் மலையில் வசிக்கும் நித்திய கடவுளர்களுக்கு இந்த விஷயத்தில் கருத்து வேற்றுமை எதுவும் இல்லை. ஹீராவின் கெஞ்சல்கள் அனைவரையும் ஒன்று சேர்த்துவிட்டது. ட்ரோஜன்களின் தலைவிதி முத்திரை குத்தப் பட்டுவிட்டது!'*

*இப்படியாக ஜீயூஸ் பேசினான். அவனுடைய உத்தரவுகளை கவனமாகக் கேட்டுவிட்டு கனவு அகன்றது. உடனே அது கிரேக்கக் கப்பல்களுக்குச் சென்று அகமெம்னனைக் கண்டது. அவன் தனது குடிலில் நன்றாக உறங்கிக் கொண்டிருந்தான். அகமெம்னனின் உற்ற தோழனும் நல்லுபதேசியும், நீலியூஸின்*

மகனுமாகிய நெஸ்டரின் உருவெடுத்து அகமெம்னனின் தலைப் பக்கம் நின்று கனவு பேசியது.

'குதிரைகளைத் திறமையாகக் கட்டுப்படுத்தும் அத்ரியூஸின் மகனே! நீ தூங்கு. தனக்குக் கீழே ஒரு பெரும் படையையும், சிந்திப்பதற்கு நிறைய பிரச்னைகளையும் வைத்துள்ள ஒரு அதிகாரி இப்படி இரவு முழுவதும் தூங்குவது சரியல்ல. நான் சொல்லப்போவதைக் கவனமாகக் கேள். தூரத்தில் இருந்தாலும், உன்மீது அக்கறையும் இரக்கமும் கொண்ட ஜீயூஸிடமிருந்து நான் வருகிறேன் என்பதைப் புரிந்துகொள். நீண்ட முடி கொண்ட கிரேக்கர்களை உடனே போருக்குத் தயார் செய்யும்படியும், அகண்ட தெருக்களைக் கொண்ட ட்ரோஜன்களின் நகரைக் கைப்பற்றும் நேரம் வந்துவிட்டது என்றும், ஒலிம்பஸ் மலையில் வசிக்கும் நித்திய கடவுளர்களுக்கு இந்த விஷயத்தில் கருத்து வேற்றுமை எதுவும் இல்லை என்றும், ஹீராவின் கெஞ்சல்கள் அனைவரையும் ஒன்று சேர்த்துவிட்டது என்றும் அவர் உன்னிடம் சொல்லச் சொன்னார். உனது இனிய உறக்கத்தில் இருந்து நீ விழிக்கும்போது நான் சொன்ன எதையும் மறக்காமல் நினைவு வைத்துக்கொள்!'

இந்த வார்த்தைகளுடன், எதிர்காலம் பற்றிய பொய்யான ஓவியத்தை அகமெம்னனின் மனதுக்கு வழங்கிவிட்டு, கனவு மறைந்து போனது. ப்ரியமின் நகரை அன்றைக்கே தான் கைப்பற்றப் போவதாக அந்த முட்டாள் கற்பனை செய்தான். ஜீயூஸின் உள்நோக்கம் பற்றியோ, போரின் உச்சகட்டத்தில் இரண்டு பக்கமும் ஏற்படப் போகிற துன்பங்களைப் பற்றியோ வேதனைகளைப் பற்றியோ அவனுக்கு எதுவும் தெரிய வில்லை.

அவன் தூக்கத்திலிருந்து விழித்தெழுந்தபோது அவனைச் சுற்றி எங்கும் அந்தத் தெய்வீகக்குரல் கேட்டது. மெல்லிய, மிருது வான, தொளதொளப்பான புதிய ஆடையை அணிந்துகொண்டு அதன்மீது மேலங்கியைப் போட்டுக்கொண்டு எழுந்தான். பளபளக்கும் அவன் பாதங்களில் மிதியடிகளை அணிந்து கொண்டான். வெள்ளிக் குடையாணி கொண்டு இறுக்கப்பட்ட வாளை தோளில் போட்டுக்கொண்டான். தனது மூதாதையர் காலத்திய, அழிக்கமுடியாத பாரம்பரிய செங்கோலை கையில் எடுத்துக்கொண்டு வெண்கலக் கவசமணிந்த கிரேக்கர்களின் கப்பல்களை நோக்கிச் சென்றான்.

விடியல் தேவதை ஒலிம்பஸ் மலையின் உச்சியை அடைந்து, ஜீயூஸுக்கும் மற்ற கடவுளர்களுக்கும் அன்றைய புதிய நாள் வந்துவிட்டதை அறிவித்தபோது, நீள்முடி கிரேக்க வீரர்களின் கூட்டத்தைக் கூட்டுமாறு தெளிவான குரல்கொண்ட தனது அறிவிப்பாளர்களுக்கு உத்தரவிட்டான் அகமெம்னன். அறிவிப் பாளர்கள் உரத்து அறிவிக்க, வீரர்களும் உடனே கூடினார்கள்.

முதலில் தன் மூத்த ஆலோசகர்களையெல்லாம் பைலோஸின் தலைவன் நெஸ்டரின் கப்பலுக்கு அருகில் கூட்டினான் அகமெம் னன். பின் அவர்களிடம் கவனமாக உருவாக்கப்பட்ட தனது திட்டத்தை விளக்கினான்.

'நண்பர்களே! எனது உறக்கத்தில், நீண்ட இரவில், எனக்கு கடவுளர்களிடமிருந்து அனுப்பப்பட்ட ஒரு கனவு வந்தது. உருவத்திலும் அளவிலும் சாயலிலும் கடவுளையொத்த நமது நெஸ்டர் மாதிரியே அது இருந்தது. எனது தலைக்கு மேலே நின்று அது இப்படிச் சொன்னது.

'குதிரைகளைத் திறமையாகக் கட்டுப்படுத்தும் அத்ரியூஸின் மகனே! நீ தூங்கு. தனக்குக் கீழே ஒரு பெரும் படையையும், சிந்திப்பதற்கு நிறைய பிரச்னைகளையும் வைத்துள்ள ஒரு அதிகாரி இப்படி இரவு முழுவதும் தூங்குவது சரியல்ல. நான் சொல்லப்போவதைக் கவனமாகக் கேள். தூரத்தில் இருந்தாலும், உன்மீது அக்கறையும் இரக்கமும் கொண்ட ஜீயூஸிடமிருந்து நான் வருகிறேன் என்பதைப் புரிந்துகொள். நீண்ட முடி கொண்ட கிரேக்கர்களை உடனே போருக்குத் தயார் செய்யும்படியும், அகண்ட தெருக்களைக் கொண்ட ட்ரோஜன்களின் நகரைக் கைப்பற்றும் நேரம் வந்துவிட்டது என்றும், ஒலிம்பஸ் மலையில் வசிக்கும் நித்திய கடவுளர்களுக்கு இந்த விஷயத்தில் கருத்து வேற்றுமை எதுவும் இல்லை என்றும், ஹீராவின் கெஞ்சல்கள் அனைவரையும் ஒன்று சேர்த்துவிட்டது என்றும் அவர் உன்னிடம் சொல்லச் சொன்னார். உனது இனிய உறக்கத்தி லிருந்து நீ விழிக்கும்போது நான் சொன்ன எதையும் மறக்காமல் நினைவு வைத்துக்கொள்!' இவ்விதம் சொல்லி அது பறந்து போனபோது நான் விழித்துக்கொண்டேன்.

'அதனால் தயாராக உள்ள அனைவரும் உடனே வேலையைத் தொடங்க வேண்டும். ஆனால், முதலில் நான் அவர்களை ஒரு உரை மூலம் பரிசோதித்து பார்க்கப் போகிறேன். அது எனது

உரிமையும் கூட. பல அடுக்குகள் கொண்ட கப்பல்களில் ஏறி ஊருக்குத் திரும்பிவிடலாம் என்று நான் அவர்களிடம் சொல்வேன். நீங்கள் அவர்களையெல்லாம் எல்லா வழிகளிலும் அப்படிச் செய்யாமல் தடுக்க வேண்டும்.'

இப்படிப் பேசிவிட்டு அகமெம்னன் அமர்ந்தான். அவனைத் தொடர்ந்து, மணல் மிகுந்த பைலோஸின் தலைவனான நெஸ்டர் எழுந்தான். அவனுடைய பேச்சில் அவர்களைப் பற்றிய அக்கறை இருந்தது.

'நண்பர்களே, ஆட்சியாளர்களே, கிரேக்கத் தலைவர்களே! இப்படியொரு கனவு கண்டதாக வேறு யாராவதொரு கிரேக்கன் சொல்லியிருந்தால் அது பொய்யாக இருக்கும் என்று நாம் நம்ப வாய்ப்பிருக்கிறது. அந்தக் கனவை மெய்ப்பிப்பதிலிருந்து நாம் நம்மைத் தூரப்படுத்தியிருக்கலாம். ஆனால், இப்பொழுதோ கிரேக்கர்களில் சிறந்தவரான அகமெம்னன் இதைக் கண்டிருக்கிறார். எனவே உடனடியாக நாம் களத்தில் இறங்கியாக வேண்டும்.'

இந்த வார்த்தைகளுடன் அவன் முடித்துக்கொண்டான். கூட்டம் முடிந்துவிட்டதைக் குறிக்குமாறு, செங்கோலுடைய மற்ற தலைவர்களும் மக்கள் மேய்ப்பனாகிய நெஸ்டரைப் பின்பற்றினார்கள். தேனீக்களின் கூட்டம் செல்வதைப் போல படை கிளம்பியது. உள்பக்கம் குழிவானதொரு பாறையின் வழியாக வரிசை வரிசையாக. வசந்தகாலப் பூக்களை நாடி தேனீக்கள் கூட்டம் கூட்டமாகச் செல்லும், சில இங்கும் சில அங்குமாக. அதைப்போல படைவீரர்களின் அணிவகுப்பு, பகுதி பகுதியாகக் கப்பல்களிலிருந்தும் குடில்களிலிருந்தும் கிளம்பி, அகன்ற கடற்கரைக்கு எதிரில் நடக்க இருந்த கூட்டத்துக்குச் சென்றது. ஜீயூஸ் தூதுவனின் வதந்தி அவர்கள் மத்தியிலும் பரவியது. அவர்களின் நடையைத் துரிதப்படுத்தியது அது. கூட்டம் குழப்பமடைந்தது. அவர்கள் அனைவரும் அமர்ந்தபோது அவர்களது எடை தாங்காமல் பூமி முனகியது.

'அமைதி, அமைதி! இரைச்சலை நிறுத்துங்கள்! ஒலிம்பஸ் மலையில் உருவான நம் தலைவர்கள் என்ன சொல்ல வருகிறார்கள் என்பதைக் கேளுங்கள்!' இந்தக் கட்டளையையும் மீறி ஒன்பது அறிவிப்பாளர்களின் உரத்த உத்தரவுகள் ஒலித்தன. கூச்சலும் குழப்பமும் நின்று, அமைதியாக படைவீரர்கள்

அவரவர் இடங்களில் அமர்ந்தபோது, ஹெஃபைஸ்டஸ் செய்த செங்கோலைக் கையில் எடுத்துக்கொண்டு தலைவன் அகமெம்னன் எழுந்தான். தானே செய்த அந்தச் செங்கோலை க்ரோனஸின் மகனான கடவுள் ஜீயூஸுக்கு ஹெஃபைஸ்டஸ் கொடுத்திருந்தான். அர்கஸைக் கொன்றவனும் வழிகாட்டியு மான ஹெர்மிஸுக்கு ஜீயூஸ் அதைக் கொடுத்தான். தலைவன் ஹெர்மிஸ் அதை மகா தேரோட்டியான பெலோப்ஸுக்குக் கொடுத்தான். பெலோப்ஸ் அதை மக்கள் மேய்ப்புனாகிய அத்ரியூஸுக்குக் கொடுத்தான். அத்ரியூஸ் இறந்தபோது அது மந்தைவளம் கொண்ட திஸ்டிஸுக்குக் கிடைத்தது. அதிகாரத் தின் அடையாளமாகவும், எல்லாத் தீவுகளுக்கும் மற்றும் அர்கஸ் முழுமைக்கும் ஒட்டுமொத்த தலைவன் என்பதைச் சொல்லும் பொருட்டும் திஸ்டிஸிடமிருந்து அந்தச் செங்கோல் அகமெம் னனை வந்தடைந்தது. அந்தச் செங்கோலில் சாய்ந்துகொண்டு அகமெம்னன் கிரேக்கர்களைப் பார்த்துப் பேசினான்:

‘நண்பர்களே, கிரேக்க வீரர்களே, போர்க்கடவுள் ஏரிஸின் சேவகர்களே! க்ரோனஸின் மகனான ஜீயூஸ் என்னை உண்மையாகவே ஏமாற்றிவிட்டார். கொடுமையான தோல்வி யைக் கொடுத்துவிட்டார். அருமையான சுவர்களைஉடைய இலியம் நகரை நாம் வெல்வோம் என்று என்னிடம் ஒருமுறை நிச்சயப்படுத்திச் சொன்னார், அந்த முறைதவறிய கடவுள். ஆனால், அவருடைய உபதேசம் கெட்ட ஏமாற்று வேலையாகி விட்டது இன்று. பாதிப் படையை இழந்துவிட்ட நிலையில் நாம் நமது நாடான அர்கோஸுக்கு அவமானத்துடன் திரும்பிச் செல்லவேண்டும் என்று இப்பொழுது கூறுகிறார். எத்தனையோ கோட்டை கொத்தளங்களையும் கோபுரங்களையும் இடித்துத் தரைமட்டமாக்கிய ஜீயூஸ், எதிர்காலத்திலும் இப்படி எதையோ செய்ய இருக்கின்ற எல்லாம் வல்ல ஜீயூஸ் இவ்விதமாகத்தான் முடிவு செய்திருக்கிறார் என்று தெரிகிறது.

‘ஆனால், நம் வருங்காலச் சந்ததியினரின் காதுகளுக்கு என்ன வொரு அவதூறு! எப்படிப்பட்ட கதை கிடைத்திருக்கிறது பார்த்தீர்களா?! எந்த முடிவும் கண்ணுக்குத் தெரியாமல், அற்புத ஆற்றலுள்ள நமது பெரும்படை, இப்படி எந்தப் பயனுமற்ற ஒரு இழிநிலைக்கு வரவேண்டுமா? அதுவும் நம்மைவிட பலவீன மான எதிரியோடான வெற்றி கிடைக்காத போராட்டத்தில்! நமக்கும் ட்ரோஜன்களுக்கும் ஓர் அமைதி உடன்படிக்கை

ஏற்பட்டால், அதில் நாம் எத்தனை பேர் இருக்கிறோம், அவர்கள் எத்தனை பேர் இருக்கிறார்கள் என்று எண்ணினால் என்னாகும் தெரியுமா? பத்து பத்து பேர் கொண்ட குழுவாக நாம் பிரிந்து, ஒரு குழுவுக்கு ஒரு ட்ரோஜன் மது ஊற்றவேண்டும் என்று வைத்துக் கொண்டால்கூட, நம்முடைய பல குழுக்களுக்கு மது ஊற்று பவன் இல்லாமலே போகும்! நமக்கும் அவர்களுக்கும் இடையே உள்ள சந்தோஷப்பட்டுக்கொள்ள முடிகிற வித்தியாசம் இது.

'ஆனால், அவர்களுக்கு ஈட்டி எறிந்து சண்டையிடக்கூடிய ஆதரவுப் படைகள் பல நகரங்களிலும் இருக்கின்றன. செழிப் பான இலியம் நகரை வெற்றிகொள்ள வேண்டும் என்ற என் எண்ணத்தை அவர்கள் குலைக்கிறார்கள். என் எல்லா முயற்சி களையும் அவர்கள் தோற்கடிக்கிறார்கள். மகா ஜீயூஸின் ஆண்டு களில் ஒன்பதாண்டுகள் கடந்துவிட்டன. நம் கப்பல்களின் மரங்கள் அழுகிவிட்டன. பாய்மரக் கயிறுகள் இற்றுவிட்டன. நம் மனைவிகளும் குழந்தைகளும் வீட்டில் அமர்ந்து நம் வரவை எதிர்நோக்கியுள்ளனர். ஆனால், இங்கு வருமுன் நாம் முடிவு செய்த பணி இன்னும் நிறைவேற்றப்படாமலே இருக்கிறது. எனவே, இப்பொழுது நான் சொல்லப்போவதை அனைவரும் செய்ய வேண்டும். கப்பலில் ஏறி நமது தாய் நாட்டுக்குத் திரும்பிவிடுவோம்! ட்ரோஜன்களின் நகரமும் அதன் அகண்ட தெருக்களும் நம்மிடம் வீழப்போவதில்லை!'

இப்படியாக அவன் பேசினான். அவனுடைய வார்த்தைகள் நேராக கூட்டத்தில் நின்றுகொண்டிருந்த ஒவ்வொரு மனிதனின் இதயத்துக்குள்ளும் புகுந்தன, ஆலோசனை சபைக் கூட்டத்தில் கலந்துகொண்டவர்களைத் தவிர. தந்தை ஜீயூஸின் மேகங்களி லிருந்து அவசரமாய் இறங்கி வரும் தென்கிழக்குக் காற்றால் ஐகாரியக் கடலில் மகா அலைகள் எழுவது போல கூட்டம் முழுவதும் அலையாடியது. கீழிறங்கி அமளிதுமளிப்படுத்தும் மேற்குக் காற்றால் பயிர்களெல்லாம் பேயாட்டம் ஆடுவது போல, பயிர்கள் அக்காற்றுக்கு தலையாட்டுவதுபோல, முழுக் கூட்டமும் அகமெம்னனின் பேச்சுக்கு ஆடியது. பேரொலி எழுப்பிக்கொண்டு அவர்கள் தங்கள் கப்பல்களை நோக்கிச் சென்றனர். அவர்கள் நடையிலிருந்து உருவான தூசுப்படலம் தலைக்கு மேலே சென்றது. கப்பல்களை வெளிச்சமான கடலுக்குள் இறக்கும்படி அவர்கள் ஒருவருக்கொருவர் சத்த மிட்டுச் சொல்லிக்கொண்டனர். கப்பல்கள் போகும் பாதைகளின் தடைகளை அகற்றி சரிப்படுத்தினர். கப்பல்களின் உடல் பகுதி

யில் இருந்த ஆதாரக் கழிகளை மாற்ற ஆரம்பித்தனர். தாய்நாடு திரும்பும் ஆர்வத்தில் அவர்கள் எழுப்பிய பேரிரைச்சல் விண்ணைச் சென்றடைந்தது.

விதியை மீறி கிரேக்கர்கள் தங்கள் நாட்டுக்குப் போய்ச் சேர்ந்திருப்பார்கள் ஹீரா மட்டும் தன் மனத்தில் உள்ளதை அதீனியிடம் சொல்லியிருக்காவிட்டால்.

'புயல் மேகங்களின்மீது அதிகாரம் செலுத்தும் ஜீயூஸின் மகளான அதீனி அத்ரிதோனியே! இது பெரும் கேடு! ஹெலனை ப்ரியமுக்கு இங்கே விட்டுவிட்டு, அகன்ற கடலின் முதுகில் பயணித்து தங்கள் முன்னோர்களின் நாட்டுக்கு கிரேக்கர்கள் ஓடிப்போய் விடுவார்கள். ட்ரோஜன்கள் பெருமையடித்துக் கொள்வார்கள். ஹெலனுக்காகப் பலர் தங்கள் தந்தையர் நாட்டிலிருந்து வெகு தொலைவில் இருக்கும் இந்த ட்ராய் மண்ணில் உயிரை விட்டிருக்கிறார்கள். வெண்கலக் கவச மணிந்த கிரேக்கர்களிடம் நீ உடனே சென்று, உனது நாவன் மையைப் பயன்படுத்தி அவர்களைத் தடுத்து நிறுத்து. ஒவ்வொரு வருக்கும் தனித்தனியாக எடுத்துச் சொல். அவர்களின் வளைவுக் கப்பல்கள் கடலுக்குள் இறக்கப்படாமல் பார்த்துக்கொள்!'

இப்படியாக அவள் பேசினாள். சாம்பல்நிறக் கண்ணாள் தேவதை அதீனியும் ஒப்புக்கொண்டாள். ஒலிம்பஸ் மலையின் உயரத்திலிருந்து விரைந்து அவள் கீழே வந்தாள். கிரேக்கர்களின் விரைவுக் கப்பல்கள் இருக்குமிடத்துக்கு வந்த அவள், அசை யாமல் நின்றுகொண்டிருந்த ஜீயூஸை ஒத்த ஒடிஸியூஸைப் பார்த்தாள். தன் அருமையான கறுப்புக் கப்பலை அவன் தொடக் கூட இல்லை. மிகவும் மனமுடைந்து போயிருந்தான் அவன். சாம்பல்நிறக் கண்ணாள் தேவதை அதீனி அவனருகில் சென்று சொன்னாள்

'ஒலிம்பஸில் பிறந்த லார்ட்டஸின் மகனே! கூர்மதி மிக்க ஒடிஸியூஸே! ஹெலனை இங்கே ப்ரியமுக்கு விட்டுக்கொடுத்து விட்டு ட்ரோஜன்கள் பெருமையடிக்க, நீங்கள் அனைவரும் இப்படி கப்பலில் ஏறி உங்களின் தந்தையர் நாட்டை நோக்கி ஓடிப்போகப் போகிறீர்களா? தங்கள் தந்தையர் நாட்டிலிருந்து வெகு தொலைவில் இருக்கும் இந்த ட்ராய் மண்ணில், ஹெலனுக்காகப் பலர் உயிரை விட்டிருக்கிறார்களல்லவா? இங்கே நிற்காதே! போ! கிரேக்கர்களின் படை இருக்குமிடம்

உடனே சென்று; அவர்களிடம் உன் பேச்சுத் திறமையைப் பயன்படுத்தி அவர்களை நிறுத்து. ஒவ்வொருவருக்கும் தனித்தனியாக எடுத்துச் சொல். அவர்களின் வளைவுக் கப்பல்கள் கடலுக்குள் இறக்கப்படாமல் பார்த்துக்கொள்!'

இப்படியாக அவள் பேசினாள். தேவதையின் குரலை இனம் கண்டுகொண்ட ஒடிஸியூஸ் தன் உடையை வீசியெறிந்துவிட்டு உடனே அவ்விடம் விட்டகன்றான். அவன் வீசிய உடையை அவனுடைய காரியதரிசி கிரேக்க யூரிபாட்டிஸ் பிடித்துக் கொண்டான். நேராக அகமெம்னனிடம் சென்ற அவன், அவனிட மிருந்த அழிக்க முடியாத மூதாதையரின் செங்கோலைக் கேட்டுப் பெற்றுக்கொண்டு, அதைத் தன் கையில் ஏந்திய வண்ணம் வெண்கலக் கவசமணிந்த கிரேக்கர்களின் கப்பல்களை நோக்கிச் சென்றான். ஒரு தலைவனையோ தளபதியையோ பார்க்க நேரிட்டால், உடனே ஒடிஸியூஸ் அவன் பக்கம் நின்று, போகவேண்டாமென்று சொல்லி அவனை மெல்ல த்ன் வழிக்குக் கொண்டுவருவான்.

'இதோ பார்! உன்னைப் பயமுறுத்துவது சரியல்ல. நீ ஒன்றும் கோழையல்ல. உன் இருக்கைக்குத் திரும்பிச் செல். உனது வீரர்களையும் அப்படியே செய்யச் சொல். அகமெம்னன் மனத்தில் உண்மையில் இருப்பது என்னவென்று உனக்குத் தெரியாது. வீரர்களை அவன் பரிசோதிக்கிறான், அவ்வளவே! விரைவில் அவன் அதை அவர்களுக்குப் புரியவைப்பான். ஆலோசனைக் கூட்டத்தில் அவன் சொன்னதையெல்லாம் நாம் கேட்கவில்லையா? இப்படிச் செய்வதற்காக படையினரோடு அவன் கோபப்படலாம். அவர்களை தண்டிக்கவும் செய்யலாம். ஒலிம்பஸ் மலையில் உருவான தலைவர்களுக்கென்று ஒரு பெருமை உள்ளது. ஞானவானான ஜீயூஸ் தனது நல்லுபதேசங்கள் மூலம் உங்களது அதிகாரத்தை அங்கீகரித்துள்ளான். உங்களை ஆதரித்துள்ளான்.

தனது நண்பர்களிடம் சத்தமிட்டுக் கொண்டிருக்கும் ஒரு சாதாரண வீரனைப் பார்த்தால், ஒடிஸியூஸ் அவனை தனது செங்கோலால் அடித்து உத்தரவிட்டான்.

'ஏய்! உனது இருக்கைக்குப் போ. உனது அதிகாரிகளிடமிருந்து வரும் உத்தரவுகளுக்காகக் காத்திரு. கோழையே, பலவீனமான வனே! போரிலும் சரி, மகாசபைகளிலும் சரி நீ ஒன்றுக்கும்

உதவாதவன். இங்கே எல்லாரும் தலைவர்களாக இருக்க முடியாது. கும்பல் ஆட்சி என்பது மோசமானது. ஒரு தலைவன் மட்டும்தான் இருக்க வேண்டும். ஓர் ஆட்சியாளன்தான் இருக்க வேண்டும். அவனிடம்தான் அதிகாரத்தின் செங்கோல் தரப்பட வேண்டும். அரிவாள் வீசும் க்ரோனஸின் மகன் ஜீயூஸின் ஆசீர் வாதத்துடன் அவனுக்குத்தான் ஆட்சி செய்யும் உரிமை உள்ளது!'

இப்படியாக ஒடிஸியூஸ் தனது அதிகாரத்தை, படையினர் மீது செலுத்தினான். வீரர் அனைவரும் தமது கப்பல்களில் இருந்தும் பாசறைகளிலிருந்தும் மறுபடியும் கூட்டத்துக்கு விரைந்து வந்தனர். கடற்கரையோரம் முழுவதும் இடிமுழக்கம் செய்யும் அலைகடல் என ஓசை எழுப்பியபடி!

பின் எல்லாரும் அவரவர் இடத்தில் ஓர் ஒழுங்குக்குக் கொண்டு வரப்பட்டு அமர்ந்தனர். ஆனால், ஒருவனின் வாய் மட்டும் அமைதியாக இருக்க மறுத்தது. அது தெர்சிட்டிஸ். தன் குரலைத் தானே கேட்பதில் காதல் கொண்டவனாக அவன் இருந்தான். மேலும் அவனிடம் அடுத்தவரை நோகடிக்கும் கொச்சையான வசவுச் சொற்களின் கிடங்கும் தயாராக இருந்தது. படையினர் சிரிப்பார்கள் என்றால், இலவசமாகவும் புண்படுத்தும் விதத்தி லும் தன் எஜமானர்களைப் பற்றிக் குத்தலாகப் பேச அவன் அந்தக் கிடங்கைப் பயன்படுத்தி வந்தான். இலியம் நகருக்கு வந்த அதி அருவருப்பூட்டும் மனிதன் அவனே. வளைந்த கால் களுடையவனான அவன் நொண்டி நொண்டி நடந்தான். கூன் விழுந்த அவன் முதுகு அவனுடைய மார்புப் பகுதியைச் சந்தித்த படி இருந்தது என்று சொல்லலாம். குட்டையான ஒரு சில முடிகள் எட்டிப் பார்க்கும் அளவுக்கு அவனுடைய தலை வளர்ந் திருந்தது. அக்கிலிஸூம் ஒடிஸியூஸூம் அவனை வெறுத்த அளவுக்கு வேறு யாரும் வெறுத்ததில்லை. ஏனெனில், அவன் அவர்களைத்தான் எப்பொழுதும் வசைபாடிக் கொண்டே இருப்பான். ஆனால் இப்பொழுதோ அவன், கடவுளையொத்த அகமெம்னனுக்கு எதிராக தன் கிறீச்சிடும் வசை மழையை அனுப்ப தருணம் பார்த்துக் கொண்டிருந்தான். கிரேக்கர்கள் அவன் மீது கோபமும் கசப்பும் கொண்டிருந்தனர். தன் குரலின் உச்ச ஸ்தாயியில் அகமெம்னனுக்கு எதிராக தன் வசையுரையை அவன் எழுப்பினான்.

'அத்ரியூஸின் மகனே! எதற்காக இப்பொழுது நீ எங்களை பழித் துரைக்கிறாய்? இதற்கு மேல் உனக்கு என்ன வேண்டும்? உனது

பாசறைகள் வெண்கலத்தால் நிரம்பியுள்ளன. ஒரு நகரைக் கொள்ளையடிக்கும்போது, கிரேக்கர்களாகிய நாங்கள் உனக்கே முன்னுரிமை தருகிறோம். எத்தனை பெண்களை வேண்டு மானாலும் நீ தேர்ந்தெடுத்துக்கொள்ள உனக்கு அனுமதியுண்டு. ஒருவேளை தங்கம் உன்னிடம் குறைவாக இருக்கிறதோ என்னவோ? என்னாலோ வேறு யாராலோ பிடித்து வைக்கப் பட்ட தன் மகளை, தங்கத்தைப் பிணையத்தொகையாகக் கொடுத்து மீட்க, யாராவது ஒரு குதிரை அடக்கும் ட்ரோஜன் வருவான். அந்தத் தங்கத்தை எதிர்பார்க்கிறாயா? அல்லது நீ படுத்துறங்க புதிய பெண்ணைத் தேடுகிறாயா? படையினருக்கு தலைவன் என்ற முறையில் நீ இப்படியெல்லாம் செய்வது சரியல்ல.

'என் பலவீனமான நண்பர்களே! நீங்கள் ஒரு அவமானம். ஆண் களென்று நான் உங்களை அழைக்க மாட்டேன். கிரேக்கப் பெண் கள் என்றுதான் உங்களைச் சொல்ல வேண்டும்! எப்படியோ, நாம் அனைவரும் நம் நாட்டுக்குத் திரும்பிவிடுவோம். இவனை ட்ராய் நகரிலேயே விட்டுவிட்டுச் செல்லலாம். தனக்குக் கிடைத்துள்ள பரிசுகளைப் பற்றி இவன் இங்கே தனியாக இருந்து சிந்தித்துக் கொண்டிருக்கட்டும். அப்பொழுதுதான் நாம் எவ் வளவு தூரம் அவனுக்குத் தேவை என்பது இவனுக்குப் புரியும். ஏன், கொஞ்ச நேரத்துக்கு முன்னர்தான் இவன், அக்கிலிஸை கண்ணியக்குறைவாக நடத்தினான். இவனைவிட அக்கிலிஸ் எவ்வளவோ மேலானவன். அக்கிலிஸின் பரிசை இவனே எடுத்துக்கொண்டான். இப்பொழுது அவள் இவனிடம் இருக் கிறாள். ஆனாலும், அக்கிலிஸ் தனது சமநிலையை இழக்க வில்லை. அவன் அதைப்பற்றிய கவலையற்று இருக்கிறான். இல்லையெனில் அகமெம்னனே, அந்த அட்டூழியமே உனது கடைசி அட்டூழியமாக அமைந்திருக்கும்!'

இப்படியாக மக்கள் மேய்ப்பன் அக்மெம்னனை வசைபாடி தெர்சிட்டிஸ் பேசினான். ஆனால், கடவுளையொத்த ஒடிஸியூஸ் உடனே அவன் பக்கத்தில் வந்து நின்றான். தெர்சிட்டிஸைக் கடுமையாக முறைத்துவிட்டுத் தாக்கினான். அவனுக்கு ஒரு கூர்மையான பாடத்தைக் கற்பித்தான்.

'தெர்சிட்டிஸ்! என்ன ஒரு அருமையான பேச்சாளன் நீ! சுத்தமான பிதற்றல். வாயை மூடு. உன் தலைவர்களோடு விவாதம் செய் வதை விடு. வேறு யாரும் உன்னைப் போல் செய்வதில்லை.

அத்ரியூஸின் மகனோடு இலியம் நகருக்கு வந்த கிரேக்கர் களிலெல்லாம் மிக மோசமானவன் நீதான். நீ ஊருக்குத் திரும்பிப் போவதற்காக வேண்டி, அவர்களை விமர்சிப்பதையும் அவர் களை இழித்துரைப்பதையும் நிறுத்து. இந்தப் போர் எப்படி முடியப்போகிறதென்று இங்கிருக்கும் யாருக்கும் தெரியாது. நாம் வெற்றியோடு திரும்பலாம் அல்லது தோல்வியோடும் திரும்பலாம். ஆனால், நீ இங்கு செய்துகொண்டிருப்பதெல்லாம் என்ன? கிரேக்கர்கள் தம் தலைவன் அகமெம்னனுக்குக் காட்டிய தாராளத்துக்காக, இங்கே உட்கார்ந்து அத்ரியூஸின் மகனும் மக்கள் தலைவனுமாகிய அகமெம்னனை அவமானப்படுத்திக் கொண்டிருப்பதுதான். உனது பேச்சு நீண்ட ஏளன உரையேயன்றி வேறெதுவுமில்லை.

'ஆனால், நான் உனக்கு வெளிப்படையாகவே சொல்லுகிறேன். இப்படி நீ அறிவுகெட்டதனமாகப் பேசிக்கொண்டிருப்பதை மறுபடியும் நான் பார்த்தேனென்றால், உன்னைப் பிடித்து, உன் மர்மஸ்தானங்களை மூடியிருக்கும் உள்ளாடைகளை அவிழ்த்து அம்மணமாக்கி, உன்னை நையப்புடைத்து, அவமானகரமான முறையில் அடிகளைக் கொடுத்து சபையிலிருந்து உன்னைத் தூக்கி எறிவதுடன், கதறியழுதுகொண்டே உன்னை கப்பலுக்கு ஓடச்செய்யா விட்டால், என் தலை என் தோளில் இருந்து தனியாகட்டும். டெலிமாக்கஸ் என் மகனுமல்ல!'

இப்படிப் பேசிய ஒடிஸியூஸ் தெர்சிட்டிஸை முதுகிலும் தோள் களிலும் செங்கோலால் அடித்தான். தெர்சிட்டிஸ் வெட்கத்தால் நடுங்கி அழ ஆரம்பித்தான். தங்கக் குமிழிடப்பட்ட அந்தச் செங்கோல் அடி ஏற்படுத்திய ரத்தம் தோய்ந்த காயத்தில் அவனுடைய முதுகு வீங்கியது. அச்சத்திலும் வேதனையிலும் அவன் அமர்ந்தான். பரிதாபமாக சுற்றிலும் பார்த்துவிட்டு, கண்ணீர்த்துளியொன்றைத் துடைத்தெறிந்தான். மற்றவர் அனை வரும் அதிருப்தியுடனிருந்தாலும் அவனைப் பார்த்து நன்கு சிரித்தனர். தங்களுக்குள் பார்த்துக்கொண்டு அவர்கள் சொல்லிக் கொண்டனர்!

'சபாஷ்! ஒடிஸியூஸுக்குப் பெருமை சேர்க்கும் விஷயங்கள் பல உண்டு. போர்க்களத்திலும் தலைமை ஏற்பதிலும் பயன்பட்டுள்ள அவருடைய அருமையான கருத்துகளே சான்று. ஆனால், சத்தம் போட்டுக் கொண்டிருந்த இந்தக் காற்றுப்பையை சபையிலிருந்து மூடி வைத்ததுதான் அவர் நமக்காகச் செய்த மிகச்சிறப்பான

காரியம். இனி அந்த மகா தெர்சிட்டிஸ் இங்கு வந்து நம் தலைவர்கள் மீது அவதூறு பேச எந்த அவசரமும் படமாட்டான்!'

இப்படிப் பேசினர் குழுமிய அனைவரும். இப்பொழுது மறு படியும் நகரங்களை வீழ்த்தும் ஒடிஸியூஸ் தனது செங்கோலுடன் எழுந்து பேசலானான். ஓர் அறிவிப்பாளனைப்போல மாறு வேஷம் போட்டு வந்திருந்த சாம்பல் நிறக் கண்ணாள் அதீனி அவனுக்குப் பக்கத்தில் நின்றுகொண்டு, பின்னாலும் முன்னா லும் இருந்த கிரேக்கர்கள் அனைவரும் அவனின் பேச்சைக் கேட்பதற்கு வசதியாக அவரவர் இடத்தில் அமரும்படி அனை வரையும் ஒழுங்குபடுத்தினாள். ஒடிஸியூஸ் எழுந்து பேசும்போது அவர்களைப் பற்றிய அக்கறை அவன் மனத்தில் இருந்தது.

'தலைவா அகமெம்னனே! மனிதகுலத்தின் முன்னிலையில் பழி சுமத்தப்படும் ஒரு பொருளாக உன்னை ஆக்க வேண்டும். அருமையான மதில்களைக் கொண்ட இலியம் நகரை அழித்த பிறகுதான் நீ நாடு திரும்ப வேண்டுமென்றும், குதிரைகள் மேயும் கிரேக்கத்திலிருந்து இங்கே கடல்பயணம் செய்து வந்தபோது உன்னிடம் செய்துகொடுத்த சத்தியத்தை மீறவேண்டுமென்றும் கிரேக்கர்கள் முடிவு செய்துவிட்டார்களென்று தோன்றுகிறது. அவர்களனைவரும் சிணுங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்தால் அவர்களெல்லாம் சிறு குழந்தைகளாகவோ விதவைகளாகவோ இருப்பார்கள் போலும்! நமது முயற்சிகளைப் பார்த்து எந்த எதிரியும் மனமுடைந்து போவான் என்பதை நான் மறுக்க வில்லை. கப்பலில் ஏறிவிட்ட ஒரு பயணியின் பயணத்தை, குளிர்காலக் காற்றும் நெடிதுயரும் அலைகளும் தடுத்து நிறுத்தி அவனைத் துறைமுகத்திலேயே ஒரு மாதத்துக்குக் கட்டிப் போட்டால்கூட மனைவி மக்களைப் பிரிந்து அவன் அமைதி யின்றி இருக்கத்தான் செய்வான். ஆனால், நாமோ ஒன்பது நீண்ட ஆண்டுகளாக இங்கேயே கிடக்கிறோம். நமது படைகள் இப்பொழுது ஊருக்குத் திரும்பும் எண்ணத்தில் கப்பலருகில் அமைதியிழந்து நிற்குமானால், அதனால் சொற்ப பழியே ஏற்படும். இது உறுதி!

'இருந்தாலும் இவ்வளவு நீண்ட காலம் தங்கிவிட்டபிறகு, வெறுங்கையோடு நாம் திரும்புவோமானால், அது நிச்சயமாக அவமானகரமானதாக இருக்கும். அமைதியாக இருங்கள் நண்பர்களே! இன்னும் கொஞ்சகாலம் தாமதிப்போம். நமது தீர்க்கதரிசி கால்கஸ், உண்மையைக் கண்டறிந்து சொல்கிறாரா

இல்லையா பார்ப்போம். நான் என்ன சொல்ல வருகிறேன் என்று அனைவருக்குமே தெரியும்.

'நேற்று மாதிரிதான் இருக்கிறது. ப்ரியமுக்கும் ட்ரோஜன் களுக்கும் பிரச்னையைக் கொண்டுவர கிரேக்கக் கப்பல்கள் எல்லாம் தயாராக ஆலிஸில் கூடியது. ஓர் ஓடையைச் சுற்றி, அகலமான இலைகளைக் கொண்ட அருமையான மரத்தின் அடியில், நமது கடவுள்களுக்கு அவர்களது புனித பலி பீடங்களில் நாம் அனைவரும் நமது பலிகளை முறையாக நிறைவேற்றினோம். அந்த மரத்தின் அடியிலிருந்து மின்னும் தண்ணீர் பொங்கி வழிந்தது. அப்பொழுதுதான் ஒரு பெரிய அடையாளம் தோன்றியது.

'ஒலிம்பியக் கடவுள் ஜீயூஸே அனுப்பிய பயமுறுத்தும் தோற்றம் கொண்ட ஒரு நாகம் பலிபீடத்தின் அடியிலிருந்து வெளிவந்து மரத்தை நோக்கிச் சென்றது. அதன் முதுகில் ரத்தச் சிவப்பில் கோடுகள் இருந்தன. மரத்தின் அதிஉயரக் கிளையொன்றில் சிட்டுக்குருவிக் கூட்டம் ஒன்று இருந்தது. பாவப்பட்ட சின்ன ஜீவன்கள். அடைகாத்த அம்மாவையும் சேர்த்து மொத்தம் எட்டு அல்லது ஒன்பது பறவைகள் இருந்தன. எல்லாக் குஞ்சுகளும் கீச்கீச்சென பரிதாபமாகக் கத்திக்கொண்டிருந்தன. அச்சத்தில் நடுங்கி அம்மாப் பறவையும் தன்னருமைக் குழந்தைகளுக்காக ஓலமிட்டு, சிறகுகளைப் படபடவென அடித்துக்கொண்டி ருந்தது. ஆனால், எல்லாக் குஞ்சுகளையும் விழுங்கியது அந்தப் பாம்பு. அம்மாவையும் விடவில்லை அது. சுருண்டு வந்த அது, வீறிட்டலறிய அம்மாப் பறவையின் சிறகைக் கவ்விப் பிடித்தது. அம்மா, குழந்தைகள் என எல்லாவற்றையும் அது விழுங்கி முடித்த பிறகு, அரிவாள் வீசும் க்ரோனஸின் மகனாகிய கடவுள் ஜீயூஸ் அதை ஒரு கல்லாக உருமாற்றிவிட்டார்.

'நடந்தவற்றை எல்லாம் பார்த்துக்கொண்டு நாம் அங்கே ஸ்தம்பித்து நின்றுகொண்டிருந்தோம். அந்த அச்சமூட்டும் அசுரப் பாம்பு, நமது பலிகளில் தலையிட்டு இடையூறு செய்ததும் உடனே நம் தீர்க்கதரிசி கால்கஸ் அந்தத் தீக்குறியின் அர்த்தம் சொன்னான்.

'ஏன் அமைதியாக இருக்கிறீர்கள் நீள்முடி கிரேக்கர்களே? நமக்காகத்தான் ஞானவானாகிய ஜீயூஸ் இந்த தீர்க்கதரிசனக் காட்சியை நடத்தியருளியிருக்கிறார். இந்தக் காட்சி தாமதமாக

வந்துள்ளது. எனவே, தாமதமாகவே அதன் அர்த்தமும் நிறைவேறும். ஆனால், அதன் புகழ்மிகு ஞாபகம் இறவாது. எட்டு இளம் சிட்டுக்குருவிக் குஞ்சுகளுடன் அடைகாத்த அதன் அம்மாவையும் சேர்த்து ஒன்பது இருந்தன. எல்லாவற்றையும் அந்தப் பாம்பு புசித்துவிட்டது. எனவே, ஒன்பது ஆண்டுகள் இலியம் நகருக்காக நாம் போரிட வேண்டி இருக்கும். பத்தாவது ஆண்டு, அந்நகரின் அகண்ட தெருக்கள் நமதாகும்.

'கால்கஸ் செய்த முன்னறிவிப்பு இதுதான். அவன் சொன்ன எல்லாமே உண்மையாகிக் கொண்டுள்ளது. ஆகவே கிரேக்கப் படைவீரர்களே! நீங்கள் அனைவரும் ப்ரியமின் நகரை நாம் வெல்லும்வரை உங்கள் கடமையைச் செய்யுங்கள், போரிடுங்கள்.'

இப்படியாக அவன் பேசினான். அதைக் கேட்ட கிரேக்கர்கள் அவனது பேச்சில் மகிழ்ந்து இடிமுழக்கம்போல ஆர்ப்பரித்து, கடவுளையொத்த ஒடிஸியூஸுக்குத் தங்கள் ஆதரவைத் தெரிவித்தனர். அச்சமூட்டும் அவர்களது கர்ஜனை, கப்பல்களைச் சுற்றி எதிரொலித்தது. பின் கிரேக்கத் தேரோட்டியான நெஸ்டர், அவர்களைப் பார்த்துக் கூறினான்

'இந்தப் பேச்சையெல்லாம் கேட்டபிறகும் போரிடுவதில் உங்களுக்கு விருப்பமில்லையெனில், நீங்களெல்லாம் குழந்தைகளாகத்தான் இருக்க வேண்டும். அப்படியானால், நாம் ஒப்புக்கொண்ட உடன்படிக்கைகளும் விரும்பிக் கொடுத்த வாக்குறுதிகளும் என்னாவது? அப்படியானால், நமது திட்டங்களையும் போர்த் தந்திரங்களையும், மதுவில் முத்திரைஇடப்பட்ட நமது வாக்குறுதிகளையும், அதைச் செய்த நமது நம்பிக்கையின் வலக்கரங்களையும் தீயில் எறிந்துவிடலாம். இப்பொழுது நாம் பயன்படுத்தும் ஒரே ஆயுதம் சொற்கள் மட்டும்தான். இப்பொழுது இருக்கும் சூழ்நிலையில் அவற்றால் நம்மை எங்கும் கொண்டுசேர்க்க முடியாது.

'அகமெம்னா! நீ எப்பொழுதும்போல உன் உறுதியில் உண்மையாயிரு. போர்க்களத்தின் மையப்பகுதிக்கு, அதன் திண்ணிய செயல்பாட்டுக்கு எங்களை அழைத்துச் செல். நம்மில் ஓரிருவர் துரோகிகளாக மாறி, ஜீயூஸ் சொன்னது உண்மையா இல்லையா என்பதைத் தெரிந்துகொள்ளுமுன் வீடு திரும்பத் திட்டமிடுவாராயின், அவர்கள் எக்கேடுகெட்டும் போகட்டும். அவர்கள்

வெற்றிபெற மாட்டார்கள். ட்ரோஜன்களுக்கு இறப்பையும் பேரழிவையும் கொடுப்பதற்காக நாம் நமது விரைவுக் கப்பல்களிலேறிய அன்று, க்ரோனஸின் மகனும் எல்லாம் வல்ல கடவுளுமாகிய ஜீயூஸ் ஆதரித்துத் தலையாட்டினார் என்பதில் நான் உறுதியாயிருக்கிறேன். அப்பொழுது நமது வலது பக்கம் ஒரு மின்னல் வெட்டியது. எல்லாம் நல்லபடியாக முடியும் என்பதன் அடையாளம் அது. எனவே, ஹெலனுக்காக நீங்கள் விட்டுள்ள வியர்வைக்கும் கண்ணீருக்கும் பகரமாக ஒவ்வொரு கிரேக்கனும் ஒரு ட்ரோஜன் பெண்ணோடு படுத்துறங்கி எழும்வரை, வீடு திரும்புவதற்காக பெருமுயற்சி எதுவும் செய்ய வேண்டாம். யாருக்காவது வீடு திரும்பித்தான் ஆகவேண்டும் என்று தோன்றினால், வசதியாக தளங்கள் அமைக்கப்பட்ட கறுப்புக் கப்பலை அவன் தொடட்டும். அவன் தன் அழிவையும் விதியையும் நிச்சயப்படுத்திக் கொண்டான் என்று அர்த்தம்.

'தலைவா! கவனமாக சிந்தி. வேறு யாரிடமாவது ஆலோசனை பெற்றுக்கொள். நான் சொல்வது இதுதான். இதை லேசாக எண்ணி ஒதுக்கிவிட வேண்டாம். அகமெம்னன்! நமது வீரர்களை குலவாரியாகவும் இனவாரியாகவும் பிரித்துக்கொள். அப் பொழுதுதான் குலத்துக்குக் குலமும், இனத்துக்கு இனமும் உதவி செய்துகொள்ளும். நீ இப்படிச் செய்வாயேயானால், கிரேக்கர் கள் ஒப்புக்கொள்வார்கள். பிறகு, உனது படைகளிலும் படைத் தலைவர்களிலும் கோழை யார், வீரன் யார் என்று கண்டுபிடித்து விடலாம். ஒவ்வொருவனும் தன் சகோதரனுக்குப் பக்கத்தில் சண்டையிட்டுக் கொண்டிருப்பான். அதன்பிறகு உனக்கும் இலியம் நகரின் அழிவுக்கும் இடையில் நிற்பது கடவுளின் விருப்பமா அல்லது வீரர்களின் கோழைத்தனமா, அல்லது போரில் அவர்களின் திறமையின்மையா என்பது தெரிந்துவிடும்.'

தலைவன் அகமெம்னன் பதில் சொன்னான்:

'போற்றுதலுக்குரியவரே! இந்தச் சொற்போரிலும் நீங்களே வென்றுவிட்டீர்கள்! தந்தை ஜீயூஸ்! அதீனி! அப்போலோ! நெஸ்டரைப் போன்ற ஆலோசகர்கள் பத்து பேரைக் கொடுங்கள். தலைவன் ப்ரியமின் நகரம் கிரேக்கர்களின் கரங்களில் விரைவில் வீழும்! ஆனால், புயல் மேகங்களைச் செலுத்தும் க்ரோனஸின் மகன் ஜீயூஸ் என்னை சித்திரவதை செய்கிறார். அர்த்தமற்ற சண்டை சச்சரவுகளில் அவர் என்னை மாட்டி வைக்கிறார். நானும் அக்கிலிஸூம் சண்டையிட்டதைப் பாருங்கள். ஒரு

பெண்ணுக்காக எப்படி நாங்கள் ஒருவரையொருவர் அவமரியாதை செய்துகொண்டோம்! ஆனால், நான்தான் முதலில் கோபப்பட்டேன். மறுபடியும் ஒருமுறை, நாங்கள் நேருக்கு நேர் பார்த்துக்கொள்ள முடிந்தால், ஒரு கணம்கூட தாமதமின்றி ட்ரோஜன்கள் அழிக்கப்பட்டுவிடுவார்கள். இது நிச்சயம்!

'சரி. நாம் சாப்பிட்டுவிட்டு சமருக்குத் தயாராவோம். உங்கள் ஈட்டிகளைக் கூராக்குங்கள். கேடயங்களை சரிசெய்யுங்கள். உங்கள் குதிரைகள் சாப்பிட்டனவா என்று பாருங்கள். உங்கள் தேர்களைச் சரிபாருங்கள். நாள் முழுவதும் கடுமையாகப் போர்செய்ய தயாராகுங்கள். இரவாகி, படைகள் பிரியும்வரை நமக்கு ஒரு கணம்கூட ஓய்வு கிடையாது. நம் வீரர்களின் கேடய இணைப்புத் தோல்பட்டை அவனது நெஞ்சின் வியர்வையால்தான் நனைக்கப்பட வேண்டும். ஈட்டி பிடித்தே அவனது கைகள் களைப்படைய வேண்டும். மெருகூட்டப்பட்ட தேரிழுக்கும் குதிரைகள் வியர்வை நுரையால் போர்த்தப்பட வேண்டும். போரை விட்டுவிட்டு கப்பல் பக்கம் யாராவது சும்மா சுற்றிக்கொண்டிருப்பானாகில், அவனை எதுவும் காப்பாற்ற முடியாது. நாய்களுக்கும் பறவைகளுக்கும் அவன் உணவாவான்!'

இப்படியாக அவன் பேசினான். தெற்கின் காற்று வீசி, கடலைக் கலக்கி எழும் அலைகள் கடலுக்கு எதிர்ப்பக்கம் உள்ள பாறைகள் அடர்ந்த நிலக்கூம்பின்மீது பாய்வது போல, கிரேக்க வீரர்கள் இடிமுழக்கம் செய்தனர். எல்லாப் பக்கமிருந்தும் காற்றில் எழும் அலைகள் அவற்றை அமைதியாக விடுவதேயில்லை.

சபை முடிந்து எழுந்த அவர்கள், தத்தம் கப்பல்களுக்குச் சென்று குடில்களில் தீமூட்டி உணவருந்தினர். நித்தியக் கடவுளருக்கு பலி கொடுத்த ஒவ்வொரு வீரனும் போரின் கடுமையை மீறி தான் உயிரோடு இருக்க வேண்டும் என்று பிரார்த்தித்துக் கொண்டிருந்தான். தலைவன் அகமெம்னனும், ஐந்து வயது கொழுத்த எருதை க்ரோனஸின் மகனும் எல்லாம் வல்ல கடவுளுமாகிய ஜீயூஸுக்கு பலி கொடுத்தான். அதற்கு மூத்த ஆலோசகர்களான கிரேக்கர்களை அழைத்திருந்தான். எல்லாருக்கும் முதலில் நெஸ்டர், பின் தலைவன் இடோமீனியஸ், இரண்டு அஜாக்ஸ்கள், டைடியூஸின் மகன் டயோமிடிஸ், ஆறாவதாக ஜீயூஸுக்கு இணையான ஒடிஸியூஸ். போர் முழக்கம் செய்யும் மெனிலயஸ், அழைப்பு அவசியமின்றி வந்தான். தன் சகோதரன் அகமெம்னனின் சுமை எவ்வளவு பெரிதென்று அவனறிவான். பலி எருதைச்

சுற்றி நின்ற அவர்கள் பலிக்கான தானியங்களைக் கையிலெடுத்தனர். தலைவன் அகமெம்னன் அவர்களைப் பார்த்துப் பேசிவிட்டு பிரார்த்தனை புரிந்தான்.

'மாபெரும் புகழுக்குரியோனே ஜீயூஸ்! விண்ணில் வசிக்கும் கறுப்பு மேகத்தின் கடவுளே! புகையால் கருமை படிந்த ப்ரியமின் அரண்மனை மண்ணோடு மண்ணாகும் வரை, அதன் நெடுங் கதவுகள் நெருப்பில் எரிந்து சாம்பலாகும் வரை, ஹெக்டரின் மேலாடை கிழித்தெறியப்படும்வரை, சூரியன் அஸ்தமிக்காமல் இருக்கவும் இருள் பரவாமல் இருக்கவும் அருள் செய்வாயாக! ஹெக்டரின் அருகில் அவனுடைய நண்பர் பலர் வீழ்ந்து சாகவும் மண்ணைக் கவ்வவும் வேண்டும்!'

அகமெம்னன் படைத்தவற்றை ஏற்றுக்கொண்ட ஜீயூஸ், அவன் பிரார்த்தனையை ஏற்றுக்கொள்ளவில்லை. பதிலுக்கு இரு மடங்கு துன்பச்சுமைகளைக் கொடுத்தான்.

அவர்கள் தங்கள் பிரார்த்தனைகளை முடித்த பிறகு, தானிய மணிகளை பலி எருதின்மீது வீசினர். அதன் தலையை மல்லாக்க வைத்து அதன் கழுத்தை அறுத்தனர். பின் தோலை உரித்தனர். பின் கடவுளின் பங்குக்கு தொடைப்பகுதியை வெட்டி எடுத்தனர். அதை கொழுப்பின் மடிப்புகளால் சுற்றினர். எருதின் மீதி இறைச்சியை அம்மடிப்புகளின் மீது வைத்தனர். அத்துண்டுகளை இலைகளற்ற தண்டுகளின்மீது வைத்து தீயால் வாட்டி எடுத்தனர். பின் குடல்களைக் குத்தி, நெருப்பின்மீது பிடித்தனர். கடவுளின் பங்கை தீ சாப்பிட்ட பிறகு, எஞ்சியதை அவர்கள் உண்டனர். பின் எஞ்சியிருந்த எருதின் பகுதிகளை சிறு சிறு துண்டுகளாக்கி ஊசிகளால் அவற்றைக் குத்தி, கவனமாக அவற்றை வறுத்து வெளியே எடுத்தனர்.

இதெல்லாம் முடிந்து இறைச்சி தயாரானவுடன் அவர்கள் விருந்துண்டனர். நியாயமான பங்கு உண்ணாமல் ஒருவரும் செல்லவில்லை. அவர்களின் பசியும் தாகமும் தணிந்த பிறகு, தேரோட்டியான நெஸ்டர் எழுந்து தன் மனத்தில் உள்ளதைச் சொன்னான்:

'எல்லாரையும்விட புகழ்மிகு அத்ரியூஸின் மகனே! மக்கள் தலைவன் அகமெம்னா! இந்தக் கூட்டத்தை நான் நீட்டிக்கவோ, இறைவன் நமது கைகளில் ஒப்படைத்த வேலையைத் தள்ளிப் போடவோ போவதில்லை. வாருங்கள், வெண்கலக் கவச

கிரேக்கப் படைவீரர்களையெல்லாம் போர் அறிவிப்பாளர்கள் ஒன்று திரட்டட்டும். அதன்பின் நாம் கிரேக்கப் படை முழுவதையும் ஒன்றாகச் சுற்றிவந்து நம் யுத்த நாய்களை அவிழ்த்துவிடுவோம்!'

அப்படி அவன் சொன்னதை அகமெம்னன் ஏற்றுக்கொண்டான். உடனே அவன் நீள்முடி கிரேக்கர்களை போர் அணிவகுப்பு செய்து வியூகம் வகுக்கச் செய்யும்படி தெளிவான குரலையுடைய தனது அறிவிப்பாளர்களுக்கு உத்தரவிட்டான். கட்டியக் காரர்களும் அவ்வாறே அறிவிக்க, உடனே குழுமியது படை. அகமெம்னனின் கீழிருந்த ஒலிம்பஸ் மலையில் உருவான எல்லாத் தலைவர்களும் அணிகளை ஒழுங்குபடுத்த சுறு சுறுப்பாய் இயங்கினர். அவர்களுடன் சாம்பல் நிறக் கண்ணாள் அதீனியும் இருந்தாள்.

அவள் கையில் சிறப்பு வாய்ந்த ஒரு மேலங்கி இருந்தது. அது சாயம் போகாத, எப்போதும் இருக்கும் ஈஜிஸ் (எனப்படுவ தாகும்). அதிலிருந்து, ஆயிரம் தங்கக் குஞ்சங்கள் படபடத்துத் தொங்கின. அவை அனைத்துமே மிகவும் அழகாக நெய்யப் பட்டிருந்தன. ஒவ்வொரு குஞ்சமும் நூறு கால்நடைகளின் தலைகளுக்குச் சமமாகும். ஈஜிஸோடு வேகமாக வெளியே வந்தவள், சேனைகளின் அணிவகுப்பினூடே விரைவாகச் சென்றாள். ஒவ்வொரு கிரேக்க வீரனின் இதயத்திலும் எதிரியை எதிர்த்து கருணையற்ற முறையில் போரிடுமாறு வீரத்தை ஊட்டிய வண்ணம் வீரர்களை முன்னே செல்லும்படி தூண்டினாள். அதிலிருந்து, உட்குழிந்த கப்பல்களில் தந்தையர் நாட்டுக்குத் திரும்புவதைவிட போர் செய்வதே இனிமை யானதாகத் தோன்றியது வீரர்களுக்கு.

மலையுச்சியில் இருக்கும் பெருங்காட்டை அழித்து தீ நாச மாக்கும்போது தூரத்திலிருந்து தீ நாக்குகள் மின்னித் தெரிவது போல, வீரர்களின் கம்பீரமான வெண்கலக் கவசங்கள் கண் கூசும் அளவுக்கு காற்றின்வழியாக வானம் வரை மின்னின.

ஆசியப் புல்வெளியில் கெய்ஸ்டர் ஓடையின் பக்கம் நீள் கழுத்து கொண்ட அன்னங்கள், நாரைகள், வாத்துகள் என பல்வேறு பறவைக் கூட்டங்கள் கூடி, இங்குமங்கும் ஓடித்திரிந்து, புல் வெளி முழுதும் அவற்றின் பேரொலியால் நிரம்புவதுபோல, படைவீரர்கள் தமது கப்பல்களில் இருந்தும் பாசறைகளில்

இருந்தும் ஸ்கமாண்டர் ஆற்றுச் சமவெளிக்கு விரைந்தனர். அணிவகுத்துச் செல்லும் வீரர்களின் நடையின் சத்தத்தையும், குதிரைகளின் குளம்படிச் சப்தத்தையும் பூமி எதிரொலித்தது. பூக்கள் நிரம்பிய ஸ்கமாண்டர் ஆற்றின் புல்வெளியில் வந்து நின்றனர் அவர்கள்.

வசந்த காலத்தில் வாளிகளில் பால் நிரம்பிச் சிதறும்போது, ஆட்டுக் கொட்டிலை வட்டமிடும் சுறுசுறுப்பான ஈக்களின் குழுக்களைப் போல, எண்ணிலடங்கா நீள்முடி கிரேக்க வீரர்கள் ட்ரோஜன்களுக்கு எதிராகச் சமர் செய்யவும், அவர்களை வெற்றிகொள்ளும் முடிவோடும் சமவெளியில் இறங்கி யிருந்தனர்.

மேயச்சென்ற ஆடுகள் பிரிந்து சென்று கலந்துவிடும்போது அதன் மேய்ப்பர்கள் எளிதாக அவற்றைக் கண்டுபிடித்து ஒழுங்கு படுத்துவதுபோல, போரில் முன்னேறிச் செல்வதற்காக ஆங் காங்கு ஒழுங்குபடுத்துவோரை படைத்தலைவர்கள் நியமித்தனர். அவர்கள் மத்தியில் பெருந்தலைவன் அகமெம்னன் சுற்றி வந்தான். அவன் தலையும் விழிகளும் பார்ப்பதற்கு, இடியில் மகிழும் கடவுள் ஜீயூஸுடையதைப் போலிருந்தன. அவ னுடைய இடுப்பு போர்க்கடவுளுடையதைப் போல இருந்தது. அவனுடைய மார்பு பொசைடனுடையதைப் போலிருந்தது. கூடியிருக்கும் பசுக்கூட்டத்தின் மத்தியில் தனித்து நிற்கும் காளையைப் போல, அகமெம்னனை அன்று தோன்ற வைத் திருந்தான் ஜீயூஸ். அவன் எல்லா வீரர்களையும் மிகைத் திருந்தான் என்பது மிகவும் வெளிப்படையாகவே தெரிந்தது.

‘ஒலிம்பஸ் மலையில் வாழும் ம்யூஸ்களே! நீங்கள் தேவதைகள். எல்லாம் அறிந்தவர்கள். எங்கும் இருப்பவர்கள். நாங்களோ வெறும் மனிதர்கள். கேள்விப்பட்டதை வைத்துத்தான் நாங்கள் முன்னேற முடியும். எங்களுக்கு வேறெதுவும் தெரியாது. அதனால் எனக்கு இப்பொழுது சொல்லுங்கள். கிரேக்கர்களின் தலைவர்கள், தளபதிகள் யார் யார்? மற்றவர்களைப் பொறுத்த வரை, அவர்களின் பெயர்களோ எத்தனை பேர் உள்ளார்கள் என்றோகூட எனக்குத் தெரியாது. எனக்கு பத்து நாக்குகள் பத்து வாய்கள் இருந்தாலும், களைப்படையாத குரலிருந்தாலும், வெண்கல இதயம் இருந்தாலும், புயல் மேகத்தை ஓட்டிவரும் ஜீயூஸின் மகள்களாகிய ம்யூஸ்களாகிய நீங்கள் மனது வைத்து இலியம் நகருக்கு எத்தனைபேர் வந்தார்கள் என்று சொன்னா

லொழிய, என்னால் தெரிந்துகொள்ள முடியாது. எனவே, முதலில் இருந்து முடிவு வரை கப்பல் தலைவர்களையும் அவர்களது கப்பல்களின் பெயர்களையும் சொல்லிவிடுகிறேன்.

போட்டியாவிலிருந்து வந்த படைப்பிரிவுக்கு பெனிலியாஸ், லெய்ட்டஸ், அர்சிலாஸ், ப்ரொதீனார் மற்றும் க்ளோனியஸ் ஆகியோர் தலைமை வகித்தனர். போட்டியர்கள் ஹைரீ, கற்கள் நிறைந்த ஆலிஸ், ஷீனஸ், ஸ்கோலஸ், மலைமுகடுகள் நிறைந்த ஈட்டியோனஸ், தெஸ்ப்பியா, க்ரீயா, விசாலமான மைக்கலஸ் ஸஸ், ஹர்மா, எலீசியான், எரித்ரி, ஈலியான், ஹைலீ, பீட்டியான், ஒகேலியா, உறுதியான மிடியான், கோப்பே, யுட்ரீசிஸ், புறா வளம் மிக்க திஸ்பி, கொரோனியா, புற்கள் நிறைந்த ஹேலியார்ட்டஸ், ப்லட்டீயா, க்ளிசாஸ், உறுதியான கீழ் திஸ்பி, புனித ஆங்கஸ்ட்டஸ், பொஸைடனின் அழகான தோப்பு, திராட்சைக் கொடிகள் நிறைந்த ஆர்னி, மிடியா, புனித நிஸா, மற்றும் தொலைவில் உள்ள ஆந்திடன் ஆகிய நகரங்களில் இருந்து வந்துள்ளனர். அவர்களின் படைப்பிரிவு தத்தம் தளபதிகளுடன் ஐம்பது கப்பல்களில் வந்திறங்கியது. ஒவ்வொரு கப்பலிலும் நூற்றிருபது இளம் போட்டியர்கள் இருந்தனர்.

ஆர்கொமீனஸ், அஸ்ப்லீடன் மற்றும் மின்யன் அர்கோமீனஸ் ஆகியவற்றிலிருந்து வந்த படைப்பிரிவுகளுக்கு அஸ்கலாப்பஸ், அயல்மீனஸ் ஆகியோர் தலைமை தாங்கினர். இவர்கள் இரு வரும் ஏரிஸின் மகன்களாவர். அஸ்ட்டியோக்கி என்ற அடக்க ஒடுக்கமான ஓர் இளம் பெண் அஸியஸின் மகனும் நடிகனுமான தன்னுடைய தந்தையின் அரண்மனையில் வைத்து இவர்களை இணங்கச் செய்து அனுப்பியிருக்கிறாள். பலம் பொருந்திய போர்க்கடவுளோடு மாடிக்குச் சென்று யாருக்கும் தெரியாமல் ரகசியமாக அவனோடு படுத்துறங்கியிருக்கிறாள். அவர்கள் முப்பது உட்குழிந்த கப்பல்களில் வந்திறங்கியுள்ளனர்.

ஃபோசிஸ்ஸிலிருந்து வந்த படைப்பிரிவுக்கு ஷீடியஸூம் எப்பிஸ்ட்ரோஃபசும் தளபதிகளாவர். அவர்களிருவரும் நௌபியசின் மகனாகிய வள்ளல் இஃபீஸ்டஸின் மகன்களாவர். இப்படைகள் சைபாரிஸ்ஸஸ், பாறைகள் நிறைந்த பிதோஸ், புனித க்ரிஸா, டௌலிஸ், பானோப்பியஸ், அனிமோரியா, ஹயம்போலிஸ் மற்றும் செஃபீசஸ் ஆற்றைச் சுற்றியுள்ள நகரங்கள், செஃபீசஸ் ஆறு எழும் லிலீயா ஆகிய ஊர்களிலிருந்து வந்துள்ளனர். இந்தப் படைப்பிரிவு தத்தம் தளபதிகளுடன்

நாற்பது கறுப்புக் கப்பல்களில் வந்தது. இதன் தலைவர்கள் இதன் வீரர்களை, படைப் படிநிலை வரிசைக் கிரமத்தில் போட்டியாளர்களுக்கு அடுத்தபடியாக, அவர்களுக்கு இடது பக்கம் இருக்கும்படி அமைத்தனர்.

லொக்ரிஸில் இருந்து வந்த படைப்பிரிவுக்கு ஆய்லியஸின் மகன் விரைவுப்பாத இளைய அஜாக்ஸ் தலைமை தாங்கினான். அவன் டிலமனின் மகன் முதிய அஜாக்ஸைப் போலல்ல. குள்ளமாக இருந்தான். சணல் நாரால் நெய்யப்பட்ட துணியை உடல் பாதுகாப்புக்காக அணிந்திருந்தான். ஆனால், ஈட்டியெறிதலில் இவனுக்கு இணை கிரேக்கர்களில் யாருமில்லை. இவனது படையினர் சைனஸ், ஓப்பஸ், கால்லியாரஸ், பெஸ்ஸா, ஸ்கார்ஃபி, அழகான ஆகியா, டார்ஃபி, த்ரோனியன் மற்றும் போக்ரியஸ் ஆற்றைச் சுற்றியுள்ள நகரங்களிலிருந்து வந்திருந்தனர். புனித இபியாவின் ஜலசந்திக்குக் குறுக்கே வாழும் லொக்ரிஸியன்களால் செலுத்தப்பட்ட நாற்பது கறுப்புக் கப்பல்களில் இவர்கள் வந்தனர்.

இபியாவிலிருந்து வந்த படைப்பிரிவில் வீரம் சுவாசிக்கும் அபாண்ட்டிஸ்கள் இருந்தனர். இவர்கள் சால்சிஸ், எரித்ரியா, திராட்சைக் கொடிகள் நிறைந்த ஹிஸ்டியா, கடலுக்கும் உயர்ந்த டயஸ் கோட்டைக்கும் அருகில் அமைந்த செரிந்தஸ், கரிஸ்டஸ் மற்றும் ஸ்டிரா ஆகிய ஊர்களிலிருந்து வந்தனர். அவர்களின் கப்பல் தலைவனாக கால்கோடனும் மகனும், வள்ளல் தன்மை கொண்ட அபாண்ட்டிஸ்களின் தலைவனும், போர்க்கடவுளின் ஆதரவாளனுமான எலிஃபீனர் இருந்தான். இவனது வீரர்கள் விரைந்து செல்லக்கூடியவர்கள். அவர்களின் முடி பின்பக்கம் நீளமாகத் தொங்கியது. வாட்போரில் எதிரிகளை ஈட்டிகளால் குத்தி, கவசம் தாண்டி அவர்களின் நெஞ்சைப் பிளப்பதில் நாட்டம் கொண்ட வீரர்கள் இவர்கள். இவர்களின் படைப்பிரிவு, எலீஃபீனரின் தலைமையில் நாற்பது கறுப்புக் கப்பல்களில் வந்தது.

அடுத்த படைப்பிரிவு, கிரேக்கர்களின் கோட்டையைப் போலிருந்த ஏதென்ஸிலிருந்து வந்தது. அங்குதான் பெரிய உள்ளம் கொண்ட எரிக்தியஸின் சமுதாயம் இருந்தது. எரிக்தியஸ் செழிப்பான மண்ணில் இருந்து கிடைத்தவன். ஜீயூஸின் மகளான அதீனியால் வளர்க்கப்பட்டவன். ஏதென்ஸில் உயர்வான தன்னுடைய கோயிலில் அவனை நிர்மாணித்தாள் அவள்.

அதீனிய இளைஞர்கள் எரிக்தியஸுக்கு ஆண்டுதோறும் எருதுகளையும் செம்மறியாடுகளையும் படைத்து மரியாதை செய்தனர். இந்த படைப்பிரிவுக்கு பீட்டியூஸின் மகனான மெனெஸ்தியூஸ் தலைமை ஏற்றான். காலாட்படை மற்றும் தேர்களைச் செலுத்தும் கலையில் அவனுக்கு இணையானவர் இந்த உலகில் ஒருவரும் கிடையாது. நெஸ்டர் மட்டுமே ஒரேயொரு போட்டியாளனாக இருந்தான். ஆனால், அவன் வயது முதிர்ந்தவனாக இருந்தான். ஐம்பது கறுப்புக் கப்பல்களில் அதீனியர்கள் மெனெஸ்தியூஸின் தலைமையில் வந்திறங்கினர்.

சலாமிஸ்ஸிலிருந்து பன்னிரண்டு கப்பல்களில் வந்த படைப் பிரிவுக்கு டிலமனின் மகன் அஜாக்ஸ் தலைமை ஏற்றிருந்தான். அதீனியப் படைகள் இருந்த இடத்தில் கப்பல்களை அவன் கரையேற்றினான்.

அர்கோஸிலிருந்து வந்த படைப்பிரிவில் வீரர்கள் அர்கோஸ், முறையாக மதில்கள் எழுப்பப்பட்ட டிரின்ஸ், ஆழமான வளை குடாக்கள் உள்ள ஹெர்மியான் மற்றும் அஸின், ட்ரோஸன், இயோனே, திராட்சைக் கொடிகள் மிகுந்த எப்பிடாரஸ், ஈஜியா மற்றும் மாசஸ் ஆகிய ஊர்களில் இருந்து வந்தனர். அவர்களின் தலைவனாக போர் முழக்கம் செய்யும் டயமீடிஸும், புகழ்மிகு கப்பானியஸின் மகன் ஸ்தெனீலஸும் இருந்தனர். டாலாஸின் மகனான கடவுளையொத்த யூரியாலஸ் மூன்றாவது தலைவனாக இருந்தான். ஆனால், முழுப் படைப்பிரிவுக்கும் ஒட்டுமொத்த தலைவனாக போர் முழக்கம் செய்யும் டயமீடிஸ் இருந்தான். இந்தப் படைப்பிரிவு இத்தலைவர்களின் கீழ் என்பது கறுப்புக் கப்பல்களில் வந்தது.

மைசினியில் இருந்து வந்த படைப்பிரிவில் அரண்போன்ற மைசினி, வளம்மிகு கோரிந்த், அழகாகக் கட்டமைக்கப்பட்ட க்ளியோனி, ஆர்னி, அழகான அரித்ரியா, ஆரம்ப காலத்தில் அட்ரெஸ்டஸின் ஆட்சியில் பல ஆண்டுகள் இருந்த சிசியோன், ஹைபர்சி, நெடிதுயர்ந்த கொனோஸா, பெலினி, ஈஜியானைச் சுற்றிய ஊர்கள், ஹெலிஸின் கடல்பகுதி முழுவதிலும் இருந்த அகண்ட ஊர்கள் ஆகியவற்றில் இருந்து வீரர்கள் வந்திருந்தனர். நூறு கப்பல்களில் வந்த இந்தப் பெரும்படை, அத்ரியூஸின் மகனாகிய தலைவன் அகமெம்னனின் கட்டுப்பாட்டில் இருந் தது. இதுவரை வந்த படைப்பிரிவினரில் இதுதான் மிக நேர்த்தி யானதும் எண்ணிக்கையில் அதிகமானதுமாகும். மின்னும்

வெண்கலத்தில் கவச உடை அணிந்துகொண்ட அகமெம்னன் மற்ற போர்வீரர்களில் இருந்து தனித்து நின்றான். ஏனெனில், அவன்தான் அவர்களனைவரிலும் தலைசிறந்தவன். மிகப் பெரும் படைக்குத் தலைமை தாங்குபவன்.

அழகிய நிலப்பகுதிகளைக் கொண்ட லாசிடோமன் பள்ளத் தாக்கிலிருந்து வந்தது ஒரு படைப்பிரிவு. அதில் ஃபாரிஸ், ஸ்பார்ட்டா, புறாக்கள் மிகுந்த மெஸ்ஸி, பிரிஸி, அழகிய ஆகி, அமிக்லி, கடற்கரை நகரான ஹெலோஸ், ஈடிலஸ் மற்றும் லாஸ் ஆகிய ஊர்களிலிருந்து வீரர்கள் வந்தனர். அவர்களின் அறுபது கப்பல்களுக்கும் தளபதியாக அகமெம்னனின் சகோதரன் போர்முழக்கம் செய்யும் மெனிலயஸ் இருந்தான். மைசினியன் படைப்பிரிவிலிருந்து இவர்களது பாசறை தனியாக அமைக்கப் பட்டிருந்தது. மெனிலயஸ் இவர்களை கவனித்துக்கொண்டான். போருக்குச் செல்ல எப்போதுமே தயார் நிலையில் நம்பிக்கை யுடன் அவன் இருந்தான். வீரர்களையும் உற்சாகப்படுத்திக் கொண்டிருந்தான். ஹெலனால் வழிய விடப்பட்ட வியர்வைக் கும் கண்ணீருக்கும் பழிவாங்க, மற்ற எவரையும்விட அவனே மிகுந்த ஆர்வமாக இருந்தான்.

படைப்பிரிவுகள் அங்கிருந்து மட்டுமல்லாமல் அழகான அரீனி, ஆல்ஃபியஸ் ஆற்றைக் கடந்து சென்றால் வரும் திரியான், அழகான ஈப்பி, சைபாரிசிஸ், ஆம்ஃபிஜெனீயா, டீலியஸ், ஹெலோஸ் மற்றும் டோரியன் ஆகிய நகர்களிலிருந்தும் வந்தன. டோரியனில்தான் திரேசியக் கவிஞனான திமீரிஸை ம்யூஸ்கள் சந்தித்து, ஈகேலிய யூரீடஸின் வீடான ஈகேலியாவில் வைத்து அவன் கதையை முடித்தனர். புயல் மேகத்தைச் செலுத்திவரும் ஜீயூஸின் மகள்களான ம்யூஸ்களே பாட்டுப் போட்டியில் கலந்து கொண்டாலும் நானே வெல்வேன் என்று அவன் பெருமை பேசித் திரிந்தான். அது அவர்களை வெகுண்டெழச் செய்தது. அவனைச் செயலிழக்கச் செய்து, அவன் இறையருளால் பெற்ற பாடலைத் திருடிக் கொண்டனர். அவனுடைய யாழையும் மறக்கச் செய்தனர். கிரேக்கத் தேரோட்டியான நெஸ்டர் இவர் களின் தளபதியாக இருந்தான். பள்ளத்தாக்குகளிலிருந்து வந்த தொன்னூறு கப்பல்களில் இந்தப் படைப்பிரிவு வந்திறங்கியது.

ஆர்கேடியாவிலிருந்து வந்திருந்தது ஒரு படைப்பிரிவு. அங்கு தான் மிக உயர்ந்த சிகரம் கொண்ட சைலீன் மலை இருந்தது. அங்குதான் இபைட்டஸ் புதைக்கப்பட்டிருந்தான். அங்குதான்

குத்துச்சண்டை போடுவதில் வீரர்கள் பயிற்சி பெற்றிருந்தனர். ஆர்கேடிய படைப்பிரிவினர் ஃபினியஸ், செம்மறியாடுகள் நிறைந்த ஆர்கொமீனஸ், ரைப்பீ, ஸ்ட்ராட்டி, காற்றோட்டம் அதிகமுள்ள எனிஸ்ப்பி, டிஜியா, அழகான மாண்டீனியா, ஸ்டிம்ஃபெலஸ் மற்றும் பர்ராசி ஆகிய ஊர்களிலிருந்து வந்திருந்தனர். அவர்களது அறுபது கப்பல்களின் தளபதியாக அங்க்கேயஸின் மகன் தலைவன் அகப்பினார் இருந்தான். சிறப்பாகச் சண்டையிடும் பல ஆர்கேடியர்கள் ஒவ்வொரு கப்பலிலும் இருந்தனர். கடல் பயணம் பற்றி ஆர்கேடியர்களுக்கு முன்னனுபவம் ஏதும் கிடையாதாகையால், மக்கள் தலைவனான அகமெம்னனே ஆர்கேடியத் தளபதி அகப்பினாருக்கு, மதுவைப் போல கருத்த கடலைக் கடப்பதற்காக, பல தளங்களைக் கொண்டு பாராட்டும் விதமாகக் கட்டப்பட்டிருந்த பல கப்பல்களை வழங்கியிருந்தான்.

எலிஸிலிருந்து ஒரு படைப்பிரிவு வந்திருந்தது. ஹெர்மைன், தூரமாக இருக்கும் மெர்சினஸ், ஒலீனியப் பாறை, அலீசியான் ஆகியவற்றுக்கும், ஒளி பொருந்திய எலிஸ் நிலப்பரப்புக்கும் மத்தியில் உள்ள ஊர்களில் இருந்தும் புப்பாரிசானில் இருந்தும் அப்படைப்பிரிவின் வீரர்கள் வந்திருந்தனர். நான்கு தளபதிகள் இருந்தனர். ஒவ்வொருவருக்கும் பத்து விரைவுக் கப்பல்களும் எலிஸிலிருந்து வந்த வீரர்களும் இருந்தனர். க்ரீட்டஸின் மகன் ஆம்ஃபிமாக்கஸ், ஆக்டரின் பேரனும் யூரீட்டஸின் மகனுமாகிய தல்ப்பியஸ் ஆகிய இருவரும் இரண்டு படைப்பிரிவுகளை நிர்வகித்தனர். அமாரின்சியஸின் மகனான பலம் பொருந்திய டயோரஸ் மூன்றாம் தளபதியாகவும், ஆகியாஸின் மகன் தலைவன் அகஸ்தனிஸின் மகனாகிய கடவுளையொத்த பாலிக்சீனஸ் நான்காவது தளபதியாகவும் இருந்தனர்.

எலிஸிலிருந்து கடலைக் கடந்து சென்றால் உள்ள புனித எகீனிய தீவுகளில் இருந்தும் டல்கியத்தில் இருந்தும் ஒரு படைப்பிரிவு வந்தது. ஏரிஸுக்கு இணையான ஃபைலியஸின் மகனான மீஜஸ் அப்பிரிவின் தலைவனாக இருந்தான். அவன் ஜீயூஸுக்குத் தேரோட்டியாக இருந்தவன். தன் தந்தையோடு சண்டையிட்டுக் கொண்டு டல்கியத்துக்குக் குடிபெயர்ந்தான். நாற்பது கறுப்புக் கப்பல்களில் இந்தப் பிரிவு மீஜியஸின் தலைமையின் கீழ் வந்தது.

பெருமைமிகு செஃபலீனியாவில் இருந்து வந்த படைப்பிரிவுக்கு ஒடிஸியூஸ் தலைமையேற்றிருந்தான். இதாகா, நடுங்கும்

இலைகள் கொண்ட நெரிட்டோஸ், க்ரொசீலியா, கரடுமுரடான ஈஜிலிப்ஸ், காடுகள் நிரம்பிய ஜகிந்தஸ், சாமோஸ், மற்றும் தீவுகளுக்கு எதிரில் அமைந்த முக்கிய நிலப்பகுதி ஆகியவற்றில் இருந்து இப்பிரிவின் வீரர்கள் வந்திருந்தனர். ஜீயூஸுக்கு இணையான ஞானவானான ஒடிஸியூஸ் இதன் தளபதியாக இருந்தான். சிவப்பு வண்ணமடிக்கப்பட்ட வில் வரையப்பட்ட பன்னிரண்டு கப்பல்களில் வந்த இப்படை ஒடிஸியூஸின் உத்தரவின் கீழ் இருந்தது.

இடோலியாவிலிருந்து வந்திருந்த படைப்பிரிவுக்கு ஆன்ட்ர மோனின் மகனான தாவோஸ் தலைமை வகித்தான். ப்ளீரான், ஓலினஸ், பைலீன், கடல்புர சால்சீஸ், பாறைகள் மிகுந்த காலிடான் ஆகிய இடங்களிலிருந்து இதன் வீரர்கள் வந்திருந் தனர். தாராள மனம் படைத்த ஈனியாஸின் மகன்கள் இறந்து விட்டிருந்தபடியால், இப்பிரிவுக்கு தாவோஸ் தலைமை தாங்கினான். ஈனியாஸும் இறந்திருந்தான். செம்பொன் நிறத் தலையன் மெலீகரும் இறந்திருந்தான். மெலீகர் மீதுதான் ஈட்டோலிய தலைமை முழுவதும் முன்னர் இருந்தது. நாற்பது கறுப்புக் கப்பல்களில் இப்படைப்பிரிவு தர்வோஸின் தலைமை யின் கீழ் வந்தது.

க்ரீட்டியிலிருந்து வந்த படைப்பிரிவுக்கு மகா ஈட்டியெறி மன்னன் இடொமீனியஸ் தலைமை வகித்தான். நாசஸ், முறையாக மதில்கள் எழுப்பப்பட்ட கோர்ட்டின் லிக்டஸ், மிலீட்டஸ், வெண்மையான லைகாஸ்டஸ், ஃபீஸ்டஸ் மற்றும் ரைட்டியான் ஆகிய நகர்களிலிருந்து இப்படைப்பிரிவின் வீரர்கள் வந்திருந்தனர். இந்த ஊர்கள் யாவும் வரவேற்பதில் புகழ் பெற்றவை. மற்ற பிரிவினர் நூறு ஊர்களைக் கொண்ட க்ரீட்டியி லிருந்து வந்திருந்தனர். மகா ஈட்டிஎறி மன்னன் இடொமீனி யஸும் கொலைவெறி மிக்க போர்க்கடவுளான ஏரிஸையொத்த மெரியோனிஸும் இப்படைகளுக்குத் தலைமை வகித்தனர். இப்படைப்பிரிவு இந்த இரு தலைவர்களின் கீழ் வந்தது.

பெருமைமிகு ரோடிஸிலிருந்து வந்த படைப்பிரிவு ஒன்பது கப்பல்களில் ஹெராக்லிஸின் மகனும் உயரமானவனும் அழகானவனுமான லிபோலிமஸால் கொண்டுவரப்பட்டது. லிண்டஸ், அயாலிசஸ், வெண்ணிற கமீரஸ் ஆகிய மூன்று தனித்தனி தீவுப்பகுதிகளில் ரோடியர்கள் வசித்தனர். அஸ்ட்டி யோக்கியாவுக்கும் ஹெராக்லியஸுக்கும் பிறந்த புகழ்பெற்ற

ஈட்டியெறி வீரன் லிபோலிமஸ் இதற்கு தலைமை வகித்தான். எஃபீரியிலிருந்து செலிஸ் ஆற்றின் வழியாக பல குலத்தலைவர் களின் அரண்களை வென்று, அஸ்ட்டியோக்கியாவை தூக்கிச் சென்றான் ஹெராக்லியஸ். திரின்ஸ் அரண்மனையில் வளர்ந்து இளைஞனான லிபோலிமஸ், போர்க்கடவுளின் ஆதரவாளனாக இருந்த தன் தந்தையின் மாமனான லிசிம்னியஸைக் கொன்றான். அப்போது லிசிம்னியஸ் முதியவனாக இருந்தான். உடனே லிபோலிமஸ் சில கப்பல்களைக் கட்டிக்கொண்டு, ஒரு பெரும் படையைத் திரட்டிக்கொண்டு, கடல்வழியாக தப்பித்தான். ஏனெனில் பலவானான ஹெராக்லியஸின் மற்ற மகன்களாலும் பேரன்களாலும் கடும் தொல்லைக்கு அவன் உட்படுத்தப் பட்டிருந்தான்.

இப்படி அகதியாக, கடும் துன்பங்களுக்குப் பிறகு ரோடிஸ் வந்து சேர்ந்தான் அவன். அவனுடைய மக்கள் மூன்று மாவட்டங்களில் தத்தம் குலப்பிரிவின்படி தங்கிக் கொண்டனர். க்ரோனஸின் மகனும், மனிதர்களுக்கும் கடவுள்களுக்கும் தலைவனான ஜீயூஸ் அவர்களுக்கு ஆதரவு கொடுத்தான். அபரிமிதமான செல்வத்தை அவர்களுக்கு வாரிவழங்கினான்.

நேர்த்தியான மூன்று கப்பல்களில் சிமியிலிருந்து ஒரு படைப் பிரிவு நிட்ரியாஸால் கொண்டுவரப்பட்டது. அக்லியாவுக்கும் தலைவன் சாரோபஸுக்கும் பிறந்த நிட்ரியாஸ், இலியம் நகருக்கு வந்த கிரேக்கர்களிலேயே மிக அழகானவன். இணை யற்ற அக்கிலிஸ் மட்டும் இதில் விதிவிலக்கு. ஆனால், நிட்ரியாஸ் பலவீனமானவனாக இருந்தான். அவனுடைய படையும் பெரிதல்ல.

கோஸிலிருந்து வந்திருந்த படைப்பிரிவின் வீரர்கள் யூரிபைலஸ் நகரிலிருந்தும், நிசிரஸ் தீவு, க்ரபாத்தஸ், காசஸ் மற்றும் காலிட்னியன் தீவுகளிலிருந்தும் வந்திருந்தனர். ஹெராக்லிஸின் மகனான தலைவன் தெஸாலஸின் இரண்டு மகன்களான ஃபெய்டிப்பஸ், ஆன்டிப்பஸ் ஆகிய இருவரின் தலைமையின் கீழ் இயங்கியது இப்படை. இது முப்பது பள்ளத்தாக்குக் கப்பல்களில் வந்திறங்கியது.

மிர்மிடனிலிருந்து ஒரு படைப்பிரிவு வந்திருந்தது. அதன் வீரர் கள் பெலாஸ்ஜிய அர்கோஸ், ஆலஸ், அலோப்பி, ட்ராக்கிஸ், ஃபிதியா, அழகிய மகளிரைக் கொண்ட ஹெல்லாஸ் ஆகிய

இடங்களில் வசித்தனர். அவர்கள் மெர்மிடன்கள், ஹெல்லனிகள், அகேயன்கள் என்று அழைக்கப்பட்டனர். அவர்களது ஐம்பது கப்பல்களும் அக்கிலிஸின் தலைமையில் கொண்டு வரப்பட்டது. ஆனால், போர் செய்ய அவர்களை ஒழுங்கு படுத்திச் செல்ல யாரும் இல்லாததால் அவர்கள் போரில் சப்தத்தையும் உக்கிரத்தையும் மறந்துவிட்டிருந்தனர். ஏனெனில், கடவுளையொத்த விரைவுப்பாத அக்கிலிஸ் தனது கப்பல்களின் பக்கமாய் ஆர்வமற்றுக் கிடந்தான். லிர்னஸ்ஸஸ் நகரிலிருந்து தனது கடுமையான முயற்சியின் மூலம் தான் பெற்ற பரிசான அழகிய கன்னம் கொண்ட அழகி ப்ரிசிஸை எண்ணி கோபம் கொண்டிருந்தான் அவன். லிர்னஸ்ஸஸ் நகரையும் தீபியின் மதில்களையும் வீழ்த்தியவன் அவனே. செலீபஸின் மகனான தலைவன் யூனஸின் மகன்களாகிய மைனிஸ் மற்றும் எப்பிஸ்ட்ரோப்பஸ் ஆகிய இரு ஈட்டியெறி வீரர்களை வீழ்த்தியவனும் அவனே. அவன் இப்பொழுது அங்கே அந்த அழகிக்காக ஏங்கிக் கிடந்தான். ஆனால், விரைவிலேயே அவன் வீறுகொண்டு எழுவான்.

ஃபைலேஸியிலிருந்து ஒரு படைப்பிரிவு வந்திருந்தது. அதன் வீரர்கள் ஃபைலேஸில் இருந்தும், பூக்கள் நிறைந்த பைராசஸ், டிமீட்டரின் தேவாலயம், செம்மறியாடுகளின் தாயான அய்ட்டன் (ஆற்றுப்பகுதி), கடல்பகுதியான ஆன்ட்ரான், புல் நிறைந்த டீலியஸ் ஆகிய பகுதிகளில் இருந்தும் வந்தனர். போரையொத்த ப்ரொட்டீசிலாஸ் அவர்களை வழி நடத்தினான். ஆனால் கறுப்பு பூமி அவனை இப்பொழுது ஏற்றுக்கொண்டுவிட்டது. எனவே அவன் மனைவி ஃபைலேஸில் விடப்பட்டாள். புண்பட்ட கன்னங்களுடனும் பாதி கட்டப்பட்ட வீட்டுடனும் கடல் தாண்டிச் சென்ற கிரேக்கர்களில் முதலாமவன் அவன்தான். ஆனால், அப்படிச் செய்யும்போதுதான் ஒரு ட்ரோஜன் அவனைக் கொன்றான். ஆனால், அவனைப் பின்பற்றியவர்களுக்கு ஒரு தலைமை கிடைக்காமல் போகவில்லை. போர்க்கடவுளின் ஆதரவாளனும், ஃபிலாகசின் மகனான இஃபீகசின் மகனும், ஏராளமான செம்மறியாடுகளைக் கொண்டவனுமாகிய பொடார்சஸ் அவர்களின் தலைவனானான். இந்த வள்ளல் மனம் கொண்ட ப்ரொடீசிலாஸின் சகோதரனாவான் பொடார்சஸ். போரையொத்த ப்ரொடீசிலாஸ் தன் சகோதரனைவிட மூத்தவனும் சிறப்பானவனுமாவான். எனவே, அருமையான ப்ரொட்டீசிலாஸை அவர்கள் இழந்திருந்தாலும் இந்தப்

படைக்குத் தலைவன் இல்லாமல் போகவில்லை. நாற்பது கறுப்புக் கப்பல்களில் இந்த படைப்பிரிவு பொடார்சஸின் தலைமையில் வந்திறங்கியது.

ஃபிரேயிலிருந்து வந்திருந்த படைப்பிரிவின் வீரர்கள் போபியன் ஏரிப்பகுதி, போபி, க்ளாஃபைரே மற்றும் நன்றாகக் கட்டப்பட்ட அயோல்கஸ் ஆகிய பகுதிகளிலிருந்தும் வந்திருந்தனர். அட்மீட்டஸின் மகனான யுமீலியஸ் பதினோறு கப்பல்களில் அவர்களை அழைந்து வந்திருந்தான். பீலியாஸின் அழகில் சிறந்த மகளான அரசியையொத்த அல்செஸ்ட்டிஸ் அவனை அட்மீட்டஸுக்குப் பெற்றிருந்தாள்.

ஏழு கப்பல்களில் ஒரு பெரும் படையை மகா வில்லாளியான ஃபிலொக்ட்டீட்டிஸ் கொண்டு வந்திருந்தான். அதன் வீரர்கள் மெத்தோனி, தவ்மாசி, மெலீபியா, கரடுமுரடான ஆலிஜான் ஆகிய இடங்களிலிருந்து வந்திருந்தனர். ஒவ்வொரு கப்பலிலும் அம்பெய்வதில் பயிற்சி பெற்ற ஐம்பது துடுப்புப் போடுபவர்கள் இருந்தனர். ஆனால், கிரேக்கப் படைகளால் விட்டுவிட்டு வரப்பட்ட ஃபிலோக்ட்டீட்டிஸ் அழகிய தீவான லெம்னோஸில் கடும் வேதனையில் கிடந்தான். அவனை ஒரு கொடிய விஷமுள்ள தண்ணீர்ப் பாம்பு கடித்திருந்தது. ஆனாலும் கப்பல்களில் இருந்த கிரேக்கர்கள், தலைவன் ஃபிலோக்ட்டீட்டிஸ் பற்றி நினைக்கத்தான் செய்தனர். ஆனாலும் அவனைப் பின்பற்றியவர்களுக்கு ஒரு தலைவன் கிடைக்காமலில்லை. ஆய்லியஸின் முறைதவறிப் பிறந்த மகனான மெடன் அவர்களுக்குத் தலைமை ஏற்றான். நகரங்களை அழிக்கும் ஆய்லியஸுக்கு அவனை ரெனி பெற்றுக்கொடுத்திருந்தாள்.

ட்ரிஸியிலிருந்தும், மேல்தளங்கள் கொண்ட மலைகளைக் கொண்ட இதோமில் இருந்தும், ஒக்கேலிய யுரீட்டஸின் நகரான ஒக்கேலியாவிலிருந்தும் வந்த படைப்பிரிவுக்கு அஸ்க்லிபியஸின் இரண்டு மகன்களும், வியத்தகு முறையில் நோய்களைக் குணப்படுத்துவோருமாகிய பொடாலேரியஸ் மற்றும் மக்காவோன் ஆகிய இருவரும் தலைமை ஏற்றனர். முப்பது பள்ளத் தாக்குக் கப்பல்களில் இந்தப் படை வந்தது.

யுவாமெனின் அருமை மகனாகிய யூரிபைலஸின் தலைமையில் அர்மீனியன், ஹைபேரியாவின் ஓடைப்பகுதி, அஸ்ட்டீரியன், டைட்டானஸின் வெள்ளைக் கோபுரங்களின் பகுதி ஆகியவற்றி

லிருந்து ஒரு படைப்பிரிவு வந்தது. நாற்பது கறுப்புக் கப்பல்களில் இந்த படைப்பிரிவு யூரிபைலஸின் தலைமையில் வந்தது.

அர்கிஸ்ஸா, கிர்ட்டோன், ஆர்தி, ஹெலோன், வெள்ளை நகரான அலூசன் ஆகியவற்றிலிருந்து வந்த படைப்பிரிவு, பாலிபீட்டிஸ், லியோண்ட்டியஸ் ஆகியோரின் தலைமையின் கீழ் வந்தது. அவர்கள் இருவருமே லாபித்துகள். நித்திய ஜீயூஸின் மகனான பெய்ரித்தூசின் மகன்தான் பாலிபீட்டிஸ். புகழ்பெற்ற ஹிப்பொடேமியா பாலிபீட்டிஸுக்கு அவனைக் கருவுற்றாள். அந்த நாளில் பாலிபீட்டிஸ் சென்ட்டார்களைப் பழிதீர்த்துக் கொண்டிருந்தான். வனங்களில் வாழ்ந்துகொண்டிருந்த அநாகரீக மானவர்கள் சென்ட்டார்கள். பீலியான் மலையிலிருந்து அவர்களை விரட்டி, ஈத்திகஸின் கையில் அவர்களை ஒப்படைத்தான் பாலிபீட்டிஸ். பாலிபீட்டிஸ் தன் தலைமையை லியோன்ட்டியஸோடு பங்கிட்டுக் கொண்டான். லியோன்ட்டிய ஸானவன், கேனியஸின் மகனான பெருமை கொண்ட கோரோனஸின் மகனாகவும் போர்க்கடவுளின் ஆதரவாள னாகவும் இருந்தான். நாற்பது கறுப்புக் கப்பல்களில் இந்த படைப்பிரிவு இந்த இரு தலைவர்களின் கீழ் வந்தது.

சைஃபஸில் இருந்து கூனியஸ், ஒரு படைப்பிரிவை இருபத் திரண்டு கப்பல்களில் கொண்டுவந்தான். அதில் எனியன்களும் உறுதியான பெராபியன்களும் இருந்தனர். பெராபியன்கள் தங்கள் வீடுகளை குளிர்காலத்துக்குரிய டொடோனாவில் கட்டிக் கொண்டனர். டைட்டாரசஸ் ஆற்றின் பக்கமிருந்த இன்பம்தரும் நிலங்களை உழுதனர். இந்த ஆறு தன் அழகான ஓடைகளை பீனியஸில் கொண்டுபோய் கொட்டியது. ஆனால் அதன் சிறிய வெள்ளி நீர்ச்சுழிகளோடு கலக்காமல், அதன் போக்கில் அதன் மீது ஒலிவ எண்ணெய்போல மிதந்தது. அச்சமூட்டும் சத்தியங் கள் செய்யப்படும் (கீழ் உலகத்தில் இருக்கும்) ஸ்டிக்ஸ் ஆற்றின் ஒரு பகுதியாகவும் அது இருந்தது.

டெந்த்ரிடனின் மகனான ப்ரோதூஸின் தலைமையில் மேக்னீட்டு களின் படைப்பிரிவு வந்தது. பீனியஸ் ஆற்றை ஒட்டிய பகுதியிலும் நடுங்கும் இலைகளைக் கொண்ட பீலியான் மலைப் பகுதியிலும் மேக்னீட்டுகள் வாழ்ந்தனர். இவர்களைத்தான் விரைவான ப்ரோதூஸ் வழிநடத்தினான். நாற்பது கறுப்புக் கப்பல்களில் இந்த படைப்பிரிவு ப்ரோதூஸின் தலைமையில் வந்தது.

இவர்கள்தான் கிரேக்கப் படைகளின் தலைவர்களும் தளபதி களுமாவர். அகமெம்னனுடனும் மெனிலயஸுடனும் வந்த கிரேக்கர்கள் மற்றும் குதிரைகளில் தலைசிறந்தவர் யார் யார், தலை சிறந்தது எது எதுவென, ம்யூஸே! நீ இப்பொழுது எனக்குச் சொல்வாயாக.

குதிரைகளிலெல்லாம், யுமீலியஸ் ஓட்டிவந்த அட்மீட்டஸின் பெண் குதிரைகள்தான் மிகச்சிறந்தவை. பறவைகளைப்போல வெகு வேகமானவை அவை. தோலின் நிறத்திலும் வயதிலும் அவை சமமானவை. மிகச்சரியாக ஒரேமாதிரியான உயரம் கொண்டவை. வெள்ளி வில்லின் தலைவன் அப்போலோ வினால் இவை பெரியாவில் வளர்க்கப்பட்டவை. எதிரி அணிகள் மத்தியில் இவை பேரச்சம் ஏற்படுத்தவல்லவை.

அக்கிலிஸ், சினம் காரணமாக விலகி இருந்த காரணத்தால் வீரர்களில் டிலாமனின் மகன் அஜாக்ஸ்தான் தலைசிறந்தவன். பீலியூஸின் மகனான அக்கிலிஸ்தான் ஈடிணையற்றவன். அவன் ஓட்டிய குதிரைகள்தான் மிகச்சிறந்தவை. ஆனால், அவன் இப்பொழுது கிண்ணி மூக்குக் கப்பல்களருகில் சாய்ந்து கிடக்கிறான். அத்ரியூஸின் மகனான மக்கள் மேய்ப்பன் அகமெம் னன் மீது சமாதானப்படுத்த முடியாத அளவு சினம் கொண்டுள்ளான். இதற்கிடையில் அவனது வீரர்கள் கடற் கரையோரமாக அம்புகளையும், எறிவட்டுகளையும், ஈட்டி களையும் .எறிந்து தங்களை சந்தோஷப்படுத்திக் கொண்டி ருந்தனர். குதிரைகள் தம் தேர்களின் அருகில் சும்மா நின்றுகொண்டிருந்தன. சதுப்பு நிலங்களில் இருந்து கொண்டு வரப்பட்ட புல்லை மென்றுகொண்டு, தன் தலைவர்களின் தேர்கள் அருகே நின்று கொண்டிருந்தன. போரைக் காதலிக்கும் தம் தலைவனின்றி, வீரர்களும் இங்குமங்கும் நோக்கமின்றி முகாமைச் சுற்றி திரிந்து கொண்டிருந்தனர், சண்டை எதுவும் செய்யாமல்.

அந்த நிலம் முழுவதையும் நெருப்பு மேய்ந்தது போல கிரேக்கர்கள் முன்னேறினர். இடியில் இன்பமுறும் ஜீயூஸ் சினமுறும்போதும், ட்டைஃபியஸ் என்ற அசுரன் உறங்குவதாக மக்கள் கூறும் அரீமிய மலைகளில் அசுரன் ட்டைஃபியஸை சாட்டையால் அடிக்கும்போதும் செய்வதுபோல, வீரர்களின் கீழே பூமி முனகியது. வீரர்கள் விரைவாக முன்னேற முன்னேற முனகியது பூமி.

புயல்மேகத்தைச் செலுத்தும் ஜீயூஸ், காற்றைப் போல தூது செல்லும் செல்லும் விரைவு தேவதை அய்ரிஸிடம் இந்த கெட்ட செய்தியை ட்ரோஜன்களிடம் சொல்லிவருமாறு அனுப்பினான். இளையவரும் முதியவரும் ஒன்றாக அங்கே ப்ரியமின் நெடுங் கதவுகளின் கீழ் கூடியிருந்தனர். விரைவுப்பாத அய்ரிஸ் அங்கு வந்து ப்ரியமின் மகன் பொலிட்டிஸின் குரலில் பேசினாள். அவன் வேகத்துக்குப் புகழ்பெற்றவன் என்பதால், கிழவன் எசிட்டிஸின் கல்லறைக்கு மேலே, எதிரிகளைக் கண் காணிப்பதற்காக ட்ரோஜன்களுக்காக அனுப்பப்பட்டிருந்தான். கிரேக்கக் கப்பல்கள் தாக்குதல் ஏதும் தொடங்குகிறதா என்று காத்துக்கொண்டிருந்தான். விரைவுப்பாத அய்ரிஸ் அவன் குரலில் சொன்னாள்:

‘மதிப்புக்குரிய தலைவனே! அமைதிக்காலத்தில் செய்வது போலவே இப்பொழுதும் நீ முடிவில்லாமல் பேசுவதில் நாட்டம் கொண்டிருக்கிறாய். ஆனால், தவிர்க்கமுடியாத யுத்தம் நம்மீது சுமத்தப்பட்டுள்ளது. நானே பல போர்களில் பங்கெடுத் துள்ளேன். ஆனால், இவ்வளவு பெரிய அஞ்சத்தக்க படையை நான் பார்த்ததேயில்லை. அவர்கள் நிலப்பகுதிகளில் முன்னேறி வந்துகொண்டுள்ளார்கள் நகரங்களில் வந்து சமர் செய்ய! காடுகளில் இலைகளைப் போல அல்லது கடலின் மண்துகள் களைப் போல. ஹெக்டர்! நான் சொல்வதுபோல செய் என்று எல்லாரையும்விட உன்னை நான் கேட்டுக்கொள்கிறேன். நகரில் ப்ரியமுக்கு ஆதரவாளர்கள் அனேகம் உண்டு. ஆனால், சிதறிய அந்நியர்கள் அனைவரும் வேறுவேறு மொழிகளைப் பேசுகி றார்கள். ஒவ்வொரு கூட்டத்தினருக்கும் அவர்களது தளபதிகளே உத்தரவுகள் கொடுக்கட்டும்; அவர்களை ஒருங்கிணைத்து, போருக்கு அழைத்து வரட்டும்.’

அவள் அப்படிப் பேசியதும் ஒரு தேவதையின் குரலது என ஹெக்டர் புரிந்துகொண்டான். உடனே கூட்டத்தைக் கலைந்து செல்ல உத்தரவிட்டான். அனைவரும் ஆயுதம் தரிக்க விரைந் தனர். எல்லாக் கதவுகளும் திறக்கப்பட்டன. படை முழுவதும் வெளியே புறப்பட்டது காலாட்படைகளும் ரதப்படை களுமாக.

நகருக்கு வெளியே, சமவெளிக்குக் கொஞ்சதூரத்தில் ஒரு உயர்வான மேடு இருந்தது. அதனைச் சுற்றி எல்லா பக்கமும்

திறந்தவெளியாக இருந்தது. அதனை மனிதர்கள் ப்ராம்பிள் மலை என்று அழைத்தனர். ஆனால் நித்திய ஜீவன்கள் அதை, மிரீனியின் நடனக் கல்லறை என்றழைத்தனர். அந்த இடத்தில்தான் ட்ரோஜன்களும் அவர்களது ஆதரவாளர்களும் போருக்காக அணிவகுத்து நின்றனர்.

ப்ரியமின் மகனும் மின்னும் தலைக்கவசமும் கொண்டவனாகிய மகா ஹெக்டர், ட்ரோஜன்களின் அணிக்குத் தலைவனாக இருந்தான். அவனோடு, தலைசிறந்த மிக அதிக எண்ணிக்கை கொண்ட வீரர்கள் சென்றனர். அவர்களனைவருமே ஈட்டி எறிவதில் விற்பன்னர்கள்.

டார்டீனியன்கள் அங்க்கீசஸின் அருமை மகன் ஈனியாஸின் தலைமையில் இயங்கினர். தேவதை அஃப்ரோடைட்டி, அங்க்கீசஸுக்கு பெற்றுக் கொடுத்த மகன் ஈனியாஸ். ஒரு தேவதை ஒரு மானிடனோடு அய்டா மலைச்சரிவுகளில் படுத்துறங்கி பெற்ற குழந்தை அவன். ஈனியாஸ் மட்டும் தனியான தலைவனாக இல்லை. அவனோடு ஆன்ட்டினரின் இரு மகன்களான அர்க்கிலோகஸும் அகாமஸும் இருந்தனர். அவர்கள் இருவருக்கும் எல்லாவிதமான சண்டைகளிலும் அனுபவம் இருந்தது.

அய்டா மலையின் அடிவாரப் பகுதிகளில் ஜெலீயா என்ற மக்கள் வாழ்ந்தனர். ஈசிபஸ் நதியில் கறுப்பு நீரைக் குடித்து வந்த அவர்கள் செழிப்பான ட்ரோஜன் குலத்தைச் சேர்ந்தவர்கள். லைகேயனின் மகன் பான்டாரஸ், அந்த வீரர்களின் படைக்கு, தலைவனாக இருந்தான். அவனுடைய வில் அவனுக்கு அப்போலாவால் பரிசாக அளிக்கப்பட்டதாகும்.

அட்ரெஸ்ட்டியா, அப்பீசஸ், பிட்டியா, ட்டெரியாவின் செங்குத் தான சரிவுகள் ஆகிய இடங்களிலிருந்து வந்த வீரர்களுக்கு, சணல் நார்த்துணியால் மேலங்கி அணிந்த ஆம்ஃபியசும் அட்ரெஸ்டஸும் தலைமை தாங்கினர். இருவரும் பெர் கோட்டைச் சேர்ந்த மெரோப்ஸின் மகன்களாவர். மெரோப்ஸ் தனது நாள்களில் திறமை வாய்ந்த முன்னறிவிப்பாளனான இருந்தான். கொலைக்களங்களுக்குள் செல்லக் கூடாதென்று தன் மகன்களை அந்நாள்களில் அவன் தடுத்திருந்தான். ஆனால், அவன் சொன்னதை அவர்கள் கேட்கவில்லை. மரணத்தின் பேய்கள் அவர்களை அழைத்துச் சென்றன.

பெர்கோட்டி, ப்ராக்ட்டியஸ், செஸ்ட்டஸ், அபிடஸ், மேலும் புனித அரிஸ்பி ஆகிய இடங்களிலிருந்து வந்த வீரர்களின் படைக்கு ஹிர்ட்டாகஸின் மகன் ஆசியஸ் தலைமை தாங்கி னான். செலிஸ் ஆற்றுப் பகுதியின் பக்கமாய் அரிஸ்பியிலிருந்து அவனுடைய பெரிய பளபளப்பான குதிரைகள் அவனை அங்கு கொண்டுவந்திருந்தன.

செழிப்பான லாரிஸாப் பகுதியில் வாழ்ந்த பெலாஸ்ஜிய இனத்து ஈட்டியெறி வீரர்களின் தலைவனாக ஹிப்போதூஸ் இருந்தான். போர்க்கடவுளின் ஆதரவாளனான பைலீயஸ், ஹிப்போதூ ஸுக்குத் துணையாகச் சேர்ந்திருந்தான். அவர்கள் இருவரும் ட்யூட்டாமஸின் மகனான பெலாஸ்ஜிய லீதஸின் மகன்களாவர்.

விரைந்தோடும் ஹெல்லெஸ்பாண்ட் நதியின் கரையில் வாழும் த்ரேசியர்களை, அகாமஸும் வீரன் பெய்ரோஸும் வழிநடத்தி வந்தனர்.

போரைப் போன்ற சிசோனஸை, யுஃபீமஸ் வழிநடத்தினான். அவன் சியாஸின் மகனான ஒலிம்பஸ் மலையில் வளர்ந்த த்ரோஜீனஸின் மகனாவான்.

வளைந்த வில்களைக் கொண்ட ப்யோனியர்களை, பைராக்மிஸ் வழிநடத்தி வந்தான். அவர்கள் வெகுதூரத்திலிருந்து அமிடானி லிருந்தும், அகன்ற ஆறான ஆக்சியஸ் நதிக்கரையிலிருந்தும் வந்திருந்தனர். அதன் தண்ணீர்தான் அகில உலகிலும் பாய்ந்தோடும் நதி நீரிலெல்லாம் மிகவும் அழகானது.

காட்டுக் கோவேறு கழுதைகள் நிறைந்த எனீட்டி பகுதியின் பாஃப்லகோனியர்களை, ஆண்மைமிகு பைலிமீனிஸ் வழி நடத்தினான். செசாமனைச் சுற்றிய சைட்டோரஸ் பகுதியில், அழகான வீடுகளில் பார்த்தீனியஸ் ஆறு பக்கமாக, க்ரோம்னா, ஈஜியாலஸ் மற்றும் நெடிதுயர்ந்த எரிதீனி ஆகிய பகுதிகளில் எனீட்டியர் வாழ்ந்தனர்.

வெள்ளியின் நாடாகிய தூரதேச அலிபியில் வாழ்ந்த ஹாலி ஜோனியர்களை, ஓடியஸும் எப்பிஸ்டோஃபஸும் வழி நடத்தினர்.

மைசியர்களுக்கு க்ரோமிஸும் என்னோமஸும் தலைமை தாங்கினர். என்னோமஸ் ஒரு குறிசொல்பவனாக இருந்தான்.

ஆனால், பறவைகளை வைத்து அவன் சொன்ன குறிகளெல்லாம் அவனை சாவிலிருந்து காப்பாற்ற முடியவில்லை. ஆற்றுப் படுகையில், ட்ரோஜன்களுக்குப் பேரழிவு கொடுத்துக் கொண்டு இருக்கையில், விரைவுப்பாத அக்கிலிஸின் தாக்குதலுக்கு இலக்காகி இறந்து போனான் அவன்.

தூரதேசமான அஸ்கேனியாவிலிருந்து வந்த ஃப்ரிஜியர்களை ஃபோர்சிஸும் கடவுளையொத்த அஸ்கானியஸும் வழி நடத்தினர்.

மேயோனியர்களை மெஸ்தலஸும் ஆன்டிஃபஸும் வழிநடத்தி னர். இருவரும் ட்டாலிமீனிசின் மகன்களாவர். கைகிய ஏரிதான் அவர்களது அம்மா. மோலஸ் பகுதியைத் தங்கள் ஊராகக் கொண்ட மேயோனியர்களுக்கு இந்த இருவரும் தலைமை தாங்கினர்.

கிரேக்க மொழி பேசாத காரியர்களுக்கு, நாஸ்டஸ் தலைமை தாங்கினான். மைலீட்டஸ், காடுகள் அடர்ந்த ஃப்தீரஸ் மலை, மியாண்டர் ஓடைகள், உயர்ந்த சிகரம் கொண்ட மைசீ மலை ஆகிய பகுதிகளில் அவர்கள் வாழ்ந்தனர். ஆம்ஃபிமேக்கஸும் நாஸ்டஸும் கொண்டுவந்த மக்கள் இவர்களாவர். ஆம்ஃபி மேக்கஸுமநாஸ்டஸும் நோமியானின் அருமை மகன்களாவர். ஆம்ஃபிமேக்கஸ் ஒரு பெண்ணைப் போல தங்க நகைகள் அணிந்து போருக்குச் சென்றான். முட்டாள். ஆனால் ஒரு அசிங்கமான முடிவைத் தழுவுவதிலிருந்து அது அவனைக் காப்பாற்றவில்லை. விரைவுப்பாத அக்கிலிஸுக்கு அவன் வீழ்ந்தான். ஆற்றில், போரின் உருவம் கொண்ட அக்கிலிஸ் அந்தத் தங்கங்களுடன் சென்றான்.

சர்ப்பிடானும் இணையற்ற க்ளாகஸும் தூரதேசமான லைசியாவிலிருந்தும் சிறு நீர்ச்சுழிகளையுடைய சாந்தஸ் ஆற்றுப்பகுதியிலும் வசித்த லைசியர்களை வழிநடத்தினர்.

# மற்போரும், கிரேக்கர்களைப் பற்றிய ட்ரோஜன்களின் பார்வையும்

### *கதைச் சுருக்கம்*

***வரிகள் 1 – 120***

*படைகள் போரிட முன்னேறுகின்றன. போரை முடிவுக்குக் கொண்டுவரும் எண்ணத்துடன், தன்னோடு மற்போர் புரிய வரும்படி மெனிலயஸை அழைக்கிறான் பாரிஸ். அதற்கான திட்டத்தை ஹெக்டர் அறிவிக்கிறான். இரு பக்கங்களிலும் அதை ஏற்றுகொள்கின்றனர்.*

***வரிகள் 121 – 244***

*நடக்கப் போகும் மற்போர் பற்றி இலியத்திலிருக்கும் ஹெலனுக்கு, தேவதை அய்ரிஸ் அறிவிக்கிறாள். அவள் இலியம் நகரின் மதில்சுவர்களின் பக்கம் வந்து, சில கிரேக்கக் கதாநாயகர் களின் பெருமைகளை ப்ரியமுக்கு எடுத்துரைக்கிறாள்.*

***வரிகள் 245 – 380***

*சத்தியப் பிரமாணங்கள் செய்யப்படுகின்றன. மற்போர் தொடங்குகிறது. வெற்றிபெறுவதிலிருந்து மெனிலயஸை ஏமாற்றி, பாரிஸைக் காப்பாற்றுகிறாள் தேவதை அஃப்ரோடைட்டி.*

***வரிகள் 381 – 461***

*தயங்கும் ஹெலனை வற்புறுத்தி, பாரிஸோடு சென்று உடலுறவு கொள்ளும்படி செய்கிறாள் அஃப்ரோடைட்டி. ஆனால், மற்போரின் முடிவில் வெற்றி, மெனிலயஸுக்கே கிடைத்ததாக அறிவிக்கிறான் அகமெம்னன்.*

## மற்போரும், கிரேக்கர்களைப் பற்றிய ட்ரோஜன்களின் பார்வையும்

ஒவ்வொரு வீரனும் தத்தம் படைத்தலைவர்களின்கீழ் போருக்குத் தயாரானபோது, குளிர்காலமும் அதன் பயங்கரமான பெருமழையும் தொடங்கியவுடன் பறந்து சென்று, வானத்தி லிருந்து வீறிட்டலறிக்கொண்டு தரையிறங்கும் நாரைகளைப் போல, பெரும் வீறிடல் சப்தங்களுடன் ட்ரோஜன்கள் முன்னேறி வந்தனர். கத்திக்கொண்டே, மேலிருந்து தங்களது கொடுமை யான தாக்குதலைத் தொடக்கியவர்களாக, கடல் சேரும் நதிகளை நோக்கி முன்னேறினர் பிக்மிகளுக்கு மரணத்தையும் அழிவையும் தருவதற்கு! ஆனால், கிரேக்கர்கள் அமைதியாக முன்னேறினார்கள். அவர்களது ஒவ்வொரு மூச்சிலும் வீரம் இருந்தது. ஒருவரை ஒருவர் விட்டுக்கொடுக்காத உறுதி ஒவ்வொருவர் உள்ளத்திலும் நிறைந்திருந்தது.

தெற்குக் காற்று மலை உச்சிகளில் பனிபோர்த்தி மூடுவதுபோல, அவர்கள் சமவெளியை நோக்கி அணிவகுத்து அடிகளெடுத்து வைக்க வைக்க, தூசியின் மேகம் அடர்த்தியாக மேலே கிளம்பியது. அது மேய்ப்பனுக்கு கெட்ட செய்தியாக, ஆனால் திருடனுக்கு இரவைவிட வசதியானதாக, கல்லெறி தூரத்துக்கு மேல் ஒருவன் பார்க்க முடியாததாக இருந்தது.

இரு படைகளும் தம் எல்லைகளுக்குள் வந்து நின்றன. ட்ரோஜன் அணிகளிலிருந்து பாரிஸ் முன்னேறி வெளியில் வந்தான். சிறுத்தையின் தோலாலான உடையைத் தன் முதுகில் அணிந் திருந்தான் அவன். அதில் ஒரு வளைந்த வில்லும் ஒரு வாளும் இருந்தன. வெண்கல தலைப்பகுதிகள் கொண்ட இரண்டு

ஈட்டிகளை அவன் சுழற்றிக் காட்டி, கிரேக்கர்களில் தலைசிறந்த ஒருவன், தன்னோடு வாழ்வா சாவா என முடிவு செய்யும் மற்போருக்கு வரமுடியுமா என்று சவால் விட்டான்.

தன்னை நோக்கி அவன் முன்னேறி வருவதைப் பார்த்த கடவுளையொத்த மெனிலயஸுக்கு, விலங்கின் பிணத்தைக் கண்டு அருகே சென்று பார்க்கும்போது அது கிளைக்கொம்புள்ள மான் அல்லது காட்டு ஆட்டின் உடல் என்று கண்டுகொள்ளும் சிங்கத்தைப் போல மகிழ்ச்சி பொங்கியது. பசிகொண்ட அந்தச் சிங்கம் தன் உணவை வெறியோடு விழுங்கும். வேக நாய்களும் இளம் வேட்டைக்காரர்களும் அதை விரட்ட முயன்றாலும் முடியாது. கடவுளையொத்த பாரிஸைப் பார்த்தவுடன், மெனிலயஸும் அப்படித்தான் மகிழ்ந்தான். தனக்குத் தவறிழைத்த ஒருவனுக்கு, பதிலடிகொடுக்கும் நேரம் வந்து விட்டது என்றே அவன் நினைத்தான். முழுமையாக ஆயுத மேந்தியவனாக, உடனே தன் தேரிலிருந்து அவன் கீழே குதித்தான்.

முன்பக்க அணியிலிருந்து மெனிலயஸ் பாய்ந்து வருவதைக் கண்ட கடவுளையொத்த பாரிஸின் இதயம் நம்பிக்கையிழந்து அஞ்ச ஆரம்பித்தது. உடனே அவன் பின்வாங்கி, மரணத்தைத் தவிர்ப்பதற்காக தனது படைப்பிரிவோடு போய் சேர்ந்துகொள்ள முயன்றான். மரங்கள் நிறைந்த காட்டுவழிப் பாதையில் திடீரென ஒரு சர்ப்பத்தைக் காணும் ஒருவன், அதிர்ச்சியுற்று, தொடை நடுங்கிப் பின்வாங்குவதுபோல, கடவுளையொத்த பாரிஸ், வெளுத்துப்போனவனாக பெருமைமிகு ட்ரோஜன்களின் அணியில் போய் மறைந்துகொண்டான், அத்ரியூஸின் மகனான மெனிலயஸுக்கு அஞ்சியவனாக!

அவனைப் பார்த்த ஹெக்டர், பாரிஸைக் கடுமையாகத் திட்டினான்.

'பாரிஸ்! பார்வைக்கு வியத்தகு தோற்றம் கொண்டிருக்கும் நீ, ஒரு கேலியாகிவிட்டாய். காமவெறி பிடித்த நெறிகெட்டவன் நீ. நீ பிறந்தே இருக்கக் கூடாது அல்லது உனக்கு திருமணமே ஆகி யிருக்கக் கூடாது. அப்படி இருந்திருந்தால் எவ்வளவு நல்லது! யாராலும் நம்பப்படாமல் ஓர் அவமானச் சின்னமாக இப் பொழுது நீ இருப்பதைவிட அது எவ்வளவோ மேலாக இருந் திருக்கும். லட்சியத்தில் உறுதியோ வீரமோ இல்லாமல், வெறும்

உடல் அழகுக்காக மட்டும் ஒருவனை நாம் வீரமுதல்வனாக ஆக்கியிருப்பதைப் பார்த்தால் கிரேக்கர்கள் நகைப்பார்கள்.

'ஒரு கூட்டத்தைக் கூட்டிக்கொண்டு, கப்பல்களில் கடல்கடந்து சென்று, வெளிநாட்டவரோடு கலந்து, தூர தேசம் ஒன்றிலிருந்து, அதுவும் போர்வீரர் பரம்பரையிலிருந்து, ஹெலன் எனும் அழகான பெண்ணொருத்தியைக் கவர்ந்து வந்த அதே மனிதன் தானா நீ? இப்பொழுது உன் தந்தைக்கும், உனது ஊருக்கும், உனது மக்களுக்கும் பெரும் சாபமாக மாறிப்போய், நமது எதிரிகளை சந்தோஷப்பட வைத்து, அவமானத்தால் தலை தொங்க இருப்பது நீதானா அது? கடவுளையொத்த மெனிலயஸோடு போர் செய்ய நீ இப்பொழுது தயாராக இல்லையா? அப்படி யானால், தீஞ்சுவைகொண்ட தன் மனைவியைக் கவர்ந்தவனை அவன் என்ன செய்வான் என்பதை சீக்கிரமே நீ தெரிந்து கொள்வாய். உனது யாழோ, அஃப்ரோடைட்டி கொடுத்த பரிசு களோ, உனது அழகிய தலைமயிர்க் கற்றையோ, உன் வசீகர முகமோ - எதுவுமே நீ மண்ணைக் கவ்வும்போது உனக்கு உதவாது இப்பொழுது. ஆனால், ட்ரோஜன்கள் மிகவும் மென்மையானவர் கள். இல்லையெனில், நீ செய்த காரியத்துக்கு அவர்கள் உன்னை எப்போதோ கல்லெறிந்து கொன்றிருப்பார்கள்.

கடவுளையொத்த பாரிஸ் பதில் சொன்னான்:

'ஹெக்டர்! நீ செய்யும் ஏளனத்தில் நியாயமுள்ளது. எல்லாமே எனக்கு வேண்டியதுதான். மரத்தை வெட்டி துண்டாக்கிச் செல்லும் தச்சனின் கையில் உள்ள கோடரியைப் போல, உனது இதயம் களைப்பற்றதாக உள்ளது. தச்சனின் திறமை கப்பலின் மரங்களை வடிவமைக்கிறது. ஆனால், அவனுக்குத் தேவையான பலத்தை அவனுடைய கோடரிதான் கொடுக்கிறது. உனக்கும் அதைப்போலத்தான்! உனது லட்சியத்தின் உறுதி அசைக்க முடியாததாக இருக்கிறது. அதற்காக, தங்கத்தேவதை அஃப்ரோ டைட்டி எனக்குக் கொடுத்த தடுக்க இயலாத வலிமை வாய்ந்த பரிசுகளை எனக்கு எதிராகத் திருப்பாதே. மானிடனான என்மீது, கடவுளர்களே சொரிந்த அந்த புகழ்மிகு பரிசுகள் வெறுக்கத் தக்கவை அல்ல. எந்த மனிதனும் தன் சொந்த முயற்சியால் அவற்றை அடைய முடியாது.

'ஆனால், இப்பொழுது நான் சண்டை செய்ய வேண்டும் என்று நீ விரும்பினால், முதலில் இங்கு மீதியுள்ள ட்ரோஜன்களையும்

கிரேக்கர்களையும் அமரச் செய். நானும் போர்த்திறம் மிக்க மெனிலயஸும் மையப்பகுதியில் சந்தித்து மற்போர் புரிகிறோம். ஹெலனையும் அவளோடு சேர்த்து கொண்டுவந்த பொருள்களையும் என்ன செய்வதென்பதைப் பற்றி ஒரு முடிவுக்கு வரலாம். மற்போரில் வெல்பவனுக்கே, ஹெலனும் அவளோடு கொண்டுவந்தவையும் சொந்தம். மற்றவர் களெல்லாம் எதிரிகளோடு நட்போடு இருப்பதாய் சத்தியம் செய்துவிட்டு, செழிப்பான ட்ராய் நகரத்தில் இருக்க வேண்டியது தான். அழகிய பெண்களைக் கொண்ட தெஸ்ஸாலி, அகேயா ஆகிய ஊர்களுக்கு கிரேக்கர்கள் குதிரை மேய்க்கப் போகலாம்.'

அவன் அப்படிப் பேசியதும் ஹெக்டர் மகிழ்ந்தான். ஆள் நிற்காத இடத்துக்கு வந்து நின்று தன் ஈட்டியின் நடுப்பகுதியைப் பிடித்து ட்ரோஜன்கள் அணிகளைப் பின்னுக்குத் தள்ளினான். அவர்கள் அனைவரும் அமர்ந்தனர். ஆனால் நீள்முடி கொண்ட கிரேக்கர் கள், அம்புகளாலும் கற்களாலும் ஹெக்டரைக் குறிபார்த்து அடிக்கத் தொடங்கினர். அப்போது மக்கள் தலைவன் அகமெம்னன் உரத்த குரலில் சொன்னான்:

'கிரேக்கர்களே! போதும். வீரர்களே நிறுத்துங்கள். மின்னும் தலைக்கவசம் கொண்ட ஹெக்டர் ஏதோ சொல்லவருகிறாற் போல் தோன்றுகிறது.'

அப்படி அவன் சொன்னதும் வீரர்கள் தம் தாக்குதலை நிறுத்தி அமைதியாயினர். பின், ஹெக்டர் இரு தரப்பு வீரர்களையும் பார்த்துச் சொன்னான்:

'ட்ரோஜன்களே! கிரேக்கப் படைவீரர்களே! உங்களுக்கும் எங்களுக்கும் இடையில் பிரச்னையை ஏற்படுத்திய பாரிஸ் என்ன நினைத்திருக்கிறான் என்று நான் சொல்கிறேன், கேளுங்கள். முதலில், இங்கு மீதியுள்ள ட்ரோஜன்களும் கிரேக்கர்களும் அவரவர் ஆயுதங்களை வைத்துவிட்டு அமரவேண்டும். பாரிஸும் போர்த்திறம் மிக்க மெனிலயஸும் மையப்பகுதியில் சந்தித்து மற்போர் புரிவார்கள். ஹெலனையும், அவளோடு சேர்த்து பாரிஸ் கொண்டுவந்த பொருள்களையும் என்ன செய்வதென்பதைப் பற்றி வெல்வபனை வைத்து ஒரு முடிவுக்கு வரலாம். மற்போரில் வெல்பவனுக்கே ஹெலனும் அவளோடு கொண்டுவந்தவையும் சொந்தம். மற்றவர்களெல்லாம் நட் போடு இருப்பதாய் சத்தியம் செய்வோம்.'

அவன் அப்படிச் சொன்னதும் அனைவரும் அமைதிகாத்தனர். பின் போர்முழக்கம் செய்யும் தலைவனான மெனிலயஸ் பேசினான்:

'நான் சொல்லப் போவதையும் கேளுங்கள். பாதிக்கப்பட்ட வர்களில் முதன்மையானவன் இங்கே நான்தான். ஆனாலும் ட்ரோஜன்களும் கிரேக்கர்களும் இன்று அமைதியாகப் பிரிய வேண்டும் என்று நான் ஆசைப்படுகிறேன். பாரிஸுக்கும் எனக்கும் இடையிலான இந்த போராட்டத்தில் நாம் மிகுந்த வேதனைகளைத் தாங்கியுள்ளோம். ஆனால், இதையெல்லாம் துவக்கி வைத்தவன் அவன்தான். காலனும் விதியும் யாரைக் குறிவைத்துள்ளார்களோ அவர் தனது முடிவை அடைந்து கொள்ளட்டும். மற்றவர்களாகவது விரைவிலேயே சமாதான மடையட்டும்.

'முதலில், ட்ரோஜன்களாகிய நீங்கள் இரண்டு ஆடுகளைக் கொண்டுவாருங்கள். ஒரு வெள்ளை ஆண் செம்மறியாடு, ஒரு கறுப்பு பெண் செம்மறியாடு. ஒன்று நிலத்துக்கு பலி; இன்னொன்று சூரியனுக்கு. நாங்கள் இன்னொரு ஆட்டை ஜீயூஸுக்காகக் கொண்டுவருகிறோம். வலிமை வாய்ந்த ப்ரியம், இங்கு வந்து சத்தியப் பிரமாணம் செய்யட்டும். ஏனெனில் அவருடைய இரு மகன்களும் அகந்தை கொண்டவர்கள்; பழி பாவத்துக்கு அஞ்சாதவர்கள். ஜீயூஸ் மீது சத்தியம் செய்து அது மீறப்படுவதை நாங்கள் விரும்பவில்லை. இளைஞர்களை நம்பவே முடியாது. ஆனால் ஒரு முதியவன் பொறுப்பேற்றுக் கொள்ளும்போது, கடந்த காலத்தையும் வருங்காலத்தையும் அவன் கணக்கில் எடுத்துக்கொள்வானாகையால், விளைவு இரு தரப்பினருக்குமே நன்மை பயக்கக் கூடியதாக இருக்கும்.'

இப்படி அவன் பேசியதும், வேதனை தரக்கூடிய சண்டையி லிருந்து தாற்காலிக ஓய்வு கிடைக்கப்போவதை எண்ணி ட்ரோஜன்களும் கிரேக்கர்களும் மகிழ்ந்தனர். தங்கள் தேர்களை அணிவகுத்து நிறுத்தி, அதிலிருந்து இறங்கி, தங்கள் ஆயுதங் களைக் களைந்து, தரையில் அருகருகே வைத்தனர். அவர்களைச் சுற்றி வெற்றிடம் ரொம்ப அரிதாகவே இருந்தது. விரைந்து நகருக்குச் சென்று, இரண்டு ஆடுகளையும் ப்ரியமையும் அழைத்துவர, இரண்டு கட்டியக்காரர்களுக்கும் உடனே உத்தரவிட்டான் ஹெக்டர். உட்குழிந்த கப்பல்களுக்குச் சென்று ஒரு கறுப்பு செம்மறியாட்டைக் கொண்டுவரும்படி, டால்தி

பியஸை அனுப்பினான் தலைவனான அகமெம்னன். கடவுளை யொத்த அகமெம்னனின் உத்தரவுக்கு, உடனே கீழ்ப்படிந்தான் டால்திபியஸ்.

இதற்கிடையில், தூது வந்த அய்ரிஸ் தேவதை வெண்ணிறக் கைகளைக் கொண்ட ஹெலனிடம், ப்ரியமின் மகள்களிலேயே அழகில் சிறந்த லோடிஸின் உருவத்தில் செய்தி கொண்டு சென்றாள். ஆன்ட்டினாரின் மகனான தலைவன் ஹெலிகா வோனின் மனைவியும், ஹெலனுக்கு நாத்தனாருமாவாள் லோடிஸ். மண்டபத்தில் இருந்த ஹெலன், அப்பொழுது ஒரு பெரிய கறுஞ்சிவப்புத் துணியை இரண்டாக மடிக்க முயன்று கொண்டிருந்தாள். போர்க்கடவுள் ஏரிஸிடம் ட்ரோஜன்களும் கிரேக்கர்களும் தன் பொருட்டு பட்ட வேதனைச் சித்திரங்களில் சிலவற்றை அவள் அத்துணியில் பாவு போட்டுக்கொண்டிருந் தாள். விரைவுப் பாத அய்ரிஸ் அவளருகில் சென்று சொன்னாள்.

‘எனதருமைச் சகோதரியே! ட்ரோஜன்களும் கிரேக்கர்களும் எவ்வளவு வினோதமாக நடந்து கொள்கிறார்கள் என்று வந்து பார். சற்று முன்புதான் அவர்கள் ஒருவரை ஒருவர் கிழிக்கும் நோக்கத்துடன் முழுவேகத்தில் சமவெளியில் போரில் ஈடுபட்டிருந்தார்கள். சாகும்வரை அவர்களின் சமர் ஓயாது என்றே தோன்றியது. ஆனால், இப்பொழுதோ போர் எதுவும் நடக்கவில்லை. அனைவரும் அமைதியாக தங்கள் கேடயங் களில் சாய்ந்துகொண்டு அமர்ந்திருக்கின்றனர். அவர்களுடைய நீண்ட ஈட்டிகள் அவர்களுக்கெதிரே மண்ணில் குத்தி வைக்கப் பட்டுள்ளன. பாரிஸூம், போர்த்திறம் மிக்க மெனிலயஸூம் உனக்காக மற்போர் புரியப் போகிறார்கள். வெல்பவனே உன்னை மனைவியாக உரிமை கொண்டாடுவான்.’

இந்த வார்த்தைகளைச் சொல்லி, ஹெலனின் இதயத்தில் தன் பழைய கணவனுக்காகவும், பெற்றோருக்காகவும், பிரிந்து வந்த நகருக்காகவும் இனிய ஏக்கத்தை ஏற்படுத்தினாள் அய்ரிஸ். உடனே ஹெலன், தன் முகத்தை ஒரு வெள்ளை சணல் துணியால் மூடிக்கொண்டாள். கன்னங்களிலிருந்து மிருதுவான கண்ணீர் வழிய, அறையைவிட்டு வெளியே வந்தாள். தனியாக அல்ல, பித்தியஸின் மகள் ஈத்ரி மற்றும் எருதுக் கண்ணாள் க்ளிமீனி ஆகிய இரண்டு சேடிப்பெண்களுடன். சிறிது நேரத்துக்கெல்லாம் அவர்கள் ஸ்கேய நெடுங்கதவு இருக்கும் இடத்துக்குப் போய்ச் சேர்ந்தனர்.

அந்த நகரத்தின் மூத்த தலைவர்களான பாந்தூஸ், திமோட்டீஸ், க்ளிட்டியஸ், போர்க்கடவுள் ஏரிசின் சேவகனான ஹைசிட்டா வோன், மதிநுட்பம் நிறைந்த உக்காலிகான் மற்றும் ஆன்ட்டினர் ஆகியவர்களுடன், ப்ரியம் அந்த வாசலில்தான் ஓர் ஆசோசனைக் கூட்டம் நடத்திக்கொண்டு அமர்ந்திருந்தான். அவர்கள் போர் செய்யும் நாள்களுக்கு முதுமை ஒரு முடிவைக் கொண்டு வந்திருந்தாலும், அந்த ட்ரோஜன் முதியவர்கள் சிறந்த பேச்சாளர் களாக இருந்தனர். காட்டு மரக்கிளைகளில் அமர்ந்து நடுங்கும் குரலில் பாடும் சிள்வண்டுகளைப் போல அவர்கள் உயர்ந்ததொரு மேடையில் அமர்ந்து பேசினர். அங்கு ஹெலன் வருவதைப் பார்த்ததும் அவர்கள் ஒருவருக்கொருவர் சிறகுகள் கொண்ட சொற்களைப் பரிமாறிக் கொண்டனர்.

'இவ்வளவு நீண்ட காலம் ஒரு பெண்ணுக்காகக் கஷ்டப்படு வதற்காக ட்ரோஜன்களையோ கிரேக்கர்களையோ யாரும் குறை கூற முடியாது. நித்திய தேவதைகளைப் போல அச்சமூட்டு பவளாகத்தான் அவளிருக்கிறாள், அழகாகத்தான் இருக்கிறாள். இருந்தாலும், அவள் நம்மோடு இங்கே தங்கிவிட வேண்டாம். தெய்வம் நமக்கும் நம் சந்ததியினருக்கும் கொடுத்த சாபத் தண்டனை அவள்!'

அப்படி அவர்கள் பேசியதும், ப்ரியம் ஹெலனைக் கூப்பிட்டான்.

'அருமை மகளே, வா! வந்து இங்கே என்னருகில் உட்கார். இங்கிருந்து உனது முன்னால் கணவனையும் உனது உறவினர் களையும் நண்பர்களையும் பார்க்கலாம். இங்கு நடக்கும் எதற்கும் நீதான் காரணம் என்று நான் சொல்லமாட்டேன். இதற் கெல்லாம் கடவுள்கள்தான் காரணம். அவர்கள்தான் கிரேக்கர் களுக்கு எதிரான இந்தப் போரையும் அதன் கண்ணீரையும் எனக்குக் கொடுத்துள்ளனர்.

'அதோ! அங்கே அழகாக, உயரமாக, மரியாதை ஏற்படுத்தும் தோற்றத்தில் ஒரு கிரேக்கன் இருக்கிறானே! அவன் யாரென்று சொல். அவனைவிட உயரமானவர்கள் அங்கே இருக்கத்தான் செய்கிறார்கள். ஆனாலும் அவனைவிட அழகான, கம்பீரமான மனிதனை நான் பார்த்ததில்லை. அவனுடைய ஒவ்வொரு அணுவும் அவன் ஒரு தலைவன் என்று சொல்கிறது.

பெண்கள் மத்தியில் ஒரு தேவதை போன்ற ஹெலன் சொன்னாள் :

'எனது மாமனாரே! உங்களை நான் மதிக்கிறேன், வியக்கிறேன். மணப்பெண்ணுக்குரிய என் கட்டிலையும், என் உறவினர் களையும், என் அருமை மகளையும், யாரோடு சேர்ந்து நான் வளர்ந்தேனோ அந்தத் தோழியர்களையும் விட்டுப் பிரிந்து, உங்கள் மகனோடு இங்கே வருவதற்கு முன் இழிந்த நிலையில் இறந்து போயிருந்தாலும் பரவாயில்லை என்று நினைக்கிறேன். ஆனால், நினைத்தபடி எதுவும் நடக்கவில்லை. நான் கண்ணீரில் என் காலத்தைக் கழிக்கிறேன்.

'நீங்கள் தெரிந்துகொள்ள விரும்பியதற்கு இப்பொழுது பதில் சொல்கிறேன். நீங்கள் குறிப்பிட்ட அவர்தான் அத்ரியூஸின் மகனான அகமெம்னன். அவர் ஒரு நல்ல ஆட்சியாளரும் சக்திவாய்ந்த ஈட்டியெறி வீரரும் ஆவார். ஒரு காலத்தில் அவர் இழிமகளான எனது மைத்துனராக இருந்தார். எல்லாமே ஒரு கனவைப் போல உள்ளது.'

- அவள் அப்படிச் சொன்னதும், அந்த முதியவன் அகமெம்னனை வியப்புடன் உற்றுநோக்கிச் சொன்னான்:

'அத்ரியூஸின் ஆனந்தமான மகனே! நற்பேற்றின் குழந்தையே! கடவுளர்களால் ஆசி வழங்கப்பட்டவனே! எத்தனை ஆயிரம் கிரேக்கர்கள் உன் கீழ் சேவகம் புரிகின்றனர். ஒருமுறை நான் திராட்சைக் கொடிகளின் நிலமாகிய ஃப்ரிஜியாவுக்குச் சென் றேன். அங்கே நான் எண்ணிறந்த ஃப்ரிஜியன்களை விரைந் தோடும் குதிரைகளுடன் பார்த்தேன். ஒத்ரியூஸ் மற்றும் கடவுளையொத்த மிக்டன் ஆகியோரின் படைகள் சங்காரியஸ் ஆற்றின் கரையில் முகாமிட்டிருந்ததைப் பார்த்தேன். நான் அவர்களின் தோழனாக இருந்தேன். அவர்களோடு நானும் தங்கியிருந்தேன். அச்சமயம் ஆண்களுக்கு இணையான அமேசான் பெண்கள் தாக்க வந்தனர். ஆனால் அவர்களைவிட எண்ணிக்கையில் அதிகமாக, இந்த கறுப்புக் கண்களையுடைய கிரேக்கர்கள் உள்ளனர்.'

அடுத்து ஒடிஸியூஸ் நிற்பதைக் கவனித்த முதியவன் கேட்டான்

'அருமைக் குழந்தாய்! அவன் யாரென்று சொல். அகமெம்னனை விட குள்ளமாக இருந்தாலும் அவனுடைய மார்பு அகமெம்ன னுடையதைவிட அகலமாக உள்ளது. அவனுடைய போர்க் கவசம் வள்ளல்தன்மை கொண்ட பூமியின்மீது கிடக்கின்றது. அதோ! வீரர்களின் வரிசையைக் கண்காணித்துக்கொண்டு மந்தை

*களை மேய்ப்பவன் போல அவன் போகிறான். வெள்ளை ஆடுகளின் மத்தியில் ஓடும் கம்பளி நிறைந்த செம்மறியாட்டை அவன் நினைவு படுத்துகிறான்!'*

*அதற்கு ஜீயூஸின் மகளான ஹெலன் பதில் சொன்னாள்*

*'அவன்தான் லார்ட்டஸின் மகனான விரைந்து முடிவெடுக்கும் ஒடிஸியூஸ். கரடுமுரடான நிலமான இதாகாவில் அவன் வளர்க்கப்பட்டான். எல்லாவிதமான போர்ப்பயிற்சிகளிலும், திட்டமிடுதலிலும் அவன் தலைசிறந்தவன்.'*

*பின், நுட்பமதிகொண்ட ஆன்ட்டினர் பதில் சொன்னான்:*

*'சீமாட்டியே! நீங்கள் சொல்வது மிகவும் சரி. எனக்குத் தெரியும். ஏனெனில், கடவுளையொத்த ஒடிஸியூஸ் உங்களின் பொருட்டு ஒருமுறை போர்த்திறம் கொண்ட மெனிலயஸுடன் இங்கு வந்துள்ளான். நான்தான் அவர்களுக்கு விருந்தளித்தேன். எனது அரண்மனையில்தான் அவர்களை தங்கவைத்தேன். அவர்களின் உருவம் பற்றி மட்டுமல்ல, அவர்கள் எப்படி சமயோசிதமாக சிந்திப்பார்கள் என்றும் நானறிவேன். ட்ரோஜன்களின் சபையில் அனைவரும் நின்றுகொண்டிருக்கையில், மெனிலயஸ்தான் தன் அகன்ற தோள்களுடன் அனைவரையும்விட உயரமாக இருந் தான். ஆனாலும், அமர்ந்திருக்கும்போது மெனிலயஸைவிட ஒடிஸியூஸ்தான் இருவரிலும் கம்பீரமாக இருந்தான்.*

*'பகிரங்கமாக தங்களது கருத்துகளைச் சொல்லும் வாய்ப்பு அவர்களுக்கு வந்தபோது, மெனிலயஸ் சரளமாகப் பேசினான். நீண்ட பேச்சல்ல. ஆனால், தெளிவான பேச்சு. அவர்களிருவரில் மெனிலயஸ்தான் இளையவன். எனினும் அவனுடைய பேச்சு, சுருக்கமாக, சொல்லவந்ததைச் சொன்னது. மாறாக, ஒடிஸியூஸ் பேச எழுந்தபோது, கீழே தரையைப் பார்த்துக்கொண்டே நின்றான். பேச்சாளருக்கான கம்பத்தைப் பிடித்து இப்படியும் அப்படியும் ஆட்டி ஆட்டி அவன் பேசவில்லை. அப்படி ஒரு கழியையே அதற்குமுன் பிடித்திராதவனைப்போல அதை இறுக்கமாகப் பிடித்துக்கொண்டு இருந்தான். ஒரு முரடன் என்றோ ஒரு முட்டாள் என்றோ நீங்கள் அவனை நினைத்திருக்க முடியும். இறுதியாக அவனுடைய பெருங்குரல் அவனது மார்பிலிருந்து கிளம்பி வார்த்தைகளாக வெளிவந்து குளிர்கால உறைபனியைப் போலக் கொட்டியபோது, உயிருடன் இருந்த*

எந்த மனிதனும் அவனோடு போட்டிபோட முடியாதென்று தெரிந்தது. அதன்பிறகு, நாங்கள் அவனைப் பார்த்தபோதெல் லாம் அவனுடைய கம்பீரமான தோற்றத்தை எண்ணி ஆச்சரியப்படவே இல்லை.'

ப்ரியம் கவனித்த மூன்றாவது வீரன் அஜாக்ஸ் ஆவான். அவன் கேட்டான்:

'தலையும் தோள்களும் மற்றவர்களைவிட உயர்ந்திருக்கும் அந்த இன்னொரு உயரமான கிரேக்கன் யார்?'

பெண்களில் ஒரு தேவதையைப் போன்ற, நீள உடையணிந்த ஹெலன் சொன்னாள்.

'அதுதான் மரியாதை கலந்த அச்சத்தை ஏற்படுத்தும் அஜாக்ஸ். கிரேக்கர்களில் பலத்தில் உறுதியானவன். அவனுக்குப் பக்கத் தில் இருப்பது இடொமீனியஸ். தனது க்ரீட்டன் தலைவர் களோடு, அவர்களுக்கு மத்தியில் ஒரு கடவுளைப்போல அவன் நின்றுகொண்டிருக்கிறான். க்ரீட்டிலிருந்து அவன் வரும் போதெல்லாம், போர்த்திறம் கொண்ட மெனிலயஸ், அவனை எங்கள் வீட்டுக்கு அழைத்து கௌரவிப்பது வழக்கம்.

'இப்பொழுது நான் எல்லா கரிய கண்களுள்ள கிரேக்க வீரர் களையும் அடையாளம் கண்டுகொண்டேன். எல்லாருடைய பெயர்களும் எனக்குத் தெரியும். குதிரைகளை அடக்கும் காஸ்டர், மாபெரும் குத்துச்சண்டை வீரனான பொலாக்ஸ் ஆகிய இரண்டு தலைவர்களைத் தவிர. அவர்கள் என் சகோதரர்கள். என் கூடப்பிறந்தவர்கள். அழகிய லாசிடாமனில் இருந்து அவர்கள் படைகளோடு சேர்ந்துகொள்ளவில்லையா அல்லது கடல்கடந்து வந்தும் என்னைப் பற்றிய செய்திகளைக் கேள்விப்பட்டு அவமானத்தால் சண்டையில் கலந்துகொள்ள விருப்பமில் லாமல் இருக்கிறார்களா என்று தெரியவில்லை.'

அவள் பேசிவிட்டாள். ஆனால் உயிர் தரும் இந்த பூமி அவர்களை தந்தை நிலமாகிய லாசிடாமனிலேயே வைத்திருந்தது.

இதற்கிடையில் கட்டியக்காரர்கள் பலியாடுகளை நகரிலிருந்து கொண்டு வந்தார்கள். இரண்டு செம்மறியாடுகளும், ஒரு ஆட்டுத் தோல் குடுவை நிறைய நிலத்தின் கொடையான இன்பமூட்டும் மதுவும், கலந்து ஊற்ற ஒரு கிண்ணமும் தங்கக் கோப்பைகளும்

எடுத்துக்கொண்டு இடாயுஸ் என்ற கட்டியக்காரன் ப்ரியமிடம் வந்து அவனை செயல்படத் தூண்டினான்.

'லோமிடனின் மகனே! எழுந்திருங்கள். ட்ரோஜன் மற்றும் கிரேக்கப் படைகளின் தலைவர்கள் உங்களை சமவெளிக்கு அழைக்கிறார்கள். நீங்கள் வந்துதான் பலிகொடுப்பதற்கான சத்தியப் பிரமாண வார்த்தைகளைச் சொல்ல வேண்டும். பாரிஸூம் மெனிலயஸூம் தங்கள் ஈட்டிகளைக் கொண்டு போர் புரிந்து இந்தப் பெண் விஷயத்தில் ஒரு முடிவுக்கு வர இருக்கி றார்கள். வெற்றி பெறுபவன், இந்தப் பெண்ணையும் அவளோடு வந்த பொருள்களையும் எடுத்துக்கொள்வான். மற்றவர்களெல் லாம் எதிரிகளோடு நட்பாக இருப்பதாய் சத்தியம் செய்துவிட்டு செழிப்பான ட்ராய் நகரத்தில் இருக்க வேண்டியது. அழகிய பெண்களைக் கொண்ட தெஸ்ஸாலி, அகேயா ஆகிய ஊர்களுக்கு கிரேக்கர்கள் குதிரை மேய்க்கத் திரும்பிப் போவார்கள்.'

இப்படியாக அவன் சொன்னதைக் கேட்டு கிழவன் நடுங்கினான். ஆனால், தனது குதிரைகளை தேரில் கட்டும்படி தனது சேவகர் களுக்கு உத்தரவிட்டான். அவர்களும், உடனே சொன்னபடி செய்தனர். குதிரைமீதேறி ப்ரியம் அதன் கடிவாளத்தை உறுதி யாகப் பிடித்துக் கொண்டான். அவனையடுத்து ஆன்ட்டினர் ஒரு அருமையான தேரில் ஏறி அமர்ந்துகொண்டான். ஸ்கேய வாசல் வழியாக அவர்கள் தம் விரைவுக் குதிரைகளை ஓட்டி, சமவெளிக்குப் பறந்தனர்.

படைகள் திரண்டிருக்கும் பகுதிக்குச் சென்றவுடன் வள்ளல் தன்மை கொண்ட பூமியில் தேரிலிருந்து கால்வைத்து இறங்கி, கிரேக்கர்களும் ட்ரோஜன்களும் இருக்கும் பகுதிக்கு நடந்து சென்றனர். மக்கள் தலைவன் அகமெம்னனும் விரைவுச் சிந்தனைகொண்ட ஒடிஸியூஸூம் உடனே எழுந்து நின்றனர். கட்டியக்காரர்கள் உடனே, கொண்டுவந்த பலி ஆடுகளை ஒன்று சேர்த்தனர். கோப்பையில் மதுவை ஊற்றினர். கொஞ்சம் தண்ணீரை தம் தலைவர்களின் கைகளில் தெளித்தனர். தனது வாளின் உறைக்குப் பக்கத்தில் எப்பொழுதுமே எடுத்துச் செல்லும் கத்தியை உருவினான் அகமெம்னன். செம்மறியாட்டுக் குட்டிகளின் தலையில் இருந்து கொஞ்சம் ரோமத்தை அறுத்தெடுத்தான். ட்ரோஜன் மற்றும் கிரேக்கத் தலைவர்களுக்கு அது கட்டியக்காரர்களால் பகிர்ந்தளிக்கப்பட்டது. பின் தனது கைகளை உயர்த்தி அகமெம்னன் பிரார்த்தித்தான்.

*'அய்டா மலையிலிருந்து ஆட்சி செய்யும் தந்தை ஜீயூஸ்! மாபெரியோனே, மாபெரிய புகழ்மிக்கோனே! அனைத்தையும் பார்க்கும், கேட்கும் சூரியனே! நதிகளும் நீயே, நிலமும் நீயே! பொய்சத்தியம் செய்வோரை கீழ் உலகில் தண்டிக்கும் சக்தியும் நீயே! எங்கள் மனப்பூர்வமான இந்த பலிக்கு நீயே சாட்சியாக இருப்பாயாக! எங்கள் வாக்குறுதிகள் நிறைவேற்றப்படுவதைக் காண்பாயாக!*

*'பாரிஸ் மெனிலயஸைக் கொல்வானேயானால், ஹெலனையும் அவளோடு வந்த சொத்தனைத்தையும் அவனே வைத்துக் கொள்ளட்டும். நாங்கள் எங்கள் கப்பல்களில் நாடு திரும்பு வோம். ஆனால் செம்பொன்னிறத் தலைமுடி கொண்ட மெனிலயஸ் பாரிஸைக் கொல்வானேயானால், ட்ரோஜன்கள் ஹெலனையும் அவளது சொத்துக்களையும் எங்களிடம் ஒப் படைத்துவிட வேண்டும். அதோடு அவர்கள், கிரேக்கர்களுக்குத் வருங்காலச் சந்ததியினர் நினைவு வைத்துக்கொள்ளுமாறு தக்க நஷ்டஈடு தரவேண்டும். ஒருவேளை பாரிஸ் இறந்துவிடுவானே யாகில், ப்ரியமும் அவரது மகன்களும் இந்த உடன்பாட்டை ஏற்றுக்கொள்ள மறுப்பார்களேயானால், நான் இங்கேயே தங்கி திருப்தி ஏற்படும் வரை போர் செய்வேன்!'*

*பேசி முடித்து அவன் ஆடுகளின் கழுத்துகளை இரக்கமற்ற வெண்கலத்தால் அறுத்தான். ஆடுகள் மூச்சுத்திணற பூமியில் விழுந்தன. அவற்றின் உயிர் பிரிந்தது. கத்தி அவற்றின் உயிரை எடுத்துவிட்டது. கலக்கும் கோப்பையில் இருந்து அவர்கள் கிண்ணங்களில் மதுவை ஊற்றி நிரப்பினார்கள். கொஞ்சம் தரையில் ஊற்றும்போது நித்தியக் கடவுள்களிடம் பிரார்த்தித்துக் கொண்டார்கள். கிரேக்கர்களும் ட்ரோஜன்களும் ஒரே குரலில் சொன்னார்கள்*

*'மாபெரியோனும் புகழனைத்துக்கும் உரியவனான ஜீயூஸ்! மற்ற நித்தியக் கடவுளரே! எங்களில் யாராவது இந்த உடன்படிக் கையை மீறுவாரேயானால், அவரது மூளை இந்த மதுவைப் போல தரையில் சிந்தட்டும். அவர்களது மூளை மட்டுமல்ல, அவர்களது சந்ததியினரின் மூளைகளும் நாசமாகட்டும். அவர் களுடைய மனைவிகளை அடுத்தவன் எடுத்துக்கொள்ளட்டும்.'*

*அவர்கள் அப்படிப் பிரார்த்தித்தாலும் க்ரோனஸின் மகனான ஜீயூஸ் அதை ஏற்றுக்கொள்ளவில்லை. டார்டானஸின் மகனான ப்ரியம் இப்பொழுது அவர்களைப் பார்த்துப் பேசினான்:*

'ட்ரோஜன்களே! கிரேக்க வீரர்களே! நான் சொல்வதைக் கேளுங்கள். காற்றடிக்கும் இலியம் நகருக்கு நான் இப்பொழுது திரும்பிச்செல்லப் போகிறேன். போர்த்திறம் கொண்ட மெனிலயஸோடு, என்னருமை மகன் சண்டையிடுவதைப் பார்த்துக்கொண்டிருக்க என்னால் இயலாது. இதில் யார் தன் முடிவை எய்தப் போகிறார்கள் என்று ஜீயூஸுக்கும் மற்ற நித்தியக் கடவுளருக்கும் ஏற்கெனவே தெரிந்திருக்கும்.'

கடவுளையொத்த ப்ரியம் இப்படிப் பேசிவிட்டு, தனக்கான ஆடுகளை தேரில் திரும்பப் போட்டுக்கொண்டான். குதிரைகளின் கடிவாளங்களை, உறுதியாகப் பற்றிப் பிடித்தான். அவனுக்குப் பக்கத்தில் ஆன்ட்டினர் தன் அருமையான தேரில் ஏற, இருவரும் இலியம் நகரை நோக்கி விரைந்தனர்.

ப்ரியமின் மகன் ஹெக்டரும், கடவுளோ என்று எண்ணும் படியான தோற்றம் கொண்ட ஒடிஸியூஸும், சண்டையிட இருந்த நிலத்தின் எல்லைகளைக் குறிக்க ஆரம்பித்தனர். வெண்கல ஈட்டியெறிந்து சண்டையை யார் முதலில் துவக்கு வது, பாரிஸா அல்லது மெனிலயஸா என்று பார்ப்பதற்காக வெண்கல தலைக்கவசத்துக்குள் திருவுளச் சீட்டுகளைப் போட்டனர். பார்த்துக்கொண்டிருந்த படையினர் வானை நோக்கி கரங்களை உயர்த்தி கடவுள்களிடம் பிரார்த்தித்தனர். அனைவரும் ஒன்றாகச் சொன்னார்கள்

'அய்டா மலையிலிருந்து ஆட்சி செய்யும் தந்தை ஜீயூஸே! மாபெரியோனே, மாபெரிய புகழ்மிக்கோனே! எங்கள் இருதரப்பினருக்கும் வேதனையைக் கொண்டுவந்தவன், செத்து, ஹயடிஸில் உள்ள கீழுலகத்துக்குப் போகட்டும். உறுதி குலையாத நட்பின் வாக்குறுதிகள் ஏற்றுக்கொள்ளப்படட்டும்.'

அவர்கள் பிரார்த்தனைக்குப் பின், மின்னும் தலைக்கவசம் கொண்ட மகா ஹெக்டர், திருவுளச்சீட்டுகள் இருந்த தலைக் கவசத்தைக் குலுக்கினான், அதைப் பார்ப்பதைத் தவிர்த்தவனாக. பாரிஸுக்கான சீட்டு உடனே வெளியே வந்து விழுந்தது. அதன்பின் படையினர் வரிசையாக, தங்கள் தங்கள் அலங்கரிக்கப் பட்ட போர்ச்சீருடைகள் இருந்த உயர் குதிரைகளின் கீழே அமர்ந்தனர்.

கூந்தலழகி ஹெலனின் கணவனும் கடவுளையொத்தவனுமான பாரிஸ், தனது கம்பீர கவசத்தை அணிந்துகொண்டான். முதலில்

தன் முழங்கால்களைப் பாதுகாக்கும் வெள்ளி கணுக்கால் பற்றுக்கருவிகள் கொண்ட உடைகளை அணிந்தான். பின் உடல் கவசத்தை அணிந்தான். அது அவனுடைய சகோதரன் லைகாவோனுடையது. ஆனாலும் அவனுக்கு அது பொருத்த மாக இருந்தது. வெள்ளிப்பிடி கொண்ட வெண்கல வாள் அவன் தோளில் தொங்கியது. அதோடு ஒரு பெரிய கனமான கேடயமும் இருந்தது. அவனுடைய வலிமைவாய்ந்த தலையில் குதிரை முடியில் கொய்து வைக்கப்பட்ட, அழகாக செய்யப்பட்ட தலைக்கவசத்தைப் பொருத்திக் கொண்டான். அதன் இறகு, உச்சியில் இருந்து அச்சுறுத்தும் வகையில் ஆடிக்கொண் டிருந்தது. பின், அவன் இறுக்கமாகப் பிடிப்பதற்கு ஏற்ற ஒரு சக்திவாய்ந்த ஈட்டியை எடுத்துக்கொண்டான்.

போர்த்திறம் கொண்ட மெனிலயஸுும், அதேபோல தன்னைத் தயார் செய்துகொண்டான். இருவரும் தயாரானபோது, முதல் வரிசையின் பின்னாலிருந்து ஒருவரையொருவர் முறைத்தபடி முன்னேறி வந்தனர். ட்ரோஜன்களும் கிரேக்கர்களும் மெய் மறந்து பார்க்க ஆரம்பித்தனர். அளக்கப்பட்ட நிலத்தின் எல்லைகளுக்குள்ளிருந்து இருவரும் தங்களுக்குரிய இடத்தில் போய் நின்றுகொண்டனர். இருவருக்குமிடையில் அதிக தூர மில்லை. ஒருவர்மீது ஒருவர் கோபப்பார்வையுடன் தங்கள் ஆயுதங்களைச் சுழற்ற ஆரம்பித்தனர்.

முதலில் பாரிஸ், தனது நீண்ட நிழல் ஏற்படுத்தும் ஈட்டியை மெனிலயஸை நோக்கி எறிந்தான். அது அவன் கவசத்தில் போய் மோதியது. ஆனால், அதை ஊடுருவிச் செல்லவில்லை. கவசத்தின் கனத்தினால் ஈட்டியின் முனை பின்னோக்கி வளைந்தது. தந்தை ஜீயூஸுக்கு ஒரு பிரார்த்தனை செய்த வண்ணம் மெனிலயஸ் தன் ஈட்டியை பாரிஸ்மீது எறிந்தான்.

'தலைவா ஜீயூஸ்! முதலில் எனக்கு அநியாயம் செய்த கடவுளையொத்த பாரிஸை, பழிக்குப் பழி வாங்கும் வாய்ப்பை எனக்குக் கொடு! அவனை வீழ்த்த என் கைகளைப் பயன்படுத்து வாயாக! அப்பொழுதுதான் விருந்தோம்பல் செய்தவனுக்கு துரோகம் செய்தால் என்னவாகும் என்பதை எண்ணி எங்கள் குழந்தைகளின் குழந்தைகளும் நடுங்குவார்கள்!'

இப்படிப் பிரார்த்தித்துவிட்டு, தனது நீண்ட நிழல் ஏற்படுத்தும் ஈட்டியை பாரிஸை நோக்கி எறிந்தான். அது பாரிஸின் வட்ட

வடிவ கவசத்தைத் தாக்கியது. அந்தக் கனமான ஆயுதம் பாரிஸின் மின்னும் கவசத்தை ஊடுருவிச் சென்று, அலங்கரிக்கப்பட்ட கவச ஆடையையும் தாண்டி அவன் அணிந்திருந்த மேலாடையில் பக்கவாட்டில் கிழித்தது. ஆனால் பாரிஸ் பக்கவாட்டில் நகர்ந்து கொண்டதால், கறுப்பு மரணத்திலிருந்து தப்பினான். பின் மெனிலயஸ் தனது வெள்ளிப்பிடி கொண்ட வாளை உருவி, பின்பக்கமாகச் சுழற்றி, பாரிஸின் தலைக்கவசத்தின் உச்சியில் அடித்தான். ஆனால் தலைக்கவசத்தில் மோதிய வாள், துண்டு துண்டாகச் சிதறி மெனிலயஸின் கைகளிலிருந்து விழுந்தது. மெனிலயஸ் முனகினான். அகன்ற வானத்தைப் பார்த்தான்.

'தந்தையே ஜீயூஸ்! உன்னைவிட அதிக பகையுள்ளம் கொண்ட கடவுள் இருக்க முடியாது. பாரிஸ் இழைத்த தீங்குக்காக அவனுக்கு ஒரு பாடம் கற்றுக்கொடுத்துவிட்டேன் என்று நினைத்தேன். ஆனால், என் வாள் என் கைகளிலேயே உடைந்து நொறுங்குகிறது. எனது ஈட்டியை வேறு நான் ஏற்கெனவே எறிந்துவிட்டேன்.'

சொல்லிக்கொண்டே பாரிஸ் மீது பாய்ந்து, அவன் தலைக் கவசத்தின் குதிரைமுடிக் கொத்தால் அவனைப் பிடித்தான் மெனிலயஸ். அவனைத் திருப்பி, கிரேக்கப் படைகள் இருந்த இடத்துக்கு இழுக்க ஆரம்பித்தான். தன் மிருதுவான தொண்டையில், தலைக்கவசத்தின் பாவுபோடப்பட்ட தோல்பட்டை கொடுத்த அழுத்தத்தால், பாரிஸ் மூச்சுத்திணறினான். அதை அவன், தன் தாடைக்குக் கீழே இறுக்கமாகக் கட்டியிருந்தான். மெனிலயஸ் அவனை அடித்துப்போட்டுவிட்டு, விவரிக்க முடியாத புகழை எட்டியிருப்பான்.

ஆனால், நடந்ததையெல்லாம் பார்த்துக்கொண்டிருந்த ஜீயூஸின் மகளான அஃப்ரோடைட்டி உடனே குறுக்கிட்டாள். பதப் படுத்தப்பட்ட எருதுத்தோலினால் செய்யப்பட்ட அந்தக் கழுத்தை இறுக்கிய பட்டையை அறுத்துவிட்டாள். பாரிஸின் தலைக்கவசம் மட்டும் மெனிலயஸின் மூடிய கைகளுக்குள் வந்தது. அதை அவன் சுழற்றி, கிரேக்க வீரர்கள் இருந்த பக்கம் வீசினான். அதை அவனது வீரர்கள் பிடித்துக்கொண்டனர். மறுபடியும் பாரிஸை நோக்கி தன் வெண்கல ஈட்டியால் அவனைக் கொன்றுவிடும் எண்ணத்தில் பாய்ந்தான் மெனிலயஸ். ஆனால் அடர்த்தியான பனிப்படலத்தை ஏற்படுத்தி, அதில் பாரிஸை மறைத்த அஃப்ரோடைட்டி, அவனை அங்கிருந்து

விரைவாக அப்புறப்படுத்தி, அவனை அவனது நறுமணம் கமழும் படுக்கையறையில் கொண்டுபோய் வைத்தாள். சாகாவரம் பெற்ற தேவதையான அவளுக்கு அது எளிதான வித்தையாக இருந்தது.

ட்ரோஜன் சேடிப்பெண்களால் சூழப்பட்டு, உயர்ந்த கோபுர மாளிகையில் ஹெலன் இருப்பதைப் பார்த்தாள் அஃப்ரோ டைட்டி. தன் கையை நீட்டி, நறுமணம் வீசும் அவளது ஆடையைப் பற்றி, ஹெலனுக்கு மிகவும் பிடித்த ஒரு கிழவியின் உருவத்தில் பேசினாள். ஹெலன் லாசிடாமனில் இருந்தபோது, அவளது கம்பளி ஆடைகளைச் சீவி விடுகின்ற வேலையைச் செய்துகொண்டிருந்தவள் அந்த முதியவள். அவளைப்போல், தேவதையான அஃப்ரோடைட்டி பேசினாள்:

'இங்கே வா பெண்ணே! பாரிஸ் தன்னோடு உன்னை அவனது வீட்டுக்கு வரவேண்டும் என்று விரும்புகிறான். அங்கே அவன் தன் படுக்கையறையில் உள்ளே போடப்பட்ட படுக்கையில் காத்திருக்கிறான். ஆளும் சரி, ஆடையும் சரி கண்ணைப் பறிக்கும் விதமாக இருக்கிறது. இப்பொழுதுதான் ஒரு சண்டையிலிருந்து திரும்பி இருக்கிறான் அவன் என்று சொன்னால் நீ நம்பவே மாட்டாய். ஏதோ நடன நிகழ்ச்சிக்குப் போய்வந்தவனைப் போலவோ எழுந்து வந்து ஓய்வாக உட்கார்ந்துவிட்டவன் என்றோதான் நினைப்பாய்!'

இப்படி அவள் சொன்னதும் அந்த வார்த்தைகள் ஹெலனின் இதயத்துக்குள் நேரடியாக நுழைந்தன. ஆனால் தன்னிடம் பேசியவளுடைய அருமையான கழுத்தையும், விரும்பத்தக்க மார்பகங்களையும், ஒளி வீசிக்கொண்டிருந்த கண்களையும் பார்த்து அதிர்ச்சியடைந்த ஹெலன் அவளிடம் சொன்னாள்.

'விசித்திரமான தேவதையே! நீ ஏன் என்னிடம் இப்படிப் பேசு கிறாய்? என்னை ஃப்ரிஜியா அல்லது மயோனியா போன்ற தூர நகரங்களுக்குக் கடத்திக்கொண்டு போய், அங்கே வசிக்கும் உனக்குப் பிடித்தவர்கள் யாரையாவது திருப்திப்படுத்த திட்டம் போட்டிருக்கிறாய் என்று நினைக்கிறேன். இல்லை, பாரிஸை மெனிலயஸ் தோற்கடித்துவிட்டானா? அதனால், இந்த வெறுக்கத்தக்க மனைவியை அவன் வீட்டுக்கு அழைத்துச் செல்ல விரும்புகிறானா? அதற்காக நீ, என்னை மறுபடியும் பாரிஸிடம் வசீகரித்துக் கொண்டுசெல்ல முயற்சி செய்கிறாயா?

'இல்லை, நான் வரமாட்டேன். நீயே போய் அவனோடு இருந்துகொள். நீ ஒரு தேவதை என்பதை மறந்துவிடு. இனி ஒலிம்பஸ் மலையில் கால் வைக்காதே. போ! போய் பாரிஸுக் காக வேதனைப்படு. போய் அவனைக் கொஞ்சு. ஒருநாள் அவன் உன்னை, தன் மனைவியாக்கிக் கொள்ளக் கூடும் அல்லது காமக்கிழத்தியாக வைத்துக்கொள்ளக் கூடும். அவனோடு போய் அவன் படுக்கையைப் பகிர்ந்துகொள்ள நான் இனி வர மாட்டேன். அது தப்பாகிவிடும். அப்படி நான் செய்வேனாகில் ட்ராய் நகரில் உள்ள ஒரு பெண்கூட என்னைத் தூற்றாமல் விடமாட்டாள். ஏற்கெனவே எனக்கு இருக்கும் துயரங்களே போதும்.'

சீற்றங்கொண்ட தேவதை அஃப்ரோடைட்டி சொன்னாள்

'பிடிவாதமான ஈனப்பிறவியே! என்னைக் கோபமூட்டாதே. இதுவரை உன்னை நேசித்துவந்துள்ள நான், என் சினத்தில் உன்னை வெறுத்து கைவிட்டுவிடுவேன். கிரேக்கர்களும் ட்ரோஜன்களும் உன்னை வெறுத்து ஒதுக்கி உனக்கு ஒரு பயங்கரமான முடிவைக் கொடுக்குமாறு செய்துவிடுவேன்!'

அப்படி அவள் சொன்னதும் ஜீயூஸின் மகளான ஹெலன் பயந்து போனாள். மின்னும் வெள்ளை உடையால் உடல் முழுதும் சுற்றிக்கொண்டு அமைதியாகப் போனாள். ஆனால், அவள் போனது எந்த ட்ரோஜன் பெண்ணின் கண்ணுக்கும் தெரிய வில்லை. அவளுக்கு வழிகாட்டும் ஒரு தெய்வீகப் பாதுகாப்பு அவளுக்கு இருந்தது.

பாரிஸின் பிரமாதமான அரண்மனைக்கு அவர்கள் சென்றவுடன், அங்கிருந்த சேடிப்பெண்கள் தங்கள் பணிகளைச் செய்யத் தொடங்கினர். பெண்களில் தேவைதை போன்ற ஹெலன், அலங்கரிப்பட்ட தன் படுக்கையறைக்குச் சென்றாள். சிரிப்பைச் சிந்தும் தேவதையான அஃப்ரோடைட்டியும் கூடவே சென்றாள். அவளே ஒரு நாற்காலியை எடுத்து ஹெலன் உட்காருவதற்காக அதை பாரிஸின் எதிரில் போட்டாள். ஜீயூஸின் மகளான ஹெலன் அதில் உட்கார்ந்தாள். ஆனால், பாரிஸின் முகத்தை ஏறிட்டுப் பார்க்காமலே அவனைத் தாக்கிப் பேசினாள்

'ஆக, நீங்கள் போர்க்களத்திலிருந்து திரும்பி வந்துவிட்டீர்கள். என் கணவனாக இருந்த பலம் மிக்க வீரனிடம் விழுந்திருப்பீர்கள்

என்று நினைத்தேன்! போர்த்திறம் மிக்க மெனிலயஸைவிட தாங்களே சிறந்தவர் என்றும், அவரைவிட வலிமையானவன் என்றும், அருமையான ஈட்டி எறி வீரனென்றும் பெருமை யடித்துக்கொள்வீர்களே! இப்பொழுது போய் மறுபடியும் அவரை சண்டைக்கு அழையுங்களேன். சவால் விட்டுப் பாருங்களேன்! ஆனால், செம்பொன்னிற முடிகொண்ட மெனிலயஸோடு மற்போர் புரிவதற்கு முன், ஒன்றுக்கு இரண்டு தடவைகள் சிந்தித்துச் செய்வதே நல்லது என்று என்னைக் கேட்டீர்களானால் நான் சொல்வேன். ஏனெனில், அவருடைய ஈட்டிக்கு நீங்கள் பலியாகிவிடலாம்!'

பாரிஸ் சொன்னான்

'என் கண்ணே! என்னைப் பற்றியும் என் வீரத்தைப் பற்றியும் என் மனம் புண்படுமாறு அப்படியெல்லாம் பேசாதே. அதீனியின் உதவியோடு மெனிலயஸ் இப்பொழுதுதான் என்னை வீழ்த்தினான். ஆனால், எனக்கு உதவி செய்யவும் கடவுளர் உண்டு. அடுத்த முறை நான் நிச்சயம் வெல்வேன். வா! நாம் இருவரும் ஒன்றாகக் கட்டிலுக்குச் சென்று காதலின் இன்பங் களைத் துய்ப்போம். இன்று போல் என்றுமே எனக்கு ஆசை வந்ததில்லை. அழகிய லாசிடாமனிலிருந்து உன்னைக் கப்பலில் கடத்திக்கொண்டுவந்த போதுகூட இவ்வளவு ஆசை வர வில்லை. க்ரானே தீவில் உன்னோடு இரவெல்லாம் கூடிய போதுகூட இவ்வளவு ஆசை எழவில்லை. இவ்வளவு தீவிரமான ஆசையும் ஏக்கமும் என்னை இதுவரை ஆட்கொள்ளவில்லை கண்ணே வா!'

இவ்விதம் சொல்லிய பாரிஸ், விசாலமான கட்டிலை நோக்கிச் சென்றான், ஹெலனையும் அணைத்துக்கொண்டு. அவன் மனைவி அவனைப் பின்பற்றிச் சென்றாள். அவ்விருவரும் அங்கே ஒன்றாகக் கூடினர்.

இதற்கிடையில், இரை தேடி அலையும் ஒரு காட்டு மிருகத்தைப் போல வீரர்களுக்கு மத்தியில் உலவினான் மெனிலயஸ், கடவுளையொத்த பாரிஸ் எங்கே மறைந்து போனான் என்று யோசித்தவண்ணம். ஆனால், ட்ரோஜன்களாலோ அவர்களது ஆதரவுப் படைகளாலோ பாரிஸ் எங்கிருக்கிறான் என்று சொல்ல முடியவில்லை. யாராவது அவனைப் பார்த்திருந்தால் நட்புக்காக அவனை மறைத்திருப்பார்கள் என்று சொல்ல முடியாது.

காரணம், அனைவருமே பாரிஸை வெறுத்தார்கள் கறுப்பு மரணத்தை வெறுப்பதுபோல. இப்பொழுது மக்கள் தலைவன் அகமெம்னன் அவர்களிடம் பேசினான்:

'ட்ரோஜன்களே! கிரேக்கர்களே! ஆதரவாளர்களே! நான் சொல்வதைக் கேளுங்கள். மெனிலயஸ் மிகத்தெளிவான வெற்றியைப் பெற்றுவிட்டான். அர்கோஸின் ஹெலனையும் அவளது எல்லா சொத்துக்களையும் விட்டுவிடுங்கள். வருங் காலச் சந்ததியினர் நினைவு வைத்துக்கொள்ளுமாறு நஷ்ட்ஈடு கொடுத்துவிடுங்கள்.'

இவ்விதம் அத்ரியூஸின் மகனான அகமெம்னன் சொன்னதும், கிரேக்கர்கள் மகிழ்ச்சியொலி எழுப்பி ஆரவாரமாகப் பாராட்டி னார்கள்.

# வாக்குறுதி மீறப்படுகிறது;
# படைகள் போரில் சந்திக்கின்றன

### *கதைச் சுருக்கம்*

*இந்த காண்டத்தில் போர் தொடங்குகிறது. இரண்டு குதிரைகள் பூட்டப்பட்ட ரதத்தை அதன் சாரதி ஓட்ட, வீரர்கள் முன்னேறினர். தேரில் இருந்த வண்ணமும், அதிலிருந்து இறங்கி தரையிலும் வீரர்கள் சண்டையிட்டனர். அவர்கள் தரையிறங்கி போரிட்டபோது, அவர்களுடைய ரதங்கள் அவர்களுக்கு அருகிலேயே நின்றன. முக்கியமாக வீரர்கள் ஈட்டியெறிந்தே போரிட்டனர். ஈட்டிகளை, தூரத்திலிருந்து எதிரியை நோக்கி எறிந்தும் அருகிலிருந்து குத்தியும் அவர்கள் போரிட்டனர்.*

*இரண்டு விதமாக அவர்கள் சண்டையிட்டனர். நின்றுகொண்டு சண்டையிடுவது ஒருமுறையாக இருந்தது. இருபக்க வீரர்களும் முன்னேறி வரும்போதும் பின்வாங்கிச் செல்லும்போதும், முன்னேறுபவர்கள் புறமுதுகிடுபவர்களை நிலைகுலையச் செய்து படுதோல்வி அடையச் செய்தனர். எந்த நிலையில் போர் நடந்தது என்பதை ஹோமர் மிகவும் கவனமாகக் குறிப்பிடுகிறார். உதாரணமாக. ஒரு பக்கத்து வீரர்கள் பின்வாங்கிச் செல்லும் போது, முதுகில் ஏற்பட்ட காயங்களினால் மரணமடைகின்றனர். காலாட்படை வீரர்களுக்கு பின்பக்கமிருந்து உத்தரவுக் குறிப்புகள் அரிதாகவே கிடைத்தன. போர்க்களத்தின் சந்திப்புகளெல்லாம், வீரம் செறிந்த பரபரப்பூட்டும் கணங்கள் நிறைந்தவை. அப்படிப்பட்ட கணங்கள் ஏராளமான உவமானங்களால் நிறைந்திருக்கும்.*

***வரிகள் 1 - 72***

*கிரேக்கர்களுக்கும் ட்ரோஜன்களுக்கும் இடையில் அமைதி ஏற்படுவதற்கு, ஹீராவும் அதீனியும் ஒப்புக்கொள்வார்களா என்பதைப் பற்றி ஜீயூஸ் யோசிக்கிறான். ட்ரோஜன்களை வெறுக்கும் பெண் கடவுளர்கள் இதற்கு மறுக்கிறார்கள். மறுபடியும் போரைத் தொடங்க எண்ணி அதீனி இறங்கி வருகிறாள்.*

***வரிகள் 73 - 219***

*அம்பெய்து மெனிலயஸைக் கொல்லும்படி, வில் வித்தையில் சிறந்த ட்ரோஜன் வீரன் பான்டாரஸைத் தூண்டுகிறாள் அதீனி. ஆனால், அது மெனிலயஸைக் கொன்றுவிடாமல் அம்பை அவளே திசை மாற்றிவிடுகிறாள். அது மெனிலயஸை லேசாக உரசிக்கொண்டு செல்கிறது.*

***வரிகள் 220 - 421***

*அகமெம்னன், தனது படைகளைப் பார்வையிடுகிறான். இடொமீனியஸ், அஜாக்ஸ், ட்யூஸர், நெஸ்டர் ஆகியோரைப் புகழ்கிறான். மெனெஸ்தியூஸ், ஒடிஸியூஸ், டயமீடிஸ் ஆகியோரைக் கடிந்து கொள்கிறான்.*

***வரிகள் 422 - 544***

*படைகள் பொருதின. அப்போலோவும் அதீனியும் இரு பக்கத்தினரையும் உற்சாகப்படுத்தினர்.*

## வாக்குறுதி மீறப்படுகிறது;
## படைகள் போரில் சந்திக்கின்றன

இதற்கிடையில் கடவுளர்களெல்லாம் ஜீயூஸின் தலைமையில் ஒன்றுகூடி, ஒலிம்பஸ் மலையின் தங்கத் தரைமீது அமர்ந்து விவாதித்தனர். சீமாட்டி ஹீபி, அவர்களுக்கு தங்கக் கோப்பை களில் அமுதம் வழங்கினாள். அங்கிருந்தபடியே, ட்ராய் நகரை எட்டிப்பார்த்தவண்ணம் அவர்கள் அமுதை அருந்தினர்.

குத்தலாகப் பேசி ஹீராவுக்கு எரிச்சலூட்டினான் க்ரோனஸின் மகனான ஜீயூஸ். ஆனாலும் அவன், மனமார அப்படிச் சொல்ல வில்லை.

'அர்கோஸிலிருந்து ஹீரா, அலல்கோமினேயிலிருந்து அதீனி இரண்டு தேவதைகளும் மெனிலயஸின் பக்கமிருக்கின்றனர். ஆனால், இங்கே உட்கார்ந்துகொண்டு நடப்பதை சும்மா கவனித்துக் கொண்டிருப்பதில்தான் அவர்கள் சந்தோஷமடை கிறார்கள். ஆனால் புன்னகை விரும்பும் அஃப்ரோடைட்டியோ, பாரிஸின் பக்கமே எப்போதும் இருக்கிறாள் சாவிலிருந்து அவனுக்கு பாதுகாப்பு கொடுத்துக்கொண்டு. தன் முடிவு வந்து விட்டது என்று நினைத்த பாரிஸை, சில கணங்களுக்கு முன்புதான் அவள் காப்பாற்றி கடத்திக்கொண்டு போனாள். எனினும், போர்த்திறம் மிக்க மெனிலயஸுக்கே வெற்றி நிச்சயமாகச் சென்றது. அடுத்து என்ன செய்ய வேண்டும் என்பதைப் பற்றி நாம் யோசிக்க வேண்டும். ஆக்ரோஷமும் ஆரவாரமும் கொண்ட தீங்கு விளைவிக்கும் இந்தப் போரை, மீண்டும் உற்சாகப்படுத்தப் போகிறோமா? அல்லது இரண்டு பக்கங்களுக்கிடையிலும் அமைதியை ஏற்படுத்தப் போகி

றோமா? தலைவன் ப்ரியமுடைய நகரம் அழிக்கப்படாதிருக்க வேண்டும்; ஹெலன் மெனிலயஸோடு மறுபடி சேரவேண்டும் நீங்கள் ஒப்புக்கொண்டால்! என்ன சொல்கிறீர்கள்?'

அவன் அப்படிச் சொன்னதும் அதீனியும் ஹீராவும் தங்களுக்குள் ஏதோ ரகசியமாகச் சொல்லிக்கொண்டனர். அவர்கள் அருகருகில் அமர்ந்து, ட்ரோஜன்களுக்கு எதிராக திட்டம் தீட்டிக் கொண்டிருந்தனர். எதுவுமே சொல்லாமல் வாய்மூடி மௌன மாக இருந்தாள் அதீனி. ஆனாலும் கோபம் கொப்பளிக்க, தந்தை ஜீயூஸை முறைத்தாள். தன் கோபத்தை, ஹீராவால் கட்டுப் படுத்தி வைத்திருக்க முடியவில்லை. அவள் சொன்னாள் :

'அனைவராலும் அஞ்சப்படும் க்ரோனஸின் மகனே ஜீயூஸ்! நீங்கள் என்ன சொல்ல வருகிறீர்கள் இப்பொழுது? ப்ரியமுக்கும் அவனது மகன்களுக்கும் பிரச்னை ஏற்படுத்தவேண்டி, நான் செய்த கடுமையான முயற்சிகளுக்கும் பட்ட கஷ்டங்களுக்கும் அனுபவித்த வேதனைகளுக்கும், எனது தேரிலிருந்து நான் சிந்திய வியர்வைக்கும் அர்த்தமில்லாமல் செய்யப்போகிறீர் களா? உங்கள் விருப்பப்படியே செய்யுங்கள். ஆனால், மற்ற கடவுள்களாகிய நாங்கள் யாரும் அதை ஆதரிக்கப் போவ தில்லை!'

மேகங்களை அணிவகுத்துச் செல்ல வைக்கும் ஜீயூஸ், கோபமாக பதில் சொன்னான்:

'என்ன சொன்னாலும் ஏன் புரிந்துகொள்ள மாட்டேனென் கிறாய்? அருமையாகக் கட்டப்பட்ட இலியம் நகரை அழித்து, ப்ரியமையும் அவனது மகன்களையும் பழிவாங்கத் துடிக்கும் அளவுக்கு அவர்கள் உனக்கு என்ன செய்தார்கள்? அந்நகரின் வாயில்களுக்குள்ளும் நீண்ட சுவர்களுக்குள்ளும் புயல்போல நுழைந்து, ப்ரியமையும் அவனது மகன்களையும் மற்றுமுள்ள அப்பாவிகளையும் கபளீகரம் செய்தால்தான் உனது கோபம் அடங்கும் போலுள்ளது. உனக்கு என்ன விருப்பமோ அதைச் செய்துகொள். நமக்குள் ஏற்படும் கருத்து வேற்றுமை, தீவிரமான உறவின் முறிவுக்கு வழிவகுப்பதை நான் விரும்பவில்லை.

'ஆனால், நான் இப்பொழுது சொல்லப்போவதை மனத்தில் வைத்துக்கொள். ஒரு நகரை அழிக்க வேண்டும் என்று நான் விரும்பி அதற்கான வாய்ப்பு எனக்கு வரும்போது, நான் தேர்ந்

தெடுக்கும் நகரில் உங்களுக்குப் பிரியமானவர்கள் இருந்தாலும் சரி, எனது கோபத்தைக் கட்டுப்படுத்த முயற்சி செய்யாதீர்கள். என்னை என் வழியில் செயல்பட விட்டுவிடுங்கள். ஏனெனில், இப்பொழுது நானாகவே உங்களுக்கு விட்டுக் கொடுத்திருக் கிறேன், எனக்குப் பிடிக்கவில்லையென்றாலும்! சூரியனுக்கும் நட்சத்திரங்களுக்கும் கீழே மரணிக்கும் மனிதர்கள் வசிக்கும் நகரங்களிலேயே, ப்ரியமும் அவனது சாம்பல் நிற குத்தீட்டிகள் ஏந்திய மக்களும் வாழும் புனித இலியம் நகரம்தான் என் மனத்துக்கு மிகவும் உகந்தது. எனது பலிமேடை, அவர்கள் கொடுத்த தாராளமான பலிப்பொருள்களால் எப்பொழுதுமே நிரம்பி இருந்தது. வெட்டப்பட்ட பலி மிருகங்களின் கொழுப்பு, திருப்படையலாகக் கொட்டப்பட்ட மது பானங்கள் என கடவுள்களான நமக்குச் செய்யவேண்டிய உரிய மரியாதைச் சடங்குகள் எதிலுமே, எப்பொழுதுமே அவர்கள் குறைவைத்த தில்லை.'

எருதுக்கண்ணாள் தேவதை ஹீரா பதில் சொன்னாள்

'அகண்ட தெருக்கள் கொண்ட அர்கோஸ், ஸ்பார்ட்டா, மைசினீ இம்மூன்று நகரங்கள்தான் நான் விரும்புபவை. உங்களது வெறுப்பை அவை சம்பாதிக்கும்போதெல்லாம் அந்த நகரங் களை நீங்கள் அழித்து விடுங்கள். அதற்காக உங்களிடம் நான் வந்து நிற்கமாட்டேன். அதன் பொருட்டு ஒரு முனகல்கூட செய்யமாட்டேன். அப்படியே அவற்றை நீங்கள் அழிக்க, நான் எதிர்ப்பு தெரிவித்தாலும் மறுத்தாலும் ஒன்றும் ஆகப்போவ தில்லை. உங்களை எதிர்க்கும் சக்தி எனக்குக் கிடையாது. என்றாலும், என் முயற்சிகள் வீணாகிவிடக் கூடாது. நானும் தெய்வீகமானவள்தான். நம்மிவருக்கும் ஒரே பெற்றோர்தான். அதோடு, அரிவாள் வீசும் க்ரோனஸின் எல்லா மகள்களிலும், இரண்டு விஷயங்களில் எனக்கு ஒரு முன்னுரிமை உண்டு. நான்தான் அனைவருக்கும் மூத்தவள், தலைமகள். அதோடு, நான் உங்களது மனைவி. நீங்களோ கடவுளர்களின் தலைவர்.

'எனினும் இந்த விஷயத்தில், ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்துக் கொள்வோம். எனக்கு நீங்களும், உங்களுக்கு நானும். மற்ற நித்தியக் கடவுளர் அனைவரும் நமது முன்னு தாரணத்தைப் பின்பற்றட்டும். உடனே, ட்ரோஜன் மற்றும் கிரேக்கப் படைகள் இருக்குமிடத்துக்குச் செல்லும்படி அதீனிக்கு உத்தரவிடுங்கள். பெருமைமிகு கிரேக்கர்களுக்குச் செய்து

கொடுத்த வாக்கை முதலில் மீறுபவர்களாக ட்ரோஜன்களை இருக்கும்படி செய்யச் சொல்லி அதீனிக்குச் சொல்லுங்கள்!'

அவள் அப்படிச் சொன்னதை, மனிதர்கள் மற்றும் கடவுளர்களின் தந்தையான ஜீயூஸ் ஏற்றுக்கொண்டான். உடனே அவன் அதீனியை அழைத்து அவசரமாகச் சொன்னான்:

'உடனே நீ, ட்ரோஜன் மற்றும் கிரேக்கப் படைகள் இருக்குமிடத்துக்குச் செல். பெருமைமிகு கிரேக்கர்களுக்குச் செய்துகொடுத்த வாக்கை முதலில் மீறுபவர்களாக ட்ரோஜன்கள் இருக்கும்படி செய்!'

ஜீயூஸ் இவ்விதம் சொல்லி உற்சாகப்படுத்தினான். அதீனியும் அப்படிச் செய்யத்தான் ஏற்கெனவே எண்ணியிருந்தாள். கடல் பயணிகளுக்கும், நிலத்தில் கூடாரமடித்துள்ள பெரும் சேனைகளுக்கும் ஓர் எச்சரிக்கைபோல, அரிவாள் சுழற்றும் க்ரோனஸின் மகன் ஜீயூஸ் அனுப்பிய கண்ணைப் பறிக்கும் கனல் பொறி பறக்கும் எரி நட்சத்திரம் போல ஒலிம்பஸ் மலையின் உயரங்களில் இருந்து இறங்கி வந்தாள் அதீனி. பூமிக்கு விரைந்து படைகள் இருக்கும் இடத்துக்குத் தாவிய பல்லாஸ் அதீனியைப் பார்த்தபோது அப்படித்தான் தோன்றியது. அந்தக் காட்சியைப் பார்த்து, குதிரைகளை அடக்கும் ட்ரோஜன்களும் கிரேக்கப் படை வீரர்களும் அச்சத்தால் நடுங்கினர். அவர்கள் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டு ஒரே குரலில் சொல்லினர்.

'பேரொலியும் பெரு அழிவும் தரும் போர் மறுபடியும் நடக்க இருக்கிறது என்றே தோன்றுகிறது. அல்லது பூமியில் நடக்க இருக்கும் யுத்தங்களின் மீது அதிகாரம் கொண்ட ஜீயூஸ், நமக்கிடையே அமைதி ஏற்படுத்தலாம்!'

கிரேக்கர்களும் ட்ரோஜன்களும் இவ்விதம் பேசிக்கொண்டார்கள். இதற்கிடையில் வலிமைமிகு ஈட்டி எறியும் வீரனான லோடோகஸ் என்பவனின் உருவத்தில், ட்ரோஜன்களின் படை முகாமுக்குள் புகுந்தாள் அதீனி. கடவுளையொத்த பான்டாரஸ் எங்கிருக்கிறான் என்று தேடினாள். அஸ்பியஸ் ஆற்றுப் பகுதியிலிருந்து புறப்பட்ட கேடயம் தாங்கிய பலம் பொருந்திய படைக்குத் தலைமை வகிக்கும் லைகாவோனின் மகன் சக்திமிகு லோடோகஸ், அப்படைகளின் பக்கமாக நின்றுகொண்டிருப்பதைப் பார்த்தாள். அவனருகே சென்று அவசரமாகச் சொன்னாள்

'லைகாவோனின் அறிவார்ந்த மகனே பான்டாரஸ்! நான் சொல்வதை நீ உடனே செய்ய வேண்டும். நீ மட்டும் அத்ரியூஸின் மகனாகிய மெனிலயஸ் மீது ஒரு பறக்கும் அம்பை எய்ய முடியுமானால், புகழினால் உன்னை நீ போர்த்திக்கொள்ளலாம். ஒவ்வொரு ட்ரோஜனும் உனக்குக் கடன்பட்டிருப்பான். முக்கிய மாக, தலைவன் பாரிஸ். உன் அம்பினால் வீழ்த்தப்பட்டு, பரிதாபமாக சிதையில் கிடத்தப்பட்டு மெனிலயஸ் இருப்பதை பாரிஸ் பார்ப்பானேயானால், மிக உயர்ந்த பரிசுப்பொருள்களை உனக்கு அவனே முதலில் கொண்டுவருவான். வா! புகழ்மிகு மெனிலயஸ்மீது அம்பெய்து கொல். புனித ஜீலியாவுக்குத் திரும்பிச் செல்லும்போது, லைசியாவில் அவதரித்த வில்கடவுள் அப்போலோவுக்கு, முதலில் பிறந்த கவர்ச்சிகரமான ஆட்டுக் குட்டியொன்றை அறுத்து பலியிடுவதாக உறுதி எடுத்துக்கொள்!'

அதீனி இவ்விதம் சொல்லி அந்த முட்டாளைத் தூண்டினாள். அங்கேயே, அப்பொழுதே அவன் பளபளக்கும் தனது வில்லை வெளியே எடுத்தான். நெஞ்சுப் பகுதியில் அவனே அம்பெய்து வீழ்த்திய பரிபூரண வளர்ச்சி பெற்ற காட்டு ஆட்டின் கொம்பு களினால் செய்யப்பட்டிருந்தது அது. அவன் அந்த மிருகத்துக் காகக் காத்திருந்து, பாறைகள் மிகுந்த மறைவிடத்திலிருந்து அது வெளிப்பட்டதும் அதை அடித்து வீழ்த்தினான். வானத்தைப் பார்த்தவாறு வீழ்ந்தது அது. அதன் தலையில் இருந்த கொம்பு கள், குறுக்காக ஒரு மீட்டர் அளவு நீளம் கொண்டதாக இருந்தது. கொம்பு சீவும் கலைஞன் ஒருவன், தன் தொழில் நேர்த்தியின் மூலம் அதை, வில்லின் வளைந்த பகுதிகளாக உருவாக்கிக் கொடுத்தான். அதை மிருதுவாக்கி, அதன் முனையில் அதைத் தொங்கவிடுவதற்கு ஏதுவாக தங்கக் கொக்கி ஒன்றையும் அமைத்தான்.

பான்டாரஸ், தனது வில்லை தரையில் உறுதியாக நிறுத்தினான். அதை வளைத்து நாண் ஏற்றினான். மெனிலயஸின் மீது அம்பெய்து தாக்குவதற்கு முன், போர்ப்பிரியர்களான கிரேக்கர் களிடமிருந்து வரும் தாக்குதல்களிலிருந்து அவனைக் காக்கும் பொருட்டு, அவனுடைய படைவீரர்கள் அவனைச் சுற்றி, தங்கள் கேடயங்களுடன் நின்றனர். பின் அவன் தன் அம்பறாத்தூணியின் மூடியைத் தூக்கி, அதிலிருந்து அதுவரை பயன்படுத்தப்படாத புதிய இறகுகள் கொண்ட ஓர் அம்பை எடுத்தான். அதற்குள் கறுப்பு வேதனை மறைந்திருந்தது. கூர்மையான அந்த அம்பை

வில்லில் ஏற்றினான். தனது ஊரான புனித ஜீலியாவுக்குத் திரும்பிச் செல்லும்போது, லைசியாவில் அவதரித்த வில்கடவுள் அப்போலோவுக்கு, கவர்ச்சிகரமான தலைச்சன் ஆட்டுக் குட்டி யொன்றை அறுத்துப் பலியிடுவதாக உறுதி எடுத்துக்கொண் டான். எருதுக் குடல் நாளங்களால் முறுக்கப்பட்ட வில்லின் இழைக்கம்பியில் அம்பை வைத்து, அதன் பின் முனையை இறுக்கிப் பிடித்து, அதைப் பின்னோக்கி வளைத்து இழுத்தான். வளைந்த கம்பி அவன் நெஞ்சைத் தொட்டது. அம்பின் இரும்பு நுனி, அதன் மறுமுனையில் தயாராக இருந்தது. அந்த மகா வில்லை ஒரு வட்டம்போல அவன் வளைத்ததும், அதிலிருந்து முறுக்கான நாணின் தெறிப்பொலி கிளம்பியது. ஓசையுடன் வில்லில் இருந்து புறப்பட்டு காற்றில் பறந்த அம்பு, எதிரிப் படையினரின் அணியை நோக்கிச் சென்றது.

ஆனால் அருள் வழங்கும் இறப்பில்லா கடவுள்கள், உன்னை மறக்கவில்லை மெனிலயஸ்! ஜீயூஸின் மகளும் போர்க்கடவுளு மான தேவதை அதீனி, அதில் முதலாவது ஆளாவாள். உனக்கு முன்னால் நின்றுகொண்டு அவள், உன்னை நோக்கி வந்த அந்த ஊடுறுவும் ஏவுகணையை, அமைதியாகத் தூங்கும் தன் குழந்தை யின் மீது அமரும் ஈயை விரட்டுவதுபோலத் தள்ளிவிட்டு, தசையை நோக்கி வந்த அதன் திசையை மாற்றினாள். இடுப்புக் கச்சையை இணைக்கும் தங்கக் கொக்கிகளும் உடலை மூடிய கவச உடையும் இணையும் இடத்துக்கு அதை தன் கையாலேயே வழிநடத்தினாள். அந்தக் கூர்மையான அம்பு, இடுப்புக் கச்சையைத் தாக்கியது. அலங்கரிக்கப்பட்ட அந்தக் கச்சையைத் துளைத்து, அதன் பின்னே இருந்த உடல் கவசத்தையும் தாண்டி, பறந்து வரும் ஆயுதங்களிலிருந்து இறுதிப் பாதுகாப்புக்காக அவன் அணிந்திருந்த உள்ளாடையையும் துளைத்துச் சென்றது. எனினும், அவனைக் காப்பாற்ற அது போதுமானதாக இருந்தது. இறுதியில் அந்த அம்பு, அழியக்கூடிய அவன் சதையை லேசாக உராய்ந்து சென்றது. உடனே அந்தக் காயத்திலிருந்து கறுப்பு ரத்தம் பீறிட்டு வந்தது.

கேரியா அல்லது மேயோனியாவைச் சேர்ந்த பெண்ணொருத்தி, தந்தத்தில் செய்யப்பட்ட குதிரையின் கன்னப் பட்டைக்கு கறுஞ்சிவப்பு நிறம் ஏற்றுவாள். அது கிடங்கில் பார்வைக்கு வைக்கப்படும். ஒவ்வொரு தேரோட்டியும் தனது குதிரைக்கே அது கிடைக்கவேண்டுமென்று விரும்புவான். ஆனால், அதுவோ ராஜாவின் குதிரைக்கான அலங்காரம். அரசுத்

தேரோட்டிக்கான கௌரவம் அது. அதைப்போல, ரத்தம் உனது அழகான தொடைகளையும் முழங்கால் தண்டையும் நனைத்து உனது குதிகால்கள் வரை செல்லுகிறது மெனிலயஸ்.

மெனிலயஸின் காயத்திலிருந்து கறுப்பு ரத்தம் பீறிடுவதைக் கண்ட மக்கள் தலைவன் அகமெம்னன் நடுநடுங்கினான். போர்த் திறம் கொண்டவனான மெனிலயஸும் பயந்து போனான். ஆனால் அம்பின் நுனி, உடலைத் தைத்து உள்ளே செல்லவில்லை எனத் தெரிந்ததும் பழைய நிலைக்கு வந்தான். ஆனால், தலைவன் அகமெம்னனிடமிருந்தும் அவனது வீரர்களிட மிருந்தும் ஒரு ஆழமான முனகல் வெளிப்பட்டது. மெனில யஸின் கரங்களைப் பற்றிக்கொண்டு அவன் சொன்னான்:

'என் அருமைச் சகோதரனே! நீ இறந்துபோனால் பழிக்குப் பழி வாங்குவதாக நான் சபதம் எடுத்தேன். அதனால்தான் உன்னைத் தனியாக இங்கே ட்ரோஜன்களோடு போரிட அனுப்பினேன். உன்மீது அம்பெய்தி நமது புனிய சத்தியங்களின் மீது நடந்து பார்த்திருக்கிறார்கள் அவர்கள். இப்பொழுது, பலி மிருகங்களின் ரத்தத்தாலும் ஊற்றப்பட்ட மதுவாலும் புனிதப்படுத்தப்பட்டு, நம் வலது கரங்களால் முறைப்படி முத்திரையிடப்பட்ட வாக்குறுதிகள் வீணாவதில்லை. ஒலிம்பிய ஜீயூஸ் தண்டனையை தாமதப்படுத்தலாம். ஆனால், இறுதியில் அவன் தண்டனையை முழுவதுமாக வழங்குவான். வாக்குறுதியை மீறுபவர்கள் நிச்சயமாக பெரிய விலையைக் கொடுக்கவேண்டி வரும். அது அவர்களின், அவர்கள் மனைவிகளின், அவர்கள் குழந்தைகளின் உயிர்களாக இருக்கும். அருமையான சாம்பல் நிற ஈட்டியுடைய ப்ரியமும் அவனது மக்களும், புனித நகரான இலியமும் நிச்சயம் அழிக்கப்படும் நாள் வந்துகொண்டிருக்கிறது என்றே என் உள் மனம் சொல்கிறது. ஒலிம்பஸ் மலையில் தனது உயர்ந்த அரியணையில் அமர்ந்திருக்கும் க்ரோனஸின் மகனான ஜீயூஸ், வாக்குத் தவறிய இந்த வஞ்சகர்கள் அனைவரின் மீதும் தனது அழிவின் இருள் கேடயத்தை ஆக்ரோஷமாக ஆட்டுவான். இதெல்லாம் நிச்சயமாக நடக்கும்.

'ஆனால் உனது விதி முடிந்து, உனது உயிர் மட்டும் பிரியு மானால், உனக்காக நான் எவ்வளவு துக்கப்படுவேன் தெரியுமா மெனிலயஸ்? தூசு நிறைந்த அர்கோஸுக்கு நான் திரும்பிச் செல்லும்போது, எவ்வளவு விமரிசனப் புயல்கள் வீசுமோ! கிரேக்கர்கள் உடனே ஊருக்குத் திரும்ப வேண்டும் என்று

விரும்புவார்கள். ப்ரியமும் அவனது வீரர்களும் பெருமை யடித்துக்கொள்ளுமாறு ஹெலனை நாம் அவர்களிடம் விட்டுச் செல்ல வேண்டும். இங்கே ட்ராய் நகர மண்ணில் எந்த வேலைக்காக இங்கு நீ வந்தாயோ, அந்த வேலை முடியாமல் நீ செத்த இடத்தில் உனது எலும்புகள் மக்கி மண்ணாகும். கீர்த்திமிகு மெனிலயஸின் கல்லறை மீது, திமிர் பிடித்த ட்ரோஜன் யாராவது ஏறிக் குதிப்பான், மிதிப்பான். அகமெம்னன் உண்டாக்கிய எல்லா சண்டைகளும் இவ்விதமே முடியட்டும். தோற்றுவிட்ட படையெடுப்பாக, வெற்றுக் கப்பல்களின் பின்வாங்கலாக, தீரமிகு மெனிலயஸைத் தனியாக விட்டுவிட்டு, இப்படித்தான் அவர்கள் பேசிக்கொள்வார்கள். அகண்ட பூமி என்னையும் விழுங்கட்டும் என்று நான் பிரார்த்திப்பேன்.'

செம்பொன்னிறமான தலைமுடி கொண்ட மெனிலயஸ் அவனை சமாதானப்படுத்தினான்

'அமைதியாக இரு. வீரர்களை அச்சுறுத்தாதே! கூர்மையான அம்பு முக்கியமான உறுப்பு எதையும் தொடவில்லை. அப்படி நடப்பதற்குள் எனது உலோக இடுப்புக் கச்சையும், உடல் கவசமும், அதன் கீழே இருந்த வெண்கலக் கம்மாளர் செய்து கொடுத்த உள்ளாடையும் அப்படி நடப்பதைத் தடுத்துவிட்டன!'

தலைவன் அகமெம்னன் பதில் சொன்னான்:

'அன்பான மெனிலயஸ்! நீ சொல்வது மட்டும் உண்மையாக இருந்தால், மருத்துவன் அந்தக் காயத்துக்கு மூலிகை மருந்து போட்டு குணப்படுத்தி வேதனையைப் போக்கிவிடுவான்.'

கடவுளையொத்த கட்டியக்காரன் டல்திபியஸை அழைத்துச் சொன்னான் அகமெம்னன்

'ஈடிணையற்ற மருத்துவன் அஸ்க்லிபியஸின் மகனான மெக்கே யானை எவ்வளவு விரைவில் முடியுமோ அவ்வளவு விரைவாக, மெனிலயஸைப் பார்ப்பதற்கு அழைத்து வா டல்திபியஸ். தன் கலையில் நன்கு தேர்ந்த யாரோ ஒரு ட்ரோஜன் அல்லது லைசிய வில்லாளி மெனிலயஸின் மீது அம்பெய்திருக்கிறான். புகழ் அவனுக்கு, வேதனை நமக்கு!'

அவன் அப்படிச் சொன்னதைக் கேட்ட கட்டியக்காரன் உடனே வெண்கலக் கவசமணிந்த கிரேக்க வீரர்களின் படைப்பிரிவை

நோக்கி விரைந்தான் வீரன் மெக்கேயானைத் தேடி. குதிரைகள் மேயும் திரிஸியில் இருந்து வந்த பலமான கேடயங்களைக் கொண்ட படைகளுக்குத் தலைவனாக, அவர்கள் பக்கம் அங்கே நின்றிருந்தான் மெக்கேயான். அவனிடம் சென்ற கட்டியக்காரன் சிறகுகள் கொண்ட வார்த்தைகளைச் சொன்னான்:

'சீக்கிரம் வா, அஸ்க்லிபியஸின் மகனான மெக்கேயானே! மெனிலயஸைப் பார்க்க, தலைவர் அகமெம்னன் உன்னை அழைத்துவரச் சொல்லியுள்ளார். தன் கலையில் நன்கு தேர்ந்த யாரோ ஒரு ட்ரோஜன் அல்லது லைசிய வில்லாளி, மெனிலய ஸின் மீது அம்பெய்திருக்கிறான். புகழ் அவனுக்கு, வேதனை நமக்கு!'

அவன் சொன்ன அந்தச் சொற்கள் மெக்கேயானின் இதயத்துள் நேரடியாகச் சென்றன. மாபெரும் கிரேக்கத் தரைப்படையின் அணிவகுப்பைத் தாண்டி விரைந்தான் அவன். அவர்கள் மெனிலயஸ் காயம் பட்டுக்கிடந்த இடத்தை அடைந்தபோது, மெனிலயஸைச் சுற்றி எல்லாத் தளபதிகளும் வட்டமாக நின்று கொண்டிருந்தனர். மெக்கேயான் மத்தியில் அமர்ந்து, இறுக்க மாக இருந்த இடுப்புக் கச்சையிலிருந்து அம்பை உருவினான். அப்பொழுது அம்பின் தலைப்பகுதியில் இருந்த கூர்முனைகள் உடைந்தன. பின் இடுப்புக் கச்சையையும், உடல் கவசத்தையும், அதன் கீழே இருந்த வெண்கலக் கம்மாளர் செய்து கொடுத்த உள்ளாடையையும் அவிழ்த்தான். சதையில் அம்பு தைத்த இடத்திலிருந்து, ரத்தத்தை உறிஞ்சி வெளியில் எடுத்தான். தன் தந்தை அஸ்க்லிபியஸிடம், ஒருமுறை குதிரை உடலும் மனித முகமும் கொண்ட இரக்க குணம் படைத்த கீரான் கொடுத்து வைத் திருந்த மூலிகைகளை, திறமையாக காயத்தின் மீது இட்டான்.

போர் முழக்கத் தலைவன் மெனிலயஸை இப்படி அவர்கள் கவனித்துக் கொண்டிருந்தபோது, கேடயம் கொண்ட ட்ரோஜன் படைகளின் அணிவகுப்பு தாக்குதலுக்கு முன்னேறியது. போர் செய்யவேண்டும் என்ற உறுதி புதுப்பிக்கப்பட்டவர்களாக, மறுபடியும் கவச உடைகளை கிரேக்கர்கள் அணியத் தொடங்கினர்.

அதன்பிறகு கடவுளையொத்த அகமெம்னன் உறங்குவதையோ, ஓய்வதையோ, போரிடத் தயங்குவதையோ பார்க்க முடிய வில்லை. ஆனால், மானிடருக்கு இறவாப் புகழ் சேர்க்கும்

போரில் கலந்துகொள்ள, விருப்பம் கொண்டவனாகவே இருந்தான். தன் குதிரைகளையும், வெண்கல முலாம் உள்பக்கம் பூசப்பட்ட தன் ரதங்களையும் பயன்படுத்தக் கூடாது என்று முடிவு செய்தான். எனவே அகமெம்னனின் உதவியாளனும் டாலமியின் மகனுமாகிய யூரிமிடன், அந்த ஜோடியை ஒதுக்கி வைத்தான். செருமிக்கொண்டே சென்றன குதிரைகள். ஆனால் மாபெரும் படைகளின் தலைவன் என்ற முறையில் சுற்றி வரும்போது களைப்பு ஏற்படுமானால், அந்த நேரத்தில் உதவியாக இருக்கும் பொருட்டு குதிரைகளையும் தேரையும் அருகிலேயே வைத்திருக்கும்படி தன் உதவியாளனுக்கு கவனமாக உத்தரவிட்டான் அகமெம்னன். பின் நடந்து சென்று வீரர்களின் அணிவகுப்பைப் பார்வையிட்டான்

தம் விரைவுக் குதிரைகளுடன் போரிடத் தயாராக இருந்த கிரேக்க வீரர்களைக் கண்டவுடன், அங்கு நின்று அவர்களைப் பாராட்டி உற்சாகப்படுத்தினான்.

'கிரேக்கர்களே! உங்கள் போரிடும் உணர்விலிருந்து கணநேரமும் நீங்கிவிடாதீர்கள். கொடுத்த வாக்கைக் காப்பாற்றாதவர்களுக்கு தந்தை ஜீயூஸ் உதவமாட்டார். முதலில் யார் தம் சத்தியங்களை மீறினார்களோ அவர்களுடைய மிருதுவான உடல்கள், பிணம் தின்னும் கழுகுகளுக்கு உணவாகப் போகும். நாம் அவர்களு டைய கோட்டையை அழித்த பிறகு, அவர்களின் அருமை மனைவிகளையும் குழந்தைகளையும் கப்பலில் ஏற்றிக்கொண்டு செல்வோம்.'

மாறாக, யாராவது அசிங்கமான போர் செய்யும் வேலையி லிருந்து ஒதுங்கி கடமையைச் செய்யத் தவறுவதைக் கண்டால், உடனே அவர்களைக் கோபமாக கண்டித்தான்.

'வாய் கிழியக் கத்தும் வெறுக்கத்தக்க கிரேக்கர்களே! உங்களுக்கு மானம் ரோஷம் இல்லையா? கட்டாந்தரையின் குறுக்கே களைப்புறும் வரையில் ஓடி, பின் எதிர்க்கும் திராணியற்று நின்றுவிடும் இளம் மான்குட்டிகளைப் போல, ஏன் அங்கே செய்வதறியாமல் நின்று கொண்டிருக்கிறீர்கள்? போரிடாமல் குழம்பி நிற்கும் உங்களைப் பார்த்தால் அப்படித்தான் தோன்று கிறது. அருமையாக அமைக்கப்பட்ட நமது கப்பல்களைத் தாக்க ட்ரோஜன்கள் வரும்போது, காப்பாற்றும் கரம் கொடுக்க ஜீயூஸ் வருவார் என்று காத்திருக்கிறீர்களா?'

இவ்விதமாக தளபதி என்ற முறையில், தனது படைகள் இருந்த இடங்களுக்கு விஜயம் செய்து பார்வையிட்டு அறிவுரை கூறி உற்சாகப்படுத்தி எச்சரித்து வந்தான் அகமெம்னன். இவ்விதம் சுற்றி வருகையில், போர்த்திறம் மிக்க இடொமீனியஸின் தலைமையில் போர் செய்ய ஆயத்தமாக வந்த க்ரீட்டன்கள் இருக்கும் இடத்துக்கு வந்தான். அனைவருக்கும் முன்னால் ஆண் காட்டுப் பன்றியைப் போல வீரமாக நின்று கொண்டிருந்தான் இடொமீனியஸ். பின்னால் இருந்த வீரர் களை மெரியோனிஸ் உற்சாகப்படுத்திக் கொண்டிருந்தான். அவர்களைப் பார்த்ததுமே அகமகிழ்ந்த மக்கள் தலைவன் அகமெம்னன், அன்புடன் இடொமீனியஸை நோக்கிக் கூறினான்

'இடொமீனியஸ்! போர்க்களமாக இருந்தாலும் சரி, வேறு வேலையாக இருந்தாலும் சரி. அல்லது மின்னும் மதுவை கிரேக்கத் தலைவர்கள் கலந்தூற்றிப் பருகும் மூத்த ஆலோசகர் களுக்கான விருந்தானாலும் சரி. விரைவுக் குதிரைகளைக் கொண்ட எல்லா கிரேக்கர்களிலும் உன் மீதுதான் நான் அதிக மரியாதை வைத்திருக்கிறேன். நீண்ட தலைமுடி கொண்ட மற்ற கிரேக்கர்களெல்லாம் தங்கள் கோப்பைகளைக் குடித்துக் காலி செய்துவிடும்போது, உன் கோப்பை மட்டும் என்னுடையதைப் போலவே குடிக்கப்படாமல் நிரம்பியிருக்கும் விரும்பும்போது பருகிக்கொள்ள வசதியாக. சரி. வா செல்வோம், போர்க் களத்துக்கு! உன்னைப் பற்றி எப்போதும் என்ன சொல்லியிருக் கிறாயோ அந்த மனிதனாக இருக்க வா!'

க்ரீட்டன்களின் தளபதியாகிய இடோமீனியஸ் பதில் சொன்னான்:

'அத்ரியூஸின் மகனே! எனது விசுவாசமான ஆதரவையும் இந்த பிரச்னை தொடங்கியபோது நான் உனக்குக் கொடுத்த வாக்குறுதி யையும் நீ எப்போதுமே நம்பலாம். மற்ற நீள்முடி கிரேக்கர்களை நீ போய் உசுப்பிவிடு. நாம் அனைவரும் இணைந்து போராடு வோம். செய்துகொடுத்த சத்தியத்தை ட்ரோஜன்கள் முறித்து விட்டதால், அவர்களைப் போர்க்களத்தில் சந்திப்போம். முதலில் சத்தியத்தை முறித்தவர்கள் அவர்கள்தான் என்பதால், அவர்களுக்கு மரணத்தையும் அழிவையும் தவிர வேறு எதுவும் கிடைக்கப் போவதில்லை.'

அப்படி அவன் பேசியதும் அகமகிழ்ந்த அகமெம்னன், அவ்விடத்தை விட்டகன்றான். தளபதி என்ற முறையில் தனது படைகள் இருந்த இடங்களுக்கு விஜயம் செய்து பார்வையிட்டு வந்த அவன், அஜாக்ஸ், ட்யூஸர் ஆகிய இரு சகோதரர்களைப் பார்த்தான். அந்த இருவரும் தம் தலைக்கவசங்களை அணிந்து கொண்டிருந்தனர். அவர்களுக்குப் பின்னால் காலாட்படை வீரர்கள் அணிவகுத்து மேகம்போல நின்றுகொண்டிருந்தனர். கர்ஜிக்கும் மேற்குக் காற்றால் துரத்தப்பட்டு ஒரு மேகம் கடலின் குறுக்கே விரைந்து வருவதைப் பார்க்கிறான் ஓர் ஆட்டிடையன். ஆட்டிடையன் மேகத்திலிருந்து தூரமாக இருந்தாலும், அவனை நோக்கி நிலக்கீல் போலக் கருமை நிறம் கொண்ட அந்த மேகம், பெரும் புயல் காற்றையும் சேர்த்துக்கொண்டு விரைந்து வருவதைப் பார்த்து அவன் அஞ்சி, தன் ஆட்டுக்குட்டிகளை ஒரு குகைக்குள் பாதுகாப்பாக அனுப்புகிறான். இரு சகோதரர்களின் தலைமையின் கீழ், நெருக்கமாக தங்கள் கறுப்புக் கேடயங்கள் மற்றும் ஈட்டிகளுடன் போருக்குச் செல்ல ஆயத்தமாக நின்று கொண்டிருந்த ஒலிம்பஸ் மலையில் உருவான அந்த வீரர்கள் அப்படித்தான் இருந்தார்கள். அவர்களைப் பார்த்து அகமகிழ்ந்த அகமெம்னன் அவசரமாகச் சொன்னான்:

'வெண்கலக் கவசமணிந்த கிரேக்கர்களின் தலைவர்களே! அஜாக்ஸ், ட்யூஸர்! உங்களுக்கு உத்தரவுகள் ஏதும் நான் கொடுக்கப்போவதில்லை. உங்களை உற்சாகப்படுத்த வேண்டிய அவசியமே இல்லை. உங்களுடைய தலைமையே உங்கள் வீரர் களை தலைசிறந்த முறையில் போரிடத் தூண்டுவதற்குப் போதுமானதாக இருக்கிறது. தந்தை ஜீயூஸ், அதீனி, அப் போலோ ஆகியோருக்கு மட்டும் உங்களுடைய மனப்பான்மை இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்? ப்ரியமின் நகரம் வெகு விரைவிலேயே பிடிக்கப்படும், அழிக்கப்படும், கிரேக்கர்களின் கையில் ஒப்படைக்கப்படும்.'

இவ்வார்த்தைகளுடன் அகமெம்னன் அவர்களை விட்டகன்று, வேறிடம் சென்றான். அங்கே அவன் தெளிவான குரல் கொண்ட வனான பைலோஸ் நகரத்து நெஸ்டரைச் சந்தித்தான். தம் படைகளின் தலைவர்களான பெலெகான், அலாஸ்டர், க்ரோ மியஸ், தலைவன் ஹீமோன், மக்கள் மேய்ப்பன் பியஸ் ஆகி யோரின் கீழ் படைகளை அணிவகுத்து வைத்து, போருக்குத் தயார் செய்து கொண்டிருந்தான் அவன். ரதங்களையும் குதிரை

களையும் தேரோட்டிகளையும் முன்பக்கமாக நிற்க வைத்தான் நெஸ்டர். பின்பக்கமாக பல துணிச்சலான காலாட்படை போர் வீரர்களை நிறுத்தினான். கொஞ்சம் பலவீனமானவர்களை மத்தியில் நிற்க வைத்தான். இப்படி அவன் செய்ததால் தயக்கமுள்ளவர்கள்கூட போரிட்டே ஆகவேண்டும் என்ற சூழ் நிலையை உருவாக்கினர்ன். குதிரைகளைக் கட்டுப்பாட்டில் வைத்திருக்கும்படியும், கும்பலிலும் குழப்பத்திலும் மாட்டிக் கொள்ளவேண்டாம் என்று தன் தேரோட்டிகளுக்கு முதலில் உத்தரவிட்டான்.

'துணிச்சலும் திறமையும் இருந்தால் மட்டும் முன்னேறிச்சென்று ட்ரோஜன்களோடு சண்டையிடும் உரிமை வந்துவிடும் என்று எந்த ஒரு தேரோட்டியும் நினைத்துவிட வேண்டாம். யாரும் பின் தங்கிவிடாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். அப்படிச் செய்தால் நமது முழு படையும் பலவீனமடைந்துவிடும். தேரில் இருக்கும் வீரன் ஒருவன் அதிலிருக்கும்போதே எதிரியை எதிர்கொள்ள நேர்ந்தால், முதலில் ஈட்டி எறிதலை நிகழ்த்த வேண்டும். அதுதான் குறிக்கோளை அடைவதற்கான சிறந்த முறையாகும். அதுவே நமது நெறியும் வீரமும் ஆகும். அப்படித்தான் நமது முன்னோர்கள் பெரும்பெரும் நகரங்களையும் கோட்டை கொத்தளங்களையும் புயலெனத் தாக்கி வெற்றி கொண்டார்கள்.'

முதியவனான நெஸ்டர் தனது பழங்கால போர்க்கள அனுபவங் களிலிருந்து பெற்றதையெல்லாம் எடுத்துச்சொல்லி தன் வீரர்களை இவ்விதமாக உசுப்பேற்றினான். அதைக் கேட்டு அகமகிழ்ந்த அகமெம்னன் அவசரமாகச் சொன்னான்:

'மரியாதைக்குரிய வீரரே! உங்களது மன உறுதிக்கு இணையாக உடலுறுதியும் ஊனமுறாமல் இருந்திருக்குமானால் நான் எவ்வளவு மகிழ்வேன்! ஆனால், யாருமே தவிர்க்க முடியாத முதுமை உங்கள் மீது கனமாக இறங்கியுள்ளது. அதை நீங்கள் வேறு யாருக்காவது மாற்றிக் கொடுத்துவிட்டு, இளைர்களின் அணியில் சேர முடியுமானால் எப்படியிருக்கும்?'

இது கேட்ட கிரேக்கத் தேரோட்டியான நெஸ்டர் பதில் சொன் னான்:

'அத்ரியூஸின் மகனே! கடவுளையொத்த எரியூதாலியனைப் போரில் கொன்றவனே! அந்த இளையவீரனாக மறுபடியும்

மாறிவிடத்தான் நான் எவ்வளவு ஆசைப்படுகிறேன்? ஆனால், கடவுளர்கள் எல்லா வரங்களையும் நமக்கு ஒரே நேரத்தில் கொடுத்துவிடுவதில்லை. அப்போது நான் இளைஞனாக இருந்தேன். ஆனால், இப்பொழுதோ முதுமை என்னைக் கடினமாக அழுத்துகிறது. ஆனால் எது எப்படியிருப்பினும், இப்பொழுதும்கூட நான் என் தேரோட்டிகளுடன் அவர்களுக்கு உத்தரவுகள் கொடுப்பவனாகவே இருக்கிறேன். உடல் உறுதியின் காரணமாக, இளைஞர்களிடம் ஈட்டிகள் கொடுக்கப் பட்டிருந்தாலும், அவர்களுடைய போர்முறைகளும் அவர்களுக் கான கட்டளைகளும் என்னிடமிருந்தே வருகின்றன. முதுமை யில் கிடைக்கும் முன்னுரிமை அதுதான்!'

அப்படி அவன் பேசியதும் அகமகிழ்ந்த அகமெம்னன், அவ்விடம் விட்டகன்றான். அடுத்து, பீட்டியாஸின் மகனும் குதிரையோட்டியுமான மெனெஸ்தியூஸைப் பார்த்தான். போர் முழக்கம் செய்வதில் சிறந்த அவனுடைய அதீனியப் படை வீரர்களும் அவனோடு சோம்பேறித்தனமாக நின்றுகொண்டிருந் தனர். அவர்களுக்கு அருகில் கணிசமான எண்ணிக்கை கொண்ட செஃபல்லோனியப் படைவீரர்களுடன் ஒடிஸியூஸும் நின்று கொண்டிருந்தான். அவர்களும் ஒன்றும் செய்யாமலே நின்று கொண்டிருந்தனர். கிரேக்கப் படைகளும் ட்ரோஜன் படைகளும் அப்பொழுதுதான் போரைத் துவக்கியிருந்ததால், போருக்கான அழைப்பு அவர்களுடைய செவிகளுக்கு இன்னும் வந்து சேராமலிருந்தது. எனவே, அவர்கள் வேறு ஏதாவதொரு கிரேக்கப் படைப்பிரிவினர், ட்ரோஜன்களுக்கு எதிராக முன்னேறி போர் தொடங்கிவிட்டதை அறிவிக்கட்டும் என்று காத்திருந் தனர். இதைக் கண்டதும் மக்கள் தலைவனான அகமெம்னன் கோபமாக அவர்களை நோக்கிக் கூறினான்

'உயர்வானதொரு தந்தையின் மகனாகிய மெனஸ்தியூஸ்! நுட்ப மான பயிற்சிகளில் சிறந்த ஒடிஸியூஸ்! எதிலுமே முதல்வனாக இருக்கத்தானே விரும்புவீர்கள்? ஏன் மற்றவர்களை முன்னேற விட்டுவிட்டு இப்படிப் பின்தங்கியிருக்கிறீர்கள்? போரின் உக்கிரத்தையெல்லாம் தாங்கும் முதல் வரிசையில் அல்லவா உங்கள் இடம் இருக்க வேண்டும்? நமது மூத்த ஆலோசகர் களுக்கு விருந்தளிக்கையில், என்னிடமிருந்து போருக்கான முதல் அழைப்பை நீங்களல்லவா பெற்றீர்கள்? அந்த மாதிரி நேரங்களில், வறுத்த கறியையும் இனிய மதுவையும் விரும்பிய

அளவு நெடுநேரம் சுவைப்பதில் நீங்கள் மகிழ்ந்தீர்கள். ஆனால் இப்போதோ பயந்து கிரேக்கப் படைப்பிரிவினர் எதிரிகள் மீது பாய்ந்து தாக்குவதைப் பார்த்துக்கொண்டு இங்கே சந்தோஷமாக நின்றுகொண்டிருக்கிறீர்கள்.

விரைவாகச் சிந்திக்கும் ஒடிஸியூஸ், அகமெம்னனை நோக்கி முறைத்துவிட்டுக் கூறினான்:

'அத்ரியூஸின் மகனே! ஏன் இப்படியெல்லாம் பேசுகிறாய்? குதிரைகளை அடக்கும் ட்ரோஜன்களுக்கு எதிராக யுத்த நாய்களை அவிழ்த்துவிடும் கிரேக்கர்களாகிய எங்களைப் பார்த்து போரைத் தவிர்க்க நினைக்கிறோம் என்று ஏன் கூறுகிறாய்? உன் விருப்பம் அதுவானால், டெலிமாக்கஸின் தந்தை முன்வரிசையில் சென்று குதிரைகளை அடக்கும் ட்ரோஜன்களுடன் தீவிரமாகப் போர் செய்வான். நீ தேவையில்லாமல் பேசவேண்டாம்.'

ஒடிஸியூஸ் கோபமாக இருப்பதை தலைவன் அகமெம்னன் புரிந்துகொண்டதும் புன்னகைத்துவிட்டு, மன்னிப்புக் கோரும் விதமாகச் சொன்னான்:

'ஒலிம்பஸ் மலையில் பிறந்த லார்ட்டஸின் மகனே! செயல்திறம் மிக்க ஒடிஸியூஸ்! நான் உண்மையில் உன்னைத் தாக்கவில்லை. உனக்கு இனிமேலும் என்னிடமிருந்து உத்தரவுகள் ஏதும் கிடையாது. உன்னுடைய உள் மனத்தில் நீ என்னோடு இருக் கிறாய் என்பதை நான் அறிவேன். உண்மையில் நாம் இருவரும் உடன்பாட்டுடனேயே இருக்கிறோம். நான் ஏதாவது தவறாகச் சொல்லியிருந்தால், அதற்கு நான் பின்னால் ஈடுசெய்துவிடு கிறேன். என் வார்த்தைகளை, கடவுளர்கள் காற்றில் சிதறடித்து விடட்டும்!'

இந்த வார்த்தைகளுடன் அகமெம்னன் அவ்விடம் விட்டகன்று மற்றவர்களிடம் சென்றான். அங்கே குதிரைகள் மற்றும் அருமை யாக வடிவமைக்கப்பட்ட ரதங்களுக்கு மத்தியில் டைடியூஸின் மகன் தாராள மனம் படைத்த டயமீடிஸ் சும்மா நின்றுகொண் டிருந்தான். கானியூஸின் மகன் ஸ்தெனீலஸ் அவனருகில் இருந்தான். அவர்களைக் கண்டதும் மக்கள் தலைவனான அகமெம்னன் கோபமாக அவர்களை நோக்கிக் கூறினான்

'தளராத தேரோட்டியான டைடியூஸின் மகனான டயமீடிஸ்! நான் என்ன சொல்வது? ஏன் இப்படி சும்மா படைவீரர்களை பார்த்துக்

கொண்டு நிற்கிறாய்? இப்படி வெற்றாக நின்றுகொண்டிருப்பது உன் தந்தையின் வழக்கமல்ல. போரில் முன் வரிசையில் நின்று சண்டையிடுவதே அவர் முறை. போரில் அவரைப் பார்த்தவர்கள் அப்படித்தான் சொன்னார்கள். அவர்களிலெல்லாம் அவரே தலைசிறந்தவரென்றும் சொன்னார்கள். மைசினீக்கு ஒருமுறை அவர் வந்திருந்தார். சண்டைப்போட அல்ல. ஒரு தனிப்பட்ட அலுவல் நிமித்தம், கூடுதல் போர்வீரர்கள் கேட்டு கடவுளை யொத்த பாலினீஸிஸை சந்திக்க வந்தாராம். ஆனால், அவரை நான் ஒரு தடவைகூட நேரில் சந்தித்ததுமில்லை; பார்த்தது மில்லை. ஈட்டியோக்கிள்ஸை விரட்டுவதற்காக புனித தீப்ஸ் நகரின் மதில்கள் தாக்கப்பட்டுக் கொண்டிருந்த நேரம் அது. நம்மிடம் போதுமான ஆதரவு தரும்படி அவர்கள் கெஞ்சிக் கேட்டுக்கொண்டிருந்தார்கள். நம்மவர்கள், பரிவுடன் அவர்கள் கேட்டதையெல்லாம் கொடுத்தார்கள்.

'ஆனால் சில கெட்ட சகுனக் குறிகளின் மூலம், ஜீயூஸ் நமது மனத்தை மாற்றிவிட்டார். எனவே டைடியூஸூம் அவரது வீரர்களும் மைசினியை விட்டுச் சென்றுவிட்டனர். அவர்கள் சாலை வழியாகக் கொஞ்ச தூரம் சென்று, புல்வெளிகளையும் தீப்ஸூக்கு அருகில் உள்ள அஸோபஸ் ஆற்றின் நாணல்கள் மிகுந்த கரைப்பகுதியையும் அடைந்ததும், கிரேக்கர்கள் டைடியூஸூக்கு ஒரு செய்தியை நகருக்குள் அனுப்பினர். நகருக்குள் நுழைந்த அவர், அங்கே காட்மஸின் மக்களாகிய தீபியர்களின் பெரும் கும்பல் ஒன்று, தங்களின் வலிமைமிகு தலைவன் ஈட்டியோக்ளிஸின் அரண்மனையில் விருந்துண்டு கொண்டிருப்பதைக் கண்டார். தீபியன்களின் அந்தக் கும்பலில் தனி ஆளாக நுழைந்தாலும், அவருக்கு அச்சமேதும் ஏற்பட வில்லை. மல்யுத்தப் போட்டிகளுக்கு அவர்களை அழைத்தார். ஒவ்வொரு போட்டியிலும் அவரே வென்றார். ஏனெனில், அவருக்கு உதவி செய்ய அதீனி இருந்தாள்.

'குதிரைப்பந்தயத்தில் ஈடுபடும் தீபியர்களுக்கு அது கோப மூட்டியது. டைடியூஸ் போனபிறகு அவர்கள் கூடி, அவர் போகும் வழியில் கடவுளையொத்த மேயான், உறுதிமிக்க பாலிஃபாண்டிஸ் ஆகிய இரு தலைவர்களின் கீழ் ஐம்பது பேர் கொண்ட படையை அனுப்பி, எதிர்பாராத ஒரு தாக்குதலை நடத்த முடிவு செய்தனர். ஆனால் டைடியூஸ் அவர்களுக்கு நல்ல பாடம் கற்பித்து, அவர்களுக்கு ஓர் அசிங்கமான முடிவைக் கொடுத்தார். ஒருவனைத் தவிர, மற்ற அனைவரையும் அவர்

கொன்றார். கடவுளர்களிடமிருந்து கிடைத்த சைக்கினைகளின் பொருட்டு மேயானை மட்டும் தப்பித்துப் போகவிட்டார்.

'அதுதான் ஈட்டோலியாவின் டைடியூஸ். நீயோ அவருடைய மகன். வாய்வீச்சில் அவரைவிட நீ சிறப்பானவன். என்றாலும், வாள்வீச்சில் அவரைப் போல நீ இல்லை.'

இப்படி அகமெம்னன் சொன்னதும், சக்திமிகுந்த டயமீடிஸ் ஒன்றும் பேசவில்லை. தான் மதிக்கும் தன் தலைவனின் வ்சவை கடமையாக எண்ணி ஏற்றுக்கொண்டான். ஆனால், புகழ்மிகு கானியூஸின் மகன் ஸ்தெனீலஸ் பேசினான்:

'அத்ரியூஸின் மகனே! விபரங்களெல்லாம் உனக்குத் தெரியும். அதனால் பொய் சொல்ல வேண்டாம். நாங்கள் எங்கள் தந்தைமார்களைவிட பலமடங்கு சிறந்தவர்கள் என்று நான் சொல்வேன். ஏழு வாயில் கொண்ட தீப்ஸ் நகரைப் பிடிப்பதில் நாம் வெற்றி கண்டோம். ஒரு பலவீனமான படையை வைத்துக்கொண்டு, சக்திமிகுந்த எதிரிகளை புயல்போலத் தாக்கினோம் நாம். காரணம் ஜீயூஸின் உதவியையும், மற்ற கடவுளர் நமக்கு அனுப்பிய குறிப்புகளையும் நாம் நம்பினோம். ஆனால் நம்முடைய தகப்பன்மார்களோ, அவர்களுடைய கவனமின்மையால் அழிக்கப்பட்டார்கள். எனவே, நம்மைப் பற்றிப் பேசுவதைப் போலவே, நமது தகப்பன்மார்களையும் பற்றிப் பேசவேண்டாம்!'

வலிமைமிகு டயமீடிஸ், ஸ்தெனீலஸை முறைத்துவிட்டுச் சொன்னான்:

'அமைதியாக நான் சொல்வதைக் கேள். கிரேக்கர்களை போரிடத் தூண்டுவதற்காக, மக்கள் மேய்ப்பனாகிய அகமெம்னனோடு நான் சண்டைபிடிக்கப் போவதில்லை. கிரேக்கர்கள் ட்ரோஜன் களைத் தோற்கடித்து, புனித இலியம் நகரைப் பிடிப்பார்களே யாயின், அந்தப் பெருமை அகமெம்னனையே போய்ச் சேரும். அதே சமயம், கிரேக்கர்கள் தோற்பாற்களேயானால், அந்தத் துயரமும் அவனையே சேரும். வா! போர் செய்ய வேண்டிய உணர்வை நாம் இருவரும் எழுப்பிக்கொள்ள வேண்டிய நேரம் வந்துவிட்டது.'

இவ்விதம் பேசிய அவன், முழுமையாக போருடை அணிந்தவனாக தன் தேரிலிருந்து தரையில் குதித்தான். களத்தில் அவன்

இறங்கியதும், அவனுடைய வெண்கல மார்புக் கவசமானது பயங்கரமாக ஒலிக்க ஆரம்பித்தது. வீரம் நிறைந்த எந்த நெஞ்சையும் நடுநடுங்கச் செய்யும் விதமாக அது இருந்தது.

மேற்கிலிருந்து வரும் கடுங்காற்றில், பேரொலி எழுப்பும் கரையோரமாக கடல் அலைகள் ஒன்றை ஒன்று துரத்திய வண்ணம் எழுகின்றன. கடலில் வெகு தூரத்தில் வெண் புரவிகள் எழுகின்றன. பின், அவை கரைக்கு வந்து இடிமுழக்கத்துடன் உடைந்து விழுகின்றன. பின், வளைவாக எழுந்து, உப்புத் தண்ணீர்த் துளிகளை தெளித்தவண்ணம் மேலே மேலே முன் னேறுகின்றன. அதைப்போல, கிரேக்கப் படையினர் போர்க் களத்தில் ஓய்வின்றி முன்னேறினர். ஒவ்வொரு தலைவனும் உத்தரவுகள் வழங்க, அமைதியாக முன்னேறிச் சென்றன படைகள். இவ்வளவு பெரிய படை அணிவகுத்து வந்த தென்றோ, அதற்கு ஒரு குரல் இருந்ததென்றோ நீங்கள் நம்பமாட்டீர்கள். தம் தலைவர்களுக்கு அஞ்சிய அப்படைகள், அவ்வளவு அமைதியாக முன்னேறின. அவர்கள் அணியணியாக முன்னேற முன்னேற, அவர்களுடைய அலங்காரமான கவச உடைகள் மின்னின.

ட்ரோஜன்களைப் பொருத்தவரை, ஒரு பணக்காரனின் மந்தை யில், தம் குட்டிகளின் குரல் கேட்டு பதில் கொடுத்து கத்தி கொண்டும், பால்கொடுத்துக் கொண்டும் நிற்கும் ஆயிரக் கணக்கான செம்மறியாடுகளைப் போல அவர்கள் இருந்தனர். அவர்களின் பெரும்படையிலிருந்து ஓர் ஆரவாரம் கிளம்பியது. படையினர் பல பகுதிகளில் இருந்து வந்திருந்ததாலும், பல மொழிகளைக் கலந்து அவர்கள் பேசியதாலும், அவர்களின் பேச்சும் வட்டார வழக்கும் வித்தியாசங்கள் கொண்டதாக இருந்தது.

ட்ரோஜன் படைகளை போர்க்கடவுள் ஏரிஸூம், கிரேக்கப் படைகளை சாம்பல் நிறக்கண்ணாள் அதீனியும் போர் செய்யத் தூண்டினர். பயமும் பரபரப்பும் அதீனியோடு வந்தது. மனிதர் களைக் கொல்லும் ஏரிஸின் இரக்கமற்ற உறுதிகொண்ட சகோதரி யான சண்டையும் அப்படியே இருந்தாள். ஆரம்பத்தில் சின்ன தாக இருந்த அவள், மேலே சென்றாலும் அவளுடைய கால்கள் பூமியின் மீதே இருந்தன. ஆனால், அவள் தலைமட்டும் உயர்ந்த ஒலிம்பஸ் மலையின் உச்சியை அடைந்தது. இப்பொழுது அவளும் ட்ரோஜன்களுக்கும் கிரேக்கர்களுக்கும் மத்தியில்

படர்ந்து வந்தாள். ஒருவருக்கொருவர் வெறுப்பை வளர்த்த வண்ணம்; மரண ஓலங்களின் எண்ணிக்கை அதிகமாவதை நிச்சயித்த வண்ணம்.

படைகள் முன்னேறி ஓரிடத்தில் சந்தித்தன. கேடயங்களும், ஈட்டிளும் மோதின. வெண்கலக் கவச உடைகளணிந்த வீரர்கள் பொருதினர். குமிழ்களுள்ள கேடயங்கள் மோதிக்கொண்டன. உயிர் பிரிந்து கொண்டிருந்தவர்களின் அலறல்கள், வெற்றி கொண்டவர்களின் திமிர்ச் சிரிப்பொலிகள் என பேரொலி கிளம்பி மேலே சென்றது. பூமியில் ரத்தம் வழிந்தோடியது. மிக உயரத்தில் உள்ள ஊற்றுகளினால் உருவான பனிக்காலத்து மலை நதிகள் இரண்டு, ஆழமான காட்டுக்குள்ளே பெருவெள்ளமோட சந்தித்துக் கொண்டபோது உண்டாகும் சப்தம், இடிமுழக்கம் போல இருப்பதை மலை மீது தூரமான இடத்தில் நிற்கும் ஆட்டிடையன் கேட்பதுபோல இருந்தது இரு தரப்புப் படைகளும் கத்திக்கொண்டே பேரொலி எழுப்பிப் போரிட்டதைப் பார்த்தபோது.

ட்ரோஜன்களின் படையில் முன் வரிசையில் நின்று முழுப் போருடையுடன் போர்செய்த வீரமிகு ஈக்கிபோலஸை, முதலில் கொன்றான் ஆன்ட்டிலோகஸ். இறகுகள் கொண்ட அவனது தலைக்கவசத்தின் ஓரத்தில் அடித்தான் ஆன்ட்டிலோகஸ். வெண்கல ஈட்டி அவனது நெற்றியில் தாக்கி, எலும்பைத் துளைத்துக்கொண்டு உள்ளே நுழைந்தது. அவனது கண்களை இருள் கவ்வியது. போரின் நடுவில் வீழ்ந்த கோபுரம் போல அவன் வீழ்ந்தான்.

அவன் வீழ்வதைப் பார்த்த தாராள மனம் கொண்ட அபான்ட்டியர்களின் தலைவனான எலிஃபீனர், உடனே கால்களால் அவனைத் தாங்கிப் பிடித்து, களத்திலிருந்து அவனை விரைவாக அப்புறப்படுத்த நினைத்து இழுத்துக்கொண்டு போனான், அவனது கவச உடையைக் கழற்றிவிடும் அக்கறையில். ஆனால், அவனது முயற்சி நீடிக்கவில்லை. அவன் ஈக்கிபோலஸின் உடலை இழுத்துக்கொண்டு போவதை அகீனோர் பார்த்தான். தனது வெண்கல ஈட்டியால் எலிஃபீனரின் இடுப்பில் அவன் குத்தினான். எலிஃபீனர் குனிந்து கொண்டிருந்ததால் அவனது கேடயம் விலகி அந்த நேரம் அவனது இடுப்பு தெரிந்தது. அகீனர் அவனை வீழ்த்தினான். அவனது உயிர் பிரிந்தது. அதன் பொருட்டு, கிரேக்கர்களுக்கும் ட்ரோஜன்

களுக்கும் சண்டை தீவிரமாக வலுத்தது. ஓநாய்களைப் போல ஒருவர் மீது ஒருவர் விழுந்தனர் ஒருவரை ஒருவர் இறுக்கிப் பிடித்தவண்ணம்.

அதன் பிறகு டிலாமனின் மகனாகிய அஜாக்ஸ், திருமணமாகா மல் இளமையின் உச்சியில் இருந்த ஆந்திமியானின் மகன் சிமாய்சியஸைத் தாக்கினான். தங்களது செம்மறியாடுகளைப் பார்ப்பதற்காக பெற்றோருடன் அய்டா மலைக்குச் சென்று விட்டுத் திரும்பி வரும் வழியில், சிமாய்ஸ் ஆற்றங்கரைப் பகுதியில்தான் அவனது தாய் அவனைப் பெற்றெடுத்தாள். அதனால் அவனை சிமாய்சியஸ் என்று அழைத்தனர். தன் பெற்றோர் காட்டிய அன்புக்கு, தக்க பதில் செலுத்தும் முன்பே வெகு விரைவாக அவனது வாழ்க்கை முடிந்துபோனது. பெரிய மனம் கொண்ட அஜாக்ஸின் ஈட்டியை அவன் சந்தித்தபோது, அது முடிந்து போனது. அந்த இளைஞன் முன் வரிசையில் இருந்து முன்னேறி வந்தபோது, அவனது வலது மார்புக் காம்பில் அடித்து அவனை வீழ்த்தினான் அஜாக்ஸ். அவனது தோளைத் துளைத்துக்கொண்டு சென்றது அஜாக்ஸின் வெண்கல ஈட்டி. மேல்பக்கமாக கிளை விட்டுக்கொண்டு, வெட்டப்பட்ட அடிமரப் பகுதியுடன் கீழே சாயும் நீர் நிறைந்த புல்வெளியில் வளரும் ஒருவகை நெட்டிலிங்க மரம் போல, மண்ணில் சாய்ந்தான் அவன். தேர் செய்பவன், அதன் துண்டு களை மின்னும் கோடரியால் வெட்டி எடுத்து, தேர்ச்சக்கரங் களில் விளிம்புகள் செய்து தன் அழகான தேரை அலங்கரிப் பான்.

ஆனால், இப்போதைக்கு அது ஆற்றின் கரையிலேயே கிடந்து உரிய காலம் வரை காயட்டும் என்று விட்டுவைப்பது போல, ஆந்திமியானின் மகன் சிமாய்சியஸை வெட்டினான் அஜாக்ஸ்.

அப்போது பொலிவான கவச உடையணிந்திருந்த ப்ரியமின் மகனான ஆன்ட்டிஃபஸ் அஜாக்ஸ் மீது, ஒரு கூர் ஈட்டியை எறிந்தான். அது அஜாக்ஸின்மீது படவில்லை. ஆனால் ஒடிஸி யூஸின் துணிச்சலான தோழர்களில் ஒருவனான லியூகஸை, சிமாய்ஸியஸின் உடலை அவன் இழுத்துக்கொண்டிருந்தபோது அவனது உயிர்த்தலத்தில் தாக்கியது அது. சிமாய்ஸியஸின் உடல், அவன் கையிலிருந்து நழுவி மண்ணில் விழுந்தது. அவனும் அதன்மீதே விழுந்தான்.

லியூகஸ் கொல்லப்பட்டதை அறிந்த ஒடிஸியூஸ், வெகுண் டெழுந்தான். தன் வெண்கலக் கவச உடை பளபளக்க, முன் வரிசை அணிவகுப்புகளைக் கடந்து, எதிரிகள் இருந்த இடத்தை நோக்கிச் சென்று அங்கே நின்று, சுற்றும்முற்றும் கவனமாகப் பார்த்து மின்னும் தன் ஈட்டியை எறிந்தான். அவனது ஈட்டியைப் பார்த்த ட்ரோஜன்கள் அதைத் தவிர்க்கும் பொருட்டுப் பின்வாங்கினர். ஆனால் ஒரு பயனும் தராமல் இருப்பதற்காக அந்த ஈட்டி அவனது கையை விட்டுப் புறப்படவில்லை. அபிடஸ் நகரிலிருந்து ப்ரியமின் படைகளுடன் வந்து சேர்ந் திருந்த, ப்ரியமுக்கு முறைதவறிப் பிறந்த மகனான டிமோக் கூனைத் தாக்கியது. தன் தோழன் கொல்லப்பட்ட கோபத்தில் ஈட்டியை ஒடிஸியூஸ் எறிந்தபோது, டிமோக்கூன் குதிரைகளின் அருகில் நின்றுகொண்டிருந்தான். ஒடிஸியூஸின் ஈட்டி அவனது பொட்டில் தாக்கித் துளைத்து, மறுபக்கமாக வெளியில் வந்தது. அவனது கண்களை இருள் கவ்வி மூடியது. தடாலென அவன் தரையில் சாய்ந்தான். அவனது கவசமும் கடகடவென ஒலி எழுப்பியது.

இதன் பிறகு, புகழ்மிகு ஹெக்டரும் அவனது ட்ரோஜன் முதல் வரிசைப் படைவீரர்களும் பின்வாங்கினர். பேரொலி எழுப்பிக் கொண்டும், பிணங்களை இழுத்துப் போட்டுக்கொண்டும் கிரேக்கர்கள் முன்னேறினர். இலியம் நகரின் மிக உயர்ந்த இடமாகிய பெர்காமஸிலிருந்து இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த அப்போலோவுக்கு பொங்கியது கோபம். ட்ரோஜன்களைப் பார்த்து அவன் கத்தினான்

‘குதிரைகளை அடக்கும் ட்ரோஜன்களே, முன்னேறுங்கள்! கிரேக்கர்களின் மன உறுதிக்குமுன் விட்டுக் கொடுத்துவிடாதீர் கள். அவர்கள் ஒன்றும் கல்லாலோ இரும்பாலோ செய்யப்பட்ட வர்களல்ல. துளைத்துச் செல்லும் ஈட்டிகளால் தாக்கப்படும் போது, அவர்களின் உடல் வழிவிடாமல் இருக்க முடியாது. இதையெல்லாம்விட மிக முக்கியமான விஷயம் என்னவெனில், அழகிய கூந்தலையுடைய தீட்டிஸின் மகனான அக்கிலிஸ் போர் செய்யவில்லை. கப்பல்களின் அருகில் அமர்ந்து இதயம் பிளக்கும் தன் வேதனையையும் சினத்தையும் வளர்த்துக் கொண்டுள்ளான்.’

மரியாதையையும் அச்சத்தையும் ஏற்படுத்தும் கடவுளான அப்போலோ, தனது கோட்டையின் மீதிருந்து பேசினான்.

அதேசமயம், ஜீயூஸின் புகழ்மிகு மகளான அதீனி, கிரேக்கர்கள் இருக்கும் இடங்களுக்குச் சென்று சோர்ந்திருக்கும் வீரர்களுக்கு போர்செய்யுமாறு உற்சாகமூட்டிக்கொண்டிருந்தாள்.

டயோரிஸுக்கு விதி விலங்கிட்டது. அவனது வலது காலில் கணுக்காலுக்கு அருகில் கூரிய முனைகள் கொண்ட ஒரு கல் குத்தியது. ஈனஸ் நகரிலிருந்து வந்த த்ரேசியத் தலைவனான பெய்ரோஸ் என்பவன்தான் அக்கல்லை எறிந்தான். அடக்கமற்ற அந்தக் கல், காலின் இரண்டு தசை நாண்களையும் எலும்புகளை யும் முழுமையாகச் சிதறடித்தது. டயோரிஸ் பின்பக்கமாக மண்ணில் வீழ்ந்தான் தன் நண்பர்களை நோக்கி உதவிக்காக கைகளை நீட்டிய வண்ணம் உயிருக்குப் போராடிக்கொண்டு. ஆனால் அவன்மீது கல்லெறிந்த பெய்ரோஸ், உடனே ஓடிச்சென்று அவனது தொப்புளில் தன் ஈட்டியால் குத்தினான். அவனது உள்ளுறுப்புகள் எல்லாம் பிதுங்கி வெளியே வந்து தரையில் கொட்டின. அவனது கண்களை இருள் ஆட்கொண்டது.

ஆனால் பெய்ரோஸ் எழுந்தபோது, ஈட்டோலியாவிலிருந்து வந்த தோயஸ், தனது ஈட்டியால் பெய்ரோஸின் மார்புக் காம்புக்குக் கீழே குத்தினான். அது உள்ளே இறங்கி அதன் வெண்கல முனை அவனது நுரையீரலுக்குள் அமிழ்ந்தது. பின் தோயஸ் அவனருகில் வந்து தன் ஈட்டியை அவனது மார்பி லிருந்து உருவினான். பின் தனது கூர்வாளை எடுத்து பெய்ரோ ஸின் வயிற்றில் பாய்ச்சினான். பெய்ரோஸின் உயிர் பிரிந்தது. ஆனால் தோயஸால், அவனது கவச உடைகளை எடுத்துக் கொள்ள முடியவில்லை. ஏனெனில், தலைமேல் கொண்டை போட்டிருந்த பெய்ரோஸின் கிரேக்க வீரர்கள் தோயஸைச் சுற்றி வந்து நின்றுகொண்டனர். அவர்களனைவரும் தங்கள் ஈட்டி களை தோயஸை நோக்கி நீட்டியவண்ணம் இருந்தனர். பெரும் வீரனாகவும் சக்திவாய்ந்தவனாகவும் இருந்தாலும், அந்த நேரத்தில் தோயஸ் பின்வாங்க வேண்டியதாயிற்று. அதிர்ச்சி யுற்றவனாக அவன் பின்வாங்கினான்.

பெய்ரோஸ், டயோரில் இரு வீரர்களும் மண்ணில் கால்நீட்டி அருகருகில் பிணமாகக் கிடந்தனர். ஒருவன் திரேசியர்களின் தலைவன். இன்னொருவனோ வெண்கலக் கவச உடையணிந்த ஈலியன்களின் தலைவன். அவர்களைச் சுற்றி பலர் இறந்து கிடந்தனர்.

உண்மையில் அது, ஒரு சோம்பேறித்தனமான சிறு சண்டையல்ல. ஏவுகணைகளின் தாக்குதலுக்கு ஒரு பாதுகாப்புக் கேடயமாக அதீனி மட்டும் இல்லாவிட்டால், அவள் கைப் பிடித்து அழைத்துச் செல்லாவிட்டால், ஈட்டிகளின் எறிதலில் இருந்தும் குத்துதலிலிருந்தும் காயமின்றி தப்பிக்க முடியாது என்பது, போரின் மத்தியில் புதிதாக வந்து இணையும் யாருக்கும் புரிந்திருக்கும். மாபெரும் எண்ணிக்கையில் ட்ரோஜன்களும் கிரேக்கர்களும் பிணங்களாக, ஒருவர் பக்கத்தில் ஒருவராக, குப்புறக் கிடந்தனர் அங்கே!

# டயமீடிஸின் வீரதீரச் செயல்கள்

***கதைச் சுருக்கம்***

***வரிகள் 1 – 35***

*கட்டுக்கடங்காத வன்முறையில் ஈடுபடுமாறு, டயமீடிஸை அதீனி தூண்டுகிறாள். போர்க்கடவுள் ஏரிஸை, சண்டையில் இருந்து வெளியே அவள் கொண்டுவருகிறாள்.*

***வரிகள் 36 – 165***

*டயமீடிஸின் மூர்க்கத்தனமான தாக்குதல் ட்ரோஜன்களைப் பின்வாங்க வைக்கிறது. ஓர் அம்பினால் டயமீடிஸின் தோளில் அடிக்கிறான் பான்டாரஸ். ஆனால் அதீனி அவனுக்குப் புத்துயிரூட்டி, மனிதர்களையும் கடவுளரையும் பிரித்துப் பார்ப்பது எப்படி என்பதைக் கற்றுக்கொடுக்கிறாள்.*

***வரிகள் 166 – 296***

*ஈனியாஸும் பான்டாரஸும் டயமீடிஸைத் தாக்குகின்றனர். டயமீடிஸ் பான்டாரஸைக் கொல்கிறான்.*

***வரிகள் 297 – 470***

*ஈனியாஸை, அஃப்ரோடைட்டி காப்பாற்றுகிறாள். ஆனால், டயமீடிஸ் அவளையும் ஈட்டியால் குத்திக் காயப்படுத்துகிறான். அவள் தன் அன்னை டயோனியிடம் முறையிடுகிறாள். ஜீயூஸ் அவளை மென்மையாகக் கிண்டல் செய்கிறான். டயமீடிஸ், ஈனியாஸைப் பின் தொடர்ந்து செல்கிறான். ஆனால்,*

*அப்போலோ அவனை எச்சரித்து திருப்பி அனுப்பிவிடுகிறான். ஏரிஸ், ட்ரோஜன்களை போர்செய்யத் தூண்டுகிறான்.*

***வரிகள் 471 - 710***

*ஏரிஸின் ஆதரவுடன் புயலெனப் போரில் ஈடுபடும் ஹெக்டரை, சர்ப்பிடான் கண்டிக்கிறான். பொதுவான சண்டை தொடங்கு கிறது. ஹெக்டர், ஏரிஸ் இவர்களிடமிருந்து பின்வாங்கிய படையினை வழிநடத்திச் செல்கிறான் டயமீடிஸ்.*

***வரிகள் 711 - 792***

*ஏரிஸுக்கு எதிராகச் செயல்பட, ஹீராவும் அதீனியும் உடன்படு கின்றனர். போருக்குத் தங்களை ஆயத்தப்படுத்திக்கொண்டு அவர்கள் ஜீயூஸிடம் தங்கள் திட்டங்களை எடுத்துரைக்கின்றனர். கிரேக்கர்களை, ஹீரா அணிதிரட்டுகிறாள்.*

***வரிகள் 793 - 909***

*அதீனி, டயமீடிஸைத் திட்டுகிறாள். இருவருமாகச் சேர்ந்து ஏரிஸைக் கட்டுகின்றனர். ஏரிஸ், ஜீயூஸிடம் முறையிடுகிறான்.*

# டயமீடிஸின் வீரதீரச் செயல்கள்

மன உறுதியோடும் வீரத்தோடும், எல்லா கிரேக்கர்களை விடவும் சிறப்பாகப் போரிட்டு இறவாப் புகழை அடைய வேண்டி, டைடியூஸின் மகனான டயமீடிஸை, பல்லாஸ் அதீனி உற்சாகப் படுத்தித் தூண்டினாள். அவனுடைய கேடயமும் தலைக்கவசமும் தொடர்ந்து தீச்சுவாலையைப் போல ஜொலிக்குமாறு செய்தாள். அது கடல் குளித்து எழுந்து எல்லா நட்சத்திரங்களையும் மிஞ்சும் விதமாக, ஒளிரும் இலையுதிர் கால நட்சத்திரம் சைரியூஸைப் போல ஒளிர்ந்தது. குழப்பமான போரின் மையப்பகுதிக்கு அவனைப் பிடித்து அவள் தள்ளியபோது, அவன் தலையிலிருந்தும் தோளிலிருந்தும் வந்த ஒளி அப்படித்தான் இருந்தது.

டாரிஸ் என்ற பெயர் கொண்ட ஒரு வசதியான, அழகான ட்ரோஜன் இருந்தான். அவன் ஹெஃபைஸ்டஸ் (கடவுளுக்கான கோயிலின்) அர்ச்சகராகவும் இருந்தான். அவனுக்கு எல்லாவித மான சண்டையிலும் அனுபவம் பெற்ற ஃபீஜியஸ், இடாயூஸ் என்ற இரு மகன்கள் இருந்தனர். இவர்களிருவரும் மற்றவர் களிடமிருந்து தனித்துத் தேரில் ஏறி டயமீடிஸைத் தாக்கப் புறப்பட்டனர். அவனும் இவர்களை நோக்கி நடந்து வந்து கொண்டிருந்தான். எதிரிகள் அருகருகில் வந்தபோது, நீண்ட நிழல் கொண்ட தன் ஈட்டியை முதலில் எறிந்தான் ஃபீஜியஸ். ஆனால் அவனுடைய ஈட்டியின் முனை, டயமீடிஸைத் தாக்காமல் அவனுடைய இடது தோளுக்கு மேலே சென்றது. பின் டைடியூஸின் மகனான டயமீடிஸ், தனது வெண்கல ஈட்டியால் பதிலடி கொடுத்தான். அவன் கையிலிருந்து வெளிப்பட்ட அது பயன்கொடுக்காமலில்லை.

அது ஃபீஜியஸின் நடுமார்பில் தாக்கியது. தன் அற்புதமான தேரிலிருந்து அவன் கீழே விழுந்தான். அதுகண்ட இடாயூஸூம் தேரிலிருந்து கீழே குதித்தான். தன் சகோதரனின் உடலருகில் நிற்கும் துணிச்சல் அவனுக்கு வரவில்லை. ஹெஃபைஸ்டஸ் மட்டும் தக்க தருணத்தில் அங்கு வந்து, இரவால் அவனை மூடி காப்பாற்றியிருக்காவிட்டால், கறுப்பு விதி இடாயூஸையும் காவு கொண்டிருக்கும். அவர்களின் வயதான அர்ச்சகனும் தகப்பனு மாகிய டாரிஸ் முதுமையில் வேதனையில் மூழ்கியிருப்பான். பெரிய மனம் கொண்ட டயமீடிஸ், அவர்களது குதிரைகளை அங்கிருந்து ஓட்டிக்கொண்டு சென்றான். அவற்றை உட்குழிந்த தம் கப்பல்களுக்குக் கொண்டுசெல்லும்படி தன் வீரர்களுக்கு உத்தரவிட்டான்.

டாரிஸின் இரு மகன்களில் ஒருவன் ஓடிவிட்டான், இன்னொரு வன் தேரின் பக்கத்தில் இறந்து கிடக்கிறான் என்பதைக் கண்டதும், கொடை மனம் கொண்ட ட்ரோஜன்களின் மத்தியில் பீதி உண்டானது. அப்போது சாம்பல் நிறக்கண்ணாள் அதீனி சினம் மிகுந்த போர்க்கடவுள் ஏரிஸின் கையைப் பற்றிச் சொன்னாள்:

‘ஏரிஸே! கொலைகார ஏரிஸே! மனிதர்களைக் கசாப்பு செய் பவனே! நகரங்களை அழிப்பவனே! ட்ரோஜன்களும் கிரேக்கர் களும் சண்டையிட்டது போதும். இனிமேலும் யாருக்குப் புகழ் வரப்போகிறது என்று முடிவு செய்யும் பொறுப்பை, தந்தை ஜீயூஸிடம் விட்டுவிடும் நேரம் நமக்கு இன்னுமா வரவில்லை? ஜீயூஸூக்குக் கோபம் வருவதற்கு முன்பு, நாமிருவரும் போர்க்களத்தை விட்டு நீங்கிவிடுவது நல்லது.’

இவ்விதம் பேசிய அதீனி, ஏரிஸை போர்க்களம் விட்டு வெளியே அழைத்து வந்து, ஸ்கமாண்டர் நதியின் உயர்ந்த கரையின் மீது அமரச் செய்தாள்.

இதன் விளைவாக, ட்ரோஜன்களை கிரேக்கர்கள் பின்னுக்குத் தள்ளினர். ஒவ்வொரு கிரேக்கத் தலைவனும், எதிரிப்படையின் தலைவரைக் கொன்றான். முதலில், மக்கள் தலைவனாகிய அகமெம்னன், ஹேலிஜோன்களின் தலைவனாகிய மகா ஓடியஸை அவனுடைய தேரிலிருந்து தூக்கி எறிந்தான். முதலில் எதிர்த்துத் திரும்பியது ஓடியஸ்தான். ஆனால் அகமெம்னன், அவன் முதுகில் இரு தோள்களுக்கு மத்தியில் தன் ஈட்டியால்

குத்தினான். அது அவன் முதுகைப் பிளந்து, நேராக நெஞ்சுக்குள் சென்றது. தடாலெனத் தரையில் வீழ்ந்தான் அவன். அவனுடைய கவச உடையும் கடகடவென ஒலியெழுப்பியது.

அடுத்து மெயோனியாவில் உள்ள செழிப்பான டார்னியில் இருந்து வந்திருந்த ஃபீஸ்டஸை இடொமீனியஸ் கொன்றான். ஃபீஸ்டஸ் தனது தேரில் ஏறிக்கொண்டிருக்கும்போது, தனது நீண்ட ஈட்டியால் இடொமீனியஸ் அவனது வலது தோளைத் துளைத்தான். ஃபீஸ்டஸ் தேரிலிருந்து கீழே சரிந்தான். வெறுக்கத் தக்க இருள் அவனைச் சூழ்ந்தது. இடொமீனிஸின் வீரர்கள் பின் ஃபீஸ்டஸை நிர்வாணப்படுத்தினர்.

பின்னர் திறமையான வேட்டைக்காரனாகிய ஸ்கமாண்ட்ரியஸை அவனது கூர் ஈட்டியுடன் பிடித்தான் அத்ரியூஸின் மகனான மெனிலயஸ். ஸ்கமாண்ட்ரியஸ் துரத்திப் பிடிக்கும் கலையில் சிறந்தவனாக இருந்தான். மலைக்காடுகளில் உள்ள எந்தக் காட்டு மிருகத்தையும் துரத்திப் பிடிப்பது எப்படி என்ற கலையை அவனுக்கு, பெண் கடவுளான ஆர்ட்டீமிஸே கற்றுக்கொடுத் திருந்தாள். ஆனால் அம்புகளில் ஆனந்தப்படும் ஆர்ட்டீமி ஸாலோ, தனக்குப் புகழ் தேடித்தந்த நீண்ட தொலைவுக்கு அம்பெய்யும் திறமையாலோ இப்பொழுது அவனுக்கு உதவ முடியவில்லை. ஸ்கமாண்ட்ரியஸ் எதிர்ப்பட்டவுடன், மகா ஈட்டியெறி மன்னனும் அத்ரியூஸின் மகனுமாகிய மெனிலயஸ், அவன் முதுகில் இரு தோள்களுக்கு மத்தியில் தன் ஈட்டியால் குத்தினான். அது அவன் முதுகைப் பிளந்து நேராக நெஞ்சுக்குள் சென்றது. தடாலென தரையில் குப்புற வீழ்ந்தான் அவன். அவனுடைய கவச உடையும் கடகடவென ஒலியெழுப்பியது.

அடுத்து, நுட்பமான கைத்தொழில்களில் சிறந்த, டெக்ட்டனின் மகனும் ஹார்மனின் பேரனுமாகிய ஃபெரிக்லூஸை, மெரியோ னிஸ் கொன்றான். பல்லாஸ் அதீனிக்கு, அவனைவிட அதிகப் பிரியமானவர் யாரும் கிடையாது. எல்லாப் பிரச்னைகளுக்கும் காரணமான சமமாக வடிவமைக்கப்பட்ட கப்பல்களைப் பாரிஸுக்குக் கட்டிக் கொடுத்தவன் அவனே. அதுவே எல்லா ட்ரோஜன்களுக்கும், இறுதியில் அவனுக்கும், பெரிய சாபமாகிப் போனது. ஏனெனில், கடவுளரின் முன்னறிவிப்பு பற்றி அவ னுக்கு எதுவும் தெரியாது. அவனைப் பின்தொடர்ந்து வந்த மெரியோனிஸ், அவனை வலது புட்டத்தில் தாக்கினான். ஈட்டி யின் தலை நேராக உள்ளே சென்று அடிவயிற்று எலும்புக்குக்

கீழே இருந்த சிறுநீர்ப்பையைத் தாக்கியது. அலறிக்கொண்டே சரிந்தான் அவன். மரணம் அவனைச் சூழ்ந்தது.

பின், ஆன்டினரின் முறைதவறிப் பிறந்த மகனான பீடியூஸை, மீஜிஸ் கொன்றான். ஆன்ட்டினரின் மனைவியான தீனோ, கணவனை மகிழ்விப்பதற்காக, பீடியூஸைத் தன் சொந்தப் பிள்ளை போலவே வளர்த்து வந்தாள். தன் கூர் ஈட்டியினால், மீஜிஸ் அவனைப் பிடித்து அவன் பிடரியில் தாக்கினான். ஈட்டியின் முனை அவன் பற்களுக்கிடையில் புகுந்து அவன் நாக்கின் அடிப்பாகத்தைத் துண்டித்தது. ஜில்லிட்டிருந்த வெண்கலத்தை, தன் பற்களால் கடித்துக்கொண்டே அவன் மண்ணில் விழுந்தான்.

இதற்கிடையில் நதிக்கடவுள் ஸ்கமாண்டருக்கு அர்ச்சகராகப் பணிபுரிந்து, மக்களால் ஒரு கடவுளைப் போல மதிக்கப்பட்டு வந்த கடவுளையொத்த ஹிப்சீனரை, யூரிபைலஸ் கொன்றான். ஹிப்சீனர் எதிரில் தென்பட்டபோது, புகழ்மிகு யூரிபைலஸ் தன் வாளால் அவன் தோளில் வெட்டினான். அவனுடைய பெரிய கை துண்டிக்கப்பட்டு, ரத்தம் பீறிடத் தரையில் விழுந்தது. இரக்கமற்ற விதியும் பழுப்பு மரணமும் அவன் கண்களை மூடின.

இவ்விதமாக அவர்கள், தீவிரமாகப் போரிட்டுக் கொண்டிருந்தார்கள். டயமீடிஸைப் பொருத்தவரை, அவன் ட்ரோஜன் படையைச் சேர்ந்தவனா அல்லது கிரேக்கப் படையைச் சேர்ந்தவனா என்று உங்களால் சொல்ல முடியாது. நிலத்தின் குறுக்கே வெள்ளமெனப் பெருக்கெடுத்து, அணைக்கரைகளை உடைத்துக்கொண்டு ஓடும் குளிர்காலப் பேய்மழையைப் போலச் சென்றான் அவன். வானம் திறந்து கொள்ளும்போது நெருக்கமாகக் கட்டப்பட்ட அணைகளோ, செழிப்பான தோட்டங்களைப் பாதுகாக்க கட்டப்பட்ட சுவர்களோ அடைமழையின் அதிதீவிரத்தின் முன்னால் நிற்பதில்லை. விவசாயிகளின் கடுமையான உழைப்பையெல்லாம் வெகு தூரத்துக்கு அது தரைமட்டமாக்கிவிடும். நெருக்கமான அணிவகுப்பைக் கொண்ட ட்ரோஜன்களின் படையினரிடையே டயமீடிஸ் சென்றபோதும் அப்படித்தான் இருந்தது. அவர்கள் எத்தனையோ பேர் இருந்தும், அவன் ஒருவனுக்கு அவர்களால் ஈடுகொடுக்க முடியவில்லை. அனைவரும் செய்வதறியாது திகைத்துப் போயினர்.

இவ்விதமாக நிலம் நடுங்க, படையினரிடையே குழப்பத்தை உண்டுபண்ணிக் கொண்டு வந்துகொண்டிருக்கும் டயமீடியஸைப் பார்த்தான் லகாவோனின் அருமை மகனான பாண்டாரஸ். உடனே தாமதிக்காமல் வளைந்த தனது வில்லில் நாணேற்றி, டயமீடியஸின் வலது தோள்பட்டையைக் குறி வைத்து அம்பெய்தான். அது கவசத்தின் மேல்தட்டில் தாக்கியது. துளைத்துச் சென்ற அந்த அம்பினால் அவனுடைய உடல் கவசம் ரத்தத்தால் நனைந்தது. பாண்டாரஸ் உரத்துச் சொன்னான்:

'கொடையுள்ளம் கொண்ட ட்ரோஜன்களே, முன்னேறி வாருங்கள்! கிரேக்கர்களை நோக்கி தேர்களை ஓட்டுங்கள், சாரதிகளே! கிரேக்கர்களில் தலைசிறந்த வீரனான டயமீடிஸ் காயப்பட்டுக் கிடக்கிறான். லைசியாவை விட்டு நான் கிளம்பிய போது, ஜீயூஸின் மகனான கடவுள் அப்போலோதான் எனக்கு வழிகாட்டினான் என்பது உண்மையானால், அப்படி ஓர் அம்பு விட்டபிறகு, வெகு நேரம் டயமீடிஸ் உயிர் பிழைத்திருப்பான் என்று நான் நினைக்கவில்லை.

இவ்விதம் அவன் பெருமையாகப் பேசினான். ஆனால், பறந்து சென்ற அம்பு டயமீடிஸைக் கொல்லவில்லை. அவன் மறுபடியும் எழுந்து, குதிரைகள் பூட்டிய தன் தேரின் அருகில் வந்து நின்றான். தனது தேரோட்டியான கபானியஸின் மகன் ஸ்தெனீலியஸைப் பார்த்துச் சொன்னான்:

'என் பழைய நண்பன் ஸ்தெனீலியஸே! சீக்கிரம் தேரிலிருந்து இறங்கி வந்து, இந்த இழிந்த அம்பை என் தோளிலிருந்து உருவி எடு.'

அப்படி அவன் சொன்னதும், உடனே ஸ்தெனீலியஸ் தேரிலிருந்து குதித்து இறங்கி வந்து, அவன் தோளில் தைத்திருந்த அம்பை மறுபக்கமாக வெளிவரும்படி உருவி எடுத்தான். இறுக்கமாகக் கட்டியிருந்த உள்ளாடையை மீறி பொங்கி வந்தது குருதி. போர்முழக்கத் தலைவனான டயமீடிஸ், அதீனியை நோக்கி வேண்டினான்

'புயல் மேகங்களைச் செலுத்தும் ஜீயூஸின் மகளாகிய அத்ரி தோனியே! என் பிரார்த்தனையை செவிமடுப்பாயாக. நானும், என் தந்தை டைடியூஸும் நன்றாக இருக்க வேண்டும் என்று கடந்த காலத்தில் நீ நினைத்ததும், தீவிரமாகப் போர் நடக்கும் போது நீ எங்களுக்கு ஆதரவாக இருந்ததும் உண்மையானால்,

மறுபடியும் என்மீது இரக்கம் காட்டு அதீனி! பாண்டாரஸை நான் கொல்ல எனக்கு உதவி செய். நான் பார்ப்பதற்கு முன் என்மீது அம்பெய்த அந்த மனிதனின் எதிரில் என்னைக் கொண்டுபோய்ச் சேர். நான் வெகுநேரம் பிழைத்திருக்க மாட்டேன் என்று அவன் இப்பொழுது பெருமையடித்துக் கொண்டிருக்கிறான்!'

இவ்விதமாக அவன் பிரார்த்தித்ததைக் கேட்ட பல்லாஸ் அதீனி, அவனுடைய கைகளிலிருந்தும் கால்களிலிருந்தும் மந்த உணர்வை நீக்கினாள். அவனருகில் சென்று சிறகுகள் கொண்ட சொற்களைக் கூறினாள்

'டயமீடிஸ்! நீ இப்பொழுது ட்ரோஜன்களை எதிர்த்து முழு நம்பிக்கையுடன் போரிடலாம்! கேடயம் தாங்கிய தேரோட்டி யான உனது தந்தை டைடியூஸிடம் இருந்த அச்சமற்ற மன உறுதியைக் கொண்டு உன் இதயத்தை நான் நிரப்பியிருக்கிறேன். அதோடு, உன் விழிகளில் இருந்த பனி மூட்டத்தையும் நான் நீக்கிவிட்டேன். இப்பொழுது நீ, கடவுளர் யார் மானிடர் யார் என்பதைக் கண்டுகொள்ளலாம். ஒருவேளை யாராவது கடவுளர் உன்னோடு பொருத வருவாரேயானால், அவர்களோடு நீ சண்டையிடாதே! இதற்கு ஒரேயொரு விதிவிலக்கு மட்டும்தான் உண்டு. ஜீயூஸின் மகளான அஃப்ரோடைட்டி போர்க்களத்துக்கு வருவாளேயானால், உனது கூர் ஈட்டியால் அவளைக் குத்திக் கொல்வாயாக!'

இந்த வார்த்தைகளைச் சொல்லிவிட்டு சாம்பல் நிறக்கண்ணாள் அதீனி சென்றாள். டயமீடிஸ் மறுபடியும் களம் சென்று முன் வரிசை அணிவகுப்பில் கலந்துகொண்டான். அதீனி இல்லா விட்டால்கூட, மறுபடியும் எதிரிகளோடு போர்செய்தே தீருவது என்ற முடிவோடுதான் அவன் இருந்தான். இப்பொழுதோ அவனிடம் மூன்று மடங்கு மன உறுதி இருந்தது. ஊருக்கு வெளியே இருந்த பண்ணையில், அடர்ந்த கம்பளி ரோமம் கொண்ட செம்மறியாட்டுக்கிடையில், வேலி தாண்டி உள்ளே நுழைய முயன்றபோது மேய்ப்பனால் காயப்படுத்தப்பட்டு, ஆனால் கொல்லாமல் விடப்பட்ட சிங்கம் போல இருந்தான் டயமீடிஸ். மேய்ப்பன், சிங்கத்தின் கோபத்தை அதிகப்படுத்தும் காரியத்தையே செய்கிறான். ஆனால் அவனால், சிங்கம் மறுபடி உள்ளே நுழைவதைத் தடுக்க முடியவில்லை. கிடைக்குள் சிங்கம் தாவியவுடன் கைவிடப்பட்ட ஆடுகள் பீதியில் திசைக்கொன்றாக ஓடுகின்றன. ஒன்றோடொன்று மோதி ஒரு குவியல்போல

அவை நிற்கின்றன. சிங்கமோ, அதே உறுதியுடன், நெடிய சுவரைத் தாண்டிக்குதித்து தப்பிக்கிறது. இதைப்போல சக்திமிக்க தீர்மானத்துடன், டயமீடிஸ் ட்ரோஜன்களை எதிர்த்தான்.

மக்கள் மேய்ப்பன் ஹைப்பீரியனையும் அஸ்ட்டினூஸையும் அவன் கொன்றான். ஒருவனை தனது வெண்கல ஈட்டியால் மார்புக் காம்பில் தாக்கினான். இன்னொருவனின் கழுத்து எலும்பில், தோள் பக்கமாய் தன் வாளால் வெட்டினான். முதுகிலிருந்தும் கழுத்திலிருந்தும் அந்தத் தோள் பிரிந்தது.

அவர்களை அங்கேயே போட்டுவிட்டு, கனவுகளுக்கு விளக்கம் சொல்லும் முதியவனான யூரிடாமஸின் மகன்களான அபாஸ், பாலியீடஸ் ஆகியோரைத் தேடிச் சென்றான். ஆனால் ட்ராய் நகருக்கு தன் மகன்கள் கிளம்பியபோது, அவர்களுக்காக எந்தக் கனவுக்கும் அவன் விளக்கம் சொல்லவில்லை. அந்த இருவரை யும் டயமீடிஸ் கொன்று போட்டான்.

பின் அவன், ஃபீனாப்ஸின் தாமதமாகப் பிறந்த மகன்களான சாந்தூஸ் மற்றும் தூன் ஆகியோரைத் தேடிப்போனான். ஃபீனாப்ஸ் இப்பொழுது முதுமையால் முடியாமல் இருந்தான். தனது செல்வத்தை விட்டுச் செல்வதற்கு அவனுக்கு வேறு பிள்ளை கிடையாது. டயமீடிஸ் அவர்கள் இருவரையும் கொன்று, அவர்களின் இன்னுயிரை எடுத்து, அவர்களது தந்தைக்கு, கண்ணீரையும் உடைந்த உள்ளத்தையும் விட்டுச் சென்றான். போரிலிருந்து உயிரோடு அவர்களால் வீடு திரும்ப முடியவில்லை. சொத்துகளை சொந்தங்கள் பங்கிட்டுக் கொண்டனர்.

டார்டானிய ப்ரியமின் மகன்களான எக்கம்மன், க்ரோமியஸ் இருவரும் டயமீடியஸின் அடுத்த இலக்காக இருந்தனர். அவர்களிருவரும் ஒரே தேரை ஓட்டிக்கொண்டு வந்தனர். மேய்ச்சல் நிலத்தில் அமைதியாக மேய்ந்து கொண்டிருக்கும் கால்நடையின்மீது திடீரெனப் பாய்ந்து, எருது அல்லது கன்றின் கழுத்தைக் கடித்து ஒரு சிங்கம் குதறுவதுபோல, டயமீடிஸ் அவர்களுக்கு வாய்ப்பேதும் தராமல் தேரைவிட்டு அவர்களை வலுக்கட்டாயமாக வெளியேற்றி, அவர்களது கவச உடை களைக் கழற்றி, நிர்வாணப்படுத்தி, அவர்களின் குதிரைகளை தன் வீரர்களுக்குக் கொடுத்து கப்பல்களுக்குக் கொண்டுபோகச் சொன்னான்.

ட்ரோஜன் பகுதிகளில் டயமீடிஸ் ஏற்படுத்திய பேரழிவைப் பார்த்த ஈனியாஸ், ஏவுகணைகள் எறியப்பட்டுக்கொண்டிருக்கும் போர்க்களத்துள் புகுந்து கடவுளையொத்த பாண்டாரஸைத் தேடினான். லைகாவோனின் வடிவான, வலிமை வாய்ந்த அந்த மகனைப் பார்த்தவுடன் அவன் இருந்த இடம் சென்று சொன்னான்:

'ஓ பாண்டாரஸ்! உனது வில்லுக்கும், சிறகுகள் முளைத்த உனது அம்புகளுக்கும், சிறந்த வில்லாளி என்ற உன் புகழுக்கும் என்ன வந்தது? லைசியா பெருமைப்பட்டுக்கொள்ளும் அளவுக்கு ட்ராயில் உள்ள எல்லா வில்லாளிகளிலும் தலைசிறந்தவன் நீதான் என்றே கருதப்படுகிறாய். ஆகவே, உன் கைகளை உயர்த்தி ஜீயூஸிடம் பிரார்த்தித்துக் கேள். அதோ அங்கே நிற்கிறானே! அவன் மீது பாயும் அம்புகளை ஏவு. அவன் யாரென்று எனக்குத் தெரியவில்லை. ஆனால், தான் நினைத்தையெல்லாம் செய்து கொண்டிருக்கிறான் அவன். ஏற்கெனவே ஏராளமான தீங்கை நமக்கு அவன் செய்துவிட்டான். நமது சிறப்பான வீரர்கள் பலரைக் கொன்றுவிட்டான். ஏதோ குறைகளுள்ள சடங்குகளை நாம் செய்ததால் கோபமுற்ற ஒரு கடவுளாக அவன் இருக்கலாம். அப்படித்தான் எனில், அவனுடைய கோபம் எண்ணற்ற உயிர்களைப் பலி வாங்கிவிட்டது!'

லைகாவோனின் சிறந்த மகனான பாண்டாரஸ் பதில் சொன்னான்:

'வெண்கலக் கவசமணிந்த ட்ரோஜன்களின் ஆலோசகனே ஈனியாஸ்! நீ விசாரித்த அந்த மனிதன்தான் டயமீடிஸ். அவனுடைய கேடயத்தையும் இறகுகள் கொண்ட தலைக் கவசத்தையும் வைத்து, நான் அவனை அடையாளம் கண்டு கொண்டேன். அவனுடைய குதிரைகளைக்கூட நான் பார்த்தால் அவனுடையவைதான் என்று எனக்குத் தெரிந்துவிடும். இன் னொரு வழியில் சிந்திக்கும்போது, அவன் ஒரு கடவுளாகவும் இருக்கக்கூடும் என்று தோன்றுகிறது. ஆனால் நிச்சயமாகத் தெரியவில்லை. ஆனால், நான் நினைப்பதுபோல அவன் டயமீடிஸ் என்ற மனிதன்தான் என்றால், அவனுடைய வெறி கொண்ட அந்தத் தாக்குதலில் கடவுளர் கைகளின் பங்கு இருப் பதை என்னால் பார்க்க முடிகிறது. நிச்சயமாக அவனருகில் யாரோ ஒரு கடவுள் பனியைப் போர்த்திக்கொண்டு நின்று கொண்டிருக்க வேண்டும். இல்லையெனில், நான் விட்ட அம்பு

எப்படி திசைமாறிப் போகும்? ஏனெனில் அவனை நான் ஏற்கெனவே அம்பால் தாக்கியிருக்கிறேன். கவச உடையின் தட்டைத் தாண்டி, அவனுடைய வலது தோளில் தெளிவாகக் காயமேற்படுத்தியிருக்கிறேன். அந்தக் காயம் நிச்சயமாக அவனை ஹயடிஸுக்கு அனுப்பப் போதுமானதாக இருக்கும் என்று நினைத்தேன். ஆனால், எப்படியோ அவனைக் கொல்வதில் நான் தோற்றுவிட்டேன். ஆகவே, ஏதோ ஒரு வெறுக்கத்தக்க கடவுளின் வேலையாகத்தான் அது இருக்கும்.

'இதோ! இங்கே நான் என்னை ஏற்றிச்செல்ல குதிரையும் இன்றி ரதமும் இன்றி நிற்கிறேன். என்னுடைய தந்தை லைகாவோனின் அரண்மனையில் அப்பொழுதுதான் செய்துகொண்டு வரப்பட்ட ஏழு புதிய தேர்கள் எனக்காக நின்றிருக்கும். இன்னும் அவைகள் துணிபோட்டு மூடிய வண்ணமே உள்ளன. ஒவ்வொரு தேரின் அருகிலும் வெள்ளை வாற்கோதுமையையும் கம்பையும் அசைபோட்டுக்கொண்டு இரண்டு குதிரைகள் நிற்கும். நான் ட்ராய் நகர் நோக்கிப் புறப்பட்டபோது, குதிரை கொண்டு இழுக்கப்படும் தேர் மூலமாகத்தான் நான் வீரர்களை உச்சகட்ட போருக்கு அழைத்துச்செல்ல வேண்டும் என்று திரும்பத் திரும்ப ஈட்டி எறிவதில் விற்பன்னரான என் தந்தை லைகாவோன் சொல்லியனுப்பினார். ஆனால், நான் அவர் சொன்னதைக் கேட்கவில்லை. கேட்டிருந்தால் நன்றாக இருந்திருக்கும். என் குதிரைகளுக்கு எப்போதுமே தின்பதற்கு நிறைய இருக்கும். முற்றுகையிடப் போகும் நகரில் அவற்றுக்கு வேண்டிய அளவு உணவு கிடைக்குமோ கிடைக்காதோ என்றெண்ணி, நான் அவற்றைப் பயன்படுத்தத் தயங்கி, விட்டுவர நினைத்தேன்.

'எனவே என் வில் வித்தையின்மீது நம்பிக்கை வைத்து குதிரைகளை விட்டுவிட்டு இலியம் நகருக்கு நடந்தே வந்தேன். ஆனால், வில் வித்தையினால் பெரிய நன்மை ஏதும் உண்டாகப் போவதில்லை என்று தெரிந்துவிட்டது. ஏற்கெனவே அவர்களில் தலைசிறந்த இரு வீரர்களான டயமீடிஸ், மெனிலயஸ் ஆகிய இருவர் மீதும் அம்பெய்துவிட்டேன். ஒவ்வொரு முறையும் என் அம்புகள் அவர்களைத் தாக்கி குருதி பொங்க வைத்தது உண்மைதான். ஆனால், அது அவர்களை இன்னும் கடுமையாகப் போரிடத்தான் தூண்டிவிட்டது. அழகிய இலியம் நகருக்கு வந்து கடவுளையொத்த ஹெக்டருக்கு சேவை செய்ய வேண்டுமென எண்ணி, நான் என் படையினருடன் வளைந்து என் வில்லை மாட்டியிருந்த இடத்திலிருந்து எடுத்துக்கொண்டு

புறப்பட்டபோது, விதி என்னை அன்பாகப் பார்க்கவேயில்லை. ஆனால் மறுபடியும் நான் எனது தந்தையர் பூமிக்குத் திரும்பி, என் மனைவி மக்களையும், உயர்ந்த என் வீட்டுக் கூரையையும் பார்ப்பேனானால், அங்கேயே என் தலையை யாரும் கொய்து கொள்ள அனுமதிப்பேன். இந்த வில்லை என் கையாலேயே உடைத்து, எரியும் தீயில் இடுவேன். இது தேவையில்லாத சுமை மூட்டையாகும்!'

ட்ரோஜன்களின் தலைவனான ஈனியாஸ் பதில் சொன்னான்:

'இனிமேலும் தயவுசெய்து அப்படிப் பேச வேண்டாம். நானும் நீயும் முழு கவச உடையில் தேரேறி அவனைச் சந்திக்கும்வரை எதுவும் நடக்கப் போவதில்லை. அப்பொழுதுதான் அவனிடம் என்னதான் இருக்கிறது என்று தெரியும். வா, இந்தத் தேரில் ஏறிக்கொள்! என் முன்னோனான த்ராஸ் வளர்த்த குதிரைகள் எப்படி இருக்கின்றன? முன்னோக்கியும் பின்னோக்கியும் எவ்வளவு வேகமாக அவை செல்லக் கூடியவை என்று வந்து பார்! ஒரு வேளை டைடியூஸின் மகன் டயமீடிஸுக்கு ஜீயூஸ் புகழைக் கொடுப்பாராகில், இலியத்துக்கு, நம்மைப் பாது காப்பாக அவை கொண்டு சேர்க்கும். வா! சாட்டையையும் கடிவாளத்தையும் பிடித்துக்கொள். சரியான நேரம் வரும்போது, நான் இறங்கிப் போர் செய்வேன் அல்லது நீ சண்டைபோடு. நான் குதிரைகளைப் பார்த்துக்கொள்கிறேன்!'

லைகாவோனின் சிறந்த மகன் பதில் சொன்னான்:

'ஈனியாஸ்! கடிவாளங்களை நீயே பிடித்துக்கொள். குதிரைகளை நீயே ஓட்டு. ஒருவேளை நாம் டயமீடிஸிடமிருந்து ஓடிவர வேண்டியிருந்தால், தங்களுக்குப் பின்னால் பழக்கமான தேரோட்டி இருந்தால், அக்குதிரைகள் வளைவுகளுள்ள இத் தேரை இன்னும் வேகமாக இழுக்கும். உனது குரல் கேட்க வில்லை எனில், அவைகள் மிரண்டு போய் இழுக்காமல் இருந்து விடலாம். அப்பொழுது பெரிய மனம் கொண்ட டயமீடிஸ், நம்மை நெருங்கி வந்து கொன்றுவிட்டு குதிரைகளை விரட்டி விடலாம். எனவே, குதிரைகளையும் தேரையும் நீயே கவனித்துக் கொள். அவன் தாக்க வரும்போது, நான் எனது ஈட்டியுடன் அவனுடன் பொருதுவேன்!'

இந்த வார்த்தைகளுடன் அலங்கரிக்கப்பட்ட அந்தத் தேரில் அவர்கள் ஏறிக்கொண்டனர். உறுதியோடு விரைவுக் குதிரை

களை டயமீடிஸை நோக்கிச் செலுத்தினர். கபானியஸின் மக னான உயர்ந்த ஸ்தெனீலியஸ், அவர்கள் வருவதைப் பார்த்தான். உடனே அவசரமாக டயமீடிஸிடம் சொன்னான்:

'டைடியூஸின் மகனே டயமீடிஸ்! எனது பெருமையே! என் சந்தோஷமே! இரு வலிமை வாய்ந்த வீரர்கள் இதோ உன்னோடு பொருதும் முடிவுடன் வருகின்றனர். அஞ்சத்தக்க சக்திமிகுந்த ஜோடி. ஒருவன் வில் வித்தையில் நிபுணனான பாண்டா்ரஸ். லைகாவோனின் மகன் என்று அவன் பெருமை பேசுவான். இன்னொருவனோ ஈனியாஸ். ஈடிணையற்ற ஆங்க்கைசஸ் அவனது தந்தை. அஃப்ரோடைட்டி அவனது தாய். வா! தேரில் விரைந்து நாம் பின்வாங்கிவிடுவோம். முன் வரிசையில், இனி இப்படி தரையில் நின்றுகொண்டு இனி சண்டை போட முடியாது. செய்தால், உன் உயிர் போகலாம்!'

வல்லமைமிகு டயமீடிஸ் அவனை முறைத்துவிட்டு சொன்னான்:

'ஓடிப்போவதைப் பற்றி என்னிடம் பேசாதே. நீ சொல்வதை நான் கேட்கமாட்டேன். சண்டையைத் தவிர்ப்பதோ அதிலிருந்து நழுவி ஓடி ஒளிவதோ எனது இயற்கைக்கு மாறானது. வெல்ல வேண்டும் என்ற என் ஆசை முன்னிருந்ததைப் போலவே இப்பொழுதும் அதே உறுதியுடன்தான் இருக்கிறது. எனக்குத் தேரும் தேவையில்லை. நான் இங்கே எப்படி நிற்கிறேனோ அப்படியே போய் அவர்களைச் சந்திப்பேன். நான் பயந்து ஓடுவதை, பல்லாஸ் அதீனி அனுமதிக்க மாட்டாள். அவர்கள் இருவரைப் பொருத்தவரை, அவர்களுடைய விரைவுக் குதிரை கள் அவர்களை நம்மிடமிருந்து காப்பாற்றாது. அவர்களில் ஒருவர் தப்பித்தாலும், வீட்டுக்குத் திரும்ப முடியாது.

'நான் உனக்கு இன்னொன்றும் சொல்கிறேன், மனத்தில் வைத்துக்கொள். அவர்களிருவரையும் நான் கொல்வதற்கு எல்லாம் அறிந்த அதீனி மட்டும் உதவி செய்வாளேயானால், நீ நம் குதிரைகளைக் கட்டி வைத்துவிட்டு, ஈனியாஸின் குதிரை களின்மீது கவனம் செலுத்து. அவற்றைப் பிடித்து ட்ரோஜன்கள் இருக்கும் இடத்திலிருந்து தூரமாக, நாம் இருக்கும் பக்கத்துக்கு அவற்றை விரட்டு. தன் மகன் கானிமீடைத் திருடியதற்கு நஷ்டஈடாக, தூரத்து இடிமுழக்கம் செய்யும் ஜீயூஸ் த்ராஸுக்குக் கொடுத்த குதிரைகள் எந்த ஜாதியைச் சேர்ந்தவையோ அதே வகையானவைதான் இந்தக் குதிரைகளும். இந்த உலகிலேயே

*தலைசிறந்தவை அவைதான். அவைகள் லாமிடானிடம் போய்ச் சேர்ந்தன. ஆனால் மக்கள் தலைவனாகிய ஆங்க்கைசஸ், பெண் குதிரைகளை அவற்றோடு சேரவிட்டு, லாமிடானுக்குத் தெரியாமல் அவற்றைத் திருடிக் கொண்டான். அவைகள் ஆறு குட்டிகளை ஈன்றன. அவற்றில் நான்கை ஆங்க்கைசஸ் தன் லாயத்திலேயே தனக்காக வைத்து வளர்த்துக் கொண்டான். பகைவனை நிலைகுலையச் செய்வதில் சிறந்த கடைசி இரண்டு குட்டிகளையும் தன் மகன் ஈனியாஸுக்கு போரில் பயன் படுத்திக்கொள்ள கொடுத்தான். அவற்றை மட்டும் நாம் இப்பொழுது பிடித்து விடுவோமானால், நமக்கு இறவாப் புகழ் கிடைக்கும்!'*

இவ்விதமாக அவர்கள் பேசிக்கொண்டிருக்கையில், அவர் களின் எதிரிகள் தங்கள் குதிரைகளைத் தூண்டியவண்ணம் நெருங்கி வந்தனர். உயர்வானவனான பாண்டாரஸ்தான் முதலில் பேசினான்:

*'துணிச்சலுடன் ஒளிரும் உயர்ந்த டைடியூஸின் மகனே டய மீடிஸ்! நான் விட்ட பறக்கும் ஏவுகணையும், கடுமையான அம்பும் உன்னைக் கொல்லவில்லை என்பது வெளிப்படை. எனவே, இந்த முறை நான் எனது ஈட்டியைப் பயன்படுத்து கிறேன். அது என்ன செய்யப் போகிறது என்று பார்க்கலாம்.*

இப்படிச் சொல்லிவிட்டு, நீண்ட நிழல்கொண்ட தன் ஈட்டியை எடுத்து எறிந்தான். அது டயமீடிஸின் கேடயத்தைத் தாக்கியது. அதன் வெண்கல முனை கவச உடையைத் துளைத்துத் தாக்கியது. பாண்டாரஸ் உரக்கக் கத்தினான்

*'ஆஹா! விலாப்பக்கம் சரியான அடி! இனி நீ வெகுநேரம் உயிரோடு இருக்க மாட்டாய்! ஆஹா! எப்படிப்பட்ட வெற்றியை நீ எனக்குக் கொடுத்திருக்கிறாய்!*

*சலனப்படாமல் டயமீடிஸ் சொன்னான்:*

*'தவறிவிட்டது! நீ என்னை எப்பொழுதுமே தொட்டதில்லை. நீங்கள் இருவரும் வந்த வேலையை முடிப்பதற்குள் உங்களில் ஒருவர் செத்து, போர்க்கடவுளான கேடயம் தூக்கிய ஏரிஸுக்கு, செத்தவனின் ரத்தத்தை அபரிமிதமாக ஊட்டப் போகிறீர்கள்.'*

இந்த வார்த்தைகளுடன் அவன் எறிந்தான். அதீனியால் வழி [illegible] ஈட்டி, பாண்டாரஸின் மூக்கின் மேலே,

அவன் விழிகளின் வழியாக இறங்கி அவனது வெண் பற்களுக்கு இடையில் சென்றது. இரக்கமற்ற அந்த ஈட்டியினால் அவனது நாக்கு அடியிலிருந்து வெட்டுப்பட்டது. அதன் நுனி கன்னத்தின் வழியாக வெளியே வந்தது. அவன் தேரிலிருந்து வீழ்ந்தான். அவனது ஒளிபொருந்திய மின்னும் கவச உடை, அவனைச் சுற்றி கடகடவென ஒலித்து விழுந்தது. அவனது விரைவுக் குதிரைகள் வெட்கி ஓடின. உயிரும் ஆன்மாவும் அக்கணமே அவனை விட்டுப் பிரிந்தது.

தனது கேடயம் மற்றும் நீண்ட ஈட்டியுடன் இப்பொழுது ஈனியாஸ் தேரைவிட்டுக் கீழே குதித்தான். கிரேக்கர்கள் பாண்டாரஸின் உடலை எடுத்துச் சென்று விடுவார்களோ என்று அஞ்சிக்கொண்டே, அந்த உடலை தன் ஈட்டியாலும் கேடயத்தாலும் மூடியபடி அவன் அதனருகில் நின்றான். தனது அதிகாரத்தில் பெருமைகொண்ட சிங்கம்போல யார் வந்தாலும் கொன்றுவிட வேண்டும் என்னும் உறுதியுடன், அச்சுறுத்தும் போர் முழக்கம் செய்தபடி!

டயமீடிஸ் ஒரு பாறையைத் தூக்கினான். அது ஒரு பயங்கரமான சாதனை. இரண்டு வீரர்கள் சேர்ந்தாலும் அதைத் தூக்க முடியாது. ஆனால் டயமீடிஸ், அதை அலட்சியமாக சுண்டிக்கொண்டே வந்தான். அதைக் கொண்டு அவன் ஈனியாஸின் இடுப்பில், தொடையும் இடுப்பும் சேரும் எலும்பில் தாக்கி, அந்த எலும்பை உடைத்தான். தசை நார்களையும் வெட்டினான். கூரிய முனை கொண்ட அந்தப் பாறையால் ஈனியாஸின் தோல் உரிந்து வந்தது. வீரன் ஈனியாஸ் முழந்தாளிட்டு அமர்ந்தான். தன் ஒரு பெரிய கையை தரையிலூன்றி ஆதரவு தேடினான். ஆனால் இவ்வுலகம், இரவைப் போல கறுப்பாகிக்கொண்டே போனது.

கால்நடைகளை மேய்த்துக்கொண்டிருந்த ஆங்க்கைஸுக்கு, ஈனியானக் கருத்தரித்த பெண்தெய்வமாகிய அஃப்ரோடைட்டி மட்டும் விரைவாக அங்கு வராமல் இருந்திருந்தால், மக்கள் தலைவனாகிய ஈனியாஸ் அங்கேயே இறந்திருப்பான். நடந்தது என்னவென்பதைப் புரிந்துகொண்ட அவள், தன் வெண்ணிறக் கரங்களால் தன் அருமை மகன் ஈனியாஸை அணைத்தாள். பறந்து வந்து தாக்கும் ஆயுதங்களிலிருந்தும், விரைவுக் குதிரைகளில் வரும் கிரேக்கர்கள் எறியும் உயிர் பறிக்கும் ஈட்டியிலிருந்தும் அவனைக் காப்பாற்ற, மங்கிய ஒளி தரும் தன் ஆடையின் மடிப்பொன்றால் அவனைப் போர்த்தினாள்.

அஃப்ரோடைட்டி தன் மகனை போர்க்களத்திலிருந்து காப் பாற்றிக் கொண்டிருக்கும்போது, டயமீடிஸிடமிருந்து கிடைத்த உத்தரவுகளை மறக்காத ஸ்தெனீலஸ், தன் குதிரைகளின் கடிவாளக் கயிறுகளை தேர்க்காலில் கட்டினான். வன்முறைச் சம்பவம் நடந்த இடத்துக்குச் சற்று தள்ளி அவற்றை விட்டுவிட்டு, அழகான பிடரிகள் கொண்ட ஈனியாஸின் ஜோடிக்குதிரைகளை நோக்கிச் சென்றான்.

அவைகளைப் பிடித்து, ட்ரோஜன் படைகள் இருந்த இடத்தி லிருந்து கிரேக்கப் படைகள் இருந்த இடத்துக்குக் கொண்டு வந்து, யாரையும்விட தான் மிகவும் நேசிக்கும் தன் வயதை யொத்த நெருங்கிய நண்பனான தன்னோடு உடன்படும் டெய்பைலஸிடம் ஒப்படைத்தான். உட்குழிந்த கப்பல்களுக்கு அக்குதிரைகளைக் கொண்டுசெல்லும்படி அவனிடம் கூறி விட்டு, தன் தேரேறி, மின்னும் தன் குதிரைக் கடிவாளங்களைப் பற்றிப் பிடித்து, டயமீடிஸைத் தேடி தேரை ஓட்டினான் உடனே.

இதற்கிடையில், அச்சம் கொண்ட தேவதையான அஃப்ரோ டைட்டியை, இரக்கமற்ற தன் ஈட்டியை ஏந்திய வண்ணம் தீவிரமாகத் தேடினான் டயமிடிஸ். அதீனியைப் போலவோ என்யாவைப் போலவோ நகரங்களை அழிக்கவல்ல பெண் கடவுளல்ல அவள். ஆண்கள் கலந்து கொள்ளும் போரில் முக்கிய பங்கு வகிக்கக் கூடியவளும் அல்ல. வெகுநேரம் தேடிய பிறகு, அவளைக் கண்டுபிடித்து அவளைத் தாக்கத் தாவினான். தன் கூர் ஈட்டியோடு அவள் மீது பாய்ந்த அவன், அவளின் மிருதுவான உள்ளங்கையின் அடிப்பகுதியில் குத்தினான். க்ரேஸ்கள் அவளுக்காகச் செய்து கொடுத்திருந்த நையாத அவளுடைய துணியைக் கிழித்துக்கொண்டு, உள்ளங்கையும் மணிக்கட்டும் சேரும் இடத்தில் அவள் சதையைக் கிழித்தது. அவளுடைய கையிலிருந்து அருள் பாலிக்கப்பட்ட கடவுளரின் நாளங்களில் ஓடும் நீரான தெய்வீக நித்திய ரத்தம் வெளிவந்தது. உண்பது மின்றி, குடிப்பதுமின்றி வாழும் குருதியற்ற நித்தியக் கடவுளர் அவர்கள். துளைக்கும் விதமாக அலறிய அஃப்ரோடைட்டி, தன் மகனைக் கீழே போட்டாள். ஆனால் ஃபீபஸ் அப்போலோ, அவனை ஏந்திக்கொண்டான். அவனை ஒரு கறுத்த நீலநிற மேகத்தால் போர்த்தினான், விரைவுக் குதிரைகளில் வரும் கிரேக்கர்கள் எறியும் உயிர் பறிக்கும் ஈட்டியிலிருந்து அவனைக் காப்பாற்ற. போர்முழக்கம் செய்யும் தலைவனாகிய டயமீடிஸ் அவளைப் பார்த்துக் கத்தினான்

'ஜீயூஸின் மகளே அஃப்ரோடைட்டி! போர்க்களத்திலிருந்தும் அதன் உயிர்வதைகளிலிருந்தும் ஒதுங்கியிரு. பெண்களின் பலவீனமான அறிவைக் கெடுப்பது உனக்குப் போகவில்லையா? போரின் குறுக்கே புகுந்து தொல்லை கொடுக்க நீ விரும்பினால், போர் என்று சொன்னாலே நடுநடுங்கிப் போகும் அளவுக்கு ஆக்கிவிடுவேன்!'

அவன் அப்படிச் சொன்னதும் மிகுந்த வேதனையுடன் குழம்பியவளாக, அஃப்ரோடைட்டி பின்வாங்கிக் கொண்டாள். அவளது அழகிய தோல் ரத்தத்தால் கருமையடைந்திருந்தது. வலியில் அவள் துடித்தாள். ஆனால் காற்றைப் போல விரைவாக வந்த அய்ரிஸ், அவளை அங்கிருந்து அகற்றிக்கொண்டு போனாள். போர்க்களத்தின் இடது பக்கம், போர்க்கடவுள் ஏரிஸ் தரையில் அமர்ந்து இருப்பதை அவள் பார்த்தாள். அவனுடைய குதிரைகளும் ஈட்டியும் ஒரு மேகக் கூரையின்மீது சாய்ந்து ஓய்வெடுத்துக் கொண்டிருந்தன. அவன் முன்னால் முழந்தாளிட்டு அமர்ந்த அவள், தங்கத் தலைகள் கொண்ட அவன் குதிரைகளை கடனாகக் கேட்டாள்

'என்னருமைச் சகோதரனே! நான் பாதுகாப்பாக இருப்பது உன் பொறுப்பு. நித்தியர்கள் வாழும் ஒலிம்பஸ் மலைக்கு நான் திரும்பிச் செல்ல உனது குதிரைகளைக் கொடு. நான் மிகுந்த வேதனையில் இருக்கிறேன். ஒரு மானிடன், டயமீடிஸ், என்னைக் காயப்படுத்திவிட்டான். அவன் இப்பொழுது இருக்கும் மனநிலையில் தந்தை ஜீயூஸோடுகூட அவன் போர் செய்வான் என்று தோன்றுகிறது!'

அப்படி அவள் சொன்னதும் ஏரிஸ் தங்கத் தலைகள் கொண்ட தன் குதிரைகளைக் கொடுத்தான். மனக்கஷ்டத்துடன் தேரில் ஏறினாள் அஃப்ரோடைட்டி. ஆனால் அய்ரிஸ், அவள் பக்கத்தில் வந்தமர்ந்து கொண்டாள். கடிவாளங்களைப் பிடித்து, சாட்டையைச் சொடுக்கி, குதிரைகளை முடுக்கினாள். விருப்பத் துடன் பறந்தது அந்த ஜோடி. கடவுளர்களின் வீடுகளமைந்த செங்குத்தான ஒலிம்பஸ் மலைக்கு விரைவிலேயே போய்ச் சேர்ந்தனர் இருவரும். அங்கே சென்றதும், காற்றைப் போல விரையும் அய்ரிஸ், குதிரைகளை நிறுத்தினாள். தேரிலிருந்து அவற்றைப் பிரித்தாள். அவைகளுக்குப் பக்கத்தில் அமிழ்தத்தில் செய்த கொள்ளை வைத்தாள். தெய்வீக அஃப்ரோடைட்டி, தன் அன்னை டயோனியிடம் சென்று அவள் மடியில் விழுந்து

அழுதாள். டயோனி அவளைத் தூக்கி ஆதரவாகத் தடவினாள். பின் சொன்னாள் :

'என்னருமைக் குழந்தாய்! எந்த விண் கடவுள் உன்னிடம் இப்படி முட்டாள்தனமாக நடந்து கொண்டது? பொதுவிடத்தில் நீ ஏதோ தீங்கு செய்தது போல?'

புன்னகை விரும்பும் அஃப்ரோடைட்டி சொன்னாள்

'மற்ற யாரையும்விட எனக்கு முக்கியமான என் அருமை மகன் ஈனியாஸை போர்க்களத்திலிருந்து காப்பாற்றியதற்காக, டைடியூ ஸின் மகன் விடாமுயற்சி கொண்ட டயமீடிஸ் என்னைக் குத்தி விட்டான்! இந்த யுத்தம் இனி ட்ரோஜன்களுக்கும் கிரேக்கர்களுக் கும் இடையில் நடக்கும் யுத்தம் மட்டுமல்ல. கடவுள்களையும் எதிர்த்து இப்பொழுது கிரேக்கர்கள் போரிட ஆரம்பித்து விட்டார்கள்.'

விண்ணுலகப் பெண் தெய்வம் டயோனி பதில் சொன்னாள்

'உனக்கு வேதனை இருக்கிறது என்பது எனக்குத் தெரியும். எனினும் பொறு மகளே, பொறுத்துக்கொள்! ஒருவரையொருவர் தீவிரமாக காயப்படுத்த முயன்றபோதெல்லாம், இந்த ஒலிம்பஸ் மலையில் வாழும் நம்மில் பலருக்கு, மானிடர்களால் காயம் ஏற்பட்டிருக்கிறது.

'அலோயஸின் மக்களாகிய ஓட்டஸூம் வலிமைமிகு எஃபியால்ட்டிஸூம் ஒரு முறை ஏரிஸூக்கு விலங்கிட்டபோது, அவனும் வேதனைப்பட வேண்டியிருந்தது. பதின்மூன்று மாதங்கள் அவன் ஒரு வெண்கல ஜாடிக்குள் அடைந்து கிடந்தான். திருப்திப்படுத்த முடியாத போர்க்கடவுளான ஏரிஸின் முடிவாக அது இருந்திருக்கும் அழகான எரிபியா தன் சித்தி ஹெர்மிஸ் இடம் அவர்கள் செய்ததை மட்டும் சொல்லாம லிருந்தால். சமாளிக்க முடியாத சங்கிலிகளால் கட்டப்பட்டு இருந்தபோதும், அதிலிருந்து வெளியேற்றி ஹெர்மிஸ் அவனைக் காப்பாற்றியபோதே, அவனுடைய உயிர் கிட்டத் தட்ட போன நிலையில் இருந்தது.'

'ஆம்ஃப்ட்ரியானின் மகன் ஹெராக்லிஸ், மூன்று முனை கொண்ட அம்பினால் வலது முலையில் குத்தியபோது, ஹீராவும் மிகுந்த வேதனைப்பட்டாள். புயல் மேகங்களைச் செலுத்தும் ஜீயூஸின் மகனாகிய அதே ஹெராக்லிஸ் நரகத்தின் வாயிலில்,

ஒரு பறக்கும் அம்பினால் இறந்தவர் மத்தியில் ஹயடிஸைக் கடுமையாகத் தாக்கியதால், அச்சமூட்டும் ஹயடிஸூம் வேதனைக்குள்ளாகி இருக்கிறான். மனமுடைந்து, கடுமையான வேதனைக்குள்ளானவனாக, ஒலிம்பஸ் மலையில் ஜீயூஸின் அரண்மனைக்கு வந்தான் ஹயடிஸ். அவன் தோள் சதையில் குத்திக்கொண்டிருந்த அம்பு, கடுமையான வேதனையை அவனுக்குக் கொடுத்தது. எனினும் குணப்படுத்துவோனாகிய பேயான், மூலிகைகளை காயத்தின் மீது போட்டு அவனைக் குணப்படுத்தினான். இவ்வளவுக்கும் ஹயடிஸ் ஒரு நித்தியன். ஆனால், எவ்வளவு பிடிவாதம் கொண்ட அசுர மிருகம் அந்த ஹெராக்லிஸ்! தனது வில்லினால், ஒலிம்பஸ் மலையில் வாழும் கடவுள்களைக் காயப்படுத்துவதைப் பற்றிக்கூட அவன் கவலைப்படவில்லையே!

'உன் பிரச்னையைப் பொருத்தவரை, சாம்பல் நிறக்கண்ணாள் அதீனிதான் உன்னைத் துரத்தும்படி அந்த மானிடனுக்குச் சொன்னவள். டயமீடிஸ் எவ்வளவு முட்டாள்! நித்தியர்களோடு போரிடும் ஒரு மானிடனின் வாழ்வு எவ்வளவு குறுகியது என்பதைப் பற்றி அவனுக்குத் தெரிந்திருக்கவில்லை. அவனைப் பொருத்தவரை, போரிலிருந்து திரும்புவதென்பதோ 'அப்பா, அப்பா' என அழைத்துக்கொண்டு முழங்காலைக் கட்டிக் கொள்ளும் பிள்ளைகளோ கிடையாது. திணறடிக்கும் வலிமை கொண்டவனாகவே அவன் இருக்கட்டும். எனினும், உன்னை விட வலிமையான கடவுள் யாரும் அவனோடு போரிட வராமல் அவன் பார்த்துக்கொள்வது நல்லது. இல்லையெனில் ஒரு நாள், அவன் மனைவியும், அறிவார்ந்த அட்ரிஸ்டஸின் மகளுமான உயர்குடிப்பிறந்த அல்ஜியாலியா, அவள் மிகவும் நேசிக்கும் தன் வீட்டில் உறங்கிக் கொண்டிருக்கும் அனைவரையும் எழுப்பி, கிரேக்கர்களில் சிறந்தவனும், குதிரைகளை அடக்குபவனுமாகிய தன் இளம் கணவன் டயமீடிஸ் இறந்துவிட்டதைச் சொல்லிப் புலம்ப நேரிடும்!'

சொல்லிவிட்டு, இவ்விதம் அஃப்ரோடைட்டியின் மணிக் கட்டிலிருந்து வடிந்த குருதியை தன் கைகளால் துடைத்தாள் டயோனி. காயம் குணமடைந்தது. கடுமையான வேதனை நீங்கியது.

இதையெல்லாம் விடாமல் கவனித்துக்கொண்டிருந்த அதீனியும் ஹீராவும் நகைப்புடன் ஜீயூஸ் பக்கம் திரும்பினர். சாம்பல்

நிறக்கண்ணாள் தேவதை அதீனி தன் மனத்தில் உள்ளதைச் சொன்னாள்:

'தந்தையே ஜீயூஸ்! நான் சொல்லப்போவதை தவறாக எடுத்துக் கொள்ள மாட்டீர்களே? ட்ரோஜன்களை பயங்கரமாக நேசிக்கும் அஃப்ரோடைட்டி, கிரேக்கப் பெண்களை ட்ரோஜன்களின் அணைப்பினுள் செல்ல வசியப்படுத்தி, மீண்டும் தன் வேலையைத் தொடங்கிவிட்டாள் என்று நினைக்கிறேன். வசீகரமான உடையணிந்த கிரேக்கப் பெண்ணொருத்தி, தங்க ஊக்கு ஒன்று அணிந்திருந்தாள். அவளுடைய ஒயிலான கையை அதில் தேய்த்து, அவளைத் தட்டிக் கொடுத்து ஊக்குவித்தாள் அஃப்ரோடைட்டி.'

அவள் அப்படிச் சொன்னதும், மனிதர்களுக்கும் கடவுளருக்கும் கடவுளான ஜீயூஸ் புன்னகைத்துவிட்டு, தங்க மங்கை அஃப்ரோடைட்டியை அழைத்துச் சொன்னார்

'என் குழந்தாய்! போர்க்களம் உனக்கானதல்ல. திருமணப் படுக்கை, காதல் உணர்வுகள் இவற்றுக்கான பொறுப்பை நீ எடுத்துக்கொள். விரைவுப்பாத ஏரிஸூம், அதீனியும் படை விஷயங்களை கவனித்துக்கொள்ளட்டும்.'

இவர்கள் இப்படி ஒருவரோடொருவர் விவாதித்துக் கொண்டு இருக்கும்போது, போர்முழக்கத் தலைவனான டயமீடிஸ், மறுபடியும் ஈனியாஸ் மீது பாய்ந்தான். ஈனியாஸூக்கு அப்போலோவே பாதுகாப்பு கொடுத்திருக்கிறான் என்பதும் அவனுக்குத் தெரியும். ஆனால், அந்தப் பெரிய கடவுள் மீதும் அவனுக்கு மரியாதை இல்லை. ஈனியாஸை எப்படியாவது கொல்லவேண்டும். அவனது கவர்ச்சிகரமான கவச உடைகளை உருவ வேண்டும் என்பதற்கான முயற்சிகளில் அவன் உறுதியாக இருந்தான். கொல்லும் நோக்கத்துடன் மூன்று முறை அவன் ஈனியாஸ் மீது பாய்ந்தான். மூன்று முறையும் அவனுடைய மின்னும் கேடயத்தை அப்போலோ தட்டிவிட்டான். ஆனால், ஏதோ தானொரு அமானுஷ்யன் என்பது போல நான்காவது முறையாக அவன் பாய்ந்தபோது, வில்லேந்திய கடவுளான அப்போலோ பயங்கரமானதொரு ஒலியெழுப்பினான்.

'யோசித்து வழிவிட்டுவிடு டயமீடிஸ்! எங்களுக்கு இணையாக ஆகவேண்டும் என்று ஆசைப்படாதே. மண்ணில் நடக்கும்

மனிதர்களும், நித்தியர்களான கடவுளரும் ஒரே மாதிரியானவர்களல்ல!'

அப்படி அவன் சொன்னதும் டயமீடிஸ் சற்று விலகினான், வில்லேந்திய கடவுளின் கோபத்தைத் தவிர்க்கும் பொருட்டு. உடனே அப்போலோ ஈனியாஸை அங்கிருந்து அகற்றி, இலியத்தில் தன் கோயில் இருக்கும் புனித பெர்காமஸ் கோட்டைக்கு எடுத்துச் சென்றான். அங்கே மூலஸ்தானத்தில் லீட்டோவும் ஆர்ட்டீமிஸும் இருந்தனர். அம்புகளில் ஆனந்திக்கும் அவர்கள், ஈனியாஸைக் குணப்படுத்தியதோடல்லாமல், முன்பிருந்ததைவிட அவனை அருமையானவனாக ஆக்கினர்.

இதற்கிடையில், வெள்ளி வில்லின் தலைவனாகிய அப்போலோ, உருவத்திலும் கவச உடையிலும் ஈனியாஸ் போலவே இருக்கும் ஒரு மாயத்தோற்றத்தை உருவாக்கினான். அந்த மாயத் தோற்றத்தைச் சுற்றி ட்ரோஜன்களும் கிரேக்கர்களும், தம் மார்புகளைப் பாதுகாக்கும் சிறிய பெரிய எருதுத் தோலால் செய்யப்பட்ட கேடயங்களின் பின்னால் இருந்து, ஒருவரையொருவர் வெட்டிக் கொண்டனர். அப்பொழுது, ஃபீபஸ் அப்போலோ சினம் கொண்டு ஏரிஸைப் பார்த்துச் சொன்னான்:

'ஏரிஸ்! கொலைகார ஏரிஸ்! மனிதர்களைக் கசாப்பு செய்து, நகரங்களை அழிக்கும் ஏரிஸ்! நீ வந்து உதவிக்கரம் நீட்டி, இந்த டயமீடிஸை சண்டையை விட்டு அகற்ற மாட்டாயா? அவன் தந்தை ஜீயூஸோடும் போர் செய்யும் மனநிலையில் இருக்கிறான். அஃப்ரோடைட்டியின் மணிக்கட்டை காயப்படுத்துவதில் தொடங்கினான். இப்பொழுது ஏதோ அமானுஷ்யன் போல என் மீதே பாய்ந்தான்.'

இந்த வார்த்தைகளைச் சொல்லிவிட்டு அப்போலோ பெர்காமஸ் கோட்டையின் உச்சியில் போய் அமர்ந்து கொண்டதும், ட்ரோஜன் வீரர்களின் பக்கம் சென்று அவர்களை அணிதிரட்ட, திரேசியர்களின் விரைவுத் தலைவனான அகாமஸ் என்பவனின் உருக்கொண்டான், அழிக்கும் கடவுளான ஏரிஸ். ஒலிம்பஸ் மலையில் வளர்க்கப்பட்ட ப்ரியமின் மகன்களுக்கு உத்தரவுகள் கொடுத்து அவன் தன் வேலையைத் தொடங்கினான்

'ஒலிம்பஸ் மலை வளர்ந்த தலைவன் ப்ரியமின் மக்களே! இன்னும் எவ்வளவு காலம் கிரேக்கர்கள் உங்கள் வீரர்களைக்

*கொன்று குவிப்பதை அனுமதித்துக்கொண்டிருக்கப் போகி றீர்கள்? உங்கள் நகர வாயில்களை முற்றுகையிடும் வரையிலா? பெரிய மனம் கொண்ட ஆங்க்கைசஸின் மகன் ஈனியாஸ் மனமுடைந்து கிடக்கிறான். கடவுளையொத்த ஹெக்டரை நாம் எப்படி மதிக்கிறோமோ அப்படித்தான் அவனையும் மதிக்கி றோம். வாருங்கள், நமது வீரமிகு தோழனை அழிவிலிருந்து காப்பாற்றுவோம்!'*

*இவ்வார்த்தைகளைச் சொல்லி ஒவ்வொரு வீரனின் உள்ளத் திலும், புதிய எழுச்சியையும் உணர்ச்சியையும் கொடுத்தான் அவன். அதன்பின் கடவுளையொத்த ஹெக்டரை சர்ப்பிடான் கடிந்து கொண்டான்*

*'ஹெக்டர்! உன் வீர உணர்ச்சிகளெல்லாம் என்னானது? உன் சகோதரர்களையும் மைத்துனர்களையும் மட்டும் வைத்துக் கொண்டு, தனியாளாக, படைகளும் ஆதரவாளர்களும் இல்லா மலே இந்த நகரைக் காப்பாற்றுவேன் என்று பேசினாயே? ஆனால், இங்கே என் கண்ணில் ஒருவருமே படவில்லை. சிங்கத்தின் முன் பயந்து பதுங்கும் நாயைப் போல அவர்கள் இருக்கிறார்கள். நாங்கள் உன் ஆதரவாளர்களாகத்தான் வந்தோ மெனினும், நாங்கள்தான் சண்டையிடுகிறோம்.*

*'என்னை எடுத்துக்கொள். உன்னைப் பலப்படுத்த நான் மிக மிக நீண்ட தொலைவைக் கடந்து, பயணம் செய்து வரவேண்டி யிருந்தது. உயரும் அலைகள் எழும் சாந்தஸ் நதியில் இருந்தும் லைசியாவிலிருந்தும் வெகு தூரம் இது. அங்கே நான் என் அன்பு மனைவியையும், குழந்தையாக இருக்கும் என் மகனையும், பெரும் பெரும் சொத்து பத்துகளையும் விட்டுவிட்டு வந்திருக்கிறேன். அவற்றை, எந்த ஏழை பார்த்தாலும் கைவைக்க ஆசைப்படுவான். அதுமட்டுமல்ல. நான் என் லிசியர்களையும் சண்டையிட வைத்துள்ளேன். நானும் யாருக்கும் சளைக்காமல் போரில் எனக்கான எதிரியைச் சந்திக்க உறுதி கொண்டுள்ளேன். கிரேக்கர்கள் கொள்ளையடித்தாலும் கொண்டு போனாலும் எனக்கென்ன வந்தது?*

*'ஆனால், நீ இங்கு எதுவும் செய்யாமல் நின்றுகொண்டிருக் கிறாய். தம் பெண்களைக் காப்பதற்காகவாவது போரிடும்படி நீ உன் வீரர்களுக்குச் சொல்லவில்லை! கவனமாக இரு! இல்லை யெனில் வலையில் சிக்கிய மீனைப்போல மாட்டிக்கொள்வாய்.*

உன் எதிரிகளுக்கு எளிதில் இரையாவாய். அவர்கள் உனது செழிப்பான நகரை எப்போது வேண்டுமானாலும் முற்றுகை யிட்டு அழிக்கலாம். உனது ஆதரவாளர்களின் தலைவர்களோடு நீ பேசிப்பார்க்கலாம். ஆனால், இரவு பகல் என்று பாராமல் நீ கடுமையாகப் போர் செய்து, யாரும் உன்னைக் கடுமையாக விமர்சிக்க இடம் கொடாமல் பார்த்துக்கொள்ள வேண்டியது உன் பொறுப்பு!'

சர்ப்பிடான் இப்படிப் பேசியதும் ஹெக்டருக்கு அவமான மாகப் போனது. பூரணமாக ஆயுதம் தரித்துக்கொண்ட அவன், தன் தேரிலிருந்து கீழே குதித்தான். ஒரு ஜோடி கூர் ஈட்டிகளைச் சுழற்றிய வண்ணம், தன் வீரர்கள் இருந்த இடங்களுக்கெல்லாம் சென்று, அவர்களை போரிட உற்சாகப்படுத்தினான். கடுமை யான போரில் கலந்து கொள்வதற்கான வீர உணர்ச்சியைத் தூண்டினான். அதன் விளைவாக, ட்ரோஜன்கள் திரும்பி கிரேக்கர்களைச் சந்திக்கத் தயாராயினர். ஆனால், தரையில் பெரும் பெரும் குழுக்களாக நின்றுகொண்டிருந்த கிரேக்கர்கள் பின்வாங்கிச் செல்லவில்லை. புனிதமான கதிரடித் தரையி லிருந்து பதர் நீக்கிக்கொண்டிருக்கும்போது, உமியை காற்று அள்ளிக்கொண்டு போகும். தங்கக் கூந்தல் கொண்ட தேவதை டிமீட்டர், கதிரை பதரிலிருந்து பிரிப்பாள். குவித்து வைக்கப் பட்ட பதர்கள் மெல்ல மெல்ல வெள்ளையாகும். அதைப்போல, கீழே உள்ளவர்களோடு சேர்ந்து போரிட மேலேயிருந்து ரதங்களை வீரர்கள் ஓட்டிவந்ததால், குதிரைகளின் குளம்புகளில் இருந்து கிளம்பி வெண்கல வானத்துக்குச் சென்ற தூசுப்படலத் தினால், கீழே இருந்த கிரேக்க வீரர்கள் வெள்ளையாயினர். எதிரிகள் மிகவும் நெருக்கத்தில் போரிட வேண்டியிருந்தது.

ஆனால் சினம் கொண்ட போர்க்கடவுள் ஏரிஸ், ட்ரோஜன்களுக்கு உதவுவதற்காக போர்க்களத்தில் ஓர் இருள் திரையை வீசினான். தங்க வாள் கொண்ட கடவுள் ஃபீபஸ் அப்போலோ கொடுத்த உத்தரவை அவன் நிறைவேற்றிக் கொண்டிருந்தான். கிரேக்கர் கள் பக்கமிருந்து பல்லாஸ் அதீனி அவர்களிடமிருந்து விலகி யதைக் கண்டதும், ட்ரோஜன் வீரர்களுக்கு புத்துணர்ச்சியைக் கொடுக்கும்படி ஃபீபஸ்தான் ஏரிஸைக் கேட்டுக்கொண்டான். அதோடு ஈனியாஸையும், அவன் அடைக்கலம் புகுந்திருந்த வளமான ஆலயத்தின் உட்பகுதியிலிருந்து வெளியேற வைத் தான். இந்த மக்கள் மேய்ப்பனையும் புதிய மன உறுதியால்

நிறைத்தான். எனவே, ஈனியாஸ் மறுபடியும், தனது படையினர் நடுவே பொறுப்பெடுத்துக் கொண்டான். அவன் உயிரோடு இருப்பதையும், முன்னைப் போலவே உடல் உறுதியோடும் புதுத் தெம்போடும் இருப்பதையும் கண்ட வீரர்கள் அக மகிழ்ந்தனர். ஆனால், அவனிடம் கேள்விகள் கேட்டு பதில் பெற்றுக்கொண்டிருப்பதற்கு அவர்களுக்கு நேரமில்லை. செய்ய வேண்டிய சண்டை நிறைய இருந்தது. வெள்ளி வில்லின் தலைவன் அப்போலோ, மானிடரை அழிக்கும் ஏரிஸ், அச்சுறுத்தும் தீர்மானமான போர் ஆகியவற்றால் அவர்கள் உந்தப்பட்டிருந்தார்கள்.

அந்தப் பக்கம் இரண்டு அஜாக்ஸ்கள், ஒடிஸியூஸ், டயமீடிஸ் ஆகியோரால் கிரேக்கர்கள் தூண்டப்பட்டார்கள். ஆனால், அவர்களுக்கு உண்மையில் உற்சாகப்படுத்துதல் எதுவும் தேவை இல்லாமல்தான் இருந்தது. ட்ரோஜன்களால் நிகழ்த்தப்பட்ட எந்த வன்முறையும், பாதுகாப்பு தேடி அவர்களை ஓட வைக்கவில்லை அது எவ்வளவு கடினமாக இருந்தபோதிலும். அமைதியான தட்பவெப்பச் சூழ்நிலையில், கூச்சலிட்டுக் கொண்டே நிழல் மேகங்களை விரட்டும் சக்திமிகுந்த வடக்குக் காற்றுக்கும், மற்ற மூர்க்கத்தனமான தென்றல்களுக்கும் உறக்கம் வரும்போது மலைமுகடுகளுக்கு, ஜீயூஸ் மேகங்களால் தொப்பி அணிவிப்பான். அசையாத அம்மேகங்களைப் போல, கிரேக்கர் கள் ட்ரோஜன்களை எதிர்த்து பீதியடையாமல் தரையில் நின்றனர். அந்த அணிவகுப்புகளுக்கு மத்தியில் சென்ற அகமெம்னன் அவர்களுக்கு உத்தரவுகள் வழங்கினான்

'உடன் போரிடும் வீரர்களே, ஆண்களாக இருங்கள்! வீரஎழுச்சி யோடு இருங்கள்! போரில் தீவிரமான நிலையில், உங்கள் கண்கள் எதற்கும் அஞ்சக் கூடாது அவமானப்படுவதைத் தவிர. அவமானப்படுவதற்கு போர்வீரர்கள் அஞ்சும்போது, அதிகமா னோர் காப்பாற்றப்படுவர். கொஞ்சம் பேரே கொல்லப்படுவர். ஓடிப்போவதில் கௌரவமோ விமோசனமோ கிடையாது!'

இப்படிச் சொல்லிவிட்டு தன் ஈட்டியை விரைவாக எறிந்தான் அகமெம்னன். அது ஒரு முக்கியமான போர்வீரனும், பெரிய மனம் கொண்ட ஈனியாஸின் தோழனும், பெர்காஸஸின் மகனுமாகிய டெய்கூனைத் தாக்கியது. எப்பொழுதுமே முன் வரிசையில் இருந்து போரிடும் வீரனில் அவன் ஒருவனாக இருந்ததால், தலைவன் ப்ரியமின் மகன்களை மதிப்பது

போலவே ட்ரோஜன்களும் அவனை மதித்து வந்தனர். தலைவன் அகமெம்னன், அவனது கேடயத்தில் அடித்தான். அக்கேடயம் அவனைக் காப்பாற்றத் தவறியது. அந்த வெண்கல ஈட்டி கேடயத்தையும் இடுப்புக் கச்சையையும் துளைத்து, அவனது அடிவயிற்றுக்குள் சென்றது. தடாலென அவன் தரையில் விழுந்தான். அவனது வெண்கலக் கவச உடையும் கடகடவென ஒலித்து அவனுக்குப் பக்கத்தில் விழுந்தது.

அழகாகக் கட்டப்பட்ட ஃப்ரீ (எனும்) வீட்டில் வசித்த டயோக்லிஸின் மகன்களான ஆர்ஸிலோக்கஸ், க்ரீத்தான் ஆகிய சிறந்த கிரேக்க வீரர்கள் இருவரை, பதிலுக்கு ஈனியாஸ் கொன்றான். டயோக்லீஸ் மிகவும் வளமான பரம்பரையில் வந்தவன். அவனுடைய முன்னோர்கள், பைலோஸ் பகுதி முழுவதும் பரந்து விரிந்து ஓடும் ஆல்ஃபியூஸ் நதிக் கடவுளின் வம்சத்தைச் சேர்ந்தவர்கள். நதிக்கடவுள் முதலில், பலரை ஆண்ட ஆர்ட்டிலோக்கஸைப் பெற்றான். அவன் பெரிய மனம் கொண்ட டயோக்லீஸின் தந்தையாவான். டயோக்லீஸ் க்ரீத்தான், ஆர்ஸிலோக்கஸ் ஆகிய இரட்டையரைப் பெற்றான். அந்த இருவரும் எல்லா விதமான போர்ப்பயிற்சிகளிலும் அனுபவம் பெற்றவர்கள். அவர்களுக்கு உரிய வயது வந்த போது, அகமெம்னன், மெனிலயஸ் ஆகியோருக்குக் கிடைக்க வேண்டிய நியாயத்துக்காகப் போரிட, கிரேக்கர்களின் கறுப்புக் கப்பல்களில் ஏறி வந்தனர். ஆனால், அவர்களின் அந்த வீரப் பயணம் இறப்பில் முடிந்தது. ஆழமான புதர்க்காடுகளில் தாயினால் வளர்க்கப்படும் இரண்டு சிங்கக் குட்டிகள், மலை முகடுகளில் கால்நடைகளையும் கொழுத்த ஆடுகளையும் தின்று வளர்ந்துவரும்போது, அவைகளே வெண்கல ஆயுதங்கள் கொண்ட மானிடர்களின் வேட்டைக்குப் பலியாகிவிடுவதைப் போல, அந்த இருவரும் ஈனியாஸால் கொல்லப்பட்டு, உயர்ந்த தேவதாரு மரங்களைப் போல கீழே சாய்ந்தனர்.

அவர்களின் இறப்பைக் கண்ட போர்த்திறம் கொண்ட மெனில யஸ், இரக்கத்தால் நிரம்பினான். தன் வெண்கலப் போருடை பளபளக்க, தன் ஈட்டியைச் சுழற்றிக்கொண்டே முன் வரிசைக்கு முன்னேறிச் சென்றான் அவன். அவனை ஏரிஸ் உற்சாகப்படுத்தி னான். ஆனால், அவன் ஈனியாஸால் கொல்லப்பட வேண்டும் என்பதே ஏரிஸின் நோக்கமாக இருந்தது. ஆனால் பெரிய மனம் கொண்ட நெஸ்டரின் மகனான ஆன்ட்டிலோக்கஸ், இதை யெல்லாம் பார்த்துக்கொண்டிருந்தான். ஏதோ அசம்பாவிதம்

நடக்கப் போகிறது என்று அஞ்சிய அவன், அந்த மக்கள் தலைவனுக்கு ஏதேனும் ஆகிவிட்டால் அவர்களுடைய எல்லா முயற்சிகளும் வீணாகிவிடும் என்பதை உணர்ந்துகொண்ட அவன், மெனிலயஸைத் தொடர்ந்து முன்வரிசையில் முன்னேறினான்.

ஈனியாஸும் மெனிலயஸும் ஒருவரோடொருவர் பொருது வதென முடிவு செய்தவர்களாக ஒருவரை நோக்கி ஒருவர் தத்தம் ஈட்டிகளால் குறிபார்த்தனர். மெனிலயஸின் பக்கத்தில் சென்று ஆன்ட்டிலோக்கஸ் நின்று கொண்டான். அவர்கள் இருவரும் சேர்ந்து நிற்பதைக் கண்டதும், எழுச்சிமிக்க வீரனாக இருந் தாலும் ஈனியாஸ் தொடர்ந்து அங்கு நிற்கவில்லை. அதைக்கண்ட ஆன்ட்டிலோக்கஸும் மெனிலயஸும், க்ரீத்தன் மற்றும் ஆர்ஸிலோக்கஸ் ஆகியோரின் உடல்களை இழுத்துக்கொண்டு வந்து கிரேக்கப் படைகள் இருந்த பகுதிக்கு வந்தனர். தம் வீரர்களிடம் துரதிருஷ்டவசமான அந்த ஜோடியை ஒப்படைத்த பின்னர், மறுபடியும் முன் வரிசைக்குச் சென்று போரிடத் தொடங்கினர்.

பின் அவர்கள், ஏரிஸுக்கு இணையான கேடயம் கொண்ட, வீர நெஞ்ச பாஃப்லகோனியன்களின் தலைவனான பைலிமீனிஸைக் கொன்றனர். மகா ஈட்டியெறி விற்பன்னனான மெனிலயஸ், அவனுடைய கழுத்து எலும்பில் தன் ஈட்டியால் குத்தியபோது, அவன் மரம்போல அசையாமல் நின்றுகொண்டிருந்தான். இதற்கிடையில் அவனுடைய குதிரைகளை அங்குமிங்கும் ஓட்டிக்கொண்டிருந்த தேரோட்டியும் உதவியாளனுமாகிய மைடானை ஆன்ட்டிலோக்கஸ் அடித்தான். ஆன்ட்டிலோக்கஸ், அவனுடைய முழங்கையில் ஒரு பாறையால் தாக்கினான். உடனே தந்தத்தால் அலங்காரம் செய்யப்பட்ட கடிவாளம், அவன் கையை விட்டு நழுவி மண்ணில் விழுந்தது. ஆன்ட்டி லோக்கஸ் குதித்து, அவனுடையை பொட்டில் தன் வாளைச் செலுத்தினான். மூச்சுத்திணற, அழகாக வடிவமைக்கப்பட்ட அந்தத் தேரிலிருந்து அவன் தலைகீழாக தலையும் தோளும் மண்ணில் புதையுமாறு விழுந்தான். கொஞ்ச நேரம் அவன் அங்கேயே ஆழமாக மாட்டிக்கொண்டு கிடந்தான். பின்னர், அவன் குதிரைகளும் அவனை உதைத்து அவனை தரைமட்டமாக படுக்கவைத்தன. சாட்டையைச் சொடுக்கி, ஆன்ட்டிலோக்கஸ் அக்குதிரைகளை கிரேக்கப் படையின் பக்கமாக விரட்டிக் கொண்டு சென்றான்.

அணிவகுப்புகளுக்கு மத்தியில் இந்த இருவரையும் பார்த்து விட்ட ஹெக்டர், அவர்களை நோக்கி விரைந்து சப்தித்துக் கொண்டே வந்தான். அவனுக்கு ஆதரவாக பின்னால் ஒரு சக்தி வாய்ந்த ட்ரோஜன்படை வந்தது. அவர்களை வழிநடத்திக் கொண்டு போர்க்கடவுள் ஏரிஸூம், பெண் தெய்வமான என்யாவும் வந்தனர். என்யா, தன்னோடு மானங்கெட்டவனும் அழிப்பவனுமாகிய குழப்பத்தைக் கூட்டி வந்தாள். ஓர் அச்சமூட்டும் ஈட்டியை கையில் வைத்துச் சுழற்றிய, வண்ணம் ஹெக்டருக்கு முன்னாலும் பின்னாலும் மாறிமாறி நடந்து வந்தான் ஏரிஸ்.

போர்முழக்கத் தலைவனாக, டயமீடிஸ் அவர்களைப் பார்த்தவுடன் அதிர்ச்சியுற்றான். நீண்டதொரு சமவெளியைக் கடந்து வரும் ஒரு பயணி, திடீரென குறுக்கே வேகமாகக் கடலை நோக்கி ஓடிவரும் ஓர் ஆற்றைப் பார்த்தவுடன் நின்று, நுரைத்துப் பொங்கும் அதன் வேகத்தைக் கண்டு வந்தவழி திரும்பிச் செல்வதுபோல, டயமீடிஸ் திரும்பிச்சென்று தன் படை வீரர்களிடம் சொன்னான்:

'வீரர்களே! கடவுளையொத்த ஹெக்டரின் வீரத்தையும் போர்த் திறமையையும் நாம் வியக்கத்தான் செய்கிறோம். அவனைக் காப்பாற்ற, யாராவது ஒரு கடவுள் அவன் அருகிலேயே இருக்கிறார். இப்பொழுது ஏரிஸ் அவனோடு வருகிறார், ஒரு மானிடனின் உருவில். எனவே பின்வாங்குங்கள். ஆனால், எதிரிகளின் முகங்களைப் பார்த்துக்கொண்டே செல்லுங்கள். கடவுளர்களோடு நாம் போரிடக் கூடாது.'

இப்படி அவன் சொன்னதும் ட்ரோஜன்கள் கிரேக்கர்கள்மீது பாய்ந்தனர். ஒரே தேரில் ஏறி வந்த, சண்டை போடுவதில் உறுதி குறையாத மெனஸ்தியூஸ் மற்றும் ஆங்க்கியாலஸ் ஆகிய இருவரையும் ஹெக்டர் கொன்றான்.

அவர்களின் இறப்பு டிலமானின் மகன் மகா அஜாக்ஸின் மனத்தில் இரக்கத்தை ஏற்படுத்தியது. அவர்களுக்குப் பக்கத்தில் போய் நின்ற அவன், பளபளக்கும் தனது ஈட்டியைப் பறக்க விட்டான். பல பயிர் நிலங்களின் சொந்தக்காரனும், பீசஸ் என்ற ஊரில் வாழ்ந்தவனுமாகிய வளமான ஆம்ஃபியஸை அது தாக்கியது. ப்ரியம் மற்றும் அவனது மகன்களுக்கு ஆதரவாகப் போரிட, ட்ராய் நகருக்கு விதி அவனைக் கொண்டுவந்திருந்தது.

டிலமானின் மகனான அஜாக்ஸ், அவனது இடுப்புக் கச்சையில் அடித்தான். நீண்ட நிழல்கொண்ட ஈட்டி அவனது அடிவயிற்றில் இறங்கியது. தடாலென தரையில் வீழ்ந்தான் அவன். ஆனால் புகழ்மிகு அஜாக்ஸ் ஓடிச்சென்று அவனது கவச உடையைக் கழற்ற முயன்றபோது, ட்ரோஜன் படைகள் அவனைச் சுற்றிக் கொண்டு பளபளக்கும் ஈட்டிகளால் மாறிமாறி தொடர்ந்து தாக்கிய வண்ணமிருந்தனர். அதில் பலவற்றை, அவன் தனது கேடயத்தால் தடுத்தான். அதேசமயம், செத்தவனின் உடல்மீது கால்வைத்து அழுத்தி அவனுடைய வெண்கல ஈட்டியை வெளியே எடுத்தான். ஆனால் அவன் முதுகில் இருந்த அருமை யான போருடையை கழற்ற முடியவில்லை. சுற்றியிருந்தவர் அனுப்பிக்கொண்டிருந்த ஈட்டிகள், அவனைச் செயலிழக்கச் செய்தன. அதோடு, தயாராக இருந்த ஈட்டிகளுடன் வெற்றி கொள்ள முடியாத வகையில் எண்ணற்ற ட்ரோஜன் வீரர்களால் சூழப்பட்ட அவன், அஞ்சினான். சக்திமிகுந்த மாபெரும் வீரனாக அவன் இருந்தபோதும், அதிர்ச்சியுற்று அவன் பின்வாங்கிச் செல்லுமாறு ட்ரோஜன் வீரர்கள் செய்தனர்.

இவ்விதமாகப் போர் நடந்து கொண்டிருந்தபோது, ஹெராக்லி ஸின் உயரமான அருமை மகனான, திலிபோலிமஸ் கடவுளை யொத்த சர்ப்பிடானோடு சண்டையிடும்படி செய்தது இரக்கமற்ற விதி. ஒருவரையொருவர் நெருங்கிவந்த அவர்களிருவரில், ஒருவன் மேகங்களைச் செலுத்தும் ஜீயூஸுக்கு மகன்; இன்னொருவன் பேரன். திலிபோலிமஸ்தான் முதலில் பேசி னான்:

'லைசிடர்களின் ஆலோசகனான சர்ப்பிடானே! இங்கு ஏன் வந்தாய்? பதுங்குவதற்கும் ஒளிவதற்குமா? போர் என்றால் என்னவென்று உனக்குத் தெரியாது. புயல் மேகங்களை விரட்டும் ஜீயூஸின் மகனென்று உன்னை அழைப்பவர்கள் பொய்யர்கள். நீ ஜீயூஸின் மகன்களைப் போலவே இல்லை. எதையும் செய்யத் துணிந்த சிங்க நெஞ்சம் கொண்ட என் தந்தை சக்திவாய்ந்த ஹெராக்லிஸ், ஒரு முறை லாமிடானின் பெண் குதிரைகளைக் கொண்டுசெல்ல இங்கு வந்தார். வெறும் ஆறு கப்பல்களோடும் ஒரு சிறு படையோடும் வந்த அவர், இலியம் நகரை அழித்து அதன் தெருக்களை விதவையாக்கிவிட்டுச் சென்றார். அவருக் கும் உனக்கும்தான் எல்லா வகையிலும் எவ்வளவு வித்தியாசம்! உனக்கு ஒரு கோழையின் நெஞ்சம்தான் உள்ளது. உனது

படையினரோ ஓடத் தயாராக உள்ளனர். நீ வேண்டுமானல் உறுதியாகச் சண்டை போடுபவனாக இருக்கலாம். ஆனால் லைசியாவிலிருந்து இங்கு வந்திருக்கும் உனது பயணம், ட்ரோஜன்களுக்கு அதிகம் பயன் தரக்கூடியதாக அமையும் என்று நான் நினைக்கவில்லை. எனக்கு நீ விழப்போகிறாய். ஹயடிஸின் வாயில் வழியாக நுழைந்து போகப்போகிறாய்!'

லைசியர்களின் தலைவனாகிய சர்ப்பிடான் பதில் சொன்னான்:

'திலிபோலிமஸ்! புனித இலியம் நகரை ஹெராக்லிஸ் அழித்தது உண்மைதான். ஆனால், உயர்ந்தோனாகிய லாமிடோன் என்ற ஒரு மனிதனின் முட்டாள்தனத்தினால் வந்தது எல்லாம். ஹெராக்லிஸின் சேவைகளை அவன் மதிக்கவில்லை. பதில் மரியாதை செய்வதற்குப் பதிலாக, அவனை அவமானப்படுத்தி னான். பெண் குதிரைகளுக்காக அவ்வளவு தூரம் வந்த அவனுக்கு, அவற்றைக் கொடுக்க மறுத்தான். உன்னைப் பொருத்தவரை, உனக்கு இருண்ட இறப்பும் அழிவும் என் கையால் காத்திருக்கிறது. எனது ஈட்டியால் வெல்லப்பட்டு உன் புகழையெல்லாம் என்னிடமும், உன் உயிரை, குதிரைகளுக்குப் புகழ்பெற்ற ஹயடிஸிடமும் ஒப்படைத்துவிட்டுப் போகப் போகிறாய்!'

சர்ப்பிடான் அப்படி பதில் சொன்னதும், திலிபோலிமஸ் தனது சாம்பல் நிற ஈட்டியை உயர்த்தினான். அவர்களுடைய மாபெரும் ஆயுதங்கள் இருவர் கைகளிலிருந்தும் ஒரே நேரத்தில் பாய்ந்தன. திலிபோலிமஸின் கழுத்தின் மத்தியில் சர்ப்பிடான் தாக்கினான். வேதனை தரும் அவ்வீட்டி கழுத்தில் நுழைந்து சென்றது. அவனது கண்களை, இருண்ட இரவு தழுவியது. அதே நேரத்தில் திலிபோலிமஸின் ஈட்டி, சர்ப்பிடானை இடது தொடையில் தாக்கியது. அதன் முனை ஆர்வமாக உள்ளே போய் எலும்பை மேய்ந்தது. ஆனால் அந்தக் கணத்தில் அவனுடைய தந்தையான ஜீயூஸ், அவனை மரணத்திலிருந்து காப்பாற்றினான்.

கடவுளையொத்த சர்ப்பிடானை அவனுடைய வீரர்கள் அங்கிருந்து தூக்கிச் சென்றனர். அந்த மாபெரும் ஈட்டி கூடவே வந்து அதன் கனத்தால் அவனை அழுத்தியது. வீரர்கள் தமது அவசரத்தில் அந்த ஈட்டியை கவனிக்கவில்லை. அதை அவன் தொடையிலிருந்து உருவி வெளியே எடுத்துவிடவேண்டும் என்றும் அவர்களுக்குத் தோன்றவில்லை. அப்படிச் செய்

திருந்தால் அவன் தன் கால்களால் நடந்து சென்றிருக்க முடியும். பாதுகாப்பாக அவனைக் கொண்டு சேர்ப்பதிலேயே அவர்களின் கவனம் இருந்தது.

அந்தப் பக்கம், கிரேக்க வீரர்கள் திலிபோலிமஸைத் தூக்கிச் சென்றனர். பொறுமைமிகு, கடவுளையொத்த ஒடிஸியூஸ் அதைப் பார்த்து வெகுண்டான். இடி முழக்கம் செய்யும் ஜீயூஸின் மகனான சர்ப்பிடானைத் துரத்திக் கொண்டு செல்வதா அல்லது மீதியிருக்கும் லைசியர்களைக் கொன்று குவிப்பதா என்று அவன் யோசித்தான். ஆனால் ஜீயூஸின் வலிமைமிகு மகன், ஒடிஸியூஸின் வெண்கல ஈட்டிக்கு விழ வேண்டும் என்று விதி விரும்பவில்லை. எனவே, அதீனி அவன் கோபத்தை லைசியன்கள் பக்கம் திருப்பினாள். உடனே அங்கேயே அவன் கோரானஸ், அலாஸ்டர், க்ரோமியஸ், அல்காண்டர், ஹேலியஸ், நொய்மான், ப்ரிட்டானிஸ் ஆகியோரைக் கொன்றான்; மின்னும் தலைக்கவசமும் கூரிய பார்வையும் கொண்ட ஹெக்டர் மட்டும் பார்க்காமல் இருந்திருந்தால், இன்னும் பல லைசியர்களை ஒடிஸியூஸ் கொன்று குவித்திருப்பான். தன் வெண்கலக் கவச உடை பளபளக்க, முன் வரிசையின் ஊடாக அவன் முன்னேறி, கிரேக்கர்களை கிலி பிடிக்க வைத்தவண்ணம் வந்தான். அவன் வந்ததில் மகிழ்ந்த ஜீயூஸின் மகனான சர்ப்பிடான் அவனிடம் வேண்டினான்

'ப்ரியமின் மகனே ஹெக்டர்! என்னைக் காப்பாற்று. கிரேக்கர்களின் கருணையில், என்னை இங்கேயே விட்டுவிடாதே. பிறகு நான் உனது நகரிலேயே இறந்துவிடுவேன். எனது தந்தையர் நாட்டுக்கு நான் திரும்பிச் சென்று, என் மனைவியையும் சின்னக் குழந்தையையும் பார்க்கவேண்டுமென்று விதியில்லை.'

அப்படி அவன் சொன்னாலும், பளபளக்கும் தலைக்கவசம் கொண்ட ஹெக்டர் பதிலொன்றும் சொல்லாமல் அவனைக் கடந்து சென்றான். கிரேக்கர்களில் எவ்வளவு பேரை முடியுமோ அவ்வளவு பேரைக் கொன்று, அவர்களைப் பின்வாங்க வைப்பதுதான் தனது தலையாய கடமை என்று அவன் நினைத்தான். ஆனால் புயல் மேகங்களைச் செலுத்தும் ஜீயூஸுக்குரிய ஒரு அழகான கருவாலி மரத்தின் அடியில், கடவுளையொத்த சர்ப்பிடானை அவனது வீரர்கள் கொண்டு போய்பாதுகாப்பாக, படுக்கவைத்தனர். அங்கேயிருந்த அவனுடைய நெருங்கிய நண்பனான வலிமை வாய்ந்த பெலகான், அவனுடைய

தொடையிலிருந்து, அந்தச் சாம்பல் நிற ஈட்டியை உருவி வெளியே எடுத்தான். சர்ப்பிடானின் கண்களில் ஒரு பனிப் படலம் இறங்கியது. அவன் மூர்ச்சையானான். ஆனால், விரைவிலேயே மூர்ச்சை தெளிந்து எழுந்தான். வடக்குக் காற்று அவனைச் சுற்றி விளையாடியது. காய்ந்திருந்த அவனுக்கு அது புத்துயிரூட்டியது.

போர்க்கடவுள் ஏரிஸையும், வெண்கலக் கவச உடையணிந்த ஹெக்டரையும் பார்த்த கிரேக்க வீரர்கள் பீதியடைந்து ஓடிப்போய் தம் கறுப்புக் கப்பல்களில் ஏறிக்கொள்ளவில்லை; திருப்பித் தாக்கவும் இல்லை. ட்ரோஜன்களின் பக்கம் ஏரிஸ் இருப்பதைப் புரிந்துகொண்ட அவர்கள், பின்வாங்கி தக்க தருணத்துக்காகக் காத்திருந்தனர். அப்படியானால், ப்ரியமின் மகனான ஹெக்டராலும் வெண்கலக் கவச உடையணிந்த ஏரிஸுக்கும், முதலும் கடைசியுமாக விழுந்த வீரர்கள் யார்? கடவுளையொத்த ட்யூத்ராஸ்தான் முதல் ஆள்! பின் குதிரைகளை அடக்கும் ஒரிஸ்டஸ்; பின் ஈட்டோலிய ஈட்டி எறிவீரன் ட்ரெக்கஸ்; பின் ஈனோமாஸ்; ஈனாப்ஸின் மகன் ஹெலீனஸ்; பின் தன் வளமான பண்ணையைப் பார்த்துக்கொண்டு, செழிப்பான நாட்டுப்புறப் பக்கமாக வாழ்ந்த, போட்டியர்களை அண்டை வீட்டுக்காரர்களாகக் கொண்டிருந்த, பளபளக்கும் இடுப்புக் கச்சை கொண்ட, கொபய்ஸ் ஏரியின் பக்கமாக ஹைலியில் வசித்த ஆரஸ்பிஸ்.

போரின் உக்கிரத்தில், கிரேக்கர்கள் ஏராளமாகக் கொன்று குவிக்கப்படுவதைக் கண்ட பெண் கடவுளான வெள்ளைக் கரங்கள் கொண்ட ஹீரா, உடனே அவசரமாக அதீனியிடம் சொன்னாள்

'புயல் மேகங்களைச் செலுத்தும் ஜீயூஸின் குழந்தாய்! அதீனிஅத்ரிதோனி! இது மிக மோசமான பேரழிவு. பயங்கரமான ஏரிஸ், இப்படியே காட்டுத்தனமாக நடந்துகொள்ள நாம் அனுமதித்துக்கொண்டு இருந்தோமானால், ஊருக்குத் திரும்பி வருவதற்குள் இலியம் நகரை நீ அழிப்பாய் என்று மெனிலயஸுக்கு நாம் கொடுத்த வாக்கு என்னாவது? வா! நம் இருவரின் போருணர்வையும் அழைக்கும் நேரம் வந்துவிட்டது.'

அப்படி அவள் சொன்னதும் சாம்பல் நிறக்கண்ணாள் அதீனி உடன்பட்டாள். க்ரோனஸின் மகளும் பண்டைய பெண் கடவுளு

மான ஹீரா, தங்கத் தலைப்பட்டை கொண்ட தன் குதிரைகளைத் தயார் செய்யச் சென்றாள். தேவதை ஹீபி, உடனே ஒவ்வொரு சக்கரத்திலும் எட்டு குறுக்குக் கம்பிகள் கொண்ட தேரின் இரண்டு வெண்கலச் சக்கரங்களையும் அதன் இரும்பு இருசில் பொருத்தி னாள். சக்கரத்தின் உள்விளிம்புகள் அழியாத தங்கத்தால் ஆக்கப் பட்டிருந்தன. வெளிப்பக்கமாக வெண்கலச் சக்கரங்கள் பொருத்தப்பட்டிருந்தன. அதன் குடங்கள் வெள்ளியால் ஆக்கப் பட்டிருந்தன. பார்ப்பதற்கே மிகவும் அற்புதமாக இருந்தது. தேரின் உடல்பகுதி, மடிப்பு மடிப்பான தங்கத்தினாலும் வெள்ளி யினாலும் ஆக்கப்பட்டிருந்தது. அதைச் சுற்றி வேலிபோல இரண்டு மடிப்புகள் சென்றன. தேரின் வெள்ளி ஏறுகால், முன் பகுதியிலிருந்து நீட்டிக்கொண்டிருந்தது. ஏறுகாலின் இறுதியில், அழகான தங்க நுகத்தடியை ஹீபி கட்டினாள். அதோடு தங்கத் தால் செய்யப்பட்ட பட்டைகளையும் இணைத்தாள்.. போரின் பேரொலியையும் பெருஞ்சினத்தையும் நேசித்தவளாக, அந்த நுகத்தடியின் கீழிருந்த தன் விரைவுக் குதிரைகளைச் செலுத்தி னாள் ஹீரா.

புயல் மேகங்களைச் செலுத்தும் ஜீயூஸின் மகளான அதீனி, ஜீயூஸின் வீட்டு வாயிலில் நின்றவளாக தன் கையாலேயே செய்த மிருதுவான பாநூவு போடப்பட்ட அங்கியைக் கழற்றினாள். அதற்குப் பதிலாக வேறு ஒரு குறுங்கைத் தளருடையை அணிந்து கொண்டாள். மேகங்களை அணிவகுத்துச் செல்லவைக்கும் ஜீயூஸின் போர்க்கவச உடையை, போருக்கும் அதன் எல்லா கண்ணீருக்கும் தயாரானவளாக, அதன்மீது அணிந்து கொண்டாள். பின் தனது தோளுக்கு மேலே பயங்கரமான அந்த குஞ்சம் வைத்த ஈஜிஸ் எனும் தெய்வீக அங்கியைப் போட்டுக் கொண்டாள். அதைச் சுற்றி அச்சம், யுத்தம், வன்முறை, சில்லிட வைக்கும் துரத்தல், ஜீயூஸின் அச்சமேற்படுத்தும் பயங்கரமான சக்திவாய்ந்த சின்னமான கார்கன் என்ற அசுர மிருகத்தின் தலை ஆகியன இருந்தன. தன் தலையில் இரண்டு முகடுகளுள்ள தங்கத் தலைக்கவசத்தை அணிந்துகொண்டாள். அதில் நான்கு தட்டுகள் இருந்தன. நூறு நகரங்களில் உள்ள போர் வீரர்களினால் அது அலங்கரிக்கப்பட்டிருந்தது. அதன்பின் அவள் தீ போன்ற தேரில் ஏறினாள். நீளமான, தடித்த, கனமான தன் ஈட்டியை எடுத்துக் கொண்டாள். எல்லாம் வல்ல தந்தையின் மகளாகிய அவள், அதைக்கொண்டுதான் வீரர்களின் அணிவகுப்புகளை உடைத்து வென்று, தன் சினத்தைக் காட்டுவாள்.

உடனே, ஹீரா முன்னால் வந்து, தன் குதிரைகளை விரைவு படுத்த சாட்டையைச் சொடுக்கினாள். ஒலிம்பஸின் கதவுகள் அவர்களுக்காக தாமாகவே இடிமுழக்கம்போன்ற ஒலியுடன் திறந்து வழிவிட்டன. அக்கதவுகளை, அகன்ற வானத்தின் பாதுகாவலர்களான பருவங்களும் ஒலிம்பஸுூம் பாதுகாத்து வைத்திருந்தனர். கனத்த மேகங்களால் ஆக்கப்பட்ட அக்கதவு களை, வேண்டும்போது உருட்டித் திறப்பதும் வேண்டாதபோது உருட்டி மூடுவதும் ஒலிம்பஸின் வேலையாக இருந்தது. இந்த வாயில்கள் வழியாகத்தான், பெண் தெய்வங்கள் தம் குதிரைகளை சாட்டையால் முடுக்கியபடி வெளியே ஓட்டிச் சென்றனர்.

ஒலிம்பஸின் சிகரங்களிலேயே மிக உயர்ந்ததில், ஜீயூஸ் தனியாக அமர்ந்திருப்பதை அவர்கள் பார்த்தனர். தேவதை ஹீரா தன் ஜோடிக்குதிரைகளை நிறுத்திவிட்டு, க்ரோனஸின் மகனான உயர்ந்த ஜீயூஸைப் பார்த்துக் கேட்டாள்:

'தந்தையே ஜீயூஸ்! ஏரிஸ் நிகழ்த்தும் அட்டூழியங்களைக் கண்டு உங்களுக்குக் கோபம் வரவில்லையா? காரணம் எதுவிமில் லாமல் அருமையான கிரேக்க வீரர்களை அவன் கொன்று குவிப்பதைப் பார்க்க உங்களுக்கு ஆத்திரம் வரவில்லையா? என்னால் இதைச் சகிக்க முடியவில்லை. ஆனால் உங்களது சைப்ரிய மகள் அஃப்ரோடைட்டியும், வெள்ளி வில்லின் தலைவ னாகிய அப்போலோவும் வசதியாக அமர்ந்துகொண்டு, நல்லதும் தெரியாத, கெட்டதும் புரியாத இந்தப் பைத்தியக்காரனை போரில் அவிழ்த்துவிட்டுவிட்டு, நடப்பதையெல்லாம் நிமிஷம் விடாமல் வேடிக்கை பார்த்துக்கொண்டுள்ளனர். நான் அவனைக் கடுமையாக அடித்து, போர்க்களத்தை விட்டுத் துரத்தினால் நீங்கள் கோபித்துக்கொள்வீர்களா தந்தையே?'

புயல் மேகங்களை அணிவகுக்கும் ஜீயூஸ் பதில் சொன்னான்:

'மாட்டவே மாட்டேன். நீ உன் வேலையைப் பார்க்கலாம். போர்த்தலைவியான அதீனியை அவன் மீது ஏவிவிடு. ஏரிஸுூக்கு வேதனையும் அவமானமும் தரும் சில பாடங்களைக் கற்றுக் கொடுப்பதில் அவளுக்குத்தான் பழக்கமுண்டு.'

அவன் அப்படிச் சொன்னதற்கு வெள்ளைக்கை தேவதையான ஹீரா உடன்பட்டாள். குதிரைகளை, சாட்டை கொண்டு சொடுக்கி முடுக்கினாள். விருப்புடன் அந்த ஜோடிக் குதிரைகள் நட்சத்திரங்கள் மின்னிய வானத்துக்கும் பூமிக்கும் இடையில்

*பறந்தன. கண்காணிப்புக் கோபுரத்தின் உச்சியில் இருந்து, மது நிறத்தில் இருளடைந்து கிடக்கும் கடலிலிருந்து, தெளிவாகத் தெரியாத தொலைவைப் பார்க்கும் ஒரு மனிதனுக்கு எவ்வளவு தூரம் தெரியுமோ அவ்வளவு தூரத்தை ஒரே தாவலில் கடந்தன பெருமிதம் கொண்டு செருமிய கடவுளரின் குதிரைகள். ஆனால் அக்குதிரைகள், ட்ராய் நகரில் சிமாய்ஸ், ஸ்கமாண்டர் ஆகிய இரு ஆறுகளும் சந்திக்கும் இடத்துக்கு வந்தபோது, அங்கே வெள்ளைக்கைப் பெண் கடவுளான ஹீரா குதிரைகளை நிறுத்தி, அவிழ்த்துவிட்டாள். அவற்றை ஒரு பனிப்படலத்தால் மறைத் தாள். அவற்றை உண்ண, தன்னிலிருந்து அமிர்தம் பொங்கிவர வழிவகுத்தது சிமாய்ஸ் நதி. பின் இரு தேவதைகளும் புறாக் களைப் போல நடந்து சென்றனர் கிரேக்கப் படையினருக்கு உதவி செய்ய ஆர்வமாக!*

*குதிரைகளை அடக்கும் மகா டயமீடிஸ் இருந்த இடத்தைச் சுற்றி, எளிதில் களைப்படையாத இறைச்சி உண்ணும் சிங்கம் அல்லது வெறிபிடித்த கரடிபோல, ஏராளமான மிகச்சிறந்த கிரேக்க வீரர்கள் அணிவகுத்து நின்றுகொண்டிருந்த இடத்தை நோக்கி, இரண்டு தேவதைகளும் சென்றனர். வெள்ளைக்கைப் பெண் கடவுளான ஹீரா உரக்கச் சப்தமிட்டாள் - ஐம்பது பேரின் குரலில் சப்தமிடும் வீரமிகு ஸ்டென்ட்டோரின் பெரும் குரலைப் போல!*

*'கிரேக்கர்களே! உங்களுக்கு வெட்கமில்லையா? வெறுக்கத்தக்க பிராணிகளே! உங்கள் தோற்றத்துக்காக மட்டும்தான் உங்களை வியக்கலாம்! கடவுளையொத்த அக்கிலிஸ் போரிட்ட நாள்களிலெல்லாம், டார்டானிய வாயில்களில், ட்ரோஜன் களைப் பார்க்கவே முடியாது. அவனுடைய பளுவான ஈட்டிக்கு அவர்கள் அஞ்சினர். ஆனால் இப்பொழுதோ அவர்கள், தம் ஊரை விட்டு வெகுதூரம் வந்து சண்டையிடுகின்றனர். அதுவும் உங்கள் கப்பல்கள் இருக்கும் இடத்துக்கு அருகிலேயே!'*

*இந்த வார்த்தைகளைச் சொல்லி ஒவ்வொரு கிரேக்க இதயத்தி லும் புத்துணர்ச்சியையும் வீரத்தையும் ஊட்டினாள். இதற்கிடை யில் சாம்பல் நிறக்கண்ணாள் தேவதை அதீனி, நேராக டைடியூஸின் மகனான டயமீடிஸ் இருந்த இடம் நோக்கி சென்றாள். தன் குதிரைகள் மற்றும் தேருடன் அமர்ந்து, பாண்ட ரஸின் அம்பினால் தனக்கு ஏற்பட்ட காயத்தை, காற்றில் ஆற்றிக்கொண்டிருந்தான். வட்டவடிவமான அவனது கேட யத்தின் அகன்ற தோள்பட்டைக்குக் கீழே வழிந்த வியர்வை,*

காயத்தில் எரிச்சலை ஏற்படுத்திக்கொண்டிருந்தது. அதனாலும், கை வலித்துக் கொண்டிருந்ததாலும், அவன் தோள் பட்டையைத் தூக்கி, கறுத்த ரத்தத்தை வழித்துத் துடைத்தான். அவனது குதிரைகளின் நுகத்தடியின்மீது கைவைத்த தேவதை சொன்னாள்:

'டைடியூஸுக்கு ஒரு மகன் இருந்தான். ஆனால், அவன் டைடியூஸ் போலவே இல்லை. டைடியூஸ் பார்ப்பதற்கு சின்ன மனிதன். ஆனால், எப்படிப் போரிடுவான் தெரியுமா?! தீப்ஸுக்கு ஒரு காரியமாக பல தீபியர்களுக்கு மத்தியில் அவன் செல்ல நேர்ந்தபோதும், போருக்குப் போய் சண்டை போடுவது போன்ற காரியம் எதையும் செய்யவேண்டாம் என்று நாம் சொல்லியிருந்த பிறகும்கூட அவன் போரிட்டான்! அரண்மனையில் அமர்ந்து அமைதியாக விருந்துச் சாப்பாட்டை அனுபவித்துக் கொண்டிரு என்றுதான் நான் அவனிடம் சொல்லியிருந்தேன். ஆனால் எப்போதுமே அவன், ஓர் உண்மையான வீரனாக இருந்ததால், தீபியர்களிடம் சென்று அவர்களை மல்யுத்தப் போட்டிகளுக்கு அழைத்துச் சவால் விட்டது மட்டுமின்றி, எல்லாப் போட்டி களிலும் எளிதாக அவனே வென்றான். அவனுக்கு உதவி செய்ய நான்னிருந்தேன். இங்கே இப்பொழுது மறுபடியும் நான் நிற்கிறேன், உன் அருகில்! தீங்கிலிருந்து உன்னைக் காத்துக் கொண்டு, ட்ரோஜன்களை எதிர்த்து என் ஆசிபெற்றவனாகப் போரிடும்படி நான் உனக்குச் சொல்கிறேன். ஆனால் நீயோ உனது முயற்சிகளின் பொருட்டு களைப்படைந்தவனாக, கைகால்களை அசைக்க முடியாதவனாக, பயத்தில் உறைந்து போனவனாக இருக்கிறாய். நீ டைடியூஸின் மகனோ போர்த்திறம் மிக்க ஈனியூஸின் பேரனோ அல்ல!'

வலிமை வாய்ந்த டயமீடிஸ், அவளுக்கு பதில் சொன்னான்:

'புயல் மேகங்களைச் செலுத்தும் ஜீயூஸின் மகளான நீ யாரென்று எனக்கு நன்றாகத் தெரியும் தேவதையே! நான் உன்னிடம் எதையும் மறைக்காமல் சொல்வேன். அச்சத்தினாலோ தீர்மான மில்லாமலோ நான் ஸ்தம்பித்துப் போகவில்லை. நீ எனக்குக் கொடுத்த உத்தரவுகளை மனத்தில் வைத்துக்கொள்ளும் வேலை யைத்தான் நான் செய்துகொண்டுள்ளேன். ஜீயூஸின் மகளான அஃப்ரோடைட்டியைத் தவிர, அருள் பாலிக்கப்பட்ட கடவுள் களோடு போரிட வேண்டாம் என்று நீதான் என்னிடம் சொல்லி யிருந்தாய். ஆனால் அவள் என்னோடு சண்டையிட வந்தால், நான் என் வெண்கல ஈட்டியால் அவளைக் குத்தலாம் என்றும் நீ

சொல்லியிருந்தாய். ஆனால் ஏரிஸ்தான், எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு போனவண்ணம் இருக்கிறான். நான் அதைப் பார்த்தபோது பின்வாங்கினேன். மீதி இருந்த கிரேக்க வீரர்களை, என்னைச் சுற்றி அணிவகுக்கும்படி சொன்னேன்.'

சாம்பல் நிறக்கண்ணாள் தேவதை அதீனி சொன்னாள்

'டைடியூஸின் மகனான டயமீடிஸ்! எனது பெருமையே, எனது சந்தோஷமே! ஏரிஸைப் பார்த்தோ மற்ற கடவுளரைக் கண்டோ அச்சமுறாதே! உனக்கு உதவி செய்ய நானிருக்கிறேன்! சீக்கிரம், உனது குதிரைகளை அவனை நோக்கிச் செலுத்து. மிகவும் நெருக்கத்தில் நிறுத்து. வெறிகொண்ட ஏரிஸை நினைத்துப் பயப்படாதே! அவன் ஒரு நயவஞ்சகன், பைத்தியக்காரன், குற்றவாளி. ட்ரோஜன்களுக்கு எதிராகவும் கிரேக்கர்களுக்கு ஆதரவாகவும் போரிடுவேன் என்று இதற்கு முன்னர் எங்களிடம் அவன் சொன்னான். ஆனால் இப்பொழுது சொ்ன்னதை யெல்லாம் மறந்துவிட்டு, ட்ரோஜன்களின் பக்கமாகப் போரிட்டுக்கொண்டுள்ளான்.'

இப்படிச் சொல்லிவிட்டு டயமீடிஸின் தேரோட்டியான ஸ்தெனீலஸை, தேரின் பின்பக்கத்திலிருந்து வெளியே இழுத் தாள். விரைவாகக் கீழே அவன் குதிக்கவும், ஆர்வமாக இருந்த தேவதையானவள் தேரில் ஏறி டயமீடிஸின் அருகில் அமர்ந்து கொண்டாள். தோற்கடிக்க முடியாத பெண் கடவுள், ஒரு சக்திவாய்ந்த போர்வீரன் ஆகிய இருவரையும் சுமந்துசெல்ல வேண்டிய கனத்தின் பொருட்டு முனகியது கருவாலி மரத்தில் செய்யப்பட்ட தேர்ச்சக்கர இருசு. கடிவாளங்களையும் சாட்டை யையும் பிடித்த பல்லாஸ் அதீனி, ஏரிஸ் இருந்த திசை நோக்கி, தேரை விரைந்து செலுத்தினாள். அந்த நேரத்தில் ஈட்டோலியப் படையின் தலைசிறந்த வீரனாகிய பெரிஃபாஸின் கவச உடையைக் கழற்றிக் கொண்டிருந்தான் ஏரிஸ். எங்கும் ரத்தம் தெளித்திருக்க, அவ்வுடையைக் கழற்றி அவனை நிர்வாணப் படுத்துவதில் மும்முரமாக இருந்தான் ஏரிஸ். அவள் வருவது மேன்மை தங்கிய இந்தக் கடவுளுக்குத் தெரியாமல் மறைக்கும் பொருட்டு, மறைந்துபோகும்படி செய்யக்கூடிய ஒரு தொப்பியை தலையில் அணிந்துகொண்டாள் அதீனி.

கடவுளையொத்த டயமீடிஸ் வந்திறங்கியிருப்பதை, கசாப்பு செய்யும் கடவுள் ஏரிஸ் நேருக்கு நேர் பார்த்தான். அச்சமேற்

படுத்தும் உடல்வாகு கொண்ட பெரிஃபாஸ் இறந்து கிடந்த இடத்திலேயே அவனைப் போட்டுவிட்டு, நேராக, குதிரைகளை அடக்கும் டயமீடிஸ் இருந்த இடத்தை நோக்கி வந்தான். நெருக்கத்தில் வந்ததும், டயமீடிஸைக் கொல்லும் தீர்மானத்துடன் நுகத்தடியின் மீதும் கடிவாளத்திலும் தன் வெண்கல ஈட்டியால் தாக்கினான் ஏரிஸ். ஆனால் சாம்பல் நிறக் கண்ணுடைய அதீனி, அந்த அம்பை தன் கைகளில் வாங்கி தேருக்கு மேலே உயரத்தில் எறிய, அது மேலே சென்று மெல்லிய காற்றைக் கிழித்தது. போர்முழக்கத்தின் தலைவனான டயமீடிஸ் இப்பொழுது, ஏரிஸை தன் வெண்கல ஈட்டியால் தாக்கினான். அது அவனுடைய இடுப்பைச் சுற்றிக் கட்டியிருந்த பாதுகாப்பு உள்ளாடையை மீறி அடிவயிற்றைக் கிழித்துக்கொண்டு உள்ளே செல்ல உதவினாள் பல்லாஸ் அதீனி. பின் ஏரிஸின் அழகான சதையைக் கிழித்துக்கொண்டு செல்லுமாறு அவனைக் குத்தினான் டயமீடிஸ். உடனே தன் ஈட்டியை உருவிக்கொண்டான். உடனே, போர்க்களத்திலிருக்கும் ஒன்பது அல்லது பத்தாயிரம் வீரர்களின் போர்முழக்கச் சப்தத்தை ஒத்ததொரு கூக்குரலிட்டான் வெண்கலமணிந்த ஏரிஸ். எதிலுமே திருப்தியடையாத போர்க்கடவுளான ஏரிஸிடமிருந்து இப்படி ஓர் அலறல் எழுந்ததைக் கேட்டு, ட்ரோஜன்களையும் கிரேக்கர்களையும் பயங்கர பீதியொன்று பிடித்துக்கொண்டது.

வெண்கலமணிந்த ஏரிஸ், ஒரு மேகத்தில், மேலே அகன்ற வானத்துக்கு எழுந்தான். கடுமையான சூட்டிலிருந்து, சூறாவளியால் மேகங்களிலிருந்து கரும்புகை எழுவது போல, ஏரிஸ் டயமீடிஸைப் பார்த்தான். விரைவிலேயே செங்குத்தான ஒலிம்பஸ் மலையில் இருக்கும் கடவுளர்களின் வீட்டை அடைந்தான். மிகவும் நொந்து போனவனாக ஜீயூஸின் அருகில் போய் அமர்ந்தான். தனது காயத்திலிருந்து பொங்கி வந்த அழிவற்ற குருதியை அவனிடம் காட்டி, சோகமாக, ரகசியமாகச் சொன்னான்:

‘தந்தையே ஜீயூஸ்! இந்த காட்டுமிராண்டித்தனத்தைப் பார்த்து உங்களுக்குக் கோபம் வரவில்லையா? மானிடர்களுக்கு உதவி செய்யும்போதெல்லாம், மோசமான அவமானங்களை கடவுளர்களாகிய நாங்கள், ஒருவருக்கொருவர் பொறுத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. இதெல்லாம் உங்களால்தான்! எங்கு போனாலும் குழப்பத்தை ஏற்படுத்தும் மூளையற்ற உங்கள் மகள்

சபிக்கப்பட்ட அதீனியால்தான், நாங்களனைவரும் உங்களோடு மனஸ்தாபம் கொண்டிருக்கிறோம். ஒலிம்பஸில் வசிக்கும் மற்ற கடவுள்களாகிய நாங்களனைவரும் உங்களுக்குப் பணிகிறோம். ஆனால் அதீனி என்று வரும்போது மட்டும், நீங்கள் அவளை எதிர்த்து ஒன்றும் செய்வதில்லை. ஒரு வார்த்தைகூட சொல்வதில்லை. ஏனென்றால் அவள் நீங்களே பெற்றெடுத்த கொலைகார மகள்!'

'மரியாதை தெரியாத டயமீடிஸ், நித்தியர்களான கடவுளர்மீது வெறித்தனமாக நடந்துகொள்வதை அவள் உற்சாகப்படுத்து கிறாள். அஃப்ரோடைட்டியை, மணிக்கட்டில் குத்துவதில்தான் அவன் தொடங்கினான். அதன்பின் ஏதோ அமானுஷ்யன் போல என் மீது பாய்ந்தான். நான் விரைவாக அவனிடமிருந்து தப்பித்துக்கொண்டேன். இல்லையெனில், அச்சமூட்டும் வகை யில் அங்கே குவிந்து கிடக்கும் உடல்களுக்கு நடுவில் நீண்ட காலம் வேதனையோடு, அங்கே போர்க்களத்திலேயே இருந் திருக்க வேண்டி வந்திருக்கும் அல்லது அவனது அடிகளால் வாழ்நாளுக்கும் ஊனமுற்றவனாக இங்கு திரும்பி வந்திருக்க நேரிட்டிருக்கும்.'

புயல் மேகங்களை அணிவகுக்கச் செய்யும் ஜீயூஸ், ஏரிஸை கறுப்பாகப் பார்த்துவிட்டுச் சொன்னான்:

'நிலையில்லாத நயவஞ்சகனே! சிணுங்கிக்கொண்டு என்னிடம் வராதே. ஒலிம்பஸில் உள்ள கடவுளர்களில், உன்னைத்தான் நான் அதிகமாக வெறுக்கிறேன். போட்டி, போர் இவைதான் வாழ்வின் உயிர் மூச்சு உனக்கு. உன் அன்னை ஹீராவுக்கும் இதேவிதமான பிடிவாதமும், சமாளிக்க முடியாத குணமும்தான் உள்ளது. வெறும் வார்த்தைகளால் சொல்லி அவளைக் கட்டுப்படுத்துவது எனக்கு எப்போதுமே கடினமானதாகத்தான் இருந்திருக்கிறது. அவள்தான் இதையெல்லாம் தொடங்கி வைத்து, உன்னை இதில் மாட்டிவிட்டுவிட்டாள் என்று நான் சந்தேகப்படுகிறேன்.

'என்றாலும், நீ இன்னமும் வேதனைப்பட வேண்டும் என்பது என் நோக்கமல்ல. நீ என் சதை, என் ரத்தம். உன் அன்னை எனது மனைவி. ஆனால் கொலைகாரப் பிள்ளையாகிய நீ, வேறு எந்தக் கடவுளுக்காவது பிறந்திருந்தால், நான் அதிகாரத்துக்கு வந்தபோது புதைத்தேனே டைட்டன்களை, அதைவிட

*ஆழமான குழிக்குள் வெகு நாளைக்கு முன்பே நீ உன்னைப் பார்த்திருப்பாய்!'*

*இப்படிப் பேசிவிட்டு பேயானை அழைத்து, ஏரிஸை குணப் படுத்தச் சொன்னான். அவனும் இதமளிக்கும் மூலிகைகளை காயத்தின் மீது கட்டி குணப்படுத்தினான் மனிதர்களை உருவாக்கிய பொருளால் உருவாக்கப்பட்டவனல்ல ஏரிஸ். அத்திப்பழச் சாறு பாலை கெட்டிப்படுத்துவது போல, திரவமாக இருந்தாலும் கலக்கும்போது பால் கெட்டித் தயிராவதுபோல, அதிவிரைவாக ஏரிஸின் காயத்தைக் குணப்படுத்தினான் பேயான். ஹீபி அவனை குளிக்க வைத்து, அவன் அணிந்துகொள்ள அழகிய ஆடைகளைக் கொடுத்தாள். பின், க்ரோனஸின் மகனான ஜீயூஸின் சிறப்பை எண்ணி வியந்தபடி அவனருகில் அமர்ந்தான் ஏரிஸ்.*

*இதற்கிடையில் அர்கோஸின் ஹீரா, அலல்கொமீனின் அதீனி ஆகிய இரு பெண் தெய்வங்களும் மாபெரும் ஜீயூஸின் அரண்மனைக்குத் திரும்பினர். கசாப்பு செய்யும் ஏரிஸின் அட்டகாசங்களை அவர்கள் கட்டுப்படுத்தியிருந்தனர்.*

# ஹெக்டரும் ஆண்ட்ரோமக்கியும்

***கதைச்சுருக்கம்***

***வரிகள் 01 – 72***

*கிடைக்கும் சொற்ப வெற்றியை கிரேக்கர்கள் கொண்டாடுகின்றனர். இரக்கமே காட்டக்கூடாதென்று அகமெம்னனும் நெஸ்டரும் சொல்கின்றனர்.*

***வரிகள் 73 – 118***

*ட்ரோஜன்களை அணிவகுக்கச் செய்யும்படி ஈனியாஸுக்கும் ஹெக்டருக்கும் தீர்க்கதரிசியாகிய ஹெலீனஸ் ஆலோசனை சொல்கிறான். பின், டயமீடிஸின் அட்டூழியங்களை நிறுத்த வேண்டி, அதீனிக்குப் பலி கொடுக்கும்படி, ட்ராய் நகரப் பெண்களுக்குச் சொல்லும்படி ஹெக்டருக்கு உத்தரவிடுகிறான்.*

***வரிகள் 119 – 236***

*க்ளாகஸும் டயமீடிஸும் போர்க்களத்தில் சந்திக்கின்றனர் (பெல்லொரோஃபோனின் கதை).*

***வரிகள் 237 – 368***

*ஹெக்டர் இலியத்துக்கு வந்து, தன் அன்னை ஹெகாபியைச் சந்திக்கிறான். அதீனிக்கு பலி கொடுக்கப்படுகிறது (ஆனால் பயனின்றி). பாரிஸோடும் ஹெலனோடும் ,ஹெக்டர் கலந்தாலோசிக்கிறான்.*

**வரிகள் 369 – 495**

ஹெக்டர், தன் மனைவி ஆன்ட்ரோமக்கியுடன் பேசுகிறான். அவள் அவர்களது குழந்தை அஸ்ட்டியானாக்ஸ"டன் இருக்கிறாள்.

**வரிகள் 496 – 529**

ஹெக்டரும் ஆன்ட்ரோமக்கியும் பிரிகின்றனர் ஏதோ கடைசி முறையாக என்பதைப் போல! ஹெக்டரும் பாரிஸ"ம் சந்தித்து, போருக்குத் திரும்புகின்றனர்.

# ஹெக்டரும் ஆன்ட்ரோமக்கியும்

தெய்வங்களின் தலையீடின்றி, ட்ரோஜன்களும் கிரேக்கர்களும் தங்களின் கடுமையான போராட்டத்தைத் தொடருகின்றனர். சிமாய்ஸ் நதிக்கும் ஸ்கமாண்டர் ஆற்றின் நீரோட்டங்களுக்கும் இடையில், வெண்கல ஈட்டிகளின் தொடர்ந்த தாக்குதல்கள் பரிமாறிக்கொள்ளப்படுகையில், போரின் வெற்றி தோல்வி இந்தப் பக்கமும் அந்தப் பக்கமுமாக மாறிமாறிச் சாய்ந்து கொண்டிருந்தது.

கிரேக்கர்களின் பலத்தில் கோட்டை போன்றவனும் டிலாமனின் மகனுமாகிய அஜாக்ஸ்தான், ட்ரோஜன் அணிவகுப்பு வரிசைக் குள் புகுந்து, அவர்களின் சிறந்த திரேசிய வீரனாகிய உயரமான, அருமையான அகாமஸைத் தாக்கியதன் மூலம், தன் நண்பர்களுக்கு வெற்றியின் வாசனையை முதன்முதலாகக் கொடுத்தான். இறகுகள் சொருகப்பட்ட அவனுடைய தலைக் கவசத்தின் விளிம்பில் அடித்தான் அஜாக்ஸ். வெண்கல ஈட்டி அவனது நெற்றியைத் துளைத்து எலும்பினுள் சென்றது. இருள் அவன் கண்களைத் தழுவியது.

அடுத்து, அழகாக வடிவமைக்கப்பட்ட அரிஸ்பியிலிருந்து வந்த அக்ஸைலஸை, போர்முழக்கத் தலைவனாகிய டயமீடிஸ் கொன்றான். அவன் பணக்காரனாகவும் பல நண்பர்களை உடைய வனாகவும் இருந்தான். சாலைப்பகுதியில் இருந்த ஒரு வீட்டில் அவன் வசித்தான். வீட்டுக்கு வருவோர் அனைவரையும் விருந் தோம்பலால் மகிழ்வித்தான். ஆனால் அவனது நண்பர்களில் ஒருவர்கூட வந்து, அவனது எதிரியைக் கட்டுப்படுத்தி, ஓர்

அசிங்கமான முடிவு அவனுக்கு ஏற்படுவதிலிருந்து அவனைக் காப்பாற்ற முன்வரவில்லை. அக்ஸைலஸையும் அவனது தேரோட்டியான கலீசியஸையும் டயமீடிஸ் கொன்றான். அவர்களிருவரும் கீழுலகத்தில் அமிழ்ந்து போயினர்.

ட்ரீசஸ் மற்று ஒஃபீல்டியஸ் இருவரையும், யூரியாலஸ் கொன்றான். அதன்பின், ஈசிபஸையும், இணையற்ற ப்யூகோலிய னுக்கு நீரின் தேவதையான அபார்பேரியா பெற்றுக்கொடுத் திருந்த பெடாசஸையும் துரத்தினான். பெருமைமிகு லாமி டானின் மகன்களில் ஒருவன் ப்யூகோலியன் (லாமிடானின் முதல் குழந்தை ரகசியமாகப் பிறந்தது). ப்யூகோலியன் தனது மந்தை யினை மேய்த்துக்கொண்டிருந்தபோது நீர்த்தேவதையைச் சந்திக்க, அவளோடு கூடல் நிகழ்ந்தது. அவள் அவனுக்கு இரட்டையர்களாக இரு பையன்களைப் பெற்றுக்கொடுத்தாள். ஆனால் யூரியாலஸ், அவர்களின் எதிர்ப்பை முடிவுக்குக் கொண்டுவந்தான். அவர்களின் பளபளக்கும் இளம் உடல்களை வீழ்த்தி, அவர்களின் தோள்களிலிருந்து கவச உடைகளைக் கழற்றினான்.

உறுதியான பாலிப்பீட்டிஸ், அஸ்ட்டியாலஸைக் கொன்றான். பெர்கோட்டியின் பிடிட்டிஸை ஒடிஸியூஸ் தனது வெண்கல ஈட்டியால் கொன்றான், கடவுளையொத்த அரிட்டாவோனை ட்யூஸர் கொன்றது போல. தனது பளபளக்கும் ஈட்டியால் அப்லீரஸை நெஸ்டரின் மகனான ஆன்ட்டிலோக்கஸ் கொன் றான். செங்குத்தான பெடாசஸில் ஓடிய இனிமையான தண்ணீரைக் கொண்ட சட்னியாய்ஸ் ஆற்றின் கரைப் பகுதியில் வாழ்ந்த ஈலேட்டஸை, மக்கள் தலைவனாகிய அகமெம்னன் கொன்றான். பாதி தூரம் ஓடிவிட்ட ஃபைலாக்கஸை, வீரன் லெய்ட்டஸ் கொன்றான். மெனந்தியூஸை, யூரிபைலஸ் கீழே அனுப்பினான்.

இதற்கிடையில் அட்ரீட்டஸை உயிருடன் மெனிலயஸ் பிடித்து வைத்திருந்தான். விரைவாகச் சமவெளியில் பறந்து சென்ற அவனுடைய குதிரைகள் இரண்டும் இறகுபோன்ற கிளைகள் கொண்ட ஒரு புதரில் சிக்கிக்கொண்டன. தேரின் வளைவான பகுதியில் குத்தியிருந்த அம்பைக் கடித்து வெளியே எடுத்து விட்டு, நகரத்தை நோக்கி அவைகளாகவே விரைந்து சென்றன. மற்ற குதிரைகள் யாவும் ஒன்றின்மீதொன்று விழுந்து, பீதியில்

நெரிசலில் மாட்டிக்கொண்டன. அட்ரீட்டஸ், தன் தேரிலிருந்து வெளியே அதன் சக்கரத்தின் அருகே தூக்கி எறியப்பட்டான். மண்ணில் குப்புற விழுந்தான் அவன். விழுந்த உடனேயே அத்ரியூஸின் மகனாகிய மெனிலயஸ் தனது நீண்ட நிழல் தரும் ஈட்டியைக் கையில் வைத்தவண்ணம் தன்னருகில் நிற்பதைப் பார்த்தான். மெனிலயஸின் முழங்கால்களைக் கட்டிக்கொண்டு அவனை வேண்டினான் அட்ரீட்டஸ்.

'அத்ரியூஸின் மகனே! என்னை உயிருடன் எடுத்துச் செல். நியாய மான ஈட்டுத்தொகை உனக்குக் கிடைக்கும். என் தந்தை ஒரு செல்வந்தர். வெண்கலம், தங்கம், தேனிரும்பு என வீட்டில் நிறைய பொக்கிஷங்களை அவர் வைத்திருக்கிறார். நான் கிரேக்கக் கப்பல்களுக்கு உயிருடன் பிடிக்கப்பட்டு வந்துள்ளேன் என்று மட்டும் அவருக்குத் தெரிந்தால், உனக்கு ஒரு மிகப்பெரிய பிணையத்தொகையை அவர் கொடுப்பார்.'

அவன் சொன்னதை ஒப்புக்கொள்ளும் மனநிலையில்தான் மெனிலயஸும் இருந்தான். அட்ரீட்டஸை, கிரேக்கக் கப்பல் களுக்கு உயிருடன் கொண்டு செல்லும்படி தன் உதவியாளனுக்கு உத்தரவிடத்தான் அவனே நினைத்திருந்தான். ஆனால் அந்த நேரத்தில் அதை ஏற்றுக்கொள்ளாத விதத்தில், அகமெம்னன் தூரத்தில் இருந்து தன்னை நோக்கிக் கத்திக்கொண்டே ஓடி வருவதைப் பார்த்தான்.

'மிருதுவான இதயம் கொண்ட என் சகோதரா மெனிலயஸ்! இவர்களைப் பற்றி நீ ஏன் இவ்வளவு அக்கறை கொள்ள வேண்டும்? உனது அரண்மனையில் தங்கியபோது ட்ரோஜன்கள் உன்னிடம் இவ்வளவு அழகாக நடந்துகொண்டார்களா? ம்ஹும். இவர்களில் ஒருவரைக்கூட உயிருடன் நாம் விடக் கூடாது. தாயின் கருவறையில் இருக்கும் குழந்தைகள் உட்பட. அச்சிசுக்கள்கூட உயிருடன் இருக்கக் கூடாது. இவர்க ளனைவரையும் இருப்பிலிருந்து துடைத்தெறிய வேண்டும். அவர்களுக்காக அழுவதற்குக்கூட யாரும் இருக்கக் கூடாது. இவர்கள் வாழ்ந்த அடையாளமே இருக்கக் கூடாது!'

இந்த நல்ல ஆலோசனையைச் சொல்லி மெனிலயஸின் மனதை மாற்றினான் அகமெம்னன். அவனிடமிருந்து வீரன் அட்ரீட்டஸை தன் கையால் தள்ளி நகர்த்தி, விலாப்புறத்தில்

குத்தினான் மக்கள் தலைவனான அகமெம்னன். மல்லாக்க விழுந்தான் அட்ரீட்டஸ். அவனது நெஞ்சில் கால் வைத்து அழுத்தி, நெஞ்சிலிருந்து சாம்பல் நிற ஈட்டியை உருவினான் அகமெம்னன்.

பெருத்த குரலெடுத்து கிரேக்கர்களை அழைத்து நெஸ்டர் பேசினான்:

'நண்பர்களே! கிரேக்க வீரர்களே! போர்க்கடவுள் ஏரிஸின் சேவகர்களே! இப்பொழுது எதையும் கொள்ளையடிக்க வேண்டாம். பெரும் பங்கை எடுத்துக்கொண்டு செல்வதற்காக கப்பல்களின் பக்கம் தயங்கித் தயங்கி நிற்கவேண்டாம். ட்ரோஜன்களையெல்லாம் முதலில் கொல்வோம். அதன் பிறகு ஓய்வாக இருக்கும்போது, இறந்தவர்களை நீங்கள் நிர்வாணப் படுத்திக் கொள்ளலாம்.'

இப்படிப் பேசி, ஒவ்வொரு கிரேக்க வீரனின் இதயத்திலும், புத்துணர்ச்சியையும் வீரத்தையும் ஊட்டினான் நெஸ்டர். பலவீன மடைந்து நம்பிக்கை குலைந்த ட்ரோஜன்கள், போர்விரும்பிகளான கிரேக்கர்களால் இலியம் நகருக்குள் மறுபடியும் துரத்தப்படு வார்கள் என்று தோன்றியது. அப்பொழுது, ட்ராய் நகரின் தலைசிறந்த தீர்க்கதரிசியாகிய ப்ரியமின் மகனான ஹெலீனஸ், ஈனியாஸையும் ஹெக்டரையும் பார்த்துச் சொன்னான்:

'ஓ ஈனியாஸ்! ஓ ஹெக்டர்! எல்லா ட்ரோஜன்கள் மற்றும் லைசியர்களை விடவும் உங்களிருவருக்கும்தான் போரின் விளைவுகள் அதிகமான பாதிப்பை ஏற்படுத்தியுள்ளன. ஏனெனில், சபைக்கூட்ட அறையாக இருந்தாலும் சரி, போர்க்கள மாக இருந்தாலும் சரி, நீங்கள் எதிலுமே தோற்றதில்லை. இப்பொழுது நீங்கள், இங்கே ஒரு முடிவெடுக்க வேண்டும். வாயில் கதவுகளை நோக்கி ஓடி, தம் பெண்களின் கரங்களில் புதைந்து, எதிரிகளை சந்தோஷப்படுத்துமுன், போர்க்களத்தின் ஒவ்வொரு பகுதிக்கும் நீங்களே நேரில் சென்று, வீரர்களை புதுப்புது குழுக்களாகப் பிரித்துவையுங்கள். நமது வீரர்கள் அனைவரையும் அணிவகுத்து நிறுத்திய பிறகு, நாம் நமது நிலத்தில் உறுதியாக நின்று கிரேக்கர்களை எதிர்த்துப் போர் செய்வோம். களைப்படைந்துதான் இருக்கிறோம் என்றாலும் நமக்கு வேறு வழி இல்லை.

'இதற்கிடையில், ஹெக்டர்! நீ ஊருக்குள் போய் நம் அன்னையைப் பார். முதியவர்களான பெண்களை ஒன்று சேர்த்து, ஊரின் உயரத்தில் உள்ள சாம்பல் நிறக்கண்ணாள் அதீனியின் கோயிலுக்குக் கூட்டிச் சென்று, அப்புனிதக் கோயிலின் கதவுகளைத் திறக்கச் சொல்லி, அவள் அரண்மனை யில் உள்ள மிக அழகிய, மிகப்பெரிய, அன்னைக்கு மிகவும் பிரியமான அங்கியை எடுத்துவந்து, அழகிய அதீனியின் பாதங்களில் போட்டு, வேலை எதுவும் செய்யாத பன்னிரண்டு வயதுடையை இளம் கன்றுகளை பலியிடுவதாக வாக்களிக் கட்டும். அதீனி மட்டும், நம் நகரின் மீதும் ட்ரோஜன்களின் மனைவிமார்களின் மீதும் சிறுகுழந்தைகளின் மீதும் இரக்கம் கொண்டு, போர்முழக்கத்தின் தலைவனும் காட்டுமிராண்டித் தனமாக ஈட்டியெறிபவனுமான டயமீடிஸை புனித இலியம் நகரைவிட்டு அப்புறப்படுத்துவதாக இருந்தால். அவன்தான் நமது மிகப்பெரிய கிரேக்க எதிரி என்று எனக்குத் தோன்றுகிறது. மக்கள் தலைவன், ஒரு தேவதையின் மகன் என்றும் சொல்லப் படுகிற மகா அக்கிலிஸைப் பார்த்துகூட நாம் இவ்வளவு அஞ்சியதில்லை. ஆனால் டயமீடிஸோ, யாராலும் அடக்க முடியாதவனாக இருக்கிறான்.'

அப்படி அவன் சொன்னதை ஹெக்டர் ஏற்றுக்கொண்டான். முழுமையாக போருடை அணிந்தவனாக, தன் தேரிலிருந்து அவன் கீழே குதித்தான். ஒரு ஜோடி ஈட்டிகளை சுழற்றிய வண்ணம், தன் வீரர்கள் இருந்த எல்லாப் பகுதிகளுக்கும் அவன் சென்றான். அவர்களுக்கு வீர உணர்ச்சியைத் தூண்டி, கடுமை யான அந்தப் போரில் பங்கெடுக்க, அவர்களை உற்சாகப் படுத்தினான். அதன் விளைவாக, ட்ரோஜன்கள் மறுபடியும் கிரேக்கர்களை எதிர்க்கத் திரும்பினார்கள். கிரேக்கர்கள் இப்பொழுது யாரையும் கொல்லாமல் வழிவிட்டார்கள். உண்மையில் இப்பொழுது ட்ரோஜன்களின் அணிவகுப்பைப் பார்த்து, நட்சத்திரங்கள் அடர்ந்த வானத்திலிருந்து யாரோ ஒரு கடவுள் அவர்களுக்கு உதவ வந்துவிட்டார் என்றுதான் கிரேக்கர்கள் நினைத்தார்கள். அப்போது ட்ரோஜன்களைப் பார்த்து ஹெக்டர் உரத்த குரலில் சொன்னான்:

'பெருமைமிகு ட்ரோஜன்களே! புகழ்மிகு ஆதரவுப் படையினரே! தோழர்களே! ஆண்களாக நடந்து கொள்ள வேண்டும் நாம். உங்கள் வீர உணர்ச்சியை அழையுங்கள். நான் இலியம் சென்று

நமது மூத்தவர்களையும் மனைவிமார்களையும் பார்த்து, கடவுளர்களிடம் பிரார்த்தனை செய்து அவர்களுக்கு பலிகள் கொடுக்க ஏற்பாடு செய்துவிட்டு வருகிறேன்.'

இவ்வார்த்தைகளைச் சொல்லிவிட்டு, பளபளக்கும் தலைக் கவசமணிந்த ஹெக்டர், நகர் நோக்கிச் சென்றான். அவன் நடந்து சென்றபோது, அவன் தோளில் தொங்கிய கேடயத்தில் துருத்திக்கொண்டிருந்த, பதனிடப்பட்ட தோலால் செய்யப்பட்ட விளிம்பு மேலும் கீழும் அசைந்தாடி, அவன் கணுக்காலிலும் பிடரியிலும் அவனைத் தட்டிக் கொடுத்தது.

படையினர் அணிவகுத்துப் போரிட நின்றுகொண்டிருந்த இடத்தில், ஹிப்பொலோக்கஸின் மகனான க்ளாகஸூம், டைடியூஸின் மகனான டயமீடிஸூம் போரிடும் உறுதியுடன் ஒருவரையொருவர் நெருங்கி வந்தனர். மிக அருகில் வந்ததும், போர் முழக்கத் தலைவனான டயமீடிஸ் பேசினான்:

'நீ என்ன மாதிரி மனிதனப்பா? மனிதர்களுக்குப் புகழ் சேர்க்கும் எந்தப் போரிலும் இதுவரை நான் உன்னைப் பார்த்ததே இல்லையே! ஆனால் நீண்ட நிழல் தரும் ஈட்டி என் கையில் இருப்பதைப் பார்த்தும் என்னை நீ எதிர்க்க வந்திருப்பதால், உன் தோழர்களைவிட நீயே துணிச்சலானவன் என்று காட்டியுள்ளாய். நான் கோபமாக இருக்கும்போது என்னை எதிர்க்கும் மகன்களின் அப்பாக்கள் பாவம்!'

'ஆனால் நீ ஒலிம்பஸிலிருந்து இறங்கிவந்த நித்தியர்களில் ஒருவனாக இருப்பின், விண்ணகத்தின் கடவுளர்களோடு சண்டைபோட வந்தவன் நானல்ல. நானென்ன! ட்ரயாவின் மகனான சக்திமிகு லைகர்ஜஸ்கூட கடவுளர்களோடு போட்ட சண்டையில் வெகு நேரம் உயிரோடு இருக்க முடியவில்லை. வெறிகொண்ட கடவுள் டயனைசஸின் சேடிப்பெண்களை, ஒரு முறை புனித நைஸா மலைகளிலிருந்து கொலைகார லைகர்ஜஸ் துரத்தினான். தன் எருதுக் கழியினால் அவர்களை அவன் அடித்த போது, அவர்கள் கடவுள் டயனைசஸின் சின்னங்களையெல்லாம் கீழே போட்டுவிட்டு சிதறி ஓடினர். லைகர்ஜஸின் பயமுறுத்தல் களால் அரண்டுபோன டயனைசஸ், ஓடிப்போய் உப்புக்கடல் அலைகளுக்குக் கீழே அடைக்கலம் புகுந்தான். கடல் தேவதை தீட்டிஸ், அவனைத் தன் நெஞ்சில் அணைத்துக்கொண்டாள்.

ஆனால் அமைதியாக வாழும் நித்தியர்கள், லைகர்ஜஸ் செய்த செயலை வெறுத்தனர். ஜீயூஸ், அவனைக் குருடனாக்கினான். அதன்பிறகு அவன் நீண்ட நாள் வாழவில்லை. ஏனெனில் எல்லாக் கடவுளர்களுமே அவனை வெறுத்தார்கள். எனவே, அருள் பாலிக்கப்பட்ட கடவுளர்களை எதிர்த்து நான் போரிடமாட்டேன்.'

'ஆனால் நீ எங்களைப் போல, இந்தப் பூமியில் விளைவதைத் தின்று வாழும் மானிடர்களில் ஒருவனாயின் வா, உனது விதி விரைவிலேயே முடிவு செய்யப்படும்!'

புகழ்மிகு ஹிப்பொலோக்கஸின் மகனான க்ளோக்கஸ் பேசினான்:

'வீரம் செறிந்த டயமீடிஸ்! என் குடும்பத்தைப் பற்றி ஏன் கேட்கிறாய்? ஒரு மனிதனின் குடும்பமானது மரத்தின் இலைகளைப் போன்றது. காற்று, அவற்றைத் தரையில் சிதறடித்துப் போகிறது. ஆனால் மரங்களோ, வசந்தகாலம் வரும்போது மொட்டுகள் வெடிக்க புதிய இலைகளை உருவாக்குகின்றன. மானிடக் குடும்பமும் இதைப்போன்றதுதான். ஒரு தலைமுறை வளர்கிறது. இன்னொன்று மடிகிறது. ஆனால், என் குடும்பத்தைப் பற்றித் தெரிந்துகொள்ள உனக்கு உண்மையிலேயே ஆசையிருந்தால் சொல்கிறேன். என் கதை ஏற்கெனவே பலருக்குத் தெரியும்.'

'அர்கோஸின் ஒரு மூலையில் எஃபீரி என்றொரு குதிரைகள் மேயும் ஊர் உள்ளது. அங்கு சிசிஃபஸ் என்றொரு சூதுவாது நிறைந்த மனிதன் வாழ்ந்தான். அவனுடைய தந்தையின் பெயர் இயோலஸ். சிசிஃபஸுக்கு, க்ளோகஸ் என்றொரு மகனிருந்தான். பெல்லொரோஃபோனுக்கு அவன் தகப்பனாக இருந்தான்.

'பெல்லொரோஃபோனுக்கு கடவுள்கள் அழகான தோற்றத்தையும், தனக்கு வேண்டும் என்று அனைவரும் விரும்பும் எல்லா நற்குணங்களையும் கொடுத்திருந்தனர். ஆனால், அர்கோஸில் இருந்த ப்ரோட்டஸ் என்பவனுக்கு அடிபணிந்து நடக்குமாறு ஜீயூஸ் அவனை ஆக்கியிருந்தார். ப்ரோட்டஸ் அதிகம் சக்தி வாய்ந்தவனாக இருந்தான். பெல்லொரோஃபோனுக்குத் தொல்லை கொடுக்கவேண்டும் என்று எண்ணிய ப்ரோட்டஸ், அவனை ஊரைவிட்டு வெளியேறும்படி உத்தரவிட்டான். தேவதையைப் போன்ற ப்ரோட்டஸின் மனைவி ஆன்ட்டியா,

பெல்லொரோஃபோன் தன்னோடுதான் கூடவேண்டும் என்ற ஆசைகொண்டு பைத்தியமாக இருந்ததுதான் இதற்குக் காரணம். ஆனால் அறிவார்ந்த பெல்லொரோஃபோன், நல்லொழுக்க முள்ளவனாக இருந்ததால் அவள் ஆசைக்குப் பணிய மறுத்துவிட்டான். ஆகவே ஆன்ட்டியா, ஒரு பொய்க் கதையுடன் தன் தலைவன் ப்ரோட்டயஸிடம் சென்று, 'ப்ரோட்டயஸ்! பெல்லொரோஃபோன் என்னை அடைய விரும்பினான். ஆனால் நான் மறுத்துவிட்டேன். அவனைக் கொன்றுவிடு, இல்லையேல் நீ இறந்துவிடுவது நல்லது! என்று கூறினாள்.

'அப்படி அவள் சொன்னதும் ப்ரோட்டயஸ் வெகுண்டெழுந்தான். பெல்லொரோஃபோனைக் கொல்வது சரியல்ல என்ற ஒரே காரணத்தினாலேயே ப்ரோட்டயஸ் அவனைக் கொல்லாமல் விட்டான். ஆனால், அவனை நாடுகடத்தி லைசியாவுக்கு அனுப்பினான். அவன் உயிருக்கு உலைவைக்கக் கூடிய அடையாளங்கள் பொறிக்கப்பட்ட ஒரு பட்டயத் தகடையும் அனுப்பி வைத்தான். அதை லைசியாவின் ஆட்சியாளனாக இருந்த தனது மாமனாரிடம் கொடுக்க வேண்டும் என்று பெல்லொரோஃபோனுக்கு சொல்லியனுப்பினான். அதனால் அவனுக்கு சாவு நிச்சயம் என்பதை உறுதி செய்தவனாக!

'அவனுடைய பயணத்தை, கடவுளர்கள் மிருதுவாகக் கண்காணித்தனர். பெல்லொரோஃபோன், லைசியாவையும் அங்கு ஓடும் சாந்தஸ் ஆற்றையும் சென்றடைந்தவுடன், அதன் ஆட்சியாளரால் ஒரு கண்ணியம் மிகுந்த விருந்தாளியாக அவன் வரவேற்கப்பட்டான். நாளுக்கொரு எருது வெட்டப்பட்டு, ஒன்பது நாள்களுக்கு அவனுக்கு விருந்தளிக்கப்பட்டது. ரோஜா விரல்கொண்ட விடியல் பத்தாவது நாள் எழுந்தபோது, என்ன செய்தி ப்ரோட்டியஸிடமிருந்து அவன் கொண்டு வந்துள்ளான் என்று கேட்கப்பட்டான். ப்ரோட்டியஸ் கொடுத்தனுப்பிய உயிர் பறிக்கும் பட்டயமும் அவர்களிடம் ஒப்படைக்கப்பட்டது.

'லைசியாவின் மன்னன், முதல் காரியமாக கிமேராவை பெல்லொரோஃபோன் கொல்லவேண்டும் என்று உத்தரவிட்டான். கிமேரா மானிடர்களால் அல்ல, கடவுளர்களால் உருவாக்கப்பட்ட ஒரு பிராணி. அவளுக்கு சிங்கத்தின் தலையும், சர்ப்பத்தின் வாலும், ஆட்டின் உடலும் இருந்தது. அவள் விட்ட

ஒவ்வொரு மூச்சிலும் கொழுந்துவிட்டெறியும் தீச்சுவாலைகள் கிளம்பின. ஆனால் கடவுளர்களின் வழிகாட்டுதலினால், பெல்லொரோஃபோன் அவளைக் கொல்வதில் வெற்றி கண்டான். அவனது இரண்டாவது பணியாக புகழ்மிகு சொலீமியை அவன் கொல்லவேண்டியிருந்தது. மனிதர்களோடு அவன் செய்த போரிலேயே மிகவும் கடுமையானது அதுதான் என்று அவன் அந்தப் போராட்டத்தை வர்ணித்தான். அவனது மூன்றாவது வேலையாக, அமேசான்கள் என்று அழைக்கப்பட்ட ஆண்களுக்கு இணையான பெண்களோடு அவன் சண்டையிட்டு அவர்களைக் கொன்றான்.

'ஆனால் லைசியாவின் ஆட்சியாளனோ வேறுவிதமாக நினைத்தான். தனது வீரதீரச் செயல்களிலிருந்து பெல்லொரோஃபோன் திரும்பும்போது அவனை ஒழித்துக்கட்ட தந்திரமாக ஒரு திட்டம் தீட்டினான். லைசியாவிலேயே தலைசிறந்த வீரர்களைத் தேர்ந்தெடுத்து, அவர்கள் மறைந்திருந்து பெல்லொரோஃபோனைத் தாக்குமாறு அனுப்பிவைத்தான். ஆனால் அவர்களில் ஒருவர்கூட, உயிரோடு ஊர் திரும்பவில்லை. இணையற்ற பெல்லொரோஃபோன் அவர்களனைவரையும் கொன்றான். முடிவில், பெல்லொரோஃபோன் கடவுளின் உண்மையான பிள்ளை என்று அந்த மன்னன் புரிந்துகொண்டான். எனவே அவனை லைசியாவிலேயே வைத்திருந்து, தன் மகளையும் அவனுக்குத் திருமணம் முடித்து வைத்து, தன் ராஜ்ஜியத்தில் பாதியைக் கொடுத்தான். லைசியர்களும் தம் திராட்சைத் தோட்டங்களிலிருந்தும் பயிர் நிலங்களிலிருந்தும் ஒரு பகுதியை அவன் உழுது பயிரிட்டுக்கொள்வதற்காக வழங்கினர்.

'பெல்லொரோஃபோனின் மனைவி அவனுக்கு, அய்சாண்டர், ஹிப்பொலோக்கஸ், லடேமியா ஆகிய மூன்று பிள்ளைகளைப் பெற்றுக்கொடுத்தாள். இதில் லடேமியா, ஆலோசனையில் சிறந்த ஜீயூஸோடு படுத்துறங்கி கடவுளையொத்த வீரன் சர்ப்பிடானுக்குத் தாயானாள். ஆனால் எல்லாக் கடவுளர்களின் பகைமையையும் பெல்லொரோஃபோன் சம்பாதித்துக்கொண்டு, அலீயச் சமவெளிகளில் தனிமையில் திரிந்துகொண்டு, நினைத்து நினைத்து வேதனைப்பட்டு, மனிதர் எவரையும் சந்திப்பதைத் தவிர்க்கும் காலம் வந்தது. புகழ்மிகு சொலீமியுடன் நடந்த போரில், அவனது மகன் அய்சாண்டரை, திருப்திப்படுத்த முடியாத போர்க்கடவுளான ஏரிஸ் கொன்றான். தங்கக் கடிவாளம்

கொண்ட தேருடைய ஆர்ட்டீமிஸ், கோபத்தில் லடேமியாவைக் கொன்றான்.

'அதன் பிறகு ஹிப்பொலோக்கஸ் மட்டுமே எஞ்சியிருந்தான். அவனின் மகன் நான்தான் என்று சொல்கின்றனர். அவர் என்னை ட்ராய் நகருக்கு அனுப்பினார். எப்பொழுதுமே தலைசிறந்தவனாக இருக்க வேண்டும் என்றும் எல்லாரையும் மிஞ்சவேண்டும் என்றும், எஃபீரியிலும் லைசியாவிலும் தலைசிறந்த வீரர்களாக இருந்த நமது மூதாதையர்களுக்கு அவமானத்தை ஏற்படுத்தக் கூடாது என்றும் எனக்கு அவர் அடிக்கடி சொல்லுவார்.

'இதுதான் எனது குடும்பம். நான் வந்த பரம்பரை ரத்தம் அதுதான்!'

இப்படியாக அவன் சொல்லி முடித்தான். க்ளாகஸின் கதை, போர்முழக்கத்தின் தலைவனான டயமீடிஸுக்கு மகிழ் வளித்தது. தனது ஈட்டியை பூமியில் குத்திவிட்டு, அந்த மக்கள் தலைவனை நோக்கி அன்பாகச் சொன்னான்:

'நிச்சயமாக உனது குடும்பமும் எனது குடும்பமும் பண்டைய உறவுகளால் தொடர்புடையதே. கடவுளையொத்த என் தாத்தா ஈனிமஸ், ஒருமுறை இணையற்ற பெல்லொரோஃபோனை தன் அரண்மனையில் இருபது நாள்கள் தங்க வைத்து உபசரித்துள்ளார். அதன் பிறகு அவர்களிருவரும் விருந்தாளி, விருந்து கொடுப்பவர் என்ற முறையில் ஒருவருக்கொருவர் பரிசுப் பொருட்களை பரிமாறிக்கொண்டுள்ளனர். கருஞ்சிவப்பு நிறத்தில் மின்னும் இடுப்புக் கச்சையொன்றை, ஈனஸ் பெல்லொரோஃபோனுக்குக் கொனடுத்தார். பெல்லொரோஃபோன் அவருக்கு இரண்டு கைப்பிடிகளுள்ள தங்கக் கோப்பையைக் கொடுத்தார். நான் ட்ராய் நகருக்கு வந்தபோது அந்தக் கோப்பையை ஊரிலேயே விட்டுவிட்டு வந்தேன் (எனது தந்தை டைடியூஸைப் பொருத்தவரை, தீப்ஸில் அழிக்கப்பட்ட கிரேக்கப்படையில் அவர் சேர்ந்தது பற்றி எனக்குத் தெரியாது. நான் அப்போது சின்னக் குழந்தையாக இருந்தேன்). இப்பொழுது நீ அர்கோஸின் மத்தியில் என்னை உன் நல்ல நண்பர்களில் ஒருவனாகப் பார்க்கலாம். நான் லைசியாவுக்கு வரும்போது, வந்தால், அங்கே என் நண்பனாக உன்னைப் பார்ப்பேன்.

'போர் தீவிரமாக இருந்தாலும் நம் ஈட்டிகள் சந்திப்பதை நாம் தவிர்த்துக்கொள்வோம். ஏனெனில், நான் கொல்வதற்கு

ஏராளமான ட்ரோஜன்களும் அவர்களின் கீர்த்திபெற்ற ஆதரவாளர்களும் உள்ளனர். கடவுள்கள் கொடுத்தால், நீ கொல்வதற்கும் ஏராளமான கிரேக்கர்கள் கிடைக்கலாம் உன்னால் கொல்ல முடியுமானால். நாம் நமது கவச உடைகளை மாற்றிக்கொள்வோம். நமது பாட்டன்கள் நம்மை நண்பர்களாக மாற்றிவிட்டார்கள் என்பதை எல்லாரும் அறிந்துகொள்ளட்டும்.'

இந்த வார்த்தைகளுடன் அவர்கள் தமது தேர்களிலிருந்து கீழே குதித்தார்கள். ஒருவருக்கொருவர் கை கொடுத்துக்கொண்டு கண்ணியப்படுத்திக் கொண்டார்கள். ஆனால், க்ளோகஸை அறிவிழந்து போகுமாறு செய்தான் ஜீயூஸ். ஏனெனில், அவன் நூறு எருதுகளின் மதிப்புள்ள தனது தங்கக் கவச உடையைக் கொடுத்து ஒன்பது எருதுகளின் மதிப்புடைய டயமீடிஸின் வெண்கலக் கவச உடையை வாங்கிக்கொண்டான்.

இதற்கிடையில், ஸ்கேய வாயில் கதவருகில் கருவாலி மரம் இருந்த இடம்வரை வந்து சேர்ந்தான் ஹெக்டர். உடனே அவனை, ட்ரோஜன் மனைவிமார்களும் மகள்களும் தமது பிள்ளைகள், சகோதரர்கள், கணவர்கள் மற்றும் நண்பர்களைப் பற்றி விசாரிப்பதற்காக அவனைச் சூழ்ந்துகொண்டனர். கடவுளரிடம் வேண்டிக்கொள்ளும்படி அவர்களிடம் அவன் கூறினான். அனேகருக்கான வேதனை காத்திருந்தது.

பின் அவன் ப்ரியமின் பிரும்மாண்டமான அரண்மனையை நோக்கிச் சென்றான். அதன் முன்பகுதி மெருகூட்டப்பட்ட பளபளக்கும் தூண்களால் நிரம்பியிருந்தது. அவற்றின் பின்னால் இருந்த முக்கிய பகுதியில், மெருகூட்டப்பட்டு பளபளக்கும் ஐம்பது அறைகள் அருகருகில் இருந்தன. அவற்றில் ப்ரியமின் மகன்கள் தமது மனைவிகளுடன் உறங்கினர். அவனது மகள்களுக்காக தனி அந்தப்புரங்கள் இருந்தன. அரண்மனை முற்றத்தின் அந்தப் பக்கமாக அவர்களுக்காக மெருகூட்டப்பட்டு பளபளக்கும் கற்களால் கட்டப்பட்ட பன்னிரண்டு அறைகள் அருகருகே இருந்தன. அவற்றின் கூரைகள் ஒழுங்காக அமைக்கப்பட்டிருந்தன. அங்கே ப்ரியமின் மருமகன்கள் தமது கண்ணியத்துக்குரிய மனைவிகளுடன் உறங்கினர்.

ஹெக்டர் அரண்மனைக்குச் சென்றதும், மென்மையான தாராள மனம் கொண்ட தன் தாய் ஹெகாபியைச் சந்தித்தான். தன் மகள்களிலேயே மிகவும் அழகான லோடிஸ் என்பவளுடன்

அவள் வந்துகொண்டிருந்தாள். தன் மகன்மீது தனது கையைப் போட்டபடி அவள் சொன்னாள்

'ஹெக்டர்! வீரம்செறிந்த போர்க்களத்தை விட்டுவிட்டு இங்கே ஏன் வந்திருக்கிறாய் குழந்தாய்? அப்படியானால் நம் நகரில் சண்டையிடும் அந்த வெறுக்கத்தக்க கிரேக்கர்களின் கை ஓங்கியிருக்கிறது என்பது உண்மையா? நகரின் உச்சியில் இருக்கும் ஜீயூஸிடம், கையேந்தி பிரார்த்தனை செய்ய நீ மனமுடைந்து திரும்பி வந்துவிட்டாயா? கொஞ்சம் இரு! நான் உனக்கு இனிய மது கொண்டு வருகிறேன். முதலில் நீ, தந்தை ஜீயூஸுக்கும் மற்ற நித்தியர்களுக்கும் மதுவைப் படைத்துவிட்டு அதன்பிறகு நீ விரும்பினால், நீயும் கொஞ்சம் குடித்து புத் துணர்ச்சி ஊட்டிக்கொள். களைப்படைந்திருக்கும் ஒரு மனித னுக்கு மது உண்மையிலேயே பெரிய தெம்பூட்டும் சுகமாக இருக்கிறது. நீ, நேசிப்பவர்களுக்காக கடுமையாகப் போர் செய்து களைத்திருக்க வேண்டும்.'

பளபளக்கும் தலைக்கவசமணிந்த ஹெக்டர் பதில் சொன்னான்:

'என்னருமை அன்னையே! எனக்கு இனிய மது எதையும் தர வேண்டாம். அப்படி நீங்கள் கொடுத்தால், அது என் பலத்தை யெல்லாம் போக்கிவிடும். பின் போர் செய்ய முடியாதவனாக நான் ஆகிவிடுவேன். கழுவாத கைகளோடு ஜீயூஸுக்கு, மின்னும் மதுவைப் படைக்க நான் விரும்பவில்லை. உடம்பெல் லாம் ரத்தமும் அழுக்குமாக நிற்கும் ஒருவன், மேகங்களைக் கறுக்க வைக்கும் ஜீயூஸிடம் அப்படியே போய் வேண்டிக் கொள்ளக் கூடாது.

'நீங்கள்தான் இப்பொழுது பிரார்த்திக்க வேண்டும் அன்னையே! போர்த்தலைவி அதீனியின் கோயிலுக்கு நமது வயது முதிர்ந்த பெண்களையும் அழைத்துக்கொண்டு திருப்படையல்களோடு செல்லுங்கள் நீங்கள். உங்களுக்கு மிகவும் உவப்பான, இந்த வீட்டிலேயே மிகவும் அழகான, மிகவும் பெரியதான ஒரு அங்கியை எடுத்துக்கொண்டு சென்று, அதை அழகிய கூந்தல் கொண்ட அதீனியின் கால்களுக்கு சமர்ப்பியுங்கள். வேலை எதுவும் செய்யாத பன்னிரண்டு வயதுடைய இளம் கன்றுகளைப் பலியிடுவதாக வாக்களியுங்கள். அதீனி மட்டும் நம் நகரின் மீதும், ட்ரோஜன்களின் மனைவிமார்களின் மீதும், சிறு

குழந்தைகளின் மீதும் இரக்கம் கொண்டு போர்முழக்கத்தின் தலைவனும், காட்டுமிராண்டித்தனமாக ஈட்டியெறிபவனுமான டயமீடிஸை, புனித இலியம் நகரைவிட்டு அப்புறப்படுத்து வதாக இருந்தால்!

'நீங்கள் போர்த்தலைவி அதீனியின் கோயிலுக்குச் செல்லுங்கள். நான் போய், பாரிஸை வெளியில் வா என்றழைக்கிறேன். ஆனால், நான் சொல்வதை அவன் கேட்பானா என்பது சந்தேகம்தான். உண்மையைச் சொல்லப்போனால், இந்த பூமி பிளந்து அவனை விழுங்கிக்கொண்டால் நல்லது என்று நினைக்கிறேன். ட்ரோஜன்களுக்கும் வீரம் செறிந்த ப்ரியமுக்கும் அவரது மகன்களுக்கும் ஜீயூஸால் அனுப்பப்பட்ட எப்படிப் பட்ட சாபம் அவன்! ஹயடிஸின் மண்டபங்களில் மட்டும் அவனை நான் பார்க்க முடியுமானால், என் பிரச்னைகளெல்லாம் முடிந்துவிட்டதென்று சொல்வேன்.'

அப்படி அவன் சொன்னதும், ஹெக்டரின் அன்னை அரண் மனைக்குள் சென்று அவன் சொன்னபடி பெண்களை அழைத்து வர தன் சேடியருக்கு உத்தரவிட்டாள். அவர்கள், நகருக்குள் சென்று வயதான பெண்மணிகளை, தேடி அழைத்துவரச் சென்றனர். பாவு போடப்பட்ட தன் மேலாடைகள் இருந்த வாசனையூட்டப்பட்ட அறைக்குள் சென்றாள் அவள். கடவுளை யொத்த பாரிஸ், ஹெலனை இலியத்துக்குக் கடத்திக் கொண்டு வந்தபோது, சிடான் நகரிலிருந்து சிடியப் பெண்களையும் கொண்டுவந்தான். அப்பெண்களின் வேலைப்பாட்டில் உரு வான அங்கிகள் அவை. அவற்றிலிருந்து மிக நீளமானதும் மிக அலங்காரமாகவும் இருந்த ஒரு அங்கியை, அதீனிக்குப் பரிசாகத் தேர்ந்தெடுத்தாள் ஹெகாபி. அந்த அங்கி எல்லா மேலாடை களுக்கும் கீழே ஒரு நட்சத்திரத்தைப்போல மின்னிக்கொண்டு இருந்தது. அதை எடுத்துக்கொண்டு அவள் தன் பயணத்தைத் தொடங்கினாள். வயது முதிர்ந்த பெண்களும் அவளைப் பின் தொடர்ந்து விரைவாக வந்தனர்.

நகரின் உச்சியிலிருந்த அதீனி கோயிலுக்கு அவர்கள் வந்தபோது, சிஸ்ஸசிஸின் மகளும், குதிரைகளை அடக்கும் ஆன்ட்டினரின் மனைவியுமான அழகிய கன்னம் கொண்ட அதீனி கோயிலின் அர்ச்சகியாக ட்ரோஜன்களால் நியமிக்கப்பட்டிருந்த தியானோ, அதன் கதவுகளை அவர்களுக்காகத் திறந்துவிட்டாள். அனை

வரும் ஒன்றாக பேரொலியெழுப்பியபடி, அதீனியை நோக்கி தம் கைகளை பிரார்த்தனையில் உயர்த்தினார்கள். அழகிய கன்னம் கொண்ட தியானோ, அந்த அங்கியை வாங்கிச் சென்று அதீனியின் பாதங்களில் சமர்ப்பித்து ஜீயூஸின் மகளான அதீனியிடம் பிரார்த்தித்தாள்

'அதீனி தெய்வமே! நகரங்களைக் காப்பாற்றுபவளே! விண்ணுலக தேவதையே! டயமீடிஸின் ஈட்டியை உடைப்பாயாக! ஸ்கேய வாயில் கதவருகில் தலைகீழாக அவன் வந்து விழும்படி செய்வாயாக. வேலை எதுவும் செய்யாத பன்னிரண்டு வயதுடைய இளம் கன்றுகளை இங்கேயே இப்பொழுதே உனது கோயிலில் நாங்கள் பலியிடுகிறோம். நம் நகரின் மீதும் ட்ரோஜன்களின் மனைவிமார்களின் மீதும், சிறு குழந்தைகளின் மீதும் இரக்கம் கொள்வாயாக!'

தியானோ இப்படிப் பிரார்த்தனை செய்தாள். ஆனால் பதிலுக்கு அதீனி, முடியாது என்பதாகத் தலையை ஆட்டினாள்.

எனவே, வந்திருந்த பெண்களனைவரும் மகா ஜீயூஸின் மகளிடம் பிரார்த்தித்தனர். இதற்கிடையில் பாரிஸ் வசித்த அழகான வீட்டுக்கு ஹெக்டர் சென்றான். செழிப்பான ட்ராய் நகரில் இருந்த மிகச்சிறந்த வேலைக்காரர்களைக் கொண்டு தன் வீட்டைக் கட்டியிருந்தான் பாரிஸ். உறங்கும் அறைகள், மண்டபம், முற்றம் ஆகியவற்றோடு ப்ரியம் மற்றும் ஹெக்டரின் வீடுகளுக்கு அருகிலேயே பாரிஸின் வீடும் குறைகளின்றி கட்டப்பட்டிருந்தது. ஜீயூஸுக்கு நெருக்கமான ஹெக்டர் அதனுள்ளே நுழைந்தான். ஐந்து பதின்மான அளவு நீளமான ஈட்டியை அவன் கையில் வைத்திருந்தான். அதன் வெண்கல முனை அவனுக்கு முன்னால் மின்னிக்கொண்டிருந்தது. அதன் காம்பைச் சுற்றி ஒரு தங்க மோதிரம் பற்றிப் பிடித்திருந்தது.

பாரிஸ் தன் படுக்கையறையில், அருமையான தன் போர்க்கவசம், கேடயம், வளைந்த வில் ஆகியவற்றைப் பரிசோதித்துக் கொண்டிருந்ததை ஹெக்டர் பார்த்தான். அவன் பக்கத்தில் அமர்ந்திருந்த ஹெலன், சுற்றியிருந்த பணிப்பெண்களின் வேலையைக் கண்காணித்துக் கொண்டிருந்தாள். பாரிஸைப் பார்த்து ஹெக்டர் கடுமையாகச் சொன்னான்:

'நீ என்ன செய்துகொண்டிருப்பதாக நினைக்கிறாய்? அங்கே நகருக்குள் செங்குத்தான அதன் மதில்களின் கீழே நமது வீரர்கள் கடுமையாக சண்டை போட்டுக்கொண்டு இருக்கும்போது நீ இப்படி வெட்டியாக உட்கார்ந்து கொண்டிருப்பதால் உனக்கு எந்தப் பயனுமில்லை. நீ செய்த தப்பினால்தான் இன்று இந்த நகரம் போரின் சப்தங்களால் ஆக்ரோஷமாக அலறிக்கொண் டுள்ளது. ஆனால் போரின் பயங்கரங்களிலிருந்து யாராவது தப்பிக்க முயன்றால், அவனோடு சண்டை போடுவதில் நீதான் முதல் ஆளாக இருக்க வேண்டும். இந்த நகரம் தீச்சுவாலைகளால் எரிந்து சாம்பலாகுமுன், போருக்குக் கிளம்பிப் போ!'

கடவுளையொத்த பாரிஸ் பதில் சொன்னான்

'ஹெக்டர்! உன் குத்தல்களில் நியாயம் உள்ளது. எல்லாம் எனக்குத் தேவைதான். ஆனால் நான் ஒன்று சொல்கிறேன். அதை கவனமாகக் கேள். நீ நினைப்பதுபோல நான் இங்கே மௌனமாக உட்கார்ந்து கொண்டிருக்கவில்லை. ட்ரோஜன்களுக்கு எதிராக என் மனத்தில் எந்தக் கசப்பும் இல்லை. ஆனால் என் வேதனையை எண்ணி அதில் உழல்வதற்காகத்தான் இங்கே எனது அறைக்கு வந்தேன் நான். ஆனாலும், போருக்குத் திரும்பும்படி என் மனைவி யும் மென்மையாக இப்பொழுதுதான் எடுத்து சொல்லிக் கொண்டிருந்தாள். அவள் சொல்வது சரியென்றே நான் நினைக் கிறேன். வெற்றி என்பது ஒரு மனிதனிடமிருந்து இன்னொரு வனுக்கு சென்ற வண்ணம்தான் இருக்கும். நான் போருடை அணிந்து தயாராக வருகிறேன், கொஞ்சநேரம் காத்திரு. இல்லை யெனில், நீ முதலில் போ. நான் பின்னாலேயே வருகிறேன். நான் விரைவிலேயே வந்து உன்னைப் பிடித்துவிடுவேன்.'

அப்படி அவன் சொன்னதற்கு, பளபளக்கும் தலைக்கவச தொப்பி கொண்ட ஹெக்டர், பதிலொன்றும் சொல்லவில்லை. இப் பொழுது ஹெலன் அவனைப் பார்த்து மெதுவாகச் சொன்னாள்:

'என் மைத்துனரே! எவ்வளவு உணர்ச்சியற்ற, தீயமனம் கொண்ட இழிவானவளாக நான் இருக்கிறேன்! என்னை என் அன்னை கருக் கொண்ட நாளன்றே, எதிரியாகிய புயல் என்னை மலைகளின் உச்சிகளுக்கு அல்லது ஆர்ப்பரிக்கும் கடலின் ஆழங்களுக்கு அடித்துக்கொண்டு சென்றிருக்கலாம். இதெல்லாம் நடப்பதற்கு முன்பே நான் மூழ்கிப் போயிருப்பேன். அடுத்ததாக, இப்படி ஒரு

முடிவு வேண்டும் என்று கடவுள்கள் விதித்திருப்பதால், தன் மக்களும் வீரர்களும் தன்மீது எப்படிப்பட்ட கோபம் கொண்டிருக் கிறார்கள் என்பது பற்றி கொஞ்சமாவது ரோஷப்படும் ஒரு கணவன் எனக்குக் கிடைத்திருக்கலாம். ஆனால், இப்பொழுது எனக்குக் கிடைத்திருக்கும் கணவனுக்கு மூளையென்பதே இல்லை; இருக்கப் போவதுமில்லை. ஆனால் நான் தவறாகச் சொல்லவில்லையெனில், ஒருநாள் இதற்கெல்லாம் அவர் பதில் சொல்லித்தான் ஆகவேண்டும்.

'உள்ளே வந்து இந்த நாற்காலியில் உட்காருங்கள் மைத்துனரே! உங்களைவிட அதிகமாகப் பொறுப்பைச் சுமப்பவர் இந்த ட்ராய் நகரில் இல்லை. எல்லாமே என்னால்தான். நான் இழிவானவள். பாரிஸின் கண்மூடித்தனமான முட்டாள்தனத்தினால், ஏதோ ஒரு கெட்ட முடிவையே ஜீயூஸ் நமக்கு வைத்திருக்கிறார். இன்னும் பிறக்காத வருங்காலச் சந்ததியினரின் பாடல்களில் நம்மைப் பற்றிக் குறிப்பிடுவதற்காக!'

பளபளக்கும் தலைக்கவசத் தொப்பி கொண்ட மகா ஹெக்டர் பதில் சொன்னான்:

'ஹெலன்! நீ மிகவும் அன்பானவள். ஆனால் என்னை உட்காரச் சொல்லாதே. உன்னால் என்னை மாற்ற முடியாது. நான் இல்லாமல் தவிக்கும் ட்ரோஜன்களோடு சேர்ந்து திரும்பவும் போரைத்தொடங்க நான் ஏற்கெனவே மிகவும் ஆர்வமாக உள்ளேன். நீ இப்பொழுது செய்யவேண்டியதெல்லாம் இவனைத் துரிதப்படுத்துவதுதான். அவனே விரைவில் கிளம்பி வருவது நல்லது. அப்பொழுதுதான் நான் நகரைவிட்டு நீங்குமுன் என்னைப் பிடிக்க முடியும். ஏனெனில் நான் எனது வீட்டுக்குச் சென்று, என் வீட்டு வேலைக்கார அடிமைகளையும் அருமை மனைவி மக்களையும் பார்க்க விரும்புகிறேன். நான் மறுபடியும் அவர் களிடம் திரும்பிச் செல்வேனா அல்லது இன்றே கிரேக்கர்களிடம் நான் வீழ்ந்துவிட கடவுளர் விதித்திருக்கின்றனரா என்று எனக்குத் தெரியாது!'

பளபளக்கும் தலைக்கவசத் தொப்பி கொண்ட ஹெக்டர் இந்த வார்த்தைகளைச் சொல்லி விடைபெற்றுக்கொண்டு, வரவேற்கத் தயாராக இருக்கும் தன் வீட்டுக்கு சென்றான். ஆனால், வீட்டில் வெண்மையான கைகள் கொண்ட அவன் மனைவி ஆன்ட்ரோ

மக்கியைக் காணவில்லை. சுவருக்கு அருகில் இருந்த ஒரு கோபுரத்துக்கு, தன் குழந்தை மற்றும் சரியாக உடையணிந்த பணிப்பெண்ணுடன் சென்று, அங்கே தன் மனதைக்கொட்டி அழுதுகொண்டிருந்தாள் அவள். இணையற்ற தன் மனைவியைக் காணாத ஹெக்டர், வீட்டு வாசலுக்குச் சென்று அங்கிருந்த பணிப்பெண்களிடம் கேட்டான்

'பெண்களே! என்ன நடந்ததென்று சொல்லுங்கள். வெள்ளைக் கைகள் கொண்ட ஆன்ட்ரோமக்கி, வீட்டை விட்டு எங்கே சென்றாள்? என் சகோதரிகளைப் பார்க்கப் போயிருக்கிறாளா? அல்லது அருமையாக ஆடைகளணிந்த என் சகோதரர்களின் மனைவிமார்களைப் பார்க்கப் போயிருக்கிறாளா? அல்லது அழகான கூந்தல் கொண்ட மற்ற பெண்களோடு அதீனியின் கோயிலுக்குச் சென்று அங்கிருக்கும் மாட்சிமை பொருந்திய தேவதையிடம் பரிந்துபேச போயுள்ளாளா?'

சுறுசுறுப்பான ஒரு பணிப்பெண் பதில் சொன்னாள் :

'ஐயா ஹெக்டர்! உண்மையைச் சொல்லும்படி நீங்கள் எனக்கு உத்தரவிடுவதால் சொல்கிறேன். உங்கள் மனைவி தன் சகோதரிகளைப் பார்க்கவோ அருமையாக ஆடைகளணிந்த உங்கள் சகோதரர்களின் மனைவிமார்களையோ பார்க்கப் போகவில்லை. அழகான கூந்தல் கொண்ட மற்ற பெண் களோடு அதீனி கோயிலுக்குச் சென்று அங்கிருக்கும் மாட் சிமை பொருந்திய தேவதையிடம் பரிந்துபேசவும் செல்ல வில்லை. இலியம் நகரின் மாபெரும் கோபுரத்துக்குச் சென்றுள் ளார்கள். நமது வீரர்கள் அடிபணிந்து தோற்பதாகவும், கிரேக் கர்கள் அவர் மீதேறி ஜெயிப்பதாகவும் அவர்கள் கேள்விப் பட்டார்கள். எனவே, ஏதோ பேய் பிடித்த மாதிரி ஓடிச்சென்று கோபுர வாசல் சுவர் பக்கம் போயிருக்கிறார்கள். செவிலித் தாய், கையில் குழந்தையுடன் பின்னாலேயே சென்றுள்ளாள்.'

அப்படி அவள் சொன்னதும், வீட்டை விட்டு விரைந்து வெளி யேறிய ஹெக்டர், அழகாக வடிவமைக்கப்பட்ட தெருக்களில் விரைந்தான். நகரைத் தாண்டி ஸ்கேய வாயிலை அடைந்தான் அவன். அதுதான் சமவெளிப்பகுதிக்குச் செல்லும் அவனுடைய வழி. ஆனால் அவன் அங்கே சென்றதும், மிகுந்த சீதனத்துடன் அவனைத் திருமணம் புரிந்துகொண்டிருந்த ஆன்ட்ரோமக்கியே

அவனைக் காண ஓடி வந்தாள். சீலிய மன்னனான வீரநெஞ்சம் கொண்ட ஈட்டியான் என்பவனின் மகள்தான் ஆன்ட்ரோமக்கி. ப்ளாகஸ் மலையின் கீழிருந்த தீபியில், காடுகள் நிறைந்த பகுதியின் கீழே அவன் வசித்து வந்தான். அவனுடைய மகளைத்தான் போர்வீரனான ஹெக்டர் மணந்திருந்தான்.

அவனைச் சந்திக்க ஆன்ட்ரோமக்கி ஓடிவந்தாள். பணிப் பெண், சின்னப் பையனாக இருந்த குழந்தையை வாங்கிச் சென்றாள். அவர்களின் செல்ல மகனான அவன், ஒரு நட்சத் திரத்தைப்போல அழகாக இருந்தான். அவனை ஹெக்டர், ஸ்கமாண்ட்ரியஸ் என்றழைத்தான். ஆனால் மற்ற அனைவரும் அக்குழந்தையை அஸ்ட்டியானாக்ஸ், நகரத்தலைவன் என் றழைத்தனர். ஏனெனில், அவன் தந்தைதான் இலியம் நகருக்கான ஒரே பாதுகாப்பு.

ஹெக்டர் தன் மகனைப் பார்த்துப் புன்னகைத்தான். ஆனால் ஒன்றும் சொல்லவில்லை. அழுகை பீறிட்டு வர, ஆன்ட்ரோமக்கி அவனை நோக்கிச் சென்று அவன் கையில் தன் கையை இணைத்தபடி சொன்னாள்

‘ஹெக்டர்! உனக்குப் பேய் பிடித்திருக்கிறது. உன்னுடைய இந்த மனஉறுதி உனது இறப்பில்தான் போய் முடியும். உனது சின்ன மகனைப் பற்றியோ, கும்பலாகச் சேர்ந்து கிரேக்கர்கள் உன்னைக் கொன்றபின்னர், விரைவிலேயே விதவையாகப் போகும் அதிர்ஷ்டமில்லாத உனது மனைவியைப் பற்றியோ உனக்குக் கவலையில்லை. நீ இல்லாத நான் இறந்து போவதே நல்லது. நீ உன் முடிவை எட்டிவிடும்போது, எனக்கு ஆறுதல் ஏது வேதனையைத் தவிர?

‘எனக்கு அப்பாவோ அம்மாவோ கிடையாது. வந்தாரை வரவேற்கும் உயர்ந்த வாயில்கள் கொண்ட நமது நகரான சிசிலிய தீபியை அழித்த, கடவுளையொத்த அக்கிலிஸால் என் தந்தை ஈட்டியான் கொல்லப்பட்டார். என் தந்தை ஈட்டியானை அவன் கொன்றாலும் அவரை நிர்வாணப்படுத்துவது சரியல்ல என்று அக்கிலிஸ் நினைத்தான். அவருடைய அலங்காரமான கவச உடைகளுடனேயே அவரை அவன் எரித்தான். அந்த இடத்தின்மீது ஒரு கல்லறை மேட்டையும் உருவாக்கினான். புயல் மேகங்களை விரட்டும் ஜீயூஸின் மகள்களான மலை தேவதைகள், அதைச் சுற்றி இலையுதிர்க்கும் எல்ம் மரங்களை நட்டனர்.

'வீட்டில் எனக்கு ஏழு சகோதரர்கள் இருந்தனர். ஒரே நாளில் அவர்கள் அத்தனை பேரும் ஹயடிஸுக்கு இறங்கிப் போய் விட்டனர். அலங்கோலமாய் நடந்துகொண்டிருந்த தமது கால் நடைகளையும் வெண்ணிற செம்மறியாடுகளையும் அவர்கள் கவனித்துக் கொண்டிருந்தபோது, கடவுளையொத்த விரைவுப்பாத அக்கிலிஸ் அவர்களனைவரையும் கொன்றான். ப்ளாகஸ் மலையின் கீழிருந்த தீபியில் ஆட்சி செய்துகொண்டிருந்த என் அன்னையை, மற்ற போர்ப்பொருள்களோடு அக்கிலிஸ் இங்கே கொண்டு வந்தான். ஆனால் பெரும் பிணையத்தொகையைப் பெற்றுக்கொண்டு, அவளை விடுதலை செய்தான். பின்னாளில் அம்புகளில் மகிழ்ந்து திளைக்கும் ஆர்ட்டிமிஸின் கைகளில், தன் தந்தையின் வீட்டில், அமைதியாக உயிரை விட்டாள்.

'எனவே ஹெக்டர்! நீ என் உறுதியான கணவன் மட்டுமல்ல. நீதான் எனக்கு தாய், தந்தை, சகோதரன் எல்லாமே. என்மீது இப்பொழுதாவது இரக்கம் காட்டு. இதோ இந்தக் கோபுரத்தில் தங்கிக்கொள். என் மகனை அனாதையாக்கி விடாதே. உன் மனைவியை விதவையாக்கி விடாதே. அந்த அத்தி மரத்தின் பக்கம் ட்ரோஜன்களை அணிவகுத்தி நிற்கவை. அங்கேதான் எதிரிகள் ஏறிவர சுவர் எளிதாக உள்ளது. அந்த வழிதான், எதிரிகள் மிகவும் எளிதாகத் தாக்குவதற்கு வசதியாகத் திறந்துள்ளது. கிரேக்கர்களின் சிறந்தவர்களான இரு அஜாக்ஸ்கள், புகழ் பெற்ற இடொமீனியஸ், அகமெம்னன், மெனிலயஸ் மற்றும் துணிச்சலான டயமீடிஸ் ஆகியோரின் தலைமையில் மூன்று முறை அந்த இடத்தைத் தாக்கி உள்ளே நுழைய முயன்றுள்ள னர். தெய்வீக முன்னறிவிப்பைப் பற்றி அறிந்த யாரோ அவர் களிடம் இதைச் சொல்லியிருக்க வேண்டும் அல்லது அங்கே தாக்கியதற்கு அவர்களிடம் வேறு ஏதேனும் காரணங்கள் இருக்க வேண்டும்.'

பளபளக்கும் தலைக்கவசத் தொப்பி கொண்ட மகா ஹெக்டர் பதில் சொன்னான் :

'ஆன்ட்ரோமக்கி! நீ சொன்னதெல்லாம் என் மனதிலும் எப்பொழுதுமே இருக்கத்தான் செய்கிறது. ஆனால் ஒரு கோழை போல நான் சண்டையிலிருந்து ஒதுங்கி பதுங்கி இருந்தேனென் றால், ட்ரோஜன்கள் மத்தியிலும் கீழே வழியுமாறு உடையணிந்த ட்ரோஜன் பெண்கள் மத்தியிலும் எனக்கது பெரும் அவ

மானத்தைத் தவிர வேறு எதுவுமில்லை. என் மனம் அதை ஒப்புக்கொள்ளவும் செய்யாது. ஏனெனில், ஒரு நல்ல போர் வீரனாக இருக்கவும், முன் வரிசையில் என் இடத்தைப் பிடிக்க வும், எனக்கும் என் தந்தைக்கும் புகழ் கிடைக்குமாறு போர் செய்யவும்தான் நான் என்னைத் தயார் செய்துள்ளேன்.

'ஆனால் நம் புனித இலியம் நகரும், ப்ரியமின் மக்களும் சாம்பல் நிற ஈட்டி கொண்ட ப்ரியமும் அழிக்கப்படும் நாள் வந்துகொண்டிருப்பதாகத்தான் என் மனத்தின் ஆழத்தில் தெரிகிறது. ட்ரோஜன்கள் எந்தவிதமான வேதனையை அனுபவிக்கப் போகிறார்களோ என்பது மட்டுமல்ல; ஹெகாபி யும் தலைவன் ப்ரியமும், எண்ணிக்கையிலும் வீரத்திலும் மிஞ்சும் என் சகோதரர்களும், எதிரிகள் கையால் வீழ்ந்து மண்ணைக் கவ்வப் போகிறார்களே என்பது மட்டுமல்ல; உனது சுதந்திரம் பறிபோக, கதறக் கதற உன்னை யாரோ ஒரு வெண்கலக் கவச உடையணிந்த கிரேக்க வீரன் இழுத்துக் கொண்டு போவானே என்ற எண்ணம்தான் என் மனத்தை மிக அதிகமாக வேதனைப்படுத்துகிறது.

'கிரேக்கத்தில் நீ யாரோ ஒருத்திக்காக, தறியில் வேலை செய்து கொண்டிருக்கிறாய் அல்லது அந்நிய மண்ணின் ஓடையிலிருந்து, தண்ணீர் கொண்டுவரச் செல்லுகின்றாய். அந்த ஓடை மெஸ்ஸி ஸாகவோ ஹைபரீயாவாகவோ இருக்கலாம். உன் விருப்பத் துக்கு எதிராக நீ வேலை செய்தாலும், அதையெதிர்த்து உன்னால் ஒன்றும் செய்யமுடியாமல் இருக்கிறது. உன் கண்ணீரைப் பார்த்து, 'அதோ ஹெக்டரின் மனைவி போகிறாள்! 'ஹெக்டர் தான் குதிரைகளை அடக்கும் ட்ரோஜன்களில் தலைசிறந்தவன். இலியத்தில் போர் செய்தவன்!' என்று அவர்கள் சொல்கின் றார்கள். இப்படித்தான் அவர்கள் பேசிக்கொள்வார்கள். அதைக் கேட்கும் உனக்கு, உன்னை விடுதலை செய்யக்கூடிய ஒரு வீரனின் இழப்பை எண்ணி மறுபடியும் வேதனை உண்டாகும். இப்படி ஒரு காட்சி என் கண்ணில் தெரிகிறது கண்ணே! ஆனால், அப்படி நீ இழுத்துக்கொண்டு போகப்படுமுன், உன் அழுகுரல் என் காதில் விழுமுன், என் இறந்த உடல்மீது, மண்மேடு கட்டி மூடட்டும்!'

இப்படிச்சொன்ன ஹெக்டர், தன் மகனை நோக்கிக் கை நீட்டி னான். ஆனால் ஒட்டியாணம் அணிந்த செவிலியின் மார்போடு

ஒட்டியபடி, கத்திக்கொண்டு வர மறுத்தது குழந்தை. தன் தந்தை யின் தோற்றத்தையும், அங்குமிங்கும் மேலிருந்து அச்சமூட்டும் வகையில் ஆடிக்கொண்டிருந்த குதிரை மயிர்க் குஞ்சம் கொண்ட அவனுடைய வெண்கல கவசத் தொப்பியையும் பார்த்து அது பயந்திருந்தது. அதன் தந்தையும் அன்னையும் அதைக்கண்டு சிரித்தனர். புகழ்மிகு ஹெக்டர், உடனே மின்னும் தன் தொப்பியை எடுத்து தரையில் வைத்தான். பின் தன் அருமை மகனை எடுத்து முத்தம் கொடுத்தான். அவனைக் கைகளில் எடுத்துக் கொஞ்சினான். பின் ஜீயூஸிடமும் மற்ற கடவுளரிடமும் பிரார்த்தனை செய்தான்

'ஓ ஜீயூஸ்! மற்ற கடவுளர்களே! என் மகன் என்னைப்போலவே, ட்ரோஜன்களில் ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவனாகவும், என்னைப்போலவே உறுதியும் துணிச்சலும் கொண்டவனாக வும், இலியத்தை ஆளும் சக்திவாய்ந்த மன்னனாகவும் ஆகுமாறு செய்வீர்களாக! போரிலிருந்து இவன் திரும்பி வரும்போது இவனைப் பார்ப்பவர்கள், 'தந்தையை மிகைக்கும் தனயனிவன்!' என்று சொல்லவேண்டும். போரிலிருந்து திரும்பும்போதெல் லாம், எதிரிகளின் ரத்தம் தோய்ந்த கவசங்களைக் கொண்டுவந்து தன் அன்னையின் மனத்தை இவன் குளிர வைக்கட்டும்.'

இந்த வார்த்தைகளைச் சொல்லியவனாய், பையனை அவன் அன்னையின் கையில் ஒப்படைத்தான் ஹெக்டர். கண்ணீரினூடே சிரித்தவளாக, அவனை நறுமணம் கமழும் தன் மார்பில் அணைத்துக்கொண்டாள் அவள். அவள் கணவன் அதைப் பார்த்தபோது, பரிவு அவனை ஆட்கொண்டது. அவளைத் தன் கைகளால் தடவிக் கொடுத்தவண்ணம் சொன்னான்

'என் கண்ணே! நீயே உன்னை அதிகமாக மன அழுத்தத்தில் ஆழ்த்திக் கொள்ளாதே. உன்னைக் கெஞ்சிக் கேட்டுக்கொள் கிறேன். எனது நேரம் வருவதற்கு முன் என்னை யாரும் ஹயடி ஸுக்கு அனுப்ப முடியாது. ஒருமுறை இந்த உலகுக்கு வந்து விட்ட யாரும் மரணத்திடமிருந்து தப்பிக்க முடியாது. அவன் கோழையாக இருந்தாலும் சரி, வீரனாக இருந்தாலும் சரி. நீ வீட்டுக்குப் போய், உன் வேலையைப் பார். உன் நெசவுத் தறியை யும் நூற் கண்டையும் கவனி. பணிப்பெண்களை, அவர்களுக் கான வேலைகளைக் கவனிக்கச் சொல். போரானது ஆண் களுக்கான வேலை. இந்த யுத்தம் இலியம் நகரில் உள்ள எல்லா

ஆண்களின் வேலையாகும். அதிலும் முக்கியமாக எனது வேலை.'

இப்படிச் சொல்லிவிட்டு குதிரை மயிர்க்குஞ்சம் கொண்ட தன் தலைக்கவசத் தொப்பியை எடுத்துக்கொண்டான் ஹெக்டர். அவன் மனைவி அதிகமாக அழுதுகொண்டே, திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே வீட்டை நோக்கிச் சென்றாள். சீக்கிரமே அவள், எதிரிகளைக் கொல்லும் ஹெக்டரின் அரண் மனையை அடைந்தாள். அங்கே பல பணிப்பெண்கள் காத்திருந் தனர். அவர்களை ஒப்பாரி வைக்கச்சொல்லி அவள் தூண்டினாள். ஹெக்டருக்காக அவனது வீட்டிலேயே அவர்கள் துக்கம் அனுஷ்டித்தனர், அவன் உயிரோடு இருந்தபோதும்! கிரேக்கர் களின் சினங்கொண்ட தாக்குதலில் இருந்து உயிரோடு அவன் திரும்ப மாட்டான் என்பதைப் போல!

உயர்வான தனது இல்லத்தில், பாரிஸூம் வெகு நேரம் இருக்க வில்லை. தனது கவர்ச்சிகரமான அலங்காரக் கவச உடையை அணிந்துகொண்டு அவன் எவ்வளவு முடியுமோ அவ்வளவு வேகமாக நகரின் வழியாக விரைந்தான். தொழுவத்தில் இடப்பட்ட குதிரை, தீவனப் பெட்டியின் கயிறை அறுத்துக் கொண்டு, குளம்பொலி கேட்குமாறு நிலங்களின் வழியாக, எப்போதும் குளிக்கும் இனிய நீரோடும் பழக்கப்பட்ட ஆற்றை நோக்கி மகிழ்ச்சியாகத் துள்ளிக் குதித்து ஓடுகிறது. தன் தலையை மேல் நோக்கி அடிக்கடி உயர்த்துகிறது. காற்றில் அதன் பிடரி, அதன் தோள்மீது அலையாடுகிறது. தான் எவ்வளவு அழகாக இருக்கிறோம் என்று அதற்குப் புரிகிறது. குதிரைகள் அடிக்கடி வரும் இடங்களுக்கும் அவற்றின் மேய்ச்சல் நிலங்களுக்கும், அதன் கால்கள் அதனை லகுவாக மிதப்பதுபோல் கொண்டு செல்கின்றன. இதைப்போல ப்ரியமின் மகனான பாரிஸ், தன் கவச உடையில் சூரியனைப் போல ஒளிர்ந்துகொண்டு, இலியம் நகரிலிருக்கும் பெர்காசஸ் கோட்டையில் இருந்து இறங்கி வந்தான், செல்லும் வழியெங்கும் சிரித்துக்கொண்டே!

விரைவிலேயே, கடவுளையொத்த தன் சகோதரன் ஹெக்டரைப் பிடித்துவிட்டான். தன் மனைவியிடம் மனம் நெகிழும் சில வார்த்தைகளைச் சொல்லிவிட்டு அந்த இடத்தை விட்டகன்ற கொஞ்ச நேரத்திலேயே, கடவுளையொத்த பாரிஸ்தான் முதலில் பேசினான்:

*‘எனதருமைச் சகோதரனே! நீ சொன்ன நேரத்துக்கு வராமல் உன்னைக் காக்கவைத்துவிட்டு நான் வெகுநேரம் ஓய்வெடுத்து விட்டேனோ?’*

*பளபளக்கும் தலைக்கவசத் தொப்பி கொண்ட ஹெக்டர் பதில் சொன்னான்:*

*‘என்ன வினோதமான மனிதன் நீ! நீ போரில் ஈடுபடும் விதத்தை எந்த அறிவார்ந்த மனிதனாலும் லேசாக எடைபோட முடியாது. உனக்கு, துணிச்சல் அதிகமாக உள்ளது. ஆனால் போர் செய்யாமல் நின்றுவிடவும், நீ உடனே தயாராகிவிடுகிறாய். ட்ரோஜன்கள் உன்னைப் பற்றி அவமானகரமாகப் பேசுவதைக் கேட்க என் மனம் தாங்கவில்லை. அவர்களும் உன்னால்தான் மிகுந்த வேதனைக்குள்ளாகி இருக்கிறார்கள்.*

*‘கிரேக்கர்களை, நம் மண்ணை விட்டு விரட்ட ஜீயூஸ் உதவினால், நமது வெற்றியை நித்திய ஒலிம்பியக் கடவுள்களுக்காக, நமது அரண்மனையில் மதுபான வகைகளைப் படைத்துக் கொண்டாடுவோம். நாம் என்ன சொல்லியிருந்தாலும் சரி. பின்னால் அதையெல்லாம் சரிசெய்து கொள்ளலாம். சரி, போவோம் வா!’*

# அஜாக்ஸ் - ஹெக்டர் சண்டை

***கதைச் சுருக்கம்***

***வரிகள் 01 - 91***

*சிறு வாய்ச்சண்டைக்குப் பிறகு, ஹெக்டருக்கும் ஒரு கிரேக்க வீரனுக்கும் இடையில் சண்டை ஏற்பட, அப்போலோவும் அதீனியும் ஏற்பாடு செய்கின்றனர். ஹெக்டர் சவால் விடுகிறான். தோற்பவனின் உடலை என்ன செய்வது என்பது பற்றிய ஓர் உடன்பாட்டையும் கொடுக்கிறான்.*

***வரிகள் 92 - 205***

*முன்னின்று போர் செய்வதிலிருந்து மெனிலயஸ் தடுக்கப்படு கிறான். கோழைத்தனத்துக்காக கிரேக்கர்களை நெஸ்டர் தாக்கு கிறான். ஹெக்டரோடு சண்டையிடும் வாய்ப்பை, குலுக்குச் சீட்டு முறையில் பெறுகிறான் அஜாக்ஸ்.*

***வரிகள் 206 - 312***

*அஜாக்ஸூம் ஹெக்டரும் மோதுகின்றனர். வெற்றியோ தோல்வியோ ஏற்பட்டதாக, நிச்சயமாகச் சொல்ல முடியாத ஒரு நிலை இருவருக்குமே ஏற்படுகிறது.*

***வரிகள் 313 - 432***

*கிரேக்கர்கள் இறந்தவர்களைப் புதைத்துவிட வேண்டும் என்றும், புதைத்த இடத்தைச் சுற்றி ஒரு தற்காப்புச் சுவர் எழுப்ப வேண்டும் என்றும், ஓர் அகழி தோண்டி வைக்கவேண்டும்*

என்றும் நெஸ்டர் ஒரு திட்டம் வைக்கிறான் (23-வது நாள்). ட்ரோஜன்கள் கொடுத்த அமைதிக்கான திட்டம் நிராகரிக்கப் படுகிறது. ஆனால், இறந்தவர்களின் உடல்களை ஒன்றாகச் சேர்த்து எரிப்பதற்கான உடன்பாடு, இரு அணியினராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டு அவ்விதமே செய்கின்றனர்.

**வரிகள் 433 – 482**

அடுத்த நாள் காலை (24-வது நாள்) இறந்த தம் வீரர்களைப் புதைத்துவிட்டு, தற்காப்புச் சுவரையும் எழுப்பி, பள்ளமும் தோண்டுகின்றனர் கிரேக்கர்கள். அச்சுவரைப் பற்றிய பொாசைட னின் கவலைகளை ஜீயூஸ் அகற்றுகிறான். தேவையான பொருட்கள் கிரேக்கக் கப்பல்களில் கொண்டுவரப்படுகின்றன. இரவு முழுவதும் ஜீயூஸ் இடிமுழக்கம் செய்கிறான்.

# அஜாக்ஸ் - ஹெக்டர் சண்டை

இப்படிச் சொல்லிவிட்டு வாயில் கதவு வழியாக தன் சகோதரன் பாரிஸுடன் வெளியேறினான் புகழ்மிகு ஹெக்டர். இருவருக்குமே போர் செய்ய வேண்டும் என்ற ஆர்வமிருந்தது. மெருகூட்டப்பட்ட தேவதாரு மரத் துடுப்புகளை கடலில் போட்டுப் போட்டு உடல் சோர்ந்துபோன மாலுமிகளின் பிராத்தனையை அங்கீகரித்து, அவர்களுக்குப் பதில் சொல்லும் முகமாக கடவுள் தென்றலை அனுப்புவார். அதைப் போல, ட்ரோஜன்களின் பிரார்த்தனைக்குக் கிடைத்த பதிலாக, இரண்டு வீரர்களும் மறுபடி அவர்கள் முன்னால் தோன்றினர்.

எருதுக்கண்ணாள் சீமாட்டி ஃபிலமெடூஸா, தலைவன் அரிதூஸ் ஆகியோரின் மகனாகிய ஆர்னியில் வசித்த மெனெஸ்தியூஸை பாரிஸ் கொன்றான்.

ஈனியுஸ் என்பவனை, அவனது கழுத்தில், அவனது தலைக்கவசத்தின் வெண்கல ஓரத்துக்குக் கீழே, தனது கூர்மையான ஈட்டியால் குத்திக் கொன்றான் ஹெக்டர். இதற்கிடையில் லைசியத் தலைவனான க்ளாகஸ், யுத்த அணிவகுப்பின் குறுக்கே தன் ஈட்டியை எறிந்து, விரைந்து செல்லும் பெண்குதிரைகளின் பின்னால் இருந்து பாய்ந்த இஃபினூஸை, அவனது தோளில் அடித்தான். அவன் தேரிலிருந்து கீழே, தரையில் தாறுமாறாக விழுந்தான்.

போரின் உக்கிரத்தில், கிரேக்கர்களெல்லாம் இப்படிக் கொல்லப் படுவதைப் பார்த்தவுடன், பெண்கடவுளான சாம்பல் நிறக்

கண்ணாள் அதீனி, ஓங்கியுயர்ந்த ஒலிம்பஸ் மலையிலிருந்து பருந்து மாதிரி கீழே இறங்கி புனித இலியம் நகருக்கு வந்தாள். ஆனால் ட்ரோஜன்கள் வெற்றி பெறுவதை விரும்பிய அப்போலோ, இலியம் நகரின் பெர்காசஸ் கோட்டையிலிருந்து அவள் பறந்து வருவதைப் பார்த்துக்கொண்டிருந்தான். உடனே அவளை வழிமறிக்கப் புறப்பட்டான். கருவாலி மரத்தின் அருகில் அவர்கள் சந்தித்தனர். ஜீயூஸின் மகனும் தலைவனுமான அப்போலோ முதலில் பேசினான்:

'மகா ஜீயூஸின் மகளே! ஒலிம்பஸ் மலையிலிருந்து ஏன் இவ்வளவு ஆர்வமாக இறங்கி வருகிறாய்? அப்படி என்ன உயர்ந்த நோக்கம் உன் மனத்தில் இருக்கிறது? ட்ரோஜன்களின் அழிவு உன் மனத்தை எதுவுமே செய்யாததால், கிரேக்கர்களின் பக்கம் வெற்றியை மாற்றிவிடலாம் என்று நினைக்கிறாயா? ஆனால், நான் சொல்லப்போவதைக் கேட்கும் மனம் உனக்கு இருந்தால் கேள். அதைவிடச் சிறந்த திட்டம் ஒன்று என்னிடம் உள்ளது. இந்தச் சண்டையையும் ரத்தம் சிந்துதலையும் இப் போதைக்கு நாம் நிறுத்துவோம். இலியம் நகரில் தங்களது லட்சியம் நிறைவேறும்வரை அவர்கள் இன்னொரு நாள் போரிட்டுக்கொள்ளலாம். ஏனெனில் பெண் தெய்வங்களாகிய நீங்கள், எப்படியாவது இந்நகரை அழித்துத் தரைமட்டமாக்கி விடுவதென உங்கள் மனத்தில் முடிவு செய்திருக்கிறீர்கள்.'

பெண்கடவுளான சாம்பல் நிறக்கண்ணாள் அதீனி பதில் சொன்னாள்

'அப்படியே ஆகட்டும், வில்லேந்திய கடவுளே! ஒலிம்பஸ் மலையிலிருந்து இறங்கி போர்க்களத்துக்கு வந்து பார்த்தபோது, என் மனத்திலும் இதுதான் இருந்தது. ஆனால், இந்த வீரர்கள் போரிடுவதிலிருந்து அவர்களை நீ எப்படித் தடுக்கப் போகிறாய்?'

ஜீயூஸின் மகனும் தலைவனுமான அப்போலோ பதில் சொன்னான்:

'குதிரைகளை அடக்குவதில் வல்ல ஹெக்டரின் மனத்தில், போரிடும் எண்ணத்தை நாம் வலுவாக உண்டாக்க வேண்டும். கிரேக்கர்களில் யாராவது ஒருவன், தன்னோடு வாழ்வா சாவா என முடிவு செய்யும் ஒரு மல்யுத்தப் போட்டிக்கு, நேருக்குநேர் அவன்

வரமுடியுமா என்று சவால் விடுமாறு செய்ய வேண்டும். உடனே கிரேக்கர்கள் அனைவரும் போர் நிறுத்தம் செய்துவிட்டு, கடவுளையொத்த ஹெக்டரோடு பொருத ஒரு கிரேக்க வீரனை அனுப்புவார்கள்.'

அப்படி அவன் சொன்னதை, சாம்பல் நிறக்கண்ணாள் தேவதை அதீனியும் ஏற்றுக்கொண்டாள். இந்தக் கடவுளரின் மனத்தில் என்ன இருந்தது என்பதை, ப்ரியமின் மகனான ஹெலீனஸ் புரிந்து கொண்டான். உடனே அவன் கடவுளையொத்த ஹெக்டரிடம் சென்று கூறினான்!

'ப்ரியமின் மகனே, ஹெக்டர்! ஞானத்தில் ஜீயூஸுக்கு இணையானவனே! உனக்கு வழிகாட்ட, உன் சகோதரனை நீ அனுமதிக்க வேண்டும். முதலில் கிரேக்கர்களையும் ட்ரோஜன் களையும் கீழே உட்கார வை. பின் உன்னோடு நேருக்கு நேர் மல்யுத்தம் புரிய வருமாறு கிரேக்க வீரர்களில் தலைசிறந்தவ னுக்குச் சவால் விடு. நீ இறப்பதற்கும் உனது விதி முடிவதற்கு மான நேரம் இன்னும் வரவில்லை. நித்தியக் கடவுள்களிட மிருந்து பெற்ற இந்தத் தகவலை நான் உனக்குச் சொல்லு கிறேன்!'

அப்படி அவன் பேசியதைக் கேட்டதும் ஹெக்டருக்கு மிகவும் மகிழ்ச்சியாக இருந்தது. யாருமில்லாத இடத்துக்கு முன்னேறி வந்த அவன், தன் ஈட்டியின் மையப்பகுதியைத் தன் கையால் இறுக்கமாகப் பிடித்த வண்ணம், ட்ரோஜன்களின் அணி வகுப்பைப் பின்னுக்குத் தள்ளினான். அவர்களனைவரும் கீழே அமர்ந்தனர். அகமெம்னனும் தனது கிரேக்க அணியினரை அவ்விதமே அமரச் செய்தான். புயல் மேகங்களைச் செலுத்தும் கடவுளான ஜீயூஸுக்கு அர்ப்பணம் செய்யப்பட்ட கருவாலி மரத்தின் மீது, அதீனியும் வெள்ளி வில் கொண்ட கடவுளான அப்போலோவும் வல்லூறுகளின் உருவெடுத்து அமர்ந்து கொண்டனர். அணியணியாக அவ்வீரர்கள் தங்கள் கேடயங்கள், தலைக்கவசங்கள், ஈட்டிகளுடன் அலையென ஆர்ப்பரித்த வண்ணம் அவ்விதம் அமர்ந்திருந்த காட்சி, அவர்களுக்கு ஆனந்த மாயிருந்தது. மேற்குக் காற்று, கடல்மீது முதன்முறையாக வீசும்போது, அதன் தாக்கத்தில் எழும் அலைவட்டங்கள் பரவி, அதன் கீழே உள்ள கடலின் பகுதி இருளடைவதைப் போல, ட்ரோஜன் மற்றும் கிரேக்க வீரர்கள் அணியணியாக, கீழே சமவெளியில் அமர்ந்தனர்.

இரு படையினரையும் பார்த்து ஹெக்டர் சொன்னான்:

'கிரேக்க ட்ரோஜன் வீரர்களே! நான் ஒரு திட்டம் வைத்திருக் கிறேன். உயர் அரியணையில் வீற்றிருக்கும் ஜீயூஸ், நம்முடைய சபதங்களை இன்னும் நிறைவேற்றி வைக்கவில்லை. ஒன்று அழகிய கோபுரங்களைக் கொண்ட இந்த ட்ராய் நகரை நீங்கள் அழித்து வீழ்த்த வேண்டும். அல்லது எங்களிடம் நீங்கள் உங்கள் கப்பல்களுடன் தோற்று விழவேண்டும். அந்த நாள்வரை இரு பக்கத்துக்கும் வேதனைகளை ஜீயூஸ் வைத்துள்ளார்.

'கிரேக்கத்தின் தலைசிறந்த வீரர்கள், இப்பொழுது உங்கள் மத்தியில் இருக்கிறார்கள். கடவுளையொத்த ஹெக்டரோடு நேருக்கு நேர் மோத உங்களில் யார் தயாரோ, அவர் உங்களின் பிரதிநிதியாக எனக்கு எதிரில் வரட்டும். ஜீயூஸை சாட்சியாக வைத்து, நான் முன்வைக்கும் நிபந்தனைகள் இவைதான். தன் நீண்ட முனை கொண்ட ஈட்டியால் உங்கள் பக்க வீரன் என்னைக் கொல்வானாகில், என் கவச உடைகளைக் கழற்றி உங்களின் உட்குழிவான கப்பல்களுக்கு அவற்றை எடுத்துச் செல்லலாம். ஆனால் என் உடலை, ட்ரோஜன்களிடம் ஒப்படைத்துவிட வேண்டும். அப்போதுதான் அவர்களும் அவர்களது மனைவிமார் களும் அவ்வுடலை முறைப்படி எரிக்க முடியும். ஆனால் உங்கள் வீரனை நான் கொல்லும் புகழை அப்போலோ எனக்குக் கொடுப் பாரேயானால், நான் அவனது கவச உடைகளைக் களைந்து, அவற்றை புனித இலியம் நகரில் உள்ள அப்போலோவின் கோயிலுக்கு எடுத்து வந்து அங்கே அவற்றைத் தொங்க விடுவேன். ஆனால், முறையாகத் தளங்கள் அமைக்கப்பட்ட உங்கள் கப்பல்களுக்கு அவனது உடலை நான் அனுப்பிவிடு வேன். அப்போதுதான் நீள்முடி கொண்ட கிரேக்கர்கள் அவனை முறைப்படி புதைத்துவிட்டு அகன்ற ஹெல்லஸ்பாண்டின் அருகில் நினைவுக் கல்லறை எழுப்ப முடியும். அப்போதுதான் எதிர்காலத்தில், மதுவைப் போல கருத்த கடலில் துடுப்புகள் பல கொண்ட கப்பலில் வரும் பயணியால், 'முன்னாளில், புகழ்மிகு மாவீரன் ஹெக்டரால் சண்டையில் கொல்லப்பட்ட மாவீரனின் கல்லறை இது!' என்று சொல்ல முடியும். ஆமாம், அப்படித்தான் அவன் சொல்லுவான். எனது புகழுக்குச் சாவே கிடையாது!'

அப்படி அவன் பேசியதும் அனைவரும் பதில் ஏதும் பேசாமல் அமைதி காத்தனர். அவன் விட்ட சவாலை மறுப்பதற்கு, அவர்க ளுக்கு அவமானமாக இருந்தது. ஆனால் அதை ஏற்றுக்கொள்ள,

அவர்களுக்கு அச்சமாகவும் இருந்தது. கடைசியில், கனத்த மனத்துடன் எழுந்த மெனிலயஸ், அனைவரையும் கடுமையாகச் சாடினான்:

‘இதற்கெல்லாம் என்ன அர்த்தம் பெரும் பேச்சுப் பேசுபவர்களே? பெண்களே! உங்களை ஆண்களென்று நான் அழைக்க மாட்டேன். ஹெக்டரோடு சண்டையிட, ஒரு கிரேக்க வீரன் கூடவா இல்லை? அவ்வளவுதான், இதுதான் நமது இறுதி அவமானம். அப்படியானால் பரவாயில்லை, ஓர் ஆணுக்கு முன்னால் முதுகெலும்பும் நம்பிக்கையும் துணிச்சலும் இல்லாதவர்களே! இங்கேயே அமர்ந்து அழுகுங்கள் நீங்கள் எல்லாரும். அவனோடு, நானே ஆயுதமேந்திப் பொருதுகிறேன். யார் வெல்ல வேண்டும் என்பதை நமக்கு மேலே இருக்கின்ற கடவுள்கள் முடிவு செய்யட்டும்!’

இப்படிச் சொல்லிவிட்டு அவன் தன் சிறப்பு வாய்ந்த கவச உடையை அணிந்து கொண்டான். ஆனால் கிரேக்கத் தலைவர்கள் மட்டும் துள்ளிக் குதித்து உன்னைப் பிடித்து நிறுத்தவில்லையெனில், பரந்த ஆட்சி கொண்ட அத்ரியூஸின் மகனான அகமெம்னனும், தன் வலது கையால் உன்னைத் தடுத்து நிறுத்தி பேசவில்லையெனில், அதுவே உன் முடிவாகியிருக்கும் மெனிலயஸ். ஏனெனில், ஹெக்டர் உன்னைவிட, பலவகையில் சிறந்த வீரன்.

‘ஒலிம்பஸ் மலையில் உருவானவனே மெனிலயஸ் உனக்கென்ன பைத்தியமா? இவ்வளவு முட்டாள்தனமாக நடந்து கொள்ள வேண்டிய அவசியம் எதுவும் ஏற்படவில்லை. சங்கடமாகத்தான் இருக்கும். ஆனாலும் பரவாயில்லை, நீ போகவேண்டாம். ஒரு போட்டி நடைபெற வேண்டும் என்பதற்காக உன்னைவிடச் சிறந்த வீரனோடு சண்டையிட வேண்டாம். மற்ற அனைவருமே ஹெக்டரோடு பொருதுவதிலிருந்து பின்வாங்குகின்றனர். உன்னைவிடப் பலமடங்கு சிறந்த வீரனான அக்கிலிஸ்கூட, ஒரு ஆண்மகனுக்கு அழியாப் புகழ் சேர்க்கும் போர்க்களத்தில், ஹெக்டரோடு பொருதுவதற்குப் பயந்துள்ளான். எனவே, நீ திரும்பிப் போய் உனது வீரர்களோடு உட்கார்ந்து கொள். ஹெக்டருக்கு எதிராகச் சண்டையிட ஒரு சரியான வீரனை கிரேக்கர்கள் கண்டுபிடிப்பார்கள். ஹெக்டருக்கு வேண்டுமானால் அச்சமில்லாமல் இருக்கலாம். இதுவரை பெற்ற போரனுபவம் போதாமலிருக்கலாம். ஆனால் வாழ்வா சாவா

என்ற இந்தப் போராட்டத்திலிருந்து தப்பித்து, தன் உடலுக்கு ஓய்வு கொடுப்பதில் அவனுக்கும் நிச்சயமாக சந்தோஷம் இருக்கும்!'

ஆரோக்கியமான இந்தப் ஆலோசனையின் மூலம் தன் சகோதரனின் மனத்தை மாற்றினான் அகமெம்னன். கீழே இறங்கிச் செல்ல அவன் தூண்டப்பட்டான். அவனுடைய உதவியாளர்கள் மகிழ்வுடன் அவனது தோளிலிருந்து கவச உடைகளைக் கழற்றினர். அதன்பின் நெஸ்டர் எழுந்து கிரேக்க வீரர்களைப் பார்த்துப் பேசினான்:

'கிரேக்கத்தை அழவைக்க இந்த அவமானம் போதும்! துணிச்சலான ஆலோசகனும், மெர்மிடன்ஸின் பேச்சாளனுமான பீலியூஸோடு ஒருமுறை நான் தங்கினேன். அப்போது என் மூலமாக என் பெற்றோரைப் பற்றியும் ஒவ்வொரு கிரேக்கனின் முன்னோர்களைப் பற்றியும் கேட்டறிந்த அவன், மிகவும் மகிழ்ந்தான். அந்த வயதான குதிரைவீரனான பீலியூஸ், இப்பொழுது எவ்வளவு வருந்துவான்? இப்பொழுது ஹெக்டரின் முன்னால் எல்லா கிரேக்கர்களும் தலைகுனிந்து கூனிக்குறுகி நிற்பதை அவன் அறிவானாகில், தன் உடலை விட்டு உயிரை எடுத்து ஹயடிஸின் மண்டபங்களுக்கு இறக்கச் சொல்லி, கையேந்தி கடவுளரை வேண்டுவான் அவன்.

'ஓ! தந்தை ஜீயூஸ்! அதீனி! அப்போலோ! லார்டானஸ் ஓடை களின் பக்கம், ஃபீயாவின் மதில்களுக்குக் கீழே, கெலாடன் ஆற்றின் குறுக்கே, ஆர்கேடியாவிலிருந்து வந்திருந்த ஈட்டியெறி வீரர்களோடு பைலோஸின் வீரர்கள் பொருத வந்தபோது, நான் இளமையாக இருந்ததைப்போல் இப்பொழுதும் இருக்க முடியாதா? அவர்களில் தலைசிறந்த வீரனான எருதாலியன், எங்களிடம் சவால் விட்டான். தோற்றத்தில் ஒரு கடவுளைப் போல இருந்தான் அவன். தன் தோள்களில், அரிதூஸின் போருடையை அணிந்திருந்தான் அவன். மகா அரிதூஸுக்கு, அவனுடைய நாட்டவரும் அவனது ஒட்டியாணமணிந்த மனைவிகளும் 'தண்டாயுதன்' என்று ஒரு பெயர் வைத்திருந்தனர். காரணம், அவன் வில்லெடுத்தோ ஈட்டியெறிந்தோ போரிடுவ தில்லை. பகைவர்களின் அணிவகுப்பை நசுக்கிக் கொண்டு முன்னேற, அவன் ஓர் இரும்புக் கதையையே பயன்படுத்தினான். அரிதூஸை, லைசர்ஜஸ் கொன்றது அவனை மிஞ்சிய பலத்தால் அல்ல, புத்தியால். வீரத்தால் அல்ல, விவேகத்தால்.

அவனுடைய தண்டாயுதம் அவனைக் காப்பாற்ற முடியாத ஒரு குறுகிய வழியில், அவனை லைசர்ஜஸ் மாட்டிவிட்டுப் பிடித் தான். தன் கதாயுதத்தை அவன் பயன்படுத்துமுன், லைசர்ஜஸ் தன் ஈட்டியால் அவனது இடுப்பில் குத்தினான். தடாலென சாய்ந்து தரையில் விழுந்தான் அவன். பின் வெண்கலமணிந்த ஏரிஸ், அவனுக்குக் கொடுத்திருந்த் போருடையை அவனிடமிருந்து கழற்றினான் லைசர்ஜஸ். பின் போருக்குப் போனபோதெல்லாம் லைசர்ஜஸ் அந்த உடையையே அணிந்து சென்றான். 'பின் லைசர்ஜஸுக்கு வயதானபோது, தன் அரண்மனையில் இருந்த அந்த உடையை தன் உதவியாளனாக இருந்த எருதாலியனுக்குக் கொடுத்தான். அதனால்தான் எருதாலியன், அரிதூஸின் கவச உடையணிந்த வண்ணம் சவால் விட்டான்.

'அவன் விட்ட சவாலை எதிர்கொள்ள, யாரும் தயாராக இல்லை. எல்லாருமே பயங்கரமாகப் பயந்து போயிருந்தனர். ஆனால் அவனோடு பொருதும் அளவுக்கு நான் துணிச்சலாகவும், அவசரக்காரனாகவும் இருந்தேன். ஆனால் நான், அவர்களனை வரைவிடவும் இளைஞனாக இருந்தேன். அதனால், நான் அவனோடு சண்டையிட்டேன். அதீனி, எனக்குப் புகழைக் கொடுத்தாள். நான் கொன்ற வீரர்களிலேயே அவன்தான் மிகவும் உடலுறுதி வாய்ந்தவனாகவும் அதிக உயரமானவனாகவும் இருந்தான். இப்படியும் அப்படியும் உடலைப் பரப்பிக்கொண்டு மனித உருவில் இருந்த ஓர் அசுரன் போல அங்கே அவன் கிடந்தான்.

'அப்போதிருந்த இளமையும் ஆற்றலும் கெடாமல் அப்படியே இப்பொழுதும் எனக்கு இருக்குமானால், மின்னும் தலைக்கவசம் கொண்ட ஹெக்டருக்கான சண்டை விரைவில் தொடங்கும். என் கண்ணெதிரே இப்பொழுது நிற்பவர்களனைவருமே கிரேக்கர் களில் தலைசிறந்த வீரர்கள். ஆனாலும் ஒருவர்கூட, ஹெக்டரை எதிர்த்து நிற்கத் துணியவில்லை!'

இவ்விதமாக அந்தக் கிழவன் அவ்வீரர்களைப் பழித்துரைத் தான். அதன் பிறகு, அவ்வீரர்களிலிருந்து ஒன்பது பேர் எழுந்தார்கள். மக்கள் தலைவனான அகமெம்னன்தான் முதலில் எழுந்தான். அவனைத் தொடர்ந்து, டைடியூஸின் மகனான டயமீடிஸும், அவர்களைத் தொடர்ந்து இரண்டு அஜாக்ஸ்களும் போருடை தரித்தவர்களாக வீரமுடன் எழுந்து நின்றனர். அவர்களைத் தொடர்ந்து இடொமீனியஸ், கொன்று குவிக்கும்

போர்க்கடவுளான ஏரிஸுக்கு இணையான அவனுடைய உதவியாளன் மெரியோனிஸ், இயோமன்ஸின் சிதாந்த மகனான யீரிபைலஸ் ஆகியோர் எழுந்து வந்தனர். ஆன்ட்ரோமியானின் மகன் தோவாஸும் எழுந்தான். கடவுளையொத்த ஒடிஸியூஸும் எழுந்து நின்றான். கடவுளையொத்த ஹெக்டரை எதிர்த்துச் சண்டையிட இத்தனைபேரும் எழுந்து நின்றதும், அவர்களை நோக்கி கிரேக்கத் தேரோட்டியான நெஸ்டர் கூறினான்

'யாரைத் தேர்ந்தெடுப்பது என்று சீட்டுக் குலுக்கிப் போட்டு முடிவு செய்யுங்கள். அதில் ஜெயிப்பவனால் கிரேக்கர்களுக்கு மட்டுமல்ல, அவனுக்கும் ஒரு பெரிய நற்பயனுண்டு வாழ்வா சாவா எனும் இந்தச் சந்திப்பின் உக்கிரத்திலிருந்து அவன் உயிர் தப்புவானேயானால்!'

அப்படி அவன் சொன்னதும் ஒவ்வொருவரும் தமக்குரிய சீட்டை எழுதி அத்ரியூஸின் மகனாகிய அகமெம்னனின் தலைக்கவசத் தினுள் போட்டனர். அணியினர் அனைவரும் கையேந்தி கடவுளர்களிடம் பிரார்த்தித்தனர். வானத்தைப் பார்த்த வண்ணம் அனைவரும் ஒரே மனிதன் என்பதைப் போல ஒரு குரலில் கூறினர்.

'தந்தையே ஜீயூஸ்! இது அஜாக்ஸாகவோ, டயமீடிஸாகவோ, தங்க மைசினியின் தலைவனாகிய அகமெம்னனாகவோ இருக்கட்டும்!'.

அப்படி அவர்கள் சொன்னதும், கிரேக்கத் தேரோட்டியான நெஸ்டர், தொப்பியைக் குலுக்கினான். அவர்கள் நம்பி எதிர் பார்த்த அஜாக்ஸின் சீட்டு, வெளியே எகிறி விழுந்தது. இடது பக்கமிருந்து வலதாக அதை ஒரு தூதுவன் அவர்களைச் சுற்றி எடுத்துச் சென்றான். ஒவ்வொரு கிரேக்கத் தலைவனிடமும் அதைக் காட்டினான். தன் அடையாளம் இல்லாததைக் கண்ட ஒவ்வொருவரும் அது தமதில்லை எனக் கூறினர். கடைசியில் அதைக் குறியிட்டு அகமெம்னனின் தொப்பிக்குள் போட்ட புகழ்மிகு அஜாக்ஸிடம் அது வந்தது. அஜாக்ஸ் கையை நீட்டி னான். தூதுவன் அந்தச் சீட்டை அஜாக்ஸின் கையில் கொடுத் தான். அதில் தான் இட்ட அடையாளம் இருப்பதைக் கண்ட அஜாக்ஸ் சிலிர்த்துப் போனான். அதைத் தன் காலடியில் எறிந்துவிட்டுச் சொன்னான்:

'நண்பர்களே, சீட்டு எனது. எனக்கு சந்தோஷமாக உள்ளது. ஏனெனில், கடவுளையொத்த ஹெக்டரை நான் நிச்சயம் வெல்வேன் என்ற நம்பிக்கை இருக்கிறது. சண்டைக்காக நான் என்னைத் தயார் செய்து கொண்டிருக்கும்போது, க்ரோனஸின் மகனாகிய தலைவர் ஜீயூஸிடம் நீங்கள் பிரார்த்தியுங்கள். ஆனால், மௌனமாகச் செய்யுங்கள். உங்கள் பிரார்த்தனையை ட்ரோஜன்கள் கேட்டுவிடக் கூடாது. இல்லையெனில் சத்தமாகப் பிரார்த்தனை செய்யுங்கள்! நாம் யாருக்கும் அஞ்சவில்லை, அவர் யாராக இருந்தாலும் சரி. காட்டுமிராண்டித்தனமான வன்முறையாலோ, எனக்குத் திறமைக் குறைவாக இருப்பதாலோ யாராலும் என்னை ஓடவைக்க முடியாது. சலாமிஸில் பிறந்த நான், அங்கு ஒரு கற்றுக்குட்டியாகத்தான் வளர்க்கப்பட்டேன் என்பது எனக்கு ஆச்சரியம்தான்!'

அப்படி அவன் பேசியதும், வீரர்கள் க்ரோனஸின் மகனாகிய தலைவன் ஜீயூஸிடம் பிரார்த்தித்தனர். வானத்தைப் பார்த்த வண்ணம் அனைவரும் ஒரு மனிதன் என்பதைப் போல ஒரே குரலில் கூறினர்

'தந்தையே ஜீயூஸ்! அய்டா மலையில் இருந்து ஆட்சி செய்பவனே! மாபெரியோனே! எல்லாப் புகழுக்கும் உரியோனே! அஜாக்ஸின் பிரார்த்தனையை அங்கீகரிப்பாயாக! அவனுக்கு, ஒளிபொருந்திய வெற்றியைக் கொடுப்பாயாக! ஆனால் ஹெக்டரும் உன் மனத்துக்கு உகந்தவனாயின், அவனுக்கும் நல்லது செய்ய நீ நினைத்தால், யாருமே ஜெயிக்காமல் போகட்டும்.'

இப்படியாக அவர்கள் பிரார்த்தித்தனர். கண்கூசச் செய்யும் வெண்கலத்தில் கவச உடை தரித்து, சண்டைக்குத் தயாரானான் அஜாக்ஸ். எல்லா உடைகளையும் அணிந்துகொண்ட பிறகு, போர்க்கடவுள் ஏரிஸைப் போலக் கிளம்பினான் அவன். ஆன்மாவை அழிக்கும் சண்டையில் பங்குகொள்ள, ஆர்வம் மிகுந்த, ஜீயூஸால் ஒன்றுசேர்க்கப்பட்ட வீரர்களுடன் சேர்ந்து பொருத அவன் கிளம்பினான். அச்சமும் மரியாதையும் ஏற்படுத்தும் அஜாக்ஸ், கிரேக்கர்களுக்கு ஒரு பலமான கோபுரத்தைப் போன்ற அஜாக்ஸ் எழுந்து போரிடச் சென்றான். முறைப்பதுபோன்ற புன்னகையுடன், மிடுக்கு நடைபோட்டு, நீண்ட நிழல் தரும் தன் ஈட்டியைச் சுழற்றியவண்ணம்! அவனைப் பார்த்தபோது கிரேக்கர்கள் அளவற்ற மகிழ்ச்சியடைந்தனர். ஆனால், அவனைப் பார்த்து முழங்கால் நடுங்காத ஒரு ட்ரோஜன்

கூட இல்லை. ஹெக்டரின் இதயம்கூட வேகமாகத் துடிக்க ஆரம் பித்தது. ஆனால், திரும்பி ஓடி ஒளிந்து கொள்ள அது தருணமல்ல. காலம் கடந்துவிட்டிருந்தது. ஏனெனில், சண்டைபோட விரும்பியவனும் பொதுவான சவாலை விட்டவனும் அவனே!

ஒரு கோபுரத்தைப் போன்ற கேடயத்தைத் தூக்கிக்கொண்டு இப்பொழுது அஜாக்ஸ் நெருங்கி வந்தான். அது வெண்கலத் தாலும் ஏழு அடுக்குகள் கொண்ட பதப்படுத்தப்பட்ட எருதுத் தோலாலும் ஆக்கப்பட்டிருந்தது. ஹைலியில் வாழ்ந்த தோல் தொழில் விற்பன்னனான டைக்கியஸ், நன்கு கொழுத்த ஏழு காளைமாடுகளின் தோல்களிலிருந்து, மின்னும் அந்தக் கேடயத்தை அஜாக்ஸுக்காகச் செய்து கொடுத்திருந்தான். அதற்கு மேல் எட்டாவது அடுக்காக வெண்கலத்தை அவன் வைத்திருந்தான். அந்தக் கேடயத்தை தனக்கு முன்னால் பிடித்த வண்ணம் டிலமானின் மகனாகிய அஜாக்ஸ், ஹெக்டர் இருந்த இடம் வரை சென்று அவனை எதிர்த்துக் கூறினான்

'ஹெக்டர்! சிங்க மனம் கொண்ட வீரன் அக்கிலிஸ் இல்லா விட்டாலும், கிரேக்கர்கள் மத்தியில் எத்தகைய வீரர்கள் இருக்கிறார்கள் என்பதை இன்னும் கொஞ்ச நேரத்தில், ஒற்றைக்கு ஒற்றையென நடக்க இருக்கும் மல்யுத்தப் போட்டி யில் நீ புரிந்துகொள்ளப் போகிறாய். பறவையின் அலகைப் போன்ற தோற்றம் கொண்ட தன் கப்பல்களின் பக்கம், மக்கள் தலைவனும் அத்ரியூஸின் மகனுமாகிய அகமெம்னன்மீது கொண்ட சமாதானப்படுத்த முடியாத கோபத்துடன் அவன் இப்பொழுது இருக்கிறான். இருந்தாலும், உன்னை எதிர்க்கக் கூடிய வீரர்கள் எங்களில் ஏராளம் உண்டு. முதலில் நீ எறிந்து, சண்டையைத் தொடங்கு.'

மின்னும் தலைக்கவசம் கொண்ட ஹெக்டர் சொன்னான்:

'ஒலிம்பஸ் மலையில் பிறந்தவனே அஜாக்ஸ்! டிலமானின் மகனே! வீரர்களின் தலைவனே! போர்க்களத்தைப் பற்றி ஏதும் அறியாத பலவீனமான குழந்தையைப் போலவோ பெண்ணைப் போலவோ என்னை எண்ணி அச்சுறுத்த எண்ணாதே. போரிடு வது, கொல்வது அனைத்தையும் பற்றிய நெளிவு சுளிவுகளை நான் அறிவேன். இறுக்கமான எருதுத்தோல் கேடயத்தை எப்படிப் பயன்படுத்துவது என்றும், வலதாகவோ இடதாகவோ அதை எப்படிச் சுழற்றுவது என்றும் எனக்குத் தெரியும். தேர்

களின் குழப்பத்தில் உள்ளே புகுந்து நிர்மூலம் செய்வது எப்படி என்பதை நான் அறிவேன். நின்று சண்டையிடும்போது, போர்க்கடவுளின் நடன அசைவுகள் ஒவ்வொன்றையும் நான் அறிவேன். சரி, போதும். நீ எப்படிப்பட்ட வீரன் என்பதையும் அறிவேன் நான். அதனால் நீ, என்னைப் பார்க்காமல் இருக்கும்போது உன்னைத் தாக்க நான் விரும்பவில்லை. நான் செலுத்துவது மட்டும் உன்னைத் தாக்குமென்றால், நேருக்கு நேராக எறியவே நான் தயாராக உள்ளேன்.'

இப்படிச் சொல்லிவிட்டு, நீண்ட நிழல் கொண்ட தன் ஈட்டியைக் குறிபார்த்து எறிந்தான். அது அஞ்சத்தக்க ஏழு அடுக்கு கொண்ட அஜாக்ஸின் கேடயத்தை, அதன் வெளிப்பக்கமாக இருந்த எட்டாவது உலோக அடுக்கில் தாக்கியது. களைப் படையாத வெண்கலம் அதன் ஆறு அடுக்குகளுக்குக் கிழிந்து போனது. ஆனால், ஏழாவது அடுக்கால் அது தடுக்கப்பட்டது. பதிலுக்கு, ஒலிம்பஸ் மலையில் பிறந்த அஜாக்ஸ், தன் நீண்ட நிழல் கொண்ட ஈட்டியை எறிந்தான். ஹெக்டரின் உருண்டை யான கேடயத்தை அது தாக்கியது.

கனமான அந்த ஆயுதம், மின்னும் அந்தக் கேடயத்தைக் கிழித்துக்கொண்டு சென்றது. அலங்கரிக்கப்பட்ட உடல் கவசத்தைத் துளைத்துக்கொண்டு சென்று, ஹெக்டரின் இடுப்பு அங்கியைக் கிழித்தது. ஆனால் ஹெக்டர் சரியான தருணத்தில் நகர்ந்து கொண்டதால், கறுப்பு இறப்பிலிருந்து அவன் தப்பித்தான்.

தம் கேடயங்களிலிருந்து நீண்ட ஈட்டிகளை உருவிய அந்த இருவரும், மாமிசம் உண்ணும் சிங்கங்களை அல்லது வெறுக்க முடியாத பலம் கொண்ட காட்டுப்பன்றிகளைப் போல ஒருவர் மீது ஒருவர் பாய்ந்தனர். தனது ஈட்டியால், அஜாக்ஸின் கேடயத் தின் மத்தியில் தாக்கினான் ஹெக்டர்.

ஆனால், அது கேடயத்தை உடைத்துக்கொண்டு உள்ளே செல்ல வில்லை. ஈட்டியின் முனைதான் பின்னோக்கி வளைந்தது. அதன்பின் அஜாக்ஸ் பாய்ந்து வந்து ஹெக்டரின் கேடயத்தைக் குத்தினான். அஜாக்ஸின் ஈட்டி மிகத்தெளிவாக உள்ளே சென்றது. ஹெக்டர் நின்ற இடத்திலேயே நிற்குமாறு செய்தது அது. அவனது கழுத்தை உராய்ந்துகொண்டு சென்றது அது. கறுப்பு ரத்தம் பீறிட்டு வந்தது வெளியே.

ஆனாலும் மின்னும் தலைக்கவசம் கொண்ட ஹெக்டர், சண்டையிடுவதை நிறுத்திவிடவில்லை. அவன் பின்னால் சென்று, தரையில் கிடந்த கூரிய முனைகள் கொண்ட ஒரு பெரிய கரும்பாறையை எடுத்து, அஜாக்ஸின் ஏழு அடுக்கு கொண்ட அஞ்சத்தக்க கேடயத்தை நோக்கி எறிந்தான். கேடயத்தின் மத்தியில் புடைத்துக்கொண்டிருந்த உலோகக் குமிழ்ப் பகுதியை அது தாக்கியது. அதன் வெண்கலப் பகுதியிலிருந்து 'நங்'கென்று மணியோசைபோலக் கிளம்பியது. ஆனால் அஜாக்ஸோ, அதைவிடப் பெரிய பாறையொன்றை எடுத்துச் சுழற்றி, தன் முழுப் பலத்தையும் திரட்டி ஹெக்டர்மீது அதை வீசினான். அந்த வட்டவடிவப் பாறை, ஹெக்டரின் கேடயத்தை இடிந்து விழச்செய்தது. நின்ற இடத்திலிருந்து ஹெக்டர் தள்ளிப்போய் விழுந்தான். தன் கேடயத்தின் கீழ் மாட்டிக்கொண்ட ஹெக்டர், குப்புற வீழ்ந்து செயலற்றுக் கிடந்தான். ஆனால் அப்போலோ, உடனே அவனை எழுந்து நிற்கச் செய்தான்.

இப்பொழுது அவர்கள் ஒருவரோடு ஒருவர் மீண்டும் பொருதி, தங்கள் வாட்களால் ஒருவரையொருவர் வெட்டிச் சிதைத்திருப்பர்
ஜீயூஸுக்கும் மனிதர்களுக்கும் தூதுவர்களாக இருந்த, கிரேக்கர்களின் பக்கமிருந்து டல்திபியஸ், ட்ரோஜன்களின் பக்கமிருந்து இடாயூஸ் ஆகிய இரு அறிவார்ந்த அறிவிப்பாளர் கள் மட்டும் வராமல் இருந்திருந்தால்! போட்டியாளர்கள் இருவருக்கும் மத்தியில் அவர்கள் தங்கள் செங்கோல்களை உயர்த்திக் காட்டினார்கள். ஞானம் நிறைந்த தூதுவனாகிய இடாயூஸ் தன் மனத்தில் உள்ளதைக் கூறினான்.

'அன்பான மகன்களே! சண்டையிடுவதை நிறுத்துங்கள். மேகங் களைக் கூட்டும் ஜீயூஸுக்கு நீங்கள் இருவருமே உகந்தவர்கள். நீங்கள் இருவருமே சிறந்த ஈட்டியெறி வீரர்கள். எங்களனைவருக் குமே இது தெரியும். அத்தோடு, இப்பொழுது இருண்டுவிட்டது. இந்த இருளை கணக்கில் எடுத்துக்கொண்டு சண்டையை நிறுத்துவது அறிவார்ந்த செயலாகும்.

டிலமானின் மகனாகிய அஜாக்ஸ் பதில் சொன்னான்:

'இடாயூஸ்! சண்டையை நிறுத்தச் சொல்லி ஹெக்டரிடம் சொல்லுங்கள். முதலில் சவால் விட்டு கிரேக்கர்களின் சிறந்த வீரர்களை சண்டைக்கு அழைத்தது அவன் விருப்பம்தான். எனவே, அவனே முதலில் நிறுத்தட்டும். அவன் செய்வதுபோல நானும் செய்வேன்!'

மின்னும் தலைக்கவசம் கொண்ட மகா ஹெக்டர் சொன்னான்:

'அஜாக்ஸ்! கடவுள் உனக்கு உருவத்தையும், பலத்தையும், திறமையையும் கொடுத்துள்ளார். உனது பக்கத்தில் நீதான் தலைசிறந்த ஈட்டியெறி வீரன். இன்றைய சண்டையை நாம் ஒரு முடிவுக்குக் கொண்டு வருவோம். இன்னொரு நேரத்தில் நாம் சண்டையிட்டுக் கொள்ளலாம். நமக்கு மேலுள்ள சக்திகள் நமக்கு மத்தியில் என்ன ஆகவேண்டும், நம்மில் யார் வெல்ல வேண்டும் என்பது பற்றி ஒரு முடிவுக்கு வரட்டும். அதோடு, கிட்டத்தட்ட இப்போதே இரவாகிவிட்டது. அதைக் கணக்கில் எடுத்துக்கொள்வது அறிவார்ந்த செயலாகும்.

'இதனால் கப்பல்களில் இருக்கும் கிரேக்கர்களுக்கும், உனது நண்பர்களுக்கும், உறவினர்களுக்கும் நீ சந்தோஷத்தைக் கொண்டு போவாய். எனக்கும், தலைவன் ப்ரியமின் நகரில் ட்ரோஜன் களிடமிருந்தும், நடந்து செல்லும்போது பின்னால் வரும் பாவாடைகளணிந்த பெண்களிடமும் நல்ல வரவேற்பு கிடைக் கும். பிரார்த்தனை செய்யும் புனிதக் கூட்டத்தில் என் பெயரில் அவர்கள் அர்ச்சனை செய்வார்கள். முதலில் நாம் இருவரும் கண்ணியமிகு பரிசுப் பொருட்களை பரிமாறிக்கொள்வோம். அப்போதுதான் ட்ரோஜன்களும் கிரேக்கர்களும், இந்த இருவரும் ஆன்மா அழிக்கும் சண்டையில் ஈடுபட்டார்கள். ஆனால் சமாதான மாகி நண்பர்களாகப் பிரிகிறார்கள்!' என்று சொல்வார்கள்.'

இந்த வார்த்தைகளுடன் ஹெக்டர் தனது வெள்ளிக் குடையாணி அடிக்கப்பட்ட வாளை அதன் வாளுறையோடும் வாரோடும் கொடுத்தான். அஜாக்ஸ், தனது மின்னும் கருஞ்சிவப்புக் கச்சையை ஹெக்டருக்குக் கொடுத்தான்.

இருவரும் பிரிந்தனர். கிரேக்கப் படைகளிடம் அஜாக்ஸ் சென் றான். ட்ரோஜன் வீரர்களின் பக்கம் ஹெக்டர் சென்று சேர்ந்தான். அஜாக்ஸின் வெல்லமுடியாத தாக்குதலிலிருந்து தப்பித்து தம் தலைவன் பாதுகாப்பாகவும் நல்ல நிலையிலும் திரும்பி வந்திருப்பதைக் கண்ட வீரர்கள் பெரும் உவகைஅடைந்தனர். நகருக்குள், ஹெக்டரை அவர்கள் அழைத்துச் சென்றனர், அவன் உயிரோடு திரும்பி வந்திருப்பதை நம்ப முடியாதவர்களாக! அதே சமயம் அந்தப் பக்கம், அஜாக்ஸின் வெற்றியால் செருக்குற்ற கிரேக்க வீரர்கள், அவனை கடவுளையொத்த அகமெம்னனிடம் அகமகிழ்ந்து அழைத்துச் சென்றனர்.

அகமெம்னனின் குடிலை அவர்கள் அடைந்தபோது, மக்கள் தலைவனாகிய அகமெம்னன், ஐந்து வயது காளையை அவர்கள் சார்பாக அறுத்து க்ரோனஸின் மகனாகிய ஜீயூஸுக்குப் பலி கொடுத்தான். அதை உரித்து வெட்டி அவர்கள் தயார் செய்தனர். திறமையாக அதை அவர்கள் சிறுசிறு துண்டுகளாக வெட்டி, குச்சிகளுக்குள் செருகி கவனமாக வறுத்தெடுத்தனர். வேலை முடிந்ததும், உணவைத் தயார் செய்து விருந்துண்டனர். நியாய மான பங்கு கிடைக்காமல் யாருமே செல்லவில்லை. அகண்ட ஆட்சி கொண்ட அத்ரியூஸின் மகனான அகமெம்னன், எருதின் பின் பகுதி முழுவதையும் கொடுத்து அஜாக்ஸைக் கௌரவித்தான்.

அவர்களது பசியும் தாகமும் அடங்கிய பிறகு, கிழவன் நெஸ்டர் அவர்கள் மத்தியில் ஒரு திட்டத்தை முன்வைத்தான். அவனது ஞானம் ஏற்கெனவே பலமுறை கடந்த காலத்தில் நிரூபிக்கப் பட்ட ஒன்றாகும். அவன் எழுந்து நின்று பேசியபோது அவர் களது நலனையே அவன் மனத்தில் வைத்திருந்தான்.

‘அகமெம்னனே! மற்ற கிரேக்கத் தலைவர்களே! கிரேக்கப் படைக்கு பலமான இழப்புகள் ஏற்பட்டிருக்கின்றன. இரக்கமற்ற போர்க்கடவுள், ஸ்கமாண்டரின் கரைகளை, இறந்த நம் வீரர்களின் ரத்தத்தினால் கறுப்பாக்கிவிட்டார். அவர்களின் ஆத்மாக்கள் ஹயடிஸுக்குச் சென்றுவிட்டன.

‘எனவே, விடியல் நேரத்தில் நீங்கள் ஓர் அமைதி ஒப்பந்தத்தை அறிவிக்க வேண்டும். பின் நாம் எல்லாருமாகச் சேர்ந்து, இறந்த நம் வீரர்களின் உடல்களை, காளைகள், கழுதைகள் ஆகிய வற்றோடு இங்கே கொண்டுவந்து, நமது கப்பல்களிலிருந்து மிகவும் தூரமாக இல்லாதவாறு பார்த்து எரிக்க வேண்டும். அப்போதுதான் நம் ஒவ்வொருவருக்கும், இறந்தவனின் எலும்பு கள் கிடைக்கும். நாம் அவற்றை, நம் தந்தை நாட்டுக்குத் திரும்பும் போது எடுத்துச் சென்று, இறந்தவர்களின் குழந்தைகள் வசம் ஒப்படைக்கலாம். பின் சமவெளியில் சிதையின் மீது ஒரே கல்லறை போன்ற தோற்றம் கொண்ட ஒரு மேட்டை நாம் நமது சமுதாயத்தவருக்காக ஏற்படுத்தலாம்.

‘பின் அதற்கெதிரில் உயர்ந்த கோபுரங்களைக் கொண்ட சுவர்களை எழுப்ப வேண்டும். நம்மையும் நமது கப்பல்களையும் பாதுகாப்பதற்கு, நமது தேர்கள் சென்று வருவதற்கு வசதியாக சரியாகப் பொருத்தப்பட்ட வாயில் கதவுகளையும் அமைக்க

வேண்டும். அதற்கு வெளியில், நமது மதில்களைச் சுற்றி ஆழமான அகழிகளைத் தோண்டிவைக்க வேண்டும். அப்போது தான் நம் எதிரிகளின் ரதங்களும் காலாட்படையும் உள்ளே நுழைய முடியாது. என்றாவது ஒரு நாள், திமிர் பிடித்த ட்ரோஜன் கள் நம்மீது வன்முறையைப் பிரயோகிக்க நினைத்தாலும் முடியாதபடி செய்யலாம்!'

அப்படி அவன் சொன்னதை அனைவரும் ஏற்றுக்கொண்டனர்.

இதற்கிடையில், இலியம் நகரின் உச்சியில், ப்ரியமின் அரண் மனையில், பயந்தும் குழம்பியும் போயிருந்த ட்ரோஜன்கள் கூடினர். அறிவார்ந்த ஆன்ட்டினார் முதலில் பேசினான்:

'ட்ரோஜன்களே! டார்டானியர்களே! மற்றும் ஆதரவாளர்களே! நான் வைத்திருக்கும் திட்டத்தினைக் கேளுங்கள். இதுவரை பட்டதெல்லாம் போதும். அகமெம்னனிடமும் மெனிலய ஸிடமும் ஹெலனையும் அவளோடு வந்த சொத்துக்களையும் திருப்பிக் கொடுத்துவிடுவோம். தொடர்ந்து சண்டையிடுவதன் மூலம், நாம் கொடுத்த வாக்கை நாமே மீறியவர்களாகிறோம். நான் சொல்கிறபடி செய்யாவிட்டால், இதனால் எந்த நன்மையும் ஏற்படப் போவதாக எனக்குத் தோன்றவில்லை!'

சொல்லிவிட்டு ஆன்ட்டினார் அமர்ந்தான். கடவுளை ஒத்தவனும் அழகிய கூந்தல் கொண்ட ஹெலனின் கணவனுமாகிய பாரிஸ் எழுந்து அவசரமாகச் சொன்னான்:

'ஆன்ட்டினார்! உன்னிடமிருந்து இப்படி ஒரு பேச்சை எதிர்பார்க்கவில்லை. வேறு ஏதாவது இன்னும் சிறந்த திட்டம் ஒன்றை நீ யோசித்திருக்கலாம் என்பது உனக்கே தெரியும். ஆனால் நீ மனப்பூர்வமாகத்தான் பேசினாய் என்றால், கடவுள்கள்தான் உன் மூளையைக் குழப்பியிருக்க வேண்டும்.

'குதிரைகளை அடக்கும் ட்ரோஜன்களிடம், இப்பொழுது நான் என் கருத்தைச் சொல்வேன். என் மனைவியை விட்டுக்கொடுக்க மாட்டேன் என்பதை வெளிப்படையாகவே நான் இங்கே அறிவிக்கிறேன். ஆனால் அவளோடு கிரேக்கத்திலிருந்து கொண்டுவந்த பொருள்களையெல்லாம் திருப்பிக் கொடுக்க நான் ஒப்புக்கொள்கிறேன். அதோடு நானும் என்னிடமிருக்கும் பொருள்களையும் சேர்த்தே கொடுக்கிறேன்!'

- இப்படிப் பேசிவிட்டு பாரிஸ் அமர்ந்தான். ஞானத்தில் கடவுளர்களையொத்த டார்டானிய ப்ரியம் எழுந்து பேசினான்: அவன் பேசியபோது அவர்களது நலனையே அவன் மனத்தில் வைத்திருந்தான்.

'ட்ரோஜன்களே! டார்டானியர்களே! மற்றும் ஆதரவாளர்களே! இந்தச் சூழ்நிலையில் வேறு வழியின்றி நான் சொல்ல வருவதைக் கேளுங்கள். இப்போதைக்கு, உங்கள் இரவு உணவை ஊருக்குள் போய் வழக்கம்போல உண்ணுங்கள். காவலர்களை நிறுத்தவும் விழிப்போடு இருக்கவும் மறந்துவிட வேண்டாம். இதை ஒவ்வொருவருக்கும் சொல்கிறேன். விடியல் நேரத்தில் உட்குழிந்த கிரேக்கக் கப்பல்களுக்குச் சென்று, போரைத் தொடங்கி வைத்த பாரிஸ் சொன்ன கருத்தை அகமெம்னனிடமும் மெனிலயஸிடமும் இடாயூஸ் சொல்லட்டும். அத்தோடு, நாம் நமது இறந்த வீரர்களை எரிக்கும்வரை பிரச்னை ஏதும் செய்யாமல் கிரேக்கர்கள் இருக்க முடியுமா என்றும் இடாயூஸ் கேட்டுவரட்டும். இன்னொரு நேரத்தில் நாம் சண்டையிட்டுக்கொள்ளலாம். நமக்கு மத்தியில் என்ன ஆகவேண்டும், நம்மில் யார் வெல்ல வேண்டும் என்பது பற்றி நமக்கு மேலுள்ள சக்திகள் ஒரு முடிவுக்கு வரட்டும்!'

அவன் சொன்னதைக் கேட்ட எல்லா ட்ரோஜன்களும் ஒப்புக் கொண்டார்கள். தங்களது இரவுச் சாப்பாட்டை அவரவர் இடத்தில் உண்டனர். விடியல் நேரத்தில், உட்குழிந்த கிரேக்கர்களின் கப்பல்களுக்கு இடாயூஸ் சென்றான். உறுதியான அகமெம்னனின் கப்பலுக்கு அருகில், ஏரிஸின் உதவியாளர்களான கிரேக்கர்கள் கூடியிருந்ததைப் பார்த்தான். அறிவிப்பாளனான அவன் அவர்களுக்கு மத்தியில் நின்று தெளிவாகச் சொன்னான்:

'அகமெம்னனே! மற்றும் இங்குள்ள கிரேக்கத் தலைவர்களே! இந்தச் சண்டையைத் தொடங்கிய பாரிஸிடமிருந்து ஒரு திட்டத்தை உங்களுக்கு அறிவிக்கும்படி, ப்ரியமும் மற்ற உயர்ந்த கண்ணியவான்களாக ட்ரோஜன்களும் என்னை இங்கே அனுப்பியுள்ளார்கள். உங்களுக்கு உடன்பாடாக இருக்குமானால், தன் உட்குழிவான கப்பல்களில் ட்ராய் நகருக்கு அவன் கொண்டுவந்த எல்லாச் சொத்துகளையும் தன் சொந்தப் பரிசுப் பொருள்களோடு சேர்த்து, திருப்பிக் கொடுத்துவிட விருப்பம் உள்ளவனாக இருக்கிறான். ஆனால் புகழ்மிகு மெனிலயஸின்

மனைவியை, விட்டுத்தர முடியாதென அவன் கூறுகிறான். ஆனால், அவளையும் விட்டுக் கொடுத்துவிடும்படி ட்ரோஜன்கள் அவனைக் கேட்டுக் கொண்டார்கள் என்பதை நான் உங்களுக்கு உறுதியாகச் சொல்ல முடியும். அத்தோடு நாங்கள் எங்கள் இறந்தவர்களை எரிக்கும்வரை, நீங்கள் போர் நிறுத்தம் செய்ய முடியுமா என்றும் உங்களைக் கேட்டு வரும்படி நான் உத்தரவிடப் பட்டுள்ளேன். இன்னொரு நேரத்தில் நாம் சண்டையிட்டுக் கொள்ளலாம். நமக்கு மத்தியில் என்ன ஆகவேண்டும், நம்மில் யார் வெல்ல வேண்டும் என்பது பற்றி நமக்கு மேலுள்ள சக்திகள் ஒரு முடிவுக்கு வரட்டும்!'

அவன் அப்படிச் சொன்னதும் அனைவரும் அமைதி காத்தனர். கடைசியில், போர் முழக்கத் தலைவனான டயமீடிஸ் பேசினான்:

'இவ்வளவு தூரம் வந்த பிறகு, பொருட்களை திருப்பித் தருகின்ற பாரிஸின் திட்டத்தையோ அல்லது ஹெலனையே திருப்பித் தருவதாக இருந்தாலும், யாரும் ஒப்புக்கொள்ள வேண்டாம். ட்ரோஜன்களின் விதி முத்திரையிடப்பட்டுவிட்டது என்பது ஒரு முட்டாளுக்குக்கூட இப்பொழுது புரிந்திருக்கும்!'

குதிரைகளை அடக்கும் வீரனாகிய டயமீடிஸ் பேசிய அவ்வார்த்தைகளைக் கேட்டு மகிழ்ந்த கிரேக்கர்கள் அனைவரும், ஒருமனதாக அக்கருத்தை ஏற்றுக்கொண்டு ஆர்ப்பரித்தனர். தலைவன் அகமெம்னன் இடாயூஸைப் பார்த்துச் சொன்னான்:

'இடாயூஸ்! கிரேக்கர்களின் கருத்தென்ன என்பதை நீயே கேட்டாய். அவர்களது பதில் அதுதான். அதை ஒப்புக்கொள்வதில் நான் மகிழ்கிறேன். உடல்களை எரிப்பதென்பது தனி விஷயம். அதற்கு நான் எந்த மறுப்பும் சொல்லப் போவதில்லை. மனிதர்கள் இறந்து போகும்போது, தீயில் விரைவாகக் கழுவாய் தேடமுடியாது. போர் நிறுத்தத்துக்குச் சம்மதம். ஹீராவின் கணவனாகிய இடிமுழக்க ஜீயூஸ் இதற்கு சாட்சியாய் இருக்கட்டும்!'

இவ்விதமாகப் பேசி தனது செங்கோலை கடவுளர்களை நோக்கி உயர்த்திய வண்ணம் தன் வாக்கை முத்திரையிட்டான் அகமெம்னன். உடனே இடாயூஸ் அங்கிருந்து அகன்று, அவனது வருகையை எதிர்நோக்கி ட்ரோஜன்களும் டார்டானியர்களும்

அமர்ந்திருந்த புனித இலியம் நகரை நோக்கிச் சென்றான். அங்கு சென்றதும் அவர்கள் மத்தியில் நின்று, கேட்டு வந்ததைச் சொன்னான்.

அதன்பின் அவர்கள் இறந்தவர்களது உடல்களைக் கொண்டு வருதல், எரிப்பதற்கு விறகு கொண்டு வருதல் ஆகிய இரட்டை வேலைக்குத் தயாரானார்கள். அந்தப் பக்கத்தில், ஒழுங்கான அடுக்குக் கட்டமைப்பு கொண்ட தம் கப்பல்களிலிருந்து, இதே வேலையைச் செய்ய கிரேக்கர்களும் கிளம்பினார்கள்.

ட்ரோஜன்களும் கிரேக்கர்களும் சந்தித்தபோது, ஆழ்கடலின் அமைதியான அலைகளிலிருந்து விண்ணேறிய சூரியன் தன் முதல் கிரணங்களால் நிலங்களை ஒளிர்வித்தது. இருந்தும், கட்டிதட்டிப்போன ரத்தத்தை, தண்ணீரால் கழுவி சுத்தப்படுத்தும் முன், தனிப்பட்ட உடல்களை அடையாளம் கண்டுகொள்வதில் அவர்களுக்குச் சிரமமிருந்தது. அவர்கள் உடல்களை தேர்களில் ஏற்றியபோது, சூடான கண்ணீர் வழிந்தோடியது. ட்ரோஜன் களைப் பொருத்தவரை, உரக்க ஓலமிட்டு அழுவதை ப்ரியம் தடைசெய்திருந்தான். எனவே, கனமான மனத்துடன், தம் வீரர்களின் உடல்களை அவர்கள் சிதையில் அமைதியாக இட்டனர். எரித்து முடித்து விட்டு புனித இலியம் நகருக்குத் திரும்பினர். அதேபோல, கிரேக்கர்களும் தம் வீரர்களின் உடல்களை எரித்துவிட்டு உட்குழிவான தம் கப்பல்களுக்குத் திரும்பினர்.

மறுநாள் விடிவதற்கு முன், விடியலின் ஒளிபற்றிய குறிப்பை இரவு கொடுத்தபோது, சிதையின் பக்கமாக கிரேக்கர்களில் சிலர் கூடினர். சிதையின் மீது, சமுதாயக் கல்லறை மேட்டை உருவாக்கினர். அதைச் சுற்றி உயர்ந்த கோபுரங்களைக் கொண்ட மதில்களை எழுப்பினர். தேர்கள் வசதியாகச் செல்லும் விதமாக, தங்களையும் தம் கப்பல்களையும் காப்பாற்றிக்கொள்ளுமாறு, ஒழுங்காகப் பொருத்தப்பட்ட வாயில் கதவுகளை அமைத்தனர். சுவருக்கு வெளியே, அதைச் சுற்றி வருமாறு ஆழமான அகண்ட அகழியைத் தோண்டி வைத்தனர். அதைச் சுற்றி கழிகளை நட்டனர்.

இப்படியாக நீண்ட முடிகொண்ட கிரேக்கர்கள் பணி புரிந்தனர். மின்னலின் கடவுளான ஜீயூஸோடு அமர்ந்திருந்த கடவுளர் களனைவரும், வெண்கலக் கவசமணிந்த கிரேக்கர்களின் இந்த

மாபெரும் பணியை வியந்து பார்த்துக் கொண்டிருந்தனர். நில நடுக்கம் ஏற்படுத்துபவனான பொசைடன் தன் மனத்தில் உள்ளதைப் பேசினான்:

'தந்தையே ஜீயூஸ்! கடவுள்களாகிய நம்மிடம், தன் திட்டங்கள் என்ன என்று அறிவிக்கக்கூடிய ஒரு மனிதன்கூட அகில உலகிலும் இல்லையா? கடவுள்களுக்கு மனம் மகிழும் பலிகளைக் கொடுக்காமல் கிரேக்கர்கள் தம் கப்பல்களைச் சுற்றி, மதிலையும் அதைச் சுற்றி அகழியையும் தோண்டி வைத்துள்ளனர் என்பதை நீ பார்க்கவில்லையா? விடியல் நீளும்வரை அதன் புகழ் பரவும். வீரன் லாமிடானுக்காக, நானும் ஃபீபஸ் அப்போலோவும் கஷ்டப்பட்டுக் கட்டிய சுவர் மறக்கப்படும்.'

மேகங்களைச் செலுத்தும் ஜீயூஸ் கோபமாகக் கூறினான்:

'சக்திமிகு நிலநடுக்கக்காரனே! நீ என்ன பேசுகிறாய்? உன்னைவிட உறுதியும் பிடிவாதமும் குறைந்த கடவுள்கள் இதைப்பற்றிக் கவலைப்படட்டும். நீ கவலைப்படாதே! உனது புகழ் விடியல் நீளும் வரை பரவும். கிரேக்கர்கள் தம் தந்தையர் நாட்டுக்குத் திரும்பிச் சென்றவுடன், நீ உனது வேலையை ஆரம்பிக்கலாம். சுவரை உடைக்கலாம், உடைந்த துண்டுகளை கடலில் போடலாம், நீண்ட கடற்கரையை மறுபடியும் மணலால் நிறைக்கலாம், அந்த மாபெரும் மதிலை அழிக்கலாம்.'

கடவுளர்கள் இவ்விதம் பேசிக்கொண்டிருந்தபோது, சூரியன் அஸ்தமித்தது. கிரேக்கர்கள் தமது வேலைகளை முடித்தனர். சில எருதுகளை, தம் பாசறைகளில் வைத்து அறுத்து தம் இரவு உணவை முடித்துக்கொண்டனர்.

லெம்னோஸிலிருந்து நிறையக் கப்பல்கள் மதுவை ஏற்றிக் கொண்டு வந்து சேர்ந்தன. ஹிப்சிப்பைலிக்கும், மக்கள் மேய்ப்பனாகிய ஜேசனுக்கும் பிறந்த ஈனியூஸிடமிருந்து அவை வந்தன. அகமெம்னனுக்கும் மெனிலயஸுக்கும் சிறப்புப் பரிசாக, அவன் இனிய மதுவை ஆயிரம் என்ற அளவில் அனுப்பியிருந்தான். நீண்ட முடிகொண்ட கிரேக்கர்களுக்கு இப்பொழுது தம் கப்பல்களிலிருந்து இனிய மது கிடைத்தது. சிலர் வெண்கலத்தையும், சிலர் மின்னும் இரும்பையும், இன்னும் சிலர் கால்நடைகளில் தோலையோ உயிருள்ள கால்நடைகளையோ அல்லது போர்க் கைதிகளையோ கொடுத்து, பதிலுக்கு மதுவைப் பெற்றுக்

கொண்டனர். ஒரு சுகபோகமான விருந்தை அவர்கள் தயார் செய்தனர். இரவு முழுவதும் கிரேக்கர்கள் விருந்துண்டு களித்தனர். நகரங்களில், ட்ரோஜன்களும் அவர்களது ஆதர வாளர்களும்கூட அப்படியேதான் செய்துகொண்டிருந்தனர்.

ஆனால் கலந்தாலோசிப்பதில் ஞானவானாகிய ஜீயூஸ், அவர்களுக்கெதிராக சதித்திட்டம் தீட்டிய வண்ணம் அபச குனமாய் இரவு முழுவதும் இடிமுழக்கம் செய்துகொண்டிருந் தான். அவர்கள் அச்சத்தில் வெளுத்துப் போயினர். தம் கோப்பைகளிலிருந்து மதுவைக் கீழே கொட்டினர். எல்லாம் வல்ல க்ரோனஸின் மகனுக்கு முதலில் படைக்காமல், மது அருந்துகின்ற துணிச்சல் யாருக்கும் வரவில்லை. அதன்பின் அவர்கள் படுத்து, உறக்கம் என்ற பரிசை ஏற்றுக்கொண்டனர்.

# ஹெக்டரின் வெற்றி!

***கதைச் சுருக்கம்***

***வரிகள் 01 – 52***

*25-வது நாள். ஹெக்டர் அஜாக்ஸுக்கிடையேயான சண்டையின் இரண்டாவது நாள். யாருக்கும் உதவி செய்ய வேண்டாமென கடவுளர்களை எச்சரித்துவிட்டு, அய்டா மலையிலிருந்து போகிறான் ஜீயூஸ்.*

***வரிகள் 53 – 197***

*கிரேக்கர்கள் பின்வாங்குகின்றனர். டயமீடிஸ், நெஸ்டரைக் காப்பாற்றுகிறான். ஆனால் ஜீயூஸ், ஓர் இடியுடன்கூடிய மின்னலை அனுப்புகிறான். டயமீடிஸை ஹெக்டர் கிண்டல் செய்து, மேலும் போர் செய்ய ட்ரோஜன்களைத் தூண்டுகிறான்.*

***வரிகள் 198 – 252***

*கிரேக்கர்களுக்கு உதவி செய்யும்படி பொசைடனைத் தூண்டு வதில் ஹீரா தோல்வியுறுகிறாள். ஆனால் அகமெம்னன், அவர்களை அணிதிரட்டுகிறான்.*

***வரிகள் 253 – 349***

*கிரேக்கர்களின் தொடக்க வெற்றிக்குப் பிறகு, ட்யூஸரை, ஒரு பாறையால், ஹெக்டர் காயப்படுத்துகிறான். கிரேக்கர்கள் பதற்றத்துடன் ஓடி, தம் கப்பல்களைச் சுற்றி அமைக்கப்பட்டிருக் கும் புதிய தற்காப்பு அரண்களுக்குள் புகுந்து கொள்கின்றனர்.*

**வரிகள் 350 - 484**

கிரேக்கர்களுக்கு உதவ வேண்டாமென்று எச்சரிக்கச் சொல்லி, அய்ரிஸை, ஹீராவிடமும் அதீனியிடமும் அனுப்புகிறான் ஜீயூஸ். பெட்ரோக்குலஸ் இறந்து அக்கிலிஸ் போருக்குத் திரும்பும்வரை, ஹெக்டர் மேலும் வெற்றி பெறுவான் என்று அய்டா மலையிலிருந்து திரும்பும் ஜீயூஸ் முன்னறிவிப்பு செய்கிறான்.

**வரிகள் 485 - 565**

சண்டையை நிறுத்த இரவு வருகிறது. அடுத்த நாள் பற்றிய மிகுந்த நம்பிக்கையோடு ஹெக்டர் ட்ரோஜன்களிடம் பேசுகிறான். கிரேக்கத் தற்காப்பு மையங்களுக்கு எதிரிலேயே ட்ரோஜன்கள் மைதானத்தில் முகாமிட்டு, இரவைக் கழிக்கின்றனர்.

## ஹெக்டரின் வெற்றி!

விடியலின் குங்குமப்பூ நிறம் இவ்வுலகில் பரவ ஆரம்பித்த போது, ஒலிம்பஸ் மலையில் மிக உயர்ந்த சிகரமொன்றில் கடவுளர்களின் சபை ஒன்றைக் கூட்டினான் இடியில் இன்புறும் ஜீயூஸ். அனைவரும் கவனமாகக் கேட்க, அவனே பேச்சைத் துவக்கினான்:

'கடவுளர்களே! தேவதைகளே! நான் சொல்ல வருவதைக் கவனமாகக் கேளுங்கள். அப்போதுதான் நான் சொல்ல வந்ததைச் சொல்ல முடியும். இந்த விஷயத்தை விரைவிலேயே ஒரு முடிவுக்குக் கொண்டுவர நான் விரும்பியுள்ளேன். அந்த நோக்கத்தோடு இப்பொழுது நான் தரப்போகும் உத்தரவையும் கேட்டுக்கொள்ளுங்கள். இதை மீற, எந்தக் கடவுளும் தேவதையும் முயலக் கூடாது. நீங்களனைவரும் இதை ஏற்றுக்கொள்ள வேண்டும்.

'யாராவதொரு கடவுள் தன்னிச்சையாகச் செயல்பட்டு, ட்ரோஜன்களுக்கோ கிரேக்கர்களுக்கோ உதவி செய்ய நாடுவது எனக்குத் தெரிய வருமானால், அவரை நையப்புடைத்து கண்ணியமற்ற முறையில் ஒலிம்பஸ் மலைக்குத் திருப்பி அனுப்பிவிடுவேன். அல்லது அவரை நானே பிடித்து தூரமாக, வெகுதூரமாக இருக்கும் டார்டாரஸின் இருளுக்குள் வீசிஎறிந்து விடுவேன். அங்குதான் பூமியின் கீழே, மிகமிக ஆழமான பாதாளங்கள் கொட்டாவி விட்டுக்கொண்டிருக்கின்றன. வானத்திலிருந்து பூமி எவ்வளவு கீழே உள்ளதோ, பூமியிலிருந்து அவ்வளவு கீழே இரும்பு வாயில் கதவுகளும் வெண்கல

நுழைவாயிலும் அங்குதான் உள்ளன. நித்தியர்களான கடவுளர் மத்தியிலே நான் எவ்வளவு தூரம் ஆற்றல் மிக்க கடவுள் என்பதை உங்களுக்கு அது உணர்த்தும்.

'வாருங்கள் கடவுளர்களே! வேண்டுமானால், என்னோடு மோதி முயற்சித்துப் பாருங்கள். நீங்களே தெரிந்து கொள்ளலாம். ஒலிம்பஸ் மலையின் ஒரு முனையில் ஒரு தங்கக் கயிற்றைக் கட்டுங்கள். இன்னொரு முனையை நீங்களனைவரும், கடவுளர்களும் தேவதைகளும் சேர்ந்து பிடித்துக்கொள்ளுங்கள். நீங்கள் எவ்வளவுதான் கடினமாக முயன்று இழுத்தாலும், ஜீயூஸை விண்ணிலிருந்து மண்ணுக்குக் கொண்டுவர முடியாது. ஆனால் எனது முனையை இழுக்கவேண்டும் என்று நான் தீவிரமாக விரும்பினேன் என்றால், உங்களனைவரையும் மட்டுமல்ல, இந்த பூமியையும் கடலையும் சேர்த்து இழுத்துப் போட்டுவிடுவேன். பின் அக்கயிற்றை ஒலிம்பஸின் ஒரு முனையில் கட்டிவைத்து எல்லாவற்றையும் அந்தரத்தில் தொங்க விட்டுவிடுவேன். கடவுளர்களையும் மனிதர்களையும்விட அதனால்தான் நான் அதிக வல்லமையுள்ளவன்!'

- அவன் இப்படிச் சொன்னதும் அனைவரும் முழு அமைதி காத்து அதைக் கேட்டுக்கொண்டிருந்தனர். அவன் அவ்வளவு வெளிப்படையாகப் பேசியது அவர்களையெல்லாம் ஆச்சரியப்படுத்தி இருந்தது. இறுதியாக, சாம்பல் நிறக்கண்ணாள் அதீனி பேசினாள்

'எங்களுடைய தந்தையே! க்ரோனஸின் மகனே! மேலான தலைவனே! உன்னை யாரும் வெற்றிகொள்ள முடியாதென்று எங்கள் அனைவருக்கும் தெரியும். ஆனால், பரிதாபகரமான முடிவான அழிவைச் சந்திக்க இருக்கும் கிரேக்க ஈட்டியெறி வீரர்களின் விதியை எண்ணி, எங்களுக்குப் பாவமாக இருக்கிறது. ஆனாலும் நீ சொன்னபடி, நாங்கள் சண்டையிடாமலிருப்போம். அதற்குப் பதில், கிரேக்கர்களுக்கு உதவிகரமான ஆலோசனைகளை வழங்குவதில் எங்கள் மனத்தைச் செலுத்துவோம். எனவே உனது கோபத்தின் பொருட்டு அவர்களனைவரும் துக்கத்துக்கு ஆளாக மாட்டார்கள்!'

மேகங்களைச் செலுத்தும் ஜீயூஸ், புன்னகைத்துவிட்டுச் சொன்னான்:

'ட்ரைட்டனில்* பிறந்த அருமை மகளே அதீனி! அஞ்சாதே! நான் மனமார அப்படிச் சொல்லவில்லை. உன்னிடம் இரக்கமில் லாமல் நடந்துகொள்ள வேண்டுமென்பது என் நோக்கமல்ல!'

இப்படிச் சொல்லிவிட்டு, வெண்கலக் குளம்புகளையும் பறந்து விழும் தங்கப் பிடரிகளையும் கொண்ட தன் இரு விரைவுக் குதிரைகளையும் தன் தேரில் இணைத்தான் ஜீயூஸ். தங்கத்தில் உடையணிந்து கொண்டு, தன் சிறப்பு வாய்ந்த தங்கச் சாட்டை யையும் எடுத்துக்கொண்டான். தனது தேரில் ஏறி, சாட்டையைச் சொடுக்கி குதிரைகளை விரட்டினான். விருப்பத்துடன் அக் குதிரைகள் இரண்டும், மண்ணுக்கும் நட்சத்திரங்கள் நிறைந்த விண்ணுக்குமிடையில் பறந்தன. அய்டா மலையின் ஒரு சிகரமான, பல ஓடைகளைக் கொண்ட காட்டு மிருகங்களின் தாயகமாக இருந்த கார்காரஸில், அவனைக் கொண்டுவந்து சேர்த்தன. அங்கு ஜீயூஸுக்கு, எல்லையும் புகைகிளம்பும் ஒரு பலிபீடமும் உண்டு. அங்கே வந்தவுடன், மனிதர்களுக்கும் கடவுளருக்கும் தந்தையான அவன் தன் குதிரைகளை நிறுத்தி னான். நுகத்தடியிலிருந்து விடுவித்து, ஒரு பனிப்படலத்தில் அவைகளை மறைத்து வைத்தான். பின் அதன் உச்சியில் போய் அமர்ந்துகொண்டான் - தன் புகழை எண்ணி பெருமிதம் கொண்ட வனாய் ட்ரோஜன்களின் நகரையும் கிரேக்கர்களின் கப்பல் களையும் அங்கிருந்து பார்த்தவண்ணம்!

இதற்கிடையில் நீண்ட முடி கொண்ட கிரேக்கர்கள் தம் குடிலில் அவசரமாக மதிய உணவு உண்டுவிட்டு, போருக்குத் தயாரானார் கள். அந்தப் பக்கத்தில் ட்ரோஜன்களும் இதைப்போலவே தங்களைப் போருக்குத் தயார் செய்து கொண்டிருந்தார்கள். அவர்கள் அதிகம் பேர் இல்லை. எனினும், எதிரியை நேருக்கு நேர் சந்தித்தே தீருவதென அவர்கள் முடிவு எடுத்திருந்தார்கள். மனைவிகளுக்காகவும் குழந்தைகளுக்காகவும் அவர்கள் போரிடத்தான் வேண்டியிருந்தது. வாயில் கதவுகளெல்லாம் திறக்கப்பட்டன. அதன் வழியாக பெரும் ஓசையுடன் காலாட் படை, தேரோட்டுபவர்கள் என முழுப்படையும் வந்து சேர்ந்தது. படைகள் முன்னேறிச் சென்று ஓர் ஒற்றை வழியில் சந்தித்தன. கேடயங்களும் ஈட்டிகளும் மோதிக்கொண்டன. வெண்கலக் கவச உடையணிந்த போர்வீரர்கள் பொருதிக் கொண்டனர்.

---

* ட்ரைட்டன் - அதீனியை வளர்த்த கிரேக்க நதி.

மாபெரும் சப்தம் கிளம்பியது. குமிழ்களுள்ள கேடயங்கள் ஒன்றோடொன்று மோதிக்கொண்டபோது எழுந்த பேரொலி, விண்ணைச் சென்றடைந்தது இறந்து கொண்டிருந்தவர்களின் மரண ஓலங்கள், வெற்றி பெற்றுக் கொண்டிருந்தவர்களின் எக்காளங்கள் என, பூமி முழுவதும் ரத்த ஆறு ஓடியது.

பகலின் அருள்பாலிக்கப்பட்ட ஒளி அதிகமாக இருந்த காலை முழுதும், ஏவுகணைகள் மாறிமாறி ஏவப்படுவதும், வீரர்கள் கீழே விழுவதுமாக இருந்தது. ஆனால், பகலவன் வானத்தில் உச்சியில் இருந்தபோது, தந்தை தன் தங்கத் தராசைப் பிடித்து விட்டபோது, இரண்டு தட்டுகளிலும் மரணமே இருந்தது. ஒரு தட்டில் குதிரைகளை அடக்கும் ட்ரோஜன்களும், இன்னொரு தட்டில் வெண்கலக் கவச உடையணிந்த கிரேக்கர்களுமாய் தட்டின் மையப்பகுதியை இரு படையினரும் சமமாக ஆக்ர மித்தனர். ஆனால், தராசின் கோல் கிரேக்கர்களின் பக்கம் தாழ்ந்தது அவர்களுக்கு அழிவு என்பதை உணர்த்தும் விதமாய். வள்ளல் தன்மை கொண்ட பூமியில், அவர்களது விதி முடிவாகி விட்டிருந்தது. ஆனால் ட்ரோஜன்களின் தட்டானது, அகன்ற வானத்தை நோக்கி மேலே சென்றது. அய்டா மலையிலிருந்து ஜீயூஸ் இடியென முழங்கினான். தெளிவானதொரு மின்னலை, கிரேக்கப் படையினரை நோக்கி ஏவினான். அதனால், அவர்கள் குழம்பிப் போனார்கள். ஒவ்வொரு வீரனின் நிறமும் பயங்கரத் தால் வெளிறியது.

அதன் பிறகு, இடொமீனியஸோ அகமெம்னனோ யாராலுமே பழையபடி நின்று போரிட முடியவில்லை. ஏரிஸின் உதவியாளர் களான இரண்டு அஜாக்ஸ்களின் நிலையும் இவ்வாறே இருந்தது. கிரேக்கர்களின் பாதுகாவலனாக இருந்த நெஸ்டர் மட்டும்தான் போர்க்களத்தில் சற்று தாமதித்தான். அதற்குக் காரணம், அவன் போர்க்களத்திலேயே இருக்க விரும்பினான் என்பதல்ல. வண்டிக் குதிரையான அவனது மூன்றாவது குதிரைக்குப் பிரச்னை ஏற்பட்டிருந்தது. அழகிய கூந்தல் கொண்ட ஹெலனின் கணவனும் கடவுளையொத்தவனுமாகிய பாரிஸ், அக்குதிரை யின் பிடரி தொடங்கும் இடத்தில் ஓர் அம்பினால் தாக்கி யிருந்தான். அது ஒரு மரண இடம். வேதனையால் அக்குதிரை பின்வாங்கியது. ஏனெனில், அம்பின் நுனி அதன் மூளைக்குள் அமிழ்ந்திருந்தது. வேதனையில் சுற்றி வந்த அக்குதிரை, மற்ற குதிரைகளைக் குழப்பத்தில் ஆழ்த்தியது.

குதிரையின் கடிவாளத்தில் தன் வாளால் அடித்து, நெஸ்டர் அதை வழிக்குக் கொண்டுவர முயன்று கொண்டிருந்தான். அப்போது ஹெக்டரே துணிச்சலான தேரோட்டியாக வர, அவனது தேர்க் குதிரைகள் அப்பக்கமாக வந்தன. கிழவனின் உயிர் அந்த இடத்திலேயே போயிருக்கும், போர் முழக்கத் தலைவனான டயமீடிஸ் மட்டும் அந்த அபாயத்தைப் பார்த்து, உதவி வேண்டி ஒடிஸியூஸை உரக்க அழைத்து ஒலி எழுப்பாமலிருந்திருந்தால்

'ஒலிம்பஸ் மலையில் பிறந்த லார்ட்டிஸின் மகனே! ஆற்றல்மிகு ஒடிஸியூஸ்! கோழையைப் போல உன் கேடயம் தோளில் தொங்க, கும்பலில் கரைந்து நீ எங்கே போனாய்? நீ கவனிக்கவில்லையெனில், யாராவது நீ ஓடும்போது உன்னை இடுப்பில் குத்துவார்கள். இங்கே வந்து, இந்தக் காட்டு மிராண்டியிடமிருந்து கிழவன் நெஸ்டரைக் காப்பாற்றி எனக்கு உதவி செய்!'

எதையும் எதிர்க்கும் துணிச்சல் கொண்ட ஒடிஸியூஸின் காதில் அவன் பேசியது சரியாக விழவில்லை. ஆகவே அவன் தன் வழியில் கிரேக்கர்களின் கப்பல்களை நோக்கி விரைந்து கொண் டிருந்தான். எனவே டயமீடிஸ், தனியாகவே எதிர்கொண்டான். நெஸ்டரின் தேரின் முன்னால் நின்றுகொண்டு அவசரமாகச் சொன்னான்:

'மரியாதைக்குரிய ஐயா! இந்த இளம் போர்வீரர்களை உங்களால் சமாளிக்க முடியாது. காலத்தால் நீங்கள் களைப்படைந்தவராக இருக்கிறீர்கள். உங்கள் பணியாளர்களாலும் பயனில்லை. உங்கள் குதிரைகளும் மிகவும் மெதுவாகச் செல்கின்றன. வாருங்கள்! இந்தத் தேரில் ஏறிக்கொள்ளுங்கள்! த்ராஸ் வளர்த்த குதிரைகள் எவ்வளவு வேகத்தில் செல்லும் என்பதைப் பாருங் கள். முன்னேறிச் செல்வதாக இருந்தாலும் சரி, பின்வாங்கிச் செல்வதாக இருந்தாலும் சரி இவைகள் எவ்வளவு விரைவாக பூமியைக் கடந்து செல்லும் என்பதைப் புரிந்து கொள்வீர்கள்! அன்றைக்குத்தான் நான் இவைகளை ஈனியாஸிடமிருந்து வாங்கிக்கொண்டு வந்தேன். இந்த வழித்தட விற்பன்னர்களை, உங்கள் குதிரைகளை எமது பணியாளர்கள் கவனித்துக் கொள் வார்கள். நானும் நீங்களும் இந்த இரு குதிரைகளையும் ட்ரோஜன் களை நோக்கி செலுத்துவோம். என் கையிலும் ரத்தம் சுவைக்கத் துடிக்கும் ஓர் ஈட்டி இருப்பதை, ஹெக்டர் விரைவிலேயே தெரிந்து கொள்வான்.'

அப்படி அவன் பேசியதும் கிரேக்கத் தேரோட்டியான நெஸ்டர் ஒப்புக்கொண்டான். அவர்களது ஆற்றல்மிகு உதவியாளர்களான ஸ்தெனிலஸ், அன்பான யூரிமிடான் ஆகிய இருவரும் நெஸ்டரின் பெண் குதிரைகளைக் கவனித்துக் கொண்டனர், நெஸ்டரும் டயமீடிஸும், டயமீடிஸின் தேரில் ஏறிக்கொண்டனர். மின்னிக்கொண்டிருந்த கடிவாளங்களைப் பிடித்து சாட்டையைச் சொடுக்கி குதிரைகளைக் கிளப்பினான் நெஸ்டர். விரைவிலேயே அவைகள் ஹெக்டரின் பக்கத்தில் சென்றன. தேரில் இருந்தபடியே ஹெக்டரைத் தாக்க முயன்றான் டயமீடிஸ். ஆனால் அவனது அம்பு ஹெக்டரின் மீது படாமல், அவனது உதவியாளனும் தேரோட்டியுமான இனியோப்பியூஸைத் தாக்கியது. குதிரைகளின் கடிவாளங்களைப் பிடித்த வண்ணமிருந்த அவனது மார்புக் காம்பின்மீது அடித்தான் டயமீடிஸ். தேரிலிருந்து அவன் கீழே சாய்ந்தான். குதிரைகள் வெருண்டு பின்வாங்கின. அவனது உயிர் அவனை விட்டு அங்கேயே பிரிந்தது.

தன் தேரோட்டியின் இறப்பு ஹெக்டரின் மனத்தைப் பிழிந்தது. எனினும் தனது போர்த்தோழனை அங்கேயே விட்டுவிட்டு, வேறு துணிச்சலான தேரோட்டியைத் தேடி அவன் சென்றான். விரைவிலேயே துணிவுள்ள ஆர்க்கிடாலிமஸ் என்பவனைக் கண்டு, விரைவுக் குதிரைகள் பூட்டப்பட்ட தன் தேரில் அவனை ஏற்றி தன் குதிரைகளின் கடிவாளங்களை அவனிடம் ஒப்படைத் தான்.

சரிசெய்ய முடியாத அழிவு ட்ரோஜன்களை இப்பொழுது அச்சுறுத்தியது. செம்மறியாட்டுக் குட்டிகள் தம் தொழுவத்துக்கு விரட்டப்படுவதுபோல அவர்கள் இலியம் நகருக்குத் துரத்தப் பட்டிருப்பார்கள், மனிதர்கள் மற்றும் கடவுளர்களின் தந்தை மட்டும் விழிப்புணர்வுடன் உடனே செயல்படாமல் இருந்திருந் தால்! பயங்கரமான இடிமுழக்கத்துடன் கண்ணைப் பறிக்கும் மின்னல் ஒன்றை ஏவிவிட்டு, அதை பூமியில் டயமீடிஸின் குதிரைகளுக்கு முன்னால் சென்று தாக்குமாறு வழிகாட்டினான். உடனே அங்கே கந்தகம் எரியும் பயங்கரமான ஒளி ஏற்பட்டது. குதிரைகள் வெருண்டு பின்வாங்கின. மின்னும் கடிவாளங்கள், நெஸ்டரின் கையை விட்டு நழுவின. கடுமையாக பயந்து போனவனாக அவன் டயமீடிஸிடம் சொன்னான்:

'டயமீடிஸ்! சீக்கிரம் குதிரைகளைத் திருப்பு. இங்கிருந்து போய்விடுவோம். ஜீயூஸிடமிருந்து ஓர் உதவியும் உனக்குக்

கிடைக்காது என்பது இன்னுமா உனக்குப் புரியவில்லை? இன்று ஹெக்டருக்கே அவன் எல்லாப் புகழையும் கொடுத்துக் கொன்டிருக்கிறான். இன்னொரு நாள் நமக்கான நேரம் வரலாம், அவன் விரும்பினால். ஒரு மனிதன் எவ்வளவுதான் பலவானாக இருந்தபோதும், அவனால் ஜீயூஸின் விருப்பத்தை விலக்கி விட முடியாது. அவன் எல்லாம் வல்லவன்!'

போர்முழக்கத் தலைவனான டயமீடிஸ் பதில் சொன்னான்:

'மரியாதைக்குரிய ஐயா! நீங்கள் சொல்வது எல்லாமே உண்மைதான். டயமீடிஸ் என்னிடமிருந்து ஓடிவிட்டான். கப்பல்களை அடையும்வரை அவன் ஓட்டத்தை நிறுத்தவில்லை! என்று ஹெக்டர் இங்கே நின்றுகொண்டு ட்ரோஜன்களைப் பார்த்துச் சொல்வான் என்பதை நினைக்கும்போது என் மனம் மிகவும் புண்படுகிறது. அப்படித்தான் அவன் பெருமை அடித்துக் கொள்வான். அப்படி அவன் செய்யும்போது, இந்தப் பரந்த பூமி என்னை விழுங்கட்டும்!'

கிரேக்கத் தேரோட்டியான நெஸ்டர் சொன்னான்:

'வல்லமை மிக்க டைடியூஸின் மகனே! நீ என்ன சொல்கிறாய்? தன் மனத்தைத் திருப்திப்படுத்த வேண்டுமானால் உன்னை ஒரு கோழையென்றும் பலவீனனென்றும் ஹெக்டர் சொல்லிக் கொள்ளலாம். ஆனால் அவனால், ட்ரோஜன்களையும் டார்டானி யன்களையும் நம்பவைக்க முடியாது. கேடயத்தோடு போர் செய்த கணவன்மார்களை நீ தூக்கி மண்ணில் எறிந்தாயே! அவர்களின் மனைவிமார்களையும் ஹெக்டரால் நம்பவைக்க முடியாது!'

இப்படிச் சொல்லிவிட்டு அவன் அந்தக் குழப்பமான களத்தின் குறுக்கே குதிரைகளைத் திருப்பி ஓட்டினான். பயங்கரமான பேரொலி எழுப்பிய வண்ணம் ஹெக்டரும் ட்ரோஜன்களும் அவர்களைப் பின்தொடர்ந்தனர், அழிவை ஏற்படுத்தும் ஏவுகணைகளை எறிந்துகொண்டே. அதன்பின் மின்னும் தலைக் கவசம் கொண்ட ஹெக்டர், டயமீடிஸைப் பார்த்து வெற்றிக்குரல் எழுப்பினான்

'டயமீடிஸ்! கிரேக்கத் தேரோட்டிகள் உன்னைப் பற்றி பெருமையாகப் பேசிக்கொள்வார்கள். கௌரவமான இடத்தை யும் மிகச்சிறந்த மாமிசத்தையும் கொடுப்பார்கள். காலிக்

கோப்பையை அவர்கள் எப்போதுமே உனக்குக் கொடுத்ததில்லை. ஆனால், நீ எப்போதுமே ஒரு பெண்ணாகத்தான் இருந்திருக்கிறாய் என்பதை நான் புரிந்துகொண்டேன். போய்த்தொலை அழும் குழந்தையே! தப்பித்து ஓடுவதற்காக எங்கள் மதில்களின் மீது நீ ஏறிக்கொண்டிருக்கும்போதோ, எங்கள் பெண்டிரை நீ உன் கப்பல்களுக்குக் கவர்ந்து செல்லும்போதோ நான் சும்மா நின்று கொண்டிருக்க மாட்டேன். முதலில் உன்னை ஹயடிஸுக்கு அனுப்பிவிட்டுத்தான் மறுவேலை பார்ப்பேன்!'

அவன் அப்படிச் சொன்னதும் டயமீடிஸின் மனம் உடைந்தது. குதிரைகளைத் திருப்பி ஹெக்டரை உண்டு இல்லை என்று செய்துவிடலாமா என்று தோன்றியது. மூன்று முறை அது பற்றி அவன் யோசித்தான். ஆனால் போரானது ட்ரோஜன்கள் பக்கம் திரும்பிக்கொண்டிருக்கிறது என்று உணர்த்துவதுபோல, கலந்தா லோசிப்பதில் ஞானவானான ஜீயூஸ் மூன்று முறை அய்டா மலையிலிருந்து இடி போல முழங்கினான். அப்போது உரத்த குரலில் ட்ரோஜன்களை அழைத்துச் சொன்னான் ஹெக்டர்.

'ட்ரோஜன்களே, லைசியர்களே, டார்டானியர்களே! ஒன்றாகச் சமர் செய்ய விரும்புபவர்களே! தைரியமான ஆண்மகன்களாக இருங்கள் தோழர்களே! போருணர்வு உங்கள் உள்ளத்தில் எழட்டும்! எனக்கு வெற்றியும் மாபெரிய கௌரவமும் தருவதற் கும், கிரேக்கர்களுக்குப் பேரழிவைத் தருவதற்கும் ஜீயூஸ் விரும்புகிறார் என்று மனப்பூர்வமாக நம்புகிறேன். என்னுடைய தாக்குதலை ஒரு கணம்கூடத் தாங்காத அற்பமான பயனற்ற சுவர்களை எழுப்பியுள்ள கிரேக்கர்கள் முட்டாள்கள்.

அவர்கள் தோண்டி வைத்துள்ள அகழியை நம் குதிரைகள் மிக எளிதாகத் தாண்டிவிடும். அவர்களுடைய கப்பல்களை நான் அடையும்போது, 'எரியட்டும்' என்ற நமது போர் முழக்கத்தை மறவாதீர்கள். அவர்களுடைய கப்பல்களை நான் தீக்கிரை யாக்குவேன். எழும் புகையில் கிரேக்கர்கள் பதறுவார்கள். அங்கேயே அவர்களை நான் கண்டதுண்டமாக வெட்டிப் போடுவேன்.'

இப்படிச் சொல்லிவிட்டு ஹெக்டர் தன் குதிரைகளை அழைத்து அவைகளிடமும் சொன்னான்:

'வள்ளல் மனம் கொண்ட ஈட்டியானின் மகள் ஆன்ட்ரோமக்கி தன் கணவனான எனக்கு சேவை செய்வதற்கு முன் உங்களைத்

தான் கவனித்தாள். உங்களுக்கு எப்போதுமே தேனும் இனிப் பான கோதுமையும்தான் வைத்தாள். அதோடு மதுவையும் கலந்து வைத்தாள். நீங்கள் ஓய்வாக இருக்கும்போது குடிப்பதற் காக வைத்தாள். உங்கள்மீது அவிழ்த்துவிடப்பட்ட அந்த அன்பான கவனிப்புக்குப்-பதிலாக நீங்கள் இருவரும் உங்கள் கடமையைச் செய்யும் காலம் வந்துவிட்டது. இப்பொழுது அவர்கள் பின்னால் துரத்திச் செல்லுங்கள். உங்கள் பாய்ச்சலில், நெஸ்டரின் கேடயத்தை நாம் கைப்பற்ற வேண்டும். அதன் புகழ் விண்ணுலகம் வரை பரவியுள்ளது. அதன் கைப்பிடிகூட சுத்தமான கட்டித் தங்கத்தால் ஆனதென்று சொல்லிக் கொள் கிறார்கள். அதன் பிறகு, டயமீடிஸின் தோள்களிலிருந்து அவன் உள்ளே அணிந்திருக்கும் ஹெஃபைஸ்டஸ் செய்து கொடுத்த உடல் கவசத்தைக் கிழிக்க வேண்டும். அந்த இரண்டு பொருள் களையும் நாம் பெற முடியுமானால், இன்று இரவே கிரேக்கர்கள் தம் விரைவுக் கப்பல்களில் தப்பித்து ஓடிவிடுவார்கள் என்று எதிர்பார்க்கலாம்.'

இப்படியாக அவன் பேசியதைக் கேட்ட சீமாட்டி ஹீரா சினமுற் றாள். தனது அரியணை குலுங்க, உயர்ந்த ஒலிம்பஸ் மலை நடுங்க எழுந்த அவள் பெரிய கடவுளான பொஸைடனிடம் சொன்னாள்.

'ஆற்றல் மிகுந்த நிலநடுக்கக்காரனே, என்ன நடக்கிறது அங்கே? கொல்லப்படும் கிரேக்கர்களுக்காக உன் மனத்தில் துளிகூட இரக்கம் கிடையாதா? ஆனாலும் ஹெலிஸிலும் ஈகியிலும் உனக்கு மனம் மகிழும் பல பலிப்பொருட்களை அவர்கள் கொண்டு வந்து கொடுக்கத்தான் செய்கின்றனர். அவர்களுக்கு வெற்றி கிட்ட வேண்டும் என்று நீ ஒருமுறை விரும்பினாய். கிரேக்கர்களின் பக்கமிருக்கும் நாங்கள், வெகுதூரம்வரை இடிமுழக்கம் செய்யும் ஜீயூஸ் அவர்கள் விஷயத்தில் தலையிடு வதைத் தடுக்கவும், ட்ரோஜன்களை விரட்டியடிக்கவும் நாடிவிட் டால், ஜீயூஸ் பாவம் அய்டா மலையில் தன்னந்தனியனாக அமர்ந்துகொண்டு. மிகவும் வருத்தப்படுவார்.'

மிகவும் சங்கடமுற்றவனாக, நிலநடுக்கத்தின் தலைவன் பதில் சொன்னான்:

'இப்பொழுது எனக்கு நீ என்ன சொல்ல விரும்புகிறாய் ஹீரா? நீ சொன்னவை யாவும் தீ பற்றிய சொற்களாகும். ஜீயூஸுக்கு

எதிராகச் சண்டையிடத் துடிக்கும் மற்றவர்களோடு சேர்ந்து கொள்ள நான் தயாராக இல்லை. அவர் நம் அனைவரையும்விட பலமடங்கு பலம் வாய்ந்தவர்.'

இப்படியாக அவர்களிருவரும் பேசிக்கொண்டிருக்கையில், விரைவுப் போர்க்கடவுளான ஏரிஸுக்கு இணையான ஹெக்டர், தனக்கே புகழ் என ஜீயூஸ் அருளியிருந்ததன் காரணமாக கிரேக்கக் கப்பல்களுக்கு அப்பால், மதில்களுக்கும் அகழிக்கும் இடையிலிருந்த பகுதி முழுவதையும், தேர்களாலும் கேடயம் தாங்கிய படையினராலும் நிறைத்திருந்தான். உண்மையில் அவன் அத்தனை கப்பல்களையும் தீக்கிரையாக்கியிருப்பான். ஆனால் காலதாமதமாகாமல் கிரேக்கர்களை அணிவகுக்கச் சொல்லி ஹீரா அகமெம்னனின் தலைக்குள் ஒரு கருத்தைத் திணித்து விட்டாள்.

கருஞ்சிவப்பு நிற மேலங்கியை இறுகப்பிடித்த வண்ணம், அந்தக் கப்பல்களையும் பாசறைகளையும் தாண்டி விரைந்தான் அவன். ஒடிஸியூஸுடைய கப்பலின் பருத்த உடல்பகுதியின் மீது வந்து நின்றான். டிலமானின் மகன் அஜாக்ஸின் பாசறைகளாக இருந்தாலும் சரி, அக்கிலிஸின் இருப்பிடமாக இருந்தாலும் சரி, ஒரு கூக்குரலிட்டால் அது இரண்டு முனைகளுக்கும் கேட்குமாறு அணிவகுப்பின் மத்தியில் இருந்தது அப்பகுதி. அக்கிலிஸும் அஜாக்ஸும் தமது பலத்தில் மிகுந்த நம்பிக்கை வைத்திருந்தனர். அதனால் அவர்களது கப்பல்களை எதிரெதிர் கோடியில் விலாப்புறமாக நிறுத்தியிருந்தனர். அந்த முனையிலிருந்து கிரேக்கப்படை முழுவதற்கும் காதில் விழுமாறு குரலெடுத்துக் கூறினான் அகமெம்னன்.

'அவமானம் கிரேக்கர்களே! தோற்றத்துக்காக மட்டும் வியந்து போற்றப்படுகின்ற வெறுக்கத்தக்க பிராணிகளே! இந்தப் பூமியின் மீதிருக்கும் அற்புதமான சக்தி நாம்தான் என்றெல்லாம் பெருமையோடு கொண்டாடிக்கொண்டிருந்த உரிமைக்கு என்னானது? லெம்னோஸில் இருக்கும்போது கோப்பை வழியும் மதுவைக் குடித்துக்கொண்டும், மாட்டுக்கறியை முழுங்கிக் கொண்டும் நீங்கள் செய்த சோம்பேறித்தனமான பீற்றலுக்கு இப்பொழுது என்னானது? சண்டையில் நீங்கள் ஒவ்வொருவரும் நூறு பேருக்கு, இல்லை இருநூறு ட்ரோஜன்களுக்குச் சமம் என்று சொன்னீர்களே! ஆனால் இன்றோ நாம் அத்தனைபேரும் மொத்தமாகச் சேர்ந்துகூட ஹெக்டர் ஒருவனுக்கு இணையாக

இல்லையே! விரைவிலேயே அவன் நமது கப்பல்களைத் தீக்கிரையாக்குவான்.

தந்தையே ஜீயூஸ்! இதற்குமுன் எந்த வலிமை மிகுந்த தலைவனையாவது நீ இப்படி ஏமாற்றி அவனது புகழையெல்லாம் பறித்திருக்கிறாயா? ஆனாலும், இங்கு வந்த எனது துயர்மிகுந்த கப்பல் பயணத்தில் கண்ணில் பட்ட உனது அருமையான பலிபீடங்களில் எதையும் கண்டுகொள்ளாமல் போனதில்லை என்று என்னால் நிச்சயமாகச் சொல்லமுடியும். அருமையான சுவர்களைக் கொண்ட ட்ரோஜன்களின் நகரை அழிக்கும் எனது ஆர்வத்தில், அவை ஒவ்வொன்றிலும் எருதுகளின் கொழுப்பையும் தொடைகளையும் நான் எரித்திருக்கிறேன். அதனால் ஜீயூஸே, என் இந்த பிரார்த்தனையையாவது ஏற்றுக்கொள். நாங்களனைவரும் உயிருடன் தப்பித்துச் செல்லுமாறு வை. வேறு எதுவும் செய்யாவிடினும் இதையாவது நிறைவேற்று. ட்ரோஜன்கள் எங்கள்மீது இப்படி ஆதிக்கம் செய்யுமாறு விடாதே.'

இப்படி அகமெம்னன் பேசியதும் அவனது கண்ணீர் தந்தையை உருக்கியது. அவனது படை அழிக்கப்படாது காப்பாற்றப்படும் என்று உணர்த்தும்படித் தலையை ஆட்டினார். அப்போதே தீர்க்கதரிசனப் பறவைகளில் மிக அதிகப் பயனுள்ள ஒரு கழுகை அனுப்பினார். வேகமாகச் செல்லும் பெண்மானின் குட்டியொன்றைத் தன் கூர்நகங்களில் பிடித்திருந்தது அது. சகுனங்களின் கடவுளான ஜீயூஸுக்கு கிரேக்கர்கள் பலிச்சடங்கை நிறைவேற்றும் மிகச்சிறந்த முறையில் அமைக்கப்பட்டிருந்த பலிபீடமொன்றின்மீது அந்த மான்குட்டியைப் போட்டது கழுகு. அந்தப் பறவை ஜீயூஸிடமிருந்து வந்துள்ளது என்பதைப் புரிந்துகொண்ட கிரேக்கர்கள் சண்டை போடுவதற்கான புதிய உத்வேகம் ஏற்பட்டவர்களாக ட்ரோஜன்கள்மீது பாய்ந்தனர்.

ஆனால் ஒரு தேரோட்டியால்கூட டயமீடிஸை முந்திக்கொண்டு அகழியைத்தாண்டி எதிரியைச் சந்திக்கச் செல்ல முடியவில்லை. டயமீடிஸின் குதிரையைத் திசைதிருப்பி விரட்டியடித்த தலைக்கவசமணிந்த அகிலயஸ் என்ற ட்ரோஜனை முதலில் கொன்றவன் டயமீடிஸ்தான். அவன் திரும்பியபோது, அவன் தோள்களுக்கு இடையே முதுகின் நடுப்பகுதியில் தன் ஈட்டியால் குத்தினான் டயமீடிஸ். அது அவனுடைய நெஞ்சைப்பிளந்து சென்றது. அவன் தனது தேரிலிருந்து தடாலெனக் கீழே

விழுந்தான். அவனுடைய கவச உடை கடகடவெனச் சப்தித்து அவனைச் சுற்றி உடைந்து விழுந்து சிதறியது.

டயமீடிஸைப் பின் தொடர்ந்து அகமெம்னனும் மெனிலயஸும், அவர்களைத் தொடர்ந்து இரண்டு அஜாக்ஸ்களும் போருக்கான ஆயத்த வீர உடையணிந்து வந்தனர். அவர்களுக்குப் பின்னால் இடொமீனியஸும் அவனுடைய உதவியாளனும் போர்க் கடவுளாகிய ஏரிஸுக்கு இணையான மெரியோனிஸும் மற்றும் யூரிபைலஸும் வந்தனர். தன் வளைந்த அம்பை வெளியே எடுத்தவனாக ஒன்பதாது வீரனாக வந்தான் ட்யூஸர். டிலமானின் மகனாகிய அஜாக்ஸின் கேடயத்துக்குப் பின்னால் அவன் நின்றுகொண்டான். அஜாக்ஸ் தனது கேடயத்தைக் கொஞ்சம் விலக்குவான். அந்த இடைவெளியில் தன் இலக்கை நோக்கி அம்பைச் செலுத்துவான் ட்யூஸர். அவனது அம்படிபட்டவன் இறந்து கீழே விழுந்ததும், அம்மாவின் பின்னால் ஓடி ஒளியும் குழந்தையைப் போல, ட்யூஸர் மறுபடியும் அஜாக்ஸின் கேடயத்துக்குப் பின்னால் போய் நின்று கொள்வான். அஜாக்ஸும் தனது மின்னும் கேடயத்தைக் கொண்டு அவனை மறைப்பான்.

இணையற்ற ட்யூஸருக்கு முதலில் விழுந்த ட்ரோஜன் யார்? ஆர்சிலோக்கஸ். அதன் பிறகு ஆர்மீனஸ், ஒஃபீலஸ்டஸ், டீட்டர், க்ரோமியஸ், கடவுளையொத்த லைக்கோஃபோண்ட்டிஸ், பாலியேமனின் மகனான அமோபேயன் மற்றும் மெனாலிபஸ். இவர்களனைவரையும் விரைவிலேயே வள்ளல் தன்மை கொண்ட இந்த பூமியில் சாய்த்தான் ட்யூஸர். ட்ரோஜன் அணி வகுப்பில் ட்யூஸர் தனது ஆற்றல்மிக்க அம்பினால் விளைவித்துக் கொண்டிருந்த பேரழிவைக் கண்டு அகமகிழ்ந்தான் மக்கள் தலைவனான அகமெம்னன். அவனருகே சென்று தன் உள்ளம் திறந்தான் அவன்.

'அருமை நண்பா ட்யூஸர், டிலமானின் மகனே, வீரர்களின் தலைவனே, இதேபோல தொடர்ந்து செய்வாயானால் கிரேக்கர்களின் மானத்தைக் காப்பாற்றுவாய். முறைதவறிப் பிறந்த குழந்தையாக நீ இருந்தபோதும், உன்னை எடுத்துத் தன் வீட்டிலேயே வளர்த்த உனது தந்தை டிலாமனுக்கு இறவாப் புகழைச் சேர்ப்பாய். உன் தந்தை வெகு தூரத்தில் இருக்கிறார். எனினும் இப்பொழுது நீ அவருக்குக் கைம்மாறு செய். புயல் மேகங்களைச் செலுத்தும் ஜீயூஸும் அதீனியும் அழகாக

வடிவமைக்கப்பட்ட சுவர்களைக் கொண்ட இலியம் நகரை அழிக்க அனுமதிப்பார்களேயானால், எனக்குக் கிடைக்கும் கௌரவப் பரிசுக்குப் பிறகு வரும் பொருள்களில் முதல் கௌரவப் பரிசை உனக்கே அளிப்பேன் என்று மனப்பூர்வமாகக் கூறுகிறேன். அது ஒரு முக்காலியாகவோ, தேரோடு கூடிய ஒரு ஜோடிக்குதிரைகளாகவோ உனது படுக்கையைப் பகிர்ந்து கொள்ளும் பெண்ணாகவோ இருக்கலாம்.'

இணையற்ற ட்யூஸர் பதிலாகச் சொன்னான்:

'மிகுந்த புகழுடைய அகமெம்னன், பறக்கும் குதிரையை ஏன் முடுக்குகிறாய்? என்னால் முடிந்த எல்லாவற்றையும் ஓய்வு ஒழிச்சலின்றி நான் செய்கிறேன். எதிரிகளை இலியம் நகரை நோக்கிப் பின்னால் நாம் தள்ளிக்கொண்டு சென்ற கணத்தி லிருந்தே, எதிரிகளைக் கொல்வதற்கான வாய்ப்புகளை நான் எதிர்பார்த்தவனாக விழிப்புணர்வுடனேயே இருந்தேன். நீண்ட முனை கொண்ட எட்டு அம்புகளை நான் எய்துள்ளேன். அவை ஒவ்வொன்றும் துணிச்சலான இளம் ட்ரோஜன் வீரனின் சதையில் தன் அடையாளத்தைப் பதித்துள்ளது. ஆனால் இங்கே ஒரு பைத்தியக்கார நாய் உள்ளது. அதை என்னால் அடிக்க முடியவில்லை.'

அப்படிச் சொல்லிவிட்டு ஹெக்டரை சாய்க்க ஏக்கம் கொண்டவ னாக அவனை நோக்கி அம்பை ஏவினான் ட்யூஸர். ஆனால் அவனது இலக்கு தவறி, ப்ரியமின் உறுதியான மகன்களில் ஒருவனான அழகான கார்கிதியானின் மார்பில் தஞ்சம் புகுந்தது. அழகு தேவதையான அவனது தாய் காஸ்ட்டியனீரா, ஈஸிமியி லிருந்து வந்து ப்ரியமைத் திருமணம் செய்துகொண்டவள். வசந்தகால மழை மற்றும் விதைகளின் கனம் காரணமாகத் தோட்டத்தில் உள்ள அபின் செடியின் தலை ஒருபக்கம் சாய்வதுபோல, கார்கிதியானின் தலை அவனது தலைக்கவசத் தின் கனம் தாளாமல் ஒருபக்கம் சாய்ந்து விழுந்து தொங்கியது.

ஹெக்டரைச் சாய்க்கும் ஏக்கம் தணியாதவனாக, மறுபடியும் இன்னொரு அம்பை அவன்மீது ஏவினான் ட்யூஸர். இந்த முறையும் அவனது குறி தவறியது. ஏனெனில் அவனது அம்பை அப்போலோ திசை திருப்பி விட்டான். ஆனால் அது ஹெக்டரின் துணிச்சலான தேரோட்டியான ஆர்க்கிடாலமஸை போர்க் களத்தினுள் நுழைந்து கொண்டிருந்தபோது அவனது மார்புக்

காம்பில் தாக்கியது. அவன் தன் தேரிலிருந்து தடாலெனக் கீழே சாய்ந்தான். அவனது விரைவுக் குதிரைகள் வெருண்டு பின் வாங்கின. உயிரும் உணர்வும் அங்கேயே பிரிந்தது அவனுக்கு.

தனது தேரோட்டியின் மரணம் ஹெக்டரின் மனதைப் பிழிந்தது. ஆனாலும் தனது போர்க்களத் தோழனுக்காக அவன் வருத்த முற்றாலும், அவனை அங்கேயே விட்டுவிட்டு, அருகில் நின்று கொண்டிருந்த தன் சகோதரன் செப்ரியோனிஸைக் குதிரைகளின் கடிவாளத்தைப் பிடித்துக் கொள்ளும்படி அழைத்தான். அவனது அழைப்பைச் செவிமடுத்த செப்ரியோனிஸூம் ஒப்புக் கொண்டான். மின்னும் தன் தேரிலிருந்து பேரொலி எழுப்பிக் கொண்டு ஹெக்டரே கீழே குதித்தான். பக்கத்திலிருந்த ஒரு பாறையைத் தூக்கிக்கொண்டு ட்யூஸர் இருந்த இடத்தை நோக்கி அவனைக் கொன்றுவிடுவது என்ற முடிவோடு நேராகச் சென்றான்.

தன் அம்பறாத்தூணியில் இருந்து ஒரு கூரம்பை எடுத்தான் ட்யூஸர். அதை நாணில் வைத்து இழுத்தான். அம்பைத் தன்னை நோக்கி இழுத்து முறுக்கேற்றிக் கொண்டிருந்தபோது ஹெக்டரின் கூர்மையான முனைகள் கொண்ட பாறை அவனது தோளில் தாக்கியது. அவனது கழுத்துப் பட்டையையும் தோளையும் இணைக்கும் பலவீனமான இடமது. வில் உடைந்தது. அவனது விரல்களும் கைமுட்டியும் மரத்துப் போயின. மண்டியிட்டவாறு அவன் கீழே சாய்ந்தான். அவனது கையில் இருந்து வில் கீழே விழுந்தது. ஆனால் தன் சகோதரனின் சரிவை அஜாக்ஸ் கவனிக்கத் தவறவில்லை. ஓடிச்சென்று ட்யூஸரை மறைத்துக் கொண்டு நின்ற அவன் தன் கேடயத்தால் அவனை மூடினான். அதன்பின், அவனது நம்பிக்கையான தோழர்களான மெசிஸ்டியூஸ் மற்றும் கடவுளையொத்த அலாஸ்டர் இருவரும் ட்யூஸரைத் தம் தோளில் தாங்கிய வண்ணம் தூக்கிக் கொண்டு சென்றனர். உட்குழிந்த கப்பல்களுக்கு எடுத்துச் செல்லப்படுகையில் கடுமையான வேதனையில் ட்யூஸர் முனகிக் கொண்டு இருந்தான்.

ஒலிம்பிய ஜீயூஸ் இப்பொழுது ட்ரோஜன்களின் மனத்தில் மீண்டும் வீரமூட்டினான். தாங்கள் தோண்டி வைத்திருந்த ஆழமான அகழிவரை கிரேக்கர்களை அவர்கள் விரட்டினர். புளகாங்கிதமடைந்த வலிமைவாய்ந்த ஹெக்டர், முன்னணியில் இருந்து அவர்களை வழிநடத்தினான். தன் பக்கவாட்டுப்

பகுதியையும் பின்பக்கத்தையும் அடித்துக்கொண்டு, உச்ச ஸ்தாயியில் குரைத்துக்கொண்டே சிங்கத்தை அல்லது ஆண் காட்டுப்பன்றியைத் திரும்பித் திரும்பி விடாமல் துரத்தும் ஒரு வேட்டை நாயைப்போல, கிரேக்கர்களைத் துரத்திக்கொண்டு, பின்னால் சென்றவர்களையெல்லாம் கொன்று கொண்டே ஹெக்டர் சென்றான். ட்ரோஜன்களால் கடுமையான இழப்புக்கு உள்ளானவர்களாக, பரபரப்பாகவும் பதற்றமுடனும் கிரேக் கர்கள் அகழியைச் சுற்றிக் கட்டி வைத்திருந்த கம்பு வேலிகளைத் தாண்டி அகழியின் குறுக்கே ஓடினர். தங்களது கப்பல்களைச் சென்றடையும்வரை அவர்கள் நிற்கவில்லை. அங்கே அவர்கள் நின்று ஒருவரையொருவர் உதவிக்கு அழைத்தார்கள். ஒவ்வொரு வீரனும் தன் கைகளை உயர்த்தி தன் மனதைக்கொட்டி கடவுள் களிடம் பிரார்த்தனை செய்தான். ஆனால் அங்கே அழகான பிடரிகளைக் கொண்ட தன் குதிரைகளை இப்படியும் அப்படியும் திருப்பி நோட்டம்விட்ட வண்ணம் ஹெக்டர் இருந்தான். அவனது பார்வை கோர்கோவினதைப் போல அல்லது கொலைகார போர்க்கடவுளினதைப் போ்ல இருந்தது.

அவர்களைப் பார்த்து வெண்ணிறக் கைகள் கொண்ட ஹீரா இரக்கம் கொண்டாள். அவசரமாக அதீனியிடம் அவள் சொன்னாள்.

'புயல் மேகங்களைச் செலுத்தும் ஜீயூஸின் மகளே, இது ரொம்ப மோசமானது. இந்தக் கடைசி நேரத்திலாவது கிரேக்கர்கள் கொல்லப்படுவதைத் தடுக்க நாம் தலையிட முடியாதா? ஒரு மனிதனின் மூர்க்கத்தனமான தாக்குதலினால் வெட்டப்பட்டுப் பரிதாபகரமான அழிவுக்கு அவர்கள் தள்ளப்படுகிறார்கள். ஹெக்டர் இதுவரை என்ன செய்திருக்கிறான் என்று பார்! அவனது வெறி பிடித்த இந்தத் தாக்குதலில் இருந்து அவனைத் தடுத்து நிறுத்துவது எதுவும் இல்லை.'

சாம்பல் நிறக்கண்ணாள் தேவதை அதீனி சொன்னாள்.

'இந்த வெறித்தனமான தாக்குதல் சீக்கிரமே ஒரு முடிவுக்கு வந்து, கிரேக்கர்களின் கையால் தன் தந்தை நாட்டு மண்ணிலேயே அவன் சாவதைத் தவிர வேறெதுவும் என் மனதுக்கு அதிகமான சந்தோஷம் தராது. ஆனால் என் தந்தையோ ஒரு பைத்தியக்கார கெட்ட மனநிலையில் இருக்கிறார். பிடிவாதமான அந்தக் கிழட்டு ஈனன் என் திட்டங்களையெல்லாம் பாழாக்கிவிடுகிறார்.

அவரது மகனான ஹெராக்ளிஸுக்கு யூரிஸ்தியூஸ் கொடுத்த அதி கடினமான வேலைகளைச் செய்ய முடியாமல் அவன் இருந்த போது, எத்தனையோ முறை நான் அவனுக்கு உதவி செய்திருக்கிறேன் என்பதையெல்லாம் அவர் மறந்துவிட்டார். ஹெராக்ளியூஸ் வானத்தை நோக்கிச் சிணுங்கினால் போதும், உடனே ஜீயூஸ் என்னை விரைந்து அனுப்பித் தொல்லையிலிருந்து அவனை விடுவித்து வருமாறு உத்தரவு கொடுப்பார். ஈரிபஸ்ஸின் ஆழத்திலிருந்து நரகத்தின் வேட்டை கொண்டு வருவதற்காக, (பாதாள உலகின்) வாயில் கதவுகளின் பாதுகாவலனாகிய ஹயடிஸின் வீட்டுக்கு ஹெராக்ளியூஸை யூரிஸ்தியூஸ் அனுப்பினான். என் தீர்க்கதரிசன உள்ளம் மட்டும் இப்படியெல்லாம் நடக்கும் என்று ஓர் எச்சரிக்கை கொடுத்திருந்தால், நான் ஸ்டிக்ஸ் ஆற்றின் வெள்ளத்தை மறுபடி அவன் கடந்து வர முடியாதபடிச் செய்திருப்பேன்.

ஆனால் ஜீயூஸ் என்னை இப்பொழுது வெறுக்கிறார். தீட்டிஸ் மனம் போனபடியெல்லாம் செய்ய அனுமதிக்கிறார். ஏனென்றால் அவள் அவரின் முழங்கால்களில் முத்தமிட்டுவிட்டாள். அவரது மோவாயைத் தன் கரங்களில் எடுத்து வைத்துக்கொண்டு கெஞ்சினாள். நகரங்களை அழிக்கும் அக்கிலிஸுக்கு கௌரவம் கொடுக்கும்படி வேண்டினாள். ஆனால் சாம்பல் நிறக்கண் கொண்ட என்னருமை மகளே என்று அவர் என்னை அழைக்கும் நாள் விரைவில் வரும். சரி, நான்.புயல் மேகங்களைச் செலுத்தும் ஜீயூஸின் அரண்மனைக்குச் சென்று போருக்குத் தயாராக வேண்டும், நீ குதிரைகளைத் தயார் செய். நாம் இருவரும் போர்க்களத்தில் தோன்றும்போது, மின்னும் தலைக்கவசம் கொண்ட ப்ரியமின் மகனான இந்த ஹெக்டர் மகிழ்கிறானா அல்லது கிரேக்கக் கப்பல்களின் அருகில் பிணமாக ட்ரோஜன்கள் விழ, அவர்களின் கொழுப்பும் சதையும் நாய்களுக்கும் பறவைகளுக்கும் உணவாக ஆகப்போகின்றனவா என்று நான் பார்க்க விரும்புகிறேன்.'

அவள் சொன்னதை வெண்ணிறக் கைகள் கொண்ட ஹீரா ஏற்றுக் கொண்டாள். மாட்சிமை பொருந்திய இந்த தேவதை, மஹா க்ரோனஸின் மகள் தங்கத் தலைப்பட்டைகள் கொண்ட தன் குதிரைகளைத் தயார் செய்யக் கிளம்பிச் சென்றாள். புயல் மேகங்களைச் செலுத்தும் ஜீயூஸின் மகளாகிய அதீனி, தந்தையின் வீட்டு வாயிலுக்கு வந்து, தன் கையாலேயே செய்த மிருதுவான ஜரிகை வேலைப்பாடுகள் கொண்ட மேலங்கியைக்

கழற்றிவிட்டு, முழங்காலளவு வரும் குறுங்கைத் தளருடையை அணிந்து கொண்டாள். அதற்கு மேல், போருக்கு ஆயத்தமாக, அதன் எல்லாவிதமான மனத்துயரங்களுடன், புயல் மேகங்களை அணிவகுத்துச் செலுத்தும் ஜீயூஸின் போர்க்கவசத்தை அணிந் தாள். நெருப்பைப் போன்ற தேரில் ஏறினாள். எல்லாம் வல்ல தந்தையின் மகளாகிய அவள் கோபமாக இருக்கும்போது பயன்படுத்தும், வீரர்களின் அணி வகுப்பை உடைக்கும் நீண்ட கனமான தடித்த ஈட்டியை எடுத்தாள். குதிரைகளைச் சாட்டை யால் சொடுக்கிக் கிளப்ப உடனே ஹீரா முன்னே சாய்ந்தாள். ஒலிம்பஸ் மலையின் வாயில் கதவுகள் அவர்களுக்காக இடி முழக்கத்துடன் தாமாகவே திறந்து வழிவிட்டன. கடினமான மேகங்களால் ஆன அந்த கதவுகளைத் திறப்பதும் மூடுவதுமான பணியை வானத்துக்கும் ஒலிம்பஸ் மலைக்கும் பாதுகாவலாக இருந்த சீசன்கள்* செய்து வந்தனர். இந்தக் கதவுகள் வழியாக தேவதைகள் இருவரும் சாட்டை சொடுக்கிக் குதிரைகளைச் செலுத்தினர்.

அய்டா மலையில் இருந்து அவர்களைப் பார்த்த தந்தை ஜீயூஸ் சினமடைந்தான். உடனே தங்கச் சிறகுகள் கொண்ட அய்ரிஸை அழைத்து அவர்களிடம் சொல்லச் சொல்லி ஒரு செய்தியைச் சொன்னான்:

'உடனே போ விரைவுப்பாத அய்ரிஸ்! அவர்களைத் திரும்பி வரச்செய். அவர்கள் என்னை நேருக்கு நேர் சந்திக்க வேண்டாம். என்னோடு அவர்கள் சண்டையிடுவது அவர்களுக்கு நல்லதல்ல. நான் மிகத்தெளிவாகவும் வெளிப்படையாகவும் ஒன்றைச் சொல்ல விரும்புகிறேன். அவர்கள் செலுத்திக்கொண்டிருக்கும் விரைவுக் குதிரைகளை வெட்டி முடமாக்கிவிடுவேன். அவர்கள் இருவரையும் தேரிலிருந்து கீழே தூக்கி எறிந்து, தேரைச் சுக்கு நூறாக்கிவிடுவேன். எனது இடியாயுதம் ஏற்படுத்தப் போகும் காயம் ஆற பத்தாண்டுகளானாலும் போதாது அவர்களுக்கு. தகப்பனையே எதிர்த்து நின்றால் என்னாகும் என்ற பாடத்தை என் சாம்பல் நிறக்கண் மகளுக்கு அது சொல்லித்தரும். ஹீராவைப் பொருத்தவரை, எனக்கு அதிகம் கோபமோ காயமோ இல்லை. என்னை எதிர்ப்பதென்பது அவளுக்கு இயற்கையாக வருவது.

---

* சீசன்கள் அதீனி, ஹீரா என்பதுபோல சீசன்கள் என்பதும் இங்கே காவல் காப்பவர்களின் பெயர்களாகப் பயன்படுத்தப்படுகிறது.

அவன் அப்படிப் பேசியதும் காற்றைப்போல விரைந்து தன் பணியை ஆற்றச் சென்றாள் அய்ரிஸ். அய்டா மலையின் சிகரங்களிலிருந்து ஒலிம்பஸ் மலைக்கு வந்திறங்கினாள் அவள். அதன் கரடுமுரடான உயரங்களில் அந்த இரு தேவதைகளையும் அவள் சந்தித்தாள். அவர்களை நிறுத்தி ஜீயூஸின் உத்தரவுகளைச் சொன்னாள்.

'எங்கே விரைந்துகொண்டிருக்கிறீர்கள்? இந்தப் பைத்தியக்காரத் தனமான பயணத்தின் நோக்கம் என்ன? கிரேக்கர்களுக்கு நீங்கள் உதவக்கூடாது என்று க்ரோனஸின் மகன் கூறுகிறார். அச்சம் தருவதாக அவர் சொல்வதைக் கேளுங்கள்; அவர் சொன்னதைச் செய்துவிடுவார். நீங்கள் செலுத்திக்கொண்டிருக்கும் விரைவுக் குதிரைகளை வெட்டி முடமாக்கிவிடுவார். உங்களிருவரையும் தேரிலிருந்து கீழே தூக்கி எறிந்து, தேரைச் சுக்கு நூறாக்கிவிடு வார். அவரது இடியாயுதம் ஏற்படுத்தப் போகும் காயம் ஆற பத்தாண்டுகளானாலும் போதாது உங்களுக்கு. தகப்பனையே எதிர்த்து நின்றால் என்னாகும் என்ற பாடத்தை அவருடைய சாம்பல் நிறக்கண் மகளுக்கு அது சொல்லித்தரும். ஹீராவைப் பொருத்தவரை, அவருக்கு அதிகம் கோபமோ காயமோ இல்லை. அவரை எதிர்ப்பதென்பது அவளுக்கு இயற்கையாக வருவது. ஆனாலும் அச்சமேற்படுத்தும் இந்த ஈட்டியை ஜீயூஸுக்கு எதிராக நீ பயன்படுத்த நினைப்பாயானால், வெற்று முகம் காட்டும் பெண் நாயே, நீ வெகு தூரம் சென்றுவிட்டதாக அர்த்தம்.'

இந்த வார்த்தைகளைச் சொல்லிவிட்டு விரைவுப்பாத அய்ரிஸ் சென்றாள். அதன்பின் அதீனியிடம் ஹீரா சொன்னாள்

'புயல் மேகங்களைச் செலுத்தும் ஜீயூஸின் மகளே அருமை அதீனி, நான் என் மனதை மாற்றிக்கொண்டு விட்டேன். மனிதர் களுக்காக ஜீயூஸிடம் சண்டைபோட நாம் போகக்கூடாது. யார் இருப்பது யார் இறப்பது என்பதை விதி முடிவு செய்யட்டும். ட்ரோஜன்களுக்கும் கிரேக்கர்களுக்கும் மத்தியில் ஜீயூஸ் முடிவு செய்யட்டும். அதுதான் சரி.'

இப்படிச் சொல்லிவிட்டுத் தன் தேரைத் திருப்பினாள் அவள். சீசன்கள் அழகான பிடரிகளைக்கொண்ட அவளது குதிரைகளை அவிழ்த்தனர். அமுத உணவு போடப்பட்டு வைத்திருந்த தீவனப் பெட்டியோடு அவற்றைச் சேர்த்துக் கட்டினர். வெள்ளை யடிக்கப்பட்டிருந்த முற்றத்தின் சுவர்களில் தேரைச் சாய்த்து

வைத்தனர். இரண்டு பெண் கடவுள்களும் மற்ற கடவுளரோடு போய்ச் சேர்ந்து கொண்டார்கள். அதிருப்தியடைந்தவர்களாக, தங்க நாற்காலிகளில் அமர்ந்தார்கள்.

இதற்கிடையில், தந்தை ஜீயூஸ் அய்டா மலையை விட்டுப் புறப்பட்டுத் தன் தேரைய்ும் குதிரைகளையும் அதி விரைவாக ஓட்டி ஒலிம்பஸ் மலையை அடைந்து கடவுளர்கள் இருக்கை இருக்கும் இடத்துக்கு வந்தான். பிரபலமான நிலநடுக்கக் காரனான பொஸைடன் தன் குதிரைகளை நுகத்தடியிலிருந்து விடுவித்தான். தன் தேரை அதன் நிலையில் வைத்து அதை ஒரு துணியால் மூடினான். தூரத்து இடிமுழக்கக் கடவுளான ஜீயூஸ் தனது தங்க அரியணையில் அமர்ந்தான். அவனது பாதங்களில் கீழ் நடுங்கியது மகா ஒலிம்பஸ் மலை.

தனித்து அமர்ந்திருந்த அதீனியும் ஹீராவும் ஜீயூஸிடம் ஒன்றும் சொல்லவில்லை. எந்தக் கேள்வியும் கேட்கவில்லை. ஆனால் அவர்கள் மனத்தில் என்ன போய்க்கொண்டிருந்தது என்பதை அறிந்த அவன் சொன்னான்:

‘அதீனி, ஹீரா நீங்கள் இருவரும் ஏன் இப்படி அதிருப்தி யுற்றிருக்கிறீர்கள்? மானிடர்க்குப் புகழ்சேர்க்கும் போர்க்களத்தில் நீங்கள் தீவிரமாக வெறுக்கும் ட்ரோஜன்கள் பலரைக் கொன்றீர்கள். அந்தப் போர்க்களம் உங்களைக் களைப்படையச் செய்திருக்க முடியாது. ஒலிம்பஸ் மலைவாழ் எல்லாக் கடவுள்களும் சேர்ந்தாலும் என் போக்கிலிருந்து என் மனதை மாற்ற முடியாது. எனது தீர்மானமும் அழிக்கமுடியாத ஆற்றலும் அப்படிப்பட்டது. போர்க்களத்தையும் அதன் இரக்கமற்ற பயங்கரங்களையும் பார்க்கு முன்னரே உங்களது ஒவ்வொரு மின்னும் உடல் உறுப்புகளும் நடுங்கிக்கொண்டிருந்தன. நான் இப்பொழுது உங்களிடம் ஒன்றை வெளிப்படையாகச் சொல்லு கிறேன். கடவுளர் வாழும் ஒலிம்பஸ் மலைக்கு உங்கள் தேரில் நீங்கள் திரும்பி வந்திருக்க முடியாது. நான் மட்டும் விரும்பி யிருந்தால், எனது இடியாயுதம் உங்கள் தேரை அழித்திருக்கும்.’

அவன் அப்படிச் சொன்னதும் அதீனியும் ஹீராவும் தங்களுக்குள் ரகசியமாக ஏதோ முனகிக்கொண்டனர். அவர்களிருவரும் அருகருகே அமர்ந்து ட்ரோஜன்களுக்கு எதிராகத் திட்டம் தீட்டிக் கொண்டிருந்தனர். அதீனி எதுவுமே சொல்லாமல் மௌனம் காத்தாள். ஆனால் தந்தை ஜீயூஸைக் கோபத்துடன் முறைத்துப்

பார்த்தாள். ஆனால் ஹீராவால் தன் கோபத்தை அடக்கிக் கொள்ள முடியவில்லை. அவள் பேசினாள்.

'க்ரோனஸின் அச்சமூட்டும் மகனே! இப்பொழுது நீங்கள் என்ன சொல்லவருகிறீர்கள்? உங்களை யாராலும் வெல்ல முடியாது என்று எங்கள் அனைவருக்கும் தெரியும். ஆனால் கிரேக்க ஈட்டி யெறி வீரர்களுக்காக நாங்கள் வருத்தப்படுகிறோம். அவர்கள் அழிவெனும் பரிதாபமான முடிவுக்கு விடப்பட்டுள்ளார்கள். எனினும், உங்கள் உத்தரவுப்படி நாங்கள் போரிடமாட்டோம். அதற்குப் பதிலாக, கிரேக்கர்களுக்கு உதவிகரமான ஆலோசனை களை வழங்குவதில் மனதைச் செலுத்துவோம். உங்களுடைய கோபத்தின் பொருட்டு அவர்கள் துயரப்படக்கூடாது.'

புயல் மேகங்களை அணிவகுத்துச் செல்ல வைக்கும் ஜீயூஸ் சொன்னான்:

'எருதுக் கண்ணாளே சீமாட்டி ஹீரா, நீ விரும்பினால், நாளை விடியலில், கிரேக்கப் படைகளின் பெரும் பகுதியை இன்னும் பலமாக அழிக்கும் ஜீயூஸை நீ பார்க்கலாம். இறுமாப்பு கொண்ட ஹெக்டர் தன் எதிரிகளுக்கு ஓய்வு கொடுக்க மாட்டான். இறந்து கிடக்கும் பெட்ரோக்குலஸின் உடலைச் சுற்றி நம்பிக்கை இழந்தவர்களாக கிரேக்கர்கள் தங்கள் கப்பல்களின் பின்பகுதி களின் நின்று சண்டையிட்டுக் கொண்டிருப்பார்கள். மறுபடி கிரேக்கக் கப்பல்களின் பக்கம் போரிட அன்றைக்கு வருவான் விரைவுப்பாத அக்கிலிஸ். 'இது தெய்வீக விதியாகும். இவ்விஷ யத்தில் உனது கோபம் என்னை அசைக்காது. நீ நீர் நிலம் ஆகியவற்றின் அடிமட்டம் வரை போகலாம். அங்கே ஹைபீரிய சூரியனின் கதிர்களோ தென்றல்களோ வீசாத டார்டாரஸின் ஆழங்களில் அமிழ்ந்து அமர்ந்திருக்கும் எனது பழைய எதிரிகளான டைட்டன்களான அயாபீடஸ், க்ரோனஸ் ஆகி யோரைச் சந்திக்கலாம். நீ அவ்வளவு தொலைவு சென்று சுற்றித் திரிந்து வந்தாலும் உன் வெறுப்பு என்னை ஒன்றும் செய்யாது. உன்னைப் போன்ற ஒரு பெண் நாய் இங்கு வேறு யாருமில்லை.'

அவன் அப்படிச் சொன்னதற்கு வெள்ளைக்கை ஹீரா பதிலொன் றும் சொல்லவில்லை. பயன் தரும் பூமியின் குறுக்கே தன் பின்னால் இருளை இழுத்துக்கொண்டு பிரகாசமான சூரிய விளக்கு கடலுள் வீழ்ந்தது. அந்த நாள் முடிவதை ட்ரோஜன்கள் விரும்பவில்லை. ஆனால் கிரேக்கர்களுக்கோ, அவர்களின்

மனம் விரும்பிய இரவானது அவர்களின் பிரார்த்தனைக்கான பதில் போல வந்தது.

கிரேக்கக் கப்பல்களின் பக்கமிருந்து ட்ரோஜன்களை அழைத்தான் புகழ்மிகு ஹெக்டர். சுழன்றோடும் ஆற்றின் அருகில் ஒரு சந்திப்புக்கு ஏற்பாடு செய்தான். அது ஒரு பிணங்களற்ற திறந்த மைதானமாக இருந்தது. ஜீயூஸுக்கு உகந்த ஹெக்டர் என்ன சொல்லப் போகிறான் என்பதைக் கேட்க ட்ரோஜன் வீரர்கள் தம் தேர்களிலிருந்து இறங்கினர். ஐந்து பதின்மான அளவுகள் நீளமான ஒரு ஈட்டியை அவன் ஏந்தி வந்தான். வெண்கல முனை அவன் முன் மின்னியது. அதன் கைப்பிடிக்குழியை ஒரு தங்க மோதிரம் மூடியது. தன் ஈட்டியின்மீது சாய்ந்துகொண்டு அவன் தன் படையினரைப் பார்த்துப் பேசினான்:

'ட்ரோஜன்களே, டார்டானியர்களே, ஆதரவாளர்களே! நான் சொல்வதைக் கவனமாகக் கேளுங்கள். காற்றடிப்பு மிகுந்த இலியம் நகருக்குள் மீண்டும் செல்வதற்கு முன் கிரேக்கர்களையெல்லாம் அவர்களின் கப்பல்களோடு அழித்தொழித்துவிட நான் எண்ணினேன். ஆனால் இரவு வந்து அதைத் தடுத்துவிட்டது. இரவுதான் மற்ற எதைவிடவும் கிரேக்கர்களையும் அவர்களது கடற்கரையோர கப்பல்களையும் காப்பாற்றியிருக்கிறது. இப்பொழுது இரவு சொல்லுகின்றபடி, சாப்பிடத்தான் நம்மால் முடியும். அழகிய பிடரிகள் கொண்ட உங்கள் குதிரைகளை அவிழ்ந்து விட்டு அவற்றுக்கு உணவளியுங்கள். விரைவாக நகருக்குள் சென்று கால்நடைகளையும் கொழுத்த செம்மறியாடுகளையும் கொண்டு வாருங்கள். உங்கள் வீடுகளிலிருந்து இனிய மதுவையும் ரொட்டியையும் கொண்டு வந்து வைத்துக்கொள்ளுங்கள்.

பின் தேவையான அளவுக்கு விறகு சேகரியுங்கள். இரவு முழுவதும் நிறைய நெருப்பு எரிய வேண்டும். விடியும் வரை அவை வானத்தை வெளிச்சமாக்க வேண்டும். இருளை மீறி, கடலின் பின்புற வழியாக நீள்முடிகொண்ட கிரேக்கர்கள் தப்பித்து ஊருக்குப் போக அனுமதிக்கக் கூடாது. அவர்கள் ஓய்வாக இருக்கும் தருணத்தில் கப்பலேறிச்செல்ல நாம் அனுமதிக்கக் கூடாது. அவர்கள் ஊருக்குப் போனபிறகு ஒவ்வொருவரும் நினைத்துப் பார்ப்பதற்கு வசதியாக நாம் ஒவ்வொருவருக்கும் கொடுக்க வேண்டும் ஓர் அம்பு அல்லது கூரான ஈட்டி எதாலாவது அவர்கள் கப்பலில் ஏறித் தப்பிக்க

முயலும்போது முதுகில் கொடுத்தனுப்ப வேண்டும். குதிரைகளை அடக்கும் ட்ரோஜன் வீரர்களோடு இனிமேல் அவர்கள் போர் செய்ய விரும்பினால் என்ன நடக்கும் என்ற பாடத்தை அவர்கள் கற்றுக்கொள்ள வேண்டும். இனி அவர்கள் எதையும் செய்யத் துணியுமுன் ஒன்றுக்கு இருமுறையாகச் சிந்திக்க வேண்டும்.

இலியம் நகருக்குள்ளும், நமது இளைஞர்களையும் முடி வெளுத்த வயதானவர்களையும் நகர் முழுதும், கடவுள்கள் நமக்குக் கட்டிக்கொடுத்த சுவர்கள் அனைத்தையும் சுற்றி முகாமடிக்கச் சொல்லி நமது அறிவிப்பாளர்களைச் சொல்லச் சொல்ல வேண்டும். நமது பெண்கள் ஒவ்வொரு வீட்டிலும் பெரும் ஜ்வாலைகளை எரிய விடவேண்டும். இதுமட்டுமின்றி, நமது படையினர் தூரமாக இருக்கும்போது, எதிரிகள் உள்ளே நுழைந்துவிடாதபடி வழக்கமான நகரப் பாதுகாவலர்களும் நகரைச் சுற்றிக் குதிரைகள் மீதேறிக் கண்காணித்து வரவேண்டும். பெருமனம் கொண்ட ட்ரோஜன் வீரர்களே, இவைதான் எனது உத்தரவுகள். நிறைவேற்றுங்கள்.

இப்போதைய தேவைக்கான உத்தரவுகள் இவைதான். நாளைக்காக நான் இப்பொழுது சொல்வதைக் கேளுங்கள். மரணத்தின் பேய்களால் இங்கு கொண்டுவரப்பட்ட சபிக்கப் பட்ட இந்த நாய்களை அவர்கள் வந்த கருப்புக் கப்பல்களிலேயே திருப்பி விரட்டியடிக்க முடியும் என்ற நல்ல நம்பிக்கையில் ஜீயூஸிடமும் மற்ற கடவுள்களிடமும் நான் பிரார்த்தித்துக் கொள்கிறேன். இரவினிலே, நமது நிலையை நாம் கண்காணித்து வரவேண்டும். ஆனால் விடிந்ததுமே, போருக்கு ஆயத்தமாக நாமனைவரும் போரின் கடுமையை அந்த உட்குழிந்த கப்பல்களில் அவிழ்த்துவிட வேண்டும். அதன்பிறகு, வல்லமை மிக்க டைடியூஸின் மகனாகிய டயமீடிஸ் கப்பல்களின் பக்க மிருந்து இலியம் நகரின் சுவர்களை நோக்கி என்னை விரட்டுகிறானா அல்லது எனது ஈட்டியின் மூலமாக அவனை நான் கீழே சாய்த்து அவனுடைய ரத்தம் தோய்ந்த ஆடைகளை எடுத்துச் செல்கிறேனா என்று பார்க்கலாம். எனது ஈட்டிக்கு முன் நிற்கும் தகுதி அவனுக்கு இருக்கிறதா என்று விடிந்ததும் அவனுக்குத் தெரிந்துவிடும். நாளைக்காலை சூரியன் மேலே எழும்போது, அனேகமாக முதல் வரிசையில் அவனும் அவ னுடைய படைப்பிரிவினரும் பிணங்களாக அவனைச் சுற்றிக்

கிடப்பர். இதுதான் நடக்கப் போகிறது. அதீனி அல்லது அப்போலோ கௌரவிக்கப் பட்டதைப் போல, சாவின்மையும் நித்திய இளமையும் இருப்பது நிச்சயமாக எனக்குத் தெரிந்து விட்டதென்றால், இந்த நாள் கிரேக்கர்களுக்கு ஒரு துயர நாளாக இருக்கும் என்று நிச்சயமாகச் சொல்வேன்.'

ஹெக்டர் அப்படிப் பேசியதும் ட்ரோஜன் வீரர்கள் பெருத்த குரலில் அதை ஆமோதித்தனர். வியர்க்கும் தம் குதிரைகளை நுகத்தடி களிலிருந்து விடுவித்தனர். ஒவ்வொருவரும் அவைகளைத் தம் தேருக்கு அருகில் பட்டைகளால் கட்டினர். உடனே விரைந்து சென்று கால்நடைகளையும் கொழுத்த செம்மறியாடுகளையும் நகரிலிருந்து கொண்டு வந்தனர். தத்தம் வீடுகளிலிலிருந்து இனிய மதுவும் ரொட்டியும் கொண்டு வந்தனர். தேவையான விறகையும் சேகரித்தனர். விரைவிலேயே அவர்கள் கொடுத்த பலிகளின் மணத்தை வானத்துக்கு எடுத்துச் சென்றது தென்றல் காற்று.

இரவெல்லாம், நம்பிக்கையில் மிதந்த அவர்கள் போர்க்கள அணிவகுப்பு வரிசையில் அமர்ந்திருந்தனர். நிறைய தீ நாக்குகள் எரிந்தன. பிரகாசமான சந்திரனைச் சுற்றி நட்சத்திரங்கள் தம் ஒளியில் தனித்துத் தோன்றுவதைப்போல, மேலே உள்ள காற்று அசையாமலிருக்கும்போது, ஒவ்வொரு இடமும், மலையும், காட்டுப் பகுதிகளும் தனித்து நிற்கும்போது, வானத்திலிருந்து மேல்காற்று வெள்ளம் போலக் கீழிறங்கி வரும்போது, ஒவ்வொரு நட்சத்திரமும் கண்ணுக்குத் தெரியும்போது, ஒவ்வொரு மேய்ப்பனும் மனம் மகிழும்போது, கிரேக்க கப்பல்களுக்கும் ஸ்கமாண்டர் ஆற்றின் ஓடைகளுக்கும் நடுவில் ட்ரோஜன்கள் ஏற்றிய ஏகப்பட்ட தீப்பந்தங்கள் எரிந்தன. சமவெளியில் மட்டும் ஆயிரம் பந்தங்கள் எரிந்துகொண்டிருந்தன. ஒவ்வொரு நெருப்பு மூட்டலைச் சுற்றியும் ஐம்பது வீரர்கள் ஜ்வாலையின் ஒளியில் அமர்ந்திருந்தனர். வெள்ளை வால்கோதுமையையும் கம்பையும் மென்றுகொண்டு, தங்க அரியணையில் விடியலின் வருகையை எதிர்பார்த்து, குதிரைகள் தம் தேர்களுக்கு அருகில் நின்றன.

# அக்கிலிஸுக்குத் தூது

**கதைச்சுருக்கம்**

***வரிகள் 01 - 181***

*(26ம் நாளுக்கு முந்தைய மாலையும் இரவும்). அகமெம்னன் தவிக்கிறான். அக்கிலிஸிடம் மன்னிப்புக் கேட்கும் திட்டம் ஒன்றை நெஸ்டர் முன்வைக்கிறான். என்ன நஷ்டஈடு கொடுப்பது என்பதைப் பற்றிய குறிப்பை வரைகிறான் அகமெம்னன். ஃபீனிக்ஸ், ஒடிஸியூஸ், • அஜாக்ஸ் ஆகியோர் அடங்கிய தூதுக்குழு அனுப்பப்படுகிறது.*

***வரிகள் 182 - 429***

*தூதுக்குழுவினரை வரவேற்று உபசரிக்கிறான் அக்கிலிஸ். அக்கிலிஸின் இரக்க மனதுக்கு ஒரு வேண்டுகோளுடன் திட்டத்தை எடுத்துரைக்கிறான் ஒடிஸியூஸ். ஆனால் அக்கிலிஸ் அவர்களின் கோரிக்கையை முற்றிலுமாக நிராகரிக்கிறான். மறுநாளே ஊர் திரும்ப இருப்பதாகவும் சொல்கிறான்.*

***வரிகள் 430 - 622***

*அக்கிலிஸின் வீட்டுக்குத் தான் வந்தது, அங்கு அக்கிலிஸை தான் உருவாக்கியது பற்றியெல்லாம் நினைவூட்டி, அவன் மனதை மாற்ற ஃபீனிக்ஸ் முயல்கிறான். பிரார்த்தனைக்கான கடவுள் களின் பெயரில் தான் அவனை வேண்டுவதாகவும் கூறி, பரிசுப் பொருள்களை மறுத்த மெலீஜரின் கதையையும் கூறுகிறான்.*

தான் வீட்டுக்குத் திரும்ப இருப்பதைப் பற்றி மறுபரிசீலனை செய்வதாக அக்கிலிஸ் கூறுகிறான்.

**வரிகள் 622 – 655**

நட்பின் பெயரில் அஜாக்ஸ் அக்கிலிஸை வேண்டிக் கொள்கிறான். ட்ரோஜன்களால் தனது கப்பல்களுக்கு அச்சுறுத்தல் எதுவும் ஏற்படின், மறுபடியும் தான் போர்செய்யத் திரும்புவது பற்றி யோசிக்கலாம் என்று அக்கிலிஸ் கூறுகிறான்.

**வரிகள் 656 – 713**

தூதுக்குழுவினர் திரும்பி வந்து தம் தோல்வியை ஒப்புக் கொள்கின்றனர். தூதுக்குழு அனுப்புவதெல்லாம் நேரத்தை வீணாக்கும் வேலை என்றும் தாங்களே தொடர்ந்து போர் செய்ய வேண்டியதுதான் என்றும் டயமீடிஸ் கூறுகிறான்.

# அக்கிலிஸுக்குத் தூது

ட்ரோஜன் வீரர்கள் விழிப்புடன் காத்திருந்தனர். ஆனால் கிரேக்கப் படைகளோ தப்பிக்க வேண்டுமே என்ற ஜில்லிடும் எண்ணத்திலும் பதற்றத்திலும் இருந்தன. தலைவர்களனைவரும் தமக்கு ஏற்பட்ட ஆறுதல் சொல்லமுடியாத பேரிழப்புகளை எண்ணி கடும் துயரத்தில் இருந்தனர். நிரம்பியிருந்த கடலைக் கொந்தளிக்கச் செய்ய, த்ரேஸில் இருந்து வடக்கு மேற்குக் காற்றுகள் திடீரென்று புயல்போல இறங்கின. இருண்ட அலைகளின் தலையில் வெண்குதிரைகளால் தொப்பி போட்டன. கடற்கரையை ஒட்டி கடல் அழுக்குகள் நுரையாகக் குவிந்தன. இவ்விதமாக கிரேக்கர்களின் மனவுறுதி சிதைந்தது.

ஏமாற்றத்துடன் அங்குமிங்கும் அலந்து கொண்டிருந்த அகமெம்னன் தெளிவான குரல் கொண்ட தன் கட்டியக்காரர் களை அழைத்து, ட்ரோஜன்கள் உஷாராகாத அளவுக்கு, குறைந்த சப்தத்தில், ஒவ்வொரு வீரனையும் அவனுடைய பெயரைச் சொல்லி ஒரு ரகசியக் கூட்டத்துக்கு அழைத்து வரச் சொன்னான்: இதில் அவனே முக்கிய பங்கு வகித்தான். வீரர்களும் மனதுடைந்துபோய் வந்து குழுமினார்கள். செங்குத்தான பாறையின் குறுக்கே சொட்டுச் சொட்டாக வடியும் கருப்பு நீரைப்போல அழுதுகொண்டே எழுந்தான் அகமெம்னன். பெருமூச்சு விட்டவண்ணம் அவன் கிரேக்கர்களைப் பார்த்துக் கூறினான்

'நண்பர்களே, ஆட்சியாளர்களே, கிரேக்கத் தலைவர்களே! க்ரோனஸின் மகனான ஜீயூஸ் என்னைக் கடுமையாக ஏமாற்றி விட்டார். நசுக்கிப் போடும் அடி இது. நாம் இலியம் நகரை அதன்

அருமையான சுவர்களுடன் அழித்து நம் நாட்டுக்குத் திரும்பு வோம் என்று ஒருமுறை அந்த வக்கிரம் பிடித்த கடவுள் என்னிடம் உறுதி கூறினார். ஆனால் அவருடைய ஆலோசனை ஒரு கெட்ட ஏமாற்று வேலை என்று இப்பொழுது தெரிகிறது. என் படையில் பாதி அழிந்துவிட்டது. ஆனால் நான் அர்கோஸுக்கு அவமானத்துடன் திரும்பிச் செல்ல வேண்டும் என்று இப்பொழுது அவர் கூறுகிறார். எத்தனையோ நகரங்களின் உயர்ந்த கோபுரங்களை அழித்தொழித்த, இனியும் அழிக்க இருக்கின்ற, எல்லாம் வல்ல ஜீயூஸின் தீர்மானம் இதுதான் என்று தோன்றுகிறது. அவருடைய சர்வாதிகார வல்லமை இதுதான். எனவே, நான் இப்பொழுது முன்வைக்கும் திட்டத்தை நாமனை வரும் செயல்படுத்த வேண்டும் என்று விரும்புகிறேன். கப்பலில் ஏறுங்கள், நமது தந்தையர் நாட்டுக்குத் திரும்பிச் செல்லுங்கள், அவ்வளவுதான்! அகலமான தெருக்களைக் கொண்ட ட்ரோஜன் களின் நகரம் நம்மிடம் வீழப்போவதில்லை.'

அவன் அப்படிப் பேசியதும் அனைவரும் ஒன்றுமே சொல் லாமல் அமைதியாக இருந்ததன் மூலம் அவன் சொன்னதை ஏற்றுக்கொண்டனர். வெகுநேரத்துக்கு ஒருவரும் பேசாமலே மனமுடைந்தவர்களாக அமர்ந்திருந்தனர். கடைசியில் போர் முழக்கத் தலைவனான டயமீடிஸ் பேசினான்:

'அத்ரியூஸின் மகனே அகமெம்னா! நம்முடைய வழக்கப்படி, இந்தத் திறந்த கூட்டத்தில், நீ முன்வைத்த முட்டாள்தனமான கருத்தை ஒட்டி நான் என் பேச்சைத் தொடங்கியிருக்கிறேன். நீ தவறாக நினைக்கக் கூடாது.

அன்று என்னுடைய வீரத்தைப் படையினர் முன்னிலையில் நீ சந்தேகப்பட்டுப் பேசினாய். நான் பலவீனமானவனென்றும் கோழையென்றும் கூறினாய். ஆனால் நீ சொன்னது எவ்வளவு தூரத்துக்கு உண்மையென்று ஒவ்வொரு கிரேக்கனும் அறிவான். அவன் இளைஞனாக இருந்தாலும் சரி, வயதானவனாக இருந்தாலும் சரி. அரிவாள் வீசும் க்ரோனஸின் மகனாகிய ஜீயூஸ் மற்றவர்களுக்குத் தராத சில விஷயங்களை உனக்கு அருளி யிருக்கிறார். செங்கோல் தரும் அதிகாரத்தையும் அது தரும் கௌரவத்தையும் உனக்குக் கொடுத்திருக்கிறார். ஆனால் வீரத்தை அவர் உனக்குத் தரவில்லை. ஆனால் அதிகாரத்தின் ரகசியமே வீரம்தான். உன்னை நினைத்தால் வியப்பாக இருக் கிறது. கிரேக்கர்கள் பலவீனமானவர்களென்றும் கோழைகள்

என்றும் சொல்கிறாயே அதை உண்மையிலேயே நீ நம்புகிறாயா? நாடு திரும்பிவிட வேண்டும் என்ற எண்ணம் உனக்கு இருக்கு மானால் நீ திரும்பிப் போய்விடு. உனது வழியில் யாரும் தடை செய்யப் போவதில்லை. மைசினியில் இருந்து உன்னை அழைத்து வந்த மொத்தப் படையும் உனது கப்பல்களும் தயாராகத்தான் உள்ளன: ஆனால் மீதி இருக்கும் நீண்ட முடிகொண்ட கிரேக்கர்கள் அனைவரும் ட்ராய் நகரை வெற்றிகொள்ளும்வரை, இங்கேதான் இருக்கப் போகிறார்கள். இல்லையெனில் அவர்களும் கப்பலேறிக் கஷ்டப்பட்டு வீடு திரும்பட்டும். ஆனால், நானும் என் தேரோட்டியான ஸ்தெனீலஸுூம் இலியத்தில் எங்கள் நோக்கம் நிறைவேறும் வரை போரிடுவோம். கடவுள்களின் விருப்பப்படிதான் நாங்கள் இங்கே இருக்கிறோம்.'

அவன் அப்படிச் சொன்னதும் எல்லா கிரேக்க வீரர்களும் பேரொலி எழுப்பி ஆமோதித்தார்கள். குதிரைகளை அடக்கும் டயமீடிஸ் சொன்ன வார்த்தைகள் அவர்களுக்கு மகிழ்ச்சியூட்டின. இப் பொழுது தேரோட்டியான நெஸ்டர் பேச எழுந்தான்.

'டயமீடிஸ், போர் செய்வதில் அஞ்சாதவன் நீ. வாக்குவாதத் திலும் உன் வயதையொத்தவர்களில் உனக்கு இணை கிடையாது. இங்குள்ள யாருமே உன் பேச்சை எதிர்த்துப் பேசவோ மறுத்துச் சொல்லவோ மாட்டார்கள். ஆனாலும் நீ சொன்னது முக்கியமான விஷயத்துக்குச் சம்மந்தமில்லாதது. உனது வயதுக்குத் தக்கபடி கிரேக்கத் தலைவர்களிடம் நீ அறிவுப்பூர்வமாகப் பேசினாய். ஆனால் நீ ஒரு இளைஞன். அதை மறுப்பதற்கில்லை. எனது கடைசி மகனுடைய வயதுதான் உனக்கு இருக்கும். உன்னைவிட நான் வயதில் மிகவும் மூத்தவன். இப்பொழுது நான் பேசியாக வேண்டும். இந்த முழு சூழ்நிலையையும் நான் கணக்கில் எடுத்துக்கொள்ள வேண்டும். நான் சொல்லப்போவதை மதிக்காமல் யாரும் இருக்க மாட்டார்கள். அகமெம்னன்கூட. நமக்குள் குழப்பத்தையும் ஒற்றுமைக் குலைவையும் ஏற்படுத்த விரும்பும் ஒருவன் உண்மையில் நம்முடைய குலம், நாடு, சட்டம் ஆகியவற்றிலிருந்து வேறுபட்ட குற்றவாளியாக, அந்நியனாகத் தான் இருப்பான்.

இப்பொழுது இரவென்பதை உத்தேசித்து நாம் உண்ணுவதைத் தவிர வேறெதுவும் செய்யக் கூடாது. நாம் தோண்டி வைத்திருக் கும் அகழியைச் சுற்றி, சுவருக்கு வெளியே ஆங்காங்கு காவல்

வீரர்களை நிறுத்த வேண்டும். இந்தப் பணியை இளைஞர்களிடம் நான் ஒப்படைக்கிறேன். அதன்பிறகு, இருப்பவர்களில் நீதான் மிக முக்கியமானவன் என்பதால், நீதான் தொடக்க வேலைகளைக் கவனிக்க வேண்டும். உன் மூத்த ஆலோசகர்களை ஒரு விருந்துக்கு அழை. அதுதான் செல்வதற்குச் சரியான வழி. அது உனக்கு, கெடுதி எதுவும் செய்யாது. த்ரேஸில் இருந்து ஒவ்வொரு நாளும் கிரேக்கக் கப்பல்கள் இனிய மதுவைக் கடல்வழியாக உனக்குக் கொண்டுவருகின்றன. உனது பாசறைகள் மதுவால் நிரம்பியிருக்கின்றன. பலபேருடைய ஆட்சியாளன் என்ற முறையில் விருந்தோம்புவது உனது கடமையே ஆகும். நீ எங்கள் அனைவரையும் ஓரிடத்தில் ஒன்றிணைத்த பிறகு, மிகச்சிறந்த ஆலோசனையை உனக்கு வழங்குபவன் சொல்வதை நீ கேட்கவேண்டும். ட்ரோஜன் முகாம்களின் நெருப்புகள் நமது கப்பல்களுக்கு வெகு அருகில் எரிந்துகொண்டிருக்கும் இவ்வேளையில், சிறந்த நம்பத்தகுந்த ஆலோசனை ஒவ்வொரு கிரேக்கனுக்கும் அவசியம். அவர்கள் யாருடைய முகமும் சரியில்லை, தெரியவில்லையா? நமது பயணத்தின் நோக்கத்தைக் கடலில் மூழ்கடித்து கொல்லப் போகிறதா அல்லது கரையேற்றி காப்பாற்றப் போகிறதா என்பதை இந்த இரவு முடிவு செய்யும்.'

அவன் சொன்னதைக் கேட்ட அனைவரும் அதை ஏற்றுக் கொண்டனர். ஆயுதபாணியாக, காவல் வீரர்கள் நெஸ்டரின் மகன், மக்கள் மேய்ப்பனாகிய த்ராஸிமீடிஸின் உத்தரவின் பேரில் விரைவாக வெளியேறினர் போர்க்கடவுளின் குழந்தைகளான அஸ்கலாஃபஸ் மற்றும் அயல்மீனஸ், மெரியோனஸ், அஃபார்ட்டியஸ், டெய்பைரஸ், மற்றும் க்ரியானின் மகனான கடவுளையொத்த லைக்கோமீடிஸ். காவல் வீரர்களுக்கு ஏழு படைத்தலைவர்கள் இருந்தனர். ஒவ்வொரு தலைவனின் கீழும் நீண்ட ஈட்டிகளுடன் நூறு பேர் சென்றனர். அகழிக்கும் சுவருக்கும் இடையில் இருந்த பகுதியில் அவர்கள் போய் நின்றனர். ஒவ்வொரு பிரிவும் தீமூட்டி உணவைப் பரப்பி உண்டனர்.

இதற்கிடையில் மூத்த ஆலோசகர்களின் குழு மொத்தத்தையும் அகமெம்னன் அழைத்துச் சென்று மனம் மகிழும் விருந்து கொடுத்தான். அவர்களும், தங்களுக்கு முன்பாகப் பரப்பி வைக்கப்பட்ட அருமையான உணவுப்பதார்த்தங்களை ஒருவருக்கொருவர் எடுத்துக்கொடுத்து உண்டனர். அவர்களது பசியும் தாகமும் அடங்கிய பிறகு, முந்தைய நாள் அவர்களை வென்றிருந்த ஞானத்துக்குச் சொந்தக்காரனான கிழவன்

நெஸ்டர் தனது திட்டத்தை விவரித்தான். அவன் எழுந்து அவர்களைப் பார்த்து பேசியபோது அவர்களுடைய நலனை மனத்தில் கொண்டு பேசினான்:

'அத்ரியூஸின் மகனே! அதிகமான புகழ்கொண்ட அகமெம்னனே! மக்கள் தலைவனே! உன்னிடம் தொடங்கும் எனது பேச்சு உன்னிடமே முடியும். மக்கள் பலருடைய ஆட்சியாளன் நீ. அவர்களுடைய வழிகாட்டுதலுக்காகத்தான் ஜீயூஸ் உனக்குச் செங்கோலும் முடிவுகள் எடுக்கின்ற அதிகாரமும் கொடுத்தார். எனவே எல்லாரையும்விட அதிகமாக ஆலோசனைகளை நீதான் வழங்கவும் பெறவும் வேண்டும். பொதுநலம் கருதி மூத்தோர் வழங்கும் அறிவுரைகளை எடுத்து நடத்த வேண்டும். திட்டம் எதுவாக இருப்பினும் அதற்கான பெருமையும் பெயரும் உன்னையே வந்து சேரும்.

எனக்குத் தோன்றுவதை இப்பொழுது சொல்கிறேன். அலசி ஆராய்ந்து நான் இப்பொழுது சொல்லப் போவதைவிடச் சிறந்த ஆய்வை வேறெவரும் கூறிவிட முடியாது. நான் இத்திட்டத்தை உருவாக்கிய நாளிலிருந்து இந்த கணம்வரை அதை மாற்ற வேண்டிய அவசியம் ஏற்படவில்லை. ஒலிம்பஸ் மலையில் பிறந்த அகமெம்னனே, நீ அக்கிலிஸின் குடிலுக்குச் சென்று அவனது பரிசான இளம் பெண் ப்ரிசிஸை எடுத்துக் கொண்டதன் மூலம் அவனது கோபத்தைத் தூண்டிவிட்டாய். நாங்கள் எல்லாருமே நீ செய்த காரியத்துக்கு எதிராகத்தான் இருந்தோம். அப்படி நீ செய்யக் கூடாதென்று என்னுடைய பங்குக்கு நான் உன்னை எவ்வளவோ தடுக்க முயன்றேன். ஆனால் உன் திமிர் உன்னை ஆட் கொண்டிருந்தது. அவனுடைய பரிசை எடுத்து நீ வைத்துக் கொண்டதன் காரணமாக மிக உயர்வான மனிதனான அக்கிலிஸைக் கௌரவக் குறைவாக நடத்திவிட்டாய். அவனுக்குக் கடவுள்களும் மரியாதை கொடுக்கின்றனர். இப்பவும் தாமதமாகிவிடவில்லை, அவனுக்கு இதமான பரிசுகளைக் கொடுத்து, இதமான சொற்களைப் பேசி அவனைக் குளிரவைத்து சமாதானப்படுத்துவது எப்படி என்று யோசிக்க வேண்டும்.'

மக்கள் தலைவனாகிய அகமெம்னன் பதிலாகச் சொன்னான்:

'மரியாதைக்குரிய ஐயா, என்னுடைய குருட்டுத்தனமான முட்டாள்தனத்தைப் பற்றி தாங்கள் கூறியது உண்மையே. நான் ஏமாற்றப்பட்டுவிட்டேன். இதை நான் மறுக்கப்போவதில்லை.

ஜீயூஸ் தன் மனத்தில் இப்பொழுது ஏற்றி வைத்துக் கொண்டு கிரேக்கர்களையெல்லாம் நசுக்கும் அளவுக்கு, கௌரவிக்கும் அந்த மனிதன் ஒரு முழு படைக்குச் சமமானவன். ஒரு வருந்தத்தக்க உணர்வுக்கு நான் அடிமையாகி இந்த முன்பின் யோசிக்காத முட்டாள் தனத்தைச் செய்துவிட்டேனாகையால், பரிகாரம் தேடிக்கொள்வதற்கு நான் ஆயத்தமாய் இருக்கிறேன். வரையறை களற்ற நஷ்டஈட்டை அவனுக்குத் தர நான் ஒப்புக் கொள்கிறேன்.

உங்கள் அனைவரின் முன்னிலையிலும், என் மனத்தில் உள்ள அந்த கௌரவமிக்க பரிசுப்பொருள்களை வரிசைப்படுத்து கிறேன் கேளுங்கள். தீயால் நிறம் மங்கிப்போகாத ஏழு முக்காலிகள், பத்து டாலண்ட்டு*கள் அளவுள்ள தங்க நாணயங் கள், இருபது கொப்பரைகள் நிறைய மின்னும் செம்பு, அதிவேகமாகச் செல்வதால் வெற்றியையே எப்போதும் பெற்ற பன்னிரண்டு பந்தயக் குதிரைகள், அவற்றால் வெற்றி கொள்ளப்பட்ட பரிசுகள் அளவுக்கு ஒரு மனிதனுக்குக் கிடைக்குமானால், அவனுக்கு விலைமதிப்புள்ள தங்கத்தில் மட்டும் குறை இருக்குமா என்ன?

கலைகளிலும் கைத்தொழிலிலும் சிறந்த ஏழு பெண்களை நான் அவனுக்குக் கொடுப்பேன். தழைத்தோங்கிய லிஸ்போஸ் நகரை அவன் கைப்பற்றிய நேரத்தில் எனக்குப் போர்ப்பரிசாகக் கிடைத்த அசாதாரண அழகு கொண்ட ஏழு பெண்கள். இவர்களை நான் அவனுக்குக் கொடுப்பேன். அதுமட்டுமல்ல, ப்ரிசியூஸின் மகளை நான் அவனிடமிருந்து கவர்ந்துகொண்டு வந்தேனல்லவா, அவளையும் இவர்களோடு சேர்த்துக் கொடுப் பேன். அதோடு, மற்ற ஆண்களும் பெண்களும் செய்வதுபோல், நான் இதுவரை அவளோடு படுக்கையைப் பகிர்ந்துகொள்ள வில்லை என்று நான் அவனுக்கு உறுதியான சத்தியம் செய்து கொடுப்பேன். இந்தப் பரிசுப்பொருட்கள் அனைத்தும் இப் போதே அவன் கைகளில் ஒப்படைக்கப்படும்.

---

டாலண்ட்டு பண்டைக்காலத்தில் எபிரேனியர், பாபிலோனியர் மற்றும் கிரேக்கர்கள் பயன்படுத்திய நாணய அளவு. மிகவும் பெரிய அளவுள்ளதாக இருந்ததால் ஒரு டாலண்ட்டு என்ற அளவு கனத்துக்கு நாணயங்கள் செய்யப்படவில்லை. மற்ற நாணயங்களை வைத்து ஒரு டாலண்ட் அளவு கணக்கிடப்பட்டது. உதாரணமாக, ஹீப்ரு வெள்ளி டாலண்ட் ஒன்றுக்கு 3000 வெள்ளி ஷகல்கள் (ஏறக்குறைய 14 கிராம் எடையுள்ள நாணயங்கள்) ஈடுசெய்யப்பட்டன.

பின்னாளில், ப்ரியமின் மாநகரை அழிப்பதற்குக் கடவுள்கள் அனுமதி கொடுப்பார்களாயின், அப்போதைய போர்ப்பரிசுப் பொருள்களை நாம் பங்கிட்டுக் கொள்ளும்போதும் அவன் வரட்டும். போதும் போதும் என்று அவன் மனம் சொல்லும்வரை தங்கத்தாலும் வெண்கலத்தாலும் அவனது கப்பல்களை நிரப்பிக் கொள்ளட்டும். கிரேக்கத்தின் அழகு தேவதை ஹெலனுக்கு அடுத்தபடியாக இருக்கின்ற இருபது ட்ரோஜன் பெண்களையும் அவன் தேர்ந்தெடுத்துக் கொள்ளட்டும்.

காலக்கிரமத்தில் நாம் வளம்மிக்க அர்கோஸுக்குத் திரும்பி னால், அவன் எனது மருமகனாக ஆகலாம். ஆடம்பரத்தின் மடியில் அங்கே வளர்ந்து வரும் எனதருமை மகன் ஓரிஸ்டஸை நான் எவ்விதம் கௌரவிக்கிறேனோ அவ்விதமே அக்கிலிஸை யும் கௌரவிப்பேன். என்னுடைய உறுதியான அரண்மனையில் எனக்கு க்ரிசோத்திமிஸ், லயோடிஸ், இஃபியனாஸா என்னும் மூன்று மகள்கள் இருக்கின்றனர். இவர்களில் அவனுக்கு யாரைப் பிடிக்கிறதோ அவளை அவன் தேர்ந்தெடுத்துக் கொள்ளட்டும். மணமகளுக்குத் தரவேண்டிய பரிசுப் பொருள்கள் எதுவுமில் லாமலே அவளை அவன் தன்னோடு பீலியூஸில் உள்ள அவனது இல்லத்துக்கு அழைத்துச் செல்லட்டும். இதுவரை மகளையும் பரிசுப்பொருள்களையும் யாரும் தராத அளவுக்குத் தாராளமாக நான் அவனுக்குத் தருகிறேன்.

இதுமட்டுமல்ல. நான் அவனுக்கு ஏழு செழிப்பான நகரங்களைத் தருவேன் கார்டமீலி, ஈனோப்பி, புல்நிறைந்த ஹைரி, புனித ஃபீரே, ஆழமான புல்வெளிகள் மிகுந்த அந்தீயா, அழகிய ஈப்பியா, மற்றும் திராட்சைக் கொடிகள் நிறைந்த பெடாசஸ். மணல் நிறைந்த பைலோஸிலிருந்து தூரத்தில், கடலுக்கு அருகில் அவை உள்ளன. அதன் மக்கள் ஆடுமாடுகள் அதிகம் கொண்டவர்கள். தங்களின் பரிசுப் பொருள்களோடு அவனை ஒரு கடவுள் போல அவர்கள் கௌரவிப்பர். அவனுடைய அதிகாரத் தின் கீழ் இருந்து அவனுக்கு நிறைய சேவை செய்வார்கள்.

தன் கோபத்தை அவன் தூக்கிப் போட்டுவிடும் அந்தக் கணமே அவனுக்கு நான் இதையெல்லாம் செய்வேன். அவன் வந்து சரணடையட்டும். ஹயடிஸ் கொஞ்சம்கூட இரக்கமில்லாதவன் என்றும் கல் நெஞ்சக்காரன் என்றும் நமக்கெல்லாம் தெரியும். கடவுள்களைவிட மனிதர்களாலேயே அவன் மிகவும் வெறுக்கப் படுகிறான். ஆமாம், அக்கிலிஸ் எனக்கு இணங்கி வரட்டும். என்

அந்தஸ்து அவனைவிட உயர்ந்தது. அதோடு, வயதிலும் நான் அவனைவிட மூத்தவன்.

கிரேக்க தேரோட்டியான நெஸ்டர் பதில் சொன்னான்:

'அத்ரியூஸின் மகனே! அதிகமான புகழ்கொண்ட அகமெம்னனே! மக்கள் தலைவனே! தலைவன் அக்கிலிஸுக்கு நீ தருவதாகச் சொன்னவை யாவும் தாராளமானவையல்ல என்று யாரும் சொல்லமாட்டார்கள். சரி, நாம் இப்பொழுது உடனே ஒரு தூதுக்குழுவை அக்கிலிஸின் குடிலுக்கு அனுப்ப வேண்டும். அவர்கள் யார்யாரென்பதை நானே சொல்கிறேன். கடமையை அவர்கள் மறுக்கக் கூடாது. முதலில், கடவுள்களுக்கு மிகவும் உவப்பான ஃபீனிக்ஸ் வழிகாட்ட வேண்டும். அடுத்து மகா அஜாக்ஸும் கடவுளையொத்த ஒடிஸியூஸும் போக வேண்டும். கட்டியக்காரர்களில், ஓடியஸ் மற்றும் யூரிபேட்டிஸ் இருவரும் அவர்களோடு செல்ல வேண்டும். இப்பொழுது, நம் கைகளுக்குத் தண்ணீர் கொண்டு வாருங்கள். அமைதியாக இருக்கச் சொல்லுங்கள். அப்போதுதான் நாம் க்ரோனஸின் மகனான ஜீயூஸிடம் பிரார்த்தித்து நம்மீது இரக்கம் காட்டச் சொல்லி வேண்டலாம்.'

அவன் அப்படிச் சொன்ன அனைத்தையும், கேட்டவர்கள் ஏற்றுக் கொண்டார்கள். கட்டியக்காரர்கள் உடனே அவர்கள் கையில் தண்ணீரை ஊற்றினார்கள். இளைஞர்கள் மதுகலக்கும் கோப்பை களை எடுத்து அதன் ஓரம்வரை மதுவை ஒவ்வொருவர் கோப்பை யிலும் ஊற்றி அனைவருக்கும் கொடுத்து, தெய்வத்துக்குப் படைக்கும் பானமாக, ஒரு சுற்று வந்தார்கள். எல்லாம் ஊற்றி முடித்த பிறகு மனம் நிரம்பக் குடித்தார்கள். அது முடிந்ததும் தூதுவர்கள் அக்கிலிஸின் குடிலை நோக்கிச் சென்றார்கள். அவர்கள் ஒவ்வொருவரையும், முக்கியமாக ஒடிஸியூஸையும் பார்த்து, இணையற்ற அக்கிலிஸை வழிக்குக் கொண்டுவர அவர்களால் முடிந்த அத்தனையையும் செய்யவேண்டும் என்று அவர்களுக்கு உரிய உத்தரவுகளைக் கொடுத்தனுப்பினான் நெஸ்டர்.

அக்கிலிஸின் பெருமைமிகுந்த மனதை வெல்லுதல் எளிதாக இருக்கும் பொருட்டு இப்புவியைச் சுற்றி வரும் நிலநடுக்கக் காரனாகிய பொஸைடனிடம் பல பிரார்த்தனைகள் செய்த வண்ணம் தூதுவர்கள் ஆர்ப்பரிக்கும் அலை கடலோரமாக நடந்து

சென்றனர். மெர்மிடானின் பாசறைகளுக்கும் கப்பல்களுக்கும் அவர்கள் வந்தபோது, அவன் ஒரு யாழை வாசித்துக் கொண்டு தனக்குத் தானே இன்பமூட்டிக் கொண்டிருந்தான். ஈட்டியானின் நகரை அவன் அழித்தபோது அவனுக்குக் கிடைத்தப் போர்ப் பொருள்களிலிருந்து கிடைத்த ஒரு வெள்ளி குறுக்குக் கம்பியில் இணைக்கப்பட்ட, அழகாக அலங்காரம் செய்யப்பட்ட யாழ் அது. அதை வைத்து அவன் வாசித்துக் கொண்டும் பிரபலமான கதாநாயகர்களின் வீரதீரச் செயல்களைப் பற்றிப் 'பாடிக் கொண்டும் இருந்தான். அவனுக்கு எதிரில் அமைதியாக பெட்ரோக்குலஸ் அமர்ந்திருந்தான், அவன் பாடுவதை நிறுத்தும் கணத்தை எதிர்பார்த்துக் காத்துக்கொண்டிருந்தான். பெட்ரோக் குலஸையும் அவனையும் தவிர அங்கு வேறு யாரும் இல்லை.

தூதுக்குழுவினர் நெருங்கினார்கள். கடவுளையொத்த ஒடிஸி யூஸ் முன்னே வந்து அக்கிலிஸ் முன்பு நின்றான். அக்கிலிஸ் ஆச்சரியப்பட்டவனாக யாழைக் கையில் பிடித்தவண்ணமே சட்டென எழுந்து நின்றான். தான் அமர்ந்திருந்த நாற்காலியை விட்டு முன்னே வந்தான். அவர்களைப் பார்த்ததும் பெட்ரோக் குலஸும் எழுந்து வந்தான். கையை நீட்டி அவர்களை வரவேற்ற வண்ணம் அக்கிலிஸ் சொன்னான்:

'என் நண்பர்களே, நல்வரவு! ஏதோ அவசரமான வேலைதான் உங்களை இங்கே கொண்டு வந்திருக்க வேண்டும். கிரேக்கர்கள் மீது நான் எவ்வளவுதான் கோபமாக இருந்தாலும், என் மனதுக்கு மிகவும் நெருங்கியவர்கள் நீங்கள்'.

இந்த வார்த்தைகளுடன் கடவுளையொத்த அக்கிலிஸ் அவர் களைத் தனது பாசறைக்குள் அழைத்துச் சென்று கருஞ்சிவப்புத் துணிபோட்டு மூடப்பட்ட நாற்காலிகளில் அமரச் செய்தான். பின் அருகில் நின்று கொண்டிருந்த பெட்ரோக்குலஸ் பக்கம் திரும்பிச் சொன்னான்:

'இருப்பதிலேயே மிகப்பெரிய கோப்பையை எடுத்துவா பெட்ரோக்குலஸ். மதுவில் தண்ணீரைக் கொஞ்சமாகக் கல. ஒவ்வொருவருக்கும் ஒரு கோப்பை கொடு. எனது ஆத்ம நண்பர்கள் எனது வீட்டுக்கே வந்திருக்கிறார்கள்.'

அவன் அப்படிச் சொன்னதும் தன் நண்பன் சொன்னபடிச் செய்தான் பெட்ரோக்குலஸ். ஒரு பருமனான வெட்டப்பட்ட

துண்டொன்றை நெருப்பின் ஒளியில் கீழே வைத்தான். அதன் மீது செம்மறியாட்டின் பின்பகுதிகளையும், ஒரு கொழுத்த வெள் ளாட்டையும், நிறைய கொழுப்பிருந்த ஒரு பெரிய பன்றியையும் அதன்மீது வைத்தான். அவைகளை நெருப்பில் இட்டு ஆட்டோமிடன் பிடித்துக்கொண்டான் இவனுக்காக. அக்கிலிஸ் அவைகளைக் கூறுகூறாகப் பிரித்தான். பின் அக்கூறுகளைத் துண்டு துண்டாக வெட்டிக் கம்பிகளில் கோர்த்து வறுத்தான்.

பெட்ரோக்குலஸ் நெருப்பைத் தூண்டிக் கொண்டிருந்தான். எரிந்து முடிந்து, ஜ்வாலைகள் அடங்கிய பிறகு, கனிந்து கொண்டிருந்த நெருப்பைப் பரப்பி அதன் மேலே வறுக்க வேண்டிய துண்டுகளை உப்பு தூவி, சூடுபடும் உயரத்தில் கீழே கழிகள் தாங்கிப்பிடிக்க, மேலே படுக்க வைத்தான். வறுத் தெடுத்த பிறகு தட்டுகளில் அவற்றை ஒன்றாகக் குவித்து வைத்தான். சிறிது ரொட்டியை எடுத்து வந்து அழகான கூடைகளில் அதை வைத்து மேஜையில் வைத்தான் பெட்ரோக் குலஸ். இறைச்சியைப் பங்கு வைத்தான் அக்கிலிஸ். இது முடிந்ததும், கடவுளையொத்த ஒடிஸியூஸுக்கு எதிரில், சுவர்ப் பக்கமாக இருந்த ஒரு நாற்காலியை எடுத்துப்போட்டு அமர்ந்து கொண்டு, கடவுள்களுக்குப் படையல் செய்யும்படி பெட்ரோக் குலஸைக் கேட்டுக்கொண்டான். படையல் சடங்குகளுக்கான துண்டுகளை நெருப்பில் எறிந்தான் பெட்ரோக்குலஸ். தங்களுக்கு முன் பரப்பி வைக்கப்பட்ட மீதி இருந்தவற்றை எடுத்து உண்ண ஒருவருக்கொருவர் உதவிக்கொண்டனர். அவர் களின் பசியும் தாகமும் அடங்கிய பிறகு, ஃபீனிக்ஸுக்குத் தலை யாட்டி சமிக்ஞை செய்தான் அஜாக்ஸ். அதை விளங்கிக்கொண்ட கடவுளையொத்த ஒடிஸியூஸ், தன் கோப்பை நிரம்பியவனாக, அக்கிலிஸின் ஆரோக்கியத்துக்கு என்று சொல்லிக் குடித்தான்

'உனது ஆரோக்கியத்துக்கு அக்கிலிஸ்! பசி கிளப்பும் இவற்றை எல்லாம் பார்க்கும்போது, விருந்துக்கு எங்களுக்கு அகமெம்ன னின் இடத்திலும் குறையில்லை, இங்கும் குறையில்லை. ஆனால் எங்கள் நினைப்பெல்லாம் இப்பொழுது இங்கே மேஜைமீது இருக்கின்ற இன்பங்களிலிருந்து வெகுதூரம் உள்ளது. ஒலிம்பஸ் மலையில் உருவானவனே அக்கிலிஸ், நாம் இப்பொழுது பெரும் அபாயத்தை நேருக்கு நேர் சந்தித்துக் கொண்டிருக்கிறோம். நீ உன் ஆற்றலை இப்பொழுது காட்டா விட்டால், நமது கப்பல்கள் அழிக்கப்படுமா காப்பாற்றப்படுமா என்பது தராசின் தட்டுக்களில்தான் இருக்கிறது.

நம்முடைய கப்பல்களுக்கும் தற்காப்புச் சுவருக்கும் அருகிலேயே திமிர் பிடித்த ட்ரோஜன்களும் அவர்களது ஆதரவாளர்களும் தயாராக வந்து நின்று கொண்டிருக்கின்றனர். அவர்களுடைய முகாம் தீயின் ஜ்வாலைகளால் ஒளிர்ந்து கொண்டிருக்கிறது. நமது கப்பல்களைத் தாக்குவதிலிருந்து அவர்களைத் தடுப்பதற்கு எதுவுமில்லை என்பதில் அவர்கள் மிகத் தெளிவாக இருக்கிறார்கள். க்ரோனஸின் மகனாகிய ஜீயூஸ் அவர்களுக்குச் சாதகமான சகுனங்களை வாரி வழங்கியிருக்கிறார். அவருடைய மின்னல் வலப் பக்கமாகப் பிரகாசிக்கிறது.

கட்டுப்பாடற்றவனாக, அதி சந்தோஷத்துடன், தடுக்க முடியாதவனாக ஓடிக்கொண்டிருக்கிறான் ஹெக்டர். பைத்தியம் பிடித்த நாய்க்கு வரும் வெறிபோன்ற அவனது வேகத்தில் அவன் எந்தக் கடவுளையும் மனிதனையும் மதிக்கவில்லை. ஜீயூஸ்மீது மட்டும் முழு நம்பிக்கை வைத்திருக்கிறான். விடியல் தேவதை உடனே விடியச் செய்ய வேண்டும், விடிந்தவுடன் நமது கப்பல்களின் பின்பக்கமாக வந்து அவற்றை அழித்தொழித்து அவனது வெற்றிச் சின்னங்களாக்க வேண்டும், கப்பல்களைத் தீக்கிரையாக்க வேண்டும், நம்முகங்களில் கரிபூசி வெளியேற்ற வேண்டும், கப்பல்களிலேயே வைத்து நம்மையெல்லாம் கசாப்பு செய்ய வேண்டும் இதுதான் அவனது ஒரே பிரார்த்தனையாக உள்ளது. அவனது அச்சுறுத்தல்களைக் கடவுள்கள் நிறைவேறச் செய்துவிடுவார்களோ, குதிரைகள் மேயும் கிரேக்கத்திலிருந்து வெகுதூரத்திலிருக்கும் ட்ராய் நகரத்திலேயே அழிந்து போவது தான் நமது விதியோ என்பதுதான் எனது பெரிய பயம்.

காலதாமதமாகிவிட்டதுதான் என்றாலும் ட்ரோஜன்களின் வெஞ்சினத்திலிருந்து களைப்படைந்து கிடக்கும் நம் படையினரைக் காப்பாற்ற நீ கிளம்புவாயானால், நாங்கள் உன்னோடு இருக்கிறோம். பேரழிவு இறுதியில் நமக்கு வந்துவிட்டால் கடைசியில் நீதான் வருத்தப்படுவாய். ஏனெனில் அதற்குப்பிறகு அந்தப் பிரச்சனைக்குத் தீர்வு என்பதே இருக்காது. அந்த நிலை ஏற்படுமுன், கிரேக்கர்களைப் பேரழிவிலிருந்து காப்பாற்ற, கொஞ்சம் யோசி.

என்னருமை பழம் நண்பனே, அகமெம்னனோடு போய் சேர்ந்து கொள்ளும்படி உன் தந்தை பீலியூஸ் உன்னை ஃபிதியாவிலிருந்து அனுப்பியபோது, ‘என் மகனே, அவர்கள் விரும்பின், அதீனியும் ஹீராவும் உனக்கு பலம் கொடுப்பார்கள். நீ செய்ய வேண்டிய

தெல்லாம் உன் பெருமைமிகு வீர உள்ளத்தை உறுதியாக வைத்துக்கொள்ள வேண்டியதுதான். சக வீரனுக்கு உதவ நினைப்பது நல்லது. அழிவை ஏற்படுத்தும் உறவு முறிக்கும் வாய்ச் சண்டைகளைத் தவிர்த்துக் கொள். இளைஞனோ வயதானவோ, எல்லா கிரேக்க வீரர்களும் உனது உதவியையும் ஆதரவையும் வேண்டியவர்களாக இருப்பார்கள்' என்று உனக்கு அறிவுரை சொன்னார்.

அதுதான் நீ மறந்துவிட்ட அந்த முதியவர் கொடுத்த அறிவுரை. காலதாமதமாகிவிட்டாலும் பரவாயில்லை, இப்போதாவது அந்த ஆலோசனைப்படி நட. கடுந்துயரளிக்கும் இந்தக் கோபத்தை விடு. நீ மனமிரங்கும் அடுத்த கணமே உனக்குப் போதுமான நஷ்ட ஈடுகளை அளிக்க அகமெம்னன் தயாராக உள்ளான். நீ கேட்பா யானால், அவன் தன் பாசறையில் உனக்குத் தருவதாகச் சொன்ன பரிசுப் பொருள்களை வரிசைப் படுத்திச் சொல்கிறேன் கேள்.

தீயால் நிறம் மங்கிப்போகாத ஏழு முக்காலிகள், பத்து டாலண்ட்டு கள் அளவுள்ள தங்க நாணயங்கள், இருபது கொப்பரைகள் நிறைய மின்னும் செம்பு, அதிவேகமாகச் செல்வதால் வெற்றியையே எப்போதும் பெற்ற பன்னிரண்டு பந்தயக் குதிரைகள். அவைகளால் வெற்றிகொள்ளப்பட்ட பரிசுகள் அனைத்தும் ஒரு மனிதனுக்குக் கிடைக்குமானால், அவனுக்கு விலைமதிப்புள்ள தங்கத்தில் மட்டும் குறை இருக்குமா என்ன?

கலைகளிலும் கைத்தொழிலிலும் சிறந்த ஏழு பெண்களை அவன் உனக்குக் கொடுப்பான். தழைத்தோங்கிய லிஸ்போஸ் நகரை நீ கைப்பற்றிய நேரத்தில் அவனுக்குப் போர்ப்பரிசாகக் கிடைத்த அசாதாரண அழகு கொண்ட ஏழு பெண்கள். இவர்களை அவன் உனக்குக் கொடுப்பான். அதுமட்டுமல்ல, ப்ரிசியூஸின் மகளை அவன் உன்னிடமிருந்து எடுத்துக்கொண்டு வந்தானல்லவா, அவளையும் இவர்களோடு சேர்த்துக் கொடுப்பான். அதோடு, மற்ற ஆண்களும் பெண்களும் செய்வதுபோல், இதுவரை அவளோடு படுக்கையைப் பகிர்ந்துகொள்ளவில்லை என்று அவன் உனக்கு உறுதியான சத்தியம் செய்து கொடுப்பான். இந்தப் பரிசுப்பொருட்கள் அனைத்தும் இப்போதே உன் கைகளில் ஒப்படைக்கப்படும்.

பின்னாளில், ப்ரியமின் மாநகரை அழிப்பதற்குக் கடவுள்கள் அனுமதி கொடுப்பார்களாயின், அப்போதைய போர்ப்பரிசுப்

பொருள்களை நாம் பங்கிட்டுக் கொள்ளும்போதும் நீ வந்தால், போதும் போதும் என்று உன் மனம் சொல்லும்வரை தங்கத் தாலும் வெண்கலத்தாலும் உனது கப்பல்களை நிரப்பிக் கொள்ள லாம். கிரேக்கத்தின் அழகு தேவதை ஹெலனுக்கு அடுத்த படியாக இருக்கின்ற இருபது ட்ரோஜன் பெண்களையும் நீ தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம்.

காலக்கிரமத்தில் நாம் வளம்மிக்க அர்கோஸுக்குத் திரும்பி னால், நீ அவனது மருமகனாக ஆகலாம். ஆடம்பரத்தின் மடியில் அங்கே வளர்ந்து வரும் அவனருமை மகன் ஓரிஸ்டஸை அவன் எவ்விதம் கௌரவிக்கிறானோ அவ்விதமே உன்னையும் கௌரவிப்பான். அவனுடைய உறுதியான அரண்மனையில் அவனுக்கு க்ரிசோத்திமிஸ், லயோடிஸ், இஃபியனாஸா என்னும் மூன்று மகள்கள் இருக்கின்றனர். இவர்களில் உனக்கு யாரைப் பிடிக்கிறதோ அவளை நீ தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். மணமகளுக்குத் தரவேண்டிய பரிசுப்பொருள்கள் எதுவு மில்லாமலே அவளை நீ உன்னோடு பீலியூஸில் உள்ள உனது இல்லத்துக்கு அழைத்துச் செல்லலாம். இதுவரை மகளையும் பரிசுப் பொருள்களையும் யாரும் தராத அளவுக்குத் தாராளமாக அவன் உனக்குத்தர தயாராக இருக்கிறான்.

இதுமட்டுமல்ல. உனக்கு அவன் ஏழு செழிப்பான நகரங்களை யும் தருவான் - கார்டமீலி, ஈனோப்பி, புல்நிறைந்த ஹைரி, புனித ஃபீரே, ஆழமான புல்வெளிகள் மிகுந்த அந்தீயா, அழகிய ஈப்பியா, மற்றும் திராட்சைக் கொடிகள் நிறைந்த பெடாசஸ். மணல் நிறைந்த பைலோஸிலிருந்து தூரத்தில், கடலுக்கு அருகில் அவை உள்ளன. அதன் மக்கள் ஆடுமாடுகள் அதிகம் கொண்டவர்கள். தங்களின் பரிசுப்பொருள்களோடு உன்னை ஒரு கடவுள் போல அவர்கள் கௌரவிப்பர். உன்னுடைய அதிகாரத் தின் கீழ் இருந்து உனக்கு நிறைய சேவை செய்வார்கள்.

'உன் கோபத்தை நீ தூக்கிப்போட்டுவிடும் அந்தக் கணமே உனக்கு அவன் இதையெல்லாம் செய்வான். ஆனால் இதை யெல்லாம்விட அகமெம்னன் மீதான உனது வெறுப்பு அதிகமாக இருக்குமானால், குறைந்த பட்சம் முகாமில் இருக்கும் கிரேக்கர் களின் மீதாவது பரிவு காட்டு. உனக்குப் பணிந்து உன்னை ஒரு கடவுளென கௌரவிக்க அவர்கள் தயாராக இருக்கிறார்கள். அவர்கள் முன்னிலையில் நீ புகழால் போர்த்தப்படுவாய். ஏனெனில் உன்னால் ஹெக்டரையும் கொல்ல முடியும். இங்கு

கப்பலில் வந்திறங்கிய கிரேக்கர்களில் தனக்கு இணையாக ஒருவருமில்லை என்று அவன் கணக்குப் போடுகிறான். அவனுடைய அழிக்கும் வெறித்தனத்தின் பிடியில் அவன் இங்கே வந்து உன்னையும் நெருங்கலாம்.'

'விரைவுப்பாத அக்கிலிஸ் பதில் சொன்னான்:

'ஒலிம்பஸ் மலை பிறந்த லார்ட்டஸின் மகனே! ஆற்றல்மிகுந்த ஒடிஸியூஸ்! நான் என்ன உணர்கிறேன் என்பதையும் என்ன செய்யப் போகிறேன் என்பதையும் உனக்கு வெளிப்படையாகச் சொல்லி விடுவது நல்லது. ஏனெனில் நீங்கள் திரும்பத் திரும்ப இங்கே வருவதையும், இங்கே வந்து உட்கார்ந்து கொண்டு என்னைப் பார்த்துச் சிணுங்கிக் கொண்டும் கண்ணைக் கசக்கிக் கொண்டும் இருப்பதை நான் விரும்பவில்லை. எண்ணுவது ஒன்றாகவும் சொல்வது வேறொன்றாகவும் உள்ள மனிதனை நான் ஹயடிஸின் வாயில் கதவுகளை வெறுப்பதைவிட அதிக மாக வெறுக்கிறேன். எனவே, நான் எப்படி இதையெல்லாம் பார்க்கிறேன் என்பதை உனக்குச் சொல்லி விடுகிறேன்.

'அத்ரியூஸின் மகனாகிய அகமெம்னனோ மற்ற கிரேக்கர்க ளெல்லாம் சேர்ந்தோ என் மனதை மாற்றிவிட முடியும் என்று நான் நினைக்கவில்லை. ஏனெனில் இரவென்றும் பகலென்றும் பாராமல் எவ்வளவு கடுமையாகவும் தளராத உறுதியோடும் எதிரியோடு போரிட்டாலும் வீரர்களுக்கு மரியாதையோ பகரமாக பரிசோ கிடைப்பதில்லை.

'சண்டைபோடாமல் வீட்டிலேயே சமைந்திருப்பவனுக்கும் சிறந்த முறையில் போரிட்டவனுக்கும் ஒரே மாதிரிதான் பங்கு கிடைக்கிறது. கோழைகளுக்கும் வீரர்களுக்கும் ஒரே மரியாதை தான் கொடுக்கப்படுகிறது. முடிந்த அளவு செய்யும் ஒருவனுக் கும் ஒன்றுமே செய்யாமல் இருப்பவனுக்கும் ஒரே மரணம்தான் காத்திருக்கிறது.

'என் உயிரைப் பணயம் வைத்துத் தொடர்ந்து போர் செய்து நான் பட்ட வேதனைகளுக்கெல்லாம் மற்றவர்களைவிட எந்த வகையிலும் சிறப்பானவனாக ஆகிவிடவில்லை. எவ்வளவு கஷ்டமாக இருந்தாலும் தனக்குக் கிடைக்கும் ஒவ்வொரு கவளத்தையும் சிறகு முளைக்காத தன் குஞ்சுகளிடம் கொண்டு வந்து கொடுக்கும் பறவைபோல, நானும் பல உறக்கமில்லா

இரவுகளைக் கழித்துள்ளேன். ரத்தக்களரியான பல நாட்களில் பெண்களுக்காக ஆண்களோடு போரிட்டுள்ளேன்.

'இதோ பாருங்கள், செழிப்பான ட்ராய் நகரின் குறுக்கே கடல் வழியாகச் சென்று பன்னிரண்டு நகரங்களையும் நிலம் வழியாகச் சென்று பதினோரு நகரங்களையும் நான் பிடித்துள்ளேன். அந்த ஒவ்வொரு நகரத்திலிருந்தும் நான் பல பொக்கிஷங்களைக் கைப்பற்றியுள்ளேன். அவை அத்தனையையும் நான் ஒவ்வொரு முறையும் மொத்தமாகக் கொண்டு வந்த அகமெம்னனிடம்தான் கொடுத்தேன். அந்த அத்ரியூஸின் மகனுக்கு! கப்பல்களிலிருந்து வெளியே வராமல் உள்ளேயே அடைந்து கிடந்த அவனுக்கு! நான் எல்லாவற்றையும் மொத்தமாக அவனுக்குக் கொடுப்பேன். ஆனால் அவன் அவற்றை இங்கு கொஞ்சம் அங்கு கொஞ்சமாகத் தர்மம் செய்துவிட்டுப் பெரும் பங்கைத் தனக்கே வைத்துக் கொள்வான். நம்முடைய முக்கியமான தலைவர்களிடம் அவன் கொடுத்தப் பரிசுப்பொருட்கள் இன்னும் அப்படியே இருக் கின்றன பாதுகாப்பாக. ஆனால் அவனால் திருடப்பட்ட ஒரே ஒருவன், ஆமாம் ஒரே ஒருவன் நான்தான். நான் காதலித்த மனைவியையும் அவன் எடுத்துக்கொண்டான். சரி, அவன் மனதார அவளை அனுபவிக்கட்டும்.

'ரோஜன்களோடு கிரேக்கர்கள் ஏன் போர் செய்ய வேண்டும்? ஆமாம், அத்ரியூஸின் மகன் ஏன் ஒரு பெரும் படையைத் திரட்டிக்கொண்டு இங்கு வந்தான்? அழகிய கூந்தல் கொண்ட ஹெலனுக்காக அல்லவா? தங்கள் மனைவிமார்களை நேசிக்கும் கணவர்கள் அவர்கள் மட்டும்தான் என்று நினைத்துக் கொண் டிருக்கிறார்களா, இந்த அத்ரியூஸின் மகன்கள்? இல்லை, ஒவ்வொரு நாகரீகமான நேரிய பார்வை கொண்ட ஆண்மகனும் தன் மனைவியை நேசிப்பான். தன் மனத்தில் வைத்துப் பூசிப்பான். ஒரு போர்க் கைதிதான் என்ற போதும் அந்தப் பெண்ணை நான் மனதார நேசித்ததுபோலத்தான் நேசிப்பான். ஆனால் அகமெம்னன் எனது கைகளிலிருந்து எனக்கான பரிசான அவளைப் பிடுங்கிக் கொண்டு போய் என்னை ஏமாற்றி விட்டான். மறுபடியும் அவன் என்னை ஏமாற்ற நீங்கள் அனுமதிக்க வேண்டாம். அவனை எனக்கு நன்றாகத் தெரியும். என் மனதை அவனால் மாற்ற முடியாது.

'ஒடிஸியூஸ், கப்பல்களெல்லாம் தீக்கிரையாவதிலிருந்து தப்பிப்பது எப்படி என்பதைப் பற்றி உன்னோடும் மற்றுமுள்ள

தலைமையோடும் கலந்து அவன் முடிவு செய்து கொள்ளட்டும். நான் இல்லாமலேயே அவன் இதுவரை பல அற்புதங்களை நிகழ்த்தியிருக்கிறான். ஒரு பெரும் சுவரை எழுப்பி அதைச்சுற்றி ஒரு அகழியைத் தோண்டி வைத்துள்ளான். சிக்கலான முறையில் கழிகளால் வேலி அமைக்கப்பட்ட ஒரு அருமையான அகலாமான அகழி. ஆனாலும் மனிதரைக் கொல்லும் வலிமை வாய்ந்த ஹெக்டர் உள்ளே வருவதிலிருந்து அவனால் தடுக்க முடியாது. நான் கிரேக்கர்களோடு இருந்து களத்தில் இறங்கிய நாட்களில் நகரச் சுவர்களிலிருந்து தூரமாக வந்து சண்டையைத் தொடங்கும் அளவுக்கு ஹெக்டரை எதுவுமே தூண்டியதில்லை. ஸ்கேய வாயில் கதவையும் கருவாலி மரத்தையும் தாண்டி அவன் வந்ததேயில்லை. ஒரேயொரு முறை அவன் அங்கே எனக்காகக் காத்திருந்து மயிரிழையில் என்னிடமிருந்து உயிர் தப்பினான்.

'ஆனால் இப்பொழுது நான் கடவுளையொத்த ஹெக்டரோடு சண்டையிடும் மனநிலையில் இல்லை. ஜீயூஸுக்கும் மற்ற எல்லாக் கடவுளர்களுக்கும் நான் நாளை பலிகொடுக்கப் போகி றேன். அதன்பிறகு எனது கப்பல்களில் தேவையான பொருள் களை ஏற்றிக்கொண்டு புறப்படப்போகிறேன். நாளைக்காலை முதல் வேலையாக, உங்களுக்கு விருப்பமும் ஆர்வமும் இருந் தால், என் கப்பல்கள் வழிந்தோடும் ஹெல்லஸ்பாண்டை*க் கடந்து செல்வதையும் எனது வீரர்கள் கடுமையாகத் துடுப்பு போடுவதையும் நீங்கள் பார்க்கலாம். நல்லபடியாகக் கடந்து செல்ல பொஸைடன் உதவினால், மூன்று நாட்களில் நான் செழிப்பான ஃபிதியாவில் என் வீட்டுக்குச் சென்றடைந்திருப் பேன். எனக்கு இழப்பு ஏற்படுவதற்காக, அங்கே நான் பெரும் செல்வத்தை விட்டுவிட்டு இங்கே கிளம்பி வந்தேன். இங்கே யிருந்து நான் கொண்டுபோகும் இந்தத் தங்கம், சிவப்புச் செம்பு, செழிப்பாக ஒட்டியாணம் அணிந்த பெண்கள், மேலும் எல்லாருக்கும் கிடைப்பதுபோல என் பங்குக்கு சாதாரணமாகக் கிடைத்தப் போர்ப் பொருள்களெல்லாம் என் செல்வத்தை அதிகரிக்கும். அந்த தலைவன் அகமெம்னன், அந்த அத்ரியூஸின் மகன், எனக்குச் செய்தது இதுதான்.

'அவனிடம் நான் சொன்ன அனைத்தையும் சொல்லுங்கள், அதுவும் எல்லாரையும் வைத்துக்கொண்டு சொல்லுங்கள்.

* ஹெல்லஸ்பாண்ட் ஒரு ஜலசந்தி.

என்னை ஏமாற்றியதுபோல கிரேக்கர்களில் வேறு யாரையும் அவன் ஏமாற்ற எண்ணினால், தங்கள் மனத்தில் உள்ளதை அவர்கள் அப்போதுதான் சொல்லமுடியும். கொஞ்சம்கூட மானரோஷமில்லாதவன் அவன். இதுவரை என்னை ஏறிட்டுப் பார்த்து என் கண்ணை நேருக்கு நேர் சந்திக்கும் துணிச்சலில்லாத நாய் அவன். என்னிடமிருந்து அவனுக்கு எந்த ஆலோசனையோ செயல்பாடோ கிடைக்காது. என்னை ஏமாற்றி வஞ்சித்து விட்டான் அவன். மறுபடியும் என்னை அவன் ஏமாற்ற முடியாது. ஒருமுறை பட்டதே போதும். நல்ல நேரத்தில் அவன் நரகத் துக்குப் போய்ச் சேரட்டும். ஆலோசனைகளில் ஞானவானான ஜீயூஸ் அவனது மூளையை எடுத்துவிட்டான்.

'அவனுடைய பரிசுப் பொருள்களை நான் வெறுக்கிறேன். ஒரு சின்ன சிம்பாகக்கூட அவனை மதிக்கவில்லை நான். அவனுக்கு இப்பொழுது இருக்கும் செல்வத்தைவிடப் பத்து மடங்கு அல்லது இருபது மடங்கு கொடுத்தாலும் சரி, அல்லது எங்கிருந் தாவது பெற்றுக் கொடுத்தாலும் சரி. அல்லது ஆர்கிமீனஸ் அல்லது தீப்ஸ் மாநகர்களின் செல்வங்களத்தனையும் கொடுத் தாலும் சரி. கிரேக்க தீப்ஸின் ஒவ்வொரு வீட்டிலும் ஒரு பொக்கிஷமே இருக்கும். அதன் நூறு வாயில் கதவுகளின் வழி யாக இருநூறு வீரர்கள் தங்கள் ரதங்கள் மற்றும் குதிரைகளுடன் விரைந்து செல்வர். மணல் துகள்களின் எண்ணிக்கையளவிலோ தூசித் துகள்களின் எண்ணிக்கையளவிலோ எனக்கவன் பரிசுப் பொருள்கள் கொடுத்தாலும் சரி, என் மனதை அவனால் மாற்ற முடியாது. என் மனத்தில் ஆழமாக அவன் பதித்த அவமானத் துக்கான விலையை முழுவதுமாக அவன் கொடுக்கும்வரை அவனால் மாற்ற முடியாது.

'அத்ரியூஸின் மகன் அகமெம்னனின் எந்த மகளையும் நான் திருமணம் செய்துகொள்ளப் போவதில்லை. அவள் தங்கமங்கை அஃப்ரோடைட்டி*-ஐ போல அழகாகவோ அல்லது சாம்பல் நிறக்கண்ணாள் அதீனியைப் போலவோ இருந்தாலும் சரி, நான் மணந்துகொள்ள மாட்டேன். அவனது அந்தஸ்துக்கு இணை யானவனை, என்னைவிட உயர்ந்த அந்தஸ்தில் உள்ளவனை. வேறு யாராவது கிரேக்க மாப்பிள்ளையை அவன் தேர்ந் தெடுத்துக் கொள்ளலாம். பாதுகாப்பாக நான் வீடு போய்ச்சேர

---

ஜீயூஸின் அழகான மகள்.

கடவுள்கள் உதவுவாரேயானால், என் தந்தை பீலியூஸ் எனக்கு ஒரு மனைவியைத் தேர்ந்தெடுத்துக் கொடுப்பார் நிச்சயமாக. ஹெல்லாஸ்* மற்றும் ஃபிதியாவில் தங்கள் நகர்களைப் பாதுகாக்கும் பிரபுக்களின் மகள்கள், உயர்குடியில் பிறந்த ஏராளமான கிரேக்கப் பெண்கள் இருக்கின்றனர். எனக்குப் பிடித்த ஒருத்தியை நான் தேர்ந்தெடுத்து என்னவளாக்கிக் கொள்ள வேண்டியதுதான். எனக்கிணையான பெண்ணை என் அதிகாரப்பூர்வமான மனைவியாக்கிக் கொண்டு வயதான என் தந்தை பீலியூஸ் கொடுத்துள்ள செல்வங்களை அனுபவித்துக் கொண்டிருக்க வேண்டும் என்று என் வீட்டில் இருந்தபோது நான் அடிக்கடி எண்ணிய நேரங்கள் உண்டு.

'உயிருக்கு இணையான ஒன்று இந்த உலகில் இல்லை என்பது எனக்கு இப்பொழுதுதான் புரிகிறது. வளம்மிகுந்த ஆரம்ப கால இலியத்தில், கிரேக்கர்கள் வருவதற்குமுன் இருந்த அமைதிக் காலத்தில் இருந்த செல்வங்களனைத்தும் சரி, பாறைகள் மிகுந்த டெல்ஃபி**யில் கல்லால் ஆன ஃபீபஸ் அப்போலோவின் வாயில் கதவுக்குப் பின்னால் குவித்து வைக்கப்பட்டிருக்கும் பொக்கிஷங்கள் அனைத்தையும் கொடுத்தாலும் சரி. கால் நடைகளையும் செம்மறியாடுகளையும் உருவாக்கலாம். முக்காலிகளையும் தவிட்டு நிறக் குதிரைகளையும் வாங்கலாம். ஆனால் ஒரு மனிதனுடைய கடைசி மூச்சு அவனை விட்டுப் போய்விட்டதென்றால், உங்களால் அதை மறுபடியும் கொண்டு வர முடியாது.

'கல்லறையை நோக்கிய என் பயணத்துக்கு இரண்டு வழிகளில் நான் விதிக்கப்பட்டிருக்கிறேன் என்று என் தெய்வீக அன்னை, விரைவுப்பாத தீட்டிஸ், என்னிடம் கூறியுள்ளாள். நான் இங்கேயே தங்கி இலியம் நகரைச் சுற்றி போர் செய்வேனேயானால், என்னால் வீடு திரும்ப முடியாது. ஆனால் பதிலாக இறவாப்புகழ் கிடைக்கும். ஆனால் நான் என் தந்தையர் நாட்டுக்குத் திரும்பிச் செல்வேனேயானால், இறவாப்புகழை நான் இழக்க நேரிடும். ஆனால் நான் நீண்ட நாள் உயிர் வாழ்வேன். விரைவான மரணத்திலிருந்து நான் காப்பாற்றப்படுவேன்.

---

* கிரேக்கர்கள் தங்களை ஹெல்லீன்கள் எனவும் தங்கள் பூமியை ஹெல்லாஸ் எனவும் அழைத்தனர்.

** அப்போலோவுக்கு பிரதான கோயில் உள்ள ஸ்தலம்.

'அதோடு இன்னொரு விஷயம். நீங்கள் அனைவருமே வீடு திரும்ப வேண்டும் என்று நான் உங்களுக்குச் சொல்வேன். இந்த இலியத்தின் செங்குத்தான தெருக்களில் உங்கள் இலக்கை நீங்கள் அடையவே முடியாது. வெகு தூரத்துக்கு இடிமுழக்கம் செய்யும் ஜீயூஸ் தன் பாதுகாக்கும் கரங்களை இந்த நகரை நோக்கி நீட்டியுள்ளார். அந்நகரின் மக்களுக்கு நம்பிக்கை வந்துள்ளது.

எனவே என்னைவிட்டுப் போய்விடுங்கள். கிரேக்கத் தலைவர்களிடம் போய், தூதர்களுக்கு இருக்கின்ற சிறப்புரிமையின்படி, தங்குதடையின்றி நான் சொன்னதைச் சொல்லுங்கள். கப்பல்களையும் அவற்றின் பின்னால் இருக்கும் படையினரையும் காப்பாற்றும் வேறு ஏதாவது இன்னும் சிறந்த வழியை அவர்கள் யோசிக்கலாம். சமாதானப்படுத்த முடியாத என்னுடைய கோபத்தின் விளைவாக எழுந்த அவர்களுடைய திட்டம் பயனளிக்காது. ஆனால் ஃபீனிக்ஸ் விரும்பினால் இங்கேயே தங்கி எங்களோடு இரவைக் கழிக்கலாம். பின் காலையில் வீடு திரும்ப என்னோடு பயணிக்கலாம், இதில் வற்புறுத்தல் ஏதுமில்லை.'

அவன் அப்படிப் பேசியதும் அனைவரும் அமைதி காத்தனர். அவனுடைய வெளிப்படையான பேச்சு அனைவரையும் ஆச்சரியத்தில் ஆழ்த்தியிருந்தது. வயதில் முதியவனான தேரோட்டி ஃபீனிக்ஸ் கிரேக்கக் கப்பல்களை நினைத்து மிகவும் பயந்து போயிருந்தான். கண்ணீர் மல்கப் பேசினான்:

'புகழ்மிகு அக்கிலிஸ்! வீடு நோக்கிப் பயணப்படும் அளவுக்கு உன்னுடைய கோபம் உன்னைப் பாதித்திருக்குமானால், நமது கப்பல்கள் யாவும் தீக்கிரையாவதிலிருந்து அவற்றைக் காப்பாற்ற நீ மறுப்பாயேயானால், அருமைக் குழந்தாய், நீ இல்லாமல் என் நிலை என்னாகும் என்று யோசித்தாயா? நான் எப்படித் தனியாக இங்கு தங்கமுடியும்? ஃபிதியாவிலிருந்து அகமெம்னனோடு போய்ச் சேர்ந்து கொள்ளும்படி உன்னை அனுப்பியபோது, உன் தந்தை பீலியூஸ் என்னைத்தான் உன் பாதுகாவலனாக ஆக்கினார். அப்போது நீ எல்லாவற்றையும் ஒரே விதமாக்கும் மகா சமமாக்கியான யுத்த அனுபவமற்ற சிறுவனாகத்தான் இருந்தாய். மனிதர்கள் தங்கள் அடையாளங்களைப் பதிக்கும் விவாதங்களைப் பற்றியும் அப்போது உனக்கு ஒன்றும் தெரியாது. இதையெல்லாம் உனக்குச் சொல்லிக் கொடுத்து, உன்னை ஒரு பேச்சாளனாகவும் போர்வீரானாக ஆக்கவும்தான் உன் தந்தை

என்னை உன்னுடன் அனுப்பினார். என்னால் உன்னைப் பிரிந்து இருக்க முடியாது அருமைக் குழந்தாய். என் முதுமையைக் கழற்றி என்னை மறுபடியும் அழகிய பெண்களைக் கொண்ட ஹெல்லாஸிலிருந்து நான் முதல் முதலாகக் கிளம்பியபோது இருந்த மாதிரியான இளமையைக் கடவுள் கொடுப்பதாக இருந்தாலும் சரியே.

'எனது தந்தை அமீண்ட்டரோடு ஏற்பட்ட ஒரு சண்டையில் நான் வீட்டை விட்டு ஓடிவந்தேன். அவர் வீட்டுக்குக் கொண்டுவர விரும்பிய அழகிய கூந்தல் கொண்ட ஒரு பெண்ணின் பொருட்டு என் மீது அவர் கோபம் கொண்டிருந்தார். அவள்மீது அவர் காமுற்றிருந்தார். அது என் அன்னையான அவரது மனைவிக்கு அவமானமாக இருந்தது. அதனால் அந்தப் பெண்ணோடு படுக்கும்படி என் அம்மா என்னிடம் கெஞ்சினார். அப்படிச் செய்தால் அவள் கிழவனான என் தந்தையை வெறுப்பாள் என்பதற்காக அப்படி செய்யச் சொன்னார். நானும் ஒப்புக் கொண்டு அவ்வாறே செய்தேன். என்ன நடந்தது என்பதை ஊகித்துக்கொண்ட அவர், எனக்குக் குழந்தைகள் இல்லாமல் போகவேண்டும் என்றும் தன் மடியில் வைத்துக் கொஞ்ச ஒரு பேரக்குழந்தை இல்லாமல் போகவேண்டும் என்றும் தீவிரமாக, வெறுக்கத்தக்க ஃப்யூரிகளின் பேரில் சாபங்களிட்டார். காலப் போக்கில் கீழுலகின் கடவுளான ஜீயூஸூம் மாட்சிமை பொருந்திய பெர்சஃபோனியும் அவருடைய சாபங்களை அங்கீகரித்தனர்.

'அதன்பிறகு நான் என் வாளால் தந்தையைக் கொல்லத் திட்டமிட்டேன். ஆனால் கடவுளர்களில் ஒருவர் என்னைத் தடுத்துவிட்டார். பொதுமக்கள் என்ன நினைப்பார்கள் என்பது பற்றியும், எப்படிப்பட்ட அவச் சொல்லுக்கு நான் ஆளாக வேண்டிவரும், எப்படி கிரேக்கர்கள் என்னை ஒரு தந்தைக் கொல்லியாகப் பார்ப்பார்கள் என்பது பற்றியெல்லாம் நான் யோசிக்கும்படிச் செய்து விட்டார் அவர். அதன்பிறகு, கோபமான என் தந்தை இருந்த அந்த வீட்டிலேயே வெகு நாட்கள் என்னால் இருக்க முடியவில்லை. என்னுடைய உறவுக் காரர்களும் சிற்றப்பா பெரியப்பா பிள்ளைகளும் என்னை அவர்கள் வீட்டில் தங்கச் சொல்லி என்னைச் சுற்றிக் கொண்டு கெஞ்சினர். பல கொழுத்த செம்மறியாடுகளும் அலங்கோலமாக நடக்கும் மாடுகளும் அறுக்கப்பட்டன. நன்கு கொழுத்த பல

பன்றிகள் கம்பியில் குத்தப்பட்டு தீயில் வறுத்தெடுக்கப்பட்டன. பல ஜாடிகளில் ஊற்றப்பட்ட மது காலி செய்யப்பட்டது.

'ஒவ்வொருவராக மாற்றி மாற்றி காவல் காத்துக் கொண்டு, ஒன்பது இரவுகள் அவர்கள் என்னைச் சுற்றி முகாமிட்டிருந்தனர். சுவர் எழுப்பப்பட்ட முற்றத்தின் தூண்களின் வரிசையில் இருந்த இடைவெளியில் ஒன்று, நான் உறங்கும் அறையின் கதவுகளுக்கு முன்பகுதியில் ஒன்று என இரண்டு நெருப்புகளை எரியவிட்டுக் கொண்டு காவல் இருந்தனர். ஆனால் பத்தாவது நாளின் இருண்ட இரவில், இறுக்கமாக இணைத்து மூடப்பட்டிருந்த கதவுகளை உடைத்துக் கொண்டு என் படுக்கையறையிலிருந்து நான் தப்பித்து எளிதாக முற்றச்சுவரைக் கடந்து சென்றேன். காவல் இருந்த ஆணோ பெண்ணோ யாரும் என்னைப் பார்க்கவில்லை. பின் நான் பரந்துவிரிந்த ஹெல்லாஸின் குறுக்கே வெகு தூரத்துக்கு விரைந்தேன். பின் ஆடுமாடுகளின் தாயகமான செழிப்பான ஃபிதியாவுக்கு வந்து உன் தந்தை பிரபு பீலியூஸைக் கெஞ்சி வேலை வாங்கிக் கொண்டேன். அவர் என்னை வரவேற்று, ஒரு தந்தை தன் ஏகபோக சொத்துக்களுக்கு ஒரே வாரிசான மகனை நேசிப்பதுபோல என்னிடம் பிரியமாக இருந்தார். அவர் என்னை ஒரு பணக்காரனாக்கினார். என்னை மக்கள்தொகை மிகுந்த ஒரு மாவட்டத்துக்கே அதிபதியாக்கினார். டோலோபிஸின் தலைவனாக நான் ஃபிதியாவின் எல்லைகளில் என் வாழ்வை அமைத்துக்கொண்டேன்.

'கடவுளையொத்த அக்கிலிஸ், அன்றிலிருந்தே உன்னை, நீ இன்று இருக்கின்றாயே, இத்தனை பெரிய வீரனாக உருவாக்க வேண்டுமென்றுதான் நான் பாடுபட்டு வந்துள்ளேன். நான் வரும்வரை நீ ஒரு விருந்துக்கும் போகமாட்டாய். வீட்டில் சாப்பாட்டைத் தொடவும் மாட்டாய். உன்னை நான்தான் தூக்கிக் கொண்டு போய், உன் கறியை உனக்காகச் சின்ன துண்டுகளாக வெட்டிச் சாப்பாடு ஊட்டுவேன். உனக்கான மதுவை உன் வாயில் வைத்துக் குடிக்க வைப்பேன். நீ அடிக்கடி மதுவை வாய்வழியாக வழியவிட்டு என் மேலங்கியை நனைத்து விடுவாய். சின்னக்குழந்தையைப் போல! எனக்கென்று கடவுளர் ஒரு மகனை அனுப்பப் போவதில்லை என்பதை நன்கறிந்த நான், உன்னை வளர்த்தெடுப்பதிலேயே கண்ணாய் இருந்தேன். உன் பொருட்டு பல கஷ்டங்களை நான் பட்டுள்ளேன். கடவுளையொத்த அக்கிலிஸ், உன்னைத்தான் நான் எனது மகனாக ஆக்க

முயன்றேன். என்றாவது ஒரு நாள் நீ பரிதாபகரமான முடிவி லிருந்து என்னைக் காப்பாற்றுவாய் என்ற எண்ணத்தில்.

'உனது பயங்கரமான பெருமையை அடக்கிவை அக்கிலிஸ். இவ்வளவு பிடிவாதமாக நீ இருக்க வேண்டிய அவசியமில்லை. எவ்வளவோ ஆற்றலும், கம்பீரமும், கௌரவமும் இருக்கின்ற கடவுளர்களின் மனதையே மாற்றிவிடலாம். ஒருவர் எல்லை மீறி நடந்து தப்பு செய்துவிட்டால், பலிகள், மிருதுவான பிரார்த் தனைகள், பானப்படையல்கள், நெருப்பில் வாட்டி படைக்கப் பட்ட பொருள்கள் ஆகியவற்றைக் கடவுள்களுக்குக் கொடுப் பதன் மூலம் அவர்களுடைய கோபம் தணிக்க முயல்வார்கள்.

'இப்படிப்பட்ட வேண்டுதல்களுக்காகவே நியமிக்கப்பட்ட லீட்டே எனும் பெண் கடவுள்கள் இருக்கின்றனர். எல்லாம் வல்ல ஜீயூஸின் மகள்கள். இவர்கள் சுருக்கம் விழுந்து, நொண்டிக்கொண்டு, ஒன்றரைக்கண்ணால் பார்த்துக்கொண்டு வருபவர்கள். இவர்கள் டெலூஷனைப் பின்தொடர்ந்து போவதை தங்கள் பணியாகக் கருதுகின்றனர். ஆனால் டெலூ ஷன் ரொம்ப உறுதியானவள். இடறி விழாமல் நடப்பவள். இந்த உலகத்தையெல்லாம் சுற்றி மனிதர்களுக்குத் துயரத்தை அவள் கொண்டு சேர்ப்பாள். ஆனால் இந்த லீட்டே அவள் பின்னால் வந்து பிரச்சனையைச் சரிசெய்வர். அவர்கள் வரும்போது அவர்களுக்கு மரியாதை கொடுக்கும் மனிதன் அருள்பாலிக்கப் பட்டவன். அவனது பிரார்த்தனைகளை அவர்கள் செவிமடுப்பர். ஆனால் தன் மனதைக் கடுமையாக்கி ஒருவன் அவர்களை உதாசீனப்படுத்தினால், அவர்கள் சென்று ஜீயூஸிடம் முறையிடு வார்கள். அவனிடம் டெலூஷனை அனுப்பி அவனுக்கு துயர் ஏற்படுத்தும்படிச் செய்யச் சொல்வார்கள்.

'இது உனக்கும் பொருந்தும் அக்கிலிஸ். உன்னைவிட சிறந்த பெரிய வீரர்களையும் பணிய வைக்கும் ஜீயூஸின் மகள்களுக்கு நீயும் மரியாதை செய்ய வேண்டும். தாராளமான பரிசுப் பொருள்களை உனக்கு இப்பொழுது தருவதாகவும் வருங் காலத்தில் இன்னும் தருவதாகவும் அகமெம்னன் வாக்களிக் காமல் இருந்து, தனது பழிவாங்கும் நடவடிக்கையில் தொடர்ந்து கொண்டிருந்தானேயானால், எவ்வளவு பெரிய அவசியமாக இருந்தாலும். உன் கோபத்தையெல்லாம் சாற்றில் வீசிவிட்டு கிரேக்கர்களுக்கு உதவி செய் என்று நானும் உன்னைக் கேட்டிருக்க மாட்டேன். ஆனால் அவன் நஷ்ட ஈடாக தாராள

மான பரிசுகளை இப்பொழுது கொடுப்பதோடு, எதிர்காலத்திலும் கொடுப்பதாக வாக்களித்திருக்கிறான். அது மட்டுமின்றி, கிரேக்கர்களின் உனக்கு மிகவும் நெருங்கிய நண்பர்களான இவர்களை உன்னிடம் அனுப்பி கெஞ்சிக் கேட்கச் சொல்லி யுள்ளான். அவர்கள் சொன்ன செய்தியையும் வந்த வேலை யையும் அலட்சியப் படுத்தாதே. இதுவரை உனது கோபத்துக்காக யாருமே உன்னைக் கொஞ்சமும் குறைகூறவில்லை.

‘பெரும் பெரும் நாயகர்களெல்லாம் இதேபோல· நடந்து, கோபப்பட்டு, கடைசியில் பரிசுப்பொருள்களுக்கும் பேச்சு வார்த்தைக்கும் மனம் மாறிய புகழ்பெற்ற கடந்த காலக் கதைகள் நமக்கெல்லாம் தெரியும். ரொம்ப காலத்துக்கு முன்பு அப்படி நடந்த கதை ஒன்று எனக்கு நினைவிருக்கிறது. தங்களின் அழகான நகரான காலிடோனைத் தற்காக்க ஈட்டோலியன்கள் முயன்று கொண்டிருந்தனர். ஆனால் அதை அழிக்க எல்லாவிதமான முயற்சிகளையும் க்யூரிடிஸ்கள் செய்து கொண்டிருந்தனர். தங்க அரியணையின் பெண் கடவுள் ஆர்ட்டிமிஸ்ஸால்தான் பிரச்னை தொடங்கியது. காலிடோனின் ஆட்சியாளனாக இருந்த தலைவன் ஈனியூஸ் தனது பண்ணையில் இருந்த புனித மலையில் ஆர்ட்டிமிஸுக்கு அறுவடைப் படையல் செய்யத் தவறினான். மற்ற கடவுளர்களுக்கெல்லாம் நிறைய படையல்கள் கிடைத் தன. ஜீயூஸின் இந்த மாமகளுக்குத்தான் அவன் ஒன்றுமே படைக்கவில்லை. ஒருவேளை அவன் மறந்திருக்கலாம். அவனுடைய நோக்கம் அப்படிச் செய்ய வேண்டும் என்று இருந்திருக்காது. ஆனால் எப்படியிருப்பினும் அது ஆர்ட்டி மிஸுக்கு ஒரு கடுமையான ஏமாற்றமான செயலே.

‘அம்புகள் எய்வதில் இன்புறும் அவள் தன் கோபத்தில் மின்னும் கோரைப்பற்களையுடைய ஒரு காட்டு ஆண் பன்றியை ஏவி னாள். அது ஈனியூஸின் பழத்தோட்டத்தில் புகுந்து நாசம் பண்ணியது. தான் உருண்டு விழச்செய்த மரங்களை, அந்தத் தோப்பு முழுவதும் பழங்கள் கிளைகள் இலைகளோடு தூவியது அது. ஆனால் கடைசியில் அதை ஈனியூஸின் மகன் மெலீஜர் கொன்றான். அதைச் செய்ய அவன் பல நகரங்களிலிலிருந்தும் வேட்டையாடுபவர்களையும் வேட்டை நாய்களையும் பயன்படுத்த வேண்டியிருந்தது. ஏனெனில் ஒரு சிலரால் கொல்ல முடியாத அளவுக்கு பயங்கரமானதாக அந்த மிருகம் இருந்தது. அப்படியும் அது பலரைக் கொன்று சிதையில் ஏற்றியிருந்தது. ஆனால் அதன் பிணத்தை எங்கே கொண்டு போவது என்ற

பிரச்சனையை ஒட்டி ஒரு போரை ஆர்ட்டிமீஸ் தொடக்கி வைத்தாள். காட்டுப்பன்றியின் தலையையும் பறட்டை மயிர்கொண்ட அதன் தோலையும் யார் எடுத்துக்கொள்வது என்று க்யூரிட்டிஸுஂம் ஈட்டோலியன்களும் சண்டை போட்டு ஒருவர் கழுத்தில் இன்னொருவர் கத்தி வைக்கும்படிச் செய்தாள்.

'அது சம்பந்தமாக நடந்த போரில், மெலீஜர் போர்க்களத்தில் இருந்தவரை, க்யூரிட்டிஸ்களுக்கு எல்லாமே தவறாகத்தான் போனது. எவ்வளவுதான் எண்ணிக்கையில் அதிகமாக இருந்த போதும், காலிடோனின் சுவர்களுக்கு வெளியே அவர்களால் தாக்குப் பிடிக்க முடியவில்லை. ஆனால் எவ்வளவுதான் அறிவுடையவனாக இருந்தபோதும் சில நேரங்களில் அப்படிப் பட்டவர்களும் கோபத்தில் வீங்கிப் போகத்தான் செய்கிறார்கள். இப்பொழுது மெலீஜருக்கும் அதுதான் நடந்தது. தன் அம்மா அல்தியாவுடன் கோபித்துக்கொண்டு அவன் சண்டையிலிருந்து வெளியேறி தன் வீட்டுக்குப் போய், தன் அழகிய மனைவி க்ளியோபாட்ரா*வுடன் தங்கினான்.

(க்ளியோபாட்ராவின் அம்மா மெல்லிய கணுக்கால் கொண்ட மார்பிஸ்ஸா. அப்பா ஐடாஸ். அவருடைய காலத்தில் இந்த உலகில் வாழ்ந்த மிகவும் வலிமை வாய்ந்தவர் அவரே. ஃபீபஸ் அப்போலோ ஒரு முறை மார்பிஸ்ஸாவைப் பிடுங்கிக்கொண்டு போனான். ஆனால் தனது மனைவியின் கண்ணியத்தைக் காக்கும் பொருட்டுத் தனது வில்லால் அப்போலோவைத் தாக்கினான் ஐடாஸ். வில் கடவுள் அப்போலோ மார்பிஸ்ஸாவைப் பிடித்துக்கொண்டு போனபோது, ஒரு மீன்கொத்திப் பறவை தன் ஜோடியைத் தேடி வருந்துவதுபோல அவள் வருந்தினாள். அதனால்தான் மார்பிஸ்ஸாவும் ஐய்டாவும் பின்னாளில் தங்கள் மகள் க்ளியோபாட்ராவுக்கு அல்ஸியோனி, மீன்கொத்தி, என்ற பெயரை வைத்தனர், அவள் அம்மாவின் நினைவாக).

'மெலீஜர் க்ளியோபாட்ராவுடன் படுக்கையைப் பகிர்ந்து கொதித்து வந்த தன் கோபம் தணித்தான். அந்தக் கோபம் அவன் அம்மா அல்தியாவின் சாபங்களினால் வந்தது. காட்டுப்பன்றி வேட்டையில் பரிசு யாருக்கு என்பதில் தன் தாய்மாமனோடு மெலீஜர் சண்டையிட்டு அவனைக் கொன்றான். துயரப்பட்ட

ஏழு க்ளியோபாட்ராக்கள் இருந்ததாக வரலாறு கூறுகிறது. இவள் சீசர் ஆண்டனி இவர்களோடு இணைத்து பேசப்படுபவள் அல்ல.

அவன் தாய் தன் வேதனையில் மண்டியிட்டுக் கடவுள்களிடம் தன் மகன் மெலீஜரைக் கொன்றுவிடும்படி வேண்டினாள். தன் தொடைகளைக் கண்ணீரால் மறைத்தாள். ஹயடிஸையும் மாட்சிமை பொருந்திய பெர்சஃபோனியையும் அழைத்துக் கொண்டே. வள்ளல் தன்மைகொண்ட நிலத்தைத் தன் கைகளால் குத்தினாள். நரகத்திலிருந்து இருட்டில் நடந்து வரும் ஃப்யூரி அவள் பிரார்த்தனையைக் கேட்டாள். அவளுடைய மனமோ விட்டுக்கொடுக்காதது.

'விரைவிலேயே நகர வாயில்களில் க்யூரிட்டிஸ்கள் எழுப்பிய பேரொலியும் குழப்பமும் சுவர்களைத் தாக்கிய வண்ணம் கேட்டது. இப்பொழுது ஈட்டோலிய மூத்தவர்கள் வெளியில் வந்து சண்டை செய்யும்படி மெலீஜரை வேண்டினார்கள். தலைமைப் பூசாரிகளின் குழு ஒன்றை அவனிடம் அனுப்பினார்கள். பெரிய பெரிய பரிசுகளை அவனுக்குத் தருவதாக வாக்களித்தார் கள். அழகிய காலிடோனியப் பெருவெளியின் வளம்மிக்க பகுதியில் இருந்து சொந்தப் பயன்பாட்டுக்கு வைத்துக்கொள்ள ஐம்பது ஏக்கர் நிலமும், பாதி திராட்சை தோட்டமும் பாதி உழுவதற்கு வசதியான திறந்த நிலமும் அவன் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம் என்று கூறினர். திரும்பத் திரும்ப அந்த முதியவனான தேரோட்டி ஈனியூஸ் மெலீஜரை வேண்டிக்கொண்டான். தன் மகனைக் கெஞ்சிய வண்ணம். அவனது உயர்ந்த படுக்கையறை யின் வாசலின் நின்றுகொண்டு அதன் திடமான மரக்கதவுகளை உலுக்கினான். திரும்பத் திரும்ப அவனது சகோதரிகளும் சீமாட்டி யான அவனது அம்மாவும்கூட அவனை வேண்டினர். ஆனால் இவர்கள் கெஞ்சல்கள் எல்லாம் அவனது பிடிவாதத்தை அதிகரிக்கவே செய்தன. திரும்பத் திரும்ப அவனது மிக நெருங்கிய நேசிப்புக்குரிய தோழர்களான ஆயுதம் தரித்த வீரர்களும் அவனைக் கெஞ்சினர். ஆனாலும் அவர்களால் அவனது மனதை மாற்ற முடியவில்லை.

'இப்பொழுது க்யூரிட்டீஸ்கள் சுவரின் மீது ஏறி நகருக்குத் தீ வைக்க ஆரம்பித்தார்கள். அவர்களின் ஏவுகணைகள் படுக்கையறைக் குள்ளும் வந்து விழத் தொடங்கின. அந்தத் தருணத்தில் அழகாக ஒட்டியாணம் அணிந்த அவனது மனைவி க்ளியோபாட்ரா அழுதுகொண்டே அவனை வேண்டினாள். அவர்களது நகரம் எதிரிகளால் பிடிக்கப்படுமானால் என்னென்ன நடக்கும் என்பதை யெல்லாம் அவள் அவனுக்குக் காட்சிப் படுத்திச் சொன்னாள்

ஆண்கள் கொல்லப்படுவார்கள், நகரம் அழித்துத் தரைமட்ட மாக்கப்படும், குழந்தைகளையும் கீழிறங்கிய ஒட்டியாணங்கள் அணிந்த பெண்களையும் எதிரிகள் கவர்ந்து செல்வார்கள். நடக்கப்போகும் பேரழிவுகளை அவள் சொல்லிக்காட்டிய விதம் அவனது மனதைத் தொட்டது. அவன் உடனே வெளியில் வந்து தன் மின்னும் போர்க்கவச உடையை அணிந்து கொண்டான். இப்படியாக, தனது இரக்க உணர்வுக்கு வழிவிட்டதன் மூலம், பேரழிவிலிருந்து ஈட்டோலியன்களை அவன் காப்பாற்றினான். ஆனால் அவனுக்கு அவனுடைய நண்பர்கள் தருவதாகச் சொன்ன அருமையான பரிசுப்பொருள்கள் எதையுமே கொடுக்கவில்லை. அவர்களை அவன் காப்பாற்றினான். ஆனால் பதிலுக்கு அவனுக்கு ஒன்றுமே கிடைக்கவில்லை.

'அவன் சிந்தித்ததுபோல நீயும் சிந்திக்காதே என்று உன்னை நான் கேட்டுக்கொள்கிறேன். அவனுடைய உதாரணத்தை நீ பின்பற்றத் தூண்டுமாறு எந்தக் கடவுளாவது உனக்குச் செய்துவிடுமாறு அனுமதிக்காதே. கப்பல்கள் எல்லாம் தீப்பற்றிக்கொண்ட தெனில், அதன் பிறகு அவைகளைக் காப்பாற்றுவது கடினம். வேண்டாம், பரிசுப்பொருள்கள் இருக்கும்போதே வந்துவிடு. உன்னை ஒரு கடவுளைப்போல நடத்துவார்கள் கிரேக்கர்கள். இந்தப் பரிசுகளை ஏற்றுக்கொள்ளாமல் நீ கொலைக்களங் களுக்குள் புகுந்து போரிட்டுத் தோல்வியை வெற்றியாக மாற்றினாலும் உனக்கு அவ்வளவாக மரியாதை கிடைக்காது.'

விரைவுப்பாத அக்கிலிஸ் அவனுக்குப் பதில் சொன்னான்:

'ஒலிம்பஸ் மலையில் உருவான ஃபீனிக்ஸ், என் அருமை பழைய நண்பரே, கிரேக்கர்கள் தரும் கௌரவம் எனக்குத் தேவை யில்லை. நான் கௌரவமானவன் என்று நம்புகிறேன், காரணம் கௌரவம் எனக்கு ஜீயூஸால் அருளப்பட்டுள்ளது. எனது உடலில் மூச்சிருக்கும் வரை, எனது உறுப்புகளில் பலம் இருக்கும் வரை, அலகுகள் போல் நீண்ட எனது கப்பல்களின் பக்கம் என்னை வைத்திருக்க அது போதுமானது.

நான் உங்களுக்கு இன்னொன்றைச் சொல்ல விரும்புகிறேன். மனத்தில் வைத்துக்கொள்ளுங்கள். சும்மா அழுது புலம்பி என் தீர்மானத்தைக் குலைக்க முடியும் என்று குறைவாக எடை போட்டு விடாதீர்கள். இதெல்லாம் அகமெம்னனிடம்தான் செல்லுபடியாகும். என்னிடமல்ல. நீங்கள் அவன் பக்கம்

சாய்ந்தால், உங்கள் பக்கம் சாய்ந்திருக்கும் நான் உங்களை வெறுக்க ஆரம்பித்துவிடுவேன். என்னைக் காயப்படுத்தியவனை நீங்களும் காயப்படுத்த வேண்டும், அது உங்கள் கடமை. நீங்கள் என்பக்கமிருப்பின் திரும்பி வந்துவிடுங்கள். எனது பிரதேசங் களை என்னோடு சேர்ந்து நீங்களும் ஆளுங்கள். என் சிறப்புரிமை களிலெல்லாம் நீங்களும் பங்கு எடுத்துக்கொள்ளுங்கள்.

இவர்கள் சென்று கிரேக்கர்களிடம் நடந்ததைச் சொல்லுவார்கள். இதற்கிடையில், நீங்கள் இங்கேயே இருங்கள். நீங்கள் படுத்துறங்க அதோ அங்கே ஒரு மிருதுவான படுக்கை உள்ளது. விடியும்போது ஊர் செல்வதா வேண்டாமா என்று முடிவு எடுக்கலாம்.'

இப்படிச் சொல்லிவிட்டு அமைதியாக மற்றவர்கள் சீக்கிரமாகக் கிளம்ப வசதியாகத் தன் புருவங்களினால் ஃபீனிக்ஸுக்குப் படுக்கை தயார் செய்யச் சொல்லி பெட்ரோக்குலஸுக்கு சமிக்ஞை கொடுத்தான் அக்கிலிஸ். டிலமானின் மகனாகிய அஜாக்ஸ் தன் மனம் திறந்து இப்பொழுது பேசினான்:

'ஒலிம்பஸ் மலையில் பிறந்த லார்ட்டஸின் மகனே சமயோசித மான ஒடிஸியூஸ், நாம் போகலாம் வா. நாம் வந்த வேலை இந்த முறை தோல்வியில் முடிந்து விட்டதாகத் தோன்றுகிறது. கெட்ட செய்தியாக இருந்தாலும், இதை உடனே நாம் கிரேக்கர்களிடம் சொல்லித்தான் ஆகவேண்டும். சந்தேகமின்றி அவர்கள் நமக்காகக் காத்துக்கொண்டு அமர்ந்திருப்பார்கள். முன்பு உயர்ந்ததாக இருந்த தனது உள்ளத்தை அக்கிலிஸ் கடினமாக்கிக் கொண்டுவிட்டான். அறிவுக்குப் பொருந்தாதவனாகிவிட்டான். முகாமில் மிக உயர்ந்த இடத்தில் அவனை வைத்திருந்த அவனது நண்பர்களாகிய நமது அன்பை அவன் கணக்கில் எடுத்துக் கொள்ளவே இல்லை. எவ்வளவு பிடிவாதம்! ஒரு கொலை விழுந்திருந்தால்கூட, தன் சகோதரனோ மகனோ இறந்ததற்குப் நஷ்ட ஈடாக ரத்தப் பணத்தை ஒரு மனிதன் பெற்றுக்கொள் கிறான். இறந்தவனுக்கு அடுத்த நெருங்கிய உறவினனுக்கு நஷ்ட ஈடு கொடுத்துவிட்டால் கொலை செய்தவன் அவனது நாட்டை விட்டு வெளியேற வேண்டியதுகூட இல்லை. ஏனெ னில் அந்த நஷ்ட ஈடு கொலையுண்டவன் குடும்பத்தினரின் கோபத்தையும் உணர்ச்சிகளையும் கட்டுப்படுத்தப் போதுமான தாக இருக்கும்.

ஆனால் அக்கிலிஸ், நீயோ, ஒரு பெண்ணுக்காக, ஒரே ஒரு பெண்ணுக்காக, சமாதானப்படுத்த முடியாத கோபத்துக்குக் கடவுள்கள் உன்னை ஆளாக்கி இருக்கின்றனர். நாங்கள் இங்கே உனக்கு அவளைவிடச் சிறந்த ஏழு பேரழகிகளைத் தரத்தயாராக வந்துள்ளோம். இன்னும் அதிகமாகவும் தர இருக்கிறோம். கருணையோடு நடந்துகொள். எங்களுக்கு விருந்தோம்பியவன் என்ற முறையில் உன் கடமைகளை மதித்து நடந்துகொள். கிரேக்கப் படைகளின் பிரதிநிதிகளாக, நாங்கள் உனது கூரையின் கீழிருக்கிறோம். எல்லா கிரேக்கர்களிலும் உனக்கு மிக நெருங்கிய ஆத்ம நண்பர்களாக இருப்பதையே நாங்கள் விரும்புகிறோம்.'

விரைவுப்பாத அக்கிலிஸ் அவனுக்குப் பதில் சொன்னான்:

'டிலமானின் மகனே ஒலிம்பஸ் மலை பிறந்த அஜாக்ஸ், வீரர்களின் தலைவனே, நீ சொன்னவற்றில் பெரும்பகுதியை நான் ஏற்றுக்கொள்கிறேன். ஆனால் நடந்ததை நினைக்கும் போது, எல்லார் முன்னிலையிலும் என்னை ஒன்றுமில்லாத ஓர் அகதியைப் போல அகமெம்னன் அவமானப் படுத்தியதை நினைக்கும்போது எனது நெஞ்சம் கோபத்தால் குமுறுகிறது.

போ, போய் என் முடிவை எல்லார் முன்னிலையிலும் பிரகடனப் படுத்து. எனது மிர்மிடன்களின் பாசறைகளுக்கும் கப்பல்களுக்கும் வந்து, வரும் வழிதோறும் கிரேக்கர்களைக் கொன்று, கப்பல்களையெல்லாம் தீக்கிரையாக்கிக் கொண்டு ஹெக்டர் வரும்வரை, ரத்தம் சிந்துவதைப் பற்றியும் போர் செய்வதைப் பற்றியும் நான் நினைத்துப் பார்க்க மாட்டேன். எவ்வளவு ஆர்வமாக தாக்க வந்தாலும் சரி, எனது பாசறைகளையும் கருப்புக் கப்பலையும் அவன் வந்தடையும்போது அவன் நிறுத்தப் படுவான்.'

அவன் அப்படிச் சொன்னதும், அங்கிருந்த ஒவ்வொருவரும் இரண்டு காதுகள் கொண்ட கோப்பையை எடுத்து, கடவுளுக்குப் பானப்படையல் செய்தனர். கப்பல்கள் இருந்த பக்கமாகத் திரும்பிச் சென்றனர். ஒடிஸியூஸின் தலைமையில்.

வசதியானதொரு படுக்கையை ஃபீனிக்ஸுக்குத் விரைவாகத் தயார் செய்யும்படி காத்திருந்த ஆண்களுக்கும் பணிப்பெண்களுக்கும் உத்தரவிட்டான் பெட்ரோக்குலஸ். கம்பளியாட்டு மயிர்,

கால்மிதி, அருமையானதொரு சணல் நார்த்துணி ஆகியவை அடங்கிய படுக்கையை பெட்ரோக்குலஸ் உத்தரவிட்டபடித் தயார் செய்தனர் பணிப்பெண்கள். தெய்வீக விடியலை எதிர்பார்த்தவனாகக் கிழவன் ஃபீனிக்ஸ் அதில் படுத்துறங்கி னான். அக்கிலிஸூம் அழகாக வடிவமைப்பட்ட அந்தப் பாசறையில் இருந்த அறையின் ஒரு மூலையில், லெஸ்போஸி லிருந்து அழைத்துக்கொண்டு வந்த அழகிய கன்னம் கொண்ட டயமீடி என்ற பெண்ணுடன் படுத்துறங்கினான். என்யூஸின் நகரமான செங்குத்தான சைரோஸைக் கைப்பற்றியபோது அக்கிலிஸ் பிடித்த அழகிய ஒட்டியாணமணிந்த அய்ஃபிஸ் என்ற பெண்ணை அவன் பெட்ரோக்குலஸூக்குக் கொடுத்திருந்தான். அவளோடுதான் எதிர்ப்பக்க மூலையில் பெட்ரோக்குலஸூம் படுத்துறங்கினான்.

தூதுவர்கள் அகமெம்னனின் குடிலுக்குச் சென்றனர். உடனே கிரேக்கத் தலைவர்கள் என்னாயிற்று என்று அறியும் ஆர்வத்தில் எழுந்து நின்றனர். தங்கக் கோப்பைகளை ஏந்திய வண்ணம் வந்தவர்களுக்கு ஒவ்வொரு பக்கத்திலுமிருந்தும் வரவேற்பு கூறி அவர்களைக் கேள்விகளால் துளைத்தனர். மக்கள் தலைவனாகிய அகமெம்னன்தான் முதலில் பேசினான்:

‘புகழ்பெற்ற கிரேக்கர்களின் மகாபுகழே ஒடிஸியூஸ், சொல், தீக்கிரையாவதிலிருந்து கப்பல்களை அக்கிலிஸ் காப்பாற்ற ஒப்புக்கொண்டானா மறுத்தானா? அவனது பெருமைமிகுந்த மனம் இன்னும் கோபத்தின் பிடியில்தான் இருக்கிறதா?’

எல்லாவற்றுக்கும் துணிந்த கடவுளையொத்த ஒடிஸியூஸ் பதில் சொன்னான்:

‘அத்ரியூஸின் மகனே, சிறப்புமிகு மக்கள் தலைவனே அகமெம்னன்! தனது கோபத்தைத் தணிக்கும் எண்ணம் அவனுக்கு இல்லை. சொல்லப்போனால் அவன் முன்னைவிட இன்னும் அதிக கோபமாக இருக்கிறான். உன்னையும் நீ தருவதாகச் சொன்ன பரிசுப்பொருள்களையும் அவன் ஏற்க மறுத்துவிட்டான். கப்பல்களையும் வீரர்களையும் காப்பாற்றும் வழியை உன்னையே கண்டுபிடித்துக்கொள்ளச் சொல்லி விட்டான். விடியலில் அவனும் அவனது கப்பல்களுடன் ஊருக்குத் திரும்பப் போவதாகப் பயமுறுத்துகிறான். ‘நீங்கள் அனைவருமே வீடுதிரும்ப வேண்டும் என்று நான் உங்களுக்குச்

சொல்வேன். இந்த இலியத்தின் செங்குத்தான தெருக்களில் உங்கள் இலக்கை நீங்கள் அடையவே முடியாது. வெகு தூரத்துக்கு இடிமுழக்கம் செய்யும் ஜீயூஸ் தன் பாதுகாக்கும் கரங்களை இந்த நகரை நோக்கி நீட்டியுள்ளார். அந்நகரின் மக்களுக்கு நம்பிக்கை வந்துள்ளது' என்று நாம் எல்லாருமே நம் நாட்டுக்குத் திரும்பிவிடும்படி ஆலோசனை வேறு சொல்லி யிருக்கிறான். அவன் சொன்னது இதுதான்.

'அறிவார்ந்த என் சக தூதுவர்களில் அஜாக்ஸுும் கூட இருந்த இரண்டு அறிவிப்பாளர்களும் நான் சொன்னது உண்மைதான் என உனக்குச் சாட்சி சொல்வார்கள். ஆனால் கிழவன் ஃபினீக்ஸ் மட்டும் அங்கே உறங்கிக் கொண்டிருக்கிறான். அவனை அங்கு தங்கச் சொல்லி அக்கிலிஸ்தான் வற்புறுத்தினான். ஃபினீக்ஸ் விரும்பினால் விடிகாலையில் அவனோடு ஊர் திரும்ப அதுதான் வசதி என்றும், ஆனால் வற்புறுத்தல் ஏதும் இல்லையென்றும் அவன் சொன்னான்.

அவன் அப்படிச் சொன்னதும் அனைவரும் ஒன்றும் சொல் லாமல் அமைதியாக இருந்தனர். அவனுடைய வெளிப்படை யான வார்த்தைகள் அனைவரையும் ஆச்சரியத்தில் ஆழ்த்தி யிருந்தது. வெகு நேரம் அவர்கள் அங்கேயே மௌனமாகவும் மனமுடைந்தும் அமர்ந்திருந்தனர். கடைசியில் போர்முழக்கத் தலைவனான டயமீடிஸ் பேசினான்:

'அத்ரியூஸின் மகனே, சிறப்புமிகு மக்கள் தலைவனே அகமெம்னன்! நீ அக்கிலிஸைக் கெஞ்சியிருக்கவே கூடாது. அப்படி மிதமிஞ்சிய பரிசுப்பொருள்களையும் தருவதாகச் சொல்லியிருக்கவும் கூடாது. அமைதியான நேரங்களிலேயே அவன் ஒரு திமிர் பிடித்தவன். நீ இப்பொழுது அவன் திமிரை அதிகமாக்கிவிட்டாய். சரி சரி போகட்டும் விடு, அவன் இருந்தாலும் சரி, கப்பலேறிப் போனாலும் சரி. கடவுள் அவன் மனதை அசைக்கும்போது, அவன் மனது அவனுக்குச் சொல்லும்போது அவன் போர் செய்ய மீண்டும் வருவான்.

'நீங்கள் அனைவரும் நான் இப்பொழுது சொல்வதுபோல செய்யுங்கள். இப்போதைக்குப் படுக்கைக்குப் போங்கள். பலத்தையும் வீரத்தையும் தக்க வைத்துக்கொள்ளும் அளவுக்குத் தேவையான உணவையும் மதுவையும் நீங்கள் உண்டு விட்டீர்கள். அழகான, ரோஜா விரல் கொண்ட விடியல்

வரும்போது, நீ அகமெம்னன், உனது காலாட்படையையும் தேர்களையும் கப்பல்களுக்கு முன்னால் போர் செய்யத் தயாராக நிறுத்திவை. அவர்களுக்கு நீதான் முன்னின்று வழிகாட்டி அவர்கள் உள்ளத்தில் நீதான் வீரத்தைத் தூண்டவேண்டும்.'

அப்படி அவன் சொன்னதும், வீரர்கள் அனைவரும் குதிரைகளை அடக்கும் டயமீடிஸின் சொற்களைக் கேட்டுப் பேரொலி ஏழுப்பி மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர். கடவுள்களுக்குப் பானப் படையல் செய்துவிட்டு தங்கள் பாசறைகளுக்குத் திரும்பிச் சென்று படுத்து உறக்கம் என்னும் பரிசை எடுத்துக்கொண்டனர்.'

# காண்டம் - 10



## *டயமீடிஸும் ஒடிஸியூஸும்:*
## *இரவுத் தாக்குதல்*

# டயமீடிஸூம் ஒடிஸியூஸூம்:
# இரவுத் தாக்குதல்

**கதைச்சுருக்கம்**

***வரிகள் 01 – 193***

*கிரேக்கர்களின் சூழ்நிலையை எண்ணிக் கவலையுற்றவர்களாக அகமெம்னனும் மெனிலயஸூம் தூங்க முடியாமல் தவித்தனர். எனவே ஒரு கூட்டத்தைக் கூட்டி காவலுக்கு நிற்கும் வீரர்களைச் சோதித்தனர்.*

***வரிகள் 194 – 298***

*அந்தக் கூட்டத்தில், ட்ரோஜன் முகாமை உளவு பார்க்க வேண்டும் என்ற கருத்தை நெஸ்டர் வைக்கிறான். அதைச் செய்ய டயமீடிஸூம் ஒடிஸியூஸூம் முன்வருகின்றனர்.*

***வரிகள் 299 – 468***

*கிரேக்க முகாமைக் கண்காணிப்பதற்காக யாராவது ஒரு ட்ரோஜன் உளவாளியை வரும்படி அழைக்கிறான் ஹெக்டர். டோலன் முன்வந்து அதற்காகக் கிளம்புகிறான். ஒடிஸியூஸூம் டயமீடிஸூம் அவனைப் பிடித்து தகவல்களைச் சேகரித்துக் கொண்டு அவனைக் கொன்றுவிடுகின்றனர்.*

***வரிகள் 469 – 579***

*உறங்கிக்கொண்டிருக்கும் த்ரேஸியர்களையும் அவர்களது தலைவன் ரீசஸையும் கொன்று அவனுடைய புகழ்பெற்ற குதிரையையும் எடுத்துக்கொண்டு வெற்றியோடு திரும்பு கின்றனர்.*

# டயமீடிஸும் ஒடிஸியூஸும்: இரவுத் தாக்குதல்

*உறக்கத்தின் மென்மையான கரங்களால் போர்த்தப்பட்ட இரவின் மீதிப்பகுதியை கப்பல்களிலேயே கழித்தனர் கிரேக்கர் கள். ஆனால் அத்ரியூஸின் மகனும் மக்கள் தலைவனுமாகிய அகமெம்னன் எளிதில் ஓய்வெடுக்க முடியாத அளவுக்கு மனச் சுமைகள் நிறைந்தவனாக இருந்தான்.*

*அழகிய கூந்தலையுடைய ஹீராவின் கணவனாகிய ஜீயூஸ் ஆலங் கட்டி மழை, பெருவெள்ளம், உறைபனிப்புயல் போன்றவற்றை அறிவிக்கவோ கசப்பான யுத்தத்தின் வாய்பிளக்க வைக்கவோ மின்னலை அனுப்புவ்துபோல, வேதனையில் இருந்த அகமெம்னன் தனது இருப்பின் ஆழத்திலிருந்து மாற்றி மாற்றிப் புலம்பிக் கொண்டிருந்தான். அவனுடைய இதயம் பயத்தால் நடுங்கியது. ட்ரோஜன் பெருவெளிகளை நோக்கிப் பார்வையை ஓடவிட்டான் அவன். ஆங்காங்கு எண்ண முடியாத அளவுக்கு இலியத்தின் முன் தீ எரிந்து கொண்டிருப்பதைப் பார்த்தும், ட்ரோஜன்களின் பலதரப்பட்ட கோரைப்புல் குழல்களிலிருந்து வந்த இசையையும், படையினரின் குரல்களையும் கேட்டு அசந்து போனான். கிரேக்கக் கப்பல்களையும் தன்னுடைய படையினரையும் அவன் பார்த்தபோது, தன் தலைமுடியை வேரோடு பிடுங்கிக் கொண்டான். ஒலிம்பஸில் வாழும் ஜீயூஸிடம் வேதனை மல்க பிரார்த்தித்தான்.*

*கடைசியில் நீலியூஸின் மகனாகிய நெஸ்டரைப் போய்ப்பார்த்து, தன் படையினரைப் பேரழிவிலிருந்து காப்பாற்ற இருவருமாகச் சேர்ந்து வெல்லமுடியாத திட்டம் ஒன்றை உருவாக்கலாம் என்று*

நினைத்தான். அதைத் தவிர வேறெதையும் அவனால் நினைக்க முடியவில்லை. எழுந்து தன் மேலங்கியை அணிந்து கொண் டான். பளிச்சிட்டுக் கொண்டிருந்த தன் பாதங்களில் மிதியடி களைப் போட்டுக்கொண்டான். பதனிடப்படாத பழுப்புநிற பெரிய சிங்கமொன்றின் பளபளக்கும் தோலை அள்ளித் தன் தோள்மீது போட்டுக்கொண்டான். அது அவனுடைய கணுக்கால் வரை நீண்டு தொங்கியது. பின் தனது ஈட்டியை எடுத்துக் கொண்டு கிளம்பினான்.

மெனிலயஸுக்கும் உறக்கம் எளிதில் வரவில்லை. அவனுக் காகப் பெரும் நீர்ப்பரப்பைக் கடந்து ட்ராய்* நகருக்குள் வந்து துணிச்சலான படையெடுப்பைத் தொடங்கிய கிரேக்க வீரர்களை எண்ணிக் கவலை கொண்டான் அவன். தனது தோள்களைச் சுற்றி புள்ளிகள் கொண்ட ஒரு சிறுத்தையின் தோலை அவன் போர்த்தி யிருந்தான். தனது வெண்கலக் கவசத் தொப்பியை எடுத்துப் போட்டுக் கொண்டான். தன் பெருங்கையில் ஈட்டியை எடுத்துக் கொண்டான். கடவுளைப்போல அனைவராலும் மதிக்கப்பட்ட கிரேக்கர்களின் தலைவனான தன் சகோதரனை எழுப்ப எழுந்து போனான். தன் கப்பலின் பின்பகுதியில், கவச உடையைத் தோளில் தொங்கவிட்ட வண்ணம் அகமெம்னன் நின்றுகொண்டி ருப்பதைப் பார்த்தான். அவனைப் பார்த்த அகமெம்னன் அக மகிழ்ந்தான். ஆனால் போர் முழக்கத் தலைவனான மெனிலயஸ் தான் முதலில் பேசினான்:

‘என்னருமைச் சகோதரனே, ஏன் இப்படி ஆயுதம் தரித்திருக் கிறாய்? ட்ரோஜன்களை உளவுபார்க்க யாரையாவது அனுப்பப் போகிறாயா? அந்த பணியைச் செய்வதற்கு யாரும் ஒப்புக் கொள்ள மாட்டார்கள் என்று நான் மிகவும் அஞ்சுகிறேன். இந்த நீண்ட இரவினூடே தனியாகச் சென்று எதிரி முகாமை வேவு பார்த்துவர ஒரு வீரமான இதயம் தேவை.’

தலைவன் அகமெம்னன் பதில் சொன்னான்:

‘ஒலிம்பஸ் மலையில் உருவானவனே மெனிலயஸ்! ஜீயூஸ் நமக்கெதிராகத் திரும்பியிருக்கும் இந்த நேரத்தில், கிரேக்கர்

---

* அய்லஸ் என்பவரும் ட்ராஸ் என்ற அவரது தந்தையும் சேர்ந்து இலியம் என்றும் அழைக்கப்பட்ட ட்ராய் நகரை நிர்மாணித்ததாகவும் ட்ராய் என்ற பெயரும் அய்லஸ், ட்ராஸ் ஆகியோரின் பெயர்களில் இருந்து உருவானதாகும் என என்சைக்ளோபிடியா ப்ரிட்டானிகா கூறுகிறது.

களையும் அவர்களது கப்பல்களையும் காப்பாற்ற உனக்கும் எனக்கும் ஒரு திட்டம் தேவைப்படுகிறது. ஒரு சாதுரியமான திட்டம். ஹெக்டர் கொடுக்கும் திருப்படையல்கள்தான் ஜீயூஸுக்கு நாம் கொடுப்பதைவிட முக்கியமாகப் போய் விட்டது. ஒரு தனி மனிதனாக இருந்து நமது ஒட்டுமொத்தப் படைக்கும் ஹெக்டர் ஏற்படுத்தியிருக்கும் நாசம் இதுவரை என் அனுபவத்தில் நான் கண்டிராதது. என் அனுபவத்தை மீறியதாக இருக்கிறது. ஆனால் அவன் கொடுத்த அடியின் வலியை வெகு நாட்களுக்கு நாம் உணர்ந்து கொண்டிருப்போம் என்பது மறுக்க முடியாத நிஜமாகிவிட்டது.

சரி, இப்பொழுது உடனே நீ நம் கப்பல்களைக் கடந்து போய் அஜாக்ஸையும் இடொமீனியஸையும் அழைத்து வா. நான் சென்று கடவுளையொத்த நெஸ்டரை உறக்கத்திலிருந்து எழச்சொல்கிறேன். நமது காவல் வீரர்களை நெஸ்டர் பார்க்க வேண்டும் என்று நான் விரும்புகிறேன். அது மிகவும் முக்கிய மானது. அவர்களை எப்போதும் உஷாராக வைக்க வேண்டியது அவசியம். மற்றவர்கள் சொல்வதைவிட நெஸ்டர் சொல்வதற்கு அவர்கள் அதிக மதிப்பு கொடுப்பார்கள். ஏனெனில் நெஸ்டரின் மகனும் இடொமீனியஸின் உதவியாளன் மெரியோனிஸும்தான் காவல்வீரர்களின் படைக்குத் தலைமை ஏற்றுள்ளனர். சிறப்புப் பொறுப்பில் நாம் அவர்களை வைத்துள்ளோம்.'

போர்முழக்கத் தலைவனான மெனிலயஸ் பதில் சொன்னான்:

'அப்படியானால் சரி. ஆனால் எனக்கு என்ன உத்தரவுகள் வைத்திருக்கிறாய்? அஜாக்ஸ், இடொமீனியஸ் இவர்களோடு நானும் தங்கி நீ வந்து சேரும்வரை காத்திருக்க வேண்டுமா? அல்லது அவர்களுக்கு உன் உத்தரவுகளைக் கொடுத்த பிறகு உடனே உன்னை வந்து சேர்ந்துகொள்ள வேண்டுமா?'

வீரர்களின் தலைவனான அகமெம்னன் பதில் சொன்னான்:

'அவர்களோடே நீ இரு. இல்லையெனில் இந்த முகாமின் குறுக்கே வரும் அனேக வழிகளில் நாம் ஒருவரை ஒருவர் தவற விட்டுவிடலாம். நீ போகும் வழியில் சந்திக்கும் வீரர்களிடமெல் லாம் உற்சாகமூட்டும் விதமாகப் பேசு. அவர்கள் எப்போதும் விழிப்புடன் இருக்க வேண்டுமென்று கூறு. அவர்களுடைய பாரம்பரியத்தையும் அவர்களது தந்தையின் பெயரையும் நினைவு படுத்து. எல்லாரையும் பாராட்டு. எந்தவித சம்பிரதாயங்களுக்

காகவும் காத்திராதே. நாமும் நமது பங்களிப்பைச் செய்தாக வேண்டும். நாம் பிறந்த நேரத்தில் நமக்கு வேதனைகளை ஜீயூஸ் விதித்திருக்க வேண்டும்.'

ஜாக்கிரதையாகச் சொல்லப்பட்ட இந்த வார்த்தைகளுடன் தன் சகோதரனை அனுப்பிவிட்டு மக்கள் மேய்ப்பனாகிய நெஸ்டரைப் பார்க்கச் சென்றான் அகமெம்னன். தனது குடிலுக்கும் கருப்புக் கப்பலுக்கும் அருகில் ஒரு மென்மையான படுக்கையில் அவன் படுத்திருப்பதைப் பார்த்தான். அலங்காரமான கவச உடை, ஒரு கேடயம், இரண்டு ஈட்டிகள், பளபளக்கும் ஒரு தலைக்கவசம் எல்லாம் அவனருகில் இருந்தன. கொலைக் களமான போர்க்களத்துக்கு தன் வீரர்களைத் தலைமையேற்று அனுப்பும்போது அவன் அணிந்து செல்கின்ற மின்னும் இடுப்புப் பட்டையும் அவற்றோடு கிடந்தது. எவ்வளவுதான் அபாயமிருந் தாலும், பரிதாபத்துக்குரிய முதுமைக்காக அந்தக் கிழவன் தனிச்சலுகை ஏதும் காட்டியதில்லை. புருவங்களை உயர்த்தி, தலை தூக்கிப் பார்த்த நெஸ்டர் அகமெம்னனிடம் சவால்போலக் கூறினான்:

'யாரது? தனியாக முகாமில் இந்த நட்ட நடுஇரவில், எல்லாரும் உறங்கும்போது, கப்பல்களுக்கு அருகில் சுற்றிக்கொண்டிருப் பது? வழிதவறிய கோவேறு கழுதையைத் தேடுகிறாயா அல்லது யாரேனும் உன் நண்பர்களையா? பேசு, ஆனால் பதில் சொல்லும் வரை அங்கேயே நகராமல் நில். உனக்கென்ன வேலை இங்கே?'

தலைவன் அகமெம்னன் பதில் சொன்னான்:

'நீலியூஸின் மகனே நெஸ்டர்! கிரேக்கர்களின் மாட்சிமையே! உடலில் மூச்சிருக்கும்வரையிலும், உறுப்புகளில் பலம் இருக்கும் வரையிலும் முடிவில்லாத வேதனைகளை அனுபவிக்க வேண்டு மென்று ஜீயூஸால் தனிமைப் படுத்தப்பட்ட அத்ரியூஸின் மகனாகிய அகமெம்னன் வந்திருக்கிறேன். இந்தப் போரைப் பற்றியும் ஒரு கணம்கூட உறக்கமில்லாமல் போன நமது நிலை பற்றியும் நான் கவலை கொண்டிருப்பதால் இங்கே அலைந்து கொண்டிருக்கிறேன். என் மக்களை நினைத்து நான் மிகவும் அச்சமுறுகிறேன். என் சுயக்கட்டுப்பாடு என்னை விட்டுப் போய்விட்டது. நான் நானாகவே இல்லை. என் இதயம் என் மார்பிலிருந்து குதித்து வெளியே வந்துவிட்டது. என் முழங் கால்கள் நடுங்கிக் கொண்டுள்ளன.

என்னைப் போலவே நீங்களும் நன்றாக உறங்கவில்லை என்று தெரிகிறது, நீங்களும் எதாவது செய்ய விரும்பினால், என்னோடு வாருங்கள். களைப்பினாலும் ஓய்வின்மையினாலும், தம் கடமைகளையெல்லாம் மறந்து அவர்கள் தூங்கிவிடவில்லை என்பதை உறுதிப்படுத்திக் கொள்ள காவல் நிற்கும் வீரர்களைப் பார்த்து வரலாம். நமக்கு வெகு அருகிலேயே முகாமிட்டுள்ளான் எதிரி. அவர்களுடைய திட்டம் என்ன என்பது பற்றி நமக்கு ஒன்றும் தெரியவில்லை. இரவுநேரத் தாக்குதலுக்குக்கூட அவர்கள் தயாராக இருக்கலாம்.'

கிரேக்கத் தேரோட்டியான நெஸ்டர் பதில் சொன்னான்:

'புகழ்மிக்க அகமெம்னனே, மக்கள் தலைவனே! ஹெக்டர் மனதில் ஏராளமான நம்பிக்கைகளை வளர்த்து வைத்துள்ளான். ஆனால் ஆலோசனை சொல்வதில் சிறந்தவனான ஜீயூஸ் அவனுடைய கனவுகளையெல்லாம் நனவாக்கப் போவதில்லை. மாறாக, அக்கிலிஸ் மட்டும் தன் கடுமையான கோபத்தை விட்டுவிட்டு மனதை மாற்றிக்கொள்வானாகில் இப்போதைவிட அதிகமாக ஹெக்டர் கவலைப்பட வேண்டிவரும் என்றே நான் நினைக்கிறேன். நான் உன்னோடு நிச்சயமாக வருகிறேன்.

'ஆனாலும் சிறந்த ஈட்டியெறி வீரனாகிய டயமீடிஸ், ஒடிஸியூஸ், ஆய்லியூஸின் மகனான விரைவுப்பாத அஜாக்ஸ், மேலும் உறுதியான மீஜிஸ் போன்ற வீரர்களையும் நாம் போகும் வழியில் அழைத்துக் கொண்டு போவோம். தலைவன் இடொமீனிஸை யும் டிலமானின் மகன் கடவுளையொத்த அஜாக்ஸ் இருவரையும் யாராவது போய் கூட்டிவர வேண்டும். இடொமீனியஸின் கப்பல்கள் தொலைவில் நிற்கின்றன.

'ஆனால் மெனிலயஸுக்கு என்னாயிற்று? அவனை எனக்குப் பிடிக்கும். அவனை நான் மதிக்கவும் செய்கிறேன். ஆனாலும் எனக்கு அவன் மீதான விமர்சனங்கள் உண்டு. என் உணர்ச்சிகளை நான் மறைக்கப் போவதில்லை. நீ கோபித்துக் கொண்டாலும் சரி. இந்த மாதிரி நேரத்தில், எல்லாப் பொறுப்பையும் உன்மீது போட்டுவிட்டு அவன் தூங்கிக் கொண்டிருப்பது சரியல்ல. இந்நேரம் அவன் வந்து தலைமை ஏற்று முன் நின்று எல்லாரை யும் நடத்திச் சென்றிருக்க வேண்டும். சூழ்நிலை மிகவும் மோசமாக உள்ளது.'

மக்கள் தலைவன் அகமெம்னன் பதில் சொன்னான்:

'மரியாதைக்குரிய தலைவா! அவனை நீங்கள் திட்டினால் நான் சந்தோஷப்படும் நேரங்களும் உண்டு. இப்படித்தான் அவன் அவ்வப்போது சும்மா இருந்துவிடுவான். காரணம் சோம்பேறித் தனமோ முட்டாள்தனமோ அல்ல. நான் பார்த்துக்கொள்வேன் என்று அவன் நினைப்பதுதான் காரணம். ஆனால் இன்று இரவு அவன் எனக்கு முன்பே எழுந்து என்னைப் பார்க்க வந்தான். நீங்கள் சொன்ன அந்த இரு வீரத்தலைவர்களையும் அழைத்துவர நான் அவனை ஏற்கெனவே அனுப்பிவிட்டேன். அதனால் நாம் இப்பொழுது போகலாம். வாயிலுக்கு வெளியே காவல் நிற்கும் வீரர்களுடன் நாம் அவர்களைச் சந்திக்கலாம். அங்கேதான் காத்திருக்கச் சொல்லி சொல்லியிருந்தேன்.'

கிரேக்கத் தேரோட்டியான நெஸ்டர் பதில் சொன்னான்:

'அப்படியானால் அவனை யாரும் குறை சொல்ல முடியாது. போருக்கு வரும்படி அவன் தூண்டும்போது வீரர்களால் அவனது சொற்களை அலட்சியப்படுத்தவும் முடியாது.'

இப்படிச் சொல்லிவிட்டு குறுங்கைத் தளருடையையும் மின்னும் தன் பாதங்களில் அருமையான பாதணிகளையும் அணிந்து கொண்டான். பிறகு மேலங்கியை அணிந்து அதை உடையூசி யால் பொருத்திக்கொண்டான். அடர்த்தியான கம்பளியால் ஆன மேற்பரப்பும் இரண்டு மடிப்புகளுமாக அந்த மேலங்கி இருந்தது. கடைசியில் அவன் கூர்மையான வெண்கல முனை கொண்ட உறுதியான ஈட்டியொன்றை எடுத்துக்கொண்டு வெண்கலக் கவச உடையணிந்த கிரேக்கர்களின் கப்பல்களைத் தாண்டிச் செல்லலானான்.

கற்பனா சக்தியில் ஜீயூஸுக்கு இணையானவனான ஒடிஸியூஸைத்தான் கிரேக்கத் தேரோட்டியான நெஸ்டர் முதலில் எழுப்பினான். அவனுக்கு ஓர் அழைப்பைக் கொடுத்தான். அழைப்பொலியைக் கேட்டுத் தன் பாசறையை விட்டு வெளியில் வந்த ஒடிஸியூஸ் என்ன விஷயம் எனத் தன்னைத் தேடி வந்தவர்களை விசாரித்தான்.

'இந்த இரவு நேரத்தில் வீரர்களின் பாசறைகளுக்கும் கப்பல் களுக்குமாக எதற்காக நீங்களாகவே அலைந்து கொண்டிருக் கிறீர்கள்? இங்கே நீங்கள் வருவதற்கு என்ன காரணம்? நிச்சயமாக அலட்சியப்படுத்த முடியாத ஏதோ காரணமிருக்க வேண்டும்.'

கிரேக்கத் தேரோட்டியான நெஸ்டர் பதில் சொன்னான்:

'ஒலிம்பஸ் மலையில் பிறந்த லார்ட்டஸின் மகனே, வளம்மிக்க ஒடிஸியூஸ், எங்களைப் பார்த்து எரிச்சல் படாதே. நிச்சய மாகவே, கிரேக்கர்கள் பெரிய பிரச்சனையில் சிக்கிக் கொண் டிருக்கிறார்கள். காலத்தை விரயமாக்காமல் எங்களோடு விரைந்து வா, இன்னும் சில தலைவர்களை எழுப்பி அவர்களை யும் கலந்தாலோசிக்க வேண்டியுள்ளது. அதன்பிறகுதான், தொடர்ந்து போர் செய்வதா அல்லது இங்கிருந்து ஒரேயடியாகப் போய்விடுவதா என்பதைப் பற்றி முடிவு செய்ய முடியும்.'

அவன் அப்படிச் சொன்னதும் விரைந்து முடிவுகள் எடுக்கும் ஒடிஸியூஸ் உடனே தன் பாசறைக்குள் சென்று, அலங்காரமான தனது கேடயத்தை எடுத்துத் தனது தோளில் தொங்கவிட்டுக் கொண்டு அவர்களுடன் கிளம்பினான். அடுத்து அவர்கள் டைடியூஸின் மகனான டயமீடியஸிடம் சென்றார்கள். அவன் தனது பாசறைக்கு வெளியே கொஞ்ச தூரத்தில் தனது கவச உடைகளுடன் படுத்து உறங்கிக் கொண்டிருந்தான். தங்களது கேடயங்களைத் தலையணையாக வைத்து அவனது வீரர்கள் அவனுக்கு அருகிலேயே உறங்கிக்கொண்டிருந்தனர். முட் களைக் கொண்ட அவர்களுடைய ஈட்டிகளின் தடித்த முனைகள் பூமியில் குத்திவைக்கப் பட்டிருந்தன. அவ்வீட்டிகளின் மேல்பக்கத்து வெண்கல முனைகள் தந்தை ஜீயூஸ் அனுப்பும் மின்னலைப் போலப் பளிச்சிட்டுக் கொண்டிருந்தன. பண்ணை எருதுத் தோலைக் கீழே விரித்து, பளபளப்பான சமுக்காளத்தைத் தலைக்குக் கீழே வைத்து வீரன் டயமீடிஸ் உறங்கிக் கொண்டி ருந்தான். கிரேக்கத் தேரோட்டியான நெஸ்டர் அவனருகில் சென்று அவனுக்கு ஓர் உதை கொடுத்து எழுப்பி வேடிக்கையாகச் சொன்னான்:

'டைடியூஸின் மகனே, எழுந்திரு! இரவு முழுவதும் ஏன் இப்படி ஆடம்பரமாக உறங்கிக் கொண்டிருக்கிறாய்? ட்ரோஜன்க ளெல்லாம் நம் தலைக்கு மேலே கப்பல்களுக்கு அருகில்தான் முகாமிட்டுள்ளனர் என்பதும் அவர்களையும் நம்மையும் பிரிக்க இடையில் எதுவுமேயில்லை என்பது உனது கவனத்திலிருந்து நழுவி விட்டதா?'

அவன் அப்படிச் சொன்னதும் சட்டென எழுந்த டயமீடியஸ் அவசரமாகச் சொன்னான்:

'நீங்கள் மிகவும் கடினமான ஆள் முதியவரே! எப்போதுமே இயங்கிக் கொண்டிருக்கிறீர்கள். சுற்றி வந்து நமது வீரர்களை யெல்லாம் எழுப்ப இளைஞர்கள் யாரும் இல்லையா? உங்களை நினைத்தால் வியப்பாக இருக்கிறது முதியவரே'

கிரேக்கத் தேரோட்டியான நெஸ்டர் பதில் சொன்னான்:

'என் நண்பனே, நீ சொன்னதெல்லாம் உண்மையே. சுற்றி வந்து வீரர்களையெல்லாம் எழுப்பும் இந்த வேலையைச் செய்ய எனது அழகிய மகன்களும் படையினரும் இருக்கத்தான் செய்கின்றனர். ஆனால் நாம் இப்பொழுது சவரக்கத்தியின் முனையில் நிற்பது போல மிகவும் நெருக்கடியான நேரத்தில் இருக்கிறோம். கிரேக்கர்கள் அனைவருக்கும் கசப்பான மரணம் அல்லது விடுதலை காத்திருக்கிறது. இருந்தாலும், எனக்காக நீங்கள் இரக்கப் பட்டால், இளைஞர்களாகிய நீங்களே போய் மீஜிஸையும் ஆய்லியஸின் மகனான விரைவுப்பாத அஜாக்ஸையும் எழுப்புங்கள்.'

அவன் அப்படிச் சொன்னதும், ஒரு பெரிய சிங்கத்தின் பளபளக் கும் தோலை எடுத்துத் தன் தோள் மீது போர்த்திக்கொண்டு தன் ஈட்டியை எடுத்துக் கொண்டு கிளம்பினான் டயமீடிஸ். அந்தச் சிங்கத்தோல் அவனது பாதம் வரை நீண்டு தொங்கியது. அந்த இருவரையும் அவர்களது பாசறைகளிலிருந்து எழுப்பி தன் னோடு அழைத்து வந்தான்.

இந்தக்குழு பின்பு வாயில் காப்போர்களைச் சந்தித்தது. ஆனால் அவர்களது தலைவர்களில் யாரும் உறங்கிக் கொண்டிருப் பதைக் கண்டுபிடிக்க முடியவில்லை. அவர்கள் இன்னும் அங்கேயே தங்களது ஆயுதங்களுடன் எச்சரிக்கையாக நின்று கொண்டிருந்தனர். ஏதோ ஒரு கொடிய மிருகம் மலையிலிருந்து காட்டுக்குள் வந்துவிட்டது என்று கேள்விப்பட்டு மனிதர்களும் வேட்டை நாய்களும் அதைப் பின்பற்றி வந்து கொண்டிருக்கும் போது, பண்ணையில் உள்ள ஆட்டு மந்தைக்குக் காவலாக, சங்கடத்துடன் நிற்கும் நாய்களுக்குத் தூக்கம் இல்லாமல் போவதைப்போல, காவல் வீரர்களின் கண்களுக்கு நட்பற்ற அந்த இரவு முழுவதும் இனிய உறக்கம் இல்லாமல் போனது. ட்ரோஜன் படைகளில் அசைவு ஏதும் தெரிகிறதா என்று, அவர்களின் கவனம் முழுவதும் சமவெளியை நோக்கியே இருந்தது.

அவர்களையெல்லாம் அப்படிப் பார்க்கப் பார்க்கக் கிழவன் நெஸ்டருக்கு மிகவும் சந்தோஷமாக இருந்தது. அவர்களை உற்சாகப்படுத்தி அவன் விரைவாகச் சொன்னான்:

'அப்படித்தான் பையன்களே, அப்படித்தான் இருக்க வேண்டும். யாருமே ஒரு குட்டித் தூக்கம்கூடப் போட்டுவிடக் கூடாது. அப்படிச் செய்தால் நமது எதிரி இன்பமுறுமாறு ஒரு காரியம் செய்ததாகிவிடும்.'

இப்படிச் சொல்லிவிட்டு அகழியைத் தாண்டினான். அவனைப் பின் தொடர்ந்து ஆலோசனைக் கூட்டத்துக்கு அழைக்கப்பட்ட கிரேக்கத் தலைவர்கள் சென்றனர். மெரியோனிஸுும் நெஸ்டரின் உயர்வான மகனாகிய த்ராசிமிடிஸுும் அவர்களுடன் வந்திருந்தனர். ஆலோசனைக் கூட்டத்தில் உதவி செய்வதற்காக அவர்கள் அழைக்கப்பட்டிருந்தனர். அகழியைத் தாண்டி வந்த அவர்கள் திறந்த வெளியில் பிணங்கள் கிடக்காத ஓரிடத்தில் அமர்ந்தனர். இரவு வந்ததும், போர்க்களத்தில் சண்டையிடு வதையும் கிரேக்கர்களைக் கொன்று குவிப்பதையும் நிறுத்தி விட்டு ஹெக்டர் திரும்பிச் சென்ற அதே இடம்தான் அது. அங்கே அமர்ந்து அவர்கள் கருத்துக்களைப் பரிமாறிக் கொண்டனர்.

கிரேக்கத் தேரோட்டியான நெஸ்டர் பேச்சைத் தொடங்கித் தன் மனத்தில் உள்ளதைச் சொன்னான்:

'என் நண்பர்களே, யாராவது ஒருவர் துணிச்சலாகவும் நம்பிக்கை யுடனும் போய் ட்ரோஜன்களின் முகாமுக்குள் நுழைந்து, எதிரிகளில் வழிவிலகிச் செல்கின்ற யாராவது ஒருவனைப் பிடித்து வரமுடியாதா? அப்படி முடியாவிட்டாலும், எதிரிகள் பேசிக் கொள்வதையாவது காதில் வாங்க வாய்ப்பு ஏற்படலாம். அவர்களுடைய நோக்கமென்ன, நமது கப்பல்களுக்கு அருகில் முன்னேறிய நிலையிலேயே அவர்கள் இருக்கப் போகிறார்களா அல்லது கிரேக்கர்களுக்குத் தோல்வியைத் தந்துவிட்டு நகருக்குள் மீண்டும் பின்வாங்கிச் செல்லப் போகிறார்களா என்று தெரிந்து கொள்ளலாம். இதையெல்லாம் தெரிந்து கொண்டு நமது வீரன் திரும்பி வருவானாகில், அவனுடைய புகழ் உலகெங்கும் பரவிவிடும். அவனுக்குச் சிறப்பான பரிசுகளும் நாம் தரலாம். ஒவ்வொரு கப்பல் தலைவனும் அவனுக்கு ஒரு பெண் செம்மறியாட்டை அதன் பால்குடிக் குட்டியோடு கொடுக்க வேண்டும். இந்தப் பரிசு எதற்கும் இரண்டாம் தரமானதல்ல.

அதுமட்டுமன்று. எல்லா விருந்து உபசாரங்களுக்கும் அவனை அழைக்க வேண்டும்.'

அவன் அப்படிப் பேசியதும் அனைவரும் மௌனம் காத்தனர். பின் போர்முழக்கத் தலைவனான டயமீடிஸ் பேசினான்:

'நெஸ்டர், நீங்கள் முன்வைக்கும் இந்த வீரதீரச் செயல் எனக்குப் பிடித்திருக்கிறது. ட்ரோஜன் முகாமும் இங்கிருந்து ஒன்றும் வெகு தொலைவில் இல்லை. நான் போகிறேன். ஆனால் என்னோடு வேறு யாராவது வர ஆசைப்பட்டால் அது எனக்கு மிகவும் வசதியாக இருக்கும். மேலும் மேலும் அபாயங்களைச் சந்திக்க என்னை அது தயார்படுத்தும். வீரர்கள் ஜோடி ஜோடியாகப் பணி புரியும்போது, தனியாகச் செய்பவர்களுக்குக் கிடைக்காத அனுகூலங்கள் ஜோடிகளுக்குக் கிடைக்கும். தனியாகச் செயல் படும் ஒருவனுக்குச் சாத்தியக்கூறுகள் தெரியலாம். ஆனால் தேவைப்படும் கற்பனையும் அறிவுத்திறமும் அவனுக்குக் கிடைக்காது.'

டயமீடிஸ் அப்படிப் பேசியதும் அவனோடு செல்ல பலர் முன்வந்தனர். ஏரிஸின் உதவியாளர்களான இரண்டு அஜாக்ஸ் களும் போக விரும்பினர். மெரியோனிஸும் நெஸ்டரின் மகன் த்ராசிமீடிஸும் போக ஆர்வம் கொண்டனர். புகழ்பெற்ற ஈட்டியெறி வீரனான மெனிலயஸ்கூடப் போக விரும்பினான். துணிச்சல் மிகுந்த ஒடிஸியூஸும் ட்ரோஜன் முகாமுக்குள் புக விரும்பினான். வீரதீரச் செயல் என்றால் அவனுக்கு அது எப்போதுமே உவப்பானது. மக்கள் தலைவனாகிய அகமெம்னன் அவர்களை நோக்கி இப்பொழுது பேசினான்:

'டைடியூஸின் மகனே டயமீடிஸ்! எனது பெருமையே, எனது இன்பமே! தானாக முன் வந்துள்ளவர்களில் மிகச்சிறந்தவனை, உனக்குத் தேவையான தோழனை நீயே தேர்ந்தெடுத்துக் கொள். அப்படிப்பட்டவர்கள் இங்கே ஏராளமானோர் இருக்கிறார்கள். மிக உயர்ந்த அந்தஸ்தில் இருப்பவராக இருந்தாலும் சரி, உயர்குடிப் பிறந்தவராக இருந்தாலும் சரி, அதற்காகச் சிறப்பான ஒருவரை விட்டுவிட்டு ஒருபடி கீழானவரை மரியாதை காரணமாக நீ தேர்ந்தெடுக்க வேண்டாம்' செம்பொன் நிறத் தலைமுடிகொண்ட தன் சகோதரன் மெனிலயஸுக்கு அஞ்சி இவ்விதம் பேசினான் அகமெம்னன். அவர்களைப் பார்த்து போர்முழக்கத் தலைவனான டயமீடிஸ் பேசினான்:

'எனக்கான தோழனை நானே தேர்ந்தெடுக்க வேண்டும் என்று நீங்கள் உண்மையிலேயே விரும்பினால், எது செய்தாலும் உளமார அதைச் செய்யும் வீரனான ஒடிஸியூஸை நான் எப்படி தேர்ந்தெடுக்காமல் இருக்க முடியும்? பல்லாஸ் அதீனிக்கும் அவனைப் பிடிக்குமல்லவா? அவன் மட்டும் என் அருகில் இருந்துவிட்டால் போதும், பற்றி எரியும் காட்டுத் தீக்குள்ளும் நாங்கள் போய்விட்டுப் பாதுகாப்பாகத் திரும்பி வந்துவிடு வோம். அவனுடைய அறிவுத் திறத்துக்கு ஈடு இணையே கிடையாது.'

எதற்கும் துணிந்த, கடவுளையொத்த ஒடிஸியூஸ் இப்பொழுது பேசினான்:

'டயமீடிஸ், எனது புகழையோ குறைகளையோ நீ இப்பொழுது பாடவேண்டாம். என்னைப் பற்றி எல்லாம் தெரிந்தவர்களுக்கு மத்தியில் நீ பேசிக்கொண்டிருக்கிறாய். நாம் போகலாம் வா. இரவு நன்றாக முன்னேறிவிட்டது. கிட்டத்தட்ட விடியலாகி விட்டது. தங்கள் உச்சியைக் கடந்து சென்றுவிட்டன நட்சத்திரங் கள். இரவின் மூன்றில் இரண்டு பங்கு சென்றுவிட்டது. மூன்றாம் பகுதி மட்டுமே நமக்கு மிஞ்சியுள்ளது.'

இப்படிச் சொல்லிவிட்டு அஞ்சத்தக்க அவர்களின் ஆயுதங் களைத் தோளில் போட்டுக்கொண்டு கிளம்பினர். தீர்மானமான த்ராசிமீடிஸ் இரு பக்கங்களிலும் கூர்முனையுள்ள ஒரு வாளை டயமீடிஸுக்குக் கொடுத்தான். ஏனெனில் டயமீடிஸ் தனது வாளை தன் கப்பலின் அருகிலேயே கேடயத்துடன் விட்டு வந்திருந்தான். எருதுத் தோலால் செய்யப்பட்ட ஒரு தலைக் கவசத்தை அவன் தன் தலையில் அணிந்திருந்தான். இளைஞர்கள் தம் தலைகளைக் காக்கப் போட்டுக் கொள்ளும் 'மண்டை யோட்டுத் தொப்பி' என்று அழைக்கப்பட்ட கன்னங்களை மூடும் தகடுகளோ கௌரவச் சின்னமோ ஏதுமின்றி டயமிடிஸ் வந்திருந்தான்.

ஒரு வில், ஒரு வாள் மற்றுமோர் அம்பறாத்தூணியை ஒடிஸி யூஸுக்கு மெரியோனிஸ் கொடுத்தான். திறமையுடன் செய்யப் பட்ட பதனிடப்பட்ட தோலால் செய்த தலைக்கவசமொன்றை யும் அவன் தலையில் அணிவித்தான். அதன் உள்பக்கமாக நெருக்கமாக ஒன்றோடொன்று இணைந்தவாறு பட்டைகளால் ஓரமடிக்கப்பட்டிருந்தது. அதன் மீது பிடிப்பாகக் கம்பளத்தால்

செய்யப்பட்ட தொப்பி தைக்கப்பட்டிருந்தது. அதன் வெளிப் பக்கத்தில் சுற்றிலும் பளபளக்கும் காட்டுப்பன்றியின் கோரைப் பற்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு வரிசையிலும் அப்பற்கள் எதிரெதிர் திசையில் இருக்குமாறு பொருத்தப் பட்டிருந்தன. இந்தத் தலைக்கவசம் ஆரம்பத்தில் ஈலியானி லிருந்து கொண்டுவரப்பட்டது. நன்றாகப் பாதுகாக்கப்பட்ட அமின்ட்டைகஸின் வீட்டிலிருந்து அதை ஆட்டோலைக்கஸ் திருடி வைத்திருந்தான். அவன் அதை ஸ்காண்டியாவுக்குக் கொண்டு செல்லும்படிச் சொல்லி சிதீராவின் ஆம்ஃபிடாம ஸுக்குக் கொடுத்தான். அதை மோலஸ் காட்டிய விருந் தோம்பலுக்காக ஆம்ஃபிடாமஸ் அவனுக்குக் கொடுத்தான். மோலஸ் தன் மகன் மெரியோனிஸ் அணிந்துகொள்ள அதைக்கொடுத்திருந்தான். இப்பொழுது அது ஒடிஸியூஸின் தலைக்கு, பாதுகாப்புச் சேவை செய்துகொண்டிருந்தது.

இவ்வாறாக அஞ்சத்தக்க வகையில் கவச உடைகளணிந்து கொண்டு மற்ற எல்லாத் தலைவர்களையும் விட்டுவிட்டு, அந்த ஜோடி புறப்பட்டது. அவர்களுக்குச் சாதகமான ஒரு சகுன அடையாளத்தை பல்லாஸ் அதீனி அனுப்பினாள். அவர்கள் சென்ற வழியில் வலப் பக்கத்தில் அவர்களுக்கு அருகாக ஒரு நாரை சென்றது. ஆனால் அந்தப் பறவையை அவர்கள் பார்க்க முடியாத அளவுக்கு இரவின் இருள் இருந்தது. ஆனால் அது எழுப்பிய ஒலியை அவர்கள் கேட்டனர். அந்த நல்ல சகுனம் கண்டு மகிழ்ந்த ஒடிஸியூஸ் அதீனிக்கு உடனே ஒரு நன்றி கூறும் பிரார்த்தனையை சமர்ப்பித்தான்:

'புயல் மேகங்களைச் செலுத்தும் ஜீயூஸின் மகளே, என் பிரார்த் தனையைக் கேள். எனது எல்லா வீரதீரச் செயல்பாடுகளிலும் நீதான் உடனிருக்கிறாய். நான் போருக்குச் செல்லும்போதெல் லாம் என்னை நீ மறப்பதில்லை. இன்று இரவு உனது சிறப்பு உதவியை எனக்களிப்பாயாக. நாங்கள் எங்கள் கப்பல்களுக்குத் திரும்பி வரும்போது எங்களுக்குப் பெருமை சேர்க்கும் விதத்தில் ஒரு பெரிய சாதனையைச் செய்து முடித்திருக்க வேண்டும். ட்ரோஜன்களுக்கு அது ஒரு பாடமாக அமைய வேண்டும்.'

அவனைத் தொடர்ந்து, போர்முழக்கத் தலைவனான டயமீடி ஸும் பிரார்த்தனை செய்தான்:

‘ஜீயூஸின் மகளே, நான் சொல்வதையும் கேட்பாயாக. கிரேக்கர்களின் தூதுவராக, அவர்களது படைகளையெல்லாம் அஸோபஸ் நதியின் கரையில் விட்டுவிட்டு, கடவுளையொத்த எனது தந்தை டைடியூஸ் தீப்ஸுக்குச் சென்றபோது நீ எப்படி அவரோடு இருந்தாயோ அதேபோல என்னிடமும் இருப்பாயாக. தீப்ஸ் நகரத்தாருக்குக்கான ஓர் அமைதிக் கோரிக்கையோடு அவர் அங்கே சென்றார். ஆனால் அவர் திரும்பி வரும் வழியில் பல வீரதீர சாகசங்களை நிகழ்த்தி, பதுங்கியிருந்து தாக்கியபோது தீவிர ஆதரவு கொடுத்து, நீ அவருக்கு உறுதுணையாக இருந்தாய். விண்ணுலகப் பெண் தெய்வமே! விருப்பத்துடன் இப்பொழுது என்னோடும் இருப்பாயாக. பதிலுக்கு நான் உனக்குப் புருவம் அகன்ற, வேலையே செய்யாமல் கொழுத்த, நுகத்தடியில் நுழைக்கப்படாத ஒருவயது இளம் பசுவைக் கொடுப்பேன். அவளுடைய கொம்புகளைச் சுற்றித் தங்க இலைகள் சுற்றப்பட்டு அவள் உனக்கு பலியாக்கப்படுவாள்.’

அவர்கள் இப்படியாக பிரார்த்தித்தார்கள். பல்லாஸ் அதீனி அவர்களின் பிரார்த்தனையைக் கேட்டுக்கொண்டிருந்தாள். மாபெரிய ஜீயூஸின் மகளுக்கான பிரார்த்தனைகளை முடித்து விட்டு இருவரும் அந்த கருப்பு இரவில், படுகொலை, பிணங்கள், கவச உடைகள், மற்றும் கருப்புக் குருதியினூடே ஒரு ஜோடி சிங்கங்களைப் போலக் கிளம்பினர்.

பெருமிதம் கொண்டிருந்த ட்ரோஜன்களை ஹெக்டரும் உறங்கவிடவில்லை. எல்லாத் தலைவர்களையும், அவர்களது ஆட்சியாளர்களையும் அழைத்தான். எல்லாரும் வந்து சேர்ந்த போது, அவர்கள் முன் ஒரு திட்டத்தை வைத்தான்:

‘என் மனத்தில் உள்ளது என்ன என்று யாராவது சொல்ல முடியுமா? சொல்லிவிட்டால் நான் பெரும் பரிசுகள் தருவேன் என்று உறுதி கூறுகிறேன். யாராவதொரு வீரன் கிரேக்க முகாமுக்குள் புகுந்து அவர்களின் கப்பல்கள்வரை சென்று எப்போதும்போல அவர்கள் காவலோடு இருக்கிறார்களா, நம்மிடம் பட்ட தோல்வி காரணமாக மனமுடைந்து திரும்பி ஓடிவிடலாம் என்பதைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறார்களா, அல்லது போரில் ஏற்பட்ட அபரிமிதமான களைப்பினால் இரவுக்காவல் செய்வதற்கு, சக்தியற்றவர்களாய் இருக்கிறார்களா என்று அறிந்து வரவேண்டும். இதற்கு மிகவும் துணிச்சல் வேண்டும் என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். ஆனால் இதைச் செய்து வருபவன் இறவாப் புகழடைவான் என்பதைச்

சொல்ல வேண்டியதில்லை. அப்படிப்பட்ட வீரனுக்கு நான் தலைசிறந்த தேரொன்றையும் சிறந்த முறையில் வளர்க்கப்பட்ட இரண்டு விரைவுக் குதிரைகளையும் பரிசாகத் தருவேன்.'

அவன் அப்படிப் பேசியதும் முழுமையான மௌனம் அவனது பேச்சை எதிர்கொண்டது. ஆனால் அங்கிருந்த ட்ரோஜன்களில் புனித கட்டியக்காரனாகிய யூமிடிஸின் மகன் டோலன் என்பவனும் இருந்தான். அவன் ஏராளமான தங்கமும் வெண்கலமும் கொண்ட பெரிய பணக்காரனாக இருந்தான். அவனுடைய தோற்றம் நிச்சயமாக கவர்ச்சிகரமானதாக இல்லை. ஆனால் அவன்தான் உடனே எழுந்தான். ஆறுபேர் கொண்ட அவனது குடும்பத்தில் அவன் மட்டும்தான் ஆண் பிள்ளையாக, ஒரே மகனாக இருந்தான். ஹெக்டரிடமும் ட்ரோஜன்களிடமும் அவன் தன் மனத்தில் உள்ளதைச் சொன்னான்:

'ஹெக்டர், நீ சொல்லும் இந்தத் திட்டம் எனக்குப் பிடித்திருக்கிறது. கிரேக்கக் கப்பல்களை அடைந்து அங்குள்ள சூழ்நிலை என்ன என்று நான் அறிந்து வருகிறேன். ஆனால் அந்தக் குதிரைகளையும், இணையற்ற அக்கிலிஸ் ஓட்டுகின்ற அந்த வெண்கல உள்ளமைப்பு கொண்ட தேரையும் எனக்குத் தருவதாக நீ இந்தச் செங்கோலை உயர்த்தி முதலில் வாக்களிப்பாயா? ஓர் ஒற்றன் என்ற முறையில் நான் பயனற்றவனாகிவிடமாட்டேன். உனது எதிர்பார்ப்புகளுக்குக் கீழேயும் போய்விட மாட்டேன். அகமெம்னனின் கப்பல் இருக்கும் இடம் வரை நேராகச் செல்வேன். அங்குதான் தலைவர்களெல்லாம் ஒன்றுகூடி, பின்வாங்குவதா அல்லது தொடர்ந்து போரிடுவதா என்று விவாதித்துக் கொண்டிருப்பார்கள்.'

அப்படி அவன் சொன்னதும் ஹெக்டர் தனது செங்கோலை உயர்த்தி டோலனுக்கு வாக்குறுதியளித்தான்:

'ஹீராவின் கணவனான, இடிமுழக்கம் செய்யும் ஜீயூஸே நான் செய்யும் இந்த வாக்குறுதியைச் செவிமடுக்கட்டும். அந்தக் குதிரைகள் மீதேறி வேறெந்த ட்ரோஜனும் செல்லக் கூடாது. அவற்றின்மீது சவாரி செய்யும் உரிமையும் பெருமையும் வாழ்நாள் முழுதும் உனக்கே உரியது.'

இவ்விதவாக அவன் நிறைவேறாத ஒரு வாக்குறுதியை அளித்து டோலனை வழியனுப்பி வைத்தான். உடனே டோலன் தனது வளைந்த வில்லை, தோள்மீது போட்டுக் கொண்டான். அதன்

மீது பதனிடப்படாத சாம்பல் நிற ஓநாய்த் தோலைப் போட்டான். மரநாய்த் தோலில் செய்யப்பட்ட தொப்பியைத் தலையில் போட்டுக் கொண்டான். பின் ஒரு கூரீட்டியை எடுத்துக் கொண்டு முகாமிலிருந்து கிரேக்கக் கப்பல்களிருக்கும் திசை நோக்கிப் புறப்பட்டான். ஆனால் அவர்களிடமிருந்து ஹெக்டருக்கான செய்தியுடன் திரும்பி வரும் விதி அவனுக்கில்லாமல் போனது. எனினும், குதிரைக் கும்பலையும் வீரர்களையும் முகாமில் விட்டுவிட்டுக் கிளம்பிய அவன் தன் வழியில் .விரைந்து சென்றான்.

ஒலிம்பிய மலையில் பிறந்த ஒடிஸியூஸ் அவன் வருவதைப் பார்த்துவிட்டு டயமீடிஸிடம் சொன்னான்:

'இதோ எதிரி முகாமிலிருந்து ஒரு வீரன் வருகிறான் டயமீடிஸ். ஒரு வேளை நமது கப்பல்களில் உளவறிவதற்கோ அல்லது ஏதாவது உடல்களை நிர்வாணப்படுத்துவதற்கோ அவன் வரலாம். எதற்கென்று தெரியவில்லை. நம்மைக் கடந்து அவன் செல்லும்வரை கொஞ்சம் பொறுத்திருப்போம். பின் பாய்ந்து அவனைப் பிடிக்கலாம். அவன் நம்மை மீறும் வேகமுடைய வனாக இருந்தால், உனது ஈட்டியால் நீ அவனைக் காயப்படுத்து. அதேசமயம் அவன் அவர்களது முகாமை விட்டு தூரமாக, நமது கப்பல்களை நோக்கியே செல்லுமாறு அவனைச் செலுத்து. அப்போதுதான் அவன் இலியத்துக்கு, கப்பலில் திரும்பிச் செல்ல முடியாது.'

இப்படிச் சொல்லிவிட்டு, இருவரும் சென்று இறந்தவர்களைப் போல வழியில் கிடந்த பிணங்களுடன் படுத்துக் கொண்டனர். இதைப்பற்றி ஒன்றுமறியாத டோலன் அவர்களிருக்குமிடத்தைக் கடந்து சென்றான். ஒரு நாளில் கோவேறு கழுதை எவ்வளவு நிலத்தை உழுமோ அவ்வளவு தூரம் கடந்து வந்த அவனை (ஜோடிக் கலப்பையை இழுப்பதில் எருதுகளைவிட கோவேறு கழுதைகள் சிறந்தவை) இந்த இரண்டு வீரர்களும் துரத்த ஆரம்பித்தனர். தனக்குப் பின்னால் காலடிச் சத்தம் கேட்டவுடன் தன் குதிரையை நிறுத்தினான் டோலன். ஹெக்டர் தனது முடிவை மாற்றிக் கொண்டதால் தன்னைத் திரும்பிவரச் சொல்லி ட்ரோஜன் முகாமிலிருந்து நண்பர்களை அனுப்பியிருக்கிறான் என்று அவன் நினைத்தான். ஆனால் ஒரு ஈட்டியெறி தூரத்துக்குள் அவர்களிருந்தபோது, அவர்களிருவரும் தன் எதிரிகள் என்று தெரிந்து ஓடித்தப்பிக்க முயன்றான்.

மின்னல் வேகத்தில் அவர்கள் அவனைப் பிடிக்க விரைந்தனர். கூர்மையான பற்கள் கொண்ட இரண்டு வேட்டை நாய்கள், அலறிக்கொண்டே காட்டு வழியாக ஓடும் இளம் மான் அல்லது முயலைப் பிடிக்க இரக்கமற்ற வகையில் விரைவதுபோல, நகரங்களை அழிப்போர்களாகிய டயமீடிஸுும் ஒடிஸியஸுும் கடுமையான முறையில் டோலனைத் துரத்தினர். கிட்டத்தட்ட கிரேக்கக் கப்பல்கள் இருந்த இடத்துக்கு தப்பித்து வந்துவிட்ட டோலன் காவல் வீரர்கள் இருந்த இடத்துக்குள் நுழைய இருந்தான். அப்போது டயமீடிஸுக்கு கூடுதலான வேகத்தை அதீனி அருளினாள். அதனால் மற்ற கிரேக்க வீரர்கள் அவனைப் பிடிப்பதற்குள் டயமீடிஸ் டோலனைப் பிடித்தான். தனது ஈட்டியால் அவனை அச்சுறுத்திய டயமீடிஸ் பேசினான்:

'நில், இல்லையெனில் எனது ஈட்டிக்கு இலக்காவாய். அதன் பிறகு நீண்ட நேரம் உயிரோடு இருக்க மாட்டாய் என்று நினைக்கிறேன்.'

சொல்லி விட்டு வேண்டுமென்றே குறி தவறும் விதமாக ஈட்டியை எறிந்தான். அந்த ஈட்டியின் பளபளப்பாக்கப்பட்ட தலைப்பகுதி டோலனின் தோள்களை உரசிக்கொண்டு சென்று நிலத்தில் குத்தி நின்றது. அதிர்ச்சியுற்ற டோலன் தடுமாறி நின்றான். அவனது பற்கள் நடுங்கிக் கொண்டிருந்தன. பயத்தில் வெளுத்துப் போனான் அவன். அவனைத் தொடர்ந்து வந்த இருவரும் அவனது கைகளைக் கட்டினர். உடனே அழ ஆரம்பித்த டோலன் சொன்னான்:

'என்னை உயிரோடு கொண்டு செல்லுங்கள். எனக்கான பிணயத் தொகையை நானே கொடுத்துவிடுகிறேன். எனது வீட்டில் வெண்கலமும், தங்கமும், வடிவமைக்கப்பட்ட இரும்பும் உள்ளன. கிரேக்கக் கப்பல்களுக்கு நான் கைதியாகப் பிடிக்கப்பட்டு, கொண்டு போகப்படுவதைக் கேள்விப்பட்டால், ஒரு பெரிய பிணயத்தொகையை அதிலிருந்து உங்களுக்கு என் தந்தை கொடுப்பார்.'

விரைவுச் சிந்தனையாளனான ஒடிஸியூஸ் பதில் சொன்னான்:

'சரிசரி, கலவரமடையாதே, சாவதைப் பற்றிக் கவலைப்படாதே. நான் கேட்கின்ற கேள்விகளுக்குச் சரியான பதிலைக் கொடு. உன்னுடைய முகாமை விட்டுவிட்டு இப்பொழுது எங்கே போய்க்கொண்டிருந்தாய்? எங்களது கப்பல்கள் இருக்கும்

இடத்துக்குத் தனியாக எதற்கு வந்தாய்? அதுவும் எல்லாரும் தூங்கிக்கொண்டிருக்கும் இந்த நடுஇரவில்? இறந்தவர்களில் யாரையாவது கவசம் கழட்டி நிர்வாணப்படுத்துவதற்கா? அல்லது எங்களது கப்பல்களின் பக்கம் உளவறிந்து வரச்சொல்லி ஹெக்டர் உன்னை அனுப்பினானா? அல்லது நீயாகவே வந்தாயா?'

நடுங்கிக்கொண்டே டோலன் பதில் சொன்னான்:

'நான் ஒரு முட்டாள். வெண்கலத்தால் உள்பகுதி அமைக்கப்பட்ட உயர்ந்த அக்கிலிஸின் தேரையும் விரைவுக் குதிரைகளையும் எனக்குத் தருவதாக வாக்களித்து ஹெக்டர் என்னை ஏமாற்றி விட்டான். நானாகவே யோசித்திருந்தால் இப்படிச் செய்திருக்க மாட்டேன். கிரேக்க முகாமுக்குள் புகுந்து கப்பல்கள்வரை சென்று எப்போதும்போல நீங்கள் காவல் காத்துக்கொண்டு இருக்கிறீர்களா, எங்களிடம் பட்ட தோல்வி காரணமாக மனமுடைந்து திரும்பி ஓடிவிடலாம் என்பதைப் பற்றிப் பேசிக்கொண்டிருக்கிறீர்களா அல்லது ஏற்பட்ட அபரிமிதமான களைப்பினால் இரவுக்காவல் செய்வதற்கு சக்தியற்றவர்களாய் இருக்கிறீர்களா என்று அறிந்து வரச்சொன்னான்:'

விரைவுச் சிந்தனையாளனான ஒடிஸியூஸ் புன்னகைத்துவிட்டுச் சொன்னான்:

'ஓஹோ, அப்படியானால் நீ போர்த்திறம் மிக்க அக்கிலிஸின் குதிரைகளை அடையும் பொருட்டு, பெரிய பரிசுக்காக வந்திருக்கிறாய்! ஆனால் அவைகளை அடக்குவது எளிதல்ல. சவாரி செய்வதும் கடினம். ஒரு தேவதையை அன்னையாகக் கொண்ட அக்கிலிஸைத் தவிர சாதாரணமானவர்கள் யாரும் அவனது குதிரைகளில் சவாரி செய்ய முடியாது. சரி, இப்பொழுது நான் கேட்கின்ற கேள்விகளுக்குச் சரியான பதிலைச் சொல். மக்கள் மேய்ப்பனாகிய ஹெக்டரை எங்கே விட்டுவிட்டு நீ கிளம்பி வந்தாய்? அவனுடைய படையினர் எங்குள்ளனர்? அவனுடைய குதிரைகள் எங்கே? ட்ரோஜன் காவல் வீரர்கள் எங்கெல்லாம் நிறுத்தப்பட்டுள்ளனர்? மற்றவர்களெல்லாம் எங்கே உறங்கிக்கொண்டுள்ளனர்? அவர்கள் அடுத்து என்ன செய்வதாகத் திட்டம் வைத்திருக்கிறார்கள்? எங்கள் கப்பல் களுக்கு அருகிலேயே தங்களின் முன்னேறிய நிலையிலேயே இருக்க விரும்புகிறார்களா அல்லது கிரேக்கர்கள் மீது தாக்குதல்

நடத்தி தோல்வியை ஏற்படுத்திவிட்டு நகருக்குள் போக எண்ணம் கொண்டிருக்கிறார்களா?'

யூமிடிஸின் மகனான டோலன் பதில் சொன்னான்:

'நீங்கள் கேட்ட எல்லாக் கேள்விகளுக்கும் நான் சரியான பதில்களைச் சொல்வேன். சப்தங்களிலிருந்து தூரமான புனித அய்லஸின் கல்லறைக்கருகில் தனது ஆலோசகர்களைக் கலந்தாலோசித்துக் கொண்டுள்ளான் ஹெக்டர். காவல் வீரர்களைப் பற்றிய உங்கள் கேள்வியைப் பொறுத்த மட்டில், முகாமைக் கவனிக்கவோ எதிரிகள் வருவதைப் பார்வையிடவோ யாதொரு சிறப்புக் காவல்படை வீரரும் குதிரை மீது ஏற்றப்படவில்லை ஐயா. காவலுக்காக ட்ரோஜன்கள் தீமூட்டிக் கொள்வர். கடமையைச் செய்ய ஏவப்பட்டவர்கள் மட்டும் விழித்திருப்பர், ஒருவரையொருவர் விழிப்புடன் இருக்கத் தூண்டுவர். எங்களுடைய மற்ற ஆதரவுப்படையினர் அனைவரும் காவலுக்கான பொறுப்பை எங்களிடம் விட்டுவிட்டு உறங்கிக்கொண்டுள்ளனர். அவர்களுடைய பெண்களும் குழந்தைகளும் அருகிலேயே உள்ளனர்.'

விரைவுச் சிந்தனையாளனான ஒடிஸியூஸ் சொன்னான்:

'நீ என்ன சொல்கிறாய்? குதிரைகளை அடக்குவதில் வல்லவர்களான ட்ரோஜன்கள் முகாமில் உறங்கும் அதே பகுதியில்தான் உங்கள் ஆதரவாளர்களும் உறங்குகின்றனரா அல்லது வேறு எங்காகிலுமா? சுருக்கமாகவும் சரியாகவும் பதில் சொல்லு.'

யூமிடிஸின் மகனான டோலன் பதில் சொன்னான்:

'நீங்கள் கேட்ட எல்லாக் கேள்விகளுக்கும் நான் சரியான பதில்களைச் சொல்வேன் ஐயா. காரியர்களும் பீனியர்களும் தங்களின் வளைந்த வில்களுடன் கடலுக்குப் பக்கத்தில் லிலிஜிகளோடும் காகோனிகளோடும் கடவுளையொத்த பெலாஸ்ஜியோடும் உள்ளனர். லைசியர்களும் தலைமைமிகு மைசியர்களும் குதிரைகளில் சண்டையிடுவதில் வல்லவர்களான ஃப்ரிஜியர்களும் மேயோனிய தேரோட்டிகளும் திம்ப்ராவை நோக்கிய திசையில் உள்ள நிலத்தில் தங்க வைக்கப்பட்டுள்ளனர்.

ஆனால் எதற்காக இவ்வளவு விளக்கம் கேட்கிறீர்கள்? ட்ரோஜன் முகாமுக்குள் நுழைவது உங்கள் நோக்கமானால், அங்கே

த்ரேசியர்கள் இருக்கிறார்கள். இப்பொழுதுதான் அவர்கள் வந்திறங்கியுள்ளார்கள். அவர்களின் தலைவனான ரீசஸ் அவர்களோடு இருக்கிறான். அவனிடம் நான் பார்த்ததிலேயே மிகமிக அழகானதும் பெரியதுமான குதிரைகள் உள்ளன. பனியைவிட அவை வெள்ளையாக உள்ளன. காற்றைப் போல பறந்து செல்லக்கூடியவை. அவனுடைய தேரோ தங்கத்தாலும் வெள்ளியாலும் அழகாக அலங்கரிக்கப்பட்டது. அச்சுறுத்தலை ஏற்படுத்தும் சில தங்கக் கவசங்களை அவன் எடுத்து வந்துள்ளான். அவை பார்ப்பதற்கே அருமையாக உள்ளன. வீரர்கள் அப்படிப்பட்ட கவச உடைகளை அணியவே கூடாது. அவ்வுடைகள் நித்தியர்களான கடவுள்களுக்கு மட்டுமே பொருத்தமானவை.

‘என்னை இப்பொழுது உங்களுடைய கப்பல்களுக்குக் கொண்டு செல்லுங்கள். அல்லது என்னை இங்கேயே இறுக்கமாகக் கட்டிவைத்துவிடுங்கள். பின் நீங்கள் போய் நான் சொன்னது உண்மையா இல்லையா என்று தெரிந்துகொள்ளுங்கள்.

வலிமைமிகுந்த டயமீடிஸ் அவனை முறைத்துவிட்டுச் சொன்னான்:

‘டோலன், எங்களுக்கு நீ அருமையான தகவல்களைக் கொடுத் திருக்கிறாய். ஆனால் உன்னை விட்டுவிடுவோம் என்று மட்டும் கற்பனை செய்யாதே. இப்பொழுது நீ எங்களுடைய கைகளில். பிணயத்தொகையைப் பெற்றுக்கொண்டோ பெறாமலோ உன்னை இப்பொழுது விட்டுவிடுவோமேயானால், நீ இன்னொரு சமயத் தில் எங்களை உளவு பார்க்கவோ நேரடியாகச் சண்டையிடவோ கிரேக்கக் கப்பல்களுக்குத் திரும்பி வருவாய். ஆனால் இப் பொழுது நான் உன்னைக் கொன்றுவிட்டால் நீ கிரேக்கர்களுக்கு ஒரு தொல்லையாக எப்போதுமே இருக்க மாட்டாய்.’

அவன் அப்படிச் சொன்னதும் தலைவனின் தாடையைப் பிடித்துக் கெஞ்சுவதற்காக டோலன் தன் பெரிய கையை உயர்த்தினான். அப்போது அவனை டயமீடிஸ் தனது வாளால் வெட்டினான். அது அவன் கழுத்தை முற்றிலுமாக வெட்டியது. இரண்டு பக்கமும் இருந்த தசைகளை அவன் வெட்டினான். டோலனுடைய தலை கெஞ்சிக் கொண்டிருக்கும்போதே மண்ணில் விழுந்தது. மரநாயின் தோலால் செய்யப்பட்ட அவனது தொப்பியை அவன் தலையிலிருந்து அவர்கள் எடுத்துக்

கொண்டனர். பதனிடப்படாத ஓநாய்த் தோல் போர்வை, வளைந்த அவனது வில், நீண்ட ஈட்டி ஆகியவற்றையும் கழற்றினர். பின் அந்த வெற்றிப் பொருட்களைத் தன் கைகளில் எடுத்த கடவுளையொத்த ஒடிஸியூஸ் அவற்றைப் போர்ப் பொருட்களின் பெண்கடவுளான அதீனி பார்ப்பதற்காக உயர்த்திக் காட்டி அவளை நோக்கி பிரார்த்தனை செய்தான்:

'இவை உன் மனதை இன்புறச் செய்யட்டும் தேவைதையே! ஏனெனில் ஒலிம்பஸ் மலைவாழ் நித்தியர்களில் வேறு யாராகிலும் வருவதற்குமுன் உன்னிடம் மறுபடியும் உதவி கோரி நாங்கள் வருவோம். தம் குதிரைகளுடன் தூங்கிக்கொண்டிருக் கும் த்ரேசியர்களைத் தாக்கச் செல்லும் எங்களுக்கு நீ உதவி செய்.'

இவ்விதம் பிரார்த்தித்த அவன் தன் தலைக்கு மேலே தூக்கிப் பிடித்திருந்த அப்பொருட்களைக் கீழிறக்கி ஒரு தாமரிஸ்க் மரப்புதரின்மீது வைத்தான். பின் கை நிறைய நாணல்களையும் புதிய தாமரிஸ்க் மர இளம் கிளைகளையும் எடுத்து அந்த இடத்துக்கு அடையாளம் வைத்தான். அப்போதுதான் அந்த இரவின் இருளினூடே அவர்கள் திரும்பி வரும்போது அந்த இடத்தைத் தவறவிடாமல் இருக்க முடியும்.

கவச உடைகள், கருப்பு ரத்தம் இவற்றினூடே அவர்கள் இருவரும் சென்று த்ரேசியப் படையினர் இருந்த இடத்துக்கு வந்தனர். களைப்புடன் வீரர்கள் உறங்கிக் கொண்டிருந்தனர். அவர்களுடைய அருமையான ஆயுதங்கள் மூன்று வரிசையாக அவர்களுக்குப் பக்கத்தில் இருந்த தரைப் பகுதியில் அழகாக அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. ஒவ்வொரு வீரனுக்கு அருகிலும் இரண்டு குதிரைகள் நின்றன. மத்தியில் ரீசஸ் உறங்கினான். அவனுடைய விரைவுக் குதிரைகள் அவனருகில் இருந்தன. அவற்றின் கடிவாளங்கள் தேரின் சக்கரத்தின் முடிவில் கட்டப்பட்டிருந்தன. முதலில் அவனைப் பார்த்த ஒடிஸியூஸ் டயமீடிஸுக்கு ரீசஸை அடையாளம் காட்டினான்.

'டயமீடிஸ், அதோ அவன்தான் நாம் தேடிய வீரன். அதோ நம்மால் கொல்லப்பட்ட டோலன் சொன்ன குதிரைகள். இப்பொழுது நீ உனது பயங்கர பலத்தைப் பலரும் அறியச் செய்யவேண்டும். உனது ஆயுதங்களை நோண்டிக் கொண்டி ருப்பதற்கு இது நேரமல்ல. சீக்கிரம்! குதிரைகளை முதலில் முடி.

இல்லையெனில், வீரர்களை நீ கொல், குதிரைகளை நான் பார்த்துக் கொள்கிறேன்.'

ஒடிஸியூஸ் அப்படிப் பேசியதும் டயமீடிஸுக்குள் புதிய பலத்தை அதீனி ஊதினாள். அவன் தனது வாளை, சரமாரியாக இங்குமங்கும் வீசினான். செத்து விழுந்து கொண்டிருந்தவர்களிடமிருந்து பயங்கர வேதனைக்குரல்கள் எழுந்தன. ரத்தத்தால் சிவப்பானது பூமி. காவல் காக்கப் படாத செம்மறி அல்லது வெள்ளாட்டு மந்தை மீது கொலை வெறியுடன் பாயும் சிங்கம்போல த்ரேசியர்கள்மீது டைடியூஸின் மகனான டயமீடிஸ் பாய்ந்தான்.

ஒவ்வொருவராக அவர்களில் பன்னிரண்டு பேரை அவன் வெட்டி வீழ்த்தினான். விரைவுச் சிந்தனையாளனான ஒடிஸியூஸ், பின்னாலிருந்து இறந்த உடல்களின் கால்களைப் பிடித்து இழுத்து வெளியில் வீசினான். தம் புதிய எஜமானர்களைச் சுமந்து கொண்டு, அழகிய பிடரி கொண்ட அக்குதிரைகள் பிணங்களின் மீது செல்ல வேண்டிய புதிய அனுபவத்தால் பயந்து விடக்கூடாதென்றே அவன் அவ்வாறு செய்தான். பின் தலைவன் ரீசஸ் இருந்த இடத்துக்கு வந்த டயமீடிஸ் பதிமூன்றாவது பலியாக அவனது இன்னுயிரையும் பிரித்தான். அவனது மூச்சு அவனை விட்டுப் பிரிந்தது. அதீனியின் திட்டத்தால் டைடியூஸின் மகன் டயமீடிஸ்! என்பதாக அன்று இரவு ஒரு கெட்ட கனவும் அவனுக்கு வந்திருந்தது.

இதற்கிடையில் எதற்கும் துணிந்த ஒடிஸியூஸ் குதிரைகளைத் தேரிலிருந்து அவிழ்த்தான். கசைவார் கொண்டு அவற்றைப் பிணைத்தான். வில்லால் அடி கொடுத்து அந்தப் பிணக்குவியலில் இருந்து அவைகளை வெளியில் கொண்டு வந்தான். பளபளக்கும் சாட்டையை எடுத்து வரவேண்டும் என்று அவனுக்குத் தோன்றவில்லை. அது தேரிலேயே கிடந்தது. வெளியில் வந்ததும் டயமீடிஸ் புரிந்துகொள்ளுமாறு ஒரு சீழ்க்கையொலி கொடுத்தான்.

ஆனால் டயமீடிஸ் அவசரப்படவில்லை. மிகத்துணிச்சலான அடுத்த காரியம் என்ன செய்யலாம் என்று யோசித்துக் கொண்டு இருந்தான். அலங்கரிக்கப்பட்ட கவச உடையிருந்த தேரைப் பிடித்து அந்த உடையை வெளியே இழுத்துப்போடுவதா? அதைத் தூக்கிப் பிடித்துக் கொண்டு செல்வதா? இன்னும் பல த்ரேசியர்களைக் கொல்வதா? இவ்விதமான எண்ணங்கள் அவன்

மனத்தில் ஓடிக்கொண்டிருக்கும்போது அவனருகில் அதீனி வந்து சொன்னாள்:

'பெரிய மனம் கொண்ட டைடியூஸின் மகனே, உட்குழிந்த கப்பல்களுக்குத் திரும்பிச் செல்வதைப் பற்றி யோசி. இல்லையெனில் அவைகளெல்லாம் கிளம்பிய பிறகுதான் நீ அவற்றைப் பிடிக்க நேரிடும். வேறு யாராவது கடவுளர் ட்ரோஜன்களை எழுப்பிவிடக் கூடும்.'

அவள் அப்படிச் சொன்னதும் தேவதையின் குரலை இனம் கண்டுகொண்ட டயமீடிஸ் உடனே குதிரையேறினான். தனது வில்லால் குதிரைகளைத் தட்டிக் கிளப்பினான் ஒடிஸியூஸ். கிரேக்கக் கப்பல்களை நோக்கிப் பறந்தன குதிரைகள்.

நடந்த எதுவுமே வெள்ளி வில்லேந்திய கடவுளான அப்போலோவின் கவனமான பார்வைக்குத் தப்பவில்லை. டயமீடிஸைச் சந்தித்து எப்படி மகிழ்ச்சியில் அதீனி நடனமாடிக் கொண்டிருந்தாள் என்பதைப் பார்த்தபோது அவள் மீது அப்போலோவுக்கு கடுமையான கோபம் வந்தது. மாபெரும் ட்ரோஜன் படையினர் இருந்த இடத்தில் இறங்கினான் அவன். இறங்கி, ரீசஸின் துணிச்சலான உறவுக்காரனும், த்ரேசிய ஆலோசகர்களில் ஒருவனுமான ஹிப்பொகூனை எழுப்பினான். உறக்கத்திலிருந்து சட்டென எழுந்தான் ஹிப்பொகூன். குதிரைகள் நின்றுகொண்டிருந்த இடங்கள் காலியாக இருப்பதையும் கொடூரமான படுகொலையில் வீரர்கள் உயிர்கள் போய்க் கொண்டிருப்பதையும் பார்த்தான். உச்ச ஸ்தாயியில் கூக்குரலெழுப்பி, தன் அருமை நண்பர்களையெல்லாம் பெயர் சொல்லி அழைத்துப் பார்த்தான். அந்த இரு கிரேக்க வீரர்களும், உட்குழிந்த தம் கப்பல்களுக்குத் திரும்புமுன் செய்து விட்டுப் போயிருந்த பயங்கரத்தைப் பார்த்துப் பேரொலி எழுப்பிய வண்ணம் ஓடிவந்து பார்த்த ட்ரோஜன் வீரர்கள் அதிர்ந்து நின்றனர்.

ஒடிஸியூஸும் டயமீடிஸும் ஹெக்டரின் உளவாளியைக் கொன்ற இடத்துக்கு வந்தபோது, ஜீயூஸுக்கு உவப்பான ஒடிஸியூஸ் கடிவாளத்தை இழுத்து விரைவுக் குதிரைகளை நிறுத்தினான். டயமீடிஸ் கீழே குதித்து ரத்தம் தோய்ந்த உடைகளை எடுத்து அவனிடம் கொடுத்தான். பின் மறுபடியும் குதிரையில் ஏறியவன் சாட்டையைச் சொடுக்கி குதிரையைக்

கிளப்பினான். விருப்பத்துடன் குதிரைகளும் பயணத்தின் முடிவான உட்குழிந்த கப்பல்களை நோக்கி விரைந்தன.

குதிரைகளின் குளம்படிச் சத்தத்தை முதலில் கேட்ட நெஸ்டர் சொன்னான்:

'என் நண்பர்களே, ஆட்சியாளர்களே, கிரேக்கத் தலைவர்களே, நான் நினைப்பது தவறா சரியா? நான் பேசவேண்டும். விரைந்து வரும் குதிரைகளின் சப்தம் என் காதுகளுக்குக் கேட்டது. அருமையான குதிரைகளை ட்ரோஜன் முகாமிலிருந்து விரைவாகச் செலுத்திக் கொண்டு இங்கே வருவது ஒடிஸியூஸாக வும் வலிமைமிகுந்த டயமீடிஸாகவும் இருந்தால் எப்படி இருக்கும்! ஆனால் வருவது ட்ரோஜன்களாக இருக்கலாம் என்றும் நமது இரண்டு வீரர்களும் அபாயத்தில் மாட்டிக் கொண்டார்களென்றும் எனக்குப் பயமாக இருக்கிறது.'

கடைசி வார்த்தைகள் அவனது வாயிலிருந்து முழுமையாக வருவதற்குள் அவர்கள் இருவரும் வந்து சேர்ந்தனர். அவர்கள் இருவரும் குதிரைகளிலிலிருந்து கீழே குதித்ததும் நண்பர்கள் அனைவரும் கரவொலி எழுப்பியும் இன்னும் பல வகையிலும் தம் மகிழ்ச்சியைத் தெரியப்படுத்தி வரவேற்றனர். கிரேக்கத் தேரோட்டியான நெஸ்டர்தான் முதலில் அவர்களைக் கேள்வி கேட்டான்:

'கீர்த்தி பெற்ற ஒடிஸியூஸ், இந்தக் குதிரைகளை எப்படிப் பிடித்தீர்கள் என்று எனக்குச் சொல். ட்ரோஜன் முகாமுக்குள் ஊடுருவிப் போனீர்களா அல்லது யாராவது ஒரு கடவுள் உங்களை வழியில் சந்தித்து, பரிசாகக் கொடுத்தாரா? சூரியக் கதிர்களைப்போல மின்னுகின்றன இந்தக் குதிரைகள். ட்ரோஜன் களை எப்போதுமே போர்க்களத்தில் சந்திப்பவனாக நான் இருக்கிறேன். சொல்லப்போனால் கப்பல்களில் நான் தங்கியதே இல்லை. போர் செய்யும் வயதைத் தாண்டிய முதியவன் நான் என்றாலும் இப்படிப்பட்ட அற்புதமான குதிரைகளை நான் பார்த்ததேயில்லை. ஏதோ ஒரு கடவுளை நீங்கள் சந்தித்திருக் கிறீர்கள், அவர் உங்களுக்கு இக்குதிரைகளைக் கொடுத்திருக் கிறார் என்று நினைக்கிறேன். மேகங்களைச் செலுத்தும் ஜீயூஸுக்கு உங்கள் இருவரையும் மிகவும் பிடிக்கும். அவ ருடைய மகளான சாம்பல் நிறக்கண்ணாள் அதீனிக்கும்தான்.'

விரைவுச் சிந்தனையாளனான ஒடிஸியூஸ் சொன்னான்:

'நீலியஸின் மகனாகிய நெஸ்டரே, கிரேக்கர்களின் மாபெரும் புகழே! மனிதர்களைவிடக் கடவுளர்க்கே அதிக ஆற்றலுண்டு. எங்களுக்கு ஒரு பரிசு தரவேண்டும் என்று ஒரு கடவுள் முடிவு செய்துவிடுவாராகில், இக்குதிரைகளைவிட அருமையான ஜோடியை எங்களுக்குத் தரமுடியும். ஆனால் மரியாதைக் குரியவரே, உங்களின் கேள்விக்கு இப்பொழுது பதில் சொல் கிறேன். இப்பொழுது இங்கே வந்திருக்கும் இக்குதிரைகள் த்ரேசியக் குதிரைகள். வீரம் மிக்க டயமீடிஸ் ட்ரோஜன் படையினரில் பன்னிரண்டு பேரையும் அவர்களின் தலைவனை யும் கொன்றான். தலைவனான ரீசஸைச் சேர்க்காமல் நாங்கள் கொன்ற பதிமூன்றாவதுஆள் கப்பல்களுக்கு அருகில் நாங்கள் பிடித்த உளவாளியாவான். நமது முகாமை வேவுபார்க்க ஹெக்டாலும் மற்ற ட்ரோஜன் படையினராலும் அனுப்பப் பட்டவன்.'

இவ்விதம் பதில் சொல்லிவிட்டு, அகழியின் குறுக்கே குதிரை களை ஓட்டிச் சென்றான் சிரித்துக்கொண்டே. பெருமிதம் கொண்டவர்களாக மற்ற கிரேக்கர்கள் அவனைப் பின்பற்றிச் சென்றனர். நன்றாகக் கட்டப்பட்டிருந்த டயமீடிஸின் பாசறையை அவர்கள் அடைந்தபோது, பதனிடப்பட்ட மிருகத் தோலினால் செய்யப்பட்ட பட்டைகளைக் கொண்டு அக்குதிரைகளைத் தொழுவத்தில் கட்டினர். டயமீடிஸின் விரைவுக் குதிரைகளும் அங்கேதான் கட்டப்பட்டு தேனையொத்த வால்கோதுமையை அசைபோட்டுக் கொண்டிருந்தன. அதீனிக்கான பலியை நிறைவேற்றும் வரை டோலனின் ரத்தம் தோய்ந்த பொருட்களைத் தனது கப்பலின் பின்பகுதியில் வைத்தான் ஒடிஸியூஸ்.

பின் மெதுவாய் அவர்கள் கடலுக்கு நடந்து சென்று தம் முழங்கால், கழுத்து, தொடைகள் ஆகியவற்றில் இருந்த வியர் வையைக் கழுவினர். கடலலைகள் அவர்களின் வியர்வையை உடல்களிலிருந்து கழுவித் துடைத்தன. புத்துணர்ச்சி பெற்ற பிறகு, மெருகூட்டப்பட்ட குளியல் அறைகளுக்குச் சென்று குளித்தனர். பின் ஒலிவ எண்ணெய் கொண்டு தம் உடல்களில் தாரளமாகத் தடவித் துடைத்த பிறகு, சாப்பிட அமர்ந்தனர். ஒரு முழு கலவைக் கோப்பையில் இனிய மதுவை ஊற்றி நிரப்பி அதீனிக்குப் படைத்தனர்.

# அக்கிலிஸ் கவனிக்கிறான்

***கதைச்சுருக்கம்***

***வரிகள் 01 – 83***

*(26வது நாள். சண்டை தொடங்கிய மூன்றாவது நாள்) போர்க்களத்தில் இறங்க அகமெம்னன் தயாராகிறான். ஸ்ட்ரைஃபி தவிர மற்ற எல்லாக் கடவுள்களும் விலகி தூரமாக உள்ளனர். ஒலிம்பஸ் மலையிலிருந்து ஜீயூஸ் கவனிக்கிறான்.*

***வரிகள் 84 – 180***

*அகமெம்னன் வெற்றியைச் சுவைக்கிறான். ட்ரோஜன்கள் பின்வாங்குகின்றனர்.*

***வரிகள் 181 – 283***

*(ஜீயூஸோடு சேர்த்தே எப்போதும் பேசப்படும் 8058 அடி உயரம் கொண்ட க்ரீட் எனப்படும் கிரேக்கத்தீவில் உள்ள) அய்டா மலைக்கு இறங்கி வருகிறான் ஜீயூஸ். அகமெம்னன் காயப்பட்ட பிறகு போரில் மறுபடி கலந்து கொள்ளும்படி ஹெக்டரிடம் சொல்கிறான். அவன் சொன்னபடியே நடக்கிறது. போர்க் களத்தை விட்டு அகமெம்னன் போகிறான்.*

***வரிகள் 284 – 342***

*வெற்றிகரமாக ஹெக்டர் போர்க்களத்துக்குள் நுழைகிறான். ஆனால் ஒடிஸியூடிஸூம் டயமீடிஸூம் எதிர்த்துப் போரிடு கின்றனர்.*

**வரிகள் 343 – 400**

டயமீடிஸ் ஹெக்டரை ஸ்தம்பிக்க வைக்கிறான். ஹெக்டர் பின்வாங்கித் தன்னைச் சரிசெய்து கொள்கிறான். ஆனால் பாரிஸ் டயமீடிஸின் பாதத்தில் ஈட்டியெறிந்து காயப்படுத்துகிறான். போர்க்களத்தை விட்டுப் போகிறான் டயமீடிஸ்.

**வரிகள் 401 – 497**

தனியாக விடப்பட்ட ஒடிஸியூஸ் போர் செய்து காயப்படுகிறான். அஜாக்ஸும் மெனிலயஸும் அவனுக்கு உதவி செய்கின்றனர். புயலென முன்னேறிப் போகிறான் அஜாக்ஸ்.

**வரிகள் 498 – 598**

கிரேக்க மருத்துவன் மெக்கேயானை பாரிஸ் காயப்படுத்து கிறான். நெஸ்டர் அவனைக் கப்பலுக்கு அழைத்துச் செல்கிறான். மெல்ல அஜாக்ஸ் ஹெக்டருக்கு முன்பாகப் பின்வாங்குகிறான். அவனுக்கு யூரிபைலஸ் உதவி செய்கிறான். ஆனால் அவனது தொடையில் ஈட்டியெறிந்து காயப்படுத்துகிறான் ஹெக்டர். கிரேக்க தற்காப்புப் படை அணிவகுக்கிறது.

**வரிகள் 599 – 803**

மெக்கேயானை போர்க்களத்திலிருந்து நெஸ்டர் அழைத்துச் செல்வதை அக்கிலிஸ் பார்க்கிறான். என்ன நடக்கிறதென்று பார்த்து வருமாறு பெட்ரோக்குலஸை அனுப்புகிறான். தன்னுடைய இளமைக்கால வீரதீர சாகசங்களைப் பற்றிய ஒரு நீண்ட கதையை நெஸ்டர் பெட்ரோக்குலஸிடம் சொல்கிறான். ஈலியன்களுக்கு எதிரான தாக்குதல், எதிர்த்துத் தாக்கிய ஈலியன் களின் தோல்வி, பெட்ரோக்குலஸுக்கு மெனோட்டியஸ் செய்த உபதேசம் ஆகியவை பற்றிய கதை அது. அக்கிலிஸின் போருடையைப் போட்டுக்கொண்டு போரில் கலந்துகொள்ளும் படி பெட்ரோக்குலஸை நெஸ்டர் கேட்டுக்கொள்கிறான்.

**வரிகள் 804 – 848**

காயப்பட்ட யூரிபைலஸுக்கு பெட்ரோக்குலஸ் உதவி செய்கிறான்.

# அக்கிலிஸ் கவனிக்கிறான்

நித்தியர்களுக்கும் மனிதர்களுக்கும் விடியலின் வெளிச்சத்தைக் கொண்டுவரும் உயர்ந்த டித்தோனஸுடன் படுக்கையில் உறங்கிய விடியல் எழுந்தவுடன், கொடிய ஸ்ட்ரைஃபியின் கையில் போர்ச் சின்னத்தைக் கொடுத்து கிரேக்கக் கப்பல்களுக்கு அனுப்பினான் ஜீயூஸ். (விடியல் தேவதையான அரோராவின் காதலர்களில் ஒருவன் டித்தோனஸ். இவன் ட்ராய் நகர மன்னன் ப்ரியமின் சகோதரனும் ஆவான்). ஒடிஸியூஸின் கப்பலின் பெருத்த கருப்பான உட்பகுதியில் போய் நின்றுகொண்டாள் அவள். அணிவகுப்பின் மத்தியில் இந்தக் கப்பல் நின்றது. அதனால் ஒரு கூக்குரல் கொடுத்தால் போதும், அது எதிரெதிர் முனைகளின் இறுதிவரை சென்று டிலமானின் மகன் அஜாக்ஸின் பாசறைகளுக்கோ அக்கிலிஸின் பாசறைகளுக்கோ எளிதில் கேட்கும். ஆனால் இந்த இருவருக்கும் தத்தமது வீரத்திலும் பலத்திலும் மிகுந்த நம்பிக்கையிருந்த காரணத்தினால் தங்களது கப்பல்களைத் தள்ளித் தூரத்தில் கோடிக்கு ஒன்றாக நிறுத்தியிருந்தனர். அங்கே நின்றுகொண்டு தேவதையானவள் அச்சமூட்டும் வகையில் பெரும் போர் முழக்கமொன்றைச் செய்தாள். அது ஒவ்வொரு கிரேக்கனின் இதயத்திலும் எதிரியை விடாமல் எதிர்த்துக் கடுமையாகப் போர் செய்வதற்கான நெஞ்சுரத்தால் நிறைத்தது. அந்த முழக்கத்தைக் கேட்டவுடன் கப்பல்களில் நாடு திரும்புவதைவிடப் போர் செய்வதே இனிமையாகப் பட்டது அவர்களுக்கு.

போருக்குத் தயாராகும்படித் தனது படைப்பிரிவினருக்கு அகமெம்னன் உத்தரவிட்டான். மின்னும் வெண்கலக் கவச உடையைத்

தானும் அணிந்து கொண்டான். முதலில் முழங்கால்வரை முன்னங்கால்களை மறைக்கும் வெள்ளிக் கணுக்கால் பிடிகளுள்ள கால் கவசங்களை அணிந்தான். ஒரு முறை நட்பின் பரிசாக சினிராஸ் அவனுக்குக் கொடுத்த உடல் கவச உடையை அடுத்து அணிந்து கொண்டான். ட்ராய் நகரை நோக்கி ஒரு பெரும் கிரேக்கப்படை கிளம்பிவிட்டதை சைப்ரஸில் இருந்த சினிராஸ் கேள்விப்பட்டான். அதன் தலைவனை மகிழ்விக்கும் முகமாக அந்தக் கவச உடையைக் கொடுத்தனுப்பினான். அது மடிப்பு மடிப்பாக அமைக்கப்பட்டிருந்தது. கரு நீலத்தில் பத்து மடிப்பு களும், தங்கத்தில் பன்னிரண்டு அடுக்குகளும், வெள்ளீயத்தில் இருபது மடிப்புகளுமாக இருந்தது அது. அதன் ஒவ்வொரு பக்கத்திலும் மூன்று கருநீல சர்ப்பங்கள் எழுந்து கழுத்துவரை நீண்டன. மனிதர்களுக்கு ஒரு முன்னறிவிப்பாக மேகங்களிடையே ஜீயூஸ் அனுப்பும் வானவில்லைப் போல இருந்தது அது.

அடுத்து, தன் வாளை எடுத்துத் தன் தோளில் தொங்கவிட்டுக் கொண்டான் அகமெம்னன். அதன் கைப்பிடியில் தங்கக் குடையாணிகள் பளபளத்தன. ஆனால் தோள் பட்டையோடு இணைக்கும் தங்க வளையங்களுடன் கூடிய அதன் உறை வெள்ளியால் ஆக்கப்பட்டிருந்தது.

அதன்பின் அவன் தனது அழகான, ஒரு மனிதனை முழுமையாக மறைக்கக்கூடிய அளவுக்குப் பெரியதாக இருந்த கேடயத்தை எடுத்தான். அது அற்புதமாக அலங்கரிக்கப் பட்டிருந்தது. பொது மையம் கொண்ட பத்து வெண்கல வளையங்களும், அதன் மையப்பகுதியில் புடைத்துக் கொண்டிருந்த வளையத்தைச் சுற்றி வெள்ளீயத்தால் செய்யப்பட்ட இருபது ஒப்பனைக் குமிழ்களும் இருந்தன. அதன் மையத்தைச் சுற்றிப் பயங்கரமான கார்கனின்* தலையும் அச்சமூட்டும் விழிகளுமாய் ஒரு மலர் வளையத்தைப் போல அலங்கரிக்கப்பட்டிருந்தது. அதன் இரண்டு பக்கங்களிலும் (பதற்றம், படுதோல்வி இவற்றைக் குறிக்கும்) பானிக் மற்றும் ரௌட்டின் உருவங்கள் வரையப்பட்டிருந்தன. வெள்ளியால் அலங்கரிக்கப்பட்ட ஒரு தோள்பட்டையுடன் அது இணைக்கப் பட்டிருந்தது. அதைச் சுற்றி ஒரு சர்ப்பம் பல திசைகளிலும் நெளிந்து சென்றது. அதன் ஒரு கழுத்திலிருந்து மூன்று தலைகள் வளர்ந்திருந்தன.

---

* கார்கன் என்பது மூன்று பயங்கர ராட்சச பெண் மிருகங்களில் ஒன்று. பார்ப்பவரைக் கல்லாக மாற்றக்கூடிய சக்தி கொண்டது.

அகமெம்னன் தலைக்கவசத்தை அணிந்தான். அதன் இரண்டு பக்கங்களும் உலோகத் தகடுகளால் செய்யப்பட்டிருந்தன. நான்கு முகடுகளும் குதிரை முடியில் செய்த உச்சியலங்காரத் தோடு இருந்தது அது. அதன் இறகு உச்சியில் இருந்து இப்படி யும் அப்படியும் பயமுறுத்தும் வகையில் ஆடிக்கொண்டிருந்தது. இறுதியாக ஒரு ஜோடிக் கூர்மையான வெண்கல ஈட்டிகளை எடுத்துக் கொண்டான் அவன். அவனுடைய கவச உடையி லிருந்து புறப்பட்ட கதிர்கள் தூரத்து வானம்வரை மின்னின. அதைப்பார்த்து அதீனியும் ஹீராவும் தங்க மைசினியின் தலைவன் அகமெம்னனை கௌரவிக்கும் வகையில் இடி முழக்கம் செய்து பதில் கொடுத்தனர்.

இரண்டு போர் வீரர்களும் தங்களது தேர்களை விட்டிறங்கினர். அவைகளை அகழிக்கு வெளியே முறைப்படி நிறுத்தி வைக்கும் படி உத்தரவிட்டு சாரதிகளிடம் ஒப்படைத்தனர். அகழியின் குறுக்கே முழு ஆயுத பாணியாக விரைந்தனர். போரின் கூச்சலும் குழப்பமும் அந்த விடிகாலை நேரக் காற்றை நிறைத்தன. அகழியை ஒட்டித் தங்களுடைய சாரதிகளுக்குச் சற்று முன்னால் அவர்கள் அணிவகுத்து நின்றனர். ஆனால் க்ரோனஸின் மகனான ஜீயூஸ் பயங்கர குழப்பத்தை விசிறினான். அதுமட்டுமின்றி, பல பலமான உயிர்களை ஹயடிஸுக்கு அனுப்ப அவன் முடிவு செய்திருந்ததால், மேல் காற்றிலிருந்து ரத்த மழையைப் பெய்வித்தான்.

எதிர்ப்பக்கத்தில், ட்ரோஜன்களும் சமவெளியில் இருந்த உயர்ந்த இடமொன்றில் ஹெக்டர், இணையற்ற பாலிடாமஸ், ட்ரோஜன் மக்களால் கடவுளென மதிக்கப்படும் ஈனியாஸ், நித்தியர்களைப் போன்ற தோற்றத்துடன் நின்றுகொண்டிருந்த ஆன்ட்டினரின் மூன்று மகன்களான பாலிபஸ், கடவுளையொத்த அகினார், இளமையான அகாமாஸ் ஆகியோரைச் சுற்றி அணிவகுத்து நின்றனர். தனது வட்டவடிவ கேடயத்தைத் தூக்கிக்கொண்டு முன் வரிசையில் நின்றான் ஹெக்டர். மேகங்களின் பின்னா லிருந்து திடீரென்று தோன்றுவதும் பிறகு திடீரென மறைவது மாய் இருக்கும் அச்சமூட்டும் நட்சத்திரத்தைப் போல முன்வரிசையிலும் பின்வரிசையிலுமாக நின்றுகொண்டு வீரர்களைத் தூண்டிக்கொண்டிருந்தான் அவன். புயல் மேகங் களைச் செலுத்தும் தந்தை ஜீயூஸிடமிருந்து வரும் மின்னலைப் போல அவனது வெண்கலக் கவச உடை மின்னியது.

அறுவடை செய்பவர்கள் ஒரு பணக்காரனின் நிலத்தின் எதிர்ப் பக்கத்திலிருந்து தொடங்கி தம் அரிவாள்களை கோதுமை மற்றும் வால்கோதுமை பயிர்களுக்குள் விட்டு அறுக்கும் போது கொஞ்சம் கதிர்கள் கீழே விழுந்து கொண்டே இருப்பது போல, ட்ரோஜன்களும் கிரேக்கர்களும் ஒருவர் மீதொருவர் பாய்ந்து தாக்கிக் கொண்டு கொல்ல ஆரம்பித்தனர். இருபக்க வீரர்களும் உயிர்பறிக்குத் தப்பி ஓடுதலைப் பற்றி யோசிக்கவே இல்லை. ஓநாய்களைப் போல அவர்கள் ஒருவர் மீது ஒருவர் விழுந்து, தலையோடு தலை மோதித் தாக்கிக் கொண்டனர்.

அவர்களைப் பார்த்ததும் துன்பத்தைப் பகிர்ந்தளிக்கும் ஸ்ட்ரைஃபி மகிழ்ந்தாள். போரை நேரில் பார்த்துக் கொண்டிருந்த ஒரே பெண் கடவுள் அவள்தான். மற்றக் கடவுள்கள் யாரும் போர்க்களத்தில் இல்லை. ஆர்வமற்றவர்களாக அவரவர் வீட்டில் இருந்தனர். ஒலிம்பஸ் மலையின் மடிப்புகளில் கட்டப்பட்ட அழகழகான வீடுகள் அவை. ட்ரோஜன்களுக்கு வெற்றியைக் கொடுக்க விரும்பியதால், மேகங்களைக் கருக்க வைக்கும் ஜீயூஸோடு அவர்களெல்லாம் கோபித்துக் கொண்டிருந்தனர். ஆனால் தந்தை ஜீயூஸ் அந்தக் கடவுளரையெல்லாம் பற்றிக் கவலைப்பட வில்லை. அவர்களுக்குத் தெரியாமல் வந்த அவன் தன்னுடைய புகழை எண்ணிப் பெருமிதம் கொண்டவனாக தூரமாக வந்து ஓரிடத்தில் வசதியாக அமர்ந்துகொண்டான். ட்ரோஜன் நகரையும், கிரேக்கக் கப்பல்களையும், மின்னும் வெண்கலத்தால் கொல்பவர் களையும் கொல்லப்படுபவர்களையும் பார்வையிட்டுக்கொண்டு அமர்ந்திருந்தான்.

காலையினூடே விடியலின் அருள் பாலிக்கப்பட்ட ஒளி கூடிக்கொண்டே போனபோது, சரமாரியாக ஏவுகணைகளும் பதில் ஏவுகணைகளும் வீசப்பட்டுக்கொண்டே இருந்தன. வீரர்கள் விழுந்து கொண்டே இருந்தனர். உயர்ந்த மரங்களை வெட்டி வெட்டிக் களைத்துப் போன கைகளுடன், போதும் என்ற முடிவுக்கு வந்து, சுவையான உணவு பற்றிய எண்ணத்துடன் மலையின் பள்ளத்தாக்கில் மதிய உணவுக்காக மரம் வெட்டு பவன் போகும் நேரத்தில் கிரேக்க வீரர்கள் படைப்பிரிவுகளில் இருந்த தம் நண்பர்களுக்கு அழைப்பு விடுத்து, அவர்களது வீர உணர்ச்சியைத் தட்டி எழுப்பி எதிரி அணிக்குள் புகுந்தனர்.

முதலில் நுழைந்தவன் அகமெம்னன்தான். மக்கள் தலைவனான ட்ரோஜன் வீரன் பெய்னரையும் அவனை அடுத்து அவனுடைய

நண்பனும் தேரோட்டியுமான ஆய்லியஸையும் அவன் கொன்றான். தனது தேரிலிருந்து கீழே குதித்து அகமெம்னனை எதிர்க்க வந்தான் ஆய்லியஸ். அவன் தாக்க வந்தபோது, அகமெம்னன் அவனுடைய நெற்றியில் தனது கூரீட்டியால் குத்தினான். அவனுடைய கனமான வெண்கல தலைக்கவசத்தால் அந்த ஈட்டியை நிறுத்த முடியவில்லை. ஈட்டியானது உலோகத்தையும் நெற்றி எலும்பையும் பிளந்தது. தலைக்கவசத்துக்குள் இருந்த அனைத்தையும் அவனுடைய மூளையையும் சிதற அடித்தது அது. ஆய்லியஸின் தாக்குதலை அகமெம்னன் இவ்விதம் முடிவுக்குக் கொண்டு வந்தான்.

இறந்தவர்களின் கவச உடைகளையெல்லாம் எடுத்து அவர்களை நிர்வாணமாக்கிய பிறகு, அவர்களை அங்கேயே கிடக்க விட்டான் அகமெம்னன். பின் ப்ரியமின் இரண்டு மகன்களாகிய அய்சஸ் மற்றும் ஆன்ட்டிஃபஸ் ஆகியோரைக் கொல்ல விரைந்தான். அந்த இருவரில் ஒருவன் முறைதவறியும் இன்னொருவன் முறையாகவும் பிறந்தவன். ஆனால் இருவரும் ஒரே தேரில்தான் இருந்தனர். முறைதவறிப் பிறந்தவனான அய்சஸ் தேரை ஓட்டி வந்தான். அருமையான ஆன்ட்டிஃபஸ் பின்னால் அமர்ந்திருந்தான்.

அய்டா மலைத்தொடரில் தம் மந்தைகளை மேய்த்துக் கொண்டிருக்கும்போது இந்த இருவரையும் ஏற்கெனவே அக்கிலிஸ் பிடித்து வைத்திருந்தான். வில்லோ மரக் குருத்து களால் அவர்களை அவன் கட்டி வைத்தான். ஆனால் பிறகு அவர்களுக்கான பிணையத்தொகையைப் பெற்றுக்கொண்டு அவர்களை விடுவித்தான். இப்பொழுது அவர்கள் விசாலமான ஆட்சி கொண்ட அகமெம்னனைச் சந்தித்தனர்.

அய்சஸை அவனது மார்புக் காம்புக்கு மேலே தனது ஈட்டியால் தாக்கினான் அகமெம்னன். ஆன்ட்டிஃபஸைக் காதுக்கு மேலே தனது வாளால் தாக்கி, அவனைத் தேரிலிருந்து தூக்கி வெளியே எறிந்தான். பின் வேகமாக அவர்களுடைய கவச உடைகளைக் கழற்றினான். அப்படிச் செய்யும்போதே அவர்கள் யாரென்று அடையாளம் தெரிந்துகொண்டான். அய்டா மலையிலிருந்து அவர்களை விரைவுப்பாத அக்கிலிஸ் கொண்டு வந்திருந்தபோது அவர்களை தனது விரைவுக் கப்பல்களுக்கு அருகிலேயே பார்த்திருந்தான் அகமெம்னன்.

மறைவிடத்துக்குள் புகுந்து, விரைந்தோடும் பெண்மானின் சின்னக் குட்டிகளைப் பிடித்து, தன் வலுவான வாய்க்குள் செலுத்தி, ஓசையுடன் மென்று கொண்டே அவைகளின் மெல்லிய உயிரைச் சிங்கம் எளிதாக எடுத்துவிடும். தாய்மான் அருகிலேயே இருந்தாலும் குட்டிகளுக்கு அதனால் உதவ முடியாது. நடுநடுங்கிப் போயிருக்கும் அது, காட்டுப் புதர்கள் வழியாகப் பாய்ந்து, சக்தி மிகுந்த மிருகத்தின் தாக்குதலில் இருந்து தப்பிக்க, வியர்க்க விறுவிறுக்க அங்கிருந்து ஓடிவிடும். அதேபோல, இந்த இருவரையும் அழிவிலிருந்து காப்பாற்ற ட்ரோஜன்களால் முடியவில்லை. கிரேக்கர்களிடமிருந்து அவர்களே தப்பித்து ஓடிக்கொண்டிருந்தார்கள்.

அடுத்து அகமெம்னன் போர்த்திறம் மிக்க ஆன்ட்டிமாக்கஸின் மகன்களான பெசியாண்டரையும் தீர்மானம் மிக்க ஹிப்பொலோக்கஸையும் தாக்கினான். பாரிஸிடமிருந்து அருமையான தங்கத்தை லஞ்சமாகப் பெறலாம் என்ற எண்ணத்தில் ஹெலனை மெனிலயஸிடம் திருப்பி அனுப்ப வேண்டாம் என்று ட்ரோஜன் களைத் தடுத்தவன் அவன். ஆனால் இப்பொழுது அவனுடைய இரு மகன்களே தலைவன் அகமெம்னனால் பிடிக்கப்பட்டிருந் தனர். அவர்களிருவரும் ஒரே தேரில் இருந்து கொண்டு தம் விரைவுக் குதிரைகளை அடக்க முயற்சி செய்து கொண்டிருந் தனர். ஆனால் மின்னும் கடிவாளங்கள் சாரதிகளின் கையிலிருந்து நழுவிப் போயிருந்ததால், குதிரைகள் குழப்பத்தில் இருந்தன. அகமெம்னன் அவர்கள்மீது சிங்கத்தைப் போலப் பாய்ந்தான். தேரை விட்டு இறங்காமலேயே அவர்கள் அவனிடம் கெஞ்ச ஆரம்பித்தனர்:

‘அத்ரியூஸின் மகனே, எங்களை உயிருடன் கொண்டு போ. சரியான மீட்புத்தொகை உனக்குக் கிடைக்கும். எங்கள் தந்தையான ஆன்ட்டிமாக்கஸ் பெரிய பணக்காரர். தன் வீட்டில் அவர் வெண்கலம், தங்கம், வடிவமைக்கப்பட்ட இரும்பு என வகைவகையாக நிறைய பொக்கிஷங்களை வைத்திருக்கிறார். கிரேக்கக் கப்பல்களுக்கு நாங்கள் உயிருடன் கொண்டு செல்லப்பட்டோம் என்று அவருக்குத் தெரிந்தால் ஏராளமான மீட்புப்பொருள்களை அவர் நிச்சயம் கொடுப்பார்.’

அழுதுகொண்டே அவர்கள் அகமெம்னனிடம் பரிதாபமாகக் கூறினர். ஆனால் அவர்களுக்குப் பதில் சொன்ன குரலில் இரக்கமிருக்கவில்லை:

'கடவுளையொத்த ஒடிஸியஸோடு ஒரு தூதுக்குழுவில் மெனில யஸ் வந்தபோது, கூடியிருந்த ட்ரோஜன்களின் சபையில், மெனிலயஸை கிரேக்கத்துக்குத் திரும்ப அனுப்பக் கூடாது, அங்கேயே கொன்று போடவேண்டும் என்று சொன்ன ஆன்ட்டி மாக்கஸின் பிள்ளைகள்தானே நீங்கள்? உங்கள் தந்தையின் மானங்கெட்ட அவமரியாதைக்கு இப்பொழுது நீங்கள் விலை கொடுக்கப் போகிறீர்கள்.'

இப்படிச் சொல்லிவிட்டு தனது ஈட்டியால் அவன் பெசியாண் டரின் மார்பில் குத்தி அவனைத் தேரிலிருந்து கீழே தள்ளி, தரையில் குப்புற விழவைத்தான். ஹிப்போலோக்கஸ் தேரி லிருந்து கீழே குதித்தான். ஆனால் அவனைத் தரையிலேயே கொன்றான் அகமெம்னன். தனது வாளால் அவனது கைகளை யும் தலையையும் வெட்டி, அவனது முண்டமானது மர உருளையைப் போலத் தரையில் உருண்டு கொண்டே கும்பல் நடுவில் போகச்செய்தான்.

பின் அவர்களை அங்கயே விட்டுவிட்டு, கிரேக்க வீரர்களின் ஆதரவில் போர் மிகவும் உக்கிரமாகவும் குழப்பமாகவும் நடந்து கொண்டிருந்த பகுதிக்கு விரைந்தான். காலாட்படையினரும் தேரோட்டிகளும் தங்கள் எதிரிகளை ஓட ஓட விரட்டினர். தங்கள் ஈட்டிகளால் எதிரிகளைக் கொன்றனர். குதிரைகளின் இடி முழக்கம் செய்யும் குளம்புகளிலிருந்து கிளம்பிய தூசி மண்ணி லிருந்து எழுந்தது. இதனூடே அகமெம்னன் கிரேக்க வீரர்களை நோக்கிப் பேரொலி எழுப்பி உசுப்பிக் கொண்டும் அவர்களைப் பின் தொடர்ந்து சென்று கொன்று கொண்டும் இருந்தான்.

சீறியெழும் காட்டுத்தீ நெருக்கமாக மரங்களடர்ந்த காட்டைப் பொசுக்குவது போல, அலையென ஆர்ப்பரிக்கும் காற்று அத்தீயை முன்னும் பின்னும் செலுத்துவதுபோல, அத்தீயின் பேரழிவில் வேரோடு பிடுங்கப்பட்ட புதர்கள் தலைகீழாக விழுவதைப் போலப் படுதோல்வியடைந்த ட்ரோஜன்கள் அகமெம்னன் ஏற்படுத்திய பேரழிவில் கொன்று குவிக்கப் பட்டனர். பல ஜோடிக் குதிரைகளின் தலைகள் மேலும் கீழுமாய் அசைந்தன. தரையில் அலங்கோலமாகக் கிடந்த தேரோட்டி களை விட்டுவிட்டு, ஆளற்ற வெற்றுத் தேர்களை விரைவான அணிவகுப்பு இருந்த வரிசையில் இழுத்துச் சென்றன. இப்பொழுது அவர்கள் அவர்களது மனைவிமார்களைவிடக் கழுகுகளுக்குத்தான் மிகவும் கவர்ச்சியாகக் கிடந்தனர்.

பறந்து வரும் ஏவுகணைகள், தூசி, பேரழிவு, ரத்தம், வன்முறை ஆகியவற்றிலிருந்து தூரமாக ஹெக்டரை வைத்தான் ஜீயூஸ். கிரேக்கர்களை உரக்க அழைத்த வண்ணம் அகமெம்னன் தனது வேட்டையைத் தொடர்ந்து கொண்டிருந்தான். டார்டானஸின் மகனான அய்லஸின் கல்லறை மேடு இருந்த இடத்தையும் காட்டு அத்தி மரத்தையும் தாண்டி, நகரை நோக்கிச் சமவெளியின் மையப்பகுதிக்குப் பின்வாங்கினர் ட்ரோஜன்கள். வெல்ல முடியாத தனது கைகளில் உறைந்து போன ரத்தக் கறைகளைத் தேய்த்துக் கொண்டு, கூக்குரலெழுப்பிக் கொண்டே அகமெம்னன் தேடலைத் தொடர்ந்தான்.

ஸ்கேய நுழைவாயிலையும் அங்கிருந்த கருவாலி மரத்தையும் அடைந்த ட்ரோஜன்கள் அங்கே நின்றனர். மற்றவர்களும் வந்து இணைந்து கொள்வதற்காகக் காத்திருந்தனர். திறந்த சமவெளி யில் அந்தி வேளையில், மந்தையில் சிங்கம் புகுந்து, மிதித்துச் சென்றால் கலவரமடையும் கால்நடைகளைப் போல, இன்னும் அவர்கள் பதற்றமுடன் அலைந்து கொண்டிருந்தனர். தனியாக நின்று கொண்டிருக்கும் ஒரு இளம் கன்றுக்குத் திடீர் மரணம் சம்பவித்துவிடும். சிங்கம் அதைப் பிடித்து, தன் ஆற்றல்மிக்க பற்களால் அதன் கழுத்தைக் கடித்து, அதன் ரத்தத்தையும் குடல்களையும் விழுங்கும். இதைப்போலவே கடைசியாகப் பின்னால் போய்க் கொண்டிருந்தவர்களையெல்லாம் கொன்ற வண்ணம் தலைவன் அகமெம்னனும் அவர்களைப் பின்தொடர்ந் தான். அவர்கள் பதற்றத்தில் பறந்தனர். முகம் குப்புற அல்லது மல்லாக்கத் தரையில் வீழ, பல சாரதிகள் தங்கள் தேர்களை விட்டுத் தூக்கி எறியப்பட்டனர். தனது ஈட்டியால் அப்படிப்பட்ட ஒரு உக்கிரமான கோபத்தைக் காட்டினான் அகமெம்னன்.

கிட்டத்தட்ட நகரையும் அதன் செங்குத்தான மதில்களையும் சென்றடைந்து விட்டிருந்தான் அவன். அப்போது, ஏராளமான ஊற்றுகளைக் கொண்ட அய்டா மலையின் உயரங்களில் அமர்ந்து கொண்டு நோட்டமிட்டுக் கொண்டிருந்த, மனிதர்களுக்கும் கடவுளருக்கும் தந்தையானவன் விண்ணிலிருந்து இறங்கி வந்தான். கையில் ஒரு இடியாயுதத்தை வைத்திருந்தான் அவன். தங்கச் சிறகுகள் கொண்ட அய்ரிஸை ஒரு செய்தியுடன் அனுப்பி வைத்தான்:

'விரைவு அய்ரிஸ், சீக்கிரம் போ. என்னிடமிருந்து இந்தச் செய்தியை ஹெக்டரிடம் கொண்டு போய்க்கொடு. மக்கள்

தலைவனான அகமெம்னன் முன்வரிசையில் வந்து ட்ரோஜன் களைக் கொன்று குவித்துக் கொண்டிருப்பதைப் பார்த்தால் ஒன்றும் செய்யாமல் ஹெக்டர் ஒதுங்கி இருக்கட்டும். ஆனால் அவனது வீரர்கள் மட்டும் தொடர்ந்து விடாமல் எதிரியோடு போரிட்டுக் கொண்டிருக்க வேண்டும் என்று சொல். ஆனால் அகமெம்னன் ஒரு ஈட்டி அல்லது அம்பினால் நேரடியாகத் தாக்கப்பட்டுக் காயமடைந்து தன் தேரில் ஏறிக்கொள்வான். அதன் பிறகுதான் கொல்லவும் வெல்லவும் தேவையான பலத்தை நான் ஹெக்டருக்கு அளிப்பேன். ஒழுங்காக, தளங்களமைக்கப்பட்ட கப்பல்களுக்கு அவன் செல்லும்வரை. சூரிய அஸ்தமனமாகி அருள் பாலிக்கப்பட்ட இருள் கவியும் வரை அவன் காத்திருக்க வேண்டும்.'

அவன் அப்படிச் சொன்னதும் காற்றைப் போலப் பறந்து சென்றாள் விரைவு அய்ரிஸ். அய்டா மலையின் சிகரங்களிலிருந்து புனித இலியம் நகரை நோக்கிச் சென்றாள் அவள். ஞானவானாகிய ப்ரியமின் மகனாகிய கடவுளையொத்த ஹெக்டரை அவள் அங்கு கண்டாள். குதிரைகளுடன் அழகாகக் கட்டப்பட்டிருந்த தனது தேருக்கருகில் அவன் நின்று கொண்டிருந்தான். விரைவுப்பாத அய்ரிஸ் அவனருகில் சென்று கூறினாள்:

'ப்ரியமின் மகனே ஹெக்டர், ஜீயூஸுக்கு இணையான ஞானம் கொண்டவனே, உன்னிடம் இந்தச் செய்தியைச் சொல்லச் சொல்லித் தந்தை ஜீயூஸ் என்னை இங்கு அனுப்பியுள்ளார். மக்கள் தலைவனான அகமெம்னன் முன்வரிசையில் வந்து ட்ரோஜன்களைக் கொன்று குவித்துக்கொண்டிருப்பதைப் பார்த்தால் ஒன்றும் செய்யாமல் நீ ஒதுங்கி இருக்க வேண்டும். ஆனால் உனது வீரர்கள் மட்டும் தொடர்ந்து விடாமல் எதிரியோடு தீவிரமாகப் போரிட்டுக்கொண்டிருக்க வேண்டும். ஆனால் அகமெம்னன் ஒரு ஈட்டியாலோ அம்பினாலோ நேரடியாகத் தாக்கப்பட்டுக் காயமடைந்து தன் தேரில் ஏறிக்கொள்வான். அதன் பிறகுதான் கொல்லவும் வெல்லவும் தேவையான பலத்தை ஜீயூஸ் உனக்கு அளிப்பார். ஒழுங்காக, தளங்கள மைக்கப்பட்ட கப்பல்களுக்கு நீ சென்றுசேரும்வரை, சூரிய அஸ்தமனமாகி அருள் பாலிக்கப்பட்ட இருள் கவியும்வரை நீ காத்திருக்க வேண்டும்.'

இந்த வார்த்தைகளுடன் விரைவுப்பாத அய்ரிஸ் விடை பெற்றுக் கொண்டாள். முழுமையான ஆயுதம் தரித்தவனாக, தாமதிக்

காமல் ஹெக்டர் தனது தேரிலிருந்து கீழே குதித்தான். கூர்மையான ஒரு ஜோடி ஈட்டிகளைச் சுழற்றிக்கொண்டே தன் வீரர்கள் இருந்த எல்லா இடங்களுக்கும் சென்று அவர்களுடைய வீர உணர்ச்சியைத் தூண்டி அவர்களைப் போர் செய்யுமாறு உற்சாகப்படுத்தினான். அதன் விளைவாக கிரேக்கர்களைத் திருப்பி எதிர்க்கத் தொடங்கினர் ட்ரோஜன்கள். ஆனால் கிரேக்கர்களும் அவர்கள் பக்கத்தை வலுப்படுத்திக் கொண்டனர். இவ்விதமாக இரண்டு படைகளும் சந்தித்தன. முன்வரிசையில் இருந்த அகமெம்னன்தான் தலைமை ஏற்றவனாய் முதலில் எதிரிகள் மீது பாய்ந்தான்.

'ஒலிம்பஸ் மலையில் வீடுள்ள ம்யூஸ்களே, என்னிடம் சொல்லுங்கள், ட்ரோஜன்களிலோ அவர்களது ஆதரவாளர் களிலோ முதலில் அகமெம்னனை எதிர்கொண்டது யார்?'

அது இஃபிடாமஸ். ட்ரோஜன் ஆன்ட்டினரின் மகன். உயரமாக வும் அழகாகவும் இருந்தவன். செழிப்பான, கால்நடைகளின் தாயான த்ரெஸ் நாட்டில் வளர்க்கப்பட்டவன். அழகிய கன்னம் கொண்ட அவனுடைய அன்னை தியானோவின் தந்தையான தாத்தா சிஸ்ஸஸ்தான் இஃபிடாமஸைக் குழந்தைப் பருவத்தி லிருந்து தன்னுடைய அரண்மனையிலேயே வைத்து வளர்த்த வன். ஓர் இளைஞனுக்குரிய ஆசைகளுடன் இஃபிடாமஸ் வளர்ந்து நின்றபோது தன்னுடைய மகளை அவனுக்கு மணமுடித்துக் கொடுத்து அவனைத் தன் வீட்டிலேயே இருக்கும் படிச் செய்தவனும் அவனே. ஆனால் திருமணம் முடிந்த உடனேயே மஞ்சம் துறந்த மணமகனாக, கிரேக்கர்களுக்கு எதிரான போரில் புகழ் பெற விரும்பி இஃபிடாமஸ் கிளம்பி வந்துவிட்டான். அலகுக்ள் போன்ற தோற்றம் கொண்ட பன்னிரண்டு கப்பல்களுடன் அவன் கடல் கடந்து வந்தான். பெர்கோட்டியில் இருந்த துறைமுகத்தில் அவைகளை விட்டான். பின் கால்நடையாகவே அவன் இலியம் நகருக்கு வந்து சேர்ந்தான். அத்ரியூஸின் மகனாகிய அகமெம்னனை எதிர் கொண்டவன் இந்த இஃபிடாமஸ்தான்.

இருவரும் அருகருகில் வந்தபோது, அகமெம்னனின் ஈட்டியின் குறிதவறி எங்கோ சென்றது. தன் ஈட்டியை உறுதியாகப் பிடித்துக் கொண்டு, அகமெம்னன் அணிந்திருந்த உடல் கவசத்தின் இடுப்பு வாரில் தன் உடலின் முழு கனமும் இறங்குமாறு குத்தினான் இஃபிடாமஸ். ஆனாலும் அவனால் பளபளத்த அந்த வாரைத்

துளைக்க முடியவில்லை. அவ்வாரின் வெள்ளியை அவனது ஈட்டியின் முனை சந்தித்தபோது அது ஒரு காரீயத் துண்டு போல வளைந்தது. தன் கையால் அக்கணையைப் பற்றிய அகமெம்னன் ஒரு சிங்கத்தின் சினத்துடன் அதைத் தன்னை நோக்கி இழுத்தான். அது இஃபிடாமஸின் பிடியை விட்டு வெளியே வந்தது. பின் தனது வாளால் இஃபிடாமஸின் கழுத்தில் வெட்டி அவனைக் கீழே கொண்டு வந்தான்.

இவ்விதமாக இஃபிடாமஸ் கலைக்க முடியாத தூக்கத்தில் வீழ்ந்தான். தன் சக ட்ரோஜன் வீரர்களுக்கு உதவ வந்த அவனுக்குப் பரிதாபமான முடிவு ஏற்பட்டது. தன் புது மனைவியை விட்டு வெகு தூரம் வந்திருந்தான் அவன். அவளுக்காக அவன் நிறைய கொடுத்திருந்தாலும், அவளிடமிருந்து அவன் எந்த சுகத்தையும் அதுவரை பெறாதவன். ஏற்கெனவே அவன் அவளுக்காக நூறு கால்நடைகளைக் கொடுத்திருந்தான். தன்னுடைய எண்ணற்ற மந்தைகளிலிருந்து மேலும் ஆயிரம் செம்மறியாடுகளையும் வெள்ளாடுகளையும் தருவதாக வாக்களித்திருந்தான். ஆனால் இப்போதோ அவனுடைய உடலை நிர்வாணப்படுத்தி அவனுடைய அருமையான கவச உடைகளைக் கழற்றி எடுத்துக்கொண்டு கிரேக்கப் படையினரின் அணிவகுப்பை நோக்கிச் சென்றான் அகமெம்னன்.

நடந்தது என்ன என்று தெரிந்தவுடன் ஆன்ட்டினரின் மூத்த மகன் வியத்தகு கூனுக்கு தன்னருகில் விழுந்து கிடந்த சகோதரனை எண்ணி ஏற்பட்ட துக்கம் கண்களை மறைத்தது. அகமெம்னன் பார்க்காதவாறு, பக்கவாட்டில் வந்த அவன் அகமெம்னனின் முழங்கைக்குக் கீழே முன்கையின் மத்தியில் தாக்கினான். மின்னும் ஈட்டியின் முனை உள்ளே புகுந்தது. மக்கள் தலைவனாகிய அகமெம்னன் வேதனையில் துடித்தான். ஆனால் சண்டையை விட்டுவிட்டு ஓடுவதற்குப் பதிலாக, நிறமிழந்திருந்த தனது ஈட்டியை எடுத்துச் சுழற்றியபடி கூன் மீது பாய்ந்தான். இஃபிடாமஸின் பாதத்தைப் பற்றியிருந்த கூன், சிறந்த நண்பர்களின் பெயர்களைச் சொல்லி அவர்களை உதவிக்கு அழைத்துக் கத்திக்கொண்டே சகோதரனுடைய உடலைக் காலைப்பிடித்து, அவசரமாக இழுத்துக் கும்பலில் சேர்த்தான். அவன் அப்படிச் செய்து கொண்டிருக்கும்போதே, தனது வெண்கல ஈட்டியால் அகமெம்னன் அவனது கேடயத்தின் புடைப்புக்குக் கீழே குத்தி அவனை வீழ்த்தினான். பின்

அவனருகில் சென்று அவனது தலையைத் தனியாக வெட்டி வீசினான். அது இஃபிடாமஸின் உடலைத் தாண்டிச் சென்று விழுந்தது. இவ்விதம் அகமெம்னனது கைகளில் ஆன்ட்டினரின் இரு மகன்களின் விதியும் முடிந்து இருவரின் ஆன்மாக்களும் ஹயடிஸின் வீட்டுக்குப் போய்ச்சேர்ந்தன.

காயத்திலிருந்து விடாமல் ரத்தம் வந்துகொண்டிருந்தவரை அகமெம்னனும் விடாமல் தன் ஈட்டி, வாள் மற்றும் பாறை களைக் கொண்டு சண்டை செய்து எதிரி முகாமில் அழிவை ஏற்படுத்திக் கொண்டே இருந்தான். ஆனால் ரத்தப் போக்கு நின்று காயம் காயத்தொடங்கியவுடன், கத்தியால் குத்தியது போன்ற கடுமையான வேதனை ஏற்பட்டது அவனுக்கு. பிரசவத்தின்போது பிரசவ வேதனையின் தேவதைகளான ஹீராவின் மகள்கள் எய்லைத்தியாக்கள் அனுப்பும் கடுமையான வலிகளைப் போன்ற வேதனையை அகமெம்னன் உணர்ந்தான். தேரில் ஏறிய அவன் உட்குழிவான தனது கப்பல்களை நோக்கிச் செலுத்தும்படித் தன் சாரதிக்கு உத்தரவிட்டான். வேதனையின் உக்கிரத்தில் முழு கிரேக்க சேனைக்கும் கேட்கும்படியாகப் பெருங்குரலெழுப்பிக் கூறினான்:

'நண்பர்களே, ஆட்சியாளர்களே, கிரேக்கத் தலைவர்களே, நமது கப்பல்களிலிருந்து தூரமாகவே உக்கிரமான போர் செய்யுங்கள். ஏனெனில் ட்ரோஜன்களை எதிர்த்து நான் பகல் முழுதும் போரிட ஆலோசனையின் சிறந்தவனான ஜீயூஸ் என்னை அனுமதிக்க வில்லை.'

அவன் அப்படிச் சொன்னதும் அவனது சாரதி அழகிய பிடரிகள் கொண்ட குதிரைகளை முடுக்கி உட்குழிந்த கப்பல்களை நோக்கி விரட்டினான். காயம்பட்ட தம் தலைவனைச் சுமந்துகொண்டு போர்க்களத்தை விட்டு விருப்பத்துடன் பறந்த ஜோடிக் குதிரைகளின் நெஞ்சுப்பகுதி நுரைப் புள்ளிகளால் நிறைந்தது. அவைகளின் வயிற்றுப்பகுதி தூசியால் பழுப்பானது.

அகமெம்னன் பின்வாங்கிச் சென்றதைப் பார்த்த ஹெக்டர் ட்ரோஜன்களுக்கும் லைசியன்களுக்கும் பெருத்த குரலில் சொன்னான்:

'ட்ரோஜன்களே, லைசியர்களே, நேருக்குநேர் சண்டையிடுவதை நேசிக்கும் டார்டானியர்களே, நண்பர்களே, வீரத்தோடு

போரிடும் ஆண்களாக இருங்கள். உங்கள் வீர உணர்ச்சியை வீறுகொண்டெழச் செய்யுங்கள். அவர்களது தலைசிறந்த வீரன் சென்றுவிட்டான். க்ரோனஸின் மகனான ஜீயூஸ் எனக்கு மிகப்பெரிய வெற்றியைக் கொடுத்துவிட்டார். இந்த வலிமை கொண்ட கிரேக்கர்களை நோக்கி உங்கள் குதிரைகளை நேரடியாகச் செலுத்துங்கள். இன்னும் பெரிய வெற்றியைப் பெறலாம்.'

இவ்விதம் பேசி வீரர்கள் மனத்தில் புத்துணர்ச்சியையும் வீரத்தையும் ஊட்டினான் ஹெக்டர். நச்சு வெள்ளைப் பற்களையுடைய வேட்டை நாய்களைக் காட்டுப் பன்றி அல்லது சிங்கத்தை நோக்கிச் செலுத்தும் வேட்டைக்காரனைப் போல, கொலை வெறி மிக்க போர்க்கடவுள் ஏரிஸுக்கு இணையான ப்ரியமின் மகனான ஹெக்டர் பெருமிதம் கொண்ட ட்ரோஜன்களை கிரேக்கர்களைத் தாக்க அனுப்பினான். அச்சமற்றவனாக, முன்வரிசையில் அவன் நின்று கொண்டான். மலையின் உச்சியிலிருந்து கீழிறங்கிக் கடலைக் கலக்கும் பேய்ப் புயல்காற்றைப் போலப் போர்க்களத்துள் புகுந்தான் ஹெக்டர்.

இப்பொழுது ஜீயூஸ் ப்ரியமின் மகனான ஹெக்டருக்கு வெற்றியைக் கொடுத்ததனால், முதன் முதலாகவும் இறுதியாகவும் அவனிடம் விழுந்தவர்கள் யார் யார்? முதலில் அஸியூஸ். பின் அடோனூஸ் மற்றும் ஓப்பிட்டிஸ். க்ளீட்டியஸின் மகன் டோலோப்ஸ், ஒஃபிட்டியஸ், அகிலயஸ், அசிம்னஸ், ஓரஸ் மேலும் தீர்மானம் மிக்க ஹிப்போனூஸ். ஹெக்டர் முதலில் கொன்ற கிரேக்கத் தலைவர்கள் இவர்கள்தான். பிறகு அவன், தென்மேற்குக் காற்றால் உருவான தெளிவான மேகங்களைச் சிதறடிக்கும், தொடர்ந்து தாக்கும் புயல் வேக வடமேற்குக் காற்றைப்போலத் தாக்கினான். ஹெக்டர் நிகழ்த்திய பேரழிவில் சுழன்றடிக்கும் காற்றில் மேலே பறக்கும் தூசி, நுரை இவற்றைப் போலக் கும்பல் கும்பலாக ஏராளமானோர் செத்து விழுந்தனர்.

சரிசெய்ய முடியாத அபாயம் சூழ்ந்தது கிரேக்கர்களை. டைடியூஸின் மகனான டயமீடிஸை அழைத்து ஒடிஸியூஸ் மட்டும் குரல் கொடுத்திருக்காவிட்டால், அவர்கள் ஓடித் தமது கப்பல்களைப் போய்ச் சேர்ந்து விழுந்திருப்பர்.

'டைடியூஸின் மகனே, நமக்கெல்லாம் என்னானது? நமது போர் செய்யும் வீர உணர்ச்சி எங்கே போனது? என் பழைய நண்பனே, இப்பொழுது என்னோடு சேர்ந்து நீயும் ஓர் உறுதி எடுத்துக்கொள்.

நமது உயிரிருக்கும்வரை, பளபளக்கும் தலைக்கவசத்தையுடைய ஹெக்டர் நமது கப்பல்களைக் கைப்பற்ற விடக்கூடாது' என்று ஒடிஸியூஸ் கூறினான்.

வலிமை மிகுந்த டயமீடிஸ் பதில் சொன்னான்:

'நிச்சயமாக நான் உன்னோடு இருப்பேன். நடப்பதை ஏற்றுக் கொள்வோம். ஆனால் வெகு நேரத்துக்கு நமக்கிது உதவாது. மேகங்களைச் செலுத்தும் ஜீயூஸ் நம்மைவிட ட்ரோஜன்களே ஜெயிக்க வேண்டும் என்று விரும்புகிறார்.'

இவ்விதம் பேசிய டயமீடிஸ் தனது ஈட்டியை திம்ப்ரியஸ் மீது எறிந்தான். அது அவனது இடது மார்புக் காம்பில் தாக்கி அவனைத் தேரிலிருந்து வீழ்த்திக் கீழே தள்ளியது. அவனது கடவுளையொத்த பணியாளனாகிய மோலியானை ஒடிஸியூஸ் கவனித்துக் கொண்டான். அவர்களைக் கொன்று வீழ்த்தி அங்கேயே போட்ட பிறகு அதில் கஷ்டமோ மேற்கொண்டு சண்டையோ ஏதும் இருக்கவில்லை வெறிகொண்ட இரண்டு காட்டுப் பன்றிகள் தங்களைத் துரத்தி வந்த வேட்டை நாய்களைத் திடீரெனத் திரும்பி எதிர் கொண்டு அவைகளின்மீது பாய்வது போல இருவரும் கும்பலுக்குள் புகுந்து கன்னா பின்னாவெனத் தாக்க ஆரம்பித்தனர். ட்ரோஜன்களைச் சுற்றி வளைத்து இருவரும் தாக்கி அழித்தனர். கடவுளையொத்த ஹெக்டரிடம் இருந்து ஓடிய கிரேக்கர்கள் மிகவும் விரும்பிய மூச்சுவிடும் இடைவெளியை அது கொடுத்தது.

ஒரு தேரோடு இரண்டு தலைவர்கள் அவர்களுக்குக் கிடைத்தனர். அவர்களிருவரும் பெர்கோட்டியின் தலைசிறந்த திறமை மிகுந்த முன்னறிவிப்பாளர்களில் ஒருவனான மெரோப்ஸின் மகன் களாவர். போர்க்களத்துக்குப் போக வேண்டாம் என்று தன் மகன்களைத் தடுத்திருந்தான் அவன். ஆனால் மரணத்தின் பேய்களால் அழைக்கப்பட்ட அவர்கள் அவன் சொன்னதைக் கேட்கவில்லை. மாபெரும் ஈட்டியெறி வீரனாகிய டயமீடிஸ் அவர்களது உயிர்களை எடுத்து அவர்களது பெருமை மிகு கவச உடைகளையும் எடுத்துக்கொண்டுவிட்டான். ஒடிஸியஸோ ஹிப்போடாமஸ் மற்றும் ஹைப்பிரோக்கஸ் ஆகியோரைக் கொன்று அவர்களது ஆடைகளை எடுத்துக் கொண்டான்.

அய்டா மலையிலிருந்து இதையெல்லாம் பார்த்துக் கொண் டிருந்த ஜீயூஸ் இரண்டு பக்கங்களிலும் போரைத் தீவிரப்படுத்

தினான். கொஞ்ச நேரத்துக்குக் கொல்லுதல் இரு பக்கமும் நிகழ்ந்தது. பேயானின் போர்வீர மகனாகிய அகஸ்ட்ரோஃபஸை இடுப்பெலும்பில் ஈட்டியால் குத்தினான் டயமீடிஸ். அவனது தேர் அருகில் இல்லாததால், அவனால் தப்பிக்க முடியவில்லை. முற்றிலும் வழி தவறியவனாய், கொஞ்ச தூரத்தில் நின்று கொண்டிருந்த தனது தேரோட்டியை விட்டுவிட்டு, அகஸ்ட்ரோஃபஸ் நடந்தே முன் வரிசை அணிவகுப்பை நோக்கிச் சென்றான். அப்படிச் சென்றபோதுதான் தன் உயிரை இழந்தான்.

ஆனால் அணிவகுப்புகளைக் குறுக்கில் நோட்டமிட்டுக் கொண்டிருந்த ஹெக்டர் பேரொலியுடன் தானே டயமீடிஸ் ஒடிஸியூஸ் ஆகியோர் மீது பாய்ந்தான். அவனைப் பின் தொடர்ந்து ட்ரோஜன் அணிகள் வந்தன. போர்முழக்கத் தலைவனான டயமீடிஸ் அவனைப் பார்த்தவுடன் அதிர்ந்து போனான். உடனே தனக்கருகில் இருந்த ஒடிஸியூஸ் பக்கம் திரும்பிச் சொன்னான்:

'பிரச்சனை ஆரம்பிக்கிறது. இதோ இறுமாப்பு கொண்ட ஹெக்டர் வருகிறான். வா, நாமிருவரும் சேர்ந்து அவனைத் துரத்துவோம்.'

இப்படிச் சொல்லிவிட்டு நீண்ட நிழல் கொண்ட தனது ஈட்டியை எடுத்துச் சரிசெய்து குறிபார்த்து எறிந்தான். அவன் குறிபார்த்த ஹெக்டரின் தலை தப்பவில்லை. அவனது தலைக்கவசத்தின் சிறகுக் கொத்தில் தாக்கியது அது. ஆனால் அந்த வெண்கல ஈட்டி எகிறித் திரும்பி வந்ததேயொழிய கவசத்தைத் துளைத்து உள்ளே போய் அவனது சதையைத் தொடவேயில்லை. ஃபீபஸ் அப்போலோ கொடுத்த அவனது தலைக்கவசத்தில் திறந்து மூடக்கூடிய வகையில் மூன்று அடுக்குகளில் அமைந்திருந்த முன்பாகம் ஈட்டியைத் தடுத்துவிட்டது. பின்னால் திரும்பிப் பார்க்காமல் உடனே ஹெக்டர் பின்வாங்கி வீரர்களின் கூட்டத்தில் கலந்து மறைந்து கொண்டான். மயக்கம் வர, தன் மாபெரும் கையொன்றால் தரையில் ஊன்றி மண்டியிட்டு அமர்ந்தான். அதன்பிறகு இந்த உலகம் இரவைப்போல இருட்டாகிப் போனது. இதற்கிடையில் முன் வரிசை அணியினூடே தான் எறிந்த ஈட்டியைப் பின் தொடர்ந்து அது விழுந்து கிடந்த இடம் வரை தேடிக்கொண்டு வந்தான் டயமீடிஸ். எனவே மயக்கம் தெளிந்து எழ ஹெக்டருக்கு நேரம் கிடைத்தது. அவன் எழுந்து தேரில் ஏறி, கூட்டத்துக்குள் ஓட்டி

மறைந்தது கருப்பு இறப்பிலிருந்து தப்பித்துக் கொண்டான். ஆனால் தனது ஈட்டியுடன் ஓடி வந்த வலிமைமிகு டயமீடிஸ் சொன்னான்:

'நாயே, மறுபடியும் நீ உனது தோலைக் காப்பாற்றிக் கொண்டாய். ஆனால் இப்பொழுது மட்டும்தான். ஃபீபஸ் அப்போலோ இப்பொழுதும் உன்னைக் கவனித்துக் கொண்டார். உன்னைச் சுற்றி ஈட்டிகள் சப்தம் எழுப்பும்போது நீ அவரிடம் பிரார்த்தனை செய்ய வேண்டும். ஆனால் நாம் மறுபடியும் சந்திப்போம். அப்போது நான் உன்னை முடிப்பேன். எனக்கும் உதவி செய்ய ஒரு கடவுள் எங்காவது இருப்பார். இப்போதைக்கு நான் என் கண்ணில் படும் வேறு எதிரி யாரையாவது தாக்கிக் கொள்கிறேன்.'

சொல்லிவிட்டுத் தான் ஏற்கெனவே கொன்ற அகஸ்ட்ரோ ஃபஸின் கவச உடைகளைக் கழற்றச் சென்றான் அவன்.

டார்டானஸின் மகன் அய்லஸ் என்ற முன்னாள் ட்ரோஜன் வீரனுக்காக எழுப்பப்பட்ட கல்லறையின் தூணில் ஆதரவாகச் சாய்ந்து கொண்டு அழகிய கூந்தல் கொண்ட ஹெலனின் கணவனாகிய பாரிஸ் மக்கள் மேய்ப்பனாகிய டயமீடிஸின் மீது தனது வில்லை வளைத்துக் குறிவைத்தான். வலிமைமிகு அகஸ்ட்ரோஃபஸின் மார்பிலிருந்த அலங்காரமான கவச உடையையும், அவனது தோள்களிலிருந்து கேடயத்தையும், கனமான தலைக்கவசத்தையும் கழற்றுவதில் மும்முரமாக இருந்த டயமீடிஸ்மீது அம்பெய்தான் பாரிஸ். அது அவன் கையை விட்டுப் பயனின்றி விடுபடவில்லை. டயமீடிஸின் வலது பாதத்தின் மேல் பகுதியைத் தாக்கிப் பாதத்தின் வழியாகத் தரைக்குள் குத்தி நின்றது அது. தனது இடத்திலிருந்து சந்தோஷமாகச் சிரித்துக்கொண்டே குதித்து வந்த பாரிஸ் சொன்னான்:

'மாட்டிக்கொண்டாய்! நான் அம்பெய்தது வீணாகவில்லை. உன் வயிற்றில் தாக்கி உன்னைக் கொன்றிருந்தால் நன்றாக இருந்திருக்கும். சிங்கத்தைப் பார்த்த வெள்ளாடுபோல் உன்னைப் பார்த்ததும் கதறுகிற ட்ரோஜன்களுக்கு, அவர்கள் வேதனையிலிருந்து கொஞ்சம் இடைவேளை ஓய்வு கிடைத்திருக்கும்.'

ஆனால் கலக்கமுறாத வலிமைமிகு டயமீடிஸ் பதில் சொன்னான்:

'சிறந்த வில்லாளனே, உரக்க அதிகம் பேசுபவனே, அலங்காரனே, காமக்கண்ணனே! என்னை நேருக்குநேர் ஒருவருக்

கொருவர் என உண்மையான ஆயுதங்களுடன் எதிர்கொண்டா யானால் உனது வில்லும் உனது அம்புகளும் உனக்கு ஒரு மோசமான தற்காப்பு என்பது விளங்கிவிடும். இப்பொழுது என் காலைக் கீறிவிட்டதற்காக, நீ பெருமை பேசிக் கொண்டிருக்கிறாய். இதற்குப் பதிலாக ஒரு பெண்ணாலோ ஒரு குறும்புக்காரச் சிறுவனாலோ நான் தாக்கப்பட்டிருக் கலாம். இல்பொருளாகிய ஒரு கோழையால் யாரையும் காயப்படுத்த முடியாது. ஆனால் எனது ஆயுதங்கள் தங்கள் வேலையை வேறுவிதமாகக் காட்டவல்லவை. ஒரு மனிதனை அவை லேசாகத் தொட்டால் போதும், அவனுக்கு மரணம் தான். அவன் மனைவி தன் கன்னங்களைக் கிழித்துக் கொள் வாள். அவன் குழந்தைகளுக்குத் தகப்பனில்லாமல் போகும். இந்தப் பூமி அவனது ரத்தத்தால் சிவப்பாகிப் போகும். பெண்களைவிட அதிகமான வல்லூறுகள் அவனை வட்டமிட அழுகிப் போவான் அவன்.'

அவன் அப்படிப் பேசிமுடித்ததும் மகா ஈட்டியெறி வீரனாகிய ஒடிஸியூஸ் வந்து அவனுக்கு அரணாக நின்று கொண்டான். அவனது பாதுகாப்பில் அமர்ந்து கொண்ட டயமீடிஸ் அந்தக் கூரம்பைத் தனது பாதத்திலிருந்து உருவி வெளியே எடுத்தான். வலி உயிர் போனது. அந்த வேதனையினூடே அவன் தனது தேரில் ஏறிக்கொண்டு உட்குழிந்த கப்பல்களை நோக்கி ஓட்டிச்செல்லும்படி, சாரதிக்கு உத்தரவிட்டான்.

**ஆ**தரவுக்கு ஒரு கிரேக்க வீரன்கூட இல்லாமல் தனியாக விடப்பட்ட மகா ஈட்டியெறி நாயகனாகிய ஒடிஸியூஸ் குழம்பிப் போனான். என்ன செய்யலாம் என்று யோசித்தான்.

'அட ஆண்டவனே, நான் என்ன செய்வது இப்பொழுது? எனக்கெதிராக, இங்கே இருக்கின்ற சூழ்நிலைக்குப் பயந்து ஓடுவது, சுத்தமான கோழைத்தனமாகிவிடும். ஆனால் இங்கே மாட்டிக் கொள்வது இன்னும் மோசமாகிவிடும். மற்ற எல்லா கிரேக்கர்களையும் இப்பொழுது ஜீயூஸ் ஓட வைத்துவிட்டார். ஆனால் நான் மட்டும் ஏன் இப்படி தனக்குத்தானாகப் பேசிக் கொண்டிருக்க வேண்டும்? கோழைகள்தான் போர்க்களத்தை விட்டு ஓடிப்போவார்கள். சுத்த வீரன் கலங்காமல் நிற்கவேண்டும் களத்திலேயே. கொல்ல வேண்டும் அல்லது கொல்லப்பட வேண்டும்.'

இவ்விதமான எண்ணங்கள் ஒடிஸியூஸின் மனத்தில் ஓடியபோது கேடயங்களுடன் வந்த ட்ரோஜன் அணியினர் அவனைச் சுற்றிக் கொண்டனர். அவர்களுக்கு அவர்களே அபாயத்தைத் தவிர வேறெதையும் கொண்டு வரவில்லை. தனது கோரைப்பற்களைத் தாடையினால் கூராக்கிக்கொண்டு, மறைவிடத்தின் ஆழத்தி லிருந்து வெளிவரும் காட்டுப் பன்றிக்கு உறுதியான வேட்டைக் காரர்களும் அவர்களது வேட்டை நாய்களும் தொல்லை கொடுப்பார்கள். அதை நோக்கி எல்லாப் பக்கங்களிலிருந்தும் வளைத்துப் பயமுறுத்துவார்கள். நரநரவென அவர்கள் பற்களை நெரிக்கும் சப்தம் கேட்கும். எனினும் அந்தக் காட்டுப் பன்றியானது எளிதில் வெற்றிகொள்ள முடியாததாக இருக்கும். இதைப்போல, சுற்றி வளைத்த ட்ரோஜன்கள் ஜீயூஸுக்கு மிகவும் உவப்பான ஒடிஸியூஸுக்குத் தொல்லை கொடுத்தனர்.

முதலில் இணையற்ற டியோபைட்டிஸ் மீது பாய்ந்த ஒடிஸியூஸ் கூரீட்டியால் மேலிருந்து அவனது தோளைத் தாக்கி வீழ்த்தினான். அடுத்து தூன், என்னோமஸ் ஆகியோரைக் கொன்றான். செர்சிடாமஸ் தனது தேரிலிருந்து கீழே குதித்தான். ஆனால் புடைத்துக் கொண்டிருந்த அவனது கேடயத்தைத் தாங்கிக் கொண்டிருக்கும் ஆதாரத்தில் தனது ஈட்டியால் குத்தினான் ஒடிஸியூஸ். அவன் கீழே விழுந்து மண்ணைக் கவ்வினான். அவர்களை விழுந்த இடத்திலேயே விட்டுவிட்டு, ஹிப்பாசஸின் மகன் ச்சாரோப்ஸைக் குத்தினான். பணக்கார சோக்கஸின் சகோதரன் அவன். கடவுளையொத்த மானிடனான சோக்கஸ் தன் சகோதரனைத் தற்காக்கும் பொருட்டு முன்னால் வந்து ஒடிஸியூஸின் எதிரில் நின்று சொன்னான்:

'பிரசித்தி பெற்ற ஒடிஸியூஸ், யுத்தத்தையும் அதன் யுக்திகளையும் விரும்பிச் சுவைக்கின்றவனாகிய நீ இன்று ஹிப்பாசஸின் இரண்டு மகன்களையும் வெற்றிகொண்டு, அருமையான ஜோடி களைக் கொன்று கவச உடைகளை எடுத்துக் கொண்டதைப் பற்றி இன்று நீ பீற்றிக்கொள்வாய், அல்லது எனது ஈட்டியால் மண்ணைக் கவ்வி மாண்டு போவாய்.'

இந்த வார்த்தைகளைச் சொல்லியவனாய் அவன் ஒடிஸியூஸின் வட்டக் கேடயத்தில் குத்தினான். அவனது கனமான ஆயுதம் கேடயத்தைப் பிளந்து அலங்காரமான உடல் கவசம் வரை சென்று ஒடிஸியூஸின் இடுப்புப் பகுதியிலிருந்து சதையைக் கிழித்தெடுத்தது. ஆனால் அதற்குமேல் உள்ளே நுழைய

பல்லாஸ் அதீனி அனுமதிக்கவில்லை. முக்கிய பகுதி எதையும் அது தொட்டுவிடவில்லை என்பதை ஒடிஸியூஸ் அறிந்தான். உடனே பின்வாங்கிய அவன் சோக்கஸிடம் சொன்னான்:

'பரிதாபத்துக்குரிய புழுவே, உனது விதி முத்திரையிடப் பட்டுவிட்டது. ட்ரோஜன்களோடு யுத்தம் செய்வதிலிருந்து நீ என்னைத் தடுத்துவிட்டாய். ஆனால் இன்று கருப்பு இறப்பும் அழிவும் உனக்காக இன்று காத்திருக்கின்றன; தெரிந்துகொள். எனது ஈட்டியால் நீ வெற்றிகொள்ளப் படுவாய். உனது கீர்த்தியை யெல்லாம் நீ என்னிடம் ஒப்படைப்பாய். உனது உயிரைக் குதிரை களை அடக்குவதில் புகழ்பெற்ற ஹயடிஸின் கடவுளிடம் ஒப்படைப்பாய்'.

அவன் அப்படிச் சொன்னதும் சோக்கஸ் திரும்பி ஓட ஆரம்பித் தான். அவன் திரும்பி இருந்தபோது, அவன் தோள்களுக்கு மத்தியில் அவன் முதுகில் தன் ஈட்டியால் குத்தி அவன் மார்பு வழியாக அதை வெளியில் எடுத்தான் ஒடிஸியூஸ். சோக்கஸ் தடாலெனத் தரையில் விழுந்தான். கடவுளையொத்த ஒடிஸியூஸ் அவனை வென்றான்.

'ஓ சோக்கஸ், துணிச்சல் மிகுந்த தேரோட்டியான ஹிப்பாசஸின் மகனே! விரைவாகவே உன்னை மரணம் வந்தெய்திவிட்டது. உன்னால் தப்பிக்க முடியவில்லை. பரிதாபத்துக்குரியவனே, இறந்த உனது கண்களை உனது தந்தை அல்லது தாய் வந்து மூடப்போவதில்லை. ஆனால் படபடவெனச் சிறகடித்துக் கொண்டு வரும் பிணந்தின்னிப் பறவைகள் உன்னுடலைக் கொத்திச் சின்னாபின்னப் படுத்தப் போகின்றன. ஆனால் நான் இறக்கும்போது எனக்கான ஈமக்கிரியைகளைக் கடவுளை யொத்த கிரேக்கர்கள் செய்வார்கள்.'

இந்த வார்த்தைகளைச் சொல்லியவனாய் ஒடிஸியூஸ் தனது உடலில் தைத்திருந்த சோக்கஸின் கனமான ஈட்டியைக் காயத்தி லிருந்தும், மத்தியில் உப்பிப்பருத்திருந்த கேடயத்திலிருந்தும் உருவியெடுத்தான். அதன் முனை வெளியில் வந்தபோது, ரத்தம் பொங்கி வெளியில் வந்தது. ஒடிஸியூஸுக்கு அது மிகுந்த வேதனை கொடுத்தது. அப்படி ரத்தம் வழிந்தோடுவதைக் கண்ட ட்ரோஜன்கள் உடனே தனது அணியினரை அழைத்து அவனைச் சுற்றிக் கொண்டு கும்பலாகத் தாக்கத் தொடங்கினர். தனது நண்பர்களை அழைத்து ஒடிஸியூஸ் பெருங்குரலெழுப்பினான்.

தனது குரலில் உச்சஸ்தாயியில் மூன்று முறை அவன் அழைத்தான். அவனது குரலைக் கேட்ட போர்த்திறம் மிக்க மெனிலயஸ் உடனே தன்னருகில் இருந்த அஜாக்ஸ் பக்கம் திரும்பிச் சொன்னான்:

'டிலாமனின் மகனே, ஒலிம்பஸ் மலையில் பிறந்த மக்கள் தலைவனே அஜாக்ஸ், மகா ஒடிஸியூஸின் அலறலை நான் கேட்கிறேன். போரின் உக்கிரத்தில் ட்ரோஜன்கள் அவனை வெட்டிப் போட்டுவிட்டார்களோ என்னவோ. அவனைக் காப்பாற்ற நீயும் நானும்தான் சரியான பொறுப்பு. ஒடிஸியூஸ் மகா வீரன்தான். எனினும் அவனை அப்படியே விட்டுவிட்டோமெனில் காலதாமதமாகிவிடும். கிரேக்கர்களுக்கு எவ்வளவு பெரிய இழப்பாகிவிடும்!'

இப்படிச் சொல்லிய வண்ணம் அவன் உடனே புறப்பட்டான். வழிநடத்திய அவனைத் தொடர்ந்து அஜாக்ஸுூம் சென்றான்.

மலைப்பகுதிகளில் வேட்டைக்காரனின் அம்பால் காயம்பட்டுக் கிடக்கும் கொம்புகள் கொண்ட ஒரு மானைச் சுற்றி பழுப்பு மஞ்சள்நிற நரிகள் இருக்கும். மானோ வேகமாகத் தப்பித்து ஓடி வேட்டைக்காரனைப் பின் தங்க வைக்கும். ஆனால் அதன் ரத்தம் சூடாக இருக்கும் வரையிலும், அதன் கால்கள் அதனைக் கொண்டு செல்லும் தூரம் வரையில்தான் அதனால் ஓடமுடியும். அதன் வலிமையையெல்லாம் அம்பு உறிஞ்சிய பிறகு சதை சுவைக்கும் நரிகள் மலைப்பகுதிகளின் நிழலான இடங்களில் அந்த மானைக் குதறி விழுங்கும். அந்த நேரத்தில் மற்ற மிருகங்களை உண்டு வாழ்கிற ஒரு சிங்கத்தை அங்கே கடவுள் அனுப்புவார். அதைப்பார்த்ததும் நரிகள் பதறி, சிதறியோடும். இப்பொழுது சிங்கத்தின் உணவாக மான் இருக்கும். இதைப்போல, ஒடிஸியூஸைச் சுற்றி ட்ரோஜன்கள் நின்று கொண்டிருந்ததை இருவரும் பார்த்தார்கள். விரைவுச் சிந்தனையாளனான ஒடிஸியூஸ் தனது ஈட்டியை வைத்து இறப்பு தனக்கு ஏற்படுவதிலிருந்து கொஞ்சம் தள்ளிப் போட்டுக் கொண்டிருந்தான்.

கோபுரம் போன்ற கேடயத்துடன் களமிறங்கிய அஜாக்ஸ் ஒடிஸியூஸைப் பாதுகாத்து மூடினான். எல்லாத் திசைகளிலும் சிதறி ஓடினார்கள் ட்ரோஜன்கள். போர்த்திறம் மிக்க மெனிலயஸ் ஒடிஸியூஸைக் கைத்தாங்கலாகத் தூக்கி கும்பலின் வழியே

அழைத்துச் சென்றான். அந்த நேரத்தில் அவனது உதவியாளன் ஒருவன் மெனிலயஸின் தேரைக் கொண்டு வந்தான்.

உடனே ட்ரோஜன்களின் மீது பாய்ந்தான் அஜாக்ஸ். ப்ரியமுக்கு முறைதவறிப் பிறந்த ஒரு மகனான டோரிக்லஸைக் கொன்றான். அடுத்து அவன் பண்டோக்கஸ், லைசாண்டர், பைராசஸ், பைலார்ட்டிஸ் ஆகியோரை ஈட்டியால் குத்தினான். குளிர் காலத்து மழையால் வெள்ளப்பெருக்கெடுத்து ஓடும் நதியானது, மலையின் உச்சியிலிருந்து கீழிறங்கிச் சமவெளிக்கு விரையும் போது, செத்துப்போன கருவாலி மரங்களையும் தேவதாரு மரங்களையும் அடித்துக்கொண்டு போகும். மிதக்கும் மரங்களை யெல்லாம் கடலில் கொண்டு சேர்க்கும். அதைப்போல கீர்த்தி மிகு அஜாக்ஸ் தரையில் பாய்ந்து மனிதனென்றும் குதிரை யென்றும் பாராமல் கொன்று குவித்துக்கொண்டே. எதிரிகள் மீது விழுந்தான்.

ஹெக்டருக்கு இது எதுவுமே தெரியவில்லை. ஸ்கமாண்டர் ஆற்றின் தூரக்கரையில் அவன் இருந்தான். அங்கே இருந்த நெஸ்டரையும் போர்த்திறம் மிக்க இடமீனியஸையும் சுற்றிப் போர் தீவிரமாக இருந்தது. யுத்தத்தின் சப்தமும் ரத்தமும் அதிகமாகச் சிந்தப்பட்டது அங்கேதான். அதன் உக்கிரத்தின் மத்தியில் போரிட்டுக் கொண்டிருந்தான் ஹெக்டர். தனது தேர் மற்றும் ஈட்டியை வைத்துக்கொண்டு கிரேக்க இளைஞர்களை வெட்டி வீழ்த்திக்கொண்டு ஒரு பிரளயத்தையே ஏற்படுத்திக் கொண்டிருந்தான்.

அழகிய கூந்தலையுடைய ஹெலனின் கணவனாகிய பாரிஸ், மக்கள் மேய்ப்பனும் தலைசிறந்த போர்வீரனுமாகிய மெக்கே யானை வலது தோளில் அடித்து மூன்று அடுக்குகள் கொண்ட தனது அம்பால் காயப்படுத்தியிருக்காவிட்டால், ஹெக்டர் ஏற்படுத்திக் கொண்டிருந்த அழிவுக்கெல்லாம் கடவுளையொத்த கிரேக்க வீரர்கள் பதிலடி கொடுத்துத்தான் இருப்பார்கள். யுத்தம் சென்று கொண்டிருந்த போக்கைப் பார்த்தால், அவன் பிடிபட்டு விடு வானோ என்று வீரத்தை மூச்சாக விட்டுக் கொண்டிருந்த கிரேக்கர்கள் பயந்து போயிருந்தனர். அப்போது இடொமீனியஸ் கடவுளையொத்த நெஸ்டரிடம் சொன்னான்:

'கிரேக்கர்களின் புகழே, நீலியூஸின் மகனே நெஸ்டர், சீக்கிரம் உங்களது தேரில் ஏறிக்கொள்ளுங்கள். மெக்கேயானையும் அதில்

ஏற்றிக்கொண்டு உடனே எவ்வளவு முடியுமோ அவ்வளவு வேகமாகக் கப்பல்களுக்குச் சென்று விடுங்கள். அம்புகளை வெட்டி எடுத்து, மூலிகைகளைத் தடவி காயங்களைக் குணப் படுத்தும் அவனைப் போன்ற மருத்துவர்கள் ஆயிரம் பேருக்குச் சமம்.'

அவன் அப்படிச் சொன்னதும் கிரேக்கத் தேரோட்டியான நெஸ்டரும் அப்படியே செய்தான். அவன் முதலில் ஏறிக் கொள்ள, இணையற்ற வைத்தியனாகிய அஸ்க்ளிப்யூஸின் மகனாகிய மெக்கேயானும் அவனுக்குப் பக்கத்தில் ஏற்றப்பட் டான். சாட்டையால் குதிரைகளை நெஸ்டர் முடுக்கி விட்டான். உடனே விருப்பமுடன் அந்த ஜோடிக் குதிரைகள் உட்குழிந்த கப்பல்களை நோக்கிப் பறந்தன. தங்களது பயணம் முடிவடை வதில் ஆர்வம் கொண்டவைகளாக.

மற்ற இடங்களிலெல்லாம் ட்ரோஜன்கள் விரட்டப்பட்டிருப் பதைக் கண்ட ஹெக்டரின் தேரோட்டியான செப்ரியோனிஸ் ஹெக்டரிடம் தன் மனத்தில் உள்ளதைச் சொன்னான்:

'ஹெக்டர், போரின் விளிம்பில் கிரேக்கர்களோடு சண்டை யிட்டுக் கொண்டு இங்கே நாம் இருக்கிறோம். ஆனால் மற்ற ட்ரோஜன்களெல்லால் குழப்பமடைந்து ஓடிக்கொண்டிருக் கிறார்கள். தேர்களுடனும் மற்ற எல்லாவற்றுடனும். டிலமா னின் மகனாகிய அஜாக்ஸ் அவர்களையெல்லாம் பெருக்கித் தள்ளிக் கொண்டிருக்கிறான். என்னால் அவனை எளிதாக அடையாளம் காண முடிகிறது. அதோ அந்த அகலமான கேடயத்தைத் தோளில் போட்டிருப்பவன் அவன்தான். நாம் அங்கே நமது தேரை ஓட்டிச் சென்று அவர்களோடு கலந்து கொள்வோம். அங்கேதான் தேரோட்டிகளும் காலாட்படை களும் கடுமையாக மோதிக் கொண்டிருக்கிறார்கள். அங்கேதான் மனிதர்கள் ஒருவரை ஒருவர் வெட்டிக்கொண்டு சாகிறார்கள். போரின் கூச்சலும் குழப்பமும் நிறைந்திருக்கிறது.'

இந்த வார்த்தைகளைச் சொல்லியவனாக, சீழ்க்கை ஒலியெழுப் பும் தனது சாட்டையைச் சொடுக்கி அழகிய பிடரி கொண்ட தன் குதிரைகளை அவன் முடுக்கிச் செலுத்தினான். சாட்டையின் சொடுக்கைச் செவிமடுத்த குதிரைகள் தேரை இழுத்துக்கொண்டு பிணங்களையும் கேடயங்களையும் மிதித்துக் கொண்டே ட்ரோஜன்களையும் கிரேக்கர்களையும் நோக்கிப் பறந்தன.

தேரின் அச்சு முழுவதும், அதைச் சுற்றிச் சென்ற சக்கர ஆரங்களும் குதிரைகளின் குளம்புகளாலும் சக்கர விளிம்பாலும் வீசியெறியப் பட்ட ரத்தத் துளிகளால் நிரம்பின. சண்டையிட்டுக் கொண்டிருந்த வீரர்களின் கும்பலோடு போய் இணைந்து கொள்ளப் பெரிதும் விரும்பினான் ஹெக்டர். அவனது வருகை கிரேக்கர்கள் மத்தியில் பெரும் குழப்பத்தை ஏற்படுத்தினாலும், தனது ஈட்டியைப் பயன்படுத்த அவன் தயங்கவில்லை. ஆனால் டிலமானின் மகனான அஜாக்ஸோடு சண்டையிடுவதை அவன் தவிர்த்தான். எனினும் தன் ஈட்டியாலும் வாளாலும் பாறைகளாலும் தனது இருப்பை அவர்கள் உணர்ந்து கொள்ளுமாறு செய்தான்.

தனது உயரிய இருக்கையில் அமர்ந்திருந்த தந்தை ஜீயூஸ் மெல்ல அஜாக்ஸைப் பின் வாங்கிக் கொள்ளுமாறு செய்தான். சோர்வுற்றவனாக, தாக்குவதை நிறுத்தினான் அஜாக்ஸ். ஏழு மடிப்புகள் கொண்ட கேடயத்தைத் தூக்கித் தன் முதுகுப் பக்கம் போட்டுக் கொண்டு, திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே செல்லும் காட்டு மிருகத்தைப் போல, மெல்ல ஒதுங்கிச் சென்றான். ஒரு கால்நடைப் பண்ணைக்குள் புகுந்த பழுப்பு மஞ்சள் நிற சிங்கத்தை நாய்களும் பண்ணையாட்களும் துரத்துவார்கள். தங்கள் கால்நடைகளில் மிகச் சிறந்தவற்றைச் சிங்கத்தின் பற்களிலிருந்து காப்பாற்றும் பொருட்டு அவர்கள் இரவு முழுவதும் தூங்காமல் விழித்திருப்பார்கள். ஆனால் சதைக்கு வெறிகொண்ட சிங்கமானது தொடர்ந்து தாக்கிக் கொண்டே இருக்கும். ஆனால் அதனால் அதற்குப் பலனேதும் கிடைக்காது. எவ்வளவு பசி இருந்தாலும், வலிமையான கைகளால் எறியப்படும் ஈட்டி மழையும் எரியும் பந்தங்களும் அதைப் பயந்தோடவைக்கும். விடியலில் அது ஏமாந்து பின்வாங் கும். அந்தச் சிங்கத்தைப் போல அஜாக்ஸும் ஏமாந்தவனாக, கிரேக்கர்களின் கப்பல்களுக்கு ஏற்படவிருக்கும் அபாயத்தை தீவிரமாக உணர்ந்தவனாக ட்ரோஜன்கள் பக்கமிருந்து மனசே இல்லாமல், தன் விருப்பத்துக்கு எதிராகத் திரும்பினான்.

கதிர்கள் நிறைந்த ஒரு வயல் பக்கமாகச் சென்று கொண்டிருக்கும் கழுதை திடீரென்று தன்னைப் பிடித்திருக்கும் சிறுவர்களின் பிடியிலிருந்து பிய்த்துக் கொண்டு, அவர்கள் கையில் பிடித் திருக்கும் கழிகள் உடைய உடைய அடித்தாலும் ஓடி, நன்கு பழுத்த கதிர்களின் பக்கம் நின்று தின்று பசியடங்கும். சிறுவர்கள் தொடர்ந்து அடிப்பதால் எந்தப் பயனும் ஏற்படாது. அவர்களின்

அடி பலவீனமானது. கழுதையை விரட்டுவதில் அவர்கள் வெற்றி பெறும்போது அது தனக்கு வேண்டிய அளவு தின்று முடித்திருக்கும். இதைப்போல, பெருமிதம் கொண்ட ட்ரோஜன்களும் அவர்களது ஆதரவாளர்களும் டிலமானின் மகனான அஜாக்ஸை அவனது கேடயத்தின் மையப்பகுதியில் தங்களது ஈட்டிகளால் தாக்கிய வண்ணம் துரத்திச் சென்றனர்..

சமயங்களில் அஜாக்ஸ் தனது வீர உணர்ச்சி பொங்கியெழத் திடீரெனத் திரும்பி, குதிரைகளை அடக்குவதில் சிறந்தவர்களான ட்ரோஜன்களைக் கொஞ்ச தூரத்திலேயே ஸ்தம்பித்து நிற்கவைப்பான். அதன்பின் மறுபடியும் பின்வாங்கத் தொடங்கு வான். இவ்விதமாக கிரேக்கர்கள் மற்றும் ட்ரோஜன்களின் அணி வகுப்புகளுக்கு இடையே நின்று கொண்டும் அவனைச் சுற்றியும் இருந்த, கிரேக்கர்களின் கப்பல்களுக்கு அபாயம் ஏற்படுத்த விழைந்த இருந்த அந்தப் படை முழுவதையுமே தன் கட்டுப்பாட்டில் வைத்திருந்தான். வலிமை மிகுந்த கைகளினால் எறியப்பட்ட ஏராளமான ஈட்டிகளை மேலே செல்ல விடாமல் அவனது கேடயம் தடுத்தது. வேறு பல ஈட்டிகள் தங்கள் இலக்கான வெள்ளைச் சதையை அடையாமல் வழியிலேயே மண்ணைக் கவ்வின.

இவ்விதமாக ஏவுகணைகளினால் அஜாக்ஸ் அவதிப்பட்டுக் கொண்டிருப்பதைப் பார்த்த அருமையான யூரிபைலஸ் அவனுக்கு ஆதரவாக ஓடி வந்து தன் பளபளக்கும் ஈட்டியைப் பறக்க விட்டான். மக்கள் தலைவனாகிய அபிசாவோனை அது அவனது இடுப்புப் பக்கமாக ஈரலில் தாக்கி உடனே அவனைக் கீழே விழவைத்தது. பின் முன்னேறிய அவன், அபிசாவோனின் கவச உடைகளை அவனது தோள்களிலிருந்து கழற்றத் தொடங்கினான்.

ஆனால் யூரிபைலஸ் அப்படி அபிசாவோனை நிர்வாணப்படுத்திக் கொண்டிருக்கும்போது கடவுளையொத்த பாரிஸ் அதைப் பார்த்தான். உடனே தனது வில்லை எடுத்து அம்பெய்தான். அது அவனது வலது தொடையைத் தாக்கியது. அவனது தொடையில் குத்திய அம்பு உடைந்தது. ஆனால் அது யூரிபைலஸின் வேகத்தைத்தான் நிறுத்தியது. மரணத்தைத் தவிர்க்க உடனே அவன் தனது அணியினர் நின்று கொண்டிருந்த இடத்தை நோக்கிப் பின்வாங்கினான். பின் முழு கிரேக்கப் படைக்கும் காதில் விழு மாறு தனது குரலை உயர்த்தி முழங்கினான்:

'என் நண்பர்களே, ஆட்சியாளர்களே, கிரேக்கத் தலைவர்களே! திரும்புங்கள்! எதிர்த்து நில்லுங்கள்! அழிவிலிருந்து அஜாக்ஸைக் காப்பாற்றுங்கள்! அவன் மீது தொடர்ந்து ஏவுகணைகள் வீசப்படு கின்றன. அதிலிருந்து அவன் எப்படி மீளுவான் என்று எனக்கு விளங்கவில்லை. டிலமானின் மகனாகிய மகா அஜாக்ஸைச் சுற்றி அரணாக நில்லுங்கள்.'

காயமடைந்த யூரிபைலஸ் இவ்விதம் பேசினான்: சாய்வாக வைக்கப்பட்ட கேடயங்களில் பதுங்கியவர்களாக, தமது ஈட்டிகளைத் தயாராக வைத்துக் கொண்டு அவர்கள் அஜாக்ஸைச் சுற்றி மூடி, பாதுகாப்பு வளையமாக நின்றனர். அவர்கள் உதவி யுடன் தனது படைப்பிரிவினர் இருக்கும் இடத்தை அடைந்த அஜாக்ஸ் தனது நிலையை மாற்றிக்கொள்ள விரும்பாதவனாக அப்படியே இருந்தான்.

பற்றி எரியும் தீயைப்போல அவர்கள் தொடர்ந்து சண்டையிட் டனர். இதற்கிடையில், போர்க்களத்திலிருந்து நெஸ்டரையும் அவனோடு மக்கள் மேய்ப்பனாகிய மெக்கேயானையும் நீலியஸின் பயிற்சியில் உருவான குதிரைகள் வியர்வை வழிய வழிய ஓடி தூரமாக எடுத்துச் சென்றன. கடுமையாக நடந்து கொண்டிருந்த போர் நிகழ்ச்சிகளையும், அகன்ற வயிறு கொண்ட கப்பல்களின் பின்பகுதிக்கு வேதனையுடன் வேறுவழியின்றிப் பின்வாங்கிக் கொண்டிருந்த கிரேக்கர்களையும் கவனித்துக் கொண்டிருந்த கடவுளையொத்த விரைவுப்பாத அக்கிலிஸ் அஜாக்ஸைப் பார்த்தான்.

உடனே தன் நண்பன் பெட்ரோக்குலஸைக் கப்பலில் இருந்த படியே குரல் கொடுத்து அழைத்தான். குரலைக் கேட்டவுடன், ஏரிஸுக்கு இணையான பெட்ரோக்குலஸ் வெளியில் வந்தான். அதுவே அவனது முடிவின் ஆரம்பமாக இருந்தது. மெனீட்டிய ஸின் உறுதியான மகனான அவன்தான் முதலில் பேசினான்:

'என்னை ஏன் அழைத்தாய் அக்கிலிஸ்? என்னிடமிருந்து என்ன வேண்டும் உனக்கு?'

விரைவுப்பாத அக்கிலிஸ் பதில் சொன்னான்:

'மெனீட்டியஸின் கடவுளையொத்த மகனே, எனது பெரு மையே, இன்பமே, இனி கிரேக்கர்கள் கும்பலாக வந்து என் காலைப் பிடித்துக் கொண்டு கெஞ்சுவார்கள் என்று

நினைக்கிறேன்! அவர்கள் மிகவும் பரிதவிப்பான சூழ்நிலையில் இருக்கிறார்கள். ஆனால் இப்பொழுது நீ உடனே சென்று, போர்க்களத்திலிருந்து நெஸ்டரை அழைத்துச் சென்றது யார் எனக்கேள். பின்னாலிருந்து பார்த்தபோது, அஸ்க்லீபியஸின் மகன் மெக்கேயானைப் போலவே அவன் இருந்தான். ஆனால் குதிரைகள் படு வேகமாகச் சென்றதால் அவனது முகத்தை என்னால் பார்க்க முடியவில்லை.'

அவன் அப்படிச் சொன்னதும் தனது நண்பனின் சொல்லுக்குக் கட்டுப்பட்டான் பெட்ரோக்குலஸ். உடனே கிரேக்கர்களின் பாசறைகளையும் கப்பல்களையும் நோக்கி விரைந்தான்.

நெஸ்டரும் மெக்கேயானும் நெஸ்டரின் குடிலை அடைந்தனர். தேரிலிருந்து இறங்கி தாராளமான பூமியின் மீது கால் வைத்தனர். கிழவனின் உதவியாளனான யூரிமிடான் குதிரைகளை அவிழ்த் தான். பின் அவர்கள் கடற்கரையின் பக்கமாக, தென்றல் காற்றில் நின்று தங்கள் மேலாடைகளிலிருந்த வியர்வையிலிருந்து தங்களை உலர்த்திக் கொண்டனர். பின் உள்ளே சென்று ஓர் இருக் கையில் அமர்ந்தனர். அழகிய கூந்தலையுடைய ஹெக்காமீடி அவர்கள் குடிக்க ஒரு பானம் தயார் செய்தாள். அக்கிலிஸ் டெனிடோஸை வீழ்த்தியபோது நெஸ்டருக்குக் கிடைத்தவள் அவள். வள்ளல் தன்மை கொண்ட அர்சினுவஸின் மகள் அவள். நெஸ்டருக்காக கிரேக்கர்கள் அவளைக் கொடுத்திருந்தனர். ஏனெனில் அவனே அனுபவ அறிவில் சிறந்த உபதேசியாக அவர்களுக்கு இருந்தான்.

நீல நிறத்தில் உள்வடிவமைக்கப்பட்ட ஒரு அழகான, பளபளப் பாக்கப்பட்ட மேசையை முதலில் அவர்கள் பக்கம் நகர்த்தி வைத்தாள் அவள். அதன் மீது ஒரு வெண்கலத் தட்டில் அந்த பானத்தோடு சேர்த்துண்ண, சுவையூட்ட, மிதப்படுத்த, பதப் படுத்த ஒரு வெங்காயத்தையும் கொஞ்சம் மஞ்சள் தேனையும் வால்கோதுமை ரொட்டியையும் வைத்தாள். அவற்றின் பக்கத் தில் நெஸ்டர் தனது வீட்டிலிருந்து கொண்டுவந்திருந்த கம்பீர மான நேர்த்தியுடன் இருந்த தங்கக் குடையாணிகளால் அலங் கரிக்கப்பட்ட கொண்ட ஒரு கோப்பையும் வைக்கப்பட்டது. அதற்கு நான்கு கைப்பிடிகள் இருந்தன. அவை ஒவ்வொன்றின் மீதும் ஒன்றை ஒன்று பார்த்த வண்ணம் நான்கு தங்கப் புறாக்கள் தங்கள் சொண்டுகளை கோப்பைக்குள் விட்டுக்கொண்டிருந்தன. கீழே இரண்டு ஆதரவுக் கழிகள் இருந்தன. நெஸ்டரைத் தவிர

வேறு யாராக இருந்தாலும் அந்தக் கோப்பை நிறைந்திருக்கும் போது அதைத் தூக்க சிரமப் பட்டிருப்பார்கள். ஆனால் வயதானாலும், நெஸ்டர் அதை எளிதாகத் தூக்கிவிடுவான். ஒரு தேவைதையைப் போல அந்தப் பெண் அக்கோப்பைக்குள் துருக்கி தேச மதுவை ஊற்றினாள். கொஞ்சம் ஆட்டுப் பாலாடைக் கட்டியை. ஒரு வெண்கல அரத்தால் அதற்குள் அராவிக் கலந்தாள். அதன் மீது வெள்ளை வால்கோதுமையைத் தூவி விட்டாள். எல்லாம் முடித்த பிறகு அவர்களைக் குடிக்கச் சொன்னாள்.

கடுமையான தாகத்தை அவர்கள் குடித்துத் தணித்துக்கொண்ட பின்னர் ஆசுவாசமாகப் பேச ஆரம்பித்தனர். அப்போது பெட்ரோக்குலஸ் திடீரென்று உள்ளே நுழைந்தான். கடவுளைப் போல இருந்த ஒரு மனிதனான, அவனைப் பார்த்ததும் பளபளப் பாக்கப்பட்ட தனது நாற்காலியில் இருந்து எழுந்த கிழவன் அவனைக் கைகொடுத்து அழைத்து வந்து அமரச் சொன்னான். ஆனால் அதற்கு மறுத்த பெட்ரோக்குலஸ் பதில் சொன்னான்:

‘எனது மரியாதைக்குரிய ஐயா, உட்கார்ந்து பேசுவதற்கெல்லாம் நேரமில்லை. என்னை உட்காரச் சொல்லவேண்டாம். நீங்கள் அழைத்து வந்த காயம்பட்ட வீரன் யார் என என்னைப் பார்த்துவரச் சொன்னவன் மரியாதை செய்யப்பட வேண்டிய மாவீரன். அவன் எளிதில் சங்கடப்பட்டும் விடுவான். ஆனால் காயம்பட்டது மெக்கேயானுக்குத்தான் என்பதை நானே நேரில் தெரிந்து கொண்டுவிட்டபடியால், நான் உடனே சென்று அக்கிலிஸிடம் இதைச் சொல்ல வேண்டும். ஒலிம்பஸ் மலையில் வளர்ந்த பெரியவரே, சமாதானப்படுத்த எவ்வளவு கடினமான வன் அக்கிலிஸ் என்பது உங்களுக்குத் தெரியாததல்ல. காரணமே இல்லாமல் குற்றம் கண்டுபிடிப்பான்.’

கிரேக்கத் தேரோட்டியான நெஸ்டர் பதில் சொன்னான்:

‘கிரேக்கப்படை முழுவதற்குமே எந்த மாதிரியான அபாயம் இருக்கிறதென தெரியாதபோது, ஒரு சில கிரேக்க இறப்புகளை எண்ணி அக்கிலிஸ் ஏன் கலங்க வேண்டும்? எமது தலைசிறந்த வீரர்கள் எல்லாரும் ஏவுகணைகளால் தாக்கப்பட்டு அல்லது குத்தப்பட்டுக் கப்பல்களில் கிடக்கின்றனர். வலிமை வாய்ந்த டயமீடிஸ் காயப் படுத்தப்பட்டான். மகா ஈட்டியெறி வீரனாகிய ஒடிஸியூஸும் குத்தப்பட்டு விட்டான். அகமெம்னனுக்கும்

அப்படியே. யூரிபைலஸின் தொடையில் அம்பு தைத்தது. இதோ இப்பொழுது நான் போர்க்களத்திலிருந்து அம்பினால் காயம் பட்ட இன்னொருவனை அழைத்து வந்திருக்கிறேன். ஆனால் மகா போர்வீரனாகிய அக்கிலிஸுக்கு கிரேக்கர்களின் மீது அக்கறையோ இரக்கமோ கிடையாது. நாங்கள் செய்வதையெல் லாம் மீறி, எங்கள் கப்பல்களெல்லாம் தீக்கிரையாக வேண்டுமா? கடலுக்குப் பக்கத்தில் நாங்கள் அனைவரும் அழிக்கப்பட வேண்டுமா? நிச்சயமாக, கடந்த காலத்தில் இருந்ததைப் போன்ற வலிமை இப்பொழுது என்னிடமில்லை. எனது உடலும் முன்னைப்போல வளைந்து கொடுக்கக் கூடியதாக இல்லை.

'ஒருமுறை கால்நடைகளை நாங்களும் எலீயன்களும் தாக்கிக் கவர்ந்து செல்வதில் சண்டையிட்டுக் கொண்டோம். அப்போது நான் இளமையாகவும் உறுதியோடும் இருந்தேன். ஈலிஸில் வசித்த உறுதியான இட்டிமோனியஸை நான் கொன்றேன். ஈலியன்களுடைய ஆட்சியாளனாகிய ஆகியஸ் எங்களுக்கு இழைத்தக் கெடுதிக்குப் பழிவாங்கும் நடவடிக்கையாக நான் அவனுடைய மந்தைகளைத் தாக்கிக் கவர்ந்து கொண்டிருந்தேன். இட்டொமீனியஸ் அவர்களைத் தற்காத்துக் கொண்டிருந்த போது, நான் ஓர் ஈட்டியால் அவனைத் தாக்கிக் கொன்றேன். அவனைப் பின்பற்றிக் கொண்டிருந்த கிராமத்து ஆட்கள் அனை வரும் பதறி, சிதறிஓடினார்கள். சமவெளியிலிருந்து நாங்கள் ஏராளமான கால்நடைகளைக் கொள்ளைப் பொருள்களாக ஓட்டிச் சென்றோம். ஐம்பது கால்நடைகளும், அதே எண் ணிக்கை கொண்ட செம்மறியாடுகளும், பன்றிகளும், சிதறி யோடிய வெள்ளாடுகளும், நூற்றைம்பது தவிட்டு நிறக் குதிரை களுமாக ஓட்டிச் சென்றோம். எல்லாமே பெண் குதிரைகள்; அவற்றில் பல குட்டிகளோடும் இருந்தன. இரவு நேரமாகப் பார்த்து நாங்கள் அவைகளை என் தந்தை நீலியூஸின் ஊராகிய பைலோஸுக்கு ஓட்டிச் சென்றோம். எனது தாக்குதல் நடவடிக்கையில் அத்தனை மிருகங்கள் கிடைத்ததை எண்ணி என் தந்தை நீலியூஸ் மிகவும் சந்தோஷப் பட்டார்.

'ஈலியன்களுக்குக் கடன் கொடுத்திருந்த எல்லாரையும் விடியலில் எங்கள் அறிவிப்பாளர்கள் அழைத்தார்கள். பைலோஸில் இருந்த எங்கள் தலைவர்கள் ஒன்றுகூடி கொள்ளைப் பொருள்களைப் பங்கிட்டுக் கொண்டார்கள். எங்களில் பலருக்கு நஷ்ட ஈடு தருவதாகவும் ஈலியன்கள் ஒப்புக் கொண்டனர். உண்மையில்

சொல்லப்போனால், அந்த நேரத்தில் பைலோஸில் நாங்கள்தான் பலவீனமான சூழ்நிலையில் இருந்தோம். காரணம், கடந்த காலத்தில் பலவானான ஹெராக்லியஸ் வந்து அவனால் முடிந்த அளவு பேரழிவை எங்களுக்கு ஏற்படுத்திச் சென்றிருந்தான். எங்களில் தலை சிறந்த வீரர்கள் அனைவரும் கொல்லப் பட்டிருந்தனர். இணையற்ற நீலியூஸுக்குப் பிறந்த பன்னிரண்டு மகன்களில் நான் மட்டும்தான் தப்பிப் பிழைத்திருந்தேன். மற்ற அனைவரும் இறந்துவிட்டிருந்தனர். அதன் விளைவாக, திமிர் பிடித்த ஈலியன் வீரர்கள் எங்களை அடிக்கடி அவமானப்படுத்திக் கொண்டிருந்தார்கள். எங்களைக் கொள்ளையும் அடித்து பெரும் அநீதி இழைத்துக் கொண்டிருந்தார்கள்.

'ஆனால் எனது தாக்குதலுக்குப் பிறகு, வயதில் முதிர்ந்த தலைவன் நீலியூஸுக்கு, கால்நடைகளும் ஆட்டு மந்தைகளும் கொள்ளைப் பொருள்களாகக் கிடைத்திருந்தன. அதில் முன்னூறை மேய்ப்பர்களோடு சேர்த்து அவன் தனக்காக வைத்துக் கொண்டான். விஷயம் என்னவென்றால், ஈலியன்கள் அவனுக்கு ஒரு நல்ல நஷ்ட ஈட்டைக் கொடுத்திருந்தார்கள். ஏனெனில், ஈலியன்களின் விளையாட்டுப் போட்டிகளில் கலந்து கொண்டு ஒரு முக்காலியைப் பரிசாகப் பெறுவதற்காக, நான்கு குதிரைகள் பூட்டப்பட்ட ஒரு தேரை நீலியூஸ் ஈலிஸுக்கு அனுப்பியிருந்தார். ஆனால் அவர்களின் தலைவனான ஆகியஸ் அந்த குதிரைகளை அபகரித்துக் கொண்டு வெறும் தேரை மட்டும் திருப்பி அனுப்பினான். அதோடு அவமானப் படுத்துமாறு ஒரு செய்தியையும் சேர்த்தனுப்பினான். ஆகியஸின் செயல்களைப் போலவே அவனுடைய அவமானப்படுத்தும் வார்த்தை களையும் நீலியூஸ் வெறுத்தார். இப்பொழுது அவர் மனம் மகிழ கொள்ளைப் பொருட்களை அதனால்தான் எடுத்துக் கொண்டார். மீதி இருந்தவற்றில் இருந்து அனைவருக்கும் வேண்டிய பொருட்கள் கிடைக்குமாறு பிரித்துக் கொடுக்கச் செய்தார்.

'நாங்கள் பைலோஸில் இதையெல்லாம் செய்துகொண்டு, கடவுள்களுக்கு வேண்டிய பலிகளை ஊருக்குள் கொடுத்துக் கொண்டும் இருந்தோம். ஆனால் மூன்றாவது நாளன்று, எங்களைத் தாக்கத் தேர்கள், காலாட்படைகள் என ஈலிஸ் முழுக்க திரண்டு விரைவாக வந்தது. அவர்களோடு அப்போது சிறுவர்களாகவும் போர் அனுபவம் இல்லாதவர்களாகவும் இருந்த இரண்டு மோலியோனிஸ்களும் வந்தனர்.

'மணல் நிறைந்த பைலோஸின் எல்லைகளில், அல்ஃபீசியஸ் ஆற்றைப் பார்த்தவாறு அமைந்திருந்த ஒரு மலையின் உச்சியில் த்ரியோசா என்ற ஒரு கோட்டை இருந்தது. அதை அழிக்க வேண்டும் என்பதே அவர்களது நோக்கமாக இருந்தது. எனவே அவர்களதை முற்றுகையிட்டு அதைச் சுற்றியிருந்த சமவெளியை வளைத்தனர். ஆனால் இரவில் ஒலிம்பஸ் மலையில் இருந்து இறங்கி விரைந்து வந்த அதீனி போருக்கு ஆயத்தமாகும்படி எங்களை எச்சரித்துவிட்டுச் சென்றாள். போரில் ஈடுபட விருப்பமில்லாதவர்களாக அவள் எங்களைக் காணவில்லை. பைலோஸில் அவள் எழுப்பிய முழுப்படையும் போர் செய்வதில் மும்முரமான ஆர்வம் கொண்டதாகவே இருந்தது. ஆனால் நான் ஆயுதம் தரித்து, சண்டையிடச் செல்வதை நீலியூஸ் விரும்பவில்லை. தீவிரமான போரைப் பற்றி எனக்கு அதிகமாகத் தெரியாதென்று அவருக்குத் தெரியும். எனவே என் குதிரைகளை அவர் மறைத்து வைத்துவிட்டார். ஆனால் நான் கால்நடையாகவே போருக்குச் சென்றாலும், தேரில் சென்றவர்களைவிட அதிகமான புகழை நான் அடையும்படி அதீனி செய்தாள்.

'அரீனிக்கு அருகில் கடலுடன் கலக்கும் மினியூஸ் என்ற ஒரு நதி உள்ளது. எங்கள் தேரோட்டிகள் இங்குதான் வெளிச்சமான விடியல்வரை காத்திருந்தனர். இதற்கிடையில் காலாட்படையினர் வந்து சேர்ந்தனர். அங்கிருந்து நாங்கள் அணிவகுத்துச் சென்று பகல் நேரத்தில் புனித ஆல்ஃபியூஸ் ஆற்றை அடைந்தோம். அங்கு நாங்கள் தந்தை ஜீயூஸுக்கு அருமையான எல்லைப்புற பலி கொடுத்தோம். அதோடு, நதிக்கடவுளுக்கு ஒரு மாடும், பொசைடனுக்கு ஒரு மாடும், சாம்பல் நிறக்கண்ணாள் அதீனிக்கு வேலை வாங்கப்படாத ஒரு கன்றையும் பலி கொடுத்தோம். எங்கள் எல்லாப் படைப்பிரிவினரும் பலி மிருகங்களை உண்டோம். அந்த ஆற்றங்கரை ஓரமாக அன்றிரவு தங்கினோம். நாங்கள் ஒவ்வொருவரும் முழுமையான ஆயுத பாணியாக இருந்தோம்.

'இதற்கிடையில் தன்னம்பிக்கை மிகுந்த ஈலியன்கள், வீழ்த்திவிடுவது என்ற முடிவோடு த்ரியோசா கோட்டையை முற்றுகையிட ஆரம்பித்தனர். ஆனால் அவர்கள் பயங்கரமான தொரு ஆயுத சாகசத்தைச் சந்தித்தனர். சூரியன் உதிக்க ஆரம்பித்த உடனேயே நாங்கள் ஜீயூஸையும் அதீனியையும் வணங்கி விட்டுப் போர் செய்ய ஆரம்பித்தோம். இரண்டு படைகளும்

சந்தித்தபோது முதல் வீரன் என்னிடம் விழுந்தான். நான் அவனது குதிரைகளை எடுத்துக் கொண்டேன்.

'மூலியஸ் என்ற பெயர் கொண்ட ஒரு ஈட்டியெறி வீரன் அவன். ஆகியஸின் மருமகன். இந்த அகண்ட உலகில் விளைந்த அனைத்து மந்திர மூலிகைகளையும் பற்றி அறிந்த செம்பொன் நிறக் கூந்தலையுடைய் ஆகியஸின் மூத்த மகளான அழகி அகமீடியை மணந்தவன். அவன் என்னை நோக்கி வந்தபோது, எனது வெண்கல ஈட்டியை நான் அவன் மீது எறிந்தேன். உடனே அவன் மண்ணில் வீழ்ந்தான். அவனது தேரில் குதித்தேறி அமர்ந்த நான் படை அணிவகுப்பின் முன்வரிசையில் போய் என்னிடத்தை ஏற்படுத்திக் கொண்டேன். தங்களது தேர்த் தலைவன், தலைசிறந்த போர்வீரன் மண்ணில் மரணித்துக் கிடப்பதைப் பார்த்த தன்னம்பிக்கை மிகுந்த ஈலியன்கள் இங்குமங்கும் வெருண்டோடினர். ஆனால் ஒரு கருப்புப் புயலைப் போல நான் அவர்களைத் துரத்தினேன். ஐம்பது தேர்களைப் பிடித்தேன். அதில் ஒவ்வொன்றிலும் இருந்த இரண்டிரண்டு வீரர்களையும் எனது ஈட்டியால் கீழே தள்ளி மண்ணைக் கவ்வ வைத்தேன். இரட்டையர்களான மொலி யோனிஸ்களையும் கொன்றிருப்பேன், அவர்களுடைய தந்தை யான அகண்ட ஆட்சிகொண்ட பூகம்பக் கடவுளான பொசைடன் அவர்களை திடமான பனிகொண்டு போர்த்தி மறைத்து போர்க்களத்திலிருந்து அப்புறப் படுத்திவிட்டான்.

'ஆமாம், பைலியன்களாக எங்களுக்குப் பெரும் வெற்றியை ஜீயூஸ் கொடுத்தார். திறந்த மைதானத்தில் நாங்கள் அவர்களைத் துரத்தியடித்தோம். வீரர்களைக் கொன்று, அவர்களது அருமை யான போர்க்கவச உடைகளை எடுத்துக்கொண்டு, புப்ராசியான் நிலங்கள்வரை நாங்கள் சென்றோம். அப்படியே போய் அலீனிய பாறை மற்றும் அலீசியன் மலை என்றழைக்கப்பட்ட ஒரு இடத்தை அடைந்தோம். அந்த இடத்தில் எங்கள் படைகளை அதீனி திருப்பி அனுப்பினாள். அங்குதான் நான் கடைசியாக ஒரு வீரனைக் கொன்று விட்டுவந்தேன். புப்ராசியானில் இருந்து எங்கள் படைகள் திரும்பி பைலோஸுக்குச் சென்றன. கடவுளர்களில் ஜீயூஸுக்கும் மனிதர்களில் நீலியஸுக்கும் புகழ் உண்டாகட்டும் என்று துதி பாடிக்கொண்டே சென்றனர்.

'அப்படிப்பட்டவனாக நான் இருந்தேன் அந்தக் காலத்தில். ஒப்பிட்டுப் பார்த்தால், தனது ஒளிபொருந்திய அறிவின் மூலம்

போரில் நன்மையையும் புகழையும் அடையப் போவது அக்கிலிஸ் ஒருவன் மட்டும்தான். ஆனால் காலதாமதப் படுத்தியதற்காகவும் படையின் பெரும் பகுதி அழிந்து போனதற்காகவும் வருந்தி அவன் பல கண்ணீர்த்துளிகளைச் சிந்த வேண்டியுள்ளது.

'எனதருமை நண்பனே, பித்தியாவில் இருந்து அகமெம்னனோடு போய் சேர்ந்துகொள் என்று உனது தந்தை மெனீட்டியஸ் உன்னை அனுப்பியபோது உனக்கு அறிவுரைகள் சொல்லியிருந்தான். நானும் கடவுளையொத்த ஒடிஸியூஸும் அப்போது அந்த வீட்டில் இருந்தோம். அவர் உனக்குச் சொன்ன அனைத்தையும் நாங்கள் கேட்டோம். செல்வ வளம் கொழித்த அகேயாவில் இருந்து படைக்கு ஆளெடுப்பதற்காக, பித்தியாவுக்கும் அக்கிலிஸின் தந்தை பீலியூஸின் அரண்மனைக்கும் நாங்கள் வந்திருந்தோம். அங்கேதான் நாங்கள் வீரர்களான மெனீட்டிய ஸோடு அக்கிலிஸையும் உன்னையும் பார்த்தோம். வயது முதிர்ந்த தேரோட்டியான பீலியூஸ் ஓர் எருதின் கொழுத்த தொடைகளை அவரது லாயத்தில் வைத்து இடிமுழக்கத்தில் மகிழும் ஜீயூஸைக் கௌரவப் படுத்தும் பொருட்டு வைத்து எரித்துக்கொண்டிருந்தார். அவரது கையில் ஒரு தங்கக் கோப்பை இருந்தது. கடவுளுக்குப் படைக்கப்பட்ட பானமான மின்னும் மதுவை அவர் அதில் ஊற்றிக்கொண்டிருந்தார். பலிப்பொருள் கள் எரிந்து கொண்டிருந்தபோது, நீங்கள் இருவரும் சாப்பிடத் தயாராக இருந்தீர்கள்.

'அப்போது நானும் ஒடிஸியூஸும் வாயில் கதவருகில் வந்தோம். ஆச்சரியமடைந்த அக்கிலிஸ் உடனே எழுந்தான். எங்களைக் கைகொடுத்து உள்ளே அழைத்து சென்றான். எங்களை அமரச் சொல்லி விருந்தோம்பும் விதமாக உணவைக் கொணரச் செய்தான். எங்களது பசியையும் தாகத்தையும் நாங்கள் தணித்துக் கொண்ட பிறகு, நான் பேசினேன். உன்னையும் அக்கிலிஸையும் எங்களோடு சேர்ந்துகொள்ளச் சொல்லி வேண்டினேன். உங்களுக்கு மிகவும் விருப்பமாகவே இருந்தது. உங்கள் தந்தைகள் உங்களுக்கு அறிவுரைகள் சொல்ல ஆரம்பித்தனர். எல்லாரைவிட சிறப்பாகவும் வீரமுடனும் செயல்பட வேண்டும் என்று அக்கிலிஸின் தந்தை வயதில் முதிர்ந்தவரான பீலியூஸ் சொன்னார். மெனீட்டியூஸ் உனக்கு அறிவுரைகள் சொன்னார். 'மகனே, உன்னைவிட உயர்வான குடும்பத்தில் பிறந்தவன்

அக்கிலிஸ். உன்னைவிட உறுதியானவனும் அவனே. ஆனால் அவனைவிட நீ வயதில் மூத்தவன். நீதான் அவனுக்கு உகந்த அறிவுரைகள் கூறவேண்டும். அவனுக்கு உகந்த ஒரு வழியைக் காட்டி அதில் அவன் சென்று புகழீட்ட வழி செய்ய வேண்டும்.'

'உனது வயது முதிர்ந்த தந்தையின் வார்த்தைகள் அவைதான். ஆனால் நீ அவைகளை மறந்து விட்டாய். இருந்தாலும், நீ போர்த்திறம் மிக்க அக்கிலிஸுக்கு இப்பொழுதும் எடுத்துச் சொல்ல முடியும். நீ சொல்வதை அவன் கேட்கிறானா என்று பார்க்கலாம். யாருக்குத் தெரியும்? தெய்வீக உதவி கொண்டு, நீ சொல்லும் வார்த்தைகள் அவன் மனதை மாற்றலாம். ஒரு நண்பன் சொல்லும் அறிவுரைகள் பெரும்பாலும் நல்ல விளைவு களையே ஏற்படுத்தும். ஆனால் ஏதாவது தீர்க்க தரிசனத்தின் பொருட்டோ அவனது அம்மா ஜீயூஸிடம் கேட்டுக் கொண்டதற்கு ஜீயூஸ் சொன்ன பதிலாலோ அவன் தனிப்பட்ட முறையில் தடுக்கப்பட்டிருந்தால், அவனது இடத்தை நீ ஏற்றுக்கொண்டு போர் செய்யவாவது அவனது அனுமதியைக் கேள்.

'உன் பின்னால் மிர்மிடன் படைப்பிரிவினர் இருக்கட்டும். உன்னால் கிரேக்கர்களுக்கு விமோசனம் கிடைக்கலாம். அக்கிலிஸ் தனது அருமையான போருடையை உனக்குத் தரட்டும். ட்ரோஜன்கள் அப்போது நீதான் அவன் என நினைத்துக் கொண்டு போரை நிறுத்திவிடலாம். களைப்படைந்துள்ள நமது வீரர்களுக்கு அது மூச்சுவிட நேரம் கொடுக்கும். போர் என்றாலே ஓய்வு மிகவும் குறைவுதானே? களைப்படையும்வரை ட்ரோஜன் களும் சண்டையிட்டு விட்டார்கள். ஆனால் நீ இப்பொழுது புதிதாக இருக்கிறாய். நமது பாசறைகளில் இருந்தும் கப்பல்களில் இருந்தும் அவர்களைத் துரத்துவது உனக்கு எளிது.'

அவன் அப்படிப் பேசியதும் அவனுடைய வார்த்தைகள் நேரடியாக பெட்ரோக்குலஸின் இதயத்துள் சென்றன. உடனே அவன் கப்பல்கள் இருந்த பகுதியைத் தாண்டி அக்கிலிஸைப் பார்க்க ஓடினான். கடவுளையொத்த ஒடிஸியூஸின் கப்பல்களைத் தாண்டி அவன் சென்றபோது அங்கேதான் அவர்கள் கூட்டங்கள் போடுவது, பொதுக்காரியங்களில் ஈடுபடுவது, கடவுள்களுக்குப் பலி பீடங்கள் அமைப்பது போன்ற காரியங்களைச் செய்து வந்தனர். தொடையில் குத்திய அம்பினால் ஏற்பட்ட காயத்தால் நொண்டிக் கொண்டே வந்த யூரிபைலஸ் அவனைச் சந்தித்தான்.

அவனது தலையிலிருந்தும் தோள்களிலிருந்தும் வியர்வை வழிந்தது. வேதனை தந்துகொண்டிருந்த அவனது காயத்திலிருந்து ரத்தம் பொங்கி வந்து கொண்டிருந்தது. ஆனால் அவனது மனம் அதனால் பாதிக்கப்படவில்லை. அவனைப் பார்த்ததும் உறுதியான பெட்ரோக்குலஸிடம் பரிவு பிறந்தது. அவனைப் பார்த்து துக்கத்தோடு இவ்வார்த்தைகளைப் பேசினான்:

'கிரேக்கத் தலைவர்களும் ஆட்சியாளர்களும் பரிதாபத்துக்குரியவர்கள். உன் பிரியமானவர்களிடமிருந்தும் உனது தந்தையர் நாட்டிலிருந்தும் வெகு தூரத்தில் நீ இருக்க வேண்டிய சூழ்நிலையில், வேகமாப் பாய்ந்த ட்ராய் நகரத்து நாய்களுக்கு உன் வெள்ளைச் சதையைத் தெவிட்டுமளவுக்கு உண்ணக் கொடுக்க வேண்டி வந்தது போலும். இருக்கட்டும் யூரிபைலஸ், இருக்கட்டும், ஆனால், மரியாதையையும் பயத்தையும் ஏற்படுத்தும் ஹெக்டரை நிறுத்தி வைக்க முடியும் எனும் நம்பிக்கை நல்கும் உபாயம் ஏதேனும் இருக்கிறதா? அல்லது இன்று அவனது ஈட்டிக்கு கிரேக்கர்கள் அனைவரும் பலியாகி அழிந்து போவாரா?'

காயம்பட்ட யூரிபைலஸ் சொன்னான்:

'ஒலிம்பஸ் மலை பிறந்த பெட்ரோக்குலஸ், இப்போதைக்கு கிரேக்கர்களுக்கு எந்தவித விமோசனமும் இல்லை. அவர்களின் கருப்புக் கப்பல்களின் அருகிலேயே அவர்களும் வீழ்ந்து மடிவார்கள். நமது முன்னால் தலைவர்களெல்லாம் ஏற்கெனவே அங்கேதான் கிடக்கிறார்கள். ட்ரோஜன் ஏவுகணைகளால் தாக்கப்பட்டோ ஈட்டியால் குத்தப்பட்டோ. நேரம் செல்லச் செல்ல, எதிரி மேலும் மேலும் பலமடைந்து கொண்டே போகிறான். ஆனால் என் கப்பலுக்கு என்னைப் பாதுகாப்பாக கொண்டுபோய்ச் சேர்க்க உன்னால் முடியும். பிறகு என் தொடையில் தைத்துள்ள அம்பை நீ வெட்டி எடுக்கலாம். வெதுவெதுப்பான நீரில் என் ரத்தத்தைக் கழுவலாம். காயத்தைச் சுற்றி இதமான மூலிகைகளை இடலாம். செண்டார்களிலேயே மிகவும் நேர்மையானவனான கீரானிடமிருந்து அக்கிலிஸ் கற்றுக்கொண்ட அருமையான கலையில் இருந்து நீ பெற்றுக் கொண்டதுதானே அது! நமது வைத்தியர்களான போடலீரியஸ் மற்றும் மெக்கேயான் ஆகியோரில் ஒருவர் காயம்பட்டு முகாமில் கிடக்கிறார் என்று நினைக்கிறேன். அவருக்கே இப்பொழுது ஒரு வைத்தியர் தேவை. இன்னொருவர் இன்னும் ட்ரோஜன்களின்

மூர்க்கமான தாக்குதலை எதிர்த்துக் களத்தில் போராடிக் கொண்டிருக்கிறார்.'

மெனீட்டியஸின் உறுதியான மகன் பதில் சொன்னான்:

'இந்தச் சூழ்நிலை நமக்கு எப்படி ஏற்பட்டது? நாம் இப்பொழுது என்ன செய்வது யூரிபைலஸ்? நான் போர்த்திறம் மிக்க அக்கிலிஸைப் பார்த்து அவனிடம் கிரேக்கர்களின் காவலனும் கிரேக்கத் தேரோட்டியுமான நெஸ்டரிடமிருந்து ஒரு செய்தியைச் சொல்லப் போய்க்கொண்டிருக்கிறேன். ஆனாலும் நான் உன்னை இங்கு விட்டுவிட்டுப் போகமாட்டேன்.'

இவ்விதமாகப் பேசிய பெட்ரோக்குலஸ் யூரிபைலஸின் இடுப்பில் கை கொடுத்து அணைத்தவாறு அந்த மக்கள் மேய்ப்பனை அவனது பாசறைக்கு அழைத்துச் சென்றான். யூரிபைலஸின் உதவியாளன் அதைப் பார்த்தபோது, உடனே பதப்படுத்தப்பட்ட மிருகத்தோல் விரிப்புகள் சிலவற்றைத் தரையில் விரித்து வைத்தான். அதில் அவனை பெட்ரோக்குலஸ் உட்கார வைத்தான். தனது கத்தியை எடுத்து அதனால் தொடையின் உள்ளே குத்தியிருந்த அம்பின் கூர் முனையை வெட்டி எடுத்தான். பொங்கி வந்த கருப்பு ரத்தத்தை வெதுவெதுப்பான தண்ணீரால் கழுவித் துடைத்து சுத்தப் படுத்தினான். பின் ஒரு கசப்பு மூலிகையின் வேரை தன் கைகளால் வெட்டி எடுத்து அதைக் கசக்கி காயத்தின் மீது பிழிந்தான். அது ஒரு நோவகற்றி. அது உடனே தன் வேலையைச் செய்தது. காயம் ஆற ஆரம்பித்தது. ரததப் போக்கு நின்றது.

# காண்டம் - 12



## மதில்சுவரை மூர்க்கமாகத் தாக்குகிறான் ஹெக்டர்

# மதில்சுவரை மூர்க்கமாகத் தாக்குகிறான் ஹெக்டர்

**கதைச்சுருக்கம்**

***வரிகள் 01 – 35***

*எதிர்காலத்தில் கிரேக்கர்களின் மதில்சுவர் கடவுளர்களால் அழிக்கப்படும் என்ற விஷயம் சொல்லப்படுகிறது.*

***வரிகள் 35 – 174***

*தேரைக்கொண்டு ட்ரோஜன்களால் அகழியைக் கடக்க முடிய வில்லை. கால்நடையாகச் சென்று ஒரு தாக்குதல் நடத்தலாம் என்று பாலிடாமஸ் கருத்து கூறுகிறான். ஹெக்டர் ஒப்புக் கொள்கிறான். தேரைக்கொண்டு செல்ல ஆஸியூஸ் செய்த முயற்சி தோல்வியுறுகிறது.*

***வரிகள் 175 – 250***

*கழுகும் பாம்பும் சேர்ந்த ஒரு சகுனக்குறியை அனுப்புகிறான் ஜீயூஸ். ட்ரோஜன்கள் பின்வாங்க வேண்டும் என்று அதற்கு அர்த்தம் என பாலிடாமஸ் விளக்குகிறான். ஆனால் அவனது அறிவுரையை ஏற்க மறுத்துவிடுகிறான் ஹெக்டர்.*

***வரிகள் 251 – 330***

*கிரேக்க மதில்சுவரை ட்ரோஜன்கள் மூர்க்கமாகத் தாக்குகின் றனர். இரண்டு அஜாக்ஸ்களும் அதைப் பலமாகத் தற்காக் கின்றனர். ஒரு தலைவன் செய்ய வேண்டிய கடமைகள் என்ன*

என்பது பற்றி சர்ப்பிடான், க்ளோகஸ் ஆகியோர் விவாதிக்கின்றனர். பின்னர் தம் லிசியன் படையினருடன் சென்று தாக்குகின்றனர்.

**வரிகள் 331 – 435**

டிலமானின் மகனான அஜாக்ஸுும் அம்பெய்வதில் சிறந்த ட்யூஸரும் மெனெஸ்தியூஸின் உதவிக்கு வருகின்றனர். கிரேக்க மதில்சுவரின் ஒரு பகுதியை சர்ப்பிடான் உடைத்துப் போடுகிறான். அஜாக்ஸுும் ட்யூஸரும் அவனை எதிர்க்கின்றனர்.

**வரிகள் 436 – 471**

நடக்கும் விவகாரங்களில் இப்பொழுது ஜீயூஸ் தலையிடுகிறான். கிரேக்கச் சுவரின் ஒரு பகுதியை ஹெக்டர் சின்னாபின்னமாக்குகிறான். கிரேக்கர்கள் திரும்பி ஓட்டமெடுக்கின்றனர்.

# மதில்சுவரை மூர்க்கமாகத் தாக்குகிறான் ஹெக்டர்

காயம்பட்ட யூரிபைலஸை அவனது பாசறையில் வைத்து பெட்ரோக்குலஸ் கவனித்துக் கொண்டிருந்தபோது, வெளியில் கிரேக்கர்களுக்கும் ட்ரோஜன்களுக்கும் இன்னாரோடு இன்னா ரென்றில்லாத பொதுவான சண்டை மூண்டது. கிரேக்கர்கள் வெட்டி வைத்த அகழியும் அதைச் சுற்றிப் பின்னால் இருந்த சுவரும் வெகு நேரத்துக்குத் தாங்காது என்று தோன்றியது.

தங்களுடைய கப்பல்களைப் பாதுகாப்பதற்காக கிரேக்கர்கள் குழியை வெட்டி வைத்தபோதும், அதைச்சுற்றி சுவரைக் கட்டி வைத்த போதும் கடவுளர்களுக்குப் பிடித்தமான முறையில் திருப்படையல்கள் செய்யவில்லை. தம் கப்பல்களுக்கும் அவற்றிலிருந்த ஏராளமான கொள்ளைப் பொருள்களுக்கும் பாதுகாப்பை உறுதிப்படுத்தத் தவறிவிட்டார்கள். நித்தியக் கடவுளர்களின் மகிழ்விணக்கம் இல்லாமல் அந்தச் சுவர் கட்டப்பட்டிருந்தது. எனவே அது தேவையான காலம் வரை நீடித்திருக்கவில்லை.

ஹெக்டர் உயிரோடு இருந்தபோது, அக்கிலிஸ் கோபமாக இருந்தபோது, ப்ரியமின் நகரம் அழிக்கப்படாமல் இருந்த போது, அந்த மகா கிரேக்கச் சுவர் பிழைத்திருந்தது. ஆனால் ட்ரோஜன்களிலும் கிரேக்கர்களிலும் மிகச்சிறந்த வீரர்க ளெல்லாம் செத்து மடிந்த பிறகு, கிரேக்க வீரர்களில் மிகச்சிலரே மிஞ்சியிருந்தார்கள். முற்றுகையிடப்பட்ட பத்தாவது ஆண்டு ப்ரியமின் நகரம் வீழ்த்தப்பட்டது. கிரேக்கப் படையினர் திரும்பவும் தம் கப்பல்களில் வீடுபோய்ச் சேர்ந்த பிறகு, அய்டா மலையிலிருந்து சமுத்திரம் வரை ஓடிவந்த எல்லா நதிகளையும்

பெருக்கெடுத்து ஓடவிட்டு, அந்நதிகளின் ஆற்றல்களை அவிழ்த்துவிட்டு, அச்சுவரைத் தரைமட்டமாக்க பொசைடனும் அப்போலோவும் முடிவு செய்தனர்.

ரீஸஸ், ஹெப்டோபோரஸ், காரீசஸ், ரோடியஸ், க்ரேனிகஸ், ஈசிபஸ் போன்றவை அந்நதிகள். புனித நதிகளின் கரையில் ஏராளமான கேடயங்கள், தலைக்கவசங்களுடன் பாதி தெய்விகத் தலைமுறையின் ஏராளமான போர்வீரர்கள் மடிந்தனர். ஸ்கமாண்டர் மற்றும் சிமாய்ஸ் ஆகிய நதிகள்தான் அவை. அந்த நாள் வந்தபோது ஃபீபஸ் அப்போலோ இந்த எல்லா நதிகளையும் ஒரு முனையில் ஒருங்கிணைத்தான். ஒன்பது நாட்களுக்கு அவற்றின் நீரையெல்லாம் சுவரின் மீது எறிந்தான். அதேசமயம் சுவர் சீக்கிரம் மூழ்கும் படியாகத் தொடர்ந்து மழை பொழியச் செய்தான் ஜீயூஸ். கையில் திரிசூலத்துடன் நிலநடுக்கங்களின் நாயகனான பொசைடன் தானே முன்நின்று வெள்ளத்தைச் சுவரின் திசையை நோக்கிச் செலுத்தினான். மிகுந்த சிரமத்துடனும் கிரேக்கர்களின் அபார உழைப்பிலும் மரத்தாலும் கற்களாலும் எழுப்பப் பட்டச் சுவர் அது. விரைந்து பாயும் ஹெல்லெஸ்பாண்டின்* கரைகளைச் சமப்படுத்தி உருவாக்கப்பட்ட, அஸ்திவார உருப்படிகளெல்லாம் கடலுக்குள் அடித்துச் செல்லப்பட்டன.

சுவர் உடைக்கப்பட்ட பிறகு அந்த இடைவெளியை மறுபடியும் மணலைக் கொண்டு நிரப்பினான். பின் நதிகளைப் பழையபடி திசைமாற்றி அவற்றின் அழகிய ஓடைகள் ஏற்கெனவே ஓடிக் கொண்டிருந்த பாதையில் ஓடவிட்டான்.

ஆனால் இவையெல்லாம் எதிர்காலத்தில் பொசைடனாலும் அப்போலோவாலும் செய்யப்பட வேண்டிய காரியங்களாக இருந்தன. இப்போதைக்குச் சுவர் திடமாகத்தான் நின்று கொண்டிருந்தது. அதைச் சுற்றிப் போரின் சப்தங்கள் யாவும் எழுந்தபடி இருந்தன. எதிரிகளின் ஏவுகணைகள் மரத்தால்

---

* ஹெல்லெஸ்பாண்ட் என்பது மர்மரா கடலையும் ஆகியன் கடலையும் இணைக்கும் ஜலசந்தி. தெஸ்ஸாலி நாட்டின் மன்னன் அதாமாஸ் என்பவனின் மகள் ஹெல்லெஸ் என்பவள் தன் மாற்றாந்தாயிடமிருந்து தப்பித்துப் போகும்போது இதில் விழுந்து இறந்ததாகவும் அதிலிருந்து இதற்கு இப்பெயர் ஏற்பட்டதாகவும், லியாண்டர் என்ற புராணக் கதாநாயகன் தன் காதலி ஹீரோ என்பவளைப் பார்ப்பதற்காக ஒவ்வோர் இரவும் நீந்தி வந்ததும் இதில்தான் என்றும் புராணம் கூறுகிறது.

செய்யப்பட்டப் பொருள்களின் மீது பட்டு எதிரொலித்துக் கொண்டு இருந்தன. ஜீயூஸின் சாபத்தால் அடங்கி ஒடுங்கிப் போயிருந்த கிரேக்கர்கள் தத்தம் கப்பல்களின் அருகில் ஆட்டு மந்தைபோல் அடைபட்டுக் கிடந்தார்கள். உறுதியான தலைவ னான ஹெக்டர் முன் வரிசையில் நின்று புயல் போலப் போரிட்டுக் கொண்டிருந்தான். அவன் ஏற்படுத்திக் கொண் டிருந்த பேரழிவுக்கு அஞ்சிக் கிடந்தனர் கிரேக்கர்கள்.

வேட்டை நாய்கள் அல்லது வேட்டைக்காரர்கள் மத்தியில் மாட்டிக் கொண்ட காட்டுப் பன்றி அல்லது சிங்கம் தனது பலத்தை அவர்களிடம் காட்டி எதிர்க்க விரும்பி இப்படியும் அப்படியும் திரும்புகிறது. எதிர்ப்பக்கம் அணிவகுப்பில் நெருக்கமாக இருந்த வீரர்கள் ஒரு சுவரைப் போல அதை எதிர்த்து நின்றார்கள். ஈட்டிகளால் மழைபோல் பொழிந்து தாக்கினார்கள். ஆனாலும் காட்டுப் பன்றியின் துணிச்சலான இதயத்தில் அச்ச மில்லை. ஓடிப்போய்விட வேண்டும் என்ற எண்ணமுமில்லை. அதன் துணிச்சலே அதற்கு எமனாக ஆகிவிடுகிறது. ஒவ்வொரு முறையும் எதிர் அணிவகுப்பின் ஏதாவது ஒரு புதிய முனையைக் குறிவைத்து அது தாக்குகிறது. அது எங்கெல்லாம் பாய்கிறதோ அங்கெல்லாம் அணிகள் பயந்து ஒதுங்கி வழி விட்டு விடு கின்றன.

இதைப்போல, தனது வீரங்கள் மத்தியில் ஹெக்டர் மேலும் கீழும் சென்று வந்தான். அகழியைத் தாண்டுமாறு தன் தேரோட்டிகளை முடுக்கினான். ஆனால் அவனுடைய விரைவுக் குதிரைகளால் கூட அகழியைத் தாண்ட முடியவில்லை. அகழியின் அகலத்தைப் பார்த்து அவை பயந்து போயின. அகழியின் விளிம்பு வரை வந்து அவை, கிரீச்சிட்டுக் கனைத்துக் கொண்டு நின்றன. எந்த வகையிலும் தாண்டுவதற்கு ஒன்றும் எளிதான அகழியல்ல அது. அதன் முழு நீளத்துக்கும் இரண்டு கரைகளும் கவிந்திருந்தன. அதன் மேலே கூர்முனை கொண்ட கழிகள் நெருக்கமாகவும் உறுதியாகவும் நடப்பட்டிருந்தன. எதிரிகளை தூரமாக வைக்க கிரேக்க வீரர்கள் அவைகளை நட்டு வைத்திருந் தனர். ஆகவே, தேரை இழுத்து வரும் எந்தக் குதிரையும் அதை எளிதாகத் தாண்டிச் சென்றுவிட முடியாதபடி இருந்தது.

ஆனால் காலாட்படை வீரர்கள் அகழியைத் தாண்டிவிட வேண்டும் என்பதில் தீவிரமாக இருந்தார்கள். துணிச்சலான ஹெக்டரிடம் சென்று பாலிடாமஸ் சொன்னான்:

'ஹெக்டர்! ட்ரோஜன் வீரர்களே! ஆதரவுப் படைத் தளபதிகளே! இந்த அகழியை நம் தேர்களைக் கொண்டு தாண்ட முயற்சிப்பது அறிவீனமான செயலாகிவிடும். ஏறத்தாழ முடியவே முடியாத காரியம் இது. அதன் ஓரத்தில் கூர்மையான கழிகள் வேறு உள்ளன. அதன் பின்னால் நெருக்கமான கிரேக்கச் சுவர் வருகிறது. தேரோட்டிகளால் கீழே இறங்கவோ சண்டை யிடவோ முடியாது. அந்த இடைவெளி மிகவும் குறுகலானது. அதில் போய் மாட்டிக்கொண்டோமெனில் நிச்சயம் பலபேர் சாக நேரிடும். இடி முழக்கம் செய்யும் ஜீயூஸ் உண்மையிலேயே நமது பக்கம் இருப்பாரேயானால், கிரேக்கர்களுக்குக் கெடுதி நேர வேண்டும் என்று அவர் மனம் விரும்புமேயானால், அவர்கள் அனைவரையும் வழித்துத் துடைத்துவிட விருப்பம் கொண்டிருப் பாரேயானால் அவர்கள் அழிவது நிச்சயம். அப்படி அவர்கள் இங்கேயே, கிரேக்கத்திலிருந்து வெகு தூரத்தில், இருந்த சுவடு தெரியாமல், அழிந்து ஒழிந்து போவர் அதைப் பார்ப்பதைத் தவிர எனக்கு வேறொன்றும் வேண்டாம்.

'ஆனால் தமது கப்பல்களில் இருந்து அவர்கள் ஒன்று திரண்டு மறுபடியும் ஒரு எதிர் தாக்குதல் தொடுப்பார்களேயானால், நாம் அகழியிலும் மாட்டிக் கொண்டோமெனில், நமக்குத்தான் அழிவு. இலியம் நகருக்குத் திரும்பிச் சென்று செய்தி சொல் வதற்கு ஒரேயொரு மனிதன்கூட உயிருடன் இருக்க மாட்டான் என்று நினைக்கிறேன். எனவே, நான் இப்பொழுது சொல்லப் போவதை எல்லாரும் கேளுங்கள். நமது உதவியாளர்கள் நமது குதிரைகளைப் பிடித்துக்கொண்டு அகழியருகில் நிற்கட்டும். நாமனைவரும், பரிபூரணமாகப் போர்க்கவச உடைகள் அணிந் தவர்களாக, ஆயுதம் தரித்தவர்களாக, ஹெக்டரைப் பின்பற்றிக் கும்பலாகச் செல்வோம். கிரேக்கர்கள் விதி ஏற்கெனவே முத்திரை இடப்பட்டிருக்குமானால், அவர்களால் நம்மை எதிர்க்க முடியாது' என்று பாலிடாமஸ் பேசினான்:

அவனது சமயோசித யோசனை அருமையானதாகவே பட்டது ஹெக்டருக்கு. முழுமையான ஆயுதம் தரித்தவனாக அவன் தன் தேரிலிருந்து கீழே குதித்தான். ஹெக்டர் கீழே குதிப்பதைப் பார்த்தவுடன் மற்ற ட்ரோஜன் அணியினரும் அவனைப் பின்பற்றி அவ்விதமே செய்தனர். தேர்களைத் தம் தேரோட்டி களின் பொறுப்பில் விட்டனர், குதிரைகளை ஒழுங்காகவும் தயாராகவும் அகழியருகில் வைத்திருக்கும்படி உத்தரவிட்டு

விட்டு அவர்களும் கீழே குதித்தனர். உள்ளே இறங்கிய அவர்கள் குழுக்களாகப் பிரிந்து தத்தம் தளபதியின் கீழ் ஐந்து படைப் பிரிவாக அணிவகுத்தனர்.

இந்த அணிவகுப்பில் ஹெக்டர் மற்றும் இணையற்ற பாலிடாமஸின் தலைமையின் கீழ் இருந்ததுதான் பெரியதும் தலைசிறந்தது மான அணிவகுப்பாக இருந்தது. ஆனால் சுவரை உடைப்பதிலும் உட்குழிந்த கிரேக்கக் கப்பல்களின் அருகில் சென்று சண்டையிடுவதிலும் யாரும் ஆர்வம் காட்டவில்லை. ஹெக்டரின் தேரோட்டியான செப்ரியோனிஸ் மூன்றாவது தளபதியாக இருந்தான். (அவனைவிட அந்தஸ்த்தில் குறைந்தவனைத் தேரை கவனிக்கும்படிச் சொல்லி செப்ரியோனிஸை ஹெக்டர் விடுவித்திருந்தான்).

பாரிஸ், அல்கடோஸ், அகீனர் ஆகியோரின் தலைமையில் இரண்டாவது படைப்பிரிவு இருந்தது. மூன்றாவது படைப் பிரிவு ப்ரியமின் இரண்டு மகன்களான ஹெலீனஸ் மற்றும் கடவுளையொத்த டெய்ஃபோபஸ் ஆகியோரின் தலைமையில் இயங்கியது. இதோடு மூன்றாவது தலைவனாக ஆசியஸ் இருந்தான். செல்லிஸ் ஆற்றிலிருந்தும் அரிஸ்பியிலிருந்தும் அவனை அவனது பெரிய நேர்த்தியான குதிரைகள் கொண்டு வந்து சேர்த்திருந்தன. நான்காவது படைப்பிரிவுக்கு ஈனியாஸ் தலைமை தாங்கினான்.' அவனுக்குத் துணையாக எல்லா விதமான போர் அனுபவங்களும் பெற்ற ஆன்ட்டினரின் இரண்டு மகன்களான ஆர்க்கிலோகஸ் மற்றும் அகாமாஸ் ஆகியோர் இருந்தனர்.

புகழ்பெற்ற ஆதரவாளர்களின் ஐந்தாவது படைப்பிரிவுக்கு சர்ப்பிடான் தலைமை ஏற்றான். அவர்களில் தனக்கு அடுத்தபடியாக சந்தேகத்துக்கு இடமின்றித் தலைசிறந்த போர் வீரர்கள் என்று அவன் கருதிய க்ளாகஸ் மற்றும் அஸ்ட்ரோபீயஸ் ஆகியோரை நியமித்தான். எனினும் அவர்கள் அனைவரிலும் மிகச்சிறந்த போர்வீரனாக அவனே இருந்தான். அவர்கள் அனைவரும் நெருக்கமாக அணிவகுத்தனர். எருதுத் தோலால் செய்யப்பட்ட அவர்களது கேடயங்கள் ஒன்றையொன்று தொட்டுக் கொண்டிருந்தன. எதிரிக் கப்பல்களைத் தாக்குவதில் இருந்து அவர்களைத் தடுப்பது எதுவுமில்லை என்ற நம்பிக்கையோடு உறுதியான அவர்கள் கிரேக்கர்களை நோக்கி முன்னேறினார்கள்..

ட்ரோஜன்களிலும் அவர்களது ஆதரவுப் படைப்பிரிவினரிலும் வியப்புக்குரிய பாலிடாமஸ் சொன்ன யுத்த தந்திரங்களை அனைவரும் பின்பற்றினர், ஹிர்டாகஸின் மகன் ஆசியஸைத் தவிர. ஆனால் மக்கள் தளபதியாகிய ஆசியஸ் தன் தேரையும் தேரோட்டியையும் விட்டுவிட்டு வரும் கருத்தை ஏற்கவில்லை. பதிலாக, எல்லாவற்றோடும் கப்பல்களை நோக்கிப் போவது என்று முடிவெடுத்தான். அவன் ஒரு முட்டாள். மரணப் பேய்களை ஏமாற்றிவிட்டு, காற்று வீசும் இலியத்துக்குத் தன் தேர் மற்றும் தேரோட்டிகளுடன் வெற்றியோடு திரும்ப முடியாத படிக்கு அவன் விதிக்கப் பட்டிருந்தான். உயர்ந்த குலத்தில் பிறந்த இடொமீனியஸின் ஈட்டி வழியாக வெறுக்கத்தக்க விதி அவனைச் சூழ்ந்திருந்தது.

கப்பல்களின் இடப் பக்கமாகத் தன் தேரை ஓட்டி வந்தான் ஆசியஸ். சமவெளியில் இருந்து கப்பல்களுக்குத் திரும்ப கிரேக்கர்கள் அங்கே ஒரு இணைப்புப் பாதை வைத்திருந்தனர். அங்கே தன் தேரையும் குதிரைகளையும் ஓட்டிச் சென்றான் ஆசியஸ். வாயில் கதவருகில் வந்தவன் அது மூடப்படாமல் இருப்பதைப் பார்த்தான். நீளமான தாழும் போடப்படாமல் இருந்தது. போர்க்களத்திலிருந்து தப்பித்து வருபவர்கள் உடனே கப்பல்களைச் சென்றடைவதற்காக, தற்காப்பு வீரர்கள் அந்த வழியை மூடாமல் வைத்திருந்தனர். அதன் வழியாக ஆசியஸும், உச்சஸ்தாயியில் வீரமுழக்கம் செய்துகொண்டு அவனது படையினரும் உள்ளே புகுந்தனர். கிரேக்கர்களால் அவர்களை நிறுத்த முடியாது என்றும் கப்பல்களின் அருகிலேயே அவர்களைக் கொன்று போட்டுவிடலாம் என்றும் அவர்கள் நினைத்தனர்.

முட்டாள்கள். போர்த்திறம் மிக்க லாபித்* இனத்தின் பெருமை மிகு மகன்களான இரண்டு வீரமுதல்வர்களை அவர்கள் வாயில் கதவருகில் சந்தித்தனர். பெய்ரிதூஸின் மகன் பலவானான பாலிபீட்டிஸ் அவர்களில் ஒருவன். இன்னொருவன் லார்ட்டியூஸ். கொலை பாதக போர்க்கடவுள் ஏரிஸுக்கு இணை

---

லாபித்துகள் என்பவர்கள் கிரேக்கத்தின் வடக்குப்பகுதியான தெஸ்ஸாலியில் வாழ்ந்த மக்களாவர். சென்ட்டார்கள் என்று சொல்லப்பட்ட மனித முகமும் இடுப்புக்குக் கீழே குதிரை உருவமும் கொண்டவர்களோடு செய்த சண்டைக்காக பிரபலமானவர்கள்.

யானவன். உறுதியான, நீளமான வேர்களின் ஆதரவில் மழையை யும் காற்றையும் எதிர்த்து நிற்கும் உயர்ந்த மலைமீதிருக்கும் கருவாலி மரங்களைப் போல உயர்ந்து நின்ற மதிலருகில் போய் நின்றது இந்த ஜோடி. தம் ஆயுதங்களின் வலுவைச் சார்ந்து நின்ற அந்த இருவரும் மகா ஆசியஸின் கடும் தாக்குதலுக்காக, பின்வாங்காது காத்து நின்றனர். தலைவன் ஆசியஸ், அவனது மகன் அடாமஸ், அயமீனஸ், ஓரிஸ்டஸ், தூன் மற்றும் ஈனோ மாஸ் ஆகியோருடன் ட்ரோஜன் வீரர்கள் தங்கள் மிருகத்தோல் கேடயங்களுடன் பேரொலி எழுப்பிக் கொண்டு அணிவகுத்து நின்று மதிலை நோக்கிச் சென்றனர்.

இரண்டு லாபித்துகளும் கொத்தளத்துக்குப் பின்பக்கமிருந்த ஆயுதம் தரித்த கிரேக்க வீரர்களைத் தங்கள் கப்பல்களைத் தற்காத்துக் கொள்ளும்படி அங்கிருந்தே கொஞ்ச நேரம் உற்சாகப்படுத்திக் கொண்டிருந்தனர். ஆனால் ட்ரோஜன்கள் மதிலைத் தாக்குவதையும் கிரேக்கர்களிடமிருந்து ஓலம் எழும்பு வதைக் கண்டவுடன், அவர்களால் பொறுக்க முடியவில்லை. பேரொலி எழுப்பி வரும் மனிதர்கள் மற்றும் நாய்களின் கும்பலைக் கண்டவுடன் பாய்ந்து தாக்கும் மலை வாழ் ஆண் காட்டுப் பன்றிகளைப் போல உடனே மதிலின் முன்பக்கமாகச் சென்று அவர்கள் தாக்கத் தொடங்கினர்.

கடைசியாக யாருடைய ஈட்டியினாலோ தாக்கப்பட்டு கொல்லப்படும்வரை அக்காட்டுப் பன்றிகள் மின்னல் வேகத்தில் தாக்கிக் கொண்டும், தங்களுக்குக் கீழே வளர்ந்திருப்பதை யெல்லாம் வேரோடு பிடுங்கிக் கொண்டும், நசுக்கிக் கொண்டும், பற்களை நரநரவெனக் கடித்துக் கொண்டும் இருக்கும். அதைப் போல இந்த ஜோடியின் நெஞ்சின் மீதிருந்த பளபளப்பான வெண்கலம் எதிரிகள் தாக்கியபோது சப்தித்தது. தங்களுடைய பலத்திலும், மதில்சுவர் மீதிருந்து தங்கள் உயிர்களையும் பாசறைகளையும் கப்பல்களையும் காப்பாற்ற கீழே கற்களை வீசிக்கொண்டிருந்த வீரர்கள்மீதும் நம்பிக்கை கொண்டு கிரேக்கர்கள் பலமான எதிர்தாக்குதல் செய்தனர். உறைபனிப் புயலின்போது, சிதறி வரும் பனிச்செதில்களைப் போலப் பாறைகள் மேலிருந்து தரைக்கு உருண்டு வந்தன. காற்று மேகங்களை விரைந்தோட வைக்கும்; வள்ளல் தன்மை கொண்ட பூமிக்கு மேகம் போர்வை போர்த்தும். அதைப்போல, பாறைகள் கிரேக்கர்களிடமிருந்தும் ட்ரோஜன்களிடமிருந்தும் வீசப்பட்டு

பறந்து வந்தன. அந்த பெரிய பாறைகள் மோதியபோது தலைக் கவசங்களும் மேல்பக்கம் புடைத்திருந்த கேடயங்களும் பலத்த ஒலியெழுப்பின.

ஆசியஸ் முனகினான். எரிச்சலான மனவேதனையில் தொடை களைத் தட்டிக்கொண்டு பேசினான்:

'தந்தை ஜீயூஸ், நீ ஒரு பரிபூரணமான பிறவிப் பொய்யன். எங்கள் உறுதிக்கும் வெல்லமுடியாத பிடிவாதத்துக்கும் முன்னால் அந்த கிரேக்க வீரர்கள் தடையாக நிற்பார்கள் என்று நான் நினைக்க வில்லை. நெகிழ்வான இடுப்பு கொண்ட குளவிகள் அல்லது தேனீக்கள் பாறை வழியில் தம் வீடுகளை அமைத்துக் கொள் ளும். அவைகளின் கூட்டை விட்டு அவற்றை விரட்டவே முடி யாது. அவைகள் அங்கேயே இருந்து தமது குழந்தைகளைக் கொல்ல வரும் வேட்டைக்காரர்களை எதிர்த்துத் தற்காத்து நிற்கும். அதைப்போலல்லவா இந்த இரண்டு கிரேக்கர்களும் மதில் வாயிலில் கொல்வோம் அல்லது கொல்லப்படுவோம் என்ற ரீதியில் நின்றுகொண்டிருக்கிறார்கள்!' என்று அவன் பேசினான்.

ஆனால் அவனுடைய சொற்கள் ஜீயூஸின் மீது எந்த பாதிப்பையும் ஏற்படுத்தவில்லை. ஹெக்டருக்குப் பெரும் புகழைக் கொடுக்க அவன் தன் மனத்தில் முடிவு செய்திருந்தான். இதற்கிடையில் மற்ற ட்ரோஜன் படைப்பிரிவினர் மற்ற வாயில்களில் சண்டையைத் தொடர்ந்து கொண்டிருந்தனர். ஆனால் என்னவோ ஒரு கடவுளுக்கான திறமைகள் என்னிடம் இருப்பதைப் போல முழுக்கதையையும் சொல்வது எனக்குக் கடினமான காரியம்.

அந்தக் கல்சுவர் நீளத்துக்கும் கடுமையான நெருப்பு பற்ற வைக்கப்பட்டது. வேறு வழியின்றித் தங்கள் கப்பல்களைக் காக்க கிரேக்கர்கள் கடுமையாகப் போராட வேண்டியிருந்தது. மற்ற எல்லாக் கடவுளர்களும் என்ன செய்வதென்று புரியாத மனமுடைந்த நிலையின் ஆழத்தில் இருந்தனர்.

ஆனால் இங்குதான் அந்த இரண்டு லாபித்துகளும் சண்டையிடச் சென்றனர். பெய்ரிதூஸி மகன் பாலிபீட்டிஸ் தன் ஈட்டியை எறிந்து டமாசஸின் தலைக்கவசத்தின் வெண்கலப் பகுதியைத் தாக்கினான். அந்தத் தலைக்கவசம் அதைத் திருப்பி அனுப்ப வில்லை. ஈட்டியின் நுனி எலும்பினுள் நுழைந்தது. தலைக்கவசத் தின் உள்ளிருந்த அனைத்தையும் அது சிதறடித்தது, அவன்

மூளையையும் சேர்த்து. இவ்விதமான அவன் டமாசஸின் தாக்குதலை ஒரு முடிவுக்குக் கொண்டு வந்தான். அடுத்து அவன் பைலானையும் ஆர்மீனஸையும் கொன்றான்.

இதற்கிடையில் போர்க்கடவுளின் ஆதரவாளனான லியாண்ட்டியூஸ் ஹிப்போமேக்கஸ் மீது ஈட்டியெறிந்தான். அது அவனது இடுப்புக் கச்சில் தாக்கி நிறுத்தியது. பின் தனது கூர்வாளை உறையிலிருந்து எடுத்து, கும்பலில் விரைவாக நுழைந்து ஆன்ட்டிஃபாட்டிஸைத் தாக்கினான். ஆன்ட்டிஃபாட்டிஸ் தூக்கி எறியப்பட்டுத் தரையில் மல்லாக்க விழுந்தான். பின் விரைவாக அடுத்தடுத்து மெனோான், அயமீனஸ் மற்றும் ஏரிஸ்டஸ் ஆகியோரை வள்ளல் தன்மைகொண்ட பூமியில் வீழ்த்தினான் லியாண்ட்டியூஸ்.

இறந்த வீரர்களின் போர்க்கவச உடைகளை இந்த லாபித்துகள் கழற்றிக்கொண்டிருந்தபோது, பாலிடாமஸ் மற்றும் ஹெக்டரின் தலைமையின் கீழ் இருந்த இளம் ட்ரோஜன் வீரர்கள் மேலே செல்வதா வேண்டாமா என்று தயங்கிக்கொண்டு இன்னும் அகழியின் ஓரமாக நின்று கொண்டிருந்தனர். ஆனால் அவர்கள் தான் அமைக்கப்பட்ட படைப்பிரிவுகளிலேயே தலைசிறந்தவர் களாகவும், சுவரை உடைத்து கப்பல்களைத் தீக்கிரையாக்க மிகுந்த ஆர்வம் கொண்டவர்களாகவும் இருந்தனர். அவர்கள் தயக்கத்துக் காரணமில்லாமலில்லை. அவர்கள் தாண்ட முயற்சித்த நேரத்தில், சகுனம் அறிவிக்கும் பறவை ஒன்று தோன்றியது.

வலது பக்கமிருந்து இடமாக ஒரு கழுகு பறந்து சென்றது. அது தனது கூர்நகங்களில் ஒரு ரத்தச் சிவப்பு நிற பாம்பைப் பிடித்திருந்தது. அந்தத் தீக்குறிப் பாம்பு உயிரோடும் கூர்நகங் களில் இருந்து தப்பிக்க கடுமையாக முயன்று கொண்டும் இருந்தது. போராட்ட உணர்வை அது இன்னும் கைவிடாமல் இருந்தது. சுருண்டு திரும்பி தன்னைப் பிடித்திருந்த பறவையின் கழுத்துக்குக் கீழே நெஞ்சுப் பகுதியில் கடித்தது. அந்த வேதனை யில் அந்தக் கழுகு பாம்பைப் பிடித்திருந்த பிடியை விட்டது. பாம்பு கீழே படையினர் மீது விழுந்தது. பேரொலி எழுப்பிக் கொண்டு காற்றோடு காற்றாகப் பறந்து சென்றது கழுகு.

கீழே விழுந்த பாம்பு அவர்கள் மத்தியில் துடித்துக் கொண்டிருந் ததைப் பார்த்து ட்ரோஜன்கள் அதிர்ச்சியடைந்தனர். புயல்மேகங்

களைச் செலுத்தும் ஜீயூஸ் அனுப்பிய ஒரு சகுனக்குறி அது என்றெண்ணினர். துணிச்சலான ஹெக்டர் இருந்த இடம்வரை சென்ற பாலிடாமஸ் சொன்னான்:

'ஹெக்டர், நமது சபைகளில் நான் என்ன சொன்னாலும் அதை ஏற்றுக் கொள்ளக் கூடாது என்பதை நீ ஒரு விதியாகவே வைத்திருக்கிறாய். போர்க்களத்திலும் சரி, சபைக்கூட்டங்களிலும் சரி, நீ சொல்வதை ஏற்றுக் கொள்ளாமல் இருப்பது உனது பணிவான பணியாளுக்குக் கொஞ்சமும் உகந்ததல்ல என்று எனக்குத் தெரியும். உனது அதிகாரத்தைத்தான் அவர்கள் மேம்படச் செய்ய வேண்டும். இருந்தாலும் இப்பொழுது மறுபடியும் என் மனம் திறந்து நான் நினைப்பதைச் சொல்லப் போகிறேன்.

நமது எதிரிகளின் கப்பல்கள் இருக்குமிடம்வரை சென்று நாம் சண்டையிடக் கூடாது. அப்படிச் செய்தால் என்ன நடக்கும் என்பதை அறிவோம். அந்த துர்க்குறிப் பறவை மட்டும் பொய் சொல்லாவிட்டால் நம் எண்ணம் நிறைவேறும். நாம் முன்னேறிச் சென்று கொண்டிருந்தபோது, வலப் பக்கமிருந்து இடமாக ஒரு கழுகு பறந்து சென்றது. அது தனது கூர்நகங்களில் ஒரு ரத்தச் சிவப்பு நிற பாம்பைப் பிடித்திருந்தது. அந்தத் தீக்குறிப் பாம்பு உயிரோடு இருந்தது. கழுகு தன் கூட்டுக்குள் செல்லுமுன் அந்தப் பாம்பைக் கீழே போட்டது. தனது கூட்டுக்கு அந்தப் பாம்பை எடுத்துச் சென்று தனது குஞ்சுகளுக்குக் கொடுக்க அதனால் முடியவில்லை. அதே மாதிரி, பயங்கரமான முயற்சிக்குப் பிறகு கிரேக்க வாயிலையும் சுவரையும் உடைப் பதில் நாம் வெற்றி பெற்றுவிட்டாலும், எதிரிகள் நமக்கு வழி விட்டுவிட்டாலும், அந்தக் கப்பல்களிலிருந்து நம்மால் முறை யாகத் திரும்பி வரமுடியாமல் போய்விடும். பல ட்ரோஜன் வீரர்களை நாம் விட்டுவிட்டு வரவேண்டி வரும். கப்பல்களைக் காப்பாற்றுவதற்காகச் சண்டையிடப் போகும் கிரேக்கர்கள் நாம் விட்டுவந்த வீரர்களைக் கொல்வார்கள். சகுனங்களைச் சரியாகப் புரிந்துகொள்ளும் படையினரால் மதிக்கப்படும் ஒரு தீர்க்கதரிசி இதை இப்படித்தான் விளக்குவார்.'

மின்னும் தலைக்கவசம் கொண்ட ஹெக்டர் அவனை முறைத்து விட்டுச் சொன்னான்:

'பாலிடாமஸ், வழக்கத்துக்கு மாறாக நீ பேசியது கொஞ்சமும் சரியல்ல. வேறு ஏதாவது நல்லவிதமாக நினைத்திருக்க முடியும்

என்று உனக்குத் தெரியும். ஆனால் நீ மனதாரத்தான் அப்படிப் பேசினாய் என்றால், கடவுள்களே உன் மூளையைக் குழப்பி விட்டனர் என்றுதான் அர்த்தம். இடிமுழக்கம் செய்யும் ஜீயூஸே என்னிடம் சில வாக்குறுதிகளை அளித்து அவற்றை உறுதியும் செய்திருக்கிறார். அதையெல்லாம் மறக்கும்படி நீ என்னிடம் சொல்கிறாய். அதற்குப் பதிலாக, நீளமான சிறகுகள் கொண்ட பறவைகளை அடிப்படையாக வைத்து நான் செயல்பட வேண்டும் என்றும் சொல்கிறாய். அதிலெல்லாம் எனக்கு நம்பிக்கை இல்லை. உண்மையைச் சொல்லப்போனால், பறவைகள் வலப் பக்கமாக காலைச் சூரியனை நோக்கிப் பறக்கின்றனவா அல்லது மேற்கத்திய இருளை நோக்கி இடப் பக்கமாகப் பறக்கின்றனவா என்பதைப் பற்றியெல்லாம் எனக்கு அக்கறையில்லை. எல்லா மனிதர்களையும் எல்லா கடவுளர் களையும் ஆளும் மகா ஜீயூஸின் நல்லெண்ணத்தில் நமது நம்பிக்கையைப் பொருத்தி வைப்போம்.

'உனது நாட்டுக்காக நீ சண்டையிடு. அதுதான் தலைசிறந்த ஒரே சகுனம். நீ எதற்காகப் போரையும் அதன் அழிவுகளையும் பற்றி அஞ்ச வேண்டும்? கிரேக்கக் கப்பல்களில் நம் வீரர்கள் அனைவரும் கொல்லப்பட்டு விட்டாலும் உனது பாதுகாப்பைப் பற்றி நீ பயப்பட வேண்டியதில்லை. நின்று சண்டையிடும் வீரனல்ல நீ. சொல்லிவிட்டேன், இனி நீ போரிடும் கடமையி லிருந்து பின்வாங்கினாலோ, மற்றவர்கள் போரிடாமல் தடுத்தாலோ நீ உன் உயிரை இழக்க வேண்டிவரும். உனது உயிரை எனது ஈட்டி எடுக்கும்.'

இப்படிச் சொல்லிவிட்டு அகன்ற ஹெக்டரைப் பின் தொடர்ந்து அவனது வீரர்கள் பேரொலி எழுப்பிய வண்ணம் சென்றனர். அய்டா மலைகளிலிருந்து இடியில் மகிழும் ஜீயூஸ் ஒரு புயலை அவிழ்த்துவிட்டான். அது தூசியைக் கிளப்பி கப்பல்களுக்குள் நேரடியாக ஊதியது. கிரேக்கர்கள் குழம்பிப் போயினர். ஹெக்டர் மற்றும் ட்ரோஜன்களில் புகழ் பெருமைப் படுத்தப் பட்டது.

தெய்வீக உதவியிலும் தங்களது பலத்திலும் நம்பிக்கை கொண்டு, மாபெரும் கிரேக்க மதிலை உடைப்பதற்குத் தீர்மானமான முயற்சிகளை மேற்கொண்டனர் அவர்கள். அகழியின் முன் கட்டப்பட்டிருந்த சிறு கைப்பிடிச் சுவர்களைக் காலி செய்தனர். அவற்றை இழுத்துப் போட்டுத் தரைமட்ட மாக்கினர். அச்சுவர்களுக்கு ஆதரவாக கிரேக்கர்கள் பூமியில்

புதைத்து நிறுத்தியிருந்த சுவர் தாங்கிகளை நெம்புகோலினால் உடைத்தெறிந்தனர். இதெல்லாம் செய்தால் மதில் சுவர் முழுவதையுமே உடைத்து விடலாம் என்று அவர்கள் நினைத்தனர். ஆனால் அப்படிச் செய்வதற்கு கிரேக்கர்கள் விடவில்லை. கைப்பிடிச் சுவர்களுக்கு இடையில் இருந்த இடைவெளிகளை அவர்கள் தங்களது எருதுத்தோல் கேடயங்களால் மூடினர். அங்கிருந்துகொண்டே கீழிருந்து மேலேறி வந்த எதிரிகளின் மீது கற்களை எறிந்தனர்.

உத்தரவுகள் கொடுத்துக் கொண்டும், தம் வீரர்களுக்கு வீர உணர்ச்சியை ஊட்டிக் கொண்டுமிருந்த இரண்டு அஜாக்ஸ்களும் மதில் முழுக்க சுற்றித் திரிந்தனர். சிலரை உற்சாகப்படுத்தினர். எல்லா எதிர்ப்புகளையும் கைவிட்டுவிட்ட இன்னும் சிலரைக் கடுமையாகக் கண்டித்தனர்.

'நண்பர்களே, ஒரு படையை உருவாக்க வேண்டுமென்றால் நல்லவர்கள், கெட்டவர்கள், ஆர்வமில்லாதவர்கள் என்றெல்லாம் பார்க்காமல் எல்லா வகையானவர்களையும்தான் சேர்க்க வேண்டியுள்ளது. இன்று உங்கள் ஒவ்வொருவருக்கும் வேலை உள்ளது. உங்களில் யாரும் கப்பல்களுக்குத் திரும்பிச் செல்லக் கூடாது. இது உங்கள் தலைவர்களின் கட்டளை. பதிலாக, முன்னேறிச் செல்ல வேண்டும். எதிரிகளை நேரடியாகத் தாக்க வேண்டும். ஒருவரை ஒருவர் தூண்டிக் கொள்ள வேண்டும். மின்னலின் நாயகனான ஒலிம்பிய ஜீயூஸ் இந்த எதிர்ப்பைச் சந்தித்து எதிரிகளைத் திரும்பவும் அவர்களது ஊருக்கே விரட்ட உதவுவார் என்று நம்ப வேண்டும்.'

இவ்விதமாகப் பேசி இரண்டு அஜாக்ஸ்களும் கிரேக்கர்களைப் போர் செய்யத் தூண்டினார்கள்.

பனி விழுதல் தொடங்கும் பொழுது அறிவுரை வழங்குவதில் ஞானவானாகிய ஜீயூஸ், தனது ஏவுகணைகளை மனிதர்களுக்குக் காட்டுவது போலிருக்கும். பனிப்படலங்கள் ஒரு குளிர்காலப் பகல் பொழுதில் மேலிருந்து விரைவாகவும் தடிமனாகவும் விழ ஆரம்பிக்கும். அப்போது காற்றைத் தூங்க வைத்து விடுவான் ஜீயூஸ். நிற்காமல் பனி விழுந்து கொண்டே இருக்கும். மலை முகடுகள், கடற்கரை நிலக்கூம்புகள், புல்வெளிகள், உழவர்களின் வயல்கள் யாவும் பனியால் போர்த்தப்பட்டிருக்கும். பழுப்புக் கடலின் சிறு கடற்கழிகளும் கடற்கரைகளும்கூட

பனியிலிருந்து தப்புவதில்லை. உருண்டு வரும் அலைகளால் பனியைத் தடுக்க முடிவதில்லை. ஜீயூஸ் அனுப்பும் பனிச்சூறா வளியில் இருந்து எதுவுமே தப்புவதில்லை. கிரேக்கர்கள்மீது ட்ரோஜன்களும் ட்ரோஜன்கள் மீது கிரேக்கர்களும் எறிந்து கொண்ட கற்களும் அதைப்போலவே வந்து விழுந்து கொண் டிருந்தன. ஒரே நேரத்தில் அந்த மதில் சுவரின் முழு நீளத்துக்கும் எறியப்பட்ட பாறைகளால் இடிமுழக்கம்போல் பேரொலி எழும்பிக் கொண்டிருந்தது.

அறிவுரை வழங்குவதில் ஞானவானாகிய ஜீயூஸ் ஆட்டு மந்தைமீது பாயும் சிங்கத்தைப் போல, தனது மகன் சர்ப்பிடானை கிரேக்கர்களுக்கு எதிராக அனுப்பினார் இல்லாவிட்டால், கீர்த்திமிகு ஹெக்டராலோ அவனது ட்ரோஜன் வீரர்களாலோ கோட்டை மதிலின் வாயில் கதவையோ நீண்ட அதன் தாழ்ப் பாளையோ உடைத்திருக்க முடியாது. தனது அருமையான உருண்டை வடிவ கேடயத்தைத் தனக்கு முன் அவன் பிடித்துக் கொண்டிருந்தான். அது கம்மாளர் சம்மட்டியால் அடிக்கப்பட்டு வெண்கலத்தால் வடிவமைக்கப்பட்டிருந்தது. அடுக்கடுக்காக பதப்படுத்தப்பட்ட மிருகத்தின் தோல்களால் பலப்படுத்தப்பட்டு ஒரு தங்க நூலினால் சுற்றிலும் தைக்கப்பட்டிருந்தது அது.

இதை முன்னால் பிடித்துக்கொண்டு, இன்னொரு கையால் இரண்டு ஈட்டிகளைச் சுழற்றிக்கொண்டு, வெகு நாளாக இறைச்சி தேடி அலையும் மலைவாழ் சிங்கத்தைப் போலப் புறப்பட்டான் அவன். கர்வம் மிகுந்த காரணத்தால் அந்தச் சிங்கம் நன்றாகப் பாதுகாக்கப்பட்ட பண்ணை வீட்டுக்குள்ளும் புகுந்து ஆடுகளை உண்ண முயற்சி செய்யும். நாய்கள் மற்றும் ஈட்டிகளுடன் ஆடுகளைப் பாதுகாத்துக் கொண்டு இடையர்கள் இருந்தாலும், முயற்சி செய்யாமல் விரட்டப்படுவதற்கு அதற்கு மனமிருக்காது. காவலையும் மீறிப் பாய்ந்து ஏதாவதொரு ஆட்டைத் தாக்கும்; அல்லது முன்வரிசையில் நிற்கும் ஏதாவதொரு விரைவுக் கையின் ஈட்டியினால் குத்தப்படும். இதேவிதமாக, கடவுளையொத்த சர்ப்பிடனின் துணிச்சலானது மதிலையும் கைப்பிடிச் சுவர்களை யும் உடைக்க வேண்டும் என்று வற்புறுத்தியது. உடனே அவன் ஹிப்பொலோகஸின் மகனாகிய க்ளாகஸைப் பார்த்துச் சொன்னான்:

'க்ளோகஸ், கண்ணியம் என்றவுடன் லிசியாவில் வாழும் நாம் ஏன் முதலில் நினைக்கப்படுகிறோம்? நமது நாட்டுக்கு அப்படி

என்ன பெருமை? ஏன் நம் நாட்டில் மிகச்சிறந்த இறைச்சி கிடைக்கிறது? ஏன் நமது கோப்பைகள் காலியாகவே இருப்ப தில்லை? ஏன் எல்லாரும் நம்மைக் கடவுளர்களைப் போலப் பார்க்கிறார்கள்? சாந்தஸ் ஆற்றின் கரைகளில் ஏன் நாம் அழகான பழத்தோட்டங்களையும் அருமையான கோதுமை வயல்களை யும் கொண்ட மிகப் பெரிய பண்ணையை நிர்வகிக்கிறோம்? லிசியர்களின் முதல் அணிவகுப்பில் நிற்கச் சொல்லி இதெல்லாம் நம்மைச் சொல்கிறது. நாம் அனைவரும் போரின் நெருப்புக்குள் நம்மை எறிந்து கொள்ள வேண்டும். அப்போதுதான் ஆயுதம் தரித்த நமது லிசிய வீரர்கள் நம்மைப் பற்றி இப்படிச் சொல்வார்கள். 'கொழுத்த ஆட்டை உண்டு, சிறந்த இனிய மதுவைக் குடித்து நம்மை ஆளும் இவர்கள் லிசியாவின் கண்ணியக் குறைவான தலைவர்கள் அல்ல. அவர்கள் வெல்ல முடியாதவர்கள். லிசியர்களின் முதல் அணிவகுப்பு வரிசையில் நின்று போர் செய்பவர்கள்.'

'எனது நண்பர்களே, இந்த யுத்தம் முடிந்த பிறகு, நாம் வயதற்ற வர்களாகவும் நித்தியர்களாகவும் மாறிவிடுவோம் என்று நமக்கு நிச்சயமாகத் தெரியுமானல், நான் முன் வரிசையில் நின்று சண்டையிட மாட்டேன். மனிதர்களுக்குப் புகழ் சேர்க்கும் இந்தப் போருக்குப் போகும்படி உங்களைக் கேட்டுக் கொள்ளவும் மாட்டேன். ஆனால் இந்த உலகம் அப்படி இருக்கவில்லை. ஆயிரக்கணக்கான மரணப் பேய்கள் நம் தலைக்கு மேலே உலவு கின்றன. அவற்றிலிருந்து தப்பிக்கவோ அவற்றைத் தவிர்க் கவோ யாராலும் முடியாது. அதனால் நாம் போருக்குப் போவோம். வெற்றியை நாம் வேறு ஒரு மனிதனுக்குக் கொடுத் தாலும் சரி, அல்லது அவன் அதை நமக்குக் கொடுத்தாலும் சரி.'

அப்படி அவன் பேசியதும் க்ளாகஸ் திரும்பிப் பார்க்கவில்லை. அவன் சொன்னதை ஏற்றுக்கொண்டான். ஒரு பெரிய லிசியச் சேனையின் தலைமைப் பொறுப்பில் இருவரும் முன்னே சென்றனர்.

அவர்கள் வருவதைப் பார்த்த மெனெஸ்தியூஸ் நடுநடுங்கினான். அவன் இருந்த கிரேக்கச் சுவர் பகுதியை நோக்கித்தான் அந்த அபாயம் வந்து கொண்டிருந்தது. தனது படைப்பிரிவை யாராவது ஒரு தளபதி அந்த அபாயத்திலிருந்து காப்பாற்ற மாட்டானா என்று தூரத்தில் பார்வையை ஓட்டினான் அவன். போர்ப் பேராசை கொண்ட இரண்டு அஜாக்ஸ்களையும் பார்த்தான். தனது

பாசறையிலிருந்து அப்போதுதான் வந்திருந்த ட்யூஸருடன் அவர்கள் இருவரும் அருகில் நின்று கொண்டிருந்தனர். ஆனால் ஒலியெழுப்பி அவர்கள் கவனத்தைக் கவர்வதென்பது சாத்திய மானதாக இல்லை. சண்டையினால் ஏற்பட்ட சப்தம் பயங்கர மானதாக இருந்தது. கேடயங்கள், சிறகுக் கொத்துள்ள தலைக் கவசங்கள், அவற்றின் மோதல்கள், திரும்பத் திரும்ப தாக்கப் பட்டுக்கொண்டிருந்த வாயில் கதவின் ஒலி, (மூடப்பட்ட கதவுகளைச் சுற்றியிருந்த ட்ரோஜன்கள் இப்பொழுது அதை உடைத்து உள்ளே நுழைய பெரும் பிரயாசைப் பட்டுக்கொண் டிருந்தனர்) எல்லாமாகச் சேர்ந்து விண்ணைத் தாக்கிக் கொண்டிருந்தது. உடனே தூட்டிஸ் என்ற கட்டியக் காரனை டிலமானின் மகனாகிய அஜாக்ஸிடம் கொடுக்கச் சொல்லி செய்தியுடன் அனுப்பினான் மெனெஸ்தியூஸ்:

'சீக்கிரம் போ கடவுளையொத்த தூட்டிஸ், ஓடிப்போய் அஜாக்ஸை அழைத்து வா. அல்லது இரண்டு அஜாக்ஸ்களை யுமே கூப்பிடு. அது இன்னும் சிறப்பாக இருக்கும். நமது முகங்களை முறைத்துக் கொண்டிருக்கிறது மரணம் இங்கே. லிசியத் தலைவர்கள் நம்மை மிஞ்சும் ஒரு பெருஞ்சேனையுடன் வந் திறங்கியுள்ளனர். இதுவரை நடந்த உக்கிரமான போரில் மிகவும் ஆற்றலுள்ளவர்கள் என்பதை அவர்கள் நிரூபித்துள்ளனர். அங்கே யும் நமது வீரர்கள் அவர்களோடு சண்டையிட வேண்டுமெனில், இங்கே நம்மிடம் டில்மானின் மகன் அஜாக்ஸ் இருக்கட்டும். அவனோடு சிறந்த வில் வீரனாகிய ட்யூஸரும் இருக்கட்டும்.'

அவன் சொன்னதைக் கேட்ட கட்டியக்காரன் கிரேக்கச் சுவரின் பாதையில் தன் கடமையைச் செய்ய விரைந்தோடினான். இரண்டு அஜாக்ஸ்களும் இருந்த இடத்தை அடைந்தவுடன் அவன் அவர்களைப் பார்த்து சொன்னான்:

'அஜாக்ஸ்களே, வெண்கலச் சீருடை அணிந்த கிரேக்க வீரர்களின் தலைவர்களே, உங்களை உடனே வரும்படி மெனெஸ்தியூஸ் கூப்பிட்டு அனுப்பியுள்ளார். கொஞ்ச நேரமாக இருந்தாலும் சரி முடிந்தால் நீங்கள் இருவருமே. அவருடைய கஷ்டத்தில் இப் பொழுது வந்து உதவி செய்ய வேண்டுமாம். அதுவே மிகவும் சிறந்ததாக இருக்கும். நமது முகங்களை முறைத்துக் கொண்டிருக் கிறது மரணம். லிசியத் தலைவர்கள் நம்மை மிஞ்சும் ஒரு பெருஞ்சேனையுடன் வந்திறங்கியுள்ளனர். இதுவரை நடந்த உக்கிரமான போரில் மிகவும் ஆற்றலுள்ளவர்கள் என்பதை

அவர்கள் நிரூபித்துள்ளனர். அங்கேயும் நமது வீரர்கள் அவர்களோடு சண்டையிட வேண்டுமெனில், இங்கே நம்மிடம் டிலமானின் மகன் அஜாக்ஸ் இருக்கட்டும். அவனோடு சிறந்த வில் வீரனாகிய ட்யூஸரும் இருக்கட்டும்'.

அவன் அப்படிச் சொன்னதும் டிலமானின் மகனாகிய மகா அஜாக்ஸ் உடன்பட்டான். ஆய்லியூஸின் மகனாகிய அஜாக்ஸிடம் அவசரமாகச் சொன்னான்:

'அஜாக்ஸ், நீயும் ஆற்றல் மிகு லைகோமீடிஸூம் இங்கேயே இருங்கள். எதிரியோடு சண்டையிட்டுக் கொண்டே இருக்கும்படி கிரேக்க வீரர்களுக்குச் சொல்லுங்கள். நான் அங்கே போய் அங்குள்ள சூழ்நிலைக்குத் தகுந்தவாறு செய்துகொள்கிறேன். அங்கே போய் அவர்களின் தற்காப்பு முயற்சிகளைப் பலப்படுத்திவிட்டு நான் விரைவில் திரும்பி வருகிறேன்.'

இந்த வார்த்தைகளுடன் டிலமானின் மகன் அஜாக்ஸ் விரைந்தான். அவனோடு அவனது ஒன்றுவிட்ட சகோதரன் ட்யூஸரும் சென்றான். ட்யூசரின் வளைவான வில்லை பாண்டியான் எடுத்துச் சென்றான். மதிலின் பின்பக்கமாக அவர்கள் சென்று தாராள மனம் கொண்ட மெனெஸ்தியூஸின் தலைமையில் இயங்கிக் கொண்டிருந்த படைப்பிரிவை அடைந்தனர். அங்கே அழுத்தம் மிகவும் தீவிரமாக இருந்தது. ஒரு கரும் புயலைப் போல, வலிமையான லிசியத் தலைவர்களும் ஆட்சியாளர்களும் மதில் சுவரின் மீது ஏறி வந்து கொண்டிருந்தனர். எதிரிகளின் மீது அவர்கள் தங்களைத் தாங்களே எறிந்து கொண்டனர். போரின் பேரொலி கிளம்பியது.

டிலமானின் மகனாகிய அஜாக்ஸ்தான் முதலில் தன் எதிரியைக் கொன்றான். சர்ப்பிடானின் தோழனும் தாராள மனம் கொண்டவனுமான எப்பிக்கிள்ஸை அவன் கொன்றான். விளிம்பில் பற்களைப் போன்ற கூர் முனைகள் கொண்ட ஒரு பாறைத் துண்டினால் அஜாக்ஸ் அவனைத் தாக்கினான். அப்பாறைத் துண்டை அவன் சுவரின் உள்பக்கமாகக் கொட்டிக் கிடந்த ஒரு குவியலின் மேல் பகுதியில், கொத்தளத்துக்கு அருகில் இருந்து எடுத்திருந்தான். நம்முடைய தலைமுறையைச் சேர்ந்த அதிபலசாலியான இளைஞன் கூட அதை இரண்டு கைகளாலும் தூக்க சிரமப்பட்டிருப்பான். ஆனால் அஜாக்ஸ் அதைத் தலைக்கு மேலே தூக்கி எதிரிமீது எறிந்தான். நான்கு

தட்டுக்கள் உடைய தலைக்கவசத்தைப் பிளந்து, மண்டை யோட்டைச் சுக்கு நூறாக உடைத்தது அது. உயர்ந்த ஒரு கோபுரத்திலிருந்து கீழே பாய்பவனைப் போல விழுந்தான் எபிக்கிள்ஸ். அவனது உயிர் அவனது எலும்புகளை விட்டுப் பிரிந்தது.

இதற்கிடையில் ஹிப்போலோக்கஸின் மகனாகிய ஆற்றல்மிகு க்ளேகஸின் கைகள் உயர்ந்த சுவரின் மீது தெரிவதை ட்யூஸர் பார்த்தான். அதைக் குறிவைத்துத் தாக்கினான். அதன் முடிவு சண்டையில் கலந்து கொள்ளும் விருப்பத்தை ஒரு முடிவுக்குக் கொண்டு வந்தது. உடனே அவன் தடையின்றி சுவரின் மேலிருந்து கீழே குதித்தான். அப்போதுதான் கிரேக்கர்கள் அவனைப் பார்க்க மாட்டார்கள். காழ்ப்புடன் அவனை நோக்கிப் பேசமாட்டார்கள்.

க்ளோகஸ் போய்விட்டதை அறிந்த சர்ப்பிடான் அதிர்ச்சி யுற்றான். ஆனால் அதனால் போரிட வேண்டும் என்ற அவனது எண்ணம் குறையவில்லை. அல்க்மோனை தனது ஈட்டியால் குத்தி ஈட்டியை உருவி எடுத்தான். சுவரிலிருந்து தலைகீழாகக் கீழே விழுந்த வண்ணம், அல்க்மோனும் அதனோடு சேர்ந்து வந்தான். அலங்காரமான அவனது வெண்கலப் போருடை அவனைச் சுற்றிக் கடகடவென ஒலியெழுப்பியது.

பின் தனது ஆற்றல்மிகு கைகளைக் கொத்தளத்தின் மீது வைத்தான் சர்ப்பிடான். ஒரு இழு இழுத்தவுடன் முழு சுவரும் பெயர்ந்து கொண்டு வந்தது. சுவரின் மேல் பகுதி தெரிந்தது. படைகள் உள்ளே வருவதற்கான இடைவெளியை ஏற்படுத்தி விட்டான் அவன்.

இப்பொழுது அவனை அஜாக்ஸும் ட்யூஸரும் சேர்ந்து தாக்கினர். அவனது மார்பைச் சுற்றிச் சென்று அவனைப் பாதுகாப்பாக மூடிக் கொண்டிருந்த கேடயத்தை தாங்கிப் பிடித்துக் கொண்டிருந்தது பளபளப்பான அவனது தோள் கச்சை. அக்கச்சையை ஓர் அம்பினால் தாக்கினான் ட்யூஸர். கப்பல்களின் பின்பகுதியில் தனது மகன் தன் முடிவைச் சந்திக்க விடாமல் அழிவிலிருந்து சர்ப்பிடானை ஜீயூஸ் காப்பாற்றினாலும், பாய்ந்து வந்த அஜாக்ஸ் அவனது கேடயத்தில் தாக்கினான். கேடயத்தைத் துளைத்துக் கொண்டு அஜாக்ஸின் ஆயுதம்

செல்லவில்லை என்றாலும், அவனது பாதையிலேயே சர்ப்பிடானை நிறுத்தியது அது. கொத்தளங்களில் இருந்து சற்றுப் பின்வாங்கினான் சர்ப்பிடான். எனினும் முழுமையாக அவன் திரும்பிச் சென்று விடவில்லை. புகழடைவோம் என்ற நம்பிக்கை இன்னும் அவனுக்கிருந்தது. திரும்பிய அவன், கடவுளையொத்த லிசியர்களைப் பார்த்துக் கத்தினான்.

'லிசியர்களே, உங்களுடைய அந்தப் பழைய போரிடும் உணர்வு எங்கே போனது? உறுதியானவனாக நான் இருந்தாலும், என்னால் தனியாக இந்த மதிலை உடைத்து அவர்களது கப்பல் களை நோக்கிச் செல்ல வழி ஏற்படுத்த முடியவில்லை. எனவே சுற்றி வளையுங்கள். எவ்வளவு அதிகமாக வளைக்கிறீர்களோ அவ்வளவுக்கு நல்லது.'

அவன் அப்படிச் சொன்னதும், தங்கள் தலைவனை அதிருப்திப் படுத்த பயந்தவர்களாக, முன்னைவிட அதிகமான எண்ணிக்கை யில் தலைவனைச் சுற்றி நின்று கொண்டு தாக்க ஆரம்பித்தனர். ஆனால் மதிலுக்குப் பின் பக்கமிருந்த கிரேக்கர்கள் தங்கள் படைப்பிரிவின் எண்ணிக்கையைக் கூட்டி வலுப்படுத்தினார்கள். அதன் பிறகு வந்த போராட்டம் இரு தரப்பினருக்குமே மிகவும் மூர்க்கமானதாகவும் நம்பிக்கை அறுப்பதாகவும் இருந்தது. ஆற்றல் மிகுந்த லிசியர்களால் கிரேக்கச் சுவரை உடைத்து அவர்களின் கப்பல்கள் இருக்கும் இடம் வரை செல்ல முடியவில்லை. சுவரின்மீது நிற்க இடம் கிடைத்தும் தங்கள் ஈட்டிகள் மூலம் லிசியர்களைப் பின்வாங்கிச் செல்லும்படிச் செய்ய கிரேக்கர்களாலும் முடியவில்லை.

ஒரு பொதுவான குறுகலான இடத்தில், எல்லைக் கோடுகளுக் கருகில், கையில் அளக்கும் குச்சிகளை வைத்துக் கொண்டு எவ்வளவு இடம்வரை நியாயமாக யாருக்கு என்று இரண்டு பேர் சண்டையிட்டுக் கொண்டிருப்பதுபோல, கைப்பிடிச் சுவர் களுக்கு இடையில் இரு தரப்பினருக்கும் அவ்வளவு குறுகலான தூரமே இருந்தது. அதற்குள் கிரேக்கர்களும் ட்ரோஜன்களும் அவர்கள் மார்புப் பகுதியைச் சிறிய பெரிய எருதுத்தோல் கேடயங்கள் காப்பாற்ற அவற்றின் பின்னாலிருந்து ஒருவரை ஒருவர் துண்டு துண்டாய் வெட்டிக்கொண்டனர்.

திரும்பி நின்று முதுகு தெரிய சண்டையிட்டபோதோ கேடயங் களின் ஊடாக ஊடுருவியோ, பல வீரர்களின் சதைகள் வெண்கல

ஈட்டிகளின் கூர்மையான குத்தலை உணர்ந்தன. அந்தப் பகுதி முழுக்க, கோபுரங்களும் கைப்பிடிச் சுவர்களும் கிரேக்கர்கள் மற்றும் ட்ரோஜன்களின் ரத்தத்தால் முழுக்க நனைந்திருந்தன.

ட்ரோஜன்களால் எதிரிகளை ஓடவைக்க முடியவில்லை. தன் குழந்தைகளைக் காப்பாற்றக் கிடைக்கும் அற்பப் பணம் சரியாகக் கிடைக்க வேண்டும் என்பதற்காகக் கம்பளி விற்பவள் தனது தராசில் ஒரு தட்டில் இருக்கும் கம்பளியையும் மறுதட்டில் இருக்கும் எடைகளையும் கவனமாக சரிநிகர் சமானமாகச் செய்வதுபோல கிரேக்கர்கள் தொடர்ந்து போரிட்டுக் கொண்டிருந்தார்கள். ப்ரியமின் மகனான ஹெக்டருக்கு ஜீயூஸ் அதிகாரம் கொடுத்து முதன்முதலாக அவன் கிரேக்கச் சுவரைத் தாண்டி உள்ளே குதிப்பதற்கு அனுமதிக்கும்வரை போராட்டம் தொடர்ந்து கடினமாகவும் இறுக்கமாகவுமே இருந்தது. ட்ரோஜன் வீரர்கள் அனைவருக்கும் கேட்கும் வகையில் ஹெக்டர் உரக்கக் கூவினான்.

'தொடர்ந்து சண்டையிடுங்கள், குதிரைகளை அடக்குவதில் சிறந்த ட்ரோஜன்களே! கிரேக்கச் சுவரை நொறுக்குங்கள். கிரேக்கக் கப்பல்களைத் தீக்கிரையாக்குங்கள்.'

உசுப்பி விடும் அவனுடைய வார்த்தைகளைக் கேட்காத ட்ரோஜன் காதுகளே இல்லை. கும்பலாக ஒன்றுகூடி அவர்கள் கிரேக்கச் சுவரைத் தாக்கினர். கையில் கூர்மையான ஈட்டிகளுடன் சிறு மதில் அரண்களின்மீது ஏற ஆரம்பித்தனர். ஆனால் ஹெக்டரோ வாயில் கதவருகில் கிடந்த ஒரு பாறையைப் பிடித்துத் தூக்கிக் கொண்டு வந்தான். அடியில் அகலமாகவும் மேலே கூர்மையாகவும் இருந்த அதை, தரையில் இருந்து ஒரு வண்டிக்கு நெம்புகோலால் தூக்குவதாக இருந்தால், இந்த தலைமுறையின் தலைசிறந்த இரண்டு வீரர்களின் பலத்தைக்கூட வெகுவாக சோதித்திருக்கும். ஆனால் எந்தவித சிரமமும் இன்றி ஹெக்டர் அதைத் தனியாகத் தனது கைகளில் ஏந்திக் கொண்டிருந்தான். அரிவாள் வீசும் க்ரோனஸின் மகனாகிய ஜீயூஸ் அதை அவனுக்கு எளிதாக்கி வைத்திருந்தான்.

ஒரு செம்மறியாட்டின் தோலை மிகவும் எளிதாகக் கையில் ஏந்திச் செல்லும் ஒரு இடையனைப் போல, அவன் அதன் எடையைக் கொஞ்சம்கூட உணராது, மரப்பலகைகளால் தளம் அமைக்கப் பட்ட உயர்ந்த உறுதியான இரண்டு வாயில் கதவுகளுக்கும்

மேலே ஹெக்டர் அதைத் தூக்கினான். அக்கதவுகள் இரண்டும் நீளமான இரண்டு விட்டங்களால் உள்பக்கமாக நிறுத்தப் பட்டிருந்தன; ஒரு தாழ்ப்பாளால் பூட்டப்பட்டிருந்தது. ஹெக்டர் நேராக அவற்றினருகில் சென்றான். அதிகபட்ச சக்திக்காக கால்களை அகலமாக வைத்துத் தன்னை இன்னும் பலப்படுத்திக் கொண்ட அவன், அந்தப் பாறையை வாயில் கதவின் மீது எறிந்தான். அது கதவுகளின் நடுப்பகுதியைத் தாக்கியது. அது தாக்கிய வேகத்தில் கதவுகளின் இருசுகள் கழன்று, கதவுகள் நொறுங்கி இரண்டு பக்கமும் விழுந்தன. ஹெக்டர் வீசிய வேகம் பாறையை மேலும் உள்ளே செலுத்தியது. கதவுகள் உடைந்து சிம்பு சிம்பாகச் சிதறியதால் ஒரு பெரும் கர்ஜனை போன்ற சப்தம் உண்டானது. விட்டங்களும் உடைந்து வழிவிட்டன.

புகழ்மிகு ஹெக்டர் உள்ளே பாய்ந்தான். அவன் முகம் இரவைப்போலக் கருப்பாக இருந்தது. அவன் கையில் இரண்டு ஈட்டிகளைப் பிடித்திருந்தான். அவன் உடல் கவசத்தின் வெண்கலத்திலிருந்து தீமை பயக்கும் ஒளி புறப்பட்டு மின்னியது. வாயில் கதவின் வழியாக நுழைந்து வந்த அவனை ஒரு கடவுளைத் தவிர வேறு யாரும் தடுத்து நிறுத்தியிருக்க முடியாது. இப்பொழுது அவன் கண்களில் தீ மின்னியது. தனக்குப் பின்னால் வந்த கூட்டத்தைத் திரும்பிப் பார்த்தான். சுவரைத் தாண்டி வரும்படி ட்ரோஜன்களுக்கு அழைப்பு விடுத்தான். அவனுடைய வீரர்கள் அவனுடையை சொல்லுக்குக் கட்டுப்பட்டு நடந்தனர். சிலர் சுவர் மீது பூச்சிகளைப் போலக் கூட்டமாக ஏறினர். மற்றவர்கள் திறந்திருந்த கதவின் வழியாக உள்ளே நுழைந்தனர். பதற்றமுற்ற கிரேக்கர்கள் உட்குழிந்த தங்கள் கப்பல்களுக்குத் தப்பியோடினர். அங்கே ஒரு நரகம் அவிழ்த்துவிடப்பட்டது.

# கப்பல்களில் யுத்தம்

***கதைச்சுருக்கம்***

***வரிகள் 01 – 09***

*வேறு எந்தக் கடவுளும் போரில் தலையிடமாட்டார்கள் என்ற நம்பிக்கையில் ஜீயூஸ் வேறு எங்கோ பார்த்துக்கொண்டிருக் கிறான்.*

***வரிகள் 10 – 205***

*அதை பொசைடன் தனக்கு அனுகூலமாகப் பயன்படுத்திக் கொள்கிறான். இரண்டு அஜாக்ஸ்களுக்கும் புதிய ஊக்கத்தையும் உள்ளுரத்தையும் கொடுக்கிறான். மற்ற கிரேக்கர்களை ஒன்று திரட்டுகிறான். ஹெக்டரை விரட்டியடிக்கிறான் அஜாக்ஸ்.*

***வரிகள் 206 – 539***

*தலைமையேற்குமாறு இடொமீனியஸை உற்சாகப்படுத்து கிறான் பொசைடன். இடொமீனியஸ் மெரியானஸை சந்திக்கிறான். வீரம் பற்றிய தங்கள் கருத்தை அவர்கள் பரி மாறிக் கொண்டு போரில் குதிக்கின்றனர். இடோமீனியஸுக்கு வெற்றி கிடைக்கிறது. டெய்ஃபோபஸ் திருப்பித் தாக்கு கிறான்.*

***வரிகள் 540 – 672***

*பொதுவான போர் மூளுகிறது.*

**வரிகள் 673 – 837**

பல ட்ரோஜன் வீரர்கள் செத்தும் காயம்பட்டும் கிடப்பதை ஹெக்டர் பார்க்கிறான். எனினும் திரும்பவும் போர் செய்யுமாறு அவர்களைத் தூண்டி அவர்களுக்குத் தலைமையேற்கிறான். ஹெக்டரை அஜாக்ஸ் இழித்துரைக்கிறான். துர்சகுனமொன்றை மீறி ஹெக்டர் அவனைப் பதிலுக்குப் பழித்துரைக்கிறான். ட்ரோஜன்கள் சண்டையிடுகின்றனர். பொதுவான யுத்தம் தொடர்ந்து நடக்கிறது.

# கப்பல்களில் யுத்தம்

கிரேக்கக் கப்பல்கள் இருந்த இடம்வரை ட்ரோஜன்களையும் ஹெக்டரையும் கொண்டுவந்து விட்ட ஜீயூஸ் முடிவற்ற போராட்டத்தையும் கண்ணீரையும் சந்திக்கும்படி அவர்களை அங்கேயே விட்டான். ஒளிபொருந்திய தனது விழிகளைத் தூரப்பகுதிக்கு ஓட்டினான். அங்கே குதிரைகளை வளர்க்கும் த்ரேசியர்கள், கைகளால் சண்டையிடும் மைசியர்கள், பெண் கழுதையின் பாலைக்குடிக்கும் ஆட்சியாளர்களான ஹிப்பி மோல்கி, பூமியில் வசித்த மிகுந்த நாகரீகமானவர்களான அபீ ஆகியோர் இருந்த நாட்டைப் பார்வையிட்டான். ட்ராய் நகரம் இருந்த பக்கம் மறுபடியும் ஒருமுறைகூடத் திரும்பி அவன் பார்க்கவில்லை. ட்ரோஜன்களுக்கோ கிரேக்கர்களுக்கோ உதவி செய்ய எந்தக் கடவுளும் வரப்போவதில்லை என்றே அவன் எண்ணினான்.

ஆனால் இது எதுவுமே பூகம்பத்தை ஏற்படுத்தும் தலைவன் பொசைடனின் கண்களுக்குத் தப்பவில்லை. மரங்களடர்ந்த மிக உயர்ந்த சமோத்ரேஸ் ‘தீவின்’ மலையொன்றின் உச்சியில் உட்கார்ந்து கொண்டு போர் நடப்பதை வாயடைத்தவனாகப் பார்த்துக்கொண்டிருந்தான். அங்கிருந்து பார்த்தால், அய்டா மலை முழுவதும், ப்ரியமின் நகரம், கிரேக்கர்களின் கப்பல்கள் அனைத்தையும் பார்க்க முடியும். கடலிலிருந்து எழுந்த பிறகு அங்கே உட்கார்ந்த அவன் கிரேக்கர்கள் தோல்வியைத் தழுவு வதைக் கண்டு இரக்கப் பட்டான். ஜீயூஸ் செய்த காரியத்தை நினைத்து ஆத்திரம் கொண்டான்.

பாறைகள் மிகுந்த சரிவின் வழியாக இப்பொழுது அவன் வேகமாகக் கீழே சென்றான். கீழே இறங்கிக் கொண்டிருந்த நித்தியக் கடவுளின் பாதம் பட்டு உயர்ந்த மலைகளும் காடுகளும் நடுங்கின. மூன்று அடிகள் எடுத்து வைத்த அவன் நான்காவது அடியில் ஆகீயா*வுக்குச் சென்றுவிட்டான்.

அதுவே அவனுடைய இலக்காக இருந்தது. அங்குதான் பார்ப் பவரைக் கவரும் தனது அரண்மனையை அவன் மின்னும் தங்கத்தால் கட்டியிருந்தான். அது நீரின் ஆழத்தில் இருந்தது. அங்கேயே அது எப்போதும் இருக்கும். அங்கேபோய் தனது தேரில் தன் விரைவுக் குதிரைகளைப் பூட்டினான். அக்குதிரை களுக்கு வெண்கலத்தில் குளம்புகளும் தங்கத்தில் பறக்கும் பிடரிகளும் இருந்தன. தங்கத்திலேயே அவனும் ஆடை அணிந்து கொண்டான். தனது தங்கச் சாட்டையை எடுத்துக் கொண்டான். தனது தேரில் ஏறி அலைகளின் குறுக்கே அதை ஓட்டிச் சென்றான். அங்கே நீந்திக் கொண்டிருந்த டால்ஃபின் மீன்கள் தம் எஜமானனைக் கண்டு கொள்ளத் தவறவில்லை. ஒவ்வொரு பக்கமிருந்தும் தங்களது குகைகளிலிருந்து அவை வெளிவந்தன. அவன் வருவதைப் பார்த்து குதூகலத்தில் குதித்தன. மகிழ்ச்சியில் கடல் அவனுக்கு வழி விட்டது. பறந்து சென்றது தேர். உலர்ந்திருந்தது அவனது தேரின் வெண்கல அச்சு. பாயும் குதிரைகள் அவனை கிரேக்கக் கப்பல்களை நோக்கி எடுத்துச் சென்றன.

அந்தக் கடலின் ஆழத்தில் டெனிடோஸுக்கும் இம்ப்ரோஸுக் கும் நடுவில் ஒரு பெரிய குகை இருந்தது. பூகம்பக் கடவுளான பொசைடன் அங்கே தனது தேரை நிறுத்தி குதிரைகளை அவிழ்த்து விட்டான். அவைகளுக்காக அமுதத் தீவனத்தைக் கீழே போட்டான். தங்கக் கயிறுகளால் அவற்றின் கால்களைக் கட்டினான். அந்தக் கயிறுகளை அவைகளால் அறுத்துக்கொண்டு போகவோ உதறவோ முடியாது. எஜமானன் திரும்பி வரும்வரை அவைகள் அவ்விடத்திலேயே இருந்தாக வேண்டும். அதன்பின் கிரேக்க முகாம் இருக்கும் இடத்தை நோக்கிச் சென்றான்.

அங்கே, ப்ரியமின் மகனான ஹெக்டர் உற்சாகமூட்டியதற்குப் பிறகு, புயல் காற்று அல்லது கொடும் காட்டுத் தீயைப் போல

---

* ஆகீயா - கிரேக்கத்துக்கும் ஆசியா மைனருக்கும் இடையில் இருந்த கடல்.

இரக்கமற்ற மன உறுதியுடன் ட்ரோஜன் வீரர்கள் ஒன்று சேர்ந்து பேரொலி எழுப்பிய வண்ணம் அட்டூழியம் செய்து கொண்டிருந்தனர். கப்பல்களையெல்லாம் பிடித்து கிரேக்கர்களின் தலைசிறந்த வீரர்களையெல்லாம் கொன்றுவிட முடியும் என்று அவர்கள் நம்பிக்கை கொண்டிருந்தார்கள். அந்த நேரத்தில்தான், உலகைச் சுற்றிக் கொண்டு, பூமியை நடுங்கச் செய்யும் பொஸைடன் கடலின் ஆழத்திலிருந்து எழுந்தான். கிரேக்கர் களுக்குப் புத்துணர்ச்சியை ஊட்டினான். கால்காஸ் என்பவனின் உருவத்தையும் அவனுடைய களைப்படையாத குரலையும் கடன் வாங்கிக் கொண்டு, முதலில் போர் செய்ய அதிகம் விருப்பம் கொண்டவர்களாக இருந்த இரண்டு அஜாக்ஸ்களிட மும் பேசினான் பொஸைடன்.

‘அஜாக்ஸ்களே, பதட்டப்பட்டு ஓடும் கோழை எண்ணமில்லா மல் உங்கள் பழைய வீரத்துடன் நீங்கள் இருப்பீர்களேயானால் உங்கள் இருவராலும் கிரேக்கப் படையைக் காப்பாற்ற முடியும். ட்ரோஜன்கள் பெரிய மதில்சுவரின் மீது ஏறிவிட்டார்கள். வெல்லமுடியாத மன உறுதி அவர்களுக்கு இருந்தாலும், எனக்குப் பயமில்லை. வெண்கலக் கவச உடையணிந்த மற்ற எல்லாரையும் கிரேக்கர்களாகிய உங்களால் நிறுத்த முடியும். எல்லாம் வல்ல ஜீயூஸ்தான் தன் தந்தை என்று வெறிபிடித்த ஹெக்டர் நாய் பீற்றிக்கொண்டிருக்கிற இங்கேதான் அவனால் அபாயம் ஏற்படுமென்று நான் பயப்படுகிறேன். ட்ரோஜன் வீரர்களின் முன்னேற்றத்தை அவனே முன்னின்று செய்து கொண்டிருக்கிறான். சீறிவரும் நெருப்பைப் போல வீரத்தை விசிறி விடுகிறான். நீங்கள் இருவரும் இந்த இடத்தில்தான் தைரியமாக நின்று மற்ற கிரேக்க வீரர்களையெல்லாம் ஒன்றிணைக்க வேண்டும் என்று யாராவது ஒரு கடவுள் வந்து உங்களிடம் சொன்னால் நீங்கள் அந்த நாயை உங்கள் கப்பல் களின் பக்கம் வராமல் விரட்டிவிடுவீர்கள். அவன் எவ்வளவு ஆக்ரோஷமாக வந்தாலும் சரி, ஒலிம்பிய ஜீயூஸிடமிருந்து எவ்வளவு உற்சாகத்தைப் பெற்றுக்கொண்டு வந்தாலும் சரி.’

உலகைச் சுற்றி வரும் பூகம்ப நாயகன் இவ்விதமாகப் பேசி, தனது கழியினால் அவர்களைத் தொட்டு, மன உறுதியாலும் ஆற்றலா லும் அவர்களை நிரப்பினான். அவர்கள் கைகளிலும் கால்களி லும் இருந்த மந்த உணர்ச்சியைப் போக்கினான். பின் உயரமான இடத்தில், ஒரு பாறையில் இருந்த தன் இடத்தை விட்டுக் கிளம்பினான். காற்றில் மிதந்து நின்று நிதானித்துச் சமவெளியில்

தெரியும் வேறொரு பறவையைத் துரத்தும் விரைவுப் பருந்தைப் போல, அவர்களுடைய பார்வையிலிருந்து மறைந்து போனான் பூகம்ப நாயகனாகிய பொசைடன். இரண்டு அஜாக்ஸ்களிலும், ஆய்லியூஸின் மகனான விரைவு அஜாக்ஸ்தான் அவனை ஒரு கடவுள் என்று முதலில் அடையாளம் கண்டு கொண்டவன். உடனே அவன் டிலமானின் மகனாகிய இன்னொரு அஜாக்ஸிடம் சொல்லத் தொடங்கினான்.

'அஜாக்ஸ், ஒலிம்பஸ் மலை வாழும் கடவுள்களில் ஒருவர்தான் இப்பொழுது வந்து கப்பல்களின் அருகில் நின்று நாம் சண்டை செய்ய வேண்டும் என்று கூறிச்சென்றது. தீர்க்கதரிசியின் உருவத்தில் அவர் வந்தாலும், அவர் நமது முன்னறிவிப்பாளரான கால்காஸ் அல்ல. அவர் போகும்போது நான் அவருடைய குதிகால்களையும் முழங்கால்களின் பின்பகுதியையும் கவனித்தேன். எனக்கு அதுவே போதுமான நிரூபணம். ஒரு கடவுளை அடையாளம் கண்டு கொள்வது ஒன்றும் கடினமான காரியமல்ல. அதுமட்டுமல்ல, எனது இதயத்தில் ஒரு பெரிய மாற்றம் ஏற்பட்டுள்ளதை நான் உணர்கிறேன். இப்பொழுது போரில் ஈடுபட முன்னைவிட நான் ஆர்வமாக உள்ளேன். எனது கைகளும் கால்களும் போர் செய்யவதற்காகத் தினவெடுக்க ஆரம்பித்துவிட்டன.'

'நானும் உன்னைப் போலத்தான் உணர்கிறேன். ஈட்டியில் இருக்கும் எனது ஆற்றல்மிகு கைகள் நமைச்சல் எடுக்க ஆரம்பித்துவிட்டன. எனது வீர உணர்ச்சி தூண்டப்பட்டுவிட்டது. எனது கால்கள் பயணத்துக்குத் தயாராக இருக்கின்றன. ப்ரியமின் மகனான ஹெக்டரைத் தனியாளாக சந்திக்க நான் ஆசைப்படு கிறேன். அவனுடைய பிடிவாதமான உறுதியோடு.'

கடவுள் அவர்கள் மனத்தில் புகுத்திய போரிடவேண்டும் என்ற எண்ணத்தைச் சுவைத்துக்கொண்டே இருவரும் இவ்விதமாகப் பேசிக்கொண்டிருந்தபோது, பின்பக்கமாக இருந்த கிரேக்க அணியினரைப் பொசைடன் தூண்டிக் கொண்டிருந்தான். அவர்கள் தளர்ந்துபோன தங்கள் வீர உணர்வைப் புதுப்பிக்க நாடியே தங்கள் விரைவுக் கப்பல்களின் பக்கம் இருந்தனர். அவர்கள் உடல் ரீதியாக மட்டும் முழுமையாகக் களைத்துப் போயிருக்கவில்லை. ட்ரோஜன்களைப் பார்த்து மனரீதியாகவும் துணிச்சல் இழந்தவர்களாக இருந்தனர். ஏனெனில் ட்ரோஜன் களில் எண்ணிடலங்காதோர் மகா மதிலைத் தாண்டி உள்ளே

வந்திருந்தனர். அவர்களை கிரேக்கர்கள் பார்த்தபோது, அவர்களுக்கு அழுகை வந்தது. விமோசனமே கிடைக்காதோ என்ற அவநம்பிக்கை ஏற்பட்டது.

ஆனால் இப்பொழுது, ஒரு கடவுளாக இருந்த காரணத்தால் பிரயாசை எதுவுமே படாமல் கிரேக்க அணியினரைச் சந்தித்து அவர்களைப் போரிடும்படித் தூண்டிக் கொண்டிருந்தான் நிலநடுக்க நாயகன். ட்யூஸரைத்தான் முதன் முதலாக அவன் தூண்டினான். பிறகு, போர் முழக்கத்தின் நாயகர்களான லெய்டஸ், பெனிலியோஸ், தோவாஸ், டெய்பைரஸ், கடைசியாக மெரியோனிஸ் மற்றும் ஆன்ட்டிலோக்கஸ் ஆகியோரது வீர உணர்வைத் தூண்டிவிட்டான். அவசரமாக அவன் சொன்னான்:

'கிரேக்கர்களே, இளம் போர் வீரர்களே, வெட்கமாக இல்லையா? உங்களையும் உங்கள் வீரத்தையும் நம்பித்தான் நமது கப்பல்களைக் காப்பாற்ற முடியும் என்று நான் நினைத்தேன். சண்டை மிகவும் உக்கிரமாக இருப்பதால் அதை நீங்கள் விட்டுவிடுவீர்களேயானால், ட்ரோஜன்கள் நம்மை வெற்றி கொள்ளும் நாள் வந்துவிட்டது என்றே அர்த்தம். ட்ரோஜன்கள் நமது கப்பல்களில்! அப்பப்பா, என்ன ஒரு வியப்பூட்டும் காட்சி! இப்படி ஒரு பயங்கரமான விளைவை நான் கனவுகூடக் கண்டது கிடையாது. அந்தக் காலத்தில் அவர்களெல்லாம் எந்தவித இலக்குமின்றி வனங்களில் அலைந்து திரிந்து, நரிகளுக்கும் சிறுத்தைகளுக்கும் ஓநாய்களுக்கும் உணவாக ஆகிப்போகும் பலவீனமான பயந்தாங்கொள்ளி பெண் மான்களைப் போல இருந்தார்கள். அப்படித்தான் ட்ரோஜன்கள் நடந்துகொண்டிருந்தார்கள். நமது பக்கமிருந்து உறுதியான எந்தத் தாக்குதலுக்கும் ஒரு கணம் கூட எதிர்த்து நிற்கக் கூடாது என்ற முடிவோடு இருந்தார்கள் ' என்றவன் மேலும் தொடர்ந்தான்.

'ஆனால் இப்பொழுது அவர்கள் தமது நகரை விட்டு வெகுதூரம் வந்துவிட்டிருக்கிறார்கள். உட்குழிந்த நமது கப்பல்களின் பக்கமாய் நின்று போரிட்டுக் கொண்டிருக்கிறார்கள். எல்லாமே நமது தலைவனின் தகுதியின்மை காரணமாகவும், நமது அணியினரின் கவனமின்மை காரணமாகவும்தான். நமது வீரர்கள் அவர்களின் தலைவனை எண்ணி, செத்தாலும் பரவாயில்லை, கப்பல்களைக் காப்பாற்ற வேண்டாம் என மிகவும் மனம் வெறுத்துப் போயிருக்கிறார்கள். விரைவுப்பாத அக்கிலிஸை அவமானப்படுத்தியதால், முழு பழியும் அத்ரியூஸின் மகனான

தலைவன் அகமெம்னனையே சென்று சேருமென்றாலும், எந்தக் காரணத்துக்காகவும் நாம் சண்டையிடுவதை விட்டுவிட்டுப் போவதென்பது சரியல்ல.

'வீரர்கள் விரைவிலேயே சரியாகிவிடுவார்கள். நாம் சீக்கிரமாக நடந்தையெல்லாம் சரிசெய்வோம் வாருங்கள். உதாரணத்துக்கு, உங்களைப் போன்ற தலைசிறந்த வீரர்கள் சோம்பேறித்தனமாக சுதி இறங்கிப் போய் வீர உணர்ச்சி குன்றிப் போர் செய்ய வேண்டும் என்று தீவிரம் குறைந்திருப்பது பார்ப்பதற்கு அழகாக இல்லை. ஒரு பலவீனமான ஈனனை வேண்டுமானால் சண்டையை விட்டுவிட்டுத் தொலையட்டும் என்று நான் மன்னிக்கலாம். ஆனால் நீங்கள் அப்படிப்பட்டவர்களல்ல. நீங்கள் வித்தியாசமானவர்கள். உங்களோடு தகராறு செய்வதற்கு எனக்கு மனதார நியாயமிருக்கிறது. நீங்கள் பலவீனர்களாக இருந்தால், உங்களின் இந்தத் தாமதம் இப்பொழுதுள்ள சூழ்நிலையை இன்னும் மோசமாக்கிவிடும். நமது மதிலையும் அதன் கதவுகளையும் தாழ்ப்பாளையும் உடைத்து உள்ளே வந்த ஹெக்டர், நமது கப்பல்களை நெருங்கி சண்டையிட்டுக் கொண்டிருக்கிறான்! இந்த மாதிரியான முக்கியமான கட்டத்தில் நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள் என்று ஒவ்வொருவரும் எண்ணிப் பாருங்கள். மற்றவர்கள் உங்கள்மீது எவ்வளவு ஆத்திரப்படுவார்கள்? உங்கள் நடத்தை எவ்வளவு அவமானகரமானது என்று எண்ணிப் பாருங்கள்.'

இப்படிச் சொல்லி உலகைச் சுற்றி வரும் பூகம்ப நாயகனாகிய பொசைடன் கிரேக்கர்களை உசுப்பி ஒருங்கிணைத்து விட்டான். உறுதியான அணிகள் இரண்டு அஜாக்ஸ்கள் தலைமையிலும் ஒன்று சேர்ந்தன. அந்த அணியைப் போர்க்கடவுள் ஏரிஸ் அல்லது அதீனி பார்த்தால்கூட அசந்து போவார்கள். கிரேக்க அணியில் இருந்த மிகச்சிறந்த வீரர்கள் கடவுளையொத்த ஹெக்டரையும் ட்ரோஜன்களையும் எதிர்நோக்கி நின்று கொண்டிருந்தார்கள். உள்ளே புகமுடியாத சங்கிலித் தொடர் வரிசையாக, ஈட்டிகளாக, சாய்வாக வைக்கப்பட்ட கேடயங்களாக நின்றனர். கேடயத்தோடு கேடயம், தலைக்கவசத்தோடு தலைக்கவசம், வீரனோடு வீரன் என அவர்கள் நகர்ந்தபோது, உச்சியில் சிறகுகள் கொண்ட அவர்களது பளபளக்கும் தலைக்கவசங்கள் ஒன்றையொன்று தொட்டுக் கொண்டன. உறுதியான கைகளால் அவர்கள் ஈட்டிகளைச் சுழற்றியபோது, அவைகள் ஒன்றன்மீது ஒன்று இருப்பதைப் போல் தோன்றின.

அவ்வளவு நெருக்கமாக அவர்கள் இருந்தார்கள். எதிரியைச் சந்திப்பது பற்றியே அவர்களுடைய மனம் சிந்தித்துக் கொண்டிருந் தது. மோதலுக்குத் தயாராக, ஆர்வமாக அவர்கள் நின்றார்கள்.

சாய்வான மலைப்பகுதியில் இருந்து சரிவில் குதித்து வரும் ஒரு பாறையைக் குளிர்காலத்தில் பெருக்கெடுத்து ஓடும் ஆற்று நீர் பீடபூமியின் விளிம்பில் இடப்பெயர்ச்சி செய்து வைத்துவிட்டு, வெறுக்கத்தக்க அந்தப் பாறையோடு கூடவந்த சிறு கற்களைக் கழுவி விடும். அதுபோல, கூட்டமாகக் கிளம்பி வந்த ட்ரோஜன் களுக்குத் தலைமையேற்று விரைவாக முன்னேறி ஹெக்டர் வந்தான். காற்றில் மேலே எழும்பி வரும் பாறை, எதிரொலிக்கும் வனங்களின் வழியாக வேகமாக, தங்கு தடையின்றி, தன் விருப்பத்துக்கு எதிராக உருண்டு சென்று கொண்டே இருக்கும். சமவெளியை அடைந்தவுடன் விருப்பத்துக்கு எதிராக நின்று விடும். அதைப்போல, கொஞ்ச நேரம் ஹெக்டர் பயமுறுத்திக் கொண்டிருந்தான். கிரேக்க முகாம் மற்றும் கப்பல்கள் வழியாகக் கடலைச் சென்றடைந்துவிடலாம் என, போகும் வழியில் எல்லாம் எதிர்ப்பட்ட வீரர்களைக் கொலை செய்துகொண்டே வந்தான்.

ஆனால் உறுதியாக நின்றுகொண்டிருந்த வீரர்கள் மத்தியில் வந்தபோது ஹெக்டரால் முன்னேற முடியவில்லை. நின்று விட்டான். அவனை எதிர்கொண்ட கிரேக்கர்கள் தங்கள் வாட் களையும் வளைந்த ஈட்டிகளையும் அவனை நோக்கி வீசினர். ஹெக்டர் வேறு வழியின்றிப் பின்வாங்கும்படி நேரிட்டது. அதிர்ச்சியடைந்தவனாக, ஹெக்டர் பின்வாங்கினான்.

'கையோடு கையாகப் போரிட நினைக்கும் எல்லாரும் என்னோடு நில்லுங்கள். ட்ரோஜன்களே, லிசியர்களே, டார்டானியர்களே! இப்போதைக்கு ஒரு சுவரின் கற்களைப் போல ஒன்றாக இணைந்து நின்றாலும் கிரேக்கர்களால் என்னை வெகு நேரத்துக்கு நிறுத்தி வைக்க முடியாது. எனது ஈட்டிக்கு அவர்கள் வழிவிட்டே ஆகவேண்டும். ஹீராவின் இடிமுழக்கக் கணவனாகிய தலைசிறந்த தலைமைக் கடவுளால் நான் இங்கே கொண்டு வரப்பட்டேன் என்பது உண்மையானால் எனக்கு வழி கிடைக்கும்' என்று அனைவர்க்கும் கேட்குமாறு உரக்கச் சொன்னான்.

இந்த வார்த்தைகளைச் சொல்லி ஒவ்வொரு வீரனின் உள்ளத்தி லும் புத்துணர்ச்சியையும் வீரத்தையும் ஊட்டினான் அவன்.

அவனுடைய சகோதரன் டெய்ஃபோபஸ் துணிச்சலாக அவர்கள் மத்தியில் சென்றான். தன் கேடயத்தைத் தனக்கு முன்னால் பிடித்த வண்ணம், அது கொடுத்த பாதுக்காப்பில் கவனமாகப் பார்த்துப் பார்த்து முன்னேறிச் சென்றான்.

அவன் மீது ஒரு பளபளக்கும் ஈட்டியை எறிந்தான் மெரியோனிஸ். அது குறி தவறவில்லை. அவனது உருண்டையான எருதுத்தோல் கேடயத்தை அது தாக்கியது. ஆனால் அதன் நீண்ட பிடி, கேடயத்தை ஊடுருவி உள்ளே செல்லாமல் கேடயக் குழிக்குள் உடைந்தது. போர்த்திறம் மிக்க மெரியோனிஸ் போன்ற வீரர்களின் ஈட்டியால் தாக்கப்படாமல் இருக்கும் பொருட்டு அச்சத்தினால் டெய்ஃபோபஸ் தன் கேடயத்தைக் கொஞ்சம் தள்ளியே பிடித்திருந்தான். தன் படைப்பிரிவின் வீரர்களோடு போய் சேர்ந்து கொண்டான் மெரியோனிஸ். தன் ஈட்டி உடைந்ததை எண்ணியும் தன் குறி தவறிக் கொல்லாமல் விட்டதை நினைத்தும் கோபமாக இருந்தான். உடனே கிரேக்க முகாமை நோக்கிச் சென்றான். அங்கே தனது பாசறையில் விட்டு வந்த நீண்ட ஈட்டியை எடுத்துவரச் சென்றான்.

ஆனால் மற்றவர்கள் அனைவரும் சண்டையிட்டுக் கொண்டுதான் இருந்தார்கள். காற்றை நிரப்பிக் கொண்டிருந்தன யுத்தத்தின் சப்தங்கள். டிலமானின் மகனான ட்யூஸர்தான் குதிரைகளின் சொந்தக்காரனாகிய மென்ட்டாரின் மகனும் ஈட்டியெறி வீரனுமாகிய தன் எதிரி இம்ப்ரியஸை முதலில் கொன்றான். கிரேக்கர்கள் படையெடுத்து வருவதற்கு முன் அவன் பீடியம் என்ற ஊரில் வாழ்ந்து வந்தான். ப்ரியமுக்கு முறைதவறிப் பிறந்த ஒரு மகளான மெடிஸிகாஸ்டியை மணந்திருந்தான். ஆனால் கிரேக்கர்கள் தங்கள் உருளும் கப்பல்களில் வந்திறங்கியபோது, அவனும் இலியத்துக்கு வந்து ப்ரியமோடு தங்கிவிட்டான். ட்ரோஜன்களின் படைப்பிரிவில் தன்னை ஒரு சிறந்த வீரனாக நிர்மாணித்துக்கொண்டான். ப்ரியமும் அவனைத் தன் பிள்ளைகளில் ஒருவனைப் போலவே பார்த்துக்கொண்டான். அவனது காதுக்குக் கீழே தன் நீண்ட ஈட்டியால் குத்திக் காயப்படுத்திய ட்யூஸர் பின் அதை வெளியில் உருவி எடுத்தான். உயர்ந்த ஒரு மலைக்கு அடையாளமாக நின்ற ஆஷ் மரம் கோடரி வெட்டுக்குத் தன் மிருதுவான இலைகளுடன் மண்ணில் வீழ்ந்ததைப் போல விழுந்தான் இம்ப்ரியஸ். அவனுடைய அலங்காரமான கவசங்கள் கடகடவென ஒலித்தன.

அவனுடைய கவச உடைகளைக் கைப்பற்ற விரைந்து ஆர்வமாக ஓடினான் ட்யூஸர். அப்படி அவன் ஓடிவந்தபோது அவன் மீது தன் ஈட்டியை எறிந்தான் ஹெக்டர். ஆனால் ட்யூஸர் கவன மாகவே வந்ததால், மயிரிழையில் அந்த ஈட்டியின் இலக்கி லிருந்து தப்பித்தான். அது குறி தவறி சண்டையில் கலந்து கொள்ள அவசரமாக வந்த ஆம்ஃபிமாக்கஸின் மார்பில் குத்தியது. அவன் தடாலென தரையில் விழுந்தான். அவனது கவச உடைகள் கடகடவென ஒலியெழுப்பின.

இறுக்கமாக அவன் தலையில் பொருந்தியிருந்த தலைக்கவசத்தை வள்ளல் தன்மை கொண்ட ஆம்ஃபிமாக்கஸின் பொட்டிலிருந்து உருவி எடுப்பதற்காக ஹெக்டர் விரைந்தான். அப்போது ஹெக்டரைக் குறிவைத்துத் தன் மின்னும் ஈட்டியை எறிந்தான் அஜாக்ஸ். ஆனால் அவனது உடலின் எந்தப் பகுதியும் திறந்திருக்க வில்லை. அவன் பரிபூரணமாக, பயமுறுத்தும் வெண்கலக் கவச உடையால் மூடப்பட்டிருந்தான். அஜாக்ஸ் செய்ய முடிந்ததெல் லாம் ஹெக்டரின் கேடயத்தின் உப்பிய முன்பகுதியைத் தாக்கியது தான். ஆனால் தாக்குதலில் வேகம் அளவுக்கு அதிகமாக இருந்தது, ஹெக்டர் இறந்து கிடந்த அந்த இருவரையும் கிரேக்கர்களின் வசம் விட்டுவிட்டு அவ்விடம் விட்டு நகர வேண்டியிருந்தது. அதீனியத் தலைவர்களான ஸ்டிக்கியஸ் மற்றும் மெனெஸ்தியூஸ் ஆகியோ ரால் ஆம்ஃபிமாக்கஸின் உடல் அவர்கள் அணியிடம் ஒப் படைக்கப்பட்டது. போர் செய்யும் உணர்ச்சியால் மேலும் மேலும் தூண்டப்பட்டவரகளாக, அஜாக்ஸும் ட்யூஸரும் இம்ப்ரியஸின் உடலைப் பிடித்துக்கொண்டனர்.

இடையனின் கூரிய பற்கள் கொண்ட காவல் நாய்கள் பார்த்துக் கொண்டிருக்கும்போதே, ஒரு வெள்ளாட்டைப் பிடித்து, தம் பற்களில் இடுக்கிக் கொண்ட இரண்டு சிங்கங்கள் அதைத் தூக்கிக் கொண்டு, அடர்ந்த புதர்கள் வழியாகத் தமது குகைவரை எடுத்துக் கொண்டு போவதுபோல, தலைக்கவசங்கள் அணிந்த அஜாக்ஸும் ட்யூஸரும் இம்ப்ரியஸின் உடலைத் தலைக்கு மேலே தூக்கிப் பிடித்துக் கொண்டு, அவனது கவச உடைகளைக் களைந்து எடுத்துக் கொண்டு சென்றனர். ஆம்ஃபிமாக்கஸ் கொல்லப்பட்ட கோபத்தில், இம்ப்ரியஸின் தலையை அவனது மிருதுவான கழுத்திலிருந்து வெட்டி எடுத்த அஜாக்ஸ், அதை ஒரு பந்தைப் போலச் சுற்றி எறிந்தான். அது அந்தி நேரமாகப் பார்த்து ஹெக்டரின் பாதங்களில் போய் விழுந்தது.

*போரின் உக்கிரத்தில் தனது பேரனான ஆம்ஃபிமாக்கஸ் கொல்லப் பட்டதை அறிந்த பொசைடன், கடுமையான கோபமடைந்தான். கிரேக்கப் பாசறைகள், கப்பல்கள் பக்கமாக விரைந்து சென்ற அவன் அவர்களை உசுப்பினான். ட்ரோஜன்களுக்கு மேலும் மேலும் தொல்லைகள் கொடுக்கும்படி அவர்களைத் தூண்டினான். புகழ்பெற்ற ஈட்டியெறி வீரனாகிய இடொமீனியஸை அவன் அங்கு சந்தித்தான். முழங்காலின் பின்பக்கம் ஈட்டியால் காயம்பட்டு அப்போதுதான் போர்க்களத்திலிருந்து வந்திருந்தான் அவன். அவனைச் சந்திப்பதற்காக இடொமீனியஸ் வந்திருந்தான். அவனை அவனது தோழர்கள் தூக்கி வந்தனர். மருத்துவர்களுக்கு உரிய உத்தரவுகளைக் கொடுத்துவிட்டு, மறுபடியும் சண்டைக்குத் திரும்ப வேண்டும் என்ற எண்ணத்தில், இடொமீனியஸ் தனது பாசறைக்குத் திரும்பிக் கொண்டிருந்தான். அப்போதுதான் நிலநடுக்கத்தின் நாயகன் அவனைச் சந்தித்தான். ப்ளியூரானில் ஈட்டோலியர்களையும், மலைகள் நிறைந்த காலிடானையும் ஆண்டுகொண்டிருந்த, மக்களால் ஒரு கடவுளென் மதிக்கப்பட்ட ஆன்ட்ரோமோனுடைய மகனாகிய தோவாஸின் குரலில் பொசைடன் பேசினான்.*

*‘க்ரீட்டர்களின் ஆலோசகனே இடொமீனியஸ்! ட்ரோஜன் களுக்கு எதிராக கிரேக்கர்கள் செய்த பயமுறுத்தல்களெல்லாம் என்னானது?’*

*க்ரீட்டர்களின் தலைவனான இடொமீனியஸ் அவனுக்குப் பதில் சொன்னான்:*

*‘தோவாஸ், நான் பார்த்தவரை, எந்தத் தனியொரு வீரனையும் குறை சொல்ல முடியாது. நம் அனைவருக்குமே எப்படிப் போரிடுவது என்று தெரியும். யாருமே பயத்தால் உறைந்து போகவில்லை. பதற்றத்தில் இந்தப் பயங்கரப் போர்க்களத்தை விட்டு ஓடிப்போகவும் இல்லை. கிரேக்கத்திலிருந்து தொலை தூரமாக உள்ள இந்த அந்நிய மண்ணில், இருந்த சுவடே தெரியாமல், கிரேக்கர்கள் அழிக்கப்பட வேண்டும். எல்லாம் வல்ல ஜீயூஸ் இப்படித்தான் நடக்க வேண்டும் என்று எண்ணி யிருப்பார் போலும். ஆனால் தோவாஸ், நீ எப்போதுமே போரில் ஊசலாட மாட்டாய். மற்றவர்கள் மனமுடைந்து கைவிடும் போது நீ அவர்களுக்கு ஊக்கமளிப்பாய். எனவே இப்பொழுதும் தாமதிக்காதே, ஒவ்வொருவருக்கு என்ன உத்தரவுகள் கொடுக்க வேண்டுமோ அதைக்கொடு.’*

நிலநடுக்க நாயகனாகிய பொசைடன் பதில் சொன்னான்:

'இடொமீனியஸ், யார் இன்று மிகச்சிறப்பாகப் போர் செய்ய வில்லையோ, அவர்கள் ட்ராய் நகரத்திலிருந்து தந்தையர் நாட்டுக்குத் திரும்பப் போவதிலை. நாய்களுக்கு இன்பமூட்ட இங்கேயே இருப்பார்கள்! உன் ஆயுதங்களை எடுத்துக்கொண்டு என்னைப் பின்பற்றி வா. நாம் இருவரும் சேர்ந்து பணியாற்ற வேண்டிய தருணம் வந்துவிட்டது. இல்லையெனில் பயன் இல்லை. ஒன்றாக இணைந்திருக்கும்போது, மோசமான வீரர் கள்கூட சிறந்த வீரர்களாகிவிடுகின்றனர். தலைசிறந்த வீரர்களா யினும் எப்படிச் சமாளிப்பது என்று உனக்கும் எனக்கும் தெரியும்.'

இப்படிச் சொல்லிவிட்டு அந்தக் கடவுள் போர்க்களத்தின் குழப்ப மான சப்தங்களுக்குள் மறுபடியும் நுழைந்தான். நன்கு அமைக்கப் பட்ட தனது பாசறையை நோக்கிச் சென்றான் இடொமீனியஸ். தனது அருமையான கவச உடையை அணிந்து கொண்டான். ஒரு ஜோடி ஈட்டிகளை எடுத்துக்கொண்டான். ஜீயூஸ் கையிலெடுத்து, ஒலிம்பஸ் மலையிலிருந்து தூரத்து வானத்துக்கு அனுப்பும் மின்னலைப் போன்ற தோற்றத்துடன் வெளியில் வந்தான். இடொமீனியஸ் ஓடிவந்தபோது அவனது மார்பில் இருந்த வெண்கலக் கவச உடை அப்படித்தான் மின்னியது.

அவன் வெளியில் வருவதற்கும் அவனது துணிச்சலான உதவி யாளன் மெரியோனிஸைச் சந்திப்பதற்கும் சரியாக இருந்தது. அவன் ஒரு வெண்கல ஈட்டியை எடுத்து வருவதற்காக அங்கு வந்தான். ஆற்றல்மிகு இடொமீனியஸ் சொன்னான்:

'ஆயுதம் தரித்த என் உற்ற தோழனே, என் சகோதரன் மோலஸின் மகனே, விரைவுப்பாத மெரியோனிஸ், போர்க்களத்தை விட்டு விட்டு இங்கே எதற்காக வந்தாய்? ஏதாவது ஆயுதம் குத்திக் காயமடைந்து வலியில் இருக்கிறாயா? எனக்கு ஏதாவது செய்தி கொண்டு வந்திருக்கிறாயா? எனது பாசறையில் சும்மா உட்கார்ந்திருக்க எனக்கு விருப்பமில்லை. போரில் ஈடுபடவே நான் ஆசைப்படுகிறேன்.'

அறிவார்ந்த மெரியோனிஸ் பதில் சொன்னான்:

'வெண்கலக் கவச உடையணிந்த க்ரீட்டர்களின் ஆலோசகரே, இடொமீனியஸ், நான் ஒரு ஈட்டி வேண்டி இங்கு வந்தேன்.

*உங்கள் பாசறையில் ஏதாவது இருக்கும் என்ற நம்பிக்கையில் வந்தேன். கர்வம் கொண்ட டெய்ஃபோபஸின் கேடயத்தை நான் தாக்கியபோது என் ஈட்டி உடைந்துவிட்டது' என்றான்.*

*க்ரீட்டர்களின் தலைவனான இடொமீனியஸ் பதில் சொன்னான்:*

*'நீ தேடி வந்தது ஓர் ஈட்டிதான் என்றால், ஒன்றென்ன, இருபது ஈட்டிகள் கிடைக்கலாம். எனது பாசறையின் வாசலிலேயே வெள்ளையடிக்கப்பட்ட சுவரில் சாய்த்து வைக்கப்பட்டிருக்கும் அவைகளெல்லாம் ட்ரோஜன் ஈட்டிகள். நான் கொன்ற வீரர்களிடமிருந்து நான் எடுத்துக்கொண்டவை. எதிரியைத் தூரத்தில் வைத்துச் சண்டையிடுவதில் எனக்கு நம்பிக்கை யில்லை. அதனால்தான் என்னிடம் இவ்வளவு ஈட்டிகளும், முன்பக்கம் உப்பிப் பருத்த கேடயங்களும், தலைக்கவசங்களும், உடல் கவசங்களும் சேர்ந்துள்ளன.'*

*அறிவார்ந்த மெரியோனிஸ் பதில் சொன்னான்:*

*'எனது பாசறையிலும் கருப்புக் கப்பலிலும் ஏராளமான ட்ரோஜன் ஈட்டிகள் உள்ளன. ஆனால் அவைகளையெல்லாம் உடனே எடுக்கும்படியான வசதி இல்லை. எனது வீரம் என்னை விட்டுப் போய்விட்டது என்றும் நான் நினைக்கவில்லை. வீரர்களுக்கு இறவாப் புகழ் சேர்க்கும் போர் எப்போதெல்லாம் உருவா கிறதோ, அப்போதெல்லாம் முன் வரிசையில் இருப்பேன் நான். வெண்கலக் கவச உடைகள் அணிந்த கிரேக்கர்களில் எனது திறமையைக் கண்டு கொள்ளாத கடைசி ஆளாக நீதான் இருப்பாய் என்று நினைக்கிறேன். இப்பொழுது நீயே அதைப் பார்த்துவிட்டாய்'*

*க்ரீட்டர்களின் தலைவனான இடொமீனியஸ், பதில் சொன்னான்:*

*'அதைப்பற்றி அதிகம் சொல்ல வேண்டியதில்லை. நீ எவ்வளவு துணிச்சலானவன் என்பது எனக்குத் தெரியும். ஒரு திடீர்த் தாக்கு தலுக்காக, கப்பல்களில் நாமனைவரும் ஒன்றாக இருக்கும்போது நீ எப்படி உன் வீரத்தைக் காண்பிப்பாய் என்பதும் எனக்குத் தெரியும். ஒரு வீரனின் மதிப்பை ஒரு திடீர்த் தாக்குதலைப் போல வேறெதுவும் வெளிக்கொண்டு வருவதில்லை. வீரன் யார் கோழை யார் என்று கண்டுகொள்ள அதுவே சிறந்த வழி. கோழை தன் நிறத்தை எப்போதும் மாற்றிக் கொண்டே இருப் பான். நேரத்துக்கு ஒரு பக்கம் என்று அவனால் இருக்க முடியும்.*

பயத்தின் காரணமாக அவனால் நிலையாக உட்கார முடியாது. அவன் கால்கள் ஒரே இடத்தில் நிற்காது. எப்போதும் அமைதியற்றிருப்பான். மரணத்தின் பேய்களைக் கற்பனை செய்யும் போதெல்லாம் அவனது இதயம் படபடவெனத் துடிக்கும். அவனது பற்களும் கடகடவென நடுங்கும். ஆனால் ஒரு வீரன் தன் நிறத்தை எப்போதும் மாற்றிக் கொள்வதே இல்லை. மற்றவர்களோடு இணைந்து மறைந்திருந்து தாக்கு வதற்காக வந்துவிட்ட பிறகு, தேவையில்லாமல் அவன் பயப் பட மாட்டான். அவனுடைய பிரார்த்தனையெல்லாம் கூடிய விரைவில் எதிரியை நேருக்கு நேர் சந்திக்க வேண்டும் என்ப தாகவே இருக்கும்.

'அந்த மாதிரி நேரத்தில் உனது தீர்மானத்தையும் உறுதியையும் எண்ணி உன்னை யாரும் குறை சொல்ல மாட்டார்கள். சண்டை யில் ஒரு ஈட்டியாலோ அம்பாலோ நீ காயப்பட்டுவிட்டால், அது நிச்சயமாக உன், கழுத்தின் பின் பக்கமாகவோ முதுகாகவோ இருக்காது. முன் வரிசையில் நீ எதிரியை நோக்கிச் சென்றபோது போரின் நெருக்கத்தில், உனக்கு ஏற்பட்ட காயம் உன் நெஞ் சிலோ வயிற்றிலோதான் இருக்கும்.

'ஆனால் நாம் இங்கே நின்று சின்னப் பையன்கள் மாதிரி பேசிக்கொண்டிருக்கக் கூடாது. அப்படிச் செய்தால் மக்கள் நம்மை வெறுக்க ஆரம்பித்துவிடுவார்கள். என் பாசறைக்கு உடனே சென்று ஒரு ஈட்டியை எடுத்துக்கொண்டு வா' என்று சொன்னான்.

அப்படி அவன் சொன்னதும், போர்க்கடவுள் ஏரிஸுக்கு இணை யான மெரியோனிஸ் உடனே பாசறைக்குள் விரைந்து சென்று ஓர் ஈட்டியை எடுத்து வந்து இடொமீனியஸோடு சென்றான். முழுக்க முழுக்கப் போர் செய்யும் மனதுடன் சென்ற அந்த இருவரும் பார்ப்பதற்குக் கொலைபாதகப் போர்க்கடவுள் ஏரிஸையும் அவனுடைய வெல்ல இயலாத மூர்க்கமான மகன் ரௌட்டைப் போலவும் இருந்தனர். ரௌட்டுக்கு முன்னால் மிகச்சிறந்த உறுதி படைத்த வீரனும் ஓடி விடுவான். ரௌட்டும் ஏரிஸும் த்ரேஸிலிருந்து கிளம்பிவிட்டால் எஃபீரியோடோ ஃப்லீஜியர்களோ அவர்களோடு சேர்ந்து, ஒரு பக்கத்துக்கு வெற்றியைக் கொண்டு வருவார்கள். இன்னொரு பக்கத்தின் பிரார்த்தனைகள் எல்லாம் செவிடன் காதில் ஊதிய சங்கென விடப்படும். அதைப்போல, தலைவர்களாகிய மெரி

யோனிஸூம் இடொமீனியஸூம் தங்களது வெண்கலக் கவச உடை பளபளக்க, ஒன்றாகக் கிளம்பி போருக்குப் போனார்கள்.

தன் மனத்தில் உள்ளதை மெரியோனிஸ்தான் முதலில் சொன்னான்:

'ட்யூகாலியனின் மகனே இடொமீனியஸ், எந்த இடத்திலிருந்து சண்டையில் கலந்து கொள்ள நீ முடிவு செய்திருக்கிறாய்? நமக்கு வலப்பக்கமா, மத்தியிலா அல்லது இடப்பக்கமா? அங்கேதான் கிரேக்க தற்காப்புப் படை மனமுடைந்து போகக்கூடிய வாய்ப்பிருக்கிறது என்று நினைக்கிறேன்' என்றான்.

அதற்கு க்ரீட்டர்களின் தலைவனான இடொமீனியஸ் பதில் சொன்னான்:

'மத்தியில் கிடக்கும் கப்பல்களைக் கவனிக்க வேறு வீரர்கள் இருக்கிறார்கள். இரண்டு அஜாக்ஸ்களும் அங்கிருக்கிறார்கள். அவர்களோடு நமது தலைசிறந்த வில்லாளியான ட்யூஸரும் இருக்கிறான். நின்று போடும் சண்டையையும் அவனால் சிறப்பாகச் செய்ய முடியும். போர் செய்ய வேண்டும் என்ற பற்றி எரியும் எண்ணத்தில் ஹெக்டர் இருக்கிறான். ஆனால் அவன் எவ்வளவு அஞ்சப்படத்தக்க வீரனாக இருந்தாலும் அவனுக்கு வேண்டிய தீனியைப் போட அவர்கள் இருக்கிறார்கள். சண்டை செய்வதில் அவனுக்கு எவ்வளவுதான் ஆர்வமிருந்தாலும், அவர்களுடைய உறுதிக்கும் வீரத்துக்கும் முன்னால் அவனால் ஈடுகொடுக்க முடியாது. கப்பல்களையெல்லாம் தீக்கிரையாக்கு வதற்கு முன்னர் அவர்களை அவன் வென்றாக வேண்டும். அவனுக்கு உதவி செய்யும் விதமாக ஜீயூஸே பற்றி எரியும் கொள்ளிக்கட்டையை கப்பல்கள்மீது வீசினாலொழிய அவனால் வெல்ல முடியாது. இந்த மண்ணில் விளையும் உணவைச் சாப்பிட்டு ஒரு வெண்கல ஆயுதத்தாலோ ஒரு பெரிய பாறையாலோ மரணிக்கக்கூடிய எந்த ஒரு சாதாரண மனிதாலும் டிலமானின் மகனாகிய மகா அஜாக்ஸை வெல்ல முடியாது. போர் அணிவகுப்புகளைச் சிதறடிக்கும் அக்கிலிஸே வந்தாலும் அஜாக்ஸ் எளிதில் விட்டுக் கொடுக்க மாட்டான். ஆனால் அக்கிலிஸைப் போல ஓடி ஓடித் தாக்குவதற்கு யாராலும் முடியாது. எனவே நாம் இடப் பக்கம் போவோம். வெற்றி நம் எதிரிக்கா அல்லது நமக்கா என்று விரைவில் தெரியும்' என்று பதிலுரைத்தான்.

அவன் அப்படிச் சொன்னதும் இடொமீனியஸ் கைகாட்டிய திசையில் சென்றான் மெரியோனிஸ். அவர்களிருவரும் முன் வகுப்பு அணியினரைச் சென்று சேர்ந்தனர்.

வீரத்தில் நெருப்பைப் போலத் தனது உதவியாளனோடும் அலங்காரமான கவச உடைகளோடும் இடொமீனியஸ் வருவதைக் கண்ட ட்ரோஜன்கள், எல்லாரும் ஒன்றாகச் சேர்ந்து அவனைத் தாக்குவதற்காகத் தமது வீரர்களுக்கு அழைப்பு விடுத்தனர். இந்தக் கும்பல் கப்பல்களின் பின்பகுதியில் சண்டையிட்டது. தூசிகள் நிறைந்த ஒரு சாலையில், ஊளை யிடும் கடுமையான காற்று வீசி, அந்தத் தூசியையெல்லாம் ஒரு பெரிய குழப்பமான மேகத்தைப் போலக் கிளப்பும். அதேபோல எதிரிகள் ஒருவரோடொருவர் மோதிக் கொண்டனர். ஒவ்வொரு வீரனும் தனது எதிரியைத் தன் வெண்கல ஈட்டியால் கொல்ல விரும்பினான். மரணப் போர்க்களம் நீண்ட சதை வெட்டும் ஈட்டிகளால் சுறுசுறுப்படைந்தது. வெண்கலங்கள் மின்னியதால் கண்கள் கூசின. இரண்டு படைகளும் பொருதியதால் கேடயங் கள் மோதி மின்னின. கல் மனம் கொண்டவர்களைத் தவிர மற்ற யாரும் அந்தக் காட்சியைப் பார்த்து ரசித்திருக்க மாட்டார்கள்.

க்ரோனஸின் ஆற்றல் மிகுந்த மகன்களான ஜீயூஸூம் பொசைட னும் எதிரெதிர் முகாம்களைத் தேர்ந்தெடுத்துக் கொண்டிருந் தனர். போர் வீரர்களுக்குச் சொல்ல வொண்ணாத துயரங்களை ஏற்படுத்தியிருந்தனர். அக்கிலிஸைக் கௌரவப்படுத்த எண்ணி ட்ரோஜன்களுக்கும் ஹெக்டருக்கும் வெற்றி கிடைக்க வேண்டும் என்று ஜீயூஸ் விரும்பினான். ஆனால் இலியத்தின் முன்னால் முழு கிரேக்கப் படையும் முற்றிலுமாக அழிந்து போய்விட வேண்டும் என்று அவன் நினைக்கவில்லை. தீட்டிஸையும் அவளுடைய மன உறுதி படைத்த மகனையும் அவன் கண்ணியப்படுத்திக் கொண்டிருந்தான், அவ்வளவுதான்.

ஆனால் பொசைடனோ, நீலக்கடலில் இருந்து திருட்டுத் தனமாக எழுந்து வந்து கிரேக்கர்களோடு சேர்ந்து கொண்டு அவர்களைத் தூண்டிக் கொண்டிருந்தான். ட்ரோஜன்களால் அவர்கள் தோற்கடிக்கப்படுவதைப் பார்க்க பொசைடனுக்குப் பொறுக்கவில்லை. அவன் ஜீயூஸ் மீது மிகவும் கோபமாக இருந்தான். ஆனால் இந்த இரண்டு கடவுள்களின் குடும்பமும் ஒன்று, பெற்றோரும் ஒருவரே. ஜீயூஸ் மூத்தவன், அதோடு மற்றவர்களைவிட அறிவார்ந்தவன். இதன் காரணமாகவே,

கிரேக்கர்களுக்குப் பொசைடன் வெளிப்படையாக உதவி செய்ய வில்லை. யாராவது ஒருவனின் உருவத்தில், மாறு வேஷத்தில் போய்தான் வீர உணர்வை ஊட்டி அவர்களைத் தூண்டிக் கொண்டிருந்தான்.

எனவே கடவுள்கள் எல்லாரும் இந்தப் போர் தொடர்பான கயிற்றை மாறிமாறி இரண்டு பக்கமும் இறுக்கமாக இருக்குமாறு இழுத்துக் கொண்டிருந்தனர். வெற்றி தோல்வி இருபக்கமும் சரிசமமாக இருந்தது. அந்தக் கயிறு அறுக்க முடியாதது. யாராலும் அதை உடைக்க முடியாது. ஆனால் அது பல வீரர்களை நொறுக்கிக் கொண்டிருந்தது.

இப்பொழுது இளைஞனாக இல்லாவிட்டாலும், தனது படை யினரை உற்சாகப்படுத்தும் விதமாகக் கத்திக்கொண்டே எதிரிகள் மீது பாய்ந்தான் இடொமீனியஸ். கபீசஸில் இருந்து அவர்களைச் சேர்ந்து ஆதரவளித்த ஆத்ரியோனியூஸைக் கொன்று ட்ரோஜன் களிடம் பதற்றத்தை ஏற்படுத்தினான்.

போர் தொடங்கிய செய்தி கேட்டு வந்த ஆத்ரியோனிஸ் முதல் முறையாக ட்ராய் நகருக்கு வந்திருந்தான். ப்ரியமின் மகள் களிலேயே மிகச்சிறந்த அழகியான கஸ்ஸான்ட்ராவை மண முடிக்க விரும்பினான்; ப்ரியமின் அனுமதியைக் கேட்டிருந்தான். மணமகளுக்குப் பரிசுப் பொருள்களைக் கொடுப்பதற்குப் பதிலாக, கிரேக்கர்கள் விரும்புகிறார்களோ இல்லையோ, அவர்களை ட்ரோஜன்களின் கரைகளிலிருந்து விரட்டியடிப்ப தாக அவன் ட்ரோஜன்களுக்கு வாக்கு கொடுத்திருந்தான். அவன் சொன்னதை ஏற்றுக் கிழவன் ப்ரியமும் தன் மகளைத் தருவதாக அவனுக்கு வாக்களித்திருந்தான். இந்த ஒப்பந்தத்தின் அடிப் படையில்தான் ஆத்ரியோனிஸ் போரில் கலந்துகொண்டான்.

ஆனால் இப்பொழுது இடொமீனியஸ் அவன்மீது ஒரு பளபளக் கும் ஈட்டியை எறிந்தான். அது வீறாப்பாய்த் திரும்பிய அவனைத் தாக்கியது. அவன் அணிந்திருந்த வெண்கல உடல் கவசம் அவனைக் காப்பாற்றவில்லை. ஈட்டி அவன் வயிற்றின் நடுப் பகுதியில் குத்தியது. அவன் தடாலெனத் தரையில் வீழ்ந்தான்.

'ஆத்ரியோனியூஸ், ப்ரியமின் மகளோடு உனக்கு நடந்திருக்கும் நிச்சயதார்த்தத்துக்காக நான் உன்னை வாழ்த்துகிறேன். ஆனால் அது முழுமையாக நிறைவேற நீ செய்த வாக்குறுதிகள்

காப்பாற்றப்பட வேண்டும். அது விஷயமாக உன்னோடு நாங்களும் வியாபாரம் பேசமுடியும். செழிப்பான இலியம் கோட்டையை அழிக்க நீ உதவி செய்வதானால், உன்னைக் கிரேக்கத்துக்கு அனுப்பி, அகமெம்னனின் அழகான மகள்களில் சிறந்த அழகியை உனக்கு மணமுடித்துத் தரமுடியும். எங்களது கப்பல்களில் ஏறுவதாக இருந்தால் இந்த வழியாக அடியெடுத்து வா. உனது திருமணத்தைப் பற்றிய ஒரு உடன்பாட்டுக்கு நாம் வரலாம். எங்கள் மணமகளுக்காக நீ தரவேண்டியது அளவுக்கு அதிகமாக இருக்காது.' இப்படிச் சொல்லிவிட்டு அவன் கால் களைப் பிடித்து தரதரவென வீரர்களுக்கு மத்தியில் இழுத்துக் கொண்டு போனான் வீரன் இடொமீனியஸ்.

அவனைக் காப்பாற்ற இப்பொழுது ஆசியஸ் வந்தான். அவனது தேரோட்டி அருகிலேயே தேரை ஓட்டிக் கொண்டு வர அவன் தேருக்கு முன் நடந்து வந்தான். அவனுடைய கழுத்துக்குக் கீழே குதிரைகளின் மூச்சு விடும் சப்தம் கேட்டுக் கொண்டிருந்தது. இடொமீனியஸைக் கொல்ல தன்னால் முடிந்ததையெல்லாம் செய்தான் ஆசியஸ். ஆனால் இடொமீனியஸ் அவனைவிட வேகமாக இருந்தான். அகப்படவே இல்லை.

தனது ஈட்டியால் ஆசியஸின் தொண்டையில் குத்தி அதன் முனையை உள்ளே அழுத்திச் செலுத்தினான். ஒரு கருவாலி மரம், நெட்டிலிங்க மரம் அல்லது ஒரு உயர்ந்த தேவதாரு மரம் விழுவது போல, ஆசியஸ் தடாலெனக் கீழே விழுந்தான். தனது தேருக்கும் குதிரைகளுக்கும் முன்னால் மண்ணைக் கையால் இறுக்கமாகப் பிடித்துக்கொண்டு, நீர்க்குழிகளைப் போன்ற சப்தம் எழுப்பிக்கொண்டு நெடுஞ்சாண்கிடையாகக் கிடந்தான்.

மதி கெட்டுப்போன அவனது தேரோட்டிக்கு உடனே தேரைத் திருப்பி எதிரிகளிடமிருந்து தப்பித்துப் போக வேண்டும் என்று கூடத் தோன்றவில்லை. தீர்மானமாக இருந்த ஆன்ட்டிலாக்கஸ் ஒரு ஈட்டியால் அவனது உடலின் மத்தியில் குத்தி நிறுத்தினான். அவ்ன் அணிந்திருந்த வெண்கல உடல் கவசமும் அவனுக்கு முறையான பாதுகாப்பு தர தவறிவிட்டது. அவனது வயிற்றின் நடுவில் குத்தியது ஈட்டி. அதைப்பிடித்த வண்ணம், தலைகீழாக அவன் தேரிலிருந்து கீழே விழுந்தான். வள்ளல் தன்மை கொண்ட நெஸ்டரின் மகனான ஆன்ட்டிலாக்கஸ், அவனது குதிரைகளை ட்ரோஜன் அணிகளை விட்டு, கிரேக்க அணியினர் இருந்த பக்கம் ஓட்டிச் சென்றான்.

ஆசியஸ் இறந்ததை எண்ணிக் கோபமுற்ற டெய்ஃபோபஸ், இடொமீனியஸின் அருகில் வந்து ஒரு ஈட்டியை எறிந்தான். ஆனால் கவனமாக இருந்த இடொமீனியஸ் அதைத்தவிர்த்து, தான் எப்போதும் எடுத்துச் செல்லும் வட்ட வடிவக் கேடயத்தின் பின்னால் அடைக்கலம் புகுந்து கொண்டான். வட்ட வடிவில் வளையம் வளையமாக எருதுத்தோலாலும், வெண்கலத்தாலும் அது வடிவமைக்கப்பட்டிருந்தது. ஒரு ஜோடி குறுக்கு ஆதாரக் கழிகளால் முறுக்கப் பட்டிருந்தது. அதன் கீழே அவன் குனிந்தபோது, அந்த வெண்கல ஈட்டி அவன் தலைக்கு மேலே பறந்தது. போகும்போது வெண்கலக் கேடயத்தின் விளிம்பைத் தொட்டு, ஒருவித வெற்று ஒலியை எழுப்பியது. ஆனாலும் டெய்ஃபோபஸின் உறுதியான கையிலிருந்து புறப்பட்ட அது வீணாகவில்லை. ஹிப்பாசஸின் மகனும் மக்கள் தலைவனு மாகிய ஹிப்சீனரை அது இடுப்புப் பகுதியில் கல்லீரலைத் தாக்கியது. உடனே அவன் கீழே விழுந்தான். அவனை வெற்றி கொண்ட பெருமையால் டெய்ஃபோபஸ் களிப்படைந்தான்.

அக்களிப்பால், 'ஆஹா, ஆசியஸின் மரணம் பழிவாங்கப் படாமல் போகவில்லை! ஆன்ம உலகின் ஆற்றல்மிகு வாயில் காப்போன் ஹயடிஸைச் சந்திக்கச் செல்லும்போது அவனுடைய மனம் லேசாக இருக்கும். ஏனெனில் அவனுக்கு வழிகாட்ட இப்பொழுது நான் ஒருவனை துணைக்கு அனுப்பிவிட்டேன்' என்று கொக்கரித்தான்.

அவன் அப்படிப் பெருமையாகப் பேசியது கிரேக்கர்களுக்குத் தேள் கொட்டியதைப் போல் இருந்தது. குறிப்பாக அது போர்த் திறம் மிக்க ஆன்ட்டிலோக்கஸின் இதயத்துக்கு நேரடியாகச் சென்றது. அவன் அத்தனை துயரத்திலும் தன் நண்பனை மறக்க வில்லை. ஓடிச்சென்று அவனைத் தன் கேடயத்தால் மறைத்துக் காப்பாற்ற முயன்றான். அவர்களது நம்பிக்கைக்குரிய வீரர்கள் மெசிஸ்ட்டியஸும் அலாஸ்டரும் அவனைத் தரையிலிருந்து உட்குழிந்த கப்பல்களுக்கு வேதனையில் முனகிக் கொண்டே தூக்கிச் சென்றனர்.

ஆனால் இடொமீனியஸ் இன்னும் ஆற்றலால் நிறைந்தவனாக நின்றான். ட்ரோஜன்களின் கண்களுக்கு, கருப்பு இரவைக் கொண்டுவர வேண்டும் அல்லது கிரேக்கர்களை அழிவிலிருந்து காப்பாற்றுவதற்காகத் தானே பூமியில் விழுந்து மடியவேண்டும் என்பதுதான் அவனுடைய ஒரே ஆசையாக இருந்தது. அவனு

டைய அடுத்த பலியாக வீரன் அல்கதூஸ் இருந்தான். அவன் ஈசிட்டீஸின் மகன் ஆங்கைசஸின் மூத்தமகளான ஹிப்போடே மியாவைத் திருமணம் செய்துகொண்டான், அதனால் ஆங்க்கை சஸின் மருமகனும் ஆவான். அவனுடைய தந்தையும் தாயும் மருமகளை மிகவும் நேசித்தனர்.

உண்மையைச் சொல்லப்போனால், அவளுடைய காலத்தில் அழகிலும், அறிவிலும் திறமையிலும் அவளை மிஞ்சிய ஒருத்தி இருந்ததில்லை. அகண்ட ட்ராய் நகரத்தில் தலைசிறந்த வீரன் அவளைத் திருமணம் செய்திருந்தான். ஆனால் அவனைத்தான் இடொமீனியஸின் கைகளால் பொசைடன் இன்று கொன்றி ருந்தான். தூக்கத்துக்கும் விழிப்புக்கும் இடைப்பட்ட ஒரு நிலையில் அல்கதூஸை பொசைடன் வைத்தான். குதித்துத் தப்பிக்கவோ பின்வாங்கிச் செல்லவோ முடியாதவாறு அவன் கைகால்களை விலங்கிட்டுக் கட்டினான். ஒரு கல்லறைக் கல்லைப்போல அல்லது இலைகள் கொண்ட ஒரு மரத்தைப் போல அசைவற்றவனாக அவன் நின்று கொண்டிருந்தான். அவனது மார்பில் இடொமீனியஸ் தன் ஈட்டியால் முழுமையாகக் குத்தினான். அது அவனது வெண்கலக் கவச உடையை நொறுக்கிக் கொண்டு உள்ளே சென்றது.

அதுவரை அவன் உயிரைக் காப்பாற்றிக் கொண்டிருந்த கவச உடை, ஈட்டி உள்ளே நுழைந்தவுடன் கடகடவென ஒலித்தது. தடாலெனத் தரையில் வீழ்ந்தான் அல்கதூஸ். ஈட்டி அவன் இதயத்தில் குத்தி நின்று கொண்டிருந்தது. இறக்கும் தருணத்தில் இதயத் துடிப்புகள் ஒவ்வொன்றும் ஈட்டியின் தடித்த முனையை ஆட்டிக் கொண்டிருந்தன. இறுதியாக மாட்சிமை மிக்க போர்க் கடவுள் ஏரிஸ் அந்த இயக்கத்தை நிறுத்தினான். அல்கதூஸைக் கொன்ற வெற்றியை உரக்கச் சொல்லிப் பெருமிதம் கொண்டான் இடொமீனியஸ்:

‘டெய்ஃபோபஸ், நான் மூன்று பேரைக் கொன்றிருக்கிறேன். நீ எங்கள் வீரன் ஒருவனை மட்டும் கொன்று விட்டுப் பீற்றிக் கொண்டிருந்தாய். இந்தக் கொடுக்கல் வாங்கல் எப்படியிருக் கிறது? வாவா அதிர்ஷ்டக்காரனே, நீயே என்னோடு மோதிச் சமாளி. உன் நாட்டுக்கு வந்திருக்கும் ஜீயூஸின் பிள்ளைகளில் ஒருவனின் தன்மை என்ன என்று நீயே தெரிந்து கொள்வாய். எங்கள் குடும்பத்தை உருவாக்கியதே ஜீயூஸ்தான். க்ரீட்டியின் தலைவனான மினோஸை முதலில் அவர் பெற்றார். மினோஸின்

மகன்தான் இணையற்ற ட்யூகாலியன். அகண்ட க்ரீட்டியில் நான்தான் ட்யூகாலியனின் தலைவன். உனக்கும் உன் அப்பனுக்கும் ட்ராயில் உள்ள அனைவருக்கும் வேதனை கொடுக்க என் கப்பல்களில் நான் இங்கு வந்துள்ளேன்' என்றான்.

அதைக் கேட்ட டெய்ஃபோபஸ் மனமுடைந்து போனான். பின் வாங்குவதா, பெரிய மனம் கொண்ட தன் நண்பர்களில் யாரையாவது உதவிக்கு அழைப்பதா அல்லது தனியாகவே நின்று ஏதாவது செய்வதா என்று அவனுக்குத் தெரியவில்லை. கடைசியில் யாரையாவது உதவிக்கு அழைக்கலாம் என்று முடிவு செய்த அவன், ஈனியாஸ் எங்கிருக்கிறான் என்று தேடினான். ஈனியாஸ் அணியில் தனியாக நின்று கொண்டிருந்தான். ஈனியாஸுக்கு எப்போதுமே கடவுளையொத்த ப்ரியமின் மீது ஒரு குரோதம் இருந்தது. ஏனெனில் யாருக்கும் குறையாத வீரம் கொண்டவனாக அவன் இருந்தபோதும் ப்ரியம் அவனுக்குக் கொஞ்சம்கூட மரியாதை கொடுத்தில்லை. டெய்ஃபோபஸ் அவனிருக்குமிடம் சென்றான்.

'ட்ரோஜன்களின் ஆலோசகனே ஈனியாஸ், உன் உதவி இப் பொழுது மிக அவசியமாகத் தேவைப்படுகிறது. இப்பொழுது நாம் உன்னுடைய சகலையான அல்கதூஸைக் காப்பாற்றியாக வேண்டும். உன் குடும்பத்தின் மீது உனக்கு உண்மையிலேயே அக்கறை இருக்குமானால், உடனே என்னோடு வா; உன் வீட்டிலேயே வாழ்ந்து, உன்னை ஒரு பிள்ளையைப் போல நடத்திய உன் சகோதரியின் கணவனைக் காப்பாற்று. மகா ஈட்டி யெறி வீரனாகிய இடொமீனியஸ் இப்பொழுதுதான் அவனைக் கொன்றான்' என அவசர அவசரமாகச் சொன்னான்.

அப்படி அவன் சொன்ன வார்த்தைகள் ஈனியாஸின் இதயத்துக் குள் நேரடியாகச் சென்றன. உடனே மனப்பூர்வமாக போரில் ஈடுபடும் எண்ணத்தோடு அவன் டெய்ஃபோபஸோடு சென்றான். ஆனால் ஒரு சிறுவனைப் போல இடொமீனியஸைப் பயமுறுத்த முடியாது. ஒரு தனியான இடத்தில் தன்னைத் தாக்கவரும் வேட்டைக்காரர்களின் கூட்டத்தை, முதுகு சிலிர்க்க, கண்கள் நெருப்பைப் போல மின்ன, கோரைப் பல்லை மேலும் கூர்மையாக்கிக் கொண்டு, வேட்டைக்காரனாக இருந்தாலும் சரி, வேட்டை நாயாக இருந்தாலும் சரியென, தன்னுடைய பலத்தில் நம்பிக்கை கொண்டு சந்திக்கும் மலைவாழ் ஆண் பன்றியைப் போல மகா ஈட்டியெறி வீரனாகிய இடொமீனியஸ் ஈனியாஸின்

தாக்குதலை எதிர்பார்த்து அவர்களுக்காகக் காத்திருந்தான். எனினும் உதவிக்காக அவன் அஸ்கலாஃபஸ், அஃபாரியூஸ், டெய்பைரஸ், மெரியோனிஸ், ஆன்டிலோக்கஸ் ஆகிய போர் முழக்கத்தின் நாயகர்களை அழைத்தான்.

அவர்களைக் கூப்பிட்டு அவசரமாகச் செய்தி சொன்னான்:

'இங்கே வாருங்கள் நண்பர்களே, வந்து எனக்கு உதவி செய்யுங்கள். நான் இங்கே தனியாக இருக்கிறேன். விரைவுப்பாத ஈனியாஸ் என்னைத் தாக்க வருவதைக் கண்டு அஞ்சுகிறேன். அவன் என்னைத் தாக்கத்தான் இப்பொழுது வந்து கொண்டிருக் கிறான். சண்டையில் கடுமையாகக் கொன்று குவிக்கும் ஒரு வீரன் அவன். அவனுக்கு இருக்கின்ற மிகப்பெரிய அனுகூலம் அவனுடைய இளமை. நம்முடைய வயதும் நம்முடைய வீரத்துக்கு இணையானதாக இருக்குமானால், சீக்கிரமே வெற்றி ஈனியாஸுக்கோ எனக்கோ கிடைக்கும்.'

அவன் அப்படிப் பேசிதும் நண்பர்கள் அனைவரும் அவனைச் சுற்றி இணைந்து நின்றனர்; தீர்மானமாக சாய்வாக நிறுத்தி வைக்கப்பட்ட கேடயங்களின் பின்னால் காவலாக நின்றனர். ஆனால் அந்தப் பக்கத்தில் ஈனியாஸும், ட்ரோஜன் அணியில் தன்னைப் போலவே தளபதிகளாக இருக்கும் டெய்ஃபோபஸ், பாரிஸ், மற்றும் கடவுளையொத்த அகீனர் ஆகிய தனது நண்பர்களை உதவிக்கு அழைத்தான். இடையனின் சொல் லுக்குக் கட்டுப்பட்டு அவனுக்கு இன்பமூட்டும் வகையில், ஆற்றில் தண்ணீர் குடிக்க அவன் பின்னால் செல்லும் ஆட்டு மந்தையைப்போல, ஈனியாஸின் நண்பர்களும் அவனுக்குப் பாதுகாப்பாக அவனைப் பின்தொடர்ந்து சென்றனர். ஈனியால் அதில் மகிழ்ந்தான்.

அல்கதூஸின் உடல் கிடந்த இடத்தைச் சுற்றி இப்பொழுது அவர்கள் தங்களுடைய நீண்ட ஈட்டிகளால் நெருக்கமாக நின்று, சண்டையிட்டுக் கொண்டனர். அவர்கள் ஒருவரையொருவர் குறிவைத்துத் தாக்க முயன்றபோது அவர்களுடைய மார்பில் இருந்த வெண்கலக் கவச உடைகள் சப்தித்தன. ஆனால் அவர்களில் ஈனியாஸ், இடொமீனியஸ் ஆகிய இரண்டு வீரர்களும் மற்ற அனைவரை விடவும் தலைசிறந்தவர்கள். போர்க்கடவுள் ஏரிஸுக்கு இணையானவர்கள். தங்களது கொடூரமான ஈட்டிகளால் ஒருவரையொருவர் வெட்டிக் கொல்ல எண்ணம் கொண்டவர்கள்.

இடொமீனியஸ்மீது ஈனியாஸ்தான் முதலில் ஈட்டி எறிந்தான். ஆனால் அதை எதிர்பார்த்திருந்த இடொமீனியஸ் அவனது வெண்கல ஈட்டியைத் தவிர்த்தான். அது பறந்து சென்று நிலத்தில் குத்தி நின்று ஆடிக் கொண்டிருந்தது. பின் இடொமீனியஸ் ஈட்டியெறிந்தான். அது ஈனியாஸின் வயிற்றில் முழுமையாகத் தாக்கியது. அவனது கவச உடையில் இருந்த ஒரு தட்டை உடைத்துக் கொண்டு அது சென்றதும் அவனுடைய குடல் சட்டென வெளியில் வந்து விழுந்தது. மண்ணைக் கைகளால் இறுக்கமாகப் பிடித்தவாறு ஈனியாஸ் விழுந்தான்.

நீண்ட நிழல் கொண்ட தனது ஈட்டியை அவன் உடலிலிருந்து இடொமீனியஸ் உருவி எடுத்தான். எனினும் அவன்மீது ஏராளமான ஏவுகணைகள் வந்து விழுந்து கொண்டிருந்தன. கணைகளின் எண்ணிக்கை அதிகமாகிக் கொண்டே போனது; அவனால் செத்தவனின் கைகளிலில் இருந்தும் தோளில் இருந்தும் அருமையான கவச உடைகளைக் கழற்றி எடுக்க முடியவில்லை. உடனே செயல்பட்டு மறுபடியும் ஈட்டியெறி யவோ எதிரியின் ஈட்டித் தாக்குதலைத் தடுக்கவோகூட அவனால் முடியவில்லை. எழுந்து ஓடி தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள வும் முடியாத அளவுக்கு மெதுவாக அவன் எழுந்ததனால், அந்த இடத்திலேயே நின்று சண்டையிட்டு, மரணத்தை நெருங்க விடாமல் தடுத்துக் கொண்டிருந்தான்.

இடொமீனியஸ் தளர்வாகச் சண்டையிட்டுக் கொண்டிருந்தான். அவன் பழித்துரைத்ததற்கெல்லாம் குரோதத்தை நெஞ்சில் வைத்துக் கொண்டிருந்த டெய்ஃபோபஸ் இப்பொழுது தன் பளபளக்கும் ஈட்டியை அவன் மீது எறிந்தான். ஆனால் இந்த இரண்டாவது முறையும் அவன் குறி தப்பியது. மாறாக அந்த ஈட்டி ஏரிஸின் ஒரு மகனான அஸ்கலாஃபஸைத் தாக்கியது. அவனது தோளைத் துளைத்து அந்தக் கனமான ஆயுதம் சென்றதும் அவன் தடாலெனத் தரையில் விழுந்து மண்ணைக் கவ்வினான். ஆனால் அவனுடைய கீர்த்திமிகு தந்தையான போர்க்கடவுள் ஏரிஸுக்குத் தன் மகன் போரின் உக்கிரத்தில் ஈட்டியால் அடிபட்டு இறந்துபோன செய்தி பிற்பாடுதான் தெரியவந்தது. அப்போது அவன் ஒலிம்பஸ் மலையின் உச்சியில் தங்க மேகங்களின் கீழே உட்கார்ந்திருந்தான். அவனும் மற்ற நித்தியக் கடவுளர்களும் அங்கேயே நிறுத்தப்பட்டிருந்தது ஜீயூஸின் திட்டத்தால்தான். அனைவருக்குமே போர் எல்லைமீறி போய்க் கொண்டிருப்பதாகத்தான் பட்டது.

இப்பொழுது அஸ்கிலாஃபஸுக்காக அவர்கள் நெருக்கமாக நின்று சண்டையிட்டுக் கொண்டிருந்தனர். அஸ்கிலாஃபஸின் பளபளக்கும் தலைக்கவசத்தைப் பிடுங்கினான் டெய்ஃபோபஸ். அப்போது விரைந்து தாக்கும் ஏரிஸுக்கு இணையான மெரியோனிஸ் பாய்ந்து வந்து ஒரு ஈட்டியால் அவனது தோளுக் கருகில் அவன் கையில் தாக்கினான். நீட்டிக் கொண்டிருந்த முன்பாகத்தோடு அந்தத் தலைக்கவசம் அவன் கைகளில் இருந்து நழுவி ஒரு சப்தத்துடன் கீழே விழுந்தது. ஒரு வல்லூரைப்போல மெரியோனிஸ் மறுபடியும் வேகமாக முன்னேறிப் பாய்ந்து வந்தான். டெய்ஃபோபஸின் கைகளில் குத்தியிருந்த ஈட்டியை உருவி எடுத்துக் கொண்டு விரைந்து சென்று தன் அணியினரோடு சேர்ந்து கொண்டான். டெய்ஃபோபஸின் சகோதரன் பொலிட்டிஸ், காயம்பட்ட சகோதரனின் இடுப்பில் கைகொடுத்து நிமிர்த்தி அவனை அந்த இடத்திலிருந்து நகர்த்தி விரைவுக் குதிரைகள் இருந்த இடத்துக்குக் கொண்டு சென்றான். அலங்காரமான தேரோடும் தேரோட்டியோடும் அவை சண்டை நடக்கும் போதிருந்தே அங்கே காத்திருந்தன. அவனை தேரில் ஏற்றிக் கொண்டு அவை நகருக்குள் சென்றன. வேதனையில் அவன் முனகிக் கொண்டிருந்தான். கையில் அடிபட்ட காயத்திலிருந்து ரத்தம் வழிந்து கொண்டிருந்தது.

ஆனால் மற்றவர்கள் அனைவரும் சண்டையைத் தொடர்ந்தனர். யுத்தத்தின் சப்தங்கள் காற்றில் பரவி விழுந்தன. ஈனியாஸ் முன்னே பாய்ந்து வந்து தன் முன்னால் நின்ற அஃபாரியூஸைத் தன் கூரிய ஈட்டியால் அவனது தொண்டையில் தாக்கினான். அவனது தலை சட்டெனப் பின்னால் திடீரெனத் தள்ளிக் கொண்டது. தன் கேடயம், தலைக்கவசம் இவற்றோடு அவன் மடங்கிக் கீழே விழுந்தான். இதயம் உடைக்கும் மரணம் அவனைத் தழுவியது.

இதற்கிடையில், தூன் திரும்பி நின்று கொண்டிருந்த தருணம் பார்த்து ஆன்ட்டிலோக்கஸ் பாய்ந்து அவனைக் குத்தி அவன் பிடரி நரம்பை முழுமையாக வெட்டி எறிந்தான். ஆயுதம் தரித்த தன் தோழனை நோக்கிக் கை நீட்டியபடி, பின்பக்கமாகத் தூன் மண்ணில் விழுந்தான். ஆன்ட்டிலாக்கஸ் அவன் மீது விழுந்து அவனுடைய கவச உடையைக் கழற்றினான். ஆனால் தன்னைத் தாக்க யாரும் வருகிறார்களா என்று கவனமாகப் பார்த்துக் கொண்டே செய்தான். ஏனெனில் ட்ரோஜன்கள் கும்பலாக

எல்லாப் பக்கமிருந்தும் வந்துகொண்டிருந்தார்கள். அங்கு வந்த அவர்கள் அவனது அகலமான பளபளக்கும் கேடயத்தில் தாக்கினார்கள். ஆனால் அவர்களது கொடுமையான ஈட்டிகள் ஆன்ட்டிலோக்கஸின் கழுத்துப் பகுதியின் மிருதுவான தோலைக் கூடக் கிழிக்க முடியவில்லை. ஏனென்றால், மழைபோல் ஈட்டிகள் பொழிந்து தாக்கிய நேரத்திலும், நெஸ்டரின் மகனான ஆன்ட்டிலோக்கஸுக்கு நிலநடுக்கக் கடவுளான பொசைடனின் பாதுகாப்பு இருந்தது.

கும்பலின் மீது எதிர்த்து ஈட்டியெறிய ஆன்ட்டிலோக்கஸ் தயாரானான். அப்படி ஒரு வாய்ப்பை எதிர்பார்த்துக் கொண்டிருந்த ஆசியூஸின் மகனான அடாமாஸ் சட்டெனப் பாய்ந்து, தன் கூரீட்டியால் ஆன்ட்டிலோக்கஸின் கேடயத்தின் மத்தியில் தாக்கினான். ஆனால் அழகிய கருநிற ரோமம் கொண்ட பொசைடன் ஆன்ட்டிலோக்கஸின் உயிர் போவதற்கு அனுமதி கொடுக்கவில்லை. ஈட்டியின் முனையை மழுங்கச் செய்தான். அதன் விளைவாகத் தீய்ந்துபோன கரிக்கட்டையாக ஈட்டி பாதி கேடயத்தில் குத்தி நின்றது. மீதி பாதி உடைந்து பூமியில் விழுந்தது. மரணம் தவிர்க்கப்பட்டது; அடாமாஸ் விரைந்து சென்று தன் கூட்டத்தாரோடு சேர்ந்து கொண்டான்.

ஆனால் அவனைப் பின் தொடர்ந்து சென்ற மெரியோனிஸ் தனது ஈட்டியால் அவனது கொப்பூழுக்கும் பிறப்புறுப்புக்கும் மத்தியில் தாக்கினான். அங்கே தாக்கும்போதுதான் பரிதாபத்துக்குரிய மனிதர்களுக்கு மிகமிகக் கடுமையான வேதனையும் வலியும் தருகின்ற போர்க்கள இறப்பு ஏற்படும். அதன் வழியாக ஈட்டி சென்றதும் இடையர்களால் கயிறு போட்டுக் கட்டி விருப்பத் துக்கு மாறாக இழுத்துவரப்படும் மலை எருது பிடிவாதம் பிடித்து இப்படியும் அப்படியும் திரும்புவதுபோல அடாமாஸ் வேதனையில் சுழன்று விழுந்தான். ஆனால் அவன் வெகுநேரம் அந்த வேதனையில் துடித்துக் கொண்டிருக்கவில்லை. மெரியோ னிஸ் ஓடி வந்து அந்த ஈட்டியை அவன் சதையில் இருந்து உருவி எடுக்கும் வரைதான் வேதனை எல்லாம். அதன் பிறகு இருள் அவன் கண்களைத் தழுவியது.

பின் டெய்பைரஸோடு மோதினான் ஹெலனியூஸ். தனது கிரேக்க வாளினால் அவனது பொட்டில் தாக்கினான். அது அவனது தலைக்கவசப் பக்கவாட்டுப் பட்டையை வெட்டிக் கொண்டு சென்றது. கழன்று கீழே விழுந்து உருண்டு கொண்டே

வீரர்களின் பாதங்களின் பக்கமாகச் சென்ற தலைக்கவசத்தை ஒரு கிரேக்க வீரன் எடுத்துக் கொண்டான். டெய்பைரஸின் கண் களுக்குள் கருப்பு இரவு இறங்கி ஆக்கிரமித்தது.

இதைப் பார்த்த போர்முழக்கத் தலைவனான மெனிலயஸ் கோபப்பட்டான். உரக்கக் கத்திக்கொண்டே ஹெலனியூஸ் மீது தன் கூரீட்டியைச் சுழற்றிய வண்ணம் பாய்ந்தான். ஹெலனியூ ஸும் தனது வில்லை இழுத்து நாணைப் பூட்டினான். இருவரும் ஒரே நேரத்தில் தாக்குவதற்குத் தயாரானார்கள். ஒருவன் கூரீட்டியுடனும் இன்னொருவன் நாணேற்றப்பட்ட அம்புடனும் தாக்கினர். அம்பு பயனற்றுப் போனது. ஹெலனியூஸ் மெனிலய ஸின் மார்புக் கவசத்தின் ஒரு தட்டில் தன் அம்பால் தாக்கினான். ஆனால் அகன்ற தரையில், கதிரடித்துப் பிரித்தெடுக்கும்போது தானிய மணிகள் சிதறுவது போல அம்பு விழுந்தது. காற்றடிக்கும் போதோ பிரித்தெடுக்கும் வேகத்திலேயோ கருப்பு மொச்சை களோ பயறு பட்டாணிகளோ சீழ்க்கையொலியுடன் தட்டை யான மண்வெட்டி போன்ற பாத்திரத்திலிருந்து எம்பிக் குதித்துப் போவதுபோல, மார்புத் தட்டில் பட்டுத் திரும்பிக் குதித்து வந்த வேதனை தரும் அம்பு வேறெங்கோ தூரத்தில் போய் விழுந்தது.

ஆனால் போர் முழக்கத்தின் தலைவனான மெனிலயஸ், மெருகூட்டப்பட்ட வில்லை ஏந்திக் கொண்டிருந்த ஹெலனியூ ஸின் கைகளில் தாக்கினான். அவனுடைய வெண்கல ஈட்டி அவனது கை வழியாக வில்லைச் சென்றடைந்தது. மரணத்தைத் தவிர்க்க வேண்டி, ஹெலனியூஸ் பின்வாங்கினான். தன் கூட்டத்தாரோடு போய் சேர்ந்து கொண்டான். அவனது கை மட்டும் சாம்பல் நிற ஈட்டியை இழுத்தபடி வெளியில் தொங்கிக் கொண்டிருந்தது. பெரிய மனம் கொண்ட அகீனர், அவனது காயத்திலிருந்து அந்த ஈட்டியை அப்புறப் படுத்தினான். தனது உதவியாளனிடமிருந்து வளைத்து முறுக்கப்பட்ட கம்பளியை வாங்கினான். அதைக்கொண்டு அவனுடைய காயத்தைச் சுற்றிக் கட்டி விட்டான்.

பெய்சாண்டர் நேரே கீர்த்திமிகு மெனிலயஸ் இருந்த இடத்துக்கு வந்தான் பொல்லாத விதிதான் அவனை அந்தப் பாதையில் வரவழைத்திருந்தது. போரின் உக்கிரத்தில் சாக வந்திருந்தான் அவன். இருவரும் நெருங்கி வந்தபோது, மெனிலயஸ் தன் குறியைத் தவற விட்டான். அது வழி விலகி வேறெங்கோ சென்றது. கீர்த்திமிகு மெனிலயஸின் கேடயத்தில் குத்தினான்

பெய்சாண்டர். ஆனால் அதைத் துளைத்துக் கொண்டு தன் ஈட்டியைச் செலுத்த அவனால் முடியவில்லை. அகன்ற அந்தக் கேடயம் ஈட்டியைத் தடுத்து நிறுத்தியது. கேடயக் குழியில் பட்டு உடைந்தது ஈட்டி. கேடயத்தைத் தாக்கியதில் பெய்சாண்டர் மகிழ்ச்சி கொண்டான். வெற்றியின் வாசத்தை நுகர்ந்தான்.

ஆனால் மெனிலயஸ் வெள்ளிக் குடையாணிகள் பொருத்தப் பட்ட தன் வாளால் அவனைத் தாக்கினான். பெய்சாண்டர் தனது கேடயத்தின் கீழிருந்து ஒலிவ மரத்தால் செய்யப்பட்ட நீண்ட மிருதுவான கைப்பிடி கொண்ட ஒரு அருமையான வெண்கலக் கோடரியை எடுத்தான். அவைகள் சந்தித்தன. மெனிலயஸின் தலைக்கவசத்தின் விளிம்பில் குதிரைமுடிக் குஞ்சமிருந்த இடத்துக்குச் சற்றுக் கீழே பெசியாண்டர் தாக்கினான். ஆனால் பெசியாண்டரின் நாசிக்குச் சற்று மேலே தாக்கினான். பெய் சாண்டரின் மூக்கு எலும்புகள் உடைந்தன. காயம்பட்ட கண் களுடன் முகமெல்லாம் ரத்தமாக, மெனிலயஸின் பாதங்களில் வீழ்ந்ததைப் போல மண்ணில் சாய்ந்தான் பெய்சாண்டர். திரும்ப எழ முயன்று இரண்டாக மடிந்து வளைந்து மறுபடி விழுந்தான் அவன். அவனது மார்பின்மீது கால்களை வைத்து அவனது கவச உடைகளை களைந்த மெனிலயஸ் வெற்றிக்களிப்பில் பேசினான்:

'திமிர்பிடித்த ட்ரோஜன்களே! இப்படித்தான் நீங்கள் கிரேக்கக் கப்பல்களிலிருந்து திரும்புவீர்கள் அவமானகரமான நடத்தை களில் நீங்கள் அனுபவம் மிக்கவர்கள். என்னை எப்படித் திட்டினீர்கள் அழுக்கு நாய்களே! பாருங்கள்! விருந்தோம்பலின் எல்லா விதிகளையும் மீறினீர்கள். விருந்தாளிகளின் பாதுகாவல னான, உரத்து இடிமுழக்கம் செய்யும் ஜீயூஸின் கோபத்தை உதாசீனப்படுத்தினீர்கள். உங்கள் இலியம் நகரை கூடிய விரை வில் அவர் தரைமட்டமாக்கப் போகிறார். என் மனைவியின் அரண்மனையில் நீங்கள் அனைவரும் நன்றாக விருந்தோம்பப் பட்டீர்கள். அதற்காக என் மனைவியைத் திருடிக் கொண்டு அவளோடு கப்பலில் சென்றீர்கள். எனது செல்வத்தில் பெரும் பகுதியை எந்தக் காரணமும் இல்லாமல் எடுத்துச் சென்றீர்கள். இப்பொழுது, எங்கள் அனைவரையும் கொன்று போட்டுவிட்டு, எங்கள் கப்பல்களையெல்லாம் தீக்கிரையாக்காமல் உங்கள் மனம் சாந்தியடையாது! தேவையில்லாமல் ஒரு யுத்தத்துக்கு ஆசைப் படுகிறீர்கள். ஆனால் நீங்கள் நிறுத்தப்படுவீர்கள்.

'ஓ தந்தை ஜீயூஸ்! நீங்கள் எல்லா மனிதர்களையும் கடவுளரையும் விட அறிவார்ந்த ஞானி என்று சொல்கிறார்கள். ஆனால் இதெல்லாம் நீங்கள் செய்வதுதான்! கொடுமைக்காரர்களான இந்த ட்ரோஜன்கள் தங்கள் விருப்பப்படியெல்லாம் செய்வதற்கு நீங்கள் அனுமதிக்கிறீர்கள். ஆனால் அவர்கள் மனம் பூராவும் அடுத்தவருக்குக் கெடுதி விளைவிப்பதிலேயே இருக்கிறது. எல்லா உயிர்களையும் அழித்துச் சமப்படுத்தும் மகா யுத்தம் புரிவதிலும் அதன் சப்தங்களில் திளைப்பதிலும்தான் அவர்களின் அடங்காத ஆசை உள்ளது. உறங்குவது, காதல் இன்பம் துய்ப்பது, இசை கேட்பது, நடனமாடுவது போன்ற எதிலுமே ஆர்வமில்லாமல் மக்கள் இருக்கிறார்கள். போரைவிட இவைகளில்தான் வெகுவாக ஒரு மனிதன் திருப்தியடைய முடியும். ஆனால் ட்ரோஜன்களோ போர் வெறி பிடித்து அலைகிறார்கள்.'

தன் எண்ணங்களைக் கொட்டி முடித்தவன், பெய்சாண்டரின் உடலில் இருந்து ரத்தம் தோய்ந்த கவச உடைகளைக் களைந்து தன் வீரர்களிடம் கொடுத்தான். பின் மறுபடியும் முன் அணிக்குச் சென்று சண்டையைத் தொடர்ந்தான்.

அவன் உள்ளே வந்ததும்தான் தாமதம், தலைவன் பாலிமீனிஸின் மகனான ஹர்பாலியன் மெனிலயஸைத் தாக்கினான். அவன் தனது தந்தையோடு ட்ரோஜன்களின் யுத்தத்தில் கலந்து கொள்ள வந்திருந்தான். ஆனால் அவன் தனது நாட்டுக்குத் திரும்பிப் போகப் போவதில்லை. மெனிலயஸை நெருங்கிய ஹர்பாலியன் அவனது கேடயத்தின் மையத்தில் தன் ஈட்டியால் தாக்கினான். ஆனால் கேடயத்தைத் துளைத்துக் கொண்டு ஈட்டி செல்லாததால், மரணத்தைத் தவிர்க்கும் பொருட்டு, உடனே பின்வாங்கித் தன் கூட்டத்தாரோடு போய் சேர்ந்து கொண்டான். ஆனால் எந்தப் பக்கமிருந்தாவது ஏதாவது ஏவுகணை தாக்க வருகிறதா என்று கவனித்துக்கொண்டே சென்றான்.

அவன் பின்வாங்கிய அதே நேரத்தில் மெரியோனிஸ் அவனை ஒரு வெண்கலத்தலை கொண்ட அம்பினால் அடித்தான். அவனின் வலப் பக்கப் பிட்டத்தைத் தாக்கிய அது, சிறுநீர்ப் பையை ஊடுருவி இடுப்பெலும்புக்குக் கீழிருந்து வெளியே வந்தது. ஹர்பாலியன் உடனே சாய்ந்தான். உயிர் போனவனாகத் தனது நண்பர்களின் கைகளிலேயே கிடந்தான். தரையில் நீண்டு இருந்த அவன் உடல் ஒரு இறந்த புழுவின் உடல் போலிருந்தது. அவனுடம்பிலிருந்து கருத்த ரத்தம் பொங்கி வந்து பூமியை

நனைத்தது. அவனைச் சுற்றிக் கூடியிருந்த வள்ளல் தன்மை கொண்ட பாஃப்லகோனியர்கள் கனத்த மனத்துடன் அவனுடலை ஒரு தேரில் ஏற்றிப் புனித இலியம் நகருக்கு ஓட்டிச் சென்றார்கள். அழுதுகொண்டே இருந்த அவனுடைய தந்தையும் அவர்களுடன் சென்றார். அவருடைய மகனின் இறப்புக்காக எந்த நஷ்ட ஈடும் தரப்படவில்லை.

ஆனால் ஹர்பாலியன் கொல்லப்பட்டது பாரிஸுக்குக் கடும் கோபத்தை ஏற்படுத்தியது. ஏனெனில் இந்த பாஃப்லகோனியர்கள் அவனுடைய விருந்தாளிகள். தன் நண்பனின் இழப்பு தந்த கோபத்தில் ஓர் அம்பை எய்தான் பாரிஸ்.

செல்வமும் நற்பிறப்பும் கொண்ட பாலியைடஸ் என்ற ஒரு முன்னறிவிப்பாளன் கோரிந்த்தில் வசித்து வந்தான். அவனுக்கு யூகீனர் என்று ஒரு கிரேக்க மகனிருந்தான். அவன் ட்ராய் நகருக்குக் கிளம்பி வரும்போதே தனது கொடிய விதியை நன்கு உணர்ந்தவனாக இருந்தான். ஏனெனில் அவன் தன் படுக்கையிலேயே கொடிய நோவினை தரும் ஒரு நோயால் சாக வேண்டும் அல்லது கிரேக்கர்களோடு கப்பலில் சென்று ட்ராய் நகரில் தன் முடிவைச் சந்திக்க வேண்டும் என்று அவன் தந்தை நற்குணமுள்ள பாலியைடஸ் ஏற்கெனவே முன்னறிவிப்பு செய்திருந்தார். எனவே அவன் கிரேக்கர்களுடன் கப்பலில் சென்றான். படையோடு செல்லாவிட்டால் கிரேக்கர்களுக்குக் அபராதமாகப் பெரிய தொகையைக் கட்டவேண்டும். அதைத் தவிர்க்க எண்ணியே சென்றான். அதோடு அப்படிச் செல்வதால் பொறுத்துக் கொள்ள விரும்பத்தகாத நோயின் கொடுமையிலிருந்தும் தப்பிக்கலாம். அவனைத்தான் தாடைக்குக் கீழும் காதுபக்கமும் பாரிஸ் தனது அம்பால் அடித்தான். அவனது உயிர் உடலை விட்டு உடனே பிரிந்தது. வெறுக்கத்தக்க இருள் அவனைச் சூழ்ந்தது.

பற்றி எரியும் தீபோல அவர்கள் சண்டையைத் தொடர்ந்து கொண்டிருந்தார்கள். ஆனால் கிரேக்கக் கப்பல்களுக்கு இடப் பக்கமாக அவனுடைய படைவீரர்கள் கிரேக்கர்களால் கொல்லப் பட்டுக் கொண்டிருந்தனர். இது எதுவும் ஜீயூஸுக்கு மிகவும் உகந்த ஹெக்டருக்குத் தெரியாது. சொல்லப்போனால், கிட்டத் தட்ட வெல்லும் நிலைக்கு வந்துவிட்டார்கள் கிரேக்கர்கள். அவ்வளவு அற்புதமாக பயன்தரும் விதத்தில் இந்தப் பூமியைச் சுற்றிக் கொண்டே இருக்கும், நில நடுக்கக் கடவுளான

பொசைடன் அவர்களை உற்சாகப் படுத்தியிருந்தான். அது மட்டுமின்றி, தானும் தன்னாலான முயற்சிகளைச் செய்து கொண்டிருந்தான்.

முதன் முதலில் மதில் சுவரை உடைத்துக் கொண்டு, கேடயங்கள் ஏந்திய கிரேக்கர்களை மீறி உள்ளே சென்ற பகுதியிலேயே ஹெக்டர் இன்னும் சண்டை போட்டுக் கொண்டிருந்தான். அங்கு தான் ஆய்லியூஸின் மகனான அஜாக்ஸ் மற்றும் ப்ரோட்டெசி லாஸின் கப்பல்கள் கடலில் நின்று கொண்டிருந்தன. அங்கே பாதுகாப்புச் சுவர் மற்ற இடத்தில் இருந்ததைவிட உயரம் குறைவானதாக இருந்தது. கிரேக்க காலாட்படையும் தேர்களும் கடுமையான தற்காப்பு முயற்சியில் ஈடிபட்டிருந்தன.

இந்தப் பகுதியில் இருந்த போட்டியர்கள், நீண்ட அங்கிகளை அணிந்த அயோனியர்கள், லாக்ரியர்கள், பித்தியர்கள் மற்றும் அருமையான ஈலியர்கள் அனைவருமே கடவுளையொத்த ஹெக்டரின் தாக்குதல்களில் இருந்து கப்பல்களைக் காப்பாற்ற மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தனர். அவனைப் பின் வாங்கச் செய்யவும் முடியவில்லை. அவர்களை நோக்கி நெருப்பைப் போல அவன் வந்தான்.

மெனெஸ்தியூஸின் தலைமையில், ஃபீடிஸ், ஸ்டைக்கியஸ் மற்றும் வீரம் செறிந்த பயஸ் ஆகிய ஆதரவாளர்களோடு ஏதென்ஸ் நகரத்திலிருந்து பொறுக்கி எடுக்கப்பட்ட வீரர்கள் அங்கே தற்காப்புச் சண்டையில் ஈடுபட்டிருந்தனர். ஈலியர் களுக்கு மீகிஸ், ஆம்ஃபியன், ட்ராசியஸ் ஆகியோரும், பித்தியர் களுக்கு மெடோன் மற்றும் தீர்மானமிக்க பொடார்சஸ் ஆகி யோரும் தலைமை ஏற்றிருந்தனர். இதில் மெடோன் மட்டும் ஆய்லியஸுக்கு முறைதவறிப் பிறந்தவனாவான். அந்த உறவுப்படி, அவன் அஜாக்ஸுக்கு சகோதரனாவான். ஆனால் அவன் ஆய்லியஸின் மனைவியும் தனது மாற்றாந்தாயுமான எரியொப்பிஸ் என்பவளின் உறவுக்காரனைக் கொலை செய் திருந்ததால் நாடுகடத்தப்பட்டு ஃபைலேசியில் வசித்து வந்தான். இவர்கள் இருவரும் பித்தியர்களின் முன்னும், பீட்டியர்களின் அருகிலும் நின்று முழு போர்க்கவச உடைகளில் கப்பல்களைக் காப்பாற்ற போர் செய்து கொண்டிருந்தனர்.

ஆய்லியஸின் மகனான, அஜாக்ஸ், டிலமானின் மகனான இன் னொரு அஜாக்ஸை விட்டு ஒரு கணம் கூடப் பிரிந்திருக்க

மாட்டான். குளம்பின் அடிப்பகுதிவரை வழிந்து வரும் வியர்வை யுடன், மெருகூட்டப்பட்ட நுகத்தடியால் மட்டுமே பிரிந்திருக் கின்ற, நிலத்தின் கடைகோடிவரை தரிசு நிலத்தைக் கஷ்டப்பட்டு உழுகின்ற கருப்பு முகம் கொண்ட ஒரு ஜோடி காளைகளைப் போல, இரண்டு அஜாக்ஸ்களும் இணைபிரியாதிருந்தனர். டிலமானின் மகன் அஜாக்ஸைச் சுற்றி அருமையான வீரர் குழாம் ஒன்று இருந்தது. அஜாக்ஸுக்கு உஷ்ணமும் களைப்பும் அதிக மாகும் போதெல்லாம் அவனுடைய கேடயத்தை அது வாங்கி வைத்துக் கொள்ளும்.

ஆனால் பெரிய மனம் கொண்ட ஆய்லியஸின் மகன் அஜாக்ஸோடு லோக்ரிய வீரர்கள் யாரும் கூடவரவில்லை. குஞ்சங்கள் கொண்ட வெண்கலத் தலைக்கவசங்கள், வட்ட வடிவக் கேடயங்கள், ஆஷ் மரத்தால் செய்யப்பட்ட ஈட்டிகள் போன்ற தேவைப்பட்ட ஆயுதங்கள் இல்லாத காரணத்தால் அவர்கள் நின்று சண்டையிட விருப்பமில்லாதவர்களாக இருந்தார்கள். வில், கம்பளியால் நன்கு சுற்றப்பட்ட கவண் கயிறுகள் ஆகியவற்றை நம்பி அவர்கள் இருந்தார்கள். இந்த ஆயுதங்களுடன்தான் அவர்கள் தம் தலைவனைப் பின்பற்றி இலியம் நகருக்கு வந்திருந்தனர். வந்தபிறகு அந்த ஆயுதங் களைப் பயன்படுத்திதான் ட்ரோஜன் அணிகளுக்குள் நுழைந் தனர். மற்ற அணியினர் தங்களது அலங்காரமான போருடை களுடன் ட்ரோஜன்களையும் வெண்கலக் கவசமணிந்த ஹெக்டரோடும் முன்வரிசையில் போரிட்டுக் கொண்டிருந்த போது, பார்வையிலிருந்து ஒதுங்கியவர்களாக லொக்ரியர்கள் பின்னாலிருந்து தங்களது ஆயுதங்களால் தாக்கிக் கொண்டி ருந்தனர். அம்புகளின் தொல்லையால் மிகவும் குழப்பமடைந்த ட்ரோஜன் வீரர்கள் மெல்ல மெல்லப் போரிடும் மன உறுதியை இழக்க ஆரம்பித்தனர்.

கிரேக்கக் கப்பல்களிலிருந்தும் பாசறைகளில் இருந்தும் பின்வாங்கி அவர்கள் காற்றடிக்கும் தங்களது இலியம் நகருக்குத் திரும்பிச் சென்றிருப்பார்கள். ஆனால் பாலிடாமஸ் வீரம் மிகுந்த ஹெக்டரிடம் சென்று பேசி, அவர்களைத் தடுத்தான்.

'ஹெக்டர், நல்ல உபதேசங்களை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று சொல்லும்போது நீ மிகவும் பிடிவாதமாக இருக்கிறாய். அரிதான போர்த்திறமையைக் கடவுள் உனக்குக் கொடுத்துள்ள காரணத்தால், யுத்த யுக்திகள் கூட மற்றவர்களைவிட உனக்குச்

சிறப்பாகத் தெரியும் என்று நீ நினைக்கிறாய். ஆனால் எல்லா வற்றுக்கும் உன்னால் பொறுப்பேற்றுக் கொள்ள முடியாது. கடவுள் ஒவ்வொரு மனிதனுக்கும் வேறுபட்ட திறமைகளை அளிக்கிறார். ஒருவன் போர் செய்வான். ஒருவன் நடனமாடு வான். இன்னொருவன் யாழின் இசைக்கேற்ப கவிதை பாடு வான். இன்னும் சிலர் நண்பர்களுக்கு அனுகூலமான நன்மை களைச் செய்வர். இடிமுழக்கம் செய்யும் கடவுளான ஜியூஸ் இத்தகு நல்ல மூளையைக் கொடுக்கிறார். அது அவர்களை அடிக்கடி அபாயத்திலிருந்தும் பேரழிவிலிருந்தும் காப்பாற்றும். ஏனெனில் அந்த மூளைக்காரன் அந்த நண்பர்களைவிடச் சிறப்பானதை நன்றாக அறிவான்.

'சரி, எது இப்போதைக்கு, சிறப்பானது என்று நான் நினைப்பதை உனக்குச் சொல்லிவிடுகிறேன். உன்னைச் சுற்றிப் போர் ஒரு வட்டமாக மூண்டுவிட்டது. நமது வீரம் செறிந்த படையினர் மதில் சுவரைப் புயல்போலத் தாக்கத்தான் செய்தார்கள். ஆனால் அதன் பிறகு அவர்களில் சிலர் செய்வதற்கு ஒன்றுமில்லாமல் ஆயுதங்களுடன் சும்மா நின்று கொண்டிருக்கின்றனர். மற்ற வீரர்களோ பல வகையான கஷ்டங்களையும் சமாளித்துக் கொண்டு கிரேக்கக் கப்பல்களின் பக்கமாகச் சிதறிக் கிடக்கிறார் கள். எனவே போதும் நம் படையினரைத் திரும்பப் பெற்றுக் கொள். உனது சிறந்த வீரர்களையெல்லாம் திரும்பி வரச்சொல். அதன் பிறகு நாமனைவ்ரும் ஒன்றுகூடி, கடவுள்கள் நமக்கு நிச்சயமான வெற்றியைக் கொடுப்பார்களேயானால், கப்பல் களைத் தாக்குவதென்றும், இல்லையெனில் அப்படியே அனை வரும் திரும்பிவிடவும் முடிவு செய்யலாம். நேற்று நாம் செய்ததற்கு இன்று கிரேக்கர்கள் பதிலடி கொடுக்கப் போகிறார் கள் என்று நான் அஞ்சுகிறேன். அவர்களின் கப்பல்களின் அருகில் ஒரு வீரன் இருக்கிறான். அவன் போர் செய்வதில் பேராசை கொண்டவனாக, அடங்காத அவா கொண்டவனாக இருக்கி றான். அவன் போர் செய்வதைவிட்டு ஒரு கணமும் ஓய மாட்டான் என்று தோன்றுகிறது.'

பாலிடாமஸின் அப்படிப் பேசியதும் அவனுடைய சமயோசித ஆலோசனை சரியாகப் பட்டது ஹெக்டருக்கு. அவசரமாக ஹெக்டர் அவனுக்கு பதில் சொன்னான்:

'பாலிடாமஸ், இங்கேயே இரு, நம்மில் சிறந்த வீரர்களை உன்னோடு வைத்துக்கொள். நான் போய் அங்கே சூழ்நிலை

எப்படி இருக்கிறது என்று பார்க்கிறேன். எனது உத்தரவுகளை அவர்களுக்குக் கொடுத்துவிட்டு நான் சீக்கிரம் வந்துவிடுவேன்' என்றுச் சொல்லிவிட்டுச் சென்றான். ட்ரோஜன் மற்றும் அவர்களின் ஆதரவாளர்களின் அணிகளின் ஊடே விரைந்து செல்லும்போது பனித் தொப்பி அணிந்த சிகரத்தைப் போல இருந்தான். அவனுடைய குரல் கேட்ட அனைவரும் அவன் அருகில் கூடினர். ஆனால் ஹெக்டர் மேலும் கீழுமாக முன் வரிசை அணிக்குச் சென்று டெய்ஃபோபஸ், உறுதியான தலைவன் ஹெலெனியூஸ், ஆசியஸின் மகன் அடாமாஸ், ஹிர்ட்டாகஸின் மகன் ஆசியஸ் ஆகியோர் தென்படுகிறார்களா என்று பார்த்தான்.

அவர்கள் அனைவருமே இறந்தோ அல்லது கடுமையாகக் காயம்பட்டோ கிடந்தார்கள். கப்பல்களின் பின்பகுதியில் இருவர் கிரேக்கர்களிடம் அடிபட்டு இறந்து கிடந்தார்கள். மற்றவர்கள் அனைவரும் காயம்பட்டவர்களாக, நகரச் சுவர் பக்கம் வந்திருந்தார்கள். ஆனால் அழுது கொண்டிருந்த போர்க் களத்தின் இடப் பக்கமாக அழகிய கூந்தலையுடைய ஹெலனின் கணவனான கடவுளையொத்த பாரிஸ் இருந்தான். அவன் தனது வீரர்களுக்கு உற்சாகமூட்டி, போர்செய்யத் தூண்டிக் கொண்டிருந் தான். ஹெக்டர் அவனருகில் சென்று அவனை அவமானப் படுத்தும் விதமாகப் பேசினான்

'பாரிஸ், கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி நீ. உன் தோற்றம்தான் அழகாக இருக்கிறது. நீ ஒரு காமவெறி பிடித்த ஒழுக்கங்கெட்டவன். நான் கேட்கிறேன், டெய்ஃபோபஸ், உறுதியான தலைவன் ஹெலெனியூஸ், ஆசியஸின் மகன் அடாமாஸ், ஹிர்ட்டாகஸின் மகன் ஆசியஸ் ஆகியோர் எங்கே? சொல்! ஆத்ரியானியூஸ் எங்கே? தயவுசெய்து சொல்! செங்குத் தான இலியத்தின் முடிவாக இது இருக்கும். முடி முதல் அடி வரை உனக்குச் சாவைத் தவிர வேறொன்றும் காத்திருக்க வில்லை' என்றான்.

அவனுக்குக் கடவுளையொத்த பாரிஸ் பதில் சொன்னான்:

'ஹெக்டர், ஒன்றுமறியாத ஒரு அப்பாவியை நீ உன் கோபத்தின் காரணமாகப் பழித்துரைக்கிறாய். என் தாய் ஒன்றும் முழுக் கோழையைப் பெறவில்லை. போர் செய்வதிலிருந்து நான் எப்போதும் ஒதுங்கியதும் இல்லை. கப்பல்களைத் தாக்கும்படி

நீ உன் வீரர்களுக்கு உத்தரவுகள் கொடுத்த அந்தக் கணத்தி லிருந்து, நாம் இங்கேதான் இருந்து கிரேக்கர்களோடு கருணை யின்றிப் போரிட்டுக் கொண்டுள்ளோம். டெய்ஃபோபஸையும் ஹெலனியூஸையும் தவிர. நீ கேட்கும் நண்பர்கள் அனைவரும் இறந்துவிட்டனர். அவர்கள் சண்டையை நிறுத்திக் கொண்டு பின்வாங்கிவிட்டார்கள். அவர்கள் இருவரும் நீண்ட ஈட்டிகளால் காயம் பட்டிருக்கிறார்கள். அவர்கள் உயிரை மட்டும் ஜீயூஸ் காப்பாற்றிவிட்டார்.

'உனக்கு இப்பொழுது எங்கே விருப்பமோ அங்கே என்னை அழைத்துச் செல். உன்னை மன உறுதியோடும் வீரத்தோடும் நாங்கள் பின் தொடர்வோம். இதுவரை அப்படித்தான் செய்துள்ளோம். எவ்வளவுதான் ஈடுபாடு இருந்தாலும், தன் தகுதிக்கும் திறமைக்கும் மேலே எந்த ஒரு வீரனாலும் போர் செய்ய முடியாது.

இந்த வார்த்தைகளைச் சொல்லி வீரன் பாரிஸ் தன் சகோதரனைச் சமாதானப்படுத்தினான். யுத்தத்தின் சப்தத்தையும் கோபத்தையும் சந்திக்க அவர்கள் இருவரும் சென்றனர். செப்ரியோனிஸ், இணையற்ற பாலிடாமஸ், ஃபால்சிஸ், ஆர்த்தியூஸ், கடவுளை யொத்த பாலிஃபீட்டிஸ், பால்மிஸ், அன்றைக்கு முதல் நாள் காலை அஸ்கானியாவிலிருந்து உபகாரமாகப் போர்செய்ய வந்திருந்த அஸ்கானியஸ் மற்றும் மோரிஸ் ஆகியோரைச் சுற்றி யுத்தம் உக்கிரமாக நடந்து கொண்டிருந்தது. அவர்கள் அனைவரையும் இப்பொழுது போர் செய்யுமாறு தூண்டிக் கொண்டிருந்தான் ஜீயூஸ்.

ஜீயூஸின் இடி நிரம்பிய வானத்திலிருந்து இறங்கிய பனிப்பேய்ப் புயல்காற்றைப்போல, ட்ரோஜன்கள் இப்பொழுது சண்டை யிட்டுக் கொண்டிருந்தனர். பேய்க்காற்று கடலை விவரிக்க முடியாத குழப்பத்தில் கலக்கிப் போடும். எண்ணற்ற அலைகள் நுரைதள்ளும் முதுகுடன் வளைவாக வடிவெடுத்து ஊர்வலம் போல ஆர்ப்பரிக்கும். அதைப்போல ட்ரோஜன் வீரர்கள் தம் தலைவர்களின் பின்னால் வந்தார்கள்; அணியணியாக, வெண்கலம் மின்ன, கொலைபாதக போர்க்கடவுள் ஏரிஸுக்கு இணையான ஹெக்டரோடு, அவனுடைய ஒட்டுமொத்தத் தலைமையில் வந்தார்கள். தனக்கு முன்னால் அவன் நெருக்க மான பதப்படுத்தப்பட்ட மிருகத்தோல் அடுக்குகளும், அடித் தடித்து வடிவமைக்கப்பட்ட வெண்கலமும் கொண்ட தனது

வட்டவடிவக் கேடயத்தைப் பிடித்திருந்தான். ஆம்! ஆம்! என்று சொல்வதுபோல அவனது பொட்டுகளில் அசைந்து கொண்டிருந் தது அவனது தலைக்கவசம். ஹெக்டர் முன்னேறிப் பாய்ந்து எதிரி அணியினரைப் பல இடங்களில் ஆராய்ந்தான். தான் கேடயத் துடன் சென்று தாக்கும்போது அவ்வணிகள் உடைந்து சிதறுண்டு போகும் என்று நம்பினான். ஆனால் கிரேக்கர்களின் மன உறுதியை அவனால் அசைக்க முடியவில்லை. முன்னால் நம்பிக்கையோடு வந்த அஜாக்ஸ் ஹெக்டருக்கு சவால் விட்டான்:

'அறிவார்ந்த ஹெக்டர், இன்னும் நெருங்கி வா. கிரேக்கர்களை இப்படி ஏன் பயமுறுத்த நினைக்கிறாய்? போரைப்பற்றி எங்களுக்கும் கொஞ்சம் தெரியும். ஜீயூஸின் கெட்ட சாட்டையின் கீழ் நாங்கள் இப்பொழுது இருக்கிறோம், அவ்வளவுதான். எங்கள் கப்பல்களை அழிக்கப் போவதாக நீ கற்பனை செய்கிறாய் என்று நினைக்கிறேன். எங்கள் கைகளும் அவைகளைக் காப்பாற்றத் தயாராக உள்ளன. உங்கள் நகரைப் பிடித்து அழிக்க வும் நாங்கள் தயாராக இருக்கிறோம். எங்கள் கப்பல்களை நீ பிடிப்பதற்கு முன் அதுதான் நடக்கப் போகிறது. உன்னைப் பொருத்தவரை, நீ தப்பித்து ஓடிப்போவாய். மேகங்களைப் போல தூசி கிளப்பிக்கொண்டு இலியம் நகருக்கு உன்னை ஏற்றிச் செல்லும் அழகிய பிடரிகளைக் கொண்ட உன் குதிரைகளைப் பருந்தைவிட வேகமாக ஓடவையுங்கள் என்று ஜீயூஸிடமும் மற்ற எல்லாக் கடவுளரிடமும் நீ கேட்டுப் பிரார்த்தனை செய்யும் நேரம் வந்துவிட்டது.'

அப்படி அவன் பேசியபோது மிகுந்த உயரத்தில் பறக்கும் கழுகு ஒன்று வலப்பக்கமாகப் பறந்து போனது. அந்த நற்சகுனத்தைக் கண்டவுடன் கிரேக்கர்களுக்கு உற்சாகமேற்பட்டது. மகிழ்ச்சி யில் அவர்கள் ஆர்ப்பரித்தனர்.

ஆனால் கீர்த்திமிகு ஹெக்டர் சினத்துடன் எச்சரித்தான்:

'அஜாக்ஸ், நீ ஒரு மகா முட்டாள். நீ தவறாகப் புரிந்து கொண்டாய். நீ என்ன பேசுகிறாய்? புயல் மேகங்களை விரட்டும் ஜீயூஸின் மகனாக, சீமாட்டி ஹீரா எனது தாயாக, அதீனியையும் அப்போலோவையும் போல நான் கௌரவிக்கப்படுவேன் என்பது எவ்வளவு நிச்சயமோ அவ்வளவு நிச்சயமாக இன்று கிரேக்கர்களுக்கு நான் சிம்ம சொப்பனமாக இருக்கப்

போகிறேன். எனக்கு முன்னால் நீ நின்று கொண்டிருப்பாயே யானால், லில்லி மலரைப் போல வெளுத்த உன் தோலை என் நீண்ட ஈட்டி பதம் பார்க்கும். மற்றவர்களோடு நீயும் செத்துப் போவாய். ஆமாம், உனது கப்பல்களின் அருகிலேயே இறந்து விழுவாய். அதன்பின் உனது சதையும் கொழுப்பும் ட்ரோஜன் நாய்களுக்கும் பிணந்தின்னும் பறவைகளுக்கும் உணவாகிப் போகும்.'

ஹெக்டர் முன்னேறிச் சென்றான். அவனைப் பின் தொடர்ந்து வீரர்கள் பேரொலி எழுப்பிக்கொண்டு சென்றனர். கிரேக்கர் களும் பதிலுக்குப் போர் முழக்கம் செய்தனர். தங்களது வீரத்தையெல்லாம் ஒன்றுதிரட்டி வைத்துகொண்டு, ட்ரோஜன் களின் தாக்குதலை எதிர்பார்த்துக் காத்திருந்தார்கள். இரண்டு படைகளிலிலிருந்தும் கிளம்பிய பேரொலி விண்ணை எட்டியது. ஒலிம்பஸ் மலையின் உச்சிவரை அந்த ஆரவாரம் சென்றது.

# ஜீயூஸை மீறிய படைநடவடிக்கை

**கதைச்சுருக்கம்**

***வரிகள் 01 - 152***

*ஒடிஸியூஸ், டயமீடிஸ், அகமெம்னன் அனைவரும் காயம் பட்டிருப்பதைப் பார்க்கிறான் நெஸ்டர். அகமெம்னனின் கோழைத்தனத்தை எடுத்துரைத்து அவனைத் தாக்குகிறான் ஒடிஸியூஸ். அகமெம்னனோடு பேசி அவனுக்குத் தெம்பூட்டு கிறான் பொசைடன்.*

***வரிகள் 153 - 360***

*ஜீயூஸோடு படுக்கையைப் பகிர்ந்துகொள்வதன் மூலம் அவனைத் தூங்க வைக்கத் திட்டமிடுகிறாள் ஹீரா. தன்னை அலங்கரித்து அழகு படுத்திக்கொள்கிறாள். காதல் வசிய தாயத்தை அஃப்ரோடைட்டியிடமிருந்து பெற்றுக் கொள் கிறாள். தன்னோடு ஒத்துழைக்கும்படி நித்திரா தேவியையும் கேட்டுக்கொள்கிறாள். ஹீராவும் ஜீயூஸுும் இணைகின்றனர். அதன் பின் ஜீயூஸ் உறங்கிவிடுகிறான். கிரேக்கர்களுக்கு உதவும் பணியைத் தொடரும்படி பொசைடனிடம் சொல்கி றாள் நித்திரா தேவி.*

**வரிகள் 361 – 439**

கிரேக்கப் படைகளை ஒன்றிணைக்கிறான் பொசைடன். ஒரு பாறையைக் கொண்டு ஹெக்டரை, சண்டை நடக்கும் இடத்துக்கு வெளியே கொண்டு போகிறான் அஜாக்ஸ்.

**வரிகள் 440 – 522**

தொடர்ந்து வீரர்கள் கொல்லப்படுகின்றனர். படுதோல்வி யடைந்து ட்ரோஜன்கள் ஓடுகின்றனர்.

# ஜீயூஸை மீறிய படைநடவடிக்கை

போரின் சப்தங்கள் பயங்கரமாகக் கேட்டுக்கொண்டிருந்தன. தனது பாசறையில் குடித்துக் கொண்டிருந்த நெஸ்டரின் காதுகளையும் அவை எட்டின. உடனே நெஸ்டர் மெக்கேயானை நோக்கினான்.

‘கடவுளையொத்த மெக்கேயான், இப்பொழுது என்ன செய்வதென்று நாம் யோசித்தாக வேண்டும். நமது துணிச்சல் மிக்க வீரர்கள் நமது கப்பல்களின் பக்கமாக எழுப்பும் அலறல்கள் அதிகமாகிக் கொண்டே போகின்றன. நீ இங்கு அமர்ந்து இப்போதைக்கு உனது மின்னும் மதுவைக் குடித்துக்கொண்டிரு. ஹெகாமிடீ வந்து சூடு படுத்திய தண்ணீரால் கட்டிப்பிடித்துப் போன ரத்தக் கட்டிகளை உனது காயத்திலிருந்து கழுவித் துடைத்துச் சுத்தப்படுத்தட்டும். நான் வேறெங்காவது போய் என்ன நடக்கிறது என்று பார்த்து வருகிறேன்.’

இவ்வார்த்தைகளைச் சொல்லிய நெஸ்டர், தன் பாசறையில் சாத்திவைக்கப்பட்ட மின்னும் வெண்கலக் கேடயம் ஒன்றை எடுத்துக்கொண்டான். அது குதிரைகளை அடக்குவதில் சிறந்த அவனுடைய மகன் த்ராசிமீடிஸுக்குச் சொந்தமானது. அதை அவன் தன் தந்தையிடமிருந்து பெற்றிருந்தான். கூரான வெண்கல முனைகொண்ட ஒரு உறுதியான ஈட்டியையும் எடுத்துக் கொண்டான் நெஸ்டர். வெளியே வந்ததும் வராததுமாகவே அதிர்ச்சியூட்டும் காட்சியைக் கண்டான். கிரேக்கர்கள் அனைவரும் படுதோல்வியடைந்து ஓடி வந்து கொண்டிருந்தார்கள். கர்வம் கொண்ட ட்ரோஜன்கள் அவர்களைத் துரத்தி வந்தார்கள். கிரேக்கச் சுவர் விழுந்துவிட்டது.

திறந்திருக்கும் மகா கடலானது சப்தமின்றி, பெருமூச்சு விட்டுக் கொண்டிருக்கும். ஆனால் சீழ்க்கையொலியுடன் வரும் புயல் காற்றை அது புரிந்து கொள்வதில்லை. ஆனால் அடிக்கும் காற்று தன் திசையை முடிவு செய்யும்வரை அலைகளால் இந்தப் பக்கமோ அந்தப் பக்கமோ அசைய முடியாது. அதைப்போல கிழவன் நெஸ்டர் இப்படியா அப்படியா என்று தடுமாறினான். விரைவுக் குதிரைகளுடன் இருக்கும் கிரேக்கர்களுடன் சேர்ந்து கொண்டு சண்டையில் கலந்து கொள்வதா அல்லது மக்கள் மேய்ப்பனாகிய அகமெம்னனைத் தேடிப் போவதா என்று அவனுக்குக் குழப்பமாக இருந்தது. இதற்கிடையில் சண்டையும் கொல்லப்படுதலும் தொடர்ந்து கொண்டிருந்தன. வாளோ வளைந்த ஈட்டியோ தாக்கும்போது வீரர்களின் நெஞ்சிலிருக்கும் கடினமான வெண்கலக் கவசங்கள் ஒலியெழுப்பின.

போகும்வழியில், காயம்பட்டுக் கிடந்த டயமீடிஸ், ஒடிஸியூஸ், அகமெம்னன் ஆகிய தலைவர்களைப் பார்த்தான் நெஸ்டர். சண்டை நடந்து கொண்டிருந்த இடத்திலிருந்து வெகு தூரத்தில் இருந்த நீலநிறக் கடல் பகுதியில் நிறுத்தப்பட்டிருந்தன கப்பல் கள். அக்கப்பல்களிலிலிருந்து அவர்கள் வந்துகொண்டிருந்தனர். முதன் முதலாக வந்த கப்பல்களெல்லாம் சமவெளியின் உட்பகுதியில் இழுத்து நிறுத்தப் பட்டிருந்தன. அவற்றின் பின்பகுதியை ஒட்டித்தான் கிரேக்கச் சுவர் எழுப்பப்பட்டிருந்தது. பெரிதாக இருந்தபோதும், கடற்கரையில் அத்தனை கப்பல் களையும் நிறுத்த முடியவில்லை. இடம் போதாமல் கப்பல்களை யெல்லாம் வரிசையாக விரிகுடா நீளத்துக்கு நிறுத்தி வைத்தனர். எனவே நடந்து கொண்டிருந்த சண்டையைப் பார்க்க தளபதி களெல்லாம் உள்பக்கமாக வரவேண்டியிருந்தது. ஆழமாக நொந்து போனவர்களாக இருந்த வீரர்கள், ஈட்டிகளின் மூலம் வீரத்தால் அவ்வப்போது தங்களைத் தூக்கி நிறுத்திக் கொண்டு இருந்தார்கள். கிழவன் நெஸ்டரைப் பார்த்த பிறகு, இன்னும் அதிகமாக வேதனைப்பட ஆரம்பித்தார்கள். தலைவன் அகமெம்னன் நெஸ்டரிடம் சொல்லத் தொடங்கினான்:

'நீலியூஸின் மகனே நெஸ்டர், கிரேக்கர்களின் மகா கீர்த்தியே, போர்க்களத்துக்கு உங்கள் முதுகைக் காட்டிவிட்டு நீங்கள் ஏன் இங்கு வந்தீர்கள்? கப்பல்களையெல்லாம் தீக்கிரையாக்கி விட்டு, நமது எல்லா வீரர்களையும் கொன்று போட்டுவிட்டுத் தான் இலியம் திரும்புவேன் என்று கீர்த்திமிகு ஹெக்டர் செய்த

அச்சுறுத்தலை, தனது வீரர்களிடம் பேசிய பேச்சை, நிறை வேற்றிவிடுவான் என்று நான் பயப்படுகிறேன். அவன் செய்த சத்தியம் இதுதான். அது இப்பொழுது உண்மையாகிக் கொண்டிருக்கிறது. ச்சே, நாசமாப்போக! நமது கப்பல்களின் பின்பக்கமாக அணிவகுத்து நிற்க நமது வீரர்கள் மறுப்பார் களேயானால், முழுப்படையும் என்மீது அக்கிலிஸ் மாதிரியே கோபமாக இருக்கிறது என்றுதான் அர்த்தம்.'

கிரேக்கத் தேரோட்டியான நெஸ்டர் அவனுக்குப் பதில் சொன்னான்:

'நீ சொல்வது மாதிரியான ஓர் அபாயம் நமக்கு நிச்சயமாக இருக்கத்தான் செய்கிறது. தூரத்து இடிமுழக்கம் செய்யும் ஜீயூஸால்கூட அதைத் தவிர்க்க முடியாது. நமக்கும் நமது கப்பல் களுக்கும் ஊடுருவித் தாக்க முடியாத பாதுகாப்பு என நாம் நமது மதில்சுவரைப் பற்றி நினைத்திருந்தோம். ஆனால் அது இப்பொழுது விழுந்துவிட்டது. நமது விரைவுக் கப்பல்களின் அருகில் நமது வீரர்கள் ஒரு நீண்ட ஆனால் நம்பிக்கையற்ற சண்டையில் ஈடுபட்டிருக்கின்றனர். நீ எவ்வளவுதான் உன்னிப் பாகக் கவனித்தாலும் கிரேக்க வீரர்கள் துரத்தப்படுவதும் தாக்கப்படுவதும் முன்னாலிருந்தா அல்லது பின்னாலிருந்தா என்று உன்னால் சொல்ல முடியாது. அவ்வளவு குழப்பமான சூழ்நிலையில் படுகொலை நடந்துகொண்டுள்ளது. அதன் பேரொலியோ விண்ணைத் தொடுகிறது. அடுத்து என்ன செய்ய வேண்டும் என்பதைப் பற்றி நாம் இப்பொழுது ஒரு முடிவுக்கு வந்தாகவேண்டும். நாம் சிந்திப்பதால் ஏதாவது நன்மை விளைய வேண்டுமானால் மறுபடியும் சண்டை செய்யப் போகவேண்டும் என்று நான் சொல்லமாட்டேன். காயம்பட்ட யாரும் இனி மறு படியும் சண்டை போட முடியாது' என்றான்.

மக்கள் தலைவனாகிய அகமெம்னன் பேசினான். 'நெஸ்டர், கப்பல்களின் பின்பகுதி வரை சண்டை வந்துவிட்டது. உறுதி யான மதிலோ மிகுந்த சிரமத்துக்குப் பிறகு வெட்டப்பட்ட அகழியோ பயன்படவில்லை. ஆனால் அதைத்தான் நமக்கும் நமது கப்பல்களுக்கும் ஊடுருவித் தாக்க முடியாத பாதுகாப்பு என நாம் நினைத்திருந்தோம். இப்படி எல்லா முயற்சிகளுமே வீணாகப் போகிறதென்றால் என்ன அர்த்தம்? இங்கேயே, நமது நாட்டிலிருந்து வெகுதொலைவில், இருந்த சுவடே தெரியாமல், நாமனைவரும் சண்டையிட்டுச் சாகவேண்டும் என்று எல்லாம்

வல்ல ஜீயூஸ் நமக்கு விதித்திருக்கிறார் என்று அர்த்தம். மனதார அவர் கிரேக்கர்களுக்கு உதவிக் கொண்டிருக்கும்போதும் நான் இப்படித்தான் நினைத்தேன். அருள் பாலிக்கப்பட்ட கடவுள் களின் அந்தஸ்துக்கு ட்ரோஜன்களை அவர் உயர்த்தியும் நம்மை ஆண்மையற்றவர்களாகவும் வைத்திருக்கின்ற இந்த நேரத்திலும் அப்படித்தான் உணர்கிறேன்.

'எனவே இப்பொழுது நான் சொல்வதைப் போல நீங்கள் அனைவரும் செய்ய வேண்டும். கடலுக்குப் பக்கத்தில் நிறுத்தி வைக்கப்பட்டுள்ள நமது கப்பல்களை இழுத்து வந்து உடனே நங்கூரத்தை விடுவித்து, இரவோடு இரவாகத் தப்பித்துப் போய் விடுவோம். அதுவரை ட்ரோஜன்கள் சண்டையைத் தொடர மாட்டார்கள் என்று நினைக்கிறேன். அபாயத்திலிருந்து தப்பித்து ஓடுவதில் எந்த அவமானமும் இல்லை. அது இரவானாலும் சரி. மாட்டிக் கொள்வதைவிட உயிரைக் காப்பாற்றிக் கொள்வது மேல்.'

அதனைக் கேட்டதும் விரைவாகச் சிந்திக்கும் ஒடிஸியூஸ் அவனை முறைத்துவிட்டுச் சொன்னான்:

'அகமெம்னன், ஏன் இப்படியெல்லாம் பேசுகிறாய்? அடச்சே, கீழ்த்தரமான படைகளுக்குத்தான் நீ தலைமையேற்றிருக்க வேண்டும். ஜீயூஸின் உத்தரவுப்படி, தொட்டிலில் இருந்து கல்லறைவரை போரிட்டு ஒவ்வொருவராக மடிய முடிவெடுத் திருக்கும் எங்களை மாதிரி வீரர்களுக்குத் தலைவனாக இருக்க உனக்குத் தகுதியில்லை. ஆக, 'அகண்ட தெருக்களைக் கொண்ட ட்ரோஜன் நகரத்துக்குப் போய்வருகிறேன்' என்று இப்படித்தான் நீ சொல்லப்போகிறாயா? அதற்குத்தான் நாங்கள் இவ்வளவு போராடினோமா? வாயை மூடிக்கொண்டிரு. வீரர்களுக்கு நீ சொன்னது காதில் விழுந்து தொலைக்கும். இவ்வளவு பெரிய படையை நிர்வகிக்கும் தலைவன் சொல்லக்கூடிய பேச்சா இது?

'உக்கிரமான போர் நடந்து கொண்டிருக்கும் இந்த நேரத்தில் திடீரென்று போரின் நடுவில் பிய்த்துக் கொண்டு, கப்பல்களில் ஏறி ஊரை நோக்கிப் போவதென்பது, ஏற்கெனவே போரில் எஜமானர்களாக இருக்கும் ட்ரோஜன்களுக்கு மிகவும் இனிப்பான செய்தியாக இருக்கும். அவர்கள் எதிர்பார்த்ததும் இதுதானே? இப்படிப் பேச, உனக்கு என்ன பைத்தியமா பிடித்து விட்டது? கப்பல்களெல்லாம் கடலுக்குள் இழுக்கப்பட்டுக்

கொண்டிருக்கும்போது, கிரேக்கர்களால் முன் அணியில் நின்று போர் செய்யவே முடியாது. தோளுக்கு மேல் பார்த்துக் கொண்டு, சண்டை போடுவதற்கான தைரியத்தை இழப்பார்கள் அவர்கள். உனது யுத்த தந்திரத்தின் மரண விளைவாகத்தான் அது இருக்கும் தலைவனே!'

மக்கள் தலைவனாகிய அகமெம்னன் பதில் சொன்னான்: 'ரொம்பக் கடுமையான திட்டு ஒடிஸியூஸ்! ஆனால் நீ சொன்னதெல்லாம் சரியென்று நான் ஒப்புக்கொள்கிறேன். வீரர்களின் மனத்தில் உள்ள எண்ணத்துக்கு எதிராகக் கப்பல் களைக் கட்டச் சொல்லி நான் சொல்ல மாட்டேன். ஆனால் நான் சொன்னதைவிடச் சிறந்த திட்டம் ஒன்றை உங்களில் ஒருவர் சொல்ல வேண்டும். இதில் அனுபவத்தில் முதிர்ந்தவர் இளை யவர் என்ற பேதம் தேவையில்லை. உங்களில் யார் அப்படி ஒரு திட்டத்தைக் கொடுத்தாலும் கேட்க, நான் ஆர்வமாகவும் விருப்பத்துடனும் இருக்கிறேன்.'

போர்முழக்கத்தின் தலைவனாகிய டயமீடிஸ் அவனுக்குப் பதில் சொன்னான்:

'நமக்கு இப்பொழுது தேவையான ஒரு வீரன் நமக்கு அருகில் தான் இருக்கிறான். நாம் வெகு தூரத்தில் அவனைத் தேட வேண்டியதில்லை. நான் உங்கள் குழுவிலேயே இளையவன் என்பதைப் பொருட்படுத்தாமல், நான் சொல்வதை உங்களால் ஏற்றுக்கொள்ள முடியுமா? ஏனெனில், நானும் உயர்ந்த ஒரு குடும்பத்தில் பிறந்தவன்தான். என் தந்தையும் உயர்ந்த குடிப்பிறந்தவர்தான்.

'என் தந்தையின் பெயர் டைடியூஸ். அவருடைய உடல் தீப்ஸ் நகரில் உள்ள ஒரு கல்லறை மேட்டின் கீழ் புதைக்கப்பட்டுள்ளது. அவர் போர்த்தியூஸின் பரம்பரையில் வருகிறார். போர்த்தியூ ஸுக்கு அக்ரியஸ், மெலாஸ், ஈனியூஸ் என்ற மூன்று இணையற்ற பிள்ளைகள் இருந்தனர். அவர்கள் ப்லியூரானிலும் செங்குத்தான காலிடானிலும் வசித்தனர். அந்த மூவரிலும் எனது தாத்தாவான ஈனியூஸ்தான் மிகவும் வீரமிக்கவர். ஈனியூஸ் தனது ஊரை விட்டு அவர் வாழ்நாளில் வேறு எங்கும் போகவில்லை. ஆனால் ஜீயூஸும் மற்ற கடவுளரும் என் தந்தை டைடியூஸுக்கு வேறு திட்டங்கள் வைத்திருந்தனர் போலும். அட்ரஸ்டஸின் மகள் களில் ஒருத்தியை என் தந்தை மணந்தபோது, அவர் அர்கோ

ஸுக்குச் சென்று அங்கு ஆடம்பரமாக ஒரு வீட்டுக்குக் குடி பெயர்ந்தார். வீடுமட்டுமன்றி, அங்கே அவருக்குப் பயிர் நிலங் களும் பல தனிப்பட்ட பழத்தோட்டங்களும் ஏராளமான ஆடு மாடுகளும் இருந்தன. ஈட்டி எறியும் கலையில் அவரோடு இணைத்துப் பேசத் தகுதியான கிரேக்க வீரர் ஒருவர்கூட அவர் காலத்தில் இல்லை.

'ஆனால் இவற்றையெல்லாம் நீங்களும் கேள்விப்பட்டிருப் பீர்கள். உண்மையா இல்லையா என்றும் உங்களுக்குத் தெரிந் திருக்கும். எனவே நான் முன் வைக்கும் எந்த (நல்ல) திட்டத்தை யும் நீங்கள் என்னுடைய பின்புலம் பணிவானது, கோழைத்தன மானது என்ற அடிப்படையில் ஒதுக்க முடியாது. என்னுடைய கருத்து என்ன என்றால், நாம் அனைவரும் போர்க்களத்துக்குச் சென்று பார்த்துவர வேண்டும். ஆமாம், நாமனைவரும் காயம் பட்டிருக்கிறோம் என்பது உண்மை ஆனாலும் நாம் போக வேண்டும். அங்கே சென்று நாம் சண்டை போட வேண்டாம். அவர்களின் ஏவுகணைகளைக் கவனமாகத் தவிர்த்துக்கொள் வோம். இல்லையெனில், நம்மில் ஒருவர் மீண்டும் காயமடையக் கூடும். ஆனால் அங்கே நாம் மற்றவர்களைப் போர் செய்யத் தூண்ட வேண்டும். மற்றவர்கள் யார் என்றால், ஏற்கெனவே நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்களாக இருந்தும். சண்டையில் கலந்து கொள்ளாமல் தவிர்த்துக் கொண்டவர்களை.'

அவன் சொன்னதை அனைவரும் ஒப்புக் கொண்டனர். மக்கள் தலைவனாகிய அகமெம்னன் முன் செல்ல, எல்லாரும் அவனைப் பின் தொடர்ந்து சென்றனர்.

இது எதுவுமே நிலநடுக்கத்தின் நாயகனாகிய பொசைடனின் கவனமான பார்வையில் இருந்து தப்பவில்லை. ஒரு கிழவனைப் போல உருமாறி, அவன் அவர்களைத் தொடர்ந்து சென்றான். அகமெம்னனின் வலக் கையைப் பிடித்துக்கொண்டு அவன் அவசரமாகச் சொல்லலானான்.

'அகமெம்னன், கிரேக்கர் ஓடுவதையும் கொல்லப்படுவதையும் நினைத்து நிச்சயமாக அக்கிலிஸ் உள்ளுக்குள் தனது கறுப்பு இதயத்தில் சந்தோஷப்பட்டுக் கொண்டுள்ளான். கொஞ்சம்கூட அறிவே இல்லாத முட்டாள் அவன். சரிசரி, அவன் நாசமாய்ப் போகட்டும். கடவுள் அவன் கண்களைக் குருடாக்கட்டும். உன்னைப் பொருத்தவரை தலைவா, உன் மீது கடவுள்கள்

அப்படியொன்றும் வருத்தமாகவோ கோபமாகவோ இல்லை. மாறாக, ட்ரோஜன்கள் இந்த அகன்ற சமவெளி முழுவதையும் தூசியால் நிரப்பும் நாள் வந்து கொண்டிருக்கிறது. அவர்கள் உங்கள் கப்பல்களையும் பாசறைகளையும் விட்டு ஓடிப் போவதை நீ உன் கண்களாலேயே பார்ப்பாய்.'

இந்த வார்த்தைகளைச் சொல்லிவிட்டுப் பேரொலி ஒன்றை எழுப்பிக்கொண்டே சமவெளிப்பக்கம் விரைந்து சென்றான் பொசைடன். அவன் எழுப்பிய சப்தம் ஒன்பது ·அல்லது பத்தாயிரம் வீரர்கள் போர்க்களத்தில் ஒன்றாகச் சேர்ந்தெழுப்பும் வீரப் போர்முழக்கம் போலிருந்தது. அவன் போட்ட சப்தம் ஒவ்வொரு கிரேக்கனின் இதயத்திலும் போர் செய்ய வேண்டும், இரக்கமின்றி எதிரியோடு சமர் செய்யவேண்டும் என்ற வீர எண்ணத்தை ஏற்படுத்தியது.

தன் சகோதரனும் மைத்துனனுமான பொசைடன் போர்க்களத்தில் சுறுசுறுப்பாக இயங்கிக் காரியங்கள் ஆற்றிக்கொண்டிருப்பதைத் தங்க அரியணையின் ராணியாகிய ஹீரா பார்த்துப் பூரித்துப் போனாள். ஒலிம்பஸ் மலையின் சிகரத்தில் அவள் நின்று கொண்டிருந்தாள். பல நீரூற்றுக்களைக் கொண்ட அய்டா மலையின் உச்சியில் ஜீயூஸ் அமர்ந்திருப்பதையும் அவள் பார்த்தாள். அந்தக் காட்சி அவள் மனத்தில் வெறுப்பை ஏற்படுத்தியது.

எனவே எருதுக் கண்ணாள் ஹீரா, புயல் மேகங்களைச் செலுத்தும் ஜீயூஸை எப்படி ஏமாற்றலாம் என்று யோசிக்க ஆரம்பித்தாள். அவனை ஏமாற்றுவதற்குச் சிறந்த வழி ஒன்றுதான் என்று முடிவு செய்தாள். தன் முடிவை எப்படிச் செயல்படுத்துவது எனச் சிந்தித்தாள். மிகச் சிறந்த முறையில் தன்னை அலங்கரித்துக் கொண்டு அய்டா மலைக்குச் செல்வது; ஜீயூஸைத் தன் அழகால் மயக்கிப் படுக்கைக்கு இழுப்பது, அவன் மயங்கினால் போதும். அவனுடைய விழிகளையும் கூர்மையான அறிவையும் உறக்க வெள்ளத்தில் மூழ்கடித்து எல்லாவற்றையும் மறக்க அடித்து விடலாம் என முடிவு செய்தாள்.

இவ்விதமாக யோசித்தவுடன், தன் மகன் ஹெஃபைஸ்டஸால் தனக்குக் கட்டிக் கொடுக்கப்பட்ட படுக்கையறையை நோக்கிச் சென்றாள். அவன் அவள் அறைக்கதவுகளைப் பொருத்தும் போது ஒரு ரகசிய பூட்டையும் அதில் பொருத்தியிருந்தான். அதை

வேறு எந்தக் கடவுளாலும் திறக்கவே முடியாது. ஹீரா உள்ளே சென்று அறையின் மெருகூட்டப்பட்ட கதவுகளைத் தாழ் போட்டுக்கொண்டாள். ஆசைகொள்ளத்தக்க அவள் உடம்பில் இருந்த எல்லாக் கறைகளையும் அமிர்தம் கொண்டு நீக்கினாள். அமிழ்த எண்ணெயைத் தன் உடலில் அபரிமிதமாகத் தடவிக் கொண்டாள். அவளது ஆடை அதனால் நறுமணமூட்டப் பட்டது. வெண்கலத் தரை கொண்ட ஜீயூஸின் அரண்மனையில் அது லேசாகக் காற்றில் படபடத்தால் போதும். அதன் நறுமணம் விண்ணையும் மண்ணையும் நிறைத்துவிடும். அதைக்கொண்டு அவள் தன் அழகிய உடலையும் தலைமுடியையும் மிருதுவாக்கி னாள். பின் தலைவாரினாள். மின்னும் தன் கூந்தலில் தன் கைகளாலேயே சடை பின்னினாள். பின் தன் தலையிலிருந்து தெய்வீகமான அழகுடன் கீழே விழுமாறு முதுகில் படர விட்டாள். பின் அதீனி மிருதுவானதாக நெய்து கொடுத்திருந்த அமிழ்த ஆடையொன்றை அணிந்து கொண்டாள். பின் உடையலங் காரத்தை ஏராளமான தையல் பூ வேலைகளோடு முடித்துக் கொண்டாள். தங்கத்தால் ஆன பிடிப்புகளைக் கொண்டு தன் மார்பின் குறுக்காக அதைப் பொருத்திக் கொண்டாள். பின் தனது இடுப்பில் ஒட்டியாணம் அணிந்துகொண்டாள். அதிலிருந்து நூறு குஞ்சங்கள் தொங்கின. குத்தப்பட்ட காது மடல்களில் இரண்டு மின்னும் காதணிகளை அணிந்தாள். ஒவ்வொரு காதணியும் மூன்று மூன்று பிரிவுகளாக ஒளி பொருந்திய அழகுடன் மின்னின. பின் அந்தத் தெய்விக தேவதை ஓர் அழகான புதிய தலைத்துணியையும் போட்டுக் கொண்டாள். அது சூரியனைப் போல ஒளிவீசியது. கடைசியாக, ஒளி பொருந்திய தன் பாதங்களில் காலணிகளையும் அணிந்து கொண்டாள்.

சிறப்பான முறையில் தன்னை அலங்கரித்துக் கொண்டபிறகு, தன் படுக்கையறையை விட்டு வெளியில் வந்தாள். மற்றவர் களை விட்டுவிட்டுத் தனியாக வருமாறு தன் மகள் அஃப்ரோ டைட்டிக்கு சைகை காட்டி அழைத்தாள். அவளிடம் தன் மனத்தில் உள்ளதைச் சொன்னாள்.

'அருமை மகளே, நான் உன்னிடம் உதவி கேட்க இருக்கிறேன். ஆனால் அதை நீ செய்வாயா? மாட்டாயா? என்பது எனக்குத் தெரியவில்லை. கிரேக்கர்களுக்கு நான் ஆதரவாக இருப்பது உனக்குப் பிடிக்காமல் இருக்கலாம். அதனால் நீ உதவி செய்யாமல் போகலாம். ஏனெனில் நீ ட்ரோஜன்களின் பக்கமல்லவா இருகிறாய்!'

அதைக்கேட்ட ஜீயூஸின் மகளான அஃப்ரோடைட்டி பதில் சொன்னாள்.

'மாட்சிமை பொருந்திய தேவியே ஹீரா, மகா க்ரோனஸின் மகளே, உன் மனத்தில் என்ன உள்ளதென்பதைச் சொல். என்னால் முடியுமென்றால், என்னிடம் நீ கேட்கும் உதவியை மகிழ்ச்சியோடு செய்யக் காத்திருக்கிறேன் நான்' என்றாள்.

தேவி ஹீரா ஏமாற்றும் தொனியில்,

'காதலையும் ஆசையையும் எனக்குக் கொடு. அந்த ஆற்றல்களினால்தானே நீ மனிதர்களையும் கடவுளரையும் வசப்படுத்தி வெற்றி கொள்கிறாய்! பயன் தரும் பூமியின் எல்லைவரை நான் போக இருக்கிறேன். அங்கே போய் கடவுளரின் மூதாதையான ஓஷனையும் ட்டீத்தினாயயும் பார்க்கப் போகிறேன். தூரத்து இடிமுழக்கம் செய்யும் ஜீயூஸ் என் தந்தை க்ரோனஸை சிறைப்பிடித்து, பூமிக்கும் முணுமுணுக்கும் கடலுக்கும் கீழே வைத்திருந்தபோது, என் அம்மா ரீயாவிடமிருந்து என்னை வாங்கித் தன் வீட்டிலேயே வைத்து அன்பாக வளர்த்தெடுத்த அன்னை ட்டீத்திஸ். அவர்களைப் போய்ப் பார்த்து அவர்கள் போட்டுக் கொண்டிருக்கும் முடிவற்ற சண்டையை ஒரு முடிவுக்குக் கொண்டுவரப் போகிறேன். ஒரு வாக்குவாதம் காரணமாக அவர்கள் இருவரும் சேர்ந்து படுத்து உறங்கி நீண்ட காலமாகிறது. அவர்களைச் சமாதானப் படுத்தி, இருவரையும் படுக்கையில் ஒன்றாகச் சேர்த்து வைத்துவிட்டேனென்றால், என்மீது அன்பும் மரியாதையும் அவர்களுக்கு உண்டாகும்.'

சிரித்துக் கொண்டே அஃப்ரோடைட்டி சொன்னாள்.

'மேதகு ஜீயூஸில் கரங்களில் உறங்கும் உன்னுடைய ஒரு வேண்டுகோளை நிராகரிப்பதென்பது தவறல்லவா? அதோடு, உன் வேண்டுகோளை நான் எப்படி நிராகரிக்க முடியும்? அது சாத்தியமே இல்லை.'

இப்படிச் சொல்லிவிட்டுத் தன் மார்பைத் திறந்து அதிலிருந்து அவள் ஆபரணப் பொருள்களால் அலங்கரிப்பட்ட ஒரு தாயத்தை எடுத்தாள். அதில்தான் காம இன்பம், ஆசை, நெருக்கம், ஞானிகளையும் முட்டாள்களாக்கும் இனிய தூண்டுதல் போன்ற எல்லா வசிய ஆற்றல்களும் இருந்தன. அதை ஹீராவின் கைகளில் வைத்தாள் அஃப்ரோடைட்டி.

'இந்த அலங்காரங்களுடைய தாயத்தை எடுத்துக் கொள்ளுங்கள். உங்கள் மார்பில் மறைத்து வைத்துக் கொள்ளுங்கள். எனது எல்லா வசிய ஆற்றல்களும் இதில்தான் உள்ளன. உங்கள் விருப்பம் நிறைவேறி நீங்கள் திரும்பி வருவீர்கள் என்பதில் எனக்கு எந்த சந்தேகமும் இல்லை' என்றாள்.

அவள் அப்படிச் சொன்னதும் எருதுக் கண்ணாள் ஹீரா புன்னகைத்தாள். தாயத்தை எடுத்து தன் மார்பில் கட்டிக் கொண்டு மறுபடியும் புன்னகைத்தாள்.

ஜீயூஸின் மகளான அஃப்ரோடைட்டி திரும்பிச் சென்றாள். ஒலிம்பஸின் உச்சியிலிருந்து விரைவாகக் கீழே வந்தாள் ஹீரா. முதலில் அவள் பயரியன் மலைத்தொடர் பகுதிகளிலும் அழகிய இமேதியா பக்கமும் இறங்கினாள். பின் குதிரைகளை வளர்த்து உருவாக்குவதில் சிறந்த த்ரேசியர்கள் வாழும் பனிபடர்ந்த மலைப் பொதும்புகள் வழியாகச் சென்றாள். மிக உயர்ந்த மலைச் சிகரங்கள் அங்கே இருந்தன. ஆனால் தரையில் கால் படாதவாறு சென்றாள். அதோஸ் என்ற ஊர் வழியாக நுரைக்கும் கடல் தாண்டி அவள் தலைவன் தோவாஸின் நாடான லெம்னா ஸுக்குச் சென்றாள். அங்கே இறப்பின் சகோதரனான உறக்கத்தின் கடவுளைப் பார்த்தாள்.

அவனது கைமேல் தன் கையை வைத்து,

'உறக்கமே, எல்லா மனிதர்களின் மற்றும் கடவுளர்களின் தலைவனே, இதுவரை நான் சொன்னதை நீ கேட்டிருக்கிறாய் என்பது உண்மையானால், இப்பொழுது நான் கேட்கப் போகும் உதவியையும் எனக்கு நீ செய்து கொடுக்க வேண்டும். உனக்கு நான் என்றென்றும் நன்றி உள்ளவளாக இருப்பேன். ஜீயூஸின் ஒளி பொருந்திய விழிகளை எனக்காக நீ உறக்கத்தால் முத்திரையிட்டு விடு. நான் அவனோடு நேரடியாகக் காதல் கொண்டு விட்டேன். நீ செய்யும் உதவிக்குப் பதிலாக நான் உனக்கு ஓர் அழகான நாற்காலியைத் தருவேன். ஊனமுற்ற என் மகன், கடவுளான ஹெஃபைஸ்டஸ் உனக்கு அதைத் தங்கத்தில் செய்து கொடுப்பான். அது உடைத்து அழிக்க முடியாததாக இருக்கும். அதன் கீழே கால் வைப்பதற்கு முக்காலி ஒன்றும் இருக்கும். நீ சாப்பிடும்போதுகூட உன் ஒளிபொருந்திய பாதங்களை அதில் வைத்து ஓய்வெடுத்துக் கொள்ளலாம்' என்று கூறினாள்.

அதற்கு இனிய உறக்கம் பதில் சொன்னான்.

'மாட்சிமை பொருந்திய தேவியே ஹீரா, மகா ஆற்றல் மிக்க க்ரோனஸின் மகளே, மற்ற நித்தியக் கடவுளர் யாரானாலும் அவர்களை உறங்க வைப்பது எனக்கு ஒன்றும் பெரிய காரியமல்ல. நம் அனைவரின் மூதாதையான் ஓஷனானாலும் சரி, உறங்க வைத்து விடுவேன். ஆனால் ஜீயூஸ் கேட்டுக்கொள்ளா மல், க்ரோனஸின் மகனருகில் சென்று அவருக்கு உறக்கத்தை ஏற்படுத்தும் துணிச்சல் எனக்கு இல்லை.

'இதற்குமுன் நீங்கள் எனக்குக் கொடுத்த ஒரு வேலையிலிருந்து நான் ஒரு பாடத்தைக் கற்றுக் கொண்டேன். ஜீயூஸின் திமிர் பிடித்த மகனான ஹெராக்ளிஸ் ட்ரோஜன்களின் இலியம் நகரை அழித்தொழித்து விட்டுக் கிளம்பி வந்து கொண்டிருந்தபோது, அவனுக்குத் தொல்லை கொடுக்க நீங்கள் முடிவு செய்தீர்கள். புயல் மேகங்களைச் செலுத்தி ஜீயூஸை நான் மெல்ல உறங்க வைத்தேன்.

'நீங்கள் ஒரு கடும் புயலைக் கடலில் எழுப்பி, செழிப்பான காஸ் தீவிலிருந்து நண்பர்களை விட்டு வெகு தூரத்துக்கு ஹெராக் ளிஸை எடுத்துச் சென்றீர்கள். விழித்தபோது ஜீயூஸ் கடும் கோபம் கொண்டார். அருகில் இருந்த கடவுளரையெல்லாம் தூக்கி எறிந்தார். முக்கிய குற்றவாளியாக என்னைத்தான் அவர் தேடினார். மனிதர்களையும் கடவுளரையும் ஆற்றலில் மிஞ்சும் இரவு மட்டும் என்னைக் காப்பாற்றி இருக்காவிட்டால், ஒலிம்பஸ் மலையிலிருந்து நான் சமுத்திரத்தில் தூக்கி வீசி யெறியப்பட்டிருப்பேன். இரவிடம் நான் அடைக்கலம் புகுந் தேன். எவ்வளவுதான் கோபம் இருந்தாலும், இரவானவளுக்குப் பிடிக்காத எதையும் செய்வதற்கு முன் ஜீயூஸ் ஒன்றுக்கு இரண்டு முறை யோசிக்க வேண்டியிருந்தது. இப்பொழுது நீங்கள் மறுபடியும் ஒரு சாத்தியமற்ற வேண்டுகோளுடன் வந்திருக் கிறீர்கள்!' என்றாள்.

அதைகேட்ட எருதுக்கண்ணாள் ஹீரா சொன்னாள். 'உறக்கமே, ஏன் இவ்வளவு பயப்படுகிறாய்? அந்தச் சமயம் அவருடைய அருமை மகன் ஹெராக்லிஸ் கடத்தப் பட்டதற்காக அல்லவா கோபப்பட்டார்? இப்பொழுதும் அவர் ட்ரோஜன்களுக்கு ஆதரவாக இருப்பார் என்று ஏன் நினைக்கிறாய்? வாவா, நான் சொல்வதைச் செய்து கொடு. இளைய க்ரேஸ்களில் ஒருத்தியை

உனக்கு மணமுடித்துக் கொடுக்கிறேன். அவளை உனது மனைவியாக்குகிறேன்.'

அவள் அப்படிச் சொன்னதும் மகிழ்ந்தான் உறக்கம்.

'நல்லது, வள்ளல்தன்மை கொண்ட பூமியை ஒரு கையாலும் மின்னும் கடலை இன்னொரு கையாலும் தொட்டுக் கொண்டு வாக்கு மீறக்கூடாத ஸ்டிக்ஸ் ஆற்றின் நீரின்மீது சத்தியம் செய்து கொடுங்கள். அப்போதுதான் கீழே க்ரோஸனோடு இருக்கும் கடவுளர்கள் அனைவரும் நமது சாட்சிகளாய் இருப்பர். நான் என் வாழ்நாள் பூராவும் ஆசைப்பட்டுக் கொண்டிருக்கும் பஸித்தீ எனும் க்ரேஸ் பெண்ணை மணமுடித்துக் கொடுப்பதாக எனக்கு வாக்குறுதி செய்து கொடுங்கள்' என்று கேட்டான்.

வெள்ளை நிறக்கை தேவதை ஹீரா ஒப்புக்கொண்டாள். (கீழுலக மான) டார்டாரஸில் உள்ள டைட்டன்கள் என்று அழைக்கப்படும் கடவுளர் ஒவ்வொருவரின் பெயரையும் குறிப்பிட்டு அவன் கேட்டுக்கொண்ட விதத்திலேயே வாக்குறுதியும் செய்து கொடுத் தாள். வாக்குறுதி செய்து கொடுத்ததும் லெம்னாஸ், இம்ப்ராஸ் ஆகிய ஊர்களைக் கடந்து இருவரும் பனியால் தங்களைப் போர்த்திக் கொண்டு வேகமாகக் கிளம்பிச் சென்றனர்.

அய்டா மலையின் அடிவாரத்தில் இருந்த லெக்டன் என்ற கடல்முனை வழியாக, மரங்களின் உச்சிக் கிளைகள் அவர்களின் பாதங்களின் கீழ் அசைந்தாட, பல ஓடைகள் உள்ள, காட்டு மிருகங்களின் தாயான அய்டா மலையை அடைந்தனர்.

ஆனால் ஜீயூஸின் பார்வையைத் தவிர்க்கும் பொருட்டு, ஒரு உயர்ந்த தேவதாரு மரத்தின் உச்சியில் ஏறி நின்றான் உறக்கம். அதுதான் அய்டா மலையிலேயே மிக உயர்ந்த மரம். அது பனிப்படலத்தின் ஊடாகச் சென்று சுத்தமான காற்றுவெளி வரை உயர்ந்து நின்றது. அங்கே கிளைகளால் தன்னை மறைத்துக் கொண்டு ஒரு கிளையின்மீது அமர்ந்தாள். 'வெண்கலத் தொண்டை' என்று கடவுளர்களாலும், 'கழுகாந்தை' என்று மனிதர்களாலும் அழைக்கப்பட்ட பாட்டுப் பாடும் மலைப் பறவையின் உருவம் எடுத்துக்கொண்டாள்.

உயர்ந்த அய்டா மலையில் உயரமான சிகரமான கார்காரஸுக்கு அருகில் சென்றாள் ஹீரா. மேகங்களை அணிவகுத்துச் செல்ல வைக்கும் ஜீயூஸ் அவளைப் பார்த்தான். அவளைப் பார்த்த

வுடனேயே ஆரம்ப காலத்தில் தங்கள் பெற்றோர்களுக்குத் தெரியாமல் இருவரும் படுக்கையைப் பகிர்ந்து கொண்ட நாட்களில் ஏற்பட்டது மாதிரியான காம இச்சை அவன் மனத்தில் எழுந்தது. அவளருகில் சென்றான்.

'ஹீரா, என்ன விஷயமாக நீ இங்கே வந்திருக்கிறாய்? ஏன் குதிரைகளோ தேரோ இல்லாமல் வந்திருக்கிறாய்?'

தேவதை ஹீரா ஏமாற்றும் விதமாகப் பதில் சொன்னாள்: 'பயன் தரும் பூமியின் எல்லைவரை நான் போய்க்கொண்டிருக்கிறேன். அங்கே போய்க் கடவுளரின் மூதாதையான ஓஷனையும், என் தாய் ரீயாவிடமிருந்து என்னை வாங்கி, தன் வீட்டிலேயே வைத்து அன்பாக வளர்த்தெடுத்த அன்னை ட்டீத்திஸையும் பார்க்கப் போகிறேன். அவர்களோடு பேசி அவர்கள் போட்டுக் கொண்டிருக்கும் முடிவற்ற சண்டையை ஒரு முடிவுக்குக் கொண்டுவரப் போகிறேன். ஒரு வாக்குவாதம் காரணமாக அவர்கள் இருவரும் சேர்ந்து படுத்து உறங்கி நீண்ட காலமா கிறது. அவர்களைச் சமாதானப் படுத்தி, இருவரையும் படுக்கை யில் ஒன்றாகச் சேர்த்து வைத்துவிட்டேனென்றால், என்மீது அன்பும் மரியாதையும் அவர்களுக்கு உண்டாகும். எனது குதிரைகளையா கேட்டீர்கள்? மண்ணையும் கடலையும் கடந்து என்னைக் கொண்டு செல்லத் தயாராக அவைகள் அய்டா மலையின் அடிவாரத்தில் காத்திருக்கின்றன. ஆனால் நான் இப்பொழுது ஒலிம்பஸில் உங்களைப் பார்க்கத்தான் வந்தேன். ஆழமான ஓஷனை நான் உங்களிடம் சொல்லாமல் சந்திக்கச் சென்றால் நீங்கள் கோபமடையக் கூடும் என்பதால் உங்களைப் பார்த்து சொல்லிவிட்டுப் போகலாம் என்று வந்தேன்.'

புயல் மேகங்களைச் செலுத்தும் ஜீயூஸ் சொன்னான்: 'ஹீரா, இந்தப் பயணத்தை நீ கொஞ்சம் தள்ளி வைக்கலாம். வா, நாம் படுக்கைக்குச் செல்வோம். காதலின் இன்பங்களைச் சுகிப்போம். எந்த தேவதையும் அல்லது மானிட அழகியையும் பார்த்து என் இதயத்தில் இதுவரை இதுபோன்றதொரு பேராவல் எழுந்த தில்லை. கடவுள்களைப் போன்ற பெய்ரிதூஸை ஈன்றெடுத்த இக்சியானின் மனைவியை நான் விரும்பினேன். தனது காலத்தில் ஈடிணையற்ற நாயகனாகத் திகழ்ந்த பெர்சியூஸைப் பெற் றெடுத்த அக்ரிஸியூஸின் மகளான மெல்லிய கணுக்கால்களைக் கொண்ட டானியை நான் விரும்பினேன். கடவுளையொத்த ரடமாந்தூஸ் மற்றும் மினோஸ் ஆகியோரை எனக்குப் பெற்றுக்

கொடுத்த, தொலை தூரங்களிலும் அறியப்பட்ட புகழ்மிக்க ஃபீனிக்ஸின் மகளை நான் விரும்பினேன். சிமீலியை விரும்பி னேன். தீப்ஸின் அல்க்மீனியை விரும்பினேன். சிங்க நெஞ்சம் கொண்ட ஹெராக்லிஸை அவள் பெற்றுக் கொடுத்தாள். மனிதர்களை இன்புறச் செய்த டயொனைசஸைப் பெற்றுக் கொடுத்தாள் சிமீலி. அழகிய கூந்தலைக் கொண்ட சீமாட்டி டிமீட்டரை விரும்பினேன். ஈடிணையற்ற லீட்டோவை விரும்பி னேன். உன்னையும்தான் விரும்பினேன். ஆனால் உனக்காக என் மனத்தில் இப்பொழுது எழும் இச்சையைப் போல வேறெப் போதும் எழுந்ததில்லை. இத்தனை இனிய காமம் என்னை இதுவரை தின்றதில்லை' என்றான்.

இப்பொழுதும் தேவதை ஹீரா ஏமாற்றும் விதமாகவே பதில் சொன்னாள்: 'க்ரோனஸின் அஞ்சப்படும் மகனே, நீங்கள் இப் பொழுது என்ன சொல்ல வருகிறீர்கள்? நீங்கள் விரும்புவது போல நாம் இருவரும் அய்டா மலையின் உச்சியில் காதல் செய்வோமானால், எல்லாரும் எல்லாவற்றையும் பார்த்து விடுவார்கள். யாராவது ஒரு நித்தியக் கடவுள் நமக்குள் நடப்பதைப் பார்த்துவிட்டு அதைப்பற்றி மற்ற கடவுள்களிடம் சொல்ல விரைந்து சென்றால் என்னாவது? அப்படிப்பட்டச் சூழ்நிலையில் படுக்கையில் இருந்து எழுந்து உங்கள் அரண்மனைக்குச் செல்ல நான் விரும்பவில்லை. எப்படிப்பட்ட வதந்தி உலாவரும் என்று எண்ணிப் பாருங்கள். ம்ஹூம், என்னால் முடியாது. அப்படியே நீங்கள் விரும்பினால், உங்கள் மகன் ஹெஃபைஸ்டஸ் உங்களுக்காகக் கட்டிக் கொடுத்த படுக்கையறை உள்ளது. அவன் அந்த அறைக்குச் செய்த கதவுகள் மிகவும் உறுதியானவை. நாம் அங்கே போகலாம். உங்கள் மனதுக்கும் படுக்கைதான் உகந்ததாக இருக்கும் என்று கூற, புயல் மேகங்களைச் செலுத்தும் ஜீயூஸ் பதில் சொன்னான்:

'ஹீரா, எந்தக் கடவுளாவது அல்லது மானிடனாவது நம்மைப் பார்த்துவிடுவார்கள் என்று யோசிக்காதே. ஒரு தங்க மேகத்துக்குள் உன்னை நான் மறைத்து வைப்பேன். தன் கிரணக் கதிர்களின் துணைகொண்டு இந்த பிரபஞ்சம் முழுவதையும் தெளிவாகப் பார்க்கின்ற சூரியனாலும் மேகத்தை ஊடுருவி உன்னைப் பார்க்க முடியாது' என்றான்.

க்ரோனஸின் மகன் இப்படிச் சொல்லிவிட்டு ஹீராவைத் தன் கைகளில் ஏந்திக்கொண்டான். தெய்வீக பூமியானது அவர்

களுக்குக் கீழே வசந்தகால மலர்களையும் புல்வகைகளையும் க்ரோகஸ் மலர்களையும் சொரிந்தது. நெருக்கமான ஹயாசிந்த் மலர்களால் ஒரு மிருதுவான படுக்கையை விரித்துப் பூமிக்கு மேலே அவர்கள் இருக்குமாறு செய்தது. தங்க மேகத்தால் மூடப்பட்டவர்களாக அதில் அவர்கள் படுத்துக் கிடந்தனர். அதிலிருந்து மின்னும் பனித்துளிகள் மழைபோல் பொழிந்து கொண்டிருந்தன.

கார்காரஸ் மலையின் உச்சியில், உறக்கமும் காதலும் மாறிமாறித் தழுவி வெற்றிகொள்ள, மனைவியைச் சுற்றி கைகளைப் போட்டுக்கொண்டு கிடந்தான் தந்தை ஜீயூஸ். உடனே கிரேக்கக் கப்பல்கள் இருந்த பக்கம் பறந்து, இனிய உறக்கம் இவ்வுலகைச் சுற்றி வரும் நிலநடுக்க நாயகனான பொசைடனிடம் இவ்விஷயத்தைச் சொல்லச் சென்றான். அவனிடம் சென்ற உறக்கம் அவசரமாகச் சொன்னான்:

'பொசைடன், கிரேக்கர்களுக்கு இப்பொழுது நீ உன் மனதார உதவி செய். அவர்கள் கை ஓங்குமாறு செய். கொஞ்ச நேரமே என்றாலும் பரவாயில்லை. ஜீயூஸ் தூங்கிக் கொண்டிருக்கிறார். ஹீரா அவரைத் தன்னோடு கலவியில் ஈடுபடுமாறு செய்தவுடன் நான் அவள் கேட்டுக்கொண்டபடி ஜீயூஸை ஒரு ஆழமான தூக்கத்தில் வைத்துவிட்டேன்' என்று உறக்கம் அவசரமாகச் சொன்னான்.

பின் மனிதர்கள் வாழும் புகழ்மிகு நாடுகளுக்குச் சென்றான் உறக்கம். இப்பொழுது பொசைடன் முன்னைவிட அதிகம் உற்சாகம் கொண்டவனாக கிரேக்கர்களை அணிதிரட்டச் சென்றான். ஒரு பெரும் பாய்ச்சலில் முன் வரிசை அணி வகுப்புக்குச் சென்று தன் உத்தரவுகளைக் கொடுத்தான்:

'கிரேக்க வீரர்களே, நமது கப்பல்களை அழித்து நம்மை வெற்றி கொண்டு அழியாக் கீர்த்தி பெறும் வாய்ப்பை மீண்டும் ப்ரியமின் மகனான ஹெக்டருக்கு நான் தரப்போகிறோமா? நிச்சயம் அப்படி செய்யப்போவதாக அவன் பீற்றிக் கொண்டிருக்கிறான். இதற்குக் காரணம் உட்குழிந்த கப்பல்களுக்கு அருகிலேயே கோபமாக அக்கிலிஸ் உட்கார்ந்திருந்திருப்பதுதான். ஆனால் நாம் அனைவரும் ஒருவரோடொருவர் உற்சாகத்தோடு இருந்தால் அக்கிலிஸ் இல்லாமல் இருப்பது ஒன்றும் பெரிதாக இருக்காது.

ஆகவே, நான் இப்பொழுது சொல்வதை நீங்கள் அனைவரும் செய்ய வேண்டும். உள்ளதிலேயே மிகப்பெரிய சிறந்த கேடயங்களை நாம் எடுத்து வைத்துக்கொள்வோம். பளபளக்கும் தலைக்கவசத்தை அணிந்து கொண்டு, கைகளுக்குக் கிடைக்கும் மிக நீண்ட ஈட்டிகளுடன் போருக்குச் செல்வோம். நானே தலைமையேற்று வருகிறேன். ப்ரியமின் மகனான ஹெக்டரால் வெகு நேரம் நம்மோடு தாக்குப்பிடிக்க முடியும் என்று நான் நினைக்கவில்லை. அவனுக்கு எவ்வளவு உறுதியிருந்தாலும் சரி, அவனால் நீண்ட நேரம் நிற்க முடியாது. போரில் ஈடுபட்டு வீரத்தை நிரூபித்திருக்கும் வீரன் ஒவ்வொருவனும் தன்னிடமுள்ள சிறிய கேடயத்தைப் பலவீனமானவர்களுக்குக் கொடுத்துவிட்டு, பெரிய கேடயங்களை எடுத்துக்கொள்ளுங்கள்' என்றான்.

அவன் அப்படிச் சொன்னதை அனைவரும் ஏற்றுக் கொண்டனர். டயமீடிஸ், ஒடிஸியூஸ், அகமெம்னன் ஆகிய தலைவர்கள் அனைவருமே காயமடைந்திருந்தாலும், போருக்குத் தம் வீரர்களைத் தயார் படுத்தினார்கள். அணிகளுக்கு விஜயம் செய்து சிறந்த வீரர்களுக்கு, சிறந்த ஆயுதங்களும் போர்க்கவசங்களும் கிடைக்கும்படி மாற்றிக் கொடுத்தார்கள். சற்று பலவீனமான ஆயுதங்களையும் கவசங்களையும் கீழ்நிலையில் இருந்த வீரர்களுக்குக் கொடுத்தார்கள். எல்லாரும் தங்களுக்கான பளபளக்கும் வெண்கலப் போருடைகளைத் தரித்துக் கொண்டு ஆயுதங்களையும் எடுத்துக் கொண்டு, பொசைடனின் தலைமையில் கிளம்பினார்கள். அவன் தனது மகா கையில் நீண்ட அச்சுறுத்தும் வாளை எடுத்துச் சென்றான். மின்னலைப் போலிருந்தது அந்த வாள். பொசைடனோடு பொருத யாராலும் முடியாது. அவனைக் கண்டு வீரர்களில் பலர் பயந்து நடுங்கினர்.

அந்தப் பக்கத்தில், கீர்த்திமிகு ஹெக்டர் ட்ரோஜன்களை, போர்க்களத்தில் ஒழுங்காக வரிசைப்படுத்தி நிறுத்தினான். இப்பொழுது கிரேக்கர்களுக்காகக் கரிய நிறத் தலைமுடி கொண்ட பொசைடனும், ட்ரோஜன்களுக்காகக் கீர்த்திமிகு ஹெக்டரும் இருக்க மிகுந்த அதிர்ச்சியூட்டும் போர் நடக்கத் தயாரானது. காதடைக்கும் பேரொலியுடன் இரண்டு அணியினரும் சந்தித்தபோது, கிரேக்கர்களின் பாசறைகள் மற்றும் கப்பல்கள்வரை கடல் அலைகள் உயர்ந்து வந்தன. வடக்கிலிருந்து அடிக்கும் கடுங்குளிர் காற்றினால் கடலின் ஆழத்திலிருந்து கிளம்பி இடியோசைபோல ஆர்ப்பரித்துக் கொண்டு கரையேறும் அலைகள், மலைப் பள்ளத்தாக்குகளில் இருக்கும்

காடுகளைத் தாக்கும்போது மேலே கிளம்பும் நெருப்பின் கர்ஜனை போல இருக்கும். கருவாலி மரங்களின் அடர்ந்த கிளைகளின் இலைகளில் வீசும் காற்றின் ஓசை கோப அலறலைப் போல இருக்கும். ஆனால் ட்ரோஜன்களும் கிரேக்கர்களும் ஒருவர் மீதொருவர் பாய்ந்து போர் செய்தபோது எழுப்பிய போர் முழக்கம் இவை எல்லாவற்றையும் மிஞ்சுவதாக இருந்தது.

தன்னை நோக்கி நேராகத் திரும்பிய அஜாக்ஸ்மீது முதலில் ஒரு ஈட்டியை எறிந்தான் கீர்த்திமிகு ஹெக்டர். அவனது குறி தவறவில்லை. ஆனால் அது அஜாக்ஸின் தோளில், அவனது கேடயத்தைத் தாங்கிக் கொண்டிருந்த பட்டையும் வெள்ளிக் குடையாணி அடிக்கப்பட்ட வாளைத் தாங்கிக் கொண்டிருந்த பட்டையும் சந்தித்த இடத்தில் தைத்ததால் அவனது மிருதுவான சதை தப்பித்தது. தனது விரைவு ஈட்டி தன் கையை விட்டுக் கிளம்பி இலக்கைத் தாக்காமல் போனதில் ஹெக்டர் மனம் உடைந்து, இறப்பைத் தவிர்க்கும் பொருட்டுத் தன் படைப்பிரிவுக்குப் பின்வாங்கிச் சென்றான். அப்படி அவன் பின்வாங்கிச் சென்று கொண்டிருந்தபோது, டிலமானின் மகனான மகா அஜாக்ஸ், கப்பல்களுக்கு ஆதரவாகக் கீழே வைக்கப் பட்டிருந்த பாறைகளில் போர் வீரர்களின் காலடியில் விழுந்துகிடந்த ஒன்றைக் கையால் தூக்கி ஹெக்டரின் மார்பில், கழுத்துக்குக் கீழே, கேடயத்தின் விளிம்பில் குறிபார்த்து எறிந்தான். பாறையால் தாக்கப்பட்ட ஹெக்டர் ஒரு பம்பரம்போல மயங்கிச் சுழன்றான். எல்லாத் திசைகளிலும் தடுமாறினான். தந்தை ஜீயூஸ் அனுப்பும் மின்னல் ஆயுதத்தால் வேரோடு பிடுங்கப்படும் கருவாலி மரமானது, அருகில் இருக்கும் அனைவரையும் அச்சுறுத்தித் துரத்தும் வகையில் பயங்கரமான கந்தக வாடையை வெளியிடும். ஏனெனில் மகா ஜீயூஸ் நிகழ்த்தும் வன்முறை மிக பயங்கரமானது. அந்தக் கருவாலி மரத்தைப் போல, மண்ணில் விழுந்தான் ஹெக்டர். அவனது இரண்டாவது ஈட்டி அவனது கையில் இருந்து நழுவியது. தனது கேடயம் மற்றும் தலைக்கவசத்தினுள் சுருங்கிக் கொண்டான் அவன். அலங்காரமான வெண்கலக் கவச உடை அவனைச் சுற்றி கடகடவென ஒலி எழுப்பியது.

அவனை இழுத்து வந்துவிடலாம் என்ற நம்பிக்கையில் ஆயுதம் அணிந்த கிரேக்க வீரர்கள் ஹெக்டரை நோக்கி வெற்றி முழக்கத் துடன் ஓடி வந்தனர். அவன் மீது மழைபோல ஈட்டிகளைப் பொழிந்தனர். ஆனால் அந்த, மக்கள் மேய்ப்பனைத் தாக்கவோ

குத்தவோ அவர்கள் எவருக்கும் வாய்ப்பு கிடைக்கவில்லை. பாலிடாமஸ், ஈனியாஸ், கடவுளையொத்த அகீனர், லிசியர் களின் தலைவனான சர்ப்பிடான், இணையற்ற க்ளாக்கஸ் போன்ற தலைசிறந்த ட்ரோஜன் வீரர்கள் ஹெக்டரை உடனே சூழ்ந்துகொண்டனர். தங்கள் தலைவனை யாருமே உதாசீனப் படுத்தவில்லை. அனைவரும் தங்களது வட்டவடிவக் கேடயங் களை ஹெக்டருக்கு முன் பிடித்துக்கொண்டு நின்றனர். பின் அவன்மீது கைகொடுத்துத் தாங்கிப் பிடித்துத் தூக்கி அவனை அந்த இடத்திலிருந்து அவனது விரைவுக் குதிரைகள் நின்ற இடத்துக்கு விரைவாகத் தூக்கிச் சென்றனர். அக்குதிரைகள் தம் தேரோட்டியுடனும் அலங்கரிப்பட்ட தேருடனும் தயாராக சண்டை நடந்த இடத்துக்கு வெளியே நின்று கொண்டிருந்தன. வேதனையில் முனகிக் கொண்டிருந்த அவனை நகருக்குள் கொண்டு சென்றன அவைகள்.

இனிமையாக ஓடிக்கொண்டிருந்த நீர்ச்சுழிகள் உள்ள, ஜீயூஸைத் தந்தையாகக் கொண்ட ஸ்கமாண்டர் ஆற்றின் ஆழமில்லாத பகுதிக்கு வந்தவுடன், ஹெக்டரின் வீரர்கள் அவனைத் தேரி லிருந்து தூக்கித் தரையில் படுக்க வைத்து அவன் மீது தண்ணீரைத் தெளித்தனர். ஹெக்டர் கண் திறந்து பார்த்தான். முழந்தாளிட்டு எழுந்து அமர்ந்த அவன் இருமினான். அவனது இருமலில் கருத்த ரத்தத் துளிகள் வந்து விழுந்தன. பின் மறுபடியும் மயங்கித் தரையில் சாய்ந்தான். மீண்டும் அவனது கண்களில் இந்த உலகம் இருண்ட இரவைப்போல ஆனது. பட்ட அடியிலிருந்து முழுமை யாக அவன் விடுபட்டிருக்கவில்லை.

ஹெக்டர் பின்வாங்கியதைப் பார்த்த கிரேக்க வீரர்கள், முன்னை விடவும் மூர்க்கமாக ட்ரோஜன் வீரர்களின் மீது பாய்ந்து தாக்க ஆரம்பித்தனர். போர் செய்ய வேண்டும் என்ற எண்ணம் புதுத் தெம்புடன் வந்திருந்தது. ஆய்லியூஸின் மகனான அஜாக்ஸ் முதலில் தனது கூரீட்டியால் சாட்னியூஸைத் தாக்கினான். அப்பழுக்கற்ற ஒரு கடல் தேவதை அவனை ஈனோப்ஸ் என்பவ னுக்கு, சாட்சினியூஸ் ஆற்றங்கரையருகில் உண்டாக்கித் தந்தாள். புகழ்பெற்ற ஈட்டியெறி வீரனாகிய அஜாக்ஸ் முன்னே பாய்ந்து சாட்னியூஸின் இடுப்பில் குத்தினான். சாட்னியூஸ் மல்லாக்க விழுந்தான். அவனைச் சுற்றி கிரேக்கர்களும் ட்ரோஜன்களும் ஒரு மூர்க்கமான சண்டைக்குத் தயாராயினர். பாந்தூஸின் மகனான புகழ்பெற்ற ஈட்டியெறி வீரனாகிய பாலிடாமஸ் அவர்களின் உதவிக்கு வந்தான். ப்ரொதீனர் என்பவனின் வலது தோளில்

தாக்கினான். கனமான அந்த ஈட்டி அவன் தோளைத் துளைத்து உள் சென்றது. மண்ணைக் கையால் பற்றிப் பிடித்தவனாக. அவன் மண்ணில் விழுந்தான். தனது வெற்றியைப் பெருத்த ஒலியெழுப்பிப் பறைசாற்றினான் பாலிடாமஸ்:

'ஆஹா! பாந்தூஸின் மகனின் உறுதியான கையிலிருந்து சென்ற இன்னொரு ஈட்டியும் வீணாகவில்லை! ஆனால் அது தனது வீட்டை ஒரு கிரேக்கனின் தசையில் ஏற்படுத்திக் கொண்டது! ஹயடிஸின் மண்டபங்களில் செல்லும்போது அவன் அதை ஒரு கைத்தடியாகப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்று!' அவன் பெருமையாகப் பேசியது தேளைப்போலக் கொட்டியது கிரேக்கர்களுக்கு. போர்த்திறம் மிக்க டிலமானின் மகனாகிய அஜாக்ஸின் இதயத்தில் அவ்வார்த்தைகள் நேராக நுழைந்தன. அவன் தான் ப்ரொதீனர் இறந்த இடத்துக்கு மிக அருகில் நின்று கொண்டிருந்தவன். பின்வாங்கிக் கொண்டிருந்த பாலிடாமஸை நோக்கி விரைவாக தனது ஈட்டியை அவன் எறிந்தான்.

அஜாக்ஸின் ஈட்டித் தன்னைத் தொடாமல் வேறு பக்கம் குதித்து, இறப்பைத் தவிர்த்துக் கொண்டான் பாலிடாமஸ். ஆனால் ஈட்டி ஆன்ட்டீனரின் மகனான ஆர்க்கிலோக்கஸைத் தாக்கியது. அவன் சாகவேண்டும் என்பதே கடவுள்களின் விருப்பமாக இருந்தது. தலையும் கழுத்தும் சந்திக்கும் இடத்தில் முதுகெலும்பின் மேல் பகுதியில் அது தாக்கியது. இரண்டு தசை நார்களையும் அது பிரித்தது. அவன் கீழே விழுந்தபோது, அவனது காலும் முழங்காலும் தரையைத் தொடுவதற்கு முன்பே அவனது நெற்றியும், வாயும் மூக்கும் மண்ணைக் கவ்வின.

இணையற்ற பாலிடாமஸை நோக்கி கத்தினான் அஜாக்ஸ்:

'நினைத்துப் பார் பாலிடாமஸ், நேர்மையாகச் சொல், ப்ரொதீனரின் மரணத்தை இவனுடைய மரணம் ஈடுசெய்ய வில்லையா? அவன் தோற்றத்தை வைத்துப் பார்க்கும்போது, அவன் ஒரு கோழையாகவோ கீழான குடியில் பிறந்தவனாகவோ இருக்க முடியாது. குதிரைகளை அடக்குவதில் வல்ல ஆன்ட்டினருக்கு மகனைப் போலவோ சகோதரனைப் போலவோதான் இருந்தான் அவன். அந்தக் குடும்ப சாயல் தெளிவாகத் தெரிந்தது.'

ஆர்க்கிலோக்கஸ் யார் என்று நன்கு தெரிந்து கொண்டேதான் பேசினான் அஜாக்ஸ். ட்ரோஜன்களின் இதயங்கள் துணிச்சல்

இழந்தன. ஆனால் தன் சகோதரனான ஆர்க்கிலோக்கஸின் உடலுக்கு அருகில் பாதுகாப்பாக நின்றான் அகாமாஸ். ப்ரொமோக்கஸ் என்ற ஒரு போட்டியான்* அந்த உடலைக் கால்களால் இழுக்க முயன்றபோது, அவனை தன் ஈட்டியால் தாக்கிய அகாமாஸ் தனது வெற்றியைப் பெருமையாகச் சொல்லிக் காட்டினான்:

‘பெரிய வாய் கொண்ட கிரேக்கர்களே, வெற்று பயமுறுத்தல்களை அதிகமாக விடுபவர்களே, துன்பமும் துயரமும் எங்களுக்கு மட்டும் உரியதல்ல. எங்களுக்கு இழப்புகள் ஏற்பட்டது உண்மைதான். உங்களது இழப்புகள் வந்து கொண்டிருக்கின்றன. எனது ஈட்டியால் மீளாத உறக்கத்தில் ஆழ்த்தப்பட்ட உங்கள் ப்ரோமோக்கஸைப் பாருங்களேன். எனது சகோதரனின் இறப்புக்கான சரியான பதிலடிதான் அது. தான் இறந்தாலும் தன் இறப்புக்குப் பழிவாங்க ஒரு உறவுக்காரனாவது வேண்டும்; ஒரு வீரனின் பிரார்த்தனையும் அதுதான்.’

கிரேக்கர்களுக்கு அவன் பேசிய வார்த்தைகள் விஷம் போல இறங்கின. குறிப்பாக பெனிலோஸின் இதயத்துள் சென்றது அது. உடனே அவன் அகாமாஸை நோக்கி வந்தான். ஆனால் அவனை எதிர்த்து அகாமாஸ் நிற்கவில்லை.

பெனிலோஸின் தாக்குதலுக்கு இலக்கானது இலியோனியூஸ்தான். அவன் ஃபோர்பாஸ் என்ற ஆட்டு மந்தையின் சொந்தக்காரனின் மகன்; கடவுள் ஹெர்மிஸுக்கு ட்ராய் நகரில் மிகவும் பிடித்தவன். ஹெர்மிஸ்தான் அவனை ஒரு செல்வந்தனாக ஆக்கி வைத்திருந்தான். ஆனால் இலியோனியூஸின் அன்னைக்கும் ஃபோர்பாஸுக்கும் வேறு குழந்தைகள் கிடையாது. பெனிலோஸ் அவனைப் புருவத்தின் கீழே விழியின் குழிக்குள் தாக்கினான். அவனது ஈட்டி விழிப்பந்தை ஊடுருவிச் சென்று அவனது பிடரியின் பக்கமாக வெளியில் வந்தது. இரண்டு கைகளையும் நீட்டிய வண்ணம் அவன் கீழே விழுந்தான். ஆனாலும் பெனிலோஸ் விடவில்லை. தனது வாளினால் அவனது கழுத்தில் ஓங்கி வெட்டினான். தலைக்கவசமுடன் தலையும் சேர்ந்து தரையில் தனியாக விழுந்தது. பெனிலோஸின் கனமான ஈட்டி இன்னும் அவனது விழி வழி குத்திக் கொண்டு

* போட்டியா என்பது ஒரு கிரேக்க மாவட்டம்.

நின்றது. எல்லா ட்ரோஜன்களும் பார்க்கும்படி அபின் செடியின் தலையை உருவுவதுபோல அதை வெளியில் எடுத்தான் பெனிலோஸ். பின் அவர்களைப் பார்த்து அவன் சொன்னான்:

'ட்ரோஜன்களே, எனக்கு ஒரு நல்லது செய்யுங்கள். இலியோனி யூஸின் அம்மாவுக்கும் அப்பாவுக்கும் அவனது சாவை அறி வித்து, வீட்டிலேயே அழுது ஒப்பாரி வைத்தலை ஆரம்பிக்கச் சொல்லுங்கள். ஏனெனில், கிரேக்கர்களாகிய நாங்கள் எங்கள் கப்பல்களில் ட்ராயை விட்டுக் கிளம்பி ஊர் செல்லும்போது, அலீனரின் மகனான ப்ரோமக்கஸின் மனைவிக்குத் தன் கணவனைப் பார்க்கும் வாய்ப்பு கிடைக்கப் போவதில்லை' என்றான்.

அவன் அப்படிப் பேசியதும் ட்ரோஜன் வீரர்களின் முழங்கால்கள் அச்சத்தால் நடுக்கமுற ஆரம்பித்தன. திடீரென வர இருக்கும் மரணத்தைத் தவிர்ப்பதற்காக ஏதும் வழி இருக்கிறதா என ஒவ்வொருவரும் பார்க்க ஆரம்பித்தனர்.

பெனிலோஸ் தொடர்ந்தான் 'ஒலிம்பஸ் மலைவாழ் ம்யூஸ்களே, கிரேக்கர்களுக்கு ஆதரவாக பொசைடன் இப்பொழுது போரைத் திருப்பி விட்டிருக்கும் இந்தச் சூழ்நிலையில், இப்பொழுது சொல்லுங்கள். எதிரியின் உடலில் இருந்து ரத்தம் தோய்ந்த கவச உடையைக் கழற்றிய முதல் கிரேக்க வீரன் யார்? மைசியர்களின் தலைவனான சிங்க நெஞ்சம் கொண்ட ஹிர்ட்டியஸைத் தாக்கிய டிலமானின் மகன் அஜாக்ஸ்தான் அது' என்றான்.

அடுத்து ஃபால்சிஸையும் மெர்மீரஸையும் ஆன்ட்டிலோக்கஸ் கொன்றான். மோர்யாவையும் ஹிப்போட்டியானையும் மெரியோனிஸ் கொன்றான். ப்ரோத்தூனையும் பெரிஃபீட்டிசை யும் ட்யூஸர் கொன்றான். பின் மக்கள் தலைவனாகிய ஹைபர் னரை மெனிலயஸ் இடுப்பில் தாக்கிக் கொன்றான். அவனது சதையைக் குத்திக் கிழித்தது அது. உள்ளே இருந்த குடல்கள் எல்லாம் வெண்கல ஈட்டியால் வெளியே வந்து விழுந்தன. உயிர், வாய் பிளந்து கொண்டிருந்த காயத்தின் வழியாக விரைந்து போய்க் கொண்டிருந்தது. இருள் அவனது கண்களைத் தழுவியது. ஆனால் ஆய்லியூஸின் மகனான அஜாக்ஸுக்குத்தான் அதிகமான எண்ணிக்கையில் ட்ரோஜன் வீரர்கள் விழுந்தனர். ஏனெனில், ஒரு பதற்றத்தை ஜீயூஸ் ஏற்படுத்தியபோது, அஜாக்ஸைப் போல எதிரியை ஓடஓட விரட்ட வேறு யாராலும் முடியவில்லை.

# ஆபத்தில் கிரேக்கர்கள்

***கதைச்சுருக்கம்***

***வரிகள் 01 – 261***

*பதற்றத்துடன் ட்ரோஜன் வீரர்கள் கிரேக்க முகாமிலிருந்து பின்வாங்குகின்றனர். ஜீயூஸ் விழித்துக் கொண்டு கடுங்கோபத் துடன் ஹீராவைப் பார்க்கிறான். ஆனால் தனக்கு ஒன்றுமே தெரியாதென அவள் மன்றாடுகிறாள். பெட்ரோக்குலஸ், ஹெக்டர் ஆகியோரின் மரணத்தை ஜீயூஸ் முன்னறிவிக்கிறான். பொசை டனைத் திரும்ப வந்துவிடும்படி உத்தரவிடுகிறான். தயக்கத் துடனே பொசைடன் அதற்கு உடன்படுகிறான். மயக்கத்தில் இருக்கும் ஹெக்டரின் மயக்கம் தெளிவிக்கும்படியும் ட்ரோ ஜன்களின் வெற்றிகரமான தாக்குதல் மீண்டும் தொடரும்படிச் செய்யவும் அப்போலோவுக்கு உத்தரவிடுகிறான்.*

***வரிகள் 262 – 389***

*எழுச்சியூட்டப் பட்டவனாக ஹெக்டர் மீண்டும் போருக்குத் திரும்புகிறான். கிரேக்கர்கள் பதற்றமடைந்து ஓடுகின்றனர். கிரேக்க தற்காப்பு ஏற்பாடுகள் அனைத்தையும் உதைத்துத் தரைமட்டமாக்குகிறான் அப்போலோ. கிரேக்கக் கப்பல்களைச் சுற்றிக் குவிகின்றனர் ட்ரோஜன்கள்.*

***வரிகள் 390 – 405***

*இந்தச் சப்தம் கேட்டுக் காயம்பட்ட யூரிபைலஸை விட்டுவிட்டு அக்கிலிஸ் இருக்குமிடத்துக்கு வருகிறான் பெட்ரோக்குலஸ்.*

**வரிகள் 405 – 564**

ஹெக்டரும் அஜாக்ஸூம் தத்தமது அணியினரைத் திரட்டி ஒன்று சேர்க்கின்றனர். பொதுவான சண்டை தொடர்கிறது.

**வரிகள் 565 – 746**

உற்சாகமாகப் போர் செய்யும்படி ஹெக்டரைத் தூண்டுகிறான் ஜீயூஸ். கப்பல்களில் மேலும் மேலும் பின்னடைகின்றனர் கிரேக்கர்கள். ஒரு பெரிய ஈட்டியைக் கொண்டு கப்பல்களைக் காப்பாற்ற முயல்கிறான் அஜாக்ஸ். ஆனால் இறுதியில் அவனும் துவண்டு ட்ரோஜன்களுக்கு வழிவிட வேண்டியதாகிவிடுகிறது.

# ஆபத்தில் கிரேக்கர்கள்

தப்பி ஓடிக்கொண்டிருந்த ட்ரோஜன்கள் அகழியையும் அதைச் சுற்றியிருந்த கூரான வேலிக்கழிகளையும் மீண்டும் தாண்டிச் சென்றனர். அவர்களில் பலர் கிரேக்கர்களின் கையில் மாட்டிக் கொண்டனர். மாட்டிக் கொள்ளாதவர்கள் தமது தேர்களைச் சென்றடையும்வரை ஓடினர். அவர்கள் அங்கே தற்காலிகமாக நின்று கொண்டிருந்தபோது, அய்டா மலையின் உச்சியில் இருந்த ஜீயூஸ் விழித்தெழுந்தான். பதற்றம் அறையப்பட்டவனாக, அச்சத்தால் வெளுத்த முகம் கொண்டவனாக, தங்க அரியணை யின் சொந்தக்காரியான ஹீராவின் பக்கத்தில் அப்போது இருந்தான். உடனே அவன் ட்ரோஜன்களைக் கிரேக்கர்கள் துரத்திக் கொண்டுள்ளனர்; கடவுளான பொசைடன் அதற்கு உதவி செய்வகிறான்; நண்பர்கள் சுற்றியிருக்க மயக்கத்தில் ஹெக்டர் தரையில் கிடக்கிறான் என்ற சூழ்நிலையைப் புரிந்து கொண்டான்.

ஹெக்டர் மூச்சுவிட சிரமப்பட்டுக் கொண்டிருந்தான். ரத்தத் துளிகளை இருமி இருமி வெளியேற்றிக் கொண்டிருந்தான். அவன் இன்னும் திகைப்பில் இருந்தான். ஏனெனில் அவனைத் தாக்கியவன் ஒரு பலவீனமான கிரேக்க வீரனல்ல. மனிதர் களுக்கும் கடவுளருக்கும் தந்தையான ஜீயூஸ், ஹெக்டரின் நிலையைப் பார்த்து பரிதாபப்பட்டான். ஹீராவின்மீது ஒரு கருப்புப் பார்வையை வீசிச் சொன்னான்:

‘ஹீரா, உன்னைத் திருத்தவே முடியாது. உன்னுடைய நயவஞ்சக மான உபாயங்களினால்தான் ஹெக்டர் இப்படிச் சண்டைபோட

முடியாமல் கிடக்கிறான். ட்ரோஜன் வீரர்கள் படுதோல்வியைச் சந்தித்துக் கொண்டுள்ளனர். உன்னை உதைக்கலாம் என்று தோன்றுகிறது. உன்னுடைய கோமாளித்தனங்களின் விளைவு களை அனுபவிக்கும் முதல் ஆளாக நீதான் இருக்க வேண்டும். முன்பொருமுறை உன் கால்களை இரும்புச் சங்கிலிகளாலும், கைகளை உன்னால் உடைக்க முடியாத தங்கச் சங்கிலிகளாலும் கட்டி வைத்தேனே ஞாபகமில்லையா? நீ மேகங்களுக்கு மத்தியில் காற்றில் தொங்கிக் கொண்டிருந்தாய். உன்னைச் சுற்றி ஒலிம்பஸில் வாழும் கடவுள்கள் அனைவரும் விரக்தியில் நின்று கொண்டிருந்தாலும், உன்னை விடுவிக்க அவர்களால் முடியா மல் போனது. அப்படி உன்னை விடுவிக்க முயன்ற அனைவரை யும் நான் பிடித்து எனது வாசலில் இருந்து எறிந்தேன். கீழே விழுந்தவர்களின் உயிர் அந்தக் கணமே பிரிந்தது.

ஆனால் இதெல்லாம்கூட எனக்குப் போதவில்லை. காரணம் நீ உனது கெட்ட சதித்திட்டங்களுக்கு உதவும்படிப் புயல் காற்று களைக் கேட்டுக்கொண்டாய். கடவுளையொத்த ஹெராக் லிஸை, அவன் ஏற்கெனவே அனுபவித்துள்ள கஷ்டங்கள் போதாதென்று, வட புயல்காற்றுக்கு அஞ்சி செழிப்பான காஸ் தீவுவரை விரட்டியடித்தாய். (பார்க்க. ஹெர்க்குலிஸ் பற்றிய முன்னுரை.)

இதெல்லாம் என் நெஞ்செரிச்சலையும் வேதனையையும் அதிகப் படுத்தின. ஆனால் நான் அவனைக் காஸ் தீவிலிருந்து காப் பாற்றிக் குதிரைகள் மேயும் தெஸ்ஸாலிக்கு அழைத்து வந்தேன்.

இதெல்லாம் நான் உனக்கு ஏன் சொல்லிக் காட்டுகிறேன் என்றால், நீ உன் ஏமாற்று வேலைகளையெல்லாம் இதோடு நிறுத்திக்கொள்ள வேண்டும். ஒலிம்பஸ் மலையிலிருந்து கிளம்பி, இங்கே வந்து என்னை மயக்கி உன்னோடு காதல் செய்ய வைத்தாயே, அதில் எந்த நன்மையும் ஏற்படவில்லை என்பதை நீ புரிந்து கொள்ள வேண்டும்' என்றான் ஜீயூஸ்.

அதைக் கேட்டதும் எருதுக்கண்ணாள் ஹீரா பயந்து நடுங்கினாள். அவசரமாக மறுத்தாள்.

'இந்தப் பூமியும், நமக்கு மேலே இருக்கின்ற விரிந்த வானமும், கடவுளர்கள் எந்த ஆற்று நீரின்மீது மிகவும் தீவிரமாகவும் மனதாரவும் சத்தியம் செய்து கொடுப்பார்களோ, கொட்டிக்

கொண்டிருக்கும் அந்த ஸ்டிக்ஸ் ஆற்று நீரும், உங்களது புனிதத் தலையும், எந்தப் படுக்கையின்மீது நான் பொய் சத்தியம் செய்யத் துணிய மாட்டேனோ அந்த நமது படுக்கையும் எனது சாட்சிகளாக இருக்கட்டும். கிரேக்கர்களுக்கு உதவியாகவும் ஹெக்டருக்கும் ட்ரோஜன்களுக்கும் எதிராகவும் நிலநடுக்கக் கடவுளான பொசைடன் செய்து கொண்டிருக்கும் காரியங்களுக்கும் எனக்கும் எந்த சம்பந்தமுமில்லை. அதில் என்னுடைய தவறு எதுவுமில்லை. கிரேக்கர்கள் அவர்களது கப்பல்களின் அருகில் அப்படி, துவம்சம் செய்யப் படுவதைப் பார்த்து அவன் மனமிரங்கி உதவி செய்யும் காரியங்களில் இறங்கியிருக்க வேண்டும் என்று நான் நினைக்கிறேன். புயல் மேகங்களைச் செலுத்தும் ஜீயூஸாகிய நீங்கள் அவனை எங்கே போகச் சொல்கிறீர்களோ அங்கேயே போகும்படி அவனுக்கு நானும் உபதேசம் செய்யவே நினைக்கிறேன்' என்று வேகமாகப் பேசினாள்.

அப்படி அவள் சொன்னதும் கடவுள்கள் மற்றும் மனிதர்களின் தந்தையான ஜீயூஸ் புன்னகைத்துவிட்டு அவசரமாக அவளைப் பார்த்துச் சொல்லலானாள்:

'எருதுக்கண் சீமாட்டியே ஹீரா, இப்போதிலிருந்து நீ எனக்கு ஆதரவாகக் கடவுளரின் சபையில் இருப்பாய் என்பதை நான் நம்பும்படியாக நடந்து கொள்வாய் என்று நினைக்கிறேன். இப்பொழுது பொசைடனைக் கூப்பிட்டு அனுப்புவேன். அவன் நேரில் வந்து உன்னையும் என்னையும் சந்திப்பான். அவனுக்கு எவ்வளவுதான் விருப்பமில்லா விட்டாலும் வருவான். நீ என்னிடம் முழு உண்மையையும் சொல்லியிருப்பாயேயானால், போ, இப்போதே போய் அய்ரிஸையும், கீர்த்திமிகு வில்லேந்திய கடவுள் அப்போலோவையும் இங்கே வரச்சொல். வெண்கலக் கவச உடைதரித்த கிரேக்கர்களிடம் சென்று பொசைடனைச் சந்தித்து உடனே போர் செய்வதை நிறுத்திவிட்டு வீடு போய்ச்சேர் என்று அய்ரிஸ் சொல்ல வேண்டும். ஹெக்டருக்கு புது சக்தி கொடுத்து, அவன் வேதனையை மறக்கடித்து மீண்டும் போரில் அவன் எழுச்சியுடன் கலந்து கொள்ளும்படி ஃபீபஸ் அப்போலோ செய்ய வேண்டும்.

பின் கிரேக்கர்கள் மத்தியில் பதற்றத்தை ஏற்படுத்தி அவர்களைப் பின்வாங்கி ஓடும்படி அப்போலோ செய்ய வேண்டும். பீலியூஸின் மகன் அக்கிலிஸின் கப்பல்கள் இருக்கும் இடம்வரை

அவர்கள் ஓடிச் செல்ல வேண்டும். அதைப் பார்த்து அக்கிலிஸ் தன் நண்பன் பெட்ரோக்குலஸைப் போருக்கு அனுப்புவான். பெட்ரோக்குலஸ் எதிரி வீரர்களைக் கொல்வான். என் மகன் கடவுளையொத்த சர்ப்பிடானையும் சேர்த்தே கொல்வான். ஆனால் கடைசியில் அவன் இலியம் நகரின் முன் கீர்த்திமிகு ஹெக்டரின் ஈட்டிக்குப் பலியாவான். சினமடைந்து எழும் கடவுளையொத்த அக்கிலிஸ் போருக்கு வந்து ஹெக்டரைக் கொல்வான். அந்தக் கணத்திலிருந்து, கப்பல்களில் இருந்தவாறு கிரேக்கர்கள் தீவிரமான எதிர்த்தாக்குதல் செய்வதற்கு நான் ஏற்பாடு செய்வேன். அதீனியின் அறிவுரையின் உதவியோடு கிரேக்கர்கள் செங்குத்தான இலியம் நகரைப் பிடிக்கும்வரை நான் உதவுவேன்.

ஆனால் அதுவரை நான் கிரேக்கர்களுக்கு எதிராகத்தான் இருப்பேன். நகரங்களை அழிக்கும் வீரனாகிய அக்கிலிஸுக்கு கௌரவம் செய்யும்படி அவன் அன்னை தீட்டிஸ் என் முழங்கால்களைப் பிடித்துக் கொண்டு கெஞ்சிய அன்று, அக்கிலிஸின் விருப்பங்கள் நிறைவேறும் என நான் என் தலையசைத்துச் சம்மதித்து வாக்குறுதி கொடுத்தேன். அது நிறைவேறும் வரை நித்தியனான வேறு எந்தக் கடவுளும் கிரேக்கர்களின் உதவிக்கு வருவதை அனுமதிக்க மாட்டேன்' என்றான்.

அவன் அப்படிச் சொன்னதைக் கேட்ட வெண்ணிறக் கைகொண்ட ஹீரா உடன்பட்டு உடனே அய்டா மலையின் உச்சியிலிருந்து உயர்ந்தோங்கிய ஒலிம்பஸ் மலை நோக்கிக் கிளம்பினாள். நிறைய இடங்களுக்குப் பயணம் செய்த ஒரு மனிதன், 'நான் இந்த இடத்தில் இருந்தால் எப்படியிருக்கும், அந்த இடத்தில் இருந்தால் எப்படியிருக்கும்' என்றெல்லாம் மனதால் நினைத்து நினைத்து அந்த இடங்களுக்கெல்லாம் உடனே தனது கற்பனையால் செல்வதுபோல, சிந்தனையின் வேகத்தில் பறந்து சென்றாள் சீமாட்டி ஹீரா.

ஒலிம்பஸ் மலையின் உச்சிக்குச் சென்றதும், அங்கே ஜீயூஸின் அரண்மனையில் குழுமியிருந்த நித்தியர்களான கடவுளர்களைச் சந்தித்தாள் ஹீரா. அவளைக் கண்டதும் அனைவரும் துள்ளி எழுந்து வந்து அவள் உடல் நலம் விசாரித்து, குடிக்கக் கொடுத்தனர். மற்றவர்களை உதாசீனப்படுத்திய ஹீரா, அழகிய கன்னம் கொண்ட தீமிஸ் கொடுத்த கோப்பையை மட்டும்

வாங்கிக் கொண்டாள். அவள்தான் ஹீராவைப் பார்த்ததும் முதலில் ஓடி வந்தாள்.

மேலும் 'ஹீரா, என்ன விஷயமாக இங்கே வந்திருக்கிறாய்? உன் முகத்தைப் பார்த்தால் ரொம்ப குழப்பமாகவும் பதற்றமாகவும் இருப்பதாகத் தோன்றுகிறது. க்ரோனஸின் மகனான உன் கணவரிடமிருந்து அவசரமாக இங்கே வந்திருக்க வேண்டும் என்று நினைக்கிறேன்' என்றும் கேட்டாள்.

வெண்ணிறக் கைகள் கொண்ட தேவதை ஹீரா அவ்ளுக்குப் பதில் சொன்னாள்: 'தெய்வீக தீமிஸ். அதைப்பற்றியெல்லாம் கேட்க வேண்டாம். என் கணவர் எவ்வளவு பிடிவாதமாகவும் திமிராகவும் இருப்பார் என்று உனக்கே தெரியும். ஆனால் இந்த அரண்மனையில் கடவுளர்களுக்கான ஒரு விருந்துக்கு நீ ஏற்பாடு செய்தால், ஜீயூஸ் என்னென்ன கெட்ட திட்டங்கள் போட்டி ருக்கிறார் என்று நீ மட்டுமல்ல எல்லாக் கடவுளர்களும் தெரிந்து கொள்ளலாம். விருந்தில் சந்தோஷமாக யாராவது உட்கார்ந் திருந்தால், நான் சொல்லப் போகும் செய்தி நிச்சயமாக அவர் களுக்கு மகிழ்ச்சியைத் தராது. அது மனிதனாக இருந்தாலும் சரி, கடவுளாக இருந்தாலும் சரி.' சொல்லிவிட்டு, தேவதை ஹீரா அமர்ந்து கொண்டாள்.

ஜீயூஸின் சபையில் கூடிய கடவுளர்கள் அனைவரும் குழப்பத்தில் இருந்தனர். ஏனெனில், ஹீராவின் இதழ்களில் புன்னகை இருந்தாலும், அவளுடைய நெற்றியிலோ கருத்த புருவங் களிலோ இன்பத்தின் கதகதப்பில்லை. கூடியிருந்தவர்களைப் பார்த்து அவள் கோபமாகப் பேசினாள்

'நாமெல்லாம் எவ்வளவு முட்டாள்களாக இருந்துவிட்டோம்! ஜீயூஸை எதிர்த்து நின்ற மடையர்கள் நாம்! இருந்தாலும், இன்னமும் அவரை நிறுத்த முடியும் என்ற எண்ணத்தில் இங்கே கூடியிருக்கிறோம். அது பேச்சுவார்த்தையினால் முடியாதென் றால், வன்முறையின் மூலமாக நாம் அதை சாதிக்க இருக்கி றோம். ஆனால் இவ்வளவு நடந்த பிறகும், அவர் அங்கே எதுவுமே நடக்காத மாதிரி சும்மா உட்கார்ந்து கொண்டிருக்கிறார். கொஞ்சம்கூட ஆர்வம் காட்டவில்லை. நம்மைப் பற்றிய அக்கறை கொஞ்சம்கூட இல்லை அவருக்கு. மிருகத்தனமான ஆற்றலைப் பொருத்தவரை கடவுளர்களில் அவரை யாராலும் மிஞ்ச முடியாது என்று அவருக்கு நன்றாகவே தெரியும். அதன்

விளைவு, படுத்துக்கொண்டே அவர் உங்களுக்கு அனுப்பும் கஷ்டங்களையெல்லாம் நீங்கள் பொறுத்துக் கொள்ள வேண்டும்! நான் நினைப்பது சரியென்றால், ஏற்கெனவே ஒரு துன்பம் ஏரிஸுக்கு ஏற்பட்டிருக்க வேண்டும். ஏரிஸுக்கு மிகவும் பிரியமான அவருடைய மகன்களில் ஒருவனான அஸ்கலாஃபஸ் போரில் இறந்துவிட்டான். அதுவே ஓர் உதாரணம்தான் அவனுடைய அப்பா தான்தான் என்று கீர்த்திமிகு ஏரிஸ் சொல்கிறார் இல்லையா?'

அவள் அப்படிச் சொன்னதும், தனது கொழுத்த தொடைகளைத் தட்டி ஏரிஸ் வேதனையுடன் சொன்னான்: 'ஒலிம்பஸில் வாழும் கடவுள்களே, நான் உடனே கிரேக்கக் கப்பல்களின் பக்கம் சென்று கொல்லப்பட்ட என் மகனின் இறப்புக்காகப் பழி வாங்கினால், அதற்காக என் மீது யாரும் கோபப்பட வேண்டாம். அதன் பொருட்டு, நான் ஜீயூஸின் இடி ஆயுதத்தால் தாக்கப்பட்டு ரத்தத்திலும் மண்ணிலும் கிடக்கும் உடல்களோடு சேர்ந்து வீழ்ந்துவிட்டாலும் சரி.' இப்படிப் பேசிய அவன் பேனிக் மற்றும் ரௌட் ஆகிய தன் இரு மகன்களையும் அழைத்துக் குதிரைகளைத் தேரில் பூட்டச் சொல்லிவிட்டு மின்னும் தன் கவச உடைகளை அணியச் சென்றான்.

தெய்வங்களின் சமுதாயத்துக்கு ஏற்படப்போகும் பயங்கரத்தை எண்ணி அஞ்சியவளாக அதீனி மட்டும் தன் நாற்காலியை விட்டு சட்டென எழுந்தாள். ஏரிஸை நோக்கி அரண்மனையின் தலை வாயில் வழியாகப் பாய்ந்து சென்றாள். இல்லாவிட்டால், முன்னர் ஏற்பட்டதைவிடப் பெரியதாகவும் அபாயகரமானதாகவும் ஜீயூஸுக்கும் மற்ற நித்திய கடவுளருக்கும் இன்னொரு சண்டை உருவாகியிருக்கக் கூடும். விரைந்து சென்ற அதீனி, ஏரிஸின் தலையிலிருந்து தலைக்கவசத்தையும், தோளிலிருந்து கேடயத்தையும் பிடுங்கினாள். அவனது உறுதியான கையிலிருந்து வெண்கல ஈட்டியை வாங்கித் தொலைவில் வைத்தாள். அதன்பின் மூர்க்கமான அந்தப் போர்க்கடவுளிடம் தன் மனத்தில் உள்ளதை எடுத்துச் சொன்னாள்.

'பைத்தியமே! முட்டாளே! உன் கதை முடிந்துவிட்டது. கேட்பதற்கு உனக்குக் காதுகள் இல்லையென்று நினைக்கிறேன். அறிவு, கட்டுப்பாடு எல்லாம் போய்விட்டது. ஒலிம்பிய ஜீயூஸிடமிருந்து நேராக இங்கு வந்த ஹீரா சொன்னதெல்லாம் உன் காதில் விழவில்லையா? இல்லை, ஜீயூஸிடம் உதைபட

வேண்டும், உன் கால்களுக்கு இடையில் உன் வாலைச் சுருட்டி வைத்துக் கொண்டு ஒலிம்பஸ் மலை நோக்கி திரும்பிச் செல்ல நீ துரத்தப்படவேண்டும் என்று விரும்புகிறாயா? நீ போய் விடுவாய், நீ விதைத்தப் புயலை நாங்கள் அறுவடை செய்ய வேண்டுமா?

'நான் சொல்வதை நன்றாகக் கேள், நீ உன் இஷ்டப்படி செய்து கொண்டிருந்தால் கிரேக்கர்களையும் ட்ரோஜன்களையும் ஜீயூஸ் விட்டுவிடுவார். நேராக இங்கே ஒலிம்பஸ் மலைக்கு வருவார். பிறகு இங்கே பிரளயம்தான். நாம் தவறு செய்யாதவர்களாக இருந்தாலும் சரி, செய்தவர்களாக இருந்தாலும் சரி, நம் எல்லாரையும் ஒரு பிடி பிடித்துவிடுவார். என் ஆலோசனையைக் கேள், உன் மகனுக்காக நீ படும் கோபத்தை விட்டுவிடு. பழிவாங்கும் எண்ணத்தை மறந்துவிடு. உன் மகனைவிட உறுதியான அருமையான எத்தனையோ பேர் ஏற்கெனவே கொல்லப்பட்டுவிட்டனர். இனிமேலும் கொல்லப்படுவர். இந்தப் பூமியில் உள்ள ஒவ்வொரு மனிதனின் குடும்பத்தையும் குழந்தை குட்டிகளையும் காப்பாற்றுவதென்பது முடியாத காரியம்' என்றாள்.

இந்த வார்த்தைகளைச் சொல்லி, மூர்க்கமான போர்க்கடவுளான ஏரிஸை சாந்தப்படுத்தி, அவனது நாற்காலிக்குக் கூட்டிப் போனாள் அதீனி.

அப்போலோவையும் கடவுளர்களின் தூதுவனாகிய அய்ரிஸையும் அரண்மனைக்கு வெளியில் அழைத்த ஹீரா அவர்களிடம் அவசரமாகச் சொன்னாள்.

'நீங்கள் இருவரும் உடனே விரைவாக அய்டா மலைக்குப் போகவேண்டும் என்பது ஜீயூஸின் விருப்பம். அங்கே அவரது அரண்மனைக்குச் சென்ற பிறகு, அவர் என்னென்ன கூறு கிறாரோ, அந்த உத்தரவுகளையெல்லாம் நீங்கள் நிறைவேற்ற வேண்டும்' என்று சொல்லிவிட்டு, தேவதை ஹீரா உள்ளே சென்று தனது அரியணையில் அமர்ந்து கொண்டாள். அப்போலோ அய்ரிஸ் ஜோடி அய்டா மலைக்குப் பறந்தது. ஓடைகள் மிகுந்த, காட்டு மிருகங்களின் அன்னையான அய்டா மலையை அவர்கள் அடைந்தபோது, தூரத்து இடிமுழக்கம் செய்யும் க்ரோனஸின் மகன் கார்காரஸின் உச்சியில் அமர்ந்தி ருப்பதைக் கண்டார்கள். அவனைச் சுற்றி நறுமணமூட்டப்பட்ட

மிகுந்த பனிப்படலம் மூடியிருந்தது. மேகங்களை அணிவகுத்துச் செல்லவைக்கும் ஜீயூஸின் முன் வந்த அவர்கள் மரியாதையாக நின்றனர். அவர்கள்மீது அவன் எந்தக் குறையையும் காண வில்லை. ஏனெனில் அவர்கள் அவன் மனைவி சொன்ன சொல்லை, உத்தரவை சிரமேற்று உடனே வந்திருந்தனர். முதலில் அய்ரிஸிடம் அவன் அவசரமாகச் சொன்னான்: 'அய்ரிஸ், நீ உடனே போ, நான் சொல்கின்ற எல்லாவற்றையும் தலைவன் பொசைடனிடம் சொல். அவனிடம் பொய் எதுவும் சொல்லாதே. போர் செய்வதை நிறுத்திவிட்டு, போர்க்களத்தி லிருந்து அவனை வரச்சொல். அவன் அங்கிருந்து புறப்பட்டு நேராக மற்ற கடவுளர்களைப் போய்ச் சேர்ந்து கொள்ளலாம் அல்லது அவனுடைய வீடான ஒளிபொருந்திய கடலுக்குள் புகுந்துகொள்ளலாம். என்னுடைய இந்த வெளிப்படையான உத்தரவுகளை மீற அவன் முடிவு செய்வானாகில், எவ்வளவுதான் ஆற்றல் உள்ளவனாக அவன் இருந்தபோதும், என்னிடமிருந்து வரும் தாக்குதலை அவனால் எதிர்கொள்ள முடியுமா என்று நன்றாக அவன் யோசித்துக்கொள்ளட்டும். ஏனெனில், எல்லாக் கடவுளரிலும் அதிக பலம் வாய்ந்தவனும் அவனுக்கு முன்னர் பிறந்தவனும் நானேயாவேன். என்னைப் பார்த்து மற்ற எல்லாக் கடவுள்களும் பயந்து நடுங்குகிறார்கள். ஆனால் இவன் மட்டும் எனக்கு இணையானவனாகத் தன்னைக் கருதிக்கொள்ளத் தயங்கவில்லை.' இப்படி ஜீயூஸ் சொன்னதும் உடனே அய்டா மலையை விட்டு புனித இலியம் நகரை நோக்கி காற்றைப்போல கடுகிச் சென்றாள் விரைவு அய்ரிஸ்.

கடுமையான வடக்குக் காற்று வீசும்போது மேகங்களிலிருந்து வீழும் பனி அல்லது கடுங்குளிரூட்டும் கற்களைப்போல ஆர்வமான அய்ரிஸ் விரைந்து, புகழ்பெற்ற நில நடுக்க நாயகன் இருந்த இடத்துக்கு நேராகச் சென்றாள்.

'இந்தப் பூமியைச் சுற்றிவரும் அழகிய கருப்பு நிறத் தலைமுடி கொண்ட கடவுளே, நான் புயல் மேகங்களைச் செலுத்தும் ஜீயூஸிடமிருந்து உங்களுக்கு ஒரு செய்தி கொண்டுவந்திருக் கிறேன். நீங்கள் போர் செய்வதை நிறுத்திவிட்டு, போர்க்களத்தி லிருந்து வந்துவிட வேண்டும். இங்கிருந்து புறப்பட்டு நேராக மற்ற கடவுளர்களைப் போய்ச் சேர்ந்து கொள்ளலாம் அல்லது உங்களுடைய வீடான ஒளிபொருந்திய கடலுக்குள் புகுந்து கொள்ளலாம் என்று ஜீயூஸ் உத்தரவு பிறப்பித்துள்ளார்.

அவருடைய வெளிப்படையான உத்தரவுகளை நீங்கள் மீறினால், அவரே நேரில் வந்து உங்களை எதிர்கொள்வதாக பயமுறுத்தி யிருக்கிறார். கடவுளர்களில் அவரே அதிபலசாலி என்பதாலும் உங்களைவிட மூத்தவர் என்பதாலும் அவரோடு மோதத் துணிய வேண்டாம் என்றும் எனக்குச் சொல்லியனுப்பியுள்ளார். அவரைப் பார்த்து மற்ற எல்லாக் கடவுள்களும் பயந்து நடுங்கு கிறார்கள். ஆனால் நீங்கள் மட்டும் அவருக்கு இணையாக நடந்துகொள்ளத் தயங்குவதில்லை' என்றும் சொன்னார். அய்ரிலின் இவ்வுரையைக் கேட்டுச் சினமடைந்த நிலநடுக்கக் காரன் பதில் சொன்னான்:

'இது அநியாயம்! ஜீயூஸ் மிகவும் பலம் பொருந்தியவராக இருக்கலாம். ஆனால் அதற்காக என்னை வற்புறுத்தி இணங்க வைப்பதென்பது அவருடைய அகந்தையைக் காட்டுகிறது. அந்தஸ்தில் நான் அவருக்கு இணையானவன். என்னை அவருடைய விருப்பத்துக்கு வளைப்பதென்பது நியாயமல்ல. நாங்கள் மூன்று சகோதரர்கள். மூவருமே க்ரோனஸ் ரியாவின் பிள்ளைகள். ஜீயூஸ், நான் மற்றும் இறந்தவர் உலகத்தின் கடவுளான ஹயடிஸ். இந்த உலகத்தை மூன்று பாகங்களாகப் பிரித்தபோது எங்கள் ஒவ்வொருவருக்கும் உரிய பகுதிகள் கொடுக்கப்பட்டன. நாங்கள் சீட்டுக்குலுக்கிப் போட்டோம். மந்தாரமான கடலானது இன்னொருவருக்கு மாற்றிக்கொடுக்க முடியாத பகுதியாக எனக்குக் கிடைத்தது. கீழே இருந்த இருள் ஹயடிஸுக்கு வந்தது. மேகங்கள் நிறைந்த மேலே இருந்த விரிந்த வானம் ஜீயூஸுக்குக் கிடைத்தது. ஆனால் இந்தப் பூமியும் ஒலிம்பஸ் மலையும் எங்கள் அனைவருக்கும் பொதுவானது.

'ஜீயூஸ் சொல்படியெல்லாம் நான் ஆடப்போவதில்லை. அவர் எவ்வளவு ஆற்றல் மிக்கவராக இருந்தாலும் சரி, அவருக்கென்று ஒதுக்கப்பட்ட இவ்வுலகின் மூன்றாவது பகுதியிலேயே அவர் அமைதியாக இருக்கட்டும். ஏதோ நான் ஒரு முழு கோழை என்பதுபோல எண்ணிக்கொண்டு, வன்முறையைச் சொல்லி என்னைப் பயமுறுத்தி அடக்கிவிடலாம் என்று அவர் முயற்சி செய்ய வேண்டாம். என்னைப் பயமுறுத்துவதற்குப் பதிலாக, அவருடைய அசிங்கமான அச்சுறுத்தல்களை அவர் தன் மகன்கள் மற்றும் மகள்களிடத்தில் வைத்துக்கொள்ளட்டும். அவர் அவர்களுக்குத் தந்தை. அவருடயை சொல் கேட்டு நடப்பது அவர்களுடைய கடமை' என்று கோபத்தோடு பேசிமுடித்தான்.

அதைக்கேட்ட விரைவு அய்ரிஸ், காற்றைப் போல விரைவாகப் பதில் சொன்னாள்: 'இந்தப் பூமியைச் சுற்றிவரும் அழகிய கருப்பு நிறத் தலைமுடி கொண்ட கடவுளே! நீங்கள் சொல்லும் இந்த வெளிப்படையான, விட்டுக்கொடுக்காத பதிலை ஜீயூஸிடம் போய்ச் சொல்லவேண்டும் என்று எதிர்பார்க்கிறீர்களா? உங்கள் மனதைக் கொஞ்சமாவது மாற்றிக்கொள்ள மாட்டீர்களா? அசைந்து கொடுப்பது உயர்ந்த மனங்களின் பண்பாகும். பழிவாங்கும் எண்ணம் கொண்ட ஃப்யூரிகள் எப்படித் தம் அண்ணன்களுக்கு ஆதரவு கொடுப்பார்கள் என்பது உங்களுக்குத் தெரியாததல்ல.'

அவள் பதிலைக் கேட்ட நிலநடுக்க நாயகனான பொசைடன்,

'தேவதையே அய்ரிஸ், நீ சொல்வதெல்லாம் உண்மையே. இவ்விதமான சாதுரியம் ஒரு தூதுவனுக்கு உயர்ந்த இடத்தைக் கொடுப்பதுதான். ஆனால் ஜீயூஸோடு சமமாக ஆளவேண்டும் என்று விதிக்கப்பட்ட ஒரு கடவுள் இப்படி அவமாரியாதை செய்யப்படுவது என்னை மிகவும் காயப்படுத்துகிறது. என் மனதை மிகவும் பாதிக்கிறது. வெறுப்பு இல்லை என்று சொல்ல முடியாவிட்டாலும், இப்பொழுது நான் விட்டுக் கொடுக் கிறேன். ஆனால் உனக்கு நான் இன்னொரு விஷயம் சொல்ல விரும்புகிறேன். இந்த எச்சரிக்கையை எளிதாக எடுத்துக் கொள்ளக் கூடாது. என்னுடைய விருப்பங்களுக்கு எதிராகவும், போர்த்தலைவி அதீனி, ஹீரா, ஹெர்மிஸ் மற்றும் தலைவன் ஹெஃபைஸ்டஸ் ஆகியோரின் விருப்பங்களுக்கு எதிராகவும், இலியம் நகரை அழித்து பெரும் வெற்றியை கிரேக்கர்கள் அடையவிடாமல் ஜீயூஸ் செய்வாரேயானால், எனக்கும் அவருக்குமிடையில் சரி செய்ய முடியாத சண்டையும் பிரிவும் உருவாகிவிடும் என்பது நிச்சயம்' என்று சொன்னான்.

பின் கிரேக்கப் படைகளை விட்டு நீங்கிக் கடலுக்குள் சென்றான் நில நடுக்கக் கடவுளான பொசைடன். அவனில்லாமல் கிரேக்க வீரர்கள் தவித்தனர். மேகங்களை அணிவகுக்கச் செய்யும் ஜீயூஸ் அப்போலோவிடம் செய்யவேண்டியதை சொன்னான்:

'வெண்கலக் கவச உடையணிந்த ஹெக்டரிடம் இப்பொழுது போ அருமை ஃபீபஸ். எனது கோபத்தின் முழு கனத்தையும் தவிர்க்கும் பொருட்டு, இவ்வுலகைச் சுற்றிவரும் நிலநடுக்கக் கடவுளான பொசைடன் ஒளிபொருந்திய கடலுக்குள் சென்று

விட்டான். நாங்கள் மட்டும் அடிதடியில் இறங்கியிருந் தோமெனில், கீழுலகில் க்ரோனஸோடு வாழும் கடவுளரையும் சேர்த்து, எல்லாரும் அதைக் கேட்டிருப்பர். ஆனால், மனத்தில் வெறுப்பு இருந்தாலும், என் சொல்லுக்குக் கட்டுப்பட்டு அவன் நடந்து கொண்டது இப்பொழுது மிகவும் நல்லதாகப் போயிற்று. இல்லையெனில், எல்லாம் சரிசெய்யப்படும் முன்பு நிறைய வியர்வை சிந்தப்பட்டிருக்கும்.

'இந்தா, குஞ்சம் வைத்த என் கேடயத்தைப் பெற்றுக்கொள். அதைக் கடினமாக ஆட்டி, கிரேக்க வீரர்களின் மத்தியில் பெரும் பதற்றத்தை ஏற்படுத்து. வில்லின் கடவுளே, கீர்த்திமிகு ஹெக்டரின்மீது சிறப்பான அக்கறை எடுத்துக்கொள். நீ ஹெக்ட ருக்கு வழங்கப்போகும் அபரிமிதமான ஆற்றலில், கிரேக்கர்கள் தலைதெறிக்க, பதற்றத்துடன் தங்களின் கப்பல்களுக்கு ஹெல் லென்பாண்ட ஜலசந்தியை நோக்கி ஓடவேண்டும். அந்தத் தருணத்தில் அவர்களுக்குக் கொஞ்சம் மூச்சுவிட ஓய்வை நான் கொடுப்பேன். சொல்ல வேண்டியதையும் சொல்வேன்' என்றான்.

தன் தந்தை சொன்ன வார்த்தைகளைச் செயல்படுத்தும் முடி வோடு அப்போலோ அவற்றைக் கேட்டுக் கொண்டான். பறந்து செல்லும் பறவையினங்களில் அதி வேகமாகச் செல்லும் புறாவைக் கொல்லும் வேட்டைப் பருந்தைப் போல, அய்டா மலையின் உச்சியில் இருந்து அப்போலோ உடனே இறங்கிச் சென்றான். ப்ரியமின் மகனான கடவுளையொத்த ஹெக்டர் அவனைப் பார்த்தபோது படுத்துக் கிடக்கவில்லை, எழுந்து உட்கார்ந்திருந்தான். அப்போதுதான் அவனுக்கு மயக்கம் தெளிந் திருந்தது. தன்னைச் சுற்றியிருந்த நண்பர்களை அடையாளம் கண்டு கொண்டான். அவன் மறுபடியும் சுகமடைய வேண்டும் என்று புயல் மேகங்களைச் செலுத்தும் ஜீயூஸ் விரும்பிய கணத்தி லிருந்து அவனுக்கு மூச்சுவாங்கவோ வியர்வை வழியவோ இல்லை. வில் கடவுளான அப்போலோ அவனருகில் வந்து நின்றான்.

'ப்ரியமின் மகனே ஹெக்டர், நீ ஏன் உனது வீரர்களை விட்டு இங்கே சோகமாக உட்கார்ந்துகொண்டிருக்கிறாய்? உனக்கு காயம் பட்டுவிட்டதா? என்று ஆதரவாகக் கேட்டான்.

மின்னும் தலைக்கவசம் கொண்ட ஹெக்டர் பலவீனமான குரலில் பதில் சொன்னான்:

'தலைவா, என்ன கடவுள் நீ? என்னிடமிருந்து செய்தி தெரிந்து கொள்ள ஏன் வந்திருக்கிறாய்? கப்பல்களின் வெளிப்பக்கமாக கிரேக்கர்களை நான் கொன்று கொண்டிருந்தபோது, போர் முழக்கத்தின் தலைவனான அஜாக்ஸ் எனது மார்பில் ஒரு பெரிய பாறையால் தாக்கி என் போர்ச்சக்தியையெல்லாம் எடுத்து விட்டான் என்பது உனக்குத் தெரியாதா? இன்று நான் செத்துப் போய்விடுவேன், இறந்தவர்களோடு ஹயடிஸின் மண்டபத் துக்கு இறங்கிப் போய்விடுவேன் என்றே நினைத்தேன்.'

வில்லேந்திய கடவுளான தலைவன் அப்போலோ சொன்னான்:

'மனமுடைந்து போகாதே மகனே! க்ரோனஸின் மகனான ஜீயூஸ் உன்னோடு சேர்ந்து பணியாற்ற அனுப்பியிருக்கும் தோழனான தங்க வாள் கொண்ட இந்த ஃபீபஸ் அப்போலோவை நம்பு. நான் கடந்த காலத்தில் உன்னை மட்டுமல்ல, உனது உயர்ந்த கோட்டையையும் காத்துள்ளேன். இப்பொழுது எழுந்திரு! உட்குழிந்த கிரேக்கக் கப்பல்கள் இருக்கும் இடம் வரை உடனே புறப்பட்டுப் போகும்படி உனது தேரோட்டிகளுக்கு உத்தரவு கொடு. அவர்களுக்கு முன் நான் அங்கே போவேன். அகழியின் மீது குதிரைகள் செல்ல வசதியாக ஒரு வழியை உண்டாக்கு வேன். கிரேக்க வீரர்களை அச்சுறுத்தி ஓடவைப்பேன்' இவ்வ ார்த்தைகளைச் சொல்லி, மக்கள் மேய்ப்பனாகிய ஹெக்ட ருக்குள் அபரிமிதமான ஆற்றலை ஊதினான் அப்போலோ.

லாயத்தில் கட்டப்பட்ட குதிரை கயிற்றை அறுத்துக்கொண்டு, கனைத்துக்கொண்டு, குளம்புகளால் ஒலி எழுப்பிக்கொண்டு, இனிமையாகப் பாயும் ஆற்றில் எப்போதும் தான் குளிக்கும் இடத்தை நோக்கிப் பாய்ந்து பரவசமடைந்து செல்லும். தலையை மேல் நோக்கி ஆட்டும். அதன் பிடரி காற்றில் தோளோடு படர்ந்து ஆடும். எவ்வளவு அழகாக இருக்கிறோம் என்று அதற்குத்தெரியும். குதிரைகள் இருக்கும் இடங்களுக்கும் மேய்ச்சல் நிலங்களுக்கும் அதன் கால்கள் தரையின் மீது மிதந்து செல்வதுபோல அதைக் கொண்டுசெல்லும். இதைப்போல, அப்போலோ சொன்னதைக் கேட்டதும் மிகவும் எளிதாக, எந்தச் சிரமமும் இல்லாமல் கிளம்பிய ஹெக்டர் தன் தேரோட்டி களுக்கும் உற்சாகமூட்டினான்.

ஒரு வெள்ளாடு அல்லது கொம்புகளுள்ள மானைத் துரத்திக் கொண்டு ஓடிவரும் வேட்டை நாய்களின் பின்னால் வரும்

கிராமத்தார்களைப்போல இருந்தனர் கிரேக்கர்கள். நல்ல நிழலுள்ள மரங்களடர்ந்த பகுதியிலோ பாறை அடுக்குகளிலே அது அடைக்கலம் தேடும். ஆனால் அந்நாய்களால் பிடிக்கப்பட வேண்டும் என்ற விதி அதற்கு இருக்காது. அப்போது திடீரென்று ஒரு தாடியுள்ள சிங்கம், கிராமத்தார் எழுப்பிய சப்தத்தால் உசுப்பப்பட்டு, அவர்கள் மத்தியில் தோன்றும். எவ்வளவு உறுதியுடன் இருந்தபோதும் சிங்கத்தைப் பார்த்தவுடன் அவர்கள் ஓட்டமெடுப்பர். அதைப்போல கிரேக்கர்கள் படிப்படியாகக் கூட்டமாக முன்னேறிக்கொண்டிருந்தனர். தங்களுடைய வாட்களாலும் வளைந்த ஈட்டிகளாலும் குத்திக்கொண்டே முன்னேறினர். ஆனால் ஹெக்டர் மறுபடியும் தன் வீரர்களை அணிவகுத்துக் கொண்டு வருவதைப் பார்த்தவுடன் அவர்களை அச்சம் ஆட்கொண்டது. அவர்கள் மனங்கள் சோர்வடைந்தன.

ஆன்ட்ரமானின் மகனான தோவாஸ் அப்போது கிரேக்கர்களை நோக்கினான். ஈட்டோலியர்களில் அவனே மிகவும் சிறந்த வீரனாக இருந்தான். ஈட்டி எறிவதிலும் தனித்து நின்று சண்டையிடுவதிலும் நிபுணனாக இருந்தான். அதோடு, அப்போது கிரேக்கர்கள் மத்தியில் ஆலோசனை சொல்வதற்கு அவனைவிடச் சிறந்தவர்கள் வெகு சிலரே இருந்தனர். அவன் எழுந்து பேசினான்; அவன் பேசியபோது அவர்களைப் பற்றிய அக்கறை அவன் மனத்தில் இருந்தது.

'என்ன ஆச்சரியம், கிட்டத்தட்ட செத்துப்போன ஹெக்டர் மறுபடியும் உயிர்பெற்று வந்துவிட்டான்! அதுவும் டிலமானின் மகன் அஜாக்ஸ் அவன் கதையை முடித்துவிட்டான் என்று நாமெல்லாம் நினைத்துக்கொண்டிருக்கும்போது உயிரோடு வந்துள்ளான்.! ஏதோ ஒரு கடவுள்தான் தன் கையால் அவனை எடுத்து மறு உயிர் கொடுத்து இங்கே கொண்டு வந்திருக்க வேண்டும். ஏதோ அவன் நம்மில் கொஞ்சம் பேரைத்தான் கொன்றிருக்கிறான், அது போதாது என்பதுபோல போருக்கு வந்து விட்டான்! இனி அவன் கையால் இன்னும் எத்தனைபேர் சாகப்போகிறோமோ! இடிமுழக்கம் செய்யும் ஜீயூஸின் வேலையாகத்தான் இது இருக்க வேண்டும். இல்லையெனில், முன் வரிசை அணிவகுப்பில் மறுபடியும் ஹெக்டரை நாம் எப்படிப் பார்க்க முடியும்?

'எனவே, நான் இப்பொழுது சொல்வதை அனைவரும் கேளுங்கள். முக்கிய அணிவகுப்பில் உள்ள வீரர்கள் அனைவரும் கப்பல்

களுக்குத் திரும்பிச் செல்லுங்கள். நம்மில் தலைசிறந்த வீரர்கள் என்று மார்தட்டிக்கொள்பவர்கள் மட்டும் இங்கே ஈட்டிகளுடன் தயாராக இருக்கட்டும். ஹெக்டரின் முதல் தாக்குதலைத் தடுக்க முடியும் என்ற நம்பிக்கையில் இருப்போம். எவ்வளவு உறுதியுள்ளவனாக அவன் இருந்தாலும், மறுபடியும் கிரேக்கப் படையைத் தாக்குவதற்கு முன் அவன் ஒருமுறைக்கு மறுமுறை சிந்தித்தே தாக்க வேண்டிவரும்' என்றான்.

அவன் அப்படிச் சொன்னதும் அனைவரும் அதற்கு உடன்பட்டு ஏற்றுக்கொண்டனர். அஜாக்ஸ், தலைவன் இடொமீனியஸ், ட்யூஸர், மெரியோனிஸ், மீஜிஸ் ஆகியோரின் தலைமையில் தங்களில் மிகச் சிறந்த வீரர்களின் அணிவரிசை ஒன்றை உருவாக்கினர். ஹெக்டரையும் அவனது ட்ரோஜன்களையும் எதிர்த்து நின்று போர் செய்யத் தயாராயினர். அவர்களுக்குப் பின்னால் கிரேக்கர்களின் முக்கிய படை கப்பல்களுக்குப் பின்வாங்கிச் சென்றது.

மிகவும் நம்பிக்கையுடன் ட்ரோஜன்கள் கூட்டமாக முன்னேறி வந்தனர். ஹெக்டர் அவர்களுக்குத் தலைமையேற்று வந்தான். அவனுக்கு முன்னால், அவனது தோள்களைச் சுற்றி ஒரு பனிப் படலத்தை ஏற்படுத்தி, பின்னால் சென்றான் ஃபீபஸ் அப்போலோ. கையில் ஜீயூஸின் அழகான கேடயத்தை ஏந்தி இருந்தான். அச்சுறுத்தும் வகையில் அது மின்னிக்கொண்டிருந்தது. மனிதர்களிடையே பதற்றத்தை ஏற்படுத்துவதற்காக வெண்கலக் கம்மாளனான ஹெஃபைஸ்டஸ் ஜீயூஸுக்குச் செய்து கொடுத்தது அது. அதைக் கையில் ஏந்திக்கொண்டு, ட்ரோஜன் படையினருக்குத் தலைமையேற்றுச் சென்றான் அப்போலோ.

ஆனால் அவர்களுக்காக கிரேக்க வீரர்கள் கும்பலாகக் காத்திருந்தனர். காதடைக்கும் பேரொலி இரண்டு பக்கமிருந்தும் கிளம்பி வானத்துக்குச் சென்றது. வில்லில் இருந்து அம்புகள் பறந்தன. உறுதியான கரங்களிலிலிருந்து கிளம்பிய ஈட்டிகள் இளம் வீரர்களின் உடல்களில் தங்கள் வயிற்றை நிரப்பிக்கொள்ளும் தாகத்தில், புகுந்தன. பல ஈட்டிகள் வெண் சதைகளைத் தாக்குமுன்னரே கீழே விழுந்து மண்ணில் குத்தி நின்றன.

ஃபீபஸ் அப்போலோ தன் கையில் கேடயத்தை நிலையாகப் பிடித்திருந்தவரை ஏவுகணைகளும் எதிர் ஏவுகணைகளுமாக

வந்தவண்ணமிருந்தன. வீரர்கள் விழுந்துகொண்டே இருந்தனர். ஒரு கணத்தில் கிரேக்கர்களின் முகத்தை நேருக்கு நேர் பார்த்தவனாக அப்போலோ தன் கேடயத்தைப் பயங்கரமாக உலுக்கி உரத்தக் குரலெழுப்பினான். அதன்பின் கிரேக்க வீரர்களின் இதயங்கள் குழம்ப ஆரம்பித்தன. அவர்களின் போர்த்திறமெல்லாம் அவர்களை விட்டுப் போனது. இருண்ட இரவின் ஆழத்தில், மேய்ப்பர்கள் இல்லாத நேரம் பார்த்து, பசுக்கள் அல்லது பெரும் ஆட்டு மந்தையின் மீது இரண்டு காட்டு மிருகங்கள் திடீரென்று தோன்றி ஏறி மிதிப்பதுபோல, தைரியமும் நம்பிக்கையும் இழந்த கிரேக்கர்கள் படுதோல்வியடையத் தொடங்கினர். அவர்கள் மத்தியில் பதற்றத்தையும் குழப்பத்தையும் ஏற்படுத்தியது அப்போலோதான். அப்படிச் செய்ததன் மூலம் ஹெக்டருக்கும் அவனுடைய ட்ரோஜன்களுக்கும் பெரும் புகழைக் கொடுத்தான்.

கிரேக்க அணிக்குள் நுழைந்த ட்ரோஜன்கள், ஒவ்வொருவராகக் கொல்லத் தேர்ந்தெடுத்தனர். அர்சிலாஸ், ஸ்டிக்கியஸ் ஆகியோரை ஹெக்டர் கொன்றான். முன்னவன் வெண்கலக் கவச உடைகொண்ட போட்டியர்களின் தலைவன். பின்னவன், வள்ளல் தன்மை கொண்ட மெனெஸ்தியூஸை நேர்மையாகப் பின்பற்றியவன். இதற்கிடையில் மிடானையும் அயாசஸையும் ஈனியாஸ் கொன்றான். கடவுளையொத்த ஆய்லியூஸுக்கு முறைதவறிப் பிறந்தவன் மிடான். அந்த வகையில் அவன் அஜாக்ஸுக்குச் சகோதரனாவான். ஆனால் அவன் தன் தந்தையர் நாடான ஃபைலோஸில் இருந்து வெகு தொலைவில் வசித்து வந்தான். ஏனெனில், ஆய்லியூஸின் மனைவி அவனது மாற்றாந்தாய் எரியோப்பிஸின் உறவினர்களில் ஒருவனை அவன் கொலை செய்திருந்தான். அயாசஸ் அதீனிய தலைவர்களில் ஒருவனாக இருந்தான். ஸ்ஃபீலஸ் அவனுடைய தந்தையாவார். மெசிஸ்ட்டியூஸை பாலிடாமஸ் கொன்றான். முன் அணியிலிருந்த ஈக்கியானை பாலிட்டிஸ் கொன்றான். கடவுளையொத்த அகீனர் க்ளோனியஸைக் கொன்றான். டயோக்கஸ் பின்வாங்கி ஓடிக் கொண்டிருந்தபோது முதுகில், தோள்பக்கமாகத் தாக்கப் பட்டான். பாரிஸின் வெண்கல ஈட்டி அவனது தோளைத் துளைத்துச் சென்றது.

வெற்றியாளர்கள் இறந்தவர்களின் உடல்களிலிருந்து கவச உடைகளைக் கழற்றிக் கொண்டிருந்தனர். இந்தப் பக்கமும்

அந்தப் பக்கமுமாகத் தடுமாறி ஓடிக்கொண்டிருந்த கிரேக்க வீரர்கள் அவர்களது அகழியிலும் வேலியின் மீதும் விழுந்தனர். எழுப்பி வைத்திருந்த மகா சுவருக்குப் பின்னால் அடைக்கலம் தேடும்படி ஆனது அவர்களுக்கு. அதைப்பார்த்த ஹெக்டர் தனது வீரர்களை உரக்க அழைத்துக் கூறினான்.

'ரத்தம் தோய்ந்த கவச உடைகளைக் கழற்றுவதை மறந்துவிட்டு கிரேக்கக் கப்பல்களை நோக்கிச் செல்லுங்கள்! நான் சொல் வதைக் கேட்காமல் அங்குமிங்கும் அலைந்து கொண்டிருக்கும் யாரையாவது நான் பார்த்தால் உடனே அந்த இடத்திலேயே கொன்றுவிடுவேன். அதுமட்டுமல்ல, அப்படிச் செத்தவனுக்கு, அவனது உறவினர்களிடமிருந்தோ பெண்களிடமிருந்தோ உரிய ஈமச்சடங்குகள் கிடைக்காது. இலியம் நகரின் முன் அவனது உடலை நாய்கள் கிழிக்கும்' என்று சொன்னவனாய், கைகளைப் பின்னால் ஆட்டிக் குதிரைகளைச் சாட்டையால் சொடுக்கிப் பேரொலி எழுப்பினான் ஹெக்டர்.

ட்ரோஜன் அணியின் தேரோட்டிகள் அனைவரும் பதிலுக்குப் பேரொலி எழுப்பிக் குதிரைகளை விரட்டித் தேர்களைச் செலுத்தினர். முன்னால் சென்ற ஃபீபஸ் அப்போலோ, கிரேக்கர்கள் வெட்டி வைத்திருந்த அகழியின் கரைகளை உடைத்து, மத்தியில் அவற்றைக் கொட்டினான். ஒரு வீரன் தன் பலத்தை நிரூபிப்பதற்காக ஈட்டியெறியும்போது, அந்த ஈட்டி எவ்வளவு தூரம் போகுமோ அவ்வளவு தூரம் போதுமான அகலத்தில் அகழியின் குறுக்கே ஒரு பாதையை உருவாக்கினான். அதன் வழியாக அணியணியாக ட்ரோஜன் வீரர்கள் அகழியைக் கடந்து சென்றனர். அவர்களுக்கு முன்னால் தலைமையேற்று கேடயத்தைக் கையில் ஏந்தியவனாகச் சென்றான் ஃபீபஸ் அப்போலோ. பின், அகழியை உடைத்த மாதிரியே எளிதாக அந்தக் கடவுள், கிரேக்கர்கள் எழுப்பிய தற்காப்புக் கோட்டை மதிலையும் உடைத்தான். அவ்வேலை அவனுக்குக் கடற் கரையில் கட்டப்பட்ட மணல் வீட்டைச் சிறுவன் உடைப்பது போல எளிமையாக இருந்தது. குழந்தைகளைப்போலத் தன் மகிழ்ச்சிக்கே அவன் அதைக் கட்டினான். அதைப்போல தன் மகிழ்ச்சிக்காகவே தன் கையாலும் காலாலும் அவனே அதைக் கலைக்கிறான். அதேபோல, அப்போலோ, நீ கிரேக்கர்களின் கடும் உழைப்பை உடைத்துவிட்டு, அவர்கள் மத்தியில் பதற்றத்தையும் அச்சத்தையும் ஏற்படுத்துகிறாய்.

கப்பல்களைச் சென்றடையும்வரை கிரேக்கர்கள் நிற்கவில்லை. அங்கே போனவுடன், சற்று நின்று ஒருவரையொருவர் உதவிக்கு அழைத்துக் கொண்டனர். ஒவ்வொரு வீரனும் தன் கையை வானத்தை நோக்கி உயர்த்தி எல்லாக் கடவுள்களிடமும் பிரார்த்தித்தான். அனைவரையும்விட கிரேக்கர்களின் பாதுகாவலனாகிய நெஸ்டர்தான் முக்கியமாக பிரார்த்தனை செய்தான். தன் கைகளை விரித்து வானத்தைப் பார்த்து அவன் வருத்தத்தோடு கூறினான்.

'தந்தை ஜீயூஸ், செழிப்பான பயிர்நிலங்களுள்ள கிரேக்கத்தில் எங்களில் யாராவது, பாதுகாப்பாகப் போர்க்களத்திலிருந்து திரும்பி வர வேண்டுமென்றும் பிரார்த்தனை செய்திருக்கலாம். அதற்கு எருது அல்லது செம்மறியாட்டின் கொடுத்தத் தொடையை உனக்குத் திருப்படையலாக எரித்துத் தர வேண்டியிருக்கலாம். உன் தலையசைத்து அதை நீயும் ஏற்றுக்கொண்டிருந்தால் அந்தக் கணத்தை மறக்காமல் இப்பொழுது நினைவு கொள்ள வேண்டும். ஒலிம்பியக் கடவுளே! இறப்பின் இந்த நாளில் இருந்து எங்களைக் காப்பாற்று. இப்படி முழுமையாக எங்கள் அனைவரையும் ட்ரோஜன்கள் வெற்றிகொள்ளுமாறு செய்யாதே' என்று அவன் பிரார்த்தித்தான். நீலியஸின் மகனான கிழட்டு நெஸ்டர் செய்த அந்த பிரார்த்தனையைச் செவிமடுத்த ஆலோசனை தருவதில் சிறந்தவனான ஜீயூஸ் இடிமுழக்கம் செய்தான்.

புயல் மேகங்களைச் செலுத்தும் ஜீயூஸின் இடிமுழக்கத்தைக் கேட்ட ட்ரோஜன்கள் முன்னைவிட மூர்க்கமாக கிரேக்கர்கள்மீது பாய்ந்து தாக்கினர். போர் செய்ய வேண்டும் என்ற அவர்களுடைய எண்ணம் புதுப்பொலிவடைந்தது. பெரும்புயலில் எழும்பும் பேரலை கப்பலொன்றின் அருகில் தலைகீழாக மோதி விழுவதுபோல, குதிரைகளை விரட்டிக்கொண்டு கிரேக்க மதிலின் குறுக்கே பேரொலியுடன் பாய்ந்தேறினர் ட்ரோஜன்கள். கொஞ்ச நேரத்திலேயே நேருக்கு நேர் கப்பல்களின் மீது ஏறி நின்றுகொண்டிருந்த கிரேக்கர்களோடு தங்கள் தேர்களில் இருந்துகொண்டே வளைந்த ஈட்டிகளை எறிந்து போர் செய்யத் தொடங்கினர் ட்ரோஜன்கள். கப்பல்களில் இருந்த நீண்ட பெரிய வெண்கலக் கூர்முனைகொண்ட கழிகளைக் கொண்டு தற்காத்துக் கொண்டிருந்தனர் கிரேக்கர்கள். கடலில் சண்டை ஏற்பட்டால் பயன்படுத்தத்தான் அவற்றை அவர்கள் தயாராகச் செய்து வைத்திருந்தனர்.

கப்பல்களிலில் இருந்து கொஞ்ச தூரத்தில், கிரேக்கர்களும் ட்ரோஜன்களும் கிரேக்க மதில் சுவரைத் தம் வசம் கொண்டுவர சண்டையிட்டுக் கொண்டிருந்தபோது, தோழமையுள்ள யூரிபைலஸின் பாசறையில் அவனோடு அமர்ந்திருந்தான் பெட்ரோக்குலஸ். அவனோடு பேசிக்கொண்டே, அசிங்கமாக இருந்த அவனது காயங்களின் மீது மூலிகைகளை வைத்துக் கட்டினான். ஆனால் மதில் சுவரின் குறுக்காக ஏராளமான எண்ணிக்கையில் புற்றீசல்களைப் போல ட்ரோஜன்கள் ஏறி வர முயல்வதையும், கிரீச்சிடும் பேரொலியோடும் பதற்றத்தோடும் இருந்த கிரேக்கர்களையும் பார்த்தபோது அவனுடைய வேதனை அதிகரித்தது. வேதனையில் முனகினான். தொடையில் ஓங்கி தன் உள்ளங்கையால் அடித்துக்கொண்டே மனம் கனக்கக் கூறினான்.

'யூரிபைலஸ், நான் உனக்கு எவ்வளவுதான் தேவைப்பட்டாலும், உன்னோடு நான் இனியும் இங்கே இருக்க முடியாது. அங்கே சூழ்நிலை மிகவும் மோசமாக உள்ளது. உனது உதவியாளன் உன்னைக் கவனித்துக்கொள்வான். நான் விரைவாகச் சென்று அக்கிலிஸைப் பார்த்து எப்படியாவது அவனைப் போரில் கலந்து கொள்ளச் சொல்லப் போகிறேன். ஏதாவது தெய்வீக உதவி அவன் மனத்தில் ஒரு மாற்றத்தை ஏற்படுத்தலாம், யாருக்குத் தெரியும்? ஒரு நண்பனின் சமயோசித அறிவுரை அதிகம் பயனளிக்கக் கூடியது' என்று பேசிக்கொண்டிருக்கும்போதே அவனுடைய கால்கள் நடக்க ஆரம்பித்துவிட்டன.

இதற்கிடையில் ட்ரோஜன்கள் வருவதைக் கடுமையாக எதிர்த்துக் கொண்டிருந்தனர் கிரேக்கர்கள். ட்ரோன்களைவிட அதிக எண்ணிக்கையில் கிரேக்கர்கள் இருந்தாலும், அவர்களால் ட்ரோஜன்கள் தங்கள் கப்பல்களை நெருங்குவதிலிருந்தும் விரட்டியடிக்க முடியவில்லை. அதேசமயம் ட்ரோஜன்களாலும் கிரேக்க அணியை ஊடுருவிக் கப்பல்களின் உள்ளேயோ முகாம் களுக்குள்ளேயோ செல்ல முடியவில்லை. கப்பலின் குறுக்காக நீட்டி வைக்கப்பட்ட ஒரு கம்பியின் உதவிகொண்டு, அதீனியின் வழிகாட்டுதலோடு தச்சுவேலைக் கலையில் கைதேர்ந்த நிபுணன் ஒரு நேர்க்கோட்டை வரைய முடிவதுபோல, எந்தப் பக்கமும் ஒரு அங்குலம்கூட நகராமல் இரண்டு அணிகளும் முன்வரிசையில் விறைப்பாக நின்றுகொண்டிருந்தன.

ஹெக்டரின் வீரர்களில் சிலர் மற்றக் கப்பல்களைத் தாக்கிக் கொண்டிருந்தபோது, கீர்த்திமிகு அஜாக்ஸ் இருந்த இடம் தேடிச்

சென்றான் ஹெக்டர். இருவரும் ஒரு கப்பலுக்காகச் சண்டை யிடத் தொடங்கினர். அஜாக்ஸைக் கப்பலிலிருந்து விரட்டி விட்டு, அக்கப்பலுக்குத் தீவைக்க ஹெக்டரால் முடியவில்லை. கடவுளால் அங்கு கொண்டுவரப்பட்ட ஹெக்டரை விரட்ட அஜாக்ஸாலும் முடியவில்லை. கப்பலுக்கு நெருப்பு மூட்டச் தீயேந்திச் சென்று கொண்டிருந்த காலீட்டரைத் தனது ஈட்டியால் தாக்கினான் கீர்த்திமிமிகு அஜாக்ஸ். தடாலெனத் தரையில் விழுந்தான் காலீட்டர். அவன் கையில் இருந்து தீப்பந்தம் நழுவி விழுந்தது. கருப்புக் கப்பலின் முன் தனது மாமன் மகன் மண்ணில் விழுவதைப் பார்த்த ஹெக்டர் ட்ரோஜன்களையும் லிசியன் களையும் உரக்கக் கூவி அழைத்தான்:

'ட்ரோஜன்களே, லிசியர்களே, நேருக்கு நேர் சண்டையிடுவதில் விருப்பம் கொண்ட டார்டானியர்களே, நாம் நின்று போர் புரிந்துகொண்டிருக்கும் இந்தக் குறுகலான இடத்திலிருந்து அங்குலம்கூட நகரக் கூடாது. கப்பல்களைச் சுற்றி நடந்த சண்டையில் காலீட்டர் கொல்லப்பட்டுவிட்டார்! உடனே அவருடலுக்குப் பாதுகாப்பு கொடுங்கள். இல்லையெனில், அவர்கள் அவருடைய கவச உடைகளைக் கழற்றிக் கொள் வார்கள்!'

இப்படிச் சொல்லிவிட்டு ஒரு மின்னும் ஈட்டியை அஜாக்ஸை நோக்கி எறிந்தான். ஆனால் அது அஜாக்ஸைத் தாக்கத் தவறி, அஜாக்ஸின் உதவியாளனாகிய சைதீராவைச் சேர்ந்த லைக்கோஃப்ரானைத் தாக்கியது. லைக்கோஃப்ரான் புனித சைத்தீராவில் ஒருவனைக் கொன்றுவிட்டு அஜாக்ஸோடு வந்து வசித்து வந்தான். காதுக்கு மேலே இருந்த தலைப்பகுதியை ஹெக்டரின் கூரீட்டி தாக்கியபோது, அவன் அஜாக்ஸுக்குப் பக்கத்தில் நின்றுகொண்டிருந்தான். கப்பலின் பின்பகுதியில் இருந்து பின்பக்கமாகத் தரையில் சாய்ந்து விழுந்து மண்ணைக் கவ்வினான். அதிர்ந்துபோன அஜாக்ஸ் தன் சகோதரனை அழைத்தான்:

'அருமை ட்யூஸர், சைத்தீராவிலிருந்து நம்மோடு வாழ வந்த நமது நம்பிக்கையான நண்பனான லைக்கோஃப்ரோனை நாம் இழந்து விட்டோம். நமது பெற்றோர்களுக்குக் கொடுத்த மதிப்பு மரியாதையைப் போலவே அவருக்கும் கொடுத்து வந்தோம். தைரிய மனம் கொண்டவனான ஹெக்டர் சற்றுமுன் அவரைக் கொன்றுவிட்டான். விட்டால் மரணம் நிச்சயம் என்று

சொல்லத்தக்க, ஃபீபஸ் அப்போலோவிடமிருந்து நீ பெற்ற வில்லும் அம்புகளும் எங்கே?

அவன் அப்படிச் சொன்னதும் ட்யூசர் புரிந்து கொண்டான். உடனே தன் வளைந்த வில்லோடும், நிறைந்திருந்த அம்பறாத் தூணியோடும் அஜாக்ஸின் பக்கம் ஓடிச்சென்று, தனது அம்புகளை ட்ரோஜன்களை நோக்கிச் செலுத்த ஆரம்பித்தான். உயர்ந்த பாலிடாமஸின் உதவியாளனான க்ளீட்டயஸைத்தான் முதலில் அவன் தாக்கினான். கடிவாளத்தைக் கைகளால் பிடித்துக்கொண்டே அம்புகளை விட்டான் ட்யூஸர். ஹெக்டருக் கும் ட்ரோஜன்களுக்கும் நல்ல முறையில் உதவி செய்ய வேண்டும் என்ற எண்ணத்தில்போர் உக்கிரமாக நடந்து கொண்டிருந்த காலாட்படையினரின் பகுதிக்குள் நுழைந்ததால் க்ளீட்டயஸின் குதிரைகள் கொஞ்சம் அஞ்சிக் குழம்பியிருந்தன. அதனால் அவைகளைக் கட்டுப்படுத்தி ஓட்டி வருவதில் சிரமங்கள் இருந்தன. ஆனால் உடனே விரும்பினாலும் யாருமே காப்பாற்ற முடியாத அபாயத்தில் அது போய் முடிந்தது. கொலைகார அம்பு அவனது பிடரியில் தாக்கியது. தேரிலிருந்து தரையில் தடாலென விழுந்தான் அவன். அவனுடைய குதிரைகள் பயந்து விலகி ஓடின. அவற்றின் பின்னால் கடகட வென ஒலித்து ஓடியது காலித்தேர். தலைவன் பாலிடாமஸ்தான் அதை முதலில் கவனித்து நிறுத்தினான். அதை அஸ்ட்டினூ ஸிடம் ஒப்படைத்துவிட்டு, என்ன நடக்கிறதெனக் கவனமாகப் பார்த்துக் கொள்ளும்படியும் குதிரைகளை அருகிலேயே வைத் திருக்கும்படியும் சொன்னான். பின் மறுபடியும் முன் வரிசையில் சென்று சண்டையில் கலந்துகொண்டான்.

வெண்கலக் கவச உடையணிந்த ஹெக்டரைத் தனது அடுத்த அம்பால் குறிவைத்தான் ட்யூஸர். புகழ்பெற்ற அந்த நேரத்தில் ஹெக்டரை மட்டும் சரியாகத் தாக்கி அவன் கொன்றிருப்பானே யானால், கிரேக்கக் கப்பல்களின் அருகில் நிகழ்ந்து கொண் டிருந்த அந்த யுத்தம் ஒரு முடிவுக்கு வந்திருக்கும். ஆனால் எப்போதுமே கவனம் சிதறாத ஜீயூஸ் ஹெக்டரைக் கவனித்துக் கொண்டும், ட்யூஸர்மீது ஒரு கண் வைத்த வண்ணமும் இருந்தான். நம்பிக்கையான அவனது வில்லின் கம்பியைத் திருகி உடைத்ததன் மூலம் ட்யூசரிடமிருந்து வெற்றியைத் தட்டிப் பறித்தான் அவன். வெண்கல முனை கொண்ட அந்த அம்பு வழி விலகி எங்கோ சென்றது. கையிலிருந்து நழுவி விழுந்தது வில்.

நடுநடுங்கிப்போன ட்யூஸர் தன் சகோதரன் அஜாக்ஸிடம் சொன்னான்:

‘ச்சே நாசமாய்ப் போக! ஏதோ ஒரு கெட்ட சக்தி இன்றைய போரில் நமது முயற்சிகளையெல்லாம் கெடுத்துக் கொண்டிருக் கிறது. என் கையிலிருந்து அது இந்த வில்லை விழவைத்து விட்டது. பாயும் என் அம்புகளின் இறுக்கத்துக்காக இன்று காலை யில் நான் இணைத்த புதிய கம்பியையும் அறுத்துவிட்டது’ என்றவனுக்கு.

டிலமானின் மகனான மகா அஜாக்ஸ் பதில் சொன்னான்:

‘சரிசரி நண்பனே, உனது பழைய வில்லையும் அம்புகளையும் தூக்கிப் போடு. ஏனெனில் ஏதோ ஒரு கடவுள் கிரேக்கர்களின் மீதுள்ள வருத்தத்தில் அவைகளைப் பயனற்றவைகளாக்கி விட்டார். அம்புகளுக்குப் பதிலாக ஓர் ஈட்டியை எடுத்துக்கொள். உன் தோள்மீது ஒரு கேடயத்தைப் போட்டுக்கொள். பின் உன் எதிரியை எதிர்கொள்ளச் செல். நமது வீரர்களுக்குத் தலைமை ஏற்றுச் செல். வீர உணர்ச்சியை அவர்களுக்கு மறுபடியும் ஊட்டு. அந்த ட்ரோஜன்கள் வெற்றி பெற்றாலும் சரி, நமது கப்பல் களுக்காக ஒரு பெரிய விலையை அவர்கள் கொடுக்கும்படிச் செய்.’

அவன் அப்படிச் சொன்னதும், ட்யூஸர் தனது வில்லையும் அம்பு களையும் தனது பாசறையில் கொண்டுபோய் வைத்துவிட்டு, பதனிடப்பட்ட மிருகத்தோலால் நான்கு மடிப்புகள் கொண்ட ஒரு கேடயத்தைத் தோளில் போட்டுக்கொண்டான். தனது பலம் வாய்ந்த தலையில் நன்கு வடிவமைக்கப்பட்ட குதிரை முடியில் குஞ்சம் அமைக்கப்பட்ட ஒரு தலைக்கவசத்தை அணிந்து கொண்டான். அதன் இறகு மேலிருந்து பயமுறுத்தும் வகையில் ஆடிக்கொண்டிருந்தது. பின் அவன் ஆற்றல்மிகுந்த வெண்கல முனைகொண்ட ஈட்டியை எடுத்துக் கொண்டான். விரைந்து தயாரான அவன், உடன் சென்று அஜாக்ஸ் அருகில் நின்று கொண்டான்.

ட்யூசரின் ஆயுதங்கள் பயன்படும் நிலையில் இல்லை என்பதைப் புரிந்துகொண்ட ஹெக்டர் ட்ரோஜன்களையும் லைசியர்களை யும் உரக்க அழைத்தான். ‘ட்ரோஜன்களே, லிசியர்களே, நேருக்கு நேர் சண்டையிடுவதில் விருப்பம் கொண்ட டார்டானியர்களே,

சுத்த வீரர்களாக இருங்கள் நண்பர்களே, இந்த உட்குழிந்த கப்பல்களுக்கு அருகில் இருக்கும் நீங்கள் உங்கள் வீர உணர்ச்சியைத் துணைக்கு அழையுங்கள்! அவர்களின் தலைசிறந்த வீரர்களில் ஒருவனை ஜீயூஸ் எப்படி அம்பெய்வதில் இருந்து தடுத்தார் என்பதை நான் என் கண்களாலேயே பார்த்தேன். ஜீயூஸிடமிருந்த நமக்கு உதவி கிடைக்கும் என்பதில் எந்த சந்தேகமும் இல்லை. எந்த அணிக்கு வெற்றி கொடுக்கத் திட்டமிட்டுள்ளாரோ அந்த அணிக்கும், எந்த அணியைப் பலவீனப்படுத்தி உதவி செய்ய மறுக்கிறாரோ அந்த அணிக்கும் தெளிவாகப் புரியுமாறு வெளிப்படையாகவே அவர் செய்து கொண்டிருக்கிறார். கிரேக்கர்களின் எதிர்ப்பை எப்படிப் பலவீனப்படுத்திக் கொண்டிருக்கிறார், எப்படி நமக்கு ஆதரவு கொடுத்துக் கொண்டிருக்கிறார் என்று நீங்களே பாருங்கள்! ஒன்றாகச் சேர்ந்து வந்து கப்பல்களைத் தாக்குங்கள்! இதில் யாராவது தாக்கப்பட்டோ, குத்தப்பட்டோ விதி முடிந்து போகுமானால், அப்படியே ஆகட்டும். அவன் தனது நாட்டுக்காக வீழ்ந்தவனாக இருப்பான். அது கண்ணியக் குறைவான மரணமல்ல. இந்த கிரேக்கர்கள் அனைவரும் தமது தந்தையர் நாட்டுக்குத் திரும்பிப் பயணப்பட்டுப் போய்விட்ட பிறகு, இங்கே அவர்களோடு போரிட்டு இறந்தவனுடைய மனைவி மக்கள் அனைவரும் வருங்காலத்தில் பாதுகாப்பாக வீட்டில் இருப்பார்கள். அவர்களுடைய நிலம் நீச்சும் பாதுகாப்பாகவே இருக்கும்' என்றான். இவ்விதமாகப் பேசி ஒவ்வொரு வீரனுடைய உள்ளத்திலும் வீரத்தை விதைத்துப் புத்துணர்ச்சியூட்டினான் ஹெக்டர்.

தன் பக்கமிருந்த வீரர்களைப் பார்த்து அஜாக்ஸ் உடனே சொன்னான்.

'உங்களுக்கு மிகுந்த அவமானம் கிரேக்கர்களே! இன்றைக்கு இங்கே இருந்து நாம் போரிட்டு நம் கப்பல்களைக் காக்க வேண்டும் அல்லது மடிய வேண்டும். இதைத்தவிர நமக்கு வேறு வழியில்லை. இல்லையெனில், மின்னும் தலைக்கவசம் கொண்ட ஹெக்டர் நமது கப்பல்களையெல்லாம் எடுத்துக் கொண்ட பிறகு, நமது நாட்டுக்கு நடந்தே போய்விடலாம் என்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்களா? நம் கப்பல்களையெல்லாம் தீக்கிரையாக்குவதில் அவன் குறியாக இருக்கிறான். அதற்காக முழுப்படையையும் அவன் விரட்டிக் கொண்டிருப்பது உங்க

ளுக்குத் தெரியவில்லையா? இப்பொழுது நம்மிடம் உள்ள ஒரே நம்பிக்கை, ஒரே யுக்தி, அவர்களைப் போரில் நேருக்கு நேர் வீரனுக்கு வீரன், ஒருவனுக்கு ஒருவன் என்ற முறையில் சந்திப்பதுதான். நாம் இருக்கப் போகிறோமோ இறக்கப் போகிறோமோ எதுவாயினும், போரிட்டுப் பார்த்து இந்த விஷயத்தை நிரந்தரமாக ஒரு முடிவுக்குக் கொண்டுவந்து விடுவது மேல். இல்லையெனில், இந்த கப்பல்களைச் சுற்றி நடக்கும் இந்த உக்கிரமான போரில் பலவீனமான நமது பகைவர்களால் நமது உயிர்கள் பிழிந்து எடுக்கப்பட்டுவிடும்.' இவ்விதமாகப் பேசி ஒவ்வொரு வீரனுடைய உள்ளத்திலும் வீரத்தை விதைத்து புத்துணர்ச்சியூட்டினான் அஜாக்ஸ்.

அப்போது ஃபீசிய தலைவனான ஸ்கீடியஸைக் கொன்றான் ஹெக்டர். காலாட்படைத் தளபதியான லாடாமஸைக் கொன்றான் அஜாக்ஸ். சில்லீனி நாட்டு ஓட்டஸைக் கொன்றான் பாலிடாமஸ். ஓட்டஸ் துணிச்சல் மிகுந்த ஈலியர்களின் தலைவனாகவும் மீகிஸின் நண்பனாகவும் இருந்தான். அதைப் பார்த்தவுடன் பாலிடாமஸ் மீது பாய்ந்தான் மீகிஸ். ஆனால் பின்வாங்கி அந்தத் தாக்குதலில் இருந்து பாலிடாமஸ் தப்பித்துக் கொண்டான். முன் வரிசை அணியில் அவன் வீழ அப்போலோ அனுமதிக்கப் போவதில்லை. மீகிஸின் குறி தவறியது.

பின் க்ரோஸ்மஸின் மார்பில் முழுமையாகத் தாக்கினான் மீகிஸ். தடாலெனத் தரையில் விழுந்தான் க்ரோஸ்மஸ். அவனுடைய தோளில் இருந்து கவச உடைகளைக் கழற்ற ஆரம்பித்தான் மீகிஸ். அவன் அப்படிச் செய்து கொண்டிருந்தபோது, ஈட்டி யெறிவதில் நிபுணனான டோலோப்ஸ் அவனைத் தாக்கினான். டோலோப்ஸ் லாம்பஸின் மகன்களில் தலைசிறந்தவனும் பயிற்சிபெற்ற போர்வீரனும் லாமிடானின் பேரனும் ஆவான். அருகிலிருந்து தாக்கிய டோலோப்ஸ், மீகிஸின் கேடயத்தின் மத்தியில் தன் ஈட்டியால் குத்தினான். ஆனால் மீகிஸ் அணிந்திருந்த உலோகத்தகடுகள் பொருத்தப்பட்ட பருத்த உடல் கவசம் அவனுக்கு நன்றாக சேவை செய்தது. அது அவனுக்கு அவனுடைய தந்தை ஃபைலியூஸ் எஃபைரியில் இருந்தும் செல்லிஸ் நதிப் பகுதியில் இருந்தும் கொண்டுவந்து கொடுத்தது. அப்பகுதியில் இருந்த மக்கள் தலைவனான யுஃபீட்டிஸ் ஒரு விருந்தின்போது பரிசாக ஃபைலியூஸுக்குக் கொடுத்தார். போருக்குச் செல்லும்போது எதிரிகளிடமிருந்து பாதுகாத்துக்

கொள்வதற்காகக் கொடுக்கப்பட்டது. அது இப்பொழுது அவனுடைய மகனையும் பாதுகாத்தது.

தனது கூர்முனை ஈட்டியினால் டோலோப்ஸின் வெண்கல தலைக்கவசத்தின் இறகுக்குஞ்சம் கொண்ட பகுதியில் தாக்க, அது குதிரைமுடிக் கொண்டையை வெட்டிக் கொண்டு போனது. கருஞ்சிவப்பு வண்ணத்தில் மின்னிய அதன் முழு அலங்காரமும் மண்ணில் விழுந்தது. ஆனாலும் வெற்றிபெற முடியுமா என்ற சந்தேகம் டோலோப்ஸுக்கு வரவில்லை. அவன் தான் நின்ற இடத்திலேயே விடாப்பிடியாக நின்று தொடர்ந்து போரிட்டான். ஆனால் போர்த்திறம் மிக்க மெனிலயஸ், கையில் ஈட்டியுடன், மீகிஸுக்கு உதவுவதற்காக அவனருகில் வந்து நின்றதை டோலோப்ஸ் கவனிக்கவில்லை. டோலோப்ஸின் தோள் பகுதியில் பின்னாலிருந்து தாக்கினான் மெனிலயஸ். ஆர்வம் கொண்ட அந்த ஈட்டியின் முனை முழுவதுமாக உள்ளே சென்று அவனுடைய மார்பின் வழியாக வெளியில் வந்தது. தலைகீழாக விழுந்தான் டோலோப்ஸ். அவனது தோளிலிலிருந்து வெண் கலக் கவச உடையைக் கழற்றுவதற்காக மெனிலயஸும் மீகிஸும் விரைந்தனர்.

ஹெக்டர் தனது உறவினர்கள் அனைவரையும் அணிவகுக்க அழைத்தான். பின் மெலானிப்பஸை மட்டும் தனியாகத் திட்டு வதற்காகத் தேர்ந்தெடுத்தான். படையெடுப்பு தொடங்குவதற்கு முன் பெர்கோட்டியில் இவன் தனது அலங்கோலமாக நடந்து செல்லும் ஆடுகளை மேய்த்துக் கொண்டிருந்தான். ஆனால் கிரேக்கர்கள் தம் உருளும் கப்பல்களில் வந்திறங்கியபோது இவன் இலியம் நகருக்குத் திரும்பி ட்ரோஜன்கள் மத்தியில் மிகவும் மதிக்கப்பட்டவனாக ப்ரியத்தோடு வசித்தான். ப்ரியமும் இவனைத் தன் பிள்ளைகளில் ஒருவரைப் போல நடத்தினான். அவனைப் பார்த்துக் கோபமாகக் கத்தினான் ஹெக்டர்:

'மெனாலிப்பஸ், இப்படியே எல்லாம் படுத்துக் கொண்டிருப்ப தற்காகவா நாம் வந்தோம்? உனது மாமன் மகன் டோலோப்ஸை அவர்கள் கொன்றுவிட்டது உனக்கு ஒன்றுமே இல்லாத விஷயமா? அல்லது அவனுடைய கவச உடைகளைக் கழற்றி எடுத்துக்கொள்ள அவர்கள் ஒருவருக்கொருவர் உதவி செய்து கொண்டிருப்பது உன் கண்ணில் படவில்லையா? என்னோடு இப்பொழுது வா. இந்த கிரேக்கர்களோடு தூரத்தில் நின்று கொண்டு நெருக்கமாக சண்டை போட முடியாது. நாம்

அவர்களை அழிக்க வேண்டும். அல்லது நமது உயர்ந்த இலியத்தையும் நம் மக்களையும் அவர்கள் அழித்தொழிப்பார்கள்' இப்படிச் சொல்லிவிட்டு அவன் வழிநடத்திச் சென்றான். கடவுளையொத்த மெனாலிப்பஸ் அவனுடன் சென்றான்.

இதற்கிடையில் டிலமானின் மகனான மகா அஜாக்ஸ் கிரேக்கர்களுக்கு எழுச்சியூட்டிக் கொண்டிருந்தான்:

'சக வீரர்களே, உண்மையான வீரத்தோடு இருங்கள். உங்கள் புகழை எண்ணிப்பாருங்கள். போரின் உக்கிரத்தில் நம் ஒவ்வொருவரின் கண்களிலும் நமது கண்ணியம் குலைவதைத் தவிர வேறு எதைப்பற்றியும் பயம் கொள்ளாதீர்கள். வீரர்கள் கண்ணியம் போவதைப் பற்றிக் கவலைப்படும்போது, கொல்லப்படுபவர்களைவிடக் காப்பாற்றப்படுபவர்கள் அதிகமாக இருப்பார்கள். ஓடிப்போவதில் கண்ணியமோ பாதுகாப்போ கிடையாது.'

அவன் பேசிய இவ்வார்த்தைகள் அவர்களுக்குத் தேவையில்லாததாக இருந்தாலும் ஒவ்வொரு கிரேக்க வீரனும் அஜாக்ஸின் சொற்களை மனத்தில் வாங்கிக் கொண்டான். கப்பல்களைச் சுற்றி வெண்கலத்தால் ஒரு வேலி அமைத்தனர். ஆனால் தாக்குங்கள் தாக்குங்கள் என்று சொல்லி ட்ரோஜன்களை ஜீயூஸ் இன்னும் தூண்டிக் கொண்டிருந்தான்.

போர்முழக்கத்தின் தலைவனான மெனிலயஸ் ஆன்ட்டிலோக்கஸைத் தூண்டினான்:

'உன்னைத் தவிர இளைஞர் நம்மிடையே வேறு யாருமில்லை ஆன்ட்டிலோக்கஸ். உன்னைவிட விரைவான, சண்டையிடுவதில் துணிச்சலான வீரனும் இல்லை. நீ ஓடிச்சென்று யாராவது ஒரு ட்ரோஜன் வீரனை வீழ்த்தினால் என்ன?'

இப்படிச் சொல்லிவிட்டு மெனிலயஸ் சென்றாலும் ஆன்ட்டிலோக்கஸை அவன் போர் செய்யத் தூண்டிவிட்டிருந்தான். முன்வரிசையில் இருந்து துள்ளி வந்த ஆண்டிலோக்கஸ் தனது மின்னும் ஈட்டியை எறிந்தான். அது வருவதைக் கண்டதும் ட்ரோஜன்கள் பின்வாங்கினர். ஆனால் கையைவிட்டுப் புறப்பட்ட அவன் ஈட்டி பயனில்லாமல் போகவில்லை. முன்னேறி வந்து கொண்டிருந்த மெலானிப்பஸின் மார்புக் காம்பில் குத்தியது அது. தடாலெனத் தரையில் விழுந்தான் மெலானிப்பஸ். அவனது கண்களை இரவு சூழ்ந்தது. தன் குகையிலிருந்து

கிளம்பி வெளியில் வந்த மானை ஒரு அதிர்ஷ்டவசமான அம்பினால் அடித்து வேட்டைக்காரன் கொன்று போட, கீழே கிடக்கும் மானின் மீது பாயும் வேட்டை நாயைப் போல அவன் மீது பாய்ந்தான் ஆன்ட்டிலோக்கஸ். ஆமாம் மெனாலிப்பஸ், உனது கவச உடைகளைக் கழற்றி உன்னை நிர்வாணப்படுத்தப் பாய்ந்து வந்தான் தீர்மானமான ஆன்ட்டிலோக்கஸ்.

ஆன்ட்டிலோக்கஸை எதிர்கொள்ள கடவுளையொத்த ஹெக்டர் உடனே அங்கே விரைந்து வந்தான். சுறுசுறுப்பான போர் வீரனான ஆன்ட்டிலோக்கஸ் ஹெக்டர் வந்து சேரும் வரை காத்திருக்கவில்லை. ஒரு நாயையோ மேய்ப்பனையோ தவறாகக் கொன்று விட்ட காட்டுமிருகம், துரத்தி வரும் கும்பலில் இருந்து தப்பிக்க விரைவதுபோல, பாய்ந்தோடினான். காதடைக்கும் அலறல்கள், ட்ரோஜன்களிடமிருந்தும் ஹெக்டரிடமிருந்தும் வந்த கொலைபாதக ஏவுகணைகளின் தாக்குதல்கள் ஆகியவற்றிலிருந்து தப்பிக்க நெஸ்டரின் மகனான ஆன்ட்டிலோக்கஸ் தப்பியோடினான். தனது படைப்பிரிவினர் இருக்கும் இடத்தைச் சென்றடைந்ததும் திரும்பி நின்று எதிர்கொள்ளத் தயாரானான்.

கற்பனைக்கு எட்டாத சக்தியை அவர்களுக்குக் கொடுத்து, கிரேக்கர்களுக்குக் குழப்பத்தை ஏற்படுத்தி அவர்களுக்கான எல்லா வெற்றியையும் மறுத்து எதிரிகளை உற்சாகப்படுத்திய ஜீயூஸின் உத்தரவுகளை நிறைவேற்ற, சதை சுவைக்கும் சிங்கங்களைப் போல ட்ரோஜன்கள் இப்பொழுது கப்பல்களைத் தாக்கத் தொடங்கினர். ஹெக்டருக்குப் புகழைக் கொடுக்கத் திட்டமிட்டிருந்தான் ஜீயூஸ். அணைக்க முடியாத நெருப்பு கொண்டு பறவையின் அலகைப்போல வடிவம் கொண்ட கப்பல்களுக்கு ஹெக்டர் தீமூட்டட்டும், தீட்டிஸின் எல்லா அநியாயமான விருப்பங்கள் யாவும் நிறைவேறட்டும் என்று காத்திருந்தான். ஏதாவது ஒரு கப்பல் எரிந்து அதிலிருந்து ஜ்வாலைகள் கிளம்பி வரட்டும் என்று அறிவுரை சொல்வதில் ஞானவானான ஜீயூஸ் காத்திருந்தான். அந்தக் கணத்திலிருந்து ட்ரோஜன்கள் பின்வாங்கிச் செல்ல வேண்டும் என்றும் கிரேக்கர்கள் கை ஓங்கி வெற்றி பெற வேண்டும் என்றும் அவன் முடிவு செய்திருந்தான். உட்குழிந்த கிரேக்கக் கப்பல்களைத் தாக்கும்படி ப்ரியமின் மகனான ஹெக்டரை அவன் உற்சாகப் படுத்திக் கொண்டிருந்தபோதெல்லாம் இதுதான் அவன் மனத்தில் ஓடிக்கொண்டிருந்தது.

ஹெக்டருக்கு மன உறுதி ஒன்றும் குறைந்திருக்கவில்லை. ஈட்டியோடு பாயும் போர்க்கடவுள் ஏரிஸைப் போலவும் மலைகளில் இருக்கும் அடர்காடுகளை அழிக்கும் பெருந்தீயைப் போலவும்தான் அவன் ஆக்ரோஷமாகப் போர் செய்தான். அவன் வாய் நுரை தள்ளிக்கொண்டிருந்தது. கீழ் நோக்கி வளைந்த புருவங்களின் கீழே இருந்த அவன் கண்கள் மின்னின அவன் சண்டையிட்டுக் கொண்டிருந்தபோது, அவன் பொட்டின் பக்கமாக அவனது தலைக்கவசம் இப்படியும் அப்படியும் ஆடியது. வானத்தில் அவனது ஆதரவாளனாக ஜீயூஸ் இருந்தான். எத்தனையோ வீரர்கள் இருந்தும் அதில் ஹெக்டரை மட்டும் இறவாப் புகழடையும் பொருட்டு தேர்ந்தெடுத்துக் கொண்டான் அவன். ஏனெனில் அவன் உயிரோடு இருக்கப் போவது கொஞ்ச காலம் மட்டுமே. பலவானான பீலியூஸின் மகன் அக்கிலிஸிடம் ஹெக்டர் தோற்று விழப்போகும் நாள் விரைவாக வருவதற்கான வேலையை ஏற்கெனவே செய்ய ஆரம்பித்திருந்தாள் பல்லாஸ் அதீனி.

ஹெக்டரின் நோக்கம் எதிரி அணியினை உடைத்து ஊடுருவுவ தாக இருந்தது. எங்கெல்லாம் கிரேக்க வீரர்கள் எண்ணிக்கையில் அதிகமாகவும் சிறப்பான முறையில் ஆயுதம் தரித்தவர்களாகவும் இருந்தார்களோ, அங்கெல்லாம் அவன் நுழைந்து சோதனை செய்துகொண்டிருந்தான்: ஆனால் எவ்வளவுதான் ஆக்ரோஷ மாக தாக்கியபோதும், அவனால் கிரேக்க அணிவகுப்பை உடைத்து உள்ளே புக முடியவில்லை. இறுக்கமாக இணைந் திருக்கும் ஒரு சுவரின் செங்கற்களைப் போல, நீல நிறக்கடலுக்கு முன்னால் ஊளையிடும் புயல் காற்றையும் ஊழிப்பேரலை களையும் எதிர்த்து நிற்கும் பாறையைப் போல கிரேக்கர்கள் ஒன்றிணைந்து, ஓடிப்போகாமல், உறுதியாக நின்றனர்.

இறுதியாக, கவச உடை நெருப்புபோல எல்லாத் திசையிலும் மின்ன, அவர்கள் மத்தியில் நுழைந்தான் ஹெக்டர். மேகங்களாலும் புயல் காற்றாலும் எழுப்பப்படும் பேரலையிலிருந்து கிளம்பும் நீர்த்திவலைகள் கப்பலை முழுமையாக மறைக்கும். கப்பலை உடைக்கும். அதன் பாய்மரங்களில் பேயெனக் காற்று ஊளை யிடும். அதிர்ச்சியில் பதற்றமாகச் செய்வதறியாது தவிக்கும் கப்பல் பயணிகளின் கூட்டம் மயிரிழையில் தப்பிக்கும். அதைப்போல, அவர்கள் மீது பாய்ந்தான் ஹெக்டர். கிரேக்க வீரர்களைக் கிலி பிடித்துக் கொண்டது. அவர்கள் தைரியம் இழந்தனர்.

தண்ணீர் கிடைக்கும் ஒரு பெரிய புல்வெளியில் அதிக எண்ணிக்கையில் மேய்ந்து கொண்டிருக்கும் ஆடுகளின் மீது திடீரென ஒரு கொலைவெறி கொண்ட சிங்கம் பாய்ந்து தாக்கும். கொல்லப்பட்ட விலங்கின் பிணத்தின் அருகிலிருந்து அந்தச் சிங்கத்தை விரட்டும் துணிச்சலும் அனுபவமும் இல்லாத மேய்ப்பனோ அச்சத்தில் ஆடுகளின் முன்னாலும் பின்னாலும் போய்க்கொண்டிருப்பான். அப்போது அந்தச் சிங்கமானது மையப்பகுதியில் புகுந்து தான் கொன்ற மிருகத்தினை வயிறார விழுங்கி முடிக்கும். அப்போது மற்ற ஆடுகளெல்லாம் பதற்றத் தில் சிதறியோடும். அதைப்போல ஹெக்டராலும் தந்தை ஜீயூஸாலும் கிரேக்கப் படை வீரர்கள் பதறிச் சிதறி ஓடச் செய்யப்பட்டனர். ஹெக்டரால் ஒரேயொரு கிரேக்க வீரனை மட்டுமே கொல்ல முடிந்தது.

அவனால் கொல்லப்பட்டவன் காப்ரியூஸின் மகனான பெரிஃபீட்டிஸ் என்ற மைசீனியன். தலைவன் யூரிஸ்தியூஸின் கட்டியக்காரனாக இருந்தவன் காப்ரியூஸ். வலிமை வாய்ந்த ஹெராக்லியூஸ் முடிக்க வேண்டிய வேலைகள் என்னென்னெ என்பதை யூரிஸ்தியூஸின் உத்தரவின் பேரில் சென்று அவனிடம் அறிவிக்க நியமிக்கப்பட்டவன். ஆனால் எந்தத் தகுதியுமில்லாத இந்தத் தகப்பனுக்குப் பிறந்த எல்லா வகையிலும் சிறந்த மகன் பெரிஃபீட்டிஸ் வேகமாக ஓடக்கூடியவ்ன். சிறந்த போர் வீரன். மைசீனியில் அவனைவிட அறிவார்ந்த இளைஞர் யாரும் இருக்கவில்லை. இப்பொழுது அவன் ஹெக்டரின் புகழுக்கு மேலும் புகழ் சேர்த்து விட்டிருந்தான்.

ஓட எத்தனித்தபோது, ஏவுகணைகளைத் தவிர்ப்பதற்காக அவன் வைத்திருந்த கேடயத்தின் முனையில் பட்டுக் கால் இடறிக் கேடயம் கீழே விழுந்தது. இவ்விதமாகச் சிக்கிக் கொண்ட அவன் மல்லாக்கத் தரையில் விழுந்தான். தரையில் அவன் விழுந்தபோது அவனுடைய தலைக்கவசம் கடகடவென ஒலித்து அவன் பொட்டில் அடித்து வேதனை கொடுத்தது. அது ஹெக்டரின் கவனத்தை ஈர்த்தது. உடனே அவனை நோக்கி ஓடிச்சென்ற ஹெக்டர் அவனது மார்பில், அவனுடைய நண்பர்களுக்கு எதிரிலேயே ஈட்டியைப் பாய்ச்சிக் கொன்றான். தம் நண்பனைக் காப்பாற்ற அவர்களால் ஒன்றும் செய்ய முடியவில்லை. அவர்கள் மிகவும் துன்பப்பட்டார்கள் என்றாலும், கடவுளையொத்த ஹெக்டர் அவர்களனைவரையும் கதிகலங்கச் செய்திருந்தான்.

விரைவிலேயே கப்பல்களுக்குள் சென்று அவற்றின் பின்பக்க மாக அடைக்கலம் புகுந்து கொண்டனர் கிரேக்கர்கள். ஆனால் ட்ரோஜன்களும் கும்பல் கும்பலாக வந்து சேர்ந்ததால் கிரேக்கர்கள் முன் வரிசையை விட்டுவிட்டு அருகில் இருந்த பாசறைகளுக்குள் புகுந்தனர். முகாம் முழுவதும் பிரிந்து சிதறிக் கிடக்காமல் அவர்கள் அனைவரும் அவற்றில் ஒன்று கூடினர். ஆனால் அவர்களனைவரையும் பயமும் அவமானமும் சூழ்ந்திருந்தது. அதனால் ஒருவரை ஒருவர் உற்சாகப்படுத்தும் வகையில் அவர்கள் கத்திக் கொண்டிருந்தனர். குறிப்பாக, கிரேக்கத் தேரோட்டியும் கிரேக்கர்களின் பாதுகாவலனுமான நெஸ்டர் தன் பெற்றோர்களின் பெயரால் அவர்களை வேண்டிக் கேட்டுக் கொண்டான்:

'வீரர்களாக இருங்கள் நண்பர்களே! மற்றவர்கள் முன்னிலையில் உங்கள் கௌரவத்தைப் பற்றி நினையுங்கள்! நீங்கள் ஒவ்வொரு வரும் உங்கள் குழந்தைகளையும், மனைவிகளையும், சொத்து களையும், பெற்றோரையும் நினைத்துக் கொள்ளுங்கள். அவர்கள் உயிரோடு இருந்தாலும் சரி, செத்துப் போயிருந்தாலும் சரி. உங்கள் மத்தியில் இப்பொழுது உயிரோடு இல்லாத உங்களுக்குப் பிரியமானவர்களுக்காக, உறுதியாக நில்லுங்கள். திரும்பி ஓடிவிடாதீர்கள்!' இப்படிப்பேசி ஒவ்வொரு கிரேக்க வீரனின் உள்ளத்திலும் புத்துணர்ச்சியையும் வீரத்தையும் ஊட்டினான் நெஸ்டர். அவர்கள் பார்வையை மழுங்கச் செய்த வினோதமான பனியை அவர்கள் விழிகளிலிருந்து நீக்கினாள் அதீனி.

இப்பொழுது இரண்டு பக்கமும், கப்பல்களின் மீதும், போர்க் களத்திலும் மகா சமன் செய்வோனாகிய சூரிய ஒளி இருந்தது. அதனால் பின் வரிசையில் போர் செய்யாமல் நின்று கொண் டிருந்த, விரைவுக் கப்பல்களில் இருந்து சண்டையிட்டுக் கொண் டிருந்த எல்லா கிரேக்கர்களும் போர் முழக்கத் தலைவனாகிய ஹெக்டரையும் அவனது வீரர்களையும் நன்றாகப் பார்க்க முடிந்தது..

சண்டையை நிறுத்தி விட்டுக் கப்பலில் ஏறிக்கொண்ட வர்களோடு போய்ச் சேர்ந்துகொள்ள வேண்டும் என்ற கருத்து வீரமிகு அஜாக்ஸுக்குப் பிடிக்கவில்லை. மாறாக அவன் தயார் நிலையில் இருந்த கப்பல்களின் மேல்தளத்தின் பாதியில் போய் நின்றுகொண்டான். நீளநீளமாக அடியெடுத்து வைத்து மேலும் கீழுமாக அலைந்தான். பத்துப் பதின்மானமுறை அளவு நீளம்

கொண்ட, பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு ஆணியடிக்கப்பட்ட, கடல் சண்டைகளுக்கென்றே தயாரிக்கப்பட்ட ஒரு பெரிய ஈட்டியைக் கையில் பிடித்து ஆட்டியவனாக நடந்து கொண்டிருந் தான். நிபுணத்துவம் மிக்க பயிற்சியாளன் ஒருவன் நான்கு குதிரைகளை ஒன்றாகப் பூட்டி அவற்றை ஒன்றாகச் சமவெளியில் இருந்து சந்தடி மிகுந்த தெருவின் வழியாகப் பெரு நகரம் ஒன்றுக்கு ஓட்டிச்செல்வான். கீழே விழாமல், ஒவ்வொரு குதிரையாக அவன் மாறிமாறி ஏறி ஓட்டிவரும்போது ஆண்களும் பெண்களுமாகப் பலர் வியப்புடன் பார்ப்பார்கள். அதைப்போல ஒரு கப்பலின் தளத்திலிருந்து இன்னொன்றுக்குத் தாவியவனாகப் பெரும் நடை போட்டுக் கொண்டிருந்தான் மகா அஜாக்ஸ். கப்பல்களையும் பாசறைகளையும் காப்பாற்ற வேண்டும் என கிரேக்க வீரர்களை நோக்கி அவன் எழுப்பிய பயங்கரமான பெருங்குரல் வானத்தைச் சென்றடைந்தது.

இதேபோல, ஆயுதம் தரித்த தன் ட்ரோஜன் வீரர்களோடு தங்கி இருப்பதற்கு ஹெக்டருக்கும் விருப்பமில்லை. பழுப்பு கலந்த மஞ்சள் நிறத்துக் கழுகு ஒன்று ஆற்றின் கரையோரமாக நீர் அருந்திக்கொண்டிருக்கும் வாத்து, நாரை, நீண்ட கழுத்து கொண்ட அன்னங்கள் என நொறஒம்ட பறவைக் கூட்டம் ஒன்றின்மீது இறங்குவதுபோல, முன்னால் வந்த ஹெக்டர், நீல நிற முன்பகுதி கொண்ட கப்பலை நோக்கி விரைந்தான். அவனது வீரர்கள் அவனைப் பின் தொடர்ந்து வருமாறு தனது மகா கையினால் ஜீயூஸூம் அவனை முன்னே செலுத்தினான்.

மறுபடியும் உக்கிரமான சண்டை கப்பல்களைச் சுற்றித் தொடங் கியது. இதுவரை போரே செய்யாத மாதிரியும் புத்துணர்ச்சி யோடும் சண்டை போடத்தொடங்கியதாக நீங்கள் நினைத்துக் கொள்ளும் அளவுக்கு, சண்டை நடந்தது. ஆனால் போர் வீரர்களின் மனோபாவம் அப்படித்தான் இருந்தது. அபாயத்தில் இருப்பதாகவும் அழியப் போவதாகவும் கிரேக்கர்கள் நினைத் தனர். ஆனால் கப்பல்களை எரிக்கப் போவதாகவும் கிரேக்கர் களையெல்லாம் கொன்று குவிக்கப் போவதாகவும் ஒவ்வொரு ட்ரோஜன் வீரனின் உள்ளமும் நம்பியது. அந்த மனோநிலையில் தான் பொருதனர்.

கடைசியில் ஒரு கப்பலின் பின்பக்கத்தில் கைவைத்தான் ஹெக்டர். அது ஒரு விரைவுப் பயணக் கப்பல். அதில்தான் ப்ரோட்டீசிலாஸ் ட்ராய் நகருக்கு வந்திருந்தான். ஆனால்

மறுபடியும் அவன் தனது தந்தையர் நாட்டுக்குத் திரும்பவே இல்லை. கப்பல்களைச் சுற்றி கிரேக்கர்களும் ட்ரோஜன்களும் ஒருவரையொருவர் கண்டதுண்டமாய் வெட்டிக்கொள்ள ஆரம்பித்தனர். தூரத்தில் நின்று போரிடுகின்ற சூழ்நிலையோ, பறந்து வந்து தாக்கும் ஏவுகணைகளை எதிர்த்து நிற்கின்ற சூழ்நிலையோ அங்கு இல்லை. மாறாக, ஒருவரையொருவர் கூரிய கோடரிகளாலும், நீண்ட வாட்களாலும், வளைந்த ஈட்டிகளாலும் தாக்கிச் சண்டையிட்டுக் கொண்டனர். கருப்பு கைப்பிடி கொண்ட பல வாட்கள் வீரர்களின் கையில் இருந்து நழுவி மண்ணில் விழுந்தன. இன்னும் பல வீரர்களின் வாட்கள் அவர்கள் சண்டையிட்டுக் கொண்டிருக்கும்போதே தோள்களி லிருந்து வெட்டப்பட்டன. ரத்தத்தால் கருப்பானது பூமி.

கப்பலைப் பிடித்தவுடன் அதன் பின்பகுதியில் இருந்த கழியைப் பிடித்துக்கொண்டு ட்ரோஜன்களை அழைத்துக் குரல் கொடுத்தான் ஹெக்டர்:

'நெருப்பைக் கொண்டு வாருங்கள்! எல்லாருமாக வந்து சேர்ந்து தாக்குங்கள்! எல்லா நாட்களையும் விட இந்த நாள் மிகச்சிறந்த நாள். இன்றுதான் அவர்களது கப்பல்களை அழிக்க ஜீயூஸ் உத்தரவு கொடுத்திருக்கிறார்! கடவுளர்களின் விருப்பத்துக்கு எதிராக அவர்கள் இங்கே வந்து எல்லாத் தொல்லைகளையும் ஆரம்பித்து வைத்தனர். ஆனால் அதற்கெல்லாம் நம் மூத்தவர் களுடைய கோழைத்தனம்தான் காரணம். கப்பல்கள் இருக்கு மிடம்வரை சென்று போர் செய்யலாம் என்று நான் சொன்ன போது, என்னையும் என் படையினரையும் வேண்டாம் என்று சொல்லி நிறுத்தியவர்கள் அவர்கள்தான். ஆனால் அன்று ஜீயூஸ் நமது கண்களைக் குருடாக்கி இருந்தார். இன்றோ பெரும் வெற்றியைக் கொடுக்க! நமக்கு ஆதரவாக இருக்கிறார்.'

அவன் அப்படிப் பேசியதும் முன்னைவிட மூர்க்கமாக ட்ரோஜன் வீரர்கள் கிரேக்கர்களைத் தாக்கத் தொடங்கினர். ஏராளமான ஏவுகணைகள் வந்து தாக்கியதால் தாங்கமுடியாமல் அஜாக்ஸ்கூட தனது நிலையிலேயே இருக்க முடியவில்லை. இறந்து விடுவோமோ என்ற அச்சம் வர, கொஞ்சம் வழிவிட்டு, குறுக்குப் பலகைகள் போடப்பட்ட மத்தியில் நின்றுகொண்டிருந்த கப்பல் களின் பக்கம் சென்றான். அங்கே அவன் விழிப்புடன் நின்றான். யாராவது ஒரு ட்ரோஜன் வீரன் கையில் தீப்பந்தத்துடன் வருவானா கில், நீண்ட தனது கழியினால் அதைத் தடுத்து எறிந்தான்.

அதேசமயம், தனது அச்சமேற்படுத்தும் குரலில் கிரேக்கர்கள் அனைவருக்கும் அவன் உற்சாக மூட்டினான். ‘நண்பர்களே, கிரேக்க வீரர்களே, ஏரிஸின் உதவியாளர்களே, வீரர்களாக இருங்கள், என் தோழர்களே. உங்கள் வீர உணர்ச்சி எங்கே போனது? அதைத் திரும்ப அழையுங்கள். பின்னால் நம்முடைய ஆதரவாளர்களோ நாம் கட்டியதைவிட உறுதியான மதில் சுவர் இருக்கிறது என்று நினைக்கிறீர்களா? நம்மைக் காப்பாற்றும் மதில் சுவர் கொண்ட எந்த நகரமும் அங்கு இல்லை. ஒரு சமவெளியில் நாம் ட்ரோஜன்களை எதிர்கொண்டவர்களாக இருக்கிறோம். நமக்குப் பின்னால் கடல் இருக்கிறது. நமது தந்தையர் நாடு ரொம்ப தூரத்தில் இருக்கிறது. ஆகவே, நமது விமோசனம் இங்கு சண்டையிடுவதுதான்! போரைப் பொருத்த வரை மிருதுவானவற்றுக்கும் கருணைக்கும் இடமில்லை.’

இப்படிப் பேசியவாறே அவன் தனது நீண்ட கூரீட்டியைக் கோபமாக அவ்வப்போது பயன்படுத்திய வண்ணம் இருந்தான். விரட்டிக் கொண்டிருக்கும் ஹெக்டரைத் திருப்திப் படுத்துவதற்காக, யாராவது ஒரு ட்ரோஜன் வீரன் கையில் தீப்பந்தத்துடன் உட்குழிந்த கப்பலை நெருங்கி வருவானேயானால் அஜாக்ஸ் தயாராக இருந்தான். தனது பிரம்மாண்டமான ஆயுதத்தால் தாக்கினான். இவ்விதமாக அவன் பன்னிரண்டு பேரைக் கப்பலின் முன்னால் ஒவ்வொருவராகக் குத்திக் கொன்றான்.

# பெட்ரோக்குலஸின் மரணம்

***கதைச்சுருக்கம்***

***வரிகள் 01 – 100***

*கிரேக்கர்கள் பெரிய பிரச்சனையில் இருக்கிறார்கள் என்று அக்கிலிஸிடம் கூறுகிறான் பெட்ரோக்குலஸ். தன் கவச உடையைப் போட்டுக் கொண்டு போர் செய்யச் செல் என பெட்ரோக்குலஸுக்கு அனுமதி தருகிறான் அக்கிலிஸ்.*

***வரிகள் 101 – 124***

*அஜாக்ஸ் பின்வாங்குகிறான். கிரேக்கக் கப்பல்கள் எரிக்கப் படுகின்றன.*

**வரிகள் 124 – 418**

*பெட்ரோக்குலஸ் பாதுகாப்பாகத் திரும்பி வரவேண்டும் என்று ஜீயூஸிடம் பயனற்ற பிரார்த்தனை செய்கிறான் அக்கிலிஸ். போருக்குச் செல்லும் பெட்ரோக்குலஸ் ட்ரோஜன்களைப் பதற்றத்துடன் சிதறியோட வைக்கிறான்.*

***வரிகள் 419 – 683***

*பெட்ரோக்குலஸ் சர்ப்பிடானைக் கொல்கிறான். மறுபடியும் தாக்குதலைத் தொடர ட்ரோஜன்களை அழைத்துச் செல்கிறான் ஹெக்டர். பொதுவான சண்டை நடக்கிறது. மிகவும் ஆர்வமாக அச்சண்டையை கவனிக்கும் ஜீயூஸ் ஹெக்டர் தப்பி ஓடும்படிச்*

செய்கிறான். சர்ப்பிடானின் உடலை மீட்டு வருகிறான் அப்போலோ.

**வரிகள் 684 - 867**

இலியம் நகரைத் தாக்க வேண்டாம் என பெட்ரோக்குலஸுக்கு அப்போலோ எச்சரிக்கை செய்கிறான். ஹெக்டரின் தேரோட்டி யான செப்ரியோனிஸைக் கொல்கிறான் பெட்ரோக்குலஸ். பெட்ரோக்குலஸின் கவச உடையைக் கழற்றி அவனை நிர் வாணப்படுத்துகிறான் அப்போலோ. யுஃபோர்பஸ் பெட்ரோக் குலஸைக் குத்த, ஹெக்டர் அவன் கதையை முடிக்கிறான். அக்கிலிஸின் கைகளால் ஹெக்டர் சாவது உறுதி என்று முன்னறி விப்பு செய்கிறான் பெட்ரோக்குலஸ்.

# பெட்ரோக்குலஸின் மரணம்

நன்கு தளமமைக்கப்பட்ட கப்பலைச் சுற்றிக் கடுமையாகப் போர் நடந்து கொண்டிருந்தபோது, செங்குத்தான பாறை வழியே கருப்பு ஓடை ஒன்றின் கருப்புத் தண்ணீர் சொட்டுச் சொட்டாக வடிவதுபோல, மக்கள் மேய்ப்பனாகிய அக்கிலிஸிடம் அழுது கொண்டே வந்தான் பெட்ரோக்குலஸ். கடவுளையொத்த வேகநடைகொண்ட அக்கிலிஸ் அவனைப் பார்த்து இரக்கப்பட்டு அவனிடம் இலக்கை நோக்கிச் செல்லும் அம்புகளைப் போன்ற சொற்களை அவசரமாகச் சொன்னான்:

'பெட்ரோக்குலஸ், என்னைத் தூக்கிக்கொண்டு போ என அடம்பிடித்து, அவசரமாகச் சென்றுகொண்டிருக்கும் அம்மா வின் முந்தானையைப் பிடித்து அவளை நிறுத்த முயன்று, கண்ணீரோடு அம்மாவை ஏறிட்டுப் பார்த்துக்கொண்டே ஓடி, கடைசியில் அம்மா தூக்கும்வரை பிடிவாதமாக அம்மாவோடு ஓடிவரும் சிறுமி மாதிரி ஏன் அழுது கொண்டே வருகிறாய்? ஆமாம் பெட்ரோக்குலஸ், கன்னங்களில் மிருதுவான கண்ணீர் ஓட வந்திருக்கும் உன்னைப் பார்த்தால் அப்படித்தான் தோன்று கிறது. நம்முடைய மெர்மிடன் படையினருக்கோ என்னிடமோ ஏதும் சொல்ல வேண்டுமா? நமது ஊரான பித்தியாவிலிருந்து பிரத்தியேகமாக உனக்கு ஏதும் செய்தி வந்துள்ளதா? உன் தந்தை மெனீட்டியஸ் இன்னும் உயிரோடுதான் இருப்பதாகச் சொல் கிறார்கள். தனது மெர்மிடன் வீரர்கள் சூழ என் தந்தை உயிரோடு தான் நிச்சயமாக இருக்கிறார். அவர்கள் இரண்டு பேருமே ஒரு வேளை இறந்திருந்தால் நாம் துக்கப்பட விஷயமிருக்கலாம். அல்லது தங்களுடைய முட்டாள்தனத்தின் காரணமாக

உட்குழிந்த கப்பல்களைச் சுற்றிக் கொல்லப்பட்டுக் கொண்டு இருக்கும் கிரேக்கர்களுக்காக ஒருவேளை நீ அழுது கொண்டிருக் கிறாயா என்ன? என்னவென்று என்னிடம் சொல். நம்மிடையே ரகசியம் இருக்கக் கூடாது. எதுவாக இருந்தாலும் அதை நாம் இருவரும் பகிர்ந்து கொள்ள வேண்டும்' என்றான்.

பெருமூச்சு விட்டுக்கொண்டே தேரோட்டியான பெட்ரோக் குலஸ், பதில் சொன்னான்:

'பீலியூஸின் மகனே அக்கிலிஸ், இருக்கும் கிரேக்க வீரர்களில் தலைசிறந்தவனே, நான் சொல்வதைக் கேட்டு என் மீது கோபப்படாதே. கிரேக்கர்கள் பாவம், மிகவும் மோசமான ஆபத்தில் இருக்கிறார்கள். நம்மிடம் உள்ள சிறந்த வீரர்கள் எல்லாரும் கப்பல்களைச் சுற்றி குத்தப்பட்டோ வெட்டப் பட்டோ கிடக்கின்றனர். ஆற்றல்மிகுந்த டைசியூஸின் மகனான டயமீடிஸ் வெட்டப் பட்டுவிட்டான். மகா ஈட்டியெறி வீரனா கிய ஒடிஸியூஸ் குத்தப் பட்டுவிட்டான். அகமெம்னனுக்கும் அதே கதிதான். யூரிபைலஸின் தொடையில் அம்பு பாய்ந் துள்ளது. மருத்துவர்கள் தம் திறமையையும் அனுபவத்தையும் கொட்டி அவர்களின் காயங்களைக் குணப்படுத்த முயன்று கொண்டுள்ளனர்.

'ஆனால் நீ அக்கிலிஸ், நீ ஏன்தான் இப்படி இருக்கிறாயோ? உன் மனத்தில் உள்ள கசப்பில் இருந்து கடவுள் என்னைக் காப்பாற்றட் டும்! நீயும் உன் அழிவேற்படுத்தும் கீர்த்தியும்! கிரேக்கர்களின் அவமானகரமான அழிவைத் தடுக்க நீ எதுவுமே செய்யவில்லை என்றால், வருங்காலச் சந்ததி உனக்கு எப்படி நன்றி சொல்லும்? இப்படி இரக்கமற்றவனாக இருக்கிறாயே! பீலியூஸ் உனது தந்தையுமல்ல, தீட்டிஸ் உனது தாயுமல்ல. நீலக்கடலும் வெறும் பாறைகளும்தான் உன்னைப் பெற்றெடுத்திருக்க வேண்டும். உணர்ச்சியற்ற உன் இதயத்தை உருவாக்கியிருக்க வேண்டும். ஆனால் ஏதாவது தனிப்பட்ட தீர்க்கதரிசனத்தின் பொருட்டு நீ தடுக்கப்பட்டிருக்கலாம். ஜீயூஸிடமிருந்து பெற்ற ஏதாவதொரு சொல்லை உன் அன்னை தீட்டிஸ் உன்னிடம் கூறியிருக்கலாம். அப்படி ஏதாவது இருக்குமானால், மெர்மிடன் படையுடன் போர்க்களத்துக்குச் செல்ல எனக்காவது அனுமதி கொடு. ஒருவேளை கிரேக்கர்களுக்கு நான் விமோசனம் கொடுத்து காப்பாற்ற முடியலாம்.

'உன்னுடைய கவச உடைகளை அணிந்துகொண்டு நான் போருக்குப் போக விரும்புகிறேன். எனக்கு அவற்றைக் கொடு. அப்போதுதான் ட்ரோஜன்கள் என்னை நீ என நினைத்துப் பிய்த்துக் கொண்டு ஓடுவார்கள். களைத்திருக்கும் நமது வீரர்களுக்கு மூச்சுவிட அது அவகாசம் கொடுக்கும். போரில் ஓய்வு அரிது என்பது உனக்குத் தெரிந்ததுதானே. களைத்துப் போகும் அளவுக்கு ட்ரோஜன்களும் போர் செய்துவிட்டார்கள். நான் புத்துணர்ச்சியோடும் செலவு செய்யப்படாத சக்தியோடும் இருப்பதால், அவர்களை நமது கப்பல்களில் இருந்தும் பாசறைப் பக்கமிருந்தும் விரட்டி அவர்களின் ஊருக்கே திருப்பி அனுப்ப என்னால் முடியலாம்.'

இப்படியாக மகா முட்டாளான பெட்ரோக்குலஸ் வேண்டி நின்றான். அப்படிக் கெஞ்சியதன் மூலம் தனது விதியைச் செயல்பட வைத்து, பயங்கரமான மரணத்தையே அவன் சந்திக்க இருந்தான். பெரிதும் சங்கடப்பட்டவனாக விரைவுப்பாத அக்கிலிஸ் பதில் சொன்னான்:

'ஒலிம்பஸ் மலையில் பிறந்தவனே பெட்ரோக்குலஸ், நீ என்ன சொல்லிக் கொண்டிருக்கிறாய்? நான் மரியாதை செய்ய வேண்டிய தீர்க்க தரிசனமெல்லாம் ஒன்றுமில்லை. என் அன்னை சீமாட்டி தீட்டிஸும் ஜீயூஸிடமிருந்து எந்த ஒரு சொல்லையும் வாங்கி என்னிடம் சொல்லவில்லை. ஆனால் எனக்கு இணையான ஒரு வீரன், அவனுக்கு இருக்கும் அதிகமான அதிகாரம் காரணமாக, நான் வென்ற பரிசை என்னிடமிருந்து தட்டிப்பறித்ததானது என்னை மிகவும் காயப்படுத்தியுள்ளது. ஏன், நானும்தான் இவ்வளவு காலமாக இந்தப் போரில் கலந்து கொண்டுள்ளேன். இருந்தும் எனக்கேன் இப்படி நடக்க வேண்டும்? அதுதான் என்னை அவமானப்படுத்துகிறது. அந்தப் பெண்ணை எனக்குப் பரிசாகப் படையினர்தான் கொடுத்தனர். மதில் அரண் கொண்ட ஒரு நகரை நான் வெற்றி கொண்டிருந் தேன். என்னுடைய ஈட்டியின் மூலமே அவளை நான் வென்றிருந் தேன். ஏதோ நான் ஒரு நாதியற்ற அகதி என்பதுபோல, அத்ரியூஸின் மகனான அகமெம்னன் அவளை என் கைகளிலில் இருந்து எடுத்துக் கொண்டான்.

'ஆனால் அதெல்லாம் முடிந்துவிட்டது. சரி போகட்டும். குழப்பமும் சண்டையும் என்னுடைய கப்பல்களை நெருங்கும் வரை, ஒரு மனிதன் தன் கோபத்தை எல்லாக் காலமும்

வைத்திருக்க முடியும் என்று நான் தவறாக நினைத்துக் கொண்டிருந்தேன். வா, என்னுடைய புகழ்பெற்ற போருடையை அணிந்து ஆயுதம் தரித்துக்கொள். போர்த்திறம் மிக்க எனது மெர்மிடன்களை போர் செய்யத் தலைமையேற்று நடத்திச் செல். ட்ரோஜன்களின் கருப்பு மேகம் அச்சுறுத்தும் வகையில் நமது கப்பல்களைச் சூழ்ந்துள்ளது. பின்னால் கடல் மட்டும் விரிந்து கிடக்க, கிடைத்த குறுகிய நிலப்பரப்பைப் பிடித்துக் கொண்டு நிற்கிறார்கள் கிரேக்கர்கள். வீரம் திரும்பி வந்தவர்களாக, ட்ரோஜன்களின் நகரம் முழுதுமே நமக்கு எதிராகத் திரும்பி யுள்ளது.

'இதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமில்லை. எனது தலையில் அவர்கள் முகங்களின் மீது ஒளிவீசிக் கூசவைக்கும் தலைக் கவசத்தைப் பார்க்காவிட்டால் அவர்களுக்கு வீரம் வரத்தான் செய்யும். ஆனால் சீக்கிரமே அவர்கள் ஓட்டமெடுத்து அவர் களின் பிணங்களால் குழிகளை நிரப்புவார்கள். தலைவன் அகமெம்னம் மட்டும் என்னிடம் அன்பாக நடந்து கொண்டால் போதும். இப்பொழுதுள்ள சூழ்நிலையில் கிரேக்கர்கள் தங்கள் முகாமையே காப்பாற்ற வேண்டியுள்ளது. கிரேக்கர்களை அழிவிலிருந்து காப்பாற்ற டயமீடிஸின் ஈட்டி அவனது கைகளில் கோபமுடன் சுழலவில்லை. வெறுக்கத்த அகமெம்னனும் இது வரை உத்தரவுகள் எதையும் உரைத்ததாகத் தெரியவில்லை. மனிதர்களைக் கொல்லும் ஹெக்டர் ஒரு வேட்டை நாயைப் போல ட்ரோஜன்களை விரட்டிக் கொண்டிருக்கிறான். அப்போது அவன் போடும் காட்டுக் கத்தல்கள்தான் இதுவரை என் காதில் ஒலித்துக் கொண்டிருக்கின்றன. அவனுடைய கத்தல்கள் சமவெளியை நிறைக்கின்றன. கிரேக்கர்களைக் கடுமையாகத் தண்டித்துக் கொண்டிருக்கின்றனர் ட்ரோஜன்கள்.

'இருந்தாலும் நீ கப்பல்களைக் காப்பாற்றத்தான் வேண்டும் பெட்ரோக்குலஸ். கப்பல்களையெல்லாம் தீக்கிரையாக்கி நம்மை நமது நாட்டிலிருந்து அவர்கள் துண்டிப்பதற்கு முன் நீ போய் உனது ஆற்றல் அனைத்தையும் திரட்டித் தாக்கு. ஆனால் இதெல்லாம் எப்படி நடக்க வேண்டும் என்று நான் ஒரு திட்டம் வைத்திருக்கிறேன். அதன்படிதான் நடக்க வேண்டும். நான் சொல்வதை நன்றாகக் கவனித்துக்கேள். எல்லா கிரேக்கர்களுக் கும் முன்னால் எனக்குப் பெரும் புகழை நீ ஈட்டித்தர வேண்டும். அப்போதுதான் அந்த அழகிய பெண்ணை அவர்கள் எனக்குத்

திருப்பித் தருவார்கள். அதோடு அருமையான பரிசுப் பொருள் களையும் சேர்த்துத் தருவார்கள். எனவே ட்ரோஜன்களை நமது கப்பல்களில் இருந்து விரட்டிய உடனே திரும்பி என்னிடம் வா. தொடர்ந்து நீ சண்டை போட்டு வென்றால் எல்லாப் புகழும் உனக்கே கிடைக்கும் என்று ஜீயூஸே உனக்கு ஆசைகாட்டி னாலும் சரி, நான் இல்லாமல் தனியாக நீ மட்டும் போர்ப் பைத்தியம் பிடித்த அந்த ட்ரோஜன்களை எதிர்த்துப் போர் செய்து புகழீட்டலாம் என்று மட்டும் கனவு காணாதே. அப்படிச் செய்தால் என்னுடைய மதிப்பை நீ குறைத்துவிடுவாய்.

'வெற்றிக் களிப்பில், போகிற போக்கில் ட்ரோஜன்களைக் கொன்று குவித்துக் கொண்டு, இலியம் நகரை நோக்கி மெர்மிடன்களை அழைத்துச் சென்று விடாதே. நீ போகும் வழியில் உனக்கே தெரியாமல் யாராவது நித்தியரான ஒலிம்பியக் கடவுள் உன் வழியில் வரலாம். வில்லேந்திய கடவுளான அப்போலோவுக்கு இந்த ட்ரோஜன்களை மிகவும் பிடிக்கும். ஆனால் கப்பல்களில் உனக்கு வெற்றி கிடைத்தவுடன், மற்றவர்களைச் சமவெளியில் சண்டையைத் தொடர விட்டு விட்டு நீ இங்கே வந்துவிடு. ஓ தந்தை ஜீயூஸ், அதீனி, அப் போலோ, ஒருவர்கூட மிஞ்சாமல் எல்லா ட்ரோஜன்களும் செத்துவிட்டாலும், ஒருவர்கூட மிஞ்சாமல் எல்லா கிரேக்கர் களும் செத்துவிட்டாலும், ட்ராய் நகரின் புனித மணிமகுடக் கோபுரங்களையும் கோட்டை கொத்தளங்களையும் நாம் இருவரும் தனியாகவே அழிப்போம்' என்று நீளப் பேசினான்.

இவ்விதமாக அக்கிலிஸும் பெட்ரோக்குலஸும் பேசிக்கொண் டிருந்தபோது, தன் நிலையை மேலும் தொடரமுடியாத சூழ் நிலை ஏற்பட்டது அஜாக்ஸுக்கு. ஜீயூஸின் மன உறுதியும், கர்வம் கொண்ட ட்ரோஜன்களின் கைகளிலிருந்து பறந்து வந்த எண்ணிலடங்கா ஈட்டிகளும் அவனை வென்றிருந்தன. அவனுடைய பளபளக்கும் தலைக்கவசம் இரண்டு பக்கத்திலும் அடி வாங்கி வாங்கி அக்கவசத்தின் உலோகத் தட்டுகள் அவனது பொட்டுகளின் பக்கமாகப் பயங்கரமாக ஒலி எழுப்பிக் கொண்டே இருந்தன. ஏராளமான எதிரி ஈட்டிகள் தாக்கிய போதும் கீழே விழச் செய்யமுடியாத கேடயம் வெகு நேரமாகத் தோளில் தொங்கிக் கொண்டிருந்ததால் அவனது இடதுப்பக்கத் தோள் மிகுந்த வலி கொடுத்தது. அவன் நெடுமூச்செறிந்து கொண்டிருந்தான். அவனுடைய எல்லா உறுப்புகளிலிருந்தும்

வியர்வை வழிந்தோடிக் கொண்டிருந்தது. ஆசுவாசப் படுத்திக் கொள்ள அவனுக்கு அவகாசம் இல்லாமல் போனது. எங்கு பார்த்தாலும் அடுக்கடுக்காக, ஒன்றன்பின் ஒன்றாகத் துன்ப நிகழ்ச்சிகள்.

ஒலிம்பஸ் மலையில் வாழும் கவிதை தெய்வங்களான ம்யூஸ் களே, எப்படி கிரேக்கக் கப்பல்கள் முதலில் கொளுத்தப்பட்டன என்பதைச் சொல்லுங்கள் இப்பொழுது!

அஜாக்ஸ் இருந்த இடத்துக்கு நேராக சென்ற ஹெக்டர், ஆஷ்மரத்தால் செய்யப்பட்ட அஜாக்ஸின் நீண்ட ஈட்டி முனையின் பொருந்து குழிக்குக் கீழே தனது மகா வாளினால் வெட்டினான். அது ஈட்டியின் முனையை வெட்டித் தூர எறிந் தது. தலையிழந்த ஈட்டியை அஜாக்ஸ் முன்போலவே தொடர்ந்து சுழற்றிக் கொண்டிருந்தான். கடைசியில் அதன் தலை அவனிருந்த இடத்திலிருந்து தூரத்தில் விழுந்து தரையில் மோதிக் கணீரென்ற ஒலி எழுப்பியது. இப்படி நடந்ததில் கடவுள்களுக்கு ஏதோ பங்கிருந்தது என்றும், நெடுந்தூரத்துக்கு இடிமுழக்கம் செய்யும் ஜீயூஸ் தன் திட்டங்களையெல்லாம் தவிடு பொடியாக்கிக் கொண்டிருந்தான் என்றும் ஒரு நடுக்கத்துடன் அஜாக்ஸ் தன் உள்மனத்தில் உணர்ந்து கொண்டான். எனவே அவன் பின் வாங்கிச் சென்றான். ட்ரோஜன்கள் தீப்பந்தங்களை விரைவுக் கப்பல்மீது வீசியெறிந்தனர். விரைவிலேயே அது அணைக்க முடியாத ஜ்வாலைகளால் பற்றிக் கொண்டது.

முதலில் கப்பலின் பின்பக்கமாக வளைய வந்தது நெருப்பு. அதைக்கண்டு கோபமாகத் தன் தொடையில் தட்டிய அக்கிலிஸ் பெட்ரோக்குலஸிடம் வேகமாகச் சொன்னான்:

‘ஒலிம்பஸ் மலையில் பிறந்த தேரோட்டி பெட்ரோக்குலஸே, எழு! கப்பல்களின்மீது தீ கொழுந்துவிட்டு எரிவதை நான் இங்கிருந்தே பார்க்க முடிகிறது. நமது கப்பல்களை அவர்கள் பிடித்துவிடக் கூடாது. பிடித்துவிட்டால், நம்மால் பின்வாங்கி பாதுகாப்பாக எங்கும் ஒதுங்க முடியாது. சீக்கிரமாக உன் கவச உடைகளை அணிந்துகொள். அதற்குள் நான் வீரர்களை அணிவகுக்கிறேன்.’

அவன் அப்படிப் பேசியதும் மின்னும் வெண்கலக் கவச உடையை அணிந்து ஆயுதம் தரித்துப் போருக்குத் தயாரானான் பெட்ரோக்குலஸ். முதலில் வெள்ளியில் கணுக்கால் பற்றும்

அமைப்பு கொண்ட முழந்தாள்களைப் பாதுகாக்கும் கவசத்தை அணிந்து கொண்டான். அதன்பின் அக்கிலிஸின் உடல் கவசத்தை எடுத்து அணிந்து கொண்டான். நட்சத்திரங்களுடன் அது மின்னிக் கொண்டிருந்தது. வெள்ளிக் குடையாணிகள் அமைக்கப்பட்ட வெண்கல வாளைத் தன் தோளின்மீது போட்டுக் கொண்டான். அதற்குமேல் அவனுடைய கனமான மகா கேடயத்தை வைத்துக் கொண்டான். குதிரைமுடிக் குஞ்சம் கொண்ட, நன்றாக வடிவமைக்கப்பட்ட தலைக்கவசத்தை மாட்டிக் கொண்டான். அந்தக் குஞ்சம் அச்சுறுத்தும் வகையில் இந்தப் பக்கமும் அந்தப் பக்கமும் ஆடிக்கொண்டிருந்தது. பின் இறுக்கிப் பிடித்துக் கொள்ள வசதியாக இருந்த சக்தி மிகுந்த இரண்டு ஈட்டிகளை எடுத்துக் கொண்டான். நீண்ட, தடித்த, கனமான அக்கிலிஸின் இணையற்ற ஈட்டியை மட்டும் அவன் எடுக்கவில்லை. அதை அக்கிலிஸைத் தவிர வேறு யாராலும் தூக்கி லாவகமாகக் கையாள முடியாது. பீலியான் மலையுச்சியில் இருந்த ஆஷ் மரத்தால் அது செய்யப்பட்டது. எதிர்த்துத் தாக்கும் வீரர்களுக்கு மரணத்தை ஏற்படுத்துவதற்காக, அக்கிலிஸின் தந்தை பீலியூஸுக்குப் பரிசாகக் கீரான் கொடுத்தது.

குதிரைகளைப் பூட்டும்படி ஆட்டோமிடனுக்கு உத்தரவிட்டான் பெட்ரோக்குலஸ். மற்றவர்களைவிட அவனுக்கு ஆட்டோ மிடன் மீது நம்பிக்கை இருந்தது. போர்க்களத்தில் அவனை முழுமையாக நம்பிச் செயல்படலாம். எப்போதுமே கூப்பிடு தூரத்திலேயே இருப்பான். காற்றைவிட வேகமாகச் செல்லும் தெய்வீக சாந்தஸ் மற்றும் பாலியஸ் ஆகிய குதிரைகளை ஆட்டோமிடன் அவனுக்காகத் தேரில் பூட்டினான். (பொடார்ஜி என்ற புயல் போன்ற பெண் குதிரை கடலோடையின் பக்கமாக இருந்த புல்வெளிகளில் மேயச் சென்றிருந்தபோது இவர்களை இவர்களது மூதாதையான மேற்கத்தைய காற்றுக்கு ஈன்று கொடுத்திருந்தாள்). அதன் பின் ஈட்டியானின் நகரை அக்கிலிஸ் பிடித்தபோது அங்கிருந்து கொண்டுவந்த பெடாசஸ் என்ற தூய இனமரபு சார்ந்த வண்டிக் குதிரையைப் பூட்டினான். பெடாசஸ் ஒரு தெய்வீகக் குதிரை அல்ல என்றாலும், நித்திய ஜீவன்களாகிய தெய்வீகக் குதிரைகளுக்கு ஈடுகொடுக்கும் வகையில் உருவாகி யிருந்தது.

தனது பாசறைகள் அனைத்துக்கும் சென்ற அக்கிலிஸ், எல்லா மெர்மிடன்களையும் ஆயுதம் தரிக்கச் சொல்லி ஒருங்கிணைத்

தான். மலைப்பகுதிகளில் கிடைத்த ஒரு பெரிய கொம்புள்ள மானை வேட்டையாடும் ஓநாய்கள், அதைக் கீழே கொண்டுவந்து கிழிக்கும். அவற்றின் தாடைகள் ரத்தவிளாறாக இருக்கும். பின் அவை ஒரு கூட்டமாகக் கருத்த ஓடையின் கருப்புத் தண்ணீரைத் தம் சிறிய நாக்கினால் நக்கிக் குடிக்க ஓடும். அப்போது சிந்தி உறைந்துபோன ரத்தத்தை நக்கும். அவைகளின் நெஞ்சத்தில் அச்சமில்லை. அவைகளின் வயிறுகளோ உறுமிக் கொண்டிருக் கும். அதைப்போல அந்த மெர்மிடன் தலைவர்களும் தளபதி களும் அக்கிலிஸின் நண்பனாகிய பெட்ரோக்குலஸின் தலைமையின்கீழ் போர் செய்யத் தயாராக முன்னேறி வந்தனர். போர்த்திறம் மிக்க அக்கிலிஸும் அங்கே நின்று கொண்டு தேரோட்டிகளுக்கும் கேடயம் தாங்கிய காலாட்படை வீரர் களுக்கும் உற்சாகமூட்டிக் கொண்டிருந்தான்.

ட்ராய் நகருக்கு அக்கிலிஸ் கொண்டு வந்திருந்த ஐம்பது விரைவுக் கப்பல்கள் ஒவ்வொன்றிலும் துடுப்பு போட ஐம்பது பேர் இருந்தனர். அவர்களை வழிநடத்த அவனுக்கு நம்பிக்கை யான ஐந்து தலைவர்களை நியமித்திருந்தான் அவன். ஆனால் அவர்கள் அனைவருக்கும் ஒட்டுமொத்தத் தலைவனாகவும் அதிக ஆற்றல் மிக்கவனாகவும் அவனே இருந்தான். முதல் வரிசையில் இருந்த கப்பல்களுக்கு மின்னும் கவச உடையணிந்த மெனெஸ்தியூஸ் தலைமையேற்றிருந்தான். தெய்வீக நதியாக ஸ்பெர்கியூஸின் மகன் அவன். அழகான பாலிடோரா அவன் அன்னையாவாள். அவள் பீலியூஸின் மகள்களில் ஒருத்தி. எனவே, களைப்பில்லாமல் ஓடைகளை ஓடவிட்டுக்கொண்டே இருக்கின்ற ஸ்பெர்கியூஸ் என்ற கடவுளோடு படுக்கையைப் பகிர்ந்துகொண்ட ஒரு மானிடப் பெண்ணுக்குப் பிறந்தவனாக இருந்தான் மெனெஸ்தியூஸ். ஆனால் பெயரளவில் அவன் போரஸ் என்பவனின் மகனாக அறியப்பட்டான். ஏனெனில் பெரெய்ரஸின் மகனான போரஸ் ஒரு பெரும் சீதனத்தைக் கொடுத்து, மெனெஸ்தியூஸின் அன்னையை வெளிப்படையாகத் திருமணம் செய்திருந்தான்.

இரண்டாவது வரிசையில் இருந்த கப்பல்களுக்குப் போர்த்திறம் மிக்க யுடாரஸ் தலைமை ஏற்றிருந்தான். ஃபைலாஸ் என்ற அழகிய நடனக்கலைஞரின் மகளான பாலிமீலிக்கு முறைதவறிப் பிறந்தவன் அவன். (நூறு கண்களைக் கொண்ட ராட்சத மிருக மாகிய) அர்கஸைக் கொன்றவன் மாபெரும் கடவுளாகிய

ஹெர்மிஸ். வேட்டைக்குரிய பெண் கடவுளான தங்க நூற்புக்கழி கொண்ட ஆர்ட்டிமிஸுக்காக பாலிமீலிக் கும்பலில் நடனமாடிக் கொண்டிருந்தாள் அப்போது அவளைப் பார்த்து அவள்மீது மையல் கொண்டிருந்தான் ஹெர்மிஸ். உடனே நேராக அவளிருக்கும் இடம் சென்று யாரும் அறியாதவாறு அவளை அவளது படுக்கையறைக்குத் தூக்கிச் சென்றான் அழகிய ஹெர்மிஸ். அவளோடு கூடிய அவன் மகா ஓட்டக்காரனும் போர்வீரனுமான யூடோரஸ் எனும் அருமையான மகனுக்கு அவளை அம்மாவாக்கினான். பிரசவத்துக்கான தேவதையான எய்லீத்தியா குழந்தையை வெளியே கொண்டு வர, அது சூரிய வெளிச்சத்தைப் பார்த்தது. அப்போது, ஆக்டர் என்பவனின் மகனான எகீக்லிஸ் என்ற ஆற்றல்மிகு தலைவன், அதுவரை யாரும் கொடுக்காத வரதட்சனை கொடுத்து அக்குழந்தையின் அம்மாவை மணந்துகொண்டு, தன்னோடு அவளைத் தனது இல்லத்துக்கு அழைத்துச் சென்றான்.

எனவே, யுடோரஸின் கிழட்டுத் தாத்தாவான ஃபைலாஸ் தனது மகனைப் போலவே அன்பு செலுத்திப் பேரனை வளர்த்து வந்தான். போர்த்திறம் மிக்க பெய்சாண்டர் மூன்றாவது வரிசை யில் இருந்த கப்பல்களைக் கவனித்துக் கொண்டான். பெட்ரோக் குலஸுக்கு அடுத்தபடியாக, மெர்மிடன்களில் சிறந்த ஈட்டியெறி வீரன் அவன்தான். அனுபவம் மிக்க தேரோட்டியான ஃபீனிக்ஸ் நான்காவது வரிசைக் கீப்பல்களையும், உயர்குடிப் பிறந்த அல்சிமிடான் ஐந்தாவது வரிசைக் கப்பல்களையும் வழிநடத்திச் சென்றனர்.

அவரவர் தலைவனின் கீழ் வீரர்கள் அனைவரும் அணிவகுத்து நின்றனர். அவர்களைப் பார்த்து அக்கிலிஸ் வெளிப்படையாகச் சொன்னான்:

'நான் இங்கே கோபமாக அமர்ந்திருந்தபோது, கப்பல்களைச் சுற்றி இருந்த ட்ரோஜன்களை என்ன செய்யப் போவதாக நீங்களெல்லாம் பயமுறுத்திக் கொண்டிருந்தீர்கள் என்பதை யாரும் மறக்க வேண்டாம். உங்களில் என்னைத் திட்டாத வர்களே இல்லை. 'பீலியூஸின் பிடிவாதமான மகனே, உன் தாய் உனக்குப் பால்தான் கொடுத்து வளர்த்தாளா அல்லது பித்த நீரா? நீ ஒரு மிருகம். உனது வீரர்களையெல்லாம் கப்பல்களிலேயே அவர்களது விருப்பத்துக்கு எதிராகத் தடுத்து நிறுத்தி வைத் திருக்கிறாய். இவ்வளவு கொடிய கோபத்தின் பிடியில் இருக்கும்

இவனை விட்டுவிட்டு நாம் கப்பல்களில் ஏறி ஊருக்குப் போய்விடுவோம் வாருங்கள்.'

'நீங்கள் அனைவரும் ஒன்றாகக் கூடியபோதெல்லாம் என்னைப் பற்றி இப்படித்தான் பேசிக்கொண்டீர்கள். நல்லது. நீங்கள் உங்கள் விருப்பப்படிச் செயலாற்றக்கூடிய வாய்ப்பு உங்கள் வழியில் இப்பொழுது கொஞ்சம் வந்துள்ளது. நீங்கள் ஏங்கிக் கொண்டிருந்த மாதிரியான சண்டை. ஆமாம் வீர நெஞ்சம் கொண்டவர்களே, ட்ரோஜன்களுக்கு உங்களை யார் என்று நிரூபித்துக் காட்டுங்கள்'. இவ்விதமாகப் பேசி அவர்களுக்குப் புத்துணர்ச்சியையும் வீரத்தையும் ஊட்டினான் அக்கிலிஸ்.

தம் தலைவன் பேசியதைக் கேட்ட அவர்களும் தயாராக நெருங்கி நின்றனர். உயரமான வீடு ஒன்றின் சுவரைக் கட்டும் ஒரு கொற்றன் காற்று புகாதவாறு கற்களை ஒன்றன்மீது ஒன்றாக அடுக்கி உறுதியாக அதனை வடிவமைப்பதுபோல, அவர்களின் தலைக்கவசங்களும் முன்புறம் புடைத்த கேடயங்களும் அருகருகே தொட்டுக்கொண்டு இருந்தன. தலைக்கவசத்தோடு தலைக்கவசமாக, கேடயத்தோடு கேடயமாக, வீரனோடு வீரனாக அவர்கள் நெருக்கமாகச் சென்றபோது, அவர்களின் தலைக்கவசங்களில் இருந்த மின்னும் குஞ்சலங்கள் சந்தித்துக் கொண்டன. எல்லாருக்கும் முன்னால் பெட்ரோக்குலஸும் ஆட்டோமிடானும் ஒன்றாக, உறுதியாக. போர் செய்யத் தயாராக நின்றுகொண்டிருந்தனர். மெர்மிடன்களின் அணிவகுப்பின் முன் வரிசையில் நின்று போர்செய்யும் உறுதி கொண்டவர்களாக நின்றனர்.

ஆனால் அக்கிலிஸ் தனது பாசறைக்குத் திரும்பிச் சென்றான். அங்கே போய் உள்பக்கமாக அலங்காரம் செய்யப்பட்டிருந்த ஒரு பேழையின் மூடியைத் திறந்தான். அதில் அவனுடைய வெள்ளிப் பாத அன்னை தீட்டிஸ் அவன் கப்பலில் எடுத்துச் செல்வதற் காகக் கொடுத்த குறுந்தளராடைகள், கனமான விரிப்புகள், காற்று புகாத மேலங்கிகள் போன்றவை இருந்தன. அந்தப் பேழையில் தான், ஓர் அழகிய கிண்ணத்தை அவன் வைத்திருந்தான். அதில்தான் அவன் மின்னும் மதுவை ஊற்றி அருந்தினான். அதில்தான் மற்ற எந்தக் கடவுளுக்கும் செய்யாத பானப் படையலைத் தந்தை ஜீயூஸுக்கு அவன் செய்தான். பேழை யிலிருந்து அதை வெளியில் எடுத்து, கந்தகம் கொண்டு அதைச் சுத்தப்படுத்திய பிறகு, அழகான நீரோட்டத்தில் அதைக் கழுவிச்

சுத்தம் செய்தான். பின் கொஞ்சம் மின்னும் மதுவை அதில் ஊற்றினான். பின் அந்த பாசறையின் முன்புற மத்தியில் நின்று கொண்டு பிரார்த்தித்தான். பின் மதுவை ஊற்றினான். இடியில் இன்புறும் ஜீயூஸ் இதைக் கவனிக்காமலில்லை.

'தலைவனே ஜீயூஸ், (கருவாலி மரங்கள் நிறைந்த நகரமான) டோடோனாவின் கடவுளே, பெலாஸ்ஜியின் கடவுளே, தூரத்தில் இருப்பவனே, குளிர் நிறைந்த டோடோனாவை ஆள்பவனே, கால் கழுவாமல் தரையில் தூங்கும் ஹெல்லாய் எனப்படும் வியாக்கியானிகளால் சூழப்பட்டவனே, இதற்கு முன் நான் செய்த பிரார்த்தனையை நீ ஏற்றுக் கொண்டு கிரேக்கப் படைக்குப் படுதோல்வி கொடுத்து என்னைக் கௌரவப்படுத்தினாய். இப்பொழுது என்னுடைய இன்னொரு விருப்பத்தையும் நிறை வேற்றுவாயாக. இந்தக் கப்பல்களிலேயே நான் தங்கி இருக்கப் போகிறேன். ஆனால் எனது மெர்மிடன் வீரர்களோடு எனது நண்பனை நான் போர்க்களத்துக்கு அனுப்பியுள்ளேன். தூரத்து இடிமுழக்கம் செய்யும் ஜீயூஸே, அவனுக்கு வெற்றியைக் கொடு. அவனுடைய இதயத்தைத் துணிச்சலால் நிரப்பு. எனது உதவியாளன் அவனாகவேதான் சண்டை போடுகிறானா அல்லது போரின் உக்கிரத்தில் என்னை நான் ஈடுபடுத்திக் கொள்ளும்போதுதான் அப்படி ஒரு வெற்றிகொள்ள முடியாத கோபம் அவனது கைகளுக்கு வருகிறதா என்று ஹெக்டர் கண்டு பிடிக்கட்டும். கப்பல்களிலிருந்து குழப்பம் விளைவிக்கும் கூட்டத்தை நேரடியாக விரட்டியடித்த பிறகு, என்னுடைய கவச உடைகளோடும் நெருங்கி நின்று சண்டையிடச் சென்ற எனது வீரர்களுடனும் பாதுகாப்பாக அவன் என்னிடம் திரும்பி வந்து சேரட்டும்.'

அப்படி அவன் பிரார்த்தித்ததை அறிவுரை தருவதில் ஞானவா னாகிய ஜீயூஸ் கேட்டான். ஒரு பாதியைத் தந்தை ஏற்றுக் கொண் டான். ஆனால் அடுத்த பாதியை ஏற்றுக் கொள்ளவில்லை. குழப்பத்தையும் சண்டையையும் கப்பல்களின் பக்கமிருந்து பெட்ரோக்குலஸ் விரட்டியடிக்க வேண்டும் என்பதை ஜீயூஸ் ஏற்றுக் கொண்டான். ஆனால் போரிலிருந்து பாதுகாப்பாக அவன் திரும்பி வரவேண்டும் என்ற கோரிக்கையை ஏற்றுக் கொள்ள வில்லை. அக்கிலிஸ் பானப்படையலை ஜீயூஸுக்குச் செய்த பிறகு, தனது பாசறைக்குத் திரும்பிச் சென்று அந்தப் பேழையில் அந்தக் கோப்பையைப் பத்திரமாகத் திருப்பி வைத்தான். பின் தன்

பாசறைக்கு வெளியில் வந்து நின்று கொண்டான். கிரேக்கர் களுக்கும் ட்ரோஜன்களுக்கும் நடந்த பயங்கரமான சண்டையை அவன் பார்க்க விரும்பினான்.

இதற்கிடையில் ஆயுதம் தரித்த வீரர்கள் அனைவரும் கம்பீரமான பெட்ரோக்குலஸின் தலைமையில் அச்சமில்லாதவர்களாக முன்னேறி ட்ரோஜன்களைத் தாக்கினர். தொல்லை கொடுக்க விரும்பி, சாலையோரக் கூடுகளிலிருந்து ஏராளமான எண்ணிக்கையில் குளவிகளைச் சீண்டிக் கிளப்பிவிட்டு விடு வார்கள் முட்டாள் சிறுவர்கள். அவைகள் கிளம்பி பொது மக்களுக்குத் தொல்லை கொடுக்க ஆரம்பித்துவிடும். யாராவது ஒரு வழிப்போக்கன் தெரியாமல் அவைகளுக்கு ஏதாவது செய்துவிட்டால் அவ்வளவுதான். அவைகள் கும்பலாகக் கிளம்பி வீரமுடன் தம் குழந்தைகளைக் காப்பாற்றக் கொட்ட ஆரம்பித்துவிடும். அதைப்போல மெர்மிடன்கள் கப்பல்களிலி லிருந்து கிளம்பி வீரமுடன் வெளிவந்தனர். போரின் பேரொலி கள் காற்றை நிரப்பின. தனது உரத்த குரலில் பெட்ரோக்குலஸ் வீரர்களை அழைத்துச் சொன்னான்: 'அக்கிலிஸின் தோழர் களாகிய மெர்மிடன்களே, வீரர்களாக இருங்கள். உங்களுக்குள் மறைந்து கிடக்கும் அந்தப் போர் உணர்வைத் தூண்டி எழுப்புங்கள். தலைசிறந்த போர்வீரர்களைத் தனக்குக்கீழ் வைத்திருக்கும் கிரேக்க முகாமின் த்லைசிறந்த வீரனான பீலியூஸின் மகனுக்குக் கீர்த்தியைக் கொண்டு வாருங்கள். கிரேக்கர்களில் தலைசிறந்த வீரனுக்கு மரியாதை தராமல் மயக்கத்தில் இருக்கும் அகண்ட ஆட்சி கொண்ட அத்ரியூஸின் மகனாகிய அகமெம்னன் உணர்ந்து கொள்ளுமாறு செய்யுங்கள்.' இவ்விதமாகப் பேசி பெட்ரோக்குலஸ் வீரர்களின் இதயத்தில் வீர உணர்ச்சியை ஊட்டினான். அவர்கள் ட்ரோஜன்கள்மீது பாய்ந்தார்கள். அவர்களது அச்சுறுத்தும் கர்ஜனை கப்பல்களைச் சுற்றி எதிரொலித்தது.

ஒளிவீசும் வெண்கலக் கவச உடையில் உறுதிவாய்ந்த பெட்ரோக்குலஸையும் அவனது அருகில் உதவியாளனாக ஆட்டோமிடானையும் பார்த்த ட்ரோஜன்கள் பதற்றமுற்றனர். அணியினரிடையே கலக்கமேற்பட்டது. ஏனெனில் தன் கோபத்தை விட்டுவிட்டு அகமெம்னனோடு உடன்பாடு ஏற் பட்டு விரைவுப்பாத அக்கிலிஸ்தான் மறுபடியும் வந்து விட்டானோ என்ற அச்சம் அவர்களுக்குத் தோன்றியது.

ஒவ்வொரு வீரனும் திடீர் மரணத்திலிருந்து தப்பிக்க ஏதாவது வழி இருக்கிறதா என்று சுற்றிமுற்றிப் பார்க்க ஆரம்பித்தான்.

மின்னும் ஈட்டியை முதலில் எறிந்தவன் பெட்ரோக்குலஸ்தான். அது ப்ரோட்டிசிலாஸின் கப்பலைச் சுற்றி அதன் பின் பகுதியில் நடந்து கொண்டிருந்த படுகுழப்பமான சண்டையில் ஈடு பட்டிருந்த வீரர்களின் கும்பலை நோக்கி நேராகச் சென்றது. அகன்றோடும் ஆக்சியஸ் நதி மற்றும் அமிடான் பகுதியில் இருந்து குஞ்சம் வைத்த தலைக்கவசங்களைக் கொண்ட பியோனிய வீரர்களைக் கூட்டி வந்திருந்த பைரீக்கிமீஸைத் தாக்கியது. பெட்ரோக்குலஸ் அவனது வலது தோளில் அடித் தான். ஒரு முனகலுடன் பைரீக்கிமீஸ் தரையில் மல்லாக்க விழுந்தான். அந்த ஈட்டியை எடுக்க அவனது பியோனிய வீரர்கள் ஓடினர். அவர்களது தலைவனையும் தலைசிறந்த வீரனையும் கொன்றதன் மூலம் அவர்கள் மத்தியில் ஒரு பதற்றத்தை ஏற்படுத்தியிருந்தான் பெட்ரோக்குலஸ். கப்பல்களின் பக்க மிருந்து அவர்களை அகற்றிய பெட்ரோக்குலஸ், அங்கு கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருந்த தீயை அணைத்தான். ஆனால் கப்பலின் பாதிவரை எரிந்துவிட்டிருந்தது. இதற்கிடை யில் பேரொலியுடன் பின்வாங்கினர் ட்ரோஜன்கள். கப்பல்களிலி லிருந்து பாய்ந்து வந்தனர் கிரேக்கர்கள். எல்லாம் குழப்பமாகிப் போனது.

ஒரு உயர்ந்த பெரிய மலையின் உச்சியில் கவிந்திருக்கும் அடர்த்தியான மேகத்தை, இடிசேகரிக்கும் ஜீயூஸ் அகற்றுவது போல, ஒவ்வொரு காவல்தளமும், நிலக்கூம்பும், மலைப்பாதை களும் தனித்து நிற்பதுபோல, மேல் காற்று ஆகாயத்திலிருந்து கீழ்ப்பக்கமாக புயலாக அடிப்பதுபோல, தீக்கிரையாவதிலிருந்து தம் கப்பல்களைக் காப்பாற்றினர் கிரேக்கர்கள். கொஞ்ச நேரத்துக்கு அவர்களால் நன்றாக சுவாசிக்க முடிந்தது. ஆனால் சண்டையிடும்போது அவர்களால் அப்படிச் செய்ய முடியாமல் இருந்தது. கறுப்புக் கப்பல்களிலிருந்து ட்ரோஜன்கள் விரட்டியடிக்கப்பட்டனர். ஆனால் முழுவதுமாக அல்ல. இன்னும் அவர்களால் கிரேக்கர்களுக்குத் தொல்லை இருக்கத் தான் செய்தது.

ட்ரோஜன் அணிகளுக்குள் புகுந்த கிரேக்கர்கள் தாங்கள் கொல்ல வேண்டிய வீரர்களை ஒவ்வொருவராகத் தேர்ந்தெடுக்க ஆரம்பித்தனர். துணிச்சலான பெட்ரோக்குலஸ்தான் முதலில்

தனது கூரீட்டியை அரிலைக்கஸ்மீது எறிந்தான். அவன் திரும்பிய போது அவனது தொடையை அது தாக்கியது. அதன் வெண்கல முனை தொடைக்குள் புகுந்து எலும்பை உடைத்தது. தலை கீழாகத் தரையில் விழுந்தான் அரிலைக்கஸ். இதற்கிடையில் போர்த்திறம் மிக்க மெனிலயஸ் தோவாஸைத் தன் கேடயத்துக்கு மேலாகத் திறந்து வைத்திருந்த அவன் மார்பில் தாக்கி அவனை வீழ்த்தினான். மீஜீஸைத் தாக்கினான் ஆம்ஃபிக்ளூஸ். ஆனால் அவன்மீது ஒரு கண் வைத்துக் கொண்டே இருந்த மீஜீஸ் அவனை முந்திக் கொண்டு சதைப்பற்று அதிகமாக இருக்கும் கால்பகுதி யில் தன் ஈட்டியால் தாக்கினான். ஈட்டிமுனை தசைநார்களைத் துளைத்துக் கொண்டு சென்றது. ஆம்ஃபிக்ளூஸின் கண்களை இருள் சூழ்ந்தது.

நெஸ்டரின் மகன்களில் ஒருவனான ஆன்ட்டிலோக்கஸ் தனது ஈட்டியால் அட்டிம்னியூஸைத் தாக்கி அவனது இடுப்பு வழியாக அதைச் செலுத்தினான். அவனது கண் முன்னாலேயே அட்டிம்னியூஸ் மண்ணில் வீழ்ந்தான். ஆனால் தன் சகோதரனு டைய மரணத்தால் சினமூட்டப்பட்ட மாரிஸ், கையில் ஈட்டி யுடன், சகோதரனின் உடலுக்கு முன் பாய்ந்து வந்து நின்று ஆன்ட்டிலோக்கஸைத் தாக்கினான். ஆனால் அவன் ஏதும் காயமேற்படுத்தும் முன், நெஸ்டரின் இன்னொரு மகனான கடவுளையொத்த த்ரேஸிமீடிஸ் விரைவாகப் பாய்ந்து தன் ஈட்டியால் அவனது தோளில் குத்தினான். அது தவறவில்லை. கையின் அடிப்பகுதிவரை தாக்கிய ஈட்டிமுனை அவனது கையைத் துண்டித்து எடுத்தது. கை எலும்பு முழுவதுமாக இடம் பெயர்ந்தது. இருள் கண்களைச் சூழ மண்ணில் விழுந்தான் மாரிஸ்.

இவ்விதமாக இந்த இரண்டு வீரர்களும் இரண்டு சகோதரர்களால் கொல்லப்பட்டு கீழோர் உலகத்துக்குச் சென்றனர். சர்ப்பிடானின் படைப்பிரிவில் இருந்த துணிச்சலான ஈட்டியெறி வீரர்கள் அவர்கள். மனிதர்களுக்குத் துன்பத்தைக் கொடுத்துக்கொண் டிருந்த, (சிங்கத்தின் தலையும், ஆட்டின் உடலும் பாம்பின் வாலும் கொண்ட நெருப்பை உமிழும்) கமீரா என்ற ராட்சச மிருகத்தை வளர்த்தெடுத்த அமிஸோடாரஸ் என்பவனின் பிள்ளைகள் அவர்கள்.

சண்டை நடந்து கொண்டிருந்த இடத்தில் க்ளியோபூலஸ் தடுக்கி விழ, அவ்விடத்தில் பாய்ந்து வந்த ஆய்லியூஸின் மகனான

அஜாக்ஸ் அவனை உயிருடன் பிடித்தான். ஆனால் கொஞ்ச நேரத்திலேயே அவனது கழுத்தில் கைப்பிடி கொண்ட தன் வாளால் தாக்கி அவன் உயிரைப் பறித்தான். ரத்தம் ஓடியதால் அவனது வாளின் வெட்டுவாய்ப் பகுதி கதகதப்பானது. கடுமை தணியாத விதியும் பழுப்பு மரணமும் அவன் கண்களை மூடின. அடுத்ததாக, பெனிலியோஸும் லைகோனும் ஒருவரையொருவர் தாக்கிக் கொண்டனர். இருவருமே சரியாகக் குறிபார்த்துத் தங்கள் ஈட்டிகளை எறியாததால் ஈட்டிகள் குறிதவறி விழுந்தன. அதனால் இப்பொழுது அவர்கள் ஒருவரை ஒருவர் த்ாக்க தம் வாட்களை உருவிக் கொண்டு பாய்ந்தனர். பெனிலியோஸின் இறகுகள் கொண்ட தலைக்கவசக் கூம்பின்மீது அடித்ததால் லைகோனின் வாளின் கைப்பிடி உடைந்தது. ஆனால் லைகோனில் கழுத்தில், காதின் பின்பக்கமாகத் தனது வாளினால் தாக்கினான் பெனிலியோஸ். அவனது வாளின் வெட்டுவாய்ப் பகுதி நேராக உள்ளே சென்றது. லைகோன் தரையில் விழுந்தபோது அவனது தொங்கிக் கொண்டிருந்த தலையை ஒரேயொரு தோல்தான் தாங்கிப் பிடித்துக் கொண்டிருந்தது.

அகாமாஸ் தனது தேரில் ஏற முயன்று கொண்டிருந்தபோது, அவன் நினைத்துப் பார்க்க முடியாத அளவுக்கு வேகமாகச் சென்ற மெரியோனிஸ் அவனது வலது தோளில் குத்தினான். தேரிலிருந்து தடாலெனத் தரையில் விழுந்தான் அகாமாஸ். அவனது விழிகளைப் பனி சூழ்ந்தது. இதற்கிடையில் எரிமாஸின் வாயில் இரக்கமற்ற தனது வெண்கலத்தால் தாக்கினான் இடொமீனியஸ். அவனது மூளையைக் குடைந்து சென்ற அந்த ஈட்டியின் உலோக முனை வெள்ளைத் தாடை எலும்புகளைச் சின்னாபின்னமாக்கியது. அவனது பற்கள் உடைந்து வெளியே விழுந்தன. அவனது விழிகள் இரண்டும் ரத்தத்தால் நிரம்பியிருந்தன. மூச்சுவிடவும் கஷ்டப்பட்ட, அவன் வாய் வழியாகவும் நாசி வழியாகவும் ரத்தம் வழிந்தோடியது. இறப்பின் கருப்பு மேகம் அவனை மூடியது.

ஒவ்வொரு கிரேக்கத் தலைவனும் அவனுக்குக் கிடைத்த வீரனைக் கொன்றனர். மேய்ப்பனின் கவனக் குறைவினால், மலைப்பகுதிகளில் வழிவிலகி வந்த ஆடுகளையும், தாயை விட்டுப் பிரிந்து போன ஆட்டுக் குட்டிகளையும் சித்திரவதை செய்து கவர்ந்து கொண்டு போகும் விலங்கை உண்டு வாழும் ஓநாய்களைப் போல ட்ரோஜன்களை கிரேக்கர்கள் சித்திரவதை செய்தனர். குழப்பத்தில் எப்படித் தப்பித்து ஓடுவது என்றுதான்

ட்ரோஜன்கள் சிந்தித்தனர். எதிர்த்து நின்று சண்டை செய்ய வேண்டும் என்ற உணர்வு அவர்களிடமிருந்து விடைபெற்றிருந்தது.

டிலமானின் மகனான மகா அஜாக்ஸுக்கு இப்பொழுது வெண்கலக் கவச உடையணிந்த ஹெக்டரைத் தாக்க வேண்டும் என்ற ஒரேயொரு ஆசைதான் இருந்தது. ஆனால் ஹெக்டர் ஒன்றும் அனுபவமில்லாத போர்வீரனல்ல. தனது அகன்ற தோள்களை அவன் எருதுத் தோல் கேடயத்தால் பாதுகாத்தான். அம்புகளில் சீழ்க்கையொலியையும் ஈட்டிகளின் மெத் தொலியையும் அவன் காதுகள் கவனமாகக் கேட்டறிந்தன. எதிரிகளின் படைகளுக்கு இன்று வெற்றி கிடைத்துள்ளது என்பதை அவன் அறிந்துதான் வைத்திருந்தான். என்றாலும் தனது இடத்தைவிட்டு நகராமல் தன் நம்பிக்கையான வீரர்களைக் காப்பாற்ற முயற்சிகள் எடுத்தான்.

தெளிவானதொரு வானிலைக்குப் பிறகு, ஒலிம்பஸ் மலையிலிருந்து புயல் மேகங்களைக் கிளப்பி திடீரென ஒரு புயலை ஜீயூஸ் அவிழ்த்துவிடுவதுபோல, ட்ரோஜன்கள் உச்சஸ்தாயியில் கத்தவும் பதற்றப்பட்டுச் சிதறியோடவும் ஆரம்பித்தார்கள். கிரேக்கர்கள் தற்காப்புக்காக வெட்டி வைத்திருந்த அகழியின் குறுக்கே அவர்கள் எந்தவித ஒழுங்குமற்ற வகையில் பாய்ந் தோடினர். ஹெக்டரின் விரைவுக் குதிரைகள் ஆயுதங்களுடன் அவனைக் கொண்டு சென்றன. கிரேக்க் அகழியினால் தற் செயலாகக் கவரப்பட்ட ட்ரோஜன் வீரர்களை அவர்களின் விதிவசம் விட்டுவிட்டுச் சென்றான் ஹெக்டர். பல ஜோடி போர்க்குதிரைகள் அகழியைத் தாண்டும் முயற்சியில் நுகத்தடியின் நடுத்தண்டை உடைத்துத் தம் எஜமானரின் தேர்களைப் பின்னால் விட்டுவிட்டுச் சென்றன.

கொலை செய்யும் வெறியுடன் அவர்களை பெட்ரோக்குலஸ் துரத்தினான். கடுமையாக நடந்து கொள்ளுமாறு கிரேக்கர்களைத் தூண்டினான். உச்சஸ்தாயியில் கத்திக் கொண்டும் பதற்றப் பட்டும் ஒருவரையொருவர் விட்டுப் பிரிந்தவர்களாகச் சிதறியோடிய ட்ரோஜன்களை எல்லா வழியிலும் பார்க்க முடிந்தது. கிரேக்கர்களையும் அவர்களது கப்பல்களையும் பாசறைகளையும் விட்டுவிட்டு நகரை நோக்கி ட்ரோஜன்களின் உறுதியான குதிரைகள் ஓடியபோது கிளம்பிய தூசிச் சுழல் மேகங்கள்வரை சென்றது. காட்டுத்தனமாகப் பின்வாங்கி ஓடிக்கொண்டிருந்த தேர்களை அதிகமாக எங்கு பார்த்தாலும்

உச்சஸ்தாயியில் அச்சுறுத்திக் கொண்டே அங்கு சென்றான் பெட்ரோக்குலஸ். வீரர்கள் பலர் தேர்ச்சக்கர இருசுகளுக்குக் கீழே தரையில் வந்து தலைகீழாக விழுந்தார்கள். அவர்கள் தேர்களும் தரையில் இடித்து இடறி விழுந்தன. ஆனால் அக்கிலிஸின் தந்தை பீலியூஸுக்குக் கடவுளரால் பரிசளிக்கப்பட்ட பெட்ரோக் குலஸின் தெய்வீகக் குதிரைகள் தங்கு தடையின்றிப் பாய்ந்து சென்று அகழியை ஒரே தாவலில் தாண்டின. அவன் தேடிச் சென்றது ஹெக்டரை. அவன் கொல்ல நினைத்ததும் ஹெக்ட ரையே. ஆனால் ஹெக்டரின் விரைவுக் குதிரைகள் அவனைப் பாதுகாப்பான இடத்துக்கு இட்டுச் சென்றன.

வெள்ளம்போன்ற மழையை ஜீயூஸ் அனுப்பும்போது, இலை யுதிர் காலத்தில் கிராமப் பகுதிகள் மழையாலும் புயல் வருமோ என்று அச்சமூட்டுகின்ற வானத்தாலும் கருத்துக் கனமாவது போலவும் கடவுளரின் பார்வையை மீறி பொதுப் பிரச்சனைகளில் நியாயமற்ற முறையில் தீர்ப்பு வழங்கும் கோணல் புத்தி கொண்ட மனிதர்கள்மீது ஜீயூஸ் கோபப்படுவதுபோலவும் அவன் கோபமாக வீரர்கள் மீது பாய்ந்தான். ஓடைகளிலெல்லாம் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடுவதைப்போல, மேல்தளமமைந்த மலைப்பகுதிகளில் காயங்களைப் போன்ற வடுக்களை மழை ஏற்படுத்துவதைப் போல, மலைகளிலிருந்து தலைகீழாக ஆறுகள் ஓடிவந்து பெரும் கர்ஜனையுடன் கலங்கலான கடலில் சேரும்போது ஏற்படும் ஒலிகளைப் போல தப்பி ஓடிக்கொண்டிருந்த ட்ரோஜன் தேர்களில் இருந்து சப்தங்கள் கிளம்பி வந்தன.

அதற்குள் அருகில் இருந்த ட்ரோஜன் படைப்பிரிவை வெட்டிக் கொண்டு கப்பல்களை நோக்கி அவர்களைச் செலுத்திக் கொண்டிருந்தான் பெட்ரோக்குலஸ். இலியம் நகருக்குத் திரும்பிச் செல்ல அவர்கள் எடுத்துக் கொண்ட எல்லா முயற்சி களையும் அவன் தவிடு பொடியாக்கினான். கொல்லப்பட்ட கிரேக்கர்களின் உயிர்களுக்கான தண்டனையாகக் கப்பல்கள், ஆறு, உயர்ந்த மதில் சுவர் என எல்லா இடங்களிலும் அவன் வெட்டிக் குவித்துக் கொண்டிருந்தான்.

தன் கேடயத்துக்கு மேலே திறந்து கிடந்த ப்ரோனூஸின் மார்பில் முதலில் ஈட்டியால் தாக்கினான். அது அவனை வீழ்த்தித் தடாலெனத் தரையில் விழ வைத்தது. அடுத்து அவன் தெஸ் டரைத் தாக்கினான். அவன் பளபளப்பாக்கப்பட்ட தன் தேரில்

முழங்கால்களில் தலை புதைய அமர்ந்திருந்தான். அவனுக்குப் புத்தி பிசகிப்போனது. குதிரைகளின் கடிவாளம் அவன் கைகளில் இருந்து நழுவிப் போயிருந்தது. அவனுக்கு அருகில் வந்த பெட்ரோக்குலஸ், அவனது வலது தாடைப் பக்கமாகத் தாக்கினான். அவன் பற்களுக்குள் புகுந்து சென்றது ஈட்டி. பின் அந்த ஈட்டியை ஒரு நெம்புகோல் போலப் பயன்படுத்தி அவனை அதில் தூக்கினான். அழகான பாறையின்மீது அமர்ந்து கொண்டு இருக்கும் மீனவன் மின்னும் தன் தூண்டிலை இழுத்துக் கடலில் இருந்து மீனை வெளியே இழுத்துப் போடுவது போலத் தேரிலிருந்து அவனை வெளியே எடுத்து மண்ணில் மல்லாக்க விழுந்து சாகுமாறு அவனைப் போட்டான்.

அதைப்பார்த்த யூரிலெளஸ் பெட்ரோக்குலஸ்மீது பாய்ந்து வந்தான். ஆனால் பெட்ரோக்குலஸ் சரியாக அவன் தலைமீது ஒரு பாறையால் தாக்கினான். அவனுடைய கனமான தலைக்கவசத்தின் உள்ளே அவனது மண்டையோடு இரண்டாக உடைந்தது. பூமியில் அவன் குப்புற விழுந்தான். இதயம் நசுக்கும் இறப்பு அவனைச் சூழ்ந்தது. அதன்பின் எரிமாஸ், ஆம்ஃபோட்டீரஸ், இபால்ட்டிஸ், டெலிபாலிமஸ், ஈக்கியஸ், பைரிஸ், இஃபியஸ், யுய்ப்பஸ், பாலிமீலஸ் ஆகியோரைத் தாக்கினான். வள்ளல் தன்மை கொண்ட பூமியில் விரைவாக அவர்களை ஒவ்வொருவராக விழச் செய்தான்.

இடுப்புக் கச்சற்ற லிசியர்கள் மெனீட்டியஸின் மகன் பெட்ரோக்குலஸின் தாக்குதலில் விழுந்து கொண்டிருப்பதைக் கண்ட சர்ப்பிடான் போர்த்திறம் மிக்க தனது வீரர்கள் பக்கம் திரும்பிச் சொன்னான்.

'லிசியர்களே, உங்களுக்கு அவமானம், பெருத்த அவமானம்! எங்கே போய்க் கொண்டிருக்கிறீர்கள்? வாருங்கள், நான் இப்பொழுது அங்கேயிருக்கும் அந்த மனிதனோடு சண்டை செய்யப் போகிறேன். ஏற்கெனவே அவன் ட்ரோஜன் வீரர் களுக்கு நிறைய அழிவை ஏற்படுத்திவிட்டான். நமது தலை சிறந்த வீரர்கள் பலர் கொல்லப்பட்டு விட்டார்கள். இப்படி எல்லாவற்றையும் கொண்டுபோகும் அவன் யார் என்று பார்க்க வேண்டும்' என்று சொல்லிவிட்டு, முழுமையாக ஆயுதம் தரித்தவனாக, தேரிலிருந்து தரைக்குக் குதித்தான் சர்ப்பிடான்.

எதிர்ப்பக்கமிருந்து அவனைப் பார்த்த பெட்ரோக்குலஸும் அப்படியே செய்தான். வளைந்த கூர்நகங்கள் மற்றும் அலகு

களுடன் இரண்டு பிணந்தின்னிக் கழுகுகள் பாறைகளடர்ந்த மலைமீது உயரத்தில் அலறிக் கொண்டே சண்டையிடுவது போல, இந்த இரண்டு வீரர்களும் எதிர்ப்புக் குரல் எழுப்பிக் கொண்டே களமிறங்கினர்.

அரிவாள் வீசும் க்ரோனஸின் மகனான ஜீயூஸ் நடப்பதைப் பார்த்து அவர்கள்மீது பரிதாபப் பட்டான். தனது மனைவியும் சகோதரியுமான ஹீராவிடம் சொன்னான்.

'இது மிகவும் துக்கமான சம்பவம்! மானிடரில் எனக்கு மிகவும் உவப்பான எனது மகன் சர்ப்பிடான், மெனீட்டியஸின் மகன் பெட்ரோக்குலஸால் கொல்லப்பட வேண்டும் என்பது விதி. என்ன செய்யலாம்? எனக்கு இரண்டு மனதாக இருக்கிறது. பெட்ரோக்குலஸிடமிருந்து அவனைப் பிடுங்கி லிசியாவின் வளம் மிகு மண்ணில், போரும் அதன் கண்ணீரும் அண்டாத தொலைதூரத்தில் அவனை உயிரோடு வைத்துவிடவா? அல்லது பெட்ரோக்குலஸின் கைகளில் அவனை விழ வைத்துவிடவா?'

அக்கேள்விக்கு எருதுக் கண்ணாள் ஹீரா பதில் சொன்னாள்.

'அதிகமாக அஞ்சப்படும் க்ரோனஸின் மகனே, நீங்கள் இப்பொழுது என்ன சொல்ல வருகிறீர்கள்? இறப்பது நிச்சயம் ஏற்கெனவே விதி நிர்ணயிக்கப்பட்டுவிட்ட ஒரு மானிடனை இறப்பின் வேதனைகளில் இருந்து தள்ளி வைக்கப் போகிறீர்களா? உங்களுக்கு எது விருப்பமோ அதைச் செய்யுங்கள். ஆனால் இதை மற்ற கடவுளர் யாரும் ஏற்றுக்கொள்ளப் போவதில்லை.

'ஆனால் உங்களுக்கு நான் வேறு ஒன்று சொல்கிறேன், நீங்கள் மனத்தில் வைத்துக்கொள்ளுங்கள். சர்ப்பிடானை உயிரோடு வீட்டுக்கு நீங்கள் அனுப்பினால், வேறு கடவுள்களும் நீங்கள் செய்ததுபோலவே போரின் உக்கிரத்தில் தன் மகனுக்கும் செய்ய விரும்பலாம். ட்ராய் நகரைச் சுற்றிப் போரிட்டுக் கொண்டிருப்பவர்களில் பலர் கடவுளரின் பிள்ளைகள்தான். அவர்கள் யாருக்கும் நீங்கள் செய்வது பிடிக்கப் போவதில்லை. சர்ப்பிடான் உங்களுக்கு மிகவும் பிரியமான மகனென்றாலும், உங்கள் மனம் அவனுக்காக அழுகிறது என்றாலும், பெட்ரோக்குலஸின் கையால் போர்க்களத்தில் அவன் சாகட்டும். உயிர் மூச்சு அவனை விட்டுப் பிரிந்த பிறகு, இறப்பையும் இனிய உறக்கத்தையும் அவனுக்கு அனுப்பி, அவனை அங்கிருந்து உயர்த்தி அகண்ட லிசியாவின் பகுதிக்குக் கொண்டு வாருங்கள். அங்கே அவனது

உறவினர்களும் அவனை வைத்துக் கொண்டிருந்தவர்களும் அவனுக்குக் கல்லறை எழுப்பி அடக்கம் செய்து நினை வாலயமும் கட்டுவார்கள். இறந்த வீரனுக்கு உரிய கௌரவம் அதுதான்.'

மானிடருக்கும் கடவுளருக்கும் தந்தையான ஜீயூஸ் அதை ஏற்றுக் கொண்டான். ஆனாலும் தன் அருமை மகனுக்கு மரியாதை செய்யும் பொருட்டு, தன் தந்தையர் நாட்டிலிருந்து வெகு தூரத்தில் இருந்த செழிப்பான ட்ராய் நகரில் சர்ப்பிடானை பெட்ரோக்குலஸ் கொல்ல இருந்தபோது, ரத்தத் துளிகளால் ஆன மழையை அனுப்பி வைத்தான்.

இருவரும் அருகில் வந்தபோது, பெட்ரோக்குலஸ் ஈட்டியை எறிந்தான். அது தலைவன் சர்ப்பிடானின் அருமை உதவியாளன் புகழ்பெற்ற த்ராஸிடீமஸை அவனது அடிவயிற்றில் தாக்கி அவனைக் கீழே கொண்டுவந்தது. இரண்டாவதாகத் தனது மின்னும் ஈட்டியை எறிந்தான் சர்ப்பிடான். அது பெட்ரோக் குலஸைத் தாக்கத் தவறியது. ஆனால் அவனது குதிரையான பெடாசஸை வலது தோளில் தாக்கியது. குதிரை தலைகீழாக மூச்சுத் திணறி கனைத்துக் கொண்டே மண்ணில் விழுந்து உயிர் விட்டது. மற்ற இரண்டு குதிரைகளும் பாய்ந்து பிரிந்து போயின. அந்தச் சிரமத்தில் நுகத்தடி கிரீச்சிட்டது. குதிரைகளின் கடிவாளங் கள் சிக்கிக் கொண்டன. ஏனெனில் வண்டிக் குதிரை மண்ணில் கிடந்தது. ஆனால் உடனே என்ன செய்ய வேண்டும் என்று மகா ஈட்டியெறி வீரனாகிய ஆட்டோமிடானுக்குத் தெரிந்திருந்தது. தனது கொழுத்த தொடையிலிருந்து நீண்ட வாளை உருவினான் அவன். சட்டெனக் கீழே குதித்து வண்டிக்குதிரையைத் திறமையாகத் தேரின் இணைப்பிலிருந்து வெட்டி விட்டான். உடனே இரண்டு குதிரைகளும் நேராக நிமிர்ந்து நின்றன. அவற்றின் கடிவாளங்களைப் பிடித்துக் கொண்டான் அவன். ஆன்மா அழிக்கும் சண்டையைத் தொடர்ந்தனர் இருவரும்.

மறுபடியும் தனது மின்னும் ஈட்டியின் இலக்கைத் தவற விட்டான் சர்ப்பிடான். பெட்ரோக்குலஸின் இடது தோளின் மேலே எந்த இடையூறும் செய்யாமல் சென்றது ஈட்டி. பெட்ரோக்குலஸ் இப்பொழுது ஈட்டியை எறிந்தான். அது அவனது கையைவிட்டு பலனின்றி விடுபட்டுச் செல்லவில்லை. சர்ப்பிடானின் அடர்ந்த இதயத்தைச் சுற்றியிருந்த நுரையீரல்களை அது தாக்கியது. ஒரு கருவாலி மரத்தைப்போல, நெட்டிலிங்க மரத்தைப்போல

அல்லது ஒரு கப்பல் செய்வதற்கான மரத்துண்டுகளுக்காக மலைப்பகுதிகளில் மரம் வெட்டிகள் தங்கள் புதிய கோடரிகளால் வெட்டிப் போடும் நெடிதுயர்ந்த தேவதாரு மரத்தைப் போல மண்ணில் சாய்ந்தான் அவன். ஏதேதோ சப்தங்கள் வாயில்வர, தனது தேர் மற்றும் குதிரைகளின் முன்னால் ரத்தம் தோய்ந்த மண்ணை இறுகப் பற்றிக்கொண்டு, மண்ணில் மல்லாக்க விழுந்து கிடந்தான் சர்ப்பிடான்.

திடீரெனெ ஒரு மந்தையில் புகுந்து, அங்கே அலங்கோலமாக நடந்து சென்று கொண்டிருக்கும் மாடுகளின் மத்தியில் கர்வம் கொண்ட பழுப்பு மஞ்சள் நிற எருதை அடித்துக் கொல்வது போல, சிங்கத்தின் பற்களினால் சிவபதவி அடையும் எருது மரண ஓலம் எழுப்பி அலறுவதைப் போல, கேடயம் தாங்கிய லிசியர்களின் தலைவனான சர்ப்பிடான் எதிர்த்துப் போராடி கடைசியில் பெட்ரோக்குலஸிடம் தன் உயிரை விடுவதற்குமுன் தனது நெருங்கிய நண்பனை அழைத்துக் கூறினான்.

'பழைய நண்பனே க்ளாகஸ், வீரர்களின் தலைவனே, உனது வீரத்தையும் திறமையையும், நீ ஒரு போர்வீரன் என்பதையும் காட்டும் தருணம் இது. உனக்கு உண்மையிலேயே வீரமிருக்கு மானால், வாழ்வா சாவா என்ற யுத்தத்தை மட்டும் உனது ஆசையாக வைத்துக்கொள். உனது லிசியத் தலைவர்களை இப் பொழுது தேடிச்செல். இந்த சர்ப்பிடானைச் சுற்றி அவர்களை அணிவகுக்கச் சொல். பின் எனக்காக நீங்கள் உங்கள் ஈட்டிகளால் சண்டையிடுங்கள். நான் விழுந்து கிடக்கும் இந்தக் கப்பல்களின் அருகில், கிரேக்கர்கள் என்னை நிர்வாணப்படுத்தி எனது கவச உடைகளை எடுத்துக்கொள்ள நீங்கள் மட்டும் அனுமதித்தால், உங்கள் வாழ்க்கையில் ஒவ்வொரு நாளும் பழியும் அவமரியாதை யும் உங்களை வந்து சேரும். உனது ஆற்றல்களையெல்லாம் திரட்டி உறுதியாக இரு, நம்மிடம் உள்ள அனைவரும் போரிடும் படிச் செய்' என்று பேசிக் கொண்டிருந்தபோதே மரணம் அவனது விழிகளைத் தழுவி அவனது மூச்சைத் தடுத்து நிறுத்தியது.

அவனது நெஞ்சில் காலை வைத்தான் பெட்ரோக்குலஸ். அவனது சதையில் இருந்து ஈட்டியை உருவி எடுத்தான். உள்ளேயிருந்த குடல்களெல்லாம் அதனுடன் வெளியில் வந்தன. ஈட்டியின் முனையோடு அவனது உயிரையும் வெளியில் எடுத்திருந்தான் பெட்ரோக்குலஸ். செருமிக் கொண்டிருந்த

சர்ப்பிடானின் குதிரைகளின் அருகில் நின்றனர் மெர்மிடன்கள். தம் எஜமானனின் தேரைவிட்டுப் பிரிந்திருந்ததால் அவைகள் ஓடுவதற்குத் தயாராக இருந்தன.

சர்ப்பிடானின் அழைப்பைக் கேட்டுத் திகைப்புற்று நின்றிருந் தான் க்ளாகஸ். சர்ப்பிடானுக்கு உதவ முடியாத கையறு நிலை க்ளாகஸின் மனதைப் பிழிந்தது. கிரேக்க மதில்சுவரைத் தாக்கிய போது, தனது நண்பர்களைத் தற்காக்கும் பொருட்டு ட்யூஸர் விட்ட அம்பினால் காயமடைந்த தனது ஒரு கையை நன்றாக இருக்கும் இன்னொரு கையால் இறுக்கமாகப் பற்றினான். பின் வில்லேந்திய கடவுளான அப்போலோவிடம் பிரார்த்தித்தான்.

'தலைவா என் பிரார்த்தனையைக் கேள்! செழிப்பான லைசியா விலோ ட்ராயிலோ எங்கோ இருக்கிறாய் நீ. நீ எங்கிருந்தாலும் சரி, வேதனையில் இருக்கும் ஒருவனின் குரலை உன்னால் கேட்க முடியும். இந்தக் கொடூரமான காயத்தை நான் வாங்கியுள்ளேன். இது தரும் வேதனையும் வலியும் தாங்க முடியாததாக உள்ளது. உறைய மறுக்கிறது ரத்தம். எனது தோள் உணர்ச்சியற்று முடங்கிவிட்டது. எனது ஈட்டியை என்னால் நேராகப் பிடிக்கக் கூட முடியவில்லை. இந்த நிலையில் நான் வெளியில் சென்று எதிரிகளோடு சண்டையிட முடியாது. இப்போதோ, எங்களின் தலைசிறந்த வீரன், ஜீயூஸின் மகனான சர்ப்பிடான் கொல்லப் பட்டு விட்டான். ஆனால் ஜீயூஸ் இது தொடர்பாக ஒரு சுண்டு விரலைக்கூட உயர்த்த மாட்டார். அது தன்னுடைய மகனாக இருந்தாலும் சரி. தலைவா அப்போலோ, இந்தக் கொடுமையான காயத்தை நீ குணப்படுத்துவாயாக. இந்த வேதனையைக் குறைப்பாயாக. லிசியர்களைப் போருக்கு அழைக்கும் உறுதியை எனக்குக் கொடு. நான் இறந்த எனது நண்பனுக்காக அவ னுடலைக் காக்கும் பொருட்டு போரிடுமாறு செய்வாயாக.'

அவன் செய்த பிரார்த்தனையைக் கேட்ட ஃபீபஸ் அப்போலோ உடனே அவனது வேதனையைத் தீர்த்தான். அசிங்கமான காயத்திலிருந்து வழிந்தோடிக் கொண்டிருந்த ரத்தத்தை உறைந்து போகும்படிச் செய்தான். புதிய சக்தியால் அவனை நிறைத்தான். நடந்ததை எண்ணிப் பார்த்த க்ளாகஸ் வியந்து போனான். கடவுள் தனது பிரார்த்தனையைக் கேட்டு உடனே ஆவன செய்ததை எண்ணி அகமகிழ்ந்தான். உடனே லிசியத் தலைவர்கள் இருந்த இடங்களுக்கெல்லாம் சென்று அவர்களைச் சந்தித்தான். சர்ப்பிடானைச் சுற்றி அணிவகுக்குமாறு அவர்

களைக் கேட்டுக் கொண்டான். பின் பாலிடாமஸ், கடவுளை யொத்த அகீனர், ஈனியாஸ், வெண்கலக் கவசமணிந்த ஹெக்டர் ஆகிய சில ட்ரோஜன்களைச் சந்திப்பதற்காகச் சென்றான். அவர்களிடம் சென்று அவசரமாகச் சொன்னான்.

'ஹெக்டர், உனது ஆதரவுப் படையினரை நீ அடியோடு மறந்து விட்டாய். தனக்குப் பிரியமானவர்களை விட்டும் தம் தந்தையர் நாட்டை விட்டும் வெகு தூரத்தில் இருக்கின்ற அவர்களோ உனக்காக தம் உயிரையும் கொடுப்பவர்கள். அவர்களுக்கு உதவ வேண்டும் என்ற எண்ணமே உனக்கு இருப்பதாகத் தெரிய வில்லை. கேடயம் ஏந்திய லிசியர்களின் தலைவனாகிய சர்ப்பிடான் இறந்து விட்டான். லிசியப் பகுதியை மிக உறுதி யாகத் தற்காத்து வந்தவன் அவன்தான். இப்பொழுது போர்க் கடவுளான ஏரிஸ், பெட்ரோக்குலஸின் ஈட்டியால் அவனை வெட்டிவிட்டான். அவனைச் சுற்றி நில்லுங்கள் நண்பர்களே. நமது ஈட்டிகளால் நாசமான கிரேக்கர்களை எண்ணிக் கோபப் பட்டு, அந்த மெர்மிடன்கள் மட்டும் சர்ப்பிடானின் ஆயுதங்களை எடுத்து அவன் புனிதம் கெடுப்பார்களேயானால், அதனால் ஏற்படப்போகும் அவமானத்தைக் கொஞ்சம் எண்ணிப்பார்' என்று அவன் பேசியதும் அதைக்கேட்ட ட்ரோஜன்களால் பெருகி வந்த, ஆறுதல் சொல்லமுடியாத துக்கத்தை அடக்க முடியவில்லை.

ஏனெனில் சர்ப்பிடான் ஒரு வெளிநாட்டுக்காரன் என்றாலும் அவர்களது நகரில் தங்கிய மிக முக்கிய ஆதாரமாக இருந்தான் அவன். அவன் அழைத்துச் சென்ற வீரர்களில் மிகச்சிறந்த போர்வீரனாகவும் அவனே இருந்தான். சர்ப்பிடானின் இறப்பால் சினமுற்றவர்களாக, பழிவாங்குவதற்கு ஆர்வம் கொண்ட வர்களாக, ஹெக்டரின் தலைமையில் உடனே அவர்கள் கிளம்பி கிரேக்கர்களை நோக்கிச் சென்றார்கள். இதற்கிடையில் ஆண்மைமிக்க பெட்ரோக்குலஸ் கிரேக்கர்களை உற்சாகப் படுத்திக் கொண்டிருந்தான். போர் செய்யும் எண்ணம் ஏற்கெனவே கொண்டிருந்த இரண்டு அஜாக்ஸ்களிடமும் அவன் முதலில் பேசினான்.

'அஜாக்ஸ்களே, எப்போதும் போலவே, இப்பொழுதும் சுத்த வீரர்களாக எதிரியோடு போரிடத் தயாராகுங்கள். சர்ப்பிடான் இறந்துவிட்டான். கிரேக்க மதில் சுவரைத் தாக்கிய முதல் வீரன் அவன்தான். அவனுடைய உடலை வெட்டிச் சிதைக்க முடியுமா,

அவன் முதுகிலிருந்து கவச உடையை எடுக்க முடியுமா, அதே சமயம் அவனைக் காப்பாற்ற நிற்கும் அவனது நண்பர்களில் சிலரையாவது கொல்ல முடியுமா என்று பார்க்கலாம் வாருங்கள்' என்று அழைத்தான். அஜாக்ஸ்கள் இருவரும் ஏற்கெனவே போர் செய்து அழிக்கும் மனநிலையில்தான் இருந்தார்கள். ட்ரோஜன் களும் லிசியர்களும் ஒரு பக்கமாகவும், கிரேக்கர்களும் மெர்மிடன்களும் ஒரு பக்கமாகவும் இரண்டு படையினரும் அணிவகுத்து நின்றனர். இறந்து கிடந்த சர்ப்பிடானை முன் வைத்து ஒருவர்மீது ஒருவர் பயங்கரமாக அலறிக் கொண்டே பாய்ந்து தாக்கினார்கள். வீரர்களின் உடல்களில் இருந்த கவசங்கள் பேரொலியெழுப்பின. தனது அருமை மகனுக்காக நடக்கும் சண்டை மேலும் உக்கிரமாக, கொலை வெறியோடு நடக்க வேண்டும் என விரும்பிய ஜீயூஸ் ஒரு பயங்கரமான இரவைக் கொண்டு போர்க்களத்தை ஒளி மங்கச் செய்தான்.

ஆரம்பத்தில் கரிய விழிகள் கொண்ட கிரேக்கர்களை ட்ரோஜன் களால் எதிர்க்க முடிந்தது. மெர்மிடன் போர்ப்படையின் வீரனான கடவுளையொத்த எபிகீயஸை கிரேக்கர்கள் இழந்திருந்தனர். செழிப்பான புடியானின் ஆட்சியாளனாக அவன் ஒரு காலத்தில் இருந்தான். ஆனால் வீரம் மிக்க ஒரு உறவினனைக் கொலை செய்ததனால் அடைக்கலம் தேடி, பீலியூஸிடமும் அவனது மனைவி வெள்ளிப்பாத தீட்டிஸிடமும் வந்தான். ட்ரோஜன்களை எதிர்த்துச் சண்டை போட மனிதர்களை வீழ்த்தும் அக்கிலி ஸுடன் குதிரைகளின் நாடான இலியத்துக்கு அவள் அவனை அனுப்பினாள்.

சர்ப்பிடானின் உடல் மீது அப்போதுதான் கை வைத்தான் எபிகீயஸ். சரியாக அந்த நேரம் பார்த்து அவன் தலைமீது ஒரு பாறையைத் தூக்கிப் போட்டான் ஹெக்டர். அவனுடைய கனமான தலைக்கவசத்துக்குள் அவனது மண்டை இரண்டாக உடைந்தது. அவன் சர்ப்பிடானின் உடல்மீது குப்புற விழுந்தான். மனமுருக்கும் மரணம் அவனைத் தழுவியது.

தனது நண்பனின் இழப்பைத் தாங்க முடியாத பெட்ரோக்குலஸ், சிறு காக்கைகளையும் குருவிகளையும் உதறிவிட்டுச் செல்லும் விரைவான கழுகைப் போல முன் வரிசையில் முன்னேறிச் சென்றான். தேரோட்டியான பெட்ரோக்குலஸ், தனது நண்பனின் மரணத்தால் ஏற்பட்ட கோபத்தில் லிசியர்களையும் ட்ரோஜன் களையும் நோக்கி வேகமாகச் சென்றான்.

ஸ்தெனீலாஸின் கழுத்தில் ஒரு பாறையைத் தூக்கிப் போட்டான் பெட்ரோக்குலஸ். அவனது தசைநார்களை நசுக்கியது அது. இப்படி அவன் செய்ததைப் பார்த்ததும் முன் அணியில் இருந்த ட்ரோஜன் வீரர்களும் கீர்த்திமிகு ஹெக்டரும்கூடப் பின்வாங் கினர். ரத்தம் பார்க்க வேண்டும் என்று விரும்புகின்ற எதிரிகளை எதிர்த்துப் போரிலோ விளையாட்டுகளிலோ நீண்ட கனம் குறைவான ஈட்டியை ஒரு வீரன் எறிந்தால் அது எவ்வளவு தூரம் போகுமோ அவ்வளவு தூரம் போய், தள்ளி நின்றனர் ட்ரோஜன் கள். கிரேக்கர்கள் முன்னேறி வந்தார்கள்.

கேடயம் தாங்கிய லிசியர்களின் தலைவனான க்ளாகஸ்தான் முதலில் நின்றான். திரும்பிய அவன் ஹெல்லாஸில் வசித்து வந்த, மெர்மிடன்களில் மிகவும் செல்வவளம் மிக்கவர்களில் ஒருவனான வீரம் மிக்க பாத்திக்ளிஸைக் கொன்றான். க்ளா கஸைப் பிடிப்பதற்காகத்தான் பாத்திக்ளிஸ் வந்தான். ஆனால் திடீரென்று திரும்பிய க்ளாகஸ் அவனை ஈட்டியால் மார்பின் மத்தியில் குத்தினான். தடாலென அவன் தரையில் விழுந்தான். அந்த வீரனை இழந்தது கிரேக்கர்களுக்கு ஒரு பேரிழப்பாக இருந்தது. ஆனால் ட்ரோஜன்கள் மகிழ்ந்தனர். சந்தோஷத்தில் க்ளாகஸைச் சுற்றிக் கூடினர்.

எனினும் கிரேக்கர்கள் சண்டை போடுவதிலிருந்து ஒன்றும் பின்வாங்கிவிடவில்லை. இன்னும் ஆற்றலுடன்தான் எதிரிக ளோடு பொருதினார்கள். இப்பொழுது ட்ரோஜன் வீரர்களில் ஒருவனான ஆயுதம் தரித்த துணிச்சலான லாகோனஸைக் கொல்வது மெரியோனிஸின் முறையானது. லாகோனஸ் இடியாவில் இருந்த ஜீயூஸ் கோவிலின் அர்ச்சகராக இருந்தான். ஒரு கடவுளைப்போல எல்லாராலும் மதிக்கப்பட்டவன். அவ னது தாடையின் கீழும் செவியிலும் தாக்கினான் மெரியோனிஸ். அவனது உறுப்புகளை விட்டு விரைவாக வெளியேறியது அவனது உயிர். வெறுக்கத்தக்க இருள் அவனைச் சூழ்ந்தது.

தன் கேடயத்தில் நிழலில் பாதுகாப்பாகப் போய்க் கொண்டிருந்த மெரியோனிஸைப் பிடித்துவிடலாம் என்ற நம்பிக்கையில் ஒரு ஈட்டியை எறிந்தான் ஈனியாஸ். ஆனால் கவனமாக இருந்த மெரியோனிஸ் அந்த வெண்கல ஈட்டியால் தாக்கப்படுவதி லிருந்தும் தவிர்த்துக் கொண்டான். சட்டென அதன் கீழே குனிந்து கொண்டான். அந்த நீண்ட கழி அவனுக்குப் பின்னால் தரையில் குத்தி நின்றது. அதிகாரம் கொண்ட போர்க்கடவுளான ஏரிஸ்

அதன் ஆற்றலை எடுக்கும் வரை, தரையில் குத்தி நின்ற தன் தடித்த முனை அதிர்ந்து கொண்டே இருந்தது. ஆத்திரமுற்ற ஈனியாஸ், சொன்னான்:

'மெரியோனிஸ், நீ ஒரு நல்ல நடனக் கலைஞனாக இருக்கலாம். ஆனால் என் ஈட்டி மட்டும் உன்னைக் குத்தியிருந்தால் அது உன் நடனத்தை நிரந்தரமாக நிறுத்தியிருக்கும்.'

அவனுக்குப் புகழ்மிகு ஈட்டியெறி வீரனாகிய மெரியோனிஸ் சொன்னான்:

'ஈனியாஸ், நீ ஆற்றல் மிகுந்தவன்தான், ஆனாலும் இந்தப் போர்க்களத்தில் நீ சந்திக்கும் அனைவரின் நெருப்பையும் உன்னால் அணைக்க முடியாது. எங்களைப் போலவே, சாகக் கூடிய உடம்புடன்தான் நீயும் படைக்கப்பட்டிருக்கிறாய். உனது வயிற்றில் என் கூரீட்டியால் குத்தி உன்னை நான் பிடித்திருந்தால், எவ்வளவுதான் உனக்கு உடலுரமும் நம்பிக்கையும் இருந் தாலும், உடனே நீ உனது புகழை எனக்கு விட்டுக் கொடுத் திருப்பாய். உனது உயிரைக் குதிரைகளுக்குப் புகழ் பெற்ற ஹயடிஸில் இருக்கும் கடவுளிடம் கொடுத்திருப்பாய்' என்று பதிலுரைத்தான்.

அவன் அப்படிப் பேசியதும், மெனீட்டியஸின் வீரம் செறிந்த மகனான பெட்ரோக்குலஸ் அவனைக் கடிந்து கூறினான்:

'மெரியோனிஸ், உன்னைப் போன்ற சிறந்த போர் வீரனுக்கு அழகு பேசிப்பேசியே நேரத்தை வீணடிப்பதல்ல. ஒரு சில அவமானங்கள் படுவதனால், சர்ப்பிடானின் உடலை விட்டு ட்ரோஜன்கள் நகர்ந்து போய்விடப் போவதில்லை. நான் சொல்வதை நம்பு, பழைய நண்பனே. அதற்கு முன் பல வீரர்களை இந்தப் பூமி மூடிவிடும். போர்கள் வீரச் செயல் களினால் வெல்லப்படுகின்றன. ஆலோசனை மண்டபம்தான் வார்த்தைகளுக்கான இடம். இது பேசிக்கொண்டிருப்பதற்கான நேரமல்ல. சண்டை போடுவதற்கான நேரம்.' இப்படிச் சொல்லிவிட்டு அவன் வழி காட்டிச் சென்றான்.

அவனைப் பின் தொடர்ந்து மெரியோனிஸும் சென்றான். மலைப்பாதைகளில் உள்ள மரங்களை மரம் வெட்டிகள் கழிக்கும் போது கீழே விழும் மரங்களின் பேரொலி வெகு தூரத்துக்குக் கேட்பதுபோல, வீரர்கள் ஒருவரையொருவர் தமது வாள்களா

லும் வளைந்த ஈட்டிகளாலும் குத்திக் கொண்டபோது, அகன்ற பூமியில் இருந்து எழுந்தன வெண்கலத்தாலும், தோலாலும், நன்றாக வடிவமைக்கப்பட்ட கேடயங்களின் சப்தங்கள். மிகுந்த கூரிய பார்வை கொண்ட விழிகளால்கூட சர்ப்பிடானைப் பார்த்திருக்க முடியாது. ஏனெனில் தலை முதல் கால்வரை ஆயுதங்களாலும் ரத்தத்தாலும் தூசியாலும் அவன் மூடப்பட்டிருந்தான். வசந்த காலத்தில் பாத்திரங்கள் நிரம்பிப் பால் வழியும் போது, அந்த வாளிகளைச் சுற்றி மந்தையில் ஈக்கள் மொய்ப்பது போல, சர்ப்பிடானின் உடலைச் சுற்றி வீரர்கள் இருந்தனர்.

அப்போது போரின் உக்கிரத்திலிருந்து கண்களை அகற்றாமல் வீரர்களையே பார்த்துக் கொண்டிருந்த ஜீயூஸ் பெட்ரோக்குலஸைக் கொல்வது எப்படி என்று யோசித்துக் கொண்டிருந்தான். கடவுளையொத்த சர்ப்பிடானுக்காகச் சண்டை நடந்து கொண்டிருக்கும்போது கீர்த்திமிகு ஹெக்டரின் ஈட்டிக்கு பெட்ரோக்குலஸை விழ வைத்து அவனுடைய கவச உடைகளை ஹெக்டர் எடுத்துக் கொள்ள அனுமதிப்பதா அல்லது தன் எதிரிகளில் இன்னும் அனேகம் பேரை பெட்ரோக்குலஸ் வேதனைக்குள்ளாக்க வைப்பதா என்று முடிவு செய்ய முடியாமல் இரண்டு மனதாக இருந்தான் ஜீயூஸ். கடைசியில், அக்கிலிஸின் அருமையான உதவியாளனாகிய பெட்ரோக்குலஸ், வெண்கலக் கவச உடையணிந்த ஹெக்டரையும் ட்ரோஜன்களையும் நகரை நோக்கி ஓட வைக்கட்டும், அதுதான் சிறந்தது என்று முடிவுக்கு வந்தான்.

எனவே ஹெக்டரை ஒரு கோழையாக ஆக்கினான் ஜீயூஸ். ஹெக்டரும் உடனே தனது தேரில் குதித்தேறி, தப்பி ஓட முயன்றான். மற்ற ட்ரோஜன் வீரர்களையும் தப்பி ஓடச் சொல்லி உரக்கக் கத்தினான். புனிதத் தராசை தனக்கு எதிராக ஜீயூஸ் சாய்த்துவிட்டான் என்று அவனுக்குத் தெரியும். அந்த நேரத்தில், வல்லமை பொருந்திய லிசியர்கள்கூட அங்கு நிற்கவில்லை. எல்லாரும் ஒரே நேரத்தில் பறந்தோடினார்கள். தங்கள் தலைவனே மார்பில் அடிபட்டு இறந்தவர் கும்பலோடு கும்பாலாகக் கிடந்ததை அவர்கள் பார்த்திருந்தார்கள். ஜீயூஸ் மேடையேற்றியிருந்த கடுமையான போரில் சர்ப்பிடானின் உடல்மீது ஏராளமான வீரர்கள் கொல்லப் பட்டு விழுந்து கிடந்தார்கள்.

சர்ப்பிடானின் தோளிலிலிருந்து மின்னிய வெண்கலக் கவச உடையை, கிரேக்கர்கள் கழற்றினார்கள். மெனீட்டியஸின்

மகனும் வீரம் மிக்கவனும் ஆன பெட்ரோக்குலஸ் அதைத் தனது வீரர்களிடம் ஒப்படைத்தான். அதை உட்குழிந்த தமது கப்பல்களுக்கு எடுத்துச் செல்லுமாறு கூறினான். அதன் பிறகு மேகங்களைச் செலுத்தும் ஜீயூஸ் அப்போலோவிடம்,

'அன்பான ஃபீபஸ், சீக்கிரமாகச் சென்று சர்ப்பிடானின் உடலைக் கண்காணாத இடத்துக்குக் கொண்டு செல். அவன் உடலில் இருக்கும் கருப்பு ரத்தத்தையெல்லாம் துடைத்தெடுத்துச் சுத்தப்படுத்திவிட்டு, ஒரு தூரமான இடத்துக்கு அவனை எடுத்துச் சென்று, ஓடும் நீரில் அவனைக் குளிப்பாட்டு. அமிழ்தத்தால் அவன் உடலில் தேய்த்துவிடு. நித்தியக் கடவுளுக்குரிய ஆடையில் அவனைப் போர்த்திவை. பின் அவனைக் கொண்டு செல்ல உறக்கமும் அவனது இரட்டை சகோதரனான இறப்பும் வருமாறு செய். அந்த இரண்டு விரைவு உதவியாளர்களும் அவனை அகண்ட லிசியாவின் செழிப்பான பகுதிக்குக் கொண்டு செல்வார்கள். அவனது உறவினர்களும் அவனைத் தங்க அனுமதித்தவர்களும் சேர்ந்து அவனுக்கு நல்ல முறையில் அடக்கம் செய்வார்கள். ஒரு கல்லறை எழுப்பி நினைவுச் சின்னமும் கட்டுவார்கள். இறந்த வீரர்களுக்கு அது செய்ய வேண்டிய நியாயமான மரியாதையுமாகும்' என்றான் ஜீயூஸ் அப்படிச் சொன்னதைக் கேட்டவுடன் அப்போலோ செயல்படத் தொடங்கினான்.

உடனே அய்டா மலையில் உச்சியில் இருந்து இறங்கி போரில் பேரழிவு நடந்த இடத்துக்கு விரைந்தான். உடனே கடவுளையொத்த சர்ப்பிடானை அந்த எல்லைக்கு அப்பால் கொண்டு போனான். ஒரு தூரமான இடத்துக்கு அவனை எடுத்துச் சென்று, ஓடும் நீரில் அவனைக் குளிப்பாட்டி, அமிழ்தத்தை அவன் உடலில் பூசினான். பின் நித்தியக் கடவுளுக்குரிய ஆடையால் அவனைப் போர்த்தினான். பின் அவனைக் கொண்டு செல்ல உறக்கமும் அவனது இரட்டை சகோதரனான இறப்பும் வருமாறு செய்தான். அந்த இரண்டு விரைவு உதவியாளர்களும் அவனை அகண்ட லிசியாவின் செழிப்பான பகுதிக்குக் கொண்டு சென்றார்கள்.

தனது தேரோட்டியான ஆட்டோமிடனுக்கு ஒரு சப்தம் கொடுத்துக்கொண்டே, பெட்ரோக்குலஸ் ட்ரோஜன்களையும் லிசியர்களையும் தேடிச் சென்றான். ஆனால் அவன் முற்றிலுமாக ஏமாந்து போனான். குருட்டு முட்டாள். அக்கிலிஸின் உத்தரவு

களை மட்டும் கேட்டு நடந்திருப்பானேயானால் மோசமான விதியான கருப்பு மரணத்திலிருந்து தன்னை அவன் காப்பாற்றிக் கொண்டிருக்க முடியும். ஆனால் மனிதர்களைப் பொருத்தவரை, ஜீயூஸின் விருப்பமே எப்போதும் நிறைவேறும். ஜீயூஸ் நினைத்தால் வீரனும் கோழையாகிப் போர்க்களத்தை விட்டு ஓடிப்போவான். அதே வீரனை இன்னொரு சமயத்தில் வீரத்தோடு போர் செய்ய வைக்கவும் கடவுளால் முடியும். இப்பொழுது பெட்ரோக்குலஸுக்கு வீரத்தை ஊட்டினான் ஜீயூஸ்.

'பெட்ரோக்குலஸ், கடவுளர் உன்னை மரணத்துக்கு அழைத்த அந்த நேரத்தில், உன்னிடம் விழுந்த முதல் வீரன் யார்? கடைசி வீரன் யார்?' என்று கேட்டான்.

முதலில் அட்ரீஸ்டஸ். பின் ஆட்டோனூஸ், எக்கீலஸ், பெரிமஸ், எப்பீஸ்டர், மெலானிப்பஸ். பின்பு, எலாசஸ், மூலியஸ், பைலார்ட்டிஸ். இவர்களனைவரையும் பெட்ரோக்குலஸ் கொன்றான். மற்றவர்களனைவரும் புத்திசாலித்தனமாக ஓடிப்போனார்கள். நிறுத்த முடியாதவாறு பெட்ரோக்குலஸ் கோபாவேசமாகத் தன் ஈட்டியால் தாக்கிக் கொண்டிருந்தான்.

பெட்ரோக்குலஸின் மரணம், ட்ரோஜன்களைக் காப்பது இவைபற்றிய நினைப்பில் ஃபீபஸ் அப்போலோ மட்டும் நன்றாக வடிவமைத்துக் கட்டப்பட்ட கோபுரத்தின் மீதமர்ந்து கொண்டு இருக்கவில்லையானால், உயர்ந்த மதில் சுவர்களையுடைய ட்ராய் நகரம் பெட்ரோக்குலஸின் தலைமையில் கிரேக்கர்கள் வசம் வீழ்ந்தே இருக்கும். உயர்ந்த சுவரின் மீது மூன்று முறை ஏற முயன்றான் பெட்ரோகுலஸ். ஆனால் மூன்று முறையும் அவனது மின்னும் கேடயத்தைத் தன் நித்தியக் கையால் பின்னால் தள்ளி அவனைக் கீழே விழ வைத்தான் அப்போலோ. ஆனால் தான் ஏதோ அமானுஷ்யன் என்பதுபோல நான்காவது முறையாகவும் பெட்ரோக்குலஸ் ஏறி வந்தபோது, ஒரு பயங்கர அலறலை வெளிப்படுத்திய கடவுள் அவசரமாகச் சொன்னான்:

'ஒலிம்பஸ் மலையில் பிறந்த பெட்ரோக்குலஸ், பின்னால் போய்விடு! கர்வம் மிக்க ட்ரோஜன்களின் நகரம் உன் ஈட்டியாலோ, உன்னை விட எல்லா வகையிலும் சிறந்த வீரனான அக்கிலிஸினாலோகூட பிடிக்கப்பட வேண்டும் என்று விதியில்லை' என்றான்.

அப்படி அவன் சொன்னதும், வில் கடவுள் அப்போலோவின் சினத்துக்கு அஞ்சிய பெட்ரோக்குலஸ் கணிசமான தூரம் பின் வாங்கினான்.

ஸ்கேய வாயிலருகில் தன் குதிரைகளை நிறுத்தினான் ஹெக்டர். மீண்டும் போரில் கலந்து கொள்வதா அல்லது வீரர்களனை வரையும் ட்ராய் நகருக்குத் திரும்பிச் செல்லும்படிச் சொல்வதா என்று அங்கே நின்று தனக்குள் விவாதித்துக் கொண்டான். செய்வதறியாது அவன் திகைத்து நின்று கொண்டிருந்தபோது ஃபீபஸ் அப்போலோ அவனருகில் குதிரைகளை அடக்கும் ஹெக்டரின் மாமன் ஆற்றல் மிக்க ஆஸியஸின் உருவில் வந்து நின்றான். ஆஸியஸ் சங்காரியஸ் நதிக்கரைகளின் ஓரமாக அமைந்திருந்த ஃப்ரிஜியாவில் வசித்து வந்த டைமாஸின் மகனும் ஹெகாபியின் சகோதரனும் ஆவான்.

உருமாறி இருக்கும் அந்த நிலையில் ஜீயூஸின் மகனாகிய அப்போலோ சொன்னான்:

'ஹெக்டர், நீ ஏன் சண்டையிடுவதை நிறுத்திவிட்டு உனது கடமையிலிருந்து நழுவி விட்டாய்? நீ என்னைவிடச் சிறந்தவனாக இருப்பதைப் போல் நான் உன்னைவிடச் சிறந்தவனாக இருக்க வேண்டும் என்று விரும்புகிறேன்! போர்க்களத்திலிருந்து நீ ஒதுங்கியிருப்பதற்கு விரைவிலேயே வருந்துவாய். சீக்கிரம் கிளம்பிப் போ. பெட்ரோக்குலஸை நோக்கி உன் ஆற்றல்மிகு குதிரைகளை விரட்டு. நீ இப்பொழுதுகூட அவனைப் பிடித்துவிட முடியும். அப்போலோ உனக்கு வெற்றியைக் கொடுப்பான்.'

இவ்வார்த்தைகளைச் சொல்லிவிட்டு, சண்டையிட்டுக் கொண் டிருந்த கூட்டத்தில் கலந்து கொள்ளச் சென்றான் அப்போலோ. போர்த்திறம் மிக்க செப்ரியோனிஸிடம் குதிரைகளைக் கிளப்பச் சொல்லிச் சொன்னான் ஹெக்டர். கூட்டத்தில் கலந்துவிட்ட அப்போலோ ஒரு பேரழிவை கிரேக்கர்கள் மத்தியில் ஏற்படுத்தினான். ஹெக்டர் மற்றும் ட்ரோஜன்களின் கைகளை ஓங்கச் செய்தான். ஆனால் மற்ற கிரேக்கர்களைப் பற்றி ஹெக்டர் அக்கறை கொள்ளவில்லை. அவர்கள் யாரையும் கொல்ல அவன் முயற்சியும் செய்யவில்லை. ஆனால் பெட்ரோக்குலஸ் இருந்த இடம் நோக்கி தன் குதிரைகளை விரைவாகச் செலுத்தினான். தனது தேரில் இருந்து இடது கையில் ஈட்டியை ஏந்தியவனாக பக்கவாட்டில் தரையில் குதித்தான் பெட்ரோக்குலஸ்.

வலது கையால் கரடுமுரடான ஓரங்கள் கொண்ட ஒரு கல்லைப் பிடித்திருந்தான். அவனது கை அதனை மூடியிருந்தது. ஹெக்டருக்கு முன் பின்வாங்க மறுத்தவனாக, அந்தக் கல்லை ஹெக்டரை நோக்கி தன் பலம் கொண்ட மட்டும் வேகமாக வீசினான். அவன் எறிந்தது வீணாகவில்லை. கூர்மையான அந்தக் கல், ஹெக்டரின் தேரோட்டியான கீர்த்திமிகு ப்ரியமுக்கு முறைதவறிப் பிறந்த மகனான செப்ரியோனிஸை அவனது நெற்றியில் தாக்கியது. அப்போதும் குதிரைகளின் கடிவாளங்களை அவன் பிடித்துக் கொண்டிருந்தான். அவனது இரண்டு புருவங்களையும் சிதைத்தது கல். எலும்பை உடைத்தது. அவனது விழிக்கோளங்கள் வெளியில் வந்து அவனது காலடியில் இருந்த மண்ணில் விழுந்து உருண்டன. நன்றாக வடிவமைக்கப்பட்ட அந்தத் தேரிலிருந்து அவன் பின்பக்கமாக முத்துக்குளிப்பவனைப் போல விழுந்தான். அவனது எலும்புகளில் இருந்து பிரிந்தது அவனது உயிர்.

அவனைக் கிண்டல் செய்து தேரோட்டியான பெட்ரோக்குலஸ், நீ கூறினாய்:

‘ஆஹா, ஆஹா, அவனது பாதங்கள் என்ன பஞ்சா? கழைக் கூத்தாடியைப் போல இப்படிக் குட்டிக்கரணம் போடுகிறானே! தேரிலிருந்து அவன் செய்த இந்த இன்பகரமான செப்பிடு வித்தையைக் கடல் நீருக்குள் அவன் செய்வானாகில், இன்னும் நிறைய பேரைத் திருப்திப் படுத்திய மாதிரி இருக்கும். வானிலை எவ்வளவு மோசமானதாக இருந்தாலும், படகிலிருந்து குதித்து அவன் நத்தைகளைச் சேகரிப்பான். இப்படிப்பட்டக் கழைக் கூத்தாடிகள் ட்ரோஜன்களில் இருப்பார்கள் என்று எனக்குத் தெரியவே தெரியாது!’ என்று சொன்னான்.

இந்த வார்த்தைகளைச் சொல்லியவனாக வீரன் செப்ரியோனிஸின் உடல் மீது உரிமை கொண்டாட ஆட்டு மந்தைகளைத் தாக்கும்போது மார்பில் அடிபட்ட சிங்கம் போலப் பாய்ந்து முன்னேறிச் சென்றான் பெட்ரோக்குலஸ். அவனது துணிச்சலே அவனுக்கு எமனானது.

அந்தப் பக்கமாக இருந்த ஹெக்டர் தனது தேரில் இருந்து கீழே குதித்தான். கொல்லப்பட்ட மானின் உடலுக்காக, மலையின் உச்சியில், பசியோடும் அச்சமற்றும் சண்டை போடும் இரண்டு சிங்கங்களைப் போல, செப்ரியோனிஸின் உடலுக்காக, போர்

முழக்கத் தலைவர்களாகிய பெட்ரோக்குலஸும் கீர்த்திமிகு ஹெக்டரும் ஒருவரை ஒருவர் எதிர்த்துக் கொண்டனர். தங்களின் கொடூரமான ஈட்டிகளால் குத்திக்கொண்டு ஒருவர் சதையை ஒருவர் கிழிக்க ஏங்கியவர்களாகப் போரிட்டனர். செப்ரியோனிஸின் தலையைப் பிடித்துக் கொண்ட ஹெக்டர் அதைக் கடைசி வரை விடவே இல்லை. பெட்ரோக்குலஸ், கால் பக்கமாக இருந்தான். சுற்றியிருந்த ட்ரோஜன்களும் கிரேக்கர்களும் பயங்கரமாக மோதிக்கொண்டனர்.

புங்க மரங்களும் ஆஷ் மரங்களும் மிருதுவான பட்டை கொண்ட கார்னெல் மரங்களும் நிறைந்த அடர்ந்த காட்டைப் பெருமூச்சு விட வைத்து மலைப்பகுதியில் உள்ள பள்ளத்தாக்கில் கிழக்குக் காற்றும் தெற்குக் காற்றும் சண்டையிட்டுக் கொள்ளும். அப்போது அம்மரங்களின் நீண்ட கிளைகள் ஒன்றோடொன்று மோதிப் பெரும் சப்தத்தைக் கிளப்பும். ஒலியுடன் கிளைகள் உடைந்து விழும். அதைப்போல ட்ரோஜன்களும் கிரேக்கர்களும் மோதிக்கொண்டு அழித்துக்கொண்டனர். மரணத்தை எண்ணி ஓடிவிடலாம் என்ற எண்ணம் இருதரப்பினருக்குமே இருந்ததாகத் தெரியவில்லை. செப்ரியோனிஸ் இறந்து கிடந்த இடம் முழுவதும் கூரீட்டிகளாலும் வில்லிலிருந்து விடுபட்ட இறகுகள் கொண்ட அம்புகளாலும் நிறைந்திருந்தது. பெரும் பெரும் பாறைகள் கேடயங்களைத் தாக்க, அவற்றைப் பிடித்துக் கொண்டு செப்ரியோனிஸின் உடலருகில் சண்டையிட்டவர்கள் அனைவரும் தள்ளாடிப் பின்னால் சென்றனர். ஒரு மகா புழுதிப் படலத்தினுள் கிடந்தான் செப்ரியோனிஸ். அவன் தேரோட்டிய நாட்கள் மறக்கப்பட்டுவிட்டாலும், அவனது வீழ்ச்சியும் மகத்தானதாகவே இருந்தது.

சூரியன் நடுவானில் பிரகாசித்துக் கொண்டிருந்தபோது, ஏவுகணைகளும் எதிர்க்கணைகளும் தாக்க வீரர்கள் மடிந்து விழுந்து கொண்டிருந்தனர். உழவன் தன் கலப்பையில் இருந்து எருதை அவிழ்க்கும் அந்தி நேரம், விதியை மீறிய விதமாக கிரேக்கர்களின் கை ஓங்கியது. ஆயுதக் குவியல் மற்றும் ஓலமிட்டுக் கொண்டிருந்த ட்ரோஜன்களின் மத்தியில் இருந்து வீரன் செப்ரியோனிஸை அவர்கள் இழுத்து வந்தனர். அவனது முதுகில் இருந்து அவனது கவச உடையைக் கழற்றி எடுத்தனர். ஆனால் கொலை வெறி பிடித்தாட்டிய பெட்ரோக்குலஸ் எதிரியைத் தாக்கப் பாய்ந்தான். மூன்று முறை அவன் அச்ச

மூட்டும் வகையில் கத்திக்கொண்டே மூர்க்கமான ஏரிஸைப் போலத் தாக்கினான். அந்த மூன்று முறைகளும் ஒன்பது வீரர்களை அவன் கொன்றான். ஆனால் ஏதோ அமானுஷ்யன் என்பது போல, நான்காவது முறையாக அவன் பாய்ந்தபோது, அவனுடைய முடிவு அருகிலேயே இருந்தது. போரின் உக்கிரத்தில் உன்னை எதிர் கொண்டான் ஃபீபஸ்; பயங்கரமான ஃபீபஸ்.

கூட்டத்தின் வழியாக அவன் வருவதை பெட்ரோக்குலஸ் பார்க்கவில்லை. இந்தச் சந்திப்பு நிகழ்வதற்காக, ஒரு தடித்த பனிப்படலத்தால் தன்னை மறைத்துக் கொண்டிருந்தான் அந்தக் கடவுள். பெட்ரோக்குலஸின் பின்னால் அவன் நின்றான். தனது உள்ளங்கையால் அவனது முதுகில் அப்போலோ தட்டியபோது, பெட்ரோக்குலஸின் விழிகள் பம்பரம்போல் சுழன்றன. அவனது தலைக்கவசம் தலையைவிட்டுப் பறந்தது. கனமான அதன் முன்பாகம் கடகடவென ஒலித்துக்கொண்டு குதிரைகளின் குளம்புகளின்கீழே உருண்டோடியது. அதன் உச்சிக் குஞ்சலம் ரத்தத்தாலும் புழுதியாலும் கறைபட்டது. இதற்கு முன் குஞ்சலம் வைத்த அந்தத் தலைக்கவசம் கடவுளையொத்த அக்கிலிஸின் தலையில் இருந்த போதும், அவனது அழகான முகத்தை மறைத்துக் காத்துக் கொண்டிருந்த போதும் இப்படி ஒரு அவமரியாதையை அது சந்திக்க விட்டதில்லை. ஆனால் இப்பொழுது அதை ஹெக்டர் அணிய வேண்டும் என்று ஜீயூஸ் அனுமதித்திருந்தான். ஏனெனில் அவனும் இறப்புக்கு வெகு நெருக்கத்தில் இருந்தான். பெட்ரோக்குலஸின் கையில் இருந்த நீண்ட நிழலும் கனமான வெண்கல முனைத் தலையும் கொண்ட ஈட்டி, சிதறடிக்கப்பட்டது. பட்டையுடன் கூடிய விளிம்புகளில் அலங்காரம் கொண்ட கேடயம் அவன் தோளில் இருந்து தரையில் விழுந்தது. ஜீயூஸின் மகனாகிய அப்போலோ, பெட்ரோக்குலஸின் உடலில் இருந்த கவசத்தை அவன் மார்பில் இருந்து கழற்றினான்.

திடீரென மரணத்தைப் போன்ற ஒரு பார்வை இழப்பு ஏற்பட்டது பெட்ரோக்குலஸுக்கு. மின்னிய அவன் உடல் உறுப்புகள் செயலற்றுப் போயின. ஸ்தம்பித்துப் போய் அவன் அங்கே நின்று கொண்டிருந்தபோது, பாந்தூஸின் மகனான யுஃபோர்பஸ் என்ற டார்டானியன் ஒருவன் வந்து அவனுக்குப் பின்னால் நின்று ஒரு கூரீட்டியால் அவனது முதுகின் மையப்பகுதியில் தோள்களுக்கு இடையில் தாக்கினான்.

இந்த யுஃபோர்பஸ் ஒரு சிறந்த ஈட்டியெறி வீரனாகவும் ஓட்டப் பந்தய வீரனாகவும், குதிரையேற்றத்தில் வல்லவனாகவும் இருந்து வந்தான். இதே போரில் அவன் இருபது வீரர்களைத் தேரிலிருந்து தரையில் விழ வைத்துள்ளான். (இத்தனைக்கும் ஒரு தேரோட்டியாக அவன் கலந்து கொண்ட முதல் போரே இதுதான்).

பெட்ராக்குலஸ், அவன்தான் உன்னை முதலில் தாக்கியவன். ஆனால் அவன் உன்னைக் கொல்லவில்லை. பெட்ரோக்குலஸின் சதையில் இருந்து ஆஷ் மரத்தால் செய்யப்பட்ட தன் ஈட்டியை உருவிக்கொண்டு அவன் ஓடிப்போய், கூட்டத்தில் கலந்து மறைந்துவிட்டான். பெட்ரோக்குலஸின் நிலைமை பாது காப்பற்றதாக இருந்தபோதும் அவன் பெட்ரோக்குலஸோடு சண்டை போடவில்லை.

கடவுள் கொடுத்த அடியாலும் யுஃபோர்பஸின் ஈட்டியாலும் பாதிக்கபட்ட பெட்ரோக்குலஸ், மரணம் தவிர்க்க. தனது படைப்பிரிவினர் இருக்கும் இடம் தேடிப் பின்வாங்கிச் சென்றான். வீரம் மிக்க பெட்ரோக்குலஸ் இவ்விதமாகக் காயம்பட்டு பின்வாங்குவதைக் கண்டு அவனை நோக்கி அணியினரைக் கடந்து விரைந்து வந்த ஹெக்டர், பெட்ரோக் குலஸின் அடிவயிற்றுப் பகுதியில் தன் ஈட்டியால் குத்தினான். அவனது ஈட்டியின் வெண்கல முனை பெட்ரோக்குலஸின் உடலுள் நன்றாக நுழைந்து போனது. பெட்ரோக்குலஸ் தடாலெனத் தரையில் விழுந்தான். கிரேக்க படை முழுவதும் அல்லோல கொல்லோலப் பட்டது.

மலைப்பகுதியில் இருக்கும் ஒரு ஓடையில் நீரருந்துவதற்காக, காட்டுப் பன்றியும் சிங்கமும் சண்டையிடுகின்றன. இறுதியில் சிங்கத்தின் உறுதி பெருமூச்சு வாங்கும் காட்டுப் பன்றியை வெல்கிறது. அதைப்போல, எத்தனையோ வீரர்களைத் தானே கொன்றிருந்தாலும், மெனீட்டியஸின் உறுதியான மகனான பெட்ரோக்குலஸ், இப்பொழுது அருகில் இருந்து குத்தப்பட்ட ஹெக்டரின் ஈட்டிக்குப் பலியானான். வெற்றிபெற்ற மகிழ்ச்சி யில் ஹெக்டர் இப்பொழுது அவனிடம் அவசரமாகச் சொன் னான்.

‘பெட்ரோக்குலஸ், எங்கள் நகரை அழித்துவிடலாம், ட்ரோஜன் பெண்களை அடிமைகளாக்கிவிடலாம், அவர்களைக் கப்பல்

களில் ஏற்றி உங்கள் தந்தையர் நாட்டுக்கு அனுப்பி வைக்கலாம் என்று ஒரு வேளை நீ நினைத்திருக்கலாம். எவ்வளவு அப்பாவி நீ! அவர்களது பாதுகாப்புக்காக ஹெக்டரின் குதிரைகள் போர்க்களத்தை நோக்கி விரைந்தன. போரைக் காதலிக்கும் ட்ரோஜன் வீரர்களின் தலைசிறந்த ஈட்டியெறி வீரனாகிய நான், ஹெக்டராகிய நான், அவர்களுக்கும் அவர்கள் அடிமையாகப் போகிற நாளுக்கும் மத்தியில் நிற்பேன். உன்னைப் பொருத்த வரை, இதோ இந்த இடத்திலேயே உன்னைக் கழுகுகள் சாப்பிடப் போகின்றன. பரிதாபத்துக்குரிய புழுவே! அந்த மகா அக்கிலிஸ்கூட உன்னைக் காப்பாற்றவில்லை. நீ கிளம்பி வந்தபோது உனக்கு என்னென்ன உத்தரவுகள் அவன் கொடுத் திருப்பான் என்று என்னால் கற்பனை செய்ய முடிகிறது. ஆனால் அவன் மட்டும் வராமல் தங்கிவிட்டான். ‘தேரோட்டியான பெட்ரோக்குலஸ், மனிதர்களைக் கொல்லும் ஹெக்டரின் மார்பின்மீது கிடக்கும் குறுந்தளருடையைப் பிளந்து, அதை அவனது ரத்தத்தில் தோய்த்தெடுக்கும்வரை உட்குழிந்த இந்தக் கப்பல்களின் பக்கம் நீ திரும்பி வரக்கூடாது’ என்று சொல்லியிருப் பான் என்று நினைக்கிறேன். நீயும் ஒரு முட்டாளைப் போல அதைக் கேட்டுக்கொண்டு வந்துவிட்டாய்.’

வேகமாக வாடிக்கொண்டிருந்த நீ பதில் சொன்னடாய் பெட்ரோக்குலஸ்.

‘ஹெக்டர், இன்னும் நீளமாகவும் சப்தமாகவும் பெருமை பேசிக்கொள். ஏனென்றால் இப்பொழுது விட்டால் பிறகு உன்னால் இப்படிப் பேசமுடியாது. ஜீயூஸுும் அப்போலோவும் உனக்கு இந்த வெற்றியைக் கொடுத்திருக்கிறார்கள். அவர்கள் தான் என்னை வெற்றி கொண்டார்கள். அவர்களுக்கு அது ஒரு எளிதான காரியமாக இருந்தது. எனது முதுகில் இருந்து கவச உடையை அவர்களே கழற்றிக் கொண்டார்கள். உன்னைப் போன்ற இருபது பேர் என்னை எதிர்த்திருந்தாலும், அவர்கள் எல்லாருமே எனது ஈட்டிக்கு முன் விழுந்து செத்திருப்பர். ஆமாம், இறப்பைத் தரும் விதியின் விளையாட்டுதான் நடந் தேறியுள்ளது. வேறொன்றுமில்லை. லீட்டோவின் மகன் அப்போலோ எனக்காக அதைச் செய்துள்ளார். அதன்பிறகு யுஃபோர்பஸ் என்று ஒருவன் வந்தான். என்னைக் கொல்ல வந்த மூன்றாவது ஆள் நீ. ஆனால் நான் உனக்கு இப்பொழுது வேறொன்று சொல்கிறேன் கேள். நன்றாக மனத்தில் ஏற்றிக்

கொள். நீயும் ரொம்ப நாள் உயிரோடு இருக்கப் போவதில்லை என்று நான் சத்தியம் செய்து சொல்வேன். ஏற்கெனவே நீ இறப்பின் நிழலிலும் இரக்கமற்ற விதிப்படியும்தான் நின்று கொண்டிருக்கிறாய். பீலியூஸின் மகன் இணையற்ற அக்கிலி ஸின் கையால் நீ கொலை செய்யப்படுவாய்.'

இதைச் சொன்னபோது இறப்பு எனும் முடிவு அவனைத் தழுவிக் கொண்டது. அவனது உடலை விட்டு உயிர் பிரிந்து ஹயடிஸின் வீட்டுக்குப் பறந்து சென்றது. தனது விதியையும் தனக்குப் பின்னால் விட்டுச் சென்ற இளமையையும் ஆண்மையையும் நினைத்து நொந்துகொண்டே, பெட்ரோக்குலஸ் போய்விட்டா லும், கீர்த்திமிகு ஹெக்டர் தொடர்ந்து பேசினான்:

'பெட்ரோக்குலஸ், ஏன் இவ்வளவு சீக்கிரமாக எனக்கு மரணம் வரவேண்டும் என்று முன்னறிவிப்பு செய்கிறாய்? யாருக்குத் தெரியும், அழகிய கூந்தலையுடைய தீட்டிஸின் மகனான அக்கிலிஸ்கூட எனது ஈட்டியிலிருந்து வரும் ஒரு தாக்குதலில் அங்கே எனக்கு முன்னே வரலாம் இல்லையா?'

இவ்வார்த்தைகளைச் சொல்லியவனாய், பெட்ரோக்குலஸின் மார்பில் கால் வைத்து தன் வெண்கல ஈட்டியை உருவினான் ஹெக்டர். மல்லாக்க விண்ணைப் பார்த்துக் கிடக்குமாறு காலால் உருட்டி மிதித்து விட்டுச் சென்றான். பின் தாமதமின்றி, அக்கிலிஸின் கடவுளையொத்த உதவியாளனான ஆட்டோ மிடான் இருந்த பக்கம் தனது ஈட்டியுடன் தேடிச் சென்றான். அவனைத் தாக்க மிகவும் விருப்பம் கொண்டிருந்தான் ஹெக்டர். ஆனால் அபாயம் ஏற்படாதவாறு ஆட்டோமிடானைப் பாதுகாப்பான தூரத்தில் வைத்திருந்தன அவனது நித்திய விரைவுக் குதிரைகள். அக்குதிரைகள் பீலீயூஸுக்குக் கடவுளர் கொடுத்த அற்புதமான பரிசு.

# காண்டம் - 17



# பெட்ரோக்குலஸுக்கான போராட்டம்

# பெட்ரோக்குலஸுக்கான போராட்டம்

**கதைச்சுருக்கம்**

***வரிகள் 01 – 69***

*பெட்ரோக்குலஸின் உடலைக் காப்பாற்ற மெனிலயஸ் வருகிறான். யூஃபோர்பஸைக் கொல்கிறான்.*

***வரிகள் 70 – 401***

*ட்ரோஜன் அணியினரை முன்னெடுத்துச் செல்கிறான் ஹெக்டர். ஆனால் அஜாக்ஸ் அவனைத் துரத்தி விடுகிறான். ஹெக்டரைச் சுற்றி வளைக்கிறான் க்ளாகஸ். ஹெக்டர் உடனே அவசர அவசரமாக அக்கிலிஸின் கவச உடைகளை அணிந்து கொள்கிறான். அவனுடைய குறுகிய கால வெற்றியை எண்ணி இரக்கப்படுகிறான் ஜீயூஸ். பெட்ரோக்குலஸின் உடலுக்காக ஒரு முழுச்சண்டை தொடங்குகிறது. பனிப்படலம் இறங்கு கிறது.*

***வரிகள் 401 – 542***

*பெட்ரோக்குலஸ் இறந்தது பற்றி அக்கிலிஸுக்கு எதுவும் தெரியவில்லை. ஆனால் அவனது குதிரைகள் பெட்ரோக் குலஸுக்காக அழுகின்றன. அவற்றைப் பார்த்து ஜீயூஸ் பரிதாபப்படுகிறான். அவற்றை ஹெக்டரால் பிடிக்க முடியாது என்று முன்னறிவிப்பு செய்கிறான். சண்டை தொடர் கிறது.*

**வரிகள் 543 – 655**

*பெட்ரோக்குலஸின் உடலை கிரேக்கர்களின் பக்கமாக இழுத்து வரும் மெனிலயஸை அதீனி உற்சாகப்படுத்துகிறாள். ஜீயூஸ் தனது மகா கேடயத்தை ஆட்டுகிறான். கிரேக்கர்கள் பின்வாங்கு கின்றனர். பனிப்படலத்தை நீக்கிவிடுகிறான் ஜீயூஸ்.*

**வரிகள் 656 – 761**

*அக்கிலிஸுக்கு பெட்ரோக்குலஸ் இறந்துவிட்ட கெட்ட செய்தியைச் சொல்ல ஓடிவருகிறான் ஆன்ட்டிலோக்கஸ். மெனிலயஸும் மெரியோனிஸும் பெட்ரோக்குலஸின் உடலைத் தூக்குகின்றனர். பின்வாங்குதல் தொடர்கிறது.*

# பெட்ரோக்குலஸுக்கான போராட்டம்

பெட்ரோக்குலஸை ட்ரோஜன்கள் போரில் வென்று விட்டார்கள் என்ற விஷயத்தைத் தெரிந்துகொள்ள அத்ரியூஸின் மகனாகிய போர்த்திறம் மிக்க மெனிலயஸ் தவறவில்லை. வெண்கலக் கவசம் மின்ன அவன் முன் வரிசை அணிகளினூடே முன்னேறிச் சென்று பெட்ரோக்குலஸின் உடலருகில் பாதுகாப்பாக நின்றான். முதல் ஈடாக இந்த உலகுக்குப் பெற்றுக் கொடுத்த கன்றுக்கு மேலே பாதுகாப்பாக அதன் தாய்ப்பசு நிற்பது போல, செம்பொன் நிறமான தலைமுடி கொண்ட மெனிலயஸ், தன் ஈட்டியையும் வளைவான கேடயத்தையும் கையில் ஏந்தியவனாக, எதிர்த்து வரும் எவரையும் கொல்லத் துணிந்தவனாக, பெட்ரோக்குலஸின் உடலுக்குப் பாதுகாப்பாக அருகில் நின்றான்.

ஆனால் பாந்துஸின் மகனான ஆஷ் மரத்தால் ஆக்கப் பட்டிருந்த ஈட்டி கொண்ட யுஃபோர்பஸுக்கு இணையற்ற பெட்ரோக்குலஸின் உடல் மீதான ஆர்வம் குறையவில்லை. அதனருகில் வந்த அவன் மெனிலயஸிடம் சொன்னான்:

‘ஒலிம்பஸ் மலையில் பிறந்த அத்ரியூஸின் மகனே மெனிலயஸ், வீரர்களுக்குத் தலைவனே, போய்விடு. செத்தவனை விட்டுவிடு. ரத்தம் தோய்ந்த அவனது கவச உடைகளைத் தொடாதே. போர் உக்கிரமாக நடந்து கொண்டிருந்தபோது, ட்ரோஜன் வீரர்களிலும் அவர்களது புகழ் பெற்ற ஆதரவாளர்களிலும் நான்தான் முதன் முதலாக பெட்ரோக்குலஸை ஈட்டியால் குத்தியவன். அதனால், ட்ரோஜன்களின் கண்ணெதிரே, ஒரு வீரனுக்குரிய புகழை நான்

பெற அனுமதித்துவிடு. இல்லையெனில், உன்னையும் தாக்கி உனது இன்னுயிரை எடுத்துவிடுவேன்' என்றான். செம்பொன் நிறத் தலைமுடி கொண்ட மெனிலயஸ் ஆக்ரோஷமாகப் பதில் கூறினான்: 'ஓ தந்தையே ஜீயூஸ், இவ்வளவு திமிராக இவன் பேசுவது நல்லதல்ல. சிறுத்தைப் புலி, சிங்கம், மற்றும் அடங்காத எல்லா மிருகங்களிலும் அதிக துணிச்சலான கொலை வெறி கொண்ட காட்டுப் பன்றி இவற்றின் அஞ்சா நெஞ்சத்தை யெல்லாம் மிஞ்சுவதாக இருக்கிறதே, கீர்த்தி பெற்ற ஆஷ் மரத்தால் ஆன ஈட்டிகளைக் கொண்ட பாந்தூஸின் மகன் களுடைய பெருமை! இருந்தாலும், போரில் என்னை எதிர்த்து நின்றபோது, உனது ஆற்றல்மிகு சகோதரனான ஹைபிரீனர், இளமையின் இன்பங்களை ரொம்ப நாள் அனுபவிக்க உயிர் வாழவில்லை. ஆயுதம் தரித்த கிரேக்க வீரர்களிலேயே மிகுந்த ஆணவம் கொண்ட வீரன் நான்தான் என்று அவன் கூறினான். ஆனால் அவன் தன் அன்பு மனைவியையும் ஆதரவான பெற்றோரையும் மகிழ்விக்க தன் சொந்தக் கால்களாலேயே ஊருக்குத் திரும்பிச் சென்று பார்க்க முடிந்ததாக எனக்கு நினைவில்லை. நீ என்னை எதிர்க்கத் துணிந்தால், அவனைச் செய்ததுபோல, உன்னையும் நறுக்கிவிடுவேன் ஜாக்கிரதை. திரும்பிச் சென்று உன் கீழ்த்தர மக்கள் கும்பலோடு சேர்ந்துகொள். இங்கே நின்று கொண்டு எனக்கு எதிராக எதுவும் செய்ய நினைக்காதே. இல்லையெனில் உனக்குத்தான் துக்கம் வந்து சேரும். முட்டாள்தான் ஒரு நிகழ்ச்சி நடந்து முடிந்த பிறகு அறிவு பெறுவான்.' அப்படி அவன் பேசியது யுஃபோர்பஸுக்குத் திருப்தியளிக்கவில்லை. யுஃபோர்பஸ் பதில் சொன்னான்:

'ஒலிம்பஸ் மலையில் பிறந்த மெனிலயஸ், எனது சகோதரனுக்கு நீ என்ன செய்தாயோ அதற்காக, இன்று, இப்பொழுது அதற்கான விலையைக் கொடுக்கப் போகிறாய். நீ அவனைக் கொன்று பெருமையடித்துக் கொண்டாய். புதிய மணமகளுக்காக அமைக்கப் பட்டிருந்த அறையில் அவனுடைய மனைவியை விதவை யாக்கினாய். அவனுடைய பெற்றோருக்கு இதற்குமுன் அடைந் திராத துன்பத்தையும் கண்ணீரையும் கொடுத்தாய். இருந்தாலும், உன்னுடைய தலையை வெட்டி எடுத்துக் கொண்டு போய், உனது கவச உடையுடன், என் தந்தை பாந்தூஸ் மற்றும் தேவதை போன்ற அவரது மனைவி ஃப்ரோன்ட்டிஸ் ஆகியோரின் கைகளின் நான் கொடுப்பேனேயானால், அவர்களது கண்ணீரை நான் துடைக்க முடியும். வெற்றியோ தோல்வியோ, நம் வேலை

வெகு நேரம் எடுக்காது' என்று பதில் சொல்லியவனாய் மெனில யஸின் வட்ட வடிவக் கேடயத்தில் தாக்கினான் யுஃபோர்பஸ்.

ஆனால் அவனது ஈட்டி கேடயத்தினுள் நுழைய முடியவில்லை. தடித்த கேடயத்தில் பட்ட அதன் முனை பின்னோக்கி வளைந்து போனது. அதன்பின் அத்ரியூஸின் மகனான மெனிலயஸ் தந்தை ஜீயூஸிடம் பிரார்த்தித்துக் கொண்டே தன் ஈட்டியால் அவனைத் தாக்கினான். யுஃபோர்பஸ் பின்வாங்கினான். ஆனால் மெனில யஸ் அவனது தொண்டையின் அடிப்பகுதியில் தன் முழு உடல் பருமனும் இறங்கும் விதத்தில், ஈட்டியை இறுக்கமாகப் பிடித்துக் கொண்டு குத்தினான். ஈட்டியின் முனை அவனது மிருதுவான கழுத்தின் உள்ளே முழுமையாக நுழைந்து போனது. தடாலென அவன் தரையில் விழுந்தான். அவனது கவச உடை கடகடவென அவனைச் சுற்றி ஒலித்தது.

(கலை மற்றும் அழகுக்கான தேவதைகளான) க்ரேஸ்களின் கூந்தலைப்போல இருந்த அவனுடைய தலைமுடி ரத்தத்தில் முற்றிலுமாக நனைந்து போனது. அந்தத் தலைமுடியைத்தான் அவன் தங்க, வெள்ளிச் சுருள்களால் கட்டி அழகு பார்ப்பான். தோட்டக்காரன் ஒருவன் ஒலிவ மரத்தின் இளங் குருத்து ஒன்றை ஓரிடத்தில் நட்டு வைத்து, அதற்கு வேண்டிய நீரூற்றி வளர்ப் பான். அது அருமையாகவும் ஆரோக்கியமாகவும் வளர்ந்து வரும். தென்றல் வீசும் போதெல்லாம் தலையசைத்து அதன் வெள்ளைப் பூக்கள் மகிழ்ச்சியாக ஆடும். ஆனால் திடீரென்று ஒரு நாள் வீசும் கடுமையான காற்றில் அதன் குழியிலிருந்து அது வேரோடு பிடுங்கப்பட்டுத் தரைமட்டமாகக் கிடக்கும். மெனிலயஸால் கொல்லப்பட்டு, கவச உடை பிடுங்கப்பட்டுக் கிடந்த பாந்தூஸின் மகனான ஆஷ் மர ஈட்டி கொண்ட யுஃபோர் பஸும் அப்படித்தான் இருந்தான்.

மேய்ந்து கொண்டிருந்த மாட்டு மந்தையில் அருமையான கன்றைக் குறிவைத்த மலைச்சிங்கம் ஒன்று தன் பலத்தின்மீது நம்பிக்கை கொண்டு பாய்ந்து அதன் கழுத்தைத் தன் பற்களால் கடித்துக் குதறி, அதன் சதையைக் கீறி, அதன் ரத்தத்தை உறிஞ்சி, அதன் குடல்களைச் சரித்து விழுங்குகிறது. தொலைவில் இருந்து அதைப் பார்த்துக் கொண்டிருக்கின்றன நாய்கள். மேய்ப்பர்களும் சிங்கத்தின் அருகில் செல்லும் துணிச்சல் இன்றி, கவனமாக, பாதுகாப்பான தூரத்திலேயே நிற்கின்றனர். அருகில் செல்லும் எண்ணம் அவர்களுக்கில்லை. அதை நினைத்தாலே அவர்

களுக்கு நடுக்கமாக உள்ளது. அதைப்போல, கீர்த்திமிகு மெனிலயஸின் அருகில் செல்ல ஒரு ட்ரோஜன் வீரன்கூடத் துணியவில்லை. ஃபீபஸ் அப்போலோவுக்கு மட்டும் விருப்பமிருந்திருந்தால் யுஃபோர்பஸின் கவச உடைகளை எளிதாக மெனிலயஸ் கழற்றியிருப்பான். மெனிலயஸைத் தாக்க, போர்க்கடவுளான ஏரிஸுக்கு இணையான ஹெக்டரை அங்கு அனுப்பாமல் இருந்திருந்தாலும் அவன் விருப்பம் நிறைவேறி இருக்கும்.

சிசோனியர்களின் தலைவனான மென்ட்டிஸ் என்பவனின் உருவத்தில் அப்போலோ ஹெக்டரிடம் சென்று அவசரமாகச் சொன்னான்:

'ஹெக்டர், அடைய முடியாததன் பின்னால் இப்பொழுது நீ அலைந்து கொண்டிருக்கிறாய். போர்த்திறம் மிக்க அக்கிலிஸின் குதிரைகளைப் பிடிக்க அலைவதைத்தான் சொல்கிறேன். அவைகளை அடக்குவதும் ஓட்டிச் செல்வதும், கடினமான காரியமாகும். அது ஒரு மானிடனால் முடியாத காரியம். ஒரு தேவதையைத் தாயாகக் கொண்ட அக்கிலிஸால் மட்டுமே அது முடியும். இதற்கிடையில், போர்த்திறம் மிக்க மெனிலயஸ் பெட்ரோக்குலஸின் உடல் மீது நின்று கொண்டிருக்கிறான். ட்ராய் நகரின் மிகச்சிறந்த வீரனான பாந்தூஸின் மகன் யுஃபோர்பஸை வேறு கொன்று விட்டான். இனி சண்டை செய்யவே முடியாது'. இவ்வார்த்தைகளைச் சொல்லிவிட்டு போரின் மையப் பகுதிக்குத் திரும்பிச் சென்றான் கடவுள்.

ஹெக்டரின் இதயம் துக்கத்தால் பிழியப்பட்டது. அணிவகுப்பினூடே இப்பொழுது அவன் கூர்ந்து நோக்கினான். கவர்ச்சியான யுஃபோர்பஸின் கவச உடைகளை மெனிலயஸ் கழற்றிக் கொண்டிருப்பதையும், குத்திய காயத்திலிருந்து ரத்தம் பொங்கிவர யுஃபோர்பஸ் கீழே கிடப்பதையும் பார்த்தான். வெண்கலக் கவச உடை மினுமினுக்க, உச்சஸ்தாயியில் கத்திக் கொண்டே முன் வரிசை அணிவகுப்பினூடே முன்னேறிச் சென்றான். கருமான் கடவுளான ஹெஃபைஸ்டஸின் உலையில் இருந்து மேலே கிளம்பிச் செல்லும் அணைக்க முடியாத தீச்சுவாலைகளைப் போலத் தோன்றினான் அவன். தன் போர் முழக்கத்தை மெனிலயஸும் மறந்துவிடவில்லை. சங்கடப்பட்டவனாக, அந்த சூழ்நிலை பற்றிச் சிந்தித்தான்:

'நான் என்ன செய்வது? எனக்கு இந்தப் போரில் இழைக்கப்பட்ட துரோகங்களுக்குப் பழிவாங்குவதற்காகப் போரில் ஈடுபட்டு,

இறந்த பெட்ரோக்குலஸின் உடலையும் இந்த அருமையான கவச உடைகளையும் விட்டுவிட்டு நான் சென்றால், என்னைப் பார்க்கின்ற எந்த கிரேக்கனுக்கும் நியாயமான கோபம் வரும். ஆனால், மானத்தைக் காப்பாற்றிக் கொள்வதற்காக, ஹெக்டரோடும் ட்ரோஜன்களோடும் தனி ஆளாகச் சண்டை செய்தால், நான் விரைவிலேயே தனிமைப்பட்டுப் போவேன். மின்னும் தலைக்கவசம் கொண்ட ஹெக்டர் அவனோடு எல்லா ட்ரோஜன் வீரர்களையும் வேறு கூட்டி வருகிறான்.

ஆனால் நான் ஏன் இப்படி என்னிடமே பேசிக் கொண்டிருக்க வேண்டும்? கடவுளர்களின் ஆதரவு இருக்கும் ஒருவனோடு கடவுளர்களின் விருப்பமில்லாமல் இன்னொருவன் சண்டையிட முடிவு செய்தால் அவனுடைய முடிவு அழிவாகத்தான் இருக்கும். அப்படியானால், ஹெக்டருக்கு வழிவிட்டு விலகி இருப்பதனால் கிரேக்கர்கள் யாரும் என்னைக் குறை சொல்லப் போவதில்லை. ஏனெனில் கடவுளர்களை அவன் பக்கம் வைத்துக் கொண்டு அவன் சண்டையிட்டுக் கொண்டிருக்கிறான். கடவுளர்களுக்கு விருப்பமில்லாவிட்டாலும் போர்முழக்கத் தலைவனான அஜாக்ஸ் மட்டும் எங்கிருக்கிறான் என்று தெரிந்தால், நானும் அவனோடு சேர்ந்து பழைய மன உறுதியோடு போரிடலாம். பீலியூஸின் மகனான அக்கிலிஸிடம் பெட்ரோக்குலஸின் உடலைக் காப்பாற்றிக் கொடுக்கலாம். இருக்கின்ற மோசமான சூழ் நிலையை அது ஓரளவுக்கு சரிப்படுத்தும்.'

இவ்விதமான எண்ணங்கள் அவன் மனத்தில் ஓடிக்கொண் டிருந்தபோது, ஹெக்டரின் தலைமையில் ட்ரோஜன் அணியினர் வந்து கூட ஆரம்பித்தனர். பெட்ரோக்குலஸின் உடலை விட்டு விட்டுப் பின்வாங்கினான் மெனிலயஸ். ஆனால் மந்தையி லிருந்து மேய்ப்பர்களின் ஈட்டிகளாலும் நாய்களின் சப்தங்களா லும் விரட்டப்படும் தாடியுள்ள சிங்கத்தின் துணிச்சலான இதயம் ஜில்லிட, தன் விருப்பத்துக்கு மாறாக பண்ணையை விட்டு அது வெளியே போவது போல, பின்னால் திரும்பிப் பார்த்துக் கொண்டே பெட்ரோக்குலஸின் உடலை விட்டுச் சென்றான் மெனிலயஸ். ஆனால் தனது படைப்பிரிவினர் இருந்த இடத் துக்கு வந்து சேர்ந்ததும் எதிர்க்கும் தோரணையில் திரும்பி நின்றான். டிலமானின் மகன் மகா அஜாக்ஸ் எங்காவது தென் படுகிறானா என்று பார்த்தான். இடது பக்கமாக, வீரர்களைச் சண்டை செய்யும்படித் தூண்டிக் கொண்டு அவன் இருந்ததைப் பார்த்தான். ஏனெனில் அவ்வீரர்களின் இதயத்தில் ஃபீபஸ்

அப்போலோ பெரிய பதற்றத்தை ஏற்படுத்தியிருந்தான். உடனே அவனிடம் சென்ற மெனிலயஸ் அவசரமாகச் சொன்னான்: 'அஜாக்ஸ், இங்கேவா நண்பனே, பெட்ரோக்குலஸ் இறந்துவிட்டான். சீக்கிரம்! அவன் உடலையாவது அக்கிலிஸுக்காகக் காப்பாற்றுவோம். கவச உடைகளைக் கழற்றி நிர்வாணப்படுத்தி விட்டார்கள். மின்னும் தலைக்கவசம் கொண்ட ஹெக்டர் அவற்றை எடுத்துக் கொண்டுவிட்டான்.'

அவசரமாகச் சொன்ன வார்த்தைகள் நேரடியாகப் போர்த்திறம் மிக்க அஜாக்ஸின் இதயத்துள் சென்றன. உடனே அவனும் செம்பொன் நிறத் தலைமுடி கொண்ட மெனிலயஸும் முன் வரிசை அணியின் ஊடாகப் புறப்பட்டுச் சென்றனர்.

பெட்ரோக்குலஸின் உடலைப் பெருமுயற்சி செய்து இழுத்துப் போக முயற்சித்தான் ஹெக்டர். பெட்ரோக்குலஸின் புகழ்பெற்ற கவசத்தை அவன் கழற்றியிருந்தான். தன் கூர் வாளால் அவன் தலையை வெட்டவும் ஹெக்டர் விரும்பினான். முண்டத்தை இழுத்துக் கொண்டு போய் ட்ராய் நகர நாய்களுக்குப் போடவும் ஆசைப்பட்டான். ஆனால் கோபுரம் போன்ற தன் கேடயத்துடன் அஜாக்ஸ் வந்தபோது, ஹெக்டர் பின்வாங்கித் தன் படையினரோடு போய்ச் சேர்ந்து கொள்ளத் தன் தேரில் ஏறிக் கொண்டான். இலியத்துக்கு எடுத்துச் செல்லும்படிச் சொல்லி அந்த அழகிய கவசத்தைச் சில ட்ரோஜன் வீரர்களிடம் கொடுத்தான். இலியத்தில் அவன் புகழை அது பேசும்.

இதற்கிடையில் பெட்ரோக்குலஸின் உடலை தன் அகன்ற கேடயத்தால் மூடினான் அஜாக்ஸ். தன் குட்டிகளின் அருகில் தாய்ச்சிங்கம் பாதுகாப்பு கொடுத்துக் கொண்டிருக்கும். காட்டுவழியில் அவைகளை அழைத்துச் செல்லும். அப்போது வேட்டைக்காரர்கள் எதிர்ப்படுவார்கள். எதிர்ப்பு தெரிவிக்கும் வகையில் புருவங்களை இணைத்து அந்தச் சிங்கம் முறைக்கும். அதைப்போல எதிரிகளை அண்டவிடாமல் அருகிலேயே நின்றான் அஜாக்ஸ். அவனுக்குப் பின்னால் அத்ரியூஸின் மகனான போர்த்திறம் மிக்க மெனிலயஸ் நின்றான். அவன் உள்ளத்தில் வேதனை அதிகரித்தது.

லிசியப் படைகளின் தலைவனும் ஹிப்போலோக்கஸின் மகனுமான க்ளாகஸ் ஹெக்டரை முறைத்தான். பழிகூறும் விதமாகச் சொன்னான்:

'ஹெக்டர், பார்ப்பதற்கு மட்டும்தான் நீ அழகாக இருக்கிறாய். ஆனால் போர்க்களத்திலோ நீ ஒன்றுக்கும் உதவாதவன். உனது வீரஞ்செறிந்த புகழெல்லாம் உன் கோழைத் தனத்தை மறைக்கத் தான் பயன்படுகிறது. ட்ரோஜன் வாசிகளைத் தவிர உதவி செய்வதற்கு யாருமின்றி, உனது நகரத்தையும் அதன் மக்களை யும் எப்படிக் காப்பாற்றப் போகிறாய் என்று உன்னை நீயே கேட்டுக் கொள். ஏனெனில் லிசியர்கள் யாரும் கிரேக்கர்களுக்கு எதிராக, இலியம் நகருக்காக, சண்டை போட வரப்போவ தில்லை. இவ்வளவு காலமாக, எதிரியோடு இரவு பகலென்று பாராமல் போரிட்டதற்காக அவர்களுக்கு ஒன்றும் கிடைக்க வில்லை. சுரணையற்றுப் போய் ஆயுதம் தரித்த உன் போர்த் தோழனும் விருந்தாளியுமான சர்ப்பிடானை அழுகும் பிணம் போல கிரேக்கர்களின் கையில் விட்டுவிட்டு நீ வந்துவிட்டாய். சர்ப்பிடானுக்கே அந்தக் கதி என்றால், அவனைவிடத் தகுதி குறைந்த வீரர்களுக்கு அபாயம் நேர்ந்தால் அவர்களை நீ வந்து காப்பாற்றுவாய் என்று எப்படி நம்புவார்கள்? அவன் உயிரோடு இருந்தபோது நீயும் உனது மக்களும் அவனுக்கு நிறைய கடன் பட்டிருந்தீர்கள். இருந்தும் நாய்களிடமிருந்து அவனைக் காப் பாற்ற உன்னால் முடியவில்லை.

லிசியர்கள் நான் சொல்வதைக் கொஞ்சமாவது கேட்பார்களே யானால், நாங்கள் ஊர் திரும்புகிறோம். அது ட்ராய் நகரின் முடிவாக இருக்கும். ட்ரோஜன்களுக்கு உண்மையிலேயே வீரம் இருக்குமானால், எதிரிகளை எதிர்த்து முழுமனதோடு முழுமை யாகப் போரிடும்போது உண்மையான வீரனின் உள்ளத்தில் எழும் அச்சம் அறியாத வீரம் இருக்குமானால், நாங்கள் விரைவிலேயே பெட்ரோக்குலஸை இழுத்துக் கொண்டு இலியம் செல்வோம். அந்த வீரனின் உடலைப் போர்க்களத்திலிருந்து அப்புறப்படுத்தி, ப்ரியமின் மகா நகருக்குள் கொண்டுபோக முடியுமானால், கிரேக்கர்கள் உடனே சர்ப்பிடானின் அழகிய கவசத்தைத் திருப்பிக் கொடுத்துவிடுவார்கள். எங்களால் சர்ப்பிடானின் உடலை மறுபடியும் இலியம் நகருக்குக் கொண்டுவர முடியும். பெட்ரோக்குலஸ் உதவியாளனாக இருந்த அக்கிலிஸ் சுத்த வீரன். கிரேக்கப் படைப்பிரிவில் தலைசிறந்த போர்வீரன். அவனைச் சுற்றி அவனது தலைமையின் கீழ் இருப்பவர்களும் தலைசிறந்த போர்வீரர்கள்.

எதிரியின் போர்முழக்கம் ஒலித்துக் கொண்டிருந்தபோது, வீரம் செறிந்த மகா அஜாக்ஸைச் சந்திக்க உன்னால் வரமுடியவில்லை.

அவனது கண்களை நேருக்குநேர் சந்தித்து அவனோடு போர் செய்ய உன்னால் முடியவில்லை. ஏனென்றால் அவன் உன்னை விடச் சிறந்த வீரன்.'

அவ்வசைமொழி கேட்ட மின்னும் தலைக்கவசம் கொண்ட ஹெக்டர் அவனை முறைத்துப் பார்த்துவிட்டுச் சொன்னான்: 'க்ளாகஸ், இவ்வளவு திமிராகப் பேசுவதற்கு என்ன காரணம்? என்னால் நம்பவே முடியவில்லை. செழிப்பான லிசியாவில் இருந்த தலைசிறந்த அறிவாளி நீ என்றல்லவா நினைத்திருந் தேன்! அச்சமேற்படுத்தும் அஜாக்ஸோடு சண்டையிட என்னால் முடியாது என்று நீ சொன்னதன் மூலம், எதையும் சரியாகத்தான் கணிப்பாய் என்று உன் மீது நான் வைத்திருந்த நம்பிக்கையை யெல்லாம் நீ தகர்த்துவிட்டாய். சண்டையிடுவதும், தேர்கள் எழுப்பும் ஒலிகளும் என்னைப் பயமுறுத்தாது, நம்பு. புயல் மேகங்களைச் செலுத்தும் ஜீயூஸின் விருப்பம்தான் எப்போதுமே ஜெயிக்கும் தெரிந்துகொள். ஒரு துணிச்சலான, வீரனைப் பயமுறுத்திப் போர்க்களத்திலிருந்து அவரால் ஓட வைக்கவும் முடியும். இன்னொரு சமயத்தில் அவனையே நன்றாகப் போர்செய்யத் தூண்டவும் முடியும்.

வா, இங்கே வா என் நண்பனே, வந்து என்னருகில் நின்று என்னால் என்ன செய்ய முடியும் என்பதைப் பார். நீ சொன்ன தெல்லாம் சரியா என்பதைப் பார். நாள் முழுவதும் நான் ஒரு கோழை என்பதைத்தான் நிரூபித்துக் கொண்டிருக்கிறேனா என்று பார். பெட்ரோக்குலஸின் உடலுக்காக உறுதியுடன் சண்டை யிட்டுக் கொண்டிருக்கும் கிரேக்கர்களில் சிலரையாவது என்னால் நிறுத்த முடியுமா என்று பார்.' இப்படிச் சொல்லிவிட்டு உரத்த குரலில் ட்ரோஜன்களை அழைத்தான் அவன்.

'ட்ரோஜன்களே, லிசியர்களே, டார்டானியர்களே, நேருக்குநேர் சண்டையிடுவதில் விருப்பம் கொண்டவர்களே, வீரர்களாக இருங்கள் தோழர்களே! உங்களுக்குள் இருக்கும் அந்தப் போரிடும் உணர்வை அழையுங்கள்! இணையற்ற அக்கிலிஸின் கவசத்தை நான் அணிந்துகொள்ளப் போகிறேன். வலிமை வாய்ந்த பெட்ரோக்குலஸின் உடலில் இருந்து நான் கழற்றிய அருமையான கவசமது.' மின்னும் தலைக்கவசம் கொண்ட ஹெக்டர் இப்படிச் சொல்லிவிட்டு, பீலியூஸின் மகனான அக்கிலிஸின் கீர்த்திமிகு கவசத்தை எடுத்துக் கொண்டு இலியம் நகருக்குச் சென்று கொண்டிருந்த வீரர்களைப் பிடிப்பதற்காக

ஓடினான். அவன் விரைவாக ஓடியதாலும், வீரர்கள் வெகு தூரம் சென்றிருக்கவில்லையாதலாலும், விரைவிலேயே அவர்களைப் பிடித்துவிட்டான் அவன்.

எல்லா விதமான துயரங்களையும் தரும் போர்க்களத்திலிருந்து விலகி இருந்த ஹெக்டர், தன்னுடைய ஆடைகளைக் களைந்து விட்டு, அக்கிலிஸின் தந்தை பீலியூஸுக்கு விண்ணகத்தின் கடவுளர்கள் கொடுத்த அழிக்க முடியாத கவசத்தை அணிந்து கொண்டான். தனது கவசத்தை இலியத்துக்குக் கொண்டு போகும்படி வீரர்களுக்குச் சொன்னான். பீலியூஸுக்கு வயதான பிறகு அதை அவன் தன் மகன் அக்கிலிஸுக்குக் கொடுத்தான். ஆனால் தந்தையின் கவசத்தில் மகன் முதுமையடையவில்லை.

கடவுளையொத்த அக்கிலிஸின் கவசத்தை ஹெக்டர் அணி வதைப் பார்த்த மேகங்களைச் செலுத்தும் ஜீயூஸ் தலையை இடப் பக்கமாகவும் வலப் பக்கமாகவும் ஆட்டித் தனக்குள் சொல்லிக் கொண்டான்:

'துக்கப்படப் போகிற மனிதனே! இறப்புக்கு எவ்வளவு நெருக்கத்தில் நீ இருக்கிறாய் என்று உனக்குத் தெரியவில்லை! போரில் வல்ல வலிமை வாய்ந்த வீரனின் அழிக்க முடியாத கவசத்தைப் போட்டுக் கொள்கிறாய். அவனுக்கு முன்னால் மற்ற அனைவரும் நடுநடுங்குவார்கள். அவனது தோழனை, வீரமான, மென்மையான பெட்ரோக்குலஸைக் கொன்றது நீதான். முறையற்ற வகையில் அவன் தலையிலிருந்தும் தோளிலிருந் தும் கவசத்தைக் கழற்றியதும் நீதான். இருக்கட்டும். இப்போதைக்கு உன் கை ஓங்கியிருக்குமாறு நான் செய்வேன். ஆனால் இதற்கான விலையை நீ கொடுத்தாக வேண்டும். போரிலிருந்து உன்னால் வீடு திரும்ப முடியாது. உனது கைகளில் இருந்து கீர்த்தி பெற்ற அந்த கவச உடையை உனது மனைவி ஆன்ட்ரோமெக்கி பெற்றுக் கொள்ள மாட்டாள்.'

இவ்விதம் க்ரோனஸின் மகன் பேசினான். கருமையான தனது புருவங்களை ஆட்டித் தன் பேச்சைத் தானே ஆமோதித்து உறுதிப்படுத்திக்கொண்டான்.

ஹெக்டரின் உடலுக்கு மிகவும் பொருத்தமாக இருந்தது அந்தக் கவசம். பயங்கரமான போர்க் கடவுளின் கொலை வெறியும் வீரமும் மறுபடியும் அவனுக்குள் புகுந்தன. அவனது உடல் உறுப்புகளை ஆற்றலும் புத்துணர்ச்சியும் நிறைத்தன. குத்தி

ஊடுருவும் போர் முழக்கத்தைச் செய்த வண்ணம் தன் புகழ்பெற்ற ஆதரவுப்படையினரைத் தேடிச் சென்ற அவன் வீரம் செறிந்த அக்கிலிஸின் கவசத்தின் ஒளி வீச அவர்கள் முன்னால் போய் நின்றான். அவர்களது வீர உணர்ச்சியைத் தூண்டுவதற்காக ஒவ்வொருவரிடமும் தனித்தனியாகப் பேசினான். மேஸ்திலீஸி, க்ளாகஸி. மிடானி, தெர்சிலோக்கஸி. அஸ்ட்ரோப்பியஸ், டெய்சீனர், ஹிப்போதூஸ் ஃபோர்சிஸ், க்ரோமிஸ்டம், முன்னறி விப்பாளனாகிய இனாமஸி ஆகியோரிடம் அவசரமாகப் பேசி அவர்களைத் தூண்டினான்.

'அருகருகே வசிக்கும் எண்ணற்ற ஆதரவுப் படையினரே கேளுங் கள். உங்கள் தந்தை நகரங்களிலிருந்து உங்களை அழைத்தேன். ஆனால் எண்ணிக்கை கூடவேண்டுமென்று இல்லை; அதை நான் விரும்பியதுமில்லை, எனக்கது தேவையுமில்லை. போரை நேசிக்கும் கிரேக்கர்களை எதிர்த்துச் சண்டையிட்டு ட்ராய் நகரத்துப் பெண்களையும் குழந்தைகளையும் காக்கும் உண்மையான வீரம் செறிந்தவர்களையே நான் விரும்பினேன். உங்களுடைய வீரம் எப்போதும் குறையாதவாறு ஒரே நிலையில் இருக்க வேண்டும் என்பதற்காக. உங்களுக்கு வேண்டிய பரிசுப் பொருள்களையும் தேவையானவற்றையும் தாராளமாகக் கொடுக்க வேண்டும் என்று என் மக்களுக்குக் கட்டளையிட்டு அவர்களை வளம் குன்றச் செய்கிறேன்.

'எனவே வாழ்வோ சாவோ! நீங்கள் ஒவ்வொருவரும் நேராகத் திரும்பி எதிரியை நோக்கிச் செல்லுங்கள். போரின் அந்தரங்கம் என்பது அதுதான். அஜாக்ஸைப் பின்வாங்கச் செய்து, பிணம்தான் என்றாலும் ட்ரோஜன் அணியினர் பக்கம் பெட்ரோக்குலஸை யார் கொண்டு வருவாரோ அவருக்கு இந்தப் போரில் கிடைக்கும் பொருள்களில் சரிபாதியை நான் தருவேன். மீதிப்பாதியை எனக்காக வைத்துக் கொள்வேன். எனவே என்னோடு இணை யாகப் புகழை அவர் தேடிக்கொள்ளலாம்.'

அவன் அப்படிச் சொன்னதும் வீரர்கள் அனைவரும் தங்கள் ஈட்டிகளை உயர்த்தி ஆமோதிப்பைத் தெரிவித்து விட்டு, டிலமானின் மகனான அஜாக்ஸிடமிருந்து அந்த உடலைக் கைப்பற்றும் மேலான நம்பிக்கையில் கிரேக்கர்களை நோக்கி முழு ஆற்றலுடன் தாக்கினர். அப்பாவிகள். பெட்ரோக்குலஸின் உடலெடுக்கச் செல்லும் அவர்கள் அனேகம் பேருடைய உயிரை அஜாக்ஸ் எடுக்கப் போகிறான்.

அதன்பின், போர் முழக்கத் தலைவனான மெனிலயஸிடம் அஜாக்ஸ் சொன்னான். 'ஒலிம்பஸ் மலையில் பிறந்த எனது பழைய நண்பனே மெனிலயஸ், இந்த சண்டையிலிருந்து பாதுகாப்பாகத் திரும்ப மாட்டோம் என்று நினைக்கிறேன் நான். ட்ரோஜன் நாய்களுக்கும் பறவைகளுக்கும் பெட்ரோக்குலஸின் உடல் விருந்தாகிப் போகும் என்று மட்டும் நான் அஞ்சவில்லை, நாம் அனைவரும் சந்திக்க இருக்கும் அபாயமான சூழ்நிலையை எண்ணியும்தான் நான் அஞ்சுகிறேன். ஹெக்டர் என்னும் புயல் மேகம் எல்லாத் திசைகளிலும் நம்மைச் சூழ்ந்திருக்கிறது. நம்முடைய முகத்தில் வெறித்துப் பார்த்துக் கொண்டிருக்கிறது மரணம். சீக்கிரம்! கிரேக்கத் தளபதிகளையெல்லாம் கூப்பிடு! யாராவது கேட்கலாம்!'

அவன் அப்படிச் சொன்னதும் போர் முழக்கத் தலைவனாகிய மெனிலயஸ் கிரேக்கப் படை முழுவதும் கேட்கும்படியாக பெருங் குரலெடுத்துச் சொன்னான்.

'நண்பர்களே, ஆட்சியாளர்களே, கிரேக்கத் தலைவர்களே! அகமெம்னன் மற்றும் மெனிலயஸின் அருகில் பொதுப் பணத் தில் மதுவைக் குடிப்பவர்களே, உத்தரவிடுவதில் பங் கெடுத்துக் கொள்பவர்களே, ஜீயூஸிடமிருந்து உங்கள் கண்ணியத்தையும் புகழையும் பெறுபவர்களே, தளபதிகள் ஒவ்வொருவராகப் பொறுக்கி எடுத்துச் சொல்வது என்னால் முடியாதது. ஏனெனில் எல்லாப் பக்கத்திலும் போர் கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருக்கிறது. பெயர் குறிப்பி டாமல் இங்கே குழுமியுள்ள உங்கள் அனைவரையும்தான் சொல்கிறேன். பெட்ரோக்குலஸோடு இலியத்தில் நாய்களை விளையாட நாம் விட்டோமெனில் அது நமக்கு எவ்வளவு பெரிய அவமானம் என்று நினைத்துப் பாருங்கள்!' என்று அவன் பேசியதை ஒரு வார்த்தைகூட விடாமல் ஆய்லியஸின் மகனான விரைவு அஜாஸ் கேட்டான். அந்தக் குழப்பத்துக்கு மத்தியில் மெனிலயசிடம் முதலில் ஓடிவந்தவன் அவன்தான். அவனைத் தொடர்ந்து இடொமீனியஸும் கொலைவெறி கொண்ட போர்க்கடவுள் ஏரிஸுக்கு இணையான அவனது உதவியாளன் மெரியோனிஸும் வந்தனர். அவர்களைத் தொடர்ந்து கிரேக்க அணியினைப் பலப்படுத்த வந்தவர்கள் அனைவரும் வந்தனர். அவர்கள் எத்தனை பேர் பெயர்கள் எல்லாம் என்ன என்று யார்தான் சொல்ல முடியும்?

ட்ரோஜன்கள் கூட்டமாகச் சென்றனர். ஹெக்டர் அவர்களுக்குத் தலைமை தாங்கிச் சென்றான். மழைநீரில் நிறையும் ஆற்றின் நீரோட்டத்தை எதிர்த்து கர்ஜிக்கும் பேரலைபோல, கடலின் அலைகள் பின்வாங்கிச் செல்லும்போது நிலக்கூம்பின் இரண்டு பக்கமும் எழும் இடிமுழக்க ஓசை போல ட்ரோஜன்கள் முன் னேறிச் சென்றனர். ஆனால் ஒன்றான மன உறுதியுடன் அவர்கள் கிரேக்கர்களை எதிர்த்தனர். தங்களது வெண்கலக் கேடயங்களை, பெட்ரோக்குலஸின் உடல்மீது ஒரு வேலியைப் போல அமைத்துப் பிடித்திருந்தனர்.

அவர்களது மின்னும் தலைக் கவசங்களைச் சுற்றி ஒரு பனிப் படலம் இறங்குமாறு செய்தான் க்ரோனஸின் மகனான ஜீயூஸ். பெட்ரோக்குலஸ் உயிரோடு இருந்தபோதும் சரி, அவன் அக்கிலிஸின் உதவியாளனாகப் பணி புரிந்த காலத்திலும் சரி, அவனோடு ஜீயூஸுக்குப் பிணக்கு ஏதும் இருக்கவில்லை. ட்ராய் நகரத்து எதிரி நாய்களுக்கு உணவாக, அழுகிய பிணமாக பெட்ரோக்குலஸ் போவதை அவன் வெறுத்தான். எனவே இப்பொழுது பெட்ரோக்குலஸின் ஆயுதம் தரித்த வீரத்தோழர் களை பெட்ரோக்குலஸுக்கு ஆதரவாகப் போர் புரியும்படித் தூண்டினான்.

ஆரம்பத்தில் கரிய விழிகள் கொண்ட கிரேக்கர்களைத் தூக்கி எறிந்தனர் ட்ரோஜன்கள். கிரேக்கர்களும் பெட்ரோக்குலஸின் உடலை விட்டுவிட்டு ட்ரோஜன்களுக்கு வழிவிட்டனர். அப்படியிருந்தும் கர்வம் கொண்ட ட்ரோஜன்களால் எவ்வளவு தான் முயன்றபோதும் தங்கள் ஈட்டிகளைக் கொண்டு எந்த கிரேக்கனையும் கொல்ல முடியவில்லை. ஆனால் பெட்ரோக் குலஸின் உடலை இழுக்கத் தொடங்கினார்கள் அவர்கள். எனினும், பெட்ரோக்குலஸின் உடலிலிருந்து வெகு நேரத் துக்குப் பிரிந்திருக்கப் போவதில்லை கிரேக்கர்கள். விரைவி லேயே அவர்கள் அஜாக்ஸால் அணிதிரட்டப்பட்டனர். இணை யற்ற அக்கிலிஸுக்கு அடுத்த படியாக, தோற்றத்திலும் போர் செய்யும் திறத்திலும் அவன்தான் எல்லா கிரேக்கர்களிலும் தலைசிறந்தவனாக இருந்தான். முன் வரிசை அணியினூடாகச் சென்று அவன் தாக்குதல் நடத்தினான்.

மலைப்பகுதிகளில் வசிக்கும் ஆக்ரோஷமான காட்டுப் பன்றி மிக எளிதாக வேட்டை நாய்களையும் துடிப்புள்ள இளம் வேட்டைக் காரர்களையும் விரட்டுவது போல, பள்ளத்தாக்குகளில் தப்பிக்க

முடியாத தூரத்தில் அவர்களை நோக்கித் திரும்புவதுபோல, கீர்த்திமிகு அஜாக்ஸ் தாக்கினான். வெல்லப் போகிறோம், நிச்சயம் இந்த உடலை நகருக்குள் இழுத்துச் செல்லப் போகிறோம் என்ற நினைப்பில் இருந்த பெட்ரோக்குலஸைச் சுற்றியிருந்த ட்ரோஜன்களின் அணிவகுப்பைச் சிதறடித்தான்.

பெட்ரோக்குலஸின் கணுக்கால் தசை நார்களில் தன் வாளின் வாரைக் கட்டி வைத்திருந்தான் பெலாஸ்ஜிய லீத்தஸின் மகனான ஹிப்போதூஸ். அதுமட்டுமின்றி, சண்டையினூடே அவனைத் தன் கால்களால் கஷ்டப்பட்டு இழுத்துக் கொண்டிருந்தான். ஹெக்டருக்கும் ட்ரோஜன்களுக்கும் உதவி செய்வதாக அவன் நம்பினான். ஆனால் அவனுக்கு அவனே தீங்கிழைத்துக் கொண்டான். ஏனெனில் விரைவிலேயே விரும்பினால்கூட யாருமே காப்பாற்ற முடியாத ஒரு ஆபத்தில் அவன் மாட்டிக் கொண்டான். கும்பலினூடே அவனை நோக்கி ஓடிவந்த அஜாக்ஸ் வெண்கலப் பக்கங்கள் கொண்ட அவனது தலைக் கவசத்தில் கடுமையாகத் தாக்கினான். அஜாக்ஸின் மகா ஈட்டியாலும் அவனது மகா கையாலும் தாக்கப்பட, உச்சியில் குஞ்சலம் வைக்கப்பட்ட ஹிப்போதூஸின் தலைக்கவசம் உடைந்து சிதறியது. ஈட்டியின் முனை குத்தி ரத்தமும் அதோடு அவன் மூளையும் பிதுங்கி ஈட்டி பொருந்தும் உறையோடு சேர்ந்து வெளியேவந்து விழுந்தன. ஹிப்போதூஸ் செத்து விழுந்தான். வீரம் செறிந்த பெட்ரோக்குலஸின் காலைத் தன் கைகளில் இருந்து கீழே விட்டான். அதற்கு அருகிலேயேதான் அவனும் மல்லாக்க விழுந்தான். செழிப்பான லார்சியாவி லிருந்து அவன் வெகு தூரத்தில் இருந்தான். அவனது பெற்றோர் அவன்மீது செலுத்திய அன்புக்கும் அக்கறைக்கும் அவனால் கைம்மாறு செய்ய முடியவில்லை. அஜாக்ஸின் ஈட்டி அவன் உயிரை வெட்டி எடுத்திருந்தது.

இப்பொழுது அஜாக்ஸின்மீது ஒரு மின்னும் ஈட்டியை எறிந்தான் ஹெக்டர். ஆனால் அதை எதிர்பார்த்திருந்த அஜாக்ஸ், அந்த வெண்கல ஈட்டியைத் தவிர்த்தான். அது ஸ்கீடியஸ் என்ற ஒருவனைத் தாக்கியது. ஸ்கீடியஸ் பலருக்குத் தலைவனாக இருந்து அவர்களை ஆண்டவன், ஃபோசியர்களில் சிறந்த வீரன். கவர்ச்சிகரமான பானோப்யூஸ் என்ற நகரமே அவனது ஊர். அவனது கழுத்துப் பட்டை எலும்பின் மத்தியில் தாக்கினான் ஹெக்டர். அவனது ஈட்டியின் வெண்கல முனை நேராக உள்ளே சென்று தோளில் கீழ்ப்பகுதி வழியாக வெளியே வந்தது.

தடாலென அவன் தரையில் விழுந்தான். அவனைச் சுற்றி அவனது கவசம் கடகடவென ஒலித்தது.

பதிலுக்கு, ஹிப்போதூஸின் அருகில் நின்று கொண்டிருந்த போர்த்திறம் மிக்க ஃபோர்சிஸ் என்பவனை வயிற்றில் தாக்கி அவனது உடல் கவசத்தைச் சிதைத்தான் அஜாக்ஸ். ஈட்டிமுனை அவன் குடல்களை வெளியில் கொண்டு வந்தது. புழுதியில் விழுந்த அவன் மண்ணை இறுகப் பற்றினான். முன் அணியி லிருந்த ட்ரோஜன்களும் ஹெக்டரும்கூடப் பின்வாங்கினர். ஃபோர்சிஸ், ஹிப்போதூரஸ் ஆகியோரின் உடல்களை வெற்றி முழக்கத்தோடு இழுத்துக் கொண்டு வந்தனர் கிரேக்கர்கள். அவர்களது தோள்களிலிருந்து கவச உடைகளையும் கழற்றி எடுத்தனர்.

பலவீனப்படுத்தப்பட்டவர்களாக, துணிச்சல் இழந்து போனா ட்ரோஜன்கள் போரை நேசிக்கும் கிரேக்கர்களால் இலியம் நகர் நோக்கித் துரத்தப்பட்டிருப்பார்கள். அப்படிச் செய்திருந்தால், மிருகத்தனமான வலிமையின் மூலம் ஜீயூஸின் விருப்பத்துக்கு எதிராக ஒரு வெற்றி கிடைத்திருக்கும். ஆனால் அப்போலோ ஈனியாஸை உசுப்பி விட்டுவிட்டான். ஈனியாஸோடு இனிமை யாகப் பழகும் பெரிஃபாஸ் என்ற ஒரு கட்டியக்காரனின் உருவெடுத்தான் அந்த கடவுள். பெரிஃபாஸ் ஈனியாஸின் தந்தை ஆன்க்கைசஸின் காலத்திலிருந்தே கட்டியக்காரனாக இருப்ப வன். அவனுடைய உருவத்தில் இப்பொழுது ஜீயூஸின் மகனான அப்போலோ பேசினான்.

'ஈனியாஸ், கடவுளர்கள் எல்லாம் உண்மையில் உனக்கு எதிராக இருக்கிறார்கள் என்பது உண்மையானால், இலியம் நகரை உன்னால் எப்படிக் காப்பாற்ற முடியும்? அந்தஸ்து குறைந்த மக்களை வைத்துக் கொண்டு தங்கள் நாடுகளைக் காப்பாற்றி யவர்களை நானறிவேன். அவர்கள் தங்கள் மிருகத்தனமான ஆற்றலையும், எண்ணிக்கையையும், வீரத்தையும் நம்பியிருந் தார்கள். ஆனால் ஜீயூஸ் நம் பக்கம் இருக்கிறார்! கிரேக்கர்களை நாம் தோற்கடிக்க வேண்டும் என்று அவர் விரும்புகிறார். இருந்தும், நீங்களெல்லாம் சண்டையிட மறுக்கிறீர்கள். அறி வுக்குப் பொருத்தமில்லாத அளவுக்கு அச்சத்தில் இருக்கிறீர்கள்.'

அப்படிப் பேசிய அவன் முகத்தை உற்றுப் பார்த்தான் ஈனியாஸ். பார்த்ததும் அவன் வில்லேந்திய கடவுளான அப்போலோ என்று

விளங்கிக் கொண்டான். ஹெக்டரைப் பார்த்துப் பேரொலி எழுப்பிச் சொன்னான்:

'ஹெக்டர்! ட்ரோஜன்களே! ஆதரவு தரும் தளபதிகளே! பலவீனப்பட்டுப்போய், துணிச்சல் இழந்து இலியம் நகர் நோக்கி போரை நேசிக்கும் கிரேக்கர்களால் நாம் விரட்டப்படுவது நமக்கு மிகவும் அவமானமானது! இப்பொழுதுதான் கடவுளர் களில் ஒருவர் என்னிடம் வந்து இந்தப் போரில் நமது ஆதரவாளராக ஜீயூஸ் இருப்பதைச் சொல்லிச் சென்றார்! எனவே நாம் அச்சமின்றி நேராக கிரேக்கர்களைச் சென்று தாக்குவோம். பெட்ரோக்குலஸின் உடலைத் தங்கள் கப்பல்களுக்கு எடுத்துச் செல்வது ஒன்றும் அவ்வளவு எளிதான காரியமல்ல என்பதை கிரேக்கர்களுக்குப் புரியவைப்போம்.'

ஈனியாஸ் இவ்வாறு சொல்லி விட்டு, முன் வரிசை அணிவகுப் பில் குதித்து முதன்மைப் போர்வீரர்களில் ஒருவனாக நின்றான். அதன் விளைவாக ட்ரோஜன்கள் மறுபடியும் திரும்பி நின்று கிரேக்கர்களை எதிர்க்கத் துணிந்தனர். அதன்பின் லியோக்ரிட் டஸைக் குத்தினான் ஈனியாஸ். அவன் லைகோமீடிஸின் துணிச்சலான சீடனாவான். போர்த்திறம் மிக்க லைகோமீடிஸ் அவனுடைய இறப்பை எண்ணி மிகவும் வருந்தினான். ஓடிவந்த லைகோமீடிஸ் லியோக்ரிட்டஸின் அருகில் நின்று மின்னும் தனது ஈட்டியை எறிந்தான். அது மக்கள் மேய்ப்பனாகிய அப்பிசா வோனை உதரவிதானத்தின் கீழ் கல்லீரலில் குத்தியது. உடனே அவன் கீழே விழுந்தான். செழிப்பான பீனியா பிரதேசத்தி லிருந்து வந்திருந்த வீரர்களில் ஒருவன்தான் அப்பிசாவோன். அஸ்டிரோபியஸுக்கு அடுத்த படியாகத் தலைசிறந்த போர்வீரன் அவன்தான்.

அவனது இறப்பு அஸ்டிரோபியஸின் மனத்தை இரக்கத்தால் நிரப்பியது. கிரேக்கர்களை இப்பொழுது அவன் ஒரு முடிவோடு தாக்க ஆரம்பித்தான். ஆனால் எந்த நன்மையையும் செய்வதற் கான காலமெல்லாம் போய்விட்டிருந்தது. பெட்ரோக்குலஸைச் சுற்றிக் கேடயங்களாலும் சமன் படுத்தப்பட்ட ஈட்டிகளாலும் அவர்கள் ஒரு பாதுகாப்பு வேலியை அமைத்திருந்தனர். மரியாதையையும் அச்சத்தையும் ஏற்படுத்தும் அஜாக்ஸ் சுற்றி வந்து அனைவருக்கும் கண்டிப்பான உத்தரவுகள் கொடுத்துக் கொண்டிருந்தான். பெட்ரோக்குலஸின் உடலை விட்டுவிட்டு யாரும் நகரக் கூடாது. யாரும் தனியாகப் பிரிந்து போய் முன்

வரிசை அணியில் சண்டைபோடக் கூடாது. பெட்ரோக் குலஸுக்கு அருகிலேயே நின்று கொண்டு தனித்தனியாகத்தான் சண்டையில் ஈடுபட வேண்டும்.

மரியாதையையும் அச்சத்தையும் ஏற்படுத்தும் முறையில் அஜாக்ஸின் உத்தரவுகள் இருந்தன. ரத்தச் சிவப்பாகச் சிவந்து போனது பூமி. வீரர்கள் குவியல் குவியலாகச் செத்து விழுந்தார் கள். ட்ரோஜன்களும் அவர்களின் ஆதரவாளர்களும் இறந்து கிடந்த கிரேக்க வீரர்களுடன் கலந்து கிடந்தனர். கிரேக்கர்களும் ரத்தம் சிந்தாத சண்டை ஒன்றும் போடவில்லை. எனினும் அவர்கள் பக்கம் இறந்தது மிகச்சிலரே. அந்தக் குழப்பத்திலும் ஒருவரை ஒருவர் காப்பாற்றுவது எப்படி என்பதை அவர்கள் மறக்காமல் இருந்தனர்.

நெருப்பைப் போல அவர்கள் போரிட்டார்கள். போர்க்களத்தின் அந்தப் பகுதியைத் திடீரென ஒரு பனிப்படலம் மூடிவிட்டதால் சூரியனும் சந்திரனும் தங்கள் பணியைச் செவ்வனே செய்து கொண்டுதானிருந்தன என்பதை நம்பியிருக்க மாட்டார்கள். அங்கேதான் தேர்ந்தெடுக்கப் பட்ட வீரர்கள் பெட்ரோக்குலஸின் உடல் அருகில் சண்டையிட்டுக் கொண்டிருந்தனர். ஆனால் மற்ற இடங்களிலெல்லாம் வானம் தெளிவாக இருந்ததனால் சண்டையிட்டுக் கொண்டிருந்த ட்ரோஜன்களுக்கும் ஆயுதம் தரித்த கிரேக்க வீரர்களுக்கும் இந்தப் பிரச்னை எழவில்லை. எல்லா இடங்களிலும் நன்றாக வெயிலடித்துக் கொண்டிருந்தது. தரையிலோ மலையிலோ ஒரு மேகம்கூடத் தென்படவில்லை. குறிக்கோளற்ற முறையில் விட்டுவிட்டு சண்டை நடந்து கொண்டிருந்தது. நன்கு இடைவெளி விட்டு ஈட்டிகளால் ஆபத்து ஏற்படாத வகையில் தள்ளி நின்று சண்டையிட்டனர். மையப் பகுதியில்தான் சிறந்த கிரேக்க வீரர்கள் பனிப்படலத்தாலும் காட்டுமிராண்டித்தனமாக எறியப்பட்ட ஈட்டிகளாலும் வேதனைப்பட்டுக் கொண்டிருந்தார்கள். கீர்த்திமிகு த்ராஸி மீடிஸ், ஆன்ட்டிலோக்கஸ் ஆகிய இருவருக்கும் இணையற்ற பெட்ரோக்குலஸ் இறந்த செய்தி தெரியாது. அவன் இன்னும் உயிரோடுதான் இருந்தான் என்றும், முன் வரிசை அணிவகுப்பில் ட்ரோஜன்களை எதிர்த்துப் போரிட்டுக் கொண்டிருந்தான் எனவும் நினைத்துக் கொண்டிருந்தனர். தங்களது படைப்பிரிவில் ஏதேனும் பதற்றம் ஏற்படுகிறதா, யாராவது இறந்து விட்டார் களா என்று கவனித்துக் கொண்டு அவர்களிருவரும் அந்த

இடத்திலிருந்து சற்றுத் தள்ளி சண்டையிட்டுக் கொண்டிருந்தனர். கருப்புக் கப்பல்களிலிலிருந்து அவர்களைப் போர் செய்யும்படித் தூண்டி அனுப்பியபோது நெஸ்டர் அப்படித்தான் அவர்களிடம் சொல்லி அனுப்பியிருந்தான்.

ஆனாலும் அந்த இரக்கமற்ற பெரும் போராட்டம் நிற்காமல் நாள் முழுதும் தொடர்ந்து கொண்டிருந்தது. விரைவுப்பாத அக்கிலிஸின் வீரமிக்க உதவியாளனுக்காக, முழங்கால்கள், முழங்கால் தண்டு, கெண்டைக்கால், பாதங்கள், கைகள், கண்கள் எல்லாவற்றிலும் கடும் முயற்சியினால் ஏற்பட்ட வியர்வை பெருக்கெடுத்து ஓட அவர்கள் சண்டையிட்டுக் கொண்டிருந் தார்கள். நெகிழ்வு படுத்தி நீளமாக்குவதற்காக ஒரு பெரிய எருதின் தோலைத் தன் மக்களிடம் ஒரு தலைவன் கொடுப்பான். அவர்கள் அதை வாங்கி வட்டமாக நின்று அதை இழுத்து நீளமாக்குவார்கள். கொழுப்பு உள்ளே இறங்க இறங்க அதன் ஈரப்பதம் வெளியேறும். பல கைகள் அதைப்பிடித்து இழுப்பத னால், அது எல்லாத் திக்கிலும் நெகிழ்ந்து நீளும். அதைப்போல இரண்டு பக்க வீரர்களும் பெட்ரோக்குலஸின் உடலை இந்தப் பக்கமும் அந்தப் பக்கமுமாக அந்தக் குறுகிய இடத்துக்குள் இழுத்தனர். ஒவ்வொரு அணிக்கும் மிகுந்த நம்பிக்கை இருந்தது. இலியத்துக்கு இழுத்துக்கொண்டு போய்விடலாம் என்று ட்ரோஜன்கள் நினைத்தனர். உட்குழிந்த தம் கப்பல்களுக்குக் கொண்டு போய்விடலாம் என்று கிரேக்கர்கள் நினைத்தனர். காட்டுமிராண்டித் தனமாக பெட்ரோக்குலஸின் உடலை அவர்கள் அலைக்கழித்தனர். சைனியத்தை அழைத்துச் செல்லும் ஏரிஸோ ஆக்ரோஷமான அதீனியோகூட அதைப் பார்த்திருந் தால் இன்புற்றிருக்க மாட்டார்கள். மனிதர்களுக்கும் குதிரை களுக்கும் பெட்ரோக்குலஸின் உடலை வைத்து அன்று அப்படிப் பட்ட ஒரு வேதனையான போராட்டத்தை நீட்டித்திருந்தான் ஜீயூஸ்.

கடவுளையொத்த அக்கிலிஸுக்கு பெட்ரோக்குலஸ் இறந்த செய்தி கொஞ்சம்கூடத் தெரியாது. விரைவுக் கப்பல்களில் இருந்து வெகு தூரத்தில் இலியத்தின் மதில் சுவர்களின் கீழே அவர்கள் சண்டையிட்டுக் கொண்டிருந்தார்கள். பெட்ரோக் குலஸ் கொல்லப்பட்டிருப்பான் என்ற எண்ணம் கொஞ்சம்கூடத் தோன்றவில்லை அக்கிலிஸுக்கு. நகரின் மதில் சுவர்கள்வரை பெட்ரோக்குலஸ் எதிரிகளை ஓட வைத்திருப்பான் என்றே அவன்

நினைத்தான். பாதுகாப்பாகவும் காயமடையாமலும் திரும்பி வந்துவிடுவான் என்றுதான் நினைத்தான். தன்னோடோ தானில்லாமலோ இலியம் நகரை பெட்ரோக்குலஸ் அழித்து விடுவான் என்று அவன் நினைக்கவில்லை. அது அப்படி நடக் காது என்று ஏற்கெனவே அவனுடைய அன்னை அவனிடம் கூறியிருக்கிறாள். அடிக்கடி அவள் அக்கிலிஸிடம் வந்து எல்லாம் வல்ல ஜீயூஸின் திட்டங்களைத் தனிப்பட்ட முறையில் சொல்லிவிட்டுச் செல்வது வழக்கம். ஆனால் அவனுடைய ஆத்ம நண்பனின் இறப்பைப் பற்றியும் சொல்லிவிட்டாள் என்று அர்த்தமல்ல.

இறந்த அவனைச் சுற்றி, கூரீட்டிகளை வைத்துக்கொண்டு இரு தரப்பு வீரர்களும் இன்னும் சண்டையிட்டுக் கொண்டும் ஒருவரையொருவர் கொன்று கொண்டும்தான் இருந்தனர். அது ஒரு முடிவற்ற சண்டையாக இருந்தது. வெண்கலக் கவசமணிந்த கிரேக்கர்கள், 'தோழர்களே, நாம் எல்லாருமே கொல்லப்பட்டு விட்டாலும், எஞ்சியிருக்கும் ஒருவர்கூட இந்த இடத்தை விட்டு அசையக்கூடாது.' என்று ஒருவருக்கொருவர் சொல்லி ஒவ்வொருவர் இதயத்திலும் வீரத்தையும் புத்துணர்ச்சியையும் ஊட்டிக் கொண்டிருந்தனர். எனவே சண்டை தொடர்ந்து கொண்டிருந்தது. இரும்பின் பேரொலி முணுமுணுக்கும் காற்றின் வழியாக வெண்கல வானத்தைத் தாக்கியது.

சண்டை நடந்து கொண்டிருந்த இடத்திலிருந்து வெகு தூரத்தில், மனிதர்களைக் கொல்லும் ஹெக்டர் தமது தேரோட்டியைப் புழுதியில் சாய்த்துவிட்டான் என்று காதில் விழுந்ததிலிருந்து அக்கிலிஸின் குதிரைகள் அழுது கொண்டிருந்தன. டயோரிஸின் உறுதியான மகனான ஆட்டோமிடான் அக்குதிரைகளைச் சமாதானப் படுத்த என்னவெல்லாம் செய்ய முடியுமோ அதை யெல்லாம் செய்தான். சீழ்க்கையொலி எழுப்பும் தனது சாட்டை யால் அடித்துப் பார்த்தான். கொஞ்சிப் பார்த்தான். கெஞ்சிப் பார்த்தான். பயமுறுத்திப் பார்த்தான். ஆனால் அந்த ஜோடிக் குதிரைகள் கப்பல்களுக்குப் போக மறுத்துவிட்டன. அகன்ற ஹெல்லெஸ்பாண்ட் ஜலசந்திக்கும் போகவில்லை. கிரேக்கர்கள் போர் செய்து கொண்டிருக்கும் பகுதிக்கும் போக மறுத்து விட்டன. இறந்துவிட்ட ஒரு ஆண் அல்லது பெண்ணின் கல்லறை மேல் நிறுவப்பட்ட கல்லறைக் கல் மாதிரி தங்களின் அழகான தேரின் முன் அவை அசையாமல் நின்றன. அவற்றின்

தலைகள் தரையை நோக்கித் தாழ்ந்திருந்தன. இழந்துவிட்ட அவைகளின் தேரோட்டிக்காக விட்ட சூடான கண்ணீர் அவற்றின் கண்களிலிலிருந்து தரைக்கு வழிந்தோடியது. நுகத்தடியின் இரண்டு பக்கமும் தலையிலிருந்து தரைவரை நீண்டு கிடக்கும் அவற்றின் ஒளி பொருந்திய பிடரி மயிர்கள் தரையில் பட்டுப் புழுதி படிந்து கிடந்தன.

க்ரோனஸின் மகனான ஜீயூஸ் அக்குதிரைகளின் துயரத்தைப் பார்த்து அவற்றின் மீது இரக்கம் கொண்டான். தன் தலையை ஆட்டிய வண்ணம் அவன் சொன்னான்:

'பாவம் இந்த மிருகங்கள்! வயது முதிர்ந்து மரணிக்காத நித்தியர்களாகிய உங்களை ஏன் இறந்து போகக்கூடியவனான தலைவன் பீலியூஸிடம் கொடுத்தோம்? துக்கத்தில் இருக்கும் மனிதர்களின் வேதனைகளைப் பங்கு போட்டுக்கொள்ள வேண்டும் என்பதற்கா? இந்த பூமியில் முச்சு விட்டு ஊர்ந்து கொண்டிருக்கும் உயிரினங்களிலேயே மனிதனைப் போல பரிதாபத்துக்குரியவர்கள் யாரும் கிடையாது. ஆனால் ஹெக்டரால் உங்களை விரட்டவோ அலங்கரிப்பட்ட உங்கள் தேரை ஓட்டவோ முடியாது. நான் அதற்கு அனுமதிக்க மாட்டேன். கவசத்தை வைத்துக்கொண்டு மகிழ்ச்சியில் திளைத்துக் கொண்டிருப்பது போதாதா அவனுக்கு?

உங்கள் கால்களைச் சக்தியாலும் உங்கள் இதயங்களைத் தைரியத்தாலும் நிரப்புவேன் நான். குறைந்த பட்சம் ஆட்டோமிடனையாவது நீங்கள் காப்பாற்றி, போர்க்களத்திலிருந்து அவனை உட்குழிந்த கப்பல்களுக்குக் கொண்டு வரவேண்டும். ஏனெனில், இன்னும்கூட நான் ட்ரோஜன்களுக்குக் கீர்த்தி கொடுக்கவே விரும்புகிறேன். நன்றாகப் பலகையிடப்பட்டக் கப்பல்களைச் சென்றடையும் வரை, சூரியன் அஸ்தமித்து ஆசீர்வதிக்கப்பட்ட இருள் இடையில் புகும்வரை அவர்கள் கிரேக்கர்களைக் கொலை செய்து கொண்டே செல்ல வேண்டும்.'

இவ்வார்த்தைகளைச் சொல்லிவிட்டு அக்குதிரைகளுக்குள் சக்தியை ஊதினான் ஜீயூஸ். பிடரிகளிலிலிருந்து தூசியை உதறிய குதிரைகள் தம் விரைவுத் தேரை இழுத்துக் கொண்டு ட்ரோஜன் களையும் கிரேக்கர்களையும் சேர்ந்து கொள்ள விரைந்தன. தன் நண்பனுக்காக மிகவும் வேதனைப்பட்டாலும், அக்குதிரைகளின் பின்னால், போர்வீரனுக்குரிய பங்கை எடுத்துக் கொண்டான்

ஆட்டோமிடன். வாத்துக்களைத் துரத்தும் வல்லூறைப் போலத் தனது தேரில் விரைந்து போர்க்களம் சென்றான் அவன். ட்ரோஜன்களின் கும்பலில் மாட்டிக் கொள்ளாமல் விரைந்து செல்ல அக்குதிரைகளின் வேகம் உதவியது. எதிரிப் படைப்பிரிவுக்குள் நுழைந்து தாக்குவதும் எளிதாகிப் போனது.

ஆனால் அவன் விரட்டிய வீரர்கள் யாரையும் அவனால் கொல்ல முடியவில்லை. குதிரைகளின் வேகத்தையும் கட்டுப்படுத்த முடியாதவனாக, தன் ஈட்டியையும் பயன்படுத்த முடியாதவ னாகத் தனிமைப்பட்டுப் போனான் ஆட்டோமிடன். இறுதியில் அவனுடைய தோழன் அல்சிமிடான் அவனைப் பார்த்தான். தேரின் பின்னால் வந்த அவன் ஆட்டோமிடனிடம் சொன்னான்:

'ஆட்டோமிடன், ஏதாவது கடவுள் உன் அறிவைப் பிடுங்கிக் கொண்டு இப்படி ஒரு முட்டாள்தனமான கருத்தை உன் மண்டைக்குள் வைத்து விட்டாரா என்ன? ட்ரோஜன் அணியினரின் முன் வரிசையில் தனியாக நீ வந்திருப்பதைக் கவனித்தாயா? உனது தோழன் கொல்லப்பட்டுவிட்டான். அக்கிலிஸின் கவசத்தைப் போட்டுக்கொண்டு அலைந்து கொண்டிருக்கிறான் ஹெக்டர்.'

அதைக்கேட்ட டியோரிஸின் மகனான ஆட்டோமிடன் சொன்னான்:

'அல்சிமிடான், உயிருடன் இருந்தபோது கடவுள்களைப் போன்ற அறிவு கொண்டிருந்த பெட்ரோக்குலஸைத் தவிர இந்த நித்தியக் குதிரைகளை அடக்குவதில் உன்னைவிடச் சிறந்தவர் யாராவது இருந்துள்ளரா? ஆனால் இப்போதோ விதியும் மரணமும் அவனைக் காவு வாங்கிவிட்டது. இந்தச் சாட்டை யையும் மின்னும் கடிவாளங்களையும் இந்தா, பிடித்துக் கொள். நான் இறங்கி சண்டை செய்கிறேன்' என்றான்.

இப்படிச் சொல்லிவிட்டு ஆட்டோமிடன் தேரிலிருந்து இறங்கினான். அல்சிமிடான் சட்டெனப் பாய்ந்து தேரில் ஏறிச் சாட்டையையும் கடிவாளங்களையும் பிடித்துக் கொண்டான். கீர்த்திமிகு ஹெக்டர் அவர்களைப் பார்த்துவிட்டு அருகில் இருந்த ஈனியாஸிடம் சொன்னான்:

'வெண்கலக் கவசம் கொண்ட ட்ரோஜன்களின் ஆலோசகனே ஈனியாஸ், தகுதியற்ற இரண்டு தேரோட்டிகளை ஏற்றிக்கொண்டு

அக்கிலிஸின் குதிரைகள் போர்க்களத்துக்கு வருகின்றன. நீ எனக்கு உதவி செய்தால், அவைகளை நாம் பிடித்துவிடலாம் என்று நினைக்கிறேன். நீயும் நானும் சேர்ந்து தாக்கினால் அந்த இருவராலும் எதிர்த்துப் போரிட முடியாது.'

அவன் அப்படிச் சொன்னதும் ஆங்க்கைசஸின் உறுதியான மகனான ஈனியாஸ் அதற்கு உடன் பட்டான். இருவரும் கிளம்பி முன்னேறிச் சென்றனர். அவர்களின் தோள்களை உலர்த்தப்பட்டு உறுதிப்படுத்தப்பட்ட எருதுத் தோலில் செய்த கேடயங்கள் காத்தன. அவற்றின் மீது நிறைய வெண்கலம் சம்மட்டியால் அடிக்கப்பட்டு ஏற்றப்பட்டிருந்தது. கிரேக்க வீரர்களைக் கொன்று குவிக்கலாம், உயர்ந்த கழுத்து கொண்ட அவர்களது குதிரைகளை விரட்டிக் கொண்டு போகலாம் என்ற அபரிமிதமான நம்பிக்கையில் க்ரோமிஸூம் அரீட்டஸூம் அவர்களுடன் சென்றனர். அப்பாவிகள்! ரத்தம் சிந்தாமல் அவர்கள் ஆட்டோமிடானிடமிருந்து விடுபடப் போவதில்லை.

இதற்கிடையில் தந்தை ஜீயூஸிடம் ஒரு பிரார்த்தனையை வைத்தான் ஆட்டோமிடான். உடனே சக்தியும் புத்துணர்ச்சியும் நிரம்பப் பெற்றவனானான். உடனே தனது நம்பிக்கைக்குரிய நண்பன் அல்சிமிடானிடம் சொன்னான்.

'அல்ஸிமிடான், குதிரைகளுடன் என் அருகிலேயே இரு. அவைகளின் மூச்சு என் முதுகில் பட்டுக் கொண்டிருக்கட்டும். முன்வரிசையில் ஹெக்டர் கொல்லப் படவில்லையெனில், நம் இருவரையும் கொன்று விட்டு, அக்கிலிஸின் அழகான குதிரைகளின் பின்னால் ஏறி கிரேக்க அணிவகுப்பை ஓடச் செய்ய வேண்டும் என்ற அவனது உறுதிப்பாட்டிலிருந்து அவனைத் தடுப்பது எதுவுமில்லை என்று நினைக்கிறேன்.' இவ்வார்த்தைகளைச் சொல்லிவிட்டு அஜாக்ஸ்களையும் மெனிலயஸையும் அழைத்தான்.

'அஜாக்ஸ்களே, கிரேக்கர்களின் தளபதிகளே, ஓ மெனிலயஸ், நீயும்தான், உங்களில் சிறந்த வீரர்களை பெட்ரோக்குலஸின் உடலருகில் எதிரிகளை நெருங்க விடாமல் நிற்கச் சொல்லுங்கள். நீங்கள் இருவரும் மரணத்தைத் தூரமாக வைக்க எங்களுக்கு உதவி செய்யுங்கள். எல்லாக் கண்ணீரும் ரத்தமும் நிறைந்த இந்தப் போர்க்களத்தில் நாம் இன்னும் உயிரோடுதான் இருக்கிறோம். ஆனால் ட்ரோஜன் வீரர்களில் தலைசிறந்த ஹெக்டரும்

ஈனியாஸும் நம்மை வெகு வேகமாகக் கீழே தள்ளிக் கொண்டுள்ளனர். ஆனால் நடப்பது எல்லாமே கடவுளரின் மடியிலிருந்து நடப்பதால், நானும் என் அளவுக்கு முயற்சி செய்து பார்ப்பேன். மற்ற விஷயங்களை ஜீயூஸிடம் விட்டுவிடுகிறேன்' என்று பேசிவிட்டு தனது நீண்ட நிழல்கொண்ட ஈட்டியைக் கையில் எடுத்துக் குறிபார்த்துத் தயார்ப் படுத்திவிட்டு எறிந்தான். அரீட்டஸின் வட்டவடிவ கேடயத்தை அது தாக்கியது.

ஆனால் அவனது கேடயத்தால் ஈட்டியைத் தடுக்க முடிய வில்லை. அது இடுப்புக் கச்சை வழியாக உள்ளே நுழைந்து அவனது அடி வயிற்றினுள் புகுந்தது. உறுதியான ஒருவன் பண்ணை எருதை அதன் கொம்புகளின் பின்னாலிருந்து கூரான கோடரியால் தாக்கி கழுத்தை வெட்டும்போது, அந்த எருது முன்னால் குதித்து உயிர் விடும். அதைப்போல அரீட்டஸும் முன்னால் பாய்ந்து பின்னால் மல்லாக்க விழுந்து உயிர் துறந்தான். அவன் குடல் நாளங்களில் அதிர்ந்து கொண்டிருந்த அந்தக் கூரான ஈட்டி அவன் உயிரை உருவியது. அதன்பிறகு, ஆட்டோமிடன்மீது ஒரு ஈட்டியை எறிந்தான் ஹெக்டர். ஆனால் அப்படி ஏதாவது வரும் என்று எதிர்பார்த்துக் கவனமாக இருந்த ஆட்டோமிடன் அதைத் தவிர்த்துக் கொண்டான். அதன் கீழே அவன் குனிந்து கொள்ள, அந்த நீண்ட ஈட்டித் தரையில் குத்தி நின்றது. அதிகாரம் கொண்ட போர்க்கடவுள் ஏரிஸ் அதன் சக்தியைப் பிடுங்கும் வரை அதன் தடித்த முனை ஆடிக் கொண்டிருந்தது.

நண்பனின் அழைப்புக் குரல் கேட்டு இரண்டு அஜாக்ஸ்களும் அங்கே வந்திருந்திருக்காவிட்டால் ஒருவர் கழுத்தில் இன்னொருவர் வாளை வைத்துக் கொண்டிருந்திருப்பார்கள். இரண்டு எதிரிகளையும் அஜாக்ஸ்கள் விலக்கி விட்டனர். அந்த ஜோடியைப் பார்த்துப் பயந்து, ஹெக்டர், ஈனியாஸ், கடவுளை யொத்த க்ரோமிஸ் ஆகியோர் அடிபட்ட அரீட்டஸை அவன் விழுந்த இடத்திலேயே விட்டுவிட்டுப் பின்வாங்கினர். விரைவு ஏரிஸுக்கு இணையான ஆட்டோமிடன் அவனது கவச உடைகளைக் கழற்றிவிட்டு வெற்றிப் பெருமிதத்தோடு பேசினான்.

'நான் கொன்றவனைவிட பெட்ரோக்குலஸ் சிறந்தவன் என்றாலும், அவன் இறப்புக்குப் பழிவாங்கும் விதமாக இந்த மரணம் எனக்கு ஓரளவு திருப்தி தருகிறது.'

இப்படிச் சொல்லிவிட்டு ரத்தம் தோய்ந்த கவச உடைகளை எடுத்துத் தன் தேரில் போட்டுக் கொண்டு தேரில் ஏறினான். காளை மாட்டைக் கடித்துத் தின்ற சிங்கத்தைப் போல அவன் கைகளிலும் கால்களிலும் ரத்தக் கறை படிந்திருந்தது.

மறுபடியும் பெட்ரோக்குலஸைச் சுற்றி எல்லா விதமான வேதனைகளுடனும் போர் மூண்டது. ஏனெனில் அதனை மூளச் செய்தவள் அதீனி. தூரத்து இடிமுழக்கம் செய்யும் மனம் மாறிய ஜீயூஸ் கொடுத்த உத்தரவுகளின்படி, கிரேக்கர்களின் கை ஓங்குமாறு செய்ய அவள் ஒலிம்பஸ் மலையின் உச்சியிலிருந்து இறங்கி வந்தாள். போர் அல்லது வயல் வெளிகளில் நடக்கும் வேலைகளை நிறுத்தி, கால்நடைகளுக்கு அசௌகரியம் கொடுக்கின்ற, நடுக்கும் புயல் வரும் அபாயத்தை மனிதர்களுக்கு அறிவிக்க, நடுங்குவதுபோல் மங்கலான ஒளி வீசும் வானவில்லை வானத்தின் குறுக்கே ஜீயூஸ் நீட்டுவார். அதுபோல மங்கலான ஒளி வீசிய பனிப்படலத்தைப் போர்த்திக் கொண்டு வந்த அதீனி கிரேக்கப் படையினர் மத்தியில் புகுந்து எல்லாரையும் உசுப்பி விட்டாள். முதலில் அவள் அருகில் இருந்த வல்லமை பொருந்திய மெனிலயஸைத் தூண்டினாள். ஃபீனிக்ஸ்* பறவையின் வடிவமெடுத்த அதீனி அதன் களைப்பற்றக் குரலில் பேசினாள்:

'இலியம் நகரின் சுவர்களுக்குக் கீழே, உயர்ந்த அக்கிலிஸின் நம்பிக்கைக்குரிய தோழனின் உடலை விரைவாகச் செயல் படும் நாய்கள் மோசமாகக் கடித்துக் குதறுமானால், அந்தப் பழிச் சொல்லால் நீதான் உன் தலையைத் தொங்கப் போட்டுக் கொள்ள நேரிடும் மெனிலயஸ். உனது சக்தியையெல்லாம் திரட்டி உறுதியாய் இரு. நம்மிடையே இருக்கின்ற ஒவ்வொரு வீரனையும் போர் செய்யுமாறு தூண்டு.'

---

ஃபீனிக்ஸ் ஒரு பிரசித்தி பெற்ற கிரேக்க புராணப் பறவை. ஒரு நேரத்தில் ஒரு பறவைதான் இருக்குமாம். அதுவும் ஆண் பறவைதானாம். ஒளிவீசும் தங்க மற்றும் சிவப்பு கலந்த பழுப்பு நிறத்தில் அதன் சிறகுகள் இருக்கும். ஒரு கழுகின் அளவோ அதைவிடப் பெரியதாகவோ இது இருக்கும். ஒரு கூற்றின்படி இந்தப் பறவை 500 ஆண்டுகள் உயிர் வாழும். இன்னொரு கூற்றின்படி இது 12,954 ஆண்டுகள் உயிர் வாழும். அதன் பிறகு, ஒரு சிதையில் போய்த் தன்னைத்தானே எரித்துக்கொண்டு சாகும். ஆனால் அந்த சாம்பலில் இருந்து மறுபடியும் இளமையும் அழகும் கொண்டு உயிர்த்தெழும். இதனால் இது ஆன்மிக மறு வாழ்வுக்கும் நித்தியத் தன்மைக்கும் குறியீடாகக் கொள்ளப்படுகிறது.

போர் முழக்கத் தலைவனான மெனிலயஸ் பதில் சொன்னான்.

'ஓ ஃபீனிக்ஸ், எனது மரியாதைக்குரிய தலைவா, பழைய நண்பா, அதீனி எனக்குப் பலம் கொடுக்க வேண்டும். ஏவுகணைகளைத் தடுத்து நிறுத்த வேண்டும். இதுதான் எனது விருப்பம். அப்படியெனில், சந்தோஷமாக நான் பெட்ரோக்குலஸுக்காக நின்று போராடுவேன். அவனுடைய மரணம் எனக்குப் பெரிய அடியாகும். ஆனால் அச்சுறுத்தும் நெருப்பின் ஆற்றல் கொண்டிருக்கிறான் ஹெக்டர். தடுத்து நிறுத்த முடியாத வன்முறை செயலில் அவன் ஈடுபட்டுள்ளான். ஜீயூஸும் அவனுக்கே கீர்த்தியைக் கொடுத்துக் கொண்டிருக்கிறார்.'

அவன் அப்படிச் சொன்னதைக் கேட்டு சாம்பல் நிறக்கண்ணாள் அதீனி மகிழ்ந்தாள். மற்றக் கடவுளர்கள் இருக்கும்போது அதீனியின் அருள் வேண்டும் என்று மெனிலயஸ் பிரார்த்தித்தது அவளுக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தது. அவனுடைய தோள் களையும் முழங்கால்களையும் அவள் வலிமைப் படுத்தினாள். எத்தனை முறை விரட்டினாலும் திரும்பத் திரும்ப விடாமல் வந்து மனித ரத்தம் உறிஞ்சிக் கொள்ளும் கொசுவின் துணிச்சலை அவன் மனதுக்கு அளித்தாள். இவ்விதமான வீரத்தோடு அவள் அவன் இதயத்தை நிரப்பியதும், பெட்ரோக்குலஸின் உடலரு கில் நின்று ஈட்டியை எதிரியை நோக்கி ஈட்டியை எறிந்தான் மெனிலயஸ்.

போடிஸ் என்று ஒரு ட்ரோஜன் வீரன் அங்கே நின்று கொண்டிருந்தான். அவன் செல்வச் செழிப்பான குடும்பத்தில் பிறந்து நன்றாக வளர்த்தெடுக்கப்பட்டவன். மற்ற ட்ரோஜன் களைவிட அவனை ஹெக்டர் தன்னோடு நெருக்கமாக வைத்துக் கொண்டான். ஏனெனில் விருந்துகளில் எப்போதுமே அவன்தான் சிறந்த தோழனாக இருந்தான். அவன் ஓட முயற்சித்தபோது, செம்பொன் நிறத்தலைமுடி கொண்ட மெனிலயஸின் ஈட்டி அவனது இடுப்புக் கச்சையில் குத்தி அவனுள்ளே சென்றது. தடாலென அவன் தரையில் விழுந்தான். உடனே அத்ரியூஸின் மகனாகிய மெனிலயஸ் பெட்ரோக்குலஸின் உடலை ட்ரோஜன்கள் இருந்த பக்கத்திலிருந்து இழுத்துக் கொண்டு வந்து தனது வீரர்களிடம் ஒப்படைத்தான்.

இப்பொழுது ஹெக்டரின் அருகில் அப்போலோ இருந்து கொண்டு அவனைத் தூண்டினான். அபிடஸ் என்ற ஊரிலிருந்து

வந்த ஃபீனோபஸ் என்பவனின் வடிவத்தில் அந்தக் கடவுள் சென்றான். ஏனெனில் ஃபீனோபஸ்தான் வெளிநாட்டு விருந் தாளிகளில் ஹெக்டருக்கு மிகவும் உவப்பானவன். அவனுடைய வடிவத்தில் இருந்த வில்லேந்திய கடவுள் சொன்னான்.

'ஹெக்டர், இதுவரை மிருதுவானவனாக இருந்த மெனிலய ஸுக்கு நீ அஞ்சுவாயேயானால், எந்தக் கிரேக்கனுக்காவது உன்மீது பயம் வருமா? ஆனால் இப்பொழுது அவனாகவே வந்து இறந்த மனிதனை எடுத்துச் சென்றுவிட்டான். உனது நம்பிக்கைக் குரிய நண்பன் முன் வரிசை அணியில் துணிச்சலாக இருந்த போடிஸையும் கொன்றுவிட்டான்' என்று அவன் சொன்னதும் ஹெக்டரின் மீது துன்பத்தின் கருப்பு மேகம் கவிந்தது. தனது வெண்கலக் கவசம் மின்ன முன் வரிசை அணிவகுப்பினூடே அவன் முன்னேறிச் சென்றான்.

அந்த நேரத்தில், அய்டா மலையை மேகங்களில் மறைத்து வைத்திருந்த ஜீயூஸ் ஒரு பயங்கரமான இடியோசையுடன் ஒரு மின்னலையும் அனுப்பினான். ஒளிவீசிய தனது கேடயத்தை எடுத்து ஆட்டினான். ட்ரோஜன்களுக்கு வெற்றியைக் கொடுத்து கிரேக்கர்களைப் பதற்றப்பட்டு ஓடவைத்தான்.

போட்டியாவிலிருந்து வந்த பெனிலோஸ்தான் முதன் முதலாகத் திரும்பி ஓட்டமெடுத்தவன். எதிரியை அதுவரை உறுதியாக எதிர்த்துக் கொண்டிருந்தான் அவன். ஆனால் அங்கு வந்து கொண்டும் போய்க்கொண்டுமிருந்த பாலிடாமஸ் தன் ஈட்டியை எறிய, அது அவன் தோளின் மேல் பக்கமாகத் தாக்கியது. அது மேலோட்டமான அடிதான். ஆனால் ஈட்டியின் முனையானது எலும்பைச் சுரண்டி எறிந்தது. பின் அருகில் இருந்து லெய்ட் டஸை மணிக்கட்டில் குத்திப் போரிடுவதில் அவனுக்கிருந்த ஆர்வத்தை ஒரு முடிவுக்குக் கொண்டு வந்தான் ஹெக்டர். இனிமேலும் ஈட்டியைப் பிடிக்க முடியாது என்பதைப் புரிந்து கொண்ட லெய்ட்டஸ் சுற்றி முற்றிப் பார்த்துவிட்டு ஓட்ட மெடுத்தான்.

லெய்ட்டஸைத் துரத்திக் கொண்டு ஹெக்டர் சென்றான். ட்யூகாலியனின் மகனான இடொமீனியஸ் ஹெக்டரின்மீது ஈட்டியெறிந்தான். அது அவனது உடல் கவசத்தைத் தாக்கி மார்புக் காம்பில் குத்தியது. ஆனால் பொருந்து குழியில் அந்த நீண்ட ஈட்டி உடைந்தது. அதைப்பார்த்த ட்ரோஜன் வீரர்கள்

உரத்த ஒலியெழுப்பினர். பதிலுக்கு ஹெக்டரும் ஈட்டியெறிந்தான். ஆனால் அதற்குள் இடொமீனியஸ் தேரில் ஏறிவிட்டிருந்தான். ஆனால் அது குறி தவறி க்ரீட் பிரதேசத்தில் இருந்த அழகாக வடிவமைக்கப்பட்ட லிக்டஸ் என்ற ஊரிலிருந்து போருக்கு வந்திருந்த க்ரானஸைத் தாக்கியது. அவன் மெரியோனிஸுக்கு உதவியாளனாகவும் தேரோட்டியாகவும் வந்திருந்தான். கப்பல்களிலிருந்து நடந்தே போரில் கலந்து கொள்ள வந்த இடொமீனியஸைக் காப்பாற்றத்தான் க்ரானஸ் வந்தான். ஆனால் அவனுக்குப் பதிலாக இவன் மனிதர்களைக் கொல்லும் ஹெக்டரால் உயிரை இழந்தான். ஹெக்டரின் ஈட்டி அவனது தாடையிலும் காதிலும் குத்தி அவன் பற்களனைத்தையும் உடைத்து வெளியே போட்டது. அவன் நாக்கையும் இரண்டாகத் துண்டித்தது. கடிவாளங்கள் கையை விட்டு நழுவ, க்ரானஸ் தேரிலிருந்து தரையில் விழுந்தான். குனிந்து அதை எடுத்த மெரியோனிஸ் இடொமீனியஸிடம் சொன்னான்.

‘கப்பல்களுக்குப் போய்ச் சேரும் வரை குதிரைகளைச் சாட்டையால் அடித்து விரட்டு. இன்று நாம் இழந்துவிட்டோம் என்பதை நீ எனக்குச் சொல்ல வேண்டியதில்லை.’ அவன் அப்படி சொன்னதும் அழகிய பிடரிகள் கொண்ட குதிரைகளை உட்குழிந்த கப்பல்களை நோக்கி விரட்டிச் சென்றான் இடொமீனியஸ். அவன் பயந்து போயிருந்தான்.

ட்ரோஜன்களுக்கு வெற்றியைக் கொடுக்க வேண்டும் என்று ஜீயூஸ் வேலை செய்து கொண்டிருக்கிறான் என்று மெனிலயஸுக்கும் வீரம் மிக்க அஜாக்ஸுக்கும் தெரியத்தான் செய்தது.

டிலமானின் மகனான மகா அஜாக்ஸ் தன் மனம் திறந்து சொன்னான்:

‘ம்ஹும், அவ்வளவுதான்! ட்ரோஜன்களுக்குத் தந்தை ஜீயூஸ் உதவிக்கொண்டிருக்கிறார் என்பது ஒரு முட்டாளுக்குக்கூட விளங்கிவிடும். அவர்கள் எறியும் ஒவ்வொரு ஈட்டியும் இலக்கை சரியாகத் தாக்குகிறது. அதை ஒரு நிபுணன் எறிந்தாலும் சரி, அனுபவமற்ற ஒருவன் எறிந்தாலும் சரி. அது தன் இலக்கை அடையும்படிச் செய்துவிடுகிறார் ஜீயூஸ். நாம் எறியும் எல்லா ஈட்டிகளும் பயனற்ற வகையில் இப்படித்தான் விழுகின்றன.

'வேறு ஏதாவது யுக்தியை நாம் பயன் படுத்த வேண்டும். அப்போதுதான் அந்த உடலை அப்புறப் படுத்த முடியும். நமது வீரர்களை சந்தோஷப் படுத்தவும் முடியும். அதோடு அவர்கள் இருக்கும் இடத்துக்குப் பாதுகாப்பாகப் போய்ச் சேரவும் வேண்டும். கவலையாக அவர்கள் நம்மை எதிர்பார்த்துக் கொண்டு இருப்பார்கள். மனிதர்களைக் கொல்லும் ஹெக்டரிட மிருந்து நம்மையும் நமது கருப்புக் கப்பல்களையும் காப்பாற்ற முடியுமா என்று அவர்கள் யோசித்துக் கொண்டிருப்பார்கள். அவனுடைய ஆத்ம நண்பன் இறந்த செய்தி இன்னும்கூட அவனுக்குத் தெரிந்திருக்காது என்றே நான் நம்புகிறேன். ஆனால் இதையெல்லாம் செய்யக்கூடிய ஒரு வீரன் யார்? இந்த பனிப் படலத்தினூடே மனிதர்களையும் காணவில்லை, குதிரைகளை யும் காணவில்லை. ஓ தந்தை ஜீயூஸ், இதிலிருந்து எங்களை வெளியே கொண்டு வாருங்கள். நிர்மலமான ஒரு வானத்தை எங்க ளுக்குக் கொடுங்கள். நாங்கள் என்ன செய்து கொண்டிருக்கி றோம் என்றாவது எங்களுக்குத் தெரியட்டும். நாங்கள் ஒளியில் இருக்கும்போது, எங்களைக் கொன்றாலும் பரவாயில்லை. நீங்கள் விரும்புவதும் அதுதானே?'

அவன் அப்படிப் பேசியதும், கண்ணீருடன் வந்த அந்த வெளிப் பாடு தந்தை ஜீயூஸின் மனதைத் தொட்டது. உடனே இருளை விலக்கி பனிப்படலத்தை அகற்றினான். சூரியன் மேலெழும்பி வந்தான். முழு போர்க்கள்மும் பார்வைக்கு வந்தது. பின் போர் முழக்கத் தலைவனான மெனிலயஸிடம் அஜாக்ஸ் சொன்னான்.

'ஒலிம்பஸ் மலையில் பிறந்த மெனிலயஸ், இப்பொழுது சுற்றிலும் பார். நெஸ்டரின் மகனான வீரம் மிக்க ஆன்ட்டி லோக்கஸ் எங்கிருக்கிறான் என்று தெரிகிறதா என்று பார். அவன் இன்னும் உயிரோடு இருப்பானேயாகில், உடனே அவனைப் போர்த்திறம் மிக்க அக்கிலிஸிடம் ஓடிச்சென்று அவனது ஆத்ம நண்பன் கொல்லப்பட்டுவிட்ட செய்தியைச் சொல்லச் சொல்.' அவன் அப்படிச் சொன்னதும் போர் முழக்கத் தலைவனான மெனிலயஸ் ஏற்றுக் கொண்டான்.

பண்ணையில் இருக்கும் நாய்களோடும் மனிதர்களோடும் போராடிக் களைத்துப்போன சிங்கம் பின்வாங்கித் திரும்பிச் செல்லும். இரவு முழுவதும் தங்களின் தேர்வுக்குரிய ஆடு மாடுகளைக் காப்பாற்றும் பொருட்டு மேய்ப்பர்கள் விழித் திருந்தனர். பசி வெறி கொண்ட சிங்கத்தின் பற்களிலிருந்து

கால்நடைகளைக் காப்பாற்றியிருந்தனர். எனினும் சதை தின்ன வெறி கொண்ட சிங்கம் திரும்பத் திரும்ப வந்து முயற்சித்துக் கொண்டே இருக்கும். ஆனால், எந்தப் பயனும் இருக்காது, எவ்வளவு பசி இருந்தாலும், அதன் மீது எறியப்பட்ட ஈட்டிகளின் மழையும், கொழுந்துவிட்டு எரியும் தீப்பந்தங்களும் அதனை வெறுப்பேற்றும். விடியலில் அது ஏமாற்றமடைந்து திரும்பும். அதைப்போல, போர் முழக்கத் தலைவனான மெனிலயஸ் பெட்ரோக்குலஸின் உடல் வைக்கப்பட்ட இடத்திலிருந்து திரும்பினான். அவனுக்குப் போகவே விருப்பமில்லை. காரணம், அவன் போய்விட்டால், பதற்றத்தின் விளைவாக கிரேக்கர்கள் எதிரிகளுக்கு ஒரு நல்ல வாய்ப்பைக் கொடுத்து விடுவார்களோ என்ற அச்சமிருந்தது அவனுக்கு. மெரியோனி ஸுக்கும் இரண்டு அஜாக்ஸ்களுக்கும் முழுமையான உத்தரவு களைக் கொடுத்தான்.

'கிரேக்கர்களின் தலைவர்களாகிய அஜாக்ஸ்களே, மெரியோ னிஸ்! நமது பழகுவதற்கு மென்மையான, பாவப்பட்ட பெட்ரோக்குலஸை நினைவு கொள்ளும் தருணம் இதுதான். வாழ்ந்த போதெல்லாம், நம் ஒவ்வொருவருக்கும் அன்பின் ஆன்மாவாக அவன் இருந்தான். இப்பொழுது மரணமும் விதியும் அவனைக் கொண்டு போய்விட்டன.'

இவ்வார்த்தைகளுடன் செம்பொன் நிறத் தலைகொண்ட மெனில யஸ் சுற்றியும் ஒரு கழுகைப் போலப் பார்த்துக் கொண்டே சென்றான். வானத்தில் பறக்கும் பறவைகளிலெல்லாம் கழுகுக்குத்தான் மிகக்கூரிய பார்வை. வானத்தில் எவ்வளவு உயரத்தில் இருந்தாலும் கீழே குதித்தோடிப் புதருக்குள் மறையும் குழி முயலை அது கண்டு கொள்ளும். ஒரே வீச்சில் இறங்கி வந்து அதைக் கொத்தித் தூக்கிக் கொண்டு போய் அதன் உயிர் பறிக்கும். அதேபோல, ஒலிம்பஸ் மலையில் பிறந்த மெனிலயஸின் விழிகளும், எல்லாத் திசைகளிலும் வீரர்களை நோட்டம் இட்டன. நெஸ்டரின் மகன் ஆன்ட்டிலோக்கஸ் எங்காவது தென் படுகிறானா என்று பார்த்தன. விரைவிலேயே போர்க்களத்தின் இடப் பக்கத்தில் தூரத்தில் வீரர்களுக்குச் சண்டை செய்யச் சொல்லி உற்சாகமூட்டிக் கொண்டு இருந்ததைக் கண்டான்.

செம்பொன் நிறத்தலைகொண்ட மெனிலயஸ் அவனருகில் சென்று சொன்னான். 'ஒலிம்பஸ் மலையில் பிறந்தவனே ஆன்ட்டிலோக்கஸ், இங்கே வா, உன்னிடம் அந்தப் பயங்கர

மான செய்தியைச் சொல்கிறேன். அது நடக்காமல் இருந்திருக்கக் கூடாதா! கடவுள்கள் கிரேக்கர்களுக்குப் பேரழிவையும் ட்ரோஜன்களுக்கு வெற்றியையும் கொடுத்திருப்பதை நீ ஏற்கெனவே உணர்ந்திருப்பாய். ஆனால் கிரேக்கர்களில் தலைசிறந்த வீரனான பெட்ரோக்குலஸ் இறந்துவிட்டான். நமக்கெல்லாம் அது ஒரு பேரிழப்பாகும். உடனே கப்பல்களுக்கு ஓடு. அக்கிலிஸுக்கு விஷயம் தெரியட்டும். நம்மைக் காப்பாற்ற உடனே அவன் வரட்டும். பெட்ரோக்குலஸின் உடலைப் பாதுகாப்பாகக் கப்பலுக்கு அவன் கொண்டு போகட்டும். கவச உடையையும் கழற்றி நிர்வாணப் படுத்தி வைத்துள்ளார்கள். அவனது கவச உடையை மின்னும் தலைக்கவசம் கொண்ட ஹெக்டர் அணிந்திருக்கிறான்' என்றான்.

அவன் சொன்னதைக் கேட்ட ஆன்ட்டிலோக்கஸ் அதிர்ந்து போனான். கொஞ்ச நேரம் அவனால் எதுவும் பேச முடியவில்லை. அவனது கண்கள் கண்ணீரால் நிறைந்தன. வார்த்தைகள் வராமல் தொண்டையிலேயே சிக்கிக் கொண்டன. ஆனாலும் மெனிலய ஸின் உத்தரவுகளை அவன் அலட்சியப் படுத்தவில்லை. தனது கவசத்தைத் தன் குதிரைகளை மேலும் கீழுமாக ஓட்டிக் கட்டுப் படுத்திக் கொண்டிருந்த தனது போற்றத்தக்க உதவியாளனான லாடோகஸிடம் கொடுத்துவிட்டு உடனே புறப்பட்டுச் சென்றான். அக்கிலிஸிடம் அந்தக் கெட்ட செய்தியைச் சொல்ல போர்க் களத்திலிருந்து அழுதுகொண்டே அவன் ஓடினான்.

ஒலிம்பஸ் மலையில் பிறந்த மெனிலயஸும், ஆன்ட்டி லோக்கஸ் விட்டுச் சென்ற களைப்படைந்து போயிருந்த பைலியப் படைகளோடு தங்கி உதவி செய்ய விரும்பவில்லை. தம் தலைவன் இன்றி அவர்கள் மிகவும் சிரமப்பட்டார்கள். கடவுளையொத்த த்ராசிமீடிஸை அங்கு தளபதியாக நியமித்தான் மெனிலயஸ். அதன்பின் அவன் மறுபடியும் பெட்ரோக்குலஸின் உடல் கிடந்த இடத்துக்கு வந்து நின்றுகொண்டான். இரண்டு அஜாக்ஸ்களையும் பார்த்த மெனிலயஸ் அவர்களிடம் ஓடிச் சென்று உடனே சொன்னான்.

'நமது வீரனை அக்கிலிஸிடம் செய்தியைச் சொல்லச் சொல்லிக் கப்பல்களுக்கு அனுப்பியுள்ளேன். ஆனால் அக்கிலிஸ் உடனே வருவான் என்று நம்பும் துணிச்சல் எனக்கு இல்லை. ஹெக்ட ரோடு அவன் எவ்வளவு கோபமாக இருந்தாலும், கவச உடையின்றி ட்ரோஜன்களோடு அவனால் சண்டையிட

முடியாது. பெட்ரோக்குலஸின் உடலைக் குட்டி நாய்கள் மாதிரி குரைக்கும் இந்த ட்ரோஜன்களிடமிருந்து காப்பாற்றி, நமது கப்பல்களுக்குப் பாதுகாப்பாகக் கொண்டு போவது பற்றி யோசித்து ஏதாவது ஒரு முடிவுக்கு நாம் வரவேண்டும். வேறு ஏதாவது யுக்தியைத்தான் கையாள வேண்டும்.'

இதற்கு டிலமானின் மகனான மகா அஜாக்ஸ் பதில் சொன்னான்: 'உயர்ந்த மெனிலயஸ், நீ சொல்வது ரொம்பச் சரி. நீயும் மெரியோனிஸுூம் பெட்ரோக்குலஸின் உடலுக்குக் கீழே உங்கள் தோள்களைக் கொடுத்துத் தூக்குங்கள். எவ்வளவு விரைவாக முடியுமோ அவ்வளவு விரைவாகச் சண்டை நடக்கும் இடத்தி லிருந்து உடலை அப்புறப்படுத்துங்கள். நாங்கள் இருவரும் இங்கே இருந்து ஹெக்டரையும் ட்ரோஜன்களையும் கவனித்துக் கொள்கிறோம். அஜாக்ஸ்களான எங்கள் இருவருக்கும் பெயர் மட்டுமல்ல, மன உறுதியும் வீரமும் ஒன்று. இப்படிப்பட்ட குறுகலான மூலையில் நாங்கள் சண்டையிடுவது ஒன்றும் எங்களுக்கு முதல் முறையல்ல.'

அவன் அப்படிச் சொன்னதும், இரண்டு பேரும் சேர்ந்து, பயங்கர முயற்சி செய்து பெட்ரோக்குலஸைத் தரையிலிருந்து மேலே தூக்கினர்.

அவன் உடலைக் கிரேக்கர்கள் தூக்கிக் கொண்டு போவதைப் பார்த்ததும் பின்னால் வந்து கொண்டிருந்த ட்ரோஜன்கள் உரக்க ஒலியெழுப்பித் தாக்கத் தொடங்கினர். இளம் வேட்டைக் காரர்கள் முன்னிலையில் காயம்பட்ட ஒரு காட்டுப் பன்றியை வேட்டை நாய்கள் பாய்ந்து தாக்கும். கடித்துக் குதறிவிடலாம் என்ற முடிவோடு கொஞ்ச நேரம் பன்றியைத் துரத்திக்கொண்டு அவை ஓடும். ஆனால் தன் பலத்தைச் சார்ந்திருக்கும் அந்தப் பன்றி, நம்பிக்கையோடு திரும்பி நிற்பதைக் கண்டதும், நாய்கள் பின்வாங்கி எல்லாப் பக்கமும் ஓட்டமெடுக்கும். அதைப்போல, ட்ரோஜன் வீரர்கள் தங்களின் வாள்கள் மற்றும் வளைவான ஈட்டிகளுடன் கும்பலாகக் கொஞ்ச தூரம் துரத்தி வந்தார்கள். ஆனால் இரண்டு அஜாக்ஸ்களும் திரும்பி நின்று எதிர்க்கத் தயாரானபோது, அவர்களின் நிறம் மாறியது. எந்த ட்ரோஜன் வீரனுக்கும் பெட்ரோக்குலஸின் உடலுக்காகப் பாய்ந்து தாக்கி, சண்டைபோட வேண்டும் என்ற துணிவு இல்லாமல் போனது.

முழு மன உறுதியுடன் மெனிலயஸுூம் மெரியோனிஸுூம் பெட்ரோக்குலஸின் உடலைப் போர்க்களத்தில் இருந்து

உட்குழிந்த கப்பல்கள்வரை தூக்கிச் சென்றனர். திடீரென மொழுந்து விட்டு எரியும் ஒரு காட்டுத்தீ, ஊருக்குள் பரவி, வீடுகளையெல்லாம் எரித்துச் சாம்பலாக்கிவிடுகிறது. ஒரு கடும் புயல் காற்றும் சேர்ந்து அழிக்கிறது. அதைப்போல, போர் வீரர்களும் தேர்களும் எழுப்பிய பேரொலி மெனிலயஸையும் மெரியோனிஸையும் பின் தொடர்ந்து வந்தது. தம் சக்தியை யெல்லாம் பயன் படுத்தி ஒரு மர உருளையை இழுத்து வரக் கஷ்டப்படும் கழுதைகளைப் போல, ஒரு பெரிய கப்பலுக்குத் தேவையான மரத்துண்டுகளை மலை மேலிருந்து பாறைபடர்ந்த பாதை வழியாகக் கீழே கொண்டு வரக் கஷ்டப்படும் கழுதை களைப் போல, களைத்துப் போய், வியர்வை வழிய, மூச்சு வாங்கி, ஆனால் உறுதி குலையாமல் மெனிலயஸும் மெரியோனிஸும் பெட்ரோக்குலஸின் உடலைத் தூக்கிச் சென்றனர்.

அவர்களுக்குப் பின்னால், எதிரிகளை முன்னேற விடாமல் தடுத்து இரண்டு அஜாக்ஸ்களும் சமாளித்துக் கொண்டிருந்தனர். கிராமப் பகுதிக்குள் வெள்ளம் வராமல் வரிசையாக அமைக்கப் பட்டிருக்கும் மரத்தால் ஆன வரம்புகள் தடுப்பதுபோல, அப்படியே வந்தாலும் அதைத் திசை திருப்பிச் சமவெளிக்குள் அனுப்புவதுபோல, பின்பக்கமாகத் தாக்கிக் கொண்டிருந்த ட்ரோஜன்களை இரண்டு அஜாக்ஸ்களும் தடுத்துக் கொண்டிருந் தனர். ஆனால் அவர்களில் குறிப்பாக இரண்டு பேர் மட்டும் ஆங்க்கைசஸின் மகனான ஈனியாஸும், கீர்த்திமிகு ஹெக்டரும் அவர்களைத் தொடர்ந்து சென்றனர். துரத்திக் கொண்டு வரும் பருந்தைக் கண்ட சிறு காக்கைகளும் குருவிகளும் தங்கள் குஞ்சுகளுக்குச் சாவு வந்து விட்டதோ என்ற அச்சத்தில் கத்திக் கொண்டே பறப்பதுபோல, ஈனியாஸையும் ஹெக்டரையும் பார்த்த கிரேக்க வீரர்களும் சண்டை செய்ய வேண்டும் என்ற மன உறுதியை இழந்தவர்களாக. குழப்பத்திலும் அச்சத்திலும் வெருண்டோடினர். வெட்டி வைத்திருந்த அகழியிலும் அதைச் சுற்றியும் அருமையான பல ஆயுதங்கள் விழுந்தன. கிரேக்கர்கள் அதை எடுக்க ஓடினர். ஆனால் சண்டை மட்டும் ஓய்ந்த பாடில்லை.

# அக்கிலிஸ் எடுத்த முடிவு

***கதைச்சுருக்கம்***

***வரிகள் 01 - 147***

*பெட்ரோக்குலஸ் இறந்த செய்தியை ஆன்ட்டிலோக்கஸ் வந்து சொல்கிறான். துக்கத்தில் இடிந்து விழுகிறான் அக்கிலிஸ். அவனுடைய ஓலங்களைக் கேட்ட அவனுடைய தாய் தீட்டிஸ் தன் கடல் தேவதைகளோடு அவனைப் பார்த்துத் துக்கம் விசாரிக்க வருகிறாள். ஹெக்டரைக் கொன்று, பழிக்குப் பழி வாங்குவேன் என்று அக்கிலிஸ் சூளுரைக்கிறான். ஹெக்டர் இறந்துவிட்டால் அதைத் தொடர்ந்து விரைவிலேயே அக்கிலிஸும் இறக்க நேரிடும் என்ற அவளுடைய எச்சரிக்கையை அவன் உதாசீனப்படுத்துகிறான்.*

***வரிகள் 148 - 242***

*அக்கிலிஸ் போர்க்களத்துக்கு வருகிறான். அதீனியின் உதவியுடன் ஒரு கூப்பாடு போட்டு ட்ரோஜன்களுக்குப் படுதோல்வியளிக்கிறான். கிரேக்க முகாமுக்கு பெட்ரோக்குலஸின் உடல் கொண்டுவரப் படுகிறது. (27ம் நாளுக்கு முந்தைய இரவு).*

***வரிகள் 243 - 314***

*அக்கிலிஸ் திரும்பி வந்து விட்டதால் குலை நடுங்கிப்போன ட்ரோஜன்கள் ஒரு கூட்டம் போடுகின்றனர். இலியத்துக்குத் திரும்பிச் சென்று விடலாம் என்று சிபாரிசு செய்கிறான் பாலிடாமஸ். ஜீயூஸ் தன் பக்கம் இருப்பதாகத் தவறாக*

நினைத்துக் கொள்ளும் ஹெக்டர் பாலிடாமஸின் கருத்தை நிராகரிக்கிறான். அடுத்த நாள் காலை தாக்குதலைத் தொடரலாம் என்ற கருத்துக்கு அவர்களை ஒப்புக்கொள்ள வைக்கிறான்.

**வரிகள் 314 – 368**

பெட்ரோக்குலஸை நினைத்து அரற்றுகிறான் அக்கிலிஸ். தன்னுடைய மரணத்தையும் முன்னறிந்தாலும் ஹெக்டரைப் பழிவாங்கத் துடிக்கிறான். பெட்ரோக்குலஸின் உடல், கழுவிச் சுத்தப் படுத்தப்பட்டு, எண்ணெய் பூசப்பட்டு, துணிபோட்டு மூடப்படுகிறது. இரவு முழுவதும் தொடர்கிறது ஒப்பாரி. அக்கிலிஸைத் திரும்பவும் போர்க்களத்துக்கு வெற்றிகரமாகக் கொண்டு வந்ததை ஜீயூஸிடம் சொல்லி ஏளமான சந்தோஷம் அடைகிறாள் ஹீரா.

**வரிகள் 369 – 467**

ஹெஃபைஸ்டஸின் வீட்டுக்கு வந்து கவச உடை கேட்கிறாள் தீட்டிஸ்.

**வரிகள் 468 – 617**

அக்கிலிஸுக்குக் கவச உடை தயாரிப்பதற்காகத் தன் உலைக் களத்துக்குத் திரும்புகிறான் ஹெஃபைஸ்டஸ். கேடயத்தைப் பற்றிய விவரணை தரப்படுகிறது.

# அக்கிலிஸ் எடுத்த முடிவு

கொழுந்துவிட்டு எரியும் தீயைப்போல அவர்கள் சண்டையிட்டுக் கொண்டனர். அப்போது விரைவாகச் சென்று செய்திகளை அறிவிக்கும் ஆன்ட்டிலோக்கஸ் தன் செய்தியுடன் அக்கிலிஸிடம் வந்தான். அலகுகளைப் போன்ற முகம் கொண்ட கப்பல்களின் முன்னால் அக்கிலிஸ் அமர்ந்து கொண்டிருந்தான்.

ஏதோ தீமை நடந்திருக்கிறது என்பதை உள்ளுணர்வால் அறிந்துகொண்ட அவன் மனம் சங்கடத்திலிருந்தது. அவன் என்ன நடந்திருக்கும் என்று யோசித்துக் கொண்டிருந்தான்.

'என்ன நடந்துகொண்டிருக்கிறது? ஏன் இப்படி நீண்ட முடி கொண்ட இந்த கிரேக்கர்களெல்லாம் விழுந்தடித்துக் கொண்டு கன்னாபின்னாவெனச் சமவெளியிலிருந்து கப்பல்களை நோக்கி ஓடிவருகிறார்கள்? என் தாய் என்னிடம் ஒருமுறை சொன்ன அந்தத் துயரச் சம்பவம் நடந்திருக்கக் கூடாதெனக் கடவுள்களை நான் பிரார்த்தித்துக் கொள்கிறேன். நான் உயிரோடு இருக்கும் போதே மெர்மிடன்களில் தலைசிறந்த வீரர்களெல்லாம் ட்ரோஜன்களிடம் தோற்று விழுந்து விடுவார்கள் என்றும், இறந்து விடுவார்கள் என்றும் அவள் சொல்லியிருந்தாள். மெனீட்டியஸின் வீரம் மிக்க மகன் பெட்ரோக்குலஸ் இறந்துவிட்டான் என்று இப்பொழுது நிச்சயமாக உணர்கிறேன். காட்டுத்தனமாகக் கோபப்படுபவன் அவன்! கப்பல்கள் தீக்கிரையாவதிலிருந்து அவைகளைக் காப்பாற்றியவுடன் இங்கே திரும்பி வந்துவிட வேண்டுமென்றும் ஹெக்டரிடம் சண்டை போட வேண்டாமென்றும் அவனிடம் நான் சொல்லியிருந்தேன்.' என்ற சிந்தனைகள் அக்கிலிஸின் மனத்தில்

ஓடிக்கொண்டிருந்தன. அப்போது, நெஸ்டரின் மகனான உயர்குடிப் பிறந்த ஆன்ட்டிலோக்கஸ் அவனுக்கு முன் வந்து நின்றான். அவனது கன்னங்களிலிலிருந்து சூடான கண்ணீர் வழிந்தோடிக் கொண்டிருந்தது.

வேதனை தரும் அந்தச் செய்தியை அவன் சொன்னான்:

'போர்த்திறம் மிக்க பீலியூஸின் மகனே, நான் என்ன சொல்வது? ஒரு பயங்கரமான செய்தியை நீ இப்பொழுது கேட்க இருக்கிறாய். அது மட்டும் உண்மையாக இல்லாமலிருந்தால் எவ்வளவு நல்லது! பெட்ரோக்குலஸ் போய்விட்டான். அவனுடைய உடல் யாருக்காக என்று அங்கே சண்டையிட்டுக் கொண்டிருக்கிறார்கள். கவச உடைகளையெல்லாம் கழற்றி அந்த உடலை நிர்வாணப்படுத்தி விட்டார்கள். உனது கவசத்தை இப்பொழுது மின்னும் தலைக்கவசம் கொண்ட ஹெக்டர் அணிந்திருக்கிறான்.' அதைக் கேட்டதும் அக்கிலிஸின் மீது ஒரு கருப்புத் துன்ப மேகம் கவிந்தது.

கரிபடிந்த மண்ணை இரு கைகளாலும் அள்ளிய அக்கிலிஸ் அதைத் தன் தலையில் போட்டுக் கொண்டான். தனது அழகிய உருவத்தை அதனால் அசிங்கப்படுத்தினான். நறுமணம் வீசிய அவனுடைய குறுந்தளருடையில் கருப்புப் புழுதி படிந்தது. தலைமுடியை இறுக்கமாகப் பிடித்துக் கொண்டான். மகா அக்கிலிஸ் புழுதியில் ஒரு ராட்சசனைப் போலக் கிடந்தான்.

அவனும் பெட்ரோக்குலஸும் பிடித்து வைத்திருந்த அடிமைப் பெண்கள் அதைப் பார்த்து அலறினார்கள். துக்கத்தில் அவர்களும் வெளியே ஓடிவந்து போர்த்திறம் மிக்க அக்கிலிஸைச் சுற்றி நின்று கொண்டார்கள். பின் மார்பில் அடித்துக் கொண்டு அரற்றியவர்களாகக் கீழே அமர்ந்து கொண்டார்கள்.

வேதனையில் கண்ணீர் வழிய நின்று கொண்டிருந்த ஆன்ட்டிலோக்கஸ் ஆதரவாக அக்கிலிஸின் கரங்களைப் பிடித்துக் கொண்டான். அக்கிலிஸ் தேம்பித் தேம்பி அழுது தன் உயர்ந்த உள்ளத்தை வெளிப்படுத்திக் கொண்டிருந்தான். ஒரு கத்தியை எடுத்துத் தன் கழுத்தையே அறுத்துக் கொண்டு விடுவானோ என்று ஆன்ட்டிலோக்கஸுக்கு அச்சமாக இருந்தது.

மரியாதைக்குரிய முதியவரான தன் தந்தையோடு கடலின் ஆழத்தில் அமர்ந்திருந்த அக்கிலிஸின் அன்னை அக்கிலிஸிட

மிருந்து வெளிப்பட்ட அச்சமூட்டும் அழுகையைக் கேட்டாள். அதன் பின் துக்கம் மேலிட அவளும் அழத்தொடங்கினாள். அந்த ஆழமான உப்புக் கடலில் இருந்த எல்லா கடல் தேவதைகளும் அவளோடு சேர்ந்து கொண்டன. க்ளாஸ், தாலியா, சிமோடோஸ், நீஸியா, ஸ்பீயோ, தோவோ, எருதுக் கண்ணாள் ஹேலீ, சிமோதோ, ஆக்டீ, லிம்னோரியா, மெலீட்டீ, அயாரா, ஆம்ஃபித்தோ, ஆகீ, டோட்டோ, ப்ரோட்டோ, ஃபெரூஸா, டைனமீனீ, டெக்ஸாமீனீ, ஆம்ஃபினோமீ, காலியனீரா, டோரிஸ், பானொப்பி, தொலைதூரத்துக்குப் புகழ்பெற்ற கலேஷியா, நெமிட்ரிஸ், அப்சியூடிஸ், காலியனாஸா, அயனீராவுடன் க்ள்மீனீ, அயனாஸா, மயீரா, ஒரீத்தியா, அழகிய கூந்தல் கொண்ட அமேதியா ஆகியோரும் இன்னும் ஆழமான அந்த உப்புக்கடலின் மற்ற கடல் தேவதைகளோடு அங்கு வந்து சேர்ந்து கொண்டனர். அந்த வெள்ளிக்குகை கடல் தேவதைகளால் நிரம்பியிருந்தது. எல்லாரும் ஒன்றாக மார்பில் அடித்துக் கொண்டார்கள். அந்த ஒப்பாரிக்கும் தீட்டிஸ் தலைமை தாங்கினாள்.

‘எனது கடல் தேவதைச் சகோதரிகளே, நான் சொல்வதைக் கேளுங்கள். என் துக்கத்தை உணர்ந்து கொள்ளுங்கள். மனிதர்களில் தலைசிறந்த ஒரு வீரனின் அன்னையான நான்தான் எவ்வளவு துரதிருஷ்டமானவள்! எவ்வளவு துயரமானவள்! எவ்வளவு பரிதாபத்துக்குரியவள்! ஒப்பாரும் மிக்காரும் இல்லாத ஒரு மகனை நான் இந்த உலகுக்குக் கொண்டு வந்தேன். அவன் ஒரு வல்லமை மிக்க வீரன். தலைசிறந்த போர்வீரன். தோட்டத்தில் முளைவிடும் சின்ன செடியைக் கவனமாக வளர்த்தெடுப்பதுபோல அவனை நான் வளர்த்தெடுத்தேன். அவனும் ஒரு நாற்றைப்போல வளர்ந்தான். ட்ரோஜன்களை எதிர்த்துப் போர்செய்ய அவனை நான் இலியத்துக்கு அனுப்பினேன். ஆனால் இனிமேல் என்னால் அவனை பீலியூஸின் வீட்டில் பார்க்கவே முடியாது. ஒவ்வொரு நாளும் அவன் வேதனைப் பட்டுக் கொண்டிருக்கிறான். ஆனால் என்னால் அவனுக்கு நன்மை ஏதும் செய்ய முடியவில்லை. ஆனாலும் இப்பொழுது என் அருமை மகனைப் போய் நான் பார்ப்பேன். போரில் கலந்துகொள்ளாதபோதும் எந்த மாதிரியான வேதனை அவனைத் தின்று கொண்டிருக்கிறது என்று கேட்டுத் தெரிந்து கொள்வேன்’ என்று சொல்லித் தன் குகையை விட்டு வெளியே சென்றாள்.

மற்ற தேவதைகளனைவரும் அழுது கொண்டே அவளுடன் சென்றனர். ஆர்ப்பரித்த கடலலைகள் அவர்களுக்கு இரண்டு பக்கமும் விழுந்து கொண்டிருந்தன. செழிப்பான ட்ராய் நகரத்தை அடைந்த அவர்கள் விரைவாகச் செயல்படும் அக்கிலிஸைச் சுற்றி மெர்மிடன்களின் கப்பல்கள் நிறுத்தி வைக்கப் பட்டிருந்த கடற்கரைப் பகுதிக்கு ஒவ்வொருவராக வந்து சேர்ந்தனர்.

வேதனையில் முனகிக் கொண்டிருந்த அக்கிலீஸிடம் சென்றாள் அவன் அன்னை. மனதை ஊடுருவிச் செல்லக் கூடிய விதமான அழுகுரலெழுப்பிய அவள் அவன் கன்னத்தை ஏந்திப்பிடித்து புலம்பிக் கொண்டே அவசரமாகச் சொன்னாள்.

'என்னருமை மகனே, ஏன் அழுகிறாய்? ஏன் இந்தத் துக்கம்? சொல்லு, உனக்குள்ளேயே வைத்துக் கொண்டு புழுங்காதே. நீ உன் கைகளை உயர்த்தி ஜீயூஸிடம் செய்த பிரார்த்தனை வீண் போகவில்லை. நீ இல்லாத காரணத்தால் இவ்வளவு கஷ்டங் களையும் அனுபவித்துவிட்டு இப்பொழுது கப்பல்களுக் குள்ளேயே கிரேக்கர்கள் அடைபட்டுக் கிடக்கின்றனர்.'

பெருமூச்சு விட்ட விரைவுப்பாத அக்கிலிஸ் சொன்னான்:

'அம்மா, என் ஒலிம்பிய நண்பன் நான் கேட்டுக் கொண்டதை யெல்லாம் செய்துவிட்டான். ஆனால் என் உயிர் நண்பனான பெட்ரோக்குலஸ் இறந்து போய்விட்ட பிறகு, என்னால் எப்படி சந்தோஷமாக இருக்க முடியும்? என்னை நம்பி இருக்கும் எல்லா வீரர்களையும்விட எனக்கு அவன் முக்கியமானவன். என் னுயிரைப் போல நான் அவனை நேசித்தேன். நான் பெட்ரோக் குலஸை அழித்துவிட்டேன். அவனைக் கொன்றவன் ஹெக்டர். இறந்து போகக்கூடிய ஒரு மானிடனான பீலீயூஸை உங்களுக்குத் திருமணம் செய்து வைக்க கடவுளர்கள் நினைத்தனர். அப்போது என் தந்தையான பீலியூஸுக்குத் திருமணப் பரிசாக அவர்கள் கவசஉடை கொடுத்தனர். அச்சத்தையும் மரியாதையையும் ஏற்படுத்தும் அருமையான கம்பீரமான அந்தக் கவச உடையைத் தந்தை எனக்குக் கொடுக்க, நான் பெட்ரோகுலஸுக்குக் கொடுத்தேன். அதை ஹெக்டர் அவனுடலிலிருந்து கழற்றி அவனை நிர்வாணப் படுத்திவிட்டான். நீ அந்த உப்புக் கடலி லேயே கடல் தேவதைகளுடன் இருந்திருந்தால், பீலியூஸும் ஒரு மானிடப் பெண்ணைத் திருமணம் செய்திருந்தால் எவ்வளவு

நன்றாக இருந்திருக்கும்! ஆனால் உண்மை என்னவெனில், நீ என் அன்னையாகிவிட்டாய். இப்பொழுது என்னை இழப்பதன் மூலம் உன் துயரங்களையும் நீ பெருக்கிக் கொள்ளப் போகிறாய். என்னை மறுபடியும் உனது வீட்டில் நீ வரவேற்கப் போவதில்லை. மனிதர்கள் வாழும் இந்த உலகிலேயே இருந்து கொண்டிருக்கும் எண்ணம் எனக்கில்லை. மெனீட்டியஸின் மகனான பெட்ரோக்குலஸைக் கொன்றதற்கு உரிய விலையை ஹெக்டர் கொடுத்தாக வேண்டும். அவனை நான் கொல்ல வேண்டும். அவ்வளவுதான்' என்றான்,

'அப்படியென்றால், நீ வெகு நாட்கள் உயிரோடு இருக்க மாட்டாய் மகனே. ஹெக்டர் இறந்த பிறகு விரைவிலேயே நீயும் போய்விடுவாய்' என்று அழுதுகொண்டே தீட்டிஸ் சொன்னாள். விரைவுப்பாத அக்கிலிஸ் மிகவும் சங்கடப்பட்டவனாக இடைமறித்துச் சொன்னான்:

'அப்படியானால் நான் உடனே இறந்துவிடுவது நல்லது. ஏனெனில் எனது நண்பனை நான் இறந்துபோக விட்டுவிட்டேன். அவனை நான் காப்பாற்றியிருக்கலாம். மரணத்திலிருந்து அவனைக் காப்பாற்ற எனது உதவி கிடைக்காமல் தனது தந்தையர் நாட்டிலிருந்து வெகு தொலைவுக்கு அவன் சென்றுவிட்டான். இப்பொழுது நானும் என் தந்தையர் நாட்டை மறுபடியும் பார்க்கப் போவதில்லை. பெட்ரோக்குலஸுக்குப் பாதுகாப்பாக நான் இருக்க முடியவில்லை. கடவுளையொத்த ஹெக்டர் கொன்ற இன்னும் எத்தனையோ வீரர்களையும் என்னால் காப்பாற்ற முடியவில்லை. இந்தப் பூமிக்கு ஒரு சோம்பேறிச் சுமையாக இங்கே சும்மா கப்பல்களில் உட்கார்ந்து கொண்டு இருந்திருக்கிறேன். விவாதங்கள் செய்வதில் வேண்டுமானால் மற்றவர்கள் என்னைவிடச் சிறப்பானவர்களாக இருக்கலாம் ஆனால் கிரேக்க வீரர்களில் யாரும் செய்ய முடியாத அளவுக்கு சிறப்பாக நான்தான் சண்டை செய்வேனாம்.

'ஐயோ இந்த போட்டியும் பொறாமையும் மனிதர்கள் மற்றும் கடவுளர்களின் உலகிலிருந்து ஒழியாதா? அதோடு சபிக்கப்பட்ட கோபமும் ஒழிந்து போகாதா? அறிவில் சிறந்த மனிதனாக இருந்தாலும் கோபம் வரும்போது அது இனிப்பாகச் சொட்டும் தேனைவிட வேகமாகப் புகையைப் போல அல்லவா உடல் முழுவது பரவிவிடுகிறது! ஐயோ, தலைவன் அகமெம்னன் எனக்குள் ஏற்படுத்திய கோபமும் அப்படித்தான் பரவியது.

எவ்வளவுதான் உள்ளுக்குள்ளேயே கோபம் கசந்துகொண்டிருந் தாலும், இப்பொழுது எல்லாம் முடிந்துவிட்டது. சரி போகட்டும். நம்முடைய பெருமையை நாம் அடக்கியாள வேண்டும். அதைத்தவிர வேறு வழியில்லை. அதனால் நான் இப்பொழுது போய் எனது நண்பனின் உயிரை எடுத்த ஹெக்டரைப் பார்ப்பேன். என்னுடைய மரணத்தைப் பொருத்தவரை, ஜீயூஸும் மற்ற கடவுள்களும் அது எப்போது வரவேண்டும் என்று நியமிக்கிறார்களோ அப்போதே நான் அதை வரவேற்பேன். க்ரோனஸின் மகனான தலைவன் ஜீயூஸுக்கு மிகவும் பிரியமானவனாக இருந்த வலிமை வாய்ந்த ஹெராக்லிஸால்கூட தன் விதியையும் ஹீராவின் கசப்பான கோபத்தையும் மீற முடியவில்லை. அதைப்போன்ற ஒரு விதி எனக்காகவும் காத்திருக்குமானால், நானும் சாகிறேன்.

'ஆனால் இனி நான் வீரஞ்செறிந்த கீர்த்தியை அடைவேன்! அந்த ட்ரோஜன் பெண்களும், (பண்டைய கிரேக்க நகரமான) டார் டானஸின் மகள்களும் ஒப்பாரி வைக்கின்ற நேரத்தில் கன்னங் களில் வழிந்தோடுகின்ற கண்ணீரைத் தங்கள் இரு கைகளாலும் துடைக்கின்றபடிச் செய்வேன். நான் ரொம்ப காலமாகப் போரில் கலந்து கொள்ளவில்லை என்பது அவர்களுக்கு அப்போதுதான் உரைக்கும். என்னை மிகவும் நேசிக்கும் அன்னையே, என்னைப் போருக்குப் போக வேண்டாம் என்று நீங்களும் சொல்லிவிடா தீர்கள். என்னைத் தடுக்க இப்பொழுது உங்களால் முடியாது' என்று சொன்னான்.

வெள்ளிப் பாதப் பெண் கடவுள் தீட்டிஸ் அவனுக்குப் பதில் சொன்னாள்.

'மகனே, களைப்படைந்திருக்கும் உனது நண்பர்களின் முகத்தில் வெறித்துப் பார்த்துக் கொண்டிருக்கும் மரணத்திலிருந்து அவர்களை நீ இப்பொழுது காப்பாற்றுவது நல்லதே. ஆனால் அருமையாக மின்னும் உனது உடல் கவசம் இப்பொழுது ட்ரோஜன்களின் கையில் உள்ளது. மின்னும் தலைக்கவசம் கொண்ட ஹெக்டர் அதைப் போட்டுக் கொண்டு பெருமையாக அலைந்து கொண்டிருக்கிறான். அவனுக்கு அந்த சந்தோஷம் வெகு நேரம் நிலைத்திருக்கும் என்று நான் நினைக்கவில்லை. ஏனெனில் அவனும் இறப்புக்கு வெகு அருகில்தான் இருக் கிறான். மறுபடியும் என்னை நீ இங்கு பார்க்கும்வரை உக்கிரமான போரில் நீ கலந்துகொள்ள வேண்டாம். நான் நாளை சூரிய

உதயத்தின்போது இங்கு வருவேன். அப்போது, ஹெஃபைஸ்டஸ் உனக்காகச் செய்த அருமையான புதிய கவச உடையைக் கொண்டுவருவேன்' என்றாள். பின் திரும்பித் தன் சகோதரிகளான நெரீட்ஸிடம் சொன்னாள். 'அகண்ட கடலின் மார்புக்குள் செல்வாயாக. கடல் கிழவன் இருக்கும் இடம் வரை சென்று நம் வீட்டுக்குப் போ. அவரிடம் எல்லாவற்றையும் சொல். என் மகனுக்கு அருமையான உடல் கவசமொன்றைச் செய்து தருகிறாரா என்று கேட்க, ஒலிம்பஸ் மலையில் வாழும் புகழ்பெற்ற கொல்லரான ஹெஃபைஸ்டஸைச் சந்திக்க நான் செல்கிறேன்.'

அவள் அப்படிச் சொன்னதும், கண் பார்வையிலிருந்து அந்தக் கடல் தேவதைகள் மறைந்தனர். ஆழ்கடலை நோக்கிச் சென்றனர். வெள்ளிப் பாதம் கொண்ட தேவதை தீட்டிஸ் தன் அருமை மகனுக்கு அற்புதமான உடல் கவசமொன்றைப் பெற்று வர ஒலிம்பஸ் மலை நோக்கிச் சென்றாள்.

அவள் போய்க் கொண்டிருந்தபோது, கொலைவெறி கொண்ட ஹெக்டரிடமிருந்து தப்பிக்க, கிரேக்க வீரர்கள் பயங்கரத்தில் அலறியவாறு அடைக்கலம் தேடித் தம் கப்பல்களுக்கும் ஹெல்லெஸ்பாண்டு 'ஜலசந்தி'க்கும் கும்பலாக ஓடிவந்ததைக் கண்டாள். அக்கிலிஸின் உதவியாளனாகிய பெட்ரோக்குலஸின் உடலை ஏவுகணைகள் படாமல் பாதுகாப்பதென்பது அவர் களுக்கு சாத்தியமில்லாத காரியமாக இருந்தது. ட்ரோஜன் காலாட்படையினர், தேர்கள், ஹெக்டர் என மாறிமாறி பெட்ரோக்குலஸின் உடலைத் தாக்கிக் கொண்டே இருந்தனர். தன் வீரர்களை உதவிக்கு அழைத்துக் கத்திக் கொண்டே மூன்று முறை பெட்ரோக்குலஸின் உடலைக் கால்பக்கமாகப் பிடித்து இழுத்துக் கொண்டு போக முயன்றான் ஹெக்டர். அந்த மூன்று முறையும் போர்வீரனுக்குரிய வீரத்துடன் இரண்டு அஜாக்ஸ் களும் அவனை அவ்வுடலிலிருந்து பிரித்து எறிந்தனர்.

ஆனால் ஹெக்டர் விடுவதாக இல்லை. உள்ளே நுழைந்து போர் செய்யாத நேரத்தில், அவன் வெளியே நின்று கொண்டு தனது புகழ்பெற்ற போர் முழக்கத்தைச் செய்தான். பின்வாங்கவே இல்லை. தான் கொன்று போட்ட இறந்த மிருகத்தின் பக்கமிருந்து பசி கொண்ட பழுப்பு நிற சிங்கத்தை நிலத்திலிருந்து விரட்ட முடியாமல் மேய்ப்பர்கள் நிற்பதுபோல, வெண்கலக் கவசம் கொண்ட இரண்டு அஜாக்ஸ்களும் ப்ரியமின் மகனான

ஹெக்டரை பெட்ரோக்குலஸின் உடலின் அருகிலிருந்து விரட்ட முடியாமல் இருந்தனர். காற்றைப் போலக் கடுகி வரும் விரைவு அய்ரிஸ் மட்டும் ஒலிம்பஸ் மலையிலிருந்து இறங்கி வந்து போருக்குத் தயாராகும்படி அக்கிலிஸிடம் சொல்லாம லிருந்தால், பெட்ரோக்குலஸின் உடலை இழுத்துக் கொண்டு போய் இறவாப்புகழை அடைந்துதான் இருப்பான் ஹெக்டர்.

ஜீயூஸிடமும் மற்ற கடவுளரிடமும் சொல்லாமல் அவளை ஹீரா அனுப்பியிருந்தாள். அக்கிலிஸிடம் வந்த அய்ரிஸ் அவனிடம் அவசரமாகச் சொன்னாள். 'எழுந்திரு வீரனே, பீலியூஸின் மகனே, வீரர்களின் மூர்க்கமானவனே, எழு, எழுந்து வந்து பெட்ரோக்குலஸுக்குத் தற்காப்பு கொடு. அவனுக்காக அவர்கள் கடுமையாகப் போராடிக் கொண்டிருக்கிறார்கள். உடலைக் காப்பாற்றும் முயற்சியில் கிரேக்கர்களும், மண்ணடிக் கும் விதமாகக் காற்று வீசும் இலியம் நகருக்கு அந்த உடலை இழுத்துக் கொண்டு போய்விடலாம் என்ற நம்பிக்கையில் ட்ரோஜன்களும் கப்பல்களின் பக்கமாக வீரர்கள் வீரர்களால் கொல்லப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். எல்லாரையும் விட அதிகமாக அப்படிச் செய்வதில் கீர்த்தி பெற்ற ஹெக்டர்தான் மிகவும் மும்முரமாக இருக்கிறான். பெட்ரோக்குலஸின் மிருதுவான தலையை வெட்டி அதை வேலிக் கழியின்மீது குத்தி வைக்க அவன் ஆசைப்படுகிறான்.

'இனிமேலும் பொறுமை வேண்டாம், எழுந்திரு! இலியம் நகரின் நாய்களுக்கு ஒரு விளையாட்டுப் பொருளாக பெட்ரோக்குலஸ் ஆகிப்போக விட்டதற்காக நீ மிகவும் அவமானப்பட வேண்டும். கீழுலகில் உள்ள இறந்தவர்களில், உடல் சிதைக்கப்பட்டு பெட்ரோக்குலஸ் மட்டும் போவானாகில் அது உனக்குத்தான் அவமானம்' என்றாள்.

விரைவுப்பாத அக்கிலிஸ் 'தெய்வீக அய்ரிஸ், உன்னை என்னிடம் அனுப்பியது எந்தக் கடவுள்?' என்றான்.

காற்றைப்போலக் கடுகிச் செல்லும் விரைவு அய்ரிஸ்லூன் னாள். 'ஜீயூஸின் மரியாதைக்குரிய மனைவியாகிய ஹீராதான் என்னை அனுப்பினாள். மேலே அமர்ந்திருக்கும் க்ரோனஸின் மகனுக்கு இது தெரியாது. பனிபடர்ந்த ஒலிம்பஸ் மலையில் வாழும் வேறு எந்தக் கடவுளுக்கும்கூட இது சொல்லப்பட வில்லை' என்றாள்.

விரைவுப்பாத அக்கிலிஸ் பதில் சொன்னான். 'ஆனால் நான் எப்படி போர் செய்யச் செல்ல முடியும்? எனது கவச உடைகள் அவர்களிடம் இருக்கின்றன. நான் திரும்பி இங்கே வரும்வரை போருக்குப் போக வேண்டாம் என்று என் அருமை அன்னையும் என்னிடம் சொல்லிச் சென்றுள்ளாள். ஹெஃபைஸ்டஸிட மிருந்து அருமையான கவச உடைகளை எனக்காகக் கொண்டு வருவதாகச் சொல்லி அவள் சென்றுள்ளாள். டிலமானின் மகனான மகா அஜாக்ஸின் கேடயத்தைத் தவிர, வேறு யாருடைய கவச உடையையும் நான் அணிந்து கொள்ள முடியுமா என்று எனக்குத் தெரியவில்லை. ஆனால் அவனும் இறந்து போன பெட்ரோக்குலஸுக்காகப் பேரழிவை ஏற்படுத்திக் கொண்டு முன் வரிசை அணியில் போர் செய்து கொண்டிருப்பான் என்று நினைக்கிறேன்.'

காற்றைப்போல கடுகிச் செல்லும் விரைவு அய்ரிஸ் அவனுக்குப் பதில் சொன்னாள்.

'உனது புகழ்பெற்ற கவசம் போய்விட்டதென்று கடவுள்களாகிய எங்களுக்கு நன்றாகத் தெரியும். நீ இப்பொழுது அகழி வரைக்கும் போ. நீ வருகிறாய் என்று உன் முகத்தை ட்ரோஜன்களுக்குக் காட்டு. உன்னைப் பார்த்து அவர்கள் நடுநடுங்கிப் போகட்டும். போர்க்களத்திலிருந்து ஓடிப்போகட்டும். களைப்படைந்திருக் கும் உனது வீரர்களுக்கு மூச்சு விட்டுக்கொள்ள கொஞ்சம் அவகாசத்தை அது கொடுக்கும். போரில் ஏது அவர்களுக்கு ஓய்வு?' இப்படிச் சொல்லிவிட்டு விரைவுப்பாத அய்ரிஸ் போய் விட்டாள்.

ஜீயூஸுக்கு மிகவும் விருப்பமான அக்கிலிஸ் எழுந்தான். தனது குஞ்சலம் வைத்த கேடயத்தை அவனது தோள்களில் அணிந்தாள் அதீனி. ஒரு தங்க மேகத்தால் அவன் தலையில் கிரீடம் வைத் தாள். அதிலிருந்து ஒளிப்பிழம்பொன்று கிளம்பி, பட்டொளி வீசியது.

வெகு தொலைவில் முற்றுகையிடப்பட்டு அலைக்கழிக்கப் படும் தீவை நோக்கி நகரத்திலிருந்து கிளம்பிய தீ வானத்தை நோக்கிப் பரவுகிறது. தமது நகர மதில்களில் இருந்து விடாப் பிடியாகவும் நம்பிக்கையிழந்தும் ஒரு சண்டையை அந்நகர வீரர்கள் செய்து கொண்டிருக்கிறார்கள். ஆனால் சூரிய அஸ்த மனத்தின்போது, உயரத்தில் இருளைக் களைய அடையாளமாக

ஏற்றி வைக்கப்பட்ட தீப்பந்தங்கள் கொழுந்துவிட்டு எரியத் தொடங்குகின்றன. வானத்தை நோக்கி உயரக் கிளம்பிய அந்த ஒளியைப் பார்த்துவிட்டு, கப்பல்களைக் காப்பாற்ற அண்டை நகரத்தார் கிளம்பி வருகின்றனர். அதைப்போல, அக்கிலிஸின் தலையில் இருந்து கிளம்பிய ஒளியின் வீச்சு வானத்தை அடைந்தது.

மதில்களைக் கடந்து சென்ற அவன் அகழியின் அருகில் நின்று கொண்டான். ஆனால் அதேசமயம், அவன் அம்மா சொன்னது நினைவுக்கு வர, கிரேக்கர்களோடு போய், சண்டையில் கலந்து கொள்ளாமல் நின்றான். அங்கே நின்ற அவன் ஒரு பேரொலியை எழுப்பினான். தூரத்தில் இருந்த பல்லாஸ் அதீனியும் தனது போர் முழக்கத்தை எழுப்பினாள். இந்த முழக்கங்கள், வார்த்தைகளால் விவரிக்க முடியாத குழப்பத்தில் ட்ரோஜன்களைக் கொண்டு விட்டன. கொலை வெறி கொண்ட எதிரிகளால் ஒரு நகரம் சூழப்படும்போது ஊடுருவிச் செல்லும் ஒலியுடன் எழுப்பப் படும் எக்காளத்தைப் போல இருந்தது அக்கிலிஸ் எழுப்பிய பேரொலி. அவனது வெண்கலக் குரலைக் கேட்டதும் ட்ரோஜன் களைப் பதற்றம் பிடித்துக் கொண்டு பயமுறுத்தியது.

அழகிய பிடரிகள் கொண்ட குதிரைகளுக்குக்கூட காற்றில் மரணம் இருப்பது புரிந்துபோனது. அவைகள் தம் தேர்களைப் பின்னோக்கி இழுக்க ஆரம்பித்தன. அணைக்க முடியாத அந்த நெருப்பைப் பார்த்துத் தேரோட்டிகள் ஸ்தம்பித்தனர். அது எருதுக்கண்ணாள் அதீனி ஏற்றியது. பீலியூஸின் மகனாகிய வீரன் மகா அக்கிலிஸின் தலையில் இருந்து அச்சமூட்டும் வகையில் ஒளிவீசும்படி அவள் செய்தது. அகழைத் தாண்டிச் செல்லுமாறு மூன்று முறை அக்கிலிஸ் பேரொலி எழுப்பினான். மூன்று முறை ட்ரோஜன்களும் அவர்களது ஆதரவாளர்களும் குழப்பத்துக்கும் பதற்றத்துக்கும் உள்ளானார்கள்.

அவர்களுடைய தலைசிறந்த வீரர்களில் பன்னிரண்டு பேர், தங்களது தேர்க்கால்களிலும் ஈட்டிகளிலும் தாங்களே மாட்டிக் கொண்டவர்களாக அந்தப் பேரொலி கேட்டு அங்கேயே உயிரை விட்டனர்.

இதற்கிடையில், நன்றி நிறைந்த நெஞ்சங்களோடு, பெட்ரோக் குலஸின் உடலை எதிரிகளின் இடத்திலிருந்து அப்பால் கொண்டு சென்றார்கள் கிரேக்கர்கள். அவனது உடலை ஒரு சவ வண்டியில்

படுக்க வைத்தார்கள். அவனது நெருங்கிய நண்பர்கள் அழுது கொண்டே அவனைச் சூழ்ந்து கொண்டார்கள். விரைவுப்பாத அக்கிலிஸ் அவர்களோடு சென்றான். தனது ஆத்ம நண்பன், எதிரிகளின் கூர் வெண்கல ஈட்டியால் குத்தப்பட்டுப் பாடையில் பிணமாகப் படுத்திருப்பதைக் கண்டவுடன் சூடான கண்ணீர் அவனது விழிகளிலிலிருந்து வழிந்தோடியது. தனது குதிரை களையும் தேரையும் கொடுத்து அவனை அக்கிலிஸ் போருக்கு அனுப்பியிருந்தான்.

திரும்பி வரும் அவனை வரவேற்காமல் இருப்பதற்கு விருப்பமில்லாவிட்டாலும் ஆழக்கடலின் ஓடைக்குத் திரும்பி வரும்படிச் சூரியனுக்குச் சொன்னாள் எருதுக் கண்ணாள் ஹீரா. சூரியன் அஸ்தமித்தான். சண்டையிலிருந்தும் போராட்டத்தி லிருந்தும் சற்று ஓய்வு பெற்றவர்களாக மகிழ்ந்தனர் கிரேக்கர் கள். போர்தானே எல்லாவற்றையும் சமப்படுத்தும்!

உக்கிரமான போரிலிருந்து ட்ரோஜன்களும் ஒதுங்கிக் கொண்ட னர். தங்கள் தேர்களிலிலிருந்து குதிரைகளை அவிழ்த்து விட்டனர். உணவைப் பற்றி யோசிப்பதற்கு, முன்னதாகச் சூழ்நிலையைப் பற்றிச் சிந்திப்பதற்காகக் கூடினர். யாருக்குமே உட்காரத் துணிவில்லை. நின்று கொண்டே கூட்டத்தைத் தொடங்கினார்கள். ஏனெனில் எல்லாருமே நீண்ட போர், அதன் வேதனைகள் ஆகியவற்றிலிருந்து ஒதுங்கியிருந்த அக்கிலிஸ் மீண்டும் போருக்குத் திரும்பி வந்ததனால் அதிர்ந்து போயிருந் தார்கள். அறிவார்ந்த பாலிடாமஸ்தான் விவாதத்தைத் தொடங்கி னான். அவன் ஒருவன்தான் கடந்த காலத்தைத் திரும்பிப் பார்ப்பதைப்போலவே வருங்காலத்தையும் உற்று நோக்குபவ னாக இருந்தான். அவன் ஹெக்டரின் நண்பர்களில் ஒருவனாக இருந்தான்.

ஹெக்டரும் அவனும் ஒரே இரவில் பிறந்தவர்களும்கூட. ஆனால் போரில் ஹெக்டர் இருந்ததைப்போல விவாத மேடை களில் பாலிடாமஸ்தான் தலைசிறந்தவனாக இருந்தான். எழுந்து பேசியபோது ட்ரோஜன்களின் நன்மையை மனத்தில் வைத்து அவன் பேசினான்:

‘இரண்டு பக்கம் உள்ள கேள்விகளையும் கவனமாகப் பரிசீலிக்க வேண்டும் என் நண்பர்களே. மதிலில் இருந்து இவ்வளவு தூரத்தில் இருக்கும் நாம் நமது நகருக்குப் பின்வாங்கிச் சென்று

விடவேண்டும் என்பதுதான் என் கருத்து. கப்பல்களில் அருகில் விடியலின் வெளிச்சம் வரும் வரை காத்திருக்கக் கூடாது. அகமெம்னனுக்கும் அக்கிலிஸுக்கும் பிரச்னை இருந்தவரை கிரேக்கர்களை வெல்லுவதில் ட்ரோஜன்களாகிய நமக்கு எந்தப் பிரச்னையும் இருக்கவில்லை. எளிதாகத்தான் அந்த வேலை இருந்தது. கப்பல்களின் அருகில் நாம் கழித்த இரவுகள் இனிமை யானவை. நானும் அவற்றை அனுபவித்தேன். உருண்டு செல்லும் அக்கப்பல்களைப் பிடித்துவிடலாம் என்று நானும் தான் நம்பினேன். ஆனால் விரைவுப்பாத அக்கிலிஸை நினைத்து நான் அஞ்சுகிறேன் இப்பொழுது. அவன் திமிர் பிடித்தவன். கிரேக்கர்களும் நாமும் எதிர்கொண்டு சண்டையிடும் சமவெளி யோடு அவன் சும்மா இருக்க மாட்டான். நமது நகரையும் நமது பெண்களையும் அவனது இலக்காக வைத்துக்கொள்வான்.

'நம்புங்கள் நண்பர்களே, நாம் இப்பொழுது இலியம் நகருக்குத் திரும்பிச் சென்றாகவேண்டும். இல்லையெனில், என்ன நடக்கும் என்று எனக்குத் தெரியும். இப்போதைக்கும் அருள்பாலிக்கப் பட்ட இரவானது அக்கிலிஸைக் கட்டுப்படுத்தி வைத்துள்ளது. ஆனால் நாளைக்கு முழுக் கவச உடையுடன் அவன் வெளியில் வந்து நம்மைத் தாக்க ஆரம்பித்தால், அது எப்படியிருக்கும் என்று தெரிந்துகொள்வதில் உங்களுக்கு ஒன்றும் சிரமமிருக்காது என்று நினைக்கிறேன். அவனிடமிருந்து தப்பி நகருக்குள் நுழையும் வீரன் தனது நட்சத்திரங்களுக்கு நன்றி சொல்வான். நாய் களுக்கும் கழுகுகளுக்கும் விருந்தாகப் போவது ட்ரோஜன் சதை! நண்பர்களே, ட்ரோஜன் சதைதான்!

'எனது வார்த்தைகள் ஒரு துர்ச்சகுனமாக மாறிவிடக் கூடாதென்று நான் பிரார்த்தித்துக் கொள்கிறேன். உங்களது சந்தேகத்தை மீறி, என் அறிவுரையை நீங்கள் கேட்டு நடப்பீர்களேயானால், இன்று இரவும் நாம் நமது படையைச் சந்தைப் பகுதியில் ஒன்றாக இருக்கச் சொல்லிச் பாதுகாத்துக் கொள்வோம். நமது நகரம் அதன் மதில் சுவர்களாலும், வானளாவிய நுழைவாயில்கள், அவற்றில் இறுக்கமாகவும் நெருக்கமாகவும் பொருத்தப்பட்ட மரக்கதவுகளாலும் பாதுகாப்பாக இருக்கும். விடியல் நேரத்தில் முழுமையாக ஆயுதம் தரித்தவர்களாக நாம் கொத்தளம் அருகே தயாராக நிற்கலாம்.

'கப்பல்களைவிட்டு வெளியே வந்து நம்மோடு சண்டை செய்ய வேண்டுமென்று அக்கிலிஸ் முடிவு செய்வானேயானால் அது

அவனுக்குத் தீமையாக முடியும். மதில்களின் மேலும் கீழுமாக நீள்கழுத்து கொண்ட குதிரைகளை அவன் ஓட்டிச் சென்று அவைகள் களைப்படைந்த பிறகு, அவைகளை மீண்டும் கப்பல் களுக்கு ஓட்டிச் செல்ல வேண்டும். அவனது கோபம் எவ்வளவு தான் ஆக்ரோஷமாக இருந்தாலும் அவனால் உள்ளே வரமுடி யாது. நம் நகரை அவனால் வெற்றி கொள்ளவே முடியாது. நமது விரைவு நாய்கள்தான் அவனை முதலில் பிடிக்கும்' என்று பாலிடாமஸ் நீளமாகப் பேசினான்.

மின்னும் தலைக்கவசம் கொண்ட ஹெக்டர் அவனை முறைத் தான். 'பாலிடாமஸ், நம்மைப் பின்வாங்கிச் செல்ல வேண்டும் என்றும், நகருக்குள் போய் ஒளிந்து கொள்ள வேண்டும் என்று சொல்கின்ற ஒருவன் என்னுடைய மொழியைப் பேசுபவனல்ல. கூண்டில் அடைபட்ட மாதிரி மதில்களுக்குப் பின்னால் எப்படி உன்னால் இருக்க முடியும்? ஒரு காலம் இருந்தது. அந்தக் காலத்தில் இந்த உலகம் முழுவதுமே ப்ரியமின் நகரைப் பற்றியும், அதன் தங்கம், வெண்கலத்தைப் பற்றியுமே பேசிக் கொண்டிருந்தது. ஆனால் அந்தக் காலம் போய்விட்டது. நமது வீடுகளில் இருந்த பொக்கிஷங்களெல்லாம் காலி செய்யப்பட்டு விட்டன. மகா ஜீயூஸ் நம்மை வெறுக்க ஆரம்பித்ததில் இருந்து அப்பொக்கிஷங்களில் பெரும்பகுதி ஃபிரிஜியாவுக்கும் அழகிய மியோனியாவுக்கும் பண்டமாற்று செய்யப்பட்டுவிட்டது. ஆனால் அரிவாள் வீசும் க்ரோனஸின் மகனான ஜீயூஸ் எனக்கு கிரேக்கக் கப்பல்களின்மீது வெற்றியைக் கொடுத்திருக்கும் இந்த நேரத்தில், கிரேக்கர்களைக் கடலுக்குள் விரட்டியடிக்க முடிந் திருக்கும் இந்த நேரத்தில், ஒன்றும் அறியாத முட்டாளான நீ என் வீரர்களின் மண்டைக்குள் இப்படிப்பட்ட எண்ணங்களை விதைக் காதே. ஒரு ட்ரோஜன் வீரன்கூட நீ சொன்னதை ஏற்று உன்னைப் பின் தொடர்ந்து வரப்போவதில்லை. அதையும் பார்க்கிறேன்' என்று சினத்துடன் கூறினான்.

'நான் இப்பொழுது சொல்வதை அனைவரும் கேளுங்கள். பாதுகாப்புக்கு வீரர்களை நிறுத்துவதற்கு மறக்காமல் ஏற்பாடு செய்துவிட்டு நம் வீரர்கள் அனைவரும் நன்றாகச் சாப்பிடுங்கள். விழிப்புடன் இருங்கள். தம் பொருள்களின்மீது எந்த ட்ரோஜனுக் காவது அதிகமான அக்கறை இருக்குமானால், அதை அவன் பொது மக்களுக்குக் கொடுக்கட்டும். அதில் அவர்கள் செழிப் படையட்டும். கிரேக்கர்கள் அவற்றையெல்லாம் அனுபவிப்

பதைவிட மக்கள் அனுபவிப்பதே நல்லது! விடியல் நேரத்தில், முழுமையாக ஆயுதம் தரித்தவர்களாக நாம் உட்குழிந்த கப்பல்களின் பக்கமாகச் சென்று போரின் பேரழிவை ஏற்படுத்த வேண்டும். அது அக்கிலிஸுக்கு மிகவும் மோசமான விளைவை ஏற்படுத்தும், அதுதான் அவனுக்கு வேண்டுமென்றால் எதிர் நிற்கட்டும். சண்டையிலிருந்து ஒதுங்கி அவனிடமிருந்து நான் ஓடப்போவதில்லை. அவனை நேருக்கு நேர் நான் சந்திப்பேன். யாருக்கு வெற்றி வருகிறது என்று பார்ப்போம். போர்க் கடவுளுக்கு உவப்பானவர்கள் என்று யாரும் கிடையாது. யார் செத்துப் போகவேண்டுமோ அவனைத்தான் அவர் கொல்வார்' என்று அவர்களிடம் ஹெக்டர் சொன்னான்.

அதை ஆமோதித்து ட்ரோஜன்கள் அனைவரும் ஒலியெழுப் பினர். முட்டாள்கள். நல்லது எது கெட்டது எது என்று பகுத்துப் பார்க்கும் அவர்களுடைய அறிவை பல்லாஸ் அதீனி அழித்திருந் தாள். பாலிடாமஸின் போர்த்தந்திரம் ஆரோக்கிய்மானதாகத்தான் இருந்தது. ஆனாலும் அவனுக்கு ஆதரவாக யாரும் குரல் கொடுக்கவில்லை. ஆனால் அனைவருமே ஹெக்டரையும் அவனது மோசமான கருத்தையும் ஆதரித்தார்கள். இப்பொழுது படை முழுவதும் சாப்பிட அமர்ந்தது.

இரவு முழுவதும் கிரேக்கர்கள் ஒப்பாரி வைத்துக் கொண்டிருந் தனர். பெட்ரோக்குலஸுக்காக துக்கம் அனுஷ்டித்தனர். பீலியூஸின் மகனான அக்கிலிஸ்தான் அந்த ஒப்பாரிக்குத் தலைவனாக இருந்தான். வீரனைக் கொல்லும் தனது கையை பெட்ரோக்குலஸின் மார்பின்மீது வைத்தான். திரும்பத் திரும்ப வேதனையில் முனகினான். புதர்க்காட்டில் இருந்த தன் குட்டி களை வேட்டைக்காரனொருவனிடம் திருட்டுக் கொடுத்து விட்டுத் தாமதமாகத் திரும்பி வந்து தன் குட்டிகளைக் காணாமல், வேட்டைக்காரனின் தடங்களைப் பின்பற்றி, காட்டுப் பாதைகள் வழியாகத் தேடிக்கொண்டு போகும் தாடியுள்ள, சினம் கொண்ட சிங்கத்தைப் போல முனகிக் கொண்டே அக்கிலிஸ் தன் மெர்மிடன்களைப் பார்த்துப் பேசினான்:

'நான் எவ்வளவு பெரிய முட்டாளாக இருந்துவிட்டேன்! பீலியஸின் அரண்மனையில் போர்வீரனான பெட்ரோக்குலஸின் தந்தை மெனீட்டியஸிடம் அச்சம் போக்கும் விதமாகப் பேசியதெல்லாம் எவ்வளவு வீண்! இலியம் நகரை வீழ்த்திய பிறகு கொள்ளைப் பொருள்களின் பங்குகளுடன் அவரது

கீர்த்திமிகு மகனைப் பாதுகாப்பாக வீட்டில் கொண்டுவந்து சேர்ப்பேன் என்று அவரிடம் நான் சொன்னேன். ஆனால் மனிதர்களின் திட்டங்களையெல்லாம் ஜீயூஸ் தவிடுபொடியாக்கி விடுகிறார். இப்பொழுது நாங்கள் இருவருமே இந்த ட்ராய் மண்ணின் ஒரு பகுதியை எங்களுடைய ரத்தத்தால் சிவப்பாக்க விதிக்கப்பட்டிருக்கிறோம். பழைய தேரோட்டியான பீலியூ ஸூம் என் அன்னை தீட்டிஸூம் தம் ஊரில் என்னை மறுபடியும் வரவேற்கப் போவதில்லை. ஆனால் நான் நின்றுகொண்டிருக் கிற இந்தப் பூமி என்னை மூடப்போகிறது. பெட்ரோக்குலஸ், உன் பின்னாலேயே உன்னை நோக்கி நானும் கீழே வந்து கொண்டிருப்பதால், உன் மாட்சிமையில் உன்னைக் கொன்ற ஹெக்டரின் தலையையும் அந்தக் கவசத்தையும் இங்கே நான் கொண்டு வந்த பிறகுதான் உன் ஈமச்சடங்குகளை நிறைவேற்ற வேண்டும் என்ற அவசியமில்லை. உனது சிதையில் வைத்து பன்னிரண்டு அருமையான ட்ராய் வீரர்களின் கழுத்தை நான் அறுப்பேன். அப்போதுதான் உனது இறப்பினால் ஏற்பட்ட கோபம் கொஞ்சமாவது எனக்குத் தணியும்.

வீரர்கள் பலர் இருந்த செழிப்பான பல நகரங்களை நாம் அழித்துக் கொண்டு வந்தபோது டார்டானஸ் நகரைப் பிடிப்பதற் காக நாம் நமது கைகளாலும் ஈட்டிகளாலும் முயன்றோம். ஒட்டியாணங்கள் அதிகமாக அணிந்து டார்டானஸின் வசிக்கும் ட்ராய் நகரப் பெண்கள் உனக்காக இரவும் பகலும் அழுது புலம்ப. அலகுகளைப் போன்ற முகங்களைக் கொண்ட எனது கப்பல்களின் பக்கமாக நீ இப்பொழுது இருப்பது போலவே அதுவரை இரு.' இப்படிச் சொல்லிவிட்டு மூன்று கால்களைக் கொண்ட ஒரு பெரிய கொப்பரையை நெருப்பின் மீது வைக்கு மாறு உத்தரவிட்டான் கடவுளையொத்த அக்கிலிஸ். பெட்ரோக் குலஸ் உடலில் கட்டி தட்டிப்போய்க் கிடந்த ரத்தத்தை முடிந்த வரை விரைவாகக் கழுவித் துடைத்தெடுக்குமாறு சொன்னான்:

மின்னிக் கொண்டிருந்த நெருப்பில் அவர்கள் ஒரு பெரிய கொப்பரையை வைத்தார்கள். அதில் நீரை ஊற்றி நிரப்பினார்கள். எரிப்பதற்காக மரத்துண்டுகளைக் கொண்டுவந்து அதன் கீழே வைத்தார்கள். தீச்சுவாலைகள் கொப்பரையின் வயிற்றை நக்க ஆரம்பித்தன. தண்ணீரில் சூடு ஏற ஆரம்பித்தது. மின்னும் அந்த வெண்கலக் கொப்பரையில் தண்ணீர் கொதி நிலைக்கு வந்த போது, பெட்ரோக்குலஸின் உடலில் ஒலிவ எண்ணெய் தடவி உடலைக் கழுவினார்கள். ஒன்பது ஆண்டுகள் சென்ற ஒரு

களிம்பை காயங்களின்மீது பூசினார்கள். பின் அந்த உடலை ஒரு சவப்பெட்டியின் மீது படுக்க வைத்தார்கள். உடலை ஒரு அருமையான சணல் நார்த்துணியால் தலைமுதல் கால் வரை போர்த்தி மூடினார்கள். அதன் மீது ஒரு வெள்ளைத் துணியை மேலங்கியாகப் பரப்பினார்கள். அந்த இரவின் மீதிப்பகுதி முழுவதற்கு விரைவுப்பாத அக்கிலிஸோடு மெர்மிடன்களும் பெட்ரோக்குலஸுக்காக அழுது புலம்பித் துக்கம் அனுஷ்டித் தார்கள்.

தனது மனைவியும் சகோதரியுமான ஹீராவிடம் ஜீயூஸ் சொன்னான்: 'ம்ஹூம், எருதுக் கண்ணாளே ஹீரா, விரைவுப்பாத அக்கிலிஸைத் தூண்டி விட்டு நீ மறுபடியும் உன் வேலையைக் காட்டி விட்டாய். நீண்ட முடிகொண்ட கிரேக்கர்கள் அனைவரும் உனது பிள்ளைகள் என்றே யாரும் நினைத்துக் கொள்வர்.'

எருதுக் கண்ணாள் சீமாட்டி ஹீரா அவனுக்கு, 'க்ரோனஸின் பயங்கரமான மகனே, நீங்கள் இப்பொழுது என்ன சொல்ல வருகிறீர்கள்? நமக்கிருப்பதைப் போன்ற அறிவு இருக்க வாய்ப்பில்லாத, செத்துப் போகக்கூடிய சாதாரண மானிடன்கூட இன்னொருவனுக்காக முயன்று தனக்கு என்ன வேண்டுமோ அதைப் பெற்றுக் கொள்வான். அப்படியிருக்கும்போது, பிறப்பாலும், எல்லாக் கடவுள்களுக்கும் தலைவராக இருக்கின்ற உங்களுடைய அங்கீகரிக்கப்பட்ட மனைவி என்ற உரிமையாலும் பெண் கடவுள்களில் தலைசிறந்தவளாகிய நான் மட்டும், ட்ரோஜன்களுக்கு எதிராகப் பற்றி எரிந்து கொண்டிருக்கும் நான் மட்டும் அவர்களுக்கு ஏதும் தொல்லை கொடுக்காமல் எனது கோபத்தை எப்படிக் கட்டுப் படுத்திக் கொண்டிருக்க முடியும்?' என்று பதிலுரைத்தாள்.

அவர்கள் இவ்விதமாகப் பேசிக்கொண்டிருந்த நேரத்தில் வெள்ளிப்பாதம் கொண்ட தீட்டிஸ் ஹெஃபைஸ்டஸின் நட்சத் திர அரண்மனை நோக்கி சென்று கொண்டிருந்தாள். சின்ன குழிப்பந்து மட்டை போன்ற பாதம் கொண்ட அந்தக் கடவுள் அந்த அரண்மனையைத் தனது கையாலேயே அழியாத வெண் கலத்தால் கட்டியிருந்தான். கடவுளர்களின் வீடுகளிலேயே அது ஒளிமயமாக மின்னிக் கொண்டிருந்தது. அவள் சென்றபோது வியர்வை வர உலைத்துருத்தியை ஊதி ஊதித் தனது உலைக் களத்தில் கடுமையாக உழைத்துக் கொண்டிருந்தான் அவன். நன்றாக எழுப்பப்பட்ட தனது மண்டபத்தைச் சுற்றிப்

பாதுகாப்பாக இருக்க, இருபது முக்காலிகளின் ஜோடியை அவன் உருவாக்கிக் கொண்டிருந்தான். கடவுளர்களின் சபை கூடும் போது ஓடிச்செல்லவும் திரும்பி வரவும் வசதியாக அவைகளின் கால்களில் தங்கத்தால் ஆன சக்கரங்களை இணைத்தான். தன்னைத் தானாகவே முன்னோக்கிச் செலுத்தக் கூடிய வகையில் அமைக்கப் பட்டிருந்த அற்புதமான காட்சி அது. அவைகளை அவன் செய்து முடிக்கவில்லை. இன்னும் கொஞ்சம் வேலை பாக்கியிருந்தது. அலங்காரம் செய்யப்பட்ட கைப்பிடிகளையும் குடையாணிகளையும் பொருத்திக் கொண்டிருந்தான்.

அவனுடைய திறமை முழுவதும் தேவைப்பட்ட அந்த வேலை யில் ஹெஃபைஸ்டஸ் ஈடுபட்டிருந்தபோதுதான் வெள்ளிப் பாதப் பெண் கடவுளான தீட்டிஸ் உள்ளே நுழைந்தாள். கீர்த்திமிகு ஊனமுற்ற கடவுளின் மனைவியாகிய ச்சாரிஸ், மங்கலாய் ஒளி வீசும் அழகிய தலையலங்காரம் மின்ன, வீட்டை விட்டு வெளியில் வந்து தீட்டிஸைப் பார்த்தாள். தீட்டிஸின் கையின் மேல் தன் கையை வைத்து அவள் சொன்னாள்:

'நீண்ட அங்கி கொண்ட தீட்டிஸ், எங்கள் வீட்டுக்கு நீ வந்திருப் பதன் நோக்கம் என்ன? இதற்குமுன் நீ எங்கள் வீட்டுக்கு வருகின்ற பழக்கம் கொண்டவள் இல்லை என்றாலும் எங்கள் வீட்டுக்கு வருகை தரும் மரியாதைக்குரிய விருந்தாளி நீ. சரி, உள்ளே வா, நான் உனக்கு மரியாதை செய்ய வேண்டும்.'

இந்த வார்த்தைகளைச் சொல்லி அந்தத் தெய்வீகப் பெண் தெய்வம் அவளை உள்ளே அழைத்துச் சென்று அவளை ஒரு அழகான, அலங்கார வேலைப்பாடுகள் கொண்ட வெள்ளி நாற்காலியில் அமர வைத்தாள். அதன் கீழே காலை வைப்பதற்கு ஒரு முக்காலியையும் வைத்தாள். அதன் பின் அவள் கீர்த்திமிகு கொல்லனாகிய ஹெஃபைஸ்டஸை அழைத்து 'ஹெஃபைஸ் டஸ், இங்கே வாருங்கள். தீட்டிஸ் உங்களிடம் ஏதோ உதவி கேட்க வந்திருக்கிறாள்' என்று சொன்னாள்.

கீர்த்திமிகு நொண்டிக் கடவுள் பதில் சொன்னான்:

'என்னது, தீட்டிஸா இங்கே வந்திருக்கிறாள்? நான் மிகவும் மரியாதை கொடுத்துக் கௌரவிக்கும் தெய்வமல்லவா அவள்! நான் ஊனமாய்ப் பிறந்துவிட்டேன் என்பதற்காக என்னைப் பெற்றெடுத்த பெண் நாய் என்னைத் தொலைத்துக் கட்ட வேண்டும் என்று விரும்பி, வானத்திலிருந்து கடலுக்குள் என்னை

எறிந்தபோது, நான் பட்ட மன வேதனையிலிருந்து என்னைக் காத்த தெய்வமல்லவா! கடல் தேவதையான தீட்டிஸூம், சுழலும் ஓடைகள் கொண்ட ஓஷனின் மகளான யூரினோமியும் என்னை அவர்கள் மார்பினில் அணைத்துக் கொண்டிருக்கா விட்டால், நான் எவ்வளவு கஷ்டப் பட்டிருப்பேன்!

'ஊக்குகளும், ரோஜா மலரின் வடிவம் கொண்ட அணிகலன் களும், காதணிகளும், கழுத்து நகைகளும் செய்து கொடுத்துக் கொண்டு நான் அவர்களோடு வில் போல வளைவான கூரைகள் அமைந்த அவர்களது குகை வீட்டினுள் ஒன்பது ஆண்டுகள் இருந்தேன். அங்கே எப்போதுமே கடல் ஓடையிலிருந்து நுரைகளோடு அலைகள் சுற்றிக் கொண்டிருக்கும். பூமியிலோ ஒலிம்பஸ் மலையிலோ இருந்த யாருக்கும் அந்த ரகசியம் தெரியாது. யூரினாமியும் தீட்டிஸூம்தான் என்னைக் காப்பாற்றிய வர்கள். அந்த தீட்டிஸ், அழகிய கூந்தல் கொண்ட அந்த தீட்டிஸ் இப்பொழுது நம் வீட்டில்! என்னைக் காப்பாற்றியதற்காக நான் அவளுக்கு நிச்சயம் ஏதேனும் கைம்மாறு செய்ய வேண்டும். நல்லபடியாக அவளைக் கவனித்துக் கொண்டிரு. என் காற்றூதும் துருத்தியையும் கருவிகளையும் வைத்துவிட்டு வந்துவிடு கிறேன்' என்று சொல்லிவிட்டு ஹெஃபைஸ்டஸ் தனது பெரிய ஆகிருதியைப் பட்டறைக் கல்லில் இருந்து பெருமூச்சு விட்டவாறே தூக்கினான்.

அவன் நொண்டினான் என்றாலும், அவனது வளர்ச்சி குன்றிய கால்கள் சுறுசுறுப்பாகத்தான் இயங்கின. உலைத்துருத்தியை நெருப்பிலிருந்து எடுத்து, தூரமாக வைத்தான். பயன்படுத்திக் கொண்டிருந்த எல்லாக் கருவிகளையும் ஒட்டு மொத்தமாக அள்ளினான். அவற்றை ஒரு வெள்ளிப் பெட்டிக்குள் வைத்தான். பின்னர் தனது கன்னங்களையும், கைகளையும், திடமான கழுத்தையும், முடி நிறைந்த மார்பையும் பஞ்சால் துடைத்துக் கொண்டான். பின் குறுந்தளருடையை அணிந்து கொண்டான். ஒரு தடித்த கழியை எடுத்துக் கொண்டு நொண்டிக் கொண்டே தன் உலைக் களத்திலிருந்து வெளியே வந்தான்.

எஜமானனுக்குப் பணிவிடைகள் செய்ய பணிப்பெண்கள் ஓடிவந்தனர். அவர்கள் தங்கத்தால் செய்யப்பட்டிருந்தனர். ஆனால் பார்ப்பதற்கு உண்மையான பெண்களைப் போலவே இருந்தனர். அவர்களால் பேசவும், உடல் உறுப்புக்களை அசைக்கவும் மட்டுமல்ல, அறிவோடும் இருந்தனர். நித்தியர்

களாகக் கடவுளர்களிடமிருந்து அவர்கள் தங்கள் தொழிலைத் திறம்படக் கற்றிருந்தனர். பரபரப்புடன் தம் எஜமானனைச் சுற்றி பணிவிடை செய்வதற்காக அவர்கள் ஓடினாலும் தீட்டிஸ் உட்கார்ந்திருந்த இடத்தை நோக்கி நொண்டி நொண்டிச் சென்றான் ஹெஃபைஸ்டஸ். ஒரு பளபளப்பாக்கப்பட்ட நாற்காலியில் போய் அமர்ந்தான்.

தீட்டிஸின் கைமீது தன் கையை வைத்துச் சொன்னான்:

'நீண்ட அங்கி கொண்ட தீட்டிஸ், எங்கள் வீட்டுக்கு நீ வந்திருப்பதன் நோக்கம் என்ன? இதற்குமுன் நீ எங்கள் வீட்டுக்கு வருகின்ற பழக்கம் கொண்டவள் இல்லை என்றாலும் எங்கள் வீட்டுக்கு வருகை தரும் மரியாதைக்குரிய விருந்தாளி நீ. என்ன காரியமாக நீ எங்கள் வீட்டுக்கு வந்திருக்கிறாய்? உன் மனத்தில் உள்ளது என்னவென என்னிடம் சொல். என்னால் முடியு மென்றால், சாத்தியமான காரியமென்றால், நீ கேட்பதை நான் மகிழ்ச்சியாகச் செய்து கொடுப்பேன்.'

பொங்கி வந்த அழுகையுடன் தீட்டிஸ் பதில் சொன்னாள்: 'ஹெஃபைஸ்டஸ், ஒலிம்பஸ் மலை வாழும் எல்லா தேவதை களிலும் என்னைப் போல வேதனையையும் கடுந்துயரையும் அனுபவிக்கும் தேவதை யாராவது ஒருவர் உண்டா சொல். அதுவும் மற்ற கடவுளர்களால் அல்ல, ஜீயூஸின் கைகளினால்?! நான் ஒரு கடல் தேவதையாக இருந்தேன். எல்லாரையும் விட்டுவிட்டு அகேயஸின் மகனான பீலியூஸை, ஒரு மானிடனை மணந்து கொள்ள என்னைத் தேர்ந்தெடுத்தார் ஜீயூஸ். அதுவும் என் விருப்பத்து முற்றிலும் எதிராக. ஒரு மானிடனோடு என் படுக்கையை நான் பகிர்ந்து கொள்ள விதிக்கப்பட்டேன். பரிதாபமான மூப்பு வந்தவராக என் கணவர் இப்பொழுது வீட்டில் இருக்கிறார். ஆனாலும் ஜீயூஸுக்கு இதெல்லாம் போதவில்லை போலிருக்கிறது. நான் பெற்று வளர்த்தெடுக்க எனக்கு ஒரு மகனையும் கொடுத்தார். அவனோ போர் வீரர்களில் தலைசிறந்தவன். ஒரு தோட்டத்தில் சின்ன செடியொன்றை வளர்த்தெடுப்பது போலக் கவனமாக அவனை நான் வளர்த்து உருவாக்கினேன். அவனும் ஒரு நாற்றைப் போல வளர்ந்தான். ட்ரோஜன்களுக்கு எதிராக இலியம் நகருக்குச் சென்று சண்டையிட அவனை நான் கப்பல்களில் அனுப்பினேன். ஆனால் இப்பொழுது அவனை நான் பீலியூஸின் வீட்டில் மறுபடியும் பார்க்க முடியாது. அவனுக்கு நல்வரவு கூற

முடியாது. அவன் இன்னும் அனுதினமும் வேதனைப் பட்டுக் கொண்டிருக்கிறான். அவன் பக்கம் போயும் என்னால் அவனுக்கு உதவ முடியவில்லை.

'கிரேக்கப் படைகள் என் மகனுக்குப் பரிசாகக் கொடுத்த ஒரு பெண்ணை தலைவன் அகமெம்னன் அவனுக்காக எடுத்துக் கொண்டு விட்டான். அவளில்லாமல் மிகுந்த வேதனையடைந் துள்ளான் என் மகன். அதன் விளைவாகக் கிரேக்கர்களைக் கப்பல் களுக்கே மறுபடியும் துரத்தி அங்கேயே குத்தி வைத்துள்ளனர் ட்ரோஜன்கள். கப்பல்களிலிலிருந்து அசையக்கூட விடாமல் அவர்களை ட்ரோஜன்கள் வைத்துள்ளனர். அக்கிலிஸை சமாதானப்படுத்த கிரேக்கத் தூதுவர்கள் அனுப்பப்பட்டனர். ஏகப்பட்ட கௌரவம் மிக்க பரிசுப்பொருள்களையும் தருவதாக அவனுக்கு ஆசை காட்டினர். எனினும், அவன் போகாமல், தன் கவச உடையை பெட்ரோக்குலஸுக்குக் கொடுத்து, ஒரு ஆற்றல் மிக்க படையுடன் அவனைப் போருக்கு அனுப்பினான். ஸ்கேய வாயில் அருகில் அவர்கள் நாள் முழுதும் போரிட்டனர். அன்றே இலியம் நகரையும் வெற்றி கொண்டு அழித்திருப்பார்கள். ட்ரோஜன் படைகளுக்குள் புகுந்து பேரழிவை ஏற்படுத்தினான் புபெட்ரோக்குலஸ். ஆனால் முன் வரிசை அணியில் நின்று போர் செய்த அவனைக் கொன்று புகழை ஹெக்டருக்குக் கொடுத்தான் அப்போலோ.

'எனவே நான் இப்பொழுது உன் பாதங்களில் விழுந்து கெஞ்சிக் கேட்க வந்துள்ளேன். விரைவிலேயே இறந்து போக இருக்கும் என் மகனுக்கு ஒரு கேடயம், ஒரு தலைக்கவசம், குதிகாலில் பற்றிப் பிடித்துக் கொள்ளும் அமைப்பு கொண்ட முழங்காலுக்குக் கீழே பாதுகாப்பு தரும் ஒரு ஜோடி பாதுகாப்புப் பட்டைகள் மற்றும் உடல் கவசம் ஆகியவைகளைச் செய்து தரவேண்டும் என்று உன்னை வேண்டிக்கொள்ள வந்திருக்கிறேன். அவனு டைய நண்பன் பெட்ரோக்குலஸை ட்ரோஜன்கள் வென்ற போது, அக்கிலிஸிடம் முன்னர் இருந்த அக்கவசங்கள் பிடுங்கப் பட்டுவிட்டன. அவன் உடல்மீது விழுந்து அக்கிலிஸ் அழுது அரற்றிக் கொண்டிருக்கிறான்.'

கீர்த்திமிகு நொண்டிக் கடவுள் பதில் சொன்னான்: 'தைரியமாக இரு. இதைப் பற்றியெல்லாம் கவலைப்படாதே. பார்ப்பவர் களுக்கெல்லாம் அற்புதமாக இருக்கப் போகின்ற கவச உடைகளை நான் உன் மகனுக்காக செய்யப் போகிறேன். ஆனால்

அதைச் செய்வது எனக்கு எவ்வளவு எளிதான காரியமோ அதைப் போல, இறப்பின் வேதனைகளிலிலிருந்து அக்கிலிஸைக் காப்பாற்றவும் என்னால் முடிந்ததென்றால் எவ்வளவு நன்றாக இருக்கும்!' இப்படிச் சொல்லிவிட்டு ஹெஃபைஸ்டஸ் அவ்விடம் விட்டகன்று தன் உலைக்களத்துக்குச் சென்றான்.

அங்கே சென்று உலைத்துருத்தியை இயக்கத் தொடங்கினான். வேலைகளைச் சரியாகச் செய்யும்படி அவற்றுக்கு உத்தர விட்டான். உலைத்துருத்திகள் - அங்கே இருபது இருந்தன - தும்பு வாய் வழியாகக் காற்றை ஊதி ஊதிப் பல திப்சைகளில் இருந்தும் நெருப்பை ஆரோக்கியமாகப் பெருக்கின. கொல்லனின் தேவைக்குத் தக்கவாறு வேகமாகவும் மெதுவாகவும். வேலை நடந்து கொண்டிருந்த நிலைக்குத் தக்கவாறு. பின் உலோகங் களை உருக்கும் பானையின் உள்ளே அழியாத வெண்கலத்தை யும், கொஞ்சம் வெள்ளீயத்தயும், மதிப்பு மிகுந்த தங்கத்தையும் வெள்ளியையும் இட்டான். பின் ஒரு பெரிய உலையடி இரும்பை அதன் இடத்தில் வைத்தான். ஆற்றல் மிக்க சுத்தி ஒன்றை ஒரு கையிலும் இடுக்கியை இன்னொரு கையிலும் பிடித்துக் கொண்டான்.

பெரியதொரு கனமான கேடயம் செய்வதில் தொடங்கினான் அவன். அதன் எல்லாப் பகுதிகளையும் அவன் அலங்கரித்தான். அதைச் சுற்றி மூன்று அடுக்குகளில் வருமாறு மின்னும் உலோக அடுக்குகளை வைத்தான். அதை வெள்ளித் தோல் பட்டை கொண்டு பொருத்தினான். அந்தக் கேடயத்தில் மொத்தம் ஐந்து அடுக்குகள் இருந்தன. அவற்றின் மீதும் அவன் எல்லா வகையான அலங்காரங்களையும் செய்தான். தன் பரிபூரணத் திறமையை அதில் அவன் காட்டினான்.

பூமி, வானம், கடல், களைப்புறாத சூரியன், முழு நிலவு, வானத்தை அழகு படுத்தும் ப்ளியாடிஸ், ஹயாடிஸ், மகா மிருகசீ ரிடம், சப்தரிஷி நட்சத்திரக் கூட்டங்கள் ஆகிய அனைத்தையும் செய்தான். கடலோடையில் குளிக்காத ஒரே நட்சத்திரக் கூட்டம் இந்த சப்தரிஷிக் கூட்டம்தான். ஆனால் ஒரே இடத்தில் சுற்றிக் கொண்டு, களைப்புற்ற கண்களுடன் வேட்டைக்காரன் ஓரியனையே குறுக்கில் பார்த்துக்கொண்டிருக்கும்.

அடுத்ததாக அவன் நிறைய மக்களைக் கொண்ட இரண்டு ஊர்களை உருவாக்கினான். ஓர் ஊரில் திருமணங்களும் விருந்து

களும் அமர்க்களப்பட்டன. தெருக்களின் வழியாக மணப் பெண்களை அவர்கள் வீடுகளிலிலிருந்து அழைத்து வந்து கொண்டிருந்தனர். கொழுந்துவிட்டெரியும் தீப்பந்தங்களோடு. கல்யாணப் பாடலை வெகு தூரத்துக்குத் தெளிவாகக் கேட்க முடிந்தது. குழல் வாத்தியக் கருவிகள், யாழிசைக்கு ஏற்றவாறு இளைஞர்கள் சுழன்று கொண்டே நடனமாடினர். வீடுகளின் கதவோரங்களில் நின்று பெண்கள் இதையெல்லாம் வேடிக்கை பார்த்தனர்.

ஆண்கள் சபைக் கூட்டங்களில் கூடியிருந்தனர். கொல்லப்பட்ட ஒருவனுக்கு நஷ்ட ஈடு தருவது தொடர்பாக இரண்டு வீரர்களுக்கு மத்தியில் விவாதமும் தகராறும் ஏற்பட்டன. பிரச்சனையைத் தீர்ப்பதற்குத் தங்களுக்கே உரிமை உள்ளது என்று ஒரு பக்கத்தினர் கூறினர். இன்னொரு அணியினரோ எந்த நஷ்ட ஈடும் பெறுவது சரியல்ல என்று மறுத்தனர். ஒரு அனுபவமிக்க நிபுணரைக் கொண்டு இந்தப் பிரச்சனைக்கு முடிவு காண வேண்டுமென்று இரண்டு பக்கத்தினருமே வற்புறுத்தினர். கூட்டத்திலிருந்து இரண்டு பக்கத்துக்கும் ஆதரவாக இருந்த மக்களிடமிருந்து ஆதரவுக் குரல்கள் எழுந்தன.

கட்டியக்காரர்கள் அவர்களைக் கட்டுப்படுத்த முயன்று கொண் டிருந்தனர். அனுபவம் கொண்ட முதியவர்கள் மிருதுவான கல் இருக்கைகளின் மீது ஒரு புனித வட்ட வடிவில் அமர்ந்தனர். தெளிவான குரல் கொண்ட கட்டியக்காரர்களிடமிருந்து பேச்சாளரின் கையில் இருந்த கழியைப் பெற்றுக்கொண்டனர். இரண்டு பக்கத்தினரும் நீதிபதிகளை நோக்கி ஓடி வந்தனர். (கிட்டத்தட்ட 26 கிலோகிராம் எடை கொண்ட) இரண்டு தங்க 'டாலண்ட்டு'களை ஒவ்வொரு அணியினரும் கொடுத்தனர் இவையனைத்தும் கேடயத்தின் மையத்தில் செதுக்கப்பட்டன. மிகச் சரியான தீர்ப்பு வழங்கிய முதிய நீதிபதிகளுக்குரிய பணமாக அவை இருந்தன.

இன்னொரு நகரமோ இரண்டு படைகளால் முற்றுகையிடப் பட்டிருந்தது. அந்த வீரர்கள் அவர்களது மின்னும் கவச உடைகளில் தோற்றமளித்தனர். முற்றுகையிடப்பட்ட நகரத்தை உடனே அழித்தொழித்துவிடுவதா அல்லது சரணடைவதற்காக நகரமக்கள் தரும் நகரின் செல்வங்களில் பாதியைப் பெற்றுக் கொண்டு விட்டுவிடுவதா என்று முடிவு செய்ய முடியாமல் முற்றுகையிட்டவர் இரண்டு மனநிலையில் இருந்தனர்.

என்றாலும் நகர மக்கள் போராட்டத்தை விட்டுவிடவில்லை. ரகசியமாக அவர்கள் ஒரு திடீர்த் தாக்குதலுக்குத் தயாராகிக் கொண்டிருந்தார்கள். தங்கள் மனைவிமார்களையும் சிறு குழந்தைகளையும் மதிலருகில் தற்காப்பு செய்யட்டும் என்று விட்டுவிட்டு, ஏரிஸ் மற்றும் பல்லாஸ் அதீனியின் தலைமையில் அவர்கள் முன்னேறிச் சென்றனர்.

அவர்கள் உடல்கள் தங்கத்தால் செய்யப்பட்டிருந்தன. தங்கத்தால் செய்யப்பட்ட ஆடையை அவர்கள் அணிந்திருந் தனர். கவச உடைகளில், சிறிய அளவில் இருந்த அவர்களுக்கு மேலே நின்று கொண்டிருந்த கடவுளர்களைப்போல பெரிய ஆகிருதி கொண்டவர்களாகவும் அழகாகவும் தோன்றினர். ஒரு ஆற்றுப்படுகையை ஒட்டிய இடம்தான் திடீர்த்தாக்குதலுக்கு ஏற்ற இடம் என்பதை நகரமக்கள் தெரிந்துகொண்டனர். அங்கேதான் எல்லாக் கால்நடைகளும் நீரருந்த வந்தன. மின்னும் தங்களது வெண்கலக் கவச உடையுடன் அவர்கள் அங்கே அமர்ந்தனர். தூரத்தில் முற்றுகையிட்ட எதிரிகளின் கப்பல்களோ வளைந்த கொம்புகள் கொண்ட கால்நடையோ வருவதைக் கவனிக்க இரண்டு ஒற்றர்களை நிறுத்தினர்.

ஆனால் சீக்கிரமாகவே அங்கே ஊதுகுழல்களை வைத்து விளையாடிக் கொண்டிருந்த, சந்தேகம் எதுவும் படாத இரண்டு மேய்ப்பர்களின் கண்காணிப்பில் வந்து சேர்ந்தன கால்நடைகள்.

பதுங்கியிருந்தவர்கள் பாய்ந்து வந்து அருமையான எருதுகளை யும் வெள்ளாடுகளையும் சுற்றி வளைத்துக்கொண்டு மேய்ப்பர் களைக் கொன்றனர். ஆனால் விவாதத்தில் ஈடுபட்டிருந்த முற்றுகையிட்டவர்கள் கால்நடைகள் தாக்கப்பட்டதால் எழுந்த குழப்பமான ஒலிகளைக் கேட்டனர். குதித்தோடும் குதிரைகள் பூட்டப்பட்ட தேர்களில் உடனே ஏறி சப்தம் வந்த திசையை நோக்கி விரைந்து வந்து சேர்ந்தனர். ஆற்றின் கரையோரமாக ஓர் உக்கிரமான சண்டை நடந்தது. வெண்கல ஈட்டிகளாலான ஏவுகணைகள் மாறிமாறி வீசிக்கொள்ளப் பட்டன. சண்டையும் பதற்றமும் ஒத்துழைக்க, அங்கே பயங்கரமான மரணப் பேய் வந்து சேர்ந்தது. அப்போதுதான் காயம்பட்ட ஒரு வீரனின் மீதும் இன்னும் காயம்படாத இன்னொருவன் மீதும் அது கை வைத்தது. ஒரு உடலைக் காலால் இழுத்துக் கொண்டும் சென்றது. அதன் மீது கிடந்த மேலங்கி மனித ரத்தம் தோய்ந்து சிவப்பு நிறத்தில் இருந்தது.

உண்மையான உயிருள்ள வீரர்கள் செய்வது போலவே, போர்வீரர்கள் ஒருவரையொருவர் எதிர்கொண்டு சண்டையிட் டனர், இறந்த உடல்களை இழுத்துக் கொண்டு போயினர்.

இதன்பிறகு ஹெஃபைஸ்டஸ் அந்தக் கேடயத்தின் மீது ஒரு பெரிய செழிப்பான, மூன்று முறை உழப்பட்ட தரிசு நிலத்தை ஏறினான். அந்த நிலத்தின் மேலாகவும் கீழாகவும் பல உழவர்கள் தங்கள் காளைகளை ஓட்டி உழுது கொண்டிருந்தனர். நிலத்தில் முடிவான ஓரம் வரை சென்று திரும்பி வந்தாக வேண்டும் என்ற நிலையில், ஒருவன் அவர்களுக்கு, சுவையான மதுவை ஒரு கோப்பையில் வழங்குவான். பின் அந்த ஆழமான தரிசு நிலத்தின் இன்னொரு முனையை அடைய விரும்பியவர்களாக, அதன் உழுசால்கள் வழியாக மீண்டும் தங்கள் பணியைத் தொடங்கு வார்கள். தங்கத்தால் செய்யப்பட்ட நிலம் என்றாலும், அவர்கள் உழுது கொண்டே செல்லச் செல்ல அவர்களுக்குப் பின்னால் அது கருப்பாகிக் கொண்டே போனது. அது ஒரு அற்புதமான வேலைப்பாடாக இருந்தது.

பின் அதன் மீது ஒரு தலைவனின் பண்ணையையும் வைத்தான் ஹெஃபைஸ்டஸ். அதில் அறுவடை செய்ய கூலியாட்கள் கைகளில் கூர்மையான அரிவாள்களோடு களமிறங்கியிருந்தனர். அவர்கள் வெட்டி வைத்திருந்த பாதையில் கை நிறைய கதிர்கள் ஒவ்வொன்றாக பூமியில் விழுந்துகொண்டிருந்தன.

பின்னால் நின்ற தானியக் கதிர்க்கட்டுபவர்கள் அவற்றைக் கட்டிக் கொண்டிருந்தனர். கதிர்க்கட்டுபவர்கள் மூன்று பேர் வேலை செய்து கொண்டிருந்தனர். கொஞ்சம் தள்ளி சிறுவர்கள் தயாராக நின்று கொண்டிருந்தனர். கதிர்களைப் பொறுக்கிக் கைகளால் அள்ளி தூக்கிக் கொண்டு போய், அவற்றைக் குவித்துச் சேர்த்து வைக்கச் சென்றனர். அங்கே அவர்கள் மத்தியில் அவர் களின் முதலாளியும், நடப்பதையெல்லாம் பார்த்து சந்தோஷப் பட்டவனாக, அறுவடை செய்பவர்கள் நின்று கொண்டிருந்த முனையில், கையில் ஒரு கழியுடன் நின்று கொண்டிருந்தான். அறுவடை நடந்து கொண்டிருந்த இடத்துக்குச் சற்று தூரத்தில் இருந்த ஒரு கருவாலி மரத்தின் கீழே, அவனுடைய உதவி யாளர்கள் விருந்து தயார் செய்து கொண்டிருந்தார்கள். தாங்கள் கொன்ற ஒரு பெரிய காளை மாட்டைப் பதப்படுத்துவதில் அவர்கள் மும்முரமாக இருந்தார்கள். தொழிலாளர்களின் இரவு

உணவுக்காக, மாட்டுக்கறியின் மீது கொஞ்சம் வெள்ளை வால் கோதுமையைத் தூவிக் கொண்டிருந்தார்கள் பெண்கள்.

அதன் பிறகு கேடயத்தின்மீது ஒரு திராட்சைத் தோட்டத்தை நிறைய திராட்சைகளுடன் வைத்தான் ஹெஃபைஸ்டஸ். தங்கத்தில் செய்யப்பட்டிருந்த அது மிகவும் அழகாக இருந்தது. ஆனால் திராட்சைக் கொத்துகள் கருப்பு நிறத்திலேயே இருந்தன. அவற்றைத் தாங்கி நிற்கும் கொடிகளோ முழுவதும் வெள்ளியில் இருந்தன. அதைச்சுற்றி ஒரு நீலநிற உள் அலங்காரம் செய்தான் அவன். அதற்கு வெளியே வெள்ளீயத்தில் ஒரு வேலியையும் அமைத்தான். திராட்சைப் பழச்சாற்றை வடித்து இறக்க, பழம் எடுப்பவர்கள் வந்து போக தோட்டத்தில் தனியான ஒரு பாதையும் போடப்பட்டது. இளம் பெண்களும் உற்சாகமான சிறுவர்களும் இனிய திராட்சைப் பழங்களைக் கூடைகளில் எடுத்துச் சென்றனர். அவர்களுக்கு நடுவில் ஒரு சிறுவன் சுதி கூட்டப்பட்ட யாழொன்றை மீட்டி இசைத்துக் கொண்டே ஒரு பாடலை உச்சஸ்தாயியில் பாடிக் கொண்டிருந்தான். அவனோடு சேர்ந்து அவர்களும் பாடிக்கொண்டு, கத்திக் கொண்டு, நடனமாடிக் கொண்டு தாளமிட்டனர்.

நேரான கொம்புகள் கொண்ட தங்கத்தாலும் வெள்ளீயத்தாலும் செய்யப்பட்ட கால்நடைகளையும் ஏற்றினான் ஹெஃபைஸ் டஸ். முணுமுணுக்கும் ஓடையைச் சுற்றி வளர்ந்து கிடந்த காற்றில் ஆடிக்கொண்டிருக்கும் நாணல் புற்களை மேய, தொழுவத்திலிருந்து அந்த மாடுகள் 'ம்மா' என்று கத்திக் கொண்டே வெளியே ஓடி வந்தன. தங்கத்தால் செய்யப்பட்ட நான்கு மேய்ப்பர்கள் அவைகளைப் பின்தொடர்ந்து ஓடிவந்தனர். அவர்களைப் பின்தொடர்ந்து ஒன்பது விரைவு நாய்கள் ஓடி வந்தன. ஆனால் மந்தையின் முன்பக்கமாக உக்காரமிட்டுக் கொண்டுவந்த ஒரு கொழுத்த எருதை ஒரு ஜோடி சிங்கங்கள் திடீரென்று தாக்கின. அதை அவை இழுத்துக்கொண்டு போனபோது அது பயங்கரமாகக் கத்தியது. அதை மீட்டெடுக்க அந்த இளைஞர்களும் நாய்களும் ஓடிவந்தன. ஆனால் அதற்குள் மாட்டின் தோலைக் கடித்துக் குதறித் திறந்து அதன் கருப்பு ரத்தத்தை உறிஞ்சி, அதன் குடல்களையும் சுவைக்கத் தொடங்கியிருந்தன சிங்கங்கள். மேய்ப்பர்கள் சிங்கங்களின் மீது நாய்களை ஏவியது பயனற்றுப் போனது. ஏனெனில் சிங்கங்களின் அருகில் போய் அவை நின்றுகொண்டாலும், குரைத்துக்

கொண்டே இருந்தனவே தவிர, சிங்கங்களின் மீது பாய்ந்து தம் பற்களை அவற்றின் மீது பதிப்பதைத் தவிர்த்தன.

வெள்ளை ரோமம் கொண்ட ஆடுகளுக்காக, பண்ணைக் கட்டிடங்களும், தொழுவமும், கூரையிடப்பட்ட பாசறைகளும் கொண்ட ஓர் அழகான பள்ளத்தாக்கில், கீர்த்திமிகு நொண்டிக் கடவுள் ஒரு பெரிய மேய்ச்சல் நிலத்தையும் உருவாக்கினான். அதன் பின் ஒரு நடனக் கூடத்தையும் நிறுவினான். அது நாசஸ் என்ற பெரிய நகரில் அழகிய கூந்தல் கொண்ட அரியாட்னிக்காக டீடாலஸ் கட்டியதை ஒத்திருந்தது.

இளைஞர்களும் திருமண வயதில் இருந்த கன்னிப் பெண்களும் ஒருவர் கையை ஒருவர் பிடித்த வண்ணம் அங்கே நடனமாடிக் கொண்டிருந்தனர். பெண்கள் அருமையான சணல் நாரால் ஆன போர்வையைப் போட்டிருந்தார்கள். ஆண்கள் நெருக்கமாக நெய்யப்பட்ட குறுந்தளராடை அணிந்திருந்தனர். அதில் எண்ணெய் லேசாகப் பளபளத்தது. பெண்களின் தலைகளில் அழகிய பூமாலைகள் வைக்கப் பட்டிருந்தன. ஆண்களின் இடுப்பில் இருந்த வெள்ளிக் கச்சைகளில் இருந்து தங்க வாள்கள் தொங்கிக் கொண்டிருந்தன. நடனத்தில் அனுபவப்பட்ட பாதங்களால் அவர்கள் இங்கே வட்ட வடிமாக வந்து கொண்டிருந்தார்கள். உட்கார்ந்திருக்கும் குயவனின் கையில் கச்சிதமாகப் பொருந்திச் சுழலும் சக்கரத்தைப் போல, ஒருவரையொருவர் சந்திக்க இங்கே அவர்கள் ஓடி வந்தனர். அந்த இன்பமயமான நடனத்தை ஒரு பெரிய கூட்டம் சுற்றி நின்று கண்டு களித்துத் கொண்டிருந்தது. கடவுளையொத்த ஒரு கதைப் பாடகன் யாழின் இசையோடு அவர்களுக்காகப் பாடிக் கொண்டிருந்தான். ஒரு சில தனி நடனக்காரர்கள் மக்களைச் சுற்றி வந்து நடனமாடிக் கொண்டு இருந்தனர்.

இவ்வளவு அற்புதமாக வடிவமைக்கப்பட்ட அந்த கேடயத்தின் விளிம்பைச் சுற்றி ஆற்றல் மிகு ஆழக்கடலின் ஓடையை அவன் வைத்தான். அந்தக் கனமான மகா கேடயத்தைச் செய்து முடித்த பிறகு, கொழுந்து விட்டெரியும் நெருப்பைவிட ஒளி மிகுந்ததாக இருக்குமாறு ஒரு உடல் கவசத்தை அக்கிலிஸுக்காகச் செய்தான் ஹெஃபைஸ்டஸ். பின் அவன் பொட்டுக்களில் பொருந்துமாறு ஒரு பெரிய தலைக்கவசத்தை உருவாக்கினான். அது அழகான முறையில் அலங்கரிக்கப்பட்டிருந்தது. அதன் உச்சியில் தங்கத் தால் ஆன ஒரு சிறகுக் கொத்தை வைத்தான் அவன். அக்கிலிஸின்

முழங்கால்களுக்குக் கீழே பொருந்துமாறு பாதப்பாதுகாப்புக் கவசங்களையும் மிருதுவான வெள்ளீயத்தால் செய்தான் அவன்.

எல்லாவற்றையும் செய்து முடித்த பிறகு, அவற்றையெல்லாம் எடுத்துக்கொண்டு போய் அக்கிலிஸின் அன்னையின் முன் வைத்தான் கீர்த்திமிகு நொண்டிக் கடவுள். ஹெஃபைஸ்டஸின் கைகளிலிலிருந்து மின்னும் அக்கவசங்களைப் பெற்றுக் கொண்ட தீட்டிஸ் பனிபடர்ந்த ஒலிம்பஸ் மலையின் உச்சியில் இருந்து ஒரு பருந்தைப் போலக் கீழிறங்கிச் சென்றாள்.

# சண்டை முடிவுக்கு வருகிறது

***கதைச்சுருக்கம்***

***வரிகள் 01 – 144***

*(27வது நாள். பெட்ரோக்குலஸுக்காக சண்டை நடந்த நான்காம் நாள்).*

*அக்கிலிஸின் புதிய கவச உடைகளைக் கொண்டு வந்து கொடுக்கிறாள் தீட்டிஸ். வீரர்களின் சபையைக் கூட்டுகிறான் அக்கிலிஸ். கடந்த காலத்தில் நடந்தவற்றுக்காக வருத்தம் தெரிவிக்கிறான். கோபத்தை விட்டுவிட்டுப் போருக்குத் திரும்ப முடிவு செய்திருப்பதைக் கூறுகிறான். டெலூஷனின் வேலை யால்தான் எல்லாரும் ஏமாந்து போனதாக டெலூஷன் மீது பழி சுமத்துகிறான் அகமெம்னன். ஹீரா எப்படி ஜீயூஸை ஏமாற வைத்தாள் என்பதை விளக்குகிறான். அக்கிலிஸுக்கான நஷ்ட ஈட்டை அவனுக்குத் தர சம்மதிக்கிறான் அகமெம்னன்.*

***வரிகள் 145 – 237***

*போரில் உடனே பங்கெடுக்க விரும்புகிறான் அக்கிலிஸ். ஆனால் வீரர்களெல்லாம் சாப்பிட வேண்டும் என்று ஒடிஸியூஸ் கூறு கிறான்.*

***வரிகள் 238 – 356***

*அகமெம்னன் கொடுக்கும் பரிசுப் பொருள்களெல்லாம் கொண்டு வரப்படுகின்றன. பெட்ரோக்குலஸுக்காக ப்ரிசிஸும் துக்கப்*

படுகிறாள். ஜீயூஸின் உத்தரவுப்படி, அக்கிலிஸுக்கு ரகசியமாக அமிழ்தத்தையும் தேனையும் ஊட்டுகிறாள் அதீனி.

**வரிகள் 357 - 424**

போர் செய்வதற்காக கிரேக்க வீரர்கள் வெளியில் வருகின்றனர். வெண்கலக் கவசங்கள் மின்னுகின்றன. பூமி அந்த சப்தத்தை எதிரொலிக்கிறது. தனது தந்தையின் ஈட்டியை எடுத்துக் கொண்டு போருக்குத் தயாராக ஆயுத உடை தரித்துக்கொள்கிறான் அக்கிலிஸ். அக்கிலிஸின் இறப்பை முன்னறிவிக்கிறது குதிரை சாந்தஸ்.

# சண்டை முடிவுக்கு வருகிறது

நித்தியர்களான கடவுள்களுக்கும் மனிதர்களுக்கும் பகல் வெளிச்சத்தைக் கொண்டுவர, ஆழ்கடலின் ஆற்றிலிருந்து குங்கும நிற ஆடையணிந்த விடியல் எழுந்த நேரத்தில், நொண்டிக் கடவுள் கொடுத்த பரிசுப் பொருள்களைக் கைகளில் ஏந்திக் கொண்டு கிரேக்கர்களின் கப்பல்களுக்கு வந்து சேர்ந்தாள் தீட்டிஸ். பெட்ரோக்குலஸின் உடல் மீது தன் கைகளை அணைத்தவாறு போட்டவண்ணம் நெடுஞ்சாண் கிடையாகத் தன் மகன் அக்கிலிஸ் படுத்திருப்பதைப் பார்த்தாள். கடுந் துயருடன் அழுது கொண்டிருந்தான் அக்கிலிஸ். அவனைச் சுற்றி இருந்த வீரர்களும் அவனைப் பார்த்துத் துக்கம் அனுஷ்டித்த வர்களாக இருந்தனர். தெய்வீகமான தேவதையாகிய அவள் தன் மகனருகில் சென்று அவன் கைமீது தன் கையை வைத்துக் கூறினாள்.

'என்னருமைக் குழந்தாய், இங்கே கிடக்கும் இந்த மனிதனான வன் கடவுள்களின் விருப்பத்தின்படிக் கொல்லபட்டுக் கிடக்கி றான். உனது துக்கமெல்லாம் இருக்கட்டும், பெட்ரோக்குலஸ் எப்படி இருக்கிறானோ அப்படியே இருக்கட்டும். ஹெஃபைஸ் டஸிடமிருந்து நான் கொண்டு வந்திருக்கும் இந்தக் கவர்ச்சியான கவச உடைகளையும் ஆயுதங்களையும் தரித்துக்கொள். இது ரொம்ப கம்பீரமானதும் அற்புதமானதுமாகும். இதைப் போன்றதொரு கவச உடையை இதுவரை எந்த மனிதனும் அணிந்தது கிடையாது.' இப்படிச் சொல்லிவிட்டு மிகவும் நுட்பமான முறையில் செய்யப் பட்டிருந்த அந்தக் கவசங்களை அவனிடம் கொடுத்தாள்.

கீழே வைத்தபோது அது மணியோசை போல பேரொலி எழுப்பியது. அதைக் கேட்ட மெர்மிடன்கள் பயத்தில் நடுங்கினர். அதை ஏறிட்டுப் பார்க்கக்கூட அவர்களால் முடியவில்லை. அதைப் பார்ப்பதிலிருந்தும் அவர்கள் பின்வாங்கினார்கள். ஆனால் அதைப் பார்க்கப் பார்க்க அக்கிலிஸுக்கு ஹெக்டர் மீதிருந்த கோபம் அதிகரித்தது. அவனது விழி மூடிகளின் கீழிருந்து விழிக்கோளங்கள் தீப்பந்தங்களைப் போல அச்சுறுத்தும் வகையில் ஒளி வீசின. கடவுள் கொடுத்த அந்த அற்புதமான பரிசுகளை இன்பமாகத் தொட்டுப் பார்த்தான் அவன். அது எவ்வளவு நுட்பமாகச் செய்யப் பட்டிருந்தது என்பதைக் கவனித்த அக்கிலிஸ் தன் அன்னையிடம் அவசரமாகக் கூறினான்.

‘அன்னையே, இந்தக் கவசம்...இதை இதைத்தான் நான் ஒரு கடவுளிடமிருந்து எதிர்ப்பார்த்தேன். இது போன்ற கவசத்தை எந்த மனிதனாலும் செய்திருக்க முடியாது. சரி, இப்பொழுது நான் போருக்குத் தயாராக ஆயுதம் தரித்துக் கொள்கிறேன். ஆனால் இடைப்பட்ட நேரத்தில் வீரம் மிக்க பெட்ரோக்குலஸின் உடலை ஈக்கள் மொய்த்து அவனது திறந்த காயங்களில் அமர்ந்து, புழுக்கள் வளர்ந்து, அசிங்கப் படுத்திவிடுமோ என்று எனக்குப் பயமாக இருக்கிறது. அவனது உயிர் பிரிந்து விட்டது. அவனது உடலும் அழுகிப் போய்விடலாம்’ என்றான்.

வெள்ளிப் பாத தேவதை தீட்டிஸ் பதில் சொன்னாள். ‘என் குழந்தாய், அதைப்பற்றியெல்லாம் நீ கவலைப்படாதே. போரில் இறந்த வீரர்களின் உடல்களை ஈக்கள் மொய்த்து உண்ணத்தான் செய்யும். ஆனால் இவன் உடலுக்கு அவ்வித தொல்லைகள் வராமல் நான் ஏற்பாடு செய்து கொள்கிறேன். பெட்ரோக்குலஸ் இங்கே ஓராண்டுகூட இருக்கலாம். அப்போதும் அவன் உடலுக்கு ஒன்றும் ஆகாது. அது முறையாகப் பாதுகாக்கப்படும். இன்னும் சொல்லப் போனால், இப்பொழுது இருப்பதைவிட இன்னும் சிறப்பாக அது இருக்கலாம். நீ போய் கிரேக்க வீரர்களையெல்லாம் கூடி நிற்கச் சொல். மக்கள் மேய்ப்பனாகிய அகமெம்னன்மீது நீ கொண்டிருக்கும் கோபத்தை விடு. உடனடியாகப் போருக்கான ஆயுதம் தரித்துக்கொள். வீரத்தை உடுத்திக்கொள் மகனே.’ இப்படிச் சொல்லிவிட்டு தன் மகனுக்குள் உயர்ந்த தன்னம்பிக்கையை ஊதினாள் தீட்டிஸ். கெட்டுப் போவதிலிருந்து பெட்ரோக்குலஸின் உடலைப் பாதுகாக்க, அவனுடைய நாசித்துவாரங்களின் வழியாக அமிழ்தத்தையும் செந்தேனையும் இட்டு நிரப்பினாள்.

இதற்கிடையில் கடவுளையொத்த அக்கிலிஸ் கடற்கரையோர மாக நடந்து சென்று உரத்த குரலெழுப்பி கிரேக்க வீரர்களை யெல்லாம் அழைத்தான். அதன் விளைவாக சாதாரணமாகக் கப்பலைவிட்டு வெளியில் வராத, துடுப்புகளையும் கப்பல் சுக்கானையும் திருப்பும் பணியாளர்களும், கேட்கும் உணவுப் பண்டங்களைக் கொண்டு வந்து கொடுக்கும் எடுபிடி ஆள்களும் கூட வெளியில் வந்து சபை கூடினர். போரையும் அதன் வேதனை களையும் விட்டு ஒதுங்கியிருந்த அக்கிலிஸே தன் வேதனை களையெல்லாம் மறந்துவிட்டு, வெகு நாட்களுக்குப் பிறகு மீண்டும் போரில் கலந்து கொள்ள வந்துள்ளான்.

ஏரிஸின் இரண்டு உதவியாளர்களான உறுதி வாய்ந்த டயமீடி ஸுூம் ஒடிஸியூஸுூம் நொண்டிக் கொண்டே வந்தனர். இன்னும் அவர்களின் காயங்கள் அவர்களுக்கு வேதனை கொடுத்துக் கொண்டிருந்தன. தங்கள் ஈட்டிகளின்மீது சாய்ந்தவாறு வந்த அவர்கள் சபையின் முன் வரிசையில் வந்தமர்ந்தனர். மக்கள் தலைவனாகிய அகமெம்னன் கடைசியில் வந்தான். ஆன்ட்டீன ரின் மகன் கூன் என்பன் தன் வெண்கல ஈட்டி முனையால் ஏற்படுத்தியிருந்த காயத்திலிருந்து அவனும்தான் வேதனைப் பட்டுக் கொண்டிருந்தான்.

எல்லா கிரேக்க வீரர்களும் கூடியபிறகு, விரைவுப்பாத அக்கிலிஸ் எழுந்து அவர்களைப் பார்த்துக் கூறினான். 'நம் அனைவருக்கும் இவ்வளவு வேதனையை ஏற்படுத்திய ஆத்மா அழிக்கும் இந்தப் போர், ஒரு பெண்ணுக்காகத் தொடங்கப்பட்ட இந்தப் போர், அத்ரியூஸின் மகனான அகமெம்னனே, உனக்கோ எனக்கோ யாருக்கோ ஏதாவது நல்லது செய்திருக்கிறதா? லிர்நீசஸ் நகரை நான் வெற்றி கொண்டு அவளைப் பரிசாகப் பெற்ற அன்றே கப்பலின் மீது இருந்த ஆர்ட்டீமிஸ் அவளை ஓர் அம்பினால் கொன்றிருக்கலாம். அப்படிச் செய்திருந்தால், சமாதானப்படுத்த இயலாத கோபத்தோடு நான் கப்பலில் இருந்தபோது, எதிரிகளால் கொல்லப்பட்டு அகண்ட இந்தப் பூமியில் இவ்வளவு கிரேக்கர்கள் வீழ்ந்திருக்க மாட்டார்கள். நமது சண்டையால் லாபமடைந்தது ஹெக்டரும் அந்த ட்ரோஜன்களும்தான். இதைப்பற்றி நினைத்து வெகு நாளைக்கு வருத்தப்பட்டுக் கொண்டிருக்க கிரேக்கர்களுக்கு நியாயமிருக்கிறது. சரி, எது எப்படியாயினும், இப்பொழுது எல்லாம் முடிந்துவிட்டது. போகட்டும். நமது பழைய பெருமையை நாம் நிலை நாட்ட வேண்டும். அதைத்தவிர வேறு வழியே இல்லை.

‘எனவே நான் இப்பொழுது என் கோபத்தை விட்டுவிடுகிறேன். இன்னும் அதை வைத்து வளர்த்துக் கொண்டிருக்க எந்த நியாயமும் இல்லை. சரி, வாருங்கள், நீண்ட தலைமுடி கொண்ட கிரேக்க வீரர்களை உடனே போருக்கு அழைப்போம். இன்னும் நமது கப்பல்களின் அருகில் முகாமிடும் எண்ணம் ட்ரோஜன் களுக்கு இருக்குமானால், மறுபடியும் அவர்களுக்கு எதிராக ஒரு போரைச் செய்ய நான் சித்தமாக இருக்கிறேன். எனது ஈட்டிக்குத் தப்பிப் பிழைக்கும் ட்ரோஜன் யாராவது இருப்பானேயானால், அவன் தனது உடல் உறுப்புகளுக்கு ஓய்வு கொடுக்கவே ஆசைப்படுவான்’ என்று அவன் பேசியதும் ஆயுதம் தரித்த கிரேக்க வீரர்கள் அனைவரும் சந்தோஷத்தில் பேரொலி எழுப்பினர்.

பீலியூஸின் மகனான வீரம் செறிந்த அக்கிலிஸ் தன் கோபத்தை விட்டுவிட்டான் என்ற விஷயம் அவர்களை மகிழ்ச்சிக் கடலில் மூழ்கடித்தது. அதன்பிறகு, மக்கள் தலைவனாகிய அகமெம்னன் எழுந்து சபையின் மையப்பகுதிக்கு வராமல், தனது இருக்கையி லிருந்தவாறே சபையோரைப் பார்த்துப் பேசினான்.

‘நண்பர்களே, கிரேக்க வீரர்களே, ஏரிஸின் உதவியாளர்களே, ஒரு வீரன் எழுந்து பேசும்போது - இப்பொழுது அக்கிலிஸ் செய்த மாதிரி அவன் சொல்ல வருவதை இடைமறிக்காமல் முழுமை யாகக் கேட்பதுதான் மரியாதை. ஆனால் இது அனுபவமிக்க பேச்சாளர்களுக்குக்கூட கடினமான விஷயம்தான். எல்லாரும் சப்தம் போட்டுக் கொண்டிருக்கும்போது ஒருவர் எப்படிப் பேசவோ கேட்கவோ முடியும்? என் நிலையை நான் இப்பொழுது அக்கிலிஸுக்குத் தெளிவு படுத்த விரும்புகிறேன். எனினும், நான் சொல்லப் போவதை எல்லாருமே கவனமாகக் கேளுங்கள்.

‘எனக்கு முன் பேசிய பேச்சு எங்கிருந்து தொடங்கியதோ அதையே குறிப்பிட்டு பலமுறை கிரேக்கர்கள் என்னை அவமானப்படுத்தியுள்ளனர். ஆனால் அது என் குற்றமல்ல. அன்று சபை கூடியபோது அக்கிலிஸுக்குக் கிடைத்த பரிசை நான் எடுத்துக் கொள்ளும்படி ஜீயூஸும் விதியும், இருட்டில் நடக்கும் ஃப்யூரிகளும்தான் அப்போது என் அறிவைக் குருடாக்கிவிட்டார்கள். நான் என்ன செய்வேன்? ஒவ்வொரு கணமும் ஏதாவதொரு கடவுளின் கையில்தான் இருக்கிறது. ஜீயூஸின் மூத்த மகளான டெலூஷன்தான் நம் அனைவரையும்

குருடாக்கிவிடுகிறாள். அவள் நாசமாய்ப் போக! தன் மிருதுப் பாதங்களால் அவள் எப்போதுமே தரையைத் தொடுவதே இல்லை. எப்போதுமே மனிதர்களின் தலைக்கு மேலேதான் விரைந்து செல்கிறாள். அவர்கள் மனதைக் கெடுக்கிறாள். ஒருவரின் சுதந்திரத்தில் இன்னொருவர் தலையிடச் செய்கிறாள்.

'இவ்வளவு ஏன், ஜீயூஸ்தான் மனிதர்களிலும் கடவுள்களிலும் தலைசிறந்தவர் என்று சொல்கிறார்கள். ஆனால் அவர்கூட ஒருமுறை அவளால் குருடாக்கப்பட்டார். கோட்டை கொத்தளங் கள் நிறைந்த தீப்ஸ் நகரில், ஆற்றல்மிகு ஹெராக்ளிஸை அல்க்மீனி பெற்றெடுக்க இருந்த அன்று ஹீராவும் அவளது பெண்ணுக்கே உரிய சூழ்ச்சிகளும் ஜீயூஸை ஏமாற்றின. ஜீயூஸ் எல்லாக் கடவுள்களிடமும், 'நான் சொல்லப் போவதைக் கேளுங்கள் ஆண் கடவுள்களே, பெண் தெய்வங்களே. அப்போதுதான் நான் சொல்ல நினைப்பதைச் சரியாகச் சொல்ல முடியும். இன்று, பிரசவ வலியின் கடவுளாகிய எய்லீத்தியா ஒரு குழந்தையைப் பிறக்க வைப்பாள். அக்குழந்தை என் ரத்தம் ஓடும் குடும்பத்தில் பிறக்கும். தன் வட்டாரம் முழுமைக்கும் அதிகாரம் செலுத்தும்' என்று பெருமையடித்துக் கொண்டார்.

தேவதை ஹீரா அவருக்கு ஒரு வலை விரித்து, 'நீங்கள் சொல்வது ஒரு பொய் என்பதைக் காலம் காட்டும். இது உங்களால் நிறை வேற்ற முடியாத முன்னறிவிப்பாகும். நீங்கள் குறிப்பிட்ட அந்தப் பெண்ணுக்கு அவள் கால்களுக்கு இடையில் பிறக்கப் போகும் அந்தக் குழந்தை, உங்கள் ரத்தம் ஓடும் குடும்பத்தில் பிறக்கப் போகும் அந்தக் குழந்தை, உண்மையிலேயே தன் வட்டாரம் முழுமைக்கும் அதிகாரம் செலுத்தும் என்று உங்களால் சத்தியம் செய்து சொல்ல முடியுமா?' என்று கேட்டாள். அவள் கேட்டதில் ஏமாற்று வேலை ஏதும் இருப்பதாக ஜீயூஸுக்குப் படவில்லை. எனவே அவள் கேட்டுக் கொண்ட படியே அவரும் சத்தியம் செய்து கொடுத்தார். அங்கேதான் அவர் ஏமாந்து போனார்.

உடனே ஒலிம்பஸ் மலையின் உச்சியிலிருந்து அகேயாவில் இருந்த அர்கோஸுக்கு விரைந்து சென்றாள் அவள். அங்கேதான் பெர்சியூஸின் மகன் ஸ்தெனிலியூஸின் உயர்ந்த குணமுள்ள மனைவி இருந்தாள். அவளுக்கும் ஒரு குழந்தை பிறக்கும் தருணமாக அது இருந்தது. ஆனால் ஏழு மாதங்களே ஆகியிருந்தன. உரிய காலத்துக்கு முந்தியே அக்குழந்தையைப் பிறக்கச் செய்தாள் ஹீரா. அதே சமயம், பிரசவ தேவதையைக்

கட்டுப்படுத்தி, அல்க்மீனியின் பிரசவத்தைத் தள்ளிப் போட்டாள். பின் அவளே ஜீயூஸிடம் சென்று, 'தெளிவான மின்னலின் தலைவரே தந்தை ஜீயூஸ், இப்பொழுதுதான் ஓர் உயர்ந்த குலத்தில் கிரேக்கர்களின்மீது ஆதிக்கம் செலுத்தக்கூடிய ஒரு குழந்தை பிறந்துள்ளது. யூரிஸ்தியூஸ் என்று அவனுக்கு அவர்கள் பெயர் வைத்துள்ளனர். அவனுடைய தந்தை பெர்சியூஸின் மகனாகிய ஸ்தெனெஸ்தியூஸ் உங்கள் குடும்பத்தைச் சேர்ந்தவர். எனவே கிரேக்கர்களின்மீது அவர் ஆதிக்கம் செலுத்துவது அவருக்கு ஒன்றும் அவமானகரமான செயலல்ல' என்று சொன்னாள்.

அச்செய்தி மிகவும் கசப்பான அடியாக இருந்தது ஜீயூஸுக்கு. அது அவரை மிக மோசமாகத் தேளைப் போல் கொட்டியது. வந்த கோபத்தில் தன் மகள் மின்னும் டெலூஷனின் கூந்தலைப் பிடித்து, எல்லாரையும் குருடாக்கும் அந்த தேவதை இனி ஒலிம்பஸ் மலைப்பக்கமோ நட்சத்திரங்கள் மின்னும் வானத்தின் பக்கமோ காலடி எடுத்து வைக்கக் கூடாது என்று கோபமாகச் சொல்லி, அவளைத் தலைக்கு மேலே பிடித்துச் சுழற்றி நட்சத்திரங்கள் மின்னும் அந்த வானத்திலிருந்து எறிந்தார். மனிதர்களின் உலகுக்கு உடனே வந்து சேர்ந்தாள் டெலூஷன். ஆனால் அவருடைய அருமை மகன் ஹெராக்ளிஸுக்கு யூரிஸ்தியூஸ் கொடுத்த கடினமான அவமானகரமான வேலைகளைப் பார்த்து மனமுடைந்த அவர், வேதனையோடு டெலூஷனை அவ்வப்போது நினைத்துக்கொள்வார்.

அதேபோலத்தான் என் விஷயத்திலும் நடந்தது. கப்பல்களின் முன்பக்கமாக, மின்னும் தலைக்கவசம் கொண்ட ஹெக்டர் கிரேக்கர்களைக் கொன்று குவித்துக் கொண்டிருந்தபோது, அன்று என்னை ஏமாற்றிய டெலூஷனை என்னால் மறக்க முடியவில்லை. ஆனாலும் அன்று நான் குருடாக்கப் பட்டுவிட்டதால், நல்லது கெட்டதைப் பகுத்தறிகின்ற வல்லமையையெல்லாம் ஜீயூஸ் அன்று பிடுங்கிக் கொண்டுவிட்டதால், அதற்குப் பரிகாரம் தேடிக்கொள்ளவும் தாராளமான நஷ்ட ஈடு வழங்கவும் நான் தயாராக உள்ளேன். எனவே போருக்கு உன்னை நீ தயார் படுத்திக்கொள். வீரர்களை நீயே வழிநடத்து. பரிசுப் பொருள்களைப் பொருத்தவரை, நேற்று உன் பாசறைக்கு வந்து கடவுளையொத்த ஒடிஸியூஸ் வாக்குக் கொடுத்த எல்லாப் பொருள்களையும் கொடுக்க நான் சித்தமாக இருக்கிறேன். அல்லது நீ விரும்பி

னால், போருக்கு உடனே செல்லாமல் கொஞ்ச நேரம் பொறுத்திரு. எனது உதவியாளர்கள் உனக்கான நஷ்ட ஈட்டுப் பொருள்களை எனது கப்பல்களில் இருந்து கொண்டு வந்து வைப்பார்கள். இருப்பதிலேயே சிறந்ததைத்தான் நான் உனக்குக் கொடுக்கிறேன் என்பதை நீ கண்ணாரக் கண்டுவிட்டு பிறகு போருக்குச் செல்லலாம்' என்றான்.

விரைவுப்பாத அக்கிலிஸ் அவனுக்குப் பதில் சொன்னான்:

'கீர்த்திமிகு அத்ரியூஸின் மகனே, மக்கள் தலைவனே அகமெம்னன், பரிசுப் பொருள்களைக் கொடுக்க வேண்டும் என்று நீ விரும்பினால் கொடு. அது உன் விருப்பம். ஆனால் நாம் இப்பொழுது நம் பழைய போர் செய்யும் மனதை உடனே அழைப்போம். உடனே போருக்குச் செல்லலாம். தீவிரமாக நாம் உடனே காரியமாற்ற வேண்டியுள்ளது. இங்கே பேசிக் கொண்டே நேரத்தை வீணடிக்கக் கூடாது. முன் வரிசையில் நின்று வெண்கல ஈட்டியால் நான் ட்ரோஜன்களை அழிக்கும் காட்சியைப் பார்க்கும் ஒவ்வொரு வீரனும் போர் செய்யும்போது அதை மனத்தில் கொண்டு வந்து பார்த்துப் போர் செய்ய வேண்டும்.'

விரைவாகச் சிந்தனை செய்யும் ஒடிஸியூஸ் சொன்னான்:

'கடவுளையொத்த அக்கிலிஸ், நீ ஒரு மகா போர்வீரன். ஆனாலும் எதுவுமே சாப்பிடாமல் இலியம் நகரை நோக்கி முன்னேறிச் செல்லும்படி நீ வீரர்களுக்கு உத்தரவிடக் கூடாது. இரண்டு பக்கப் படைகளும் சந்தித்த பிறகு, போர்க்கடவுள் போர் நெருப்பை அவர்கள் மனத்தில் ஊதிவிட்ட பிறகு, போர் விரைவில் முடியப் போவதில்லை. அவர்களைக் கப்பல்களின் அருகில் சென்று உணவும் மதுவும் உண்டு வரச் சொல். அவர்களுடைய வீரமும் வல்லமையும் அதில்தான் உள்ளது. உணவின்றி ஒரு வீரன் எதிரியோடு நாள் முழுதும் போர் செய்வதென்பது சாத்தியமே இல்லை. அவன் மனது போர் செய்யச் சொல்லலாம். ஆனால் அவனுடைய களைப்பு அவனையறிமாமல் ஆட்கொண்டுவிடும். பசியும் தாகமும் வந்து விட்டால், கால்கள் தாமாகவே சோர்ந்து விழுந்துவிடும். ஆனால் நாள் முழுக்க நடக்கப் போகும் போருக்கு முன் ஒரு வீரன் வயிறார உணவையும் உண்டு மதுவும் குடித்து விடுவானாகில், அவனுடைய வீர உணர்ச்சி உச்சத்தில் இருக்கும். சண்டை முடியும்வரை அவனது ஆற்றல் குறையாது.

'எனவே, வீரர்களையெல்லாம் போய் சாப்பிட்டு வரச்சொல். பரிசுப்பொருள்களைப் பொருத்தவரை, சபையின் மத்தியில் அவைகளைக் கொண்டுவந்து வைக்கச் சொல்லி அகமெம்னன் உத்தரவிடட்டும். அப்போதுதான் எல்லாரும் பார்க்க முடியும். உனக்கும் திருப்தி ஏற்படும். அதோடு, நம் முழு படைகளின் முன்னிலையிலும் அகமெம்னன் எழுந்து நின்று அந்தப் பெண்ணோடு இதுவரை படுக்கவில்லை என்று சத்தியம் செய்யட்டும். பதிலுக்கு, நீ அவனிடம் மன்னிக்கின்ற மனத்தைக் காட்ட வேண்டும் அக்கிலிஸ். அதன் பிறகு நீ விரும்பினால், அகமெம்னன் உனக்குத் தன் பாசறையில் நல்லதொரு விருந்து தரட்டும். அப்போதுதான் நீ உதாசீனப்படுத்தப் படவில்லை என்பது உனக்கும் உரைக்கும். அகமெம்னன், இனி வரும் காலத்திலாவது, அடுத்தவர்களுக்கு உரியதை அவர்களுக்கே கொடுத்துவிடுகின்ற மனப்பான்மை உனக்கு இருக்க வேண்டும். தானே தொடங்கி வைத்த ஒரு பிரச்சனைக்கான தீர்வைத் தானே தருவதில் ஒரு ஆட்சியாளனுக்கு எந்த அவமானமுமில்லை' என்று ஒடிஸியூஸ் கூறினான்.

அவனுக்கு மக்கள் தலைவனான அகமெம்னன் சொன்னான்: 'லார்ட்டஸின் மகனே ஒடிஸியூஸ், உன் கருத்துகளைக் கேட்டதில் எனக்கு மிகவும் சந்தோஷம். எதுவுமே விட்டுப் போகவில்லை. எல்லா விஷயத்தையும் பற்றிச் சரியாகச் சொன்னாய். நீ சொன்னதுபோல ஒரு சத்தியம் செய்ய நான் தயாராக மட்டும் இல்லை, ஆர்வமாகவும் இருக்கிறேன். கடவுள் முன்னிலையில் நான் பொய் சத்தியம் செய்ய மாட்டேன். உடனே சண்டைக்குச் செல்ல வேண்டும் என்பதில் ஆர்வமாக இருந்தாலும், இன்னும் கொஞ்ச நேரம் அக்கிலிஸ் இங்கே இருக்கட்டும். நான் தரப்போகும் நஷ்ட ஈட்டுப் பரிசுப் பொருள்களெல்லாம் எனது குடிலில் இருந்து இங்கே கொண்டு வரப்படும் வரை, நீங்கள் அனைவரும்கூட உங்கள் இடங்களி லேயே இருங்கள். அதோடு, சத்தியம் செய்வதைப் பற்றி ஓர் உடன்படிக்கைக்கும் நாம் வரலாம். இதற்கான பொறுப்பை நீயே எடுத்துக்கொள் ஒடிஸியூஸ். நமது வீரர்களில் சிறந்தவர்கள் என்று கருதும் சிலரை நீ தேர்ந்தெடு. எனது கப்பலுக்குச் சென்று நேற்று அக்கிலிஸுக்கு வாக்குறுதியளிக்கப்பட்ட எல்லாப் பரிசுப் பொருள்களையும் எடுத்து வாருங்கள். அதோடு பெண் களையும் அழைத்து வாருங்கள். இங்கு குழுமியிருக்கும் நம் முழுப்படையினரும் பார்க்கும் விதமாக ஜீயூஸுக்கும் சூரியனுக்

கும் நான் புனிதப் படையல் செய்ய காட்டுப்பன்றி ஒன்றை டல்திபியஸ் உடனே தயார் செய்யட்டும்.'

விரைவுப்பாத அக்கிலிஸ், சொன்னான்:

'கீர்த்திமிகு அத்ரியூஸின் மகனே, மக்கள் தலைவனே அகமெம்னன், சண்டையிடுதல் தூங்கிக் கொண்டிருக்கிறது. எனது ரத்தமும் சூடாகவில்லை. இதையெல்லாம் நீ வேறு ஒரு சமயத்தில் செய்ய வேண்டும். ஆனால் ஜீயூஸால் வெற்றி கொடுக்கப்பட்ட ஹெக்டரால் கொல்லப்பட்ட நம் வீரர்கள் போர்க்களத்தில் வெட்டிச் சிதைக்கப்பட்டுள்ளனர். இங்கே நீயும் ஒடிஸியூஸுூம் எங்களைச் சாப்பிடச் சொல்லித் தூண்டிக் கொண்டிருக்கிறீர்கள்! நான் இப்பொழுது வீரர்களைச் சண்டையிடச் செய்வேன். இப்பொழுது பசியோடு விரதமிருக்கலாம். நமக்கு இழைக்கப்பட்ட அவமானத்துக்குப் பழிக்குப் பழி வாங்கியவுடன், சாயங்காலமாக ஒரு பெரிய விருந்துக்கு ஏற்பாடு செய்யலாம். அது நடக்கும்வரை, என் உதட்டில் உணவோ பானமோ படாது. எனது நண்பன் அங்கே பாசறையில் இறந்து கிடக்கிறான். கூர்மையான வெண்கல ஈட்டி அவனைக் குத்தியுள்ளது. கதவுகளின் பக்கமாக அவனது கால்கள் நீட்டப்பட்டுள்ளன. அவனது தோழர்கள் அவனைச் சுற்றி அழுது கொண்டுள்ளனர். நீ சொன்ன எதுவுமே என் ஆர்வத்தைத் தூண்டவில்லை. கொலை, ரத்தம், மரண ஓலம் இவை மட்டும் தான் என்னைத் திருப்திப் படுத்தும்' என்று கூறினான்.

விரைவாகச் சிந்திக்கும் ஒடிஸியூஸ் அவனுக்குப் பதில் சொன்னான்:

'கிரேக்கர்களில் தலைசிறந்தவனே, பீலியூஸின் மகனே அக்கிலிஸ், நீ என்னைவிட உடலுறுதி வாய்ந்தவன். ஈட்டி எறிவதில் எனக்கு இணையானவன். ஆனால் உன்னைவிட நான் வயதிலும் அனுபவத்திலும் மூத்தவன். எனது மதிப்பீடு உன் மதிப்பீட்டை விடப் பல மடங்கு சிறந்தது. இருக்கட்டும்; இப்பொழுது நான் சொல்லப்போவதைக் கேள்.

'உக்கிரமாகப் போர் செய்து வீரர்களுக்குப் போதும் போதும் என்றாகிவிட்டது. இறந்தவர்களின் குவியல்களை வைக்கோல் மாதிரி சமவெளியில் அவர்களுடைய ஆயுதங்கள் தூவியிருக்கலாம். ஆனால் பூமியின் மீது நடக்கும் போர்களின் மீது அதிகாரம்

கொண்ட ஜீயூஸ், குறிப்பிட்ட பக்கம் வெல்ல வேண்டும் என்பதற்காக தன் தராசை அப்பக்கமாகச் சாய்த்த பிறகு, எவ்வளவுதான் அபாயகரமான அபாரமான முயற்சிகள் செய்தா லும், அதற்காகக் கிடைக்கும் பலன் வெகு சொற்பமானதே. ஒரு வீரனின் இறப்புக்கான துக்கத்தைப் படையினர் விரதமிருந்து காண்பிக்க வேண்டும் என்று நீ சொல்கிறாய். அது சாத்திய மில்லாதது. ஒவ்வொரு நாளும், ஒவ்வொருவராக வீரர்கள் நூற்றுக் கணக்கில் விழுந்து கொண்டிருக்கிறார்கள். இந்தப் போராட்டத்தில் இருந்தும் வேதனையிலிருந்தும் நமக்கு ஓய்வு உண்டா? கிடையாது. நாம் நமது இதயங்களை இரும்பாக்கிக் கொள்ள வேண்டும். நம்மில் இறந்தவர்களைப் புதைக்க வேண்டும். அழுததெல்லாம் போதும்.

‘இந்தப் பேரழிவில் இருந்து தப்பிப் பிழைத்தவர்கள் இப்பொழுது தங்கள் மனதை உணவிலும் மதுவிலும் செலுத்த வேண்டும். அப்போதுதான் நம் முதுகுப் பக்கமாக இருக்கும் வெண்கல ஈட்டிகளுக்குக் களைப்பேற்படாது. போரையும் விருப்பத்தோடு வெண்கலக் கவசங்களுடன் தொடரலாம். எனவே யாரும் சண்டை செய்ய வேண்டும் என்ற இரண்டாவது அழைப்புக்காகக் காத்திருக்க வேண்டாம். இதுதான் அழைப்பு. கப்பல்களில் விடப்பட்டிருக்கும் யாருக்கும் பிரச்சனைதான். நமது முழுப்படையும் முன்னேறிச் சென்று குதிரைகளை அடக்குவதில் சிறந்த ட்ரோஜன்களோடு முழு மனதாகப் போரிட வேண்டும்’ என முடிவாகப் பேசிவிட்டு அவன் தனக்கு உதவியாகக் கீர்த்திமிகு நெஸ்டரின் மகன்களையும், மீகிஸ், தோவாஸ், மெரியோனிஸ், லைகோமீடிஸ், மெலானிப்பஸ் ஆகியோரோடு அகமெம்னனின் பாசறையை நோக்கிச் சென்றான். அங்கே சென்ற பிறகு தாமதமின்றிக் காரியங்களை ஆற்றினர்.

அக்கிலிஸுக்குத் தருவதாக வாக்களித்த ஏழு முக்காலிகள், மின்னும் செம்பில் செய்யப்பட்ட இருபது கொப்பரைகள், பன்னிரண்டு குதிரைகள், கலைகளிலும் கைவினைப் பொருள்கள் செய்வதிலும் தேர்ச்சி பெற்ற ஏழு பெண்கள், எட்டாவதாக அழ கிய கன்னம் கொண்ட ப்ரிசிஸ் எல்லாவற்றையும் எல்லாரையும் கொண்டு வந்து சேர்த்தனர். பின் பத்து டாலண்ட்டுகள் தங்கத்தை எடைபோட்டு எடுத்துக் கொண்ட ஒடிஸியூஸ், அவர்களை அழைத்துக் கொண்டு வந்தான். அவனைப் பின் தொடர்ந்து மற்ற பரிசுப் பொருள்களையெல்லாம் எடுத்துக் கொண்டு மற்ற கிரேக்க வீரர்கள் வந்தனர்.

சபையின் நடுவில் அவற்றை வைத்தனர். அகமெம்னன் எழுந்து நின்றான். அவனுக்குப் பக்கத்தில், கையில் ஒரு காட்டுப் பன்றியைப் பிடித்துக் கொண்டு, கடவுளின் குரல் போன்ற குரல் கொண்ட டல்திபியஸ் நின்று கொண்டிருந்தான். தன் வாளின் உறைக்குள் கிடந்த கத்தியை எடுத்தான் அகமெம்னன். பன்றியின் முடியிலிருந்து கொஞ்சம் வெட்டி எடுத்து முதல் மரியாதையைக் கடவுளுக்குச் செலுத்தினான். கூடியிருந்த கிரேக்க வீரர்கள் அனைவரும் அமைதியாகத் தத்தம் இடங்களில் அமர்ந்து பார்த்துக் கொண்டிருந்தனர். தன் கைகளை வானை நோக்கி உயர்த்தி ஜீயூஸிடம் பிரார்த்தனை செய்தான் அகமெம்னன்:

'மிக உயர்ந்த தலைசிறந்த கடவுளே ஜீயூஸ், எனக்கு, சாட்சியாக இருக்குமாறு உன்னை நான் அழைக்கிறேன். இரண்டாவதாக, பூமி, சூரியன் மற்றும் கொடுத்த வாக்கைக் காப்பாற்றாத மனிதர்களைக் கீழுலகத்தில் தண்டிக்கும் ஃப்யூரிகள் ஆகியோரையும் அழைக்கிறேன். ப்ரிசிஸ் என்ற அந்தப் பெண் மீது என் கைகள் படவில்லை என்பதற்கு நீங்களே சாட்சியாக இருங்கள். எனது படுக்கைக்கு நான் அவளைக் கொண்டு போகவில்லை. தீண்டப் படாதவளாகவே அவள் என் பாசறையில் இருந்தாள். நான் சொல்லும் இவ்வார்த்தைகளில் ஏதேனும் ஒன்று பொய்யாக இருக்குமானால், கடவுள்கள் மீது பொய்சத்தியம் செய்பவர்களுக்கு வழங்கப்படும் எல்லா வேதனைகளையும் எனக்கும் அவர்கள் கொடுக்கட்டும்.' இப்படிச் சொல்லிவிட்டு இரக்கமற்று வெண்கலத்தால் பன்றியின் கழுத்தை வெட்டினான். அந்த மிருகத்தின் உடலை எடுத்து ஒரு சுழற்று சுழற்றி அகண்ட நீல நிறக்கடலில் எறிந்தான். அது மீன்களுக்கு உணவாகப் போயிற்று. அதன் பின் போரை நேசிக்கும் கிரேக்க வீரர்களிடம் பேச எழுந்தான் அக்கிலிஸ்.

'ஓ தந்தை ஜீயூஸ், எப்படிப்பட்ட ஏமாற்றங்களை மனிதர்களுக்கு அளிக்கிறாய் நீ! நீ மட்டும் இத்தனை கிரேக்க வீரர்கள் படுகொலை செய்யப்பட வேண்டும் என்று விரும்பியிருக்காவிட்டால், நானும் அகமெம்னனுக்கு எதிராக இத்தகைய கசப்பான வெறுப்பையும் பகையையும் வளர்த்துக் கொண்டிருக்க மாட்டேன். அவனும் என் விருப்பத்துக்கு மாறாக அந்தப் பெண்ணை எடுத்துக் கொண்டிருந்திருக்க மாட்டான்' என்று பேசிவிட்டு, சீக்கிரமாகவே சபையைக் கலைத்தான் அக்கிலிஸ்.

வீரர்கள் அனைவரும் தம் கப்பல்களுக்கு உதிரி உதிரியாகச் சென்றனர். பரிசுப் பொருள்களைப் பொறுப்பாக அக்கிலிஸின் கப்பலுக்கு எடுத்துச் சென்றனர் மெர்மிடன்கள். அங்கே அவைகளை அவனது பாசறையில் வைத்து விட்டுப் பெண்களை அமரச் செய்தனர். அக்கிலிஸின் உயர்ந்த உதவியாளர்கள் குதிரைகளை ஓட்டிச் சென்று அக்கிலிஸிடம் இருந்த மற்ற மிருகங்களோடு சேர்த்தனர்.

கூர்மையான வெண்கல ஈட்டியால் குத்தப்பட்டு, கன்னாபின்னா வென வெட்டப்பட்டு, இறந்து கிடந்த பெட்ரோக்குலஸைப் பார்த்த தங்கமகள் அஃப்ரோடைட்டியைப் போன்ற தோற்ற அழகு கொண்ட ப்ரிசிஸ் அலறினாள். அவனது உடல் மீது விழுந்து கதறினாள். தன் மார்பையும் மிருதுக் கழுத்தையும் அழகிய கன்னங்களையும் தன் கைகளாலேயே கீறிக் கொண்டாள். ஒரு பெண் தெய்வத்தைப் போல அழகாக இருந்த அவள் அழுது கொண்டே பேசினாள்.

‘ஓ என் இதயத்தின் இன்பமே பெட்ரோக்குலஸ்! இது எனது துன்பமா? இந்தக் குடிலில் இருந்து நான் போனபோது நீங்கள் உயிரோடு இருந்தீர்கள். ஆனால் வீரர்களின் தலைவரான உங்களை நான் திரும்பி வந்து பிணமாகப் பார்க்கிறேன். முடிவற்ற அபாயங்களின் சங்கிலித் தொடராக உள்ள இதுதான் எனது வாழ்க்கை. என் தந்தையும் தாயும் எனக்கு மணமுடித்து வைத்த என் கணவரையும் இத்தகைய கொடிய ஈட்டிதான் அவரது ஊரிலேயே வெட்டிப் போட்டது. என்னோடு கூடப்பிறந்த என் மூன்று சகோதரர்களுக்கும் இப்படிப் பட்ட முடிவுதான் ஏற்பட்டது. ஆனால் விரைவுப்பாத அக்கிலிஸ் எங்கள் தலைவன் மைனியின் நகரை வீழ்த்தி, என் கணவனைக் கொன்றபோது, நான் அழுவதைக்கூட நீ பொறுக்கவில்லை. அக்கிலிஸின் சட்டப் பூர்வமான மனைவியாக என்னை ஆக்குவதாகவும் உங்கள் கப்பல்களில் என்னை உங்கள் நாடான ஃபிதியாவுக்கு அழைத்துச் செல்வதாகவும், அங்கே எனக்கு மெர்மிடன்களுக்கு மத்தியில் ஒரு திருமண விருந்து தருவதாகவும் கூறினீர்கள். நீங்கள் எப்போதுமே என்னிடம் அன்பாக நடந்து கொண்டீர்கள். உங்கள் இறப்புக்காக ஆறுதல் சொல்லமுடியாத அளவுக்கு நான் துன்பமடைகிறேன்’ என்று தேம்பினாள்.

அருகில் இருந்த மற்ற பெண்களும் அழ ஆரம்பித்தனர். ஒவ்வொரு பெண்களும் பெட்ரோக்குலஸ் மூலமாகத் தன்

விதியையே நொந்து கொண்டனர். கிரேக்கத் தளபதிகளெல்லாம் ஒன்றுகூடி அக்கிலிஸைச் சுற்றிக்கொண்டு சாப்பிடும்படி வேண்டினர். ஆனால் ஒரு வேதனை முனகலுடன் அவன் மறுத்துவிட்டான்.

'எனது உணர்வுகளுக்கு நீங்கள் ஏதாவது மதிப்பு கொடுப்பீர்களே யானால், என்னைச் சாப்பிடவோ குடிக்கவோ சொல்லி இப்பொழுது வற்புறுத்தாதீர்கள். எனது துயரம் பயங்கரமானது. சூரிய அஸ்தமனம் வரையிலும் எது நடந்தாலும் சரி, எனக்கு எதுவும் வேண்டாம்' இப்படிச் சொல்லி அவர்களைப் போகச் செய்தான் அக்கிலிஸ்.

ஆனால் அகமெம்னனும் மெனிலயஸும் அங்கேயே இருந்தனர். அவர்கள் மட்டுமல்ல, கடவுளையொத்த ஒடிஸியூஸ், நெஸ்டர், இடொமீனியஸ், வயதான தேரோட்டியான ஃபீனிக்ஸ் ஆகியோரும் இருந்தனர். அக்கிலிஸின் வேதனையைக் குறைக்க அவர்கள் முயன்றனர். ஆனால் அவன் இதயமோ ரத்தக் களறியான யுத்தத்தைச் சந்திக்காததால் ஆறுதலுக்கு அப்பால் இருந்தது. ஏதேதோ நினைவுகள் கும்பலாக வர, பெருமூச்சு விட்டான் அக்கிலிஸ்.

'குதிரைகளை அடக்குவதில் வல்ல ட்ரோஜன்களோடு போர் செய்யலாம் என்ற முடிவுக்கு நாம் வந்தபோது, இதே இடத்தில் நீங்களே எனக்கு விருந்து கொடுத்துள்ளீர்கள். ஆனால் இப்போதோ நீங்கள் வெட்டப்பட்டுக் கிடக்கிறீர்கள். என் இதயம் உணவை ஏற்க மறுக்கிறது. உணவை நான் இழந்துவிட வில்லை. ஆனால் என் நண்பர்களாகிய உங்களை இழந்து விட்டேன். இதைவிட ஒரு துயரமான விஷயம் எனக்கு நடந்திருக்க முடியாது. என் தந்தை பீலியூஸின் மரணச் செய்தி வந்தால்கூட எனக்கு இவ்வளவு துயரம் கொடுக்காது. ஃபிதியாவில் இப்பொழுது எனக்காக அவர் மிருதுவான கண்ணீர் வடித்துக் கொண்டிருப்பார் நிச்சயமாக. அந்தப் பாழாய்ப்போன ஹெலனுக்காக அந்நியர்களான ட்ரோஜன்களின் மண்ணில் நான் சண்டையிட்டுக் கொண்டிருக்கிறேன். ஸ்கைரோஸில் வளர்ந்து வரும் கடவுளையொத்த எனது அருமை மகன் நியோடாலமஸ் செத்து விட்டான் என்று செய்தி வந்தால்கூட எனக்கு இவ்வளவு துக்கம் வராது. ஆனால் குதிரைகள் மேயும் தெஸ்ஸாலியில் இருந்து வெகு தூரத்தில் இருக்கும் இந்த ட்ராய் நகரத்தில் நான் மட்டும் சாக வேண்டும் என்றும், எனது நண்பனாகிய நீ

பெட்ரோக்குலஸ், ஃபிதியா சென்று ஸ்கைரோஸில் இருந்து என் மகனை அழைத்து வந்து, எனது பொருள்கள், அடிமைகள், அரண்மனை எல்லாவற்றையும் காட்ட வேண்டும் என்று நான் ஆசைப்பட்டேன். எனது தந்தை பீலியூஸ், இதுவரை செத்துப் போயிருக்காமல் உயிரோடு அவர் இருப்பாரேயானால்கூட, முதுமை காரணமாகவும், தினசரி என்னைப் பற்றி வரும் செய்திகளாலும் பாதி செத்தவரைப் போல்தான் இருப்பார்.' அழுது கொண்டே அக்கிலிஸ் இப்படியெல்லாம் பேசினான்.

தனது ஊரில், அக்கிலிஸ் எத்தனை விஷயங்களை விட்டுவிட்டு வந்திருக்கிறான், எத்தனை இழப்பை சந்தித்திருக்கிறான் என்பதையெல்லாம் எண்ணிப்பார்த்த அருகிலிருந்த தலைவர்களும் அவனோடு சேர்ந்து அழுதனர். அவர்கள் அப்படி வேதனையில் இருப்பதைப் பார்த்த ஜீயூஸ் அவர்கள் மீது இரக்கம் கொண்டான். உடனே அவசரமாக அதீனியை அழைத்துச் சொன்னான்:

'என் மகளே, உன் அன்புக்குரியவனை நீ கைவிட்டு விட்டாய். மற்றவர்களெல்லாம் உணவுண்ணப் போய்விட்டபோதும், உயர்ந்த அலகுகளைப் போன்ற அமைப்பு கொண்ட கப்பல்களின் அருகே அமர்ந்து, தனக்காக உயிரை விட்ட தோழனுக்காகத் துக்கித்து, விரதமிருக்கும் அக்கிலிஸுக்கு உனது இதயத்தில் இனிமேல் இடமில்லையா? போ, போய் கொஞ்சம் இனிய அமிழ்தத்தையும் தேனையும் எடுத்து வடிகட்டி அவன் நெஞ்சத்தில் இறக்கிவிடு. அப்போதுதான் பட்டினியிலிருந்து அவன் காப்பாற்றப்படுவான்.' இவ்விதமாகச் சொல்லி அதீனியைத் தூண்டினான் ஜீயூஸ்.

அவள் அதற்குமுன்பே செயலாற்றத் தயாராகிவிட்டிருந்தாள். உச்சஸ்தாயியில் கத்திக்கொண்டே வரும் நீண்ட சிறகுகள் கொண்ட ஒரு கடல் பறவையைப் போல, மேல்பகுதியில் இருக்கும் காற்று மண்டலத்தின் வழியாக அவள் பறந்து கீழிறங்கி வந்தாள். கிரேக்கர்களெல்லாம் முகாமில் ஆயுதம் தரித்துக் கொண்டிருந்தபோது, அக்கிலிஸில் இதயத்துள் வடிகட்டிய அமிழ்தத்தையும் தேனையும் இறக்கினாள். அது அவன் பசிக்கொடுமையைப் போக்கியது. தன் வேலை முடிந்ததும், எல்லாம் வல்ல தன் தந்தையின் அரண்மனை நோக்கி மீண்டும் சென்றாள். படை வீரர்களும் தம் விரைவுக் கப்பல்களில் இருந்து வழிவதைப் போல பெரும் எண்ணிக்கையில் இறங்கிவர ஆரம்பித்தனர். சந்தேகத்துக்கு அப்பாற்பட்ட வடக்குக் காற்றின்

வருகைக்கு முன்னர் பனிப்படலங்கள் மேலிருந்து கனமாக இறங்கி வருவதைப் போல, மின்னும் தலைக்கவசங்கள், முன்புறம் புடைத்த கேடயங்கள், அடுக்கடுக்காக அமைக்கப் பட்ட கவச உடைகள், ஆஷ் மரத்தால் செய்யப்பட்ட ஈட்டிகள் எனக் கப்பல்களிலிலிருந்து வெளியே வந்துகொண்டிருந்தன. வானத்தில் வெளிச்சம் ஏறியது. வெண்கலம் மின்னியதைப் பார்த்து பூமி முழுவதும் சிரித்தது. அணிவகுத்து நடை போடும் பாதங்களைப் பார்த்து, அந்த இடிமுழக்கம் போன்ற ஒலிக்கேற்ற வாறு நிலம் எதிரொலித்தது.

இவையெல்லாம் நடந்து கொண்டிருக்க, கடவுளையொத்த அக்கிலிஸ் சண்டை செய்வதற்காகத் தன்னைத் தயார் செய்து கொண்டான். பற்களைக் கடித்துக் கொண்டான். கொழுந்து விட்டெறியும் நெருப்பைப் போல அவன் விழிகள் மின்னின. ட்ரோஜன்களுக்கு எதிராகப் போர் செய்வதற்காக, ஹெஃபைபெஸ் டஸ் தனக்குச் செய்து கொடுத்த புனிதப் பரிசுக் கவசங்களை அணிந்த போது, வார்த்தைகளால் விவரிக்க முடியாத துக்கம் அவனை ஆட்கொண்டது.

முதலில், கணுக்கால் அருகில் பற்றிக்கொள்ளும் வெள்ளிப் பிடிகள் கொண்ட அருமையான பாதப்பாதுகாப்புக் கவசங்களைத் தன் முழங்கால்களுக்குக் கீழே பொருத்திக் கொண்டான். அதன் பின் உடல் கவசத்தை அணிந்து கொண்டான். பின் வெள்ளியில் குடையாணிகள் பொருத்தப்பட்ட வெண்கல வாளைத் தோளில் போட்டுக் கொண்டான். அதன் பின் தனது மகா கேடயத்தை எடுத்துக் கொண்டான். அதன் பிரகாசமானது வெகு தூரத்துக்கு நிலவொளியைப் போல மின்னியது. பலமான காற்றில் விருப்பத் துக்கு மாறாக, ஊரைவிட்டு விலகி வெகு தூரம் செல்லும் கப்பலின் மாலுமிகள், கரையில் இருக்கும் தனியான பண்ணை யில் எரியும் தீப்பந்தத்தை வைத்து, நுரை தள்ளும் கடலில் திசையறிந்து ஆறுதல் அடைவது போல, அக்கிலிஸின் அலங் காரக் கேடயத்திலிருந்து கிளம்பிய ஒளியானது வானம் வரை சென்றது. பின் அவன் தன் பெரிய தலைக்கவசத்தை எடுத்து தலையில் பொருத்திக் கொண்டான். அது ஒரு நட்சத்திரத்தைப் போல மின்னியது. அதன் உச்சியில் ஹெஃபைபெஸ்டஸ் பொருத் திய தங்க இறகுக் குஞ்சலம் நடமனாடியது.

கவச உடைகளை அணிந்து கொண்ட அக்கிலிஸ் அது தனக்குப் பொருத்தமாக இருக்கிறதா என்று பரிசோதித்துப் பார்த்தான். தன்

கம்பீரமான உடல் உறுப்புகளை, தங்கு தடையின்றி இப்படியும் அப்படியும் இயக்கிப் பார்த்துக் கொண்டான். அது அந்த மக்கள் மேய்ப்பனுக்கு ஒரு ஜோடிச் சிறகுகளைப் போல அமைந்திருந்தது. அப்படியே பூமிக்கு மேலே அவனைத் தூக்கியது. இறுதியாக, தனது தந்தையின் ஈட்டியை அதன் உறைக்குள்ளிருந்து எடுத்துக் கொண்டான். அது நீளமாகவும், தடிமனாகவும், கனமாகவும் இருந்தது. அதை அக்கிலிஸைத் தவிர வேறு எந்த கிரேக்கனாலும் அசைக்கக்கூட முடியாது. அவனுக்கு மட்டும்தான் அதை எப்படிப் பயன்படுத்துவது என்று தெரியும். அது பீலியான் மலைமீதிருந்த ஒரு ஆஷ் மரத்திலிருந்து செய்யப்பட்டது. எதிர்த்துப் போரிடுபவர் களுக்கு இறப்பைக் கொடுப்பதற்காக, அக்கிலிஸின் தந்தை பீலியூஸுக்கு கீரான் பரிசாகக் கொடுத்தது அது.

இதற்கிடையில் ஆட்டோமிடானும் அல்சிமிடானும் குதிரை களை நுகத்தடிக்குள் நுழைப்பதில் மும்முரமாக ஈடுபட்டிருந் தனர். நுகத்தடியின் பட்டையை, குதிரையின் இடுப்பைச் சுற்றிக் கட்டினர். அவற்றின் கடிவாளக் கயிறுகளை அவற்றில் வாயில் கொடுத்துக் கடித்துக்கொள்ள வைத்தனர். கடிவாளங்களை இழுத்துத் தேர்களோடு இணைத்துக் கட்டினர். அதன் பின் கையில் கச்சிதமாகப் பொருந்திய ஒரு மின்னும் சாட்டையை எடுத்த ஆட்டோமிடான் குதிரைகளின் பின்னால் துள்ளி ஏறி உட்கார்ந்து கொண்டான். போருக்குச் செல்லத் தகுந்தவாறு ஆயுதம் தரித்துக்கொண்ட அக்கிலிஸ், அவனைப் பின் தொடர்ந்து வந்தான். கவச உடை மின்ன, ஒளிவீசும் சூரியனைப் போல இருந்தான் அக்கிலிஸ். தன் தந்தையின் குதிரைகளை அச்சமேற் படுத்தும் தன் குரலில் அழைத்தான்.

'சாந்தஸ், பாலியஸ், பெடார்ஜியின் புகழ்பெற்ற இளம் குதிரை களே, சண்டை முடிந்த பிறகு, போர்க்களத்தில் பெட்ரோக் குலஸைப் பிணமாக விட்டுவந்ததைப் போலச் செய்யாமல், உங்கள் தேரோட்டிகளைப் பத்திரமாகப் போர்க்களத்திலிருந்து உயிரோடு திருப்பி நண்பர்களிடம் கொண்டு வந்து சேர்ப்பது எப்படி என்பது பற்றி இந்த முறையாவது அக்கறையோடு யோசியுங்கள்' என்றான்.

மின்னும் குளம்புகள் கொண்ட சாந்தஸின் தலை தாழ்ந்து தரையைத் தொட்டது. வெண்ணிறக் கைகள் கொண்ட தேவதை யான ஹீரா அதற்கு மனிதர்களின் மொழியில் பேசும் சக்தியைக் கொடுத்திருந்தாள்.

அது நுகத்தடியின் கீழிருந்து பதில் சொன்னது. 'பெருமைமிகு அக்கிலிஸ், நிச்சயமாக நாங்கள் மறுபடியும் உன்னைப் பாதுகாப்பாக இன்று வீடு கொண்டு வந்து சேர்ப்போம். ஆனால் நீ சாகும் நாள் நெருங்கிக் கொண்டிருக்கிறது. அதற்குக் காரண மாக நாங்கள் இருக்க மாட்டோம். எல்லாம் வல்ல கடவுளும் இரக்கமற்ற விதியும்தான் அதற்குக் காரணம். பெட்ரோக் குலஸின் தோள்களில் இருந்து ட்ரோஜன்கள் கவச உடைகளைக் களைந்து நிர்வாணப்படுத்தியதற்கு எங்கள் சோம்பேறித்த னமோ, வேகக்குறைவோ காரணமல்ல. அழகிய கூந்தல் கொண்ட லீட்டோவின் மகனாகிய அப்போலோதான் முன் வரிசையில் நின்ற அவனைக் கொன்று ஹெக்டருக்கு அந்தப் பெருமை போய்ச்சேரும்படிச் செய்தார். மேற்குக் காற்றுதான் அதி வேகமானது என்று சொல்கிறார்கள். மேற்குக் காற்றின் வேகத்தில் எங்களால் செல்ல முடியும். ஆனாலும் போர்க் களத்தில் ஒரு கடவுளின் கையாலும் ஒரு மனிதனின் கையாலும் நீ விழவேண்டும் என்பது விதி' என்று சாந்தஸ் பேசியபோது ஃப்யூரிகள் அவனை ஊமையாக்கினர். விரைவுப்பாத அக்கிலிஸ் கோபமாகச் சொன்னான்:

'சாந்தஸ், என் இறப்பை எதற்காக முன்னறிவிப்பு செய்கிறாய்? அதற்கெல்லாம் அவசியமொன்றுமில்லை. என் தந்தை தாயை விட்டு, வெகுதூரமாக, இங்கே நான் அழியப் போகிறேன், அதுதான் என் விதியென்பதை நான் நன்றாக அறிவேன். ஆனால் அந்த ட்ரோஜன்களுக்குத் தக்கப் பதிலடி கொடுக்காமல் நான் நிற்கப் போவதில்லை.' இப்படிப் பேசிவிட்டு, தளபதிகளுக்கு மத்தியில் போர் முழக்கம் செய்தான் அக்கிலிஸ். பின் தன் ஆற்றல் மிக்க குதிரைகளைக் கிளப்பிக்கொண்டு முன்னே சென்றான்.

# அக்கிலிஸின் அட்டகாசம்

**கதைச்சுருக்கம்**

***வரிகள் 01 – 74***

*இலியம் நகரைத் தாக்க உடனே அக்கிஸின் கிளம்பிவிடுவான் என்ற பயத்தில் கடவுளர்களின் சபையைக் கூட்டுகிறான் ஜீயூஸ். கடவுளர்களைத் தலையிட்டுத் தாமதப்படுத்தும்படிக் கூறுகிறான். போர்க்களத்தை நோக்கிக் கடவுளர்களனைவரும் முன்னேறிச் செல்கிறார்கள். அதுவரை நிகழந்த பேரிழப்பையும் அழிவையும் எண்ணி இயற்கை அதிர்ச்சியுறுகிறது. கீழுலகமான ஹயடிஸில் வெடிப்பு ஏற்பட்டுப் பிளந்ததுபோல் ஆகிவிடுகிறது.*

***வரிகள் 75 – 155***

*அக்கிலிஸை எதிர்கொள்ளும்படி ஈனியாஸுக்குக் கூறுகிறான் அப்போலோ. யார் பக்கமும் இருக்கக் கூடாதெனக் கடவுளர்கள் முடிவெடுக்கிறார்கள்.*

***வரிகள் 156 – 352***

*அக்கிஸும் ஈனியாஸும் போரில் ஒருவரையொருவர் எதிர்கொள்கின்றனர். அக்கிலிஸுக்கு ஏமாற்றம் ஏற்படும்படி ஈனியாஸை பொஸைடன் காப்பாற்றுகிறான்.*

***வரிகள் 353 – 454***

*பின்வாங்கிப் போய்விடும்படி ஹெக்டருக்கு உபதேசம் செய் கிறான் அப்போலோ. அக்கிலிஸின் ஆக்ரோஷச் செயல்பாடுகள்*

தொடங்குகின்றன. அவனிடமிருந்து ஹெக்டரை அப்போலோ காப்பாற்ற வேண்டியிருந்தது.

**வரிகள் 455 – 503**

அக்கிலிஸின் அட்டகாசம் தொடர்கிறது. அவனது தேர் ரத்தத் தால் சிவப்பாகிறது.

# அக்கிலிஸின் அட்டகாசம்

பீலியூஸின் மகனே, பறவைகளின் அலகுகளைப் போன்ற முன்பக்க அமைப்பு கொண்ட கப்பல்களின் பக்கமிருந்து போருக்குச் செல்ல எப்போதுமே ஆர்வமாக இருக்கும் கிரேக்க வீரர்கள், ஆயத்தமாக ஆயுதம் தரித்துக் கொண்டு உன் தலைமையில் திரண்டு நின்றனர். அதேபோல, அந்தப் பக்கமாக ட்ரோஜன்களும் சமவெளியில் அணிதிரண்டிருந்தனர். அதே சமயம், கரடுமுரடான ஒலிம்பஸ் மலையின் உச்சியில் இருந்து கடவுள்களின் சபையைக் கூட்டும்படி தீமிஸுக்கு உத்தர விட்டான் ஜீயூஸ். அவளும் சுற்றிச் சென்று வந்து எல்லாக் கடவுள்களையும் ஜீயூஸின் அரண்மனையில் நடக்க இருந்த சபைக்கு அழைத்தாள். ஓஷனைத்தவிர, வேறு எந்த நதியும் வராமல் இருக்கவில்லை. ஓடைகளுக்கும் நீர் நிறைந்த புல்வெளிகளுக்கும் மூலகாரணமாக இருக்கும் இனிய வனப் பகுதிகளில் சுற்றிக் கொண்டிருக்கும் வனதேவதைகள் அனைவரும் மேகங்களைச் சேர்ப்பவனின் வீட்டுக்கு வந்து சேர்ந்தனர். தந்தை ஜீயூஸுக்காக ஹெஃபைஸ்டஸ் வடிவமைத்துக் கொடுத் திருந்த, தூண்களின் அணிவகுப்பு கொண்ட பளபளப்பாக்கப் பட்ட மண்டபத்தின் தரையில் அனைவரும் அமர்ந்தனர்.

அனைவரும் அரண்மனையில் கூடிய பிறகு, தேவதை தீமிஸின் அழைப்பை உதாசீனப்படுத்தாமல் ஆழக்கடலில் இருந்து கிளம்பி வந்திருந்த பொசைடன் தங்களை ஜீயூஸ் அழைத்த காரணம் பற்றிக் கேட்டான்:

'தெளிவான மின்னலின் தலைவனே, ஏன் கடவுள்களையெல் லாம் இங்கே கூடும்படி உத்தரவிட்டுள்ளாய்? ட்ரோஜன்

களுக்கும் கிரேக்கர்களுக்கும் என்னாகுமோ என்று கவலைப்படு கிறாயா? அவர்களிருவருக்கும் எந்த நேரமும் சண்டை தொடங்கி விடலாம்' என்றான்.

மேகங்களை அணிவகுத்துச் செல்ல வைக்கும் ஜீயூஸ் கூறினான். 'நில நடுக்கம் ஏற்படுத்துபவனே, என் மனத்தில் என்ன இருக்கிறது என்றும் எதற்காக உங்களையெல்லாம் நான் இங்கே இப்பொழுது அழைத்துள்ளேன் என்றும் உனக்குத் தெரியும். ஆமாம், செத்துக் கொண்டிருக்கும் அவர்களில் இன்னும் பலருக்கு என்னாகுமோ என்ற கவலை எனக்கு இருக்கத்தான் செய்கிறது. இருந்தாலும், இங்கே ஒலிம்பஸ் மலையில் உள்ள ஏதாவதொரு பள்ளத்தாக்கின் உச்சியில் அமர்ந்து கொண்டு நான் தெய்வீக லீலையால் நடக்கப் போவதையெல்லாம் வேடிக்கை பார்க்கப் போகிறேன். ட்ரோஜன்களோடும் கிரேக்கர்களோடும் போய்ச் சேர்ந்துகொள்ள உங்களுக்கு இப்பொழுது நான் அனுமதி கொடுக்கிறேன். யாருக்கு உதவ வேண்டும் என்று உங்கள் மனம் விரும்புகிறதோ அவர்களுக்கு உதவி செய்யுங்கள். ஆனால் இரண்டு பக்கத்துக்கும் உங்கள் உதவிகளை நீங்கள் வழங்க வேண்டும். இப்படி நான் சொல்வதன் காரணம், உங்களுடைய உதவியின்றி இப்பொழுது ட்ரோஜன்களை அக்கிலிஸ் எதிர் கொள்வானேயானால், சீக்கிரமே அவர்களனைவரும் விழுந்து விடுவார்கள். ஒருகணம்கூட அவர்களால் தாக்குப் பிடிக்க முடியாது. அவன் முகத்தை ஏறிட்டுப் பார்த்துவிட்டு ஓடத் தொடங்கிவிடுவார்கள். அவனுடைய தோழனை இழந்து அவன் மிகவும் கோபமாக வேறு இருக்கிறான். விதியை ஏமாற்றிவிட்டு இலியம் நகரின் சுவர்களை அவர் உடைத்து அழித்துவிடக் கூடும்' இப்படிப் பேசிய க்ரோனஸின் மகன் நிறுத்த முடியாத வாக்குவாதத்தை உண்டாக்கினான்.

உடனே நித்தியர்களான கடவுளர்கள் இரண்டு குழுக்களாகப் பிரிந்து போர் நடந்து கொண்டிருந்த இடத்துக்கு எதிரெதிராக விரைந்தனர். ஹீராவும் பல்லாஸ் அதீனியும் கிரேக்கக் கப்பல்களுக்குச் சென்றனர். ஓடி வெல்வதில் இணையற்ற கூர்மதி கொண்டவனான ஹெர்மிஸூம், இந்த உலகைச் சுற்றி வரும் பொசைடனும் அப்படியே செய்தனர். தனது பலத்தில் பெருமை கொண்டவனாக ஹெஃபைஸ்டஸூம் அவர்களோடு சென்றான். அவன் நொண்டிக் கொண்டு சென்றாலும், அவனது வளர்ச்சி குன்றிய கால்கள் சுறுசுறுப்பாக இயங்கின. மின்னும்

தலைக்கவசம் கொண்ட ஏரிஸ், நீள்முடி பறக்கும் அப்போலோ, அம்பெய்வதில் இன்புறும் ஆர்ட்டீமிஸ், லீட்டோ, ஸ்கமாண்டர் ஆறு, புன்னகை விரும்பும் அஃப்ரோடைட்டி ஆகியோர் ட்ரோஜன்களின் பக்கம் சென்றனர்.

கடவுளர்கள் இந்த விஷயத்தில் கலந்து கொள்ளும் வரையில் கிரேக்கர்கள் தங்களுக்கு முன் எல்லாவற்றையும் தூக்கிச் சென்றனர். போரிலிருந்தும் அதன் வேதனைகளிலிருந்தும் நீண்ட நாள் ஒதுங்கியிருந்த அக்கிலிஸ் மீண்டும் திரும்பி வந்திருந்தான். தனது கவச உடைகளில் ஒளிவீசிக் கொண்டிருந்த, கொலை வெறி கொண்ட போர்க்கடவுள் ஏரிஸுக்கு இணையான பீலியூஸின் விரைவுப்பாத மகனைப் பார்த்தவுடன் எல்லா ட்ரோஜன் வீரர்களின் உடல்களும் அச்சத்தில் நடுநடுங்கின. ஆனால் ஒலிம்பிய மலைவாழ் கடவுளர் அனைவரும் மனிதர்கள் நடத்திக் கொண்டிருந்த அந்த யுத்தத்தில் கலந்து கொள்வதைப் பார்த்ததும், படைகளைச் செலுத்தும் தேவதையான ஸ்ட்ரைஃபி தன் எல்லா வல்லமையோடும் எழுந்தாள். கிரேக்க மதில் சுவருக்கு அப்பால் வெட்டப் பட்டிருந்த அகழியின் அருகில் நின்று கொண்டு போர் முழக்கத்தை அதீனி செய்தாள். இடிமுழக்கம் செய்யும் அந்தக் கடற்கரைப் பகுதி முழுவதும் தன் குரல் கேட்குமாறு செய்தாள். எதிர்ப் பக்கத்திலிருந்து அவளுக்கு ஏரிஸ் பதில் முழக்கம் செய்தான். காலிகலோனியின் சரிவுகள் வழியாக ஓடிக்கொண்டே ஒரு நேரத்தில் கோட்டையில் உச்சியில் இருந்தும், இன்னொரு நேரத்தில் சிமோய்ஸ் ஆற்றின் கரையிலிருந்தும் தனது உத்தரவுகளை ட்ரோஜன்களுக்கு உச்சஸ்தாயியில் வழங்கினான். அவனது வஞ்சக் குரல் ஒரு பேய்ப்புயல் காற்றினதைப் போல் இருந்தது.

இப்படியாக அருள் பாலிக்கப்பட்ட கடவுள்கள் அனைவரும் இரண்டு பக்கமும் சேர்ந்து கொண்டு ஒருவரையொருவர் வெட்டிச் சாய்க்க உற்சாகப்படுத்தியதோடு தங்களுக்குள்ளேயே இரண்டு அணிகளாகவும் பிரிந்து கடுமையான போட்டியை உருவாக்கினர். சகுனம் காட்டும் விதமாக உச்சியில் இருந்து கடவுளர்களின் தந்தையானவன் இடிமுழக்கம் செய்தான். கீழே, எல்லையற்ற நிலத்தையும் மலையுச்சிகளையும் நடுநடுங்கச் செய்தான் பொசைடன். இலியம் நகரும் கிரேக்கக் கப்பல்களும் அதிர்ந்தன. கீழுலகத்தின் அதிபதியான ஹயடிஸ் பயந்துபோய் தனது சிம்மாசனத்திலிருந்து அலறிக் கொண்டே துள்ளிக்

குதித்தான். அவனது தலைக்கு மேலே இருந்த நிலத்தை பொசைடன் இரண்டாகப் பிளந்து, உள்ளே இருக்கும் பயங்கர அறைகளை மானிடர்கள் மற்றும் கடவுளர்களின் கண்களுக்குத் தெரியவைத்து விடுவானோ என்ற அச்சம் அவனுக்கிருந்தது. ஏனெனில் அவ்வறைகளைக் கடவுளர்களும் வெறுத்தனர்.

கடவுளர்களின் மோதலானது இப்படியானதொரு பிரபஞ்ச வீழ்ச்சியாக இருந்தது. சிறகுகள் கொண்ட தனது அம்புகளுடன் பொசைடனை எதிர்கொண்டான் ஃபீபஸ் அப்போலோ. சாம்பல் நிறக்கண்ணாள் அதீனியை எதிர்கொண்டான் ஏரிஸ். அம்புகளில் இன்புறும் தங்க நூற்புக் கழி கொண்ட அப்போலோவின் சகோதரி ஆர்ட்டிமிஸ் ஹீராவை எதிர்கொண்டாள். லீட்டோவை எதிர்கொண்டான் வலிமையாக ஓடக்கூடிய ஹெர்மிஸ். கடவுளர் களால் சாந்தஸ் என்றழைக்கப்படும் நீர்ச்சுழிகள் கொண்ட ஆற்றல் மிகுந்த ஆறு ஹெஃபீஸ்டஸை எதிர்த்தது. மனிதர்களால் எதிர்க்கப்பட்டது ஸ்கமாண்டர் ஆறு. இவ்விதமாக அவர்கள் சண்டையிட்டனர். கடவுளுக்கு எதிராக கடவுளே எனப் போரிட்டனர்.

அக்கிலிஸைப் பொருத்தவரை, ப்ரியமின் மகனான ஹெக்டரைப் போரில் எதிர்கொள்வதைத் தவிர வேறொன்றையும் அவன் விரும்பவில்லை. அவனுடைய ரத்தத்தை, கேடயம் தாங்கிய கடவுளான ஏரிஸ் உறிஞ்சிக் குடிக்க வேண்டும் என்று அவன் ஆசைப்பட்டான். ஆனால் படை வீரர்களைச் செலுத்தும் கடவுளான அப்போலோ உடனே தலையிட்டான். ஈனியாஸின் மனத்தில் உறுதியையும் தீர்மானத்தையும் ஏற்படுத்தி பீலியூஸின் மகனான அக்கிலிஸை எதிர்கொள்ளும்படி அவனை அனுப்பினான். ப்ரியத்தின் மகன்களில் ஒருவனான லைகாவோனுடைய உருவத்தில் வந்து அவனுடைய குரலில் பேசினான் ஜீயூஸின் மகனான அப்போலோ:

‘ஈனியாஸ், ட்ரோஜன்களின் ஆலோசகனே, நீ செய்த பயமுறுத்தல்களெல்லாம் என்னவாயின? கோப்பைகளில் மது அருந்திக் கொண்டிருக்கும்போது, பீலியூஸின் மகனான அக்கிலிஸை நேருக்கு நேர் சந்திப்பேன் என்று நீ சொல்லவில்லையா?’ என்றான்.

ஈனியாஸ் ‘லைகாவோன், பீலியூஸின் மகனோடு சண்டை போட வேண்டும் என்று எனக்கு எதற்காக உத்தரவு போடுகிறாய்? அதற்

 

கான சக்தி எனக்கில்லை. அவனை எதிர்கொள்வது எனக்கொன் றும் இது முதல் முறையல்ல. இதற்கு முன் ஒருமுறை, லிலீஜிகள் வாழும் பெடாசஸ் மற்றும் லிர்னீசஸ் பகுதிகளைப் பிடித்து, எங்கள் கால்நடைகளை அக்கிலிஸ் கொள்ளை கொண்டு சென்றபோது நான் அவனை எதிர்க்கத்தான் செய்தேன். ஆனால் அவன் அய்டா மலையின் கீழே அவனுடைய ஈட்டியால் என்னைத் துரத்திவிட்டான். அப்போது எனக்கு மனஉறுதியும் கால்களுக்கு ஓடுவதற்கு வலிமையும் கொடுத்து ஜீயூஸ்தான் என்னைக் காப்பாற்றினார். இல்லையெனில் அன்றே நான் அக்கிலிஸிடமும் அதீனியிடமும் விழுந்திருப்பேன். அவனுக்கு முன்னேயே சென்ற அவள், லிலீஜிகளையும் ட்ரோஜன்களையும் ஈட்டியால் கொல்லும்படி அவனைத் தூண்டினாள்.

ஒரு மானிடனால் அக்கிலிஸோடு சண்டை போட்டு வெல்வ தென்பது சாத்தியமில்லாதது. அவனைப் பொருத்தவரை இறப்பை கொஞ்ச தூரத்தில் தள்ளி வைத்திருப்பதற்கென்றே ஒரு கடவுள் தயாராக இருக்கிறார் என்று நினைக்கிறேன். ஏதோ வெண்கலத்தால் ஆனமாதிரி அவனுக்கு ஒரு நினைப்பு உள்ளது. எனினும், எங்கள் இருவருக்கும் மத்தியில் யாராவது ஒரு கடவுள் எல்லாவற்றிலும் நாங்கள் சமமாக இருக்க உதவி செய்வாராகில், எளிதான வெற்றி அக்கிலிஸுக்குக் கிடைக்காது' என்றான்.

ஜீயூஸின் மகனான தலைவன் அப்போலோ சொன்னான்.

'போர்வீரனே, வா, வந்து அந்த நித்தியக் கடவுளை நீயே அழைத்துப் பிரார்த்தனை செய். ஜீயூஸின் மகளான அஃப்ரோ டைட்டியின் மகன் நீ என்று சொல்கிறார்கள். ஆனால் அக்கிலிஸோ அந்தஸ்தில் குறைந்த ஒரு தேவதைக்குப் பிறந்த மகன்தான். அஃப்ரோடைட்டியோ ஜீயூஸின் மகள். ஆனால் தீட்டிஸோ கடல் கிழவனின் மகள்தான். உனது கடினமான வெண்கலத்தோடு நேரடியாகச் சென்று அவனைத் தாக்கு. அவன் செய்யும் அச்சுறுத்தல்களும் அவமானங்களும் உன்னைப் பின்வாங்கச் செய்ய விட்டுவிடாதே.'

இப்படிச் சொல்லி, மக்கள் மேய்ப்பனாகிய ஈனியாஸின் மனத்தில் பயங்கரமான சக்தியை ஊதினான் அப்போலோ.

உடனே ஈனியாஸ் தன் வெண்கலக் கவசம் மின்ன முன்வரிசை அணிவகுப்பினூடே முன்னேறிச் சென்றான். ஆனால் இது

வெண்ணிறக் கைகள் கொண்ட தேவதை ஹீராவுக்குத் தெரியாம லில்லை. ஆன்க்கைசஸின் மகன் ஈனியாஸ் கூட்டத்தினூடே புகுந்து அக்கிலிஸைத் தாக்குவதற்குச் சென்று கொண்டிருப் பதைப் பார்த்தவுடன் தனது நண்பர்களைத் தன் பக்கம் வருமாறு சைகை காட்டிச் சொன்னாள்:

'பொசைடன், அதீனி, அடுத்து என்ன செய்ய வேண்டும் என்பதை நீங்களிருவரும் கவனமாக இப்பொழுது முடிவு செய்ய வேண்டும். அக்கிலிஸைத் தாக்க, வெண்கலக் கவசம் மின்ன, ஃபீபஸ் அப்போலோவின் ஆதரவுடன் இதோ ஈனியாஸ் வருகிறான். வாருங்கள், நாமனைவரும் சேர்ந்து அவனைப் நேரே திருப்பி அனுப்புவோம். அல்லது நம்மில் யாராவதொரு வர் அக்கிலிஸின் அருகில் இருந்து அவனுக்குப் பெரும் ஆற்றலைக் கொடுக்க வேண்டும். அவனுடைய வீரம் அவனைக் கைவிட்டுவிடும்படிச் செய்துவிடக்கூடாது. கடவுளர்களில் தலைசிறந்தவர்கள் அனைவரும் அவன் பக்கமிருக்கிறோம் என்பதை அவன் உணர்ந்து கொள்ளச் செய்ய வேண்டும். ட்ரோஜன்களை இதுவரை தோல்வியடையாமல் காப்பாற்ற உதவிக் கொண்டிருக்கும் நித்தியர்களெல்லாம் நமக்கு முன் ஒன்றுமில்லாதவர்கள் என்பதை அவனுக்குப் புரியவைக்க வேண்டும். நாமெல்லாரும் ஒலிம்பஸ் மலையிருந்து கூட்டாகக் கீழே இறங்கிச் சண்டையில் கலந்து கொள்ள வந்ததற்குக் காரணமே, ட்ரோஜன்களால் அக்கிலிஸுக்கு எந்தக் கெடுதியும் இன்று ஏற்பட்டுவிடக் கூடாது என்பதற்காகத்தான். அதற்குப் பிறகு, அவன் அன்னை அவனைப் பெற்றெடுத்தபோது அவனது வாழ்க்கை நூல்கண்டின் முதல் முடிச்சில் விதி என்ன போட்டதோ அதையே அவன் பெற்றுக் கொள்ளட்டும். ஆனால் நித்தியர் களாகிய நம் மூலம் இதெல்லாம் அவனுக்குச் செய்தியாகச் சொல்லப்பட வேண்டும். இல்லா விட்டால், ஒரு கடவுள் அவனை எதிர்கொள்ள வந்திருப்பதைக் கண்டு அவன் அதிர்ச்சி யடைந்து போவான். ஒரு மனிதனை நேரடியாக ஒரு கடவுள் எதிர்கொண்டால், அவனைச் சமாளிப்பது ஒரு மனிதனுக்குக் கடினமான காரியம்.'

நில நடுக்க நாயகனான பொசைடன் பதில் சொன்னான்: 'ஹீரா, தேவையில்லாமல் வலிந்து சண்டையிட நினைக்காதே. அதற்கு ஒன்றும் அவசியமில்லை. கடவுளர்களனைவரையும் ஒருவர் கழுத்தில் இன்னொருவர் கத்தி வைத்துக்கொள்ளச் செய்வதில்

எனக்கு ஆர்வமில்லை. நாமெல்லாம் இங்கிருந்து போய் விடுவோம். ஏதாவது ஒரு வசதியான இடத்தில் அமர்ந்து கொண்டு என்ன நடக்கிறது என்று வேடிக்கை பார்ப்போம். போர் என்பது மானிடர்களின் வேலை. நீ சொல்வது மாதிரி ஏரிஸோ, ஃபீபஸ் அப்போலோவோ சண்டையைத் தொடக்கினாலோ அக்கிலிஸின்மீது கைவைத்தாலோ, நாமனைவரும் உடனே களத்தில் இறங்கி அவர்களை ஒருகை பார்க்கலாம். ஆனால் அதுவும் ரொம்ப நேரத்துக்கல்ல. நம்முடைய எதிரிகள் சீக்கிரமே நம்முடைய சக்தியைப் பொறுக்க முடியாமல் சண்டையிலிருந்து பிய்த்துக் கொண்டு ஓடிப்போய், ஒலிம்பஸ் மலையில் இருக்கும் மற்ற கடவுள்களிடம் உதவி தேட ஆரம்பித்துவிடுவார்கள்.'

இப்படிச் சொல்லிவிட்டு, அழகிய கருப்பு நிறத்தலைமுடி கொண்ட கடவுளான பொசைடன் அவர்களை அழைத்துக் கொண்டு, பல்லாஸ் அதீனியும் ட்ரோஜன்களும் சேர்ந்து ஒருமுறை கடவுளையொத்த ஹெராக்ளிஸுக்காகக் கட்டிய பாதுகாப்பு நிலவரணுக்குச் சென்று அமர்ந்தனர். ஒரு முறை ட்ரோஜன்களுக்கு எதிராக ஏவப்பட்டிருந்த ராட்சச கடல் மிருகத்தைக் கொல்வதாக ஹெராக்ளிஸ் வாக்குக் கொடுத்தான். கடலிலிருந்து கிளம்பி அந்த மிருகம் அவனைத் தரையில் தாக்க வந்தபோது இந்த இடத்தில்தான் அவன் அடைக்கலம் புகுந்தான். அங்கேபோய் ஊடுருவ முடியாத பனிப்படலத்தைத் தங்கள் தோள்களைச் சுற்றி ஏற்படுத்திக் கொண்டு பொசைடனும் மற்ற கடவுள்களும் கண்ணுக்குத் தெரியாதவாறு அமர்ந்தனர். காலிகோனி மலையின் ஓரப்பகுதில் அவர்களுடைய தெய்வீக எதிரிகளும் சென்றமர்ந்தனர். அப்போலோவும், நகரங்களை அழிக்கும் ஏரிஸும் தங்களுடைய அடுத்த கட்ட முயற்சி என்ன என்பதைப் பற்றி திட்டமிட்டுக் கொண்டிருந்தனர். போரைத் தொடங்கும்படி தனது இருக்கையில் இருந்த ஜீயூஸ் அவர்களிடம் சொல்லியிருந்தாலும் இருவருமே சண்டையைத் தொடங்கு வதில் தயக்கம் காட்டினர்.

இதற்கிடையில் தரைப்பகுதி முழுவதும் மனிதப் போர்வீரர் களால் நிறைந்திருந்தது. வெண்கலமணிந்த வீரர்களாலும் தேரோட்டிகளாலும் மின்னியது நிலம். இரண்டு படைகளும் எதிர் கொண்டபோது, அவர்களின் பாதங்களின் கீழே அதிர்ந்தது பூமி. அவர்களுக்கு இடையில் இருந்த பகுதியில், இருபடை களின் தலைவர்களான ஆங்க்கைசஸின் மகன் ஈனியாஸும்

கடவுளையொத்த அக்கிலிஸும் போரிட்டே தீருவது என்ற தீர்மானத்துடன் நெருங்கி வந்தனர். அறைகூவல் விடுக்கும் வண்ணம் முதலில் ஈனியாஸ்தான் முன்னே வந்தான். அவனுடைய பெரிய தலைக்கவசம் தலையின்மீது ஆடியது. அழகான தன் கேடயத்தை முன்னே பிடித்தவாறு தன் வெண்கல ஈட்டியைச் சுழற்றினான் அவன்.

கொலைவெறி கொண்ட ஒரு சிங்கத்தைக் கொன்று போட்டு விடுவது என்ற தீர்மானத்துடன் கிராம மக்கள் அனைவருமே குழுமியிருந்தனர். முதலில் அச்சிங்கம் அவர்களை அலட்சியப் படுத்திவிட்டுத் தன் வழியே போய்விடுகிறது. ஆனால் அவர்களில் ஓர் இளைஞன் தன் ஈட்டியால் அதைக் குத்த, அது திரும்பிச் சினத்துடன் சீறிப்பாய்கிறது. அதன் வாயைச் சுற்றி நுரை தள்ளுகிறது. அதன் நெஞ்சினுள்ளிருக்கும் வீர உணர்ச்சி உறுமுகிறது. போருக்குத் தயாராகும் விதத்தில், தன் வாலால் விலா எலும்புகளிலும் பக்க வாட்டிலும் அடித்துக்கொள்கிறது. முறைத்துப் பார்த்துவிட்டு, நேராக அவன் மீது பாய்கிறது. ஒன்று அவனைக் கொல்ல வேண்டும் அல்லது தான் கொல்லப்பட வேண்டும் என்ற தீர்மானத்தோடு அப்பாய்ச்சல் இருந்தது. இதைப்போல, எதிர்ப்பக்கத்திலிருந்து பீலியூஸின் மகனாகிய அக்கிலிஸ் சிங்கத்தைப் போலப் பாய்ந்து வந்தான். அவனுடைய பெருமிதம் கொண்ட நெஞ்சமும் உறுதியும் வீரம் செறிந்த ஈனியாஸை எதிர்கொள்ள வைத்தது.

இருவரும் நெருக்கமாக வந்தபோது, கடவுளையொத்த விரைவுப்பாத அக்கிலிஸ் முதலில் பேசினான்: 'ஈனியாஸ், இவ்வளவு தூரம் கிளம்பி எதற்காக என்னை எதிர்கொள்ள வந்திருக்கிறாய்? ப்ரியமின் இடத்தைப் பிடித்துக் குதிரைகளை அடக்குவதில் சிறந்த ட்ரோஜன்களை ஆளலாம் என்ற பேராசையால் உந்தப்பட்டு வந்திருக்கிறாயா? ஆனால் என்னைக் கொன்று விடுவதால் ப்ரியம் தன் ராஜ்ஜியத்தை உனக்கு விட்டுக் கொடுத்துவிட மாட்டார். அவருக்குப் பிள்ளைகள் இருக்கின்றனர். அவரும் ஆரோக்கியமாகவேதான் இருக்கிறார். அவருக்கு ஒன்றும் புத்தி பேதலித்துவிடவில்லை.

ஒருவேளை, என்ன நீ கொன்றுவிட்டால், தங்கள் பூமியில் உள்ள சிறந்த செழிப்பான திராட்சைத் தோட்டங்களையும் கதிர் வயல்களையும் உனக்குப் பரிசாகக் கொடுத்துவிடுவதாக ட்ரோஜன்கள் உன்னிடம் வாக்குக் கொடுத்திருக்கிறார்களா

என்ன? இருக்கட்டும், ஆனால் உனக்கு இது கடினமான காரியமாக இருக்கப் போகிறது என்றே நான் நினைக்கிறேன். ஒருமுறை எனது ஈட்டிக்குப் பயந்து நீ ஓடிப்போனது ஞாபகமிருக்கிறதா? உன்னைத் தனியாக ஒருமுறை நான் பிடித்து, உனது ஆடுமாடுகளிடமிருந்து உன்னைப் பிரித்து, அய்டா மலையின் சரிவுகளில் விரைந்தோட வைத்தேனே அது மறந்துவிட்டதா? பின்னால் திரும்பிப் பார்ப்பதற்குக்கூட உனக்கு நேரமில்லை! லிர்னீசஸ் சென்று நீ அடைக்கலம் புகுந்தாய். ஆனால் நான் உன்னைப் பின் தொடர்ந்து வந்தேன். அதீனி மற்றும் தந்தை ஜீயூஸின் உதவியுடன் அந்தப் பகுதியை அழித்தேன். அங்கிருந்த பெண்களையெல்லால் அடிமைகளாகக் கொண்டு சென்றேன். ஜீயூஸூம் மற்ற கடவுள்களும்தான் உன்னை அப்போது காப்பாற்றினார்கள். ஆனால் இந்த முறை நீ ஆசையாகக் கற்பனை செய்து கொண்டிருப்பதுபோல் அவர்கள் யாரும் உனக்கு உதவப்போவதில்லை. எனவே நீ திரும்பிப் போய்விடுவது உனக்கு நல்லது. போய் உன் படையினரோடு சேர்ந்துகொள். என்னிடம் தனியாக வந்து மோதாதே. இல்லையெனில் உனக்குத்தான் வேதனை. கண் கெட்ட பிறகு சூரிய நமஸ்காரம் செய்பவன் முட்டாள்' என்றான்.

ஈனியாஸ் பதில் சொன்னான்: 'பீலியூஸின் மகனே, நீ சொல்லும் வார்த்தைகளால் என்னைப் பயமுறுத்தி அனுப்பி விடலாம் என்று கற்பனை செய்யாதே. நான் ஒன்றும் சின்னக் குழந்தையல்ல. அவமானங்களையும் வசவுகளையும் சரியாகத் திருப்பிக் கொடுப்பது எப்படி என்று எனக்கும் தெரியும். உனக்கும் எனக்கும் நம்முடைய மூதாதை என்னவெனத் தெரியும். நம்முடைய பெற்றோர்கள் யார் எனத் தெரியும். உன்னுடைய பெற்றோர்கள் மீது நானோ, என்னுடையெ பெற்றோர்கள்மீது நீயோ கவனம் செய்திருக்காவிட்டாலும், மனிதர்கள் அவர்களைப் புகழ்ந்து பாடியதை நாம் இருவருமே கேட்டிருக்கிறோம்.

'இணையற்ற பீலீயூஸூக்கும் அழகிய கூந்தல் கொண்ட கடல் தேவதையான தீட்டிஸூக்கும் பிறந்தவன் நீ என்று அவர்கள் சொல்கிறார்கள். ஆனால் என்னுடைய தந்தையோ வீரம் செறிந்த ஆங்க்கைசஸ். எனது தாயோ அஃப்ரோடைட்டி. உன்னுடைய பெற்றோரோ என்னுடைய பெற்றோரோ, யாரோ ஒரு ஜோடி இன்று தன் மகனை இழந்ததற்காகத் துக்கம் அனுஷ்டிக்கப் போகிறது. ஏனெனில், இப்படிச் சிறுபிள்ளைத் தனமாகப்

பேசிவிட்டு இந்தப் போர்க்களத்தை விட்டு நீயோ நானோ போய்விடப் போவதில்லை. ஆனால் நான் யாரென்று தெரிந்து கொள்ள நீ உண்மையிலேயே விரும்பினால், சொல்கிறேன் கேள். அனேகம் பேருக்கு என் கதை ஏற்கெனவே தெரியும்.

'மேகங்களைச் செலுத்தும் ஜீயூஸ்தான் டார்டானஸை உருவாக்கியதன் மூலம் எங்கள் பரம்பரையைத் தோற்றுவித்தார். டார்டானியா என்ற ஒரு நகரை நிர்மாணித்தார் டார்டானஸ். மனிதர்கள் வாழ்வதற்காக ஊர் என்று எதுவும் அப்போது இல்லை. மகா இலியம் நகரும் உருவாக்கப் படவில்லை. தண்ணீர் நிறைய கிடைத்த அய்டா மலையடிவாரத்தில்தான் மக்களெல்லாம் அப்போது வாழ்ந்து கொண்டிருந்தார்கள். எரிக்தோனியஸ் என்று டார்டானியஸுக்கு ஒரு மகன் இருந்தார். அவர் பெரும் தலைவராகவும் இந்த அகில உலகிலும் செல்வம் மிகுந்தவராகவும் திகழ்ந்தார். அவருக்கு மூவாயிரம் பெண் குதிரைகள் இருந்தன. அவைகள் அருகில் இருந்த சதுப்பு நிலங்களில் தங்கள் குட்டிகளோடு உல்லாசமாக மேய்ந்து கொண்டிருந்தன. ஒரு நாள் அவைகளைப் பார்த்து ஆசைப்பட்ட வடக்குக் காற்று அவைகளுக்குச் சேவை செய்ய கருப்பு ஆண் குதிரையின் உருவெடுத்தது. காலக்கிரமத்தில் அவைகளுக்குப் பன்னிரண்டு குட்டிகள் பிறந்தன. அக்குட்டிகள் விளையாடிக் கொண்டே கதிர்வயல்களின் பக்கம் போகும். உயர்ந்த கதிர்களை உரசிக்கொண்டு போகும். ஆனால் உடைத்துவிடாது. கடலின் அகன்ற முதுகில் ஏறி அவை விளையாடும். நுரைதள்ளும் அலைகளின் மீது நழுவிச் சென்று அவை விளையாடும்.

'எரிக்தோனியஸுக்கு ட்ரோஸ் என்று ஒரு மகனிருந்தார். அவர்தான் ட்ரோஜன்களின் தலைவராவார். ட்ரோஸுக்கு ஈலஸ், அஸ்ஸராகஸ், கடவுளையொத்த கானிமீடிஸ் ஆகிய இணையற்ற மூன்று மகன்கள் இருந்தனர். அதில் கானிமீடிஸ் உலகிலேயே தலைசிறந்த அழகு படைத்த இளைஞராக வளர்ந்தார். அவர் அழகில் பொறாமைப்பட்ட கடவுள்கள் அவரைக் கடத்திச் சென்று ஜீயூஸுக்கு மது கொண்டு வந்து கொடுக்கும் ஊழியனாக நியமித்தனர். அதிலிருந்து கானிமீடிஸ் நித்தியர்களோடு வாழத்தொடங்கினார். ஈலஸுக்கு மகனாக இணையற்ற லாமிடான் பிறந்தார். அவருக்கு டித்தோனஸ், ப்ரியம், லாம்பஸ், க்ளைட்டியஸ், மற்றும் போர்க்கடவுளின் தோழனாகிய ஹைசிட்டாவோன் ஆகிய பிள்ளைகள் பிறந்தனர்.

அசராக்கஸின் மகன் காபிஸுக்குப் பிறந்தவர்தான் ஆங்க்கைசஸ் எனது தந்தை. ஹெக்டர் ப்ரியமுக்குப் பிறந்தவன். இதுதான் எனது குடும்பம். எனது ரத்தம் இந்தப் பரம்பரையில் வருவது தான். போரில் எனது ஆற்றலைப் பொருத்தவரை, அது ஜீயூஸிடமிருந்து வரும் பரிசாகும். அதை அவர் தான் விரும்பும் மனிதனுக்கு அதிகமாகவோ குறைவாகவோ வழங்குவார். அவர் எல்லாம் வல்ல கடவுளாவார்.

'சரி போதும். சிறுவர்களைப்போல இங்கே நின்று இன்னும் பேசிக்கொண்டிருக்க வேண்டாம். இன்னும் அனேக அவமானங் களை ஒருவர் மீது ஒருவர் எறிந்து கொள்ளலாம். ஒரு கப்பலையே அவை மூழ்கடித்து விடக்கூடும். மனிதனுடைய நாக்கு இருக்கிறதே அது விட்டால் பேசிக்கொண்டே இருக்கும். எல்லா வகையான வார்த்தைகளும் அதன் கட்டுப்பாட்டில் இருக்கின்றன. அது ஒரு நாளில் எவ்வளவு தூரம் வேண்டுமானா லும் போகும். உனக்குத் தேவையான பதிலை அது தரும். ஏதோ தகராறு காரணமாகச் சண்டை போட்டுக்கொண்டு பெண்கள் தெருவுக்கு வந்து ஒருவரை ஒருவர் திட்டித் தீர்த்துக் கொண்டிருப் பார்கள். அவர்கள் கோபத்தில் எதையும் சொல்வார்கள். அது உண்மையாகவும் இருக்கலாம். பொய்யாகவும் இருக்கலாம். அதைப்போல நாம் இங்கே நின்று கொண்டிருக்கத் தேவை யில்லை. சண்டை போடுவதென்று நான் உறுதியாக இருக் கிறேன். நீ எவ்வளவுதான் பேசினாலும் நாமிருவரும் ஈட்டி களால் தாக்கிக் கொள்ளும்வரை நான் போகப்போவதில்லை. பேசியது போதும், உன் வெண்கலத்தை நானும் என் வெண் கலத்தை நீயும் கொஞ்சம் சுவைக்கலாம் வா.'

இப்படிப் பேசிவிட்டு தன் ஆற்றல் மிகுந்த ஈட்டியை அக்கிலீ ஸின் தெய்வீகக் கேடயத்தை நோக்கி வீசினான் ஈனியாஸ். ஈட்டி பட்டதால் பேரொலி எழுப்பியது அந்தக் கேடயம். வீரம் செறிந்த ஈனியாசின் நீண்ட நிழல்கொண்ட அந்த ஈட்டி கேடயத்தைக் குத்தி உள்ளே நுழைந்து விடுமென்று அஞ்சிய அக்கிலிஸ் கேடயத்தைத் தன் ஆற்றல் மிகுந்த கையால் முன் புறமாக நீட்டிப் பிடித்தான். முட்டாள். கடவுளர்களால் வழங்கப்பட்ட புகழ் பெற்ற பரிசுகள் எதையும் மனிதர்களின் தாக்குதலால் கசங்கவோ வேறு எந்தவகையிலும் பாதிக்கப்படவோ இடம் கொடுக்க மாட்டா என்பதை அவன் மறந்துவிட்டான். எனவே, ஈனியா ஸின் கனமான ஈட்டியால் அக்கிலிஸின் கேடயத்தை

உடைக்கவோ உள்ளே செல்லவோ முடியவில்லை. ஹெஃபைஸ்டஸ் தன் பரிசில் பொருத்தியிருந்த தங்கம் அந்த ஈட்டியைத் தடுத்துவிட்டது. ஆனால் இரண்டு அடுக்குகளைத் தாண்டி உள்ளே சென்றது. ஆனால் அதையடுத்து மூன்று அடுக்குகள் இருந்தன. ஏனெனில் இரண்டு வெண்கலத்திலும், இரண்டு வெள்ளீயத்திலும் ஒன்று தங்கத்திலுமாக மொத்தம் ஐந்து அடுக்குகளைச் சிறிய நொண்டிக் கடவுள் அதனுள் வைத்துச் செய்திருந்தான். அந்தத் தங்க அடுக்கில்தான் ஆஷ் மரத்தால் செய்யப்பட்ட ஈனியாஸின் ஈட்டி குத்தி நின்றது.

அடுத்து ஈனியாஸின் கேடயத்தைக் குறிவைத்து நீண்ட நிழல் கொண்ட தன் ஈட்டியை எறிந்தான் அக்கிலிஸ். அது அவன் வட்டவடிவ ஈட்டியில் விளிம்பில் குத்தியது. அந்த இடத்தில் தான் வெண்கலமும் எருதுத் தோலின் ஆதரவும் மிக மெல்லிய தாக இருந்தன. பீலியான் மலையில் உள்ள ஆஷ் மரத்தால் செய்யப்பட்ட ஈட்டியின் முனை அதை உடைத்துக்கொண்டு உள்ளே போனது. அப்போது உடைந்து விழும் எதிரொலி வந்தது. ஈனியாஸ் தலையைக் குனிந்து அதைத் தவிர்த்தான். பயத்தில் தலைக்குமேலே தன் கேடயத்தைத் தூக்கிப் பிடித்துக் கொண் டான். அவனுடைய இரண்டு அடுக்குகள் கொண்ட பிரம்மாண்ட மான கேடயத்தைத் துளைத்துக் கொண்டு சென்று அவனைத் தாண்டித் தரையில் குத்தி நின்றது ஆர்வமான அந்த ஈட்டி. நீண்ட அந்த ஈட்டியானது ஈனியாஸைத் தொடவில்லை. என்றாலும் அவன் உறைந்து போயிருந்தான். அவ்வளவு நெருக்கமாக அது குத்தி நின்றிருந்தது. அதிர்ச்சியலைகள் அவனது பார்வையைப் பாதித்தன.

அச்சமூட்டும் வகையில் கத்திக் கொண்டே கூர்மையான தனது வாளை உருவிக் கொண்டு அவன்மீது கோபமாகப் பாய்ந்தான் அக்கிலிஸ். உடனே அருகில் இருந்த ஒரு பெரிய பாறை யொன்றைத் தூக்கினான் ஈனியாஸ். அது ஒரு அசாதாரணமான சாதனை. இந்தக் காலத்தில் இருக்கும் இருவரால்கூட அப்படிச் செய்ய முடியாது. ஆனால் அதை எளிதாகத் தூக்கித் தூக்கிப் போட்டுப் பிடித்தான் ஈனியாஸ். நில நடுக்கத்தின் கடவுளாகிய பொசைடன் மட்டும் இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந் திருக்காவிட்டால் அக்கிலிஸ் நெருங்கி வந்தபோது, அந்தப் பாறையை அவன் தலைக்கவசத்தையோ கேடயத்தையோ குறிவைத்து எறிந்திருப்பான் ஈனியாஸ். ஒரு அசிங்கமான

முடிவிலிருந்து சற்று முன்தான் அந்தக் கேடயம் அக்கிலிஸைக் காப்பாற்றியிருந்தது. அக்கிலிஸும் ஈனியாஸைத் தன் வாளால் கொன்றிருப்பான். பொஸைடன் தன் மனத்தில் உள்ளதை கடவுளர்களோடு பகிர்ந்துகொண்டான்:

'ம்ஹும், இது சரியல்ல. வீரம் செறிந்த ஈனியாஸை நினைத்து எனக்குக் கவலையாக இருக்கிறது. இன்னும் ஒரு கணத்தில் அவன் அக்கிலிஸிடம் விழுந்து ஹயடிஸுக்குச் சென்று விடுவான். ஏதோ அப்போலோவால் ஒரு அசிங்கமான முடிவி லிருந்து அவனைக் காப்பாற்ற முடியும் என்பதுபோல! வில் கடவுளான அப்போலோ சொன்னதையெல்லாம் நம்பி அவன் இங்கே வந்துவிட்டான் - முட்டாள்! விரிந்த வானத்தில் வசிக்கும் கடவுளர்களுக்குத் தன் புனிதப் படையல்கள் மூலம் எப்போதுமே திருப்தி கொடுத்திருக்கும் இந்த அப்பாவி, எதற்காக அடுத்தவர் களின் விஷயத்தில் தலையிட்டு வேதனையடைய வேண்டும்? நாமெல்லாம் உடனே செயல்பட்டு ஈனியாஸை இறப்பிலிருந்து காப்பாற்றுவோம். அக்கிலிஸ் ஈனியாஸைக் கொல்வானே யாகில் ஜீயூஸ்கூட கோபப்படலாம். ஏனெனில் டார்டானஸின் பரம்பரையை அழிவிலிருந்து காத்து வாழவைக்க விதிக்கப்பட்ட வன் ஈனீயாஸ். மானிடத் தாய்க்குப் பிறந்த எந்தப் பிள்ளையை யும்விட டார்டானஸைத்தான் ஜீயூஸ் மிகவும் அதிகமாக நேசித்தார். ஆனால் இப்பொழுது அவர் ப்ரியமின் மக்களை வெறுக்கிறார். எனவே வல்லமை பொருந்திய ஈனியாஸ் ட்ராய் நகரை ஆளட்டும். அவனது குழந்தைகள், குழந்தைகளின் குழந்தைகள் என காலங்காலத்துக்கும்.'

எருதுக் கண்ணாள் ஹீரா பதில் சொன்னாள்:

'நிலநடுக்க நாயகனே, ஈனியாஸைக் காப்பாற்றுவதா அல்லது கைவிடுவதா என்பதை நீயே முடிவு செய்துகொள். எல்லாக் கடவுளர்களின் முன்னிலையில் நானும் பல்லாஸ் அதீனியும் ட்ரோஜன்களை அழிவிலிருந்து காப்பாற்றுவதில்லை என்று வாக்குறுதி அளித்துள்ளோம். அவர்களுடைய நகரம் முழுவதும் போர்த்திறம் மிக்க கிரேக்கர்களால் தீக்கிரையாகும் நாளில்கூட காப்பாற்றுவதில்லை என வாக்குக் கொடுத்துள்ளோம்.'

ஹீரா சொன்னதைக் கேட்ட நிலநடுக்கக் கடவுளாகிய பொஸைடன் உடனே போர்ச் சப்தங்கள் மற்றும் ஈட்டிகளின் மழையினூடே இறங்கிப் பயணித்தான். ஈனியாஸும் கீர்த்திமிகு

அக்கிலிஸுூம் சண்டையிட்டுக் கொண்டிருந்த இடத்துக்குப் போய்ச் சேர்ந்தான். அங்கே போனதும் அக்கிலிஸின் கண் தெரியாத அளவுக்கு ஒரு பனிப்படலத்தைப் பரப்பினான். பின் வீரம் செறிந்த ஈனியாஸின் கையில் இருந்த கேடயத்திலிருந்து அருமயான ஆஷ் மர ஈட்டியை உருவி அதை அக்கிலிஸின் பாதத்தின் கீழே போட்டுவிட்டு ஈனியாஸை அலாக்காகத் தூக்கிக் கொண்டு காற்றில் பறந்தான். கடவுளின் கையால் காற்றில் உயர்த்தப் பட்ட ஈனியாஸ் படைகளையும் தேர்களையும் தாண்டிச் சென்றான். போர்க்களத்தின் முடிவான விளிம்பு போன்ற இடத்துக்கு வந்து சேர்ந்தான். அங்கே போர் செய்வதற் காக அப்போதுதான் காகோனிகள் ஆயுதம் தரித்துக் கொண்டிருந் தார்கள்.

அங்கே ஈனியாஸை இறக்கி விட்ட பொசைடன் அவனிடம் அவசரமாகச் சொன்னான்:

'ஈனியாஸ், இது என்ன பைத்தியக்காரத்தனம்? பெருமை மிகு அக்கிலிஸோடு போர் செய்யும்படி உனக்குச் சொன்ன கடவுள் யார்? அக்கிலிஸ் உன்னைவிட பலம் வாய்ந்தவன் மட்டுமல்ல, கடவுளர்களால் உன்னைவிட அதிகமாக நேசிக்கப்படுபவனும் அவனே. அவனை நீ எப்போது எதிர்கொள்ள நேரிட்டாலும் உடனே பின் வாங்கிச் சென்றுவிடு. இல்லையெனில், விதியை எதிர்த்ததற்காக ஹயடிஸின் நீத்தார் மண்டபத்தில்தான் உன்னைக் காண்பாய். ஆனால் விதிக்கப்பட்ட தன் முடிவை அக்கிலிஸ் எய்திய பிறகு, நீ முழு நம்பிக்கையுடன் முன் வரிசை அணி வகுப்புக்குச் செல்லலாம். ஏனெனில் வேறு எந்த கிரேக்கனாலும் உன்னைக் கொல்ல முடியாது.'

இவ்வார்த்தைகளை ஈனியாஸிடம் சொல்லிய பொசைடன் உடனே அவ்விடம் விட்டகன்று அக்கிலிஸ் இருந்த இடம் சென்று அவன் கண்களை மறைத்துக் கொண்டிருந்த தெய்வீகப் பனிப்படலத்தை நீக்கினான். அக்கிலிஸ் தன்னைச் சுற்றிலும் ஆத்திரத்துடன் பார்த்தான். என்ன நடந்திருக்கும் என்று யோசித்தான்.

'அட, என்னவொரு ஆச்சரியமான காட்சி! எனது ஈட்டி என் காலடியில் கிடக்கிறது. ஆனால் அதை வைத்து நான் கொல்ல நினைத்தவனை எங்கேயும் காணவில்லை! ஈனியாஸ் நித்தியர் களான கடவுளுக்கு மிக நெருக்கமாக இருக்கிறான் என்பது

தெளிவாகிவிட்டது. ஆனால் இதைப்பற்றியெல்லாம் அவன் பெருமை பீற்றிக் கொள்ளும்போது அதில் உண்மையேதும் இருக்காது என்றுதான் நான் நினைத்தேன். சரி, தொலைந்து போகட்டும். இப்போதைக்கு அவன் உயிரைக் காப்பாற்றி விட்டதற்காக நன்றியுடையவனாக இருப்பான். இனிமேலும் என்னை எதிர்க்கத் துணிய மாட்டான். போரை நேசிக்கும் கிரேக்கர்களுக்கு என் உத்தரவுகளை இப்பொழுது நான் கொடுக்கலாம். ட்ரோஜன்களுக்கு எதிராக என்னென்ன·செய்ய முடியும் என்பது பற்றி யோசிக்கலாம்.'

இப்படிச் சிந்தித்துவிட்டு முன் வரிசை அணிவகுப்புக்கு மீண்டும் சென்றான் அக்கிலிஸ். அனைவரையும் பார்த்துக் கூறினான்:

'கடவுளையொத்த கிரேக்கர்களே, ட்ரோஜன்கள் வருவார்கள் என்று நினைத்து அங்கேயே நின்று கொண்டிருக்க வேண்டாம். நீங்களே ஒவ்வொருவரும் ஒரு ட்ரோஜனைத் தேர்ந்தெடுத்துப் போர் செய்ய எண்ணுங்கள். நான் பலசாலியாக இருக்கலாம். ஆனால் முழு சேனையையும் என் ஒருவனால் சமாளிக்க முடியாது. இந்த உக்கிரமான போரில் நித்தியக் கடவுள்களான ஏரிஸும் அதீனியும் களமிறங்கினால்கூட இப்பெரும் படையில் அதிகமான சேதத்தை அவர்களாலும் ஏற்படுத்த முடியாது. ஆனால் என்னால் எவ்வளவு வேகமாகவும், திறமையாகவும், ஆற்றலுடனும் செயல்பட முடியுமோ அவ்வளவுக்கு நான் நிச்சயமாகச் செய்வேன். ஒருகணம்கூட ஓயமாட்டேன். அவர்களின் அணிக்குள்ளேதான் நான் நேராக நுழைய இருக்கிறேன். எனது ஈட்டி முனையின் முடிவில் தன்னைப் பார்க்கும் எந்த ட்ரோஜனும் நிச்சயமாக சந்தோஷமடையப் போவதில்லை.'

இவ்விதமாகத் தன் வீரர்களுக்கு உற்சாக மூட்டும் விதத்தில் பேசினான் அக்கிலிஸ். எதிர்ப்பக்கத்தில் ட்ரோஜன் வீரர்களைத் தூண்டும் விதமாக, அக்கிலிஸைத் தாக்க வேண்டுமென்று ஹெக்டர் பேசினான்:

'பெருமைமிகு ட்ரோஜன்களே, பீலியூஸின் மகனை நினைத்து அஞ்ச வேண்டாம். வார்த்தைகளால் நான்கூட கடவுள்களோடு சண்டை போடுவேன். ஆனால் ஈட்டி கொண்டு போரிடுவது கடினமானது. கடவுள்களை நம்மால் வெற்றி கொள்ள முடியாது. அவர்கள் நம்மைவிட பலமடங்கு அதிக ஆற்றல்

உள்ளவர்கள். அக்கிலிஸ் சொல்வதையெல்லாம் செய்ய மாட்டான். ஒருசில விஷயங்களில் அவனுக்கு வெற்றி கிடைக்க லாம். ஆனால் வேறு பலதில் அவன் தோல்வியடைவான். அவனது கைகள் நெருப்பைப் போல இருந்தாலும் சரி, ஆமாம் அவனது கைகள் நெருப்பைப் போல இருந்தாலும், அவனது வீரம் ஒளிவிடும் இரும்பினதைப் போல இருந்தாலும் சரி, அவனை நேருக்கு நேர் எதிர்கொள்ளப் போகிறேன் நான்.'

இவ்விதமாகப் பேசி அவர்களை உற்சாகப்படுத்தினான் ஹெக்டர். ட்ரோஜன்களும் தயாராக ஈட்டிகளை எடுத்து வந்தார் கள். இரண்டு படையினரும் ஒருவர் மீது ஒருவர் பாய்ந்து தாக்கினர். போர் முழக்கங்கள் மேலே சென்றன. அப்போது ஃபீபஸ் அப்போலோ ஹெக்டர் அருகில் சென்று சொன்னான்:

'ஹெக்டர், அக்கிலிஸோடு நேருக்கு நேர் மோத உடனே கிளம்பிவிடாதே. இங்கே படையினரோடு இரு. இந்தக் கூட்டத் தில் உன்னைத்தேடி அவன் வந்து கண்டுபிடிக்கட்டும். இல்லை யெனில் தன் ஈட்டியால் அவன் உன்னைத் தாக்குவான். அல்லது அருகில் இருந்து தன் வாளால் உன்னைக் குத்திவிடுவான்.'

அப்படி அப்போலோ சொன்னதும், கடவுளின் குரலைக் கேட்டு அச்சத்தில் பின்வரிசைக்குச் சென்றான் ஹெக்டர்.

ஆனால் கவச உடையில் இருந்த அக்கிலிஸ் ட்ரோஜன்கள்மீது அச்சமூட்டும் வகையில் கத்திக் கொண்டே பாய்ந்தான். முதலில் அவன் ஆட்ரின்டியூஸின் துணிச்சலான மகனும் ஒரு பெரும் படையில் தலைவனாகவும் இருந்த இஃபிட்டியானைக் கொன்றான். அவனுடைய அன்னை ஒரு நதி தேவதை. செழிப் பான ஹைடி பகுதியில் மோலஸ் மலையின் பனிபடர்ந்த உச்சியில் நகரங்களை அழிக்கும் ஆட்ரின்டியூஸுக்கு அவனை அவள் பெற்றுக் கொடுத்திருந்தாள். அவன் அக்கிலிஸுக்கு எதிரில் வந்தபோது, அவனது தலையின் மத்தியில் தன் ஈட்டியை எறிந்தான். அது அவனது மண்டையோட்டை இரண்டாக உடைத்தது. தடாலென அவன் தரையில் விழுந்தான். அவனை வென்ற அக்கிலிஸ் சொன்னான்:

'இதோ நீ விழுந்து விட்டாய், அதி மூர்க்கமான ஆட்ரின்டியூஸின் மகனே. உனது பிறப்பு உன் தந்தையின் பண்ணையில், கிகியா ஏரியின் பக்கமாய், மீன்கள் வளரும் நீர்ச்சுழிகள் கொண்ட

ஹெர்மஸ், ஹைலஸ் ஓடைகளின் அருகில் நிகழ்ந்திருந்தாலும், உன் இறப்பு இங்கே நிகழ்கிறது.'

இப்படி அவன் சொல்லி முடித்ததும் இஃபிட்டியானின் கண்களை இருள் தழுவியது. சண்டை நடந்து கொண்டிருந்த முன் வரிசையில், கிரேக்கத் தேர்ச்சக்கரங்களின் விளிம்புகள் அவனுடலைத் துண்டு துண்டாகச் சிதைத்தன. ஆன்ட்டினரின் மகன்களில் ஒருவனான, எதிரிகளை விலகி ஓடச்செய்வதில் துணிச்சலான, டிமோலியோனைக் கொன்றான். அவனது பொட்டில் தாக்கினான் அக்கிலிஸ். அந்த அடி அவனது தலைக் கவசத்தின் வெண்கலப் பக்கத்தைத் துளைத்தது. அக்கிலிஸின் ஈட்டியை நிறுத்த அந்த வெண்கலத் தலைக்கவசத்தால் முடிய வில்லை. அவனது மண்டை எலும்பை உடைத்து, தலைக்கவசத் தினுள் பாதுகாப்பாக இருந்தவற்றையெல்லாம் வெளியில் கொண்டு வந்தது அது. டிமோலியனின் தாக்குதல்களுக்கு அது ஒரு முற்றுப் புள்ளி வைத்தது.

அடுத்தது ஹிப்போடாமஸ். அவன் தனது தேரிலிருந்து குதித்துத் தப்பித்து ஓடிக்கொண்டிருந்தான். அவனுடைய முதுகில் தன் ஈட்டியால் குத்தினான் அக்கிலிஸ். அவன் பொசைடனுக்கான பலிபீடத்தில், பொசைடன் மகிழ, இளைஞர்களால் சுற்றி இழுத்துவரப்படும் காளை மாடு கத்துவது கத்திக்கொண்டே உயிர் விட்டான்.

இதற்கிடையில் ப்ரியமின் மகன்களில் ஒருவனான கடவுளை யொத்த பாலிடாரஸை ஈட்டி சகிதமாகத் தேடிக் கொண்டிருந் தான் அக்கிலிஸ். அவனைப் போருக்குச் செல்ல வேண்டாம் என்று ப்ரியம் சொல்லியிருந்தான். ஏனெனில் ப்ரியமின் கடைக் குட்டியும் ப்ரியமுக்கு மிகவும் பிரியமான மகனும் அவன்தான். ஆனால் ஓட்டப் பந்தயத்தில் அனைவரையும் வென்று விடுவான் பாலிடாரஸ். ஆனால் இப்பொழுது அவன் தன் ஆர்வத்தில் முன் வரிசை அணியினரிடயே தனது இறப்பைச் சந்திக்கும் வரை இங்குமங்கும் ஓடிக்கொண்டிருந்தான். அப்படி அவன் ஓடிக்கொண்டிருந்தபோது கடவுளையொத்த விரைவுப்பாத அக்கிலிஸ் தன் ஈட்டியை அவனது முதுகின் நடுவில் குத்தினான். அது அவனது இடுப்பைச் சுற்றியிருந்த தங்க வார்ப்பூட்டைத் தாக்கியது. அதன்மீதுதான் அவனது உடல் கவசம் கவிந்திருந்தது. அக்கிலிஸின் ஈட்டி முனை அவனது முதுகில் புகுந்து நேரே உள்ளே சென்று அவனது நாபி வழியாக வெளியே வந்தது.

அலறிக்கொண்டே முழந்தாளிட்டு அவன் விழுந்தான். இறப்பின் கருப்பு மேகம் அவனைச் சூழ்ந்தது. கீழே விழுந்தபோது குடல்களைக் கைகளால் பிடித்துக் கொண்டே விழுந்தான்.

தன் தம்பி பாலிடாரஸ் குடல் சரிய கைகளால் பிடித்துக் கொண்டே இறந்து விழுந்து கொண்டிருப்பதைப் பார்த்தவுடன் ஹெக்டரின் கண்கள் கண்ணீரால் மங்கின. அதற்கு மேல் பொறுமையாக விலகி அவனால் இருக்க முடியவில்லை. உடனே கொழுந்து விட்டெறியும் தீயைப் போல அக்கிலிஸ் இருந்த திசை நோக்கித் தனது கூரிய ஈட்டியைச் சுழற்றிக் கொண்டே பாய்ந்தான். அவனை நேரில் பார்த்த அக்கிலிஸ் அவனை நோக்கிப் பாய்ந்து வந்து வெற்றிக் களிப்பில் கூறினான்:

'என் உயிர்த்தோழனைக் கொன்று எனக்கு மிகக் கொடுமையான அடியைக் கொடுத்த மனிதன் இதோ என்னெதிரே நிற்கிறான்! இந்தப் போர்க்களத்தின் அணிவகுப்புகளில் ஒருவரை ஒருவர் ஏமாற்றிக் கொண்டிருந்ததற்கெல்லாம் இப்பொழுது ஒரு முடிவு வந்துவிட்டது.'

இப்படிச் சொல்லிவிட்டு, கடவுளையொத்த ஹெக்டரை முறைத்துப் பார்த்துவிட்டு மறுபடி சொன்னான்:

'வா வா, உன் விதி சீக்கிரமே முடியப் போகிறது.'

அவன் சொன்னதனால் எந்தப் பாதிப்புக்கும் உள்ளாகாத மின்னும் தலைக்கவசம் கொண்ட ஹெக்டர் சொன்னான்:

'பீலியூஸின் மகனே, உன் வார்த்தைகளால் என்னைப் பயமுறுத்த முடியும் என்று கனவு காணாதே. நானொன்றும் சின்னக் குழந்தையல்ல. அவமானங்களுக்கும் அசிங்கமான வார்த்தை களுக்கும் எப்படி பதில் தருவது என்று எனக்கு நன்றாகத் தெரியும். நீ ஒரு பெரிய போர்வீரன்தான். நான் உன்னைவிடச் சிறந்த வீரனில்லைதான். ஆனால் உன்னைவிடத் தாழ்ந்த நான், என் ஈட்டி கொண்டு உன் உயிரை எடுக்கப் போகிறேனா என்பது நிச்சயமாக கடவுள்களின் கைகளில்தான் உள்ளது. இதுவரைக்கும் எனது ஈட்டி மற்றவர்களின் ஈட்டிகளுக்கு எந்த வகையிலும் கூர்மையில் குறைந்ததாக இருக்கவில்லை.'

இப்படிச் சொல்லிவிட்டுத் தன் ஈட்டியைச் சுழற்றி சமன் செய்து குறிபார்த்து எறிந்தான். ஆனால் அதீனி அப்போது மெல்லக்

காற்றில் ஊதினாள். அதனால் ஹெக்டரின் ஈட்டி கீர்த்திமிகு அக்கிலிஸைத் தாக்காமல் வழி விலகிச் சென்றது. அது திரும்பிப் பறந்து கடவுளையொத்த ஹெக்டரின் காலடியிலேயே விழுந்தது. அவனைக் கொன்றுவிட வேண்டும் என்ற ஆர்வத்தில் உச்சஸ்தாயியில் கத்திக் கொண்டே அவனை நோக்கிப் பாய்ந்தான் அக்கிலிஸ். ஆனால் உடனே அப்போலோ ஹெக்டரை ஒரு அடர்ந்த மூடுபனிப் படலத்தால் மறைத்து தூக்கிக் கொண்டு போனான். ஒரு தேவனுக்கு அது ஒன்றும் கடினமான காரியம் அல்லவே! கடவுளையொத்த விரைவுப்பாத அக்கிலிஸ் மூன்று முறை தன் வெண்கல ஈட்டி கொண்டு பாய்ந்து தாக்கினான். ஆனால் மூன்று முறையும் அவனால் ஆழமான மூடுபனியைத் தான் தாக்க முடிந்தது. ஆனால் ஒரு அமானுஷ்யன் போல நான்காவது முறையாக அவன் பாய்ந்து வந்தபோது, பயங்கரமாகக் கத்திக்கொண்டே வந்த அவன் கோபமாகச் சொன்னான்:

'நாயே, மறுபடியும் நீ உன் தோலைக் காப்பாற்றிக் கொண்டாய். ஆனால் அது இப்பொழுது மட்டும்தான். ஃபீபஸ் அப்போலோ மறுபடியும் உன்னைக் காப்பாற்றி விட்டார். உன்னைச் சுற்றி ஈட்டிகள் தடதடக்க நீ அவரைத் தொழவேண்டும். ஆனால் நாம் மறுபடியும் சந்திப்போம். அப்போது நான் உன் கதையை நிச்சயமாக முடிப்பேன். எனக்கும் உதவ எங்காவது ஒரு கடவுள் இருக்க மாட்டாரா என்ன? இப்போதைக்கு என் கண்ணில் படும் மற்றவர்களை நான் தாக்குவேன்.'

இப்படிச் சொல்லிவிட்டு ட்ரையோப்ஸ் என்பவனைக் கழுத்தின் மத்தியில் தன் ஈட்டியால் குத்தினான் அக்கிலிஸ். அவனது காலடியில் விழுந்தான் ட்ரையோப்ஸ். அவனை அங்கேயே விட்டு விட்டு, உயரமாகவும் அழகாகவும் இருந்த டெமூக்கஸ் மீது ஈட்டியெறிந்தான் அக்கிலிஸ். அவனது முழங்காலில் ஈட்டி கொண்டு தாக்கி அவன் சென்று கொண்டிருந்த பாதையில் அவனை நிறுத்தினான். பின் அவனைத் தன் வாளால் குத்தி அவன் உயிரை எடுத்தான். அடுத்து பியாஸின் மகன்களாகிய லோகோனஸ், டார்டானஸ் ஆகியோரைத் தாக்கினான். அவர்கள் இருவரையும் தேரிலிருந்து தரையில் ஒருவனை ஈட்டி எறிந்தும். இன்னொருவனை நெருக்கத்தில் வாளால் வெட்டியும். விழச்செய்தான்.

அலாஸ்டரின் மகனான த்ரோஸ்தான் அடுத்துத் தாக்கப்பட்டான். அக்கிலிஸின் முழங்கால்களைப் பிடித்துக் கொண்டு கெஞ்சினான் த்ரோஸ்.

அக்கிலிஸின் வயதையொத்த தன்மீது இரக்கம் கொண்டு உயிர்ப்பிச்சை கொடுப்பான், தன்னைக் கொல்லாமல் கைதியாக மட்டும் சிறைபிடிப்பான் என்ற நம்பிக்கையில். பாவம், அவனது கெஞ்சல்கள் பயனற்றுப் போகப்போகின்றன என்று அவனுக்குத் தெரியாது. அக்கிலிஸ் இனிமையானவனோ மிருதுவான மனம் கொண்டவனோ அல்ல. தீபோல தகித்துக் கொண்டிருப்பவன். கெஞ்சுவதற்காக அவனது முழங்கால்களைப் பிடிக்க த்ராஸ் முயன்றபோது, அவனது கல்லீரலில் தனது வாளினால் குத்தினான். அவனது கல்லீரல் வழுக்கி வந்து வெளியில் விழுந்து அவனது மடியை கறுப்பு ரத்தத்தால் நனைத்தது. இருள் அவனது விழிகளைக் கவ்வ அவன் உயிரை விட்டான்.

பின் மூலியஸ் இருந்த இடத்துக்குச் சென்ற அக்கிலிஸ் அவனைத் தன் ஈட்டியால் காதில் பலமாகக் குத்தினான். அவன் குத்திய வேகத்தில் ஈட்டியின் வெண்கல முனை அடுத்த காது வழியாக வெளியில் வந்தது. பின் எகிக்லஸைப் பிடித்துக் கொண்ட அவன் கைப்பிடி கொண்ட தன் வாளால் தலையில் வெட்டினான். வாளின் வெட்டுவாய்ப் பகுதி முழுவதும் அவனது ரத்தத்தால் மிதமான உஷ்ணமேறியது. மீறமுடியாத விதியும் பழுப்பு இறப்பும் எகிக்லஸின் விழிகளை மூடின. அடுத்து தாக்கப் பட்டவன் ட்யூகாலியன். தன் ஈட்டியின் வெண்கல முனையால் ட்யூகாலியனின் முன் கையில், அவன் முழங்கையை இழுத்துப் பிடித்துக் கொண்டிருந்த தசை நார்கள் இருந்த பகுதியில் குத்தினான் அக்கிலிஸ். ஈட்டியால் குத்தப்பட்டு கனமாகத் தொங்கிக் கொண்டிருந்த கையுடன் ட்யூகாலியன், அவனுக்காகக் காத்துக் கொண்டிருந்த மரணத்தின் முகத்தை நேருக்கு நேர் பார்த்தான். அவனது கழுத்தில் வாளால் வெட்டினான் அக்கிலிஸ். அவனது தலையும் தலைக்கவசமும் பறந்து சென்றன ஒன்றாக. செத்துத் தரையில் நீட்டிக் கிடந்த அவன் முதுகெலும்பின் மஜ்ஜை வெளியில் வந்திருந்தது.

அதன்பிறகு செழிப்பான த்ரேஸ் பிரதேசத்திலிருந்து வந்திருந்த இணையற்ற ரிக்மஸைத் தேடிச் சென்றான் அக்கிலிஸ். அவனுடைய உடலின் நடுப்பகுதியில் ஈட்டியெறிந்தான். அவனது நுரையீரலில் குத்திக் கொண்டது அந்த வெண்கல ஈட்டி. அவன் தன் தேரிலிருந்து தடாலெனத் தரையில் வீழ்ந்தான். ரிக்மஸின் உதவியாளனாகிய அரிதூஸ் உடனே குதிரைகளைத் திருப்பினான். ஆனால் தன் கூரீட்டியால் அவன் முதுகில் குத்தி

அவனையும் தேரிலிருந்து தரைக்குக் கொண்டு வந்தான் அக்கிலிஸ். குதிரைகள் வெருண்டன.

தீயால் கருகிய மலைச்சரிவுகளில் இருக்கும் இடுக்குகளின் வழியாக மிக வேகமாக தீ பரவும்போது எவ்வளவு பெரிய காடும் அழிந்து போகும். ஓடி வரும் காற்றும் தீயை நாலா பக்கமும் விசிறி விடும். அதைப்போல அக்கிலிஸ் தன் ஈட்டியுடன் ஒரு அமானுஷ்யனைப் போல எதிர்ப்படும் ட்ரோஜன் வீரர்களை யெல்லாம் குத்திக் கொன்று கொண்டே ஓடிக்கொண்டிருந்தான். பூமியின் கறுப்பு மண் ரத்தத்தால் சிவப்பானது. வாற் கோதுமையை மிதிப்பதற்காக நன்றாகக் கட்டி வைக்கப்பட் டிருக்கும் கதிரடி நிலத்தில், அகன்ற புருவங்கள் கொண்ட இரண்டு எருதுகளை உழவன் தன் நுகத்தடியில் பூட்டுவது போல, தலை தாழ்த்தி மிதிக்கும் அந்த மிருகங்களின் குளம்புகள் பட்டு கதிர்கள் உமி வேறு கதிர் வேறாகப் பிரிவது போல, மகா அக்கிலிஸின் குதிரைகள் அக்கிலிஸின் உத்தரவின் பேரில் இறந்தவர்களையும் கேடயங்களையும் ஒன்று போல் மிதித்தன. தேரும் அதன் சக்கர ஆரங்களும், சக்கர விளிம்புகளும் குதிரைகளின் குளம்புகளால் எறியப்பட்ட ரத்தம் தெறித்ததால் சிவப்பாயின. பீலியூஸின் மகனோ, வெற்றி கொள்ள முடியாத தன் கைகளில் உறைந்து போன ரத்தம் படிந்தவனாய் மேலும் மேலும் கீர்த்தியை விரும்பியவனாகத் தொடர்ந்து சென்று கொண்டிருந்தான்.

# நதியோடு அக்கிலிஸின் சண்டை

**கதைச்சுருக்கம்**

*நதிகளின் கடவுள் என்ற முறையில் ஸ்கமாண்டர் நதி பேசுகிறது, செயல் படுகிறது.*

***வரிகள் 01 – 204***

*ஸ்கமாண்டர் நதியில் மறைந்திருக்கும் ட்ரோஜன்களை அக்கிலிஸ் கொல்கிறான். லைகேயான் மற்றும் அஸ்ட்ரோபியஸ் ஆகியோரும் அதில் அடக்கம்.*

***வரிகள் 205 – 382***

*கொலை செய்வதை நிறுத்தும்படி அக்கிலிஸிடம் சொல்கிறது நதிகளின் கடவுளான ஸ்கமாண்டர். ஒரு பெரும் வெள்ளத்தை உருவாக்கி அவனைத் தொடர்ந்து செல்கிறது அது. அக்கிலிஸுக்கு எதுவும் ஆகிவிடுமோ என்று அஞ்சும் ஹீரா, 'உனக்கே உரிய நெருப்பை ஏற்படுத்தி நதியை எரித்துவிடு' என்று ஹெஃபைஸ்டஸைக் கேட்டுக்கொள்கிறாள். ஸ்கமாண்டர் நதி அக்கிலிஸுக்கு எதிரான தனது போராட்டத்தைக் கைவிடுகிறது.*

***வரிகள் 383 – 513***

*கடவுள்கள் ஒவ்வொருவரும் தங்களுக்குப் பிடித்தமான அணியினருக்கு ஆதரவாக ஒருவரையொருவர் எதிர்த்துக் கொள்கின்றனர். அதீனியை எதிர்க்கும் ஏரிஸ் அஃப்ரோடைட்டியைப் போலவே படுதோல்வியடைகிறான். சாதாரண*

மானிடர்களுக்காக பொசைடனோடு சண்டையிட மறுக்கிறான் அப்போலோ. ஆர்ட்டீமிஸின் காதுகளில் குத்துகிறாள் ஹீரா. லீட்டோவோடு சண்டையிட மறுக்கிறான் ஹெர்மிஸ். அழுது கொண்டே ஜீயூஸிடம் செல்கிறாள் ஆர்ட்டிமிஸ்.

***வரிகள் 514 – 611***

எல்லாக் கடவுளர்களும் ஒலிம்பஸ் மலைக்குத் திரும்புகின்றனர். ஆனால் அப்போலோ மட்டும் இலியம் நகரைக் காப்பாற்ற அந்நகருக்குள் நுழைகிறான். வாயில் கதவுகளைத் திறக்கும்படி உத்தரவிடுகிறான் ப்ரியம். மாறுவேஷத்தில் இருக்கும் அப்போலோ அக்கிலிஸை அந்நகரிலிருந்து வெளியே கொண்டு வருகிறான். அப்பாடா என நிம்மதிப் பெருமூச்சு விடும் ட்ரோஜன்கள் மறுபடியும் ஊருக்குள் நுழைகின்றனர்.

# நதியோடு அக்கிலிஸின் சண்டை

ஜீயூஸைத் தந்தையாகக் கொண்ட, சுழிகளுடன் இனிமையாக ஓடிக்கொண்டிருந்த ஸ்கமாண்டர் ஆற்றின் ஆழமில்லாத பகுதிக்கு கிரேக்கர்கள் வந்ததும் ட்ரோஜன் படையினரை இரண்டாகப் பிரித்தான் அக்கிலிஸ். ஒரு பாதியை நகரை நோக்கித் தரைவழியாக விரட்டி விட்டான். அந்த வழியில் தான் அதற்கு முந்தைய நாள் ஹெக்டர் ஏற்படுத்திக் கொண் டிருந்த பேரழிவைக் கண்ட பதற்றத்தில் இங்குமங்குமாகப் பயந்தோடிய கிரேக்கர்கள் ஒருவர்மீது ஒருவர் ஏறி மிதித்து பெரும் சேதத்தை ஏற்படுத்தியிருந்தனர். அங்கே இப்பொழுது ட்ரோஜன்கள் தப்பி ஓடிக் கொண்டிருந்தனர். அவர்கள் அப்படித் தப்பித்து ஓடுவதைத் தடுக்க, ஒரு அடர்த்தியான மூடு பனியை ஏற்படுத்தினாள் ஹீரா.

மீதி இருந்த இன்னொரு பாதிக்கூட்டத்தினர் ஆழமாக ஓடிக் கொண்டிருந்த ஸ்கமாண்டர் ஆற்றுக்குள் இறக்கி விடப் பட்டனர். தண்ணீர் வாரியடிக்கும் சப்தத்தின் எதிரொலிகளுடன் அவர்கள் ஆற்றுக்குள் விழுந்தனர். ஓடிக்கொண்டிருந்த ஆறு கர்ஜித்தது. நீந்திச் செல்ல முயன்ற அவர்கள் சிறிய நீர்ச்சுழிகளில் சிக்கிக் கொண்டு சுழன்றனர். இரண்டு பக்கங்களிலும் இருந்த ஆற்றின் கரைகள் அவர்களது ஓலங்களை எதிரொலித்தன. திடீரெனக் கிளம்பி கொழுந்து விட்டெறியும் நெருப்புக்குப் பயந்து கும்பலாகக் கிளம்பி ஆற்றை நோக்கி வரும் வெட்டுக் கிளிக் கூட்டத்தைப் போல, மனிதர்களும் குதிரைகளும் அடங்கியதொரு கும்பலலை நீர்ச்சுழிகள் கொண்ட ஸ்கமாண்டர் ஆற்றுக்குள் அமுக்கினான் அக்கிலிஸ்.

ஆற்றின் கரையில் இருந்த ஒரு புதரின் எதிரில் தன் ஈட்டியைக் குத்தி வைத்துவிட்டு, வாளை மட்டும் எடுத்துக் கொண்டு அமானுஷ்யன்போல, கொலை வெறியுடன் ஆற்றில் குதித்தான் ஒலிம்பஸ் மலையில் பிறந்த அக்கிலிஸ். அவனது வாளினால் வெட்டப்பட்டுச் செத்துக் கொண்டிருந்தவர்களிடமிருந்து பயங்கரமான வேதனைக் குரல்கள் எழுந்த வண்ணமிருந்தன. நீரெல்லாம் அவர்களின் குருதியால் நிறம் மாறியது. ஒரு டால்ஃபின் மீனைப் பார்த்து பயந்து பாதுகாப்பான தங்கள் குகைகளுக்குள் ஓடி ஒளியும் சிறுமீன் கூட்டத்தைப் போல, ட்ரோஜன்கள் ஆற்றின் கரைப்பக்கமாக ஒதுங்கினர். (ஆனால் மீன்கள் அடைக்கலம் தேடும் இடத்துக்கு வந்துதான் டால்ஃபின் பிடிபடுவதையெல்லாம் தேர்வு செய்து உண்ணும்).

அவர்களைக் கொன்று குவிக்கின்ற வேலையால் கைகள் தளர்ந்து போனபோது, பெட்ரோக்குலஸின் மரணத்துக்கான ரத்த விலையாக, பன்னிரண்டு இளம் வீரர்களைத் தேர்ந்தெடுத்து அவர்களை உயிரோடு ஆற்றுக்கு வெளியில் கொண்டு வந்தான் அக்கிலிஸ். இளமான் குட்டிகளைப் போல வெருண்டோடிய அவர்களைப் பிடித்து, ஆற்றின் கரைப் பக்கமாக வைத்து, அவர்களின் குறுந்தளராடைகளை இறுக்கமாகப் பிடித்துக் கொண்டிருந்த பதனிடப்பட்ட தோலால் நன்றாகச் செய்யப் பட்டிருந்த இடுப்புக் கச்சைகளோடு சேர்த்து அவர்களின் கைகளைப் பின்பக்கமாகக் கட்டினான். பின் அவர்களைக் கப்பல் களுக்குக் கொண்டு வருமாறு தன் வீரர்களிடம் சொல்லிவிட்டு அவர்களை அங்கேயே விட்டுவிட்டு, மறுபடியும் எதிரிகளைக் கொல்ல வேண்டும் என்ற ஆர்வம் மிகைக்க, அதற்காகச் சென்றான்.

அங்கே அவன் ப்ரியமின் மகன்களில் ஒருவனான லைகா வோனைப் பார்த்தான். ஆற்றிலிருந்து தப்பித்துச் செல்ல அவன் முயற்சி செய்து கொண்டிருந்தான். ஓர் இரவுத் தாக்குதலின் போது அவனை அக்கிலிஸ் சந்தித்திருக்கிறான். அவனது தந்தையின் பழத்தோட்டத்திலிருந்து விருப்பமில்லாத கைதியாக அவனைக் கொண்டு போயுமிருக்கிறான். அப்போதவன் ஒரு அத்தி மரத்தின் இளங்கிளைகளைக் கூர்மையான கத்தியால் ஒழுங்கு படுத்தி, தேர்ச்சக்கர ஆரங்கள் செய்வதற்காக வெட்டிக் கொண்டிருந்தான். அப்போது வானத்திலிருந்து இடிபோல அவன்மீது இறங்கினான் அக்கிலிஸ். பிடிபட்ட அவனை அழகிய

லெம்னோஸ் நகரில் கொண்டு போய் அடிமையாக விற்று விடுவதற்காகக் கப்பலில் ஏற்றிவிட்டான் அக்கிலிஸ். அவனை ஜேசனின் மகன் விலைகொடுத்து வாங்கினான். லெம்னோஸி லிருந்து அவனை அதிக மீட்புத் தொகை கொடுத்து எம்ப்ரோஸ் நகரின் ஈட்டியான் என்பவன் விடுவித்தான். ஈட்டியானின் அன்பான கவனிப்பை அனுபவித்த லைகாவோன் பின்பு ஒளி மிகுந்த அரிஸ்பி நகருக்கு அனுப்பப் பட்டான். ஆனால் அங்கிருந்த தன் பாதுகாவலர்களை ஏமாற்றிவிட்டு தனது ஊரான ட்ராய்க்கே திரும்பிச் சென்றான் லைகாவோன்.

ஆனால் லெம்னோஸிலிருந்து திரும்பி வந்த பிறகு பதினோரு நாட்களுக்கு மட்டுமே அவனால் தன் நண்பர்களோடு சந்தோஷ மாகப் பொழுதைக் கழிக்க முடிந்தது. ஏனெனில் பன்னிரண்டா வது நாள் அவனைக் கடவுள் மறுபடியும் அக்கிலிஸின் கைகளில் ஒப்படைத்துவிட்டார். இந்த முறை அக்கிலிஸ் அவனை அவன் போக விரும்பாத ஒரு இடத்துக்கு அனுப்ப விரும்பினான் ஹயடிஸில் உள்ள நீத்தார் மண்டபங்கள். கடவுளையொத்த விரைவுப்பாத அக்கிலிஸ் அவனை எளிதாக அடையாளம் கண்டு கொண்டான். ஏனெனில் அவன் தலைக்கவசம், கேடயம், ஈட்டி என்று ஆயுதமேதும் தரிக்காமல் இருந்தான். எல்லாவற்றையும் தரையில் வைத்திருந்தான். மிகுந்த போராட்டத்துக்குப் பிறகு ஆற்றிலிருந்து தப்பித்த களைப்பில் இருந்தான் அவன். அவனுடைய சூழ்நிலையைப் பார்த்த அக்கிலிஸ் கோபத்துடன் சிந்தித்தான்.

'அட, என்ன ஒரு அதிசயமான காட்சி! நான் கொன்ற ஒவ்வொரு ட்ரோஜனும் மேற்கின் இருளின் கீழிருந்து திடீரென முளைத்து என்னைத் தாக்கக் கிளம்பி வந்துகொண்டே இருப்பார்கள் போலிருக்கிறதே! புனித லெம்னோஸில் இவனை நான் அடிமை யாக விற்றேன். ஆனால் அந்தக் கடினமான விதியிலிருந்து தப்பித்துத் திரும்பி இங்கே வந்திருக்கிறானே! நீலக்கடலின் ஆழம் பலரை அவர்களின் விருப்பத்து எதிராகத் தடுத்து நிறுத்து கிறது. ஆனால் இவனை விட்டுவிட்டதே! சரி போகட்டும், எனது ஈட்டியின் முனையை இப்பொழுது இவன் சுவைப்பான். மறுபடியும் என்னிடம் இவன் திரும்பி வருகிறானா அல்லது எல்லா சக்தி மிகுந்தவர்களையும் தன்னுள்ளே கொண்டிருக்கும் பூமி இவனையும் வாங்கிக் கொள்ளுமா இல்லையா என்று பார்த்து விடலாம்.'

இவ்விதமாக நின்று யோசித்துக் கொண்டிருக்கும்போது, லைகாவோன் அக்கிலிஸின் அருகில் வந்து மண்டியிட்டு அவனது முழங்கால்களைப் பிடித்துக் கொண்டான். கருப்பு விதியையும் பயங்கரமான மரணத்தையும் எப்படித் தவிர்ப்பது என்ற ஒரேயொரு ஆசைதான் அப்போது அவன் உள்ளத்தை ஆட்கொண்டிருந்தது. மிகவும் பயந்து போயிருந்தான் அவன். கடவுளையொத்த அக்கிலிஸ் அவனைக் குத்துவதற்காகத் தனது நீண்ட ஈட்டியை உயர்த்தினான். ஆனால் சட்டெனத் தலை குனிந்த லைகாவோன் அக்கிலிஸின் முழங்கால்களைப் பிடித்துக் கொண்டு கெஞ்சினான். அக்கிலிஸின் ஈட்டி அவனைத் தாண்டி தரையில் குத்தி நின்றது. மனித உணவு வேண்டி இன்னும் அது பசிகொண்டிருந்தது. ஒரு கையால் அக்கிலிஸின் முழங்கால் களைப் பிடித்திருந்த லைகாவோன் இன்னொரு கையால் அக்கிலிஸின் ஈட்டியை அசையாமல் பிடித்துக் கொண்டான்.

லைகாவோன் அச்சத்துடன் சொன்னான்:

'அக்கிலிஸ், நான் உன் கால்களைப் பிடித்துக் கொண்டு கெஞ்சிக் கேட்கிறேன். என்னை மதித்து இரக்கம் காட்டு. நான் உனக்கு, முன்னதாகவே உன்னைக் கெஞ்சிக் கேட்டவனாகிவிட்டேன். கெஞ்சி உயிர்ப்பிச்சை கேட்பவர்கள் மதிக்கப்பட வேண்டும். ஏனெனில், நீ எங்கள் அழகிய தோட்டத்தில் என்னைப் பிடித்து எனது தந்தையிடமிருந்தும் நண்பர்களிடமிருந்தும் என்னைப் பிரித்து புனித லெம்னோஸில் என்னை விற்றபோது, எனக்கு உணவு கொடுத்த முதல் கிரேக்கன் நீதான். உனக்கு ஒரு நல்ல விலையை நான் பெற்றுக் கொடுத்தேன் நூறு கால்நடைகள். ஆனால் அதைவிட மூன்று மடங்கு கொடுக்கப்பட்டு நான் மீட்கப்பட்டேன். பல கஷ்டங்களுக்குப் பிறகு பன்னிரண்டு நாள்களுக்கு முன்புதான் இலியம் நகருக்கு நான் திரும்பினேன். ஆனால் பயங்கரமான விதியானது என்னை மறுபடியும் உன் கைகளில் கொண்டுவந்து சேர்த்திருக்கிறது.

இரண்டு முறை, உன் கைதியாக ஆக்கப்பட்டிருப்பதற்காக, தந்தை ஜீயூஸ் என்னை எப்படி வெறுப்பார்! குறுகிய காலமே வாழப் போகும் லோதோஸின் மகன் நான். லாதோஸோ, சட்னியாய்ஸ் ஆற்றின் கரையோரமாக இருக்கும் உயர்ந்த கோட்டையான பெடாசஸில் வசிக்கும் போர்த்திறம் மிக்க லிலிஜிகளின் தலைவனான வயது முதிர்ந்த ஆல்ட்டிஸுடைய மகள். இந்த ஆல்ட்டிஸை ப்ரியம் தனது மனைவிகளில் ஒருத்தி

யாக ஆக்கிக் கொண்டார். ஆல்ட்டிஸுக்கு இரண்டு மகன்கள். அந்த இருவரையுமே நீ கசாப்பு செய்திருப்பாய். ஏனெனில் கடவுளையொத்த பாலிடாரஸ் ஏற்கெனவே உன்னால், உன் ஈட்டியின் முனைக்கு முன் வரிசையில் பலியாகி விட்டான். இப்போதோ ஒரு மோசமான முடிவு எனக்காகக் காத்திருக்கிறது. விதி என்னை உன் கைகளில் ஒப்படைத்து விட்டதால், தப்பித்து விடுவோம் என்ற நம்பிக்கை எனக்குக் கொஞ்சமும் இல்லை. ஆனால் நான் உனக்கு இப்பொழுது ஒன்று சொல்கிறேன். கவனமாகக் கேட்டுக்கொள். துணிச்சலான, பழகுவதற்கு இனிய உன் ஆத்ம நண்பனைக் கொன்ற ஹெக்டரின் அன்னைக்குப் பிறந்தவனல்ல நான். என்னைக் கொன்று விடாதே.'

இப்படியாக கீர்த்திமிகு ப்ரியமின் மகன் வேண்டினான். ஆனால் அவனுக்குப் பதில் சொன்ன குரலில் கருணையில்லை.

'அப்பாவியே, மீட்புத்தொகை பற்றியெல்லாம் என்னிடம் பேசாதே. உன் சொற்பொழிவுகளெல்லாம் என்னிடம் வேண் டாம். விதிக்கப்பட்ட தன் விதியை பெட்ரோக்குலஸ் சந்திப்ப தற்கு முன்பும், ட்ரோஜன்களை விட்டுவிடுவதாக எனக்கு எண்ணம் கிடையாது. பலரை உயிருடன் பிடித்து நான் வெளி நாட்டுக்குக் கப்பலில் அடிமைகளாக ஏற்றிவிட்டேன். ஆனால் இலியம் நகருக்கு முன்னால், என் கைகளில் கடவுள்கள் ஒப்படைக்கும் ஒரேயொரு ட்ரோஜன்கூட உயிருடன் இருக்கப் போவதில்லை. இது எல்லாருக்கும் பொருந்தும். குறிப்பாக ப்ரியமின் மகன்களுக்கு.

ஆமாம் நண்பனே, நீயும் சாகத்தான் போகிறாய். அதற்காக ஏன் இப்படி நீட்டி முழக்குகிறாய்? உன்னைவிடச் சிறந்த பெட்ரோக் குலஸ்கூடத்தான் இறந்து போனான். என்னைப் பார். நான் எவ்வளவு பெரிதாக எவ்வளவு அழகாக இருக்கிறேன் என்பது உனக்குத் தெரியவில்லையா? ஒரு மாவீரனின் மகன் நான். என் தாயோ ஒரு தேவதை. இருந்தாலும், இறப்பும் இரக்கமற்ற விதியும் எனக்காகவும்தான் காத்திருக்கின்றன. ஒரு காலையிலோ மாலையிலோ பிற்பகலிலோ என்னையும் யாரோ ஒருவன் ஈட்டியெறிந்தோ அம்பு விட்டோ இந்தப் போரில் கொல்லப் போகிறான்.'

அவன் அப்படிப் பேசியதும் லைகாவோனின் உயிர் போனது. ஈட்டியைப் பிடித்திருந்த பிடியை விட்டுவிட்டு இருகைகளையும்

நீட்டி விரித்தவாறு அவன் மண்ணில் சாய்ந்தான். ஆனால் தனது கூர்வாளை உருவி எடுத்த அக்கிலிஸ் லைகாவோனின் கழுத்து எலும்பில் வெட்டினான். இரண்டு விளிம்புகள் கொண்ட வாளின் வெட்டு வாய்ப்பகுதி அவன் சதையினுள் புகுந்தது. தலைக் குப்புற விழுந்து அவன் அங்கேயே கிடந்தான். அவனிடமிருந்து வெளிப்பட்ட கருப்பு ரத்தம் பூமியை நனைத்தது. கால்களால் அவனை எத்திய அக்கிலிஸ் அப்படியே தூக்கி ஆற்றில் எறிந்தான்.

பின் வெற்றிக் களிப்பில் பேசினான்:

'அதோ அதில் உள்ள மீன்களோடு இரு. உன் காயத்திலுள்ள ரத்தத்தையெல்லாம் யோசிக்காமல் அவை நக்கி எடுத்துச் சுத்தப்படுத்தும். உன்னைச் சவ வண்டியில் ஏற்றித் துக்கம் அனுஷ்டிக்கும் வாய்ப்பு உன் அன்னைக்கு வரப்போவதில்லை. ஆனால் நீர்ச்சுழிகள் கொண்ட ஸ்காமாண்டர் உன்னைச் சுருட்டிச் சுருட்டி ஆழக்கடலுக்கு எடுத்துச் செல்லும். கடலின் மேல் பகுதியில் முளைக்கும் கருத்த நீர்க்குமிழிகளைப் பார்த்து உனது வெள்ளைக் கொழுப்பை உண்ண ஆயிரமாயிரம் மீன்கள் ஓடிவரும்.

புனித இலியம் நகரின் கோட்டைக்குள் நாங்கள் நுழைவதற்குள் எல்லாரும் செத்துத் தொலையுங்கள். நீங்கள் படுதோல்வியில் இருக்க, நான் பின்புறத்திலிருந்து கொன்று குவித்துக் கொண்டு வருவேன். உங்களை எதுவுமே காப்பாற்றாது. வெள்ளி நீர்ச்சுழிகளுடன் இனிமையாகப் பாய்ந்தோடும் ஸ்கமாண்டர்கூட உங்களைக் காப்பாற்றாது. ஆனால் அதற்குத்தான் பல ஆண்டு களாக நீங்கள் எருதுகளைப் பலி கொடுத்துப் படைத்துக் கொண் டிருந்தீர்கள். சுழன்றோடும் அதன் ஆழமான பகுதிகளுக்குள் உயிருடன் குதிரைகளை எறிந்திருக்கிறீர்கள். ம்ஹூம், நீங்கள் யாரும் தப்பிக்கப் போவதில்லை. ஒவ்வொருவராக நீங்கள் மோசமான முடிவைச் சந்திக்க இருக்கிறீர்கள். பெட்ரோக் குலஸைக் கொன்றதற்கும், நான் இல்லாதபோது கப்பல்களின் அருகாக நீங்கள் கொன்ற கிரேக்க வீரர்களுக்குமான விலையை நீங்கள் அனைவரும் கொடுத்தே ஆகவேண்டும்.'

அவன் அப்படிப் பேசப்பேச நதிகளின் கடவுளாகிய ஸ்கமாண்ட ருக்கு மிகவும் கோபம் வந்தது. அக்கிலிஸின் வீரதீரச் செயல் களை எப்படி முடிவுக்குக் கொண்டு வரலாம், ட்ரோஜன்களை

எப்படிக் காப்பாற்றலாமென்று சிந்திக்க ஆரம்பித்தது. இதற்கிடையில், பீலியூஸின் மகனான அக்கிலிஸ் நீண்ட நிழல் கொண்ட தன் ஈட்டியுடன் அஸ்டியோபியஸ் மீது பாய்ந்தான்.

பெரிபியாவுக்கும் சுழலும் ஓடைகளைக் கொண்ட அகன்ற ஆறான ஆக்சியஸுக்கும் பிறந்த பீலிகானின் மகன் அவன். அக்கிலிஸ் அவனைத் தாக்கியபோது அஸ்டிரோபியஸ் அப்போதுதான் ஆற்றிலிருந்து கரையேறியிருந்தான். தன் கரையோரமாக இரக்கமற்ற வகையில் அக்கிலிஸ் இளம் வீரர்களைக் கொன்று குவித்துக் கொண்டிருந்ததை விரும்பாத ஸ்கமாண்டர் ஆறு இருந்த தைரியத்தில் இரண்டு ஈட்டிகளைப் பிடித்துக் கொண்டு அக்கிலிஸைப் பார்த்தான் அவன். இருவரும் அருகருகே வந்தபோது, விரைவுப்பாத அக்கிலிஸ் முதலில் பேசினான்.

'என்னை எதிர்கொள்ளும் துணிச்சல் கொண்ட நீ யாரடா? எங்கிருந்து வருகிறாய் நீ? நான் கோபமாக இருக்கும்போது என்னை எதிர் கொள்ளும் மகன்களைப் பெற்ற தாய்மார்கள் பாவம்' என்றான்.

பீலிகானின் கீர்த்திமிகு மகன் சொன்னான்:

'வீரம் மிக்க அக்கிலிஸ், என் குடும்பத்தைப் பற்றி நீ ஏன் கேட்கிறாய்? தூர தேசமர்ன செழிப்பான பீனியாவிலிருந்து நான் வருகிறேன். நீண்ட ஈட்டிகள் கொண்ட என் பீனியப் படைகளுக்குத் தலைமை தாங்கி, பன்னிரண்டு நாட்களுக்கு முன்னதாக நான் என் ஊரைவிட்டு இலியம் நகருக்கு வந்தேன். அகண்டோடும் ஆறான ஆக்சியஸின் பரம்பரையில் நான் வருகிறேன். இந்தப் பகுதியில் ஓடும் இனிமையான நீர் ஆக்சியஸ் கொடுப்பதுதான். புகழ்பெற்ற ஈட்டியெறி வீரனாகிய பீலிகானின் தந்தைதான் ஆக்சியஸ். நான் பீலிகானின் மகனென்று அவர்கள் சொல்கிறார்கள். சரி போதும் இப்பொழுது, வா அக்கிலிஸ், சண்டையிடலாம்.'

இவ்விதமாக மரியாதை கொடுக்காமல் அவன் பேசினான்: பீலியான் மலையில் கிடைக்கும் ஆஷ் மரத்தில் செய்யப்பட்ட தன் ஈட்டியை உயர்த்தினான் அக்கிலிஸ். ஆனால் வீரனான அஸ்டிரோபியஸ் வலது கை மாதிரியே இடது கையாலும் சமமாகப் போர் செய்யும் திறமை கொண்டவனாக இருந்தான் அவன். இரண்டு ஈட்டிகளையும் ஒரே சமயத்தில் அக்கிலிஸை

நோக்கி எறிந்தான். ஒரு ஈட்டியால் அக்கிலிஸின் கேடயத்தைக் குத்தினான். ஆனால் அது கேடயத்தைத் துளைத்து உள்ளே செல்ல முடியவில்லை. ஒரு பரிசாக ஹெஃபைஸ்டஸ் அதில் வைத்திருந்த தங்கத்தில் பட்டு அதன் முனை நிறுத்தப்பட்டது. இன்னொரு ஈட்டியால் அக்கிலிஸின் வலது முழங்கையை உரசினான். கருப்பு ரத்தம் பீறிட்டு வெளிவந்தது. ஆனால் ஈட்டி அவனைத் தாண்டிச் சென்று தரையில் குத்தி நின்றது. அது இன்னும் சதை வேண்டுமென்று கேட்டுக் கொண்டிருந்தது.

அஸ்டிரோபியஸைக் கொன்றுவிடும் நோக்கத்தோடு இப் பொழுது தனது ஆஷ் ஈட்டியை எறிந்தான் அக்கிலிஸ். ஆனால் அவன் குறி தவறியது. ஆனால் போன வேகத்தில் ஆற்றின் கரையில் குத்தி பாதி ஈட்டி பூமிக்குள் புதைந்து நின்றது. தன் கூர்வாளை உருவிய பீலியூஸின் மகன் உடனே அஸ்டிரோபி யஸை நோக்கிக் கோபமாகப் பாய்ந்தான். ஆற்றின் கரையில் குத்தியிருந்த அக்கிலிஸின் ஈட்டியைத் தன் பெரிய கையால் உருவி எடுக்க முயன்று கொண்டிருந்தான் அவன். மூன்று முறை அவன் போராடினான். கொஞ்சம் மேலே வந்ததே தவிர, அதை அவனால் முழுமையாக வெளியே எடுக்க முடியவில்லை. நான்காவது முறையாக பீலியூஸின் ஈட்டியை வளைத்து உடைக்க அவன் முயன்றபோது, அக்கிலிஸ் அவன் மீது பாய்ந்து தன் வாளால் அவனை வெட்டிக் கொன்றான். அவன் வயிற்றுப் பகுதியில் நாபிக்கு அருகில் வெட்டினான் அக்கிலிஸ். உள்ளே இருந்த குடல்களெல்லாம் பிதுங்கி வெளியே வந்து விழுந்தன. மூச்சிரைக்க அஸ்டிரோபியஸ் விழுந்து கிடந்தான். இருள் அவனது விழிகளைத் தழுவியது. அவனது மார்பில் ஏறி மிதித்து அவனது கவச உடைகளைக் கழற்றினான்.

அக்கிலிஸ் வெற்றிக் களிப்பில் கூறினான்:

'இங்கேயே கிட, நதிக்கடவுளின் பிள்ளையென்றாலும் எல்லாம் வல்ல ஜீயூஸின் பரம்பரையில் வருமென்னை வெல்வது கஷ்டம் என்பதைத் தெரிந்து கொள். அகண்டோடும் ஆற்றின் பரம்பரை யில் நீ வருவதாகச் சொன்னாய். ஆனால் எனது பரம்பரையோ ஜீயூஸிடமே சென்று சேர்கிறது. பல மெர்மிடன்களின் தலைவ னாக இருந்த ஈகஸின் மகனான பீலியூஸ் எனது தந்தை. ஈகஸ் ஜீயூஸின் மகன்களில் ஒருவர். முணுமுணுத்துக் கொண்டே ஓடி, கடலில் கலக்கும் எல்லா ஆறுகளையும்விட ஜீயூஸ் மேலானவர்.

அதைப்போல, ஜீயூஸின் பரம்பரையில் வரும் ஒருவன் ஆற்றின் பரம்பரையில் வரும் ஒருவனைவிட மேலானவன்.

உன்னைக் கடந்து போய்க் கொண்டிருக்கும் இந்த ஸ்கமாண்டர் ஆற்றைக் கொஞ்சம் பார். உனக்கு இந்த ஆற்றினால் ஏதேனும் பிரயோஜனம் உண்டு என்றால், இந்த ஆறானவன் வல்லமை மிக்கவன்தான். ஆனால் க்ரோனஸின் மகனான ஜீயூஸோடு சண்டை போட முடியாது. ஆறுகளின் தலைவனான அகிலூஸ் கூட ஜீயூஸுக்கு இணையானவன் அல்ல. எல்லா நதிகளின், எல்லாக் கடல்களின், எல்லா ஓடைகளின், எல்லா ஊற்றுக்களின் மூலமான, ஆற்றல் மிகுந்த ஆழமான ஓஷனும் இதில் அடக்கம். எல்லாம் வல்ல ஜீயூஸின் வான் பிளக்கும் இடி முழக்கத்தை நினைத்து ஓஷனுக்கும் பயம்தான்.

இப்படிச் சொல்லிவிட்டு, நதிக்கரையில் குத்தி நின்று கொண் டிருந்த தன் வெண்கல ஈட்டியை உருவி வெளியே எடுத்தான். கருப்பு நீரும், சுறுசுறுப்பான விலாங்கு மீன்களும் கவனித்துக் கொள்ளட்டும் என்று, தான் கொன்றவனை அங்கேயே விட்டுவிட்டுச் சென்றான். அவை அவனது சிறுநீரகத்தையும் கொழுப்பையும் கிழித்துண்டன.

சண்டையின் உக்கிரத்தில் பீலியூஸின் மகனுடைய பலத்துக்கும் அவனுடைய வாளுக்கும் பலியாகி, சுழன்று செல்லும் ஆற்றில் தங்களின் தலைவன் செல்வதைப் பார்த்துப் பதற்றமுற்ற உச்சியில் இறகுகள் கொண்ட தலைக்கவசங்களை அணிந்த பீனியர்களை விரட்டிக் கொண்டு சென்றான் அக்கிலிஸ். தெர்சிலோக்கஸ், மைடான், அஸ்ட்டிபைலஸ், நீசஸ், த்ரேசி யஸ், ஈனியாஸ், ஒஃபிலெஸ்டிஸ் ஆகியோரைக் கொன்றான். விரைவுப்பாத அக்கிலிஸ் இன்னும் பல பீனியர்களையும் கொன்றிருப்பான். ஆனால் அதற்குள் சுழலும் நீர்ச்சுனைகளைக் கொண்ட ஆறான ஸ்கமாண்டர் மனித உருவெடுத்த அக்கி லிஸைப் பார்த்து தன் ஊற்றுக்கள் ஒன்றிலிருந்து பேசியது:

'அக்கிலிஸ், ஆற்றலிலும் அட்டூழியம் செய்வதிலும் மானிட வீரர்களில் தலைசிறந்தவன் நீதான். கடவுள்களும் எப்போதுமே உன் பக்கமே இருக்கிறார்கள். ட்ரோஜன்கள் அனைவரையும் நீ கொல்ல வேண்டும் என்று ஜீயூஸ் விதித்திருந்தால், குறைந்த பட்சம் என் இடத்திலிருந்து அவர்களனைவரையும் தூரமாக விரட்டி விடு. உனது அசிங்கமான வேலையைத் தரையில்

சமவெளியில் வைத்துக்கொள். எனது அழகான வழிகள் யாவும் இறந்தவர்களின் உடல்களால் நிரம்பியுள்ளன. எனக்கு மூச்சுத் திணறுகிறது. எனது நீரை நான் கடலில் கலக்க முடியவில்லை. நீ பாட்டுக்கும் குருட்டுத்தனமாகக் கொலை செய்து கொண்டே போகிறாய். போதும் நிறுத்திவிடு. தலைவனே, எனக்கு அதிர்ச்சியாக உள்ளது.'

விரைவுப்பாத அக்கிலிஸ் பதில் சொன்னான்:

'ஜீயூஸின் குழந்தையே ஸ்கமாண்டர், உன் விருப்பம் நிறை வேறும். ஆனால் இந்தத் திமிர் பிடித்த ட்ரோஜன்களையெல்லாம் அவர்களுடைய நகரத்துக்குள் அடைக்கும் வரை, ஹெக்டரை நேருக்கு நேர் சந்தித்து மோதிப் பரிசோதிக்கும்வரை, என்னை அவன் கொல்கிறானா அல்லது நான் அவனைக் கொல்வேனா என்று பார்க்கும்வரை, அவர்களைக் கொல்வதை நான் நிறுத்தப் போவதில்லை.'

இந்த வார்த்தைகளைச் சொல்லிவிட்டு ஏதோ அமானுஷ்யன் போல ட்ரோஜன்களின்மீது பாய்ந்து தாக்கத் தொடங்கினான் அக்கிலிஸ். அதன்பின், ஆழமான நீர்ச்சுனைகளைக் கொண்ட ஸ்கமாண்டர் ஃபீபஸ் அப்போலோவைப் பார்த்துக் கூறியது:

'வெள்ளி வில்லேந்திய கடவுளே, ஜீயூஸின் மகனே, அவமானம்! ஜீயூஸின் உத்தரவுகளை நீ மீறிவிட்டாய். ட்ரோஜன்களின் பக்கம் நிற்குமாறும், மாலை சூரிய அஸ்தமனம் நிலங்களின் தன் பயனுள்ள நிழலை விரிக்கும்வரை அவர்களைப் பாதுகாக்கு மாறும்தான் உன்னிடம் பலமுறை அவர் சொன்னார்.'

அப்படி ஸ்காமாண்டர் பேசியதும், கீர்த்திமிகு ஈட்டியெறி வீரனா கிய அக்கிலிஸ் நதிக்கரையிலிருந்து ஆற்றின் நடுப்பகுதிக்குக் குதித்தான். நதிகளின் கடவுளாகிய ஸ்கமாண்டர், பெருவெள்ளம் கொண்டு அவனை வேகமாகத் தள்ளினான் தன் எல்லா அழகிய ஓடைகளையும் தூண்டினான். எல்லாவற்றையும் ஒன்றாக எழச்செய்தான். ஒரு காளை மாதிரி உருமிக் கொண்டே தன்மீது கிடந்து மூச்சடைக்க வைத்துக் கொண்டிருந்த அக்கிலிஸுக்குப் பலியான உடல்களையெல்லாம் தரைமீது வீசியெறிந்தான். உயிருடன் இருந்தவர்களையெல்லாம் ஓடும் வழியில் பெரிய ஆழமான ஊற்றுகளை ஏற்படுத்தி மறைத்தான். ஆற்று நீரெல் லாம் கொதித்துக் குமுறி அலைகளாக அக்கிலிஸைச் சுற்றிப்

பயங்கரமாக எழுந்தன. அவனுடைய கேடயத்தை அடித்தன. அவனை நீரால் மூடின. நிலையாக நிற்க முடியாமல், முழுமை யாக வளர்ந்திருந்த இலைகளை உதிர்க்கின்ற எல்ம் மர மொன்றைப் பற்றிப் பிடித்தான். ஆனால் வேரோடு கரைவிட்டுக் கையில் வந்து ஆற்றில் விழுந்தது மரம். விழுந்து ஒரு அணை போல குறுக்கே இந்தப் பக்கமும் அந்தப் பக்கமும் கிளைகளால் முடிச்சு போட்ட மாதிரி விழுந்து நீரோட்டத்தைத் தடைசெய்தது. நீரோட்டத்திலிருந்து போராடி வெளியே வந்தான் அக்கிலிஸ். எவ்வளவு விரைவில் வெளியே கரைக்கு வர முடியுமோ அவ்வளவு வேகமாக வந்தான்.

ஆனால் அவன் விஷயத்தை அதோடு முடிவுக்குக் கொண்டு வந்துவிடவில்லை அந்த மாபெரிய கடவுள். ட்ரோஜன்களை அபாயத்திலிருந்து காப்பாற்றுவதற்காக அவனது வீரதீரச் செயல்களை ஒரு முடிவுக்குக் கொண்டுவர நினைத்தார் அவர். தலைக்குமேல் கருத்துக்கொண்டே வந்து வளைக்கும் ஒரு பேரலைபோல அக்கிலிஸின்மீது எழுந்தார். பீலியூஸின் மகன் தப்பி ஓடினான். ஆரம்பத்தில் அவனது வேகம் ஈட்டி எறிவதுபோலத் தொடங்கியது. பின் போகப்போக, பறவை யினங்களிலேயே அதி வேகமாகப் பறக்கும் வேட்டைக்காரனான கழுகைப் போல அவன் வேகம் கூட்டினான். அவன் அப்படி ஓடியபோது, அவனது வெண்கலக் கவச உடை அவனது தோள்களில் அச்சுறுத்தும் வகையில் ஒலியெழுப்பியது. தனக்கு மேலே தொங்கிக் கொண்டிருந்த பேரலையை விட்டு அவன் தப்பித்தபோது, அவனைத் துரத்திக் கொண்டு வந்தான் ஸ்கமாண்டர். கர்ஜித்துக் கொண்டும் இடிபோல முழங்கிக் கொண்டும். கையில் மண்வெட்டியை வைத்துக் கொண்டும், ஓர் இருண்ட ஊற்றிலிருந்து தண்ணீரைத் தன் தோட்டத்துக்கும் செடிகளுக்கும் ஓடிவருமாறு கால்வாய் வெட்டி விட்டுக் குழியிலும் வழியிலும் இருக்கும் தடைகளையெல்லாம் அகற்று கிறான் தோட்டக்காரன். தண்ணீரும் தங்குதடையின்றி ஓடிவரு கிறது. வழியில் இருக்கும் கூழாங்கற்களெல்லாம் அடித்துச் செல்லப்படுகின்றன. விரைவிலேயே நீரோட்டம் சரிவுகளில் தனக்கு வழிகாட்டிய தோட்டக்காரனை முந்திக்கொண்டு ஓடி வருகிறது.

அதைப்போல, விரைவாகத்தான் அக்கிலிஸ் வந்தான் என்றாலும், அவனுக்கு முன் வந்து அவனைப் பிடித்தது பேரலை. கடவுள்கள்

மனிதர்களைவிட ஆற்றல் மிக்கவர்கள். விண்ணுலகத்தில் வாழும் எல்லாக் கடவுள்களுமே தன்னைத் துரத்திக் கொண்டு வருகிறார் களோ என்று பார்ப்பது போல அக்கிலீஸ் சிலசமயங்களில் ஓடாமல் எதிர்த்து நின்றது. ஆனால் அவன் நின்றபோதெல்லாம் வானத்திலிருந்து வழங்கப்பட்ட வலிமை வாய்ந்த அந்த ஆறு, அவன் தோள்களில் கடுமையாக இறங்கியது. பெரிதும் எரிச் சலூட்டப்பட்டவனாக, குதித்துத் தப்பிக்கப் பார்ப்பான் அக்கிலிஸ். ஆனால் ஒரு பைத்தியம் மாதிரி அவனைத் துரத்திக் கொண்டு வந்த தண்ணீர் அவன் சமநிலையைக் கெடுக்கும். அவன் கால்வைக்கும் இடத்திலெல்லாம் இருக்கும் நிலத்தை உண்ணும். பீலியூஸின் மகன் வேதனையில் முனகினான்.

அகன்ற வானத்தை அன்னாந்து பார்த்துச் சொன்னான்:

'ஓ தந்தை ஜீயூஸ், என் மீது எந்தக் கடவுளுக்குமே இரக்கமில்லயா? யாருமே என்னை இந்த ஆற்றிலிருந்து காப்பாற்ற மாட்டார்களா? இதைத்தவிர வேறு எந்த முடிவென்றாலும் அதை நான் ஏற்றுக் கொள்ளத் தயாராக இருக்கிறேன். வானத்தில் வசிக்கும் மற்ற கடவுளர்களைக் குறை சொல்கிறேன் என்று நினைக்க வேண்டாம். என் அன்னையைத்தான் நான் அதிகமாகக் குறைசொல்வேன். அம்மாவின் தவறான முன்னறிவிப்புகள்தான் என்னை ஏமாற்றி விட்டன. அப்போலோவுக்கும் அவரது பறக்கும் ஆயுதங்களுக்கும் ட்ரோஜன் வீரர்களின் நகரச் சுவர்களின் அருகே நான் விழுவேன் என்று அம்மா சொன்னாள். ஹெக்டர் என்னைக் கொன்றிருந் தாலாவது நன்றாக இருந்திருக்கும்! இலியம் நகரில் உருவாக்கப்பட்ட வீரர்களில் தலைசிறந்தவன் அவன்தான். கொன்றவன் கொலை செய்யப்பட்டவனளவுக்கு சிறந்தவனாக இருந்திருப்பான். ஆனால் இங்கே நான் ஒரு பரிதாபகரமான மரணத்தைத் தழுவ வேண்டி வரும் என்று நினைக்கிறேன். பன்றிகளைக் கவனித்துக் கொள்ள அனுப்பப்பட்ட சிறுவனொரு வன் குளிர்காலத்தில் மலையோடையை நீந்திச் செல்ல முயன்ற போது அடித்துச் செல்லப்படுவதைப் போல, ஒரு மகாநதியிடம் நான் அகப்பட்டுக் கொண்டு விட்டேன்.'

அப்படி அவன் சொன்னவுடன் பொசைடனும் அதீனியும் அவனருகில் வந்து நின்றனர். மனித உருவெடுத்துக் கொண்ட அவர்கள், தம் கைகளை அக்கிலிஸுக்குக் கொடுத்து நம்பிக்கை யூட்டும் வார்த்தைகளைச் சொன்னார்கள்.

பொசைடன்தான் முதலில் தன் மனத்தில் உள்ளதைச் சொன்னான்:

'அக்கிலிஸ், என்னையும் பல்லாஸ் அதீனியையும் போன்ற இருவர் உனக்கு உதவி செய்வதற்காக இறங்கி வந்திருக்கும் போது நீ கலக்கமடைய வேண்டாம். ஜீயூஸின் அனுமதியுடன் தான் நாங்கள் வந்திருக்கிறோம். நான் சொல்வதை நம்பு, எந்த நதியாலும் நீ கொல்லப்பட மாட்டாய். இது விரைவிலேயே பழைய நிலைக்குப் போய்விடும். நீயே அதைப் பார்ப்பாய். இதோ நாங்கள் உனக்குச் சொல்லும் நல்லுபதேசத்தை இஷ்ட மிருந்தால் கேள். தப்பிக்க முயலும் எல்லா ட்ரோஜன்களையும் இலியம் நகருக்குள் அடைத்து வைக்கும்வரை, எல்லாரையும் எல்லாவற்றையும் சமன் படுத்தும் போரிலிருந்து நீ ஒதுங்க நினைக்காதே. ஹெக்டரின் உயிரை எடுப்பதற்கு முன் உனது கப்பல்களுக்குச் செல்லவும் முயலாதே. இந்த வெற்றிக்கு நாங்கள் உனக்கு உத்தரவாதம் தருகிறோம்.'

இந்த வார்த்தைகளுடன் அந்த இரு கடவுள்களும் நித்தியர் களோடு மறுபடியும் போய்ச் சேர்ந்து கொள்ளப் புறப்பட்டுச் சென்றார்கள். மிகவும் உற்சாகமுற்றவனாக, சமவெளியில் நடந்து சென்றான் அக்கிலிஸ். ஆனால் தரை முழுவதும் வெள்ளக் காடாக இருந்தது. கொல்லப்பட்ட உடல்களும் அவற்றில் இருந்த அருமையான கவச உடைகளும் மிதந்து கொண்டிருந்தன. ஆனாலும் நீரோட்டத்தை எதிர்த்து முன்னேறிச் சென்றான் அக்கிலிஸ். அதீனி அவன் ஆற்றலை அதிகப் படுத்தியதால், பரவிக் கொண்டிருந்த நீரால் அவனுக்கு இணையாகத் தொடர்ந்து வரவோ அவனை நிறுத்தி வைக்கவோ முடியவில்லை. ஆனாலும் ஸ்கமாண்டர் தனது முயற்சிகளைத் தளர்த்திக் கொள்ளவில்லை. சினத்தில், ஒரு புதிய பேரலையை உருவாக்கி சிமாய்ஸ் ஆற்றையும் துணைக்கு உரக்க அழைத்தது.

'அன்பான சகோதரனே, நாம் இருவரும் சேர்ந்து இவனுடைய ஆற்றலை விஞ்ச வேண்டும். இல்லையெனில் இவன் விரைவி லேயே தலைவன் ப்ரியமின் மாநகரை அழித்து விடுவான். அவனை நிறுத்த ஒரு ட்ரோஜன்கூட உயிரோடு இருக்க மாட்டான். உடனே வந்து எனக்கு உதவி செய், வா. உனது கால்வாய்களையெல்லாம் ஊற்று நீரால் நிரப்பு. உன் மலை ஓடைகளுக்கெல்லாம் மறுபடியும் புதிதாக நீர் கொடு. ஒரு பேரலையை உருவாக்கி அதைக் கீழே அனுப்பு. அது கீழே

வரும்போது மரத்துண்டுகளையும் பாறைகளையும் கொண்டு வரட்டும். அப்படிச் செய்தால்தான் இந்தக் காட்டுமிராண்டியை நாம் நிறுத்த முடியும். ஏதோ கடவுள்களுக்கு இணையானவன் என்று தன்னைப் பற்றி அவன் நினைத்துக் கொண்டிருக்கிறான்.

ஆனால் அவனது ஆற்றலும் அழகும் அவனுக்கு இப்பொழுது உதவப்போவதில்லை. அவனது பிரம்மாண்டமான கவச உடைகளாலும் பிரயோஜனமில்லை. எனது வெள்ளச் சகதியின் அடியில் அவை கிடக்கப் போகின்றன. அவனைப் பொருத்த வரை, இறந்த உடலை மூடும் துணியாக மணலே இருக்கப் போகிறது. கூழாங்கற்கள் அவனுக்கு மேலே குவிந்து கிடக்கப் போகின்றன. அவனது எலும்புகளை எங்கே தேடுவது என்று தெரியாமல் கிரேக்கர்கள் முழிப்பார்கள். வண்டல் மண்ணின் அடிப்பகுதியில் அவனை நான் புதைப்பேன். அவனது கல்லறை மேடு ஏற்கெனவே தயாராக உள்ளது. கிரேக்கர்கள் அவனுக்காக ஈமச்சடங்குகளைச் செய்யும்போது ஒரு நினைவுக் கல்லறை கட்ட வேண்டிய அவசியமிருக்காது.'

கொதித்த வண்ணம் அவன் பேசினான்: கோபுரம் போல எழும் ஒரு அலையோடு அக்கிலிஸ் மீது பாய்ந்தான். நுரை, ரத்தம், இறந்த உடல்கள் இவற்றால் நிறைந்த நீரோடு. விண்ணகம் உருவாக்கிய அந்த ஆற்றிலிருந்து ஒரு கருத்த அலை பீலியூஸின் மகனுடைய தலைக்கு மேலே தொங்கியது. அவனை விழுங்கப் போவதாக பயமுறுத்தியது. நீர்ச்சுனைகள் நிறைந்த மகாநதி யினால் அக்கிலிஸுக்கு ஏதும் ஆகிவிடுமோ என்ற அச்சத்தில் அலறினாள் ஹீரா. உடனே தன் மகன் ஹெஃபைஸ்டஸிடம் சொன்னாள்.

'வளைந்த பாதம் கொண்ட கடவுளே, என் மகனே, உடனே செயலில் இறங்கு. இந்தச் சண்டையில் ஸ்கமாண்டரைச் சமாளிக்க உன்னைத்தான் நாங்கள் மனத்தில் கொண்டிருந்தோம். சீக்கிரமாக அக்கிலிஸைப் போய்க் காப்பாற்று. உனது தீப்பிழம்பு களைக் களத்தில் இறக்கு. நான் போய் மேற்குக் காற்றையும் தெற்குக் காற்றையும் தூண்டிவிடுகிறேன். கடலிலிருந்து அவை ஒரு புயல் காற்றை எழுப்பித் தீயைப் பரப்பட்டும். அந்தத் தீ இறந்த ட்ரோஜன்களின் உடல்களையும் அவர்களது கவச உடைகளையும் உண்ணட்டும். ஸ்கமாண்டரின் கரைகளில் உள்ள மரங்களையெல்லாம் நீ தீக்கிரையாக்கு. ஸ்கமாண்டர் நதி தீப் பிடித்து, பற்றி எரியட்டும். அவன் உன்னைக் கெஞ்சினாலும் சரி,

பயமுறுத்தினாலும் சரி, விட்டுவிட வேண்டாம். என்னிட மிருந்து ஒரு குரல் கேட்கும் வரை உனது கோபத்தைக் குறைக் காதே. அதன்பிறகு அணைக்க முடியாத உனது பெருந்தீயை நீயே குறைத்து அணைக்கலாம்.'

அவள் அப்படிச் சொன்னதும் தாமதிக்காமல் ஒரு தெய்வீகத் தீயை உருவாக்கினான் ஹெஃபைஸ்டஸ். அது சமவெளியில் தொடங்கி அக்கிலிஸால் கொல்லப்பட்டுச் சிதறிக்கிடந்த பலரின் உடல்களை உண்டது. மீறி வந்த வெள்ளம் தடுக்கப்பட்டது. சமவெளி முழுவதும் காய்ந்து போனது. நீர் பாய்ச்சப்பட்ட தோட்டம் இலையுதிர் காலத்தில் வடக்குக் காற்றினால் காய்ந்து போவது போல, அதை உழும் உழவன் இன்புறுவதுபோல, சமவெளி முழுவதும் காய்ந்து போனது. இறந்தவர் அனைவரும் தீக்கிரையாயினர். கண் கூசவைக்கும் தனது நெருப்பை இப்பொழுது நதியின் பக்கம் திருப்பினான் ஹெஃபைஸ்டஸ். எல்ம் மரங்கள், வில்லோ மரங்கள், டாமரிஸ்க் மரங்கள் அனைத்திலும் தீப்பிடித்துக் கொண்டது. ஓடையின் அருகில் அதைச் சுற்றி அடர்ந்து நிறைந்து வளர்ந்த தாமரையும், நாணல் வகையில் நறுமணமிக்க கோரைப் புற்களும் எரிந்து போயின. ஊற்றுகளின் ஆழத்தில் இருந்த விலாங்கு மீன்களும் மற்ற மீன்களும் ஹெஃபைஸ்டஸ் உருவாக்கிய பயங்கரமான கொடுந் தீயால் சித்திரவதைக்கு உள்ளாக்கப் பட்டன. வேதனையில் இப்படியும் அப்படியும் நீரோட்டத்தில் திரும்பின. வெந்துபோன வல்லமை மிக்க நதி நொந்து போனது.

'ஹெஃபைஸ்டஸ், எந்தக் கடவுளையும்விட ஒருபடி மேலான வன் நீ. உனது இந்த நெருப்பை என்னால் தாங்க முடியவில்லை. போதும் சண்டையை முடித்துக் கொள்வோம். கடவுளையொத்த அக்கிலிஸ் சென்று ட்ரோஜன்களையெல்லாம் நகரைவிட்டு விரட்டட்டும். எனக்கென்ன வந்தது? அடுத்தவர் விஷயத்தில் நான் ஏன் தலையிட்டுச் சாகவேண்டும்?' தன்னைச் சுற்றி தீ எழுந்து கொண்டிருக்க, ஸ்கமாண்டர் இவ்விதம் பேசினான்:

அவனுடைய அழகிய நீரோடைகள் காய ஆரம்பித்தன. எரியும் நெருப்பாலும் கீழே அடுப்பில் வைக்கப்பட்டுள்ள காய்ந்த விறகுகளாலும் கொதி நிலைக்குச் சீக்கிரமே வரும் கொப் பரையைப் போல, உள்ளே இருக்கும் கொழுத்த பன்றியின் கொழுப்பை உருக்குவதுபோல, கொப்பரையின் எல்லாப் பகுதியிலும் அந்தக் கொழுப்பு பரவுவது போல, ஸ்கமாண்டரின்

அழகிய நீரோடைகள் நெருப்பால் உண்ணப்பட்டன. அதன் நீர் கொதிக்க வைக்கப்பட்டது. ஆக்கப்பூர்வமான ஹெஃ பைஸ்டஸின் ஆற்றலால் உருவான தீயால் திக்குமுக்காடிப்போன அவன் மனமுடைந்து ஓடுவதை நிறுத்தினான்.

உடனே திரும்பி ஹீராவை நோக்கிக் கெஞ்சத் தொடங்கினான்:

‘ஹீரா, எதற்காகத் தண்டிப்பதற்கு என் ஓடைகளை உன் மகன் தேர்ந்தெடுத்துக் கொண்டார்? ட்ரோஜன்களுக்கு ஆதரவாகச் சண்டையிட்டுக் கொண்டிருப்பவர்களோடு ஒப்பிட்டுப் பார்த் தால் நான் செய்தது ஒன்றுமே இல்லை. இந்தத் தண்டனையை எனக்குக் கொடுப்பதில் எந்த நியாயமும் கிடையாது. எனினும், நீ சொன்னால் நான் நிறுத்திக் கொள்கிறேன். ஆனால் ஹெஃபைஸ்டஸும் நிறுத்த வேண்டும். நான் கூடுதலாக ஒன்று செய்கிறேன். ட்ரோஜன்களை அவர்களின் அழிவிலிருந்து காப்பாற்ற நான் ஒன்றும் செய்ய மாட்டேன் என்று உன்னிடம் வாக்குறுதி அளிக்கிறேன். அவர்களின் மாநகரம் முழுவதும் வீரம் மிக்க கிரேக்கர்கள் வைக்கப் போகும் தீயால் எரிந்து அழிந்துபோகும் நாளிலும் சரி.’

ஸ்கமாண்டர் இப்படிச் சொன்னதைக் கேட்டதும், வெண்ணிறக் கைகள் கொண்ட தேவதையான ஹீரா உடனே தன் அருமை மகன் ஹெஃபைஸ்டஸிடம் சொன்னாள்:

‘போதும் ஹெஃபைஸ்டஸ், கீர்த்திமிகு குழந்தாய், நிறுத்திவிடு. மனிதர்களுக்கு உதவி செய்வதற்காக ஒரு தேவனுக்கு இவ்வளவு கஷ்டம் கொடுப்பது சரியல்ல.’

அவள் அப்படிச் சொன்னதும் உடனே ஹெஃபைஸ்டஸ் தன் தெய்வீகத் தீயை அணைத்தான். தன் இரு அழகிய கரைகளினூடே மீண்டும் ஓட ஆரம்பித்தது நதி.

ஸ்கமாண்டரின் சக்திகள் யாவும் கட்டுப்படுத்தப் பட்ட பிறகு, அந்த இருவருக்கும் இடையில் எந்தச் சண்டையும் ஏற்பட வில்லை. இன்னும் கோபம் மிச்சமிருந்தாலும், அவர்களுக்குள் ஏதும் ஏற்படாமல் பார்த்துக் கொண்டாள் ஹீரா. ஆனால் இரண்டு பக்கமாகப் பிரிந்து கிடந்த மற்ற கடவுள்களுக்கு இடையே இப்பொழுது சண்டை மூண்டது. வானுலகமே அதிரும்படி எதிரெதிர் அணிகளில் இருந்த அவர்கள் இடிமுழக்கத்துடன்

ஒருவர்மீது ஒருவர் பாய்ந்து பயங்கரமாக மோதிக்கொள்ள ஆரம்பித்தனர்.

ஒலிம்பஸ் மலையின் உச்சியில் இருந்து இந்தப் பேரிரைச்சலை யெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தான் ஜீயூஸ். பொறுமையின்றி நித்தியர்கள் ஒருவரோடொருவர் மோதிக் கொள்வதைப் பார்த்து அவனுக்கு சிரிப்பாக வந்தது. கையில் வெண்கல ஈட்டியை ஏந்திக் கொண்டு, வசவுகளை உரக்க மொழிந்து கொண்டு அதீனியை நோக்கிப் பாய்ந்து வந்த கேடயங்களைச் சிதைக்கும் கடவுளான ஏரிஸ் சண்டையைத் தொடங்கினான்:

'நாய் மீது ஒட்டியிருக்கும் உண்ணியே, ஏன் கடவுளர்களுக்கு மத்தியில் சண்டையை ஏற்படுத்துகிறாய்? நீயும் உன் குருட்டுத் தைரியமும்! உனது மனதை ஆட்டிப்படைக்கும் எந்த எண்ணங் களை நிறைவேற்றிக் கொள்வதற்காக இந்த முறை இப்படி யெல்லாம் செய்கிறாய்? என்னைக் குத்தும்படி நீ டயமீடிஸைத் தூண்டியதை மறந்துவிட்டாயா? நீ அதை ரகசியமாக வைக்க வில்லை. அவனுடைய ஈட்டியை நீயே எடுத்து என்னை நேரடி யாகக் குத்தி என் மென்மையான சதையைக் கிழித்தாய். அப் போது நீ எனக்குச் செய்ததற்கான விலையை இப்பொழுது நீ கொடுக்கப் போகிறாய்.'

இப்படிச் சொல்லிவிட்டு அதீனியின் குஞ்சலம் வைத்த கேடயத் தில் குத்தினான் ஏரிஸ். ஆனால் ஜீயூஸின் இடிமுழக்கத்தைக்கூடத் தாங்கக் கூடிய பயங்கரமான கேடயம் அது. கொலைவெறி கொண்ட ஏரிஸ் தனது நீண்ட ஈட்டியால் அதைத் தாக்கினான். உடனே பின்வாங்கிக் கொண்ட அதீனி, தன் மகா கையால் தரையில் கிடந்த ஒரு பாறையை எடுத்தாள். அது பெரியதாகவும், கரடுமுரடாகவும் கருப்பாகவும் இருந்தது. முன்பொரு காலத்தில் வாழ்ந்த மனிதர்கள் எல்லையைக் குறிப்பதற்காக அதை அங்கே வைத்திருந்தனர். அதை எறிந்து ஏரிஸின் கழுத்தைத் தாக்கினாள் அதீனி. அவன் கீழே விழுந்தான். அவன் விழுந்தபோது அவனது கவச உடையிலிருந்து கடகடவெனப் பெரும் சப்தம் ஏற்பட்டது. ஏழு ஏக்கர் நில அளவுக்கு அது பரவிக் கிடந்தது. அவனது தலைமுடி மண்ணில் விழுந்து தூசி படிந்தது. வெற்றிக் களிப்பில் பல்லாஸ் அதீனி சிரித்தாள்.

'அட அடி முட்டாளே, என்னோடு சண்டை போட வருவதற்கு முன் உன்னைவிட நான் எவ்வளவு வலிமை வாய்ந்தவள்

என்பதைக்கூடத் தெரிந்து கொள்ளாமல் வந்திருக்கிறாய்! உனது அன்னை ஹீராவின் சாபங்களுக்கு நீ பதில் சொல்லும் காலம் இது என்று நினைத்துக்கொள். கிரேக்கர்களை விட்டு விட்டு அவர்களுக்கு உதவாமல் ட்ரோஜன்களுக்கு உதவ நீ எப்போது ஓடிப்போனாயோ அப்போதே உனக்கு கெடுதிதான் நடக்க வேண்டும் என்று ஹீரா சபித்துவிட்டாள்.'

இப்படிச் சொல்லி விட்டு தன் ஒளிபொருந்திய விழிகளை அவனிடமிருந்து அகற்றினாள் அதீனி. ஏரிஸைக் கைகொடுத்து தூக்கிவிட்ட அஃப்ரோடைட்டி அவனைப் போர்க்களத்திலிருந்து அப்புறப்படுத்தினாள். அவனுக்கு மயக்கம் தெளியாமல் இருந்தது. அவன் வேதனையில் முனகிக்கொண்டே இருந்தான். ஆனால் அஃப்ரோடைட்டி செய்து கொண்டிருந்த இந்த உதவியைப் பார்த்துக் கொண்டிருந்த வெண்ணிறக் கைகளைக் கொண்ட தேவதையாளு ஹீரா உடனே அதீனியிடம் அவசரமாகச் சொன்னாள்.

'மேகங்களைச் செலுத்தும் ஜீயூஸின் குழந்தாய் அட்ரிடோனி நன்றாகப் பார்! அதோ அந்த குழப்பமான சூழலினூடே கசாப்பு செய்யும் ஏரிஸை போர்க்களத்தைவிட்டு அழைத்துக்கொண்டு போகிறது அந்த நாயுண்ணி, மறுபடியும். சீக்கிரம் அவளைத் தொடர்ந்து போ.'

அவள் அப்படிச் சொன்னதும் அதைக் கேட்ட அதீனி மகிழ்ச்சியாக உடனே அஃப்ரோடைட்டியைப் பின் தொடர்ந்து சென்று அஃப்ரோடைட்டியின் மார்பில் தனது முட்டியால் குத்தினாள். அங்கேயே கீழே விழுந்த அஃப்ரோடைட்டி மயக்கமுற்றாள். அழகான அந்த நிலத்தில் அவளும் ஏரிஸூம் ஒன்றாகக் கிடந்தனர்.

அவர்களை வென்ற அதீனி வெற்றிக் களிப்பில் சொன்னாள்:

'கிரேக்கர்களுக்கு எதிராக ட்ரோஜன்களுக்கு உதவும் எல்லாரும் இப்படித்தான் ஆவார்கள் என்பதைத் தெரிந்து கொள்ளட்டும். ரொம்ப தீர்மானத்துடன் ஏரிஸூக்கு உதவச் சென்ற அஃப்ரோடைட்டிக்கு என் கோபத்தால் என்ன ஆனது என்பதைப் புரிந்துகொள்ளுங்கள். இந்தப் போரை நாம் விரைவிலேயே முடித்து வைப்போம். அருமையாக நிர்மாணிக்கப்பட்ட மாநகரான இலியத்தை விரைவிலேயே அழித்தொழிப்போம்.'

அவள் அப்படிப் பேசியதும் வெண்ணிறக் கைகள் கொண்ட தேவதையான ஹீரா புன்னகைத்தாள்.

இப்பொழுது நிலநடுக்க நாயகனான பொஸைடன் அப்போலோ விடம் சொன்னான்:

'ஃபீபஸ், நாம் ஏன் தனித்தனியாக நின்று கொண்டிருக்கிறோம்? மற்றவர்கள் ஏற்கெனவே தங்கள் வேலையைத் தொடங்கிவிட்ட பிறகு நாம் மட்டும் இப்படி நின்று கொண்டிருப்பது சரியல்ல. சண்டை எதுவுமே போடாமல் ஒலிம்பஸ் மலைக்கும் வெண்கலத் தரை கொண்ட ஜீயூஸின் அரண்மனைக்குத் திரும்பிச் செல்வது அவமானம். நீயே தொடங்கு. நீதான் என்னைவிட இளையவன். எனது அனுபவத்துக்கும் வயதுக்கும் நான் தொடங்குவது கௌரவமாக இருக்காது.

'முட்டாளே, ட்ரோஜன்களுக்கு உதவ நினைத்தாயே உனக் கென்ன புத்தி கெட்டுப் போய்விட்டதா? கடவுளர்களிடமிருந்து நம்மைப் பிரித்து ட்ராய் நகரின் பெருமை கொண்ட தலைவன் லாமிடானுக்கு சேவை செய்ய ஓராண்டுக்கு நம்மை ஜீயூஸ் அனுப்பினாரே, அப்போது நீயும் நானும் இலியத்தில் பட்ட துன்பங்களையெல்லாம் மறந்து விட்டாய் போலிருக்கிறது. நமக்கு நிர்ணயிக்கப்பட்ட நாள்கூலி கொடுத்தார்கள். உத்தரவு களை அவன் கொடுத்தான். ட்ரோஜன்களுக்காக அவர்களின் நகரைச் சுற்றி அகலமான, அருமையான ஒரு மதிலைக் கட்டினேன் நான். அரண்மனையை எதிரிகள் யாரும் உள்ளே நுழைந்து தாக்க முடியாதவாறு அந்த மதில் காத்தது. ஃபீபஸ், வளைந்த கொம்புகள் கொண்ட கன்னாபின்னாவெனச் செல்லும் கால்நடைகளையெல்லாம் நீ மரங்களடர்ந்த முகடுகள் பல கொண்ட அய்டா மலையில் மேய்ச்சலுக்கு ஓட்டிச் செல்வாய்.

ஆனால் பருவ காலங்களெல்லாம் முடிந்து ஓய்வெடுக்கும் காலம் வந்தபோது திமிர் பிடித்த லாமிடான் நமக்கு எதுவுமே கொடுக்காமல் நம்மை அனுப்பிவிட்டான். நம் கைகளையும் கால்களையும் கட்டி, தூரத்துத் தீவுகளுக்கு அடிமைகளாய் விற்றுவிடுவேன் என்று பயமுறுத்தவும் செய்தான். நமது காதுகளை அறுத்துவிடுவதாகக்கூட அவன் சொன்னான்: லாமிடான் தருவதாகச் சொல்லி ஏமாற்றிக் கொடுக்காமல் விட்டதில் கோபத்தோடு நாம் வீடு திரும்பினோம். திமிர் பிடித்த அந்த ட்ரோஜன்களை மனைவி மக்களோடு துடைத்தெடுத்து

இல்லாமலாக்குவதில் எங்களுக்கு உதவுவதற்கு பதிலாக, அந்த லாமிடானுடைய மக்களைத்தான் நீ இப்பொழுது காப்பாற்றத் துடிக்கிறாய்!'

வில் கடவுளான அப்போலோ பதில் சொன்னான்:

'நிலநடுக்க நாயகனே, பரிதாபத்துக்குரிய படைப்புகளான மனிதர்களுக்காக நான் உன்னோடு சண்டையிட்டால் என் புத்தி கெட்டுவிட்டதென்று நீ சொல்லுவாய். செழுமை மிக்க இந்தப் பூமியில் ஒளிமிகுந்த பூக்களைப் போல கொஞ்ச காலம் வந்து போகிறார்கள். பின் ஒரு கணத்தில் வாடி வதங்கிப் போய்விடு கிறார்கள். வேண்டாம், அவர்களுக்காக நாம் சண்டையிட வேண்டாம். சண்டையை நிறுத்திவிடுவோம். அவர்கள் தங்களுக் குள்ளேயே சண்டையிட்டுக் கொள்ளட்டும்.'

இந்த வார்த்தைகளைச் சொல்லிவிட்டு அப்பால் சென்றான் அப்போலோ. தனது பெரியப்பாவோடு கைகலப்பு செய்வது சரியல்ல என்று அவன் நினைத்தான். ஆனால் மிருகங்களுக்கும் காட்டு விலங்குகளுக்கும் தலைவியான அவனது சகோதரி ஆர்ட்டீமிஸ் கூர்மையான வார்த்தைகளால் அவனை அவமானப்படுத்தினாள்.

'அப்படியானால் பொசைடனின் கைகளில் வெற்றியை ஒப்படைத்துவிட்டு ஓடிப்போகிறாயா வில் கடவுளே? எவ்வளவு கேவலம்! பயன் படுத்தாத வில்லொன்றைத் தூக்கிக் கொண்டு அலைவதற்கு என்ன அர்த்தம் குழந்தாய்? 'பொசைடனோடு போரிடத் தயாராக இருப்பேன்' என்று என் தந்தையின் அரண்மனையிலும் மற்ற கடவுளர்கள் முன்னிலையிலும் இனி நீ பீற்றிக் கொண்டு திரியாதே.'

இப்படி அவள் கிண்டலாகப் பேசியதற்கு வில் கடவுள் பதிலேதும் சொல்லவில்லை. ஆனால் ஜீயூஸின் கண்ணியமிக்க மனைவியாகிய ஹீராவுக்கு ஆர்ட்டீமிஸ்மீது கடுங்கோபம் வந்தது. திருப்பி அவளைத் திட்டினாள்.

'வெட்கமில்லாத பெண் நாயே, என்னை எதிர்த்து நிற்கத் தயாரா நீ இப்பொழுது? ஜீயூஸ் உனக்கும் ஒரு வில்லைக் கொடுத் துள்ளார். பெண்களுக்கு மத்தியில் ஒரு பெண் சிங்கம் போல உன்னை ஆக்கிவைத்துள்ளார். பெண்களில் யாரை வேண்டு மானாலும் அழிப்பதற்கு உனக்கு ஆற்றலைக் கொடுத்துள்ளார்.

என்றாலும் உனக்கு அபாயம் விளைவிக்கும் எதிரியாக நான் இருப்பேன். பார்க்கிறாயா? உனக்கு மேலிருப்பவர்களோடு சண்டையிடுவதற்குப் பதிலாகக் காட்டுக்குப் போய் மிருகங்களையும் மான்களையும் வேட்டையாடு. அதுவே உனக்கு நல்லது. ஆனாலும் நீ சவால் விட்டிருப்பதனால், சண்டை என்றால் என்ன-என்று நீ தெரிந்து கொள்ள வேண்டும். நான் உன்னைவிட எவ்வளவு அதிகமான ஆற்றலுள்ளவள் என்பதும் உனக்கு விளங்க வேண்டும்.'

பேசிவிட்டு, தன் இடது கையால் ஆர்ட்டீமிஸின் இரண்டு மணிக்கட்டுகளையும் பிடித்தாள். வலது கையால் அவளுடைய வில்லையும் அம்புகளையும் தோளிலிருந்து வெளியில் எடுத்தாள். பின் தன்னிடம் இருந்த ஆயுதங்களால் ஆர்ட்டீமிஸின் காதுகளில் குத்துவிட்டாள். தன் எதிரி வேதனையில் இப்படியும் அப்படியும் திரும்பியதைப் புன்னகைத்து ரசித்துக் கொண்டாள். அம்பறாத்தூணியில் இருந்து அம்புகள் ஒவ்வொன்றாகக் கீழே விழுந்தன. ஆர்ட்டீமிஸ் அழ ஆரம்பித்தாள். ஒரு பிடிபடாமல் இருக்க விதிக்கப்பட்ட ஒரு புறா, கழுகின் கூர்நகங்களில் இருந்து தப்பித்து, ஒரு இடுக்கு அல்லது பாறையில் இருக்கும் இடை வெளியில் போய் ஒளிந்து கொள்வதைப் போல, அழுது கொண்டே தன் வில்லையும் அம்புகளையும் தரையில் போட்டு விட்டு ஹீராவிடமிருந்து பறந்து சென்றாள் ஆர்ட்டீமிஸ்.

தூதுவனும் அர்கஸையும் (ராட்சச மிருகத்தையும்) கொன்ற ஆர்ட்டீமிஸின் தாயான லீட்டோவிடம் பேசினான் ஹெர்மிஸ்:

'லீட்டோ, உன்னோடு சண்டைபோட நான் வரவில்லை. மேகங்களைச் செலுத்தும் ஜீயூஸை நேசிப்பவர்கள் சண்டை போட்டுக் கொள்ளும்போது ரொம்ப கஷ்டப்படுகிறார்கள். ம்ஹூம்! இந்த ஆட்டத்துக்கு நான் வரவில்லை. வேண்டுமானால் நீ கடவுளர்களிடம் போய் என்ன வேண்டுமானாலும் பீற்றிக் கொள்ளலாம். என்னைவிட உனக்குப் பயங்கரமான மிருக பலம் இருப்பதாகச் சொல்லிக் கொள்ளலாம்.'

அவன் அப்படிச் சொன்னதும், கீழே கிடந்த தன் மகளின் வளைந்த வில்லையும் இங்கொன்றும் அங்கொன்றுமாகச் சுழலும் தூசியில் சிதறிக்கிடந்த அம்புகளையும் பொறுக்கி எடுத்துத் தன் கைகளில் வைத்துக் கொண்டாள். இதற்கிடையில் ஒலிம்பஸ் மலையில் இருந்த ஜீயூஸின் வெண்கலத் தரை

கொண்ட அரண்மனையை அடைந்திருந்தாள் ஆர்ட்டீமிஸ். அங்கே போய், தன் தந்தையின் மடியில் அமர்ந்து தேம்பி அழுதாள். அவளுடைய நித்திய ஆடை அவள் அழுகைக்கு ஏற்றவாறு அசைந்து கொடுத்தது. க்ரோனஸின் மகன் தன் மகளைக் கைகளால் தூக்கினான். அன்பாகப் புன்னகைத்துக் கொண்டே அவளைக் கேட்டான்:

'எனதருமை மகளே, விண்ணகத்தின் எந்தக் கடவுள் உன்னை இப்படிச் செய்தது?'

'தந்தையே, இப்படிச் செய்தது வெண்ணிறக் கைகள் கொண்ட உங்கள் மனைவி ஹீராதான். அவள்தான் என்னை அடித்து விட்டாள். நித்தியர்களான கடவுளர்கள் மத்தியில் நடந்து கொண் டிருக்கும் இந்தச் சண்டைக்கெல்லாம் அவள்தான் காரணம்' என்றாள்.

அவர்கள் இவ்விதமாகப் பேசிக் கொண்டிருந்தபோது, ஃபீபஸ் அப்போலோ புனித இலியம் நகருக்குச் சென்றான். அவனுடைய கவலையெல்லாம் அருமையாகக் கட்டப்பட்டிருந்த அந்நகரின் மதில்களைப் பற்றியதாக இருந்தது. விதியை மீறி கிரேக்கர்கள் அன்றே அந்நகரை அழித்து விட்டால் என்ன செய்வது என்று அவன் நினைத்தான். (ஆனால் மற்றக் கடவுளர்கள் அனைவரும்) கோபம், வெற்றி, தோல்வி என இருந்தாலும்) ஒலிம்பஸ் மலைக்குத் திரும்பிக் கருப்பு மேகத்தின் தலைவனும் தங்களின் தந்தையுமானவனோடு சேர்ந்து அமர்ந்தனர்.

இதற்கிடையில் அக்கிலிஸ் மட்டும் தொடர்ந்து அழித்துக் கொண்டே போனான். மனிதர்களும் அவர்களுடைய குதிரை களும் ஒன்று போலவே அவனிடம் விழுந்தனர். ஒரு நகரத்தைக் கடவுளர்கள் வெறுத்து அதன்மீது தங்கள் கோபத்தைத் திருப்பும் போது, பற்றி எரிகின்ற அந்த நகரில் இருந்து வானத்தை நோக்கிப் புகை, கிளம்பிச் செல்வதுபோல, அந்நரின் மக்களனை வருக்கும் துன்பமும் துயரமும் வருவதுபோல, ட்ரோஜன்களுக்கு வேதனையைக் கொடுத்துக் கொண்டிருந்தான் அக்கிலிஸ்.

பொசைடன் கட்டிக் கொடுத்திருந்த கோபுரத்தில் ஏறி நின்றான் ப்ரியம். அச்சமேற்படுத்துகின்ற அக்கிஸின் அட்டூழியங்களை யும், பதற்றத்தில் சிதறியோடு ட்ரோஜன்களிடம் எதிர்ப்பு சக்தி இல்லாமல் போனதையும் அவனால் பார்க்க முடிந்தது.

அச்சத்தையும் அபாயத்தையும் காட்டும் விதத்தில் உரக்கக் குரலெழுப்பினான். கீழிறங்கி வந்து, வாயில் கதவுகளைக் காக்கும் நம்பிக்கைக்குரிய அனுபவம் மிக்க வாயில் காப்போரை உடனே வரும்படி உத்தரவு கொடுத்தான்.

வந்ததும் கட்டளைகளைப் பிறப்பித்தான். 'படுதோல்வியடைந்த நமது வீரர்களனைவரும் திரும்பி உள்ளே வரும்வரை வாயில் கதவுகளைத் திறந்து வையுங்கள். அவர்களைத் துரத்திக் கொண்டு அக்கிலிஸ் வருகிறான். ஏதோ ஆபத்து வரப்போகிறது என்று நான் அஞ்சுகிறேன். பாதுகாப்பாக அவர்களனைவரும் உள்ளே நுழைந்தவுடன், நிம்மதிப் பெருமூச்சு விட்டவுடன், இறுக்க மாகக் கதவுகளை மூடிவிடுங்கள். நமது தற்காப்புக்கு உள்ளே அந்தக் காட்டுமிராண்டி நுழைந்துவிடுவானோ என்று எனக்கு அச்சமாக உள்ளது.'

அப்படி அவன் சொன்னதும் வாயில் கதவுகள் திறக்கப்பட்டன. தாழ்ப்பாள்கள் தள்ளப்பட்டன. திறந்திருந்த கதவுகள் வழியாகப் பாதுகாப்பு அழைத்தது. அதோடு, அபாயம் ஏதும் ஏற்படாமல் அவர்களைச் சந்திக்க ஓடிச்சென்றான் அப்போலோ. அவர்கள் அனைவரும் நேரே வாயில் கதவை நோக்கித்தான் வந்து கொண்டிருந்தார்கள். சமவெளியில் இருந்து தப்பித்து ஓடிவந்த அவர்களுக்கு, தாகத்தால் வாய்கள் வறண்டிருந்தன. முகங்கள் மண் படிந்து அழுக்காக இருந்தன. இறவாப் புகழை விரும்பியவனாக, பைத்தியம் பிடித்த மாதிரி, அவர்களைத் துரத்திக் கொண்டு கையில் ஈட்டியுடன் மிகவும் நெருக்கமாக வந்து கொண்டிருந்தான் அக்கிலிஸ்.

ஃபீபஸ் அப்போலோ மட்டும் மிகுந்த பலம் கொண்ட வீரன் ஆன்ட்டினரின் மகனான இணையற்ற ஆகினருக்கு தூண்டுதல் கொடுத்திருக்காவிட்டால், ட்ரோஜன்களின் மாநகரம் அக்கிலி ஸிடம் அப்போதே வீழ்ந்திருக்கும். கருவாலி மரமொன்றில் சாய்ந்து கொண்டு, அவன் உள்ளத்தில் துணிச்சலை ஊதினான் கடவுளான அப்போலோ. பனிப்படலத்தால் போர்த்தப்பட்டுக் கண்ணுக்கு மறைந்திருந்தாலும், இரக்கமற்ற மரணத்தின் பேய்களிடமிருந்து ஆகினரைக் காப்பாற்றுவதற்காக, அவனுக்கு அருகிலேயேதான் நின்றான் அப்போலோ. அதன் விளைவாக, நகரங்களை அழிக்கும் அக்கிலிஸைப் பார்த்த ஆகினர் ஓடாமல் அவனிடத்திலேயே வீரமுடன் எதிர்த்து நின்றான். அவனுடைய எண்ணங்கள் குழப்பத்துடன் கொதித்துக் கொண்டிருக்க காத்துக்

கொண்டிருந்தான். வேதனையுடன், அந்தச் சூழ்நிலை பற்றிச் சிந்தித்தான்.

'நான் என்ன செய்வது? கடவுளையொத்த அக்கிலிஸைப் பார்த்துத் தப்பியோடி, பதற்றமுடன் ஒருவர் ஒருவர் மிதித்துக்கொண்டு நெருக்கியடித்துக்கொண்டு ஓடும் மற்றவர் களோடு போய்ச் சேர்ந்து கொண்டால்கூட அவன் என்னைப் பிடித்து என் பாதுகாப்பற்ற கழுத்தை அறுத்துவிடுவான். அப்படிச் செய்யாமல், மற்றவர்களை அவன் துரத்திச் செல்லட்டும் என்று விட்டுவிட்டு, எதிர்ப்பக்கமாக விரைந்து சென்று இலியத்தின் சமவெளிகளை அடைவேனாகில், அய்டா மலையின் அடிவாரம்வரை போகலாம். அங்கேபோய் காட்டில் ஒளிந்து கொள்ளலாம்...பின் சாயங்காலமாக ஆற்றில் குளிக்க லாம், என் உடலில் இருந்து வழிந்தோடும் வியர்வையைத் துடைத்தெடுக்கலாம், பின் திரும்பி இலியம் நகருக்குப் பாதுகாப்பாக வரலாம்...

ஆனால் எதற்கு இப்படித் தனியாக எனக்கு நானே பேசிக்கொண்டிருக்க வேண்டும்? நகரிலிருந்து சமவெளியை நோக்கி நான் ஓடினாலும் அதை எளிதாக அக்கிலிஸ் பார்த்துவிடுவான். அதன்பின் அவனுடைய வேகத்தில் என் பின்னால் வந்து என்னை நிச்சயம் பிடித்துவிடுவான். அதன்பிறகு விதியிலிருந்தும் மரணத்திலிருந்தும் தப்பவே முடியாது. மற்ற யாரைவிடவும் அவன் வல்லமை மிக்கவன். ஆனால் இங்கே இந்த நகரத்திலேயே நான் அவனைப் போய் நேருக்கு நேர் சந்தித்தால் என்ன? அவனுடைய சதையும் ஒரு வெண்கல ஈட்டியின் முனைக்குக் காயம் படக்கூடியதுதானே...அவனுக்கும் ஓர் உயிர்தான் இருக்கிறது...க்ரோனஸின் மகனான ஜீயூஸ் அவனுக்குக் கீர்த்தியைக் கொடுத்தாலும், அவன் ஒரு மானிடன்தான் என்று மக்கள் சொல்கிறார்கள்...' தனக்குள் இந்த வார்த்தைகளுடன் துணிச்சலை ஏற்படுத்திக் கொண்ட ஆகினர் அக்கிலிஸுக்காகக் காத்திருந்தான். அவனுடைய வீர உள்ளம் சண்டை போட்டுப் பார்ப்பதென்றே முடிவு செய்திருந்தது.

குகையிலிருந்து வெளியே வரும் பெண் சிறுத்தையானது வேட்டைக்காரர்களை எதிர்கொள்ளும். அச்சமேதுமின்றி வேட்டை நாய்களின் குரைப்புக்கும் அசையாமல் நிற்கும். வேட்டைக்காரன் முதலில் அடியெடுத்து ஈட்டியெறிந்து அதைத் தாக்கினாலோ குத்தினாலோ, ஈட்டி குத்திக்கொண்டிருக்கும்

சதையோடும் அதன் வீரம் அதைவிட்டுப் போவதில்லை. அதோடு அவனைத் தாக்குகிறது அல்லது அந்த முயற்சியில் மடிகிறது. அதைப்போல உயர்ந்த ஆகீனர் அக்கிலிஸின் வீரத்தைப் பரிசோதிப்பதற்கு முன் போவதில்லை என அசை யாமல் அவ்விடத்திலேயே நின்றான். தனக்கு முன்னால் தன் வட்டவடிவக் கேடயத்தைப் பிடித்துக் கொண்டிருந்தான்.

அக்கிலிஸைப் பார்த்தவுடன் தன் ஈட்டியைச் சுழற்றி'வனாக உரத்த குரலில் சொன்னான்:

‘கீர்த்திமிகு அக்கிலிஸ், பெருமைமிகு ட்ரோஜன்களின் நகரை இன்று வீழ்த்தப் போவதாக நீ நினைத்தாய். முட்டாளே! இன்னும் எவ்வளவோ வேதனைகளுக்கு அது சாட்சியாய் இருக்க வேண்டியுள்ளது. எங்கள் அருமைப் பெற்றோர்கள், மனைவி மக்களின் கண்களெல்லாம் பார்த்துப் பூரிக்க, இன்னும் எத் தனையோ சண்டைகளில் நாங்கள் வெற்றி கொள்ள இருக்கி றோம். தன்னம்பிக்கை கொண்ட இரக்கமற்ற போர்வீரனாக நீ இருக்கலாம். ஆனால் இங்கே அழிவை நோக்கி வேகமாகச் சென்று கொண்டிருப்பது நீதான்.’

தனது கனமான கையிலிருந்து கூரீட்டியை அக்கிலிஸ்மீது எறிந்தான். அது குறி தவறாமல், சரியாக அக்கிலிஸின் முழங்கால் தண்டில் தாக்கியது. அந்தப் பகுதியைப் பாதுகாக்க அணிந்திருந்த கவசத்தின் வெள்ளீயம் பயங்கரமாக ஒலியெழுப்பியது. கடவுளின் பரிசான அந்தக் கவசம், அந்தத் தாக்குதலைத் தாங்கிக் கொண்டது. ஆகினரின் வெண்கல ஈட்டியின் முனை துள்ளிக் குதித்தது. அக்கிலிஸைத் தாக்கியது அது. ஆனால் காயப்படுத்த வில்லை.

பதிலுக்குக் கடவுளையொத்த ஆகினரைத் தாக்கினான் அக்கி லிஸ். ஆனால் இந்தச் சண்டையில் அக்கிலிஸை ஜெயிக்க விட வில்லை கடவுள் அப்போலோ. ஆகினரை ஒரு கனமான மூடு பனிப் படலத்தில் மூடிய அப்போலோ, அவனை அமைதியாக அங்கிருந்து தூக்கிக் கொண்டுபோய் வீட்டில் சேர்த்தான். பின் மற்ற ட்ரோஜன்கள் இருந்த இடத்திலிருந்து அக்கிலிஸை அப்புறப்படுத்த ஒரு உபாயம் செய்தான் வில்லேந்திய கடவுள். அகீனரின் உருவத்தில் அக்கிலிஸின் வழியில் தோன்றினான். கடவுளை ஆர்வமாகத் துரத்திக் கொண்டே சென்றான் அக்கி லிஸ். கோதுமை வயல்களையெல்லாம் தாண்டி ஆழமான

நீர்ச்சுனைகள் கொண்ட ஸ்கமாண்டர் ஆறு இருந்த இடம் வரை அக்கிலிஸைத் துரத்தச் செய்தான் கடவுள். அக்கிலிஸுக்கு கொஞ்சம் முன்னால் வேண்டுமென்றே சென்று கொண்டிருந் தான் அப்போலோ. ஆனால் எந்த நேரமும் பிடிபட்டு விடுவோம் என்று அக்கிலிஸை நினைக்கச் செய்து திறமையாக ஏமாற்றிக் கொண்டிருந்தான்.

நெருக்கியடித்துக் கொண்டு தப்பி ஓடி வந்த மற்ற ட்ரோஜன் வீரர்கள் நன்றிப் பெருக்குடன் நகருக்கு வந்து சேர்ந்தனர். வாயில் கதவருகில் ஒருவர் மற்றவருக்காகக் காத்திருக்கக்கூட அவர் களுக்கு மனமில்லாமல் அச்சமாக இருந்தது. யார் தப்பிவிட்டார் கள், யார் இறந்து விட்டார்கள் என்று தெரிந்து கொள்ள அவர்கள் எண்ணவில்லை. யார் வேகமாக ஓடி வந்தார்களோ அவர்கள் பாதுகாப்பாக நிம்மதிப் பெருமூச்சுடன் திறந்திருந்த வாயில் கதவு வழியாக ஆர்வமாக நகருக்குள் நுழைந்து கொண்டனர்.

# ஹெக்டரின் மரணம்

***கதைச்சுருக்கம்***

***வரிகள் 01 – 24***

*சுவர்களுக்கு உள்ளே ட்ரோஜன்கள் சகஜ நிலைக்கு வருகின்றனர். ஆனால் ஹெக்டர் வெளியில் இருந்தான். கோபமாக இருக்கும் அக்கிலிஸை அப்போலோ கேலி செய்கிறான். அக்கிலிஸ் இலியம் நோக்கிப் போகிறான்.*

***வரிகள் 25 – 130***

*அக்கிலிஸோடு சண்டை போட வேண்டாமென ப்ரியமும் ஹெகாபியும் ஹெக்டரைக் கேட்டுக் கொள்கின்றனர். மதில் சுவர்களை மூன்று முறை முழுமையாக அவர்கள் சுற்றி வருகின்றனர். விதியில் தராசு முள் ஹெக்டருக்கு எதிராக இறங்குகிறது. அப்போலோ ஹெக்டரை விட்டு விலகிப் போகிறான்.*

***வரிகள் 131 – 213***

*ஹெக்டரை சண்டையில் மாட்டி விடுகிறாள் அதீனி. தோல்வியடைபவனின் உடலைத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும் என்ற ஹெக்டரின் கருத்தை அக்கிலிஸ் ஏற்றுக் கொள்ள மறுக்கிறான். ஹெக்டரைத் தாக்கிக் கொல்கிறான். அக்கிலிஸின் மரணத்தை முன்னறிவிப்பு செய்கிறான் ஹெக்டர்.*

**வரிகள் 367 – 404**

இறந்து கிடக்கும் ஹெக்டரை நிர்வாணப்படுத்துகிறான் அக்கிலிஸ். கிரேக்கர்கள் அவனது உடலை ஈட்டிகளால் குத்து கிறார்கள். முகாமுக்குத் திரும்பும்படி அவர்களிடம் அக்கிலிஸ் கூறுகிறான். தன் தேரின் பின்பக்கமாக ஹெக்டரின் கணுக்கால் களைக் கட்டி அவனுடலை இழுத்துக் கொண்டு போகிறான் அக்கிலிஸ்.

**வரிகள் 405 – 515**

ஹெக்டரின் இறப்புக்காக ப்ரியமும் ஹெகாபியும் வேதனைப் படுகின்றனர். ஆன்ட்ரோமக்கி ஹெக்டர் இறந்த செய்தியைக் கேள்விப்பட்டு மயக்கமடைகிறாள். பின் மயக்கம் தெளிந்து மூன்றாவது ஆளாக அவள் துக்கம் அனுஷ்டிக்கிறாள். தன் குழந்தை அஸ்டியானாக்ஸ் அப்பா இல்லாத மகனாகும் விதியாகிவிட்டதே என்று புலம்புகிறாள்.

# ஹெக்டரின் மரணம்

இளமான் குட்டிகளைப் போல ஓடி நகருக்குள் அடைக்கலம் புகுந்து கொண்டனர் ட்ரோஜன்கள். தங்கள் உடல்களிலிருந்து வழிந்த வியர்வையைத் துடைத்து ஈரம் போக்கினர். கொத்தளங் களில் சாய்ந்து கொண்டு பானங்கள் பருகித் தாகம் தணித்துக் கொண்டனர். சுவரை நோக்கி அதே நேரத்தில் கேடயங்களைச் சாய்வாகத் தோள்களில் போட்டுக்கொண்டு கிரேக்கர்கள் முன்னேறி வந்து கொண்டிருந்தனர். ஆனால் இலியம் நகருக்கு வெளியே, ஸ்கேய வாயிலின் முன்பு, கொடிய விதியானது ஹெக்டருக்கு அவன் இருந்த இடத்திலேயே விலங்கு பூட்டியது.

இதற்கிடையில் அக்கிலிஸிடம் ஃபீபஸ் அப்போலோ சொன்னான்:

'பீலியூஸின் மகனே, எதற்காக உன் விரைவுப் பாதங்களால் என்னைத் துரத்திக் கொண்டிருக்கிறாய்? நீயோ ஒரு மனிதன். ஆனால் துரத்துகிற வேலையிலேயே உன் கவனத்தை வைக்காமல் இருந்திருந்தால், நான் நித்தியனான ஒரு கடவுள் என்பது உனக்கு இந்நேரம் புரிந்திருக்கும். ஆனால் ட்ரோஜன் களை எதற்காகத் துரத்தியடித்தாயோ அந்த நோக்கத்தை நீ அலட்சியப் படுத்திவிட்டாய். பார், அவர்களெல்லாம் நகருக்குள் புகுந்து கொண்டு வாயில் கதவை அடைத்துக் கொண்டு பாதுக்காப்பாக உள்ளே இருக்கிறார்கள். ஆனால் நீயோ இவ்வளவு நேரமும் வழி தவறி நடத்தப்பட்டுள்ளாய். ஆனால் உன்னால் நிச்சயமாக என்னைக் கொல்ல முடியாது. இயற்கை யிலேயே, இறப்பதற்காக விதிக்கப்பட்டவனல்ல நான்.'

விரைவுப்பாத அக்கிலிஸ் கோபமாகக் கூறினான்:

'அப்போலோ, நீ என்னை ஒரு முட்டாளாக்கி விட்டாய். கடவுள்களிலேயே பிறருக்குத் தீங்கு விளைவிக்க நினைக்கின்ற மோசமான கடவுள் நீதான். வேண்டுமென்றே, ட்ராய் நகரச் சுவர்கள் பக்கம் நான் போகாமல் என்னைத் தவறாக வழிகாட்டி இங்கே கொண்டு வந்து விட்டுவிட்டாய். இது மட்டும் நடந்திருக்காவிட்டால், எல்லா ட்ரோஜன்களும் இந்நேரம் இலியம் நகருக்குப் போயிருக்க மாட்டார்கள். மண்ணைக் கவ்வியிருப்பார்கள்! அவர்களையெல்லாம் காப்பாற்றியதன் மூலமாக, நான் பெற இருந்த பெரு வெற்றியை நீ திருடிக் கொண்டு விட்டாய். அது உனக்கு எளிதான காரியமாக இருந்திருக்கிறது. அதற்காகத் தண்டனை ஏதும் பெறப்போவ தில்லை என்பதால் அதைப்பற்றிய அச்சமும் உனக்கில்லை. ஆனால் எனக்கு மட்டும் சக்தி இருக்குமானால், நீ செய்த காரியத்துக்கு உனக்கு நிச்சயமாகத் தக்க பாடம் கற்பிப்பேன்.'

இப்படிச் சொல்லி விட்டு உடனே இலியம் நகரை நோக்கி அச்சமேதுமின்றிச் செல்லத் தொடங்கினான் அக்கிலிஸ். சமவெளியில் தேரோடு வேகமாகச் செல்லும் வெற்றி பெறப் போகும் பந்தயக் குதிரை எளிதாகத் தாவித்தாவிச் செல்வது மாதிரி இலகுவாகச் சென்றான் அக்கிலிஸ்.

கிழவன் ப்ரியம்தான் அக்கிலிஸை முதலில் பார்த்தான். சமவெளியில் அவன் வந்து கொண்டிருந்தபோது ஒரு நட்சத்திரம்போல மின்னினான். மாலை நேர வானத்தில் மற்ற நட்சத்திரங்களையெல்லாம் விஞ்சும் அளவுக்கு மின்னும் இலையுதிர்கால நட்சத்திரம் போல. அதை 'ஓரியனின் நாய்' என்று அழைத்தார்கள். அந்த நட்சத்திரக் கூட்டத்திலேயே அதுதான் அதிக ஒளிவீசும் நட்சத்திரம் என்றாலும், அது பரிதாபத்துக்குரிய மனிதர்களுக்கு நல்ல செய்தியைக் கொண்டு வருவதில்லை. அக்கிலிஸ் ஓடி வந்து கொண்டிருந்தபோது அவன் மார்பில் இருந்த வெண்கலக் கவசம் அப்படித்தான் மின்னியது.

கிழவன் வேதனையில் முனகினான். தன் கைகளைத் தூக்கித் தலையில் அடித்துக் கொண்டான். பெருங்குரலெடுத்து வாயில் கதவின் முன்னால் நின்று கொண்டிருந்த தன் அருமை மகன் ஹெக்டரை அழைத்து வேண்டினான். அக்கிலிஸோடு மோதியே

*தீருவது என்ற மாற்ற முடியாத முடிவோடு நின்று கொண்டு இருந்தான்.*

*கைகளை நீட்டிக் கிழவன் தன் மகனைப் பார்த்துக் கூறினான்.*

*'என்னருமை மகனே ஹெக்டர், உதவிக்கு யாருமின்றித் தனியாக அவனோடு மோதாதே. அப்படி நீ செய்தால், தோல்விக்கும், அவன் கைகளால் மரணத்துக்கும் அழைப்புக் கொடுப்பதாக ஆகிவிடும். அவன் உன்னைவிட மிகுந்த பலசாலி. அதோடு, மருந்துக்குக்கூட இரக்கமில்லாதவன். நான் அவனை வெறுக்கும் அளவுக்குக் கடவுள்களும் அவனை வெறுப்பார்களேயானால், சீக்கிரமே நாய்களும் கழுகுகளும் அவன் உடலில் விருந்து சாப்பிட்டுக் கொண்டிருக்கும். அது மட்டும் நடந்தால் எப்பேர்ப்பட்ட சுமை என் மனதிலிருந்து நீங்கும்! எனது அருமை மகன்கள் பலரை என்னிடமிருந்து பறித்தவன் அவன். அவர் களைக் கொலை செய்தவன். தூரத்துத் தீவு நாடுகளில் அவர்களில் பலரை அடிமைகளாக விற்றவன்.*

*நம் நகருக்குள் தாறுமாறாகக் குவிந்து கிடக்கின்ற நம் வீரர்களில் என் மனைவி லோத்தோவுக்குப் பிறந்த என் அருமை மகன்கள் லைகாவோன், பாலிடாரஸ் ஆகிய இரண்டு பேர்களையும் இன்னும் நான் பார்க்க முடியவில்லை. எதிரிகள் அவர்களை உயிருடன் பிடித்திருந்தால்,' உடனே ஏராளமான வெண்கலத்தை யும் தங்கத்தையும் மீட்புத்தொகையாகக் கொடுத்து அவர்களை மீட்க வேண்டும். நம்மிடம் வெண்கலமும் தங்கமும் ஏராளமாக உள்ளன. லோத்தோவின் தந்தை கிழவன் ஆல்ட்டிஸ், எங்கள் திருமணத்தின் போது தன் மகளுக்குப் பரிசாக அவைகளை நிறையக் கொடுத்திருந்தார். ஆனால் அவர்கள் இப்பொழுது கொல்லப்பட்டு ஹயடிஸின் மண்டபங்களில் இருந்தார்கள் என்றால், எனக்கு அவர்களின் அன்னைக்கும் துக்கப்படுவதற்கு இன்னும் ஒரு வேதனை சேர்ந்துவிடும். ஆனால் இலியம் நகரில் உள்ள மற்றவர்கள் லைகாவோன் பாலிடாரஸ் ஆகியோருக்காக அவ்வளவு துக்கப்பட மாட்டார்கள். ஆனால் அக்கிலிஸ் கையால் நீ விழுந்து விட்டால் படுவார்கள். எனவே மகனே, மதில் சுவர்களுக்கு உள்ளே பாதுகாப்பாக வந்து விடு. அப்போதுதான் ட்ரோஜன் ஆண்களையும் பெண்களையும் உன்னால் காப்பாற்ற முடியும். பீலியூஸின் மகனுக்கு ஒரு வெற்றியைக் கொடுப்ப தற்காக, உனது இன்னுயிரைத் தூக்கி எறிந்து விடாதே.*

'உனது கிழட்டுத் தந்தையான என் மீது இரக்கம் காட்டு. இந்த பொல்லாத விதி பிடித்த வாழ்க்கையை நான் வாழ்ந்து கொண்டிருக்கிறேன். எனது பிள்ளைகள் கொல்லப்பட்டு விட்டார்கள். எனது மகள்கள் கற்பழிக்கப்பட்டு விட்டார்கள். என் படுக்கையறைகள் சூறையாடப்பட்டு விட்டன. சிறு குழந்தைகள்கூட இரக்கமற்ற முறையில் தரையில் எறியப்பட்டுக் கொல்லப்பட்டு விட்டார்கள். என் மகன்களின் மனைவிகளெல் லாம் கிரேக்கர்களால் கவர்ந்து செல்லப்பட்டு விட்டார்கள்! இந்த வயதில் கொடூரமான இதையெல்லாம் நான் பார்க்க வேண்டும் என்றும், சாவதற்கு முன் எண்ணற்ற பயங்கரங்களைச் சந்திக்க வேண்டும் என்றும் தந்தை ஜீயூஸ் விதித்திருக்கிறார், என்ன செய்வது!

யாருடைய ஈட்டியோ வாளோ என்னுடைய உயிரையும் கடைசியாக என் உடலிலிருந்து பிரிக்கும் நேரம் வரும். எனது அரண்மனை வாசலிலேயே, எனது நாய்களே என் உடலைக் கடித்துக் குதறும் நேரம் வரும். எந்த நாய்களுக்கு என் மேசையில் உணவு கொடுத்து நான் வளர்த்தேனோ, வாயில் கதவுகளைப் பாதுகாக்க எந்த நாய்களுக்கு நான் பயிற்சி கொடுத்தேனோ, அதே நாய்கள் என் வாசலில் நின்று தன் எஜமானனின் ரத்தத்தை ஓய்வின்றி நக்கிக் குடிக்கும். கூரான ஈட்டியால் ஒரு இளைஞன் போர்க்களத்தில் கொல்லப்பட்டு அவன் உடல் சிதைக்கப் பட்டால் பரவாயில்லை. ஏனெனில், அவன் உடலிலிருந்து அசிங்கமான எதையும் மரணத்தால் வெளிக்கொண்டு வர முடியாது. ஆனால் என்னைப் போன்ற ஒரு கிழவனின் நிலை அதுவா? என் வெள்ளைத் தலையை, வெள்ளைத் தாடியை, மர்ம உறுப்புக்களையெல்லாம் நாய்கள் அசிங்கப்படுத்தும்போது, ஒரு மனிதன் எவ்வளவு இழிந்த நிலைக்குப் போக முடியும் என்று அப்போதுதான் தெரிய வரும்.'

இவ்வாறு பேசிய கிழவன் ப்ரியம் வேதனையில் தலை முடியைப் பிய்த்துக் கொண்டான். ஆனால் தன் முடியை அசைக்க முடிந்த அவனால் ஹெக்டரின் முடிவை அசைக்க முடியவில்லை. இப்பொழுது ஹெக்டரின் அன்னை ஹெகாபி தன் பங்குக்கு அழுது புலம்ப ஆரம்பித்தாள். தன் ஆடை மடிப்புகளைத் தளர்த்தி தன் மார்பகங்களைத் தன் கையில் ஏந்திக்கொண்ட அவள், கன்னங்களில் கண்ணீர் வழிந்தோட ஹெக்டரைப் பார்த்துச் சொன்னாள்:

'என் அருமை மகனே ஹெக்டர், இதற்குக் கொஞ்சம் மரியாதை காட்டு, என் மீது கொஞ்சம் இரக்கம் காட்டு. உனது தொல்லைகளிலிருந்து உனக்கு விடுதலை தர இந்த மார்பகங் களை நான் பயன்படுத்தியிருக்கிறேன் என்பது உண்மையானால்! அந்த நாட்களை நினைத்துப் பார் அருமைக் குழந்தாய். இங்கே இந்தச் சுவர்களுக்கு உள்ளிருந்து உனது எதிரியோடு சண்டைபோடு. ஆனால் வெளியே போய் அவனோடு தனியாக மோத நினைக்காதே. அவன் இரக்கமற்றவன். அவன் உன்னைக் கொல்வானாகில், உன்னைச் சவப்பெட்டியில் வைத்து மரியாதை யுடன் துக்கப்பட என்னால் முடியாது போகும். என்னருமைக் குழந்தாய், என்னால் மட்டுமல்ல, ஏராளமாக வரதட்சணையைக் கொண்டு வந்த உனது மனைவிக்கும் முறைப்படி துக்கப்பட முடியாமல் போகும். எங்கள் இருவரிடமிருந்தும் உன்னைப் பிரித்து, தூரமாக இருக்கும் கிரேக்கக் கப்பல்களின் பக்கமாய், நாய்கள் உன்னுடலைப் புசிக்கும்.'

இவ்விதமாகக் கண்ணீருடன் அவர்கள் தன் மகனுக்கு எடுத்துச் சொன்னார்கள். ஆனால் அவர்கள் எவ்வளவு கெஞ்சியபோதும் ஹெக்டரின் தீர்மானத்தை அவர்களால் மாற்ற முடியவில்லை. அச்சமூட்டும் அக்கிலிஸின் வருகையை எதிர்பார்த்து அவன் நின்ற இடத்திலேயே நின்றான். விஷமுள்ள மூலிகைகளை விழுங்கிவிட்ட ஒரு மலைப்பாம்பு, தன் வீட்டுக்கு அருகிலேயே கோபமுடன் அங்கு வரப்போகும் ஒரு மனிதனுக்காகக் காத்திருக்கிறது. அதன் பார்வை அச்சமூட்டுவதாக இருக்கிறது. வேதனையில் அது தன் உடலைச் சுருட்டி நெளிந்து கொண்டிருக் கிறது. அதைப்போல, தீர்க்கமுடியாத தாகம் போன்ற தீர்மானத் துடன், பின்வாங்க மறுத்த ஹெக்டர் அங்கேயே நின்றான். துருத்திக் கொண்டிருந்த கோபுரத்தில் மின்னும் தன் கேடயத்தைச் சாத்தி வைத்துவிட்டு, மிகவும் மனம் சஞ்சலம் அடைந்தவனாக அந்தச் சூழ்நிலை பற்றி யோசித்தான் ஹெக்டர்.

'நான் என்ன செய்வது? வாயில் கதவு, மதில் இவற்றுக்குப் பின்னால் நான் போய் தங்கிவிட்டால், சபிக்கப்பட்ட இந்த இறுதி இரவில், அக்கிலிஸ் மீண்டும் வரும்போது, தன்னுடைய ஆலோசனையைக் கேட்டு நகருக்குள் பின்வாங்கிச் செல்லும்படி நான் படையினருக்கு உத்தரவிடவில்லை என்று பாலிடாமஸ் தான் முதலில் என்னைப் பழி சொல்லுவான். அப்படி நான் செய்திருந்தால் சிறப்பாக இருந்திருக்கும். ஆனால் இப்பொழுது,

படையின் பெரும்பகுதியை என் அக்கறையற்ற முட்டாள்தனத் துக்குப் பலி கொடுத்த பிறகு, ட்ரோஜன் வீரர்கள் முன்னிலயிலும், தரையில் பட்டு இழுத்துக் கொண்டே போகுமாறுள்ள மேலங்கி அணிந்து வரும் பெண்கள் முன்னிலையிலும் அவமானத்தைத் தவிர எனக்கு வேறொன்றும் மிஞ்சாது. 'ஹெக்டர் தன் வலது கையை நம்பி ஒரு படையையே காலி செய்துவிட்டான்' என்று அந்தஸ்தில் குறைந்த யாரும் சொல்லிவிடுவதை என்னால் தாங்க முடியாது. ஆனால் அப்படிச் சொல்லத்தான் போகிறார்கள். அதற்குப் பதில், அக்கிலிஸை எதிர்த்து நின்று அவனோடு சண்டையிட்டு அவனைக் கொன்று உயிரோடு ஊர் திரும்புவதோ இந்த இலியம் நகரிலேயே அவனால் கொல்லப்பட்டுப் புகழோடு போய்ச் சேருவதோ எவ்வளவோ சிறப்பானது.

'முன்பக்கம் புடைத்த என் கேடயத்தையும் கனமான தலைக்க வசத்தையும் கீழே வைத்துவிட்டு, என் ஈட்டியைச் சுவரில் சாய்த்து வைத்துவிட்டு, இணையற்ற அக்கிலிஸோடு பொருத வெறும் கைகளுடன் நான் சென்றால்... இந்தப் போருக்குக் காரணமான ஹெலனையும் அவளது சொத்துக்களனைத்தையும், தனது உட்குழிந்த கப்பல்களில் ட்ராய் நகருக்கு ஹெலனோடு பாரிஸ் கொண்டு வந்த எல்லாச் சொத்துகளையும்... எல்லாவற்றையும் அகமெம்னனுக்கும் மெனிலயஸுக்கும் திருப்பிக் கொடுத்து விடுவதாக நான் வாக்குறுதியளித்தால், மீதி இருக்கும் எல்லாவற்றையும்...இந்த நகரில் இருக்கும் எல்லா வற்றையும்...கிரேக்கர்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்து விட்டால்...அதன் பிறகு மூத்தவர்களோடு சேர்ந்து இந்த அழகிய நகரில் இருக்கும் செல்வங்களனைத்தையும் சமமாகப் பங்கிட்டுக் கிரேக்கர்களுக்குக் கொடுத்து விடுவதாக நான் வாக்குறுதி யளித்தால்...

'ஆனால் எதற்கு நான் இப்படியெல்லாம் பேச வேண்டும்? ஒரு வேண்டுகோள் விடுப்பவனாக நான் அக்கிலிஸிடம் போனால் அவன் மரியாதையோ இரக்கமோ காட்ட மாட்டான். கவச உடைகளின்றி அவன் முன் நிற்கும் என்னை வெறும் கைகளாலேயே ஒரு பெண்ணைக் கொல்வதுபோலக் கொன்று விடுவான். ஒரு சிறுவனும் ஒரு சிறுமியும் ஒரு கருவாலி மரம் அல்லது பாறையின் அடியில் நெருக்கமாகப் பழகுவதுபோல, எனக்கும் அக்கிலிஸுக்கும் நெருக்கம் ஏற்படுவதை என்னால் கற்பனை செய்துகூடப் பார்க்க முடியவில்லை. ம்ஹும்,

நேரத்தை விரயமாக்காமல், இருவரும் மோதிப்பார்ப்பதே சாலச்சிறந்தது. ஒலிம்பியக் கடவுள்கள் நம்மிருவரில் யாருக்கு வெற்றியைக் கொடுக்க நினைத்திருக்கிறார்கள் என்று பார்த்து விடுவோம்.'

இவ்விதமாக ஹெக்டர் யோசித்துக் கொண்டிருந்தபோது, ஒரு போர்க்கடவுளைப் போலத் தோன்றி, அசைந்தாடும் தலைக் கவசம் கொண்ட போர்வீரனான அக்கிலிஸ் அவனை நோக்கி வந்தான். தனது வலது தோளைச் சுற்றி பீலியான் மலயில் வளரும் ஆஷ் மரத்தால் செய்யப்பட்ட அஞ்சத்தக்க தன் ஈட்டியைச் சுழற்றினான். அவனது வெண்கலக் கவச உடை கொழுந்து விட்டெறியும் தீயைப் போலவும் உதித்துக் கொண்டிருக்கும் சூரியனைப் போலவும் ஒளி வீசியது. அவனைப் பார்த்த ஹெக்டர் அதிர்ந்து போனான். அவனால் நிற்க முடியவில்லை. அங்கிருந்து பதற்றத்துடன் ஓட ஆரம்பித்தான். ஆனால் அவனது வேகத்தைக் கணித்துக்கொண்ட பீலியூஸின் மகனோ அவனைத் துரத்த ஆரம்பித்தான்.

பறவைகளிலேயே அதி வேகமாகப் பறக்கும் மலைவாழ் வேட்டைப் பருந்து, பயந்த சுபாவம் கொண்ட ஒரு புறாவைக் குறிவைத்து இலகுவாகக் கீழிறங்கும். ஆனால் புறாவோ தப்பிக்கப் பறக்கும். ஆனால் பருந்தோ கிறீச்சிட்டுக்கொண்டே அதன் அருகில் வந்து அதனைக் கொன்று விடும் நோக்கத்துடன் தாக்கும். அதைப்போல அக்கிலிஸ் ஹெக்டரைத் துரத்திக் கொண்டு சென்றான். ஹெக்டரும் தன்னால் முடிந்த அளவு வேகமாக இலியம் நகரின் சுவர்களுக்குக் கீழே அக்கிலிஸிட மிருந்து தப்பிக்க ஓடிக்கொண்டிருந்தான்.

சுவர்களிலிலிருந்து எப்போதுமே கொஞ்ச தூரத்தில் இருக்கும் படி, காவல் கம்பத்தையும் காற்று வீசிக்கொண்டிருக்கும் அத்தி மரத்தையும் தாண்டி, தேர்த்தடங்கள் இருந்த வழியாக, ஸ்கமாண்டர் நதியின் நீர்ச்சுனைகள் கொண்ட ஓடைகளின் ஆரம்பமான இனிய நீர்கொண்ட இரண்டு ஊற்றுகள் இருந்த இடம் வரை ஓடிவந்தனர் இருவரும். ஓர் ஊற்றிலிருந்து தண்ணீர் சூடாக வந்து கொண்டிருந்தது. கொழுந்து விட்டெறியும் தீயிலிருந்து புகை கிளம்பி மேலே செல்வதுபோல, சூடான அந்த ஊற்று நீரிலிருந்து ஆவி வந்து கொண்டிருந்தது. இன்னொரு ஊற்றிலிருந்து குளிர்ந்த நீர், கோடைக் காலத்திலும், உறைந்த பனிக்கட்டியைப் போலவும் ஆலங்கட்டி மழையைப் போலவும்

பொங்கிவந்து கொண்டிருந்தது. அவைகளுக்கு அருகிலேயே அகன்ற அழகான கற்களாலான துவைக்கும் இடங்கள் இருந்தன. அங்குதான் ட்ரோஜன் பெண்களும் மகள்களும் பளபளக்கும் தங்கள் உடைகளை ஆரம்ப காலத்தில் துவைத்து வந்தார்கள். கிரேக்கர்களின் வருகைக்கு முந்திய அந்தக் காலம் அப்போதெல்லாம் அமைதிக் காலமாக இருந்தது.

அங்குதான் இருவரும் ஓடி வந்து கொண்டிருந்தார்கள். ஹெக்டர் உயிர் பிழைக்க ஓடிக்கொண்டிருந்தான். அக்கிலிஸ் அவனைப் பிடிக்க ஓடிவந்து கொண்டிருந்தான். அக்கிலிஸ் முன் வரிசையில் சண்டை போடுவதற்கு அருமையான வீரன். ஆனால் வேகமாகச் சென்று துரத்திப் பிடிப்பதில் வல்லமை மிக்கவன். வேகம் கடுமையானதாக இருந்தது. ஏதோ பலி மிருகத்தையோ மிருகத் தோலால் செய்யப்பட்ட கேடயத்தையோ பரிசாகப் பெறுவதற்காக நடக்கும் ஓட்டப் பந்தயத்தில் ஓடுவதைப்போல அவர்கள் ஓடிக்கொண்டிருக்கவில்லை. குதிரைகளை அடக்கு வதில் வல்லவனான ஹெக்டரின் உயிரைப் பறிக்க ஓடிக்கொண் டிருந்தார்கள். இறந்து போன ஒரு போர்வீரனை கௌரவிக்கும் விதமாக ஒரு பெண்ணையோ முக்காலியையோ பரிசாக வைக்க, பந்தயத்தில் வென்று அதைப் பெறுவதற்காக வேகமான பந்தயக் குதிரைகள் திருப்பத்தில் திரும்புவதுபோல, ப்ரியமின் நகரைச் சுற்றி மூன்று முறை ஓடியிருந்தார்கள் அக்கிலிஸூம் ஹெக்டரும்.

எல்லாக் கடவுள்களும் அக்காட்சியை வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தார்கள். மனிதர்களுக்கும் கடவுளர்களுக் கும் தந்தையானவன் பேசத்தொடங்கினான்:

‘இது ஒரு சோகமான காரியம்தான். என் கண் முன்னாலேயே இலியம் நகரில் சுவர்களைச் சுற்றித் துரத்தப்பட்டு ஓடிக் கொண்டிருக்கும் இந்த வீரனுக்கு என் மனத்தில் ஓர் அன்பான இடம் இருக்கத்தான் செய்கிறது. நான் ஹெக்டருக்காகத் துயரப்படுகிறேன். பல மலைத்தொடர்களைக் கொண்ட உயர்ந்த அய்டா மலையிலும், உயர்ந்த இலியம் கோட்டையிலும் என்னை கௌரவிப்பதற்காக எத்தனையோ எருதுகளின் தொடைகளை எரித்திருக்கிறான் அவன். ஆனால் அவனை இப்பொழுது கடவுளையொத்த அக்கிலிஸ் முழு வேகத்தோடு ப்ரியமின் நகரைச் சுற்றித் துரத்திக் கொண்டிருக்கிறான். யோசியுங்கள் கடவுள்களே, ஹெக்டரின் உயிரைக் காப்பாற்றலாமா அல்லது ஒரு நல்லவனை பீலியூஸின் மகனான அக்கிலிஸ் கொல்வதற்கு

விட்டுவிடலாமா என்பதைப் பற்றி உங்கள் யோசனைகளைச் சொல்லி நான் ஒரு முடிவெடுப்பதற்கு எனக்கு உதவுங்கள்.'

சாம்பல் நிறக்கண்ணால் தேவதை அதீனி சொன்னாள்:

'தந்தையே, தெளிவான மின்னலின் தலைவனே, கறுப்பு மேகத்தின் கடவுளே, நீங்கள் என்ன பேசிக்கொண்டிருக்கிறீர்கள்? வெகு காலத்துக்கு முன்னரே விதி நிர்ணயிக்கப்பட்டுவிட்ட ஒரு மனிதனின் மரண வேதனைகளை அனுபவிக்கும் நாளைத் தள்ளிப் போடச் சொல்கிறீர்களா? அப்படியானால், உங்களுக்கு எது விருப்பமோ அதைச் செய்யுங்கள். ஆனால் மற்ற கடவுள் களாகிய நாங்கள் அதை ஏற்றுக்கொள்ளப் போவதில்லை.'

மேகங்களைச் செலுத்தும் ஜீயூஸ் பதில் சொன்னான்:

'அருமை மகளே அதீனி, அஞ்ச வேண்டாம். நான் அதை மனதாரச் சொல்லவில்லை. உன்னிடம் கடுமையாக நடந்து கொள்ள வேண்டும் என்பதற்காக நான் அப்படிச் சொல்ல வில்லை. உனக்கு எது சரியென்று படுகிறதோ அப்படியே செய். ஆனால் உடனே செய்.'

அவன் அப்படிச் சொன்னதும், ஏற்கெனவே செயல்படுவதற்கு ஆர்வமாக இருந்த அதீனி ஊற்சாகமானாள். உடனே ஒலிம்பஸ் மலையின் உச்சியிலிருந்து கீழே பருந்து போல் பாய்ந்து பறந்து வந்தாள்.

இதற்கிடையில் விரைவுப்பாத அக்கிலிஸ் ஹெக்டரைத் துரத்துவதைத் தொடர்ந்து கொண்டிருந்தான். மலையில் உள்ள தன் மறைவிடத்திலிருந்து வெளியே வரும் மான் குட்டி வேட்டை நாயைப் பார்த்து வெருண்டோடும். மலைப்பாதைகள், பள்ளத் தாக்குகள் வழியாக நாய் அதைத் துரத்திக் கொண்டே போகும். புதர்க்காட்டுக்குள் தன்னை மான்குட்டி மறைத்துக் கொண்ட போதும் நாய் விடாது தேடி அதைக் கண்டு பிடித்துவிடும். அதைப்போல, விரைவுப்பாத அக்கிலிஸை விட்டு ஓடிப் போகவே முடியவில்லை ஹெக்டரால். நன்றாகக் கட்டப்பட் டிருந்த கோபுரங்களின் பாதுகாப்புக்கு அருகில் சென்றுவிடலாம் என்ற நம்பிக்கையில் பல முறை டார்டானிய வாயிலை நோக்கிப் போவதற்கு முயன்றான் அவன். ஆனால் அக்கிலிஸோ, குறுக்கு வழியில் புகுந்து ஒவ்வொரு முறையும் அவனை மடக்கி சமவெளியை நோக்கி ஓட வைத்தான்.

துரத்துபவனும் துரத்தப்படுபவனும் எந்த உடலுறுப்பையும் அசைக்காத கெட்ட கனவைப் போல, அக்கிலிஸால் ஹெக்டரைப் பிடிக்கவும் முடியவில்லை; ஹெக்டரால் அக்கிலிஸிடமிருந்து தப்பி ஓடவும் முடியவில்லை. அப்போலோ மட்டும் கடைசித் தடவையாக வந்து அவனுக்குள் புதிய சக்தியையும் வேகத்தையும் செலுத்தியிருக்காவிட்டால், ஹெக்டரால் மரணப் பேய்களிடமிருந்து எப்படித் தப்பித்திருக்க முடியும்? அக்கிலிஸூம் போகும் வழியில் தன் வீரர்கள் யாரும் ஹெக்டரைத் தாக்க வேண்டாம் என்று சைகை காட்டியிருந்தான். ஹெக்டரைக் கொன்ற புகழ் அவனுக்கு மட்டுமே கிடைக்க வேண்டும் என்று விரும்பினான். வேறு யாராவது ஹெக்டரைத் தாக்கிவிட்டால், அவனுக்கு இரண்டாம் இடமே கிடைக்கும்.

ஆனால் ஊற்றுகளின் பக்கமாக நான்காவது முறையாக அவர்கள் வந்தபோது, தந்தை ஜீயூஸ் தன் தங்கத் தராசைத் தூக்கிப் பிடித்தான். அதன் இரண்டு தட்டுக்களிலும் மனிதர்களை வந்தடையும் மரணத்தை வைத்தான். ஒரு பக்கம் அக்கிலிஸூக்காகவும். இன்னொரு பக்கம் குதிரைகளை அடக்குவதில் வல்ல ஹெக்டருக்காகவும். நடுத்தண்டைப் பிடித்துத் தராசைத் தூக்கினான். ஹெக்டர் பக்கத் தட்டு, கீழே தாழ்ந்தது. அவனுக்காகக் காத்திருந்த விதியை அது உச்சரித்தது. ஹயடிஸை நோக்கி அவன் சென்று கொண்டிருந்தான். ஃபீபஸ் அப்போலோ அவனைக் கைவிட்டு விட்டான். சாம்பல் நிறக்கண்ணாளான தேவதை அதீனி அக்கிலிஸிடம் வந்தாள். அவனுக்கு அருகில் வந்து நின்று அவசரமாகச் சொன்னாள்:

‘ஜீயூஸூக்கு மிகவும் பிரியமான கீர்த்திமிகு அக்கிலிஸ், கிரேக்கர்கள் பெரு வெற்றியுடன் கப்பல்களுக்குத் திரும்பிச் செல்லும் காலம் வந்துவிட்டது. போர் செய்யும் பசியோடு இருக்கிறான் ஹெக்டர். ஆனால் நீயும் நானும் சேர்ந்து அவனைக் கொல்லப் போகிறோம். நம்மிடமிருந்து இனி அவன் தப்பிக்க முடியாது. புயல் மேகங்களைச் செலுத்தும் தன் தந்தை ஜீயூஸிடம் போய் அவன் எவ்வளவு மன்றாடினாலும் சரி, வில்லேந்திய கடவுளான அப்போலோவுக்கு அவமானம்தான் மிஞ்சப் போகிறது. நீ இங்கே நின்று கொஞ்சம் மூச்சு விட்டுக்கொள். நான் ஹெக்டரிடம் சென்று உன்னோடு சண்டை செய்யும்படி அவனைத் தூண்டிவிடுகிறேன்.’

இப்படி அதீனி பேசியதும் அக்கிலிஸுக்கு சந்தோஷமாக இருந்தது. அவள் சொன்ன மாதிரியே அவனும் செய்தான். தன் வெண்கலம் சுற்றப்பட்ட ஈட்டியில் சாய்ந்துகொண்டு அங்கேயே நின்றான். ஹெக்டரின் சகோதரன் டெய்ஃபஸின் தோற்றத்திலும் அவனுடைய களைப்புறாத குரலையும் கொண்டவளாக ஹெக்டர் இருந்த இடத்துக்குச் சென்ற அதீனி அவனிடம் அவசரமாகச் சொன்னாள்:

'என் அருமைச் சகோதரனே, வேகமாகச் செல்லக் கூடிய அக்கிலிஸ் உனக்கு ரொம்பத்தான் கஷ்டம் கொடுத்து விட்டான். நம் நகரைச் சுற்றி உன்னை துரத்தித் துரத்தி ஓட வைத்து விட்டான். நாமிருவரும் இங்கிருந்து அவனை ஒரு கை பார்த்துவிடலாம்.'

மின்னும் தலைக்கவசம் கொண்ட மகா ஹெக்டர் அவளைப் பார்த்துச் சொன்னான்:

'டெய்ஃபோபஸ், ப்ரியமும் ஹெகாபியும் எனக்குக் கொடுத்த சகோதரர்களிலேயே எனக்கு மிகவும் நெருக்கமானவன் நீதான். ஆனால் நான் இப்பொழுது உனக்கு எது நல்லது என்பதையும் யோசிக்க வேண்டும். மற்றவர்களெல்லாம் மதில் சுவருக்கு உள்ளே பாதுகாப்பாக இருக்கும்போது, நீ ஒருவன்தான் துணிச்சலாக எனக்குதவ வெளியே வந்துள்ளாய்.'

சாம்பல் நிறக்கண்ணால் தேவதை அதீனி சொன்னாள்

'அன்புள்ள சகோதரனே, என் தாயும் தந்தையும் என் முழங் கால்களைப் பிடித்துக்கொண்டு, 'போக வேண்டாம்' என்று ஒருவர் மாற்றி ஒருவராகக் கெஞ்சினர். அங்கே இருந்த எனது வீரர்களும் அப்படியே செய்தனர். அவர்கள் எல்லாருமே அக்கிலிஸை நினைத்து நடுங்கிக் கொண்டுள்ளனர். ஆனால் உன் நிலை பற்றிய கவலை என்னை வாட்டி வதைத்தது. இப்பொழுது நாமிருவரும் சேர்ந்து ஒரு முடிவோடு அவனை நேராகத் தாக்குவோம். நம் ஈட்டிகளுக்குத் தங்கு தடையே இருக்கக் கூடாது. நம் இருவரையும் கொன்று நமது ரத்தம் தோய்ந்த கவச உடைகளுடன் அவனது உட்குழிந்த கப்பல்களுக்குத் திரும்பிப் போகப் போகிறானா அல்லது உனது ஈட்டியால் வெற்றி கொள்ளப்படுகிறானா என்று பார்த்து விடுவோம்.'

இந்த வார்த்தைகளைச் சொல்லி நயவஞ்சகமாக ஹெக்டரை முன்னே அழைத்துச் சென்றாள் அதீனி. ஹெக்டரும்

அக்கிலிஸுும் அருகருகே வந்தபோது, மின்னும் தலைக்கவசம் கொண்ட மகா ஹெக்டர் அவனைப் பார்த்துச் சொன்னான்.

'அக்கிலிஸ், இனிமேல் உன்னிடமிருந்து நான் ஓடப்போவ தில்லை. நீ துரத்தியதால், நிற்பதற்கும் உன்னை என்னருகில் வர விடுவதற்கும் துணியாமல், ஏற்கெனவே ப்ரியமின் நகரை மூன்று முறை நான் சுற்றி வந்து விட்டேன். ஆனால் இப்பொழுது நான் என் மனதை மாற்றிக்கொண்டு விட்டேன். உன்னை நேருக்கு நேர் சந்திக்க முடிவு செய்துவிட்டேன். ஒன்று நீ சாகவேண்டும். அல்லது நான் சாக வேண்டும்.

'ஆனால் ஓர் உடன்பாட்டுக்குச் சாட்சியாக இருக்கும்படிக் கடவுள்களை நாம் வேண்டிக் கொள்வோம். கடவுள்களை விட, சிறந்த சாட்சிகள் ஓர் உடன்பாட்டுக்கு இருக்க முடியாது. நான் உயிரோடு இருப்பதற்கான வரத்தை ஜீயூஸ் தருவாரானால், உன்னை நான் கொன்று விட்டாலும், உன் உடலைச் சின்னா பின்னப் படுத்த மாட்டேன். அதிகபட்சமாக, உன் கீர்த்திமிகு கவச உடைகளை நான் கழற்றி எடுத்துக்கொள்வேன் அக்கிலிஸ், அவ்வளவுதான். பிறகு உனதுடலை கிரேக்கர்களிடம் ஒப் படைத்து விடுவேன். நீயும் அப்படியே செய்ய வேண்டும். என்ன சொல்கிறாய்?'

விரைவுப் பாத அக்கிலிஸ் ஹெக்டரை முறைத்து விட்டுச் சொன்னான்:

'ஹெக்டர், உன்னை நான் மன்னிக்கப் போவதே இல்லை. உடன்பாடுகளைப் பற்றியெல்லாம் நீ என்னிடம் பேசாதே. மனிதர்களோடு உடன்பாட்டுக்குச் சிங்கங்கள் வருவதில்லை. செம்மறியாட்டை நேருக்கு நேர் நட்புடன் ஓநாய்கள் பார்ப்ப தில்லை. கடைசிவரை அவைகள் எதிரிகள்தான். உன்னையும் என்னையும் பொருத்தவரையில் அப்படிப்பட்ட உறவுதான் உள்ளது. நமக்குள் நட்பு என்பது சாத்தியமில்லாதது. நம்மில் ஒருவரை இன்னொருவர் கொன்று, கேடயம் தாங்கிய போர்க்கடவுளின் பசிக்கு ரத்தம் கொடுக்கும்வரை அமைதி என்ற பேச்சுக்கே இடமில்லை.

'உனக்கு எவ்வளவு தைரியம் இருக்கிறதோ அதையெல்லாம் ஒன்றாகத் திரட்டிக்கொள். ஒரு போர் வீரன் என்ற முறையில் உன் வீரத்தையும் திறமையையும் என்னிடம் நீ காட்ட வேண்டிய

நேரம் இதுதான். எனது ஈட்டியால் உன்னை வீழ்த்துவதற்கு, பல்லாஸ் அதீனி காத்துக் கொண்டிருக்கையில், என்னிடமிருந்து உன்னைக் எதுவும் காப்பாற்றப் போவதில்லை. உன் ஈட்டியால் என் தோழர்களுக்கு நீ கொடுத்த துன்பங்களுக்கெல்லாம் ஒட்டு மொத்தமாக நீ பதில் சொல்ல வேண்டிய நேரம் இது.'

இப்படிச் சொல்லிவிட்டு, நீண்ட நிழல் கொண்ட தன் ஈட்டியைச் சுழற்றிச் சமன் படுத்தி தயார் செய்துகொண்டு ஹெக்டரை நோக்கி எறிந்தான்.

ஆனால் கீர்த்திமிகு ஹெக்டர், அதை எதிர்பார்த்துக் கவனமாக இருந்ததனால், அந்த வெண்கல ஈட்டி தன்னைத் தாக்காமல் தவிர்த்துக் கொண்டான். ஆயுதத்தின் மீது ஒரு கண் வைத்தவாறு அவன் குனிந்து கொண்டான். ஈட்டி அவன் தலைக்கு மேலே சென்று தரையில் குத்தி நின்றது. ஆனால் அதை உடனே பல்லாஸ் அதீனி பிடுங்கி மக்கள் மேய்ப்பனாகிய ஹெக்டர் கவனிக்கு முன் அதை அக்கிலிஸிடம் கொண்டு வந்து சேர்த்தாள். இணையற்ற பீலியூஸின் மகனைப் பார்த்துச் சொன்னான் ஹெக்டர்:

'நீ குறி தவற விட்டுவிட்டாய்! கடவுளையொத்த அக்கிலிஸ், ஜீயூஸ் உன்னிடம் எனது மரணத்துக்கான தவறான தேதியைக் குறித்துக் கொடுத்துவிட்டார்! உனக்கு எல்லாம் தெரியும் என்று நீ நினைத்தாய். ஆனால் என்னைப் பயமுறுத்தும் விதமாகவும் எனது தீர்மானத்தையும் வீரத்தையும் குறைத்து மதிப்பிட்டும் பேச்சில் மட்டும் ஆற்றொழுக்காகப் பேசுகிறாய். ஆனால் என்னை ஓட வைத்து என் முதுகில் உன் ஈட்டியால் குத்தலாம் என்று மட்டும் நினைக்காதே. நான் உன்னைத் தாக்க வரும்போது என் நெஞ்சில் குத்து. அதற்குக் கடவுளின் அனுமதி உனக்கு இருக்குமானால் செய். ஆனால் அதற்குமுன் நான் அனுப்பும் இதை முதலில் நீ தவிர்க்க வேண்டும். இதன் முழு நீளமும் உன் உடலில் ஒரு வீடு கட்டிக் கொள்ளட்டும்! ட்ரோஜன்களின் சாபமான நீ செத்துவிட்டால், போர் என்பது ஒரு எளிதான விஷயமாக ஆகிவிடும் அவர்களுக்கு.'

இப்படிச் சொல்லிவிட்டு நீண்ட நிழல் கொண்ட தன் ஈட்டியைச் சுழற்றிச் சமன் படுத்தி தயார் செய்து கொண்டு எறிந்தான். அது குறி தவறாமல் அக்கிலிஸின் கேடயத்தின் மத்தியில் தாக்கியது. ஆனால் கேடயத்தில் பட்டுப் பந்தைப் போலத் திரும்பி வந்தது ஈட்டி. தன் கையிலிருந்து சென்ற ஈட்டி, பலனின்றிப் போனதைப்

பார்த்து ஹெக்டர் மனமுடைந்து போய் நின்று கொண்டிருந்தான். ஏனெனில் அவனிடம் வேறு ஈட்டியெதுவும் இல்லை. வெள்ளைக் கேடயம் வைத்துக் கொண்டிருந்த டெய்ஃபோப ஸிடம் இன்னொரு நீண்ட ஈட்டி கேட்டு உரக்கக் கூவினான். ஆனால் டெய்ஃபோபஸை அங்கு எங்குமே காணவில்லை. என்ன நடந்திருக்கிறது என்பதை உடனே உணர்ந்து கொண்ட ஹெக்டர் சொன்னான்:

'எல்லாம் முடிந்து விட்டது. அப்படியெனில், எனது இறப்பை நான் சந்திக்கக் கடவுள்கள்தான் என்னை இங்கே அழைத்து வந்திருக்கின்றனர். போர்வீரனான டெய்ஃபோபஸ் தன் அருகில்தான் இருந்தான் என்று ஹெக்டர் நினைத்தான். ஆனால் அவன் சுவருக்குப் பின்னால்தான் இருக்கிறான். அதீனி என்னை ஏமாற்றி விட்டாள். கொடிய மரணம் தூரத்தில் இல்லை. இதோ என்னை அது முறைத்துப் பார்த்துக் கொண்டிருக்கிறது. இதிலிருந்து தப்பிக்க முடியாது. ஜீயூஸும் அவரது வில்லேந்திய மகனும் இதுபற்றி ரொம்ப நாளைக்கு முன்பே முடிவு செய் திருக்க வேண்டும். இதுவரை அவர்கள் செய்த உதவிக்கு நன்றி.

'எனது விதி என்னை எதிர்கொள்கிறது. ஆனால் என் உயிரை நான் இலகுவாக விட்டுவிடக் கூடாது. புகழுடன்தான் என் உயிர் போகவேண்டும். வருங்கால சந்ததியினர் நினைவு வைத்துக் கொள்ளுமாறு சாதனை செய்திருக்க வேண்டும்.'

இவ்வார்த்தைகளைச் சொல்லி, இடுப்பில் தொங்கிக் கொண் டிருந்த தன் நீண்ட கனமான கூர்வாளை உருவினான் ஹெக்டர். தன்னை நிதானப் படுத்திக் கொண்டு, வெகு உயரத்தில் பறக்கும் கழுகு கரிய மேகங்கள் வழியாக ஒரு மிருதுவான வெள்ளாட்டை அல்லது முயலைத் தாக்கக் கீழிறங்குவதுபோல முன்னே வந்தான்.

அவனை எதிர்கொள்ளப் பாய்ந்து வந்தான் அக்கிலிஸ். அவனுடைய இதயத்தில் காட்டுமிராண்டித்தனமான தீர்மான மிருந்தது. அவன் தனது மார்பை அருமையாக அலங்கரிக்கப் பட்ட கேடயத்தால் மறைத்திருந்தான். நான்கு தகடுகள் வைத்து செய்யப்பட்டிருந்த மின்னும் அவனது தலைக்கவசம் அசைந்தது. அதன் மீது ஹெஃபைஸ்டஸ் தாராளமாக வைத்திருந்த அழகிய இறகுகள் அசைந்தாடின. கடவுளையொத்த ஹெக்டரைக் கொல்ல வேண்டும் என்ற வெறியுடன் தன் வலது கையில்

ஈட்டியைப் பிடித்திருந்தான் அக்கிலிஸ். நட்சத்திரங்களிலேயே மிக அழகாக மின்னும் ஹெஸ்பிரிஸைப் போல மின்னியது அவனது கனமான ஈட்டியின் வெண்கல முனை. ஹெக்டரின் அழகான உடம்பில் தாக்குவதற்கேற்ற ஒரு இடத்தை அது தேடிக்கொண்டிருந்தது.

மகா பெட்ரோக்குலஸிடமிருந்து அவனைக் கொன்றபோது எடுக்கப்பட்ட, அருமையான வெண்கலக் கவசத்தால் ஹெக்டரின் குரல்வளையைத் தவிர உடல் முழுவதும் மூடப்பட்டிருந்தது. தோள்களையும் கழுத்தையும் கழுத்துப் பட்டை எலும்பு இணைக்கும் இடத்தில்தான் ஒரு மனிதனை மிக எளிதாகக் கொல்வதற்கு ஏற்ற இடமான குரல்வளை இருக்கிறது. ஹெக்டர் அக்கிலிஸைத் தாக்கியபோது, கடவுளையொத்த அக்கிலிஸ் ஹெக்டரின் குரல் வளையில் தனது ஈட்டியைச் செலுத்தினான். ஈட்டியின் முனை அவனது மிருதுவான கழுத்து வழியாக எளிதாக உள்ளே சென்றது. ஆனால் கனமான வெண்கலம் அவனது குரல்வளையை வெட்டவில்லை. ஹெக்டரால் இன்னும் பேச முடிந்தது. ஹெக்டர் மண்ணில் விழுந்தான். கடவுளையொத்த அக்கிலிஸ் வெற்றிக் களிப்போடு சொன்னான்:

'ஹெக்டர், பெட்ரோக்குலஸை நிர்வாணப்படுத்தியபோது நீ மட்டும் பாதுகாப்பாக இருக்கப் போவதாகக் கற்பனை செய்தாய். நீ அப்போது என்னைப் பற்றி நினைக்கவில்லை. நானும் தூரமாக இருந்தேன். பாவம் நீ ஒரு அப்பாவி. உட்குழிந்த கப்பல்களில் பெட்ரோக்குலஸைவிடச் சிறந்த வீரனொருவன் இருந்தது உனக்குத் தெரியாது. அது நான்தான். நான்தான் உன்னை மண்ணைக் கவ்வ வைத்துள்ளேன். இப்பொழுது உன்னை நாய்களும் பிணந்தின்னிப் பறவைகளும் மோசமாகச் சின்னா பின்னப் படுத்தப் போகின்றன. அப்போது கிரேக்கர்களாகிய நாங்கள் பெட்ரோக்குலஸை உரிய மரியாதையோடு அடக்கம் செய்வோம்.'

மின்னும் தலைக்கவசம் கொண்ட ஹெக்டரின் உயிர் பிரிந்து கொண்டிருந்தது. அப்போதும் அவன் சொன்னான்:

'உன்னை நான் வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன். உனது உயிரின்மீது ஆணையிட்டு வேண்டிக் கொள்கிறேன். உனது பெற்றோரின்மீது ஆணையிட்டு வேண்டிக் கொள்கிறேன்.

*கிரேக்கக் கப்பல்களின் அருகில் என் உடலை நாய்களிடம் விட்டுவிட வேண்டாம். எனக்கான பிணயத் தொகையைப் பெற்றுக்கொண்டு என் பெற்றோரிடம் என் உடலை ஒப்படைத்து விடு. என் தந்தையும் தாயும் ஏராளமான வெண்கலமும் தங்கமும் தருவார்கள். எனது உடலை என் வீட்டுக்கு எடுத்துச் செல்ல அனுமதித்துவிடு. ட்ரோஜன் வீரர்களும் அவர்களின் மனைவி களும் என்னுடலை முறைப்படி எரிக்கட்டும்.'*

*விரைவுப்பாத அக்கிலிஸ் ஹெக்டரை முறைத்து விட்டுச் சொன்னான்:*

*'நாயே, என் காலைப் பிடித்துக் கொண்டும் என் பெற்றோரின் பெயரைச் சொல்லியும் என்னிடம் மன்றாடாதே. நீ எனக்குச் செய்திருக்கும் காரியங்களுக்கெல்லாம், உன்னை அப்படியே வெட்டி வெட்டி சாப்பிடவே என் மனம் விரும்புகிறது. ஆனால் நாய்களை உன் தலைப்பக்கமிருந்து யாரும் அப்புறப் படுத்தப் போவதில்லை. இதை மட்டும் நிச்சயமாகச் சொல்லலாம். உன் மதிப்பைப் போல, பத்து அல்லது இருபது மடங்கு கனமான பொருள்களைக் கொண்டு வந்து ட்ரோஜன்கள் கொடுத்தாலும், மேலும் கொடுப்பதாக வாக்கு கொடுத்தாலும், டார்டானிய ப்ரியம் உன் எடைக்கு எடை தங்கம் தருவதாகச் சொன்னாலும், அப்போதுகூட உன் அம்மா, பெற்ற மகனான உன்னைச் சவப்பெட்டியில் வைத்துப் பார்த்து அழும் ஆசை நிறைவேறப் போவதில்லை. நாய்களும் பிணந்தின்னிப் பறவைகளும் உன்னைப் பங்கு போட்டு மிச்சம் வைக்காமல் உண்ணப் போகின்றன.'*

*இறந்து கொண்டிருந்த மின்னும் தலைக்கவசம் கொண்ட ஹெக்டர் சொன்னான்:*

*'எந்த அளவுக்கு உன்னை நான் தெரிந்து வைத்திருக்கிறேன்! நீ எப்படிப்பட்டவன் என்பதைத்தான் பார்க்கிறேனே! உனது இதயம் இரும்பைப் போலக் கடினமானது. நான் எனது மூச்சையெல்லாம் விரயம் செய்து கொண்டிருந்திருக்கிறேன். ஆனால் செயல்படுவதற்கு முன் நீ கொஞ்சம் சிந்தித்துக் கொள். நீ என்னை நடத்தும் விதம் பற்றிக் கடவுள்கள் கோபம் கொண்டால், பாரிஸூம் ஃபீபஸ் அப்போலோவும் ஸ்கேய வாயிலருகே உன்னை வீழ்த்தும்போது என்ன நடக்கும் என்று நினைத்துப் பார்.'*

இவ்வார்த்தைகளை அவன் பேசியபோது இறப்பெனும் முடிவு அவனைத் தழுவியது. உயிர் அவன் உடலை விட்டுவிட்டுத் தன் விதியையும், விட்டுச் செல்லும் இளமையையும் ஆண்மையை யும் நினைத்து நொந்து கொண்டே ஹயடிஸின் வீட்டுக்குச் சிறகடித்தது. ஆனால் அவன் இறந்த பிறகும் அவனைப் பார்த்துப் பேசினான் கடவுளையொத்த அக்கிலிஸ்.

'செத்துப் போ. என் சாவைப் பொருத்தவரை, ஜீயூஸூம் மற்ற நித்தியக் கடவுளர்களும் எப்போது என் உயிர் பிரிய வேண்டு மென்று விரும்புகிறார்களோ அப்போதே இறப்பை நான் வரவேற்பேன்.'

சொல்லிவிட்டு, தன் வெண்கல ஈட்டியை ஹெக்டரின் உடலி லிருந்து உருவி எடுத்து ஒரு பக்கமாக வைத்தான். ரத்தம் தோய்ந்த கைகளை ஹெக்டரின் தோள்களிலிருந்து அவன் எடுத்தபோது, மற்ற கிரேக்கர்கள் ஓடி வந்து அவனைச் சுற்றிக் கொண்டார்கள். ஹெக்டரின் அற்புதமான உடல் அமைப்பை யும் அழகையும் அவர்கள் வியந்தனர். ஒவ்வொருவராகச் சென்று ஹெக்டரின் உடலில் ஈட்டியால் குத்தினார்கள். அப்போது ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டு ஒரே குரலில் சொன்னார்கள்:

'நமது கப்பல்களை எரித்தபோது இருந்ததைவிட இப்பொழுது ஹெக்டர் மிகவும் மென்மையாகவே இருக்கிறான்!' இப்படிப் பேசிக்கொண்டு, அவனைச் சுற்றி நின்று கொண்டு மேலும் மேலும் அவன் உடலைக் காயப்படுத்திக் கொண்டிருந்தார்கள்.

ஹெக்டரை நிர்வாணப்படுத்திய பிறகு எழுந்த கடவுளையொத்த அக்கிலிஸ் அவர்களிடம் அவசரமாகச் சொன்னான்:

'நண்பர்களே, ஆட்சியாளர்களே, கிரேக்கத் தலைவர்களே, மற்றவர்களைவிட நமக்கு அதிகமான அழிவையும் நாசத்தையும் ஏற்படுத்திய இவன்மீது கடவுளர்கள் நமக்கு இப்பொழுது வெற்றி கொடுத்துள்ளனர். நாமனைவரும் நகரைச் சுற்றி வருவோம். ட்ரோஜன்கள் அடுத்து என்ன செய்ய இருக்கின் றார்கள் என்று தெரிய வேண்டும். ஹெக்டர் இப்பொழுது போய்விட்டதனால் நகரை விட்டுவிட்டுப் போகப் போகிறார் களா அல்லது ஹெக்டர் இல்லாமலே சமாளிக்க முடிவு செய்துள்ளார்களா என்று தெரிய வேண்டும்.

'ஆனால் நான் ஏன் இப்படி எனக்குள்ளேயே பேசிக்கொண்டுள்ளேன்? கப்பல்களில் ஒரு மனிதன் இறந்து கிடக்கிறான். இன்னும் புதைக்கப்படாமல், அழுது துக்கம் அனுஷ்டிக்கப்படாமல். ஹயடிஸின் மண்டபத்தில்கூட இறந்தவர்கள் தம்மோடு நெருங்கிய மற்ற இறந்தவர்களை மறந்து விடுகிறார்கள். ஆனால் நான் உயிரோடு இருக்கும்வரை, இந்தப் பூமியில் நடந்து கொண்டிருக்கும்வரை, எனது உயிர் நண்பனான பெட்ரோக்குலஸை என்னால் மறக்க முடியாது. வாருங்கள் கிரேக்க இளைஞர்களே, இந்த உடலை எடுத்துக் கொண்டு, வெற்றிப் பாடலைப் பாடிக் கொண்டே நமது கப்பல்களுக்குச் செல்லுங்கள். நாம் மாபெரும் வெற்றியடைந்திருக்கிறோம். கடவுளையொத்த ஹெக்டரை நாம் கொன்றுவிட்டோம். இலியத்தில் அவன் ஒரு கடவுளைப் போல மதிக்கப்பட்டவன்' இப்படிச் சொல்லிவிட்டு மிக மோசமாக ஹெக்டரின் உடலைத் துன்புறுத்தினான்.

ஹெக்டரின் பாதங்களின் பின்னால் குதிகாலுக்கும் கணுக்காலுக்கும் இடையில் இருந்த சதையை நார்நாராக வெட்டினான். அதற்குள் மிருகத்தோலால் செய்யப்பட்ட பட்டைகளை விட்டு ஹெக்டரின் கால்களைத் தன் தேரோடு இணைத்தான். தலை மண்ணில் தொங்கிக் கொண்டு கிடந்தது. பின் தன் கீர்த்திமிகு கவசத்தைத் தூக்கித் தேரில் வைத்துவிட்டுத் தானும் ஏறிக் கொண்டான். குதிரைகளைச் சாட்டையால் சொடுக்கி முடுக்கினான். விருப்பத்துடன் ஜோடிக்குதிரைகள் பறந்தன. அவற்றால் இழுக்கப்பட்டுப் பின்னால் வந்து கொண்டிருந்த உடம்பிலிருந்து மண்ணும் தூசியும் மேலே கிளம்பியது. ஹெக்டரின் அழகிய கருத்த முடி இருபுறமும் பிரிந்து பறந்தது. ஒரு காலத்தில் மிகவும் அழகாக இருந்த அவன் தலைமுழுதும் இப்பொழுது புழுதியில் இழுக்கப்பட்டது. அவனது தந்தை மண்ணிலேயே அவனது உடல் எதிரிகளால் சின்னாபின்னமாக்கப்பட ஜீயூஸ் அனுமதித்தான்.

அவன் தலை முழுதும் புழுதியால் மூடப்பட்டிருந்தது. தன் மகன் தேர்க்கால்களில் கட்டி இழுத்துக் கொண்டு போகப் படுவதைப் பார்த்த ஹெக்டரின் அன்னை தன் கூந்தலைப் பிய்த்துக் கொண்டாள். தன் தலையலங்கார உடையைக் கழற்றித் தூரமாக, வீசியெறிந்து விட்டு அலறினாள். அவன் தந்தை வேதனையில் முனகினான். அவர்களைச் சுற்றி இருந்த மக்களும் சேர்ந்து துக்கப்பட்டு அழுதார்கள். நகரம் முழுவதுமே நம்பிக்கையற்றுப்

போனது. மேலிருந்து கீழ் வரை முழுவதுமாக இலியம் எரிந்தது போல் ஆனது. மனமுடைந்த கிழவன் வெளியே செல்லும் முடிவோடு டார்டானிய வாயிலை நோக்கிச் சென்றான். சுற்றி யிருந்த மக்கள் அவனைக் கட்டுப்படுத்தினர். வேதனையால் உந்தப்பட்ட அவன் சாணத்தில் படுத்து உழன்றான். எல்லாரை யும் ஒவ்வொருவராகப் பெயர் சொல்லி அழைத்து வேண்டி னான்:

'நண்பர்களே, விலகியிருங்கள். நீங்கள் என்மீது கொண்டிருக்கும் அக்கறையை நானறிவேன். நான் மட்டும் தனியாக கிரேக்கக் கப்பல்களுக்குப் போகவேண்டும். என்னைப் போக விடுங்கள். மனிதாபிமானபற்ற அந்த ராட்சச மிருகத்திடம் சென்று நான் வேண்டிக் கொள்ள வேண்டும். ஒருவேளை என் வயதுக்கு அவன் மதிப்பு கொடுக்கலாம்; இரக்கம் காட்டலாம். அவனுக்கும் என் வயதில் ஒரு அப்பா இருக்கிறார். ஆமாம், அவனுடைய அப்பா பீலியூஸ்தான் ட்ரோஜன்களுக்கான சாபமாக அவனை வளர்த்து உருவாக்கியவர். ஆனால் என்னைப்போல அவனுடைய கையால் துன்பப்பட்டவர் எவருமில்லை. என்னுடைய பல பிள்ளைகளை வாழவேண்டிய முக்கியமான பருவத்தில் அவன் கொலை செய்திருக்கிறான்.

அவர்கள் எல்லாருக்காகவும்தான் நான் அழுகிறேன். என்றாலும், அதில் ஒருவனுக்காகத்தான் என் மனம் மிகவும் வேதனைப் படுகிறது. அந்த வேதனையே என்னைக் குழிக்குள் கொண்டு போகப்போகிறது. அந்த ஒருவன்தான் ஹெக்டர். அவன் மட்டும் எனது கைகளிலேயே இறந்திருந்தால்! நானும், அவனை இந்த உலகுக்குக் கொண்டு வந்த அவனுடைய அம்மாவும், நாமெல் லாரும் அவனுக்காக மனதார அழுது புலம்பியிருக்கலாம்.'

அழுது கொண்டே அவன் பேசினான்: கூடியிருந்தவர்களும் அந்தத் துக்கத்தில் கலந்து கொண்டனர். இப்பொழுது ட்ரோஜன் பெண்களோடு உச்சஸ்தாயியில் அழுது புலம்ப ஹெகாபி வந்தாள்:

'என்னருமை மகனே, ஓ இன்பமே! நீயே போய்விட்ட பிறகு நான் மட்டும் உயிரோடு இருந்து ஏன் அழுது புலம்பிக் கொண்டிருக்க வேண்டும்? இரவிலும் பகலிலும் இலியம் நகரின் நான் செய்த பிரார்த்தனைகளுக்கெல்லாம் நீதான் பதிலாக இருந்தாய். இந்த நகரில் இருந்த ஒவ்வொரு ஆணுக்கும் பெண்ணுக்கும்

அவர்களுடைய கனவு நனவாக ஆனதுபோல் நீ இருந்தாய். ஒரு கடவுளைப் போல மதிக்கப்பட்ட மானுடன் நீ. நீ உயிரோடு இருந்தபோது ட்ரோஜன்களின் அதிகபட்ச கீர்த்தி நீயாகவே இருந்தாய். விதி உன்னைக் கேட்டுவிட்டது. நீயும் இறந்து விட்டாய் இப்பொழுது.' இவ்விதமாக அழுதுகொண்டே சொன் னாள் ஹெகாபி.

ஆனால் ஹெக்டரின் மனைவி ஆன்ட்ரோமக்கியின் செவி களுக்கு அவன் இறந்த செய்தி எட்டியிருக்கவில்லை. அவளு டைய கணவன் வாயில் கதவுகளுக்கு வெளியே நின்று கொண்டிருந்த செய்தியை நம்பகமான எந்தச் சேவகனும் போய் அவளிடம் சொல்லவில்லை. தனது உயர்ந்த வீட்டின் ஒரு மூலையில் அவள் வேலையாக இருந்தாள். ஒரு பழுப்பு நிறத்துணி வலையை அவள் இரட்டையாக மடிப்பதிலும் அதில் பூக்களைப் பாவு போடுவதிலும் ஈடுபட்டிருந்தாள். ஹெக்டர் போர்க்களத்திலிருந்து திரும்பியவுடன் அவன் சுடுதண்ணீரில் குளிப்பதற்கு வசதியாக ஒரு கொப்பரையை எடுத்து தீமூட்டச் சொல்லி அழகிய கூந்தல் கொண்ட தன் பணிப்பெண் ஒருத்தி யிடம் அப்போதுதான் சொன்னாள். பாவம் அப்பாவிப் பெண்! குளியல் அறைகளிலிருந்தெல்லாம் தூரமாக அவனை அக்கிலிஸின் கைகளால் அதீனி கொன்றிருப்பாள் என்பதை அவள் கற்பனை செய்துகூடப் பார்த்திருக்க மாட்டாள்.

ஆனால் கோட்டை கொத்தளம் முழுவதும் ஒரே ஓலமும் ஒப்பாரியுமாக இருப்பது அவள் காதுகளை இப்பொழுது எட்டியது. அவளுக்குள் ஒரு நடுக்கம் நுழைந்து வெளிவந்தது. நெசவுத்தறி நாடாவைக் கீழே போட்டாள். காத்திருந்த பணிப் பெண்களை மறுபடியும் அழைத்தாள்.

'உங்களில் இரண்டு பேர் என்னோடு வாருங்கள். என்ன நடந்துள்ளது என்று நான் பார்க்க வேண்டும். என் கணவரின் அன்னையில் குரல் அது. அவர் எப்போதுமே அடக்கமானவர். இப்படியெல்லாம் அவர் அழுது புலம்பி நான் கேட்டதில்லை. என் இதயம் நடுங்குகிறது. எனக்கு, பயத்தில் கையும் ஓடவில்லை காலும் ஓடவில்லை. ப்ரியமின் வீட்டை ஏதோ ஆபத்து அச்சுறுத்திக் கொண்டிருக்கிறது. ஹெக்டர் எப்போதுமே எல்லாரையும்விட முன்னால் செல்பவர். வீரத்தில் யாருக்கும் இளைத்தவரில்லை. கடவுளையொத்த அக்கிலிஸ் எனது துணிச்சல் மிக்க ஹெக்டரை நகருக்கு வெளியில் ஓட ஓட

விரட்டிப் பிடித்து விட்டதாகவும், ஹெக்டரின் அதிகமான நம்பிக்கையை ஒரு முடிவுக்குக் கொண்டு வந்து விட்டதாகவும் கேள்விப்படுகிறேன். அய்யோ, இப்படி ஒரு செய்தி எனக்குக் கிடைக்காமலிருந்திருக்கக் கூடாதா!'

துடிக்கும் இதயத்துடன் இந்த வார்த்தைகளைப் பேசிய ஆன்ட்ரோமக்கி ஒரு பைத்தியக்காரியைப் போல வீட்டை விட்டு வேகமாக வெளியில் ஓடி வந்தாள். அவளுடைய பணிப் பெண்கள் அவளுக்குப் பின்னால் ஓடினார்கள். ஆண்களெல்லாம் குழுமியிருந்த கோபுரத்துக்கு வந்தபோது, சுவரின்மீது ஏறிப் பார்த்தாள். சமவெளியில் கண்களால் தேடினாள். நகரின் முன்னால் தன் கணவன் தேரில் கட்டப்பட்டு இழுத்துக் கொண்டு போகப்படுவதைப் பார்த்தாள். மரியாதையில்லாமல் குதிரைகள் அவனைக் கிரேக்கக் கப்பல்கள் இருந்த இடத்தை நோக்கி இழுத்துக் கொண்டே போயின.

ஆன்ட்ரோமக்கியின் கண்களைக் கருப்பு இரவு இறங்கித் தழுவியது. பின்பக்கமாக மயங்கி விழுந்தாள் அவள். மின்னிக் கொண்டிருந்த அவளுடைய தலை அலங்கார உடையின் தலைப்பட்டை, தொப்பி, பின்னல்கள், தலையைச் சுற்றிப் போடப்பட்டிருந்த ஆடை இவற்றோடு தூரமாகப் போய் விழுந்தது. அந்தத் தலைச்சுற்றாடை அவளுடைய திருமணத்தின் போது தங்கத் தேவதையான அஃப்ரோடைட்டி பரிசாகக் கொடுத்தது. மின்னும் தலைக்கவசம் கொண்ட ஹெக்டர், இதுவரை யாரும் கொடுக்காத அளவுக்கு பெண்ணுக்குரிய பரிசுப் பொருள்களைக் கொடுத்து ஆன்ட்ரோமக்கியின் தந்தை ஈட்டியானுடைய வீட்டிலிருந்து அவளைத் தன் வீட்டுக்கு அழைத்து வந்த அந்த நாளில் கொடுத்தது. ஹெக்டரின் சகோதரிகளும் அவனுடைய சகோதரர்களின் மனைவிமார்களும் ஓடி வந்து அவளைச் சுற்றி நின்று அவள் விழாமல் தாங்கிக் கொண்டார்கள். செத்துப் போய்விடுவாள் என்று சொல்லக் கூடிய அளவுக்கு மனமுடைந்து போயிருந்தாள் அவள். கடைசியில் மயக்கம் தெளிந்தபோது, அவள் தேம்பித் தேம்பி அழ ஆரம்பித்தாள். அருகிலிருந்து ட்ரோஜன் பெண்களைப் பார்த்துச் சொன்னாள்:

'ஹெக்டர், என்ன துன்பம் எனக்கு! ஒரே நட்சத்திரத்தில்தான் நானும் நீங்களும் பிறந்தோம். ப்ரியமின் வீட்டில் நீங்களும், ப்லாகஸ் மலையின் காடுகளின் கீழே தீபியில் இருந்த

ஈட்டியானில் வீட்டில் நானும். ஈட்டியான் என்னைக் குழந்தைப் பருவம் முதல் பாராட்டி சீராட்டி வளர்த்தார். தன்னைவிட அதிகமான பொல்லாத விதி கொண்ட குழந்தையை வளர்த்த பொல்லா விதி கொண்ட தந்தை! அவர் என்னைப் பெற்றிருக் கவே கூடாது. ஹெக்டர், வெறுக்கத்தக்க வேதனையில் என்னைத் தனியாக, ஒரு விதவையாக வீட்டில் விட்டுவிட்டு நீங்கள் இப்பொழுது பூமிக்குக் கீழே ஆழத்தில் இருக்கும் ஹயடிஸுக்குப் போய்க்கொண்டிருக்கிறீர்கள். நமக்குப் பிறந்த உங்கள் மகனோ ஒரு கைக்குழந்தை. இந்தத் துன்பகரமான பெற்றோருக்குப் பிறந்தவன். நீங்கள் இனி அவனுக்கு ஓர் இன்பமாக இருக்கப் போவதில்லை ஹெக்டர். இப்பொழுது நீங்கள் இறந்து விட்டீர்கள். உங்களைப் பொருத்தவரை அவனும் உங்களுக்கு இல்லை.

எல்லாக் கண்ணீருடன் போய்க் கொண்டிருக்கும் இந்தப் போரில் அவன் தப்பிப் பிழைத்தால்கூட, கஷ்டத்தையும் வேதனையை யும் தவிர அவனுக்கு மிஞ்சியிருப்பது வேறில்லை. அவனுடைய நிலத்தை மற்றவர் எடுத்துக் கொள்வர். அனாதைக் குழந்தைக்கு நண்பர்கள்கூடக் கிடையாது. பூமியைப் பார்த்த வண்ணம் குனிந்த தலையுடன் கண்ணீரோடிய கன்னங்களுடன் அவன் இனி நடக்க வேண்டும். தன் தந்தைக்குத் தெரிந்தவர்களையெல்லாம் தேவை கருதி அவன் போய்ப் பார்ப்பான். பசியால் வாடி, போவோர் வருவோர் சட்டையையெல்லாம் பிடித்துக் கெஞ்சிக் கொண்டிருப்பான். இரக்கப்பட்டு யாராவது கொஞ்சம் குடிக்கக் கொடுப்பார்கள். அது அவன் உதடுகளை நனைக்கத்தான் போதுமானதாக இருக்கும். குடித்து, தாகம் தணிப்பதற்கல்ல. பிறகு இன்னொரு பையன் வருவான். அவனுடைய பெற்றோர்கள் இருவரும் உயிருடன் இருப்பார்கள். விருந்தில் நுழையும் இவனைப் பார்த்து அவர்கள் அடிப்பார்கள். கேலி செய்வார்கள். 'போ, போ வெளியே போ. உன் அப்பா யாரும் இங்கே சாப்பிட்டுக்கொண்டு இல்லை' என்று விரட்டுவார்கள். அழுது கொண்டே குழந்தை விதவையாகிவிட்ட தாயிடம் ஓடுவான். சின்ன அஸ்டியானாக்ஸ். தன் அப்பா இருந்தபோது அவர் மடியில் அமர்ந்து கொண்டு எலும்பு மஜ்ஜையும் ஆட்டுக்கறிக் கொழுப்பும் சுவைத்தவன். விளையாடிக் களைத்துத் தூங்கி விடுவான். செவிலித்தாய் அவனைப் படுக்கையில் போட்டுக் கவனித்துக் கொள்வாள். அப்போது அவன் மனம் நிம்மதியாக இருந்து இருக்கும். ஆனால் இப்பொழுது தந்தையை இழந்த

அஸ்டியானாக்ஸுக்கு வாழ்க்கை வேதனையாக இருக்கப் போகிறது. ஹெக்டர், நகரின் சுவர்களுக்கும் வாயில் கதவு களுக்கும் உங்களைத்தான் ஒரே பாதுகாப்பாக மக்கள் நினைத்தார்கள். நகரத் தலைவன் என்று உங்களை அழைத் தார்கள்.

ஆனால் நீங்கள் இப்பொழுது, அலகுகள் போன்ற முன்புற அமைப்பு கொண்ட கப்பல்களருகே, உங்கள் பெற்றோரை விட்டு வெகு தூரத்தில், நிர்வாணமாகக் கிடக்கிறீர்கள். உங்கள் உடலை நாய்கள் உண்டு முடித்த பிறகு நெளியும் புழுக்கள் பதம் பார்க்கும். ஆனால் பெண்களின் கைகளால் நெய்யப்பட்ட நேர்த்தியான அழகிய துணிமணிகள் வீட்டில் உங்களுக்காகக் காத்திருக்கின்றன. அவை எல்லாவற்றையும் தீயில் போட்டுக் கொளுத்தப் போகிறேன். இனி அவற்றால் உங்களுக்குப் பிரயோஜனமில்லை. அவைகளில் உங்களை இனி அடக்கம் செய்யக் கூடமுடியாது. ஆனால் ட்ராய் நகர ஆண்களும் பெண்களும் உங்களுக்குச் செய்யும் இறுதி மரியாதையாக அதை நிச்சயம் செய்வார்கள்.'

இவ்விதமாக அழுது கொண்டே அவள் சொன்னாள். சுற்றி யிருந்த பெண்களும் அவள் அழுகையில் கலந்து கொண்டார்கள்.

# ஈமச்சடங்கும் விளையாட்டுப் போட்டிகளும்

***கதைச்சுருக்கம்***

***வரிகள் 01 – 108***

*கிரேக்கர்கள் தங்கள் கப்பல்களுக்குத் திரும்பி வருகின்றனர். பெட்ரோக்குலஸுக்காகத் துக்கம் அனுஷ்டிக்கப்படுகிறது. அக்கிலிஸ் உறங்கும்போது பெட்ரோக்குலஸின் ஆவி அவனைச் சந்திக்கிறது. (28ம் நாளுக்கு முந்தைய இரவு)*

***வரிகள் 109 – 257 (28வது நாள்)***

*விறகு சேகரிக்கப்படுகிறது. பெட்ரோக்குலஸின் உடல் சவ ஊர்வலத்தில் எடுத்துச் செல்லப்படுகிறது. தனது தலை முடியிலிருந்து ஒரு கொத்தை அக்கிலிஸ் அர்ப்பணிக்கிறான். சிதை எரியூட்டப்படுகிறது. அஃப்ரோடைட்டியும் அப்போலோ வும் ஹெக்டரின் உடலைப் பாதுகாக்கின்றனர். சிதை நெருப்பு அணையாமல் தடுக்க, காற்று அழைக்கப்படுகிறது. (29ம் நாள்) அக்கிலிஸின் இறப்புக்காகக் காத்திருக்கும் வண்ணம், பெட்ரோக்குலஸின் எலும்புகள் சேகரிக்கப்பட்டுத் தற்காலிக மாக ஒரு தங்கப் பாத்திரத்தில் வைக்கப்படுகின்றன.*

***வரிகள் 257 – 262***

*பெட்ரோக்குலஸின் ஈமச்சடங்கு விளையாட்டுகளைத் தொடங்குவதற்காக வீரர்களை அமர வைக்கிறான் அக்கிலிஸ். முதலில் தேர்ப்பந்தய ஓட்டம் தொடங்குகிறது. தன் மகன் ஆன்ட்டிலோக்கஸை உற்சாகப் படுத்துகிறான் நெஸ்டர்.*

***வரிகள் 262 – 361***

*யுமீலியஸ் மோதிக்கொள்கிறான். மெனிலயஸை மிகவும் வன்மையாக ஆன்ட்டிலோக்கஸ் கண்டிக்கிறான்.*

***வரிகள் 362 – 652***

*டயமீடிஸ் வெற்றி பெறுகிறான். ஆன்ட்டிலோக்கஸும் மெனிலயஸும் வாக்குவாதம் செய்கின்றனர்.*

***வரிகள் 653 – 699***

*குத்துச் சண்டையில் யுராலஸைக் கீழே விழ வைக்கிறான் ஈப்பியூஸ்.*

***வரிகள் 700 – 739***

*டிலமானின் மகனான அஜாக்ஸும் ஒடிஸியூஸும் மல்யுத்தம் செய்கின்றனர். வெற்றி தோல்வியற்ற நிலையில் மல்யுத்தம் முடிகிறது.*

***வரிகள் 740 – 797***

*ஓட்டப் பந்தயத்தில் ஆய்லியூஸின் மகன் அஜாக்ஸை வெல்ல ஒடிஸியூஸுக்கு அதீனி உதவி செய்கிறாள்.*

***வரிகள் 798 – 825***

*டிலமானின் மகன் அஜாக்ஸும் டயமீடிஸும் வெற்றி தோல்வியில்லாத நிலையில் முடிந்த ஆயுதம் தாங்கிய சண்டை செய்கின்றனர்.*

***வரிகள் 826 – 897***

*வில் வித்தை, ஈட்டியெறிதல் போன்ற விளையாட்டுகளில் கலந்து கொள்ளாத அகமெம்னனுக்கு அக்கிலிஸ் பரிசு வழங்கு கிறான்.*

# ஈமச்சடங்கும் விளையாட்டுப் போட்டிகளும்

நகரம் முழுவதும் ட்ரோஜன்களால் ஹெக்டருக்காக அழுது புலம்பி, துக்கம் அனுஷ்டித்துக் கொண்டிருந்த அந்த நேரத்தில், ஹெல்லெஸ்பாண்ட ஜலசந்தியில் அருகில் நிற்கவைக்கப் பட்டிருந்த தங்கள் கப்பல்களுக்குத் திரும்பினர். பின் ஒவ்வொரு வரும் தத்தம் கப்பல்களுக்குச் சென்றனர். மெர்மிடன்களை மட்டும் போகச் சொல்லவில்லை. போரை நேசிக்கும் அந்தத் தோழர்களைத் தன்னோடே வைத்துக்கொண்ட அக்கிலிஸ் அவர்களைப் பார்த்துக் கூறினான்:

'மெர்மிடன்களே, நம்பிக்கைக்குரிய தோழர்களே, தேரிலிருந்து உங்கள் விரைவுக் குதிரைகளை அவிழ்க்க வேண்டாம். அப்படியே நாம் போய் பெட்ரோக்குலஸை வைத்திருக்கும் இடம்வரை சென்று அவனுக்காக துக்கம் அனுஷ்டிப்போம். இறந்தவர்களுக்கு நாம் செய்ய வேண்டிய மரியாதை அது. நம்முடைய கசப்பான கண்ணீரினால் நமது மனங்கள் கொஞ்சம் லேசான பிறகு, நாமனைவரும் அமர்ந்து சாப்பிடலாம்.'

இப்படி அவன் சொன்னதும் மெர்மிடன்கள் அனைவரும் அழுது புலம்ப ஆரம்பித்தனர். அக்கிலிஸ் அவர்களுக்குத் தலைமை யேற்றுக் கூட்டிச் சென்றான். அழகிய பிடரிகள் கொண்ட தம் குதிரைகளை மூன்று முறை அவர்கள் பெட்ரோக்குலஸின் உடலைச் சுற்றி வரச் செய்தனர். அவர்கள் இதயங்கள் அனைத்திலும் அழவேண்டும் என்ற உணர்வைத் தூண்டினாள் தீட்டிஸ். அவர்களது கண்ணீரால் மணல் நனைந்தது. கவச உடை கள் நனைந்தன. எதிரிகளைப் படுதோல்வியடையச் செய்யும் மாபெரும் தலைவன் ஒருவனை அவர்கள் இழந்துவிட்டிருந்

தார்கள். பீலியூஸின் மகனான அக்கிலிஸ், எதிரிகளைக் கொல்லும் தனது கரத்தை, பெட்ரோக்குலஸின் மார்பின்மீது வைத்து, உரத்து ஒலித்த அந்த ஒப்பாரிக்குத் தலைமை தாங்கினான்.

'போய் வா பெட்ரோக்குலஸ், ஹயடிஸின் மண்டபத்திலும் போய் சந்தோஷமாக இரு. உனக்குக் கொடுத்த எல்லா வாக்குறுதி களையும் நான் நிறைவேற்றிவிட்டேன். ஹெக்டரின் உடலை இங்கே நாய்கள் அப்படியே தின்பதற்காக இழுத்துக்கொண்டு வந்துவிட்டேன். உனது சிதையில் வைத்து, உன் இறப்பால் ஏற்பட்ட எனது கோபத்தைத் தணிக்க, பன்னிரண்டு ட்ரோஜன் களின் கழுத்தை அறுக்கப் போகிறேன்.'

அப்படிச் சொல்லிவிட்டு மோசமான முறையில் ஹெக்டரின் உடலைச் சிதைத்தான். பெட்ரோக்குலஸின் சவப்பெட்டி இருந்த இடத்துக்குப் பக்கத்தில் ஹெக்டரின் முகத்தை தரையில் புழுதியில் படுமாறு எறிந்தான். அதன்பிறகு, அவனுடைய படை வீரர்கள் பளபளத்துக்கொண்டிருந்த தங்கள் வெண்கலக் கவச உடைகளைக் கழற்றினர். பெருமையுடன் கனைத்துக்கொண் டிருந்த தம் விரைவுக் குதிரைகளைத் தேரிலிருந்து அவிழ்த்து விட்டனர். கூட்டம் கூட்டமாக விரைவுப்பாத அக்கிலிஸின் அருகில் அமர்ந்தனர். பெட்ரோக்குலஸின் ஈமச்சடங்குகளை யொட்டி, அவர்களுக்கு ஒரு பிரம்மாண்டமான விருந்துக்கு ஏற்பாடு செய்திருந்தான் அக்கிலிஸ். பல வெள்ளை எருதுகள் அலறிக்கொண்டே இரும்புக் கத்திக்குப் பலியாயின. கத்திக் கொண்டிருந்த பல செம்மறியாடுகளும் வெள்ளாடுகளும் வெட்டப்பட்டன. மின்னும் கோரைப்பற்கள் கொண்ட பல ஆண் பன்றிகள் தீயில் நீட்டி வைக்கப்பட்டு முடி கருகி வெந்து போயின. கோப்பைகளில் நிரப்பப் பட்ட ரத்தம் உடலைச் சுற்றி கொட்டப்பட்டது.

இதற்கிடையில், கடவுளையொத்த அகமெம்னனைச் சந்திப் பதற்காக, பீலியூஸின் மகனான விரைவுப்பாத தலைவன் அக்கிலிஸை அழைத்துச் சென்றனர் கிரேக்கத் தலைவர்கள். ஆனால் தன் நண்பனை இழந்த சோகத்திலும் கோபத்திலும் இருந்த அக்கிலிஸை அகமெம்னனிடம் கூட்டிச் செல்வது அவ்வளவு எளிதான காரியமாக அவர்களுக்கு இருக்கவில்லை. அகமென்னனின் பாசறையை அடைந்தபோது, கட்டிதட்டிப் போன ரத்தத்தை, தன் உடம்பிலிருந்து அக்கிலிஸ் கழுவித்

துடைத்துக் கொள்ள வசதியாக, ஒரு மூன்று கால்கள் கொண்ட ஒரு கொப்பரையை அடுப்பில் வைக்கும்படி கூறினார்கள். ஆனால் அங்கிருந்த தெளிவான குரல் கொண்ட காவலாளர் களிடம் அப்படிச் செய்வதற்கு வெளிப்படையாக மறுத்துவிட்ட அக்கிலிஸ், அது போதாதென்று ஒரு சபதமும் எடுத்துக் கொண்டான்:

'கடவுளர்களில் மிக உயர்ந்தவரும் தலைசிறந்தவருமான ஜீயூஸின் மீது ஆணையாகச் சொல்கிறேன், பெட்ரோக்குலஸின் சிதைக்கு எரியூட்டி முடிக்கும்வரை, அவனுக்கு ஒரு கல்லறை எழுப்பி வைக்கும் வரை, என் தலையை மொட்டையடித்துக் கொள்ளும்வரை, என் உடலில் ஒட்டிக் கொண்டிருக்கும் ரத்தத் துளிகளை நீக்கிக்கொள்ள மாட்டேன். இன்னும் எவ்வளவு காலம் நான் உயிர் வாழ்ந்தாலும் சரி, இப்பொழுது நான் படும் வேதனையைப் போல வேறு எப்போதும் படப்போவதில்லை.

ஆனால் இப்போதைக்கு, உணவை நான் வெறுத்தாலும், நாம் சாப்பிட்டுத்தான் ஆக வேண்டியுள்ளது. விடியல் நேரத்தில் விறகும், இறந்த ஒரு மனிதனின் இறுதிப் பயணத்துக்குத் தேவையான மற்ற அனைத்தையும் கொண்டு வருமாறு வீரர்களின் தலைவன் அகமெம்னன் உத்தரவிடட்டும். எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் சீரான நெருப்பில் பெட்ரோக்குலஸின் உடல் வேகட்டும். அதன் பின் நாம் அனைவரும் நமது காரியங்களை ஆற்றப் போகலாம்.'

அவன் அப்படிச் சொன்னதும் அனைவரும் அதற்கு உடன் பட்டார்கள். உடனே அவசரமாக உணவைத் தயார் செய்து அவர்கள் உண்டார்கள். யாருக்கும் உரிய பங்கு கிடைக்காமல் போகவில்லை. பசியும் தாகமும் தணிந்த பிறகு, ஒவ்வொரு வீரனும் உறங்குவதற்காகத் தன் பாசறைக்குத் திரும்பினான். ஆனால் பீலியூஸின் மகனான அக்கிலிஸ் மட்டும் அலைகள் உயர எழும்பி ஆர்ப்பரித்துக் கொண்டிருந்த கடற்கரையோரமாகத் திறந்த வெளியில், உறக்கமின்றிக் கிடந்தான். தன் மெர்மிடன் வீரர்களுக்கு மத்தியில் அவன் மட்டும் புலம்பிக் கொண்டிருந் தான். அவனது அருமையான உடல் உறுப்புகள் யாவும் புயல் போல மண்வீசுமாறு காற்றடித்துக் கொண்டிருக்கும் இலியம் நகரைச் சுற்றி ஹெக்டரை விரட்டி விரட்டிக் களைப்படைந் திருந்தன. ஆனால் சீக்கிரமே கவலைகளுக்கெல்லாம் ஒரு முடிவு போல அவனையும் உறக்கம் தழுவியது. அதே நேரத்தில் பாவப்

பட்ட பெட்ரோக்குலஸின் ஆவி வந்து அக்கிலிஸிடம் பேசியது. உயிருடன் புபெட்ரோக்குலஸ் நேரில் வந்து பேசியது போலவே இருந்தது. அதே உடல்வாகு, அதே அழகான கண்கள், அவன் எப்போதும் அணிந்திருக்கும் அதே உடை. அக்கிலிஸின் தலைக்கு மேலே நின்று அது சொன்னது:

'நீ உறங்கிக் கொண்டிருக்கிறாய். என்னை மறந்து விட்டாய் அக்கிலிஸ். நீ உயிரோடு இருந்தபோது என்னை மறக்கவில்லை. ஆனால் இறந்த பிறகு மறந்துவிட்டாய். எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரமாக என்னைப் புதைத்துவிடு. நான் விரைவாக ஹயடிஸின் மண்டபத்துக்குப் போய்விடுகிறேன். என்னை உள்ளே அனுமதிக்காமல் இறந்தவர்களின் ஆவிகள் அலைக்கழிக்கின்றன. ஆற்றைக் கடக்க விடாமல் என்னை அவர்கள் தடுக்கிறார்கள். நான் மட்டும் தனியாக ஹயடிஸின் மண்டபத்தின் அகன்ற வாயில்கள் இருக்கும் இடத்தைச் சுற்றி மேலும் கீழுமாக அலைந்து கொண்டிருக்கிறேன். எனக்கு உதவி செய் அக்கிலிஸ். நெருப்பில் ஒருமுறை என்னை நீ வைத்து எரித்து விட்டால், அதன் பிறகு ஹயடிஸில் இருந்து நான் திரும்பி வரவே மாட்டேன். நமது திட்டங்களைத் தீட்டுவதற்காக நமது வீரர்களோடு இனி நீயும் நானும் ஒன்றாகக் கூப்பிடு தூரத்தில் அமரவே முடியாது. என் பிறப்பிலிருந்தே எனது விதியாக இருந்த ஒன்றால் நான் விழுங்கப்பட்டு விட்டேன். கடவுளையொத்த அக்கிலிஸ், செழிப்பான ட்ரோஜன் சுவர்களின் கீழே மடிய வேண்டும் என்பது உன் விதியாகவும் இருக்கிறது நண்பனே.

நான் ஒரு குழந்தையாக இருந்தபோது முட்டியால் அடித்து விளையாடும் ஒரு விளையாட்டை நாங்கள் விளையாடிக் கொண்டிருந்தோம். அப்போது தெரியாமல் நான் ஆம்ஃபிடாமஸின் மகனைக் கொலை செய்துவிட்டேன். ஒரு விபத்தாக நடந்த அந்தக் கொலையால் என்னை ஓபூஸில் இருந்து என் தந்தை மெனிட்டியஸ் உன் வீட்டில் கொண்டு வந்து விட்டார். தேரோட்டியான பீலியூஸ் தன் வீட்டில் என்னை வரவேற்று உபசரித்தார். என்னை அன்பும் பாசமும் காட்டி வளர்த்தார். உனது உதவியாளனாக என்னை ஆக்கினார். இப்பொழுது நான் உன்னிடம் வேறொரு வேண்டுகோளை வைக்கப் போகிறேன். எனது எலும்புகளையும் உனது எலும்புகளையும் தனியாகப் புதைக்க வேண்டாம். நானும் நீயும் ஒன்றாக உனது வீட்டில் வளர்ந்தது போல, அவைகள் ஒன்றாகவே சேர்ந்து கிடக்கட்டும்.

உனது அன்னை உனக்குக் கொடுத்த, இரண்டு கைப்பிடிகள் கொண்ட தங்கப் பாத்திரத்தில் நம் இருவரின் எலும்புகளும் சேர்ந்திருக்கட்டும்.'

விரைவுப் பாத அக்கிலிஸ் அவனுக்குப் பதில் சொன்னான்:

'என் உயிர் நண்பனே பெட்ரோக்குலஸ், எதற்காக நீ வந்து என்னிடம் இவ்விதம் வேண்டுகோள் விடுக்கிறாய்? நிச்சயமாக நான் நீ சொல்கின்ற அனைத்தையும் உன் விருப்பப்படியே நிறைவேற்றுவேன். இன்னும் கொஞ்சம் அருகில் வா, நாம் இருவரும் கைகோர்த்துக் கொள்ளலாம். அது கொஞ்ச நேரம்தான் என்றாலும் பரவாயில்லை. நமது கண்ணீர் நிச்சயம் கொஞ்சமாவது ஆறுதலளிக்கும்.'

இப்படிச் சொல்லிவிட்டுத் தன் கைகளை நீட்டினான் அக்கிலிஸ். ஆனால் அவனால் எதையும் தழுவ முடியவில்லை. தெளிவில் லாமல் எதையோ சொல்லிக் கொண்டு புகையைப் போல மறைந்து போனது பெட்ரோக்குலஸின் ஆவி. ஆச்சரியப்பட்டுப் போன அக்கிலிஸ் உடனே எழுந்து கொண்டான். தன் தனிமையை உணர்ந்து கொண்ட அவன் தன் கைளால் அடித்துக் கொண்டு கதறினான்.

'அப்படியானால் அது உண்மைதான்! எங்களுக்குள் இருக்கும் ஏதோ ஒன்று ஹயடிஸின் மண்டபத்தில் இன்னும் உயிரோடு இருக்கிறது. உண்மையான இருப்பற்ற ஏதோ ஓர் ஆவி. இரவு முழுவதும் பாவப்பட்ட பெட்ரோக்குலஸின் ஆவி அழுது கொண்டும் புலம்பிக் கொண்டும் என்னருகிலேயே நின்றிருந் திருக்கிறது. நான் என்ன செய்ய வேண்டும் என்று என்னிடம் அது சொன்னது. பார்ப்பதற்கு அருமையாக பெட்ரோக்குலஸைப் போலவே இருந்தது.'

இப்படி அவன் பேசியதைக் கேட்ட அனைவருக்கும் அழ வேண்டும் என்று தோன்றியது. ரோஜாநிற விரல் கொண்ட விடியல் வந்த போதும், இரக்கப்படத்தக்க இறந்தவனின் அருகில் அனைவரும் கண்ணீருடன் இருந்தனர்.

இதற்கிடையில் முகாமின் எல்லாப் பகுதியிலிருந்தும் ஆட்களை யும் கழுதைகளையும் விறகு கொண்டு வர அனுப்பினான் அகமெம்னன். நட்பு மிகுந்த இடொமீனியஸின் உதவியாளனான மெரியோனிஸ் இதற்குப் பொறுப்பேற்றுக் கொண்டான்.

கோடரிகளைக் கைகளில் ஏந்திச் சென்றனர் வீரர்கள். கூடவே நன்றாக முறுக்கப்பட்ட கயிறுகளையும் எடுத்துச் சென்றனர். அவர்களுக்கு முன்னால் சென்றன கோவேறு கழுதைகள். மலைப்பகுதியின் மேலும் கீழுமாக வளைந்து வளைந்து சென்ற பாதைகளைத் தாண்டிச் சென்ற அவர்கள், இறுதியாக ஏராளமான ஊற்றுகள் இருந்த அய்டா மலையின் கிளை மலைத்தொடருக்குப் போய்ச் சேர்ந்தனர். அங்கே உறுதியுடன் இருந்த கருவாலி மரங்களைக் கோடரிகளைக் கொண்டு வெட்ட ஆரம்பித்தனர்.

மரங்கள் ஓசையுடன் ஒடிந்து கீழே விழுந்தன. கீழே விழுந்த கிளைகளைத் துண்டுகளாக வெட்டி கழுதைகளின் மீது வைத்துக் கட்டினர் கிரேக்க வீரர்கள். கீழே, சமவெளிக்குச் செல்லும் ஆர்வத்தில் குளம்புகளால் உதைத்து உதைத்து, புதர் மண்டிக் கிடந்த நிலத்தைக் குழியாக்கிக் கொண்டிருந்தன கழுதைகள். நட்பு மிகுந்த இடொமீனியஸின் உதவியாளனான மெரியோனிஸின் உத்தரவின் பேரில், விறகு வெட்டிகளும் விறகுகளைச் சுமந்து சென்றனர். கடற்கரையை அடைந்த பிறகு, தனக்கும் பெட்ரோக்குலஸுக்கும் நினைவுக் கல்லறைகளை நிறுவ அக்கிலிஸ் தேர்ந்தெடுத்திருந்த இடத்தில் கொண்டுபோய் விறகுகளை வரிசையாக அடுக்கி வைத்தனர்.

நிறைய விறகுகளை வெட்டிக் கொண்டு வந்திருந்த அவர்கள் அனைவரும் அங்கே அமர்ந்து காத்திருந்தனர். அதன் பிறகு, தம் வெண்கலக் கவசங்களை அணிந்து கொள்ளும்படியும், ஒவ்வொரு தேரோட்டியும் குதிரைகளைத் தேர்களில் பூட்டும்படியும் மெர்மிடன்களுக்கு உத்தரவிட்டான் அக்கிலிஸ். உடனே வீரர்களனைவரும் விரைந்து சென்று கவச உடைகளை அணிந்து கொண்டனர்; குதிரைகளைத் தேர்களில் பூட்டி ஏறிக்கொண்டனர்; தேரோடிகள் விரைந்து சென்றனர். அவர்களின் பின்னால் காலாட்படை வந்தது. அதில் இருந்தவர் எத்தனை பேர் என்று எண்ண முடியாத அளவுக்கு இருந்தனர்.

இந்த ஊர்வலத்தின் மத்தியில் பெட்ரோக்குலஸை அவனது தோழர்கள் தூக்கி வந்தனர். அவர்கள் வெட்டிப் போட்ட தலை முடிகளால் அவனது உடல் மூடப்பட்டிருந்தது. அவர்களுக்குப் பின்னால், பெட்ரொக்குலஸின் தலையைத் தாங்கியபடி, துக்கப்பட்டுக் கொண்டே வந்தான், கடவுளையொத்த அக்கிலிஸ். தனது இணையற்ற தோழனை ஹயடிஸின் மண்டபத்துக்கு அனுப்பிக் கொண்டிருந்தான் அவன்.

அக்கிலிஸால் முடிவு செய்யப்பட்ட இடத்துக்கு அவர்கள் வந்து சேர்ந்தபோது, பெட்ரோக்குலஸின் உடலைக் கீழே வைத்தனர். தேவையான அளவு விறகுக் கட்டைகளை அவன் உடலைச் சுற்றி அடுக்க ஆரம்பித்தனர். அப்போது விரைவுப்பாத அக்கிலிஸுக்கு எண்ணம் தோன்றியது. சிதையிலிருந்து பின்னால் வந்த அவன் தன் செம்பொன் நிறத் தலைமுடியில் இருந்து கொஞ்சம் வெட்டி எடுத்தான். அவனது ஊரில் இருந்த ஸ்பெர்கியஸ் ஆற்றுக்கு நேர்ச்சை செய்து கொண்டதால் வெட்டப்படாமல் வளர்க்கப் பட்ட தலைமுடி அது. மதுவைப் போல் கருத்திருந்த அந்த இடத்தைப் பார்த்துக் கோபமாக அக்கிலிஸ் சொன்னான்:

'ஸ்பெர்கியஸ், என் தந்தை என் தலைமுடியை உனக்கு நேர்ச்சை செய்து பிரார்த்தித்து வளர்த்து விட்டதில் எந்த அர்த்தமும் இல்லை. நான் ட்ராய் நகரில் இருந்து திரும்பி வீடு வந்து சேரும் போது உன் கோயிலில் என் முடியை வெட்டிப் பலி கொடுக்க வேண்டும் என்றும், உனக்கு ஐம்பது செம்மறியாட்டுக் கடாக் களையும் உன் ஆற்றில் வைத்துப் பலி கொடுக்க வேண்டும் என்றும் அவர் வாக்களித்திருந்தார். அங்கேதான் உனக்கு ஓர் எல்லையும் புகை சூழ்ந்த பலிபீடமும் இருக்கிறது. அது எனது வயதான தந்தையின் பிரார்த்தனை. ஆனால் அவர் எதற்காக உன்னிடம் பிரார்த்தித்தாரோ அதை நீ நிறைவேற்றித் தரவில்லை. எனவே, இனிமேல் நான் என் தந்தையர் நாட்டை மறுபடியும் பார்க்கப் போவதில்லையாகையால், இந்த முடியை வெட்டி, பெட்ரோக்குலஸுக்குக் கொடுக்கிறேன். அதை அவன் தன்னோடு எடுத்துச் செல்லட்டும்.'

இப்படிச் சொல்லி விட்டுத் தன் தலைமுடியை, தன் உயிர் நண்பனின் கைகளில் வைத்தான். அது கூடியிருந்தவர்களை யெல்லாம் அழச்செய்தது. சூரிய அஸ்தமனம்வரைகூட அவர்கள் அழுது கொண்டிருந்திருப்பார்கள். ஆனால் உடனே எழுந்து அகமெம்னனைப் போய்ப்பார்த்த அக்கிலிஸ் சொன்னான்:

'அத்ரியூஸின் மகனே அகமெம்னன், நீ சொன்னால்தான் படை யினர் அனைவரும் கேட்பார்கள். அவர்கள் எவ்வளவு காலம் வேண்டுமானலும் விரும்பும்வரை துக்கம் அனுஷ்டிக்கலாம். ஆனால் இப்போதைக்கு, சிதையிலிருந்து அவர்களைப் போகச்சொல். போய் அவர்கள் உணவைத் தயார் செய்யட்டும். துக்கம் அனுஷ்டிப்பவர்களில் மிக முக்கியமானவர்களாகிய நாம் மற்ற விஷயங்களைக் கவனித்துக் கொள்ளலாம். ஆனால்

கிரேக்கத் தளபதிகள் அனைவரும் என்னோடு இருக்க வேண்டும் என்று நான் விரும்புகின்றேன்.'

மக்கள் தலைவனாகிய அகமெம்னன் அக்கிலிஸ் சொன்னதைக் கேட்டுவிட்டு உடனே வீரர்களையெல்லாம் கப்பல்களுக்குச் செல்லும்படி உத்தரவிட்டான். ஆனால் துக்கித்துக் கொண்டிருந் தவர்கள் மட்டும் விறகுகளை அடுக்கி வைத்துக்கொண்டு இருந்த இடத்திலேயே இருந்தார்கள். முப்பது மீட்டர் நீள அகலத்துக்கு, சிதையை அமைத்தார்கள். கனக்கும் உள்ளங்களுடன் பெட்ரோக் குலஸின் உடலை அதன் மீது வைத்தார்கள். சிதையின் கீழே பல கொழுத்த செம்மறியாடுகளையும், தாறுமாறான நடையும் வளைந்த கொம்புகளையும் கொண்ட கால்நடைகளையும் தோலுரித்துத் தயார் செய்து வைத்தார்கள். வீரம் மிக்க அக்கிலிஸ், அவற்றிலிருந்து கொழுப்பெடுத்து அதனால் பெட்ரோக்குலஸின் உடல் முழுதும் தலையிலிருந்து கால்வரை பரப்பினான். அதன் பின் தோலுரிக்கப்பட்ட மிருகங்களின் உடல்களை அவன் உடலைச் சுற்றிலும் குவித்து வைத்தான்.

ஆவியின் பயணத்தில் துணையாக இருக்கும் பொருட்டு, கைப்பிடிகள் கொண்ட இரண்டு ஜாடிகளில் தேனையும் எண்ணெயையும் ஊற்றி அவற்றைச் சவப்பெட்டியின் மீது தாங்கலாக வைத்தான். பின் மூர்க்கமான முறையில் உயர்ந்த கழுத்து கொண்ட நான்கு குதிரைகளைச் சிதையின் மீது எறிந்தான். அலறிக்கொண்டே அவை சிதையில் விழுந்தன. தலைவன் பெட்ரோக்குலஸ் ஒன்பது நாய்களைத் தன் பிரிய மிருகங்களாக வைத்திருந்தான். அவைகளில் இரண்டின் கழுத்தை அறுத்து அவற்றையும் சிதையின் மீது எறிந்தான் அக்கிலிஸ். பிறகு, ஏற்கெனவே போட்டு வைத்திருந்த கொலைத்திட்டத்தின்படி, பன்னிரண்டு உயர்குடி பிறந்த வீரம் மிக்க ட்ரோஜன் இளைஞர்களையும் கொன்று, எல்லாவற்றையும் விழுங்குமாறு இரக்கமற்ற தீயின் ஆற்றலை அவிழ்த்து விட்டான். இதை யெல்லாம் செய்துவிட்டு, வேதனையோடு ஒரு முனகலை வெளிப்படுத்திய அக்கிலிஸ் தனது உயிர்த் தோழனைப் பார்த்துப் பேசினான்:

'போய்வா, ஹயடிஸின் மண்டபங்களிலும் போய் இன்பமாக இரு பெட்ரோக்குலஸ். உனக்கு நான் செய்து கொடுத்த எல்லா வாக்குறுதிகளையும் இப்பொழுது நிறைவேற்றிக் கொண்டிருக் கிறேன். உயர்குடியில் பிறந்த வீரம் மிக்க ட்ரோஜன்களின்

பன்னிரண்டு மகன்கள் உன்னோடு சேர்ந்து ஒரே சிதையில் உண்ணப்படுவார்கள். ப்ரியத்தின் மகனான ஹெக்டருக்கு நான் வேறு திட்டங்கள் வைத்திருக்கிறேன். அவனை நான் தீக்கிரை யாக்க மாட்டேன். உணவாக அவனை நாய்களுக்குப் போடுவேன்.'

இவ்விதமாக அவன் அறைகூவல் விடுத்தான். ஆனால் ஹெக்டரின் உடலைச் சுற்றி நாய்கள் கூடவில்லை. இரவு பகலாக ஜீயூஸின் மகள் அஃப்ரோடைட்டி அவைகளை விரட்டிக் கொண்டிருந்தாள். அமிர்த ரோஜா எண்ணெயை அவனுடலில் தடவி வைத்தாள். அதன் காரணமாக, அக்கிலிஸால் ஹெக்டரின் உடலை மேலும் கீழும் இழுத்து வந்தபோதுகூட அவ்வுடலைக் கிழிக்க முடியவில்லை. அதோடு, ஒரு கருப்பு மேகத்தை வானத்திலிருந்து இறங்கி வந்து ஹெக்டரின் உடலில் சேர்ந்து கொள்ளுமாறு செய்தான் ஃபீபஸ் அப்போலோ. அதனால் ஏற்பட்ட, சூரிய வெப்பம் ஹெக்டரின் தசைநார்களையும் உடலுறுப்புகளையும் விரைவாகப் பாதிக்க முடியவில்லை.

பெட்ரோக்குலஸின் சிதை எரிய மறுத்தது. விரைவுப்பாத அக்கிலிஸுக்கு ஓர் எண்ணம் வந்தது. சிதையிலிருந்து தள்ளி நின்று கொண்டு, வடக்குக் காற்றான போரியாஸ், மேற்குக் காற்றான ஜெஃபையர் ஆகிய இரண்டு காற்றுகளிடமும் அவன் பிரார்த்தனை செய்தான். பிரம்மாண்டமான பலிப்பொருள் களைத் தருவதாகவும் வாக்களித்தான். பல பானப் படையல் களையும் கோப்பைக் கோப்பையாகத் தங்கக் கிண்ணத்தில் ஊற்றி பிரார்த்தித்து அவர்களை வரும்படி அழைத்தான். அப்போதுதான் விறகுக் கட்டைகள் எரிய ஆரம்பிக்கும். உடல்கள் விரைவில் தகனமாகும். அவனது பிரார்த்தனையைக் கேட்ட அய்ரிஸ் உடனே சென்று இரண்டு காற்றுகளிடமும் சொன்னாள். அப்போது அவர்களெல்லோரும் ஜெஃபையரின் காற்று வீச்சு அதிகமாக உள்ள வீட்டில் ஜெஃபையர் கொடுத்த விருந்தில் கலந்து கொண்டிருந்தார்கள். ஐரிஸ் ஓடிவந்து அவர்கள் வீட்டின் கல்லால் ஆன வாசலில் நின்றாள். அவர்கள் அவளைப் பார்த்தவுடன் எழுந்து வந்து அவளை உள்ளே அழைத்தனர். ஜெஃபையரின் அருகில் அமரும்படிக் கூறினர். ஆனால் அவர்கள் சொன்னதை மறுத்து விட்டு அவள் சொன்னாள்:

'உட்காருவதற்கெல்லாம் எனக்கு நேரமில்லை. ஆழ்கடலின் ஓடைகளுக்கும் எதியோப்பியர்களின் பூமிக்கும் நான் போக

வேண்டும். அங்கே அவர்கள் நித்தியர்களுக்காக ஒரு விருந்து கொடுத்துக் கொண்டுள்ளார்கள்.அதைத் தவற விட எனக்கு மனமில்லை. ஆனால் போரியாஸ், கர்ஜிக்கும் ஜெஃபையர், உங்கள் இருவரிடமும் அக்கிலிஸ் தன் பிரார்த்தனையை வைத்துக் கொண்டிருக்கிறான். நீங்கள் போய் பெட்ரோக்குலஸின் உடலுக்குக் கீழே இருக்கும் சிதையை எரியூட்டி விட்டால், பிரம்மாண்டமான பலிப்பொருள்களையும் தருவதாக வாக்களித் திருக்கிறான். பெட்ரோக்குலஸுக்காகத்தான் முழு கிரேக்கப் படையும் துக்கம் அனுஷ்டித்துக் கொண்டிருக்கிறது.'

இந்த வார்த்தைகளைச் சொல்லிவிட்டு அய்ரிஸ் போய்விட்டாள். அச்சமூட்டும் கர்ஜனையுடன் இரண்டு காற்றுகளும் தங்களுக்கு முன்பாக மேகங்களை விரட்டிக் கொண்டு எழுந்தனர். ஒரு கணத்தில் அவர்கள் கடலின் மீது இருந்தனர். அவர்கள் கடுமை யாக ஊதியதில் பேரலைகள் எழுந்தன. செழிப்பான ட்ராய் நகரப் பகுதிக்கு அவர்கள் வந்தபோது, ஈமச்சடங்கு சிதையில் பாய்ந்தனர். பயங்கரமானதொரு சப்தத்துடன் மேலெழுந்தது நெருப்பு. சிதையைச் சுற்றி ஊளையிட்டுக் கொண்டே இரவு முழுவதும் தீச்சுவாலைகளை விசிறி விட்டுக் கொண்டிருந்தனர் அவர்கள். இரவு முழுவதும் அக்கிலிஸ், தங்கத்தால் செய்யப் பட்ட மதுக்கலக்கும் கிண்ணத்தில் இருந்து மதுவை அள்ளி அள்ளி இரண்டு கைப்பிடிகள் கொண்ட ஒரு கோப்பையில் ஊற்றி அவர்களுக்குப் படைத்த வண்ணம் இருந்தான். மதுவால் நனைந்தது பூமி. பாவப்பட்ட பெட்ரோக்குலஸின் ஆன்மாவுக்கு என்று சொல்லிச் சொல்லி ஊற்றினான். புதிதாகத் திருமணமாகி இறந்து விட்ட தன் மகனின் எலும்புகளை எரித்துக் கொண்டிருக் கும் தந்தையைப் போல, ஆறுதல் சொல்ல முடியாதவாறு அக்கி லிஸ் வேதனைப்பட்டான். நண்பனின் எலும்புகளை எரித்துக் கொண்டே சிதையைச் சுற்றித் தன்னை இழுத்துக் கொண்டு வந்த அக்கிலிஸ் வேதனையில் முனகிக் கொண்டே வந்தான்.

விடியலின் நட்சத்திரம் புதிய நாளின் வரவைப் பூமிக்கு அறிவிக்க, குங்குமநிற ஆடை பூண்ட விடியல் கடலின் மீது பரவியபோது, தீ அணைந்தது. ஜுவாலைகள் அடங்கின. இரு காற்றுகளும், த்ரேசியக் கடலின் குறுக்கே பயணித்து அதன் அலைகளுக்குச் சாட்டையடி கொடுத்துக் கடலை கர்ஜிக்க வைத்து, அப்பா லிருந்த தங்கள் வீடுகளுக்குத் திரும்பின. அக்கிலிஸ் களைத்து விட்டிருந்தான். சிதையிலிருந்து திரும்பிய அவன் தரையில்

விழுந்தான். இனிய உறக்கம் அவனை ஆட்கொண்டது. ஆனால் அகமெம்னனின் கீழிருந்த மற்ற தளபதிகள் இப்பொழுது அவனைச் சுற்றிச் சூழ்ந்தனர். அவர்களது குரல்களையும் காலடிச் சப்தங்களையும் கேட்டு விழிப்புற்ற அக்கிலிஸ் எழுந்து உட்கார்ந்து தன் மனத்தில் உள்ளதைச் சொன்னான்:

'அகமெம்னனே, கூடியிருக்கின்ற மற்ற கிரேக்கத் தலைவர்களே, இன்னும் எரிந்து கொண்டிருக்கின்ற தீயின் மீது முதலில் மதுவை ஊற்றி அணையுங்கள். அதன்பிறகு நாம் பெட்ரோக்குலஸின் எலும்புகளைச் சேகரிக்க வேண்டும். அவற்றில் எது எது யாருடைய எலும்பென்று கவனமாக அடையாளம் காண வேண்டும். அது ஒன்றும் கஷ்டமான காரியமல்ல. மற்றவர்களிட மிருந்து தனியாக, சிதையின் நடுவில் அவன் வைக்கப்பட்டிருந் தான். குதிரைகளோடு சேர்த்து மற்றவர்களெல்லாம் சிதையில் ஓரத்தில் வைத்து எரிக்கப்பட்டார்கள். சேகரித்த எலும்புகளை யெல்லாம் ஒரு கொழுப்பு மடிப்பில் வைத்து பாதுகாப்பாகச் சுற்ற வேண்டும். அதை ஒரு தங்கக் குடுவைக்குள் வைக்க வேண்டும். அப்போதுதான், நான் இறந்து பாதாள உலகுக்குச் சென்ற பிறகும்கூட, அவ்வெலும்புகள் காலத்தால் அழியாமல் இருக்கும். அவனுக்கான கல்லறை மேடையைப் பொறுத்த வரை, பெரியதாகக் கட்ட வேண்டாம் என்று நான் உங்களைக் கேட்டுக் கொள்கிறேன். ரொம்பப் பெரியதாகவும் ரொம்ப சின்னதாகவும் இல்லாமலிருந்தால் நல்லது. நான் போனபிறகு, கப்பல்களில் மிஞ்சியிருக்கும் கிரேக்கர்களாகிய நீங்கள் ஒரு பெரிய நினைவுச் சின்னத்தைக் கட்டிக் கொள்ளலாம்.'

அக்கிலிஸ் அப்படிச் சொன்னதும் அவர்கள் அவன் சொன்ன படியே செய்தார்கள். இன்னும் எரிந்து கொண்டிருக்கின்ற தீயின் மீது முதலில் மின்னும் மதுவை ஊற்றி அணைத்தார்கள். நிறைய சாம்பல் கொட்டியது. அதன்பிறகு அழுதுகொண்டே மென்மை யான அந்தத் தோழனின் வெள்ளை எலும்புகளை ஒரு தங்கப் பாத்திரத்தில் சேகரித்தார்கள். பின் அந்த எலும்புகளையெல்லாம் ஒரு கொழுப்பு மடிப்பில் வைத்து பாதுகாப்பாகச் சுற்றினார்கள். அந்தப் பாத்திரத்தை அவனது பாசறையில் கொண்டு போய் அருமையான சணல் நார்த்துணியால் மூடி வைத்தார்கள். கல்லறை மேட்டை உருவாக்குவதற்காக, சிதையைச் சுற்றி ஒரு வட்டம் வரைந்தார்கள். அதைச் சுற்றி அஸ்திவாரமாகக் கற்களை அடுக்கி வைத்தார்கள். பின் மணலைக் கொண்டு வந்து அதன் மீது போட்டு அதை உயர்த்தினார்கள்.

நினைவுச் சின்னம் கட்டி முடித்த பிறகு, படையினர் கிளம்பிப் போகத்தொடங்கினர். ஆனால் பெட்ரோக்குலஸின் ஈமச்சடங்கு விளையாட்டுகளைத் தொடங்குவதற்காக, அக்கிலிஸ் அவர்களை நிறுத்தி உட்கார வைத்தான். இவர்களுக்காகப் பரிசுப் பொருள்களைக் கப்பல்களிலிலிருந்து அவன் கொண்டு வந்தான்

கொப்பரைகள், முக்காலிகள், குதிரைகள், கழுதைகள், அருமையான ஆட்டு மந்தை, பழுப்பு இரும்பு, கச்சென ஒட்டியாணம் அணிந்த பெண்கள்.

முதல் நிகழ்ச்சி தேர்களின் ஓட்டப் பந்தயம். அதற்காக அவன் அருமையான பரிசுகளை வைத்திருந்தான். ஜெயிப்பவர் கலை களிலும் கைவினைத் தொழிலிலும் சிறந்த ஒரு பெண்ணையும், இருபத்திரண்டு என்ற அளவு பிடிக்கும், கைப்பிடிகள் கொண்ட ஒரு முக்காலியையும் பெற்றுக் கொள்ளலாம். இரண்டாவதாக வருபவர்களுக்கு ஆறு வயதான ஒரு பெண்குதிரை மற்றும் குழந்தையாக இருக்கும் ஒரு கோவேறு கழுதை. மூன்றாவதாக வருபர்களுக்கு நான்கு அளவுகள் கொண்ட தீயால் சுட்டு அசுத்தப்படுத்தப்படாத ஒரு கொப்பரை. நான்காவதாக வருபவர்களுக்கு இரண்டு டாலண்ட்டுகள் தங்கம். ஐந்தாவதாக வருபவர்களுக்கு இரண்டு கைப்பிடிகள் கொண்ட தீபடாத ஒரு அகன்ற தட்டு. அக்கிலிஸ் எழுந்து நின்று கிரேக்கர்களைப் பார்த்துக் கூறினான்:

‘அகமெம்னன், மற்றும் இங்குள்ள ஆயுதம் தரித்த கிரேக்க வீரர்களே, இந்தத் தேரோட்டும் போட்டியில் கலந்துகொள்ளப் போகின்றவர்களுக்காகக் காத்திருக்கும் பரிசுகள் இவை. வேறு யாராவது ஒரு வீரனை கௌரவிப்பதற்காக கிரேக்கர்கள் இப்படியொரு போட்டியில் கலந்துகொள்வார்களேயானால், முதல் பரிசை வாங்கிக் கொண்டு நான் என் பாசறைக்குப் போயிருப்பேன். என் குதிரைகள் உங்களதைவிட எவ்வளவு மேன்மையானவை என்று என்னிடம் நீங்கள் சொல்லத் தேவையில்லை. அவைகள் நித்தியக் குதிரைகள். கடவுள் பொசைடனால் என் தந்தை பீலியூஸுக்குக் கொடுக்கப்பட்டு பின் அவர் மூலமாக எனக்கு வந்தவை.

ஆனால் இந்தப் போட்டியில் நானும் என் குதிரைகளும் கலந்து கொள்ளப் போவதில்லை. ஒரு மாபெரும் தேரோட்டியை அவை இழந்திருக்கின்றன. பெட்ரோக்குலஸ்தான் அவைகளிடம் எவ்வளவு அன்பாக இருப்பான்! எப்போதுமே அவைகளைச்

சுத்தமான நீரில் கழுவி, அவற்றின் பிடரிகளை ஒலிவ எண்ணெயால் நீவி விடுவான். அக்குதிரைகள் அங்கே நின்று அவனுக்காகத் துக்கப்படுவதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. அவைகளின் பிடரி மயிர்கள் தரையில் புரள்கின்றன. அவை நகர மறுக்கின்றன. சரி, தனது குதிரைகளின்மீதும் நன்றாகக் கட்டமைக்கப்பட்ட தேரின்மீதும் நம்பிக்கை கொண்ட கிரேக்கன் யாராவது இந்தப் படையில் இருந்தால் அவன் முன்னே வரலாம்.'

பீலியூஸின் மகனான அக்கிலிஸ் இவ்விதம் கூறியதும் விரைவாகச் செல்லும் தேரோட்டிகள் அனைவரும் ஒரு குழுவாகக் கூடினர். முதலில் வந்தது வீரர்களின் தலைவனும் அட்மீட்டஸின் மகனுமான யுமீலியஸ். அவன் ஒரு அருமையான குதிரையேற்ற வீரன். அடுத்ததாக, டைடியூஸின் மகனான ஆற்றல்மிகு டயமீடிஸ் வந்தான். அப்போலோ ஈனியாஸின் உயிரைக் காப்பாற்றியபோது, ஈனியாஸிடமிருந்து அவன் பெற்ற த்ராஸ் ரகக் குதிரைகள் அவை. அவைகளைத்தான் அவன் தன் தேரில் பூட்டியிருந்தான். அடுத்து வந்தான் ஒலிம்பஸ் மலையில் பிறந்த அத்ரியூஸின் மகனான மெனிலயஸ். தன் தேரில் அவன் இரு விரைவுக் குதிரைகளைப் பூட்டியிருந்தான். ஒன்று அகமெம்னனின் குதிரையான ஈத்தி. இன்னொன்று அவனுடைய குதிரையான பொடார்கஸ். குதிரை ஈத்தியை அகமெம்னனுக்குப் பரிசாக ஆன்க்கைசஸின் மகனான ஈக்கிபோலஸ் கொடுத்திருந் தான். அகமெம்னனோடு காற்றடிக்கும் இலியம் நகருக்கு வரமாட்டேன் என்றும், தனது ஊரிலேயே வசதியாகத் தங்கப் போவதாகவும், அதற்கு அகமெம்னன் ஒப்புக்கொள்வதானால் மட்டும் ஈத்தியைப் பரிசாகப் பெறலாமென்ற நிபந்தனையில் அவன் கொடுத்திருந்தான்.

ஜீயூஸ் அவனுக்கு ஏராளமான செல்வத்தைக் கொடுத்திருந்தான். விசாலமான சியான் நகரில் அவன் வாழ்ந்தான். அந்தக் குதிரையைத்தான் மெனிலயஸ் தேரில் பூட்டினான். அசை போட்டுக் கொண்டே கிளம்பத் தயாராக நின்றது அது. நான்காவதாக அழகிய பிடரிகள் கொண்ட தனது குதிரைகளைச் செலுத்தத் தயாராக இருந்தவன் ஆன்ட்டிலோக்கஸ். அவன் நீலியூஸின் மகனான வீரம் செறிந்த நெஸ்டரின் கீர்த்திமிகு மகனாவான். அவனது தேர்க்குதிரைகள் பைலோஸ் நகரத்தில் வளர்த்துப் பயிற்சி கொடுக்கப்பட்டவை. தான் ஈடுபடப் போகும் காரியம் பற்றி ஆன்ட்டிலோக்கஸுக்கே நன்றாகத் தெரியும்

என்றாலும், அவனுடைய தந்தை நெஸ்டர் தன் மகனருகில் சென்று நல்லெண்ணத்தோடு சொன்னான்:

'ஆன்ட்டிலோக்கஸ், நீ அனுபவம் குறைந்த இளைஞன். ஜீயூஸும் பொசைடனும் உன் பக்கமிருக்கின்றனர். குதிரைகளை ஓட்டுவது பற்றிய எல்லாப் பயிற்சிகளையும் அவர்கள் உனக்கு சொல்லிக் கொடுத்திருக்கிறார்கள். எனவே அதற்கு மேலாக நான் உனக்குச் சொல்லிக் கொடுக்க வேண்டும் என்ற அவசியம் ஏதுமில்லை. நீ குதிரை ஓட்டுவதில் நிபுணன்தான். ஆனால் திருப்பு முனைகளில் கவனம் தேவை. அங்கே உன் குதிரைகள் மெல்லச் செல்லும். அது மோசமான விளைவுகளை ஏற்படுத்த லாம். மற்ற குதிரைகள் உன்னதைவிட வேகமாகச் சென்றாலும், அந்தத் தேரோட்டிகளுக்கெல்லாம் இல்லாத முன்யோசனையும் கூர்மதியும் உனக்கு உள்ளது. எனவே பரிசுப்பொருள்களுக்குக் கையசைத்து வழியனுப்ப நீ விரும்பவில்லையெனில், உன் கூர்மதியை நம்ப வேண்டும் மகனே. ஒரு சிறந்த மரம் வெட்டியை உருவாக்குவது உடலுறுதியைவிட அதிகமாக அவனுடைய புத்திசாலித்தனம்தான்.

மதுவைப் போலக் கருத்தக் கடலில், புயல் காற்றால் கப்பல் அலைக்கழிக்கப் படும்போது, அதை நேராகச் செலுத்திக் காப் பாற்றுவதும் மாலுமியின் பகுத்தறிவுதான். அதே புத்திசாலித் தனத்தைக் கொண்டுதான் ஒரு தேரோட்டியை இன்னொருவன் வெற்றி கொள்கிறான். முட்டாள்தனமாக, தேர்போகும் போக்கில் விட்டுவிட்டு, திருப்பங்களில் சரியான வழியைத் தேர்தெடுக்காவிட்டால், குதிரைகள் இங்குமங்கும் அலையும். அவைகளைக் கட்டுப் படுத்த அவனால் முடியாது. ஆனால் ஒரு புத்திசாலியான தேரோட்டி, தன் குதிரைகள் எதிர்பார்த்த அளவு வேகமாகச் செல்லாவிட்டாலும், தன் விழிகளை வெற்றிக் கம்பத்தின்மீதே வைத்திருப்பான். அந்த இடம் வந்ததும் சரியாகத் திருப்பி விடுவான். எருதுத் தோலால் செய்யப்பட்ட கடிவாளங் களை எப்போது பயன்படுத்த வேண்டும் என்று அவனுக்குத் தெரியும். உறுதியாகத் தன் கைகளால் அவைகளை அவன் பிடித்துக் கொண்டிருப்பான். தனக்கு முன்னால் இருப்பவனைக் கவனித்துக்கொண்டே இருப்பான்.

இப்பொழுது நான் காட்டப் போவதைக் கவனமாகப் பார்த்துக் கொள். அது மிகவும் வெளிப்படையானது. அதை நீ பார்க்கத் தவறவே முடியாது. கிட்டத்தட்ட இரண்டு மீட்டர் உயரத்துக்கு

அங்கே ஒரு செத்துப்போன மரத்தின் அடிக்கட்டை, அது கருவாலி மரமோ தேவதாரு மரமோ தெரியவில்லை, இருக்கிறது. அது மழையில் இன்னும் உளுத்துப் போகவில்லை. அதன் இரு பக்கமும் இரண்டு வெள்ளைக் கற்கள் உள்ளன. ஓடுதளம் அந்த இடத்தில் சுருங்கும். ஆனால் அந்த நினைவுச் சின்னத்தின் இருபக்கங்களிலும் போவது எளிதாக இருக்கும். அது பண்டைக்காலத்தில் யாரையாவது புதைத்த இடமாக இருக்கலாம். அல்லது இதற்கு முன் அங்கு வாழ்ந்த மக்களால் திருப்பத்தைக் குறிக்கும் ஒரு கம்பமாக அமைக்கபட்டிருக்கலாம்.

'எப்படியிருந்தாலும் சரி, அந்த இடத்தைத்தான் தேரோட்டும் பந்தயத்துக்கான திருப்பு முனையாக கடவுளையொத்த விரைவுப்பாத அக்கிலிஸ் குறித்து வைத்திருக்கிறான். அதைச் சுற்றி நீ ஓட்டிவரும்போது, உன் குதிரைகளை அதற்கு நெருக்கமாக இருக்குமாறு வைத்துக்கொள். உனது தேரில் சற்றே இடது பக்கமாகச் சாய்ந்துகொள். உனக்கு வெளியில் உள்ள குதிரையை உன் சாட்டையால் தட்டி, கடிவாளத்தை விட்டுக்கொடு. ஆனால் சற்று உள்ளடங்கியிருக்கும் குதிரை கம்பத்தின் அருகில் அணைத்தவாறு செல்லவேண்டும். உன் தேர்ச்சக்கரத்தின் குடம் அதை உரசிச்செல்லுமாறு இருந்தாலும் நல்லது. ஆனால் அந்தக் கல்லைத்தொடுவதைத் தவிர்த்துக்கொள். ஏனெனில் அது உன் குதிரையைக் காயப்படுத்தலாம். உன் தேரையும் கவிழ்த்து விடலாம். அப்படி நடந்தால் மற்றவர்களுக்கு அது சந்தோஷமான காட்சியாக இருக்கலாம். ஆனால் உன் அந்தஸ்துக்கு அது ஏற்றதல்ல.

எனவே என்னருமை மகனே, உன் புத்தியைப் பயன்படுத்து. விழிப்புணர்வுடன் இரு. திருப்பு முனையில் நீ அவர்களை முந்திக் கொண்டு போய்விட்டால் போதும், யாராலும் உன்னைப் பிடிக்க முடியாது. உன்னைத் திடீரெனத் தாண்டியும் போகமுடியாது. உன் பின்னால் வருபவன் அட்ரிஸ்டஸின் விரைவுக் குதிரையான கடவுளால் கொடுக்கப்பட்ட தெய்வீக ஆரியனில் ஏறிவந்தாலும் சரி. அல்லது ட்ராய் நகரிலேயே தலைசிறந்த லாமிடானின் குதிரைகளில் வந்தாலும் சரி.'

போட்டி பற்றிய மிகமுக்கியமான தகவல்களை தன் மகனுக்கு விளக்கிச் சொல்லிவிட்டுத் தன் இருக்கையில் போய் அமர்ந்தான் நீலியூஸின் மகனான நெஸ்டர்.

ஐந்தாவதாக அழகிய பிடரிகளைக் கொண்ட தன் குதிரைகளைத் தயாராக வைத்திருந்தான் மெரியோனிஸ். இப்பொழுது அனை வரும் தேர்களில் ஏறிக்கொண்டு ஒரு தொப்பியில் திருவுளச் சீட்டுக்களைப் போட்டுப் பார்த்தனர். அதை அக்கிலிஸ் குலுக்கி எடுத்தான். முதல் முதலாக வெளிவந்தது நெஸ்டரின் மகனான ஆன்ட்டிலோக்கஸின் பெயர். அதன் பிறகு தலைவன் யுமீலிய ஸின் பெயர், அவனையடுத்து அத்ரியூஸின் மகனான மகா ஈட்டியெறி வீரன் மெனிலயஸின் பெயர் வந்தது. நான்காவதாகத் தொடங்கும் இடத்தில் மெரியோனிஸின் பெயர் வந்தது. கடைசி இடம் டயமீடிஸுக்கு வந்தது. ஆனால் அவர்களனைவரிலும் சிறந்த தேரோட்டி அவன்தான். அவர்கள் அனைவரும் அருகரு கில் தயாராக நின்றார்கள். திருப்பு முனைக்கம்பம் எது என்பதை அக்கிலிஸ் சுட்டிக் காட்டினான். அது சமவெளியிலிருந்து வெகு தூரத்தில் தெரிந்தது. பந்தயத்தில் நடப்பவற்றையெல்லாம் பற்றிய தகவல்களைச் சொல்வதற்கு, தன் தந்தையின் உதவியாள னாகிய ஃபீனிக்ஸை ஆட்ட நடுவராக அந்த இடத்தில் நிற்கும்படி நியமித்திருந்தான்.

உடனே அனைவரும் சாட்டைகளைச் சொடுக்கி, கடிவாளங் களைச் சற்றுப் பின்னோக்கி இழுத்து, உரைக்கும் உத்தரவுகள் கொடுத்துக் குதிரைகளைச் செலுத்தினர். விரைவிலேயே கப்பல்களையெல்லாம் பின் தங்கவைத்துச் சமவெளியில் பறந்து சென்றன குதிரைகள். புரவிகள் கிளப்பிய புழுதி ஒரு புயல் மேகத்தை அல்லது மூடுபனி மூட்டத்தைப் போலக் காற்றில் கவிந்து நின்றது. அவைகளின் பிடரிகள் காற்றில் பின்பக்கமாக அலைந்தன. ஒரு கணம் தேர்கள் வள்ளல் தன்மை கொண்ட பூமியிலும் மறுகணம் வானத்திலும் இருப்பதுபோல் தோன்றின. தேரோட்டிகள் எழுந்து நின்ற வண்ணம் இருந்தார்கள். ஒவ்வொருவரின் இதயமும் வெற்றி மீது கொண்ட ஆசையினால் வேகமாகத் துடித்தது. ஒவ்வொருவரும் தங்கள் குதிரைகளை சப்தம் கொடுத்து விரட்டினார்கள். புழுதி மேகத்துக்கு மத்தியில் பறந்து சென்று கொண்டிருந்தன குதிரைகள்.

ஆனால் நீலக்கடலை ஒட்டியிருந்த ஓடுதளத்தின் இறுதி எல்லை வரைக்கும் குதிரைகள் வந்தபிறகுதான் ஒவ்வொரு தேரோட்டி யும் தன் திறமையைக் காட்ட ஆரம்பித்தான். இப்பொழுது யுமீலியஸின் விரைவுக் குதிரைகள் முன்னே சென்றன. ஆனால் அவனுக்கு மிக அருகிலேயே டயமீடிசின் த்ராஸ் ரகக் குதிரைகள்

வந்தன. எந்த நேரத்திலும் யுமீலியஸின் தேருக்குள் குதித்து விடுவன போலிருந்தன அவைகள். அவனது தலைக்குச் சற்று மேலே இருந்தன அவைகளின் தலைகள். தங்கள் மூச்சுக்காற்றால் யுமீலியஸின் முதுகுப் பக்கத்துக்கும் அகன்ற தோள்களுக்கும் சூடேற்றிக் கொண்டிருந்தன. டைடியூஸின் மகனான அவன்மீது கோபம் தணியாத ஃபீபஸ் அப்போலோ மட்டும் அவன் கையிலிருந்த சாட்டையைப் பிடுங்கிக் கீழே போடாமலிருந் தால், அப்போதே யுமீலியஸின் தேரை டயமீடிஸ் முந்தி யிருப்பான். யுமீலியஸின் குதிரைகள் தன் குதிரைகளை முந்திக் கொண்டு போவதையும், சாட்டையில்லாததினால் தன் குதிரைகள் வேகம் குறைந்து பின்தங்கியதையும் பார்த்த டயமீடிஸின் கண்களில் கண்ணீர் வழிந்தோடியது.

ஆனால் அப்போலோவால் சாட்டையை எடுத்துக்கொண்டு போக முடியவில்லை. டயமீடிஸின் முயற்சிகளை அப்போலோ கெடுப்பதை அதீனி பார்த்தாள். அந்த மக்கள் மேய்ப்பனை நோக்கி விரைவாக வந்த அவள் அவனுடைய சாட்டையை எடுத்து அவனிடம் கொடுத்தாள். அவனுடைய குதிரைகளுக்குப் புதிய உத்வேகத்தைக் கொடுத்தாள். கோபத்தில் யுமீலியஸைத் துரத்திக் கொண்டு சென்ற அவள், ஒரு தேவதையான தன் சக்திகளைப் பயன்படுத்தி அவனது தேரின் நுகத்தடியை உடைத்து நொறுக்கினாள். குதிரைகள் தேரைவிட்டு சுதந்திரமாக வெளியே ஓடின. நடுக்கம்பம் தரையில் விழுந்தது. யுமீலியஸ் தேரிலிருந்து தூக்கி எறியப்பட்டுச் சக்கரங்களின் அருகில் வந்து விழுந்தான். அவனுடைய முழங்கை, வாய், மூக்கு ஆகியவற்றின் மேல்தோல் பிய்ந்து வந்தது. அவனுடைய நெற்றி காயமடைந்தது. அவனு டைய கண்கள் கண்ணீரால் நிறைந்திருந்தன. வார்த்தைகள் தொண்டையிலேயே சிக்கிக் கொண்டன. எல்லாம் நாசமாகிக் கிடந்த அந்த இடத்தைத் தாண்டித் தன் குதிரைகளைத் திருப்பினான் டயமீடிஸ். மற்ற போட்டியாளர்களனைவரும் ரொம்ப பின்தங்கியிருந்தார்கள். அவனுடைய குதிரைகளுக்கு, சக்தியைக் கொடுத்து அவனது வெற்றியை உறுதிப் படுத்தினாள் அதீனி.

டயமீடிஸுக்கு அடுத்ததாக வந்து கொண்டிருந்தான் அத்ரியூஸின் மகனான, செம்பொன் நிறத்தலைமுடி கொண்ட மெனிலயஸ். அவனைத் தொடர்ந்து தன் தந்தையின் குதிரைகளைக் கத்தி விரட்டிக்கொண்டே வந்தான் ஆன்ட்டிலோக்கஸ்:

'ஓடுங்கள், ஓடுங்கள் இருவரும்! முழு சக்தியையும் கொடுத்து ஓடுங்கள். போர்த்திறம் மிக்க டயமீடிஸின் குதிரைகளைப் போய் பிடியுங்கள் என்று நான் உங்களைக் கேட்கவில்லை. இப்பொழுது தான் அவைகளுக்கு அதீனி புதிய வேகமும் டயமீடிஸுக்குக் கீர்த்தியும் கொடுத்திருக்கிறாள். ஆனால் சீக்கிரமாக ஓடி மெனிலயஸின் குதிரைகளைப் பிடியுங்கள். அவைகளுக்குப் பின்னால் போய்விட வேண்டாம். சீக்கிரம்! இல்லையெனில் ஈத்தி குதிரை உங்களையெல்லாம் ஏளனம் செய்ய ஆரம்பித்து விடும். அதுவும் ஒரு பெண்குதிரை! ஏன் பின்தங்கியிருக்கிறீர்கள் என்னருமைப் புரவிகளே? தெளிவாக ஒளிவுமறைவின்றிச் சொல்கிறேன் கேளுங்கள்.

'இப்படிச் செய்வீர்களேயானால் நெஸ்டரின் அன்பான கவனிப்பு உங்களுக்கு நிச்சயம் கிடைக்காது ஆமாம். ரொம்ப இலகுவாக எடுத்துக்கொண்டு முதல் பரிசைக் கோட்டைவிட்டுவிட்டு இரண்டாம்தர மூன்றாம்தரப் பரிசுகளைப் பெறுவீர்களேயானால், தயக்கமின்றி உங்கள் கழுத்துக்களை நெஸ்டர் அறுத்துவிடுவார். எனவே சீக்கிரமாகத் துரத்திப் பிடியுங்கள். எங்காவது குறுகலான ஒடுதளம் வரும்போது மெனிலயஸைத் தாண்டிவிடலாம், என்னை நம்புங்கள். என் வாய்ப்பை நான் நழுவ விடமாட்டேன்.'

அப்படி அவன் பேசிதும், தம் எஜமானனின் அச்சுறுத்தும் வார்த்தைகளை நெஞ்சில் போட்டுக்கொண்ட குதிரைகளும் கொஞ்ச நேரம் வேகம் எடுத்து ஓடின.

விரைவிலேயே ஓடுதளம் உள் புதைந்து குறுகலாகிப் போன ஒரு இடத்தைப் பார்த்தான் ஆன்ட்டிலோக்கஸ். ஒரு நீர் வடிகாலின் வழியாக அது சென்றது. சேர்ந்திருந்த குளிர்காலத்து மழைநீரால் அதன் ஒரு பகுதி அடித்துச் செல்லப்பட்டு முழு பாதையையும் ஆழமாக்கிவிட்டிருந்தது. மற்றவர்கள் அவனைப் பின்தொடர்ந்து வருவதைக் கடினமாக்கி, அதன் வழியாகத் தான் போக முயன்று கொண்டிருந்தான் மெனிலயஸ். ஆனால் ஆன்ட்டிலோக்கஸ் விடவில்லை. அந்த வழியை விட்டு விலகி, அதற்குப் பக்கத் திலேயே சென்று கொண்டிருந்த இன்னொரு சிறிய பாதை வழியாக அவனைத் தொடர்ந்து விரட்டினான். அதைப்பார்த்து அதிர்ந்த மெனிலயஸ் அவனைப் பார்த்துக் கத்தினான்:

'ஆன்ட்டிலோக்கஸ், இது முட்டாள்தனம். வேகத்தைக் குறைத்துக் கொள். ஓடுதளம் இங்கே குறுகலாக உள்ளது. கொஞ்ச தூரம்

போனால் நிறைய இடம் கிடைக்கும். என் தேரை இடிக்காமல் போ. இல்லையெனில் நம் இருவரின் முயற்சிகளுமே கெட்டுப்போய்விடலாம்.'

அவன் அப்படிச் சொன்னது காதில் விழாத மாதிரி இருந்த ஆன்ட்டிலோக்கஸ், குதிரைகளை இன்னும் வேகமாகச் செலுத்தினான். ஒரு இளைஞன் தன் பலத்தை சோதிப்பதற்காக, சுழற்றி எறியும் எறிவட்டு, போய் விழும் தூரம் எவ்வளவோ அவ்வளவு தூரத்துக்கு இருவரும் குதிரைகளை ஓட்டிச் சென்றனர். அதன் பிறகு மெனிலயஸின் குதிரைகள் வழிவிட்டுப் பின்தங்கிவிட்டன. வேண்டுமென்றே மெனிலயஸ் வேகத்தைக் குறைத்தான். இல்லையெனில் குதிரைகள் ஓடுதளத்தில் மோதிக் கொண்டு தேரில் தடுக்கி விழுந்துவிடலாம் என்று அவன் அஞ்சினான். அப்படி நடந்தால், எஜமானர்களாகிய இருவரும், வெற்றியைத்தான் விரும்புபவர்களாயினும், மண்ணைக் கவ்வ வேண்டி வரும். செம்பொன் நிறத் தலைமுடி கொண்ட மெனிலயஸ் ஆன்ட்டிலோக்கஸை உரத்த குரலில் திட்டினான்:

'ஆன்ட்டிலோக்கஸ், இந்த உலகத்திலேயே மிக அதிர்ச்சி யூட்டுகின்ற தேரோட்டி நீதான். நீ நாசமாய்ப் போக! உனக்கு அறிவிருக்கலாம் என்று எண்ணியது கிரேக்கர்களாகிய எங்களின் தவறு. இப்படிச் செய்வதற்காகப் பதில் சொல்லும்வரை நீ பரிசு பெறமுடியாது.'

இப்படித் திட்டிவிட்டுத் தன் குதிரைகளிடம் சொன்னான் மெனிலயஸ்:

'பின் தங்க வேண்டாம். என்னடா இப்படிச் செய்துவிட்டோமே என்று நினைத்துக்கொண்டே நிற்க வேண்டாம். உங்களுக்கு முன் போய்க்கொண்டிருக்கும் அந்த ஜோடிக்குதிரைகள் உங்களுக்கு முன்பே களைத்துவிடும். அவைகள் முன் இருந்ததுபோல இப்பொழுது இளமையாக இல்லை.'

அவன் அப்படிச் சொன்னதும், தன் எஜமானனின் வார்த்தைகளை மனத்தில் போட்டுக் கொண்ட அக்குதிரைகள் புத்துணர்ச்சியுடன் இன்னும் வேகமாக ஓடி அக்குதிரைகளுக்கும் தங்களுக்கும் இடையில் இருந்த இடைவெளியை நிரப்பின.

இதற்கிடையில் தங்களுக்கான இடங்களில் இருந்து கொண்டு இருந்த கிரேக்கர்கள் புழுதி கிளப்பிப் பறந்து வரும் குதிரை

களைப் பார்த்து ரசித்துக் கொண்டிருந்தனர். க்ரீட்டர்களின் தலைவனாகிய இடொமீனியஸ்தான் அவர்களை முதலில் பார்த்தான். கும்பலுக்கு வெளியே எல்லாருக்கும் மேலே அவன்தான் உட்கார்ந்திருந்தான். ஒரு தேரோட்டி தன் குதிரையை விரட்டினால், அங்கே உட்கார்ந்து கொண்டே இடொமீடியஸால் அவன் குரலைக் கேட்க முடிந்தது. முன்னே வந்து கொண்டிருந்த குதிரைகளில் ஒன்றையும் அவன் அடையாளம் கண்டு கொண்டான். அந்தக் குதிரை உடல் முழுவதும் தவிட்டு நிறத்தில் இருந்தது. அதன் நெற்றியில் மட்டும் பூரண சந்திரன் மாதிரி ஒரு வட்டம் இருந்தது. இடொமீனியஸ் எழுந்து நின்று கிரேக்கர் களைப் பார்த்துக் கூறினான்:

'நண்பர்களே, ஆட்சியாளர்களே, கிரேக்கத் தலைவர்களே, அந்தக் குதிரையை நான் மட்டும்தான் பார்க்கிறேனா அல்லது நீங்களுமா? ஒரு புது ஜோடி முன்னால் வருவது போலத் தெரிகிறது. தேரோட்டிகூட வித்தியாசமாக இருக்கிறான். முதல் சுற்றில் முன்னே வந்து கொண்டிருந்த யுமீலியஸின் குதிரைகள் நிச்சயம் துன்பப் பட்டிருக்க வேண்டும். திருப்புமுனையில் அவைகள் முன்னே வந்து கொண்டிருந்ததை நான் பார்த்தேன். ஆனால் இப்பொழுது அவைகளை எங்குமே காண முடிய வில்லை. ட்ரோஜன் சமவெளி முழுவதும் நான் தேடிப்பார்த்தும் விட்டேன். ஒருவேளை யுமீலியஸ் கடிவாளங்களை விட்டிருக் கலாம். திருப்பக் கம்பத்தில் குதிரைகளைக் கட்டுப்படுத்த முடியாமல் போய் அந்த சுற்றை அவனால் முடிக்க முடியாமல் போயிருக்கலாம். ஆமால், அங்கேதான் அவன் விழுந்திருக்க வேண்டும். அவன் தேரும் தரையில் மோதி உடைந்திருக்க வேண்டும். குதிரைகள் மட்டும் வெளியே வந்து வெருண் டோடிப்போயிருக்க வேண்டும். ஆனால் நீங்கள் யாரும் எழுந்து நின்று பார்க்க வேண்டாம். என்னால் நிச்சயமாகச் சொல்ல முடியவில்லை. ஆனால் முன்னே வருபவன் ஒரு ஈட்டோலியன் மாதிரித் தெரிகிறது. ஆமாம், கிரேக்கத் தலைவர்களில் ஒருவன் தான். ஆஹா, குதிரைகளை அடக்குவதில் வல்ல டைடியூஸின் மகன் டயமீடிஸ்!'

ஆய்லியூஸின் மகனான விரைவு அஜாக்ஸ் அவன் சொன்னதை மூர்க்கமாக மறுத்தான்:

'இடொமீனியஸ், ஏனிப்படி லொடலொடவென சப்தம் போட்டு உளறிக்கொண்டே இருக்கிறாய்? அதோ அங்கே பாய்ந்து வந்து

கொண்டிருக்கும் பெண் குதிரைகள் இன்னும் போக வேண்டிய தூரம் நிறைய இருக்கிறது. நீ ஒன்றும் எங்களில் மிகவும் இளையவனும் அல்ல, உன் கண்களும் அவ்வளவு கூர்மையானவை அல்ல. ஆனாலும் உன் வழக்கப்படி நீ பேசிக்கொண்டே இருக்கிறாய். நீ இப்படியெல்லாம் சொல்ல வேண்டிய அவசியமே இல்லை. உன்னைவிடச் சிறந்தவர்கள் இங்கே இருக்கிறார்கள். அந்தக் குதிரைகள் முன்னே முன்னால் அந்த அதே யுமீலியஸின் ஜோடிக்குதிரைகள்தான். அதோ ·தேரில் யுமீலியஸ், கைகளில் கடிவாளங்களுடன்.'

க்ரீட்டர்களின் தலைவன் கோபமாகப் பதில் சொன்னான்:

'அவமானப் படுத்துபவர்களின் தலைவனே அஜாக்ஸ், முட்டாள்தனத்தில் உனக்கு இணை இந்த படையில் எவருமே இல்லை. இவ்வளவு வடிகட்டின முட்டாளாக இருக்கிறாயே! வா வா, யார் முதலில் வருவார்கள் என்று ஒரு பந்தயம் கட்டிக் கொள்வோமா? ஒரு முக்காலியோ ஒரு கொப்பரையோ. அகமெம்னனை நம் நடுவராக வைத்துக்கொள்ளலாம். உண்மை தெரியும்போது நீ அதற்காக விலையைக் கொடுக்க வேண்டி வரும், என்ன சொல்கிறாய்?'

அப்படி அவன் சொன்னதும் ஆய்லியூஸின் மகனான விரைவு அஜாக்ஸ் கோபமாக இடொமீனியஸைத் திருப்பித் திட்டுவதற்கு எழுந்தான். அக்கிலிஸ் மட்டும் திடீரென எழுந்து பேசியிருக்கா விட்டால் அவர்களுடைய சண்டை தொடர்ந்து கொண்டே போயிருக்கும்.

'அஜாக்ஸ், இடொமீனியஸ், சண்டை போடுவதையும் இப்படி ஒருவரையொருவர் அவமானகரமான முறையில் திட்டிக் கொள்வதையும் நிறுத்துங்கள். இது சரியல்ல. வேறு யாராவது இப்படிச் செய்திருந்தால் அது தவறு என்று நீங்கள்தான் அதை முதலில் கண்டித்திருப்பீர்கள். கூட்டத்தில் அமர்ந்து குதிரைகளைக் கவனியுங்கள். சீக்கிரமே அவைகள் இங்கே வந்துவிடும், வெற்றியைப் பெறுவதற்காக, களைத்துப்போய். அதன்பின், நீங்கள் ஒவ்வொருவரும் அவைகளைச் சரியாக அடையாளம் காணலாம், எது முதலில் வந்தது, எது இரண்டாவது என்று.'

அவன் சொல்லுவதற்கும் டயமீடியஸ் நெருக்கமாக வருவதற்கும் சரியாக இருந்தது. கையைப் பின்னால் வீசிய வண்ணம் சாட்டையைச் சொடுக்கிக் கொண்டே வந்தான். தாவிக்

கொண்டே விரைந்து வந்தன குதிரைகள். புழுதி மழை அவன்மீது விழுந்துகொண்டே இருந்தது. ஜோடிக்குதிரைகள் விரைந் தோடியபோது, தங்கத்திலும் வெள்ளீயத்திலும் தகடுகள் இணைக்கப்பட்ட தேர் அவைகளின் பின்னால் சுழன்று வந்தது. ஆனால் சக்கர அச்சு எதுவும் தரையில் இருக்கவில்லை.

கூட்டத்தில் நடுவில் எழுந்து நின்றான் டயமீடிஸ். அவனது குதிரைகளின் கழுத்திலிருந்தும் மார்பிலிருந்தும் வியர்வை வழிந்தோடியது தரையில். தேரிலிருந்து கீழே குதித்த அவன் நுகத்தடியில் தன் சாட்டையைச் சாய்த்து வைத்தான். அவனது ஆற்றல்மிக்க உதவியாளனாகிய ஸ்தெனிலஸ் சடங்குகளுக்காகக் காத்திருக்காமல் உடனே பரிசுகளை எடுத்துக்கொண்டான். மகிழ்ச்சியில் திளைத்துக் கொண்டிருந்தவர்களிடம் முக்காலி யைக் கொடுத்தான். பரிசுப் பெண்களை அழைத்துச் செல்லுமாறு கூறினான். பின் குதிரைகளை அவிழ்த்து விட்டான்.

அவன் அப்படிச் செய்து கொண்டிருக்கும்போது நெஸ்டரின் மகனான ஆன்ட்டிலோக்கஸ் அடுத்து வந்தான். மெனிலயஸை அவன் வேகத்தினால் அல்லாமல் விவேகத்தினால் முந்தியிருந் தான். இருந்தும் மெனிலயஸும் அவன் குதிரைகளும் அவனுக்கு வெகு அருகிலேயே வந்தன. தன் எஜமானனோடு தேரை இழுத்துக் கொண்டு போகும் ஒரு குதிரைக்கும் அந்தத் தேரின் சக்கரங்களுக்கும் இடையில் எவ்வளவு தூரம் இருக்கும் என்று கற்பனை செய்து பாருங்கள். அதன் வாலின் நுனி சுழலும் சக்கரத்தின் விளிம்புகளில் அடித்துக் கொண்டே வரும். அப்படிப் பார்க்கும்போது குதிரைக்கும் தேருக்குமிடையில் எந்த இடைவெளியும் தெரியாது. எவ்வளவு தூரமாக அந்தக் குதிரை ஓடினாலும் சரி. மெனிலயஸுக்கும் ஆன்ட்டிலோக்கஸுக்கும் இடையிலும் இருந்த இடைவெளியும் அதைப் போன்றதாகத் தான் இருந்தது.

ஆனால் விபத்து நிகழ்ந்த போது, ஒரு எறிவட்டின் தூரத்துக்கு மெனிலயஸ் பின்தங்கியிருந்தது உண்மைதான். ஆனால் சீக்கிரமே அதைச் சரிசெய்துவிட்டான் அவன். அகமெம்னனின் அழகிய பெண் குதிரையான ஈத்தி தன் தரத்தைக் காட்ட ஆரம்பித்துவிட்டாள். இன்னும் கொஞ்சம் தூரமாகச் செல்ல வேண்டிய போட்டியாக இருந்திருந்தால், மெனிலயஸ் ஆன்ட்டிலோக்கஸைப் பின்தங்கவே வைத்திருப்பான். அதில் எந்த சந்தேகமும் இருந்திருக்காது.

மெனில்யஸுக்குப் பின்புறமிருந்து இடொமீனியஸின் உதவியாளனாகிய மெரியோனிஸ் ஒரு ஈட்டியெறி தூரத்தில் வந்தான். அழகிய பிடரிகளைக் கொண்ட அவனுடைய குதிரைகள்தான் அந்தப் போட்டியிலேயே வேகம் குறைவாக ஓடிவந்தன. அவனும் திறமைக் குறைவான தேரோட்டியாகவே இருந்தான். அட்மீட்டஸின் மகனான யுமீலியஸ்தான் கடைசியாக வந்தான். தன் அழகான தேரை அவனே இழுத்து வந்தான். தனக்கு முன்னால் தன் குதிரைகளையும் ஓட்டிக் கொண்டு வந்தான். அவனைப் பார்த்துக் கடவுளையொத்த விரைவுப்பாத அக்கிலிஸ் அவனுக்காகப் பரிதாபப்பட்டான். கிரேக்கர்கள் மத்தியில் எழுந்து நின்ற அவன் அவசரமாகச் சொன்னான்:

'தேரோட்டிகளிலேயே தலைசிறந்தவன் கடைசியாக வந்திருக்கிறான்! அவனுக்குத் தகுதியான ஒரு பரிசை நாம் அவனுக்குக் கொடுக்க வேண்டும். இரண்டாம் பரிசை இவனுக்குக் கொடுங்கள். ஏனெனில் டயமீடிஸ் முதலாவதாக வந்திருக்கிறான்.'

அவன் அப்படிச் சொன்னதும் அனைவரும் அந்தக் கருத்தை ஆரவாரத்தோடு ஏற்றுக்கொண்டனர். கிரேக்கர்களின் ஆரவார மகிழ்ச்சியைப் பார்த்த அக்கிலிஸ் வீரம் செறிந்த நெஸ்டரின் மகனான ஆன்ட்டிலோக்கஸ் மட்டும் அக்கிலிஸுக்கு முன்னால் எழுந்து நின்று அதற்கு எதிர்ப்பு தெரிவிக்காமல் இருந்திருந்தால், யுமீலியஸுக்கு அந்தப் பெண் குதிரையைப் பரிசாகக் கொடுத்திருப்பான்.

'அக்கிலிஸ், நீ சொன்னது போல செய்துவிட்டால் நான் மிகவும் கோபமாகிவிடுவேன். எனக்குக் கிடைக்க வேண்டிய பரிசை நீ என்னிடமிருந்து அநியாயமாகப் பறிக்க நினைக்கிறாய். ஏனெனில் யுமீலியஸின் தேரும் குதிரைகளும் விபத்தில் சிக்கிக் கொண்டதை நான் பார்த்தேன். யுமீலியஸ் அருமையான தேரோட்டிதான். ஆனால் அசம்பாவிதம் அவனுக்கும்தான் ஏற்பட்டது. அவன் நித்தியர்களாக கடவுள்களிடம் வேண்டிக் கேட்டுக் கொண்டிருந்தால் இப்படிக் கடைசியாக வந்திருக்க மாட்டான்.

எப்படியோ, நீ அவன்மீது இரக்கப்பட்டால், உனது பாசறையில் இருக்கும் ஏராளமான தங்கம், வெண்கலம், செம்மறியாடுகள், பெண் அடிமைகள், குதிரைகள் இவற்றிலிருந்து தேர்ந்தெடுத்து,

எனக்குக் கொடுக்கப் போவதைவிடப் பெரிய பரிசாக அவனுக்கு நீ கொடுக்கலாம். அல்லது அவற்றிலிருந்து இப்போதே தேர்வு செய்து இங்கேயே கொடு. படையினர் அதையும் ஆரவாரம் செய்து ஆதரிப்பார்கள். அதையும் நீ கேட்கலாம். ஆனால் இந்தப் பெண் குதிரையை நீ அவனுக்குக் கொடுக்க நான் அனுமதிக்க மாட்டேன். யாருக்காவது இந்தக் குதிரை வேண்டுமென்றால், என்னோடு நேருக்கு நேர் மோதிப் பார்த்துக் கொள்ளலாம்.'

அவன் அப்படிச் சொன்னதும் கடவுளையொத்த விரைவுப்பாத அக்கிலிஸ் புன்னகைத்தான். அவனுக்கு எப்போதுமே ஆயுதம் தரித்த தன் தோழன் ஆன்ட்டிலோக்கஸைப் பிடிக்கும். இப்பொழு தும் அவன் பேசியது அக்கிலிஸுக்கு சந்தோஷத்தைக் கொடுத் தது. அவனுக்குப் பதில் சொல்லும் முகமாக அவசரமாகச் சொன்னான் அக்கிலிஸ்.

'ஆன்ட்டிலோக்கஸ், எனது பாசறையில் இருந்து' கூடுதலான பரிசுகளை அவனுக்குக் கொடுக்கும்படி நீ சொல்வாயேயானால் நான் அப்படியே செய்கிறேன். அஸ்டிரோபியஸிடமிருந்து நான் எடுத்துக் கொண்ட உடல் கவசத்தை நான் அவனுக்குக் கொடுக் கிறேன். அது வெண்கலத்தால் செய்யப்பட்டது. சுற்றிலும் வெள்ளீயத்தால் அலங்கரிக்கப் பட்டது. அது அவனுக்கு மிகவும் மதிப்பு வாய்ந்ததாக இருக்கும்.'

சொல்லிவிட்டு, தன் தோழன் ஆட்டோமிடானை அழைத்து அந்தக் கவச உடையைத் தன் பாசறையிலிருந்து கொண்டு வரும்படிச் சொன்னான் அக்கிலிஸ். கொண்டு வரப்பட்ட அதை யுமீலியஸிடம் ஒப்படைத்தான் அக்கிலிஸ். அதைப்பெற்றுக் கொண்ட யுமீலியஸ் சந்தோஷப்பட்டான்.

இப்பொழுது மெனிலயஸ் எழுந்தான். அவன் இன்னும் ஆன்ட்டி லோக்கஸை மன்னித்துவிடவில்லை. அவனுடைய மனம் இன்னும் வெறுப்பிலேயே இருந்தது. கட்டியக்காரன் ஒருவன் அவனிடம் பேச்சாளருக்கு உரிய கழியைக் கொண்டுவந்து கொடுத்துவிட்டு அனைவரும் அமைதி காக்கும்படி வேண்டி னான். அதன்பிறகு, கடவுளையொத்த மெனிலயஸ் பேசினான்:

'ஆன்ட்டிலோக்கஸ், நீ அறிவுள்ள ஆளாகத்தான் இருந்தாய். ஆனால் இப்பொழுது நீ என்ன செய்திருக்கிறாய் என்பதை நீயே பார். விரைவாகச் செல்லத் தெரியாத உனது குதிரைகளை என் வழியில் குறுக்கே விட்டதன் மூலம், என்னையும், நான்

எதற்கெல்லாம் புகழப்படுகிறேனோ அவை அத்தனையையும் நீ அவமானப் படுத்திவிட்டாய். வெற்றி பெறுவதிலிருந்து என் குதிரைகளைத் தடுத்துவிட்டாய். ஆட்சியாளர்களே, கிரேக்கத் தலைவர்களே, வாருங்கள், வந்து எங்களுக்கிடையில் விருப்பு வெறுப்பின்றித் தீர்ப்பு சொல்லுங்கள். அப்போதுதான் நம் போர்வீரர்கள் யாரும் 'மெனிலயஸ் பொய் சொல்லி ஆன்ட்டி லோக்கஸை வென்று அந்தப் பெண் குதிரையைத் தட்டிச் சென்றுவிட்டான். அவனுடைய குதிரைகள்தான் உண்மையில் மெதுவாகச் செல்பவை. அவனுடைய பதவியும் அந்தஸ்தும் தான் அவனை இப்பொழுது மேலே கொண்டுவந்துள்ளது' என்று சொல்லமாட்டார்கள்.

இல்லை வேண்டாம், இப்பொழுது மறுபடியும் யோசித்ததில், இந்த விஷயத்தை நானே முடிவுக்குக் கொண்டுவரலாம் என்று நினைக்கிறேன். கிரேக்கர்கள் யாரும் என்னை விமர்சனம் செய்து விடுவார்கள் என்று நான் பயப்படவில்லை. என் தீர்ப்பு நேர்மையானதாக இருக்கும். ஒலிம்பஸ் மலையில் பிறந்த ஆன்ட்டிலோக்கஸ், இப்படி முன்னால் வா. ஏனெனில் நமது வழக்கம் அதுதான். உனது தேர் மற்றும் குதிரைகளின் முன்னால் உனது மெல்லிய சாட்டையை முன்பு பிடித்துக் கொண்டிருந் ததுபோல் இப்பொழுதும் பிடித்துக் கொண்டு நில். உனது குதிரைகளை உன் கையால் தொட்டு, கெட்ட எண்ணத்துடன் என் தேரை நீ வழிமறிக்கவில்லை என்று இந்த உலகைச் சுற்றி வரும் நிலநடுக்கக் கடவுளான பொசைடன் மீது சத்தியம் செய். அது போதும்.'

அறிவார்ந்த ஆன்ட்டிலோக்கஸ் பதில் சொன்னான்:

'போதும் நிறுத்து. தலைவா மெனிலயஸ், நான் உன்னைவிடப் பல வருடங்கள் இளையவன். நீ என்னைவிட மூத்தவன், என்னைவிடச் சிறந்தவன். ஒரு இளைஞன் எவ்வளவு தூரம் போவான் என்று உனக்கு நன்றாகத் தெரியும். ஒரு இளைஞன் அவனைவிட வயதில் மூத்தவர்களைவிட விரைவாகச் சிந்திப் பான். ஆனால் அவனுடைய புரிந்துகொள்ளும் சக்தி அவ்வளவு ஆரோக்கியமானதாக இருக்காது. ஆகவே என்னைப் பொறுத்துக் கொள். நான் வென்ற பெண் குதிரையை நானே உனக்குக் கொடுத்து விடுகிறேன். அதைவிடச் சிறந்தது எதையாவது எனது இருப்பி லிருந்து நீ கேட்பாயேயானால், உன் இதயத்திலிருந்து நான் விழுந்துவிடுவதைத் தடுக்க, அதையும் உடனே கொடுக்க நான்

தயாராக இருக்கிறேன். ஒலிம்பஸ் மலையில் பிறந்த மெனிலயஸ், கடவுள்கள் முன்னிலையில் குற்றவாளியாக நிற்க நான் விரும்பவில்லை.'

வீரம் செறிந்த நெஸ்டரின் மகன் இப்படிச் சொல்லிவிட்டு, அந்தப் பெண் குதிரையைத் தானே இழுத்துக் கொண்டு போய் மெனிலயஸிடம் ஒப்படைத்தான். நிலத்தில் கதிர்களெல்லாம் முற்றும்போது, கதிர்களின்மீதிருக்கும் பனித்துளி வெயில் பட்டு லேசாக உஷ்ணமடைவதைப் போல, மனம் கனிந்தான் மெனில யஸ். 'இப்படித்தான்; உன் உள்ளம் இளகியது மெனிலயஸ்'. மெனிலயஸ் ஆன்ட்டிலோக்கஸைப் பார்த்துச் சொன்னான்:

'ஆன்ட்டிலோக்கஸ், இப்பொழுது நீ சொல்வதை நான் கேட்க வேண்டிய தருணம் இது. இப்பொழுது உன்மீது என்னால் கோபப்பட முடியாது. இதற்குமுன்பும் நீ மூர்க்கமாகவோ முட்டாள்தனமாகவோ நடந்து கொண்டதில்லை. ஏதோ ஒருமுறை உன் பகுத்தறிவை மீறி உன் இளம் வயது செயலாற்றிவிட்டது. ஆனால் இனிமேல் உன்னைவிட மூத்தவர்களிடம் இதுபோல தந்திரமாக நடந்துகொள்ள முயலாதே. வேறு எந்த கிரேக்கனாலும் என்னை இவ்வளவு எளிதாக சாந்தப்படுத்தி இருக்க முடியாது. ஆனால் எனக்காக நீ பலதைப் பொறுத்துக் கொண்டுள்ளாய். உன்னைப்போலதான் உன் அருமையான தந்தையும் சகோதரன் த்ராஸிமீடிஸூம் இருந்தனர். எனவே உன் மன்னிப்பை நான் ஏற்றுக்கொள்கிறேன். அதுமட்டுமல்ல, அந்தப் பெண் குதிரையை, அது எனக்கே உரியதுதான் என்றாலும், நான் உனக்கே கொடுத்துவிடுகிறேன். அப்போதுதான் இங்குள்ள எனது நாட்டு மக்களுக்கு மெனிலயஸ் திமிர் பிடித்தவனோ வளைந்துகொடுக்காதவனோ அல்ல என்பது விளங்கும்.'

இப்படிச் சொல்லிவிட்டு, அந்தப்பெண் குதிரையை ஆன்ட்டி லோக்கஸின் உதவியாளர்களில் ஒருவனான நியோமேனிடம் 'அழைத்துச் செல்' என்று ஒப்படைத்தான். தனக்கென்று பள பளத்த ஒரு கொப்பரையை எடுத்துக் கொண்டான். நான்காவதாக வந்த மெரியோனிஸ் இரண்டு டாலண்டுகள் தங்கத்தைப் பெற்றுக் கொண்டான். ஐந்தாவது பரிசான இரண்டு கைப்பிடிகள் கொண்ட தட்டு யாராலும் கேட்கப்படாமல் இருந்தது. அதை நெஸ்டருக்குக் கொடுத்தான் அக்கிலிஸ். கூடியிருந்தவர்கள் பார்க்க அவனே அதை எடுத்துச் சென்று நெஸ்டரிடம் கொடுத்துச் சொன்னான்:

'மரியாதைக்குரிய ஐயா, இதோ உங்களுக்காக ஒரு நினைவுப் பரிசு. இதை பெட்ரோக்குலஸின் ஈமச்சடங்கின் நினைவாக வைத்துக்கொள்ளுங்கள். ஏனெனில், அவனை நீங்கள் மறுபடியும் பார்க்கப் போவதில்லை. அதைப் போலத்தான் இந்தப் பரிசையும் நான் உங்களுக்குக் கொடுக்கிறேன். நீங்கள் இனிமேல் குத்துச்சண்டையிலோ, மல்யுத்தப் போட்டியிலோ, ஓட்டப் பந்தயத்திலோ, எறிவேல் போட்டியிலோ கலந்துகொள்ளப் போவதில்லை. உங்கள் வயது அதற்கெல்லாம் உங்களை அனுமதிக்காது.'

இப்படிச் சொல்லிவிட்டு அந்தப் பரிசை நெஸ்டரின் கைகளில் வைத்தான் அக்கிலிஸ். நெஸ்டருக்கு அதைப் பெற்றதில் ரொம்ப மகிழ்ச்சியாக இருந்தது. அக்கிலிஸைப் பார்த்து உணர்ச்சி மேலிடக் கூறினான்:

'ஆமாம் குழந்தாய், நீ சொன்னது அனைத்தும் சரியே. எனது கால்களில் சக்தி போய்விட்டது. என்னால் சரியாக நிற்கக்கூட முடியவில்லை. என்னால் இடது வலது பக்கங்களுக்கு இலகுவாக முன்னே செய்ததுபோலெல்லாம் வேகமாகத் திரும்பிச் செயலாற்ற முடியாதுதான்.

புப்ராசியானில் தலைவன் அமரின்சியூஸை ஈலியன்கள் அடக்கம் செய்தபோது, அவனுடைய மகன்கள் அமரின்சியூஸின் நினைவாக விளையாட்டுப் போட்டிகளை நடத்தியபோது நான் மிகவும் இளமையாக இருந்தேன். அந்த இளமையும் சக்தியும் இப்பொழுதும் அப்படியே இருந்தால் எப்படியிருக்கும்! அப்போது எனக்கு இணையான ஒருவர் அங்கு எலிஸிலோ, பைலோஸிலோ பெருமைமிகு ஈட்டோலியோவிலோ கிடையாது. குத்துச் சண்டையில் நான் ஈனோப்ஸின் மகன் க்ளைட்டோமீடிஸை வென்றேன். மல்யுத்தப் போட்டியில் ப்ளியோரானிலிருந்து வந்த அங்க்கேயஸை வென்றேன். தூர ஓட்டப் பந்தயத்தில் சிறந்த விளையாட்டு வீரனான இஃபிலியூஸை வென்றேன். ஈட்டியெறியும் போட்டியில் ஃபைலியூஸையும் பாலிடாரஸையும்விட அதிகமான தூரத்துக்கு எறிந்தேன். ஆனால் தேரோட்டப் போட்டியில்தான் நான் இரண்டு மெரியோனிஸ்களிடமும் தோற்றுப் போனேன். மிகப்பெரிய பரிசுகள் காத்திருந்தன. வெற்றியை எனக்குத்தர அவர்களுக்கு விருப்பமே இல்லை. அவர்கள் இரட்டையர்கள். ஒருவன் குதிரைகளை விரட்டும் சாட்டையைப் பிடிக்க, இன்னொருவன் தேரை ஓட்டுவான்.

ம்ஹூம், அப்படி இருந்தேன் நான். ஆனால் இப்பொழுது நான் அதையெல்லாம் இளைஞர்களிடம் விட்டுவிட வேண்டும். முதுமையின் வேதனை தரும் பாடத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும். ஆனாலும் அந்தக் காலத்தில் நான் ஒரு தனி ரகம். சரிசரி, உன் தோழர்களை கௌரவிக்கும் இந்த ஈமச்சடங்கு விளையாட்டுகளைத் தொடர்ந்துகொள். உனது பரிசை நான் மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொள்கிறேன். உன்மீது நான் எவ்வளவு பிரியமாக இருக்கிறேன் என்று உனக்கு நன்றாகத் தெரிந்திருக் கிறது. கிரேக்கர்களுக்கு மத்தியில் எனக்குச் செய்ய வேண்டிய மரியாதையை நீ தரத்தவறுவதில்லை. நீ செய்த காரியங்களுக் காகக் கடவுள்கள் உனக்குத் தக்க நன்மைகளைச் செய்யட்டும்.'

நன்றிகூறும் விதமாக நெஸ்டர் கூறியதையெல்லாம் கேட்ட பிறகு, கிரேக்கர்கள் அமர்ந்திருந்த வழியாகச் சென்ற அக்கிலிஸ் அபாயகரமான விளையாட்டான குத்துச்சண்டைக்குரிய பரிசுப் பொருள்களையெல்லாம் கொண்டு வந்தான். கடினமாக வேலை செய்யக்கூடிய ஒரு கோவேறு கழுதையைக் கொண்டு வந்து வெற்றி பெறப்போகிறவனுக்காகக் கட்டி வைத்தான். அது ஆறுவயதான பெண் கழுதை. தோல்வியடைபவனுக்காக இரண்டு கைப்பிடிகள் கொண்ட கோப்பை. அக்கிலிஸ் எழுந்து நின்று கிரேக்கர்களைப் பார்த்துப் பேசினான்:

'அகமெம்னன், இங்கிருக்கின்ற மற்ற கிரேக்க வீரர்களே, இதோ இவைதான் பரிசுகள். இதற்காக நம்மில் சிறந்த வீரர்கள் யாராவது இருவர் வரலாம்; ஒருவரோடொருவர் குத்துச்சண்டை செய்யலாம். அப்போலோவின் அருளினால் அதிகப் பொறுமை யுடன் எல்லாருடைய கருத்திலும் முதலாவதாக வருபவன் இந்தக் கோவேறு கழுதையைத் தன் பாசறைக்கு ஓட்டிச் செல்லலாம். தோல்வியடைபவன் இந்த இரண்டு கைப்பிடிகள் கொண்ட கோப்பையைப் பெற்றுக் கொள்ளலாம்.'

அக்கிலிஸ் சொல்லி முடித்ததும் பானோபியூஸின் மகனான ஈப்பி யூஸ் எழுந்து நின்றான். அவன் நல்ல உயரமான கட்டுமஸ்தான உடல்வாகுடன் உறுதியாக இருந்தான். அருமையான மல்யுத்த வீரனும்கூட. கடினமாக வேலைகள் செய்யக்கூடிய அந்தக் கோவேறு கழுதையின்மீது தன் கையை வைத்து அவன் சொன்னான்:

'இரண்டு கைப்பிடிகள் கொண்ட கோப்பையைப் பெற விரும்பு பவன் யாரோ அவன் முன்னால் வரட்டும். இந்தக் கோவேறு

கழுதை எனக்குத்தான். என்னை வீழ்த்திவிட்டு இதை யாரும் எடுத்துக் கொள்ளப்போவதில்லை. நான் மகா பலசாலி. போர்க்களத்தில் நான் அவ்வளவு பெரிய வீரன் என்று சொல்ல முடியாது. ஒருவன் எல்லாவற்றிலும் ஜெயித்துக் கொண்டிருக்க முடியாது அல்லவா? ஆனால் நான் இப்பொழுது சொல்கிறேன் கேட்டுக்கொள்ளுங்கள். என்னோடு போட்டிக்கு வர இருப்பவனின் சதையை நான் நார்நாராகக் கிழிக்கப் போகிறேன். நான் அவனை வீழ்த்தி முடித்த பிறகு அவனை எடுத்துச் செல்ல அவனது குடும்பத்திலிருந்து துக்கம் அனுஷ்டிப்பவர்கள் தயாராக நிற்பது நல்லது.'

அவன் அப்படிச் சொன்னதும் அங்கே அமைதி நிலவியது. ஆனால் டாலஸின் மகனான மெசிஸ்ட்டியூஸின் மகனான கடவுளையொத்த யூரியாலஸ்தான் துணிச்சலாக முன்னே வந்தான். ஒடிஸியூஸ் விழுந்தபிறகு, மெசிஸ்டியூஸ் தீப்ஸில் நடந்த ஈமச்சடங்கு விளையாட்டுப் போட்டிகளில் கலந்து கொண்டு எல்லா தீப்ஸியர்களையும் வென்றான். அவனது மாமன் மகனான ஈட்டியெறி வீரன் டயமீடிஸ் அவனருகிலேயே சுறுசுறுப்பாக இயங்கிக் கொண்டு அவனுக்கு உற்சாகமூட்டிக் கொண்டிருந்தான். ஏனெனில் யூரியாலஸ் வெல்ல வேண்டு மென்று அவன் விரும்பினான். முதலில் அவனது அரைத் துணியை அணிந்துகொள்வதற்கு உதவி செய்தான். பின் அவன் கைகளில் கட்டிக்கொள்ள எருதுத் தோல் வாரைக் கொடுத்தான்.

இரண்டு வீரர்களும் தயாராகிவிட்டபின்பு, கூடியிருந்தவர்கள் பார்க்குமாறு நடுவில் வந்து நின்று தங்கள் பெரு முஷ்டிகளை உயர்த்திக் காட்டி, ஒருவரோடொருவர் மோத ஆரம்பித்தனர். கடுமையான அடிகள் பரிமாறிக்கொள்ளப் பட்டன. கன்ன எலும்புகள் அச்சமூட்டும் வகையில் சேதமப்டைந்தன. வியர்வை வழிந்தோட ஆரம்பித்தது. யூரியாலஸ் எங்கே அடிக்கலாம் என்று பார்த்துக் கொண்டிருந்தபோது, பாய்ந்து வந்த ஈப்பியூஸ் அவனது கன்னத்தைப் பிடித்துக் கொண்டான். யூரியாலஸால் அதற்குமேல் நேராக நிற்க முடியவில்லை. அவனது முழு உடலும் தொங்கியது. ஆழமில்லாத களை மிகுந்த நீர்ப்பகுதி யிலிருந்து துள்ளிக் குதிக்கும் மீன்கள், வடக்குக் காற்று அலை களை எழுப்பும்போது மீண்டும் கருத்த அலைகளின்மீது போய் விழுவதைப் போல, ஈப்பியஸ் கொடுத்த அடியில் யூரியாலஸ் தரையிலிருந்து மேலே சென்றான். வீரம் மிக்க ஈப்பியஸ் அவனுக்கு ஒரு கைகொடுத்து அவனைத் தரையில் நிறுத்தினான்.

உடனே குழுமியிருந்த யூரியாலஸின் நண்பர்கள் அவனைச் சுற்றி நின்று அழைத்துச் சென்றனர். நொண்டிக் கொண்டே அவனும் சென்றான். போகும் வழியெல்லாம் கட்டி தட்டிய ரத்தத் துளிகளைத் துப்பிக் கொண்டே சென்றான். அவனது தலை ஒருபக்கமாகச் சாய்ந்திருந்தது. அவனது மக்கள் மத்தியில் அவனைப் படுக்கவைத்த போதும் அவன் தடுமாற்றத்தில் இருந்தான். இரண்டு கைப்பிடிகள் கொண்ட கோப்பையை அவர்களே போய்க் கொண்டு வர வேண்டியிருந்தது.

உடனே பீலியூஸின் மகனாகிய அக்கிலிஸ் மூன்றாவது நிகழ்ச்சி யான, அபாயகரமான விளையாட்டான மல்யுத்தப் போட்டிக் கான பரிசுப் பொருள்களை கிரேக்கர்கள் முன்னிலையில் கொண்டு வந்து வைக்க ஆரம்பித்தான். வெற்றி பெறுபவனுக் காக, அடுப்பில் வைத்து, தீமூட்ட வசதியாக மூன்று கால்களைக் கொண்ட ஒரு கொப்பரை. கிரேக்கர்களின் கணக்குப்படி, பன்னிரண்டு காளைகளின் மதிப்புக்கு இணையானது அந்தக் கொப்பரை. தோல்வியடைபவனுக்காக வீட்டு வேலைகள் செய்யக் கூடிய ஒரு பெண்ணை அழைத்து வந்தான். அவ்வேலை கள் நான்கு எருதுகளின் மதிப்பு கொண்டவை என்று அவர்கள் கணக்கிட்டனர். அக்கிலிஸ் எழுந்து கிரேக்கர்களிடம் சொன் னான்:

'இந்தப் போட்டியில் கலந்து கொண்டு இப்பரிசுகளைப் பெற இரண்டு பேர் வாருங்கள்.'

அவன் அப்படிச் சொல்லி முடித்ததும் டிலமானின் மகனான மகா அஜாக்ஸ் எழுந்தான். உடனே விரைவாக முடிவெடுக்கும் ஒடிஸியூஸும் எழுந்தான். அவனுக்கு அந்த விளையாட்டின் எல்லா அம்சங்களும் அத்துபடி. அவர்கள் இருவரும் தயார்ப் படுத்திக் கொண்டு, கூட்டத்தின் மத்தியில் வந்து, காற்றின் வேகத்தை எதிர்த்து நிற்குமாறு உயரமாகக் கட்டப்பட்ட வீட்டின் கூரையில் உறுதியான பிடிப்புக்காக, குறுக்கே அமைக்கப்படும் சாய்வு மரச் சட்டங்களைப் போலத் தங்கள் ஆற்றல் மிகுந்த கைகளினால் ஒருவரையொருவர் பிடித்துக் கொண்டனர். அவர்கள் கைகளால் கொடுத்துக்கொண்டிருந்த அழுத்தத்தால் அவர்களது முதுகுகள் பிளந்துவிடுமோ என்று தோன்றியது. வியர்வை வழிந்தோடியது. அவர்களது இடுப்புப் பகுதியிலும் தோள்களிலும் எங்கு பார்த்தாலும் சாட்டைத் தழும்புகளைப் போல ரத்தச் சிவப்பாக நரம்புகள் புடைத்துக் கொண்டன.

இன்னும் அவர்கள் வெற்றிக்காகவும் அருமையான கொப்பரைக் காகவும் போராடிக் கொண்டிருந்தனர். ஒடிஸியூஸாலும் அஜாக்ஸைக் கீழே தள்ள முடியவில்லை. அஜாக்ஸாலும் ஒடிஸியூஸைத் தரையில் சாய்க்க முடியவில்லை. இருவரும் உறுதியில் இணையாக இருந்தனர். அப்படியே கொஞ்ச நேரம் போனதும், பார்ப்பவர்களுக்கு அக்காட்சி களைப்பூட்ட ஆரம்பித்தது. அப்போது டிலமானின் மகனான மகா அஜாக்ஸ் கூறினான்.

'ஒலிம்பஸ் மலையில் பிறந்த லார்ட்டஸின் மகனே, ஆற்றல்மிகு ஒடிஸியூஸ், நீயும் என்னைத் தூக்க முடியவில்லை. என்னாலும் உன்னைத் தூக்க முடியவில்லை. எனவே நாம் இதன் முடிவை ஜீயூஸிடம் விட்டுவிடுவோம்.'

இப்படிச் சொல்லிவிட்டு அவன் ஒடிஸியூஸைத் தரையில் இருந்து மேலே தூக்கினான். ஆனால் ஒடிஸியூஸ் கற்று வைத்திருந்த கலை அவனைக் கைவிடவில்லை. அஜாக்ஸின் முழங்காலின் பின்பக்கத்தில் ஒரு உதை விட்டான் ஒடிஸியூஸ். அவன் சமநிலையைக் கெடுத்து அவனை வளைய வைத்தான். அப்படிச் செய்தபோது அவனும் சேர்ந்து அஜாக்ஸின் மார்பில் விழுந்துவிட்டான். பார்த்துக் கொண்டிருந்தவர்களெல்லாம் ஆச்சரியப் பட்டனர். இப்பொழுது கடவுளையொத்த ஒடிஸியூஸ் அஜாக்ஸைத் தூக்க முயற்சிக்க வேண்டும். தரையில் கொஞ்சம் அவனைத் தள்ளிப்போட்டான்; என்றாலும் அஜாக்ஸை அவனால் தூக்க முடியவில்லை. எனவே தன் ஒரு காலை அஜாக்ஸின் முழங்காலைச் சுற்றிப் போட்டான் ஒடிஸியூஸ். இருவருமே அருகருகில் கீழே விழுந்தனர். அவர்களின் உடம்பில் புழுதி படிந்தது. அக்கிலிஸ் மட்டும் எழுந்து குறுக்கே புகுந்து பேசியிருக்காவிட்டால், மூன்றாவது முறையாக அவர்கள் எழுந்து முயன்றிருப்பார்கள்.

'போதும் நிறுத்துங்கள். இருவரும் களைத்து விட்டீர்கள். நீங்கள் இருவருமே ஜெயித்து விட்டீர்கள். பரிசுகளைச் சமமாகப் பங்கிட்டுக் கொண்டு விலகுங்கள். மற்றவர்கள் கலந்து கொள்ளட்டும்.'

அப்படி அவன் சொன்னதை அவர்கள் ஏற்றுக்கொண்டனர். மண்ணைத் துடைத்துக் கொண்டு தங்கள் தளருடைகளை அணிந்து கொண்டனர்.

அதன்பின் உடனே சென்று ஓட்டப்பந்தயத்துக்கான பரிசுப் பொருள்களை எடுத்து வைக்க ஆரம்பித்தான் அக்கிலிஸ். மதுபானங்களைக் கலந்து ஊற்ற அழகாகச் செய்யப்பட்டிருந்த ஒரு வெள்ளிக்கோப்பை அது. அது உலகிலேயே மிகவும் அழகான பொருளாக இருந்தது. கைவினைத் திறனின் உச்சமாக இருந்தது. ஃபினீசிய வியாபாரிகள் சிடானிலிருந்து பனிபடர்ந்த கடல்வழியாகக் கப்பலில் அனுப்பியது அது. தலைவன் தோவாஸுக்குப் பரிசாக அவனது துறைமுகத்தில் இறங்கியபோது கொடுத்தது. அதன்பிறகு, ஜேசனின் மகனான ஈனியூஸ் அதை ப்ரியமின் மகனான லைகாவோனை மீட்க, பெட்ரோக் குலஸுக்குக் கொடுத்தது. இப்பொழுது இறந்து போன தன் தோழனை கௌரவைக்கும் பொருட்டு அதை இப்பொழுது இந்த ஓட்டப்பந்தயத்தின் முதல் பரிசாக வைத்திருந்தான் அக்கிலிஸ். இரண்டாமிடத்தில் வருபவனுக்காக கொழுத்த எருதொன்றை யும், முன்றாமிடத்தில் வருபவனுக்கு ஒரு டால்ண்டு தங்கத்தை யும் பரிசாக வைத்தான். இப்பொழுது அக்கிலிஸ் எழுந்து கிரேக்கர்களிடம் சொன்னான்:

‘இந்தப் போட்டியில் கலந்து கொண்டு இப்பரிசுகளைப் பெற வாருங்கள்.’

அவன் அப்படிச் சொன்னதும் ஆய்லியூஸின் மகனான விரைவுப் பாத அஜாக்ஸ் உடனே எழுந்தான். விரைவுச் சிந்தனை கொண்ட ஒடிஸியூஸும் நெஸ்டரின் மகனான ஆன்ட்டிலோக்கஸும்கூட எழுந்தனர். இவர்களில் மிக வேகமாகச் செல்லக்கூடிய இளைஞன் ஆன்ட்டிலோக்கஸ்தான். மூவரும் வரிசையாக நின்றனர். திருப்புக் கம்பத்தை சுட்டிக் காட்டினான் அக்கிலிஸ்.

உடனே மூவரும் ஓட ஆரம்பித்தனர். ஆய்லியூஸின் மகனான அஜாக்ஸ்தான் முன்னால் போனான். ஒட்டியாணம் அணிந்த ஆடை நெய்யும் பெண்ணின் மார்பில் கிடக்கும் கம்பியைப் போல அவனுக்கு மிக நெருக்கமாகப் போய்க்கொண்டிருந்தான் ஒடிஸியூஸ். கம்பியை நூல்கண்டு வரை கவனமாக இழுத்துக் கொண்டே போய் பின் மறுபடியும் தன் மார்பை நோக்கி இழுத்து வருவதுபோன்ற நெருக்கம். அஜாக்ஸின் காலடித் தடங்கள் மண்ணில் மறைவதற்கு முன் அதன் மீது இவன் காலடித் தடம் பதியுமாறு, அஜாக்ஸின் தலையில் ஒடிஸியூஸின் மூச்சுக் காற்று படுமளவுக்கு நெருக்கமாக, வெல்ல வேண்டும் என்ற படபடப் பில் அவன் இருந்தான். கூடியிருந்த கிரேக்கர்களும் ஆரவார

ஒலியெழுப்பி அவனை உற்சாகப் படுத்திக் கொண்டிருந்தனர். ஓடுதளத்தின் முடிவை அவர்கள் நெருங்கிக் கொண்டிருந்த போது, சாம்பல் நிறக் கண்ணாளான அதீனியிடம் மௌனமாக ஒரு பிரார்த்தனை செய்தான் ஒடிஸியூஸ்.

'என் பிரார்த்தனையைக் கேட்பாயாக தேவதையே. எனக்கு அருள் செய். எனக்கு உதவி செய். வந்து என் பாதங்களுக்கு வேகத்தைக் கொடு.'

அவனுடைய பிரார்த்தனையைக் கேட்ட பல்லாஸ் அதீனி அவனது பாதங்களையும், கைகளையும், உடல் முழுதும் எடையே இல்லாததுபோல் இலகுவாக்கினாள். ஓடிக்கொண் டிருந்தவர்கள் வெற்றியைத் தொட்டுவிடுவார்கள் என்ற நிலையில் திடீரெனெ அஜாக்ஸ் கால் இடறிக் கீழே விழுந்தான். அதீனி அவனைச் செயலிழக்கச் செய்திருந்தாள். பெட்ரோக் குலஸின் ஈமச்சடங்கிற்காக விரைவுப்பாத அக்கிலிஸ் பலி கொடுத்த தலைகவிழ்ந்த கால்நடைகளின் சாணம் கொட்டி யிருந்த தரையாக அது இருந்தது. அஜாக்ஸின் வாயிலும் நாசித் துவாரங்களிலும் சாணம் ஒட்டிக் கொண்டது. எதற்கும் துணிச்சல் கொண்ட கடவுளையொத்த ஒடிஸியூஸ் அவனைப் பிடித்து விட்டதோடல்லாமல் வெள்ளிக் கோப்பையையும் தட்டிச் சென்றான். கீர்த்திமிகு அஜாக்ஸ் பண்ணைக் காளையைப் பரிசாகப் பெற்றுக் கொண்டான். காளையின் கொம்புகளின் மீது ஒருகையை வைத்துக் கொண்டிருந்த அவன் வாயில் புகுந்த சாணத்தைத் துப்பிவிட்டு கிரேக்கர்களைப் பார்த்துக் கூறினான்:

'நாசமாய்ப் போக! அந்த தேவதைதான் என்னைத் தடுக்கிவிழ வைத்து விட்டாள். ஒடிஸியூஸைச் சுற்றி எப்போதுமே ஒரு தாயைப் போல கவனித்துக் கொண்டிருக்கும் அவள்தான்.'

அவன் அப்படிச் சொன்னதும் அவனைப் பார்த்து அனைவரும் சிரித்தார்கள். இப்பொழுது ஆன்ட்டிலோக்கஸ் உள்ளே வந்தான். கடைசிப் பரிசைப் பெற்றுக் கொண்ட அவன் ஒரு புன்னகை யோடு கிரேக்கர்களைப் பார்த்துச் சொன்னான்:

'நண்பர்களே, இப்பொழுது நான் உங்களுக்குத் தெரிந்த ஒரு விஷயம் பற்றிச் சொல்லப் போகிறேன். கடவுள்களுக்கு இன் னும் வயோதிகர்களைத்தான் பிடிக்கிறது. அஜாக்ஸ் என்னைவிட கொஞ்சம்தான் மூத்தவர். ஆனால் அங்கிருக்கும் ஒடிஸியூஸோ போன பரம்பரையின் தயாரிப்பு. ஆனால் கிழட்டு நாயிடம்

இன்னும் உயிர் இருப்பதாக, பழமொழியே உள்ளதே! அவரைத் தோற்கடிப்பதென்பது அக்கிலிஸைத் தவிர மற்றவர்களுக்குக் கடினம்தான்.'

அவன் இவ்விதமாப் பேசி விரைவுப்பாத அக்கிலிஸை மறை முகமாகப் பாராட்டினான். அக்கிலிஸ் அவனுக்குப் பதிலாகச் சொன்னான்:

'ஆன்ட்டிலோக்கஸ், நீ சொன்ன பாராட்டு பரிசு வாங்காமல் சும்மா போவதை நான் விரும்பவில்லை. நீ ஏற்கெனவே பாதி டாலண்டு தங்கத்தை வென்றிருக்கிறாய். இதோ இன்னுமொரு பாதி, பெற்றுக்கொள்.'

சொல்லிவிட்டு ஆன்ட்டிலோக்கஸிடம் அந்தத் தங்கத்தைக் கொடுத்தான். அவனும் அதை மகிழ்ச்சியாக வாங்கிக் கொண்டான்.

பீலியூஸின் மகனான அக்கிலிஸ் இப்பொழுது கூடியிருந்தவர்கள் முன்னிலையில் நீண்ட நிழல் கொண்ட ஒரு ஈட்டி, ஒரு கேடயம், ஒரு தலைக்கவசம் ஆகியவற்றைக் கொண்டு வந்து வைத்தான். அவை சர்ப்பிடானிடமிருந்து பெட்ரோக்குலஸ் பெற்றவை. அவற்றை வைத்துவிட்டு எழுந்து கிரேக்கர்களைப் பார்த்துச் சொன்னான்:

'இப்பொழுது நமது வீரர்களில் சிறந்த இரண்டு பேரை நான் நேருக்கு நேர் மோத அழைக்கிறேன். வெல்பவர்களுக்கே இப்பரிசுகள். அவர்கள் தங்களது கவச உடைகளை அணிந்து கொள்ள வேண்டும். ஆனால் பாதுகாப்பற்ற சாதாரண ஆயுதங் களையே உபயோகிக்க வேண்டும். எதிரியின் சதையை முதலில் காயப்படுத்துபவனுக்கு நான் அஸ்டிரோப்பியஸிடமிருந்து பெற்ற, வெள்ளிக் குடையாணி அடிக்கப்பட்ட இந்த அழகிய த்ரேசிய வாளைக் கொடுப்பேன். இங்கிருக்கும் கவச உடை களைப் போட்டியில் கலந்து கொள்ளும் இருவரும் சமமாகப் பங்கிட்டுக் கொள்ளலாம். அதோடு, என் பாசறையில் அவர் களுக்கு ஒரு பிரும்மாண்டமான விருந்தையும் நான் கொடுப்பேன்.'

அக்கிலிஸ் அப்படிச் சொன்னதும் டிலமானின் மகனான மகா அஜாக்ஸும் டைடியூஸின் மகனான ஆற்றல்மிகு டயமீடிஸும் எழுந்து நின்றனர். இருவரும் தங்கள் தங்கள் பக்கத்திலிருந்து

மோதலுக்குத் தயாராகிக் கொண்டே மத்தியப் பகுதியை நோக்கி வந்தனர். அவர்களுடைய மனம் மோதுவதில் இருந்தது. கைகளில் மின்னும் வாள்கள் இருந்தன. எல்லாரும் அவர் களையே இமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தனர். நெருங்கி வந்து மூன்று முறை தாக்கிக்கொண்டனர். இந்த முயற்சியில் டயமீடிஸின் வட்ட வடிவ கேடயத்தை அஜாக்ஸ் துளைத்து விட்டான். ஆனால் அஜாக்ஸின் ஈட்டியால் டயமீடிஸின் சதை வரை செல்ல முடியவில்லை. டயமீடிஸ் அணிந்திருந்த உடல் கவசம் அவனைக் காப்பாற்றிவிட்டது. இப்பொழுது டயமீடி ஸுக்கான முறை வந்தது. அஜாக்ஸின் பெரிய கேடயத்தின் விளிம்பில், பளபளத்துக்கொண்டிருந்த தன் ஈட்'டி முனையால் பலமுறை குத்தி அஜாக்ஸின் கழுத்தைக் காயப்படுத்த முயன்றான் டயமீடிஸ். அதைப்பார்த்த கிரேக்கர்கள் அதிர்ந்து போயினர். அஜாக்ஸுக்கு என்னாகுமோ என்று அஞ்சினர். ‘வேண்டாம் நிறுத்திவிடுங்கள், பரிசுகளைச் சமமாகப் பங்கிட்டுக் கொள்ளுங்கள்’ என்று கூவினர். எனினும், மகா வாளை அதற்கான உறை மற்றும் அழகாக வெட்டி செய்யப்பட்டிருந்த தோள்பட்டை ஆகியவற்றோடு டயமீடிஸுக்கே பரிசளித்தான் அக்கிலிஸ்.

இதன் பிறகு வார்த்தெடுக்கப்பட்ட இரும்புக் குண்டு ஒன்றை அவர்கள் முன் வைத்தான். அக்கிலிஸ். ஆற்றல்மிகு ஈட்டியான் எறிந்தெறிந்து விளையாடிய குண்டு அது. அவனை அக்கிலிஸ் கொன்றபிறகு, அந்தக் குண்டை, தன் கப்பலில் ஏற்றி மற்ற பொருள்களோடு சேர்த்துக் கொண்டு வந்திருந்தான், கடவுளை யொத்த அக்கிலிஸ். இப்பொழுது அக்கிலிஸ் எழுந்து கிரேக்கர் களைப் பார்த்துச் சொன்னான்:

‘வாருங்கள் நண்பர்களே, இந்தப் பரிசுக்காக யார் வரப்போகிறீர் கள்? இந்த இரும்புக் குண்டு மிகவும் பெரியது. இதில் உள்ள இரும்பானது, உங்கள் பண்ணை அழிந்து போனால்கூட, ஐந்தாறு ஆண்டுகளுக்கு உங்களைக் காப்பாற்றும். இரும்பில்லாத காரணத்துக்காக உங்கள் மேய்ப்பனையோ உழவனையோ நீங்கள் நகரங்களுக்கு அனுப்ப வேண்டியிருக்காது. இந்த இரும்புக் குண்டை வைத்திருப்பவனின் தேவைகளையெல்லாம் இது கவனித்துக் கொள்ளும்.’

அவன் அப்படிச் சொன்னதும், உறுதியான பாலிபீட்டிஸ், கடவுளையொத்த ஆற்றல் மிகு லியான்ட்டிஸ், டிலமானின்

மகனான அஜாக்ஸ், கடவுளையொத்த ஈப்பியஸ் ஆகியோர் எழுந்து முன் வந்து வரிசையாக நின்றனர். கடவுளையொத்த ஈப்பியஸ் அந்த இரும்புக் குண்டைத் தூக்கினான். அதை அப்படியே சுழற்றி எறிந்தான். ஆனால் அவனுடைய முயற்சியைப் பார்த்து கிரேக்கர்களனைவரும் சிரிக்கவே செய்தார்கள். போர்க்கடவுளின் தோழனான லியான்ட்டிஸ்தான் அடுத்து எறிய வந்தான். அடுத்து, டிலமானின் மகனான மகா அஜாக்ஸ் அதைத் தன் பெரிய கையால் எடுத்துச் சுழற்றி எறிந்தான். அவன் எறிந்தது மற்ற அனைவரும் எறிந்ததைவிடத் தொலைவில் போய் விழுந்தது. ஆனால் பாலிபீட்டிஸின் முறை வந்தபோது, அவன் அனைவரையும் மிஞ்சும் வகையில் அதை எறிந்தான். ஒரு மேய்ப்பன் தன் கையில் வைத்துச் சுழற்றிக் கொண்டிருக்கும் கழியை மாடுகளை மிரட்ட எளிதாகத் தூக்கி எறிவதுபோல அவன் எறிந்தான். மகிழ்ச்சி ஆரவாரத்தில் வெடித்து வெளிக்கிளம்பியது கூடியிருந்த கூட்டம். ஆற்றல்மிகு பாலிபீட்டிஸின் வீரர்கள் எழுந்து வந்து அவனுக்கான பரிசை உட்குழிந்த கப்பல்களுக்குத் தூக்கிச் சென்றனர்.

பின் அம்பெய்யும் போட்டிக்கான பரிசுகளாக, சாம்பல் நிற இரும்பால் செய்யப்பட்ட பத்து, இருபக்கத் தலைகள் கொண்ட கோடரிகளையும், பத்து ஒருபக்கத் தலைகள் கொண்ட கோடரி களையும் வைத்தான். நீல நிற முன்புறம் கொண்ட கப்பலின் பாய்மரத்தைத் தூரத்தில் மணலில் ஊன்றி வைத்தான். ஒரு சின்னக் கம்பியால் பயந்த சுபாவம் கொண்ட ஒரு புறாவை அதில் கட்டி வைத்தான். அந்தப் புறாவை இலக்காக வைத்துக் கொள்ளுமாறு போட்டியாளர்களிடம் சொன்னான்:

‘புறாவை யார் சரியாக அடிக்கிறாரோ அவர் இருதலைகள் கொண்ட கோடரிகளை எடுத்துக் கொண்டு போகலாம். ஆனால் புறாவைக் கட்டியுள்ள நாணை மட்டும் அடித்துப் புறாவை அடிக்காமல் விடுபவர் நன்றாகச் செய்தவரல்ல. எனினும் அவர் ஒருதலை கொண்ட கோடரிகளை எடுத்துக்கொள்ளலாம்.’

அவன் அப்படிச் சொன்னதும் ஆற்றல்மிகு ட்யூஸர், இடொமீனிய ஸின் துணிச்சலான உதவியாளனான மெரியோனிஸ் இருவரும் எழுந்தனர். வெண்கலத் தலைக்கவசத்துள் சீட்டுக் குலுக்கிப் போட்டுப் பார்த்தனர். ட்யூஸர் பெயர் வந்ததால், முதலில் அம்பெய்யும் வாய்ப்பு அவனுக்குப் போனது. பயங்கரமான

வேகத்துடன் அவன் ஒரு அம்பை விரைவாக விட்டான். ஆனால் தலைச்சன் செம்மறியாட்டுக் குட்டிகளைப் பலி கொடுப்பதாக அப்போலோவுக்கு வேண்டிக்கொள்ள அவன் மறந்துவிட்டான். அதனால் அவனால் புறாவை அடிக்க முடியவில்லை. அந்த வெற்றியை அவனுக்குத் தருவதை அப்போலோ விரும்ப வில்லை. ஆனாலும் புறாவின் கால்களில் கட்டியிருந்த நாணை அடித்தான் அவன். கூரம்பு நாணை வெட்டியது. வானத்தில் பறந்தது புறா. நாணறுந்து கீழே தொங்கியது. கிரேக்கர்கள் ஆர்ப்பரித்தனர்.

ஆனால் தனது அம்பைத் தயாராக வைத்திருந்த மெரியோனிஸ், உடனே ட்யூஸரின் கையிலிருந்த வில்லைப் பிடுங்கி, தாமதமின்றி வில்லேந்திய கடவுளான அப்போலோவுக்குத் தலைச்சன் செம்மறியாட்டுக் குட்டிகளைப் பலியிடுவதாக வேண்டிக் கொண்டான். அச்சம் கொண்ட அந்தப் புறா காற்றில் மேகங்களின் கீழே சிறகடித்துக் கொண்டிருப்பதைப் பார்த்தான். அங்கே வட்டமிட்டுக் கொண்டிருந்த அதைத் துல்லியமாகத் தனது அம்பால் அதன் சிறகில் அடித்தான். அவனது அம்பு நேராகப் புறாவுக்குள் புகுந்து, கீழே தரைக்கு மீண்டும் செங்குத்தாகத் திரும்பி வந்து அவனது பாதங்களுக்குப் பக்கத்தில் குத்தி நின்றது. எப்படியோ அந்தப்புறா திரும்பி வந்து நீலநிற முன்பகுதி கொண்ட கப்பலின் பாய்மரத்தில் தங்கிக் கொண்டது. அதன் சிறகுகள் மடிந்திருந்தன. தலை கவிழ்ந்திருந்தது. ஒரு கணம்தான். அடுத்த கணம் அது பாய்மரத்திலிருந்து செத்து விழுந்தது. பார்வையாளர்கள் அதிசயித்துப் பார்த்துக் கொண் டிருந்தனர். இரு தலைகள் கொண்ட கோடரிகளைப் பெற்றுக் கொண்டான் மெரியோனிஸ். ஒரு தலை கொண்ட கோடரிகளைத் தன் கப்பல்களுக்கு எடுத்துச் சென்றான் ட்யூஸர்.

இறுதியாக நீண்ட நிழல் கொண்ட ஓர் ஈட்டியையும், பூக்கள் செதுக்கப்பட்ட பயன்படுத்தப் படாத புதிய, ஒரு எருதின் மதிப்பு கொண்ட கொப்பரையையும் கூட்டத்தினர் முன்னிலயில் கொண்டு வந்து வைத்தான் பீலியூஸின் மகனான அக்கிலிஸ். ஈட்டியெறி வீரர்கள் அனைவரும் தயாராக எழுந்தனர். அகண்ட ஆட்சி கொண்ட அத்ரியூஸின் மகனான அகமெம்னன், இடொமீனியஸின் உதவியாளனாகிய மெரியோனிஸ் ஆகியோர் எழுந்து நின்றனர். ஆனால் விரைவுப்பாத அக்கிலிஸ் அவர் களிடம் சொன்னான்:

‘தலைவனே அகமெம்னன், ஈட்டியெறிதில் எங்களனைவரை யும்விட நீ எவ்வளவு உயர்ந்தவன் என்பது எங்களுக்குத் தெரியும். அந்த ஆற்றலில் உன்னோடு யாரும் போட்டிபோட முடியாது. இந்தப் பரிசைப் பெற்றுக் கொண்டு உனது உட்குழிந்த கப்பல்களுக்கு எடுத்துச் செல். நீ ஒப்புக்கொண்டால், இந்த ஈட்டியை மெரியோனிஸுக்குக் கொடுக்கலாம். என்ன சொல்கிறாய்?’

அவன் அப்படிச் சொன்னதை மக்கள் தலைவனாகிய அகமெம் னன் ஏற்றுக் கொண்டு வெண்கல ஈட்டியை மெரியோனிஸுக்குக் கொடுத்தான். தனக்குக் கிடைத்த அழகான பரிசைக் கட்டியக் காரனாகிய டல்திபியஸிடம் ஒப்படைத்தான்.

# ப்ரியமும் அக்கிலிஸும்

**கதைச்சுருக்கம்**

***வரிகள் 01 - 21***

*பெட்ரோக்குலஸையே நினைத்துக் கொண்டிருந்த அக்கிலிஸால் உறங்க முடியவில்லை. பெட்ரோக்குலஸின் சமாதியைச் சுற்றி ஹெக்டரின் உடலை இழுத்து வருகிறான். ஆனால் அந்த உடல் மேலும் சிதைவதிலிருந்து அப்போலோ அதைக் காக்கிறான்.*

*(ஹெக்டர் இறந்ததிலிருந்து தொடங்கி, அவனுடலைச் சின்னா பின்னப் படுத்திப் பதினோரு நாட்களாகின்றன.)*

***வரிகள் 22 - 142 (39வது நாள்)***

*மற்றக் கடவுளர்களெல்லாம் ஹெக்டர்மீது இரக்கப் படுகின் றனர். ஆனால் ஹீரா, அதீனி, பொசைடன் மூவரும் அவனுக்கு விரோதமாகவே இருக்கின்றனர். ஹெக்டருக்காக ஜீயூஸிடம் அப்போலோ வாதிடுகிறான். ஹெக்டரின் உடலை உரியவர் களிடம் ஒப்படைக்க வேண்டும் என்று சொல்லச் சொல்லி தீட்டிஸுக்கு ஜீயூஸ் உத்தரவிடுகிறான். அக்கிலிஸும் ஒப்புக் கொள்கிறான்.*

***வரிகள் 143 - 187***

*மீட்புக்கான பரிசுப் பொருள்களை எடுத்துச் சென்று அக்கிலிஸைப் பார்த்து ஹெக்டரை மீட்டு வரும்படி, துக்கித்துக் கொண்டிருக்கும் ப்ரியத்திடம் கூறுகிறான் ஜீயூஸ்.*

***வரிகள் 166 – 321***

*ஜீயூஸிடமிருந்து கிடைத்த ஒரு சகுனக்குறியை அடையாளம் கண்டு கொண்ட பிறகு, தன் மகன்களைச் சுற்றி வந்த ப்ரியம் அக்கிலிஸைப் பார்க்கக் கிளம்பி வருகிறான்.*

***வரிகள் 322 – 469 (40வது நாளுக்கு முந்தையை இரவு)***

*அக்கிலிஸைப் பாசறையில் பார்க்கச் செல்லும் ப்ரியத்தோடு மாறுவேஷத்தில் செல்கிறான் (கடவுள்களின் தூதுவனான) ஹெர்மிஸ்.*

***வரிகள் 469 – 571***

*ப்ரியத்தின் வேண்டுகோளை அக்கிலிஸ் ஏற்றுக்கொள்கிறான். இருவரும் அழுகின்றனர். ப்ரியத்தின் விதியை தன் தந்தை பீலீயூஸின் விதியோடு ஒப்பிடுகிறான் அக்கிலிஸ்.*

***வரிகள் 572 – 691***

*ப்ரியம் கொண்டு வந்தப் பரிசுப் பொருள்கள் எடுத்துக் காட்டப் படுகின்றன. ஹெக்டரின் உடல் சவ வண்டியில் வைக்கப்படு கிறது. அக்கிலிஸும் ப்ரியமும் சேர்ந்து சாப்பிடுகின்றனர். இரவானதும் ரகசியமாக ப்ரியமை அழைத்துச் செல்கிறான் ஹெர்மிஸ்.*

***வரிகள் 691 – 784 (40வது நாள்)***

*ப்ரியம் வருவதைப் பார்க்கிறாள் (ப்ரியமின் அழகிய மகளும் தீர்க்கதரிசியுமான) கஸ்ஸாண்ட்ரா. ஆன்ட்ரோமக்கி, ஹெகாபி, ஹெலன் ஆகியோர் அழுது புலம்புகின்றனர். விறகு சேகரிக்கப் படுகிறது. (ஹெக்டருக்கான சிதையை உருவாக்க ஒன்பது நாட்கள் பிடிக்கின்றன).*

***வரிகள் 785 – 804 (49வது நாள்)***

*ஹெக்டர் எரியூட்டப் பட்டு (50வது நாள்) அடக்கம் செய்யப்படு கிறான். ஒரு கல்லறை மேடும் எழுப்பப்படுகிறது. ப்ரியமின் அரண்மனையில் ஈமச்சடங்குகளுக்குப் பிறகான விருந்து கொடுக்கப்படுகிறது.*

# ப்ரியமும் அக்கிலிஸும்

கூடியிருந்த அனைவரும் பிரிந்து சென்றனர். சுவையான உணவு தரும் இன்பத்தையும் இனிய உறக்கத்தையும் எண்ணிய வர்களாகப் போட்டிகளில் கலந்து கொண்ட போர் வீரர்களும் தத்தம் கப்பல்களுக்குச் சென்றனர். ஆனால் தன் ஆத்ம நண்பனை நினைத்து அழத் தொடங்கினான் அக்கிலிஸ். அவனை அக்கிலிஸால் மறக்கவே முடியவில்லை. எல்லாரையும் வெற்றி கொள்ளும் உறக்கமானது அவனிடம் வர மறுத்தது. இப்படியும் அப்படியுமாக அவன் படுக்கையில் புரண்டு கொண்டே இருந் தான். பெட்ரோக்குலஸின் மரணத்தால் ஏற்பட்ட இழப்பையும், அவனது வீரத்தையும், அவர்களிருவரும் சேர்ந்து பெற்ற அனுபவங்களையும், சேர்ந்து பட்ட கஷ்டங்களையும், எதிரி களை எதிர்த்து வென்ற போர்க்களங்களையும், கடல் பயணத்தின் போது சந்திக்க நேர்ந்த அபாயங்களையும் நினைத்து நினைத்துப் புலம்பிக் கொண்டிருந்தான். நினைவுகள் கும்பலாக நெருக்கி யடித்துக் கொண்டு வரவர, அவன் கன்னங்களில் சூடான கண்ணீர் வழிந்தோடியது. சில சமயம் ஒருக்களித்தும், சில சமயம் மல்லாக்கவும், சில சமயம் குப்புறவும் படுத்துப் புரண்ட வண்ணமிருந்தான் அக்கிலிஸ். பிறகு திடீரென்று எழுந்து கொண்டு, மனச் சங்கடப் பட்டவனாக, உப்புக் கடல் கரையோர மாக உலாவ ஆரம்பித்தான்.

கடலுக்கும் கடற்கரைக்கும் ஒளியூட்டிய விடியல்கள் யாவும் அக்கிலிஸ் அங்கேயே நிற்பதைப் பார்க்கத் தவறவில்லை. தேரில் தனது விரைவுக் குதிரைகளைப் பூட்டுவான். அதன் பின்புறமாகத் தளர்ந்த நிலையில் ஹெக்டரின் உடலைக் கட்டி வைப்பான்.

பெட்ரோக்குலின் கல்லறை மேட்டைச் சுற்றி மூன்று முறை வலம் வந்த பிறகு, ஹெக்டரின் உடல் குப்புற நீட்டப்பட்டு புழுதியில் முகம் புதைந்து கிடக்குமாறு விட்டுவிட்டு மறுபடியும் போய் தனது பாசறையில் ஓய்வெடுத்துக் கொள்வான்.

ஆனால் ஹெக்டர் இறந்திருந்தாலும், அப்போலோ அவனுக்காக இரக்கப் பட்டான். அவன் உடல் சிதைக்கப்படுவதிலிருந்து அவன் அதைக் காத்தான். அதோடு, தங்கத்தால் செய்யப்பட்ட ஈஜிஸ் எனும் கேடயத்தால் ஹெக்டரை மூடினான். அதனால் அவனுடலை அக்கிலிஸ் தேரில் கட்டி இழுத்துக் கொண்டு போனபோதும் அவனது சதை கிழியாமல் அது காத்தது.

இவ்விதமாகக் கடவுளையொத்த ஹெக்டரின் உடலைத் தன்னால் முடிந்த அளவு கோபத்தில் சிதைத்தான் அக்கிலிஸ். அருள்பாலிக்கும் கடவுள்கள் அனைவரும் அதைப்பார்த்து அவனுக்காக இரக்கப் பட்டனர். அவனுடலைத் திருடி வந்து விடும்படி அவர்கள் 'ராட்சச மிருகமான' அர்கஸைக் கொன்ற கூரிய பார்வை கொண்ட ஹெர்மிஸைக் கேட்டுக்கொள்ளவும் செய்தனர். ஆனால் இந்தக் கருத்து மற்ற கடவுளருக்கு விருப்ப மானதாக இருந்தாலும், ஹீராவும், பொஸைடனும், சாம்பல் நிறக் கண்களையுடைய அதீனியும் அதற்கு உடன்படவில்லை. தனது மேய்ப்பன் குடிலில் இருந்து பாரிஸ் அஃப்ரோடைட்டியை பிரபஞ்ச அழகியாகத் தேர்தெடுத்து ஹீராவையும் அதீனியையும் அவமானப்படுத்தி, அதற்குப் பரிசாக பெண்கள் மீதான மோகத்தைப் பெற்றுக் கொண்ட நாளிலிருந்து எப்படி அவனை வெறுத்தார்களோ அதே போல புனித இலியம் நகரையும், ப்ரியமையும் அவன் மற்ற மக்களையும் அவர்கள் வெறுத்தார்கள்.

பதினோரு நாட்கள் சென்றன. பன்னிரண்டாவது நாளின் தொடக்கத்தில் ஃபீபஸ் அப்போலோ தன் மனத்தில் உள்ளதை நித்தியர்களான கடவுள்களிடம் சொன்னான்:

'கொடூரம் மிகுந்த ராட்சச மிருகங்களைப் போல நீங்கள் கடின மனம் படைத்தவர்களாக இருக்கின்றீர்கள் கடவுள்களே. உங்க ளுக்காக ஹெக்டர் காளைகளின் தொடைகளையும் அப்பழுக் கற்ற வெள்ளாடுகளையும் பலியிடவில்லையா? ஆனால் இப்பொழுது அவன் உடலை மட்டுமாவது காப்பாற்றி அவன் மனைவி, அன்னை, பிள்ளைகள் பார்ப்பதற்காகவும், ப்ரியமும்

அவன் மக்களும் ஈமச்சடங்குகள் செய்து ஹெக்டருக்கு உரிய மரியாதை செய்யவும் அவர்களிடம் ஒப்படைக்கும் அளவுக்கு உதவுவதற்குக்கூட நீங்கள் விரும்பவில்லை. உணவு தேவைப் படும்போது தனது பலத்தையும் திமிர் கொண்ட பசியையும் தவிர வேறெதையும் பொருட்படுத்தாமல் மேய்ப்பர்களின் ஆடுமாடு களின் மீது பாயும் சிங்கத்தைப் போன்ற கொலை வெறி கொண்ட, நாகரீகம் என்றாலே என்னவென்று தெரியாத இரக்க மற்ற அக்கிலிஸைத்தான் நீங்களெல்லாம் ஆதரிக்க முடிவு செய்திருக்கிறீர்கள்.

அக்கிலிஸுக்கு பெட்ரோக்குலஸ் எவ்வளவு நெருக்கமாக இருந்தானோ அவனைவிட நெருக்கமாக இருந்த எத்தனையோ நண்பர்களைப் பலர் இழந்திருக்கிறார்கள். அவன் கூடப்பிறந்த சகோதரனாகவோ மகனாகவோ இருக்கலாம். அவனுக்காக அவர்கள் அழுகிறார்கள், துக்கப்படுகிறார்கள். அதோடு விஷயம் முடிந்துவிடுகிறது. ஏனெனில் எதையும் தாங்கும் இதயத்தை மனிதர்களுக்கு இயற்கை வழங்கியிருக்கிறது. ஆனால் இந்த அக்கிலிஸ் என்ன செய்கிறான்? ஹெக்டரைக் கொன்ற தோடல்லாமல், அவனது உடலைத் தேரின் பின்னால் கட்டி, பெட்ரோக்குலஸின் சமாதியைச் சுற்றி இழுத்துக் கொண்டே போகிறான். ஏதோ அதுதான் பெட்ரோக்குலஸுக்குச் செய்ய வேண்டிய மரியாதை அல்லது கடமை என்பதுபோல! அக்கிலிஸ் பெரிய் வீரனாக இருக்கலாம். ஆனால் கடவுளர்களாகிய நமது கோபத்துக்கு அவன் ஆளாகாமல் இருக்க வேண்டும். அதை முதலில் அவன் தெரிந்து கொள்ளட்டும். ஊமைக் களிமண்ணை உருச்சிதைப்பதுதான் இப்பொழுது அவன் செய்து கொண்டிருக் கிற வேலையெல்லாம்!'

கோபமாக அவனுக்கு வெள்ளை நிறக்கைகள் கொண்ட ஹீரா பதில் சொன்னாள்:

'வெள்ளி வில்லேந்திய கடவுளே! அக்கிலிஸை கௌரவப் படுத்துவதுபோல ஹெக்டரையும் கடவுள்களாகிய நீங்கள் கௌரவப் படுத்த விரும்பினால், நீ சொல்வதிலும் ஏதோ அர்த்தம் இருக்கத்தான் செய்யும். ஆனால் ஹெக்டரோ ஒரு பெண்ணின் மார்பில் பால் குடித்து வளர்ந்த செத்துப் போகக் கூடிய வெறும் மானிடன். ஆனால் அக்கிலிஸோ தேவதையான தீட்டிஸின் மகன். தீட்டிஸை நானே எனது சிறகுகளின் பாது காப்பில் வளர்த்தெடுத்து எங்கள் எல்லாருக்கும் மிகவும்

பிடித்திருந்த மானிடனான பீலியூஸுக்குத் திருமணம் செய்து வைத்தோம். எல்லாக் கடவுள்களும் அத்திருமணத்துக்கு வந்திருந்தார்கள். நீகூடத்தான் வந்திருந்தாய், அப்போலோ. திருமண விருந்தில் நீயும்தான் கையில் யாழுடன் உட்கார்ந்து சாப்பிட்டாய். நீயும் உனது கோணல் புத்தி கொண்ட நண்பர்களும் என அப்போதெல்லாம் உனக்கு இரண்டு முகங்கள் இருந்தன.'

மேகங்களைச் செலுத்தும் ஜீயூஸ் சொன்னான்:

'ஹீரா, கடவுளர்களிடம் கோபித்துக் கொள்வதை நிறுத்து. இறந்த இரண்டு பேரையும் சமமாக வைத்துப் பார்க்க முடியாது. ஆனால் இலியத்தில் அனைவரைவிடவும் நமக்கு மிகவும் பிரியமானவனாக ஹெக்டர் இருந்தான் என்பது மறுக்க முடியாத உண்மை. நிச்சயமாக எனக்குப் பிரியமானவனாக அவன் இருந்தான். எனக்குப் பிடித்தமான எதையும் கொடுக்க அவன் தவறியதே இல்லை. தாராளமான நேர்ச்சைகள், மதுபானத் திருப்படையல்கள், பலியாக எரிக்கப்பட்ட மிருகங்களின் கொழுப்பு எனக் கடவுள்களுக்கு எப்போதுமே உரிய உரிமைகளான எல்லாமே நிறைந்ததாகத்தான் என் பலிபீடங்களை அவன் வைத்திருந்தான். ஆனால் ஹெக்டருடைய உடலைத் திருட்டுத்தனமாகக் களவாடிக் கொண்டு வரும் எண்ணத்தை முதலில் நாம் கைவிட வேண்டும். அது நடைமுறைப் படுத்தக்கூடியதும் இல்லை. ஏனெனில் அக்கிலிஸின் அன்னை இரவும் பகலும் அவனருகிலேயே இருந்து பார்த்துக் கொண்டிருக்கிறாள். சரி, ஆனால் யாராவது ஒரு கடவுள் அவளிடம் போய் நான் வரச்சொன்னதாகச் சொல்லி வாருங்கள். மீட்புக்காகப் பரிசுப் பொருள்களை வாங்கிக் கொண்டு ஹெக்டரின் உடலை ப்ரியமிடம் ஒப்படைக்கும் திட்டம் ஒன்றை நான் மிகவும் கவனமாக வகுத்திருக்கிறேன்.'

அவன் அப்படிச் சொன்னதும் உடனே அய்ரிஸ் தீட்டிஸிடம் சொல்லிவரக் காற்றைப் போல விரைந்து சென்றாள். சமோத்ரேஸுக்கும் கரடுமுரடான இம்ப்ரோஸுக்கும் மத்தியில் அவள் கருப்பான ஆழ்கடலில் அமிழ்ந்தாள். கடல் நீர் பெரும் சப்தம் எழுப்பி எதிரொலித்தது. தூண்டில் போடுபவர்கள் பேராசை கொண்ட மீன்களைப் பிடிப்பதற்கு இரையாக வைத்து ஏமாற்றும் காளை மாட்டின் கொம்போடு சேர்த்து இணைத்து வைக்கும் காரீயத்தைப் போல அவள் கடலின் ஆழத்துக்குள் அமிழ்ந்தாள். சுவர்களால் சூழப்பட்ட தன் குகையில் தீட்டிஸை அவள்

பார்த்தாள். அவளைச் சுற்றி உப்புக்கடலின் தேவதைகள் பலர் நின்று கொண்டிருந்தனர். அவர்களுக்கு மத்தியில் இருந்த அவள், இணையற்ற தன் அருமை மகன் தன் தந்தையர் நாட்டை விட்டு வெகு தூரமாக, செழிப்பான ட்ராய் நகரில் கொல்லப்பட இருந்த விதியை எண்ணி வேதனைப் பட்டுக்கொண்டிருந்தாள். விரைவுப்பாத அக்கிலிஸ் அவளிடம் வந்து சொன்னாள்:

'வா தீட்டிஸ், முடிவற்ற ஞானத்தில் திளைத்துக் கொண்டிருக்கும் ஜீயூஸ் உன்னை அவர் பக்கம் அழைக்கிறார்.'

வெள்ளிப்பாத தேவதை தீட்டிஸ் கேட்டாள்:

'எதற்காக அந்த மகா கடவுள் என்னை அழைக்கிறார்? வேதனையில் மூழ்கிக் கொண்டிருக்கும் நான் கடவுளர்களோடு கலப்பதை விரும்பவில்லை. இருந்தாலும் வருகிறேன். ஜீயூஸ் காரணமின்றி அழைக்கமாட்டார்.'

இப்படிச் சொல்லிவிட்டு ஒரு கருநீலப் போர்வையை எடுத்துக் கொண்டு (அதைவிட இருட்டான ஒன்று அவள் அணிவதற்கு அங்கே வேறெதுவும் இருக்கவில்லை) கிளம்பினாள் கடல் தேவதை. அவளுக்கு முன்பாக காற்றைப் போலச் சென்றாள் விரைவு அய்ரிஸ். அவர்களுக்கு வழிவிட்டு விலகியது கடல் நீர். கடற்கரைக்கு வந்த பின் அவர்கள் வானத்தை நோக்கிச் சென்றனர். அங்கே தூரத்து இடிமுழக்கக் கடவுளான ஜீயூஸ் அமர்ந்திருந்தான். அவனைச் சுற்றி அருள்பாலிக்கப்பட்ட நித்தியர்களான மற்ற கடவுள்கள் அமர்ந்திருந்தனர். தந்தை ஜீயூஸின் காலடியில் அமர்ந்தாள் தீட்டிஸ். அவளுக்கு ஒரு நாற்காலியைப் போட்டாள் அதீனி. நல்வரவு கூறிய ஹீரா தீட்டி ஸிடம் ஒரு தங்கக் கோப்பையைக் கொடுத்தாள். அதிலிருந்த பானத்தைக் குடித்த பிறகு கோப்பையை ஹீராவிடம் திரும்பக் கொடுத்தாள் தீட்டிஸ். மனிதர்களுக்கும் கடவுள்களுக்கும் தந்தையான ஜீயூஸ் தன் மனத்தில் உள்ளதைக் கூறினான்:

'தேவதையே தீட்டிஸ், நீ வேதனையில் மூழ்கியுள்ளாய், எனக்குத் தெரியும். உனது வேதனைகளையெல்லாம் பொருட்படுத்தாமல் ஒலிம்பஸுக்கு வந்துள்ளாய். இருந்தாலும் உன்னை இங்கே ஏன் அழைத்தேன் என்று நான் உன்னிடம் சொல்லியாக வேண்டும். நகரங்களை அழிப்பவனாகிய அக்கிலிஸுக்கும் ஹெக்டரின் உடலுக்கும் இடையில் ஒன்பது நாள்களாகக் கடவுள்கள் சண்டை போட்டுக் கொண்டிருக்கின்றனர். ஹெக்டரின் உடலைத் திருடிக்

கொண்டு வந்துவிடுமாறு அர்கஸைக் கொன்ற கூரிய பார்வை கொண்ட ஹெர்மிஸைக் கேட்கலாம் என்றுகூட அவர்கள் நினைத்துவிட்டனர். ஆனால் அக்கிலிஸுக்குக் கீர்த்தியைக் கொடுக்க நான் முடிவு செய்து விட்டேன். அந்த வகையில் உனது எதிர்கால மரியாதையும் நல்லெண்ணத்தையும் காப்பாற்றவும் முடிவு செய்துள்ளேன்.

உடனே நீ முகாமுக்குச் சென்று உன் மகனிடம் என் விருப்பத்தைக் கூறிவா. கடவுளர்கள் அவன் செயல்களின்மீது திருப்தி கொள்ள வில்லை என்று அவனிடம் கூறு. அதில் நான்தான் அவன்மீது அதிக கோபமாக இருக்கிறேன் என்றும் கூறு. ஏனெனில் அவனது மூர்க்கமான கோபத்தினால், ஹெக்டரின் உடலை அவன் விடுவிக்க மறுக்கிறான். பறவைகளின் அலகுகளைப் போன்ற முக அமைப்பு கொண்ட கப்பல்களின் அருகிலேயே வைத்திருக் கிறான். என் பொருட்டு ஹெக்டரை விட்டுவிட அவன் முடிவு செய்வானாகில், நிறைய பரிசுப் பொருள்கள் கொண்டு வந்து கொடுத்து அக்கிலிஸின் மனதைத் தேற்றி உன் மகனின் உடலை மீட்டுப் போகலாம் என்ற செய்தியை அறிவித்து வருமாறு சொல்லி நான் உடனே அய்ரிஸை ப்ரியமிடம் அனுப்புவேன்.'

அவன் அப்படிச் சொன்னதும் வெள்ளிப்பாத தேவதை தீட்டிஸ் ஏற்றுக் கொண்டாள். ஒலிம்பஸ் மலையின் உயரங்களிலிலிருந்து ஒரு பருந்தைப்போல அவள் கீழிறங்கி வந்து தன் மகனின் பாசறையை அடைந்தாள். அங்கே அவன் இடைவிடாமல் வேதனையில் முனகிக் கொண்டிருப்பதைப் பார்த்தாள். அவனைச் சுற்றி இருந்த அவனுடைய தோழர்கள் உணவு தயார் செய்வதில் மும்முரமாக ஈடுபட்டிருந்தார்கள். அதற்காக நிறைய ரோமம் கொண்ட ஒரு செம்மறியாடு அறுக்கப்பட்டது. அக்கிலி ஸின் அன்னையான தீட்டிஸ் அவனருகே அமர்ந்து அவனை அன்பாகத் தடவி சொன்னாள்:

'என்னருமைக் குழந்தாய், உண்ணுவதையும் உறங்குவதையும் கூட மறந்து எவ்வளவு நாளைக்கு இப்படி அழுகையும் புலம்பலுமாக வேதனை பட்டுக் கொண்டிருக்கப் போகிறாய்? யாராவது ஒரு பெண்ணோடு உன் படுக்கையைப் பகிர்ந்து கொள்ளச் செல்வது நல்லது. ஏனெனில் நீ உயிரோடு இருக்கப் போவது இன்னும் கொஞ்ச காலம்தான். ஏற்கெனவே நீ இரக்க மற்ற விதியின்படி மரணத்தின் நிழலில்தான் நின்று கொண்டி ருக்கிறாய்.

நான் சொல்வதைக் கவனமாகக் கேள். நான் ஜீயூஸின் உத்தரவுப் படி இங்கே வந்திருக்கிறேன் என்பதை மறந்து விடாதே. கடவுளர்கள் உன் செயல்களின்மீது திருப்தி கொள்ளவில்லை என்றும் அதில் ஜீயூஸ்தான் உன்மீது அதிக கோபமாக இருக்கிறார் என்றும் அவர் சொன்னார். ஏனெனில் உனது மூர்க்கமான கோபத்தினால், ஹெக்டரின் உடலை நீ விடுவிக்க மறுத்துப் பறவைகளின் அலகுகளைப் போன்ற முகஅமைப்பு கொண்ட கப்பல்களின் அருகிலேயே வைத்திருக்கிறாய் என்றும் அவர் சொல்லச் சொன்னார். வாவா, ஹெக்டரின் உடலை மீட்புப் பொருள்களை வாங்கிக் கொண்டு திருப்பிக் கொடுத்துவிடு.'

விரைவுப்பாத அக்கிலிஸ் அவளுக்குப் பதில் சொன்னான்:

'அந்த ஒலிம்பியன் இதை உண்மையிலேயே மனப்பூர்வமாகச் சொன்னார் என்றால், அப்படித்தான் எனக்கவர் உத்தரவு போட்டிருக்கிறார் என்றால், எனக்கு மீட்புப் பொருள்கள் யார் கொடுப்பாரோ அவரைக் கொண்டு வாருங்கள். ஹெக்டரின் உடலை எடுத்துப் போங்கள்.'

இவ்விதமாகக் கப்பலில் தாயும் மகனும் பலவிதமாகப் பேசிக் கொண்டிருக்கையில், இலியம் நகருக்குச் செல்லும்படிச் சொல்லி அய்ரிஸை அனுப்பினான் ஜீயூஸ்:

'உடனே போ விரைவு அய்ரிஸ். உன் ஒலிம்பிய வீட்டை விட்டு வீரம் மிக்க ப்ரியமின் நகரான இலியத்துக்குப் போ. கிரேக்கக் கப்பல்கள் இருக்குமிடத்துக்குச் சென்று, அக்கிலிஸின் மனம் மகிழுமாறு பரிசுப் பொருள்களைக் கொடுத்து ஹெக்டரின் உடலை மீட்டு வரச் சொல். ஆனால் துணைக்கு ஒரு ட்ரோஜன் கூட இல்லாமல் அவன் தனியாகச் செல்ல வேண்டும். வேண்டு மானால் அக்கிலிஸ் கொன்ற கடவுளையொத்த அந்த வீரனின் உடலைக் கொண்டுவர மிருதுவாகச் செல்லும் வண்டியை ஓட்டிப் போக வயதான கட்டியக் காரர்கள் அவன் கூடப் போகலாம். மரணத்தைப் பற்றி நினைக்க வேண்டாமென்றும் வேறு எந்த அச்சமும் தேவையில்லை என்றும் அவனிடம் கூறு. அவனோடு மிகச்சிறந்த வழிகாட்டிகளை நாம் அனுப்புவோம். அக்கிலிஸின் முன்னால் ப்ரியமைக் கொண்டுபோய் நிறுத்தும் வரை அர்கஸைக் கொன்ற ஹெர்மிஸ் அவனோடு இருப்பான். அக்கிலிஸின் குடிலுக்குள்ளே போன பிறகு அக்கிலிஸோ வேறெவருமோ அவனை யாரும் கொல்லப் போவதில்லை.

அதை அக்கிலிஸ் பார்த்துக் கொள்வான். அவன் முட்டாளோ, யோசனையற்றவனோ, கெட்டவனோ அல்ல. மாறாக, தன்னிடம் வேண்டிக் கேட்டுக் கொள்பவர்களை அவன் கருணையோடு நடத்துவான்.'

அவன் இப்படிச் சொல்லியதும், தனது பணியை முடிக்க, காற்றைப் போல விரைவாகச் சென்றாள் அய்ரிஸ். துக்கத்தின் குரல்கள் ஒலித்த ப்ரியமின் வீட்டுக்கு அவள் வந்தாள். முற்றத்தில் தங்கள் தந்தையைச் சுற்றி ப்ரியமுடைய பிள்ளைகள் தங்கள் ஆடைகளைக் கண்ணீரால் நனைத்துக் கொண்டு அமர்ந்திருந்தனர். மத்தியில் கிழவனான ப்ரியம் ஒரு மேலாடையைச் சுற்றிக் கொண்டு அமர்ந்திருந்தான். அவனுடைய உடம்பின் எல்லைக் கோடுகள் மட்டுமே தெரிந்தன. கைகளில் எடுத்து வைத்த சாணத்தால், தன் தலையிலும் கழுத்திலும் பூசிக்கொண்டு சுயமரியாதையை இழக்கும் வகையில் தரையில் புரண்டு கொண்டிருந்தான் அவன். எத்தனையோ வீரர்கள் கிரேக்கர்களின் கையால் இறந்துவிட்டதை நினைத்துக் கொண்டவர்களாக, அவனது மகள்களும் மருமகள்களும் வீடு முழுக்க அழுது புலம்பிக் கொண்டிருந்தனர்.

ஜீயூஸிடமிருந்து தூதுபோன அய்ரிஸ் ப்ரியமின் அருகில் நின்று தாழ்ந்த குரலில் சொன்னாள். ஆனால் அதைக் கேட்கக் கேட்க அவன் உடல் உறுப்புகள் ஆட ஆரம்பித்தன.

'டார்டானிய ப்ரியமே, துணிச்சலாக இரு. அமைதியாய் இரு, பயப்படாதே. கெட்ட செய்தியைத் தூக்கிக் கொண்டு நான் இங்கே தூது வரவில்லை. நம்பிக்கையைக் கொண்டு வந்திருக்கிறேன் நான். தூரமாக இருந்தாலும் உன் மீது இரக்கம் கொள்ளும் ஜீயூஸின் தூதாக நான் இங்கே வந்திருக்கிறேன். அக்கிலிஸின் மனம் மகிழுமாறு பரிசுப் பொருள்களைக் கொடுத்து, கடவுளையொத்த ஹெக்டரின் உடலை மீட்டு வருமாறு உங்களிடம் சொல்லச் சொல்லி அந்த ஒலிம்பியக் கடவுள் எனக்கு உத்தரவிட்டிருக்கிறார். ஆனால் துணைக்கு ஒரு ட்ரோஜன்கூட இல்லாமல் நீ தனியாகச் செல்ல வேண்டும். வேண்டுமானால் அக்கிலிஸ் கொன்ற கடவுளையொத்த அந்த வீரனின் உடலைக் கொண்டுவர மிருதுவாகச் செல்லும் வண்டியை ஓட்டிப் போக வயதான கட்டியக்காரர்களை அவன் கூட்டிப் போகலாம்; மரணத்தைப் பற்றி நினைக்க வேண்டாமென்றும் வேறு எந்த அச்சமும் தேவையில்லை என்றும் உன்னிடம் சொல்லச்

சொன்னார். உன்னோடு மிகச்சிறந்த வழிகாட்டிகளை அவர் அனுப்புவார். அக்கிலிஸின் முன்னால் உன்னைக் கொண்டு போய் நிறுத்தும்வரை அர்கஸைக் கொன்ற ஹெர்மிஸ் உன்னோடு இருப்பான். அக்கிலிஸின் குடிலுக்குள்ளே போன பிறகு உன்னை யாரும் கொல்லப் போவதில்லை. அதை அக்கிலிஸ் பார்த்துக் கொள்வான். அவன் முட்டாளோ, யோசனையற்றவனோ கெட்டவனோ அல்ல. மாறாக, தன்னிடம் வேண்டிக் கேட்டுக் கொள்பவர்களை அவன் கருணையோடு நடத்துவான்.'

இவ்வார்த்தைகளைச் சொல்லிவிட்டு விரைவுப்பாத அய்ரிஸ் மறைந்தாள். கோவேறு கழுதையால் இழுக்கப்பட்டுத் தங்கு தடையின்றிச் செல்லக் கூடிய ஒரு மிருதுவான வண்டியைத் தயார் செய்யும்படியும் அதன் மேலே ஒரு பிரம்புக் கூடையை வைக்கும் படியும் தன் மகன்களிடம் கூறினான் ப்ரியம். பின், உயர்ந்த கூரை வேயப்பட்ட, நறுமணமூட்டப்பட்ட, தேவதாரு மரத்தால் கட்டப்பட்ட, பொக்கிஷங்கள் நிறைந்த உக்கிரான அறைக்குச் சென்றான். தன் மனைவி ஹெகாபியை அழைத்து அவன் சொன்னான்:

'என் இனியவளே, ஒலிம்பிய தூதுவர் ஒருவர் ஜீயூஸிடமிருந்து என்னிடம் வந்தார். கிரேக்கக் கப்பல்கள் இருக்கும் இடம் வரை சென்று அக்கிலிஸின் மனம் மகிழுமாறு பரிசுப்பொருள்களை அவனுக்குக் கொடுத்து ஹெக்டரின் உடலைப் பெற்று வரும்படி அவர் உத்தரவிட்டுள்ளதாக அறிவித்தார். சொல், இதைப்பற்றி நீ என்ன நினைக்கிறாய்? அகன்ற கிரேக்க முகாமருகில் உள்ள கப்பல்களுக்குச் சென்று வரவேண்டுமென்றுதான் என் மனம் கூறுகிறது.'

அவன் அப்படிச் சொன்னதைக் கேட்டு அவன் மனைவி அலறினாள்:

'உங்களுக்கென்ன பைத்தியமா? உங்களிடம் ஞானமிருப்பதாகத் தூரதேசத்தில் உள்ளவர்களும் உங்களுடைய குடிமக்களும் சொல்லிவந்தார்களே, அதெல்லாம் பொய்யா? நீங்கள் மட்டும் தனியாக கிரேக்கக் கப்பல்கள்வரை செல்லலாம் என்று எப்படி முடிவுக்கு வந்தீர்கள்? அதுவும் உங்கள் மகன்களில் பலரைக் கொன்று போட்ட ஒரு மனிதனின் முன்னிலையில்?! உங்களுக்கு இரும்பு போன்ற இதயமிருக்க வேண்டும். அவனுடைய

அதிகாரத்தின் கீழ் நீங்கள் போய்விட்டீர்களென்றால், உங்களை அவன் பார்த்துவிட்டால், அந்தச் சதையுண்ணும் துரோகியான காட்டுமிராண்டி உங்களுக்குக் கருணையோ கொஞ்சமாவது மரியாதையோ காட்ட மாட்டான்.

ம்ஹூம். நாம் இப்பொழுது செய்ய வேண்டியதெல்லாம் வீட்டிலேயே உட்கார்ந்து கொண்டு நமது மகனுக்காக அழுது கொண்டிருப்பதுதான். இதுதான் இந்த உலகுக்கு முதன் முதலாக அவனுடைய உயிர் நூலை நான் கொண்டு வந்தபோது, இரக்கமற்ற விதி அவனுக்காகப் பின்னியதாகும். விரைவாக உண்ணும் நாய்களின் வயிற்றை நிரப்ப, தன் பெற்றோர்களை விட்டுத் தூரமான இடத்தில், ஒரு ராட்சச மிருகத்தின் பிடிகளில் சிக்கிக் கொண்டு கிடக்கவே விதி அமைந்ததோ! அந்த மிருகத்தின் ஈரல் மட்டும் எனக்குக் கிடைத்தால் அதை நான் என் பற்களால் ஆழமாகப் பற்றி விழுங்குவேன். அப்படிச் செய்வதுதான் என் மகனுக்கு அவன் செய்ததற்குத் தக்க பதிலாக அமையும். அக்கிலிஸ் ஹெக்டரைக் கொன்றபோது அவன் ஒன்றும் கோழையாக ஓடிப்போகவில்லை. ஆனால் ட்ராய் நகரத்தின் ஆண்பிள்ளைகளுக்காகவும் பரிபூரண ஒட்டியாணம் அணிந்த பெண்களுக்காகவும்.' உண்மையான வீரனாக அவனோடு சண்டை போட்டுக் கொண்டிருந்தான்.

மரியாதைக்குரிய கடவுளையொத்த ப்ரியம் பதில் சொன்னான்:

'நான் போவதாக முடிவு செய்துவிட்டேன். என்னைப் போக விடாமல் தடுக்காதே. கெட்ட சகுனம் சொல்லும் பறவையாக வும் எனது அரண்மனையிலேயே நீ மாறிவிடாதே. உன்னை என்னால் போவதிலிருந்தும் தடுக்க முடியாது. ஒரு தீர்க்க தரிசியோ பூசாரியோ, யாராவது ஒரு மனிதன் இப்படி என்னிடம் சொல்லியிருந்தால், அது ஒரு பொய்யென்று சொல்லி நான் அலட்சியப் படுத்தியிருப்பேன். ஆனால் பெண் தெய்வத்தின் குரலை நானே கேட்டேன். என் கண்களுக்கு எதிரே அவளை நான் பார்த்தேன். எனவே நான் போகிறேன். தேவதையின் வார்த்தை கள் நோக்கமின்றிச் சொல்லப்பட்டவை அல்ல. வெண்கலக் கவச உடைகொண்ட கிரேக்கர்களின் கப்பல்களுக்கு அருகே நான் சாக வேண்டுமென்று இருந்திருந்தால், சாவதையே நான் விரும்புகிறேன். என் மகனை எடுத்து என் மடியில் வைத்து மனதார நான் அழுதுவிட்டால் போதும், அக்கிலிஸ் என்னை அங்கேயே அப்போதே கொன்று போடட்டும்.'

இப்படிச் சொல்லிவிட்டு உக்கிரான அறையின் பொக்கிஷங்கள் இருந்த பெட்டிகளின் மூடிகளை ஒவ்வொன்றாகத் தூக்கினான். அவற்றிலிருந்து பன்னிரண்டு அழகான ஆடைகளை எடுத்தான். பன்னிரண்டு தளர் மேலுடுப்புகள் அவைகளுக்குப் பொருத்த மான பன்னிரண்டு போர்வைகள், அதே அளவு அங்கிகள், குறுந்தளருடைகள் ஆகியவற்றை எடுத்தான். எடை பார்த்துப் பத்து டாலண்ட்டுகள் தங்கத்தையும் எடுத்துக் கொண்டான். பளபளத்துக் கொண்டிருந்த இரண்டு முக்காலிகள், நான்கு கொப்பரைகள், த்ரேஸியாவுக்கு ஒரு வேலை நிமித்தமாகச் சென்றிருந்தபோது த்ரேஸியர்கள் கொடுத்த அழகான கோப்பை ஆகியவற்றையும் எடுத்துக் கொண்டான். அது ஒரு திகைப் படையச் செய்யும் பரிசாகும். ஆனால் மகனை மீட்க வேண்டும் என்ற எண்ணமே மேலோங்கியிருந்ததால் அந்தக் கோப் பையைப் பிரிவதற்கும் ப்ரியம் யோசிக்கவில்லை.

அரண்மனையின் புகுமுக மண்டபத்தில் பல ட்ரோஜன் வீரர்கள் நின்றுகொண்டிருந்தனர். அவர்களனைவரையும் திட்டி வெளியே அனுப்பினான் ப்ரியம்:

'வெறுக்கத்தக்க, பிரயோஜனமில்லாத இழிந்தவர்களே, இங்கிருந்து போய்விடுங்கள். நீங்கள் துக்கப்படுவதற்கு உங்கள் வீடுகளில் ஒன்றுமில்லாமலா இங்கே வந்து என் துக்கத்தையும் கெடுக்கிறீர்கள்? அல்லது எனது மகன்களிலேயே தலைசிறந்த வனை க்ரோனஸின் மகனான ஜீயூஸ் எடுத்துக் கொண்டு என்னை வேதனைக்கு உள்ளாக்கியது உங்களுக்குப் போதவில்லையா? அப்படியானால், சீக்கிரமே நல்ல செய்தி உங்களை வந்து சேரும். ஹெக்டர் இப்பொழுது இறந்துவிட்டதால், உங்களையெல்லாம் கொல்லுகின்ற வேலை இனி கிரேக்கர்களுக்கு மிகவும் சுலபமாக இருக்கும். எனது நகரம் கொள்ளையடிக்கப் பட்டு தரைமட்ட மாக்கப் படுவதைப் பார்ப்பதற்கு முன்பு நான் இறந்து ஹயடிஸின் மண்டபங்களுக்குப் போய்விட வேண்டும் என்பது தான் என் ஆசை.'

இப்படிச் சொல்லிவிட்டுத் தனது செங்கோலை ஆட்டி அவர் களையெல்லாம் விரட்டினான். சீக்கிரம் கோபமாகிவிடுகின்ற அந்தக் கிழவனிடமிருந்து தப்பித்து அனைவரும் ஓடினர். அதை யடுத்து, தன் மகன்களான ஹெலீனியஸ், பாரிஸ், கடவுளை யொத்த அகாதான், பம்மன், ஆன்ட்டிஃபோனஸ்,. போர் முழக்கத் தலைவனான பொலிடிஸ், டெய்ஃபோபஸ்,

ஹிப்போதூஸ், உயர்ந்த டியஸ் ஆகியோரைத் திட்டினான் ப்ரியம். அவர்கள் ஒன்பது பேரையும் பார்த்துக் கத்திவிட்டு அவர்கள் என்ன செய்ய வேண்டும் என்று கூறினான்:

'என் பரிதாபகரமான கோழை மகன்களே, இங்கிருந்து போய் விடுங்கள். கப்பல்களின் அருகில் இறந்த ஹெக்டருக்குப் பதிலாக நீங்கள் அனைவரும் கொல்லப்பட்டிருக்கலாம். எப்படி விதி என் வாழ்க்கையில் விளையாடி விட்டது! அகன்ற ட்ராய் நகரின் பகுதிகளிலேயே தலைசிறந்த மகன்களை நான் பெற்றிருந் தேன். இப்பொழுது அவர்களனைவரும் போய்விட்டனர் கடவுளையொத்த மெஸ்டர், தேரோட்டியான ட்ராய்லஸ், மனிதர் மத்தியில் ஒரு கடவுளைப் போல மதிக்கப்பட்ட ஹெக்டர் எல்லாரும் போய்விட்டனர். ம்ஹூம், ஹெக்டர் பார்ப்பதற்கு ஒரு கடவுளின் மகனைப் போலத்தான் இருந்தான். போர்க் கடவுள் அவர்களையெல்லாம் எடுத்துக் கொண்டு, அவமானப் படத்தக்க இந்தப் பிள்ளைகளை விட்டுச் சென்றிருக்கிறார். நீங்கள் அனைவரும் ஏமாற்றுக்காரர்கள், வீண் டம்பம் அடிப்பவர் கள். உங்களுடைய மக்களின் ஆடுமாடுகளையும் குட்டிகளையும் கொள்ளையடிக்காதபோது பாட்டிலும் நடனத்திலும் நட்சத்திரங் களாக ஜொலிக்க விரும்புபவர்கள். தயவு செய்து நான் பயணம் செல்வதற்கான வண்டியைத் தயார் செய்து இந்தப் பொருள்களை யெல்லாம் அதில் கொண்டு போய் வைக்கிறீர்களா?'

அவன் அப்படிப் பேசியதும் தந்தையின் கடுமையான வசவுச் சொற்களைக் கேட்டு அவர்கள் பயந்து போயினர். கோவேறு கழுதையால் இழுத்துச் செல்லப்படும் ஒரு அருமையான வண்டியைத் தாமதமின்றிக் கொண்டு வந்தனர். அதன் மீது ஒரு பிரம்புக் கூடையையும் வைத்தனர். அதன் ஆணியிலிருந்து கழுதைகளுக்கான ஒரு கழியையும் கீழே எடுத்து வைத்தனர். அதன் மத்தியில் ஒரு திருகு குமிழும், கடிவாளங்களைச் செலுத்தும், வசதியும் இருந்தன. கவனமாக அதை அவர்கள் பளபளப்பாக்கப்பட்ட மரத்தண்டின் மீது வைத்தனர். பின் அதை உரிய இடத்தில் பொருத்தி, கம்பி சுற்றிக் கட்டித் தயாராக வைத்தனர்.

இதைச் செய்து முடித்த பிறகு உக்கிரான அறைக்குச் சென்று ஹெக்டரின் உடலைத் திரும்பப் பெறுவதற்கான அளப்பரிய மீட்புப் பரிசுப் பொருள்களைக் கொண்டு வந்தனர். பின் பயிற்சி பெற்ற கோவேறு கழுதைகளை வண்டியின் நுகத்தடியோடு

இணைத்தனர். மைசிய மக்கள் ப்ரியமுக்குக் கொடுத்த அருமை யான பரிசுக் கழுதைகள் அவை. கடைசியாக ப்ரியமின் தேரை வெளியே கொண்டு வந்தனர். அதைக் குதிரைகளோடு இணைத் தனர். அக்குதிரைகளை ப்ரியம் தன் சொந்த வேலைக்காக மட்டும் பயன்படுத்தி வந்தான். பளபளப்பாக்கப்பட்ட தீவனப் பெட்டிகளில்தான் அவைகளுக்கு அவன் உணவளித்தான்.

உயர்ந்த அரண்மனையில் இருந்த ப்ரியமும் அவனது கட்டியக் காரனும் கோவேறு கழுதைகளையும் குதிரைகளையும் வண்டி களில் பூட்டுவதில் ஈடுபட்டிருந்தபோது, அவர்களைப் பார்க்க மிகுந்த வேதனையுடன் ஹெகாபி வந்தாள். அவளது வலது கையில் சுவையான மது ஊற்றப்பட்ட தங்கக் கோப்பை இருந்தது. அவர்கள் பயணப்படுவதற்கு முன் கடவுளுக்குத் திருப் படையல் செய்ய எடுத்து வரப்பட்ட பானம் அது. தேர் நின்று கொண்டிருந்த இடம் வரை வந்த அவள் ப்ரியமிடம் சொன்னாள்:

'கப்பல்களை நோக்கிப் போயே தீருவதென நீங்கள் முடிவு செய்துவிட்டதால், இதோ, எதிரிகளின் கைகளிலிருந்து நீங்கள் பாதுகாப்பாக வீடு திரும்ப வேண்டி இந்தப் பானத்தைத் தந்தை ஜீயூஸுக்கு அர்ப்பணம் செய்துவிட்டுப் பிரார்த்தியுங்கள். நீங்கள் போவதில் எனக்கு விருப்பமில்லை. ஆனாலும் எனது விருப்பத் துக்கு மாறாக நீங்கள் போகிறீர்கள். எனவே நீங்கள் போய்த்தான் ஆகவேண்டுமெனில், மேகங்களைக் கருக்க வைக்கும் க்ரோனஸின் மகனாகிய ஜீயூஸை வேண்டிக் கொள்ளுங்கள். அய்டா மலையின் கடவுள் அவர்தான். அவருக்குக் கீழே பரந்து கிடக்கும் ட்ராய் நகரம் முழுவதையும் அவர் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறார். ஏதாவதொரு பறவை வந்து சகுனம் சொல்ல வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுங்கள். பறவைகள் தான் அவரிடமிருந்து வரும் விரைவுத் தூதுவன். அது அவருக்கு மிகவும் பிடித்த தீர்க்கதரிசனப் பறவையாக, சிறகு கொண்டு பறப்பவைகளில் மிக உறுதியானதாக இருக்கட்டும். விரைவுக் குதிரைகளைக் கொண்ட கிரேக்கர்களின் கப்பல்களுக்கு நீங்கள் போவதனால், அது நீங்கள் தெளிவாக உங்கள் கண்களாலேயே பார்த்து நம்பிக்கை வைக்குமாறு உங்கள் வலப் பக்கமாகப் பறந்து வரட்டும். ஆனால் தூரத்து இடிமுழக்கம் செய்யும் ஜீயூஸ் அப்படி ஒரு சகுனத்தை அனுப்ப மறுத்துவிடுவாரேயானால், நீங்கள் எவ்வளவுதான் விரும்பினாலும் கிரேக்கக் கப்பல்களுக்கு நீங்கள் போகவேண்டாம் என்று நான் சொல்வேன்.'

கடவுளையொத்த ப்ரியம் பதில் சொன்னான்:

'என் கண்ணே, நீ சொல்வதுபோலவே செய்கிறேன். கைகளை உயர்த்தி ஜீயூஸிடம் கேட்பது எப்போதுமே ரொம்ப நல்லது.'

இப்படிச் சொல்லிவிட்டுப் பணியாளை அழைத்துத் தன் கைகளில் சுத்தமான நீரை ஊற்றும்படிக் கூறினான். ஒரு ஜாடியும் தட்டும் கொண்டு வந்து வேண்டியன செய்தாள் அவள். கைகளைக் கழுவிய பிறகு, மனைவியிடமிருந்த அந்தக் கோப்பையை வாங்கிக் கொண்டு பிரார்த்தனை செய்ய முன்கட்டுக்குச் சென்றான். மதுவை ஊற்றிக் கொண்டே வானத்தை அண்ணாந்து பார்த்துச் சொன்னான்:

'தந்தை ஜீயூஸ். அய்டா மலையிலிருந்து ஆளும் நீ மிக்க ஆற்றலும் அதிகாரமும் கீர்த்தியும் உள்ளவன். அக்கிலிஸ் என்னைக் கருணையோடும் அன்போடும் நடத்த வேண்டும். உனது விரைவுத் தூதுவனான பறவை மூலமாக எனக்கொரு சகுனத்தை அனுப்பு. அது உனக்கு மிகவும் பிடித்த, தீர்க்கதரிசனப் பறவையாக, சிறகு கொண்டு பறப்பவைகளில் மிக உறுதியானதாக இருக்கட்டும். விரைவுக் குதிரைகளைக் கொண்ட கிரேக்கர்களின் கப்பல்களுக்கு நான் போவதனால், அது நான் தெளிவாக என் கண்களாலேயே பார்த்து நம்பிக்கை வைக்குமாறு என் வலப் பக்கமாகப் பறந்து வரட்டும்.'

இப்படியாக ப்ரியம் பிரார்த்தனை செய்தான். அதைக் கேட்ட அறிவுரை தருவதில் அறிவார்ந்தவனான ஜீயூஸ் உடனே ஒரு கழுகை அனுப்பினான். தீர்க்கதரிசனப் பறவைகளிலேயே மிகச் சிறந்தது அதுதான். அரையிருளில் வேட்டையாடும் தங்கக்கழுகு என்று அதை அழைத்தனர். அது தன் சிறகுகளை விரித்து விட்டதென்றால் ஒரு செல்வந்தனின் வீட்டில் இருக்கும் உயரமான அறையில் நன்கு தாழ்ப்பாள் போடப்பட்ட கதவின் அகலத்துக்கு இருக்கும். தங்களுக்கு வலதுப் பக்கமாக நகரின் குறுக்கே அது பறந்து வருவதை அவர்கள் பார்த்து மிகவும் மகிழ்ச்சியுற்றனர். அது எல்லார் மனதிலும் நிம்மதியையும் நம்பிக்கையையும் ஏற்படுத்தியது.

கிழவன் ப்ரியம் உடனே தன் தேரில் ஏறி வாயில் கதவு மற்றும் அதைத்தொடர்ந்திருந்த தூண்களின் வரிசை கொண்ட வழியாக ஓட்டிக் கொண்டு வெளியில் சென்றான். அவனுக்கு முன்னால் கோவேறு கழுதைகளால் இழுத்துச் செல்லப்பட்ட நான்கு

சக்கரங்கள் கொண்ட வண்டி சென்று கொண்டிருந்தது. அதை அறிவார்ந்தவனான இடாயூஸ் ஓட்டிச் சென்றான். அதன் பின்னால் ப்ரியமின் தேர் சென்றது. தன் சாட்டையைப் பயன்படுத்தி நகரிலிருந்து வேகமாக ஓட்டினான் கிழவன். இருந்தும் அவனுடைய குடும்பம் முழுவதுமே அவனைப் பின் தொடர்ந்து வந்துகொண்டிருந்தது. ஏதோ இறப்பை நோக்கி அவன் போய்க்கொண்டிருப்பது போல வருத்தத்தோடு வந்தது. ஆனால் தெருக்களையெல்லாம் தாண்டிச் சமவெளிக்கு அவர்கள் வந்தபோது, அவனுடைய மக்களான மகன்களும் மருமகன் களும் வீடு நோக்கி இலியம் நகருக்குத் திரும்பிச் சென்றார்கள்.

இரண்டு பேரும் சமவெளியில் வேகமாகச் சென்று கொண்டிருப் பதைப் பார்த்தான் தூரத்து இடிமுழக்கம் செய்யும் ஜீயூஸ். கிழவனுக்காக இரக்கப்பட்ட அவன் உடனே தன் மகன் ஹெர்மிஸிடம் சொன்னான்:

'ஹெர்மிஸ், மனிதர்களுக்கு வழிகாட்டுவது உனக்கு மிகவும் இன்பம் தரும் செயலாகும். உனக்குப் பிடித்தவர்களின் வேண்டு கோள்களுக்கு நீ எப்போதுமே செவிசாய்ப்பாய். எனவே நீ இப்பொழுது உடனே போ. உட்குழிந்த கிரேக்கக் கப்பல் களுக்குச் செல்லும் வழியைத் தலைவன் ப்ரியமுக்குக் காட்டு. ஆனால் அவன் அக்கிலிஸைப் போய்ப் பார்க்கும்வரை வேறு எந்த கிரேக்கனுக்கும் அவ்ன் வருவது தெரியக் கூடாது. யாருமே அவனை அடையாளம் கண்டுகொள்ளவும் கூடாது.'

அவன் அப்படிச் சொன்னதும், வழிகாட்டியும் அர்கஸைக் கொன்றவனுமாகிய ஹெர்மிஸ் அதற்கு உடன்பட்டான். தனது பாதங்களில் தனது அழகான காலணிகளை அணிந்து கொண் டான். அது தங்கத்தால் செய்யப்பட்டிருந்த அழியாததாகும். நீரிலும் எல்லையற்ற நிலத்திலும் அது அவனைக் காற்றின் வேகத்தில் விரும்பும் இடத்துக்குக் கொண்டு சேர்க்கும் வல்லமை கொண்டது. தன் மந்திரக் கோலையும் அவன் எடுத்துக் கொண்டான். அதை ஆட்டினால் போதும், பார்வைக்குத் தெரியாதபடிச் செய்துவிடுவான். அதோடு மனிதர்களை உறங்க வைக்கவும் உறக்கத்திலிருந்து விழிக்க வைக்கவும் அந்தக் கோலால் முடியும். சக்தி வாய்ந்த அந்த மந்திரக் கோலுடன் அர்கஸைக் கொன்ற அவன் உடனே கிளம்பினான். விரை விலேயே ட்ராய் நகரையும் ஹெல்லெஸ்பாண்ட்டையும் அடைந்தான். அப்போதுதான் தாடி முளைக்கும் இளமையான

தலைவனைப் போல தோற்றம் கொண்டு, அங்கிருந்து அவன் நடந்து சென்றான்.

இருவரும் (ட்ராய் நகரத்த நிர்மாணித்தவனாகக் கருதப்படும்) அய்லஸின் கல்லறை மேடான மகா சமாதி இருந்த இடத்தைத் தாண்டிச் சென்றனர். அங்கிருந்த ஆற்றில் கழுதைகளும் குதிரைகளும் நீரருந்தட்டும் என்று சற்று நிறுத்தினர். அப்போது இரவு நேரமாகவும் ஆகிக்கொண்டிருந்தது. ஹெர்மிஸ் அவர் களுக்கு அருகில் இருந்தபோது, அண்ணாந்து அவனைப் பார்த்த இடாயூஸ் ப்ரியத்திடம் சொன்னான்:

'அங்கே பாருங்கள் ப்ரியம். நாம் மிகவும் கவனமாக இருக்க வேண்டும். யாரோ இருக்கிறார்கள். எனக்குத் தெரிகிறது. நம்மைக் கொலை செய்யப் போகிறார்கள் என்று நினைக்கிறேன். சீக்கிரம், நாம் தேரில் ஏறித் தப்பித்துவிடுவோம். இல்லை யெனில் அவர்களின் காலில் விழுந்து கருணை காட்டச் சொல்லிக் கெஞ்சுவோம்.'

அவன் அப்படிச் சொன்னதும் கிழவனுக்கு ஒன்றும் புரிய வில்லை. குழம்பிப் போனான். அச்சம் அவனைப் பிடித்துக் கொண்டது. வளைந்து போன அவனது உறுப்புகளிலெல்லாம் மயிர்க்கால்கள் குத்திட்டு நின்றன. ஸ்தம்பித்தவனாக எழுந்து நின்றான் ப்ரியம். ஆனால் அவனருகில் விரைந்து சென்ற ஹெர்மிஸ் அவனது கைகளைப் பிடித்துக் கொண்டு சொன்னான்:

'தந்தையே, இந்தக் கழுதைகளையும் குதிரைகளையும் ஓட்டிக் கொண்டு நித்தியமான இந்த இரவு நேரத்தில், அனைவரும் உறங்கிக் கொண்டிருக்கும்போது, எங்கே செல்கிறீர்கள்? நமக்கு வெகு அருகில் இருக்கும் அந்தத் துணிச்சலான எதிரிகளான கிரேக்கர்களை நினைத்து நீங்கள் அஞ்சவில்லையா? இவ்வளவு மதிப்பு மிகுந்த பொருள்களையெல்லாம் எடுத்துக் கொண்டு, இப்படிப்பட்ட இரவு நேரத்தில் நீங்கள் வருவது அவர்களில் யாருக்காவது தெரிய வருமானால், நீங்கள் என்ன செய்வீர்கள்? உங்களைத் தாக்க வரும் யாரையும் எதிர்த்து நிற்கும் அளவுக்கு நீங்கள் இளமையானவர் அல்ல. உங்கள் தோழனும் ஒரு கிழவ னாகவே இருக்கிறான். ஆனால் உங்களுக்குக் கெடுதி எதுவும் செய்ய நினைத்து நான் வரவில்லை. உண்மையில் வேறு யாரா லும் உங்களுக்குத் தொந்தரவு ஏற்படாமல் பார்த்துக் கொள்ளத் தான் நான் வந்தேன். ஏனெனில், நீங்கள் என் வயதான அப்பாவை நினைவு படுத்துகிறீர்கள்.'

கடவுளையொத்த கிழவன் ப்ரியம் சொன்னான்:

'எங்கள் நிலை ஏறக்குறைய நீ சொல்வது போல்தான் இருக்கிறது அருமை மகனே. ஆனால் உன்னைப் போன்ற ஒருவனோடு பயணம் செய்ய வைத்ததன் மூலம், ஏதோ ஒரு கடவுள் எனக்கு உதவ நினைத்திருக்க வேண்டும். கடவுள் அனுப்பிய மாதிரித் தான் நீயும் வந்திருக்கிறாய். உன்னைப் பார்த்தால் மிகவும் உயர்ந்த குடிப்பிறந்தவனாகவும் ரொம்ப வித்தியாசமாகவும் தோன்றுகிறது. உன் அறிவார்ந்த பேச்சும் அப்படியே உள்ளது. உனது பெற்றோர்கள் மிகவும் அருள்பாலிக்கப் பட்டவர்களாக இருக்க வேண்டும்.'

வழிகாட்டியும் அர்கஸைக் கொன்றவனுமாகிய ஹெர்மிஸ் பதில் சொன்னான்:

'ஐயா, நீங்கள் சொன்ன அனைத்தும் சரி. ஆனால் இப்பொழுது நான் கேட்கப் போகும் கேள்விக்குச் சரியான பதிலைச் சொல் லுங்கள். ஏதாவது வெளிநாட்டுக்கு அருமையான பொக்கிஷங் களையெல்லாம் பாதுகாப்பாக அனுப்புகிறீர்களா? அல்லது எதிரிக்கு எதிரான போரில் யாரையுமே அவமானப்படுத்தாத உங்கள் மகனான மிகச்சிறந்த போர்வீரனை இழந்து விட்டதால், புனித இலியம் நகரை விட்டு நீங்களெல்லாம் பதற்றத்துடன் நீங்கிச் செல்லும் நேரம் வந்துவிட்டதா?' என்றான்.

கடவுளையொத்த கிழவன் ப்ரியம் சொன்னான்:

'அன்பார்ந்த ஐயா, யார் நீங்கள்? உங்களது பெற்றோர் யார்? எனது அருமை மகனுடைய பொல்லாத விதியைப் பற்றி எவ்வளவு அழகாக நீங்கள் பேசுகிறீர்கள்!'

வழிகாட்டியும் அர்கஸைக் கொன்றவனுமாகிய ஹெர்மிஸ் பதில் சொன்னான்:

'மரியாதைக்குரிய ஐயா, ஹெக்டரைப் பற்றி எனக்கென்ன தெரியும் என்று தெரிந்துகொள்ள என்னைச் சோதிக்கிறீர்கள் நீங்கள். நான் ஹெக்டரை எனது கண்களாலேயே பார்த்துள் ளேன். மனிதர்களுக்கு இறவாப் புகழ் கொடுக்கும் போர்களில் அவனைப் பலமுறை பார்த்திருக்கிறேன். ஏன், கிரேக்கர்களை அவர்களது கப்பல்களை நோக்கி அவன் விரட்டியதையும் தன் கூரீட்டியால் அவர்களைக் குத்திக் கொன்றதையும் நான் பார்த்தேன். மெர்மிடன்களாகிய நாங்கள் அருகிலேயே நின்று

வியந்து கொண்டிருந்தோம். ஏனெனில் தலைவன் அகமெம்ன னுடன் பிணக்கு ஏற்பட்டுப் போனதால், அக்கிலிஸ் எங்களைச் சண்டைபோட விடவில்லை.

நான் அக்கிலிஸின் உதவியாளன். அவன் வந்த அதே கப்பலில் தான் நானும் இங்கே வந்தேன். நான் ஒரு மெர்மிடன். எனது தந்தை பாலிக்டர். அவர் ஒரு செல்வந்தர். உங்களைப் போலவே அவரும் வயதானவர். அவருக்கு ஏழு மகன்கள். அவர்களில் நான்தான் கடைக்குட்டி. நாங்கள் சீட்டுக் குலுக்கிப் போட்ட போது, என் பெயர் வந்ததால், நான் இவர்களோடு கப்பலில் வர வேண்டியதாயிற்று. இன்று இரவு நான் கப்பலை விட்டுச் சமவெளிக்கு வந்துவிட்டேன். காரணம், விடிந்ததும், நகரைத் தாக்குவதாக அவர்கள் திட்டமிட்டுள்ளனர். அங்கேயே சும்மா உட்கார்ந்து உட்கார்ந்து அவர்கள் களைப்படைந்து விட்டார்கள். சண்டை ஏதாவது செய்தே தீருவது என்ற முடிவோடு இருக்கி றார்கள். கிரேக்கத் தலைவர்களும் அவர்களை நிறுத்த முடியாது.'

கடவுளையொத்த கிழவன் ப்ரியம் சொன்னான்:

'உண்மையிலேயே நீங்கள் பீலியூஸின் மகனாகிய அக்கிலிஸின் உதவியாளனாக இருந்தால் வாருங்கள். எனக்கு நடந்த உண்மை யெல்லாம் கூறுங்கள். எனது மகன் இன்னும் கப்பல்களில்தான் இருக்கிறானா அல்லது அக்கிலிஸ் அவனை ஏற்கெனவே கண்டதுண்டமாக வெட்டி நாய்களுக்குப் போட்டுவிட்டானா?'

வழிகாட்டியும் அர்கஸைக் கொன்றவனுமாகிய ஹெர்மிஸ் பதில் சொன்னான்:

'இதுவரை ஹெக்டரை நாய்களோ பறவைகளோ சாப்பிட்டு விடவில்லை ஐயா. அவரது உடல் அப்படியே கப்பல்களுக்கு அருகில் அக்கிலிஸின் பாசறையில் இருக்கிறது. கடந்த பதினோரு நாள்களாக அவரது உடல் அங்கேயே இருந்தாலும், அது கெடாமல்தான் இருக்கிறது. அதைப் போர்க்களத்தில் இறந்தவர்களின் உடல்களைப் பதம் பார்க்கும் புழுக்களும் தாக்கவில்லை. ஒவ்வொரு நாளும் விடியும் பொழுது, அவரது உடலை அக்கிலிஸ் தேரின் கால்களில் கட்டி, தன் ஆத்ம நண்பன் பெட்ரோக்குலஸின் சமாதியைச் சுற்றி இரக்கமற்ற முறையில் இழுத்துக்கொண்டு போகிறார் என்பது என்னவோ உண்மைதான்.

ஆனாலும் ஹெக்டரின் உடல் கெட்டுப் போகமலே இருக்கிறது. அந்தக் குடிலுக்குள் நீங்கள் போனால், புதிதாகப் படிந்த பனித்துளியை போல, ஹெக்டரின் உடல் அப்படியே இருப் பதைப் பார்த்து நீங்கள் ஆச்சரியப் பட்டுப் போவீர்கள். அவரது உடலில் இருந்து எல்லா ரத்தமும் கழுவப்பட்டுள்ளது. அவரது உடலின்மீது எந்த அடையாளமும் இல்லை. அவரைப் பலபேர் ஈட்டிகளால் குத்திக் காயப்படுத்தியிருந்தார்கள். ஆனாலும் அவரது காயங்கள்கூட ஆறிவிட்டன. அவருக்கு ஏற்பட்ட ஒவ்வொரு காயமும் ஆறியுள்ளது. அருள்பாலிக்கும் கடவுள்கள் உங்கள் மகன்மீது எவ்வளவு அக்கறை செலுத்துகிறார்கள் என்பதையே இது காட்டுகிறது. இறந்திருந்தாலும், கடவுள ருக்குப் பிரியமானவராக இருந்தவரல்லவா?'

அவன் அப்படிச் சொன்னதும் கிழவன் அகமகிழ்ந்து சொன்னான்:

'மகனே, கடவுளர்க்குச் செய்ய வேண்டிய மரியாதையைச் செய்வதுதான் எவ்வளவு அருமையான காரியம்! நான் எனது மகனைப் பற்றி நினைக்கிறேன். ஒலிம்பஸ் மலையில் வாழும் கடவுள்களுக்குச் செய்ய வேண்டிய பலிகளையும் பிரார்த்தனை களையும் அவன் செய்யத் தவறியதே இல்லை. அவன் தன் விதிப்படி இறந்துவிட்டாலும், கடவுள்கள் அவனுக்குப் பதிலுக்கு, இப்பொழுது செய்து கொண்டிருக்கிறார்கள். இதோ இந்த அழகிய கோப்பையை என்னிடமிருந்து வாங்கிக் கொள். என்னைப் பாதுகாப்பாக அக்கிலிஸின் பாசறை வரை கொண்டு போய் விட்டுவிடு.'

வழிகாட்டியும் அர்கஸைக் கொன்றவனுமாகிய ஹெர்மிஸ் பதில் சொன்னான்:

'ஐயா, நீங்கள் வயது முதிர்ந்தவர். நானோ இளைஞன். நீங்கள் என்னைப் பரிசோதிக்கிறீர்கள். ஆனால் அக்கிலிஸின் முதுகுக்குப் பின்னால் என்னை லஞ்சம் வாங்கிக் கொள்ளச் சொன்னால் எப்படி ஐயா? நான் அப்படிச் செய்ய மாட்டேன். எனது எஜமானனைக் கண்டு தான் நான் அஞ்சுகிறேன். அவரை மதிக்கிறேன். அவருக்குத் துரோகம் செய்ய மாட்டேன். அவருக்குத் தெரிந்தால் பின் விளைவுகள் பயங்கரமானதாக இருக்கும். இருந்தாலும், உங்களுக்கு வழிகாட்டியாக இருக்க நான் சம்மதிக்கிறேன். கிரேக்கத் தெஸ்ஸாலியில் இருக்கும் என் வீடுவரை உங்களுக்கு வழிகாட்ட நான் தயார். உங்களைக்

கப்பலில் ஏற்றிவிடவும், அல்லது நடந்து போனால் உதவவும் என்னால் முடியும். உங்கள் பாதுகாவலனாக நான் வரும்போது, என்னைக் குறைவாக மதிப்பிடும் யாராலும் உங்களுக்கு எந்த ஆபத்தும் ஏற்படாது.'

இப்படிச் சொல்லிவிட்டு ஓடுவதில் வல்லவனாகிய ஹெர்மிஸ் தேரில் ஏறிக்கொண்டான். சாட்டையையும் கடிவாளங்களையும் கையில் பிடித்துக் கழுதைகளுக்கும் குதிரைகளுக்கும் புத்துணர்ச்சியையும் புது வேகத்தையும் கொடுத்தான். கப்பல்களில் அருகில் இருந்த அகழிப் பக்கமும் மதில் சுவர்ப் பக்கமாகவும் அவர்கள் வந்தபோது, காவல்வீரர்களெல்லாம் உணவு தயாரித்துக் கொண்டிருப்பதைப் பார்த்தார்கள். ஆனால் வழிகாட்டியும் அர்கஸைக் கொன்றவனுமாகிய ஹெர்மிஸ் அவர்களையெல்லாம் தூங்க வைத்தான். கதவுகளைத் திறந்து, தாழ்ப்பாளைத் தள்ளி, ப்ரியத்தையும் மதிப்பு மிகுந்த பரிசுப்பொருள்களைக் கொண்டிருந்த வண்டியையும் உள்ளே கொண்டு போனான்.

பீலியூஸின் மகனாகிய அக்கிலிஸின் உயர்ந்த பாசறைக்கு அவர்கள் சென்றனர். தாங்களே வெட்டிய ஜாதிக்காய் மரத்தின் பலகைகளைக் கொண்டு தன் எஜமானனுக்காக மெர்மிடன்கள் அக்குடிலை உருவாக்கி இருந்தனர். புல்வெளிகளில் கிடைத்த கோரைப்புற்களோடு சேர்த்துக் கட்டிக் கூரை அமைத்திருந்தனர். ஒரு பெரிய அறையை அது ஏற்படுத்தியிருந்தது. அதற்குள் ஒரு நெருக்கமாக அமைக்கப்பட்ட சின்ன வேலியொன்றும் இருந்தது. தேவதாரு மரச் சட்டத்தால் தாழிடப்பட்ட ஒற்றைக் கதவு கொண்ட வாயிலும் அமைத்தனர். மூன்று பேர் சேர்ந்து அந்தப் பெரிய மரச்சட்டத் தாழ்ப்பாளைக் கொண்டு வந்தனர். அதை இன்னும் மூன்று பேர் சேர்ந்து பொருத்தினர். ஆனால் அவர்கள் மூன்று பேரும் சாதரண மனிதர்கள்தான். அக்கிலிஸ் ஒருவன் மட்டுமே அக்காரியத்தைச் செய்திருக்க முடியும். இப்பொழுது அந்தக் கதவைக் கிழவன் ப்ரியமுக்காகத் திறந்தான் ஹெர்மிஸ். விரைவுப்பாத அக்கிலிஸுக்கான அற்புதமான அந்தப் பரிசுப் பொருள்களோடு உள்ளே நுழைந்தனர். தேரிலிருந்து கீழே இறங்கி ப்ரியமிடம் சொன்னான்:

'மரியாதைக்குரிய ஐயா, நித்தியனான ஒரு கடவுள்தான் உங்களோடு வந்திருந்தது. நான்தான் ஹெர்மிஸ். எனது தந்தைதான் என்னை வழிகாட்டியாக உங்களோடு அனுப்பியது. ஆனால் நான் இப்பொழுது போயாக வேண்டும். அக்கிலிஸுக்கு முன்னால்

நான் தோன்ற விரும்பவில்லை. நித்தியனான ஒரு கடவுளை இப்படி நேருக்கு நேர் ஒரு மானிடன் சந்தித்து வரவேற்பதானது அவனுக்கும் ஒருமாதிரியாக இருக்கும். கடவுளுக்கும் அவ மரியாதை செய்வதாக இருக்கும். ஆனால் நீங்கள் உள்ளே சென்று, அக்கிலிஸின் முழங்கால்களில் தட்டி அவனிடம் வேண்டிக் கொள்ளுங்கள். அப்படிச் செய்யும்போது அவ னுடைய தந்தையின் பெயரையும் தாயின் பெயரையும் குறிப் பிடுங்கள். அப்போதுதான் உங்கள் சொற்கள் அவன் இதயத்துக்கு நேராகச் செல்லும்.'

இப்படிச் சொல்லிவிட்டு நேராக ஒலிம்பஸ் மலைக்குத் திரும்பிச் சென்றான் ஹெர்மிஸ். தன் தேரிலிருந்து கீழே இறங்கினான் ப்ரியம். கழுதைகளையும் குதிரைகளையும் இடாயூஸைப் பார்த்துக்கொள்ளச் சொல்லிவிட்டு, ஜீயூஸுக்கு மிகவும் பிரியமான அக்கிலிஸ் வழக்கமாக உட்கார்ந்திருக்கும் அவனது குடிலுக்குள் நேராகச் சென்றான். அக்கிலிஸ் உள்ளே இருந் ததைப் பார்த்தான். அவனுடைய வீரர்களில் பெரும்பாலான வர்கள் அவனுக்குச் சற்று தூரத்தில் தள்ளி இருந்தார்கள். ஆனால் போர்வீரனான ஆட்டோமிடானும், போர்க்கடவுளின் ஆதர வாளனான அல்சிமிடானும் அக்கிலிஸின் அருகில் ஏதோ உதவி செய்து கொண்டிருந்தனர். அக்கிலிஸ் அப்போதுதான் சாப்பிட்டு முடித்து ஏதோ குடித்துக் கொண்டிருந்தான். அவனது சாப்பாட்டு மேசையை இன்னும் எடுத்துப் போகவில்லை. அவர்களால் பார்க்கப் படாமல் மகா ப்ரியம் அக்கிலிஸின் அருகில் வந்து அவனது முழங்கால்களைத் தொட்டு அவனது பிள்ளைகளில் பல பேரை இரக்கமற்ற வகையில் கொன்ற அந்தக் கொலைகாரக் கைகளை முத்தமிட்டான். தனது ஊரில் ஒரு கொலையைச் செய்து விட்டு வெளியூரில் அடைக்கலம் புகும் ஒருவனை அந்த ஊரில் உள்ளவர்கள் வினோதமாகப் பார்க்கும்போது, கொலை செய்த அவனுக்கு ஒரு மருட்சி ஏற்படுவது போல, கடவுளை யொத்த ப்ரியத்தைப் பார்த்த அக்கிலிஸ் அதிசயித்தான். மற்றவர் களுக்கும் ஒன்றும் புரியவில்லை. அவர்களும் ஒருவரையொரு வர் பார்த்துக் கொண்டார்கள்.

அக்கிலிஸிடம் வேண்டுகோள் விடுத்தவனாக ப்ரியம் சொன் னான்:

'கடவுளையொத்த அக்கிலிஸ், உன் தந்தையை நினைத்துப் பார். அவருக்கும் எனக்கும் ஒரே வயதுதான். அவரும் பரிதாபத்துக்

குரிய முதுமையின் வாசலில்தான் நிற்கிறார். அவருடைய அண்டை வீட்டார்களும் அவருக்குத் தொல்லைகள் கொடுத்துக் கொண்டுதானிருக்கிறார்கள். அவர்கள் அவருக்கு இழைக்கும் கெடுதியில் இருந்தும் சேதத்திலிருந்தும் அவரைக் காப்பவர் எவருமில்லை. இருந்தாலும், நீ உயிரோடுதான் இருக்கிறாய் என்று அவருக்குத் தெரியும்போது, ட்ராய் நகரிலிருந்து தன் அருமை மகன் வீடு திரும்பும் நாளை எண்ணி எண்ணி அவர் சந்தோஷப்படலாம்.

'ஆனால் என் வாழ்க்கையை விதி விடாது துரத்தித் துரத்தி நாசம் செய்துவிட்டது. இந்த அகன்ற நாட்டின் தலைசிறந்த பிள்ளைகளை நான் பெற்றிருந்தேன். ஆனால் இப்பொழுது அவர்களில் ஒருவர்கூட, ஆமாம் ஒருவர்கூட உயிரோடு இல்லை. கிரேக்கப் படை உள்ளே வந்தபோது என் மகன்கள் ஐம்பது பேர் இருந்தனர். அதில் பத்தொன்பது பேர் ஒரு தாய் வயிற்றுப் பிள்ளைகள். மற்றவர்களெல்லாம் என் அரண்மனையில் உள்ள மற்ற பெண்களுக்குப் பிறந்தவர்கள். அதில் பல பேர் சண்டையில் இறந்துவிட்டார்கள். ஆனால் அவர்களில் ஒரு பிள்ளையை - ஒரே ஒருவனை மட்டும் - மலைபோல் நம்பியிருந்தேன் நான். இலியம் நகரின் உயிர் அவன்தான். தான் பிறந்த நாட்டுக்காகப் போரிட்ட அவனைத்தான் கொஞ்ச நாள்களுக்கு முன்பு நீ கொன்று போட்டாய், இந்த கிரேக்கக் கப்பல்களுக்கு நான் வந்த நோக்கம் அவனைத் திருப்பி எடுத்துக் கொண்டு போகத்தான். அதற்காக எண்ணிறந்த பரிசுப்பொருள்களை நான் உனக்குக் கொண்டு வந்துள்ளேன்.

அக்கிலிஸ், கடவுள்களுக்கு மரியாதை கொடு. என் மீது இரக்கம் காட்டு. உன்னுடைய தந்தையை நினைத்துப் பார். அவரைவிட அதிக இரக்கம் காட்டப்பட நான் தகுதியானவன். ஏனெனில் இந்தப் பூமியில் எந்த ஒரு தகப்பனும் செய்யாத காரியத்தை நான் செய்திருக்கிறேன் எந்தக் கையால் என் மகன்களை நீ கொன்றாயோ அந்தக் கையில் என் உதடுகளைப் பதித்துள்ளேன்.'

இப்படிச் சொல்லி, தன் தந்தையை நினைத்து அழ விரும்பும் அளவுக்கு ஒரு ஏக்கத்தை அக்கிலிஸ் மனத்தில் ஏற்படுத்தினான் ப்ரியம். மெல்ல அந்தக் கிழவனின் கைகளை விடுவித்துக் கொண்டான் அக்கிலிஸ். இருவர் மனங்களும் பழைய நினை களால் ஆக்கிரமிக்கப்பட்டன. அக்கிலிஸின் காலடியில் கூ குறுகிப் போய்க் கிடந்த ப்ரியம், வீரர்களை அனாயாசமா

கொல்லும் தன் மகன் ஹெக்டரை நினைத்து சப்தமாக அழுதான். தன் தந்தையை நினைத்தும் பின் பெட்ரோக்குலஸை நினைத்தும் அக்கிலிஸ் அழுதான். அந்தக் பாசறை முழுவதும் அவர்களது அழுகை ஒலிகளால் நிரம்பியது. போதுமான அளவுக்கு அழுது தீர்த்த பிறகு, உடலும் மனமும் ஆசுவாசமடைந்த பிறகு உட்கார்ந் திருந்த நாற்காலியிலிருந்து எழுந்து நின்றான் அக்கிலிஸ். ப்ரியமின் வெண்ணிற முடிக்கும் வயதுக்கும் மதிப்பு கொடுத்து இரங்கியவனாகக் கைகொடுத்து அவனைத் தூக்கினான். பின் அவனிடம் உணர்ச்சி பொங்கக் கூறினான்:

'துன்பத்தில் உழன்று வேதனைப்படுபவரே, நீங்கள் ரொம்பத் தான் வேதனைகளை அனுபவித்து விட்டீர்கள். எப்படித் தனியாக இந்த கிரேக்கக் கப்பல்களுக்கு வந்து சேர்ந்தீர்கள்? அதுவும் உங்கள் பிள்ளைகளில் பலபேரைக் கொன்ற ஒருவனின் முன் னிலையில்? உங்களுக்கு இரும்பு இதயம் இருக்க வேண்டும். சரி, இந்த நாற்காலியில் உட்காருங்கள். எவ்வளவோ வேதனைப் பட்டுவிட்டோம். அழுதழுது ஆகப்போவது ஒன்றுமில்லை. அழுவதென்பது உணர்ச்சியற்ற ஒரு ஆறுதல்தான். அதனால் நன்மை அதிகமில்லை. மனிதர்களாக நாமனைவரும் பரிதாபத் துக்குரியவர்கள். கடவுள்கள் நம் வாழ்க்கைக்குள் துக்கத்தையும் துன்பத்தையும் புகுத்திவிட்டார்கள். ஆனால் கவலைப் படுவதி லிருந்து அவர்கள் மீண்டவர்கள்.

இடிமுழக்கத்தில் இன்புறும் ஜீயூஸ் தன் அரண்மனைத் தரையில் இரண்டு ஜாடிகளை நிற்க வைத்துள்ளார். ஒன்றில் நல்லதும் இன்னொன்றில் கெட்டதுமாக, அதில்தான் அவரது பரிசுகள் இருக்கும். இரண்டும் கலந்த கலவையைப் பெறும் மனிதர்களின் வாழ்வில் சில நேரங்களில் நல்லதும், சில நேரங்களில் கெட்டதுமாக, இன்பமும் துன்பமும் மாறி மாறி வரும். ஆனால் கெட்டது இருக்கும் ஜாடியில் இருந்து மட்டும் எடுத்து ஒரு மனிதனுக்கு ஜீயூஸ் கொடுப்பாரேயானால் அவனை அவர் கேவலப்படுத்தி விடுகிறார். ஒளிபொருந்திய பூமியில் அவன் அழிவு தரும் பசியால் அலைவான். கடவுளாலோ மனிதனாலோ மதிக்கப்படாமல் அவன் திரிவான்.

'எனது தந்தை பீலியூஸையே எடுத்துக் கொள்ளுங்களேன். அவர் [illegible]றந்த கணத்திலிருந்து கடவுள்கள் அவர்மீது அருமையான [illegible]ளைச் சொரிந்தனர். நல்ல விதியும், செல்வமும் செழிப்பு [illegible] வாழ்ந்தார். மனிதர்களுக்கு மத்தியில் அவருக்கு இணையாக

யாரும் வாழவில்லை. மெர்மிடன்களில் தலைமைப் பொறுப்பு அவருக்குக் கொடுக்கப் பட்டது. அவர் ஒரு சாதாரண மானிடராக இருந்தாலும் அவருக்கு மனைவியாக ஒரு தேவதை வழங்கப் பட்டாள். எனினும், கெடுதியின் பங்கையும் கடவுள்கள் அவருக்குக் கொடுக்கத்தான் செய்தனர். அவரது அடிகளைப் பின்பற்றிச் செல்ல பல குழந்தைகளில்லை. ஒரே ஒரு மகன்தான். அவனும் விரைவிலேயே உரிய காலத்துக்கு முன்பே இறந்து போகக்கூடிய அற்பாயுள் கொண்டவன். இன்னும் என்ன சொல்வேன்! அவர் வயது முதிர்ந்தவராக இருந்தாலும், என்னிடமிருந்து அவருக்கு அன்போ ஆதரவோ கிடைக்கவில்லை. நான் இங்கே ட்ராய் நகரில், என் தந்தையர் நாட்டிலிருந்து வெகு தூரத்தில், உங்களையும் உங்கள் பிள்ளைகளையும் பார்த்துக் கொண்டு இருக்கிறேன்.

'விதி உங்களைப் பார்த்து ஆதரிக்கும் விதமாகப் புன்னகைத்த காலம் ஒன்றுண்டு என்று நாங்கள் கேள்விப் பட்டிருக்கிறோம். செல்வச் செழிப்பில் உங்களுக்கு இணையான ஒருவரும் இருந்ததில்லை என்று சொன்னார்கள். மகார் ஆண்ட கடலில் போய்ச் சேர்ந்த லெஸ்போஸ் பகுதிக்கும் உள்ளே இருந்த பகுதியான ஃப்ரிஜியாவுக்கும், பரந்து விரிந்த ஹெல்லெஸ் பாண்ட்டுக்கும் இடையில் உங்களுக்கு இருந்த மகன்களைப் போல யாருக்குமே இருந்ததில்லை என்று சொன்னார்கள். ஆனால் வானத்துக் கடவுள்கள் உங்களுக்கான சாபமாக என்னை இங்கே கொண்டு வந்து விட்டதிலிருந்து, உங்கள் நகரைச் சுற்றி போரும் அழிவும் தவிர எதுவும் இருக்கவில்லை.

'பொறுத்துக் கொள்ளுங்கள். முடிவின்றித் துக்கப்பட்டுக் கொண்டிருக்க வேண்டாம். உங்கள் மகனுக்காகத் துக்கப்படுவது அவனுக்கு நன்மை ஏதும் செய்யப் போவதில்லை. அவனை மீண்டும் உயிரோடு கொண்டு வந்துவிட முடியாது. அதற்குள் நீங்களும் இறந்து விடுவீர்கள்.'

கிழவன் ப்ரியம் பதில் சொன்னான்:

'ஒலிம்பஸ் மலையில் பிறந்த அக்கிலிஸ், உனது குடிலில் அலட்சியப் படுத்தப் பட்டு ஹெக்டர் கிடக்கும்போது
உட்காரச் சொல்லாதே. தாமதப்படுத்தாமல் அவனை
கொடுத்துவிடு. அவனை நான் பார்க்க வேண்டும். நா
வந்திருக்கும் அளப்பரிய மீட்புப் பொருள்களைப் பெற்றுக்

கொள். அதையெல்லாம் நீ நல்லவிதமாக அனுபவி. பாதுகாப் பாக உன் தந்தையர் நாட்டுக்குத் திரும்பிப் போ. ஏனெனில் எனக்கு நீ உயிர்ப் பிச்சை கொடுத்திருக்கிறாய்.'

கோபமாக அவனைப் பார்த்துவிட்டு அக்கிலிஸ் சொன்னான்:

'மரியாதைக்குரிய ஐயா, என்னை ரொம்ப வற்புறுத்த வேண் டாம். உங்கள் உதவியின்றியே ஹெக்டரைத் திரும்பக் கொடுப்ப தாக நான் ஏற்கெனவே முடிவு செய்து விட்டேன். ஜீயூஸிட மிருந்து ஒரு தூதுவராக ஆழ்கடல் முதியவனின் மகளான என்னைப் பெற்றெடுத்த தாயே வந்தார். உங்களைப் பற்றி எனக்கு எல்லாம் தெரியும் ப்ரியம். ஒரு கடவுள்தான் உங்களை இந்த கிரேக்கக் கப்பல்களின் அருகில் கொண்டு வந்து விட்டது என்பதும் தெரியும். எங்களது முகாமுக்குள் நுழையும் துணிச்சல் வேறு எவருக்கும், அது வீரமான இளைஞனாக இருந்தாலும் சரி, வராது. ஏனெனில் காவல் வீரர்களைத் தாண்டி அவனால் வர முடியாது. அப்படியே வந்தாலும், வாயில் கதவின் தாழ்ப் பாளைத் தள்ளித் திறப்பதென்பது அவனால் முடியாத காரிய மாக இருந்திருக்கும். துக்கம் மேலிட்ட என் இதயத்தை மேலும் தூண்டவேண்டாம். இல்லையெனில், ஜீயூஸின் உத்தரவுகளை நான் மீறிவிடலாம். எனது குடிலில் என்னைக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டிருந்தாலும், உங்கள் உயிரையும் நான் எடுத்து விடலாம்.'

அக்கிலிஸ் அப்படிச் சொன்னதும் பயந்து போனான் ப்ரியம். அவன் சொன்னபடியே அமைதியாக இருந்தான். அதன்பின், தன்னோடு இரண்டு உதவியாளர்களை அழைத்துக் கொண்டு, ஒரு சிங்கத்தைப் போலப் பாய்ந்து வெளியில் சென்றான் அக்கிலிஸ். ஆட்டோமிடான், அல்சிமிடான். பெட்ரோக்குலஸ் போனபிறகு, அவர்களிருவரும்தான் அக்கிலிஸுக்கு மிகவும் நெருக்கமாக இருந்தனர். கழுதைகளையும் குதிரைகளையும் அவர்கள் அவிழ்த்து விட்டனர். கட்டியக்காரரை உள்ளே அழைத்துக் கொண்டுபோய் உட்கார வைத்தனர். அதன் பிறகு ளபளப்பாக்கபட்ட அந்த வண்டியில் ஹெக்டரின் உடலை ட்பதற்காகக் கொண்டு வரப்பட்ட வரம்பற்ற மீட்புப் பொருள் யே எடுத்தனர். ஆனால் ஹெக்டரின் உடலைச் சுற்றி போர்த்தி ப்ரியத்திடம் ஒப்படைத்து வீட்டுக்கு ற்காக ஒரு ஜோடி வெள்ளைத் துணிகளையும் ஒரு றுந்தளராடையையும் அதிலேயே விட்டனர்.

பிறகு சில பணிப்பெண்களை அழைத்தான் அக்கிலிஸ். ப்ரியம் பார்க்காதவாறு ஹெக்டரின் உடலைப் பாசறையின் வேறு பகுதியில் வைத்து, அந்த உடலைக் கழுவி எண்ணெய் தேய்க்கச் சொன்னான். ஏனெனில் ஹெக்டரின் உடலைப் ப்ரியம் பார்த்தால், துக்கம் மேலிட தன்மீது அவனுடைய கோபம் கட்டுப் படுத்த முடியாத அளவுக்கு அதிகமாகிவிடுமோ, அப்படி ஏதுமானால், தானும் கோபப்பட்டு ஜீயூஸின் கட்டளைகளை மீறி அந்தக் கிழவனைக் கொன்றாலும் கொன்றுவிடுவோம் என்று அக்கிலிஸ் அஞ்சினான். பணிப்பெண்கள் ஹெக்டரின் உடலைக் குளிப்பாட்டி ஒலிவ எண்ணெய் தடவி, அருமையான வெள்ளைத் துணியால் மூடி, குறுந்தளராடை அணிவித்த பிறகு, தன் கையாலேயே அந்த உடலைத் தூக்கிச் சவப்பெட்டியில் வைத் தான் அக்கிலிஸ். நன்கு பளபளப்பாக்கப்பட்ட அந்த வண்டியில் ஹெக்டரின் உடலை வைப்பதற்கு அக்கிலிஸின் தோழர்களும் உதவி செய்தார்கள். அதன் பிறகு வேதனையில் முனகிய அக்கிலிஸ் தன்னுயிர்த் தோழனை நினைத்துக் கூறினான்:

'பெட்ரோக்குலஸ், ஹயடிஸின் மண்டபங்களில் இருக்கும் நீ, கடவுளையொத்த ஹெக்டரின் உடலை அவன் தந்தையிடம் ஒப்படைத்துவிட்டேன் என்பதைக் கேள்விப் பட்டால், என் மீது கோபப்படாதே. அதற்காக எனக்கு அவன் கொடுத்த மீட்புப் பொருள்கள் உண்மையிலேயே மதிப்பு மிகுந்தவை. அதில் உனக்கான சரியான பங்கை நீ நிச்சயம் பெறுவாய்.'

இப்படிப் பேசிவிட்டு, கடவுளையொத்த அக்கிலிஸ் தன் பாசறைக்குத் திரும்பினான். உள்ளே போடப்பட்டிருந்த ப்ரிய முக்கு எதிரில் இருந்த நாற்காலியில் உட்கார்ந்து சொன்னான்:

'மரியாதைக்குரிய ஐயா, நீங்கள் கேட்டுக் கொண்டபடிச் செய்துவிட்டேன். உங்கள் மகனை விடுவித்துவிட்டேன். அவன் இப்பொழுது சவ வண்டியில் வைக்கப்பட்டிருக்கிறான். விடிய லில் வீட்டுக்கு எடுத்துச் செல்லும்போது அவனை நீங்களே பார்க்கலாம். இப்பொழுது சாப்பிடுவதைப் பற்றி யோசிக்கலாம்.

தன்னுடைய வீட்டிலேயே தன் பன்னிரண்டு குழந்தைகளும் இறப்பதைப் பார்த்த பிறகும் அழகிய கூந்தல் கொண்ட நயோபி சாப்பிட மறக்கவில்லை. இளமையின் உச்சத்தில் இருந்த ஆறு மகள்களும் ஆறு மகன்களும் இறந்தனர். அம்பெய்வதில் இன் புறும் ஆர்ட்டிமிஸ் ஆறு மகள்களையும் கொன்றான். தன் வெள்ளி

வில்லால் ஆறு மகன்களையும் வீழ்த்தினான் அப்போலோ. அழகிய கன்னம் கொண்ட தன் அன்னை லீட்டோவுக்கு இணையாக அவள் தன்னைக் கருதிக் கொண்டதால் அவன் கோபமுற்றிருந்தான். ஏனெனில் லீட்டோ இரண்டு பிள்ளைகள்தான் பெற்றிருந்தாள். ஆனாலும் அந்த இரண்டு பேரும் அவள் பெற்ற பன்னிரண்டு பேரையும் கொன்றனர்.. ஒன்பது நாட்கள் அவர்களனைவரும் ரத்த வெள்ளத்தில் கிடந்தனர். அவர்களை அடக்கம் செய்வதற்கு அங்கு ஒருவரும் இல்லை. ஏனெனில் மக்களையெல்லாம் கல்லாக மாற்றி வைத்திருந்தார் ஜீயூஸ். ஆனால் பத்தாவது நாள் வானுலகில் இருந்த கடவுள்கள் அவர்களையெல்லாம் அடக்கம் செய்தனர். அழுதழுது ஓய்ந்திருந்த நயோபி சாப்பிடலாம் என்று அப்போது தான் நினைத்தாள். தனியாக நிற்கும் சிபைலஸ் மலைகளின் பக்கமாகக் கல்லாக மாறிப்போன அவளும் இப்பொழுது இருக் கிறாள். அகீலூஸ் ஆற்றங்கரையில் நடனமாடிக் கொண்டிருக்கும் தண்ணீர் தேவதைகள் ஓய்ந்த பிறகு அவள் அங்குதான் படுத்துக் கொள்வதாக மக்கள் கூறுகிறார்கள். தனக்கு ஏற்பட்டுவிட்ட தனிமையைச் சிந்தித்துக்கொண்டு அங்கு இருக்கிறாள் நயோபி.

‘மரியாதைக்குரிய ஐயா, நாமும் சாப்பிடலாம் வாருங்கள். பிற்பாடு இலியத்துக்கு ஹெக்டரைக் கொண்டு போகும்போது, மகனுக்காக இன்னுமொருமுறை நீங்கள் அழுது கொள்ளலாம். அங்கே அவனுக்காக அனேகம் பேர் துக்கம் அனுஷ்டிப்பார்கள்.’

சொல்லிவிட்டு எழுந்த விரைவுப்பாத அக்கிலிஸ் ஒரு வெள்ளை செம்மறியாட்டை அறுத்தான். அவனது ஆட்கள் அதைத் தோலுரித்து உணவுக்காக வழக்கப்படித் தயார் செய்தனர். அதை அவர்கள் திறமையாகச் சிறு சிறு துண்டுகளாக வெட்டினர். இரும்பு முள்களில் இறைச்சித் துண்டுகளை விட்டுக் கவனமாக நெருப்பிலிட்டு வறுத்தெடுத்தனர். கொஞ்சம் ரொட்டிகளைக் கொண்டு வந்தான் ஆட்டோமிடான். அழகிய கூடைகளில் போட்டு அவைகளை மேசையில் வைத்தான். இறைச்சித் துண்டுகளைப் பகுதி பகுதியாகப் பிரித்தான் அக்கிலிஸ். அங்கே வைக்கப்பட்ட நல்ல உணவை அவர்கள் உண்டு பசியாறினர்.

பசியும் தாகமும் அடங்கிய பிறகு, டார்டாரிய ப்ரியம் தன் விழிகளை அக்கிலிஸ்மீது ஓடவிட்டான். எவ்வளவு பெரிய ஆகிருதியாகவும் அழகாகவும் தோற்றத்தில் ஒரு கடவுளைப் போலவே அவன் இருந்தான் என்பதை எண்ணி வியந்தான். அதேபோல ட்ரோஜனான ப்ரியத்தின் உயர்ந்த தோற்றத்தையும்

அவன் பேச்சையும் வியந்து கொண்டிருந்தான் அக்கிலிஸ். இப்படி ஒருவரையொருவர் பார்த்து வியந்து முடித்த பிறகு, கடவுளையொத்த ப்ரியம் முதலில் பேசினான்:

'ஒலிம்பஸ் மலையில் பிறந்த அக்கிலிஸ், என்னைப் படுக்கைக்கு அனுப்பு. நானும் இடாயூஸும் படுத்து ஓய்வெடுத்து நன்றாக உறங்க வேண்டும். உனது கையால் என் மகன் கொல்லப்பட்ட கணத்திலிருந்து என் விழிகள் மூடவே இல்லை. அதிலிருந்தே எனது குதிரை லாயத்தின் சாணத்தை என் உடலில் பூசிக்கொண்டு, எனக்கேற்பட்ட எண்ணற்ற துன்பங்களையும் துயரங்களையும் எண்ணி அழுது புலம்பி அரற்றிக் கொண்டிருந்தேன் நான். இப்பொழுதுதான் கொஞ்சம் நல்ல உணவை உண்டிருக்கிறேன். மின்னும் மதுவை ஊற்றி என் தொண்டையை நனைத்துக் கொண் டேன். ஆனால் இதற்கு முன் நான் எதையுமே சாப்பிடவில்லை.'

அவன் அப்படிச் சொன்னதும், முற்றத்தில் ப்டுக்கை தயார் செய்யும்படிப் பணிப்பெண்களுக்கும் ஆண்களுக்கும் உத்தர விட்டான் அக்கிலிஸ். அவர்கள் போர்த்திக்கொள்ள அருமை யான பழுப்பு நிறப் போர்வைகளைக் கொடுக்கவும், கம்பளியா லான விரிப்புகளையும் அதன் மேல் சில துணிகளையும் போட்டு மெத்தை போல் ஆக்கிக் கொடுக்கவும் சொன்னான். கையில் தீப்பந்தங்களுடன் வெளியேறி அப்பெண்கள் அக்கிலிஸ் சொன்னபடி இரண்டு படுக்கைகளைத் தயார் செய்யச் சென்றனர். இப்பொழுது விரைவுப்பாத அக்கிலிஸ் ப்ரியமிடம் கலக்கமுறும் வகையில் சொன்னான்:

'கதவுகளுக்கு வெளியே உறங்குங்கள் வயதான நண்பரே. யாராவது ஒரு கிரேக்க ஆசோலகர் என்னைப் பார்க்க வரலாம். அவர்கள் எப்போதுமே என்னைப் பார்த்து எதாவது யுக்திகளைப் பற்றிப் பேச இங்கு வருவார்கள். அது எங்களுடைய வழக்கம். அவர்களில் யாராவது உங்களைப் பார்த்துவிட்டால், மக்கள் மேய்ப்பனாகிய அகமெம்னனிடம் சொல்லிவிடுவார்கள். அதன் பிறகு, ஹெக்டரின் உடலை மீட்டுப் போவது தாமதமாகி விடலாம். சரி, இப்பொழுது என் கேள்விக்குச் சரியான பதிலைச் சொல்லுங்கள். கடவுளையொத்த ஹெக்டரின் ஈமச்சடங்குகளுக் காக எத்தனை நாட்களை ஒதுக்கப் போகிறீர்கள்? தெரிந்தால் அந்த நாட்களில் நான் சண்டை செய்வதிலிருந்து ஒதுங்கியிருப் பேன். அந்த நாட்கள் முடியும் வரை எங்கள் படையும் தாக்காமல் பார்த்துக் கொள்வேன்.'

கடவுளையொத்த கிழவன் ப்ரியம் சொன்னான்:

'உண்மையிலேயே ஒரு முறையான ஈமச்சடங்கை நாங்கள் ஹெக்டருக்காக நிறைவேற்ற நீ விரும்பினால், நான் சொல்லும் விதத்தில் எனக்கு நீ உதவி செய்ய வேண்டும். நாங்கள் எப்படி நகருக்குள் கூடைக்குள் அடைபட்ட மாதிரி இருக்கிறோம் என்பது உனக்குத் தெரியும். மலைகளுக்குச் சென்று விறகு கொண்டு வருவதென்பது ஒரு நீண்ட பயணம். அப்படிச் செய்ய ட்ரோஜன்கள் பயந்து கிடக்கின்றனர். ஒன்பது நாட்கள் எங்கள் வீடுகளில் நாங்கள் ஹெக்டருக்காகத் துக்கம் அனுஷ்டிப்போம். பத்தாவது நாள் நாங்கள் அவனை அடக்கம் செய்வோம். அதன் பிறகு ஈமச்சடங்கிற்கான விருந்தைக் கொடுப்போம். பதினொன் றாம் நாள் கல்லறை மேட்டை எழுப்புவோம். வேறு வழி யில்லை என்றால், பன்னிரண்டாவது நாள், திரும்பவும் சண்டைக்குத் தயாராவோம்.'

அதைக்கேட்ட விரைவுப்பாத அக்கிலிஸ் சொன்னான்:

'மரியாதைக்குரிய ப்ரியம், நீங்கள் விரும்புவது போலவே எல்லாம் நடக்கும். நீங்க்ள் கேட்டுக் கொண்ட நாட்களுக்கு சண்டையை நாங்கள் நிறுத்திவிடுகிறோம்.'

இவ்விதம் சொல்லிவிட்டு ப்ரியமின் உள்ளத்திலிருந்த பயத்தை யெல்லாம் போக்கும் விதமாக அவனது வலது கை மணிக் கட்டைப் பிடித்துக் கொண்டான் அக்கிலிஸ். ப்ரியமும் அவனது அறிவிப்பாளனும் அன்று இரவு குடிலின் முன் பகுதியில் உறங்கினர். இருவரின் மனதிலும் பலவிதமான எண்ணங்கள் ஓடிக்கொண்டே இருந்தன. நன்றாகக் கட்டப் பட்ட தன் பாசறையின் ஒரு மூலையில் தூங்கினான் அக்கிலிஸ். அழகிய கன்னம் கொண்ட ப்ரிசிஸ் அவனருகில் படுத்து உறங்கினாள்.

மிருதுவான உறக்கம் மேலிட மற்ற கடவுள்களும் போர்வீரர் களும் அன்று இரவு நன்றாக உறங்கினர். ஆனால் தலைவன் ப்ரியத்தைக் காவல் வீரர்கள் பார்க்காமல் கப்பல்களில் பக்க மிருந்து அப்புறப்படுத்தித் திரும்பவும் கூட்டி வருவது எப்படி என்பது பற்றி யோசித்துக் கொண்டிருந்தான் ஓட்டப்பந்தயத்தில் வல்லவனாக ஹெர்மிஸ். ப்ரியத்தின் தலைமாட்டுப் பக்கமாகப் போய் நின்ற அவன் சொன்னான்:

'மரியாதைக்குரிய ஐயா, அக்கிலிஸ் உங்களை உயிரோடு விட்டுவிட்டதனால், இப்பொழுது உங்கள் மனத்தில் எந்தப் பயமும் இல்லை என்று நினைக்கிறேன். ஏனெனில் எதிரிகளின் மத்தியில் இப்படி நீங்கள் நன்றாக உறங்கிக் கொண்டிருப்பதை வைத்துப் பார்க்கும்போது எனக்கு அப்படித்தான் தோன்றுகிறது. ஒரு பெரிய விலை கொடுத்து சற்று முன்புதான் உங்கள் மகனின் உடலை நீங்கள் மீட்டீர்கள். ஆனால் அகமெம்னனுக்கும் முழு கிரேக்கப் படைக்கும் நீங்கள் இங்கே இருப்பது தெரிந்து விட்டால் அவ்வளவுதான். உங்களை உயிரோடு மீட்க, நீங்கள் ஹெக்டருக்க [illegible], கொடுத்ததைப் போல, உயிரோடு இருக்கும் உங்கள் அத்தனை மகன்களும் சேர்ந்து மூன்று மடங்கு கொடுக்க வேண்டிவரும்.'

அவன் அப்படிச் சொன்னதும் பயந்து போனான் கிழவன். உடனே தன் கட்டியக்காரனையும் எழுப்பினான். பின் அவர்களுக்காகக் கழுதைகளையும் குதிரைகளையும் வண்டி களில் பூட்டினான் ஹெர்மிஸ். முகாமினூடே அவைகளை வேகமாக அவனே ஓட்டிச் சென்றான். யாராலும் பார்க்கப் படாமல் அவர்கள் சென்றனர். குங்கும ஆடை அணிந்த விடியல் பூமி முழுவதும் பரவியபோது நீர்ச்சுனை மிக்க ஆறான, ஜீயூஸைத் தந்தையாகக் கொண்ட ஸ்கமாண்டர் ஆற்றின் ஆழமில்லாத பகுதியை அடைந்தனர் அவர்கள். அங்கிருந்து ஒலிம்பஸ் மலைக்குக் கிளம்பினான் ஹெர்மிஸ். இரண்டு பேரும், முனகிக் கொண்டும் துக்கித்துக் கொண்டும், நகரை நோக்கி ஓட்டிச் சென்றனர். ஹெக்டரின் உடலைச் சுமந்து கொண்டு வந்தன கழுதைகள்.

ட்ராய் நகர ஆண்களிலும் பெண்களிலும் அவர்களை முதலில் பார்த்து அடையாளம் கண்டுகொண்டவள் தங்க மங்கையான அஃப்ரோடைட்டியைப் போல இருந்த கஸாண்ட்ராதான். பெர்காமஸ் (மலை) மீது ஏறி அதன் உச்சியில் நின்று கொண்டிருந்த அவள், வருகையை அறிவிக்கும் கட்டியக் காரனோடு தன் தந்தை ப்ரியம் தேரில் நின்று கொண்டு வருவதைப் பார்த்தாள். பின் கழுதைகள் இழுத்துக் கொண்டு வந்த வண்டியில் கிடத்தி வைக்கப்பட்டிருந்த அவனையும் பார்த்தாள். உடனே ட்ராய் நகரம் முழுவதும் கேட்குமாறு அலறிச் சொன்னாள்:

'ட்ரோஜன்களே, ட்ராய் நகரப் பெண்களே, இதுவரை நீங்களெல் லாம் பாதுகாப்பாக ஹெக்டர் வீடு திரும்புவதைப் பார்த்திருப்

பீர்கள். அவனுக்கு வரவேற்பு கொடுத்து மகிழ்ந்திருப்பீர்கள். அது உண்மையென்றால், இப்பொழுது வந்து அவனைப் பாருங்கள்!'

அவள் அப்படி அலறியதும் ட்ராய் நகரம் முழுவதும் ஆறுதல் சொல்ல முடியாத துயரத்தில் மூழ்கியது. அதன் பிறகு இலியத்தில் ஆணோ பெண்ணோ ஒருவர்கூட இல்லை. எல்லாரும் நகர வாயிலுக்கு வந்து ஹெக்டரின் உடலோடு வந்த ப்ரியத்தைச் சந்தித்தனர். மிருதுவாக ஓடி வந்து கொண்டிருந்த அந்த வண்டி மீது ஹெக்டரின் மனைவியும் அன்னையும் போய் விழுந்தனர். தங்கள் முடியைத் துன்பத்தில் பிய்த்துக் கொண்டார்கள். அவன் தலையைத் தொட்டுத் தடவிப் பார்த்தார்கள். அவர்களைச் சுற்றி அழும் கும்பல் ஒன்று வந்தது. கிழவன் மட்டும் தன் தேரில் இருந்து அவர்களிடம் பேசியிருக்காவிட்டால் அங்கேயே நின்று அவர்கள் அன்று பூராவும் சூரிய அஸ்தமனம் வரை ஹெக்டருக்காக அழுதிருப்பார்கள்.

'கழுதைகளோடு என்னைப் போக விடுங்கள். வீட்டுக்குக் கொண்டு போய்ச் சேர்த்த பிறகு, உங்கள் மனம் போல அழுது கொள்ளுங்கள்.'

அவன் அப்படிச் சொன்னதும் அவர்கள் விலகி நின்று வண்டி செல்ல வழிவிட்டார்கள். அரண்மனைக்கு ஹெக்டரின் உடலைக் கொண்டு வந்தபிறகு, ஒரு அலங்காரம் செய்யப்பட்ட படுக்கையில் அவன் உடலைக் கிடத்தினார்கள். துக்கம் அனுஷ்டிப்பதை முறைப்படுத்த அவனருகில் ஒப்பாரி வைப்பவர்களை இருத்தி வைத்தார்கள். துயரப் பாடல்களை அவர்கள் பாடினார்கள். பாடமுடியாத மற்ற பெண்கள் அழத்தொடங்கினார்கள். ஹெக்டரின் தலையைத் தன் கைகளில் ஏந்திய வண்ணம் வெள்ளை நிறக்கைகள் கொண்ட ஆன்ட்ரோமக்கி ஒப்பாரியைத் துவக்கி வைத்தாள்:

'என்னருமைக் கணவனே, இவ்வளவு சின்ன வயதில் நீ இறந்துபோய் விட்டாயா? என்னையும் நம் வீட்டிலேயே விதவையாக்கி விட்டாயே! அதிர்ஷ்டமற்ற பெற்றோர்களாகிய நாம் பெற்றெடுத்த உன் மகன், ஒரு சின்னக் குழந்தை. அவன் இலியத்தில் வளர்ந்து வாலிபனாவான் என்ற நம்பிக்கை எனக்கில்லை. அது நடக்கும் முன்பே இலியம் தரைமட்டமாக்கப் பட்டுவிடும். இலியம் நகரின் பாதுகாவலனாகிய நீயே,

இந்நகரின் அன்புக்குப் பாத்திரமான மனைவிமார்களையும், அவர்களது சின்னக் குழந்தைகளையும் பாதுகாத்து வந்த நீயே அழிந்து விட்டாய். அவர்கள் எல்லாரும் கிரேக்கக் கப்பல்களில் ஏற்றிக் கொண்டுசெல்லப் படுவார்கள். நானும் அவர்களோடு போவேன்' என்று கதறினாள்.

'என் அருமை மகனே, நீ என்னோடு எங்காவது அவமானகரமான அடிமை ஊழியம் செய்து பிழைக்க வருவாய். நமது எஜமானன் கருணையற்றவனாக இருப்பான். அல்லது யாராவது ஒரு கிரேக்கன் உன்னைக் கைகளால் பிடித்துச் சுவர்களுக்கு வெளியில் தூக்கி எறிவான். ஹெக்டர் அவனது சகோதரனையோ தந்தையையோ மகனையோ கொன்றிருப்பார். அந்தக் கோபத்தில் பழிவாங்கு வதற்காக அவன் அப்படிச் செய்வான். ஆமாம், ஹெக்டரின் கையால் எத்தனையோ கிரேக்கர்கள் செத்திருக்கிறார்கள். போர்க்களத்தின் கொடூரத்தில் உன் தந்தை ஒன்றும் மிருது வானவர் அல்ல.

அதனால்தான் இலியம் நகரில் உள்ள ஒவ்வொருவரும் அவருக் காக அழுது புலம்புகிறார்கள். ஹெக்டர், யாரும் கொடுக்காத துயரத்தையும் கண்ணீரையும் உங்கள் பெற்றோருக்கு நீங்கள் கொடுத்து விட்டீர்கள். ஆனால் எனது துயரம்தான் எல்லா வற்றையும்விடக் கொடுமையானது. ஏனெனில் படுக்கையில் படுத்துக் கொண்டு என்னை நோக்கிக் கைகளை நீட்டிய வண்ணம் நீங்கள் சாகவில்லை. இரவு பகலாக என் கண்ணீரி னூடே நான் ஞாபகம் வைத்து மகிழும் எந்த வார்த்தையையும் சொல்லிவிட்டு நீங்கள் சாகவில்லை' என்று மகனிடமும், கணவனின் உடலிடமும் புலம்பினாள்.

அவள் கொடுத்த அழுகையை மற்ற பெண்கள் எடுத்துத் தொடர்ந்து கொண்டனர். மெல்லிய குரலில் ஹெகாபி இப்பொழுது அழுதுகொண்டே சொன்னாள்:

'என் எல்லாப் பிள்ளைகளிலும் எனக்கு மிகவும் உவப்பான மகனே ஹெக்டர், நீ என்னோடு இந்த உலகில் இருந்தபோது நீ எனக்கு மட்டுமல்ல, எல்லாக் கடவுள்களுக்கும் பிரியமான வனான இருந்தாய். நீ இப்பொழுது இறந்துவிட்டாலும், உன் விதியை நீ சந்தித்து விட்டாலும், கடவுள்கள் உன்மீது இப்பொழு தும் அக்கறை கொண்டவர்களாகவே இருக்கிறார்கள். எனது பிள்ளைகள் பலரை விரைவுப்பாத அக்கிலிஸ் பிடித்து அடிமை

களாக சமாத்ரோஸ் அல்லது இம்ப்ரோஸ் அல்லது பனிபடர்ந்த லெம்னோஸில் விற்று விட்டான். உனது உயிரைத் தனது நீண்ட ஈட்டியால் எடுத்து விட்டான். ஆனால் நீ கொன்ற அவனது தோழனான பெட்ரோக்குலஸின் கல்லறை மேட்டைச் சுற்றி உன் உடலை அவன் பல முறை இழுத்துக்கொண்டு போனாலும் அது பெட்ரோக்குலஸை மீண்டும் உயிரோடு கொண்டு வரவில்லை. ஆனால் நீயோ என்னிடம், புதிய பனித்துளியைப் போல வீடு திரும்பியுள்ளாய். வெள்ளி வில்லேந்திய கடவுளாகிய அப் போலோ தன் அம்புகளால் மிருதுவாக இறப்பேற்படுத்தியதைப் போல, அரண்மனையில் படுத்திருக்கிறாய் நீ.'

இவ்விதமாக அவள் அழுது கொண்டே கூறினாள். கூடியிருந்த எண்ணற்ற கூட்டமும் அவளோடு சேர்ந்து அழுதது. இப்பொழுது கிழவன் ப்ரியம் தன் மக்களிடம் பேசினான்:

'ட்ரோஜன்களே, நகருக்கு விறகு கொண்டு வாருங்கள். கிரேக்கர்கள் திடீரெனத் தாக்குவார்கள் என்று அஞ்ச வேண்டாம். கருப்புக் கப்பல்களைவிட்டுப் போக என்னை அனுமதித்தபோது, ஈமச்சடங்குகள் நிறைவேற்றி முடித்த பன்னிரண்டாம் நாள் விடியல் வரை நம்மை ஒன்றும் செய்ய மாட்டார்கள் என அக்கிலிஸ் எனக்கு உறுதியளித்துள்ளான்.'

அவன் அப்படிச் சொன்னதும் உடனே கழுதைகளையும் காளை மாடுகளையும் வண்டிகளில் கட்டிக் கொண்டு நகருக்கு வெளி யில் கூடி விரைவாகக் கிளம்பினார்கள் அவர்கள். ஒன்பது நாட்கள் நிறைய விறகுகளைச் சேகரித்துக் கொண்டு வந்தார்கள். பத்தாவது நாள் விடியல் வெளிச்சத்தை உலகுக்குக் கொண்டு வந்தபோது, அழுதுகொண்டே அவர்கள் ஹெக்டரைத் தூக்கிச் சென்று, சிதையின் மேலே அவனுடலை வைத்து எரியூட்டி னார்கள்.

சீக்கிரமாகப் பிறந்த, ரோஜாவிரல் கொண்ட விடியல் தோன்றிய போது, ஹெக்டரின் சிதையைச் சுற்றி மக்கள் கூடினார்கள். யாரும் மீதியில்லாமல் எல்லாரும் கூடிய பிறகு, இன்னும் எரிந்து கொண்டிருந்ததையெல்லாம் மின்னும் மதுவை ஊற்றி அணைத் தார்கள். அதன்பிறகு, ஹெக்டரின் சகோதரர்களும் போர்த் தோழர்களும் அவனது வெள்ளை எலும்புகளை அழுது கொண்டே கண்ணீர் கன்னங்களில் வழிந்தோட சேகரித்தார்கள். அந்த எலும்புகளை மிருதுவான பழுப்பு நிறத் துணியில்

சுற்றினார்கள். அதை ஒரு தங்கப் பெட்டியில் வைத்தார்கள். அதை உடனே ஒரு வெற்றுக் கல்லறைக்குழிக்குள் வைத்தார்கள். பின் அதை அடுக்கடுக்காக, கற்களை நெருக்கமாக வைத்து மூடினார்கள். பின் கல்லறை எழுப்புவதற்கு அடையாளமாக இருக்கும் பொருட்டு அதன் மீது அவசரமாக மண்ணைப் போட்டு மூடினார்கள். திடீரென்று சொல்லாமல் கொள்ளாமல் கிரேக்கர் கள் தாக்கிவிட்டால் என்னசெய்வதென்று அதைச் சுற்றி பாது காவலர்களை நியமித்தார்கள். கல்லறை மேட்டை உருவாக்கிய பிறகு, நகருக்குத் திரும்பி, ஒலிம்பஸ் மலையில் உருவாக்கப் பட்ட தங்கள் ஆட்சியாளனாகிய ப்ரியமின் அரண்மனையில் பிரம்மாண்டமான விருந்துக்காகக் கூடினார்கள்.

குதிரைகளை அடக்குவதில் வல்லவனாக விளங்கிய ஹெக்டருக் கான ஈமச்சடங்குகள் இவ்விதமாக இருந்தன.

---